


தாயுமா னப்பெம்மான் றண்ணடியை யேத்துநர்க்குக்
காயும் வினையகலுங் காண்.

அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் கட்டுவீடென்னும் பதங்களையுடைய பசு பாச பதார்த்தங்களது இயல்புடையனல்ல னாகலானும், ஏழுவாயிறுவாயில னாகலானும், அவை யிலனாகவே அளவைக்கட் கெட்டாதவனாகலானும், அருவம் உருவம் அருவுருவ மென்னு முக்கூற்றுள் இன்ன னவனென்று தான் அம்முக்கூறும் படும் விருத்தி பரிணாமம் விவர்த்தன மென்பவற்றுள் ஒன்றிற் படுவன் படானென்று தான் கூறுதற்கோ ராசங்கையில்லை யாகலினாலும், மூன்றுருவும் பரமனுக்கு இலய போக அதிகாரங்களில் சுவேச்சையினா லுள்ளதாகலின், அவ்வனாதி முத்த சித்துருவாகிய முதல்வன் திருவருளிற்றிளைத்த தாயுமானசுவாமிகள் தாம் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டில் அம்மூவகை யிலக்கணங்களையு மமைத்துச் சிவஞானத் தபோதனர்களாகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதலிய சமய குரவர்களையும், சிவானுபூதிமான்களாகிய அத்துவித மெய்கண்டார் முதலிய சந்தான குரவர்களையும் வாய்நிரம்பத் தோத்திரஞ் செய்து, தெய்வத் திராவிடவேத வாக்கியங்களையும், மெய்கண்ட சாஸ்திர வாக்கியங்களையும் ஆங்காங்குப் புகட்டி, முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள் கொள்கைகளைப் பூர்வபட்சஞ்செய்து, சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ சமய உண்மையாகிய சிவமணம் நன்குவீசத் தமதியற்கைக் கருணை மிகுதியால் விளக்கியிருப்பது கரதலாமலகமாக விருக்கவும், இஃதுணராத புறச்சமயர் பலர் நூலி னருமையினையும் பெருமையினையு நோக்கி யதற்குப் பொருள் தங்கள் சமயக்கொள்கைகளுக்குத் தக்கபடி யீர்த்திடர்ப்படுத்தி

விபரீதப் பொருள்கூறி அவ்வளவில் திருப்தியடைந்தும், தாங் கொண்ட மாறுபாடான வுரைகளைக் கல்வி சால நிரம்பப் பெறுதார்க்கு உபதேசித்தும், அவர்களை மயக்கியும், அந்தோ! நிரயத்தினுக் காளாக்கி வருகின்றன ரென்பது புத்திமான்கள் யாவருமறிந்த வுண்மையே.

இத்தகைய கிலிஷ்ட கற்பனைகட்கு இடந்தராமலும், இக் காலத் தேற்பட்டு வழங்கிவரும் உரைகளிலேயே திருப்தியடைந்து மேலுண்மை யாராயாதவர் பொருட்டும், தக்க கௌரவ விருத்தியுரை யொன்று அத்தியாவசியம் இன்றியமையாது வேண்டுமெனப் பல வருடங்களாகப் பன்முறை எனது அரிய வைதிக சைவ வித்துவ சிகாமணிகள் என்னிடம் வற்புறுத்திக் கூற, அந்நண்பர்கள் விருப்பத்தினைத் தடுத்துரைத்தற் கேலாதவனாகி, அவர்கள் வேண்டுகோளுக் கிணைந்து, சைவாசாரதுல்யரான தாயுமானசுவாமிகள் திருவடித் தியானத்தால் திருவருளை முன்னிட்டு ஆசிரியர் இருதயத் துண்மை சூழ்ந்து, பரபிரம சூத்திரமாகிய சித்தாந்த மகா சூத்திரம் என்று அறிஞரா னுய்த் தோதப்பெறுவதாம் வடமொழிச் சிவஞானபோத மொழிபெயர்ப்பாகிய தென்மொழிச் சிவஞானபோதமாதி மெய்கண்ட சாஸ்திரங்கட்கும் திராவிட மகாபாஷ்யாதிகட்கும் இணங்கப் பல அரிய பெரிய சுத்தாத்துவித சித்தாந்த சாஸ்திரப் பிரமாணங்கள் எண்ணில காட்டி, மெய்கண்ட விருத்தியுரை என வொன்றியற்றினன்.

ஆன்மாவிற்கு இயற்கையாக வமைந்துள்ள திரோதானத்தால் ஏதாகிலும் மாறுபாடு விளைந்திருக்குமேல் முன்பின் னாராய்ச்சியால் முறைப்படுத்தி வாசித்துக்கொள்ளும்படி சன்மார்க்கர்களை வந்தனத்துடன் கேட்டுக்கொள்ளுகின்றனன். சுபம்.

மணவழகு.




ஆயு மானவ ரப்பனை யன்றிமுன் னரியகர்ப பிணிக்கஃதாற்
றூயு மானவ ரேனுஞ்சிர கிரிச்சிவன் றன்பெய ரதுதாங்கிப்
பாயு மானவர் பதமலர் மூலனூர் பரம்பரை வழிபோற்றுந்
தாயு மானவர் தண்ணருட் டாண்மலர் தலைமலர்க் கணிவாமால்.

எந்நாட்டினும் நன்றுடெனப் பன்னூ லாய்ந்த பாவலர்களாற் புகழப்படாநின்ற சோழமண்டலத்திலே, திருமறைக்காடு என்னும் தென்மொழிப் பெயரையுடைய வேதாரணியம் என்ற தெய்வத் திருப்பதியிலே, வேளாளமரபிலே சற்றேறக்குறைய இருநூற்று நாற்பது வருஷங்களுக்கு முன்னே அவதரித்த கேடிலியப்பிள்ளை என்பவர் ஒருவரிருந்தனர். இவர் கல்வி கேள்விகளில் முதிர்ந்து, சிவபக்தி அடியார் பக்தி முதலியவைகளிற் சிறந்து, வடமொழி வேதங்களால் பூசிக்கப்பெற்றுத் திருக்காப்புக் கொண்டருளியதும், தென்மொழி வேதங்களால் பூசிக்கப்பெற்று அத் திருக்காப்பு நீக்கப்பெற்றதுமாய தன்னூர்ச் சிவபெருமான் திருக்கோயிற் றரும விசாரணைத் தொழிலில் நியமிக்கப்பட் டிருந்தனர்.

அக்காலத்திலே, சோழநாட்டிலே திரிசிரபுரத்தை இராஜதானியாகக் கொண்டு அரசாண்ட * விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர் என்பவர் கேடிலியப்பிள்ளையவர்களின் யோக்கியதை கணக்கு வல்லமை முதலியவற்றைப்பற்றிச் சில முதியோர்கள் சொல்லக்கேட்டு அவரை வரவழைத்துத் தன்னிடத்தில் ஒரு பெரிய சேவையில் அமர்த்திக்கொண்டனர். பிள்ளையவர்களும் தன்னரசன் சந்தோ

---

* இவர் மதுரைமாநகரை யாண்ட திருமலை நாயகருக்குப் பௌத்திரர் என்றும், இவர் பெயர் விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர் என்றும், இவர் சாலிவாகன சகம் 1627-வருஷமுதல் 1654-வருஷம் வரையில் அரசாண்டனர் என்றும் கூறுவாரு முளர்.

ஷிக்குமாறு மிகவும் திறமையாகவே இராஜாங்க காரியத்தை நடாத்திக்கொண்டு வந்தனர்.

அப்போது, வேதாரணியத்திலே இருந்த * தனது தமையனார் புத்திரப் பேறில்லாமல் வருந்துவதைக்கண்டு மனம் பொறுதவராய்த் தன்னுடைய அருமைப் புதல்வராகிய சிவசிதம்பரப் பிள்ளையை அவருக்கு ஸ்வீகார புத்திரனாய்க் கொடுத்துவிட்டுத் தனது மோக்ஷ நிலைக்கோர் சற்புத்திரன் வேண்டுமென்னும் விருப்ப முடையவராய்த் திரிசிராமலையின்கண் வீற்றிருந்தருளும் தாயுமானேசுரரைத் தினந்தோறுந் தேவிசகிதம் போற்றி வருவாராயினர்.

அந்நாளிலே, சிவபெருமானது பெருங்கருணைத் திருவருளால் பிள்ளையவர்கள் † மனைவியார் திருவயிற்றிலே கருப்ப முண்டாகிப் பத்துத் திங்களும் நிறம்பப்பெற்றுத் தனதூராகிய வேதாரணியத்திலே மிக்க சுபவேளரையில் பெறுதற்கரிய ஓர் ஆண்மகவைப் பெற்றனர். தந்தையார் தனக்கு மகன் பிறந்தபிடம் திருமறைக்காடாயினும் அம் மகவு விஷயமாக ஈட்டரும் பெருந்தவம் பல செய்துவந்த இடம் திரிசிரபுரத்தில் எழுந்தருளியிருக்கும் தாயுமானேசுரர் திருவடியே ஆதலால், அக்குழந்தைக்குத் தாயுமானவர் என்னும் திருப்பெயரையே பெயராக வைத்துச் சுக்கிர பக்ஷத்துச் சந்திரன்போல நாளொருமேனியாக வளர்த்துக்கொண்டு வந்தார்.

பிறகு இக்குழந்தை தக்க வயதிலே வித்தியாரம்பம் செய்விக்கப் பெற்று, நெடுங்கணக்கு முதலியவற்றைச் செவ்வனே ஆராய்ந்துகொண்டு, நிகண்டு கற்று, இலக்கியம் இலக்கணம் தருக்கம் முதலிய கருவி நூல்களையும், வடமொழியின் கண்ணதாகிய இலக்கிய இலக்கணங்களையும், வேதாகம ஸ்மிருதி புராண இதிகாச முதலியவற்றையும் நன்கு கற்று மிகவும் வல்லவராயினர். அப்பால் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், பிரபந்தமாலை, பெரியபுராணம் என்னும் சைவத் திருமுறைகளையும்; திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபஃது,

* இவர் பெயர் வேதாரணியப் பிள்ளை என்பார் பலர்.

† இவ்வம்மையார் கெஜவல்லியம்மாள் எனப்படுவராம்.

உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் * சைவசித்தாந்த சாத்திரங்களையும்; திருப்புகழ், திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி என்னும் கௌமாரத் திருமுறைகளையும் பாராயணஞ் செய்து வருவாராயினர்.

இங்ஙனம், தாயுமானவர் பல்லாற்றானும் சிறப்புற்றிருக்கும் காலத்திலே தந்தையாராகிய கேடிலியப்பிள்ளை என்பவர் சிவசாயுஜ்யமெய்தினர். அப்பால் அவருக்கு நடைபெறவேண்டிய கருமங்கள் முற்றிலும் சைவபத்ததியின்படி ஆசாரியரால் செவ்வனே நடத்தி முடித்துக்கொண்டு, உடனே திரிசிரபுரத்து அரசனாகிய விஜயரகுநாத சொக்கலிங்க நாயகரின் வலாத்காரத்தின்மேல் தகப்பனாருடைய உத்தியோகத்தை வகித்து, மன்னன் பெரிதும் வியக்குமாறு இராசகாரியங்களை மிகவும் ஒழுங்காக நடாத்திக்கொண்டு வந்தனர்.

இவ்வாறு லௌகிகத் தொழிலை யேற்று நடத்திவந்தபோதிலும் அவரது மனமோ ஆன்மஞானம் பெற்று உயிர்க்கோருறுதி தேடும் வழியையே நாடி நின்றமையால், இருவினையொப்பு வாய்ந்து மலபரிபாகம் பெற்றுச் சத்திநிபாதமுடையராய், வேதாந்தத்திலே கூறப்படும் ஜகஜீவ பரங்களாகிய பதி பசு பாச மென்னும் திரிபதார்த்தங்களின் அநுபவ இலக்கணங்களை ஐயந்திரிபற எடுத்துக்காட்டும் ஞானாசாரியன் எங்குளன்? எப்போது கண்ணுக்குப் புலப்படுவன்? என்கிற எண்ணமுடையவராய் அக்காலத்தை எதிர்பார்த்தவண்ணமா யிருந்தனர்.

அங்ஙன மிருக்குநாளிலே, ஆன்மகோடிக ளுய்யுமாறு வேதாகமப் பொருளைத் திருமந்திரமாலையாற் காட்டியருளிய திருமூலநாயனார் மரபிலே அருளுபதேசம் பெற்றுத் திருக்கயிலாய பரம்பரைச் சந்தானகுரவருள் ஒருவராகிய அருணந்திசிவாசாரியர் என்னும் சகலாகம பண்டிதர் ஜனன பூமியாகிய திருத்துறையூரிலே சில பகல் தங்கியிருந்து, சிவராஜயோக மெய்ஞ்ஞான நிஷ்டைகொண்டு சிதம்

* இச்சாத்திரம் பதினான்கு மெய்கண்ட சாத்திரம் எனப்படும்.

பர்த்திலே * மௌனகுரு சுவாமிகள் என்னும் திருப்பெயருடன் எழுந்தருளிய சற்குருமூர்த்திகள் தலயாத்திரை செய்வான் புகுந்து, சில ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு திரிசிரபுரம் சென்று, அங்கே திருமலையில் கோயில்கொண்டருளிய தாயுமானேசுரரைத் தரிசிக்குமாறு மாலைப்போதினில் அனுட்டானபரராய், மலையின்மீது சென்று தக்ஷிணாமூர்த்தி சந்நிதானத்தில் நிஷ்டைகொண்டு வீற்றிருந்தனர்.

அந்நா ளிரவிலே, தாயுமானவர் வழக்கப்படி அர்த்தயாம தரிசனம் செய்ய நித்திய கடன்களை முடித்துக்கொண்டு மலைக்கோயிலுக்குச் சென்று விதிவழியே சிவதரிசனம் செய்விக்கப்பெற்றுத் தக்ஷிணாமூர்த்தியின் மஹா சந்நிதானத்திலே வந்து, அங்கே ஞான நிஷ்டைகொண்டு வீற்றிருந்தருளும் மௌனகுருநாதனைக் கண்டு, அப்பெரியார் சக்ஷு தீக்ஷையால் தன்வயமிழந்து, அக் குருமூர்த்தியின் வயப்பட்டு, அடியற்ற மரம்போல் அவர் பாதத்திலே வீழ்ந்து, அவரை அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பலமுறை நமஸ்கரித்து வாய் பொத்திக் கைகட்டி நின்று கொண்டிருந்தனர். குருமூர்த்திகளாகிய மௌன யோகிகள் ஞானநிஷ்டையினின்றும் கலைந்த கோலமுடையவராய் அத்தளியில் ஒரு ஏகாந்த ஸ்தானத்தைச் சென்றடைந்தனர். தாயுமானவரும் விடாது பின்பற்றிப்போந்து, "ஐயா! எம்பெருமானே! தமது அருமைத் திருக்கரத்திலுள்ள புத்தகம் யாது? அதனைத் திருவுளம் பற்றவேண்டும்" என்றிரந்தார்.

குருமூர்த்திகள் தாயுமானவரைப் பார்த்து, "இங்கே நமது கருணைக் கிலக்காயினை; 'செம்பைத் தானே வேதிகைபிட்டுப் பொன்னாக்குவதுபோல' நோக்கினாலும், பரிசத்தினாலும், பாவனையாலும், ஆகமத்தாலும், ஔத்திரியாலும், அஷ்டமாசித்திகளையும் நினக்குணர்த்திப் பதிவிளக்கம் செய்விக்கின்றோம்" எனக் கூறித் திருவடி தீக்ஷை செய்தருளி, எல்லாமா யல்லதுமா யிருந்தபடி யிதுவென்ன விருந்து காட்டிப் பின்னுங் கூறுவாராயினர்: "குழந்தாய்! வானிலே பறக்கவும், மண்ணிலே நுழையவும், வானவர் வணங்கவும், மற்றொருவர் ஊரிலே புகுதவும், அவரவ ருளந்தனி னினைந்ததை யுரைக்கவும், போனதோ ருயிரை எழுப்பவும் எண்சித்தியெல்லாம் கைவரினும் இவை யனைத்தும் ஞானசாதகனது பாத

* இங்கே ஒரு திருமடம் இப்பெயரால் வழங்கப்படுகின்றது.

தூளிக்கு மிணையாகா. ஆதலின், சிவாநுபவ ஞானபோத நிலையைப் பெற்றுக்கொள்வாயாக! அதனையே விளங்க வெடுத்துரைப்பது நமது கையிலுள்ள புத்தகம். இதனை உலகம் * சிவஞான சித்தியார் என்று கூறும்.

இந்நூல், பரபக்ஷம் சுபக்ஷம் என இரண்டு பிரிவினை யுடையது. முந்திய பரபக்ஷத்திலே உலகாயதன் முதல் பாஞ்சராத்திரி ஈறாகிய பரசமயிகளுடைய கேட்பாடுகளை எடுத்துக் காட்டிச் சித்தாந்தப் பார்வையால் மறுப்புச் செய்யப்படும். பிந்திய சுபக்ஷத்திலே தம்மை யொழிந்தொழிந்த எத்திறத்துச் சமயவாதிகளாலும் விடுக்கப்படும் ஆட்சேபங்களுக் கெல்லாம் பரபக்ஷப் பார்வையால் சமாதானஞ் செய்து சுவமதம் நாட்டுதல் செய்யப்படும். இச் சுபக்ஷத்திலே அமைந்த பன்னிரண்டு சூத்திரத்துள் முதல் இரண்டு மூன்று என்னும் மூன்றையும் பிரமாணவியலெனவைத்து, முதற் சூத்திரத்தால் உலகிற்கு நிமித்த காரணமாகிய பதி யுண்மைக்குப் பிரமாணமும், இரண்டாஞ் சூத்திரத்தாற் பாசவுண்மைக்குப் பிரமாணமும், மூன்றாஞ் சூத்திரத்தாற் பசு வுண்மைக்குப் பிரமாணமும், நான்கு ஐந்து ஆறு என்னும் மூன்றையும் இலக்கண வியலெனவைத்து நான்காஞ் சூத்திரத்தாற் பசு லக்ஷணமும், ஐந்தாஞ் சூத்திரத்தாற் பாச லக்ஷணமும், ஆறாஞ் சூத்திரத்தாற் பதிலக்ஷணமும், ஏழு எட்டு ஒன்பது என்னும் மூன்றையும் சாதனவியலெனவைத்து ஏழாஞ்சூத்திரத்தாற் சாதித்துப்பெறுதற்குரிய அதிகார முடையது இது வென்பதும், எட்டாஞ் சூத்திரத்தாற் சிறந்த கருவியெனப் படும் சாதனம் இது வென்பதும், ஒன்பதாஞ் சூத்திரத்தாற் சாதனஞ் செய்யுமாறு இதுவென்பதும், பத்துப் பதினொன்று பன்னிரண்டு என்னும் மூன்றையும் பயனியலெனவைத்துப், பத்தாஞ் சூத்திரத்தால் பெத்த நீக்கப்பயனும், பதினொன்றாஞ் சூத்திரத்தால் முத்திப்பயனும், பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் பெத்த நீக்கமும், முத்தியும் பெற்றவர்க்குச் சீவன் முத்தி நிலைக்கணிகழு மியல்பும் வகுத்துக் கூறப்படும். †

குறித்த பதி பசு பாசங்கள் மூன்றும் அஜன்ய பதார்த்தங்களும் ஒன்றிலொன்று விஜாதிகங்களுமாம். இவற்றுள் பதி சத்தா

* இந் நூலில் அடியார் வணக்கமும், குருமரபின் வணக்கமும் கவனிக்க.
† இவ் விஷயங்களெல்லாம் திராவிடமாபாடியத்தில் விளக்கமாம்.

யுள்ளது. பாசம் அசத்தாயுள்ளது. பசு சத்தோடு சேர்ந்தவழிச் சத்தாயும், அசத்தோடு சேர்ந்தவழி அசத்தாயும், உண்மையில் சத்துமாகாமல் அசத்துமாகாமல் சதசத்தாயுள்ளது. இனிப் பதியாகிய முதல்வன் பசுவை ஞானக்கிரியைகளாலும், பாசத்தைக் கேவலகிரியையாலும் இயங்கப்பண்ணுவன். அங்ஙனம் பண்ணுங்கால் சுவப்பிரயோசனங் கருதாது, பரப் பிரயோசனத்தையே திருவுள்ளமிசைந் தியற்றும் நம்பெருமான் ஆணவகேவலத்திற் கிடந்த பசுக்களென்னும் எண்ணிறந்த வுயிர்களையும் அவரவர் வினைக்கேற்பமாயையைத் துணையாகச் சேர்த்து வெளிப்படுத்துவன். இதனால் பதி ஏகமும், பசு பலவும், பாசம் மூன்றுமென வெளிப்படும். பாசத்தையும் பசுவையும் சேர்க்கவும் பிரிக்கவும் வல்ல பதி தான் இயங்கும்போது தனது சத்தியால் அநந்தமூர்த்திகளாவன். பாசம் அநந்தரூபமாய்ப் பதியாற் காரியப்பாட்டைப் பெறும். பசு பல யோனிகளிற் புக்குழலாநிற்கும். பதியினுடைய அநந்த வடிவங்கள் விபூதியென்று வேதங்களும் பசுவினுடைய அநந்த ஜநநங்களை வினைப்போகமென்று சுருதிகளும் பேசும். பாசத்தினுடைய காரியப்பாடுகளைச் சிருஷ்டியென்று முதனூல் செப்பும். சிவம் நிர்மல முடையதாகலின் அதனிடத்தில் சமலரூபியாகிய உயிர்க் குற்பத்தி கூறுதல் கூடாது. பாசம் கேவலம் மலமேயாகையால் நிர்மலமாகிய சிவத்திற் காரியப்படாது. சிவனும் சீவனும் சித்தாயிருப்பினும் அவை அறிவிக்குஞ் சித்தும் அறியும் சித்துமா யிருக்கு முண்மையால், அறிவிக்குஞ் சித்தாகிய சிவத்தில் அறியும் சித்தாகிய உயிர்க்கு உற்பத்தி யுரைத்தல் கூடாது. பாசம் கேவலம் சடமாகையால் மேல் உபய சித்துக்களில் இதற் கிடமில்லை. அசித்தாகிய பாசத்தின் காரியமெல்லாம் சித்தேயாம். இடையே நின்ற உயிர் பாசத்தோடு சேர்ந்தவழிப் பந்தத்தையும், பாசத்தினின்று நீங்கிச் சிவத்தோடு சேர்ந்தவழி முத்தியையும் பெறும்.

சிவானந்தச் செல்வ! இம்முத்திநிலை தசகாரிய அனுட்டிப்பால் சித்தியாகும். அவையாவன:—முப்பத்தாறு தத்துவங்களுடைய தொழிலைத் தனக்கு வேறா யறிதலாகிய தத்துவரூபமும், தத்துவங்களைச் சடமென் றறிதலாகிய தத்துவ தரிசனமும், அவைகளைச் சிவஞானத்தாலே தனக்கன்னியமென் றறிதலாகிய தத்துவ சுத்தியும், மலங்கள் நீங்கி ஆத்தும ஞானமென வறிவே வடிவென அறிதலாகிய ஆத்துமரூபமும், தனக்கென வொரு செய்தியு மில்லையென் றறித

லாகிய ஆத்துமதரிசனமும், பெத்தத்திலும் முத்தியிலும் சிவன் உபகரிக்கின்றான் என்னும் தன்னுடைய ஆணியை அறிந்து சிவஞானத்தாலே அழுந்துதலாகிய ஆத்தும சுத்தியும், ஆணவ மலத்திலே கிடக்கிற ஆன்மாவைச் சிவன் பஞ்ச கிருத்தியங்களைச் செய்து மலங்களை நீக்கி மோக்ஷத்திலே விடுவனென்று திடமா யறிதலாகிய சிவரூபமும், சிவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களை ஆன்மா செய்யானென் றறிந்து ஆன்மாவைத் தரிசிப்பித்துநின்ற ஞானமாகிய சிவதரிசனமும், சிவசத்தி செய்யும் கிருத்திய மெல்லாம் சிவனுக்குச் சற்றுமில்லை என்றறிந்து சிவசத்தியை யன்றித் தனக்கும் பிறருக்கும் சற்றும் செய்தியில்லை என்று தெரிந்து திருவருளோடு அழுந்துதலாகிய சிவயோகமும், சிவத்தோடிரண்டற நின்று அத்துவித சாயுச்சிய ஆனந்தத்தைப் புசித்து வாழ்தலாகிய சிவபோகமுமாம். இதுவே சுத்தாத்துவிதமாம். இவ்வத்துவித மௌனநிலையே *“தல்லயாச்சுத்தாத்வைதசித்திஃ பேதாபாவாத் ஏததேவ பரம தத்வம்” என்று சுருதிகொண்டாடி மகிழும், மாணவக! இந்நிலையானது பூர்வ சென்மாந்திர புண்ணிய முற்றவர்க்கே கைவல்லியமாகும். இத்தகைய சிவாநுபூதியினை நீ யடைதற்கேற்ற இலக்கணங்களை வாய்ந்துள்ளாய், ஆகலின் ஆண்டவனருளால் அடைக என ஆசீர்வதித்து, மெய்கண்ட சந்தான சாத்திரங்களின் உண்மைகளையும் சம்பிரதாயங்களையும் ஆழ்ந்தகன்ற சித்தாந்த நயங்களையும், பொருணுட்பங்களையும் சாங்கோபாங்கமாக உபதேசித்தருளினார். இதன்வழியானே தாயுமானவரும் வைதிகசைவ சுத்தாத்துவித சித்தாந்தமே உண்மைநிலை யென்பதும், அதிற்கூறப்படும் சிவபெருமானே பரமபதி யென்பதும், அவருடன் இரண்டறக் கலத்தலே அத்துவித முத்தியென்பதும் நன்குணர்ந்தனர்.

இப்பால், மௌனகுருசுவாமிகள் தாயுமானவரை நோக்கி ஏ மாணவ! இங்கு இன்னும் சிறிது காலம் இலௌகிகத் தொழிலை நடாத்திக்கொண் டிருந்து இல்லறத் தொழுகிப் புத்திரனைப்பெறுதி. பின்னர் யாம்வந்து நிஷ்டைகூடும் வழியைத் தெரிவிப்போம் என்று கட்டளையிட் டெழுந்தார். எழுந்த குருமூர்த்திகளின் பிரிவையாற்றாது மிகவும் வருந்திநின்ற தாயுமானவரை அக்குருநாதன்

* இ—ள். அம்மனத்தின் இலயத்தினால் சுத்தாத்வைதம் சித்திப்பது. பேதமற்றிருந்தால் ஈதே உயர் தத்துவமாம் என்க.

மீண்டும் பார்த்து சிறிதும் கவலை கொள்ளவேண்டாம், நம் உபதேச வழியே அநுட்டானபரனாய் ஒழுகிக்கொண்டு * சும்மா இரு. நாம் சிலபகலில் உன்னை நிச்சயமாய்ச் சந்திப்போம் என்றுசொல்லி விட்டுப் புறப்பட்டுப் போயினர். போயினும் தாயுமானவர் மனதில் மௌனகுருசுவாமிகள் திருவுருவமும் அவர் திருவாய்மலர்ந்தருளிய "சும்மா இரு" என்ற சொல்லும் அச்சொல்லின் பொருளும் வேரூன்றி நிலைத்து விட்டன. நிலைத்துவிடுதலும், தாயுமானவர் ஆசிரியரிடத்திற் பெற்றுக்கொண்ட உபதேச பொருளைச் சிந்தித்து அந்த வழியே நடந்து வருவாராயினர். இவ்வாறு சிந்தித்து வரலால் அவருக்கு இராஜாங்கத் தொழிலிலும் மற்ற இலௌகிகத் தொழிலிலும் விரக்தி தோன்றி அறவே அத்தொழில்களை மறந்தொழித்தனர்.

அப்பால், விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர் என்னும் மன்னவன் தாயுமானவருடைய திவ்விய குணங்களை நன்குக அறிந்திருப்பவனாதலாலும், நாளுக்குநாள் அப்பெரியார் ஆன்மஞானம் நிரம்பப்பெற்று முதிர்ச்சியடைந்து வருகின்றார் எனப் பலரால் கேள்விப்பட்டிருக்கின்றபடியாலும், அவரிடத்தில் அன்பும் அச்சமும் அதிகரிக்க அவரிடத்தே சென்று சுவாமி! தேவரீரது மகிமையை அறியமாட்டாது சாஸ்வதமில்லாத இவ்வரசாங்கத் தொழிலில் தங்களை நியமிக்கலானேன். இவ்விஷயமாக அடியேனை மிகவும் மன்னித்து இனிமேல் தேவரீருக் கவஸ்யமான பணி யாவையும் யானே செய்யும்படி கட்டளை யிட்டருளவேண்டும் என்று முறையிட்டு நின்று, அந்நாள் முதல் தனது வாழ்நாள் முற்றிலும் அவர் மனம் பெரிதும் சந்துஷ்டியடையும்படி நடந்துவந்தான். சின்னாளிலே அரசனும் ஆன்மஞானம் பெறும் எண்ணமுடையவனாய் அதிதீவர பக்குவத்தை அடைந்து தாயுமானவரிடத்தே வைத்த பக்தியின் முதிர்ச்சியால் உலக காரியத்திலே வெறுப்படைந்து சித்தாந்த ஞானநிஷ்டனாய்ப் பன்னாளிருந்து சிவசாயுஜ்ய மெய்தினான்.

பிறகு, அரசனுக்காக வேண்டிய கர்மாதிகள் முற்றிலும் புத்திரசந்தான மில்லாமையால் அரசனது மனைவியாராகிய † மீனாக்ஷி

---

* இது மஹாவாக்கியமென்பது "சும்மா இரு" என்று கட்டளையிட்டருளிய கந்தரநுபூதியானும் உணர்க.

† இவ்வம்மை சாலிவாகனம் 1654-வருஷ முதல் 1659-வருஷம் வரையில் அரசாண்டனள் என்பர்.

யம்மையார் செய்து முடித்து இராஜாங்கக் காரியத்தில் பிரவேசிக்க லாயினள். அப்போது மீனாக்ஷியம்மை தாயுமானவரைப் பலமுறை யும் பார்த்துள்ளாளாகலின் கண்ணைத்தானே கவரும் அழகினர் இவரை ஒத்தவர் மற்றெவரையும் காணாது அவர்மீது மோகமுற்று அவரை மரியாதையுடன் வரவழைத்துத் தக்க ஆசனத்தில் எழுந் தருளச் செய்து தன்னுடைய தகாத செய்கைக்கு இணங்கும்படி விண்ணப்பித்து என்னிராஜ்ஜியத்திற்குத் தேவரீரைத் தலைவராகக் கொண்டேன். என்னுடைய உடல் பொருள் ஆவி மூன்றினையும் தந்துவிட்டேன் என்று சொல்லிக்கொண்டு நின்றாள். மீனாக்ஷி யம்மை எண்ணமின்னதென நன்றாக அறிந்து கொண்ட தாயுமா னவர் அவளுக்கு எந்தப்படி புத்தி வருவிக்க வேண்டுமோ அந்தப் படி இனிமையாக உபதேசம் செய்துவிட்டு, அந்த இடத்திலிருந்தும் வெளியே வந்து இனி இத்திரிசிரபுரத்தி லிருந்தால், தன் பெருமைக் கும் சிறுமைவருமென்றெண்ணி அப்போதே அந்நகரை விட்டுப் புறப்பட்டுத் * தேவையம் பதியைச் சென்றடைந்து வசித்து வர லாயினர்.

இங்கே நடந்த விஷயங்களனைத்தையும் கேட்டுணர்ந்த தாயு மானவரின் தமையனாராகிய சிவ சிதம்பரப்பிள்ளையவர்களும், அவர் சிறியதாயார் குமாரராகிய அருளையபிள்ளையவர்களும் தமதூராகிய வேதாரணியத்தினின்றும் புறப்பட்டுத் தேவையம் பதியைச் சென்று தாயுமானவர் வசிக்குமிடத்தைத் தெரிந்துகொண்டு, அங்கேபோய் அவரை அணுகிச் சந்ததி விளங்கும்படி திருக்கலியா ணம் செய்தருளவேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டனர் கள். தாயுமானவருக்குச் சம்சாரபந்தத்திற் கட்டுப்பட்டுக் கிடக்க இஷ்டமில்லாமற் போனபோதிலும், மௌனகுரு சுவாமிகளின் கட் டளையையும் தமையனாரது வேண்டுகோளையும் மறுத்தற்கஞ்சின வராய் ஒருவாறிசைந்து நின்றனர். உடனே சிவசிதம்பரப்பிள்ளை யவர்களும் அருளையப்பிள்ளை யவர்களும் தாயுமானவரை அங்கே யிருந்தும் கூட்டிக்கொண்டு வேதாரணியம் போய்ச்சேர்ந்தார்கள்.

அப்பால், சிவசிதம்பரப்பிள்ளையவர்கள் தாயுமானவர்க்குத் திருமணஞ்செய்யும் தொழிலிலே கருத்துடையராய்த் தன் மரபுக்

* தேவை யென்பது - இராமேச்சுரம்.

கொத்த மரபு ஒழுக்கம் செல்வம் முதலியவற்றால் குறைவற்ற குடியிற்பிறந்து நற்குணம் நற்செய்கை அறிவு ஆசாரம் அடக்கம் அழகு கற்புடைமை முதலிய அமைந்த கன்னி எங்குள்ளாள் என்று தேடிக்கொண்டிருந்தார், அப்படியிருக்கும்போது அவ் வேதாரணியத்திற்றானே உத்தம குலத்திற் றோன்றி மட்டுவார்குழலம்மை என்னும் பெயருடன் அழகால் இலக்குமியையும் கற்பால் அருந்ததியையும் புறங்கண்டு வளர்ந்து கொண்டுவந்த பெண்மணியாரைச் சிவசிதம்பரப்பிள்ளை அவர்கள் தாயுமானவருக்கு மணம்பேசி மணவினைக்குரிய நாளுமோரையும் நிச்சயித்துச் சுற்றத்தார்க்கும் நட்பாளர்க்கும் மணவோலைபோக்கித் திருக்கலியாணமண்டபம் சிறப்பாகச் செய்து குறித்தநாளிலே அந்தணர்களும் உறவினர்களும் சிநேகிதர்களும் குதூகலங்கொண்டு ஆசிகூறத் திருக்கலியாண மஹோற்சவத்தை வேதாகம விதிப்படி நடத்தி முடித்தனர்.

பின்பு, தாயுமானவர் தனது மணாட்டியான நங்கையாரோடு அளவளாகி இல்லறத்திலிருந்து * "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்-கைம்புலத்தா றோம்ப றலை" என விதித்திட்ட வண்ணம் இருவர் கருத்துமொத்து ஐம்பெரும் வேள்விகளையும் வழுவாது நடத்திக் குடிமுறை பிறழாது பாதுகாத்து வருகின்ற நாளில், அவர் தம் மனைவியார் திருவயிற்றில் கருப்பமுண்டாகிப் பத்துத்திங்களும் நிரம்பப்பெற்று ஓர் ஆண்மகவை ஈன்று வைத்துச் சிவபதமடைந்தார். தாயுமானவர் பத்தினியாருக்குச் செய்ய வேண்டிய உத்தரகிரியைகளைச் செவ்வனே செய்வித்து முடித்துக் கொண்டு தன் தநயருக்குக் கனகசபாபதி என்று திருநாமம் வைத்து மிகவும் அருமையாகவே வளர்த்துக்கொண்டுவந்து வித்தியாரம்பம் செய்வித்துப் பல துறைகளிலும் வல்லவராகும்படி முயற்சி பல செய்து வந்தனர்.

அக்கால், முன் தாயுமானவரை விட்டுப்பிரிந்த மௌனகுரு சுவாமிகள் திருமறைக்காட்டை அடைந்து அங்கே வதிந்துவரும் தாயுமானவரின் அதி தீவிர பக்குவத்தையறிந்து அவரையருகே வரவழைத்துச் சைவசம்ஸ்காரம் பலவுஞ்செய்து துறவு கொள்ளும்

* திருக்குறள், இல்வாழ்க்கை, 3 - வது செய்யுள்.

படி ஆஞ்ஞாபித்துச் * சிவபூஜை எழுந்தருளப் பண்ணிக்கொடுத்து ஏ மாணவ! நீ திருமஞ்சனம் திருச்சாந்து மங்களாக்ஷதை பத்திர புஷ்பம் தூபதீபங்கள் சுகந்தவர்க்கம் முதலிய பூஜைத் திரவியங்களை யெல்லாம் குறைவறச் சம்பாதித்துக்கொண்டு நின்மல சித்தத்தோடு கோமயத்தினால் திருமெழுக்கிட்டு தூபதீப தோரண முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டுள்ள பூஜாக் கிருகத்துள் வேதிகைக்கு எதிரே சுகாதனத்திருந்து குரு நமஸ்காரஞ்செய்து சங்கற்பித்து விக்கினேசுவரபூஜை கலசபூஜை திக்குபந்தனம் தாளத்திரயம் முத்திரைக்காட்டல் சுத்தாசமனம் தொடுபிடந்தொடுதல் கரநியாசம் அங்கநியாசம் திருநீறணிதல் அஞ்செழுத்தோதல் ஆதவற்பணிதல் தருப்பை முதலிய ஞானங்கங்களோடுகூடிய சிவபூஜையைச் சிவாகம விதிப்படி கிரமமாகச் செவ்வனே செய்து முடித்து அச் சிவபூஜைக் கரணங்களின் ஞானார்த்த உண்மையை உள்ளத்திலே உறுதியாக அமைத்து வெளிப்புலன்களிலே சிந்தை நாடாவண்ணம் சரீரத்தைச் சிரசு கழுத்து இடை முதலிய அவயவங்கள் நேராகத் தம்பத்தைப் போல அசையாது நிறுத்தி இடைபிங்கலைகளின் வழித்தாக இயங்காநின்ற பிராணவாயுவை அம்சகாயத்திரியாகிய அஜபா மந்திரத்தினாலே தடுத்துச் சுழுமுனை நாடியின் வழியாகச் செலுத்தி இருகண்களும் புருவமத்தியே நாடின வண்ணமாகச் சிதாகாயமாகிய ஆன்மநிலய அந்தர்முக நாட்டத்தில் மனதை நிறுத்தித் ததே தியானமாகச் சமாதியிலிருந்து சதா நிஷ்டைபுரிந்து வருதி. இதுவே மெஞ்ஞான நிட்டையாகிய சிவயோகமாம். அங்ஙனம் சதா நிட்டையிலிருந்து இடையறாது அநுசந்தானம்பண்ணிவருங்கால் அந்தர்முகத்திலே மணி கடல் மேகம் மத்தளம் பேரிகை வீணை முதலிய நாதவொலிகளும், சூரியன் சந்திரன் நக்ஷத்திரம் மின்னல் முதலிய விந்து ஒலிகளும் தோன்றிடும். அவற்றுள் அழுந்தாது ஆன்மாவின்கண் அழுந்தி உறைந்துநிற்றல் வேண்டும். அப்போது அகண்டபரி

---

* சிவபூஜையின் சிறப்பை ருக்வேதம். "தவஸ்ரியே மருதோ மாஜயந்த ருாத்ரயுத்தே ஜநிமசாருசித்ரம் பதம் யத்விஷ்ணோ ருபமந்நிதாயி" எனக் கூறிற்று, "ரௌத்ரலிங்கம் மஹாவிஷ்ணுர் பக்த்யாஸம்பூஜ்ய த்தஞ்வலாமயம்" "சாருசித்ரம் ஸமப்யர்ச்யலப் தவாந்பரமம்பதம்" எனவரும் பராசர புராணத்தானறிக. அது உருத்திர சம்பந்தமானதும் சுத்தமும் மனதை வியப்பிப்பதும் ஆச்சரியமானதும் சிலாமயமுமான இலிங்கத்தை மஹாவிஷ்ணுவானவர் நன்கு பூசித்துச் சிறந்த பதத்தைப் பெற்றார் என்பதாம்.

பூரணாகார சிற்சுகோதய சின்மயானந்த வஸ்துவாகிய சிவோதயப் பிரகாசமுண்டாகி உன்னை விழுங்கிநிற்குமாதலால், ஆண்டு நின்செயலொழிந்து நீ சிவத்துட னிரண்டறக் கலந்துவிடுவை. யாண்டும் சிவமொன்றையே காண்பாய். இதுவே சித்தாந்த மஹாவாக்கிய உண்மைப் பொருளாம். இந்நிலையே சிறிதும் சலியாது நிலைபெறுக என்று கட்டளையிட்டுப்போயினர்.

ஆசிரியர் சென்றதும், தாயுமானவர் அன்றுமுதல் துறவுக்குரிய குணங்களோடு கௌபீனதாரியாய் வெளிப்பட்டு மௌனகுரு யோகிகள் திருவாக்கின்படி சதா நிஷ்டைகொண்ட கோலத்தோடு சிவபூஜா துரந்தரராய்க் காசி, காஞ்சி, அருணை, சிதம்பரம், திருவாரூர், மதுரை திருப்பரங்குன்ற முதலிய திவ்விய ஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவிராமேச்சுரம்போய் அங்கே மழையில்லாமல் மிகவும் பசியுடன் வருந்துகின்ற அவ்வூர்ச் சனங்களின் வேண்டுகோட்கிசைந்து மிகுதியும் மழைபெய்யும்படி பரசிவனை மனதில் நினைத்து,

"சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி—லைவரைவென்
றானந்த வின்பி லழுந்துவது முத்தியெனில்
வானங்காண் பெய்ம்மின் மழை."

என்னும் திருவெண்பாவைப்பாடி வேண்டிய அளவில் மழைபெய்து உலகம் க்ஷேமத்தை நிலைக்களமாகக்கொள்ளும்படி செய்தார். இச்செய்கையை உற்றுணர்ந்த அவ் விராமேச்சுரத்துச் சனங்களும் மற்றையோர்களும் தாயுமானவரிடத்தில் அச்சம் பெரிதுடையராய் அன்புகொண்டு அவர் திருத்தொண்டிலேயே காலத்தைப் பெரிதும் போக்கிவந்தார்கள்.

அந்நாளில் ஸ்ரீ தாயுமானசுவாமிகள் ஓர் ஏகாந்த ஸ்தானத்தில் சதா நிஷ்டைகொண்டு வசித்துவரும் எண்ணமுடையவராய் சேது முதலிய புண்ணிய தீர்த்தங்களிலே விதிப்படி ஸ்நானஞ்செய்து இராமநாதனையும் * பர்வதவர்த்தனியையும் பணிந்து விடைபெற்றுக் கொண்டு, இராமநாதபுரம் போய்ச்சேர்ந்து அந்நகரைச் சேர்ந்த

* இந்நூலிலே வரும் மலைவளர்காதலி என்னும் தோத்திரம் இவ்வம்மையாரைக் குறித்ததேயாம்.

இலக்ஷ்மிநகரம் என்னும் அரிய பகுதியிலே ஒரு நந்தவனமத்தியில் பரமானந்த நிட்டையில் வீற்றிருந்தருளித் தம்மை விட்டுப்பிரியாத அருளையர் கோடிக்கரை ஞானியர் முதலிய உத்தம மாணுக்கருக்கு உபதேசஞ்செய்து சாலிவாகனசகம் 1581-ல் சிவத்திலே இரண்டறக் கலந்தனர். அக்காலத்தில் அவரடியவர்கள் தோத்தரித்த செய்யுட் களிற் சில.

## அருளைய சுவாமிகள்

உலகினுக் கணியா மிராமநா தபுரத்
துயர்நறை வாவியின் குணபால்
மலர்நிறை வனத்திற் சிவத்துறு நிட்டை
மருவிமெய் யொருவிவே தாந்தத்
திலகிய பொருளால் வானமாய் நிறைவு
மெந்தையே யெனதுபந் தமும்போய்
நிலையுற நினது திருவரு ளளிப்பாய்
நின்மலா னந்தமே போற்றி.

## கோடிக்கரை ஞானிகள்

துகளறு சாலி வருடமா யிரத்தைஞ்
ஞூற்றெழுபெண் பத்தொன்று தொடரு
மிகுசுப கிருதாம் வருடந்தை மாதம்
வெண்மதி வாரநாள் விசாக
மகிமைசேர் பூரணத் திதியினி லருத்த
மண்டல சமையத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றாயுமா னவனார்
சிவத்தினிற் கலந்தநற் றினமே.

## அபியுக்தரொருவர்

விண்ணுறுந்தே வர்கண் முனிவர் கணங்கள் சித்தர்
புகழ்மௌனி வியப்பால் ஞானத்
தண்ணுறுதண் டமிழ்மாலை யைஞ்ஞூற்றெண்
பத்தேழுந் தாயு மானேன்

பூரணாகார சிற்சுகோதய சின்மயானந்த வஸ்துவாகிய சிவோதயப் பிரகாசமுண்டாகி உன்னை விழுங்கிநிற்குமாதலால், ஆண்டு நின்செயலொழிந்து நீ சிவத்துட னிரண்டறக் கலந்துவிடுவை. யாண்டும் சிவமொன்றையே காண்பாய். இதுவே சித்தாந்த மஹாவாக்கிய உண்மைப் பொருளாம். இந்நிலையே சிறிதும் சலியாது நிலைபெறுக என்று கட்டளையிட்டுப்போயினர்.

ஆசிரியர் சென்றதும், தாயுமானவர் அன்றுமுதல் துறவுக்குரிய குணங்களோடு கௌபீனதாரியாய் வெளிப்பட்டு மௌனகுரு யோகிகள் திருவாக்கின்படி சதா நிஷ்டைகொண்ட கோலத்தோடு சிவபூஜா துரந்தரராய்க்காசி, காஞ்சி, அருணை, சிதம்பரம், திருவாரூர், மதுரை திருப்பரங்குன்ற முதலிய திவ்விய ஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவிராமேச்சுரம்போய் அங்கே மழையில்லாமல் மிகவும் பசியுடன் வருந்துகின்ற அவ்வூர்ச் சனங்களின் வேண்டுகோட்கிசைந்து மிகுதியும் மழைபெய்யும்படி பரசிவனை மனதில் நினைத்து,

"சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி—லைவரைவென்
றுனந்த வின்பி லழுந்துவது முத்தியெனில்
வானங்காண் பெய்ம்மின் மழை."

என்னும் திருவெண்பாவைப்பாடி வேண்டிய அளவில் மழைபெய்து உலகம் க்ஷேமத்தை நிலைக்களமாகக்கொள்ளும்படி செய்தார். இச்செய்கையை உற்றுணர்ந்த அவ் விராமேச்சுரத்துச் சனங்களும் மற்றையோர்களும் தாயுமானவரிடத்தில் அச்சம் பெரிதுடையராய் அன்புகொண்டு அவர் திருத்தொண்டிலேயே காலத்தைப் பெரிதும் போக்கிவந்தார்கள்.

அந்நாளில் ஸ்ரீ தாயுமானசுவாமிகள் ஓர் ஏகாந்த ஸ்தானத்தில் சதா நிஷ்டைகொண்டு வசித்துவரும் எண்ணமுடையவராய் சேது முதலிய புண்ணிய தீர்த்தங்களிலே விதிப்படி ஸ்நானஞ்செய்து இராமநாதனையும் * பர்வதவர்த்தனியையும் பணிந்து விடைபெற்றுக் கொண்டு, இராமநாதபுரம் போய்ச்சேர்ந்து அந்நகரைச் சேர்ந்த

* இந்நூலிலே வரும் மலைவளர்காதலி என்னும் தோத்திரம் இவ்வம்மையாரைக் குறித்ததேயாம்.

இலக்ஷ்மிநகரம் என்னும் அரிய பகுதியிலே ஒரு நந்தவனமத்தியில் பரமானந்த நிட்டையில் வீற்றிருந்தருளித் தம்மை விட்டுப்பிரியாத அருளையர் கோடிக்கரை ஞானியர் முதலிய உத்தம மாணாக்கருக்கு உபதேசஞ்செய்து சாலிவாகனசகம் 1581-ல் சிவத்திலே இரண்டறக் கலந்தனர். அக்காலத்தில் அவரடியவர்கள் தோத்தரித்த செய்யுட்களிற் சில.

## அருளைய சுவாமிகள்

உலகினுக் கணியா மிராமநா தபுரத்
 துயர்நறை வாவியின் குணபால்
மலர்நிறை வனத்திற் சிவத்துறு நிட்டை
 மருவிமெய் யொருவிவே தாந்தத்
திலகிய பொருளால் வானமாய் நிறைவு
 மெங்கையே யெனதுபங் கமும்போய்
நிலையுற நினது திருவரு ளளிப்பாய்
 நின்மலா னந்தமே போற்றி.

## கோடிக்கரை ஞானிகள்

துகளறு சாலி வருடமா யிரத்தைஞ்
 ஞூற்றெண் பத்தொன்று தொடரு
மிகுசுப கிருதாம் வருடந்தை மாதம்
 வெண்மதி வாரநாள் விசாக
மகிமைசேர் பூரணத் திதியினி லருத்த
 மண்டல சமையத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றாயுமா னவனார்
 சிவத்தினிற் கலந்தனற் றினமே.

## அபியுக்தரொருவர்

விண்ணுறுறுந்தே வர்கண் முனிவர் கணங்கள் சித்தர்
 புகழ்மௌனி வியப்பால் ஞானத்
தண்ணுறு தண் டமிழ்மாலை யைஞ்ஞூற்றெண்
 பத்தேழுந் தாயு மானேன்

எண்ணூறுங்கண் ணிகளெண்ணூற் றறுபத்தைந்
    தகல்வண்ண மிரண்டும் பாடி
மண்ணூறுநால் வகைமாந்தர் தமக்காகப்
    பக்குவர்பால் வைத்தா னன்றே.

உரையாசிரியரியற்றிய சுவாமிகள் திருநட்சத்திர

வெண்பா.

தக்கதை மாதந் தனித்தவி சாகநாள்
மிக்கசுத் தாத்துவித மேனிலையி—னிற்கவுயர்
தண்ணருளி னிற்றிளைத்த தாயுமா னுச்செல்வர்
நண்ணினர்சி வானந்த நன்கு.

தொண்டைமண்டலம் - புலியூர்க்கோட்டம்,

பூவைக்கிழார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்




---

## தாயுமான சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு

மூலமும்

## மெய்கண்ட விருத்தியுரையும்

---

## திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

---

பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ர காசமா
யானந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது, தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது, மனவாக்கினில்
தட்டாம னின்றதெது, சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது,
எங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெது,மேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெது,அது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்குவாம்.
1

(இதன் பொருள்)

அங்கு இங்கு எனாதபடி - அண்டபகிரண்டங்களாகிய தூரத்திலுள்ளது பூமி பாதாளங்களாகிய சமீபத்திலுள்ளது என்று சுட்டிக் கூறாதவண்ணம், எங்கும் பிரகாசமாய் - எவ்விடத்தும் பேரொளியாய், ஆனந்த பூர்த்தியாகி - பூரணானந்தமாகி, அருளொடு நிறைந்தது எது - சத்தியோடு விபுவா யிருப்பது எந்தப் பொருள்; தன்னருள் வெளிக்குள்ளே - தன்னுடைய அருள் வெளியிலே, அகிலாண்டகோடி எல்லாம் - எல்லாப் புவனங்களும், தங்கும் படிக்கு - நிலைக்குமாறு, இச்சை வைத்து - விருப்பம் வைத்து, உயிர்க்குயிராய் - உயிர்க்குள் உணர்வாகி, தழைத்தது எது - விரிந்திருப்பது எந்தப் பொருள்; மனம் வாக்கினில் - மனத்தா னினைத்தற்கும் வாக்கா லுரைத்தற்கும், தட்டாமல் - எட்டாமல், நின்றது எது - நிலைபெற்றுள்ளது எந்தப் பொருள்; சமயகோடிகள் எல்லாம் - பல்வேறு சமயங்களும், தம் தெய்வம் (என்று) - தம்முடைய தெய்வமென்றும், எம் தெய்வம் என்று - எம்முடைய தெய்வமென்றும், எங்கும் தொடர்ந்து - எவ்விடங்களிலும் விடாது பற்றி, எதிர்வழக்கு இடவும் - நேர்நின்று வாதிக்கவும், நின்றது எது - அவரவர் தெய்வமாக நின்றது எந்தப் பொருள்; எங்கணும் - இவ்வாறு எவ்விடத்தும், பெரு வழக்காய் - முடிவு பெறாத பெரிய வழக்காகி, யாதினும் வல்ல - எத்தொழிலினும் வல்ல, ஒரு - ஒப்பற்ற, சித்து ஆகி - சேதனமாகி, இன்பம் ஆய் - பேரின்ப வடிவமாய், என்றைக்கும் - எக்காலத்தும், உள்ளது எது - நித்தியமாக இருப்பது எந்தப் பொருள்; மேல் - பின்னும், கங்குல் பகல் - இரவு பகல், அற நின்ற - அல்லாது நின்ற, எல்லை உளது எது - ஓரிடத்தினை வாய்ந்தது எந்தப் பொருள்; அது - அந்தப் பொருளே, கருத்திற்கு - யாவருடைய கருத்திற்கும், இசைந்தது - ஒத்தது; அதுவே - ஆதலாலப்பொருளே, கண்டன எல்லாம் (ஆகவும்) - காணப்பட்ட பூதபௌதிகங்களாகவும், மோனவுரு - மௌனரூபமான, வெளியதாகவும் - வெளியீடாகவும், கருதி - தியானித்து, அஞ்சலி செய்குவாம் - (யாம்) கைகூப்பி வணங்குவாம் என்க.

(விசேடவுரை)

இதுமுதலாக மூன்று செய்யுள்கள் 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்' கூறுகின்றன. ஈண்டுத் 'திருவருள்' என்றது ஞானசொரூபமான நிட்கள பராசத்தியினை. 'பரசிவம்' என்றது சுகசொரூபமான நிட்கள சிவத்தினை. ஆகவே, வேதாகமங்களின் கருத்திற் கதீதமாம் உயிர்க்குயிராய் உயிர்கட்கெல்லா மறிவைப் பிறப்பிக்குஞ் சிவசத்திமாத்திர சொரூபராய் அம்மையப்பர் வணக்கங் கூறியதாயிற்று. "யத்யதாயத்ருஶம் யாவத்கார்யம் தத்காரணம் ததேத்." முதல்வன்றனது தடத்தத்தில் அம்மையப்பராய் விளங்குதல்போல, தனது சொரூபத்தும் அம்மையப்பராய் விளங்குதல் வேதாகமங்கட்கெல்லா மொத்த துணிபு. திருக்காளத்திப்

படியார்: "அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக, வம்மை யப்ப ரப்பரிசே வந்தளிப்ப - ரம்மையப்ப, ரெல்லா வுலகுக்கு மப்புறத்தா ரிப்புறத்து, மல்லார்போ னிற்பா ரவர்." என்பதனாற் காண்க.

வாதுளம்: "ஶிவதத்வம் மஹாஸேந நிஷ்களந்த்விதி கீர்த்திதம் | ஸகளம் நிஷ்களந்தேதி ஸாதாக்யமிதி சோச்யதே ‖ மஹேஸம் ஸகளம் வித்யாத்ரி வியாஸ்தே பவந்திசேத்." எனவும், சிவஞானசித்தியார்: "அருவமோ ருபாருபமானதோ வன்றி நின்ற, வுருவமோ வுரைக்குங் கத்தா வடிவெனக் குணர்த்திங் கென்னி, லருவமும் ருபாருப மானது மன்றி நின்ற, வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ளதாமே." எனவும் கூறியுள்ளபடி அனாதிமல முத்தனாகிய சிவபெருமானுக்கு அருவம், உருவம், உருவாருவம், அதீதம் என நான்கிலக்கணங்களுங் கேட்கப்படுதலின் அவற்றுளொன்றாகிய அருவவிலக்கணம் முதல் மூன்று செய்யுள்களில் கூறப்பட்டுள்ள தெனினுமாம். மேல் அவ் விலக்கணங்க ளனைத்தும் விரவியே வரும்.

ஆகாயமுதல் பிருதிவியீறாகவுள்ள பஞ்சபூத பரிணாமமான பிண்டப் பிரமாண்டங்களும், இவற்றிற்குக் காரணமான தத்துவங்களும், இவற்றிற் குட்பட்ட ஆன்மகோடிகளும் முதல்வன் தானேயாய்ப் பூரணமாய் நிற்கின்ற சொருபத்தினை யுடையவராகலின் 'அங்கிங் கெனாதபடி' என்றார். சிவ ஞானபோதம்: "அந்யஸ்ஸந்வ்யாப்தி தோநந்ய: கர்த்தா கர்மாநுஸாரத | கரோதி ஸம்ஸ்ருதிம், பும்ஸா மாஜ்ஞயா ஸம, வேதயேத் ‖" எனவும், தேவாரம்: "எல்லா வுலகு மானாய் நீயே" எனவும், "இருநிலனாய்த் தீயாகி" எனவும், திருவாசகம்: "நினைப்பற நினைந்தா னீயலாற் பிறிது மற்றின்மை" எனவும், "வானகமு மண்ணகமுமாய் நிறைந்த வான் பொருளே" எனவும் வருவனவற்றாற் காண்க. ஆன்மாக்களுடைய இச்சா ஞானக்கிரியைகளை மறைக்கின்ற பேரந்தகாரமாகிய ஆணவமலத்தினை ஒழித்தலினாலும், சோமசூரியாக்கினி நட்சத்திரங்களா யுள்ளவற்றிற்கு மொளியினைக் கொடுத்தலினாலும் 'பிரகாசமாய்' என்றனர். "பேரொளியைப் பெரும்பற்றப் புலியூரானை" எனவும், திருவாசகம்: "வெளிவந்திலேனை விடுதிகண்டாய் மெய்ச்சுடருக்கெல்லா மொளிவந்த பூங்கழல்" எனவும், சிவஞானசித்தியார்: "உருகுதலைச் சென்ற வுள்ளத்து மம்பலத்து மொளியே" எனவும், "நாயகன் கண்ணயப்பா னாயகி புதைப்ப வெங்கும், பாயிரு ளாகிமூடப் பரிந்துல கினுக்கு நெற்றித், தூய நேத்திரத்தினாலே சுடரொளி கொடுத்த பண்பிற், றேயமா ரொளிகளெல்லாஞ் சிவனுருத் தேசதென்னார்." எனவும் வருவனவற்றாற் காண்க. அவன் றிருவுருவனைத்தும் ஆனந்தமே யாகலினாலும், அவனை யுற்று நோக்குவார்க்கு மானந்தமே விளைதலினாலும் 'ஆனந்தபூர்த்தியாகி' என்றனர். வண்டுவிடு தூது: "மறைக்கோவணத்தான் மறைச்சிலம்பான்மாவான், மறைக்கோவறி வரிய

மாண்பா - னெறிக்கோ, ளுயிருக் குயிரா னுயிரறிவுக் கெட்டான், பயிலுயிர்க்கே யின்பருளும் பண்பான் - பயிலுநர்க்குக், கண்ணுமா னந்தங் கனிவாயுமானந்தம், வண்ண வதனமு மானந்தந் - தண்ணறல்சேர், வேணியுமானந்தம் வியன்மார்பு மானந்தம், பூணுமா னந்தம் புயங்கரந்தா ளுனுடையு, மானந்த மானந்த மானந்த மானந்த, மானந்த மெய்யுறுப்பு மானந்தம்." எனவும், **துகளறுபோதம்**: "அண்ணலு மானந்த மருளுமா னந்தமுயி, ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும் - பண்ணி யளித்தழிப்பாதி யமரரு மானந்தங், களித்ததுவேயெங்குமெனக்காண்" எனவும், **சிற்றம்பலநாடியார்**: "ஆனந்தமேசெவி யம்புயத்தாளிணை யங்கைகளு, மானந்தமே திருக்கண்ணுஞ்செவ்வா யருண்மேனியெல்லா, மானந்தமே திருச்சிற்றம்பலவரருட்பொருளு, மானந்தமேயவன் றில்லையுங்காழியு மானந்தமே." எனவும், **திருவாசகம்**: "தினைத்தனையுள்ளதோர் பூவினிற் றேனுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போது, மனத்தெலும்புண்ணெக வானந்தத் தேன்சொரியுங் குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ." எனவும், **பட்டினத்தார்**: "அட்டாங்கயோகமு மாதாரமாறு மவத்தையைந்தும், விட்டேறிப்போன வெளிதனிலே வியப்பொன்று கண்டேன், மட்டாகி யானந்தத் தேனூறலுண்டு மதிமயங்கி, யெட்டாத பேரின்பமென்னை விழுங்கி யிருக்கின்றதே." எனவும், "ஸர்வானந்தமயச்சிவ:" எனவும் வருவனவற்றாற் காண்க. அவன்கொண்ட திருமேனியனைத்தும் அருளேயாகலின் 'அருளொடுநிறைந்தது' என்றார். **சிவஞானசித்தியார்**: "உருவருள் குணங்களோடு முணர்வருளுவிற் றோன்றுங், கருமமு மருளாரன்றன் கரசரணாதி சாங்கந், தருமருளு பாங்கமெல்லாந் தானரு டனக்கொன்றின்றி, யருளுருவுயிருக்கென்றே யாக்குவ னமலன்றானே." என்பதனாற் காண்க. வெளியென்பது சந்நிதானம்; ஆகவே, ஆதித்தன் சந்நிதியில் பிரபஞ்சங் காரியப்படுமாறுபோல முதல்வன் சந்நிதிமாத்திரத்திலே எல்லா வுலகங்களும் தோன்றி விரிந்து அடங்குமாகலின், 'வெளிக்குளே அகிலாண்டகோடியெல்லாந் தங்கும்படிக்கு' என்றார். **சிவஞானசித்தியார்**: "விந்துவின் மாயையாகி மாயையினவ்வியத்தம், வந்திடும் விந்துதன்பால் வைகரியாதிமாயை, முந்திடு மிராகமாதி முக்குண மாதி மூலந், தந்திடுஞ் சிவன வன்றன் சன்னிதி தன்னினின்றே." என்பதனாற் காண்க. 'இச்சை' என்பது கிருபையினை. ஆன்மாக்களுக்கு அருள்செய்தற் பொருட்டு உலகந் தங்கும்படி கிருபைவைத்தலை 'இச்சைவைத்து' என்றார். "ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன்றாகி, நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க் கருணைசமாகு, நன்றெலா ஞானசத்தி யானயத் தறிவனாதன், அன்றருட் கிரியை தன்னா லாக்குவ னகிலமெல்லாம்." என்பதனாற் காண்க. கண்ணொளியின் ஆன்மபோதம்போல உயிரின் கண்ணே உடனியைந்து நிற்றலின் 'உயிருக்குயிராய்' என்றார். **பிருகதாரணியம்**: "யஸ்யாத்மாசரீரம்" என்றும், **திருமந்திரம்**: "இணங்கி

னின்று னெங்குமாகி நின்றான்" எனவும், சிவஞானபோதம்: "பண்ணையு மோசையும்போலப்பழமதுவு, மெண்ணுஞ்சுவையும்போ லெங்குமா - மண்ணா, லத்துவிதமாதலருமறைகளொன்றென்னு, தத்துவித மென்றறையு மாங்கு." எனவும் வருவனவற்றாற் காண்க. முக்குணங்களுடன் கூடிய சங்கிலிட்ட முதலிய மூவிதமான மனத்தினாலும், வைகரியாதி நால்வித வாக்கின் பகுதியவாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு அதீதமாய்ச் சுட்டுணர்வுக் கெட்டாது நிற்றலின் 'மனவாக்கினிற் றட்டாமனின்றது' என்றார். சிவஞானசித்தியார்: "மறையினாலயனான் மாலான் மனதினால் வாக்கான் மற்றுங் குறைவிலாவளவினாலுங் கூறொணாதாகிநின்ற இறைவனார்" எனவும், திருவிளையாடல்: "வாக்கிறந்த பூரணமாய்" எனவும் வருவனவற்றாற் காண்க. புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச் சமயமும், அகச்சமயமுமெனச் சமயம் நான்கு வகைப்படும். அவற்றுள், புறப்புறச்சமயம்: உலோகாயதம், நால்வகைப் பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும். புறச்சமயம்: தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். அகப்புறச் சமயம்: சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவமென அறுவகைப்படும். அகச்சமயம்: பாடாணவாதசைவம், சங்கிராந்தவாதசைவம், அவிகாரவாதசைவம், பரிணாமவாதசைவம், சுத்தசைவம், பேதவாதசைவம் என நாலாறு சமயங்களும் காலாந்தரத்தில் இவற்றினின்றுங் கிளைத்த சமயங்களும் பலவாகலின் 'சமயகோடி' என்றார். தத்துவசோபானங்களாகிய இச்சமயவாதிகள் ஒருவரோடொருவ ரெதிர்த்துத் தங்கள் சமயங்கள் சத்தியமென வாதிடத் தத்துவாதீதனாகிய முதல்வன் அச்சமயங்கடோறும் அவரவர் கடவுளாயிருப்பவராகலின் 'வழக்கிடவுநின்றது' என்றார். சிவஞானசித்தியார்: "யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர் மற்றத் தெய்வங்கள், வேதனைப்படும் பிறக்கு மிறக்கு மேல்வினையுஞ் செய்யுமாதலா லிவையிலாதான றிந் தருட்செய்வ னன்றே." என வருவதாற் காண்க. எவ்வகைப்பட்ட தொழில்களும் பஞ்சகிருத்தியத்தினு ளடங்குமாகலின், 'யாதினும் வல்லவொரு' என்றார். கோயிற்புராணம்: "கரண மனைத்தும் புலனிவைகாணு கைவிட்டான், மரணமெமக்கிங் கிதுதமியோம்வாழ் வருண்மாறிற், றிரணமு மெய்யச்சுஞ் சலமிலதென்று லொன்றாகின், புரணமெனக் கொண்டருளுக வென்றார் நின்றார்கள்." என்பதனாற் காண்க. அவனவளது வென்னும் அவயவப்பகுப்புடைய பிரபஞ்சந் தோன்றுதற்குரிய சற்காரிய முறையாற் றோன்றிநின்று அழிதலுடைமையால், அது தன்னைத் தோற்றுவிப்பா னொருவனை முதலே அவாய் நிற்கும். ஆகலான், அவ்வுலகை யொடுங்குதற்கு ஏதுவாய்நின்ற சங்காரகாரணனை, அஃதொடுங்கிய பின்னும் அனாதி முத்த சித்துருவாய் நிலைபெற்று நிற்றலின், 'சித்தாகி' என்றார். தேவிகாலோத்தரம்: "நஸ்தூலஸூக்ஷ்மோ நசுபஸ்ய போஞ்ஞானைகரூபோஜகதேக

பந்தநேரிதி" என்றும், சிவஞானசித்தியார்: "ஒருவனே டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம், வருமுறை வந்து நின்று போவது மாதலாலே, தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறுமாகி, மருவிடு மநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே" என்றும் வருவனவற்றாற் காண்க. தன்னைவந் தடையுமவர்க்கு இன்பத்தினை வழங்கி இன்பவடிவமேயாயிருத்த லின் 'இன்பமாய்' என்றார். திருவருட்பயன்: "இன்பதனையெய்துவார்க் கீயுமவர்க்குருவ, மின்பகன மாதலினாலில்." என்றதனாற் காண்க. இரவும் பகலும் இல்லையாக நின்றதொரு நிலைக்களத்தே யிருப்பவராதலின், 'கங் குல்பகலறநின்ற வெல்லையுளது' என்றார். திருவுந்தியார்: "இரவுபக லில்லாவின்பவெளியூடே, விரவிவிரவிநின்றுந்தீபற, விரையவிரைய நின் றுந்தீபற." என்றும், திருமந்திரம்: "இரவும் பகலு மிலாத விடத்திற், குர வஞ் செய்கின்ற குழலியை நாடி, யரவஞ் செய்யாம லவளுடன் றூங்கப், பருவஞ்செய் சாக்கிரப் பாலனுமாமே." என்றும், பட்டினத்தார்: "சினந் தனையற்றுப் பிரியமுந்தானற்றுச் செய்கையற்று, நினைந்ததுமற்று நினையா ததுமற்று நின்மலனாய்த், தனந்தனியேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற, வனந்தலி லென்றிருப்பே னத்தனேகயி லாயத்தனே." என்றும், "இரவும் பகலு மில்லாத விடத்தே - பரமசிவம் பாராமற் பார்த்து" எனவும் வருவத னாற் காண்க. 'கங்குல்பகல்' என்றது அறிவு அறியாமை யெனினுமாம். திருமந்திரம்: "அறிவறியாமை யிரண்டு மகற்றிச், செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப், பிறிவறியாத பிரானென்று பேணுங், குறியறி யாதவர் கோனறியாரே." என்றும், "அறிவறியாமை யழிந்தனரே, யறிவறியாமை யழிந்தனரே; பிறிவறியாமைபிறந்தனரே, பிறிவறியாமைபிறந்தனரே" என் றும், திருப்புகழ்: "அறிவுமறியாமையுங் கடந்தறிவு திருமேனியென் றறிந் தருண சரணாரவிந்தமென் றடைவேனோ" என்பதனாற் காண்க. 'கங்குல் பகல்' என்றது நினைப்பு மறப்புமாம். திருவம்மானை: "உற்றநினைப்பு மறப்பற்றேனம்மானை யோவாத சித்தத்தே யொத்தேன்காணம்மானை" என்றதனாற் காண்க. அலகுக்குமங்களாற் காணப்பட்ட பூதபௌதிகங்க ளாகிய விடயபதார்த்தங்க ளனைத்தினிலும் விரவிநிற்றலின் 'கண்டவை யெலாம்' என்றார். "எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை" என்ற தனாற் காண்க. "மோனவுருவெளியதாகவும் கருதி யஞ்சலிசெய்குவாம்" எனப் பரசிவ வணக்கங் கூறினாரேனும், அபேதம்பற்றிக் குடிலையாகிய மூல மனுவினின்றும் வெளிவந்தருளிய முதற்கடவுளாகிய மூத்த பிள்ளையாரை அஞ்சலி செய்தனரென உரைத்தலு மமையும்; அல்லதூஉம் குருஞானவாசிஷ் டம்: "ஸ்ரீமதோ தக்ஷிணா மூர்த்தோ - வடமூலநிவாஸிந: ஸர்வசார்யஸ்ய கோருஸ்ய - தாசார்யச் சகிமார்க்கத: நித்யசுத்த விபுத்தாத்ம நிஷ்டஸ்ஸ கருணாநிதி - விக்ஷண்வா தீநாம்குரு: ப்ரோக்தோ - நருதஸ்யக்வசித்குரு" என்றபடி அதீதமாகிய நிராதாரப் பரமகுருவை அஞ்சலிசெய்தா ரெனினு மொக்கும். அல்லதூஉம் திருமூலநாயனார் மரபில் குருவடியாய் எழுந்தருளி

வந்து தமக்குப் பந்தமோசனஞ் செய்த தமது ஆசிரியரை அஞ்சலி செய்தா ரெனினு மொக்கும். இங்ஙனங் குறிப்பாற் சொல்வது உள்ளுறை யணியாம்.

'எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்ததும்' 'இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்ததும்' 'மனவாக்கினிற் றட்டாமல் நின்றதும்' 'எங்ஙுந் தொடர்ந்து எதிர்வழக்கிடவு நின்றதும்' 'யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய் என்றைக்கும் உள்ளதும்' 'கங்குல்பக லறநின்ற எல்லையுளதும்' ஆகிய பரசிவமொன்றே சராசரங்க ளனைத்தினும் விரவி நிற்றலால், கண்டனவெலாமாதலின் அதனையே 'மௌன வுருவெளியதாகவும் கருதி யஞ்சலிசெய்குவாம்' என முடிக்க.

'அங்கு, இங்கு' என்பவற்றோடு உங்கு எனவும் இனம்பற்றிக் கூட்டிக் கொள்க. என்னுத என்பது 'எனுத' என இடை குறைந்தது. 'ஆனந்த பூர்த்தி' வடசொற் புணர்ச்சியாதலின் இயல்பாயது. 'மனம், வாக்கு' என்பவற்றோடு இனம்பற்றிக் காயத்தினையுங் கூட்டுக. வாக்கிலும் என உம்மை விரிக்க. எல்லா மென்பதில் உம்மை தொக்கது. 'வெளியது' என்பதில் அது - பகுதிப் பொருள் விகுதி. (1)

ஊரனந் தம்,பெற்ற பேரனந் தஞ்,சுற்று
முறவனந் தம்,வினையினு
லுடலனந் தஞ்,செயும் வினையனந் தங்,கருத்
தோவனந் தம்,பெற்றபேர்
சீரனந் தஞ்,சொர்க்க நரகமு மனந்த,நற்
றெய்வமு மனந்தபேதந்,
திகழ்கின்ற சமயமு மனந்தம்,அத னுன்ஞான
சிற்சத்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணூறும்விண் ணூங்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலை,நங்
கடவுளைத், துரியவடிவைப்,
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்,
பேசரு மனந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம்.

(இ - ள்) ஊர் அனந்தம் - (பிறந்த) ஊர்களோ அளவில்லன; பெற்றபேர் அனந்தம் - பற்பல பிறவிகள்தோறும் பெற்ற பேர்களோ அளவில்லன; சுற்றும் உறவு அனந்தம் - சூழும் உறவாதிகளோ அளவில்லன; வினையினால் - வினைகளின் வேறுபாட்டால், உடல் அனந்தம் - உண்டாகிய சரீரங்களோ அளவில்லன; செய்யும் - அச் சரீரங்களாற் செய்யும், வினை அனந்தம் - தொழில்களோ அளவில்லன; கருத்தோ அனந்தம் - எண்ணங்

களோ அளவில்லன; பெற்ற பேர் சீர் அனந்தம் - அடைந்த பெருஞ் சிறப்புகள் அளவில்லன; சொர்க்க நரகமும் அனந்தம் - முத்திப்பதங்களும் நரகங்களும் அளவில்லன; நல்தெய்வமும் அனந்தபேதம் - நல்ல தெய்வங்களும் அளவில்லனவாகிய பேதங்கள்; திகழ்கின்ற சமயமும் அனந்தம் - விளங்காநின்ற சமயங்களும் அளவில்லன; அதனல் - ஆதலால், ஞானசிற்சத்தியால் உணர்ந்து - ஞானமே திருமேனியாகிய பராசத்தி யருளால் அறிந்துகொண்டு, அனந்தங்கோடி கார் வருஷித்தது என - அனேக கோடி மேகங்கள் மழையைப் பொழிந்தது போல, அன்பர் கண்ணும் விண்ணும் தேக்க - அடியார்கள் விழிகளும் இதயாகாயமும் நிறையும்படி, கருது அரிய - நினைத்தற் கிசையாத, ஆனந்த மழை பொழியு முகிலை - இன்ப மழையைப் பொழிகின்ற மேகத்தை, நம் கடவுளை - நமது கடவுளை, துரிய வடிவை - துரிய சொரூபத்தை, பேர் அனந்தம் பேசி - அளவில்லனவாகிய பேர்களை யெடுத்துக்கூறி, மறை அனந்தம் சொலும் - எண்ணில வாகிய வேதங்கள் புகழும், பெரிய மௌனத்தின் வைப்பை - பெரிதாகிய மௌனப் புதையலை, பேசு அரும் - சொல்லுதற்கரிய, அனந்த பதம் - அந்தமில்லாத தான பதமும், ஞான ஆனந்தமும் ஆம் - ஞானானந்தமுமாகிய, பெரிய பொருளை - பரசிவத்தை, பணிகுவாம் - (யாம்) வணங்குவா மென்க.

(வி - ரை) திருவாசகம்: "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லாஅநின்ற வித்தாவரசங்கமத்துள், எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்." என்ற சுருதிப்படி ஆன்மாக்களுக்குப் பல சன்மங்கள் சித்தம். அச் சன்மங்கள் பிறந்த இடங்கள் பலவாகலின் 'ஊரனந்தம்' என்றும், அச் சன்மங்களில் வாய்ந்த பெயர்களும் பலவாகலின் 'பேரனந்தம்' என்றும், அச் சென்மங்க டோறுஞ் சேர்ந்த உறவினரு மனந்தமாகலின் 'உறவனந்தம்' என்றுங் கூறினர். பட்டினத்துப்பிள்ளையார்: "எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனை தாய் பெற்றவர்க ளெத்தனைபே ரிட்டழைக்க வேனென்றேன்" எனவும், "அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ வப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ, பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ, பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ" எனவும் வருவதனாற் காண்க. பட்டினத்துப் பிள்ளையார்: "வினைப்போகமே யுருத்தேகங் கண்டாய் வினைதானொழிந் தால், தினைப்போதளவு நில்லாது" என்றதனல் வினையினால் உடலுண்டாம்; அவ்வுடல் எண்பத்துநான்கு லட்ச யோனி பேதமென வரையறுக் கப்பட்டதேனும், ஒவ்வொரு பேதத்தினும் எண்ணிறந்த உடல்கள் தோன்று வன வாகலால் 'வினையினால் உடலனந்தம்' என்றார். அவ் வுடல்களோடு கூடிய உயிர்கள் பல வேறு வகைப்படுவனவாம். செய்வினைகள் அளவு படாமையின் 'வினையனந்தம்' என்றார். திருக்குறள்: "ஒருபொழுதும்

வாழ்த லறியார் கருதுப, கோடியு மல்ல பல." எனவும், ஔவையார் "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழ, மெண்பது கோடி நினைந்தெண்ணு வன" எனவும் வருவனவற்றால் 'கருத்தோ வனந்தம்' என்றார். தத்தம் வினைகளுக்கேற்பப் பிறவிகடோறு மனுபவிக்குஞ் செல்வங்கள் அளவில் லன வாகலின் 'சீரோ அனந்தம்' என்றார். ஆன்மாக்கள் தம்முடைய இரு வினைகளுக்கீடாக அனுபவிக்கும் பதமுத்திகளும் பாதாளங்களு மனேக மாகலின் 'சொர்க்க நரகமு மனந்தம்' என்றும், அவர்கள் புண்ணியங்களுக் கீடாக வழிபடும் கடவுளரு மனந்தமாகலின் 'தெய்வமு மனந்தம்' என்றும், அக் கடவுளரைப் பற்றிய மதங்களு மனந்தமாகலின் 'சமயமு மனந்தம்' என்றனர். உயிர்கட்கு அனுக்கிரக மாத்திரங் குறித்துப் பொதுவகையா னறிந்தும் அறிவித்து நிற்பதாகிய ஞானமொன்றே சிவசத்தியின் சொரூப மாகலின் 'ஞானசிற்சத்தி' என்றார். சிவஞானசித்தியார்: "சத்தி தன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகும்" என்றதனாற் காண்க. ஆன்மாக்களின் இருவினைக்கீடாகப் பலவகைப்பட்டுக் கிடக்கின்ற மேற் கூறிய விடயங்களை அருண்முன்னீடா யறிந்து அவற்றின் தோற்றக் கேடு களைத் தெளியவேண்டின் பராசத்தி யருளா லறியவேண்டி யிருத்தலின் 'சிற்சத்தியா லுணர்ந்து' என்றார். பட்டினத்துப்பிள்ளையார்: "தாயுடன் சென்று பின் தாதையைக் கூடி" என்றதனாற் காண்க. உலகம் வெம்மை யொழிந்து குளிர்ச்சியடைய மழை பொழிவதுபோல், ஆன்மாக்கள் ஆணவ மொழிந்து சுகமடைய அருண்மழை பொழிதலின் 'ஆனந்தமழை' என்றார். தம்மைப்போற் சிவானுபவத்தினை யுடைய திருவருட் பெருஞ் செல்வர்களை யும் உள்ளிட்டுக்கொண்டு 'நம் கடவுள்' என்றார். "ஏகஏவருத்ரோ நத்விதீயாய தஸ்தே" "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மா" "ஸர்வோஹ்ய யேஷருத்ர" "ஸர்வம் கல்விதம் பிரம்ம" "சிவமத்வைதம் சாந்தம் சதுர்த்தம் மன்யந்தே" "துரீயம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம" "வேதச்சஸர்வை ரஹமேவவேத்யோ, வேதாந்த தக்ருத வேதவிதேவசாஹம்" சிவயேவ கேவல." எனப்போந்த உபநிடத வாக்கியங்களால் சிவனே துரியமெனப் படுதலின் 'துரியவடிவை' என்றார். திருவாசகம்: "ஒருநாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரந் திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட் டாமோ." என்றதற்கேற்பப் 'பேரனந்தம் பேசி' என்றார். "அநந்தாவை வேதா" என்றதனால், அவ்வேதங்களனைத்தாலும் புகழப்படுபவனாதலால் 'மறையனந் தஞ்சொலும்' என்றார். சனகராதி நால்வர் ஞான போதகத் தினை விரும்பப் பெருமான் கல்லாலினீழற்கண் வீற்றிருந்து திருமார்பின் கண் ஒரு திருக்கரத்தினைச் சேர்த்து மற்றொரு திருக்கரத்தான் மோன முத்திரையைக் காட்டி யோகியர்போல விருந்து மோனத்தி னிலையினைத் தெரிவித்தனராகலின் 'மௌனத்தின் வைப்பை' என்றார். திருவிளை யாடல்: "கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி, வல்லார்க ளொல்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்

பாலா, யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்." என்பதனுற் காண்க. 'அனந்தபதம்' என்பது முடிவற்ற பதத்தினை; அதாவது, சகல கேவல நீங்கித் திரிபுடியற்றுச் சிவத்துடனே இரண்டறக் கலந்து அனுபவிக்கும் சுகாதீத நிலையினை. முற்று முணர்தலை 'அனந்த ஞானம்' எனவும், வரம்பிலின்பமுடைமையை 'ஆனந்தம்' எனவுங் கூறினர். மாயா காரியமான அண்டத் தொகுதிக ளெல்லாம் அணுவாகி மகா சங்காரத்தில் முறையே காரணமாயையி லொடுங்க, அம்மாயை சிற்சத்தியி லொடுங்க, சிற்சத்தி சிவத்திலொடுங்க, அச் சிவஞ் சேடித்துத் தானாய்நின்ற அவதரத்துப் பெரிதாய் நிற்றலின் 'பெரிய பொருளை' என்றார். கைவல்யோபநிடதத்து "மகதோம கியாம்" என்றது மது.

ஊர், பேர், உறவு, உடல், வினை, கருத்து, சீர், சொர்க்கம், நரகம், தெய்வம், சமயம் ஆகிய இவற்றின் தோற்றக் கேடுகளைச் சிற்சத்தியா லுணர்ந்து ஆனந்த மழை பொழியு முகிலும், நம் கடவுளும், துரிய வடிவும், பெரிய மௌன வைப்பும், அனந்த பதமும், அனந்த ஞானமும் ஆகிய பெரிய பொருளைப் பணிகுவாம் என முடிக்க. (2)

அத்துவித வத்துவைச், சொற்ப்ர காசத்தனியை,
அருமறைகண் முரசறையவே
யறிவினுக் கறிவாகி யானந்த மயமான
ஆதியை, அநாதியேக
தத்துவ சொரூபத்தை, மதசம்ம தம்பெறாச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோமநிலையை,
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை,
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத், தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்,
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

(இ - ள்) அத்துவிதவத்துவை - இரண்டற்ற பொருளை, சொற்பிரகாசத்தனியை - மந்திரமே திருமேனியாகக்கொண்ட ஒன்றை, அருமறைகள் - அருமையான வேதங்கள், முரசு அறைய - முழங்காநிற்ப, அறிவினுக்கு அறிவு ஆகி - உயிருக்குயிராகி, ஆனந்தமயமான - பேரின்பமய

மாகிய, ஆதியை - முதற்பொருளை, அநாதி - பழமையான, ஏகதத்துவ சொரூபத்தை - ஒன்ருன உண்மைவடிவை, மதசம்மதம் பெரு - மதசம்மத மடையாமல், சாலம்பரகிதமான - ஆதாரமில்லாததான, சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப சாந்தபத வ்யோமநிலையை - சாசுவதமும் புட்கலமும் நிராலம்பமும் ஆலம்பமுமான சாந்தபதமென்னும் வ்யோமநிலையினை, நித்த நிர்மலசகித - அநாதிமல நீக்கத்துடன் கூடிய, நிஷ்பிரபஞ்சப்பொருளை - பிரபஞ்சாதீதப்பொருளை, நிர்விஷய சுத்தமான - விஷயப்பற்றுக ளொன்று மில்லாத சுத்தமமைந்த, நிர்விகாரத்தை - விகாரமின்மையை, தடத்தம் ஆய்நின்று ஒளிர் - பொதுவாய் நிலைபெற்று விளங்குகின்ற, நிரஞ்சன நிரா மயத்தை - நிரஞ்சனமாகிய நிராமயத்தை, சித்தம் அறியாதபடி - கருத்தறி யாதவகை, சித்தத்தில் நின்று இலகு - கருத்தில் நின்று பிரகாசிக்கின்ற, திவ்ய தேசோமயத்தை - மேன்மையான பிரகாசப் பிழம்பினை, சிற்பர வெளிக்குள் வளர் - பரமாகாயத்தில் பூரணுகாரமாகிய, தற்பரமதான - பரமேச்சுரனை, பரதேவதையை - மேலான தெய்வத்தை, அஞ்சலி செய் வாம் - (யாம்) கைகூப்பி வணங்குவாம் என்க.

(வி - ரை) ந—துவிதம்=அத்துவிதம், 'ந' கெட்டு 'அ' தோன்றிற்று. அத்துவிதமாவது "பேதப்பொருளிரண்டு தம்முள்பேதமாதற்குரிய சம்பந்த விசேடம்" "பிரிவருமத்துவிதமாகுஞ் சிறப்பினதாய்" என்றும், "அறி வொளிபோற் பிரிவரு மத்துவிதமாகும்" என்றும் வருவனவற்ருற் காண்க. அன்றியும் ஈண்டு அத்துவிதமென்றது கேவலம், விசிட்டம், மறுதலையென் ருதலொன்ருன் விசேடிக்கப்படாது நின்றமையால் சுத்தாத்துவிதத் தினையே குறித்து நின்றது. 'சுத்தம்' என்றது அடையன்ரே வெனின், அன்று. அது விசேடத்தைச் "சுத்தசத்தை." எனத் தார்க்கீகர் கூறும் வாய்பாட்டா னறிக; இவ்வத்துவிதமே இந்நூலாசிரியருக்கு உடன் பாடென்பது, இந்நூலின் குரு மரபின் வணக்கத்தில் "பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித, மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந் நாளோ." என்றதனு லறிக. அங்ஙனமாயின், அத்துவிதமென்ற சொல் லில் அகரத்தினுக்குப் பொருள் என்னையோவெனின், அன்மை யென்பதே பொருளாம். இன்மையென லாகாதோ வெனின், ஆகாது. எண்ணுப் பெயர்மேல் வந்த அகரம் அன்மைப்பொருளொன்றினையே குறிக்குமென வடமொழி வியாகரணங்கள் முழங்குதலே சான்ரும். மந்திரவடிவமே திருமேனியாகலின் 'சொற்பிரகாசத்தனியை' என்ருர். வாதுளாகமம்: "யோகீநாஞ்சயதீ நாஞ்சத்யாநிநாம் மந்த்ரிணும்ததா | த்யாந பூஜா நிமித் தாயநிஷ்களம் ஸகலம் பவேத் | ஈசாநபுருஷா கோரவாமஜா தாதிகாஃ க்ரமாத் | எதா ஃ ஸமாஹிவாவஸ்தாஇதி" என்றும், சிவஞானசித்தியார்: "மந்திரமதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத், தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேணீ, மூந்திய தோற்றத் தாலு மந்திர மூலத்தாலு, மந்தயில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே." என்றும் வருவனவற்

ரூற் காண்க. 'அருமறைகள் முரசு அறைய' என்றது வேதங்கள் பூசித்ததே சான்றும். உயிர்க்குள் அறிவாகிப் பேரின்பத்தினைப் பயத்தலின் 'அறிவினுக்கறிவாகி ஆனந்தமயமான ஆதி' என்றார். "உள்ளந்தோறுஞ் சென்றளேயமுதமூற்றுந் திருவருள்" என்றதனுற் காண்க. ஆதியந்தமல்லாத் தன்மையினுல் 'அனுதி' என்றார். "ஆதியுமந்தமு மில்லா அரும் பெருஞ் சோதியை" என்றதனுற் காண்க. 'ஏகதத்துவ சொரூபத்தை' என்றது சொரூபவிலக்கண மமைந்த உண்மையினை. சிவஞானசித்தியார்: "அறிபொரு ளசத்தாய் வேறு மறிவுறுப் பொருள்சத்தென்னி, லறிபவ னறியானுகி லதுவின் று பயனுமில்லை, யறிபவ னருளினுலே யன்னியமாகக் காண்ப, னறிபொருளறிவாய்வேறு யறிவருளுருவாய் நிற்கும்." என்றதனுற் காண்க. பதிஞானத்தினைத் தெரிவிக்கும் வைதிக சைவசமயம் போலாது பாசஞானத்தினையும், பசுஞானத்தினையும் போதித்துச் செந்நெறியினை யிழக்கச்செய்வது முக்கூற்றுப் புறச்சமயங்களாகலின், 'மதசம்மதம்பெருச் சாலம்பம்' என்றார். திருவாசகம்: "சமயவாதிக டத்தமதங்களி லமைவதாக வரற்றிமலைந்தனர்." எனவும், "இருமுச்சமயத்தொரு பேய்த்தேரினை, நீர்நசைதரவருநெடுங்கண்மான் கணந், தவப்பெருவாயிடைப் பருகித் தளர்வொடு, மவப்பெருந்தாப நீங்காதசைந்தன." எனவும், திருமந்திரம்: "ஒத்த சமயங்களோராறுவைத்திடு, மத்த னொருவனுமென்ப தறிந்திடின், முத்தி விளைக்கு முதல்வனுமாமே." எனவும், "முதலொன்று மானை முதுகுடன் வாலுந், திதமுறு கொம்பு செவிதுதி கைகான், மதியுட னந்தவர் வகைவகை பார்த்தே, யதுகூற லொக்கு மாறு சமயமே." எனவும், பட்டினத்துப்பிள்ளையார்: "அன்றென்று மாமென்று மாறுசமயங்க,ளொன்றோடொன் றொவ்வாதுரைத்தலு மென்று, மொருதனையே நோக்குவா ருள்ளத்திருக்கு, மருதனையே நோக்க வரும்." எனவும், அமுதசாரம்: "உரைத்த துரையா துரைக்குஞ் சமயம், பரத்தை யறி வுற்ற பான்மை—மரத்தி, னவயவத்தி லோரென் றறிந்தார் மரமா, மவயவத்தைக் கொண்ட வாறும்." எனவும் வருவனவற்றுற் காண்க. சாலம்பரகிதம் - பற்றுக்கோ டில்லாதது. சாசுவதம் - என்றைக்கு முள்ளது. புட்கலம் - நிறைந்தது. நிராலம்பம் - ஆதாரமில்லாதது. ஆலம்பம் - எல்லாவற்றிற்கு மாதாரமாயுள்ளது. சாந்தபதம் - ஒடுக்க நிலையாயிருப்பது. வியோமம் - ஆகாயம். நின்மலம் - மாசின்மை. நிஷ்ப்ரபஞ்சம் - பிரபஞ்ச நீக்கம். நிர்விஷயம் - அறியப்படாமை. நிர்விகாரம் - விகாரமின்மை. தடத்தம் - பொது. நிரஞ்சனம் - குற்றமின்மை. நிராமயம் - நோயின்மை. 'சித்தம்' என்பது ஈண்டு மனம்; மனமானது மாயாகாரியமானமையின் 'சித்தமறியாதபடி' என்றார். ஆயினும், அம்மனம் லயித்தகாலத்துத் தோன்றுவதுண்மையின் 'சித்தத்தில் நின்றிலகு திவ்யம்' என்றார். தேவாரம்: "பொன்னுள்ளத்திரள் புன்சடையின்புற, மின்னுள்ளத் திரள் வெண்பிறையாயிழை, நின்னுள்ளத்தருள்கொண் டிருணீங்குத,

லென்னுள்ளத்து ளெந்தை பிரானிரே." எனவும், திருவாசகம்: "என் புள்ளுருக்கி யிருவினையை யீடழித்துத், துன்பங் களைந்து துவந்துவங்க டேய்மைசெய்து, முன்புள்ளவற்றை முழுதழிய வுள்புகுந்த, வன்பின்குலாத் தில்லை யாண்டானைக் கொண்டன்றே." எனவும் வருவனவற்றாற் காண்க. உலகினுள்ள வொளிகளெல்லாம் முதல்வன் திருமேனிப்பிரகாசமே யாகலின், 'திவ்யதேசோமயத்தை' என்றார். திருவாசகம்: "களிவந்த சிந்தையொ டுன்கழல்கண்டுங் கலந்தருளா, வெளிவந்திலேனை விடுதிகண்டாய் மெய்ச்சுடருக்கெல்லா, மொளிவந்த பூங்கழ லுத்தர கோசமங் கைக்கரசே!, எளிவந்த வெந்தைபிரா னென்னையாளுடையென் னப்பனே!" என்றதனாற் காண்க. பரமாகாயமே சரீரமாகலின் 'சிற்பரவெளி' என்றார். சிகாமணிமாலையுடையார்: "பிந்துரூபம் மகாதேவம் வ்யோமாகாரம் ஸதாஶிவ:" என்றதனாற் காண்க. 'பரதேவதை' என்றது எல்லாவற்றிற்கு மேலான தெய்வத்தினை. ஸ்வேதாஸ்வதரம்: "பதிம்பதீநாம் பரமம் பரஸ்தாத்" என்றதனாற் காண்க.

வத்துவை, தனியை, ஆதியை, சொரூபத்தை, வ்யோமநிலையை, நிஷ்ப்ரபஞ்சப்பொருளை, நிர்விகாரத்தை, நிராமயத்தை, தேசோமயத்தை, அஞ்சலி செய்வாம் எனக்கூட்டி யுரைத்துக் கொள்ளுக. (3)

## பரிபூரணானந்தம்

வாசாக யிங்கரிய மன்றியொரு சாதன
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறியேன்; துறவு
மார்க்கத்தி னிச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேன்; அந்த
நினைவையு மறந்தபோது
நித்திரைகொள் வேன்; தேக நீங்குமென வெண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்;
பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே;
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டையருள்வாய்!
பாசாட விக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே!
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே!

(இ - ள்) வாசா கயிங்கரியமன்றி - ]வாசிகமாகிய கயிங்கரியத்திலல்லா
மல், மனோவாயு நிற்கும் வண்ணம் - மனமும் வாயுவும் அடங்கும் வகை, ஒரு
சாதனம் - ஒரு பயிற்சியை, வாலாயமாகவும் - பழக்கமாகவும், பழகியறி
யேன் - பயின்று அறியேன்; துறவு மார்க்கத்தின் - துறவு நெறியில்,
இச்சைபோல - ஆசையுடைமைபோல, நேசானுசாரியாய் - பிறருக்கனு
சரணையாக, விவகரிப்பேன் - விவகாரஞ்செய்வேன்; அந்த நினைவையும் -
அந்த நினைப்பினையும், மறந்தபோது - மறந்தகாலத்தில், நித்திரை கொள்
வேன் - தூங்குவேன்; தேகம் நீங்கும் என எண்ணிலோ - சரீரம் நீங்கிவிடு
மென்று நினைத்தாலோ, நெஞ்சம் துடித்து அயருவேன் - மனம் பதைத்து
வாடுவேன்; பேசாத ஆநந்தம் - சொல்லக்கூடாத இன்பமான, நிட்டைக்
கும் - நிஷ்டைக்கும், அறிவு இல்லாப் பேதைக்கும் - விவேகமில்லாத
பேதையேனுக்கும், வெகுதூரமே - நெடுந்தூரமே; (ஆயினும்) பேய்
குணம் அறிந்து - பேதமைக்குணத்தை யறிந்து, இந்த நாய்க்கும் - இந்த
நாயினேனுக்கும், ஒரு வழி - ஒப்பற்ற செந்நெறியாகிய, பெரிய - மிகப்
பெரிய, நிஷ்டை - நிஷ்டையினை, அருள்வாய் - அருள் செய்வாய்!, பாசா
டவிக்குளே - ஆசையாகிய காட்டிலே, செல்லாதவர்க்கு - பிரவேசியாதவர்
கட்கு, அருள்பழுத்து ஒழுகு - அருட்கனி பழுத்துத் தேன் ஒழுகப்பெற்ற,
தேவதருவே - கற்பகத்தருவே!, பார்க்கும் இடம் எங்கும் - நோக்குமிட
மெல்லாம், ஒரு நீக்கம் அற நிறைகின்ற - சிறிதும் நீக்கமில்லாமல் நிறைந்து
நிற்கின்ற, பரிபூரணானந்தமே - பரிபூரணவின்பமே என்க.

(வி - ரை) வாசிகம், மானசிகம், காயிகமெனக் கைங்கரிய மூவகைப்
படும். ஒருவன் ஒரு காரியத்தினைச் செய்யின் மூன்று மொத்துச் செய்தலே
நலமாம்; தாமங்ஙனஞ் செய்யாது வாயினால் வாளாப்பேசி வருவேனென்
பார் 'வாசாகயிங்கரியம்' என்றனர். திருக்குறள்: " ஓதி யுணர்ந்தும்
பிறர்க்குரைத்துந் தானடங்காப், பேதையிற் பேதையா ரில்." எ - ம், அறி
வானந்த சித்தியார்: " விரிந்த நால்வேத புராணங்க ளாகம மிக்ககலை,
தெரிந்து படித்துப் பொருள் செப்பித் தாநிலை சேர்ந்துநில்லா, திருந்தசண்
டாளரி னேற்றங் கழுதை யெழிற்குங்குமம், பரிந்து சுமந்தும் பின்வஞ்சம்
பண்ணைப் பயனெழிலே." எ - ம், வருவனவற்றாற் காண்க. கிங்கரர்செய்
வது கைங்கரியம். கிங்கரர் - ஏவல்செய்வோர். மனத்தினையும் வாயுவினை
யும் நிறுத்தவேண்டுமாயின் முன்னமே பல நாள்களில்: ஆகாரங்குறைதல்,
தாமதப்புசிப்பு நீக்குதல், தனியே யிருத்தல், தக்க வாசனைத்தெழுதல் முத
லிய பழகிவரவேண்டுமாகலின் அங்ஙனம் தாஞ் செய்தறியேனென்பார்
'சாதனம் பழகியறியே' னென்றார். பெத்ததசைக் கண்ணே சீவாதி
களின் உண்மை தெரிதல் ஒருவருக்கும் கூடாமையால், அப்பந்தத்தை நீக்கு
தற்பொருட்டுச் சிவதரிசனம் வரும்படி மனோலயசாதகம் செய்யவேண்டும்.
பிரபுலிங்கலீலை: மனத்தை யடக்க மனந்துணை யாகும், பினைத்துணை யின்
றது பெற்றன னாகிற், றனிச்சிவமேயொரு தானென வாழ்வ, னினைத்து

மறந்து நிலத்துழ லானே." எ-ம், "மட்டள வோடு மனத்தை நிறுத்திக் கட்டுதல் வீடு விடுத்தினுல் கட்டென், ருெட்டிய பண்பி னுரைத்தல மப்பேர், சிட்ட னவட்கருள்செய்தன னன்றே." எ-ம், திருவிசைப்பா: "பூதமுங் கணமும் பொறிகளும் புலனும் பொருந்திய குணங்களோர் மூன்று, நாதமுங் கடந்த வெளியிலே நீயுநானுமாய் நிற்குமாறுளவோ, வாதமுஞ் சமய பேதமுங் கடந்த மனேலய வின்பசாகரனே!, யேதுமொன்றறியேன் யாதுநின் செயலே யிறைவனே! ஏக நாயகனே!" எ-ம், நிட்டானுபூதிசாரம்: "அலையுமனத்தை யகத்தடக்குமவனே சரிகை கடந்தோனு, மலையுமனத்தை யகத்தடக்கு மவனே கிரிகை யொழிந்தோனு, மலையுமனத்தை யகத்தடக்கு மவனே மோகதற்பரனு, மலையுமனத்தை யகத்தடக்கு மவனே ஞானியதி சூரன்." எ-ம், திருமந்திரம்: "மனமாயை மாயை மாய மயக்கம், மனமாயை தான்மாய மற்றென்றுமில்லை, பினைமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாந், தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே." எ-ம், தேவிகாலோத்தரம்: "கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும், விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர், திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாம, லருத்தியுட னிலை நிறுத்து மதுவறிவின் பயனுமால்." எ-ம், வருவனவற்றுற் காண்க. இங்ஙனங் கூறிய மனம் லயிப்பதற்கு முந்தி வாயுவினையும் லயிக்கச் செய்யவேண்டும். திருமந்திரம்: "வாயுவிருந்திட வாயு விருந்திடு, மாயு விருந்திடக் காய மிருந்திடும், காய மிருந்தாற் கருத்து மிருந்திடு, மேவ வறிவுணர் வுற்றுல் வினையின்றே." எ-ம், சிவதருமோத்தரம்: 'இந்தியவிருத்தி யெல்லாம் பிராணனேயியக்க வேயு, மிந்தியஞ்செயிக்க வெண்ணிற் பிராணனைச் செயிக்க பஞ்ச, விந்தியஞ் செயித்தார் தாமே யெய்துவர் சமாதி தன்னை, யிந்தியஞ் செயிக்கமாட்டா ரெய்துவதேதுமின்றே." எ-ம், பிரபுலிங்க லீலை: "ஓடுமாவை நிறுத்துறி னுள்ளுறக், கோடு வாய்க்கலி னத்தினைக் கொள்ளுவார், நீடுமாமன னிற்க நிறுத்துறி, லோடும் வாயுவை யுள்ளுற வீர்ப்பரால்." எ-ம், "வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று, மாய பொறிக ணிற்ப விடர் படுபுன் புலன்கணின்றனவா, லாய புலன்க ணின்றமையா னகிலந்தோன்ரு துள்ளத்தே, தூயபரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்." எ-ம், திருவுந்தியார்: "காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினு, லாற்றுவ தாற்றலென் றுந்தீபற, அல்லா தல்லவென் றுந்தீபற." எ-ம் வருவனவற்றுற் காண்க. தேகமனித்தியமென்பது நிச்சயமாகலின் 'தேகம் நீங்குமென வெண்ணிலோ...அயருவேன்' என்றுர் திருவாசகம்: "பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துழுத்தசும் பொழுகிய பொய்க்கூரை, யித்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப்படுவேனை, முத்துமாமணிமாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி, யத்தனுண்டு தன்னடியரிற் கூட்டிய வதிசயங்கண்டோமே." எ-ம், திருக்குறள்: "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்,

பெருமை யுடைத்திவ் வுலகு.'' எ - ம், திருக்கடைக்காப்பு: "தந்தையார் போயினார் தாயரும் போயினார் தாமும்போவார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டுபோவா, ரெந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே!, யந்தணா ரூர்தொழு துய்ப்பலா மையல்கொண் டஞ்சனெஞ்சே!" எ - ம், தேவாரம்: "நடலைவாழ்வு கொண்டென் செய்தீர் நாணிலீர், சுடலை சேர்வது சொற்பிர மாணமே, கடலி னஞ்சமு தண்டவர் கைவிட்டா, லுடலினார்கிடந் தூர்முனி பண்டமே.'' எ - ம், திருப்பாட்டு: "பரிந்த சுற்றமு மற்றும் வன் றுணையும் பலருங்கண்டழு தெழுவுயிருடலைப், பிரிந்து போமிது நிச்சயமறிந்தாற் பேதை வாழ்வெனும் பிணக்கினைத்தவிர்ந்து, கருந்தடங் கணிபங்கனை யுயிரைக் காலகாலனைக் கடவுளை விரும்பிச், செந்தி பொன்மலர் திருத்தினை நகருட் சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே!'' எ - ம், கந்தரனுபூதி: "கூகா வெனவென் கிளைகூ டியழப், போகா வகைமெய்ப் பொருள்பே சியவா, நாகா சலவே லவநா லுகவித், தியாகா சுரலோ கசிகா மணியே!'' எ - ம், கந்தரலங்காரம்: "கூர்கொண்ட வேலனைப் போற்றாமலேற்றங் கொண்டாடுவீர்காள்!, போர்கொண்ட காலனுமைக்கொண்டு போமென்று பூண்பனவுந், தார்கொண்ட மாதரு மாளிகை யும்பணச் சாளிகையு, மார் கொண்டு போவரையோ கெடுவீர் நும்மறிவின்மையே'' எ - ம், பட்டினத்துப்பிள்ளையார்: "வினைப்போகமே யுறுந்தேகங்கண்டாய் வினைதா னொழிந்தாற், றினைப்போதளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதந்தனை, நினைப்போரைமேவி நினையாரை நீங்கி நெறியினின்று, லுனைப்போ லொருவருண் டோமனமேயெமக் குற்றவரே'' எ - ம், நாலடியார்: "புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி, யின்னினியே செய்க வறவினை யின்னினியே, நின்றா னிருந்தான் கிடந்தான்றன்கே ளலறச், சென்றா னெனப்படுத லால்.'' எ - ம், சிவஞானசித்தியார்: "கருவினு ளழிவதாயுங் கழிந்திடாதழிவதாயும், பரிணமித் தழிவதாயும் பாலனா யழிவதாயுந், தருணனாயழிவதாயுந் தானரைத்தழிவதாயு, முருவமே யழிவேயாகு முள்ளபோதே பாருய்ய'' எ - ம், ஒழிவிலொடுக்கம்: "தேடப்படும் பொருளைச் சிக்கெனவாகப்புதைத்துக், கோடிக்கொரு நிமிடம் கொள்ளுகினுங் கூடா, வாளுளை வீண்கழிக்கு மானுடரைப் போன்மயக்கம், பூணார்பொய் கண்டுதுறப் போர்.'' ஆனந்தத்திரட்டு: "பிறந்தாரிறத்தல் பிழையாதெனவறிந்தா, லுறுந்துய ரொழிந்தினிய துண்ண நினைவாரோ, மறந்து விடயத்து மயலுற் றிடுதல்வானத், திறந்தவரை யுச்சிவிழு வோனிடைகொளின்பம்.'' எ - ம், கருவைவெண்பாவந்தாதி: "சென்றது காலஞ் சிதைந்த திளமைநல, நின்றது சாவென்று நினைந்துருகி - மன்றி, னடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர், படிக்கின்ற நூலெல்லாம் பாழ்.'' எ - ம், "நலனழிந்து மூப்படைந்து நாணழிந்து நோயாற், புலனழிந்து கண்புதையும் போதி - லுலக, விறைவியொடும் பால்வண்ணா!" என்றென்

றனையே, மறுகி யழைப்பப வோடிவா." எ-ம், பதிபசுபாசவிளக்கம்: "எந்நாளிருப்பினு மிறப்பது நிச்சயம், பொன்னாட்டி லிந்திர னாயினும் பொன்றுவ, னன்னாட்கழியுமுன் ஞானத்தினாலே, தன்னை லறிவது சற்குரு பாதமே." எ-ம், சித்தாந்ததரிசனம்: "நீர்க்குமிழி யின்னற்கு முண்டு நிலையில்லை, யாக்கைக்கென்றெண்ணி யறிந்து" எ-ம், தணிகையாற்றுப் படை: "பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று, சிந்தை வழிச்செலு மைந்து நிலைபெறீஇ, யாவ்வினைத்திறந்தி னயரா யாக்கையு நீடின் றிரியு நிலைமை நாடி." எ-ம், வருவனவற்றாற் காண்க, ஈண்டு 'நிட்டை' என்பது சிவயோகத்தினை. திருப்புகழ்: "ஐந்து பூதமு மாறு சமயமு மந்த்ர வேத புராணகலைகளு மைம்ப தோர் விதமான லிபிகளும் வெகுரூப, வண்டராதி சராசரமுமுயர் புண்டரீகனு மேகநிறவனு மந்திபோலுருவானு நிலவொடு வெயில்காயுஞ், சந்த்ர சூரியர் தாமு மசபையும் விந்து நாதமு மேது வடிவுமோர் தன் சொரூபமதாகி நிகழ்வது சிவயோகந், தங்களாணவ மாயைகரும மலங்கள் போயுபதேசபர குருசம் ப்ரதாயமோடேபு நெறியது பெறுவேனோ" என்றதனாற் காண்க. பாச நிஷ்டைகளை நீங்கிப் பதி நிஷ்டை கைவரல் எளிதிற் கூடாதாகலின் 'நிட்டைக்கு......வெகு தூரமே' என்றனர். பாசநிஷ்டையாவது, தத்துவப்பிரகாசம்: "பொறி கெட விருத்தனிட்டை போகநூ றெறிந்த னிட்டை, யருடெறி பாச ஞான மப்பசு ஞானநிட்டை, தெருடெரி யோக நிட்டை திகழ்கா ரணங்கெட் டால், வருமெனு நிட்டை யெல்லா மாயையி னிட்டை யாமே." என்றத னாற் காண்க. பசு நிஷ்டையாவது, "அட்டமா குணத்தி னிட்டை யருஞ் சித்தி பெட்டினிட்டை, யட்டமாருருவினிட்டை யருவவுருவினிட்டை, யட்டமா மொளியினிட்டை யதிற்செ லானந்தநிட்டை, யட்டமாம் வெளியி னிட்டை யவைபசு நிட்டையாமே" பதிநிஷ்டையாவது. "விழித்தொரு செயலையெண்ணின் மெய்த்தொழிலானவெல்லா, மழித்திடா திறைவர்க் கான வருச்சனையா மவன்றன், வழித்தெனக் கண்டபோதே மற்றவை முற்றுஞான, விழித்துணைக் கருவியாகும் வியாத்தமெய்த்தி யான மாமே." என்றதனாற் காண்க. தாய்தந்தை மனைமக்கள் சுற்ற முதலியோரிடத்து வைத்திருத்தலை பாசமாம். அது அடவிபோல் சூழ்ந்துகொண்டிருத்தலிற் 'பாசாடவி' என்றும், இவ்வடவியினின்று நீங்கி னோர்க்கே திருவருள் கிடைக்குமாகலின் 'செல்லாதவர்க்கருள்......தருவே!' என்றுங் கூறினர். திருக்கடைக்காப்பு: "தந்தைதாய் தன்னுடன் றோன் றினோர் புத்திரர் தாரமென்னும், பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெ னப் பற்றினையே, வெந்தநீ றருடியா ராதியார்சோதியார் வேதகீத, ரெந்தையா ரூர்த்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சநெஞ்சே!" எனவும், தேவாரம்: "பழகினுல்வரும் பண்டுளசுற்றமும், விழவிடாவிடின்வேண்டிய தெய் தொணு, திகழ்கொள் சேறையுட் செந்நெறிமேவிய, வழகனுருளாஞ்சுவதென் னுக்கே." எனவும், திருப்பாட்டு: "பதியுஞ் சுற்றமும் பெற்ற மக்களும்

பண்டையார் நல்ல பெண்டிரு, நிதியுமிம்மனை வாழும் வாழ்க்கை நினைப்பொழி மடநெஞ்சமே!, மதியஞ்சேர்சடைக் கங்கையானிட மகிழ மல்லிகை சண்பகம், புதிய பூமலர்ந் தெல்லினூறும் புறம்பயந் தொழப்போதுமே." எ-ம், திருவாசகம்: "தாமேதமக்குச் சுற்றமுந்தாமேதமக்கு விதிவகையும், யாமாரெமதார்பாசமா ரென்னமாய மிவைபோகக், கோமான்பண்டைத் தொண்டரொடு மவன்றன்குறிப்பே குறிக்கொண்டு, போமாறமைமின் பொய்நீக்கிப் புயங்கனுள்வான் பொன்னடிக்கே." எனவும், பட்டினத்தார்: "திருவடி பிடித்து வெருவரல் விட்டு, மக்களுமனையு மொக்கலுந் திருவும், பொருளென நினையாதுன் னருளினை நினைந்து." எனவும், கந்தரனுபூதி: "வளைபட் டகைமா தொடுமக் களெனுந், தளைபட் டழியத் தகுமோ, கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந், தொளைபட் டுருவத் தொடும்வே லவனே!" எனவும், சிவதருமோத்தரம்: "மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்த நற், பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந், துண்ணென விழைவினைத் துறந்த தூயரே, விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்." எனவும், ஞானசூரியன்: "உடலையொண் பொருளினை யுலகியல்பினை யுயர்குல நெறி தன்னை, யடையுமைந்தர் தாய்தந்தை நன்மனையென வறைதரு மவர் தம்மை, விடவுகந்திறை கழலிணை மருவிய விமலர் தங்களையெல்லா, முடைய நன்குறு மொழிமறை முனிவர்க ளுரைப்பராத்தர்க ளென்றே." எனவும், ஒழிவிலொடுக்கம்: "நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண், மாடுகுலம் பொன்னுடன்பின் வாதனைகள் - கூட, தொடுத்தவலைக் கண்ணித் துடக்கிதனை யிப்போ, விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்." எனவும் வருவனவற்றூற் காண்க. குடும்ப பாசத்தினின்று நீங்கினவர் தம் முள்ளத்தில் பரமானந்தத்தேன் சொரியப்பெறுவராகலின் 'செல்லாதவர்க் கருள் பழுத்தொழுகு தேவதருவே' என்றார். திருவாசகம்: "தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போது, மனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன் சொரியுங், குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ." என்றது ஞற் காண்க. அணுவுக்கணுவாய் மகத்துக்குமகத்தாய் நிற்பினும் போக்கு வரவின்றி எங்கும் வியாபித் தொருகாலத்து மிடைவிடா திருக்குந் தன்மையின் 'நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தம்' என்றனர். (1)

தெரிவாக வூர்வன - நடப்பன - பறப்பன -
செயற்கொண் டிருப்பனவுமாகற்
றேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ்
செனித்த வாங்கிறக்கும்;
விரிவாய பூதங்க ளொன்றொன் றொயழியும்;
மேற்கொண்ட சேடமதுவே
வெறுவெளி, நிராலம்ப, நிறைசூன்யம், உபசாந்த
வேதவே தாந்தஞானம்,

பிரியாத பேரொளி பிறக்கின்ற வருள், அருட்
பெற்றோர்கள் பெற்றபெருமை,
பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து
பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே !

(இ - ள்) தெரிவாக - அறிவுடனே, ஊர்வன - தவழ்வனவும், நடப்பன - நடப்பனவும், பறப்பன - பறப்பனவும், செயல் கொண்டு - தொழில் கொண்டு, இருப்பன - இருப்பனவும், முதல் - முதலான, தேகங்கள் அத்தனையும் - சரீரங்களெல்லாமும், மோகம் கொள் - மயக்கத்தினைக்கொண்ட, பௌதிகம் - பூதசம்பந்தமெனச் சொல்லப்பட்டு, செனித்த ஆங்கு - உற்பத்தியானதுபோலவே, இறக்கும் - அழியும் ; விரிவாய - பரவிய, பூதங்கள் - பஞ்சபூதங்கள், ஒன்றோடு ஒன்றாய் அழியும் - ஒன்றுக்குளொன்று அடங்கிவிடும் ; மேற் கொண்ட - இவற்றிற்கெல்லா மேற்பட்டிருக்கிற, சேடமதுவே - (அழியாது) மிச்சமாயுள்ள அந்த வஸ்துவே, வெறுவெளி (என) - சிதாகாயமென்னவும், நிராலம்பம் (என) - ஆதாரமற்றதெனவும்- நிறை சூன்யம் (என) - பெரும்பாழெனவும், உபசாந்தம் - உபசாந்தத்தினை விளைவிக்கின்ற, வேதவேதாந்த ஞானம் (என) - வேதங்களும் உபநிடதங்களும் சொல்லும் ஞானமெனவும், பிரியாத பேரொளி - நீங்காத பெருஞ்சோதியில், பிறக்கின்ற அருள் (என) - உதிக்கின்ற அருளெனவும், அருள் பெற்றோர்கள் - திருவருளினை யடைந்தோர்கள், பெற்ற பெருமை (என) - அடைந்த பெருமையெனவும், பிறவாமை - பிறவாமையும், என்றைக்கும் - எக்காலத்தும், இறவாமை - இறவாமையும், ஆய்வந்து - ஆகிவந்து, பேசாமை ஆகும் என - மௌன நிலையாதமெனவும், எனக்கு - அடியேனுக்கு, அறிவிக்க - அறிவுறுத்தற்பொருட்டு, நீ பரிவாய் வந்தது - தேவரீர் அன்புடனே எழுந்தருளி வந்ததற்குக் காரணம், பரிபாக காலம் அலவோ - என்னுடைய பரிபக்குவகால மல்லவோ?, பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) 'ஊர்வன நடப்பன பறப்பன செயற்கொண் டிருப்பன முதல் தேகங்கள்' என்றமைபால் வினைவயத்தாற் பிறக்கும் அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசமான நால்வகைத் தோற்றங்களும் ; தேவர், நரர், மிருகம், பட்சி, ஊர்வன, நீருறைவன, விருட்சமான எழுவகைப் பிறப்புக்களும் இவற்றிலுண்டான யோனிபேத மெண்பத்து நான்கு நூறாயிரமாக விரிந்த வெல்லாவற்றையுங் கொள்ளுக. சிவப்பிரகாசம் : "தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்றுதைந்து வருமுற்பீசஞ் சராயுசங்களுன்கி, னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்பதென்று மூவர் பதினொந்தமரர் பதினொன் றோடுலவா மாற்றருநீருறைவன நற்பறவைகளுற்

காலிமன்னியிடும் பப்பத்து மானுட ரொன்பதின்ம, ரேற்றியொரு தொகை யதனி லியம்புவர்கள் யோனி யெண்பத்துநான்கு நூறுயிரமென் றெடுத்தே." எ-ம், சிவஞானசித்தியார்: "அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோ டெண்டரு நாலெண்பத நான்கு நூறுயிரத்தா, லுண்டு பல்யோனி." எ-ம் வருவனவற்றாற் காண்க. பூதசம்பந்தமான பௌதிகமனைத்தும் நிலைபெற்றிராமல் காரணகாரியப்பட்டுக்கொண்டே யிருக்குமாகலின் 'பௌதிகஞ் சென்மித்த வாங்கிறக்கும்' என்றார். சிவஞானசித்தியார்: "பூதமானவை காரியங்கள் பொலிந்து மன்னியழிந்திடும்" எ-ம், "உலகமெல்லாம் வருமுறை வந்து நின்றுபோவது எ-ம், "பூதமானவை நித்தமென்று புகன்ற தென்னையுருக்களாயாதலோ டழிவதாகும்" எ-ம் வருவனவற்றாற் காண்க. 'பூதங்களொன்றோ டொன்று யழியும்' என்றதற்கு ஆகாயத்திலே வாயுவும், வாயுவிலே தேயுவும், தேயுவிலே யப்புவும், அப்புவிலே பிருதிவியுமாக வொன்றிலே யொன்றாகத் தோன்றி யங்ஙனமே யொடுங்குமெனக் கொள்ளாது சத்தத்திலே யாகாயமும், பரிசத்திலே வாயுவும், உருவத்திலே தேயுவும், இரசத்திலே யப்புவும், கந்தத்திலே பிருதிவியுமாகத் தன் மாத்திரை யைந்தில் பூதங்களைந்துந் தோன்றி யொடுங்குமெனக் கொள்க. சிவப்பிரகாசம்: "தாமதமிகு மாத்திரை பிறக்கு மிதனின் வான் நில மனல்புனல் மண்" எ-ம், சிவஞானசித்தியார்: "சாற்றிய பஞ்சதன் மாத்திரைகளினிற் சத்தமுன்னாய், தோற்றும் வான்தீ நீர்மண்" எ-ம், திருநெறிவிளக்கம்: "தன்மாத்திரையானவிலுறு சத்தாதியினை நல்கியிடுஞ் சத்தக்கண்ணதனில் வெளிபாசங் காலுருவந் தன்னிற்கன விரதத்தே புனற்கந்தத் தேதரையாம்" எ-ம், தத்துவவிளக்கம்: "தெள்ளிய தன்மாத்திரையின் வருஞ்சேர்ந்த தன்மாத்திரையி, னுள்ளிய பூதங்களைந்துக்குமாமென்ப ருற்பவமே" எ-ம் வருவனவற்றாற் காண்க. தோன்றிநின்றழியும் பௌதிகமனைத்துஞ் சடமாகையாலும் ஆன்மாக்கள் தங்களுக்கென்ன வோரறிவில்லாத படியாலும் இவற்றைக் கூட்டிக் காரியப்படுத்தி இவற்றையெல்லாங் கடந்து சேடித்து நின்றவன் சிவனே யாகலின் 'மேற்கண்ட சேடமதுவே' என்றனர் பௌஷ்கரம்: "தேஷாமேகா பராநிர்யத்தேஜம் பாரமேஶ்வரம் | நிமித்த மீஶ்வரஸ் தேஷாம் உபாதாநம்ஸபிந்துராட் ‖ ஸ்வகர்ம ஸஹ காரீஸ்யாத் தஸ்மாத் கார்யம் ஸஹேதுகம் |" எ-ம், சிவஞானபோதம்: "அவனவளது வெனு மவைமூ வினைமையிற், றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா, மந்த மாதி யென்மனார் புலவர்" எ-ம், சிவஞானசித்தியார்: "ஒருவனோ டொருத்தி யொன்றென்றுரைத்திடு முலக மெல்லாம், வருமுறை வந்து நின்று போவது மாதலாலே, தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறுமாகி, மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே." எ-ம், சிவப்பிரகாசம்: "உலகமெலா மொருவனோ டொருத்தி யென்றென், றுளதாகி நின்றளவிலொடுங்கும் பின்னு, மலமதனு லுளதாகு முருவமாறி, வருவது

போவது செல்வதாதலானு, மலவில்சேதன மாயையாதலானு மனுக்களுரு வடையுமறி விலாமையானு, நிலவுதொழின் மருவியுருகிற்றலானு, நின் றெவையு மளித்திடுவ னிமலன்றனே'' எ-ம் வருவனவற்றாற் காண்க. பிருதிவியாதிதத்துவ சமூகங்களெல்லா முதல்வனுக்கு ஸ்தூலசரீரமும், ஆன்மா சூக்கும சரீரமும், சிவசத்தியார் அதிசூக்கும சரீரமுமாம். (ஆகாயம் சரீரமாம்) என்ற கருத்தினுல் 'வெறுவெளி' என்றனர். பிரகதாரணி யோபநிடதம்: "ஆகாச ஏவயஸ்யாயத நம், ஆகாச சரீரம் பிரம்ம'' எ-ம், மைத்திராயணேபநிடதம்: "க்ருயாகாசமயம் கோசமாநக்தம் பரமாலயம்'' எ-ம், இரத்தினத்திரயம்: "யஸ்யஸா பரமாதேவீ சக்திராகாச சம்ஞிதா'' எ-ம் வருவனவற்றாற் காண்க. உலகத்துடன் வேற்றுமை யின்றிக் கலந்து சகலத்திற்குந் தாஞதரவாக விருந்தும், பொருட்டன்மையின் வேருய் ஒன்றினுதரவினையும் நாடாதிருத்தலின் 'நிராலம்பம்' என்றனர். பிரகிருதி, அசுத்தமாயை, சுத்தமாயை யெனு மூன்று பாழையுங் கடந்து நின்ற விடத்தினையே 'நிறை சூன்யம்' என்றனர். திருவள்ளுவர்: "எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீ, ரந்தவூர்ச் செய்தி யறியீரோ—அந்த வூர், முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியா, யப்பாலும் பாழென்றறி.'' எ-ம், போதரத்திஞகரம்: "மத்தமாம் புலன் மாறிய விடத்தே மன்னுயிர் வெளிப்படு மதுபோய்ப், பெத்த மாமுயிர் மாறிய விடத்தே பெரும்பரம் வெளிப்படுமதுபோ, யத்த மாம்பர மாறிய விடத்தே யமலருஞ் சிவம் வெளிப்படு மதுபோய்ச், சுத்தமாஞ்சிவ மாறியவிடத்தே தோன்றிடுஞ் சுயம் பிரகாசம்'' எ-ம், சிவஞானமுனிவர்: "முப்பாழுக்கப்பால் முதற்பாழ் மனையகத்தே, தப்பாமலென்னைத் தனியே யழைத்தருளி, யொப்பா மமளி யிலே யொன்றுபடச் சேர்வதென்றே, செப்பாய் புகழ்ச்சென்னைச் சென்னை மல்லி யீச்சுரனே!'' எ-ம் வருவனவற்றாற் காண்க. வெறுப்பு விருப் பின்மையினைப் போதிக்கிற உபநிடதங்களின் முடிவில் விளங்கும் ஞானமாயிருத்தலின், 'உபசாந்த வேத வேதாந்த ஞானம்' என்றனர். கைவல்யோபநிடதம்: "வேதாந்த விஞ்ஞான் சுநிச்சிதார்த்தா'' என்றத னாற் காண்க. சிவபரஞ்சுடர் அருளே சொரூபமாய் உயிர்களின் நிறத்துச் செய்யும் வினைகளியாவும் அருளினலன்றிப் பிறிதில்லையாகலின் 'பேரொளி பிறக்கின்றவருள்' என்றார். சிவஞானசித்தியார்: "உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங், கருமமு மருளரன்றன் கரசர ணுதி சாங்கந், தருமரு ளுபாங்க மெல்லாந் தனதரு ளணக்கொன் றின்றி, யருளுரு வுயிருக் கென்றே யாக்குவ னசித்த னன்றே.'' எ-ம், "அழிப்பிளைப் பாற்ற லாக்க லவ்வவர் கன்ம மெல்லாங், கழித்திட னுகரச்செய்கை காப்பது கன்மவொப்பிற், றெழித்திட மலங்க ளெல்லா மறைப்பருள் செய்திதானும், பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி லருளே யெல்லாம்.'' எ-ம் வருவன வற்றாற் காண்க. முதல்வன் ஆதியந்தமில்லாதவனுகலின் 'பிறவாமை யென்றைக்கு மிறவாமை' என்றனர். சுவேதாசுவதரம்: "அஜம்த்ருவம்''

எ - ம், பிரகதாரணியோபநிடதம்: "ஸவா ஏஷமகாநஜ ஆத்மா ஜரோ மரா" எ - ம், துகைநமச்சிவாயர்: "எல்லார் பிறப்பு மிறப்பு மியற்பா வலர்தஞ் சொல்லாற் றெளிந்தோஞ் சோணேசர் - இல்லிற், பிறந்த கதையுங் கேளோம் பேருலகில் வாழ்ந்துண், டிறந்த கதையுங் கேட்டிலேம்." எ - ம், திருமந்திரம்: "பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன், னிறப்பிலி யாவர்க்கு மின்பமருளுந், துறப்பிலி தன்னைத் தொழுமின் றொழுதான், மறப்பிலி மாயாவிருத்தமு மாமே" எ - ம், "பிறவாது மிறவாதும் பெருகி னானைப், பேய்பாட நடமாடும் பித்தன்றன்னை, மறவாத மனத்தகத்து மன்னினானை, மலையானைக் கடலானை வனத்துளானை" எ - ம் வருவனவற்றாற் காண்க. பிறப்பிறப்பில்லாத அத்தகைய முதல்வனே மானைக் காட்டி மானைப் பிடிப்பான்போல் மானிட வடிவந்தாங்கி வருவனாகலின் 'வந்து' என்றனர். திருவாசகம்: "அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர னாகி யருளிய பெருமையைச், சிறுமையென் றிகழாது" எ - ம், "சிவனென யானுந் தேறினன் காண்க, அவனெனை யாட்கொண் டருளினன் காண்க" எ - ம், திருமந்திரம்: "குருவே சிவமெனக் கூறினனந்தி, குருவே சிவமென்பது குறித் தோரார், குருவே சிவமாகிக் கோனுமாய்நிற்குங், குருவே யுரையுணர் வற்ற தோர் கோவே." எ - ம், "சுத்த சிவனே குருவாய் வந்து தூய்மைசெய், தத்தனை நல்கருள் காணுவதி மூடர், பொய்த்தகு கண்ணா னமரென்பர் புண்ணி, யரத்த னிவனென் றடிபணிவாரே." எ - ம், திருவுந்தியார்: "அகளமா யாரு மறிவரிய பொருள், சகளமாய் வந்ததென் றுந்தீபற, தானாகத் தந்ததென் றுந்தீபற" எ - ம், "சிவப்பிரகாசம்: "காட்டிடுங் கரண மொன்று மில்லையேற் காணொ ணாதா னாட்டிய விவற்றான் ஞான நணுகவு மொண்ணாமுன்ன, மீட்டிய தவத்தினாலே யிறையரு ளுவாய்வந்து, கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறே." எ - ம், திருக்களிற்றுப்படியார்: "அகளமயமாய் நின்ற வம்பலத்தெங்கூத்தன், சகளமயம் போலுல கிற்றங்கு - நிகளமா, மாணவ மூல மலகமல வாண்டனன்காண், மாண வகவென்னுடனாய் வந்து" எ - ம் வருவனவற்றாற் காண்க. 'பேசாமை' என்றது அனுபூதிநிலையினை. கந்தரனுபூதி: "தூசா மணியுந் துகிலும் புனைவா, ணேசா! முருகா! நினதன் பருளா, லாசா நிகளந் துகளா யினபின், பேசா வனுபூ திபிறந் ததுவே." என்றதனாற் காண்க. ஆன்மாவிற்குத் தனக்கென வோரறிவில்லாதபடியாலும், தானாகத் தத்துவங் களைக்கூடி யறியமாட்டா தாகையாலும், கருவிகள் சடமாகையினாலவை தாமாக ஆன்மாவைக்கூடி யறியாதாகையினாலு மிவை யிரண்டையுங் கூட்டி முதல்வன் அறிவித்தாலன்றி யறியாதாகையினால், 'நீ யறிவிக்க வந்ததே' என்றனர். திருவாசகம்: "அறிவிலாத வெனைப்புகுந் தாண்டு கொண் டறிவதை யருளிமே, னெறியெலாம் புலமாக்கிய வெந்தையைப் பந்தனை யறுப்பானைப், பிறிவிலாத வின்னருள்கள் பெற்றிருந்து மாறுதி பிண நெஞ்சே!, கிறியெலாமிகக் கீழ்ப்படுத்தாய் கெடுத்தா யென்னைக் கெடு

மாறே." எ-ம், சிவஞானபோதம்: "அறிவிக்க வன்றி யறியா வுளங்கள், செறியுமா முன்பின் முறைக - ணெறியிற், குறைபுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென், குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு." எ-ம். சிவஞானசித்தியார்: "அறிவிக்க வறித லானு மழிவின்றி நிற்றலானுங், குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக்கு" எ-ம், சிவப்பிரகாசம்: "தனக்கென வறிவிலாதான் ஞானியையறிந்து சாரான், றனக்கறி விலாதவாயி ஞானறியாது சார, தனக்கென வறிவில்லாதான் றத்துவ மன்னரூபன், றனக்கென வறிவானலிச் சகலமு நுகருந்தானே." எ-ம், வருவனவற்றுற் காண்க. பரிபாகம் வந்தபின்னரே முதல்வனறிவித்து ஆன்மப்பிரகாசத்தை யுண்டாக்குவனுகலின் 'பரிபாககாலமலவோ' என்றனர். சிவப்பிரகாசம்: "எண்ணரிதா" என்ற விருத்தத்தால் "மலபாகம் பொருந்தியக்காலருளா லுண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப்பந்த மூற்றிடும்" எ-ம், சிவதருமோத்தரம்: "பரமசிவன் பராசத்தி பல்லுயிர்க்கும் பயின்றிருக்க, விரவுவதென் னிருளொளிற்கேள் வெய்யவழற் பசுமரத்தின், விரவியதே பசுமரமும் வெந்தவல வெந்துவிழும், பருவமுறக் கரணமுறப் பதியுமுறப் பழுதறவே." எ-ம் வருவனவற்றுற் காண்க. (2)

ஆராயும் வேளையிற் பிரமாதி யானுலு
மையவொரு செயலுமில்லை;
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராமென விருந்தபேரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்; வசன
நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
புலம்புவார்; சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மறிதுயிற்
போலேயிருந்து துயில்வார்;
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
பார்க்கினின் செயலல்லவோ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே!

(இ-ள்) ஆராயும் - விசாரிக்கும், வேளையில் - காலத்தில், பிரமதியானுலும் - பிரமன் முதலானவர்களுக்காயினும், ஐய - ஐயனே!, ஒரு செயலும் இல்லை - ஒரு தொழிலுமில்லை; அமைதியொடு - அமரிக்கையுடன், பேசாத - பேசாமையாகிய, பெருமைசெறு - பெருமையையடைந்த, குணசந்த்ரர் ஆம் என இருந்தபேரும் - குணத்தில் சந்திரனைஒத்தவர் இவரென்று

யாவரும் சொல்லும்படியாய் இருந்தவர்களும், நேராக - செவ்வையாக, ஒருவேளை - ஒருகாலத்தில், ஒருகோபம் வர - ஒருகோபம் வந்தால், அந்த நிறைவு ஒன்றும் இல்லாமலே - அந்த அமரிக்கை சிறிது மின்றியே, நெட்டுயிர்த்து - பெருமூச் செறிந்து, தட்டு அழிந்து உளறுவார் - நிலைதவறிக் குளறுவார்; வசன நிர்வாகர் என்றபேரும் - வார்த்தை சொல்வதில் சமர்த்தர் என்று சொல்லப்பட்டவர்களும், பூராயமாய் - ஆராய்ச்சியாய், ஒன்று பேசும்இடம் - ஒரு விடயத்தினைப் பேசுங்காலத்தில், ஒன்றைப்புலம்புவார் - வேறொரு விடயத்தினைப் பிதற்றுவார்; சிவராத்திரிப்போது - சிவராத்திரி காலத்தில், துயிலோம் என்ற விரதியரும்-உறங்கோம் என்ற விரதம்பூண்டவரும், அறிதுயில்போலே இருந்து துயில்வார் - அறிவோடு கூடிய நித்திரை போல இருந்து உறங்குவார்கள்; (ஆதலால்) பாராதி தனிலுள்ள செயல் எல்லாம் - பூமி முதலான இடங்களில் நடக்குஞ் செயல்கள் எல்லாம், முடிவிலே பார்க்கில் - முடிவிலே ஆலோசித்துப் பார்த்தால், நின் செயல் அல்லவோ - தேவரீர் செய்கையாக விருக்கின்ற தல்லவோ, பார்க்குமிடம்—என்க.

(வி - ரை) 'பிரமாதி' என்றதனால் விண்டுவினையும் உருத்திரனையும் கூட்டிக்கொள்ளுக. ஈண்டு உருத்திரனென்றது குணருத்திரனை. பிரமாதி தேவர்கள் பசுக்களானபடியாலும், அப்பசுக்கட்குச் சுதந்தரமின்மையானும், 'பிரமாதியாலுவு, மையவொரு செயலுமில்லை' என்றார். அதர்வசிகை: "ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ்ஸம்ப்ரஸூயந்தே நகாரணம்" எ - ம், "ப்ரஹ்மா விஷ்ணுச்ருத்ரச்சஸர்வேவா பூதஜாதய: நாசமேவாநு தாவந்தி" எ - ம், சிவஞானபோதம்: "அறிவிக்கவன்றி யறியாவுளங்கள், செறியுமா முற்பின் குறைக - ணெறியிற், குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின்வீடென், குறைவில் சகன் சூழ்கொள்பவர்க்கு." எ - ம், சிவஞானசித்தியார்: "அறிந்திடு மான்மா வொன்றை மற்றொன்று லறிதலாலு, மறிந்தவை மறத்தலாலு மறிவிக்க வறிதலாலு, மறிந்திடுந் தன்னையுந்தா னறியாமையாதுந்தானே, யறிந்திடுமெறிவ னன்று மறிவிக்க வறிவனன்றே." எ - ம், திருவாசகம்: "அறிவனே யமுதே யடி நாயினே, னறிவனாகக்கொண்டோ வெனையாண்டது, வறிவிலாமையன்றே கண்ட தாண்டநா, ளறிவனோ வல்லனோ வருளீசனே!" எ - ம் வருவனவற்றாற் காண்க. குணம் தடப்பத்தால் சந்திரனுக்கு உவமைப் பொருளாயிற்று. சாத்துவிக குணத்தினையுடைய பெரியோரும் ஒரு காலத்தில் தாமசகுணத்தினை யுடையராகிக் கோபிப்பார் என்றதனால் "குணசந்த்ராமெனவிந்தபேரும்...........தட்டழிந் துளறுவார்" என்றார். திருக்குறள்: "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது." என்றதனாற் காண்க. மிகுந்த புத்திமான்களாகிய வித்துவான்களும் கன்மவசத்தால் விதியினை விலக்கென்றும், விலக்கினை விதியென்றும் கூறிடுவா ராகலின் 'நிர்வாகரென்ற

பேரும்...........புலம்புவார்' என்றார். இலக்கணக்கோத்து: "அதிமதி நுட்பமோடதிகலை கற்பினும், விதியது வசத்தால் விதிவிலக்கயர்ப்பார்." எ-ம், திருக்குறள்: "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன், னுண்மை யறிவேமிகும்." எ-ம் வருவனவற்றாற் காண்க. விரதங்களுட் டலையாயது சிவராத்திரி விரதமாகலின் இவ்விரதத்தினையே யெடுத்தாண்டனர். சிவ ராத்திரி புராணம்: "மறைகளிற் சாம மகங்களிற் புரவி மகமலைகளின் மக மேரு, நிறை புனனதியிற் கங்கையோ ரைந்தாய் நிகழ்ந்தபூ தத்தினு தாயு, முறைதெரி சுரரிற் கருமுகி லூர்தி முதன்மைபெற் றுயர்ந்ததாமென்ன, வறைதரு விரத மனைத்தினு முரைக்கு மரனிரவதிகமென் றறிமின்." எ-ம் வருதலாற் காண்க. சிவராத்திரி விரதத்தன்று துயிலாதிருக்கவேண்டியது கட்டாயமாகலின் 'துயிலோ மென்ற விரதியரும்' என்றார். சிவராத்திரி புராணம்: "எருகுமுளத் துடனிருந்து ஞெருவியிரு விழிதனினு முறக்க மின்றி, யிருளூறுகங்குலின்யாம நான்கிலு மிப்படி யருச்சித் திறுதிதோறும், பொருவருக்கியங் கொடுத்து நாயடியேன் புரியுமிந்தப் பூசைதன்னைத், திரு வுளத்தி னயந்தருள்வா யெனத்துதித்துத் தண்டனிட்டுத் திருமுன் வீழ்ந்தே." எ-ம், உபதேசகாண்டம்: "ஒற்றையாழியங் கடவுளர் வைகலினுணவொழிந் துதயம்போய் முற்று கங்குலின் யாமமோர் நான்கிலு முறைதுயில்போக்கிக், கற்றை யஞ்சடைக்கடவுளை விதிமுறை யருச்சனைக் கடனாற்றிப், பிற்றை வைகலிற் பாரணங் கூட்டுவார் பெறற்கருங் கதிசேர் வார்." எ-ம், மகாசிவராத்திரி கற்பம்: "அற்றைநிசி யுறங்கா தர்ச்சித் துப் பாரணத்தை, மற்றையநாட் செய்கைவரம்." எ-ம் வருவனவற்றாற் காண்க. ப்ரமாதி ஸ்தம்ப பரியந்தங்களாகிய பசுக்களை மலமாயாதி பாசங்க ளாற் கட்டிக் காரியங்களைச் செய்விக்கின்றவர் முதல்வனே யாகலின், 'பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க்கினின் செயலல்லவோ' என்றார். ஆதித்திய புராணம்: "ப்ரமாதிஸ்தம்ப பரியஸ்த நான் பசூம் பத்யானுபாஸ்ந்ரேத்தே பதிர்த்ரே வாகார்யம் காரயதில்வயம்" எ-ம், தேவாரம்: "ஆட்டுவித்தாலாரொருவ ராடாதாரே யடக்குவித்தா லாரொ ருவ ரடங்காதாரே, ஓட்டுவித்தா லாரொருவ ரோடாதாரே யுருகுவித்தா லாரொருவ ருருகாதாரே, பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே பணி வித்தா லாரொருவர் பணியாதாரே, காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" எ-ம், சிவஞான சித்தியார்: "போகியாயிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார், யோகியா யோகமுத்தி யுதவுதலுதவு மோரார், வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரார், ஏகியா மூடரெல்லா மும்பரி லொருவ னென் பார்." எ-ம், திருவருணைக்கலம்பகம்: "எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசையி, னல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே, வில் லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்தவந்நாள், புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே." எ-ம் வருவனவற்றாற் காண்க. (3)

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
யம்மாயை யில்லாமையே
யாமெனவு மறிவுமுண் டப்பாலு மறிகின்ற
வறிவினை யறிந்துபார்க்கி
னெண்டிசை விளக்குமொரு தெய்வவரு ளல்லாம
லில்லையெனு நினைவுமுண்டிங்
கியானெனை தறத்துரிய நிறைவாகி நிற்பதே
யின்பமெனு மன்புமுண்டு ;
கண்டன வெலாமல்ல வென்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகண மிருக்கவென் றாற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே ;
பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
பக்ஷநா னிச்சிப்பனோ ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே !

(இ - ள்) அண்டபகிரண்டமும் - அண்டபகிரண்டங்களும், மாயா விகாரமே - மாயையின் காரியமேயாம் ; அ மாயை - அந்த மாயையானது, இல்லாமையேயாம் - (காரியப்பாட்டினால்) இன்மையாகத் தோற்றுவதாகிய, அறிவும் உண்டு - உணர்ச்சியு முண்டு ; அப்பாலும் - அதற்கு மேலும், அறிகின்ற - உணர்கின்ற, அறிவினை - உணர்ச்சியை, அறிந்து பார்க்கின் - உணர்ந்து பார்க்குமிடத்து, எண்டிசை விளக்கும் - அட்ட திசைகளையும் விளங்கச்செய்கின்ற, ஒரு - ஒப்பற்ற, தெய்வ அருள் அல்லாமல் - கடவுளின் கிருபையல்லாமல், இல்லை எனும் - (மாயாகாரியம்) இல்லை யென்கின்ற, நினைவும் உண்டு - நினைப்பும் உண்டு ; இங்கு - இவ்விடத்து, யான் எனது அற - யான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமகாரமும் ஒழியும்படி, துரியம் நிறைவு ஆகி நிற்பதே - துரியத்தில் நிறைந்து நிற்பதே, இன்பம் என்னும் - சுக மென்கிற, அன்பும் உண்டு - விருப்பமும் உண்டு ; கண்டன எல்லாம் - கண்ணாற் பார்க்கப்பட்டன எல்லாம், அல்ல என்று - (உண்மைப்பொருள்) அல்லவென்று, கண்டனை செய்து - கண்டித்து, கருவி கரணங்கள் ஓய - கருவிகளும் கரணங்களும் ஒடுங்கும்படி, ஒரு கணம் - ஒரு க்ஷணகாலம், கண் மூடி இருக்க என்றால் - கண்களை மூடிக்கொண்டு யோகத்தி லிருப்போமென்றால், பாழ்த்த - பாழான, கர்மங்கள் - கன்மங்கள், போராடுதே - போராடுகின்றனவே ; பண்டை உள்ள - பூர்வமே அமைந்துள்ள, கர்மமே - கன்மமே, கர்த்தா என்னும் பெயர் - கர்த்தா என்கிற பெயரினது, பட்சம் - பட்சமாக, நான் - நான், இச்சிப்பனோ - விரும்புவனோ ?, பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) சாகோப சாகாதிகளையுடைய விருட்சத்திற்குச் சூக்குமமாகிய வித்துப்போல, ஸ்தூலமாகிய பிரபஞ்சத்திற்குச் சூக்குமமாகிய மாயை யுண்டென்றும் அம் மாயையின் காரியமே அண்டபகிரண்டமனைத்து மென்பார் 'அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே' என்றார்; சிவஞானசித்தியார்: "அருவினி லுருவந் தோற்றி யங்காங்கி பாவ மாகி, யுருவினி லுருவ மாயே யுதித்திடு முலக மெல்லாம், பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோ டபேதமாகும்" எ - ம், தத்துவப்பிரகாசம்: "மன்னுமதோ மாயைதனி லனந்ததேவ ரருளால், வருங்கால நியதிகலை வித்தையரா கந்தான், முன்னையக் கலையினுருத் திரனருளான்மூல, முக்குணங்கண் மூலமா மவ்வியத்த மதனி, லுன்னுசித்த மதிற்புத்தி யாங்கார மதுதா, னுடன்மூன்றாந் தைசதம் வைகிரி பூதாதி, யென்னுமுதன் மனம்வாயிலிடைக்கருமேந் திரிய, மெழுங்கடையிற் சத்தாதி யிதிற்பூத மெழுமே." எ - ம் வருவனவற்றாற் காண்க. இதனால் சூனியோபாதானங் கூறும் மாத்துமிகரை மறுத்தவாறாயிற்று. மா = சத்தி, யா = வியத்தி; அதாவது, காரண காரியரூபமா யிருப்பதெதுவோ அது மாயையாம். ஈண்டு 'இல்லாமையே' என்றது காரியப்பாட்டினை நோக்கியேயாம்; சூனியம் என்னும் பொருள்படவன்று. என்னை? மாயை நித்தியமாகலின். பௌஷ்கரம்: "நித்யே காவ்யாபிநீ வஸ்து ரூப கர்மாஶ்ரயா ஶிவா। ஸாதாரணீ சஸர்வேஷாம் ஸகலாநாம் முமீஶ்வரா: ॥ ப்ரளயேலீந தேஹஸ்ய கர்மணோ ஞோர ஹார்மூகே। தைஹாதே: காரணம் மாயா ஸூக்ஷ்ம ஸ்தூலாத்மகஸ்யாது ॥ கலாதிக்ஷிதிபர்யந்தமவிபக்திபுரஸ்ஸரம்। விபக்தத்வாத்யதா பீஜேஸ்கந்த பர்ண பலாதிகம் ॥" எனவும், சுவாயம்பு: "மாயாதத்வம் ஜகத்பீஜமவிநாஶ்யஶிவாத்மகம்। விப்வேகலம் ஸூக்ஷ்மமநாத்யவ்யமீஶ்வரம்" எனவும், மிருகேந்திரம்: "ததேகமஶிவம்பீஜம்ஜகதஶ்ஶக்திமத்। ஸஹகார்யாதிகாரந்த ஸம்ரோதிவ்யாப்ய நஶ்வரம் ॥ கர்த்தாநுமியதேயே நஜ கத்தர்மேநஹேதுநா। தேநோபாதாமநவ்யஸ்தி நபடஸ்தந்து பிர்விநா ॥ ததசேதந மேவஸ்யாத் கார்யாஸ்யாசித்த்வதர்ஶநாத்। ததாதராணிகார்யாணி விவ்ருதௌ வ்யக்தி ரூபாணி வ்யாப்ரியந் ஸக்திரூபாணி ஸம்ஹ்ரதௌ ॥ தோர்த்தவித்தயே இதி" எனவும், சிவஞானசித்தியார்: "நித்தமா யருவாயேக நிலையதா யகிலத் துக்கோர் வித்துமா யாசித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர், சத்தியாய்ப் புவனபோகந் தனுகர ணமுமுயிர்க்காய், வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே." எனவும், தத்துவப்பிரகாசம்: "விளங்கசுத்த மாயைகுடிலாகிச் சலன, மேவியசுத் தசுத்த மிகவளவிச் சகலர்க், குளங்கொள்தனு கரணமுடன் புவன போக, முண்டாக்குங் காரணமா யொருகோடி பேதந், துலங்கியணுக் களையொடுக்கி விரித்துக் கன்ம, சுகதுக்க மொடுங்கவுமுற் பவிக்கவுந்தா னிடமாய்க், களங்கமதா யசுத்தமாய் நித்தமா யருளாற், காரியப்பட் டிடுநிலைதேற் கட்டில்லைவைய மிலதாம்." எனவும் வருவனவற்றாற் காண்க. இதனாற்

கணிகவாதிகள் மதம் மறுக்கப்பட்டது. மாயையானது சடமாகலின், அது தானே காரியப்படுமோ என்று விசாரிக்கவேண்டு மென்பார், ‘அறிந்துபார்க்கின்’ என்றார். மாயைக்கு உணர்ச்சி யின்மையானும், அது சேதனப்பொருளிற் செல்லாமையானும், அதனைக் காரியப்படுத்து வான் ஒரு முதல்வன் வேண்டுமாகலின் ‘தெய்வவரு ளல்லாம லில்லை’ என்றார். சிவஞானசித்தியார்: “புத்திமற் காரி யங்காண் பூதாதி புருடன் றானு, மத்தனு கரணம் பெற்று லறிதலா லவற்றை மாயை, யுய்த்திடு மதனுன் மாயைக் குணர்வொன்று மில்லையென்றே, வைத்திடு மதனு லெல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்” எனவும், பாராக்கியம்: “மூர்த்யா ஸ்ஸாவயவா யோர்த்தாநாநாரூப பரிச்சதாஃ। ஸ்த் தூலாவயவத்ருஷ்டத்வாத் புத்தீமத்தேது பூர்வகாஃ। கதோஸ்தி புத்திமாந் கஶ்சிதிஶ்வரஸ்ஸ மவஸ்தித இதி” எனவும் வருவனவற்றாற் காண்க. தனு கரண புவன போகங்க ளனைத்தையும் ஆன்மாக்களின்பொருட்டு மாயையி னின்றுங் காரியப்படுத்தலாதி செய்தல் முதல்வனின் அருளேயாகலின், ‘தெய்வ அருளல்லாம லில்லை’ என்றார். மிருகேந்திரம்: “போக ஸாதந மாக்ஷிப்ய க்ருத்வாகரணஸம்ரம்யம்। தச்சசாத்மகமாகம்யவிஶ்ரமாயா வதிஷ்டதே॥ பவிநாம் பயபிந்நாநோ நாம்ஸவம் பூதனுமித்தாயத॥ ஸ்வபவஸாநமாஸாப்யேதி” எனவும், தந்த்ரைவ: “பரிணமயதீ தாம்ப போதந்தம் காக சித்விஷா। யதோர்மீல நமாதத்தே ததாநுக்ரஹமீகோச் யுத இதி” எனவும், சிவஞானசித்தியார்: “அழிப்பிளைப் பாற்ற லாக்க மவ் வவர் கன்ம மெல்லாங், கழித்திட நுகரச் செய்கை காப்பது கன்ம வொப் பிற், றெழித்திட மலங்க ளெல்லா மறைப்பருட் செய்தி தானும், பழிப் பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்” எனவும், சிவப்பிர காசம்: “ஏற்றவினை யரனருளின் றிருவிளையாட்டாக, வியம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே, யூற்றமிகு வருள்புரித லேது வாக, வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன் மற்றைத், தோற்றமல பாகம் வரக் காத்தல் போகந், துய்ப்பித்த றிரோதாயி நிறுத்தலாகும், போற்றலரு மருளருளே யன்றி மற்றுப், புகன்றவையு மருளொழியப் புகலொ ணாதே.” எனவும் வருவனவற்றாற் காண்க. யானெனதென்னும் செருக்கற்றாலன்றி யின்ப மடைதல் கூடாதாகலின், ‘யானெனத றத்துறிய நிலையாகி நிற்பதே யின்பமெனு மன்பு முண்டு’ என்றார். சிவஞானபோதம்: “நானவனென் றெண்ணினற்கு நாடுமுள முண்டாதல், தானெனவொன் றின்றியே தானதுவாய் - நானெனவொன், றில்லென்று தானே யெனு மவரைத் தன்னடிவைத், தில்லென்றுதானு மிறை.” எ - ம், சிவஞானசித்தி யார்: “யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னும், மிக்கோனை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செய்வ நின்றிடவத் தத்து வன்றே னேரே, தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடு, நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி, நண்ணுவிக்கும் போகத்

தைப் பண்ணுவிக்குங் கன்ம, மூன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லா லொருவர்க்கு மியாவொனாதிங் கொழியா தன்றே." எ - ம், திருக்குறள்: "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்." எனவும், பிரபுலிங்கலீலை: "யானென தென்ப திருந்திடு காறு, ஞானமுறுனது நன்னெறி லூயிற், றுனிலை யாத சகந்திகழ் கிற்குந், தீனமிலாத சிவந்திகழாதே." எனவும், சிற்றம்பலநாடியார்: "யானெனது நீங்கியிறை நிறைவிலொன்றாக்கி, யானெனது நீக்கா திருத்தினன் - யானெனது, தங்கா தவர் போற்றுஞ் சண்மைச் சிற்றம்பலவன், மங்காமற் காத்தாண்ட வாறு." எனவும், இராமையந்தாதி: "என்னது யானெனு மிந்த மயக்கைத், தன்னருளாலொழிக்கும் பிள்ளைக்கோன், கன்னிகு யத் தொடுத்தைவா கட்டே, கொன்றுறு மேனி குழைந்தமை யென்னே." எனவும் வருவனவற்றாற் காண்க. பிரத்தியட்சத்தாற் காணப்படுவன வெல்லாம் அழிதன்மாத்திரையவாகலின் 'கண்டனவெலா மல்ல' என்றார். திருவிளையாடற்புராணம்: "அல்லையீ தல்லையீ தெனமறைகளு மன்மைச் சொல்லினாற் றுதித் திளைக்கும்" என்றதனாற் காண்க. நிட்டை கூட வேண்டுமாயின், செயலற்றுத் தன்னைத் தனியே யிருந்து கண்மூடி யிருக்க வேண்டுமாகலின் 'கருவிக ளனைத்தையுங் கண்மூடி யொருகணமிருக்க' என்றார். பட்டினத்துப்பிள்ளையார்: "சித்தனையற்றுப் பிரியமுந் தானற் றுச் செய்கையற்று, நினைத்ததுமற்று நினையாததுமற்று நின்மலமாய்த், தனித்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற, வனைத்தவி லென்றிருப் போத்தனே! கயிலாயத்தனே!" எனவும், தேவிகாலோத்தரம்: "சித்தமையும் பாசாக்கினையு நீக்கிச் சித்த, மொருநிலையு நீங்காம னிறுத்திக் கொண்டாற், சித்தமொரு பொருளினையுஞ் சேரா தாகிச், சேருமவகை சேராமற் செல்லநின்று, மத்தமன முதலாய வவத்தை யொன்று, மருவாத வகையிற்கு மதுவே யாகு, முத்திநெறி யென்றுமறை யிடைவி டாது, முறையிடவு மாகமங்க ளொழியுங் காணே." எனவும் வருவனவற்றாற் காண்க. ஆன்மாக்கட்குக் கன்மம் அநாதியாகலின் அது புத்திதரு மருபமாயிருந்து, சுகதுக்கங்களை விளைவித்துக்கொண்டே யிருக்குமாகையால், 'கன்மங்கள் போராடுதே' என்றார். சிவஞானசித்தியார்: "கன்மமோ டேகன்ம மாகித் தானிரு பயனுந் தந்து, நன்மைதீ மையினு மின்பந் துன்பினு நாடிக் காண, முன்னமே யன்மா வின்றன் மும்மலத் தொன்ற தாகிக், கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்." எனவும், சிவப்பிரகாசம்: "நண்ணியிடு முருவதனுக் கேதுவாகி, நாலுபோ கங்களாய் நாசோற் பத்தி, பண்ணிவரு மாதலா லநாதி யாகிப், பலவாகி யனுக்கடோறும் படர்வ தாகி, யெண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்று, மியல்பினதாய் மதிகதமா யிருபயனும் பாவ, புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப், பொருந்துமிது கன்மமலம் புகலுமாறே." எனவும் வருவன வற்றாற் காண்க. 'போராடுதே' என்பது ஒருமை பன்மை மயக்கம்.

'பண்டை' என்றது பிராரத்துவமெனக் குறித்தற்கு. கருமவாதிகள் கருமத்தினையே கடவுளென்பாராகலின், 'கர்மமே கர்த்தா வெனும்பெயர்' என்றனர். தத்துவப்பிரகாசம்: "நல்வினைதீ வினைமுன்னே செய்த வூழாம், நாடியது பேறிழவின் பம்பிணிமூப் புடனே, யொல்லைமர ணங்க ளிவை கருவுட் பட்ட, தொருவரா னீக்கவொண்ணு புசித்தன்றி யொழியா, எல்லையிது வேயென்று முயற்சியுஞ் சோம்பதுவு, மிரண்டுமெறன் முத்தி யென்னுங் கரும வாதி." என்றதனு லறிக. 'செல்லு முடலிற் செய்த சடமாங் கன்மஞ் சென்று முத்தி கொடுப்பதெங்கே தீங்கை விடாய் நீயே" என வைதிகசைவரால் அக்கன்ம வாதிகள் கண்டிக்கப்பட்டனராகலின் 'நாணிச்சிப்பனே' என்றார். (4)

சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
 தன்மைநினை யன்றியில்லாத்
 தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
 சமரச சுபாவ மிதுவே;
யிந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
 வியற்கை திருவுள மறியுமே;
 யிந்நிலையி லேசற் றிருக்கவென் றுன்மடமை
 யிதசத்ரு வாக வந்து
சிந்தைகுடி கொள்ளுதே; மலமாயை கன்மந்
 திரும்புமோ, தொடுவழக் காய்ச்
 சென்மம்வரு மோவெனவும் யோசிக்கு தேமனது;
 சிரத்தையெனும் வாளு முதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
 பாதுகாத் தருள்செய் குவாய்!
 பார்மிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணனந் தமே!

(இ-ள்) சந்ததமும் - எக்காலமும், எனது செயல் - என்னுடைய செய்கை, நினது செயல் - உன்னுடைய செய்கையே, யான் எனும் தன்மை - நான் என்கிற தன்மை, நின்னை அன்றி - உன்னையன்றி, இல்லாத் தன்மையால் - இல்லாத தன்மையினால், வேறு அல்லேன் - நான் உனக்கு வேறுமல்லேன்; இதுவே - இந்த நிலையே, வேதாந்த சித்தாந்த சமரச சுபாவம் - வேத முடிவும் ஆகமமும் ஒன்றுபடும் நிலையாகும்; இந்த நிலை - இவ்வரிய நிலைமையை, தெளிய - அறிய, நான் - அடியேன், நெக்கு உருகி - மன முடைந்து, வாடிய - உருகிவாடிய, இயற்கை - தன்மையை, திருவுளம் - நினது திருவுளம், அறியுமே - அறிந்திருக்குமே; இந்நிலையிலே - இத்தகைய அரிய நிலையிலே, சற்று இருக்க என்றால் - மனதொடுக்கிச் சிறிது இருக்கலாமெனின், மடமை - அறியாமையானது, இத சத்துருவாக வந்து - இச்சகம் பேசும் பகைவனைப்போல வந்து, சிந்தை குடி கொள்ளுதே - என் மனதில்

குடிகொள்ளா நின்றதே; மலமாயை கன்மம் - மலமாயை கன்மங்கள், திரும்புமோ எனவும் - மீண்டும் என்னை வந்து பற்றுமோ என்றும், தொடு வழக்காய் - தொடர் வழக்காகி, சென்மம் வருமோ எனவும் - பிறவி உண்டாகுமோ என்றும், மனது யோசிக்குதே - என் மனமானது ஆலோசிக்கின்றது; (ஆகலான்) சிரத்தை என்னும் - சிரத்தையென்று சொல்லப் பட்ட, வாளும் உதவி - வாளையுங் கொடுத்து, பந்தம் அற - பிறவிவேர் அற, மெய் ஞான தீரமும் தந்து - மெய்ஞ்ஞான காரியத்தையுங் கொடுத்து, என்னை பாதுகாத்து அருள் செய்குவாய் - அடியேனைக் காப்பாற்றி யருள்வாய்; பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) அநாதியே கருமையாகிய ஆணவமலத்தால் உளதாகின்ற கருவாகிய வீட்டிலே உணர்ச்சி யில்லாத கண்ணற்ற குழந்தைகளைப் போலக் கட்டுப்பட்டிருந்த ஆன்மாக்கட்குப் பெருங் கருணையினால் கருவி கரணங்களைத் தந்து அறிவை நிகழப்பண்ணும் இறைவன் செயலன்றித் தனக்கொரு செய்கையின்மையின் 'எனது செயல்' என்றார். பட்டினத்தார்: "என்செயலென்ப தியாதொன்று மில்லை யினித்தெய்வமே!, உன் செய லேயென் றுணரப்பெற்றேன்" என்றதனாற் காண்க. ஆன்மாக்களனைத்தும் முதல்வன் பரிபூரண வியாபகத்தில் வியாப்பியமாகி நின்று அறிந்திடுமாகலின் 'நீயன்றி யில்லாத் தன்மையால் வேறலேன்' என்றார். சிவஞானசித்தியார்: "பொறிபுலன் கரண மெல்லாம் புருடனு லறிந்தான் மாவை, யறிதரா வவையே போல ஆன்மாக்க ளனைத்து மெங்குஞ், செறிதருஞ் சிவன்ற னாலே யறிந்திடுஞ் சிவனைக் காணு, வறிதருஞ் சிவனேயெல்லா மறிந்தறி வித்து நிற்பன்." என்றதனாற்காண்க. வேதாந்த மென்பது வேதமுடிவினை. சித்தாந்தமென்பது ஆகமத்தினை. வேதங்களில் பற்பல சமயங்களை எடுத்துக் கூறி, அவற்றிற்கெல்லா மதிகாரிகளைச் சுட்டி அவற்றைச் சிறப்பித்துப், பின்னர் வேத முடிவான உபநிடதங்களில் அவற்றையெல்லா மறுத்து உண்மைப்பொருளை நிலை நிறுத்தியது. ஆகமங்களில் அங்ஙனங் கூறாது முத லிடை கடை முழுதிலும் முதல்வன் பெருமையினையே கூறி முழங்குகின்றன. ஆகலின், வேதாந்தமும் ஆகமங்களும் ஒரே முடிவினை யுற்றிருத்தலின், 'வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே' என்றனர். இவ் வேதாகமங்களைப் பன்னாள் கேட்டுத் திருவருண் முன்னிலையிற் சிந்தித்துத் தெளிந்தனராதலின், 'இந்த நிலை தெளிய நானெக்குருகி வாடிய வியற்கைதிரு வுளமறியுமே' என்றனர். இங்ஙனம் பழகி வருகையில் பூர்வவாசனைப் பழக்கத்தால் ஒரோவழி அறியாமை வந்து தாக்குமாகலின் 'இந்நிலையி லேசற் றிருக்கவென் றால்மடமை இதசத்ருவாக வந்து, சிந்தைகுடி கொள்ளுதே' என்றனர். சிவஞானபோதம்: "இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான், முன்செய் வினைமாயை மூண்டிடினும் பின்செய்வினை, மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே, யாயவத னுணருமச்சு." என்றதனாற் காண்க. இதசத்ரு - வெளியே

இதஞ் சொல்லி உள்ளே வஞ்சிக்க நினைப்போன், வாய்ந்த தேகத்தில் அடிக்கடி அறியாமை வந்து தாக்குதலின் இவ் வறியாமை காரணமாக மல மாயா கன்மங்கள் அடருமாகலான், 'மலமாயை கன்மம் திரும்புமோ தொடுவழக்காய்' என்றும், பிறவி மறுபடியு மெய்துதற்கு அம் மும்மலங் காரணமாதலின், 'சென்மம் வருமோ எனவும் யோசிக்குதே' எனவுங் கூறினர். பேடி கைவாள்போலாது, தீரன்பெற்ற வாளே பிரயோசனப் படுமாறு, போல" மெய்ஞ்ஞான மடைந்த வொருவனது சிரத்தையே பந்தத்தை நீக்குமாகலின், 'சிரத்தையெனும் வாளுமுதவிப், பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப் பாதுகாத்து அருள்செய்குவாய்' என்றார். 'சிரத்தை' என்றது ஞான சாத்திரங்களினிடத்து மனத்தினை நிறுத்தல்; இங்ஙன நிறுத்தின் மலமாயை கன்மங்க ணெருங்குத லருமை; ஆகலினன்றே "கேள்வி முயல்" என்றனர் மூதாட்டியார். (5)

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்;
பொறிபுல னடங்கு மிடமே
பொருளென்பர் சிலர்; கரண முடிவென்பர் சிலர்; குணம்
போனவிட மென்பர் சிலபேர்;
நாதவடி வென்பர்சிலர்; விந்துமய மென்பர்சிலர்;
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலர்; உருவ மாமென்பர் சிலர்; கருதி
நாடி லரு வென்பர்சிலபேர்;
பேதமற வுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்;
பேசினரு ளென்பர் சிலபேர்;
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்;
பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிஷ்டைபெறுமோ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே!

(இ - ள்) பூதம் - ஐந்து பூதங்களும், லயம் ஆகின்ற - ஒடுங்குதற்கு முதற்காரணமான, மாயை - மாயையே, முதல் என்பர் - முதற்பொருளென்பர், சிலர் - சிலர்; பொறி புலன் - ஐம்பொறிகளாலும் கவரப்படும் விடயாதிக ளைந்தும், அடங்கும் இடமே - ஒடுங்கு மிடமே, பொருள் என்பர் - முதற்பொருளென்பர், சிலர் - சிலர்; கரணம் முடிவு என்பர் - அந்தக்கரண மொடுங்குமிட மென்பர், சிலர் - சிலர்; குணம் போன இடம் - முக்குணங்களு மொடுங்கின விடமே, என்பர் - முதற்பொருளென்பர், சிலபேர் - சிலபேர்; நாத வடிவு என்பர் - நாதரூபமே பொருள் என்பர், சிலர் - சிலர்; விந்துமயம் என்பர் - விந்து ரூபமே பொருளென்பர், சிலர் - சிலர்; நட்டநடுவே இருந்த - நடுவாகவிருந்த, நாம் என்பர் - ஆன்மாவாகிய நாமே முதற்பொருளென்பர், சிலர் - சிலர்; உருவமாம் என்பர் -

உருவப் பொருளே யென்பர், சிலர் - சிலர்; கருதி நாடில் - நன்ருக ஆலோசிக்கு மிடத்தில், அருவு என்பர் - அருவப்பொருளே யென்பர், சிலபேர் - சிலபேர்; பேதம் அற - வேற்றுமை கெட, உயிர் கெட்ட - சீவபோதம் ஒழிந்த, நிலயம் என்றிடுவர் - இடமே பொரு ளென்பர், சிலர் - சிலர்; பேசில் - சொல்லுமிடத்து, அருள் என்பர் - திருவருளே பொரு ளென்பர், சிலபேர் - சிலபேர்; பின்னு முன்னுங் கெட்ட - அந்தமும் ஆதியு மில்லாத, சூனியமது என்பர் - சூனியமென்பர், சிலர் - சிலர்; பிறவுமே மொழிவர் - வேறு நிலைகளையும் பொருள் என்பர், (சிலர் - சிலர்); இவையால் - இவற்ருல், பாதரசமாய் - பாதரசம்போல, மனது - மனமானது, சஞ்சலப்படும் அல்லால் - சலித்தலை யடையுமேயன்றி, பரம சுகநிஷ்டை - மேலான இன்பத்தைப் பயக்கும் நிஷ்டையினை, பெறுமோ - அடையுமோ?, பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) நிரீச்சுவர சாங்கியர் அங்குராதிகளுக்கொரு சேதனனை யபேட்சியாமற் பீஜாதிகள் சாமக்கிரியை யானதுபோல், மூலப் பிரகிருதியான மாயை திரிகுணத்மக மாகலின், மகதாதி பிரபஞ்சோற்பத்தியுந் திதியு மிலயமுந்தானேயா யிருக்குமாகலி னிதற்கோரீஸ்வரன் வேண்டாம்; ஈஸ்வரனொருவன் ஜகத்கர்த்தாவாக வுண்டாமாகில் பிரகிருதி மாயை யேதிற்கு? ஆகலின், மாயையே முதலென்ப ராகலின் 'பூதலய மாகின்ற மாயை முதலென்பர் சிலர்' என்ருர். சிவஞானசித்தியார்: "மூலம் புரியட் டகம்விகிர்த்தியாகி மூன்ருய்ப் பிரகிருதி, தூலசூக்குமம் பரமாய்ச் சுத்த புருடன் சந்நிதியிற், பாலன் சேட்டை புரிந்துலகம் யோனி பலவாய்ப் பரந்தொடுங்குஞ், சால வென்று நிரீச்சுவர சாங்கி யன்ருன் சாற்றிடுமே." என்றதனுற் காண்க. பொறிகளாற் கவரப்படும் விடயாதிகள் ஒடுங்கிப் பாடாணம்போற் கிடப்பதே பொருளென்பர் பாடாணவாதிகளாகலின், 'பொறி புலனடங்கு மிடமே, பொருளென்பர் சிலர்' என்ருர். சங்கற்ப நிராகரணம்: "சொத்தை மாந்த ருய்த்திடு துயில்போற், காட்சியென்னக் காணுத் துயர, மாட்சியை முத்தி யெனவகுத் தனரே" என்றதனுற் காண்க. ஆன்மாவிற்கு மலபாகம் வந்தவிடத்துக் "கண்ணுடியிற் காட்டின நிழல் அந்தக் கண்ணுடியிற் பொருந்தினுற்போல" முதல்வனுடைய அருள் ஆன்மாவிலே பிரகாசித்த அவதரத்துக் "காட்டத்தினைப் பொருந்தின அக்கினிபோலவு முப்பளத்தினைப் பொருந்தின புல்லும் வைக்கோலும் போல"வும் பசுத்துவங் கெட்டுச் சிவத்துவமாய்க் கரணங் கெட்ட சித்தியதே பொருளென்பர் சங்கிராந்தவாதிய ராகலின், 'கரண முடிவென்பர் சிலர்' என்ருர். சங்கற்ப நிராகரணம்: "பழமல நீங்க நிகழுங் காலை, வேற்ருேர் முகவொளி தோற்றுங் கலனெனத், தலைவன தருளுயிர் நிலவிடு நிலவக், காட்டந் தங்கி மாட்டத் தங்கிய, தன்மையு மளத்த புல்வையி னீப்பும், போன்றதுவாகித் தோன்றிடு மதனுற், பசுகர ணங்கள் சிவகர ணங்க, ளாக மாறி யறிவு மேகமா, முயிர் யானென நின்றே."

என்றதனாற் காண்க. ஞானவாணியம், தரிசனவாணியம், வேதினீயம், மோகனீயம், ஆயுசு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்ற குணங்களெட்டும்; பசித்தல், தாகம், பயம், செற்றல், உவகை, மோகம், சிந்தனை, பழித்தல், நோய், நசித்தல், வேர்வை, கேதம், மதம், வேண்டல், அதிசயித்தல், உருசிப்பு, பிறப்பு, உறக்கமென்கிற குணங்கள் பதினெட்டும்; அரசிகம், இரதி, அரதிசோகம், சுருச்சை, பயம் என்கிற குணங்களைந்தும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்டு வருகிற மூவகைக் குணங்களையும் விட்டுப் பூர்வ கன்மத்தி லுண்டாகிய கன்மங்கள் புசித்துத் தொலைந்த வவதரந்தானே வீட்டின்பப் பொருளென நிகண்டாவாதியர் கூறுவாராகலின், 'குணம் போனவிடமென்பர் சிலபேர்' என்றனர். சிவஞானசித்தியார்: "ஈறிலாதன வனந்த ஞானமுத லெண்குணங்களெனு மொண்குண, மாறிலாதமதி மேவுசீதமென மன்னி வானவர் வணங்கவே, வேறுலாவுகுண ஞானவாணியமதாதியெட்டினையும் விட்டசீ, ரேறுபான்மையுடனீடுவாழருக னெங்களுக்கிறைவனென்றனன்." எ - ம், "பசித்தருகபய செற்றமோடுவகை மோகசிந்தனை பழித்தனோய், நசித்தல் வேர்வினொடு கேதமோடு மதம் வேண்டலீண்டதி சயித்தலும், புசிப்புவந்திடு பிறப்புறக்கமவை விட்டொரட்டகுண பூதனாய், வசித்தவனனுலகின் மேலிருந்தொருசொ லிகலனுக்கருளு மென்றனன்." எ - ம், "எணுமொன்றுடைய வாகியெங்குமணு வாயிரும்புகன் மரங்களும், பூணுமங்குருவெ லாமுமாகுமவை புற்கலப்பொருள்க ளென்னலாங், காணுமங்கறு வகைத்தொழிற்களவை கட்டுவிட்டநெறி கன்மமேன், மாணநின்றுவரு மாறிமாறி முன் வரைந்ததுண்டுவிட மாட்சியே."
எனவும் வருவனவற்றாற் காண்க. அன்றியும், பிரகிருதி தத்துவமானது, தூலசூக்குமமாய் எல்லாப் பதார்த்தங்களுக்குங் காரணமுமாய், முக்குணங்களுமொத்து நிற்கிறதே தனக்கு வடிவமாய், அமூர்த்தமாயிருக்கும் புத்தி முதல் பிருதிவியீறாகிய தத்துவ மிருபத்துமூன்று மிதனுடைய வியாத்தியாயிருக்கும். அதனோடுங் கூடின் சுத்தபுருடனும் பாலனாகிய பிள்ளைகளைப் போலச் சேட்டை யுண்டாகிப் பல யோனிகளையு மெடுத் திந்தக் குணங்களோடு மநாதியேகூடிப் புத்தியை யுடைத்தாய வித்தையின் வசத்திலேயொழுகி, சனன சம்பந்த முண்டாயிருக்கிற சுக துக்கமான குணங்களுமுண்டாயிருக்கும். அந்தப் பிரகிருதியினுடைய தன்மையை யறிந்து, புத்தியை யடைந்திருக்கிற அறியாமை போய், விகிருதியா லுண்டான சுக துக்கங்களைப் பிரகிருதிக்கு உண்டானதென்று கண்டு இது ஆன்மாவுக்கில்லையென்று குணத்திரயங்க ளடங்குவதே முதலென்பர் ஆகலின், 'குணம் போனவிட மென்பர் சிலர்' எனக் கூறுதலு மொன்று. சித்தியார்: "மூலம் புரியட் டகம்விகிர்தி யாகி மூன்றாய்ப் பிரகிருதி, தூலஞ் சூக்குமம்பரமாய்ச் சுத்தபுருடன் சந்நிதியிற், பாலன் சேட்டை புரிந்துலக மியோனி பலவாய்ப் பரந்தொடுங்குஞ், சால வன்று நிரீச்சுவர சாங்கி யன்றான் சாற்றிடுமே." என்றதனாற் காண்க. சத்தப்பிரமவாதி—"சத்தமானது மயக்கத்தினாலே

பிரபஞ்சமா மெனவும் அறியாதார் அர்த்தமும் சத்தத்துக்கு உண்டென்று விசாரிப்பது மெய்யன்று மெனவும், சத்தமே பிரமமாவது அர்த்தமில்லை யென்றறியு மறிவே வீட்டின்பமாவதெனவும் கூறிச், சத்தமாகிய நாதமே முதலென்பர் ஆகலின், 'நாதவடி வென்பர்சிலர்' என்றனர். சித்தியார்: "உரையா னதுமை யலினு லுலகாம், புரையோருணரும் பொருள்போ யிதனை, விரையா துணரும் மதுவீ டெனவே, வரையா துரைவா திவகுத் தனனே." என்றதனாற் காண்க. விந்துவினின்றும் நாதாதிதத்துவங்களும், வைகரிக் காதிகாரணமான சூக்குமை பைசந்தி மத்யமை முதலியவும், அவ் விந்துவின் கீழ்ப்பட்ட மோகினியாகின்ற அதோ மாயையினின்றும் இராக தத்துவத்திற் காதிகாரணமான காரணமாயை - காலம் - நியதி - கலை வித் தையாதியும், அவ்வசுத்தமாயையின் தூலபரிணாமமான மூலப்ரகிருதியினின் றும் அவ்வியத்தம் சாத்மீக இராசத தாமதகுணங்கள் முதலியனவும் ஆகிய யாவற்றிற்கும் விந்து காரணமாயிருத்தலின், 'விந்துமய மென்பர் சிலர்' என்றார். சித்தியார்: "விந்துவின் மாயை யாகி மாயையி னவ்வி யத்தம், வந்திடும் விந்துதன்பால் வைகரி யாதி மாயை, முந்திடு மிராக மாதி மூக் குண மாதி மூலம், தந்திடும்" என்றதனாற் காண்க. அகம்பிரமமாய் அனு பூதியுந் தன்னிலே தன்னை அனுபவித்து, காயமென்றுங் காரணமென்றும் வாயுவென்று மொருபேதமுமின்றி, இன்னபடியென்று சொல்லுதற்கோர் சொல்லுமின்றி, ஆகாயமுதலிய பூதங்கள் கெடவும், தானொருகாலுங் கெடாதே நிலைபெற்று நான் பிரமமெனும் ஞானமே முதலென்பர் ஏகான்ம வாதிகள். அன்றியும், அவர்கள் "நின்மலமாயிருக்கிற ஆகாயத்தினை மேக மறைத்த தன்மைபோல" சுத்தமாயிருக்கிற பரப்பிரமமு மாயா வுபாதிகளி னாலே வாதிக்கப்பட்டு, அந்த வுடலிலே மயங்கி நிற்கிறதே ஆன்மாவெனவும் அந்த "ஆகாயத்திலே யொரு காற்றுத் தோன்றி அந்த மேகத்தினை நீக் கின தன்மைபோல" ஆன்மாவினிடத்திலே யொரு விவேகஞானந் தோன்றி அந்த மாயாவத்தை நீங்க நாமேயாகின்ற அவசரம் முதலென்ப ராகலின், 'நட்டநடு வேயிருந்த நாமென்பர் சிலர்' என்றனர். சித்தியார்: 'தானே தானு யனுபோகந் தன்னிற் றன்னை யனுபவித்திட், டேனே யுயிரே யுணர்வேயென் றொன்று மின்றி யுரையிறந்து, வானே முதலாம் பூதங்கண் மாய மாயா தேமன்னி, நானே பிரம மெனத்தெளியு ஞானம் பிரம ஞானமே." எனவும், சங்கற்ப நிராகரணம்: "இவ்வியற் பந்தப் பௌவம தகல, விண்முத நந்த கொண்மூப் படலத், திருளற வுதித்த காறக விவே கம், தன்னிற் றோன்றிச் சாதக மனைத்தையு, மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும், போல ஞாலம் பொய்யறக் கழீஇத், தானே தானுய்த் தன்னிற் றன்னைத், தானே கண்டு தன்னல முற்று, வசையி றத்துவ மசிபதந் தெளிவா, லகமே பிரம மாயின னெனவறிந், தசல னுகிநற் சலசல மதி யெனக், கண்டிடு முடலம் விண்டகல்கடத்து, மங்குல துடைதர வெங்கு மாந் தகைத்தே." என்பனவற்றாற் காண்க. "வேட்டுவொளியானது ஒன்று

மறியாத பச்சைப்புழுவை யெடுத்துத் தற்சொரூப மாக்கினதன்மைபோல' ஒன்று மறியாத ஆன்மாவையும் முதல்வனுடைய அருள் எடுத்துக்கொண்டு தற்சொரூப மாக்கவந்த மாயாவுடல் தானே நித்தியவத்தைப் பெற்று முதல்வனுடன் சமானமுறுதலேமுதலென்பர் சிவசமயவாதியார் : பரமபத மென்கிற வீட்டில் நீளாதேவிபூதேவி சமேதராய், திருமாமணி மண்டபத்தில் சங்கசக்ரதாரியாய், நீலமேனியராய், நித்திய சூரிகளால் சேவ்யமானவராய் எழுந்தருளியிருப்பவரே முதலென்னும் பாஞ்சராத்திரியரு மிவருளடங்குவர். ஆகலின், 'உருவமாமென்பர் சிலர்' என்றனர். சங்கற்ப நிராகரணம்: "முன்னோன் றனது முதிரொளி ஞான, மறியாப் பச்சைச் சிறபுழுக் கவர்ந்த, வண்டென வுயிரைக் கொண்டிடு முயிரது, தன்னை நோக்கித் தானதுவாகி, யைவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும், பிறியாவாறு பெற்றுத் திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே." என்றதனுற் காண்க. உருவ மனைத்தும் விவர்த்தமே யெனவும், நிட்கள - நிசானந்த - நின்மல - நிசப்பிரகாச - நிராமய - நிஸ்தரங்கமாய் ஞப்தி மாத்திரமான பிரமமே முதலென்பர் மாயாவாதியராகலின், 'கருதி நாடில் அருவென்பர் சிலபேர்' என்றனர். சித்தியார்: "அறிவா யகில காரணமா யனந்தா னந்தமாயருவாய்ச், செறிவா யெங்கு நித்தியமாய்த் திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமதாய்க், குறிதான் குணங்க ளொன்றின்றிக் கூறும் வேதந் தனக்களவாய்ப், பிரியாதனுபூதிகந்தனக்காய்நின்ற தந்தப் பிரமந்தான்." என்றதனுற் காண்க. பரப்பிரமந் தானே பிரபஞ்சமுமா யான்மாவுமாய் நின்று காரியப்படுகிறவிடத்து, ஆன்மா கன்மத்தை யனுட்டித்து ஞான முண்டானவாறே பிரமத்தோடுங் கூடி யான்மா அழிந்துபோய் நிற்பது முதலென்பர் பாற்கரியராகலின், 'பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்' என்றார். சித்தியார்: "சித்தே யுலகாய்ப் பரிணமித்துச் சீவனாகித் திகழ்ந்தமையாற், சத்தே யெல்லா முத்திதனைச் சாரக் கண்ட ஞானங்கள், வைத்தே மொழியு மாமறைகள் சொன்ன மரபே வந்தக்கா, லொத்தே கெட்டுப் பிரமத்தோடொன்றாய்ப் போமென் றுரைத்தனனே." என்றதனுற் காண்க. அறிவுமயமான அருளுருவமாயிருந்த ஆன்மாவானது கன்மத்தாலும் மாயையாலும் மறைக்கப்பட்டு, அவை யாசாரிய னனுக்கிரகத்தால் நீங்கியவழி, நீருநீருஞ் சேருந் தகைமையில், முதல்வனாகிய அருளுடன் ஆன்மாவாகிய அருளுங் கலந்திடுவதே முதல் என்பர் ஐக்கியவாதியராகலின், 'பேசிலரு ளென்பர் சிலபேர்' என்றனர். சங்கற்ப நிராகரணம்: "அறிவா முயிரிற் பிரியாதேயு, மீட்டு மிருபய னூட்டிடு நியதிக், கொருபொழு திருபய னுகர்வுறமருவுத, லின்மை யாதன் முன்னிய காலைச், சத்திநி பாத முற்றிறை யருளா, லுருவுகொ டெலகு தெரிவுற மருவி, மாசுறுந் தூசு தேசுறவிளங்குந், தன்மையி னுணர்த்தும் புன்மைகணீங்கி, நீரு நீருஞ் சேருந்தகைமையி, னறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி, யொன்றா மென்பதையுலகோர், நன்றாமுத்தி யெனநவின்றனரே." என்றதனுற் காண்க. சிவப்

பாழ் பரப்பாழ் சிவப்பா ழென்ற மூன்று பாழையுங் கடந்து நின்ற சூனியமே சிலர் முதலென்பாராகலின், 'பின்னு முன்னுங் கெட்ட சூனியமதென்பர் சிலபேர்' என்றனர். வேதசிரோதயம்: "சும்மா யிருக்கச் சுகமுதய மாகி யிடு, நம்மானை நம்மானை நம்மானை - யம்மா! கேள்!, முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா யப்பாலும்பாழென்றறி." என்றதனாற் காண்க. இவ்வாறு பல்வகைச் சமயிகளும் பலவாறு கூறுங் கொள்கைகளைத் தழுவுதலால் மனம் ஒருவழிப்படாது சலனமுறு மென்பார், 'இவையாற் பாதரசமாய் மனது சஞ்சலப்படும்' என்றனர். இச்சமயிகள் கொள்கை யனைத்தும் பாசஞானமும் பசுஞானமுமாக விளங்கலின் இவற்றால் உண்மை நிஷ்டை கைகூடுமோ வென்பார், 'பரமசுக நிஷ்டை பெறுமோ' என்றனர். சிவப்பிரகாசம்: "பாசஞானத்தாலும் படர்பசு ஞானத்தாலும், யீசனை யறியவொண்ணு திறையருண் ஞானநண்ணித், தேசுற மதனான் முன்னைச் சிற்றறிவொழிந்து சேர்ந்து, நேசமோ டியர்ப ரத்து நிற்பது ஞானநிஷ்டை." என்றதனாற் காண்க. (6)

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென்
　　னறிவைச் சுருக்கினவரார்?
　அவ்வறிவு தானுமே பற்றினது பற்றா
　　யழுந்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார்? மெய்ஞ்ஞான
　　சுகநிஷ்டை சேராமலே
　சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
　　தூங்கவைத் தவரார்கொலோ?
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
　　தனைத்தந்த தெனதாசையோ?
　தன்னையே நோவனோ, பிறரையே நோவனோ,
　　தற்கால மதைநோவனோ,
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ,
　　பரமார்த்த மேதுமறியேன்;
　பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
　　பரிபூர ணானந்தமே!

(இ - ள்) அந்தகாரத்தை - அஞ்ஞானமாகிய இருளை, ஓர் அகம் ஆக்கி - ஒரு வீடாக்கி, மின்போல - மின்னலைப்போல, என் அறிவை - என்னுடைய அறிவினை, சுருக்கினவர் ஆர் - சுருங்கச்செய்து அவ்விடத்து வைத்தவர் யார்?, அவ்வறிவுதானும் - அந்த அறிவும், பற்றினது பற்றாய் - தான் பிடித்ததனையே ஆதாரமாகக் கொண்டு, அழுந்தவும் - அதில் மூழ்கவும், தலைமீதிலே - என்னுடைய சிரசின்மீது, சொந்தமாய் எழுத - சுவதந்திரமாய் எழுதிவைப்பதற்கு, படித்தது ஆர் - கற்றது யார்?, மெய்ஞ்ஞான சுக நிஷ்டை சேராமல் - உண்மையாகிய ஞானானந்தங்களுக் கேது

வாகிய நிஷ்டையினைப் பொருந்தாமல், சோற்றுத் துருத்தியை - சோற்றினை யடைத்துவைத்த துருத்திபோலும் சரீரத்தினை, சதம் எனவும் - நிலையென்று நினைத்தும், உண்டு உண்டு - பலதரமுண்டு, தூங்கவைத்தவர் ஆர் - உறங்குவித்தவர் யார்?, தந்தை தாய் முதலான - தகப்பன் தாய் முதலாகிய, அகில ப்ரபஞ்சந்தனை - பிரபஞ்ச முழுவதனையும், தந்தது - உண்டாக்கினதற்குக் காரணம், எனது ஆசையோ - என்னுடைய விருப்பமோ?, தன்னையே நோவனோ - என்னை நானே நொந்துகொள்வேனோ; பிறரையே நோவனோ - அந்நியரையே நொந்துகொள்வேனோ; பந்தமானது தந்த வினையையே நோவனோ - பிறவித்தளையை யுண்டாக்கிய பூர்வ கன்மங்களைத்தான் நொந்துகொள்வேனோ; பரமார்த்தம் ஏதும் அறியேன் - மேலான அர்த்தம் சிறிதும் உணர்ந்திலேன்; பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) 'அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென் அறிவைச் சுருக்கினவரார்' என்றதனால், அறியாமை யுயிர்க்கு அநாதியே செம்பிற் களிம்புபோலவும், நெல்லிற்கு உமிபோலவும் உளதா மெனவாயிற்று. சிவஞானபோதம்: "நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ், சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி, மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா, ளலர்சோகஞ் செய்கை மலத்தாம்." எனவும், சிவப்பிரகாசம்: "அல்லன்மிக வுயிர்க்கிவைதானனைத்த தீச, னருவினைக ளருந்துதற்கோ வினையோ வன்றிற், சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச், சூழ்ந்ததெனு முறைமுதலோர் தொடக்கிலர்பா, லொல்லைவரு மெனினுளதா முயிருண் டாவே, யுளதுமல மலமுளதா லொழிந்த வெல்லா, நெல்லின்வரு தவிடுமிபோ லநாதி யாக, நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்து மாறே." என்பனவற்றாற் காண்க. 'அவ்வறிவுதானுமே பற்றினது பற்றா யழுந்தவுந் தலைமீதிலே, சொந்தமா யெழுதப்படித்ததார்?' என்றதனால், ஆன்மாவின் அறிவு படிகம்போலச் சார்ந்ததன்பாலாம் இயல்புடைத்தெனவும், அவ்வாறாகும்படி யதைச் செயற்கைப் படுத்தினார் ஒருவரு மில்லை யெனவுமாயிற்று. சிவப்பிரகாசம்: "பன்னிறங் கவருந் தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை, மன்னிலங் கியல்புந் தந்த வளரொளி போல வையந், தன்னகம் பயிலு நற்சிற் சடங்களின் றன்மை தாவா, நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர்." எனவும் திருநெறிவிளக்கம்: "பற்றிய நிறங்களாகும் பளிங்கின தொளியும் பற்று, நிற்றலை யளிக்கும் வெய்யோ னீடொளி யதுவும் போல, முற்றுல கதற்குச் சார்பாய் முயற்றினு முன்னீர் விண்போற், சிற்றினிற் சடங்க டோயா வென்பர்சிற் சத்தி சேர்ந்தோர்." என்பனவற்றாற் காண்க. 'மெய்ஞ்ஞான சுகநிட்டை சேராமலே, சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு தூங்கவைத்தவ ரார்?' என்றதனால் பேரின்பநிலை யெய்தற்குக் கருவியான நிட்டை கூடாது இவ்வுடலின் பொருட்டே யுழைத்து வாணாள் கழித்தல் பெரிதும் இழுக்குடைத்தென்று குறிப்பித்தனர். 'தந்தைதாய் முதலான வகிலப்பிரபஞ்சந் தனைத்தந்த

தெனதாசையோ' என்றதனால், பிறப்பெனக் குறிப்பா னுணர்த்தி அப் பிறப்பினைக் கூட்டிவைத்தது ஆசையேயென்றனர். திருக்குறள்: "அவா வென்ப தெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து." என்றதனாற் காண்க. காலம் வினைமுதலிய பிரவாகானாதியாய் வந்துகொண் டிருத்தலின் எதனையும் நோதற்கு ஏதுவில்லை யென்பார், 'தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்கால மதைநோவனோ, பந்தமா னது தந்த வினையையே நோவனோ பரமார்த்த மேதுமறியேன்' என்றனர். (7)

வாராதெ லாமொழிய! வருவனவெ லாமெய்த!
மனதுசா க்ஷியதாகவே
மருவநிலை தந்ததும், வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர யூகமது தந்ததும்,
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததுஞ், சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்,
நின்னதரு ளின்னுமின்னு
நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கவருள்வாய்!
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே!

(இ - ள்) வாராதெலாம் ஒழிய - வாராதனவெலாம் ஒழிக, வருவன எல்லாம் எய்த - வருவனவெல்லாம் வந்தெய்துக, (என்று) மனது சாட் சியதாக - மனதானது நடுவுநிலைமையான சாட்சியாக நின்று, மருவ - பொருந்தும்படி, நிலை தந்ததும் - (உண்மை) நிலையைக் கொடுத்ததும்; வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாக - வேதாந்தமரபு சித்தாந்தமரபு என் பன சமரசமாயிருக்கிறதாக, பூராயமாய் உணர - ஆத்யந்தமா யறியும்படி, ஊகமது தந்ததும் - ஊகத்தினைக் கொடுத்ததும்; பொய் உடலை - பொய் யாகிய சரீரத்தினை, நிலை அன்று என - சாசுவத மல்லவெனத் தீர்மானிக்க, போதம்நெறி தந்ததும் - ஞானமார்க்கத்தினைக் கொடுத்ததும், சாசுவத ஆனந்த போகமே - நித்தியானந்த அனுபவமே, வீடு என்ன - முத்தி யென்று, நீராளமாய் உருக - நீரின்றன்மையாய் உருகும்படி, உள்ளன்பு தந்ததும் - உள்ளன்பைக் கொடுத்ததும், நின்னது அருள் - உன்னுடைய திருவருளே; இன்னும் இன்னும் - மேலும் மேலும், நின்னையே துணை என்ற - உன்னையே துணையாகப்பற்றின, என்னையே காக்க - என்னையே பாதுகாத்தற்கு, ஒரு நினைவு - ஒப்பற்ற திருவுளம், சற்று உண்டாகிலோ -

சிறிது உண்டானால், பாராதி அறியாத மோனமே - நிலமுதல் நாதமிறுதியாகக் கிடந்த தத்துவங்களால் அறியப்படாத மௌன நிலையே, இடைவிடா பற்று ஆக நிற்க - இடையறாத பற்றுக்கோடாகக் கொண்டு நான் அந்த நிலையில் நழுவாது நிற்கும்படி, அருள்வாய் - கிருபை புரிவாய்!, பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) நன்மை யடையுங்கால் சந்தோஷ மடைதலும், தீமை யடையுங்கால் துக்க மடைதலும், நன்மை வாராதபோது துன்ப முறுதலும், தீமை வாராதபோது இன்ப முறுதலும், உத்தமர் செய்கை யன்றாகையால், தீயன நல்லனவாகிய எவற்றினும் சமபுத்தி கொள்ளுதலே சத்திநிபாத மெய்ஞ்ஞானத்தை அடைதற்கு ஏதுவாகலான், 'வாராதே வாவெனத் தமதன்பால் வருவனவெ லாமெய்த' என்றார். ஔவையார்: "வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென்றாற் போகா - இருந்தேங்கி, நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந் தானினைந்து, துஞ்சுவதே மாந்தர் தொழில்." எனவும், திருக்குறள்: "நன்றாங்கால் நல்லவாக் காண்பவ ரன்றாங்கால், அல்லற் படுவ தெவன்." என்பனவற்றாற் காண்க. தேகம் அநித்தியமாகலின் 'பொய்யுடலை நிலையன்றென' என்றனர். நாலடியார்: "மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத், தலை மிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத், துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா, லெஞ்சினா ரிவ்வுலகி லில்." எனவும், "யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற, யாக்கையா லாய பயன்கொள்க - யாக்கை, மலையாடு மஞ்சுபோற் றோன்றிமற் றாங்கே, நிலையாது நீத்துவிடும்." என்பவற்றாலும், முதலாவது செய்யுளிற் காட்டியுள்ள மற்றை மேற்கோள்களாலு மறிக. நிலைபெற்ற இன்ப நுகர்ச்சியே முத்தியாகலின், 'சாசுவத ஆனந்தபோகமே வீடு' என்றார். பஞ்சாக்கரவந்தாதி: "உளநின்று காணி னுளிப்பனங் கேயே னுனமொளிப் பின், வெளிநின்று காணப் படுவன் விரிகடற் றெள்ளமிழ்தந், தெளிவுண்ட தோலுங் கைப்பவென் சிந்தையெ லாமினிப்பன், பளகறுத் தாண்டபஞ் சாக்கர நாத பசுபதியே!" எனவும், துகளறுபோதம்: "நின்றபர மானந்த நேரே யனுபவித்தங், கொன்றுபட வுள்ளுருகி யோவாம - லென்று, மது வுண்ட வண்டுபோன் மாளாச் சுகத்தைப், புதிதுண் டிருந்துவி டுப்போது." எனவும், "ஒன்றாஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா, னன்றியொரு பொருளுமாகாதே - நின்றமுந்திச், சொல்லரிய வின்பச் சுகத்துக் கதீதமாய், நில்லவன்றா னும நிலை." எனவும், "இந்தச்சுகந்தை யினிநீ விழியா, லந்த வறிவி லயர்ந்ததுபோற் - றோந்தமறப், போதா யிதுவே சுகாதீதம் பொய்யற் றோர்க் காதாரமானவருள்." எனவும், ஞானசாகரவெண்பா: "கட்டவிழ்ந்த வஞ்சக் கருவிகளிற் கூடாமல், விட்டவத்தை தன்னிலும்போய் வீழாமற் - சுட்டுணர்வு, தோயாம லின்பச் சுகமா யனந்தமய, மேயாகி நிற்பதே வீடு." எனவும், "முன்னமே மூன்று முதலு முளதா யிருக்கத், துன்னி யொரு

பொருளுந் தோன்றாமன் - மன்னியிடு, மாதிமலம் போலநிறை யானந்தத் தான் மறைந்து, பேதமற நிற்பதுதான் பேறு.” எனவும் வருவனவற்றாற் காண்க. “அவனரு ளாலே யவன்றாள் வணங்கி” என்றதற் கேற்ப எல்லாம் முதல்வனருளாற் கிடைத்த தென்பார் ‘நிலை தந்ததும், ஊகமது தந்ததும், போதநெறி தந்ததும், உள்ளன்பு தந்ததும் நின்னதருள்’ என்றனர். “பாசி கல் விழும்போது சிறிது விலகிப் பின்னுங் கூடுமாறு போல,” நிட்டைகொள்ளுழி மறைந்து அது கலைந்துழிப் பின்னும் உலகப்பற்று தன்னைப் பற்றும் என்னும் அச்சத்தால், ‘மோனமே யிடைவிடாப் பற்றாக நிற்க வருள்வாய்’ என்றனர். சிவஞானசித்தியார்: “பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுது பரக்கு, மாசுபடு மலமாயை யடுங்கன்ம மனைத்து, மானடியை யுணரும்போ தகலும் பின் னணையு, நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்குநினை வுடையோர் நின்றிடுவர் நிலையிதுவே யாகு, மாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ ரறும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்.” என்றனாற் காண்க. (8)

ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ; கொடிய
வாலமமு தாகவிலையோ;
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ;
அந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ; மேருவுந்
தனுவாக வளையவிலையோ;
சத்தமே கங்களும் வச்ரதர னாணையிற்
சஞ்சரித் திடவில்லையோ;
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ;
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ;
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ;
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே!

(இ - ள்) ஆழ் ஆழி - ஆழிய கடலானது, கரை இன்றி - கரை யில்லாமலே நிற்க, இல்லையோ - தன்னெல்லை கடவாது அடங்கி நிற்கவில்லையோ; கொடிய ஆலம் - கொடிய விஷமானது, அமுது ஆக இல்லையோ - உணவாகி யமையவில்லையோ; அ கடலின்மீது - அந்தக் கடலின் நடுவில், வடவனல் - வடவைத் தீயானது, நிற்க இல்லையோ - அவியாமல் நிலைபெற்றிருக்க வில்லையோ; அந்தரத்து - ஆகாயத்தில், அகில கோடி - அண்டகோடிகள், தாழாமல் - கவிழாமல், நிலை நிற்க இல்லையோ - நிலைபெற்றிருக்கவில்லையோ; மேருவும் - மேரு மலையும், தனு ஆக - வில்லாக,

வளைய இல்லையோ - வளைக்கப்பட வில்லையோ ; சப்த மேகங்களும் - மேகங்க ளேழும், வச்ரதரன் - வச்சிராயுதத்தைத் தரித்த இந்திரனது, ஆணையில் - ஆக்கினையில், சஞ்சரித்திட இல்லையோ - வசிக்கவில்லையோ ; வாழாது வாழ - வாழாமல் வாழும்படி, இராமன் அடியால் - இராமனது பாதத்தால், சிலையும் - கல்லும், மடமங்கை ஆக இலையோ - இளம்பெண்ணாகிய அகலிகை யாகவில்லையோ ; மணிமந்திரம் ஆதியால் - மணிமந்திர முதலானவைகளால், வேண்டு சித்திகள் - அவரவர் விரும்பின சித்திகள், உலகமார்க்கத்தில் வைக்க இலையோ - இவ் வுலக நெறியில் தாபிக்கப்பட்டிருக்கவில்லையோ ; பாழ் ஆன என் மனம் குவிய - பாழாகிய என் மனது அந்தர் முகமாய்க் குவியும்படி, ஒரு தந்திரம் - ஒரு உபாயம், பண்ணுவது - செய்வது, உனக்கு அருமையோ - (எல்லாவற்றிற்குந் தலைவனாகிய) தேவரீருக்கு அருமையாகுமோ ; பார்க்குமிடம்.— என்க.

(வி - ரை) இச் செய்யுளிற் குறித்த செயற்கரிய செய்கைகளாகிய எட்டுள், முதலைந்து முதல்வனாலும், மற்றைய மூன்றும் ஆன்மாக்களாலுஞ் செய்யப்பட்டன. மனிதரா லேற்படுமொரு சிறு தடாக மெவ்வளவோ பெரிய கரையினாற் சூழப்பட்டிருந்தும், அகல நீள மிவ்வளவெனக் குறிக்கப்படாத பெரிய சமுத்திரம் யாதொரு கரையுமின்றி யிருப்பது முதல்வன் செயலென்றே குறித்தற்கு 'ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ' என்றனர். திருப்பாற்கடலிற் றோன்றிய விஷத்தாற் சர்வான்மாக்களுந் துன்புறு வகையாக, தேவர் முனிவர் வேண்டுகோளுக் கிரங்கிச் சிவபிரான், விஷத்தினைப் பானஞ் செய்தமையால் 'ஆலமமு தாகவிலையோ' என்றனர். பாகவதம்: "யேஸமாமங் த்ரியபகவாங் பவாநீம் விஶ்வபாவந:, தத்விஷம் கக்துமாரே பேப்ரபாவஜ்ஞோங்வ மோதத, ததஃகரதலீக ருத்யவ்யாபிஹாலாஹலம் விஷம், அபக்ஷயந்மஹாதேவ:, க்ருபயாபூதபாவந:, நிஶம்ய கர்மதச்சம்போர்தேவதேவஸ்யமீடுஷ: ப்ரஜாதாக்ஷாயணீ ப்ரஹ்மாவை குண்டஶ்சஶஶம்ஸிரே." எனவும், ப்ரஹ்மாண்ட புராணம்: "தஸ்ய விஷ்ணுரஹம் வாபிஸர்வேவா ஸுரபுங்கவா:, நஸக்நுவந்திவைஸோடும் வேகமந்யத்ரஸங்கராத், விஷேணோத்திஷ்டமாநேந காலாநலஸமத் விஷா, நிர்தக்தோரக்தகௌராங்க: க்ருதக்ருஷ்ணோஜநார்தந:" எனவும், வாமந புராணம்: "தம்த்ருஷ்ட்வாரக்த கௌரராங்கபம் க்ருதம் க்ருஷ்ணம் ஜநார்த்தநம், பீதாஸ்ஸர்வேவயம் தேவாஸ்த்வாமேவசரணம்கதா:" எனவும், இராமாயணம்: "ஹாலாஹலம் விஷம் ஸர்வம் ஸஜக்ராஹாம்ருதோபமம்" எனவும், திருவாசகம்: "கோலால மாகிக் குரைகடல் வாயன்றெழுந்த, வாலால முண்டானவன் சதுர்தானென்னேடீ!, ஆலாலமுண்டிலனே லன்றயன்மா னுள்ளிட்ட, மேலாய தேவரெலாம் வீடுவர்காணன் சாழலோ." எனவும், காஞ்சிப்புராணம்: "அடுங்கால மிதுவென்னவிட மெழலு நனிவெருவி யயன்மா லேனோர், கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற் கீழ்ச் சரண்புகுதக் கொதித்து வாழ்நாள், பிடுங்காம லருள்

புரிந்த பிரானன்றிப் பின்னையுமோர் பிரானுண் டென்ன, நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினு மென்னுள்ள நடுங்குமாதோ." எனவும் வருவனவற்றாற் காண்க. பெட்டைக் குதிரையின் வடிவாய்ச் சிவபெருமானால் படைக்கப்பட்டுக் கடலி னடுவில் நீரானது தன்னெல்லை கடவா தமைந்து நிற்கும்படி யமைத்து வைக்கப்பட்டதோர் நெருப்பாகலின், 'அக் கடலின் மீது வடவன னிற்கவில்லையோ?' என்றனர். ஆகாயத்தில் அனேகமான உருண்டை வடிவமாயுள்ள அண்டங்களை அந்தரத்தில் சிவபெருமான் வைத்திருக்கின்றாராகலின், 'அந்தரத் தகிலகோடி தாழாம னிலைநிற்க வில்லையோ?' என்றனர். சிவபிரான் திரிபுரதகனஞ் செய்யச் சென்ற காலத்தில் மேருமலையினை வில்லாகக் கொண்டாராகலின், 'மேருவுந் தனுவாக வளையவில்லையோ?' என்றனர். திருவாசகம்: "வளைந்தது வில்லு விளைந்தது பூச, லுளைந்தன முப்புர முந்தீபற, வொருங்குடன் வெந்தவா றுந்தீபற." எனவும், காஞ்சிப்புராணம்: "தடநெடு வடவரை சாபமும், படவர விறைபகர் நாரியு, மடல்விரி தூளவினன் வாளியுங், கடவுளர் பிறபிறர் கருவியும்." எனவும் வருவனவற்றாற் காண்க. மணியைப் பொழியும் சம்வர்த்தமும், நீரைப்பொழியும் ஆவர்த்தமும், பொன்னைப் பொழியும் புட்கலாவர்த்தமும், பூவைப் பொழியும் சங்காரித்தமும், மண்ணைப் பொழியும் துரோணமும், கல்லைப் பொழியும் காளமுகியும், நெருப்பைப்பொழியும் நீலவர்ணமும் ஆகிய ஏழு மேகங்களும் இந்திரன் ஆணையை மேற்கொண்டு நடக்குமாகலின், 'சப்த மேகங்களும் வச்ரதர ஞணையிற் சஞ்சரித் திடவில்லையோ?' என்றனர். 'வாழாது வாழல்' என்பது ஊனுடம்பொழியப் புகழுடம்பு நிற்றல். கௌதமன் தன் மனைவி அகலிகையை நோக்கி, "நீ கல்லாகுக" எனச் சாபமிட்டுப் பின்னர் விமோசனங் கூறுகையில், "இராமன் பாதம் பட்டதும் எழுக" என்றனன். அம் முனிவன் நிறைமொழியின்படியே இராமன் கால் படும்படி நேரிட அக் கல்லானது காரிகையானதால் 'இராமனடியாற் சிலையு மடமங்கை யாகவில்லையோ?' என்றனர். இத்தகைய செயற்கரிய செய்கைகள் தேவரீராலும் தேவரீரனுக்கிரகம் பெற்றவர்களாலும் அதி விலேசாக முடிந்திருக்க, அற்பமாகிய என் மனத்தினை யடக்கி யாளச்செய்தல் தேவரீருக்கு அசாத்தியமோ வென்பார், 'பாழான வென்மனங் குவியவொரு தந்திரம் பண்ணுவதுனக்கருமையோ' என்றனர். மன மொடுங்காத காலத்துச் சிவயோக சமாதி கூடுத லருமையாதலின் 'மனங்குவிய' என்றார். திருமந்திரம்: "மனமாயை மாயை மாயா மயக்கம், மனமாய தான்மாயை மற்றொன்றுமில்லை, பினமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம், தனையாய்ந் திருப்பது தத்துவந்தானே." என்றதனாற் காண்க. (9)

ஆசைக்கோ ரளவில்லை; அகிலமெல் லாங்கட்டி
• யாளினுங் கடன்மீதிலே

ஆணைசெல வேநினைவர் ; அளகேச னிகராக
அம்பொன்மிக வைத்தபேரு
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர் ;
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர் ; எல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாகமுடியும் ;
உள்ளதே போதுநா னானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றி
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையையருள்வாய் !
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே !

(இ - ள்) ஆசைக்கு - அவாவினுக்கு, ஓர் அளவு இல்லை - ஓர் வரம்பு இல்லை ; (ஏனெனின்) அகிலம் - உலகங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், கட்டி ஆளினும் - கட்டி அரசுசெலுத்தினும், கடல் மீதில் - கடலின்மீதும், ஆணைசெல - தமது ஆக்கினை செல்லும்படியாக, நினைவர் - விரும்புவார்கள் ; அளகேசன் - குபேரனுக்கு, நிகர் ஆக - சமமாக, மிக - மிகுதியாக, அம் - அழகிய, பொன் - பொன்னினை, வைத்தபேரும் - தம்மிடத்தில் வைத்திருக்கின்றவர்களும், ரசவாத வித்தைக்கு - ரசவாதவித்தையினுக்கு, நேசித்து - விரும்பி, அலைந்திடுவர் - திரிவார்கள் ; நெடுநாள் - நெடுங் காலம், இருந்தபேரும் - இவ்வுலக இன்பங்க ளடைந்தோரும், இன்னும் - மேலும், நிலையாக - நிலைத்திருக்கும்படி, காயகற்பம் - காயசித்திக்குரிய கற்பமுறைகளை, தேடி - நாடி, (கிடைக்கப்பெறாமல்) நெஞ்சு புண் ஆவர் - மனம் புண்படுவார்கள் ; எல்லாம் - இவைகளையெல்லாம், யோசிக்கும் வேளையில் - ஆலோசிக்குங்காலத்தில், பசிதீர - பசி அடங்க, உண்பதும் - புசிப்பதும், உறங்குவதும் ஆக - தூங்குவதுமாகவே, முடியும் - முடிவு பெறும் ; (ஆதலால்) உள்ளதே போதும் - உள்ளதே அமையும் ; நான் நான் எனக் குளறி - நான் நான் என்று அகங்கரித்துப் புலம்பி, ஒன்றை விட்டு ஒன்று பற்றி - ஒன்றை விட்டு ஒன்றைத் தொட்டு, பாசக்கடற்குளே - ஆசையாகிய கடலில், வீழாமல் - விழுந்தழுந்தாமல், மனது அற்ற - மன மிறந்த, பரிசுத்தநிலையை - பரிசுத்தமாகிய மௌனநிலை (ஆகிய மாக்கலத்தினை), அருள்வாய் - கிருபை செய்வாய், பார்க்குமிடம்.—என்க.

(வி - ரை) ஆசையானது நிலம் பொருள் போக மென்னும் மூன்றின் வழியாக வருவது. இம்மூன்றும் நிலையல்லனவாகவிருந்தும் இவற்றில் வைக்கு மாசைக்கு வரம்பில்லை யென்பார் 'ஆசைக்கோ ரளவில்லை' என்றார். சிவதருமோத்தரம் : ''மண்ணினுந் தனத்திலு மனைக்கு வாய்ந்த

நற், பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந், துண்ணென விழைவினைத் துறந்ததூயரே, விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்.” என்றதனாற் காண்க. ஒருவன் ஒரு குடை நிழலில் உலக முழுவதும் ஆண்டாலும் பின்னும் ஆளக் கருதுவானாகலின், ‘அகிலமெல் லாங்கட்டி யாளினும் கடன்மீதிலே, யாணைசெல வேநினைவர்’ என்றார். குபேரனுக்கு நிகராகப் பொன்னைக் குவியல் குவியலாக வுடையாரும் மேலும் பொன் பெறுவதற்கு இரசவாதத்தினைச் செய்ய முயலுவராகலின், ‘அளகேசனிகராக வம்பொன் மிக வைத்தபேரும், நேசித்து ரசவாத வித்தைக்கலைந்திடுவர்’ என்றார். இதனால் இரசவாதம் மெய்ம்மையுடையதேனும் இது துறவியாவார்க் கன்றிப் பொருள்விருப்புடையார்க்குப் பலியாதாகலின், ‘அலைந்திடுவர்’ என்றார். பணவிடுதூது: “மாய ரசவாத மயக்கம் பிடித்தமுழுப் பேயரதிலேமனது பேதித்துத் - தீமுகத்தில், நிற்க ரசத்தை நிறுத்துவராம் பாஷாண, வர்க்கமெலாங் கட்ட வகைவருமாம் - பொற்குணம்போல், காரஞ் சிவந்துவரக் கண்டாராமப்படிசவ், வீரஞ் சிவந்து மெழுகாமவ் - வீரம்போய், வங்கம் வலியமருந் தறிவாராஞ் சாதி, லிங்க குவளை யிரங்குமா - மங்கே, இரும்பிலே யீய மெடுக்க மருந்துண்டாம், திரும்பியொரு மூலிகையிற் செம்பாம் - துரும்புமுதற், சொன்னமா மென்றுமுன்னோர் சொல்லியதாங் கந்தகத்தை, வன்னமாறுத் தயிலம் வைப்பாராம் - பொன்னிமிலே, தொட்டியரி தாரந் துத்தநாகந் துரிசு, கட்டிநவாசாரங் கர்ப்பூரம் - பொட்டிலுப்பு, வீட்டுப் பிந்துப்பு வெடியுப் புடன்வளைய, லோட்டுப்போடைந்துப்பு மொன்றாகக் - கூட்டியதைச், செப்பமுடன் சேர்ந்துருகச் செம்பு களிம்பறுமாம், அப்பிரகத் தேரசமுண் டாக்குவரா - மிப்படியே, யொவ்வொருவ ரொவ்வொன்றை யுன்னி யிராப்பகலாக், கவ்வை பிடித்திதுவே கங்கணமா - யவ்வவர்தம், வீட்டிலுள்ள தட்டுமுட்டு விற்றுமாற் றுமன்மனை, யாட்டிதனை விற்று மதற்கேற்ற - நாட்டிலுள்ள, கட்டுசரக் கெல்லாங் கடையிலே வாங்கியதில், மட்டறப்பூஞ் சாராயம் வார்த்தரைத்துத் - தட்டு, மெருவிற்புடம்போட் டெரித்தபின்பு முட்டைக், கருவிட் டரைத்துக் கழுவிப் - பருவமதாய், வாய்விரிந்த தாழிக்குள் வைத்துச் சில சாமம், தீயெரிந்து காய்ந்து சிவக்கையிலே - பேய்முகசுட்டைச், சாற்றுங்கையாந்தகரைச் சாறும்பொன் னாங்கண்ணிச், சாறும் பசுந்தும்பைச் சாறுவிட் - டேறச், சுருக்குக் கொடுத்ததைச் சிந்தூரித்துச் செம்பை, யுருக்கித் தெளியுமட்டு மூதிப் - பெருக்கமுடன், சொன்ன வயிரவன்பேர் சொல்லியந்தச் சிந்தூரம், தன்னையதிற் போட்ட சமையத்தே - யென்னவோ, வன்னஞ் சிவக்குமதை மாற்றினா லென்றுகண்டு, சொன்னஞ் சரிகூட்டித் தொந்தித்துப் - பின்னையதில், வங்கத்தைக் குத்திவிட வங்கமும்போய் முன்சொன்ன, தங்கத்தை யுங்கெடுத்துத் தாழ்ச்சியா - யங்கே, கரிகண்ட காசுமுதல் காணுமோ வீணே, யரிகண்ட மாய்க்கிடக்குதையோ - வரிகண்டா, இவ்வாறு கெட்டவர்க ளெண்ணிறந்த கோடியுன்னைச் செவ்வாகக்

கண்டவரோ சிமானே !" என்றதனாற் காண்க. காயகற்பமென்பது உடலை மூப்பிறப்புக்களினின்றும் நீக்குவதோ ரரிய மருந்து. இம்மைப் பயன்களை நெடுநாள் அனுபவித்த கிழவர்களும் மேலுமவர்க ளுடலைக் காத்தற்குக் காயகற்பந் தேடி வருந்துவாராகலின், 'நெடுநா ளிருந்தபேரும் நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி நெஞ்சுபுண் ணுவர்' என்றார். இவ்வாறு பற்பலவிதமாக வருந்தி யலைதலெல்லாம் உண்பதற்கும் உறங்குதற்குமே யாகலான் அவை பயனிலவெனக் கூறி, 'யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும் உறங்குவது மாக முடியும்' என்றார். இங்ஙனம் வாளா அலைதலை யறவே கைவிட்டு உள்ளது போதுமென உள்ளத்தி லமைதலே முத்தி நெறிக்கு வழியாகலின் 'உள்ளதே போதுநானுனெனக் குளறியே யொன்றைவிட் டொன்றுபற்றி, பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற, பரிசுத்த நிலையை யருள்வாய்!' என்றார். குழற லென்பது குளறலெனத் திரிந்தது. மனமொழிகளால் அறிந்துரைக்கப்படுவனவெலா மசத்தாக லின், 'மனதற்ற பரிசுத்த நிலையை யருள்வாய்' என்றார். சிவஞான போதம்: "அசத்தறியாய் கேணீயறிவறிந்தவெல்லா, மசத்தாகு மெய் கண்டானுயி - னசத்தலாய், நீரிலெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு, மோரி னவையின்று மாறெப்பு." எனவும், "பாகவமேற் றனசத்தாம் பாவனு தீதமெனிற், பாவகமா மன்றென்னிற் பாழதுவாம் - பாவகத்தைப் பாவித்த றனென்னிற் பாவகமாந் தன்னருளாற், பாவிப்பது பாயில் பாழ்." எனவும் வருவனவற்றாற் காண்க. (10)

---

# பொருள் வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நித்தியமாய், நின்மலமாய், நிட்களமாய், நிராமயமாய்,
நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய்த், தூரமுமாய்ச், சமீபமுமாய்த், துரியநிறை
சுடராய், எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம்.

(இ - ள்) நித்தியமாய் - தோற்ற மின்மையாய், நிர்மலமாய் - (அநாதியிலேயே படிகம்போல) அழுக்கின்மையாய், நிட்களமாய் - உருவ மின்மையாய், நிராமயமாய் - நோயின்மையாய், நீங்காச் சுத்தமுமாய் - தற் கிழமையாயுள்ள தூய்மையாய், தூரமுமாய் - அன்பிலார்க்குச் சேய்மையாய், சமீபமுமாய் - அன்புடையார்க்கு அண்மையாய், துரிய நிறை சுடராய் -

துரியத்திற் சுடர்ப் பிழம்பாய், எல்லாம் வைத்திருந்த தாரகமாய் - எவற்றினுக்கும் நிலைக்களமாய், ஆனந்த மயமாகி - இன்ப வுருவாகி, மனவாக் கெட்டா - மனமொழிகட்கு எட்டாத, சித்து உருவாய் - அறிவுருவாய், நின்ற ஒன்றை - நிலைபெற்ற வொருமுதலை, சுக ஆரம்பப் பெருவெளியை - ஆனந்தத் தொடக்கத்தினையுடைய பேராகாயத்தினை, சிந்தை செய்வாம் - (யாம்) மனத்தாற் பரவுவாம், என்க.

(வி - ரை) 'நித்தியமாய்' என்றதனால், முதல்வனனவன் க்ஷணிகனென்னும் பவுத்தன் முதலியோர் மத மறுக்கப்பட்டன. என்னை? க்ஷணிகமாயிருப்பதொன்றுக்குப் பிரபஞ்சகிருத்திய நடத்தல் கூடாமையின், 'நின்மலமாய்' என்றதனால், அநாதிமலமுத்தனெனத் தெரிவித்தவாறாயிற்று. 'நிஷ்களம்' என்பது சொரூப இலக்கணத்தினைக் குறித்தது. 'நிராமயம்' என்பது அருட்டிருமேனி வாய்ந்தவனென்பது. 'நீங்காச் சுத்தமுமாய்' என்றது தூயவுடம்பினனாதலைக் காட்டியது. 'தூரமுமாய்' என்றதனால் சிவாகமஞ் சொன்ன வொழுங்கிலே நின்று அனுபவியாதவர்கள் கூடுவதற் கரிதென்றும், 'சமீபமுமாய்' என்றதனால் சிவாகமஞ் சொன்ன ஒழுங்கிலே நின்று அனுட்டித்தவர்கள் கூடுவதற் கெளிதென்றுஞ் சொன்னதாயிற்று. சித்தியார்: "இறைவனா வான்ஞான மெல்லா மெல்லா, முதன்மையனுக் கிரகமெலா மியல்புடையா னியம்பு, மறையாக மங்களினா லறிவெல்லாந் தோற்றும், மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கு, முறைமையினா லின்ப துன்பங் கொடுத்த லாலே, முதன்மையெலா மறிது முயங் கிரண்டுபோகத், திறமதனால் வினையறுக்குஞ் செய்தியாலே, சேருமனுக் கிரகமெலாங் காணுதுநாஞ் சிவற்கே" என்றதனாற் காண்க. 'சுடராய்' என்றது ஆன்மாக்களுடைய இச்சா ஞானக் கிரியைகளை மறைக்கப்பட்ட பேரந்தகாரமாகிய ஆணவமலத்தினை நீக்குகையால். 'தாரகமாய்' என்றதனால் வியாபகனெனலாயிற்று. 'ஆனந்தமயம்' என்றது சுகசொரூபத்தினை. மனத்தாற் குறித்துணரப் படுவனவும், மொழியா லுரைக்கப்படுவனவும் அழிவெய்துமாகலின் 'மனவாக்கெட்டா' என்றார். 'சித்துரு' என்றது சேதனனாயினானை. 'ஒன்றை' என்றதனால், தேர் முதலானவை ஒருவனால் முடியாமையின் பிரபஞ்சமும் அநேக கருத்தாக்களா லுண்டாகவேண்டு மென்னும் அநேக சுரவாதி மதமும், ஓரான்மா முத்தனானால் அவனிடத்திலே கர்த்தா தன் அதிகாரத்தை வைத்துத் தான் பரமற்றிருப்பன், அவனு மப்படி யொருவனிடத்தில் வைத்துப் பரமற்றிருப்பன் என்னும் பிரவாகேசுரவாதிமதமு மறுக்கப்பட்டன. 'வெளி' என்பதின்னதென முன்னர்க் குறிக்கப்பட்டிருக்கிறது. ஈண்டு 'சிந்தை' என்றது மனம். (1)

யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி,
யாதின் பாலும்



பேதமற நின்றுயிருக் குயிராகி, அன்பருக்கே
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம்.

(இ - ள்) மனம் - மனமானது, யாது - எப்பொருளை, நினையும் - நினைக்குமோ, அந்த - அந்த, நினைவுக்கு - எண்ணத்திற்கு, நினைவு ஆகி - எண்ணமாகி; யாதின்பாலும் - எந்தப் பொருளினிடத்தும், பேதம் அற - வேறுபாடு இல்லாமல், நின்று - ஒன்றி நின்று, உயிருக்கு உயிர் ஆகி - ஆன்மாவிற்கு உள்ளீடாகிய பரமான்மாவாகி; அன்பருக்கு - தன்னிடத்தில் அன்பையுடைய அடியார்களுக்கு, கோது இல் - குற்ற மில்லாத, பேரானந்த - பேரின்பத்தைத் தருகின்ற, அமுது - அமுதானது, ஊற்று அரும்பி - ஊற்றாகச் சுரந்து, குணம் - குணம், குறி - குறி, ஒன்று அற - சிறிதும் இல்லாதொழிய, தன்னைக் கொடுத்துக் காட்டும் - தன்னைக் கொடுத்து விளங்கும், தீது இல் - தீது இல்லாத, பராபரம் ஆன - பராபரமாகிய, சித்தாந்தப் பேரொளியை - சித்தாந்த ஒளிப்பிழம்பினை, சிந்தை செய்வாம் - (யாம்) மனத்தாற் பரவுமாம், என்க.

(வி - ரை) அந்தக்கரணங்களி லொன்றாகிய மனமானது நினைக்குங் கருவியாகலின், 'யாதுமன நினையும்' என்றார். மலத்துட் கிடந்த உயிர்கட்குத் தன்பேரருட் டிறத்தால் மாயையினின்றுங் கருவிகளைக் காரியப் படுத்திக் கொடுத்து அவற்றிற் குரிய அறிவை விளக்கிக் கண்ணருக்கன் போல அபேதமாக நிற்றலின், 'நினைவுக்கு நினைவாகி யாதின்பாலும் பேதமற நின்று' எனவும், ஆன்மபோதத்தின் கண்ணொளிபோல் பேதாபேதமாக நிற்றலின், 'உயிர்க் குயிராகி' எனவுங் கூறினர். தன்னை யன்பா னினையவல்லாரிடத்திலேயே தன் பேரின்பத்தினை வெளிப்படுத்துவதாகலின், 'அன்பருக்கே பேரா னந்தக் கோதிலமுதூற் றரும்பி' என்றனர். திருவாசகம்: "தேவதேவன் மெய்ச்சேவகன்றென் பெருந்துறை நாயகன், மூவராலு மறியொணு முதலாய வானந்த மூர்த்தியான், யாவராயினு மன்ப ரன்றி யறியொணுமலர்ச் சோதியான், தூய மாமலர்ச் சேவடிக்க ணஞ்சென்னிமன்னிச் சுடருமே." எனவும், தேவாரம்: "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்குநிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன், பொக்கமிக்கவர் பூவு நீருங்கண்டு, நக்கு நிற்ப னவர்தமை நாடியே." எனவும் வருவனவற்றாற் காண்க. குணங்குறிகளையுடைய வரம்புபட்ட பொருளல்ல வென்பார், 'குணங்குறியொன்றற' என்றார். முக்கூற்றுப் புறச் சமயங்களும் புரைநெறிகளைப் போதிக்கச் சித்தாந்த மொன்றுமே செந்நெறியினை யறிவிப்பதாகலின் 'தீதில்' எனச் சிறப்பித்

தார். சித்தாந்தவுண்மை கண்டாரிடத்திலேயே பிரகாசிப்பனுகலின் 'சித்தாந்தப் பேரொளி' என்றூர். 'பராபரம்' என்றது அம்மையப்பனே. பரா+பரம்=பராபரம். (2)

பெருவெளியாய், ஐம்பூதம் பிறப்பிடமாய்ப், பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய், மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலுந்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினையாஞ்
சிந்தை செய்வாம்.

(இ - ள்) பெரு வெளியாய் - பரமாகாயமாய்; ஐம்பூதம் - ஐம்பெரும் பூதங்கட்கு, பிறப்பு இடமாய் - நிமித்தகாரணப் பிறப்பிடமாய்; பேசாத - சொல்லுதற்கரிய, பெரிய - பெரிதான, மோனம் வரும் - மௌன நிலையின்கண் வெளிப்படும், இடமாய் - இடமாய்; மனமாதிக்கு எட்டாத - மனவாக்குகளாற் குறித்துரைக்கப்படாத, பேரின்பமாய் - பேரின்பத்த தாய்; ஞானகுரு - ஞானசாரியர், அருளால் காட்டிடவும் - பெருங் கருணை யாற் காட்டிடவும், அன்பரைக் கோத்து - அன்பர்களோ டுறவுகொண்டு, அற - அவர் சீவபேதங் கெட, விழுங்கிக்கொண்டு - உட்கொண்டு, அப்பா லும் - அதன்மேலும், தெரிவு அரிதாய் கலந்தது - அறிதற்கரிதாகிக் கலந் தது, எந்தப் பொருள் - எந்த வஸ்து, அந்தப் பொருளினை - அந்த வஸ்து வினை, யாம் சிந்தை செய்வாம் - நாம் மனத்தாற் பரவுவாம், என்க.

(வி - ரை) (பரமாகாச) பரமவியோம ரூபியாய் நிற்றலின், 'பெரு வெளியாய்' நின்றனர் என்றூர். சிவபுராணம்: "த்வமக்ஷரம்வ்யோமம தச்சோதிர்நிரஞ்சநம்" என்றதனுற் காண்க. முதல்வனுடைய சமவேத சிற்சத்தி பரிக்கிரக மகாமாயா மாயாசத்தியைப் பதிந்தபொழுது பிர பஞ்ச முதிக்குமாகலின் 'பூதம் பிறப்பிடமாய்' என்றனர். பிரபஞ்ச உற் பத்திக்கு நிலைக்களமாயது, மாயையே யாகலின், ஈண்டு முதல்வனைக் குறித்த தென்னையெனின்? கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் பங்கய மென்பதனு லறிக. இதனுல் இறைவன் பூதமாகவும் பிறவாகவுந் திரிவான் என்னும் பரிணுமவாதியரை மறுத்தவாருயிற்று. திரிந்தாற் ருேட மென்னையோ வெனின், இயற்கையிலேயே பாசமில்லாத பொருள் இயற்கையிலேயே பாசத்தினையுடைய பொருளாகத் திரிதல் யாங்ஙனம்? பேசாத பெரிய மோனமாவது - தத்துவசேஷ்டைகளை விடுத்துச் சும்மா விருத்தல்; அங்ஙனஞ் சும்மாயிருத்தலினுலேயே சுகம் விளையுமாகலின், 'வருமிடமாய்' என்றனர். கந்தாலங்காரம்: "தடுங்கோண் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்று, மிடுங்கோ ளிருந்த படியிருங்

கோளெழு பாருமுய்யக், கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்க துளைத்தவைவேல், விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப் படுமே." என்றதனாற் காண்க. உண்மையினைத் தெரிவிப்பவனே ஞானா சிரியனாகலின் 'ஞானக்குருவருளாற் காட்டிடவும்' என்றார். ஒழிவி லொடுக்கம்: "பொய் போகப்போகப் பொதிந்திப் பொருடானுஞ், சையோக போக தரங்கத்தினையும், பரிபாகங் கண்டு பதையாமற் பார்க் குங், குருவேகாண் ஞானக் குரு." எனவும், மெய்ம்மொழி: "பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனைக் கூடிச், செறிந்திடா வாறு போலத் தேகமுந் தேகிதானும், பிறந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததி னிற்பினுங்கேள், செறிந்திடா வாறு செய்யுந் தேசிகன் றேசி கன்றான்." எனவும் வருவனவற்றாற் காண்க. அன்பரை அவர்தஞ் செருக்கறுத்துச் சிவமாக்கிப் பின்னுந் தன்னிலையறியாவாறு கலந்திருப்பனாகலின், 'அன் பரைக் கோத்தற விழுங்கிக்கொண் டப்பாலுந் தெரிவரிதாய்க் கலந்து' என்றார். கந்தரனுபூதி: "ஆனாவமுதே யயில்வே லரசே, ஞானாகரனே நவிலத் தகுமோ, யானா கியவென்னைவிழுங் கிவெறுந், தானாய் நிலைநின் றதுதற் பரமே." என்றதனாற் காண்க. (3)

இகபரமு முயிர்க்குயிரை, யானெனதற் றவருறவை,
எந்த நாளுஞ்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்,
துரிய வாழ்வை,
அகமகிழ வருந்தேனை முக்கனியைக், கற்கண்டை,
அமிர்தை நாடி,
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண்
முகிழ்த்து நிற்பாம்.

(இ-ள்) இகபரமும் - இம்மை மறுமை யிரண்டிலும், உயிர்க்கு உயிரை - உயிர்க்குறு துணையை; யான் எனது அற்றவர் - அகங்காரம் மமகாரங்களை யொழித்தவர்க்கு, உறவை - உறவாயிருப்பதை; எந்த நாளும் - எக்காலமும், சுகபரிபூரணமான - இன்பநிறைவாகிய, நிராலம்ப கோசரத்தை - பற்றுக்கோ டில்லாததாய்த் தோன்றுவதை; துரிய வாழ்வை - துரியத்தில் வாழுவதை; அகம் மகிழ வரும் தேனை - மனமகி ழும்படி வருகின்ற தேனை; முக்கனியை - முக்கனிபோ னினித்திருப் பதை; கற்கண்டை - கற்கண்டுபோலச் சுவையுடைய பொருளை; அமிர்தை - அமிர்தத்தை, நாடி - மனதினால் தியானித்து, இருவிழி - இரண்டு கண்களும், மொகு மொகு என - மொகுமொகென்று, நீர் முத்து இறைப்ப - கண்ணீர்த்துளிகளாகிய முத்துக்களை யுதிர்க்க, கரமலர்கள் - கைம்மலர்களை, முகிழ்த்து - குவித்து, நிற்பாம் - நிற்போம் (யாம்), என்க.

(வி - ரை) ஆன்மாக்களுக்கு அருளும் மலமும் அனாதியே கூடிநிற்பது முறைமை யாகையாலும், அந்த மல மேலிட்டபொழுது அருள் மறைந்து நின்று இகத்தில் காரியப்படுத்துகையாலும், அந்த மலப் பாகம் வந்த போது பரத்தில் அவ்வருள் பிரகாசித்து நிற்கையாலும், பெத்தமுத்தி யிரண்டிலும் ஆன்மாக்களை இங்ஙனம் காரியப்படுத்துவான் முதல்வனாக லின் 'இகபரமு முயிர்க்குயிரை' என்றனர். சிவப்பிரகாசம்: "பன்னி றங் கவருந் தொன்மை படிகநீ டொளியும் பன்மை, மன்னிலங் கியல்புந் தந்த வளரொளி போல வையந், தன்னகம் பயிலு நற்சிற் சடங்கடன் றன்மை தாவா, நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பார்." என்றதனாற் காண்க. 'யான்' என்பது அகப்பற்று; இது நான் செய் தேன், நான் படித்தேன், நான் பெரியன் என்பனவாக வரும். 'எனது' என்பது புறப்பற்று; இது என் மனை, என் புதல்வர், என்பொருள் என் பனவாக வரும். இவ்விருவகைப் பற்றுக்களையும் விட்ட பெரியர்கட்கே முதல்வன் துணையாவனாகலின் 'யானெனதற் றவருறவை' என்றனர். திருக்குறள்: "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்." எ - ம், "இயல்பாகு நோன்பிற் கொன்றின்மை யுடை யாமை, மயலாகு மற்றும் பெயர்த்து." எ - ம், மற்றும் பரிபூரணானந்த போதம் 4 - ம் செய்யுளுரையிற் காட்டியுள்ள பல உதாரணங்களாலு மறிக. பல்வேறு சுவைகளை யுடையதேன், பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம், கற்கண்டு, அமிர்தம் ஆகிய சுவைப்பொருளெல்லாம் ஒன்றாகக் கலந்தவழி இவ்வியல்பிற்றெனப் பிறித்தறியவாராமைபோல, முதல்வனும் உயிரி னங்ஙனங் கலந்தவழி இவ்வியல்பிற்றெனப் பிறித்தறிய வாராது ஆனந்த சொரூபமாய் நிற்பன். ஆகலின், அவ் வானந்தத்தை நாடவேண்டு மென் பார், 'அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை யமிர்தைநாடி' என்றார். சிவஞானசித்தியார்: "இரும்பைக்காந்தம்வலித்தாற் போலிசைந் தங் குயிரை, பெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி, யரும் பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை, யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி, மேவளித்துத்தானெல்லாம் வேதிப்பா னாகிக், கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக், கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே." என்றதனாற் காண்க. 'மொகுமொகு' நிகழ்ச்சிக் குறிப்பு; சமபூமியில் மிகுந்த புனல் முழைவழி மெல்லென வோடுங்கா லிக்குறிப்பு நிகழுமாம். (4)

சா திி-குலம்-பிறப்பிறப்புப்-பந்தமுத்தி-அருவுருவத்
தன்மை-நாமம்
ஏதுமின்றி, எப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யுஞ்

சோதியை, மாத் தூவெளியை, மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்,
தீதில்பர மாம்பொருளைத், திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம்.

(இ - ள்) சாதி - சாதியும், குலம் - குலமும், பிறப்பு இறப்பு - உற்பத்தி நாசங்களும், பந்த முத்தி - பந்தமோட்சங்களும், அரு உருவத் தன்மை - அருவமாந்தன்மை உருவமாந்தன்மைகளும், நாமம் - பேரும், (ஆகிய) ஏதும் இன்றி - ஏதுமில்லாமல், எப்பொருட்கும் - எந்தப் பொருளுக்கும், எவ்விடத்தும் - எவ்விடத்திலும், பிரிவு அற - நீக்க மின்றி, நின்று - நிலைபெற்று, இயக்கம் செய்யும் - இயங்குகின்ற, சோதியை - ஒளியை; மா - மிகவும், தூ - பரிசுத்தமான, வெளியை - ஆகாயத்தை; மனது - மனக்கலம், அவிழ - விரியும்படி, நிறைவு - நிறைந்த, துரிய வாழ்வை - துரிய வாழ்வினை; தீது - குற்றம், இல் - இல்லாத, பரம் - மேலாகிய, பொருளை - வஸ்துவை; திருவருளே - திருவருளையே, நினைவு ஆக - எண்ணுதற்குக் கருவியாகக்கொண்டு, சிந்தை செய்வாம் - சிந்தனை பண்ணுவாம், என்க.

(வி - ரை) சாதிமுதல் நாமமீறாய்க் கிடந்தன வொன்றாலும் வேறுபடாதிருத்தலின் 'சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத் தன்மை நாமம் ஏதுமின்றி' என்றனர். தேவாரம்: "மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லா, னொப்புடையனல்ல னொருவனல்ல னோரூரனல்ல னுவமையில்லி, யப்படிய னவ்வுருவ னவ்வண்ணத்தனவனருளே கண்ணாகக் காண்பதல்லா, லிப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே." எ - ம், சிவஞான சித்தியார்: "பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லா, னந்தமு மாதி யில்லா னளப்பிலனாத லாலே, யெந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி, வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே." என்பனவற்றாற் காண்க. எவ்விடத்துமுள்ள எப்பொருளிடத்தும் உடலு முயிரும்போலவும், பாலுநீரும் போலவும், பரிதியு மதியும் போலவும் வேற்றுமையின்றி அத்துவிதகலப்பா லொன்றாய் நிற்றலின் 'எப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ் செய்யும்' என்றனர். திருவாசகம்: "அதுபழச் சுவையென வமுதென வறிதற் கரிதென வெளிதென வமரரு மறியா, ரிதுவவன் றிருவுரு விவனவனெனவே, யெங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும், மதுவளர் பொழிற் றிருவுத்தர கோச, மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா! எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போ, மெம்பெரு மான் பள்ளி யெழுந்தரு ளாயே!" எ - ம், திருக்களிற்றுப்படியார்: "ஈறாகி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய், மாறாத வெண்வகையாய் மற்றிவற்

றின் - வேறு, யுடனு யிருக்கு முருவுடைமை யென்றுங், கடனு யிருக்கின் ருர் காண்." என்பனவற்ருற் காண்க. சர்வவேத வேதாந்தங்களாலும் வேத்யராயுள்ளவர் சிவபெருமானே யென்று வெளிப்படுகின்றமையின் 'துரியவாழ்வை' என்றனர். சூவேதாசூவதாம்: "வேதைச்சஸர் வைரஹ மேவவேத்யோ வேதாந்தக்ருத் வேதவிதே வவாஹம்" என்றதனுற் காண்க. முதல்வனே, அனுபவமுடைய தேசிகர் அருளிச்செய்யு முபதேசத் தால் கேட்டுச் சிந்திக்கவேண்டு மாகலின் 'திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்' என்றனர். (5)

இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லறியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க!
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக! என்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யனுதினமும்
வழுத்தல் செய்வாம்.

(இ - ள்) உலகம் - இவ்வுலகமானது, இந்திரசாலம் (என) - இந்திர சாலம் போலவும், கனவு (என) - கனவுபோலவும், கானலின் நீர் என - கானற்சலத்தைப் போலவும், எமக்குத் தோன்ற - எமக்குத் தோன்றும்படி யாக, சந்ததமும் - சதாகாலமும், சிற்பரத்தால் - ஞானபட்சத்தினுல், அறி யாத தற்பரத்தை - நாசரகிதமான தற்பரப்பொருளே, சார்ந்து வாழ்க - பொருந்தி வாழக்கடவை; புந்தி மகிழ்உற - மனமகிழுமாறு, நாளும் - எந் நாளும், தடைஅற - தடையில்லாமல், ஆனந்தவெள்ளம் - இன்பப் பெருக் கானது, பொலிக என்று - பெருக என்று, வந்தருளும் - வந்து கிருபை செய்கின்ற, குரு மௌனி - மௌன குருவினது, மலர் தாளை - தாமரை மலர்போன்ற திருவடிகளை, அனுதினமும் - நாள்தோறும், வழுத்தல் செய் வாம் - துதி செய்குவாம் (யாம்), என்க.

(வி - ரை) பிரபஞ்சமானது நிலையுதலின்றி யழிதற்றன்மை யுடைய தாகலின், இந்திரசாலம், கனவு, கானனீர் இவைகளை உவமையாகக் காட் டினர். சிவஞானபோதம்: "அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா, மசத்தாகு மெய்கண்டா னுயி - னசத்தலாய், நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு, மோரினவை யின்ருமா ரெுப்பு." எ - ம், சிவஞானசித்தியார்: "மண்டலனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வு, மெண்டரு பூத பேத யோனிக ளியாவுமெல்லாங், கண்டவிந் திரமா சாலங் கனுக்கழு திரதங் காட்டி, புண்டுபோ லின்ரும் பண்பி லுலகினை யசத்து மென்பர்." எ - ம், வருவனவற்ருற் காண்க. இந்திரசாலம் தோன்றும்பொழுதே யில்லையாய் வேறுதற்கும், கனு முற்றும் நிகழ்ச்சியின்றி யிடையில் மாறுத

லுக்கும், கானனீர் ஒரு காரணங் காட்டி யழிவெய்தலுக்கும் உவமையாயின. இவை யுலகம் நிலையாமை மாத்திரைக்கேகாட்டி, உலகம் முக்காலத்து மித்தை யென்பாரை மறுத்தவாறாயிற்று. சிவத்தினையடையும் வாழ்வினைக் காட்டிலும் வேறு பெறும் பேறு கிடையாதாகலின், 'சந்ததமும் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச் சார்ந்துவாழ்க!' என்றனர். அச்சிவத்தினை யடைவதினால் ஆனந்தாதீதம் கைவருமாகலான், 'புந்தி மகிழுற நாளுந், தடையற வானந்த வெள்ளம் பொலிக!' என்றனர். குருமௌனியாவார் அறுபான் மும்மை நாயன்மார்களில் ஒருவராய், திருமூலர் மரபினில் வந்து தமக்குச் சிவஞானசித்தியை யுபதேசித்த தேசிகர். இவ் வுண்மையினை மேலே காட்டுதும். (6)

பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்,
போத மாகித்,
தெருளாகிக், கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி,
யருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணவா
னந்த மாகி,
இருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம்.

(இ - ள்) பொருள் ஆக - பொருட்டன்மை யுடையனவாக, கண்ட பொருள் எவைக்கும் - காணப்படுவனவற்றுக்கெல்லாம், முதல் பொருள் ஆகி - இன்றியமையா முதற்பொருளாகி; போதம் ஆகி - அறிவாகி; தெருள் ஆகி - தெளிவாகி; கருதும் அன்பர் - நினைக்கின்ற அன்பருடைய, மிடி தீர - வறுமை நீங்க, பருக வந்த - அனுபவிக்க வந்த, செழுந்தேன் ஆகி - செழுமையான தேனாகி; அருள் ஆனோர்க்கு - தன்னருள் பெற்ற அன்பருக்கு, அகம் புறம் என்று உன்னாத - உள்ளொன்றும் வெளியென்றும் நினையாமைக்குக் காரணமாகிய, பூரண ஆனந்தம் ஆகி - நிறைவாகிய சுகரூபமாகி; இருள் தீர - அஞ்ஞான இருள் நீங்கும்படி, விளங்கு பொருள் யாது - பிரகாசிக்கின்ற பொருள் எது, அந்தப் பொருளினை - அந்தப் பொருளை, யாம் இறைஞ்சி நிற்பாம் - நாம் வணங்கி நிற்போம், என்க.

(வி - ரை) ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பொருள்கள் எல்லாவற்றினையும் தனது வியாபகத்தில் வைத்துப் படைத்து, நிறுத்தி, இச்சா ஞானக் கிரியைகளுணராதவண்ணம் அப்பொருளனைத்தும் மூல மலத்துடனே அடங்கி யிருக்கும்படி அழித்தலைச் செய்யுந் தான் என்று ஞான்று நீங்காததோர் புகலிடமாய் முதன்மை பெற்றிருத்தலின், 'பொருளாகக் கண்டபொருளெவைக்குமுதற் பொருளாகி' என்றனர். **திருவருட் பயன்:** "ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப், போக்குமவன் போகாப் புகல்." என்றதனாற் காண்க. தமக்கெனச் சுதந்தர மில்லாத பசுக்களை

யும், சிறிதும் சுதந்தரமில்லாத பாசங்களையும் இயக்கி வழிப்படுத்தற்குரிய சர்வ சுதந்தரமுடைய அறிவுசொரூபியென்பார் 'போதமாகி' என்றனர். முதற்பொருளாகி, போதமாகி, ஆனந்தமாகி யென்றதனால் சச்சிதானந்த சொரூப இலக்கணங் கூறியதாயிற்று. இங்கு 'மிடி' என்றது திருவருட் பெருஞ் செல்வத்தினை யனுபவியாது ஆணவமலத்தாற் பீடிக்கப்பட்ட வறுமை. அருள்வழி நின்று வழுத்து மன்பர்கட்கு இனிய தேறல் போன்று விளங்குதலின், 'கருது மன்பர் மிடிதீரப் பருகவந்த செழுந் தேனாகி' என்றும், முத்தியெய்தியவர்க்கு இன்பநிறைவாக விளங்குதலின் 'அருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணவா னந்தமாகி' என்றுங் கூறினார். (7)

அருமறையின் சிரப்பொருளாய், விண்ணவர்மா முனிவர்சித்த
ராதியா னோர்
தெரிவரிய பூரணமாய்க், காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்,
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்
கலந்தெந் நாளுந்
துரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம்.

(இ - ள்) அருமறையின் - அரிய வேதத்தின், சிரப்பொருளாய் - முடிமீது விளங்கும் பொருளாகி ; விண்ணவர் - தேவர்கள், மா முனிவர் - பெருமை பொருந்திய முனிவர்கள், சித்தர் ஆதி ஆனோர் - சித்தர் முதலானவர்களால், தெரிவு அரிய - தெரிந்துகொள்ளுதல் அருமையாகிய, பூரணம் ஆய் - நிறைவாகி ; காரணம் - தனக்கு ஆதியாகிய பொருளையும், கற்பனை - கற்பனையையும், கடந்த - கடந்துநின்ற, செல்வம் ஆகி - ஐசுவரியமாகி ; கருது அரிய - நினைத்தற்கரிய, மலரின் மணம் (போல்) - மலரின் மணம்போலவும், எள்ளில் எண்ணெய் (போல்) - எள்ளில் எண்ணெய்போலவும், உடல் உயிர்போல் - உடலில் உயிர்போலவும், கலந்து - கலந்துநின்று, எந்நாளும் - எக்காலத்திலும், துரிய நடுவூடு இருந்த - துரிய பதத்தின் இடையிலிருக்கின்ற, பெரிய பொருள் யாது - பெரிய வஸ்து எது ?, அதனை - அந்த வஸ்துவை, தொழுதல் செய்வாம் - வணங்குவாம் (யாம்), என்க.

(வி - ரை) சகல வேதங்களிலேயும் பிரதிபாதிக்கப்படும்பொருள் சிவபெருமானே யாதலின் 'அருமறையின் சிரப்பொருளாய்' என்றனர். காளிகாண்டத்தில் இருக்குவேதங் கூறுதலை : "கத் வாராணுமஸொராஜா, ப்ராஹ்மணாஹ விர்குஜாம், விஸ்வதிகோமஹேஸஸ்த்வாம், ஜ்யாயமாநம் ப்ருகஸ்யதி" எ - ம், யஜுர்வேதங் கூறுதலை : "யஸ்யாம் ஸஜை: வீர பத்ர ஸரபாத்யைர் கணேஸ்வரை: । ஸாவிதாஸக்ரதைத்யாரி விபுதஸ்

ஸஹிகாரணம் ॥ ” எ - ம், சாமவேதங் கூறுதலே : “ யதாஜ்ஞாதிஷிதப் தேவைர்யுவஸ்ஜ் ஜநஸம்ஸதி । ச்சைத்துர்நைவா பச்சக்யம் ஸஹோதுர் ஜசதம்ஸிவ ॥ ” எனவும், அதர்வணவேதம் கூறுதலே: “ சர்மவளநுஜாசயோம வேஷ்டயிஷ்யந்தயத் யமிததாஸம் கும்விநாமுக்திர் யுஷ்மத் ப்ராட்யாநசந்யத: ” எ - ம், காஞ்சிப் புராணம் : “ எச்சன் றனக்குமிமையோர்க்குமெய் வேதியர்க்கு, மச்சங்கர னேயாசன் விசுவாதி கன்சீர், நச்சுமுனை யின்றருட் பார்வையி னேக்கி நல்கு, மெய்ச்சித் தருவன் றறியென்ற திருக்குவேதம். ” எ - ம், “ தன்கூற்றில் வருங் கணநாதர் தடுக்கலாற்ருக் கொன்கூர் சரபாதியரால் வயங்கூறும் விண்ணோர், வன்காழ்வலிசென்றவன் யாரவனேமதிக்கு, நன்காரணமென்று நவின்று றநித்தவேதம். ” எ - ம், “ தோலாவவை நாப்பணடைந்து துரும்புநட்டு, மாலாதி விண்ணோர் வலிமுற்றவு மாற்றவல்லோ, ஞாலாலமுண்டோ னவனே யகிலங்களுக்கு, மேலாய வேதுவென விண்டது சாமவேதம். ” எ - ம், “ வளிதாழ் விசும்பைப் பசுந்தோலிற் சுருட்டவல்லோ, ருளரேற் புடைவீங்கி, யெழுந்திரண்டுருண்ட, விளவெம்முலை பங்கனை யன்றியு மின்பமுத்தி யளவிற் பெறலா மெனவிண்ட ததர்வணவேதம். ” எ - ம் வருவனவற்ருற் காண்க. பசு பாசங்க ளனைத்தும் வியாப்பியமாய் உள்ளடங்கி நிற்க, இறைவன் வியாபகமாய் எல்லாவற்றிற்கு மேற்பட்டிருத்தலின் அவ்விறைவனை உணர்தல் செல்லா தென்பார், ‘ தெரிவரிய பூரணமாய் ’ என்றனர். புறச் சமயிகளாவார் கடவுளுக்கும் உலகுயிர்க்கு முள்ள இயைபு : பேதம், அபேதம், பேதாபேதம் எனும் மூன்றனுளடங்கும். சிலர் பேதமும், சிலர் அபேதமும், சிலர் பேதாபேதமுங் கூறி வேதாகமங்களுடன் முரண்படுவர். வைதிகசைவர் மூன்றினையு மொருங்கு கூறி மகிழ்வர் ஆகலின், ‘ கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்கலந்து ” என்றனர். இவற்றுள் உடலுயிரென்றது கலப்பினல் உடலுயிர்போல் அவ்வுயிர்களேயாய் நின்ற பேதத்தன்மையினை விளக்கியது. சிவஞானபோதம் : “ கட்டுமுறுப் புங் கரணமுங் கொண்டுள்ள, மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங் - கொட்டி, யவனுள மாகில்லா னுளமவ னுமாட்டா, தவனுளமா யல்லனுமாமாங்கு. ” என்றதனுலறிக. ‘ எள்ளிலெண்ணெய் ’ என்பது பொருட்டன்மையால் கண்ணினருக்கன்போல அபேதத்தன்மையினை விளக்கியது. சிவஞானபோதம் : “ ஒன்றென்ற தொன்றேகா ணென்றே பதிபசுவா, மொன்றென்றநீ பாசத்தோடுளகா - ணென்றின்றே, லக்கரங்க ளின்றுமகரவுயி ரின்றே, லிக்கிரமத் தென்னு மிருக்கு என்றதனு லறிக. மலரின் மணமென்பது உயிருக்குயிராதற் றன்மையாற் கண்ணொளியி ஞன்மபோதம் போற் பேதாபேதத் தன்மையினை விளக்கியது. சிவஞானபோதம் : “ பண்ணையு மோசையும் போலப் பழமதுவு, மெண்ணுஞ் சுவையும்போலெங்குமா - மண்ணரு, ளத்துவித மாத லருமறைக ளொன்றென்னு, தத்துவித மென்றறையு மாங்கு. ” என்றதனு லறிக. இதனுல் பொன்னும் பணி

யும் போல பேதமும், இருளும் வெளியும்போல அபேதமும், சொல்லும் பொருளும்போல பேதாபேதமு மென்பார் மத மறுக்கப்பட்டவாறாயிற்று. என்னை? பொன்னிலே நின்றும் பணிபலவாறாற்போல முதல்வனிடத்தி னின்றும் பிரபஞ்சமுண்டா மெனின், முதல்வனோ சித்தா யிருப்பானொரு வன், பிரபஞ்சமோ சடமாயிருப்பதொன்று; ஆகலின், முதல்வனிடத்துப் பிரபஞ்சந் தோன்றாது. இருளும் வெளியும்போல முதல்வனும் பிரபஞ்ச மும் தன்னில் வேறாயிருக்குமெனின், பிரபஞ்சங் காரியப்படு மிடத்து முதல்வனாற் காரியப்படவேண்டுகையால் வேறு சொல வொண்ணாது. சொற்பொருள்போல் முதல்வனும் பிரபஞ்சமுந் தன்னி லொன்றுமா யிரண்டுமா யிருக்குமெனின், சித்தாயுள்ள முதல்வனிடத்துச் சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றா தாகையால் ஒன்றென வொண்ணாது. சடமாயுள்ள பிரபஞ்சம் முதல்வனாலே காரியப்பட வேண்டுகையால் வேறென வொண்ணாது. (8)

விண்ணாதி பூதமெலாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய், ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக்
கடலாய், வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளும்
மிறையே! உன்றன்
றண்ணாருஞ் சாந்தவரு டனைநினைந்து கரமலர்க
டலைமேற் கொள்வாம்.

(இ - ள்) விண்ணாதி பூதம் எல்லாம் - ஆகாயம் முதலான பூதங்களை யெல்லாம், தன் அகத்தில் அடக்கி - தனது சந்நிதியி லொடுக்கி, வெறு வெளியாய் - வெட்டவெளியாகி; ஞானக்கண் ஆர - ஞானக்கண் நிறையும் படி, கண்ட அன்பர் - தரிசித்த அன்பர்களுடைய, கண்ணூடு - ஞானக் கண்ணினிடத்து, ஆனந்தக் கடலாய் - இன்பசாகரமாகி; வேறு ஒன்று எண்ணாதபடிக்கு இரங்கி - (அந்த அன்பர்கள்) மற்றொன்றையும் நினை யாதவண்ணம் (அவர்களிடத்தில்) மனமிரங்கி, தானாகச் செய்தருளும் இறையே - தானாகச் செய்தருளாநின்ற தலைவனே!, உன்றன் - உனது, தண் ஆரும் - குளிர்ச்சி நிறைந்த, சாந்த அருள்தனை நினைந்து - சாந்தரூப மான கருணையை யெண்ணி, கரமலர்கள் - கைமலர்களை, தலைமேல் கொள் வாம் - சிரத்தின்மீது கொள்வோம் (யாம்), என்க.

(வி - ரை) ஆகாயமுதலிய பூதங்கள் தன்மாத்திரைகளி லொடுங்க, தன்மாத்திரைகள் அகங்காரத்தி லொடுங்க, அகங்காரம் புத்தியிலொடுங்க, புத்தி குணத்தி லொடுங்க, குணம் அசுத்தமாயையின் தூலபரிணாம மான பிருகிருதியி லொடுங்குதலின் ‘விண்ணாதி பூதமெலா மடக்கி’ என்றனர். ‘தன்னகத்தில்’ என்றதனால் இக் காரியப்பாடு சிவசத்தி

சங்கற்பரூபசந்நிதியை யின்றி யமையா தெனலாகி, அசித்தாகிய பூதாதி சித்தாகிய பிரமத்தி லொடுங்குமென்பார் மத மறுத்தவாறுயிற்று. சிவ ஞானச்செய்தி யுடையவர்களே மலமற்று எல்லாஞ் சிவமாகக் கண்டு அன்புடைய அடியாராக விளங்குவாராகலின், 'ஞானக் கண்ணாக் கண்ட அன்பர்' என்றனர். சிவஞானசித்தியார்: "செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத், திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட், டங்க வர்தந் திருவேட மாலயங்க ளெல்லா, மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி, யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ, மியாவர்க்கு மேலானோ மென்றிறுமாப் பெய்தித், திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று, திரிந்திடுவர் சிவஞான செய்தியுடை யோரே." என்றதனாற் காண்க. பரிபாக மடைந்த அத்தகைய அடியார்கட்கு, மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல மானிடராய்ச் சகளீகரித் தெழுந்தருளித் தீட்சை யாதி செய்து, பிரபஞ்சத்திற் புத்தி செல்லாதவண்ணந் தடுத்து, அவரைத் தானாகச் செய்தருளுவனாகலின் 'வேறொன்றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளு மிறை' என்றனர். சிவஞானசித்தியார்: "பரப்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும், பரஞான மிவனென்றும் பரா பரன்றா னென்று, மரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனேயென்று, மருட் குருவை வழிபடவே யவனிவன்றா னாயே, யிரங்கியவா ரணம் யாமை மீனண்டஞ் சினையை, யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும், பரிசித்தும் சிந்தித்தும் பார்த்துந் தானே." என்றதனாற் காண்க. (9)

விண்ணிறைந்த வெளியாய், என் மனவெளியிற் கலந்தறிவாம்
வெளியி னூடுந்
தண்ணிறைந்த பேரமுதாய்ச், சதானந்த மானபெருந்
தகையே! நின்பா
லுண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி, மொழிகுழறி,
உவகை யாகிக்,
கண்ணிறைந்த புனலுகுப்பக், கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம்.

(இ-ள்) விண் நிறைந்த - பூதகாயம் நிறைதற்குரிய, வெளி ஆய் - பரமாகாயமாகி, என் மனவெளியில் கலந்து - எனது இதயாகாயத்திற் சேர்ந்து, அறிவு ஆம் வெளியினூடும் - ஞானாகாயத்தினும், தண் நிறைந்த - குளிர்ச்சி மிகுந்த, பேரமுதாய் - பெரிய அமிர்தமாகி, சதானந்தமான - இடையறாத இன்பமயமான, பெருந்தகையே - பெருமையுடையோனே!, நின்பால் - உன்னிடத்தில், உள் நிறைந்த - தனக்குள்ளே நிறைந்த, பேரன் பால் - பேரன்பினால், உள் உருகி - மனங் கரைந்து, மொழி குழறி - சொல் தடுமாறி, உவகை ஆகி - சந்தோஷ மடைந்து, கண் - விழிகள், நிறைந்த

புனல் உகுப்ப - தம்மிடத்து நிறைந்த நீரைச் சிந்த, கரம் முகிழ்ப்ப - கைகள் குவிய, நின் அருளை - உன் கருணையை, கருத்தில் வைப்பாம் - கருத்தி லிருத்துவோம் (யாம்), என்க.

(வி - ரை) பரமாகாயத்திலும், இதயாகாயத்திலும், ஞானகாயத்தி லுங் கலந்திருப்பவனாகலின் 'விண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்தறிவாம் வெளியினூடும், தண்ணிறைந்த பேரமுதாய்' என்றனர். நெஞ்சுவிடுதூது: "வெளியில் வெளியில் வெளியன்" என்றதனாற் காண்க. மனம் உருகுதலும், சொல் குழறுதலும், கண்ணீர் ததும்புதலும், அஞ் சலித்தலும் அடியா ரிலக்கணமாகலின் 'உள்ளுருகி மொழிகுழறி யுவகை யாகிக், கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப' என்றனர். ஒழிவி லொடுக்கம்: "வேர்க்குங்கண் ணீர்ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும், வார்த்தை நழுவு மனம்பதறுங் - கார்க்கதமாய்க், காந்துமுரோ மாஞ்சலியா குங்காத லித்தார்க், கேய்ந்த குணங்கா ணிவையெட்டும்." என்றதனாற் காண்க. ஆனந்தமேலீட்டினாலே மொழிக்கருவி வசமறுதல்பற்றி நாத்தழு தழுத்து உரை நிரம்பா தெழுதலின் 'மொழி குழறி' என்றனர். "உரை குழறி" "பரவுவாய் குழறி" என வரும் உண்மை நாயன்மார் திருவாக்கு களாலு மறிக. "வளைவாய்க் கூகை நண்பகற் குழறவும்" எனப் பட்டினப் பாலையுள்ளும் "போரார்ந்தை குழறும்" எனச் சிலப்பதிகாரத்துரையுள்ளும் வரும் நகைபடு கிளவி போன்ற தன்று. (10)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

ஆதியந்தங் காட்டாத முதலாய், எம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெருங் குருவாகி, மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச், சொச்சமதாய், நிமல மாகி,
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி,
மௌனத்தோர் பால்வெளியாய் வழங்கா நின்ற
சோதியை, என் னுயிர்த்துணையை, நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

(இ - ள்) ஆதி அந்தம் - தோற்றக் கேடுகளை, காட்டாத - உடைய தல்லாத, முதல் ஆய் - முதற்பொருளாகி, எம்மை - எங்களை, அடிமைக்கா - தனது திருத்தொண்டுக்காக, வளர்த்தெடுத்த - வளர்த்தெடுத்த, அன்னை போல - தாய்போல, நீதிபெரும் - நீதியையுடைய, குரு ஆகி - ஆசாரியனாகி, மனவாக்கு எட்டா - மனோவாக்குகளுக்குத் தட்டுப்படாத, நிச்சயமாய் - சாசுவதப்பொருளாகி, சொச்சமதாய் - களங்கரகிதமாகி, நிமலமாகி - மலரகிதமாகி, வாதமிடும் - தர்க்கவாதஞ் செய்கின்ற, சமய நெறிக்கு - சமய மார்க்கங்களுக்கு, அரியது ஆகி - அறிவரிதாகி, மௌனத்தோர் பால் - மௌனநிலையை யுடையோரிடத்து, வெளியாய் - வெளிப்பட்டு, வயங்கா

நின்ற - விளங்குகின்ற, சோதியை - தேஜோ ராசியை, என் உயிர்த் துணையை - என்னுயிர்க் குதவியாயிருப்பதை, நாடி - குறித்து, கண்ணீர் - கண்கள் நீரை, சொரிய - சிந்த, இரு கரம் - இரு கைகளையும், குவித்து - குவித்து, தொழுதல் செய்வாம் - வணங்குவாம் ( யாம் ), என்க.

( வி - ரை ) பரமேசுவரர் ஜனனமரண துஸ்தரமில்லாதவராகலின் 'ஆதியந்தங் காட்டாத முதலாய்' என்றனர். சுவேதாசுவதரம்: "நதஸ் யகஶ்சித்ப திரஸ்திலோகே நசேஶிதாநைவ சதஸ்யலிம்பம் । நகாரணம் காரணாதிபாதிபோ நசாஸ்ய கஶ்சிஜ்ஜநிதாநசாதிப:॥" எனவும், சுருதிகள்: "அஜம் த்ருவம் ஸர்வதத்வைர்விஶுத்தம்" எனவும், "அஜாத இத்யேவம் கஶ்சித்பீரு:" எனவும், அச்சுருதிகட்கு உபப் பிர்ஹ்மணமாக "அஜாதமிம மேவைகம்மர்தா ஜநநிஹீரவ: ருஓஸ்யாஸ்யப்ரபத்யம் தேரக்ஷார்த்தம் தக்ஷிணம் முகம்" எனவும், சுருதிஸூக்தி மாலை: "ஏகம் தவாப்யஸாகரம்ததுஹா ராமோஜாதேந பாவ்யமமராம் தரபத்வயாபி । அப்யர்திதோபி ஹிமஹோஶ மஹர்ஹிதா மைஶரம் தர்ஹிதஸ்ஹமவிகர் பிதக்புவாஸ:॥" எனவும், சௌந்தரியலகிரி: "வேத ரஞ்சகன் மால்பு ரந்தரன்வேக சண்டகு பேரனோடாதி யெண்டிசை பாலர் பொன்றவு மாதி யந்தமிலாதமேதோர், நாதர் பொன்றிலரேது மங்கல நாணு றுந்திற மாதலால், நீதழைத்தது யோகமம்பிகை நீலி யென்பது பாவமே." எனவும் வருவனவற்றாற் காண்க.

சகலருள் பக்குவருக்கு இருவினை யொப்பு மலபரிபாக முண்டாகச் சத்திநி பாதம் விளைந்தவழி 'மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல' முதல்வன் மானிடச்சட்டை சாத்திக்கொண்டு குருமூர்த்தியா யெழுந்தருளுவ னாகலின் 'அடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னைபோல நீதிபெருங் குருவாகி' என்றனர். பதிபசுபாச விளக்கம்: "மருவிய வுடல்வெ றுப்பும் வையக வெறுப்பும் வந்தா, லிருவினை யொப்பு மங்க ணெய்திடு மெய்துங் காலங், கருமலபாக முண்டாம் பாகத்தாற் கடிதிற் சேருந், திருவருட் சத்திநி பாதஞ் செறிந்திடுங் குருவு மன்றே." எனவும், சிவானுபூதி விளக்கம்: "பருவங் குறித்துப் பரமவொளி வந்திங், குருவந் தரித்தா லொருதவங்கள் வேண்டுமோ, செய்தற் கரியதவஞ் செய்தற்பின் னல்லவோ, வெய்தற் கரியபிரா னெம்போல வந்ததுவே." எனவும், சிவப்பிரகாசம்: "நாடியசத் திநிபாத நாலு பாத, நண்ணும்வகை யெண்ணரிய ஞான போதங், கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக், கூத்தனொரு மூர்த்தி கொடு குறுகி மோக, நீடியகே வலசகல நிகழாவாறு, நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங் கேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகக், கேண்மையரே லிவையுணர்த்தக் கிளக்கு நூலே." எனவும், சிற்றம்பலநாடி தாலாட்டு: "கண்ணொரு மூன்றுங் கனற்கரமு மைம்முகமு, மண்ணவர்க் குக் காணு வகையொளித்து வந்தானே." "எங்கெங்குந் தானாகி யென்போ லுருக்கொண்டு, மங்கும் பிறவிதனை மாற்றவந்த வள்ளலோ." எனவும்

வருவனவற்றுற் காண்க. மற்றுஞ் சில உதாரணம் பரிபூரணனந்த போதம் 2-வது பாடலுரையிற் காண்க.

வேதாகமங்களினுலே பிரதிபாதிக்கப்படும் ஒருவனுகிய இறைவனையும், அளவிலவாகிய உயிர்களையும், இருள் வடிவாகிய ஆணவமலத்தினையும், கன்ம மலத்தினையும், சுத்தமசுத்தமென்னு மிருவகை மாயைகளையும் அநாதியாகிய பொருள்களென்று முக்கூற்றுப் புறச்சமயங்கள் கூறுவாகலின், அச்சமயங்களால் முதல்வ னறியப்படா னென்பார். 'வாதமிடுஞ் சமயநெறிக் கரியதாகி' என்றனர். வீராகமம்: ,'சமையவா தங்க ணீக்கித் தத்துவ மித்தை யாக்கி, நமையரு விருளை யோட்டி நானெனு மைய னீக்கித், தமர் தாயா யென்னுண் மன்னித் தன்னருட் சேர நாட்டி, யமைவிலா வின்ப வெள்ளத் தழுத்தின னென்னை யாசான்." எனவும், திருவாசகம்: "உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாஞ், சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங், கவலைக் கெடுத்துக் கழலிணைக டந்தருளுஞ், செயலைப் பரவி நாந் தெள்ளேணங் கொட்டாமோ." எனவும் வருவனவற்றுற் காண்க.

குருவினைக் கண்டமாத்திரத்து இருகண்களிலுங் கண்ணீர் வார, கைகளைக் குவித்து, மயிர்க்குச் செறிவு முதலிய வுண்டாகவேண்டு மாகலின் 'உயிர்த் துணையை நாடிக் கண்ணீர் சொரியவிரு கரங்குவித்து' என்றனர். சிவஞானபிரகாச வெண்பா: "ஆசானைக் காண்டோறு மன்புருகக் கை குவியு, மாசா ருடம்பு மயிர்க்குச் செறியும் - பேசாத, வானந்த முள்ளூறு மக்கணமே பாசங்க, டாநந்த முத்தி தரும்." எனவும், அதிரகசியம்: "கண்டான் குருவைக் கண்ணூரக் கதறி வீழ்ந்தான் கமலமிசை, யண்டர் வரனே! நெடுமாலே! அயனே! என்று ன்கமகிழ்ந்தான், றெண்டா வியலும் பணி செய்யத் துணிந்தான் பணிந்தான் மும்முறையே, பண்டா னிறைந்த பாவாலுங் காவாயென்னப் பாடினன்." எனவும் வருவனவற்றுற் காண்க.

குருவைத் தரிசித்த மாத்திரத்து வணங்கவேண்டு மென்பார் "தொழுதல் செய்வாம்' என்றனர். சிவஞானதீபம்: "திருமறைமா முனிவருக் கன்றால நீழற், றிருந்துவற முரைத்தபெருந் தகைதா னிந்த, விருநிலமே லருளுருவாய் வந்து தோன்றி, யிசைந்திடுநெற் றவிடுமுளை யுமிபோ லேய்ந்த, திரிமலவே ரினைவினைவா லுரையால் ஞானச், செய்கையினு லறுத் திருதாள் சென்னி சூட்டுங், குருபரனை மருளுலக வாதை நீக்குங், குணக் கடலை மனத்திலுற வணக்கஞ் செய்வாம்." என்றதனுற் காண்க. (11)

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி, அல்ல வாகிப்,
பரமாகிச், சொல்லரிய பான்மை யாகித்.

துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச், சுத்த மாகி,
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

(இ - ள்) அகரவுயிர் - அகர வுயிரானது, எழுத்தனைத்தும் - எல்லா வெழுத்துக்களும், ஆகி - தானேயாகி, வேறாய் - அவற்றிற்கு வேறாகி, அமர்ந்ததென - அமைந்து நிற்பதுபோல, அகிலாண்டம் அனைத்துமாகி - சகலாண்ட சராசரங்களுந் தானே யாகி, பகர்வன எல்லாமாகி - சொல்லப் படுவனவாகிய பொருள்களெல்லாமாகி, அல்லவாகி - அவை யல்லாதாகி, பரமாகி - எல்லாப் பொருள்களுக்கும் மேலான பொருளாகி, சொல் அரிய - சொல்லுதற்கரிய, பான்மையாகி - தன்மையதாகி, துகள் அறு - குற்றமற்ற, சங்கற்ப விகற்பங்க ளெல்லாம் - சங்கற்பமும் விகற்பமுமாகிய எல்லாவற்றி லும், தோயாத - படியாத, அறிவாகி - ஞானவடிவாகி, சுத்தமாகி - புனித மாகி, நிகரில் - ஒப்பற்ற, பசுபதியான - ஆன்மாக்களுக்கு இறைவனாகிய, பொருளை - வஸ்துவை, நாடி - உத்தேசித்து, நெட்டுயிர்த்து - பெருமூச் செறிந்து, பேரன்பால் - பெரிதான அன்புடனே, நினைதல் செய்வாம் - தியானிப்போம் (யாம்), என்க.

(வி - ரை) அகரம் ஆகாரமாதி வடிவங்க ளெடுத்துக் ககரமுதலிய மெய்களை யியக்குமாறுபோல, சிவன் எண்ணிறந்த வடிவங்க ளெடுத்துச் சீவர்களை யியக்குவன். 'மெய்யெழுத்துக்கள் அரைமாத்திரை யொலி யோடுகூடி யிருப்பினும் தாமே யொலிக்காதவாறுபோல,' சேதன சேதன மாகிய பரபஞ்சத்திற்கு முறையே ஞானமுங் கிரியையு மிருப்பினும் தானே யியங்கா. ஒரு மாத்திரையோடுங் கூடிய அகர முபகரிப்ப மெய்கள் ஒலிப்பபோல, சேதனப் பிரபஞ்சம் அறிவித்தா லறியும், அசேதனப் பிரபஞ் சம் அசைவித்தாலசையும். ஒற்றொலிபோன்ற சீவன் அறியுந்தன்மை யுடையதும், உயிரொலிபோன்ற சிவம் அதற்கறிவிப்பதுமாம். ஒலிக்கு மெழுத்தினையும் ஒலிப்பிக்கு மெழுத்தினையு மோரினமென்ற லடாதுபோல, சிவனும் சீவனு மொன்றாகா. 'மெய்யெழுத்து அரைமாத்திரையும், உயிரெழுத்து ஒரு மாத்திரையுங் கொண்டு முறையே யொலித்தும், ஒலிப் பித்தும் நடைபெறுங்கா லிரண்டுங் கூடியது கொண்டு ஒன்றரை மாத்திரை யாகாம லொருமாத்திரையே யாகுந் தன்மையினைப்போல,' சிவ சீவர்கள் கூடியிருக்கு முறைமையு மிவ்வாறே கொள்ளத்தக்கது. ஆகலினன்றே, சிவ சீவர்களை வேதம் இரண்டென்னாது ஏகமென்றும், தனித்தனிப் பிரித்தறியக் கூடாமையின் அத்துவிதமென்றும், அறியுஞ் சித்தும் அறிவிக்குஞ்சித்துமா யிருக்குந் தன்மையில் துவிதமென்றுங் கூறியது. ஆகலின், 'அகரவுயி ரெழுத் தனைத்துமாகி வேறாயமர்ந்ததென' என்றார். திருக்குறள்: "அகர முதலவெழுத் தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு." எனவும், திருவருட் பயன்: "அகர வுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரிலிறை நிற்கு நிறைந்து."

எனவும், சிவசிவவெண்பா: "விற்பிரம்பா லுற்றவடு மேவவுல கெங்கு நிறை, சிற்பரனே தெய்வஞ் சிவசிவா! - சொற் சிறந்த, அகர முதலவெழுத் தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு." எனவும், முதுமொழி வெண்பா "சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வநீ யென்றேப்பாற், சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா! - ஓரின், அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு." எனவும் வருவனவற்றாற் காண்க.

உடலும் உயிரும் போலவும் பாலும் நீரும் போலவும், பரிதியு மதியும் போலவும் உலகத்தோடு வேற்றுமையின்றிக் கலப்பா லொன்றாய் நிற்றலின், 'எல்லாமாகி' எனவும், உயிரும் பாலும் பரிதியு மொன்றாகாது பொருட் டன்மையால் வேறாய் நிற்றலின் 'அல்லதாகி' எனவும் கூறினர். தேவாரம்: "பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதியா, ரெற்றுநீர் தீக்காலு மேலைவிண்ணிய மானனோடு, மற்றுமாயதோர் பல்லுயிராய் மாலயனு மறைகள், முற்றுமாகி வேறுமானான் மேயது முதுகுன்றே." என்றதனாற் காண்க.

பிரபஞ்சத் தோற்றக் கேடுகளிற் றனக்கு விருப்பும் வெறுப்பு மில்லை யென்பார் 'சங்கற்ப விகற்பங்களெல்லாந் தோயாத அறிவாகி' என்றனர். திருக்குறள்: "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டு மிடும்பை யில." எனவும், சிவானுபூதிவிளக்கம்: "வெறுப்பு விருப் பென்று வேறுரைத்தா லெந்தை, புறுப்பிற் குறையாதோ யுணர்வுடையோர் சொல்லுவரோ" எனவும், "வேண்டலும்வேண் டாமையுமாய் மேவும் வினைப்பயனு, மாண்டகையோடுற்ற வனுபூதி யானதே" எனவும் வருவன வற்றாற் காண்க.

தேவர்கட்குப் பசுத்வம் ஸ்வபாவமும், முதல்வனுக்குப் பசுபதித்வம் ஸ்வபாவமும் உண்மைாகலின் 'பசுபதியான பொருளே' என்றனர். பாசுபதோபநிஷதம்: "ஸ்வதஸ்ஸிவ꞉ பசுபதிஸ்ஸாக்ஷீ ஸர்வஸ்ய ஸர்வதா ஸர் வேஷாந்து மநஸ்தேநஸ்தேநப்ரேரிதம்நியமேநது." எனவும், ஆதித்திய புராணம்: "ப்ரஹ்மவிஷ்ணு ஸுரேந்த்ராத்யா꞉ பசவ꞉ பரிகீர்திதா꞉ தேஷாம் பதிந்தாத்தேவஸ்ஸிவ꞉ பஸுபதிஸ்ம்ருத꞉" எனவும் வருவன வற்றாற் காண்க. (12)

---

## சின்மயானந்தகுரு

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அங்கைகொடு மலர்தூவி, அங்கமது புளகிப்ப
அன்பினொ டுருகி, விழிநீ
ராறாக வாராத முத்தியின தாவேச
ஆசைக் கடற்குண்மூழ்கிச்

சங்கர! சுயம்புவே! சம்புவே! எனவுமொழி
தழுதழுத் திடவணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ;
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்க
டொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ-ள்) அங்கை கொடு - அழகிய கைகளால், மலர் - மலர்களை, தூவி - சொரிந்து, அங்கமது - சரீரமானது, புளகிப்ப - புளகங் கொள்ள, அன்பினால் - அன்பினால், உருகி - மனங்கரைந்து, விழிநீர் - கண்ணீர், ஆறுக - ஆறுகிப்பெருக, ஆராத - தெவிட்டாத, முத்தியினது - மோட்சத்தினது, ஆவேச - ஆவேசத்தோடு கூடிய, ஆசை - ஆசையாகிய, கடற்குள் - சமுத்திரத்தில், மூழ்கி - முழுகி, சங்கர - சங்கரனே!, சுயம்பு - சுயம்புவாயிருப்பவனே! சம்பு - சம்புவாயிருப்பவனே!, எனவும் - என்று துதித்தும், மொழி - மொழி, தழுதழுத்திட - குழறும்படி, வணங்கும் - தொழுகின்ற, சன்மார்க்க நெறி - நன்னெறி, இலா - இல்லாத, துன்மார்க்கன் - துன்மார்க்கனாகிய, எனையும் - என்னையும், தண் அருள் கொடுத்து - குளிர்ச்சியாகிய கருணைசெய்து, ஆள்வையோ - ஆண்டருள்வாயோ; துங்க மிகு - பரிசுத்தம் மிகுந்த, பக்குவம் - பக்குவத்தையுடைய, சனகன்முதல் - சனகன் முதலாகிய, முனிவோர்கள் - முனிவர்கள் நால்வரும், தொழுது - வணங்கி, அருகில் - சமீபத்தில், வீற்றிருப்ப - வீற்றிருக்க, சொல் அரிய - சொல்லுதல் அருமையாகிய, நெறியை - ஞானமார்க்கத்தை, ஒரு சொல்லால் - ஒரு மொழியால், உணர்த்தியே - அறிவுறுத்தி, சொரூபானுபூதி காட்டி - சொரூபானுபவத்தைக் காட்டி, செங்கமலபீடமேல் - செவ்விய பத்மாசனத்தின் மீது, கல்லாலடிக்குள் - கல்லாலின்கீழ், வளர் - எழுந்தருளியிருக்கின்ற, சித்தாந்தம் - முடிவு செய்யப்பட்ட, முத்தி முதலே - மோட்சப்ரதமான முதற்பொருளே!, சிரகிரி - சிரகிரியின்கண், விளங்க வரும் - ஆன்மாக்கள் பிரகாசிக்க எழுந்தருளிய, தக்ஷிணமூர்த்தியே - தக்ஷிணமூர்த்தியே!, சின்மயானந்த - ஞானானந்தங்களைக் கொடுக்கின்ற, குருவே - சதாசாரியனே!, என்க.

(வி-ரை) மலர் தூவப்பெறும் அருமையைப் பெற்றமையால் 'அங்கை' என விசேடித்தார். சிவபூசையில் மலர்கொண் டருச்சித்தல் இன்றியமையாத கடமையாகலின் 'அங்கைகொடு மலர்தூவி' என்றனர்.

திருவாசகம்: "எய்த்த மாமல ரிட்டுமுட் டாகதோ ரியல்பொடும் வணங் காதே, சாந்த மார்முலைத் தையனல் லாரொடுந் தலைதடு மாறாகிப், போந்தி யான்றுயர் புகாவண மருள்செய்து பொற்கழ லிணைகாட்டி, வேந்த னாய் வெளி யேயென்முன் னின்றதோ ரற்புதம் விளம்பேனே." எனவும், தேவாரம்: "பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றிலார், நாக்கைக் கொண் டரனாம நவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடிய லமந்து, காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே." எனவும், "மலர்பரித்திட் டுண்ணாரூ மூரல்ல அவையெல்லா மடவி காடே." எனவும், பிரபுலிங்கலீலை: "பீடுறு மானிடப் பிறப்பு வாய்ந்துநல், லேடவிழ் மலரினா லிறையைப் பூசியார், பாடமை நாளெலாம் பாழுக்கிறைப்பவர், மூடரை யெண்ணுங் கான் முந்தி நிற்பரே." எனவும் வருவனவற்றாற் காண்க.

உடல் புளகித்தலும், கண்ணி லானந்தநீ ரொழுகுதலும், வசனங் குழறுதலும் ஆகிய குணங்கள் அன்ப ரிலக்கணமாகலின் 'அங்கமது புள கிப்ப அன்பினா லுருகி விழிநீர் ஆறாக...மொழி தழுதழுத்திட வணங்கும்' என்றனர். திருவாசகம்: "மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யாற்கழற்கென், கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம், பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங், கைதா னெகிழ விடேனுடை யாயெனைக் கண்டுகொள்ளே." என்றதனாற் காண்க.

சுகத்தைக் கொடுத்தலின் 'சங்கரன்' எனவும், தானே யுண்டாதலின் 'சுயம்பு' எனவும், சுகமுண்டாதற் கிடமாயிருத்தலின் 'சம்பு' எனவும், அருமைத் திருநாமங்க ளுண்டாம். 'சன்மார்க்க - நெறி' என்பது சித் தாந்த மார்க்கத்தினை. 'தாபத்தினைத் தவிர்க்கக் குளிர்ச்சியினை விரும்பு தல்போல', ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகமென்னும் தாபத் திரயத்தினை நீக்கிக்கொள்வான் 'தண்ணருள் கொடுத்தாள்வையோ' என்றார்.

'பக்குவம்' என்பது மலபரிபாகத்தினை; இது இருவினையொப்பால் வருவது; இப் பக்குவம்: மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென நான்காம். **மந்ததரமாவது**: இலிங்க மாகேசுர ரிடங்களிலே பத்தியுண் டாக அதனாலே பரமசிவன் சாதகாசாரியனை யதிட்டித்துச் சமயதீட்சை பண்ணி அவன் மன மொழி மெய்களைச் சரியைத் தொழிலிலே புரிவிப்பது. **மந்தமாவது**: சிவார்ச்சனையால் ஆதரவுண்டாக்கிப், போதகாசிரியனை யதிட்டித்து விசேட சமய முடித்துச், சிவார்ச்சனை கற்பித்து, அந்தரியாக பகிரியாகங்களிலே அவன் மனமொழி மெய்களைப் புரிவிப்பது. **தீவிரமாவது**: யோகவாஞ்சையுண்டாய் அவ் வாசிரியனால் அட்டாங்கயோக வுண்மையை யறிவித்துக், காமாதி யறுவிதமும் விடுத்து அதன் சித்தத் தைத் தியானத்தினாலே நிறுத்திச் சமாதியிலே யொடுக்குவது. **தீவிரதர**

**மாவது:** சிவஞானிகளிடத்திலே பத்தியும் திரிபதார்த்த சொரூப மறிய வேண்டுமென்னு மறிவுந் தோன்றித் தேகாதிப் பிரபஞ்சங்களை நீக்க வேண்டுமென்னும் வைராக்கியமும், முத்தியிலாசையும், பிறவியிலே பயமும், இகலோக பரலோகத்திலே வெறுப்பும், நமக்கிந்தக் கவர்ச்சியை நீக்கிச் சிவரூபத்தைத் தரிசிப்பிக்கு நாதராவர் யாவரென்று 'பசித்தவன் அன்னதாதாவைத் தேடுமாறுபோல'வும், 'பிறவிக் குருடனான அநாதன் கோடைகாலத்தின் மத்தியானத்திலே நீர் தேடித் திரியுமாறுபோல'வும் ஞானாசாரியனைத் தேடி மிகவும் வருந்துகின்ற வாஞ்சையுண்டாவது. இங்குக் குறித்த பக்குவம் தீவிரதரத்தினை.

சனகன்முதல் முனிவோர்களாவார்: புத்திரர்களாகிய சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன் என்பவர். இம் முனீந்திரர் நால்வரும் வேதங்களையும், உபநிடதங்களையும் நெடுகொள்வரையும் ஓதி ஞானநிலை பெறுதவராகிப் பின் கைலையினை யடைந்து சிவபெருமான் சந்நிதானத்திலிருந்து ஆகமாந்தமென்னும் பெயரையுடைய சித்தாந்தத்தை யோதினராகலின், 'முனிவோர்கள் தொழுதருகில் வீற்றிருப்ப' என்றனர். 'சொல்லரிய நெறி' என்றது சுத்தாத்துவிதத்தினை அடைதற் கேதுவாகிய ஞானத்தினை.

'ஒருசொல்' என்றதனைச் சிலர் பிரணவமென்றும், சிலர் மகாவாக்கியமென்றும், சிலர் வேறுங் கூறுவர். எவ்வெவர் கூறும் சொல்லின் பொருளினையும் தனக்குள் அடக்கிக்கொண்டு விளங்கும் அருமையான துரிய மொழியது. இதனை வைகரிவாக்காலாவது, வரிவடிவாலாவது விளக்குவதன்று. சற்குரு சொல்லாமற் சொல்ல நற்சீடன் தெரியாமற் றெரிந்துகொள்ளுந் தன்மையினை யுடையது. மற்று மிதனுண்மையினை மெய்கண்ட பரம்பரையில் வந்த சித்தாந்த ஞானிகள்பா லறிந்து தெளிக. சொரூபானுபூதியினைக் காட்டுதலாவது சித்தாந்த அனுபவத்தினைச் சின்முத்திரையாற் காட்டல்.

'கல்லாடிக்குள்வளர்' என்றது ஸ்ரீ தட்சிணாமூர்த்தியாகிய சிவபரஞ்சுடரெழுந்தருளியது கல்லாலின்கீழ் என்று தெரிவித்ததாயிற்று. கல்லாலின்கீழமர்ந்த தென்னையோவெனின், அவ் வருட்பெருந்தகை கல்லையுங் கனியச் செய்பவரென்பது போதரவென்க. அன்றியும், கல் துளிர்த்தல் கூடாது; அது துளிர்க்கவும் செய்த பேராற்றலுடையா ரத்தகைய கரடு பற்றிய வுயிரையுங் கனியச்செய்து தம் வயப்படுத்தி யாள்வரென்னுங் கருணையை வியத்தமையு மதுவாம். ஆணவபாசத்தாற் பீடிக்கப்பட்ட வுயிர்களை யவ்வாணவத்தைப் போக்கித் தமது திருவடி யின்பத்தைத் தந்தருளும் அருளாற்ற லுடையாரென்று கற்பதே யதன் முடிவென்றறிக. கல் துளிர்க்கச் செய்தவர் பாசவுயிர் துளிர்க்கச் செய்தல் எளிதிற் கூடுமென் றுணர்க. கன்மலையினை வளைத்ததுவும், கன்மலையை யிருக்கையாகக் கொண்டதுவும் இங்ஙனமே பொருள்படுமெனக் கொள்க.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தம்: ஸநகாதி யோகிகளுக்கு வேதாகமங்களின் றுணிபொருளை யுபதேசித்து வீடுபேற்றை நல்கின சிவனாரது இருபத்தைந்து மூர்த்தங்களி லொன்று; 'தென்முகமாக எழுந்தருளிய கோலம்' என்பது அதன் பொருள். இந்த மூர்த்தத்தை "ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேநமாம்பாஹி நித்யம்" என்று துதித்து, "தேவரீருடைய தக்ஷிண முகமானது என்னை ரக்ஷிக்கக் கடவது" என்னும் பொருட்டோன்றச் சுருதி விதந்தோதியதறிக. இந்தக்கோலம் யோகோலம். கந்தபுராணம்: "இருவரு முணராவண்ண லேனவெள்ளெயிறி யாமை, சிரநிரை யணர்ந்த கோடி திளைத்திடு மூரத்திற் சீர்கொள், கரதலமொன்று சேர்த்தி மோன முத் திரையைக் காட்டி, யொருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்." எனவும், "இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு, சனகனே முதலா வுள்ளோர் தவலரு ஞான போதம், பனுவலின் னவன்றன்றேனும் பான்மையைத் தெரிந்து முக்கட், புனிதன தருளாற் றந்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்." எனவும், "தற்பர னினைய வாற்றாற் றுபத ருணருந்தன்மை, யற்புத ஞான போத மளித்திடுங் கணம தொன்றின், முற்படு கமலப் புத்தேண் முதலிய வமரர்க் கெல்லாம், பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினி பகர்வ தென்னே." எனவும் வருவனவற்றாற் றாண்க. 'சித்தாந்தமுத்தி' என்றது சுத்தாத்வைத முத்தியினை. சிரகிரி-சிராமலை; அது பூர்வத்தில் திரிசிரனால் ஆளப்பட்டது. செவ்வந்திப் புராணம்: "துதித்தி டுந்திரி சிராசொல்லுஞ் சொல்லினன், மதிச்சடை முடியினன் வரங்கொ டுத்தலா, லுதித்திடு மளகையே யொப்ப தாகுமப், பதிப்பெயர் திரிசிராப் பள்ளி யானதே." "முன்ப ரக்கருக் கதிபதி யிரா வணன் முனிவாய்த், தென்புலத்துறை திரிசிரன் றூடணன் கரனே, யென்ப வர்க்கருஞ் சிறப்பளித் திம்மலை யிடத்தின், வன்புபற்றிய பகை தடுத் திடும்படி வைத்தான்." "கரனி ருந்துறை கொடுமுடி யவன் பெயர் காட்டும், பெருகு தூடண னுறையிட மவனது பெயராந், திரிசி ராவதி னுறைதலாற் றிரிசிரா மலையா, மிருவர் பேரொழிந் தொருவன்பே ராகவே யிலங்கும்." என வருவனவற்றாற் காண்க. (1)

ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிக
　　னத்துவித வாஞ்சை யாதல்
அரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
　　யாகும்; அறி வவிழவின்பம்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
　　சாதனம் விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்க மல்ல; இவை நிற்க, என் மார்க்கங்கள்
　　சாராத பேரறிவதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
　　வாய்க்கும் படிக்குபாயம்

வருவித்து வட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண் ?
சித்தாந்த முத்திமுதலே !
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே !
சின்மயா னந்தகுருவே !

(இ - ள்) ஆக்கை எனும் - சரீரமென்கிற, இடிகரையை - இடிகரையை
மெய் என்ற - உண்மையென்று எண்ணியிருக்கிற, பாவி நான் - பாவியாகி
நான், அத்துவிதம் - அத்துவிதப் பொருளின்மேல், வாஞ்சை ஆதல் - இச்சை
வைத்தல், அரிய - எட்டுதற்கரிய, கொம்பில் தேனை - கொம்பிற் கட்டப்பட
டிருக்கிற தேனை (யுண்ண), முடவன் - முடவன், இச்சித்தபடி ஆகும்
விரும்பினவிதமாகும்; (இவ்வாறுனபின்) அறிவு - (எனது) அறிவானது
அவிழ - விகசிக்கும்படி, இன்பம் - சுகம், தாக்கும் வகை ஏது - உண்டா
கும் வகை யேது?; இந்நாள் - இந்நாளளவும், சரியை கிரியா யோகசா
னம் - சரியை கிரியை யோகம் என்பவற்றின் பழக்கத்தை, விடுத்ததெல்
லாம் - விட்டுவிட்டதெல்லாம், சன்மார்க்கம் அல்ல - நல்லநெறி யன்று
இவை நிற்க - இவை நிற்கட்டும்; என்மார்க்கங்கள் - எத்தன்மையான
மார்க்கங்களும், சாராத - அணுகாத, பேரறிவதாய் - பெரிய அறிவுருவாகி
வாக்கு - வாக்கும், மனம் - மனமும், அணுகாத - பொருந்தாத, பூரணப்
பொருள் வந்து - பூரணவஸ்துவானது வந்து, வாய்க்கும்படிக்கு - கிடைக்
கும்படிக்கும், உபாயம் - உபாயத்தை, வருவித்து - உண்டாக்கி, உவட்டாத -
தெவிட்டாத, பேரின்பமான - பேரானந்தமான, சுக வாரியினை - இன்ப
சாகரத்தை, வாய் மடுத்து - வாய்வைத்து, தேக்கித் திளைக்க - நிறைய அனு
பவிக்க, நீ முன்னிற்பது - நீ எனக்குப் பிரத்தியட்சமாவது, என்று காண் -
எக்காலம்?, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) உடம்பு தத்துவங்களால் ஆக்கப்படுதலின் ‘ஆக்கை’
எனப்படும். ‘இடிகரை’ ஆவது ஆற்றோரத்தின் வெள்ளத்தால் கீழ்
அறுக்கப்பட்டு நின்ற கரை. பொய்யாகிய உடலை ‘மெய்’ என்பது மங்கல
வழக்கு. அநித்தியமாகலின் ‘இடிகரை’ என்றனர். பிரமாணங்கள்
பரிபூரணனந்த போதம்: 4 - ம் பாட்டுரையிற் காண்க. ஈண்டு ‘அத்து
விதம்’ என்றது சிவனடியி லிரண்டறக் கலக்குஞ் சித்தாந்த முத்தியினை.
இதனையடைத லருமையினு மருமை யென்பார், ‘அத்துவித வாஞ்சை
யாதல், அரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடியாகும்’ என்றனர்
சிவஞானசித்தியார்: “புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும், புகல்
மிருதி வழியுழன்று புகலுமாச் சிரம, வறத்துறைக ளவையடைந்து மருந்
தவங்கள் புரிந்து, மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ், சிறப்
புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச், சிரப்பொருளை மிகத் தெளிந்துஞ்
சென்றுற் சைவத், திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ், செலுத்திய

பின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்." என்றதனுற் காண்க. அத்துவிதத்தினை யடைந்தாலல்லது இன்பநிலை கிட்டுவது அருமையாதலால் அடையாதபோது இன்பநிலையினை அடைவது எங்ஙனமென்பார், 'அறிவ விழவின்பந் தாக்கும்வகை யேது' என்றனர்.

சரியை கிரியை யோகங்கள் ஞானத்திற்கு இன்றியமையாத சோபானமா யிருத்தலினுலும், அம்மூன்றினும் பழகாதவழி ஞானமடைதல் கூடாதாகையினுலும் 'சரியைகிரி யாயோக, சாதனம் விடுத்ததெல்லாம், சன்மார்க்கமல்ல' என்றனர். முக்கூற்றுப் புறச்சமயங்களும் தத்துவங்களுக் குட்பட்டனவாகலின் தத்துவாதீதன் சமயங்களிற் கெட்டாதவனுகிச் சமயாதீதனுக விளங்குவனுகலின், 'என் மார்க்கங்கள், சாராத பேரறிவதாய்' என்றனர். வாக்கும் மனமும் சூக்குமையாதிகளையும் தத்துவங்களையும் முறையே கொண்டு பிறக்கின்றமையால், 'வாக்குமன மணுகாத பூரணப்பொருள்' என்றனர். 'முன்னிற்ப தென்றுகாண்' என்றதனுல், சகலனுகிய அடியேனுக்குப் படர்க்கையில் ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளிவந்து செய்யவேண்டிய அனைத்தையுஞ் செய்து முடித்தனை; இனிப் பிரளயாகலருக்கு அனுக்கிரகிப்பதுபோல மான்மழு சதுர்புஜ காளகண்ட திரிநேத்திரனுய் - அம்மையிடத்தனுய் - இடபாரூடனுய் முன்வந்தருளுவது எக்காலம்? அதற்குரிய பக்குவத்தினை யடியேன் வாய்ந்திலனே எனக் குறிப்பித்துக் கொண்டபடியாம். (2)

ஔவிய மிருக்க, நா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்க, லோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்க, மே
லாசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம்பல விருக்க; என் னறிவூடு
மெய்யனீ வீற்றிருக்க
விதியில்லை யென்னிலோ, பூரண னெனும்பெயர்
விரிக்கினுரை வேறுமுளதோ?
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினுற்
கட்டுண்ட வுயிர்கண்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே!
கதியான பூமிநடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) ஔவியம் - பொறுமையானது, இருக்க - இருக்கவும்; நான் என்கின்ற ஆணவம் - நான் என்கின்ற ஆணவமானது, அடைந்திட்டிருக்க - சேர்ந்திருக்கவும்; லோபம் - லோபகுணமும், அருள் இன்மை -

அருளில்லாமையும், கலந்து உள் இருக்க - கலந்து உள்ளே யிருக்கவும்; மேல் - பின்னும், ஆசாபிசாச முதலாம் - ஆசையென்னும் பேய் முதலிய, வெவ்விய குணம் - கொடிய குணங்கள், பல இருக்க - அனேகம் தங்கி யிருக்கின்ற, என் அறிவூடு - என்னறிவினிடத்தில், மெய்யன் - மெய்ய னாகிய, நீ வீற்றிருக்க - தேவரீர் எழுந்தருளியிருக்க, விதியில்லை என்னில் - விதியில்லையென்று சொல்வாயாயின், பூரணன் எனும் பெயர் - பூரணன் என்கிற (உன்) திருநாமத்தை, விரிக்கில் - விரித்தால், உரை - அதின் பொருளானது, வேறும் உளதோ - வேறாயும் இருக்குமோ?, கவ்வும் - பற்றுகின்ற, மலம் ஆகின்ற - ஆணவமாகிய, நாகபாசத்தினால் - நாகபாசத்தால், கட்டுண்ட - பிணிப்புண்ட, உயிர்கள் - உயிர்களுடைய, மூர்ச்சை - மூர்ச்சித்து கிடக்கின்றநிலை, கடிது அகல - விரைவாக நீங்கும்படி, வலிய வரும் - பிரார்த்தியாமலே வரும், ஞான சஞ்சீவியே - ஞானசஞ்சீவினியே!, கதி ஆன - மோட்சமென்கிற, பூமி நடுவுள் நிலத்தினிடையில், செவ்விதின் - செவ்வையாக, வளர்ந்து ஓங்கு - வளர்ந்துயர்ந்த, திவ்யம் - தெய்வீகமான, குணமேருவே - குணமலையே!, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) வினா:—"இருளுமொளியும் ஓரிடத்தில் நில்லாதது போல், ஒளவிய முதலான தீக்குணத்தொகுதியோடு கூடிய உள்ளத்தில் மெய்யனாகிய சிவமிருப்ப தெங்ஙனம்?" வினாவெண்பா: "நீடு மொளியு நிறையிருளு மோடரித்துக், கூட வரிது கொடுவினையேன் - பாடிதன்மு, னென்றுவார் சோலையயர் மருதச் சம்பந்தா! நின்றவா றெவ்வாறு நீ." என்றதனாற் காண்க.

விடை:—"உள்ளத்தை விட்டு நீங்காமல் நிற்கிற முறைமை யநாதியே தொடங்கி உண்டாயிருக்கும். சிவஞானபோதம்: "மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாத சத்தாத லஞ்ஞான முள்ள மணைதல்காண் - மெய்ஞ்ஞானந், தானே யுளதன்றே தண்கடனீ ருப்புப்போற், றானே யுளமுளவாய்த்தான்." என்றதனாற் காண்க."

வினா:—"அங்ஙனமாயின், அறியாமை வருவானேன்?"

விடை:—"ஆன்மாவினோடும் அனாதியே கூடிவரப்பட்ட ஆணவமலம் விட்டு நீங்காதபடியினா லறியாமை யுண்டானது."

வினா:—"அங்ஙனமாயின், ஆன்மாவினை விட்டு முதல்வன் நீக்கமாக வொதுங்கி நின்றருளுமோ?"

விடை:—"ஆன்மாவினுடன் கூடியே நின்று அருளும்."

வினா:—"அஞ்ஞானத்துடன் கூடியிருக்கப்பட்ட ஆன்மாவினுடன் முதல் வன் கூடியிருக்குமாகில் பொய்யென்கிற அஞ்ஞானத்தைச் சேதிக் கிறவனென்று முதல்வனைச் சொல்லவேண்டுவதில்லையே? அன்றியும், அனாதி சுத்தனா யிருக்கிறவனென்றும், நின்மலனென்றும், எல்லாவற்

றிற்கு மேலான ஆதியந்தமில்லாத பேரொளியா யிருக்கப்பட்ட முதல்வனென்றும் சொல்லப்படாது."

விடை:—"அங்ஙனமன்று; ஆன்மாவினுடன் கூடி நிற்பதில்லை. அறிவிற்கு அறிவாக வேறுநின்றே யறிவித்து நிற்பன். சிவஞானபோதம்: "மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகம் சேட்டித்த, தென்னு மறையி னியன் மறந்தாய் - சொன்னசிவன், கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா, ணெண்ணுன் சிவனசத்தை யின்று." என்றதனுற் காண்க."

வினு:—"அப்போது முதல்வனுக்குப் பூரணனென்னும் பெய ரில்லையாய் ஆன்மாவினுக்குச் சாயுச்சியமென்கிற பேறு மில்லையாம். தேவாரம்: "இருநிலனுய்த் தீயாகி நீருமாகி யியமான னுயெறியுங் காற்று மாகி, யருநிலைய திங்களாய் ஞாயி றுகி யாகாய மாயட்ட மூர்த்தியாகி." என்னுந் திருத்தாண்டகத்தின்படி பூரண நிலையாகிய திருக்கூத்தும் முதல்வனுக்கு இல்லை யாகவேண்டும்."

விடை:-"பரிபூரணத்திற்குக் குறைவில்லை முதல்வன் மலபரிபாகம் வாராத ஆன்மாக்களிடத்துப் 'பசுமரத்தில் தீப்போல'ப் பிரகாசமில்லாமலிருக்கும். மலபரிபாகம்வந்த ஆன்மாக்களிடத்து 'உலர்ந்த மரத்தில் தீப்போல'ப் பிரகாசித்து மலநாசஞ் செய்து ஆன்மப் பிரகாசத்தை யுண்டாக்கிக் காக்குமென அறிக. சிவதருமோத்தரம்: "பரமசிவன் பராசத்தி பல்லுயிர்க்கும் பயின்றிருக்க, விரவுவதென் னிருளொளிற்கேள் வெய்யவழற் பசுமரத்தின், விரவியதே பசுமரமும் வெந்தவல வெந்து விழும், பருவமுறக் கரணமுறப் பதியுமுறப் பழுதறவே." என்றதனுற் காண்க."

இதுகாறும் வினு விடைகளாற் கூறிய நுட்பங்களனைத்தும், 'ஔவிய மிருக்க' என்றதுமுதல் 'வேறுமுளதோ' என்றவரையில் உள்ளுரையாக அடங்கியிருத்தலை யூகித்தறிக.

ஆன்மாக்கள் ஆணவமலத்தினுல் அனுதியே கட்டுண்டிருத்தலால், 'கல்வுமல மாகின்ற நாகபா சத்தினுற் கட்டுண்ட உயிர்கள்' என்றனர் சிவஞானசித்தியார்: "அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்களோடுஞ், செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான், குறியிலன் கருத்தாவல்லன் போகத்திற் கொள்கை யில்லான், பிறிவிலன் மலத்தினேடும் வியாபிகே வலத்தி லான்மா." என்றதனுற் காண்க. ஆணவமலத்தினை 'நாகபாசம்' என உருவகப்படுத்தினதற்கேற்ப முதல்வனை 'ஞானசஞ்சீவி' என்றனர். இதனுல், முதல்வன்ற னருளினுல் ஆணவமல மடங்குமென்ப துண்மையெனலாயிற்று. சலித்த வின்மையின் 'குணமே' என்ருர். "குணமென்னுங் குன்று" என்ருர் செந்நாப் போதாரும்.

ஐவகை யெனும்பூத மாதியை வருத்து, அதனு
ளசரசர பேதமான
யாவையும் வருத்து, நல் லறிவையும் வருத்து, மறை
யாதிநூ லையும்வருத்துச்,
சைவமுத லாமளவில் சமயமும் வருத்து, மேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வருத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வருக்கவிலையோ?
பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே!
பொய்யிலா மெய்யரறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே!
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) ஐவகை எனும் - ஐவகை யென்று சொல்லப்படுகிற, பூதம் ஆதியை - பூதங்கள் முதலான பிரபஞ்சத்தை, வருத்து - படைத்து, அதனுள் - அதனிடத்தில், அசரம் சரம் பேதம் ஆன - அசரம் சரம் என்று வேறுபட்டிருக்கின்ற, யாவையும் - உயிர்களெல்லாவற்றையும், வருத்து - படைத்து; நல் அறிவையும் வருத்து - (அவைகளுக்கு) நல் உணர்வையும் படைத்து; மறை ஆதி நூலையும் - வேத முதலான நூல்களையும், வருத்து - படைத்து; சைவமுதலாம் - சைவ முதலாகிய, அளவில் சமயமும் வருத்து - அளவில்லாத சமயங்களையும் படைத்து; மேல் - அதற்கு மேல், சமயங் கடந்த - சமயாதீதமான, மோன சமரசம் வருத்த நீ - மோனமாகிய சமரச நிலையைப் படைத்த நீ, உன்னை நான் அணுகவும் - உன்னை யான் அடையவும், தண் அருள் வருக்க இலையோ - குளிர்ந்த கிருபையைப் படைக்க வில்லையோ?, பொய் வளரும் - பொய்யானது விருத்தியடைகின்ற, நெஞ்சினர்கள் - மனத்தை யுடையவர்களாகிய அஞ்ஞானிகள், காணுத காட்சியே - காணக்கூடாத காட்சியே!, பொய் இல்லா - பொய்யில்லாத, மெய்யர் அறிவில் - மெய்யரது அறிவினிடத்து, போத பரிபூரண - ஞான பரிபூரண, அகண்டித ஆகாரமாய் - அகண்டித ரூபமாகி, போக்கு வரவு - போக்கு வரவுகள், அற்ற - இல்லாதிருக்கின்ற, பொருளே - வஸ்துவே!, தெய்வ மறை முடிவு ஆன - தெய்வீகமான வேதத்தின் முடிவாகிய, பிரணவ சொரூபியே - ஓங்கார சொரூபனே!, சித்தாந்த முத்தி முதலே.—என்க.

(வி - ரை) பஞ்சபூதமாதியா லமைந்த பிரபஞ்சம் நிமித்தகாரணனாகிய முதல்வனால் உபாதான காரணமாகிய மாயையினின்றும் காரியப்படுகையால், 'ஐவகை யெனும்பூத மாதியை வருத்து' என்றனர். சிவஞான

**சித்தியார்:** "காரிய கார ணங்கண் முதற்றுணை நிமித்தங் கண்டாம், பாரின் மண்டிரிகை பண்ணு மவன்முதற் றுணைநி மித்தந், தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தியாக, வாரியன் குலால னய்நின் றாக்குவ னகில மெல்லாம்." என்றதனுற் காண்க. அசைவோடு கூடிய சேதனப் பிரபஞ்சம் முதல்வன் அசைவித்தா லசையு மாகலினுலும், அறிவோடு கூடிய சேதனப் பிரபஞ்சம் முதல்வன் அறிவித்தா லறியு மாகலினுலும், 'அசாசர பேதமான யாவையும் வகுத்து' என்றனர். முதல்வன் தனது சமவாய திரோதான சத்தியினைக் கொண்டு ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தலின், 'நல்லறிவையும் வகுத்து' என்றனர். பரமகாரணராய முதல்வன் கிருபையினுல் அனந்தேஸ்வர ஸ்ரீகண்டேஸ்வராதி மூர்த்திகளைத் திருமேனியாகக் கொண்டு பிரமாதி தேவர்கட்கும், சனற்குமாரராதி தேவரிஷிகளுக்கும், வசிஷ்டாதி மனுஷ்ய ரிஷிகளுக்கும், சேஷன் முதலிய சர்ப்ப ராஜர்கட்கும் வேதாகமங்களை யுபதேசியாதிருக்கிற் சொல்லுவாரு மறிவாரு மின்றிக், குருசிஷ்ய சம்பிரதாயப் பிரவிர்த்தியு மின்றித், தருமார்த்தகாம மோக்ஷமென்னுஞ் சதுர்வித புருஷார்த்தங்களையு மடைவாரற்றுப்போ மாகையால் 'மறையாதி நூலையும் வகுத்து' என்றனர். இதனுல் 'வேதம் ஒருவராற் கூறப்பட்டதன்று; அநாதி நித்தியம்' என்னும் பாட்ட பிரபாகர மதங்களை மறுத்தவாருயிற்று. 'ஆதி' என்றதனுல் ஆகமத்தினையுங் கொள்க. இதனை சம்ஹிதாக்கிரமம், சௌகக்கிரமம் என இருவிதமாக வுண்டாக்க, அது பாச பந்த முதலிய அறுவிதமாயும், பஞ்சவிதமாயும் ஒருவர் உபதேச வழியாக வருவது.

**சம்ஹிதாக்கிரமமாவது:** சதாசிவதேவ நாயனர் காமிக முதலிய சிவபேதம் பத்தினையும் முதற்கண் அணுசதாசிவர்க்கும், பின்பு அநாதிஸ்வய ஞான முதலான பதினெட்டு ருத்திரர்கட்கும் அனுக்கிரகஞ் செய்வது.

**சௌகக்கிரமமாவது:** சிவன் அட்டவித்தியேசுரர்க்கு முதலனுக்கிரகஞ் செய்து, பின்பு கீழுள்ள உருத்திரர்களுக்கு உரைப்பது.

சம்பந்தம் ஆறுவன :—

1 பாசசம்பந்தமாவது - சிவனுக்கும் அணுசதாசிவர்க்கும்,
2 மகாசம்பந்தம் - அனந்த தேவர்க்கும் சீகண்டர்க்கும்,
3 அந்தராளம் - சீகண்டர்க்கும் தேவர்க்கும்,
4 திவ்வியம் - தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும்,
5 திவ்யாதிவ்யம் - முனிவர்க்கும் மனிதர்க்கும்,
6 அதிவ்வியமாவது - குருக்களுக்குஞ் சீஷர்களுக்குமாம்.

இவற்றில் அநாதியி லணுசதாசிவரைநீக்க மற்றவை பஞ்சபந்த மெனப்படும். மற்று மிவற்றின் விரிவை வாதுளாத்திலும், கிரணத்திலுங் காண்க. **சிவஞானசித்தியார்:** "ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு, காரண

னருளானாகிற் கதிப்பவ ரில்லையாகு, நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ், சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றிடாவே." எனவும், கந்தபுராணம்: "ஆனதன் னியற்கைக ளனைத்துங் கண்ணுதல், வானவ னாகம மறையின் வாய்மையான், மேனிகழ் தொகைவகை விரியதாகவே, தானருள் புரிந்தனன் றலைவி கேட்கவே." எனவும், "வேதமே முதலா யுள்ள வியன்கலை யனைத்துந் தொன்று, ளோதினா னவனே யெங்கட் குரைத்திட வுணர்ந்த மன்றே, யீதுநீ யவற்றிற் காண்டி யாகுமொன் றாகக் கொண்டாய், பேதையோ பெரிது மென்னப் பிதாமக னினைய சொற்றான்." எனவும், வருவனவற்றாற் காண்க.

ஆன்மாக்களின் பலவகைப்பட்ட கன்மங்களுக் கீடாக வேதத்தின் கண்ணே பொதுவாக முதல்வன் பல சமயங்களைக் கூறிவைத்துள்ளாராகலின், 'சைவமுதலா மளவில் சமயமும் வகுத்து' என்றனர். இச் சமயங்களனைத்து மெய்யன்றெனக் கண்டு, திருவருளை துணையாகக் கொண்டு வேதாந்தத்தி னுண்மையினைத் தேர்ந்து, சகல சமயங்களையுஞ் சோபானமாகக் கொண்டு, அதீதமாக விளங்கும் சமயாதீதமாகிய சித்தாந்த செந்நெறியை யனுபவிப்பார்க்கு யாவுஞ் சமரசமாகலின், 'சமயங் கடந்த மோன சமரசம் வகுத்து' என்றனர். இத்தகைய அரிய காரியங்களை யெல்லாம் வகுத்த நீ அடியேன் தேவரீருடன் இரண்டறக் கலப்பதற் கேதுவாகிய திருவருள் என்னிடத்திற் பதிதற்குக் கருணைவைத்தா யில்லையே யென்பார், 'உன்னைநா னணுகவுந் தண்ணருள் வகுக்க விலையோ' என்றனர்.

தன்னை விரும்பாதவர்கட்குப் பொய்யனாய் விளங்குவனென்பார், 'பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே' என்றும், தன்னை விரும்பினவர்கட்கு மெய்யனாய் விளங்குவனென்பார், 'பொய்யிலா மெய்யரறிவிற் போதபரிபூரண வகண்டிதாகாரமாய்ப் போக்குவர வற்ற பொருளே' என்றுங் கூறினர். தேவாரம்: 'மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு விரும்பாதவரும் பாவியர்கட் கென்றும், பொய்யானைப் புறங்காட்டி லாடலானைப் பொன் பொலிந்த சடையானைப் பொடிகள் பூதிப், பையரவ மசைத்தான் றன்னைப் பரந்தானைப் பவளமால் வரைபோன் மேனிச், செய்யானைத் திருநாகேசுரத்துளானைச் சேராதார் நன்னெறிகட் சேராதாரே." என்றதனாற் காண்க.

ஏகாக்ஷரமாகிய ஓம் என்னும் மந்திரத்திலே சர்வ வியாபகராகிய சிவபெருமான் உளர் ஆகலின், 'தெய்வமறை முடிவான சொரூபியே' என்றனர். சிவதருமோத்தரம்: "ஓமித்யேகாக்ஷரே மந்திரேஸ்திதஃ ஸர்வகதஃஶிவஃ" எனவும், நிருசிம்மதாபிநி: "அகாரம் ப்ரமாணம் நாபௌ உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே மகாரம் ருத்ரம் ப்ருமத்யே ஓங்காரம் ஸர்வேஸ்வரம் த்வாதஸாந்தே" எனவும், மாண்டூக்யம்: "ஶிவோத்வைத ஏவ மோங்காரஃ" எனவும் வருவனவற்றாற் காண்க.

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினு
லாகின்ற வாக்கைநீர்மே
லமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றிருந்தேன்;
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை;
எந்தநிலை பேசினு மிணங்கவிலை; அல்லா
லிறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணினு னெஞ்சது பகீரெனும்; துயிலுறு
திருவிழியும்; இரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கம்; இவை யென்கொலோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) ஐந்துவகை ஆகின்ற - ஐந்துவகையாயிருக்கின்ற, பூத பேதத்தினுல் - பூதங்களின் வேறுபாட்டால், ஆகின்ற ஆக்கை - உண்டாக் கப்படுகிற சரீரமானது, நீர்மேல் அமர்கின்ற - நீரின்மேலமைந்த, குமிழி என - மொக்குள்போல, நிற்கின்றது என - நிற்கின்றதென்று, நான் அறி யாத காலம் எல்லாம் - நான் உணராத காலமுழுதும், புந்தி மகிழ் உற - மனமகிழ்ச்சி மிகும்படி, உண்டு உடுத்து இன்பம் ஆவதே - உண்டு உடுத்து இன்பம் அனுபவிப்பதே, போந்த நெறி என்று இருந்தேன் - கைவந்த நல்ல மார்க்கமென்று நினைத்திருந்தேன்; நினது அருள் வந்து - உனது திருவருள் வந்து, பூராயமாக உணர்த்த - ஆதியந்தமாக அறிவிக்க, இவை - இவைகள், போன வழி தெரியவில்லை - போனவழி தோற்றவில்லை; எந்த நிலை பேசினும் - எந்த நிலையை எடுத்துப் பேசினும், இணங்க இல்லை - சம்மதிக்க இல்லை; அல்லால் - அல்லாமலும், இறப்பொடு பிறப்பை - மரணத்தோடு ஜனனத்தையும், உள்ளே எண்ணினுல் - மனத்தில் நினைத் தால், நெஞ்சது - மனமானது, பகீர்என்னும் - பகீரென்றது; இரு விழியும் - இரண்டுகண்களும், துயில் உறுது - நித்திரை செய்யாது, அங்கம் - சரீர மானது, இரவுபகலாய் - இரவுபகலாக, செந்தழலில் - செந்தீயி லிட்ட, மெழுகு ஆனது - மெழுகா யுருகுகின்றது; இவை என் - இத்தன்மைகள் என்னிடத்துண்டாவதற்குக் காரணம் யாது?, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) ஐந்துவகையாகின்ற பூதமாவன: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய முதலியன. 'பேதத்தினுல்' என்றதனுல் தன்மாத் திரைகளாகிய சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்தினையும்;

அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கினையும்; கன்மேந்திரியங்களாகிய வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஆகிய ஐந்தினையும்; ஞானேந்திரியங்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தினையுங் கொள்ளல் வேண்டும். இவ்விருபத்து நான்கு தத்துவங்களும் உடலினுக்கு இன்றியமையாதனவாகலின், 'ஐந்து வகையாகின்ற பூதபேதத்தினாலாகின்ற வாக்கை' என்றனர். இவ் விருபத்து நான்கிற்கும் ஆன்மதத்துவம் என்று பெயர். ப்ரஸ்நோபநிஷதம்: "ப்ருதிவீசப்ருதிவீமாத்ரா ஶாயச்சாபோமத்ராஶதே தேஜஸ்ச தேஜோமாத்ராவாயு ஸ்வாயு மாத்ராஶாகாசச்சா காஶமத்ராஶ்ச்ஶத்த த்ருஷ்டவ் யம்சஸ்ரோத் ரஞ்ச்ரோதவ்யம்ச க்ராணஞ்ச க்ராதவ்யம்சர சக்ஶ்ச தவ்யம் சத்வக்ஶ ஸ்பர்ஶயிதவ்யம்ச வாயுஸ்ச விஶர்ஜயிதவ்யம்ச பாதௌச கந்தவ் யம்ஶமநச்ச மந்தவ்யம்ச புத்தீஸ்சபோக்தவ்யம் சாஹம் காரஸ்சாஹம் கர்த்தவ்யம்ச சித்சம்ச சேதயிதவ்யதம்ச தேஜஸ்ச வித்யோபியிதவ்யம்ச ப்ராணஸ்சவிதராயிதவ்யம்ச ||" என்றதனாற் காண்க.

ஆன்மதத்துவங்களா லாக்கப்பட்ட ஆக்கை நிலையற்றதென்பார், 'ஆக்கை நீர்மே லமர்கின்றகுமிழி' என்றார். சித்தாந்ததரிசனம்: "நீர்க் குமிழி யின்னற்கு மூண்டு நிலையில்லை, யாக்கைக்கென் றெண்ணி யறிந்து." எனவும், "நீரிற் குமிழி யிளமைநிறைசெல்வ, நீரிற் சுருட்டு நெடுந்திரைகணீரி, லெழுத்தாகும் யாக்கை நமரங்காளென்னே, வழுத்தாத தெம்பிரான் மன்று." எனவும் வருவனவற்றாற் காண்க. அறியாதகாலமாவது பதி நூல்களை விசாரியாத காலமாம். அங்ஙனம் விசாரியாதகாலத்து, கிருதகுளபாயசமுதலிய அறுசுவை யடிசில்களை உண்ணுதலும், பஞ்சுபட்டாதி யாடைகளை யணிதலும், வனிதையராதியர் இன்ப நுகர்தலும் அப்பிரயோசன மென எண்ணாது நிலையுடையதென வெண்ணி யுழன்றேனென்பார், 'புந்திமகி ழுறவுண் டுடுத்தின்பமாவது போந்தநெறி யென்றிருந்தேன்' என்றனர். சிவானந்தமாலை: "நல்ல வறுசுவையு நாவினுனி மாத்திரமே, மெல்ல விருவிரலாம் வேறில்லை - மெல்ல, விருவிரலைத் தான்கடக்க மாட்டாத நெஞ்சே! பொருட்டலைத் தான்கடப்பாய் போய்." எனவும், "வீடொழியப் பேறில்லை யென்றென்றும் வேதங்க, ளோடியறையும் பொருளை ஞானகுரு நீடுமருட், கண்ணாலே சொன்ன கருணைப்பிரான் றனைநா, னெண்ணாதே யுண்டிருப்பதென்." எனவும், நாலடியார்: "குடருங் கொழுவுங் குருதியு மென்பு, நொடரு நரம்பொடு தோலு - மிடை யிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று, ளெத்திறத்தா ளீர்ங் கோதை யார்." எனவும் வருவனவற்றாற் காண்க.

அருண்மேலிட்டகாலத்து, அவ்வருள் தலைமையாக இருந்து யாவையு நடத்த, அவ்வருள் வியாபகத்தில் வியாப்பியமாக நின்ற எனக்கு மருள் சம்பந்தமான எவையுந் தோன்றாது மறைந்தனவாகலின், 'அருள்வந்

துணர்த்தவினை போனவழி தெரியவில்லை' என்றனர். ஆனந்தருத்திரேச ரந்தாதி: "வேண்டுவார் வேட்ட யாவும் பெற்றபின் விரையா நிற்ப, தாண்டருள் காஞ்சி மூதூ ரானந்த ருத்தி ரேசன், மாண்டகு கமல பாத மற்றது பெற்றுற் பின்றைக், காண்டகு மனமே வேட்டுக் கவர்பொருள் வேறொன் றின்றே." என்றதனாற் காண்க.

பிறக்கின்றகாலத்துக் கருப்பாசயப்பை உறுத்துதலினாலும், அதிற் சலம் பூரித்தலினாலும், உதராக்கினி சுடுதலினாலும், பிரசூதவாயு முரித்துத் தள்ளுதலினாலும், யோனித்துவார நெருக்கத்தினாலும், 'மலை யிறுத்திக் கொண்டது போல'வும், 'கடலின்கீழ் வீழ்த்தி மிதித்தல்போல'வும், 'இருப்புக்கடத்தி லடைத்து நெருப்பாற் சுடுதல்போல'வும், 'மலைமேல் நின்றானைத் தலைகீழாகத் தள்ளுதல்போல'வும், 'ஆலையிலிட்ட கரும்பு நெருக்குண்டல்போல'வும் வருந் துன்பங்கள் பலவாயிருத்தலினாலும்; இறக்கின்ற காலத்து நாவும், இதழும், எயிறுங் கறுத்திடவும், நெற்றியும் கண்டமும் வியர்த்திடவும், உச்சியிற் சூடெழுந்திடவும், உடலம் அல்லியின் றண்டெனச் சில்லிடவும், முடி சாயவும், முகஞ் சோரவும், விழி யிருளடைய வும், நெடுஞ்சுவாசம் வாய்வழி நின்றெழுந்து உடலை யலைக்கவும், நவத் துவாரமு மடைந்து விக்க லுண்டாகித் தேக நடுங்கி மூர்ச்சை மேலாடி உயிர் சிதையவும் வருந் துன்பங்கள் பலவா யிருத்தலினாலும், 'இறப்பொடு பிறப்பையுள்ளே, எண்ணினு னெஞ்சது பகீரெனும்; துயிலுறா திருவிழியு மிரவுபகலாய்ச், செந்தழலின் மெழுகானது' என்றனர். சிவதருமோத்தரம்: "என்றென் றெண்ணி யிருக்குமுயி ரிடர்பட்டழியு மெழில்வரைக்கீ, ழொன்று மொருவன் றனைப்போலக் கருப்பாசயப்பை யுறுத்துதலான், மன்ற வுததி மறிந்தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடு, நின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள நிறையழிந்தே." எனவும், "அங்கியதனிற் றங்கியிடு மயோமபத்த கும்பத்திற், றங்கு மொருவன் றபனம்போற் றபன மெய்துந் தாயுதரத், தங்கி சுடவே யழலனைய சூசி யதனாலாகத்தைப், பங்கித் திடவே படுமிடரி லிருநாற் குணிதம் பட்டழுங்கும்." எனவும், "கருப்பா சயமே கட்டமதா மதனி னதிகங் கடுங்காலு, முரிக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மங்கிலையே, மரிக்க வாலைக் கரும்பெனவே யோனிவழியின் வலிதொலைய, நெருக்கப்பட்டு நிலமிசையே தோன்று முயிரு நிலையுடனே." எனவும், "தனத்தினை மனைதனைத் தானி யந்தனை, நினைத்தினி யெவரனு பவிப்பவர் நீங்குநா, ளெனக்கிவை யன்னிய மாகு மேயெனு, மனத்துயர் மலியவே மாயு மாவியே." எனவும், மெய்ஞ்ஞான விளக்கம்: "வந்திடு மரண துன்ப மறித்துரை செய்யப்போமோ, வுந்திமே லையும் பித்து முணர்வொடு பொறிக லங்கி, நந்திடா விருளேமூடி நாவுலர்ந் தலமந்தென்னே, யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்மட ங்கே." எனவும், திருக்கடைக்காப்பு: "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மேலுந்தி, யலமந்த போதாக வஞ்சே

லென் றருள்செய்வா னமருங் கோயில், வலம்வந்து மடவார்க ணடமாட முழவதிர மழையென் றஞ்சிச், சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க் குந் திருவை யாறே." எனவும் வருவனவற்றாற் காண்க. (5)

காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போல்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட்(டு), அல்லலாங்
காப்பிட்(டு), அதற்கிசைந்த
பேரிட்டு, மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்,
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட் (டு),
ஏரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுறுக்கி, இடர்தீர்த் (து),
"இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்துதுயில் கொண்மின் !" என்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே !
சித்தாந்த முத்திமுதலே !
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே !
சின்மயா னந்தகுருவே !

(இ - ள்) கார் இட்ட - கருமையாகிய, ஆணவக்கரு அறையில் - ஆணவ மலத்தால் உளதாகின்ற கருவாகிய சிறு வீட்டில், அறிவு அற்ற - உணர்ச்சி யில்லாத, கண் இலா - கண்ணற்ற, குழவியைப்போல் - குழந்தையைப் போல, கட்டுண்டு இருந்த எம்மை - கட்டுபட்டிருந்த எங்களை, வெளியில் விட்டு - வெளியில் வரச்செய்து ; அல்லல் ஆம் காப்பு இட்டு - துன்பமாகிய காவலை அமைத்து ; அதற்கு இசைந்த பேர் இட்டு - அதற்குப் பொருத்த மான பெயரமைத்து ; மெய் என்று பேசு - உண்மையென்று பேசப்படு கின்ற, பாழ் பொய் உடல் - பாழாகிய நிலையற்ற சரீரமானது, பெலக்க - வலுமை பெறும்படி, விளை அமுதம் ஊட்டி - விளைகின்ற (பலவகை) உணவுகளை உண்பித்து ; பெரிய புவனத்திடை - பெரிதாகிய உலகத்தின் கண், போக்கு வரவு உறுகின்ற - இறப்புப் பிறப்புகளாகப் பொருந்துகின்ற, பெரிய விளையாட்டு அமைத்திட்டு - பெரிதாகிய லீலையை அமைத்து வைத்து ; ஏர் இட்ட - அழகுபொருந்திய, தன் மொழி - தன் சொல்லாகிய, சுருதி - வேதமார்க்கத்தில், தப்பில் - தவறினால், (அப்படித்தவறின வுயிர் களை) நமனைவிட்டு - யமனை அனுப்பி, இடர் உற உறுக்கி - துன்பப்படும் படி தண்டித்து ; இடர் தீர்த்து - அத் துன்பத்தையும் நீக்கி, இரவு பகல் இல்லாத - இராப்பகல்கள் அற்ற, பேரின்ப வீட்டினில் இசைந்து - பேரா னந்த வீட்டில் பொருந்தி, துயில்கொண்மின் என்று - தூங்குங்கள் ! என்று, சீரிட்ட - (எங்களுக்கு எல்லாச் சிறப்புகளையும்) அமைத்து வைத்த, உலகு

அன்னை வடிவு ஆன எந்தையே - உலக மாதாவின் உருவமான எமது தந்தையே!, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) பூதவிருளானது எல்லாப் பதார்த்தங்களையு மறைத்துத் தன்னைக் காட்டி நிற்கும். ஆணவமலமானது தன்னையுங் காட்டாது தனக்குள்ளே யிருக்கிற ஆன்மாவையுங் காட்டாது இருக்குமாகலின், 'காரிட்ட வாணவம்' என்றனர். திருவருட்பயன்: "ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு, மிருபொருளுங் காட்டா திது." என்றும், சிவப்பிரகாசம்: "ஏகமாய்த் தங்காத வெல்லைகளின் மீளு, மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட, மோகமாய்ச் செம்பிலுறு களிம்பேய்ந்து நித்த, மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்." எனவும் வருவனவற்றாற் காண்க.

சகல வுயிர்களையும் ஆணவமலம் பிடித்து, 'மாணிக்கமணியை நஞ்சு வாய்க்கு ளடக்கின சர்ப்பம்போல'வும், 'பச்சையாய் முளைத்து விறகாகு மட்டும் அக்கினியைத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த காட்டம்போல'வும், ஞானக்கண்ணை மறைத்து அறிவுஞ் செயலு மிறக்கும்படி செய்யுமாகலின், 'அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்தவெமை' என்றனர். போற்றிப் பஃறொடை: "மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத், தானடக்குங் காட்டத் தகுதியும்போன் - ஞானத்தின், கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தா, லெண்ணுஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கும்." என்றதனாற் காண்க.

மாதாவினிடத் துண்டான சுரோணிதத்திலே பிதாவினிடத்துண்டாகிய சுக்கிலம் 'பவளப்பையில் முத்தை வைத்தாற்போல'ப் படுகிற நாளிற், சீவனானது பிராணவாயு வாகனமாகவும் மனது வழியாகவுஞ், சிவனுடைய வாஞ்ஞையாலே சென்று, சுக்கில சுரோணிதத்தின் தலையிலே பதிந்து, கன்மத்துக் கீடாக மூன்றரைக்கோடி யுரோமத் துவாரமும், எழுபத்தீராயிர நாடியும், வாயுவிற் பிரதானமான தச வாயுவும், நவத் துவாரமும், எண்சா ணுடம்பும், எழு தாதுவும், ஆறுதாரமும், ஐந்து பொறியும், நாலு கரணமும், மூன்று மண்டலமும், இரண்டு வினையுமெனப் பேர்பெற்று இவற்றை யொன்றெனப் போர்த்த புறத்தோலுமாக ரூபிகரித்து, இந்த ரூபத்தை யுடைய சீவனு மன்னரசத்திற்குப் பிராரத்தமளவுந் தன்னுடைய தேகத்தி லுந்திச்சக்கரத்தின் மேலே கிடந்து, ஆறுமாதமுத லுந்தி நாளத்தாலே மாதாவிடத்திலே அன்னரசமுங் கொண்டு, அந்த அன்னரசத்தின் மிகுதியாலே சுழுமுனை நாடி யடைபட்டு, இடையும் பிங்கலையுந் திறந்து, பிராணவாயு புகுந்து மேனோக்கி நாசித்துவாரங்களாலே விட்டவெழுத்தாலே நாளொன்றிற் கிருபத்தோ ராயிரத்தறுநூறு சுவாச வுச்சாரணந் தோன்றி, முப்பத்திரண்டு நூறாயிரத்து நாற்பதினாயிர முருச்சென்ற வாறே யுதரகன்மந் தொலைந்து, மாதாவினிடத்து உண்டான பிராணவாயுவிலே முதல்வனுடைய காருண்யத்தாலே சத்தி யதிஷ்டித்துக்கொண்டு,

இந்தச் சத்தி பலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையைப் பூமியிலே பதிக்க வேண்டிப் 'பிரஜ்ஞாபத்தியம்' என்னும் பேர் பெற்று, இவனுடைய போதம்போல இவனுடைய தேகமுங் கீழ்நோக்கி விழும்படித் தன்னுடைய பலத்தாலே தலைகீழாகத் தள்ளிப் பூமியில் வரச்செய்வனாகலின், 'கட்டுண் டிருந்த வெமை வெளியில்விட்டு' என்றனர். திருவுந்தியார்: "மூலபிருந் தாரை முற்றத்தே விட்டவர், சாலப் பெரியரென் றுந்தீபற, தவத்திற் றலைவரென் றுந்தீபற." என்றதனாற் காண்க.

பாலகுமார விருத்தப்பருவத்துச் சகலாவத்தைப்படுத்தி, பருவத்துக் கேதுவான கலாதிஞானத்தினைக் கொடுத்துச் செயலற்ற வுயிர்கள் வாங்கிக் கொள்ள வாழ்வதற்கேற்ற முப்பத்தாறுவகைக் கருவிகளையுங் கொடுத்து உயிருக்கு உயிராயிருந்து காப்பனாகலின் 'அல்லலாங் காப்பிட்டு' என்ற னர். இக்காப்பினை அல்லலென்ப தென்னையோவெனின், இக் காப்பு கன் மத்தினுக்குத் தக்கபடி யமைய ஆகாமிய மேறுதற்குக் காரணமாய்ச் சென் மத்தினை யுண்டாக்குமாகலால் என்க. போற்றிப் பஃறொடை: "பாலைப் பசும்பதத்தும் பாலனு மப்பதத்து, நாளுக்கு நாட் சகல ஞானத்து - மூள் வித்துக், கொண்டாளை வாளக் கருவிகொடுத் தொக்கநின்று, பண்டாரி யானபடி போற்றி." என்றதனாற் காண்க.

பிறந்த நட்சத்திரத்திற்குரிய பெயர் வைக்கவேண்டு மாகலானும், அப் பெயரும் பாசப்பெயர் பசுப்பெயராக வில்லாமல், பதிப்பெயராக இருக்க வேண்டுமாகலினாலும், 'அதற்கிசைந்த பேரிட்டு' என்றனர். பாசப்பெயர்க ளாவன - உலகத்தி லழிதற்பாலனவாகிய பொருள்களின் பெயர்கள். பசுப் பெயர்களாவன - பிறத்தலை இறத்தலையுடைய சிறு தெய்வப் பெயர்கள். பதிப் பெயர்களான - பரமேஸ்வரன் பெயர்களும் அவருடைய அடியார் பெயர்களுமேயாம். இறைவனிட்ட பெயர் சிவன். 'அமுதம்' என்பது அன்னத்தினைச் சாப்பிடத் தகுந்த அனைத்திற்கும் அன்னமென்றே பெய ராகும். 'போக்கு' என்பது மரணம். 'வரவு' என்பது பிறப்பு.

வேதாகமங்களிற் கூறிய விதிவிலக்குகளை யறிந்து அவ்வழி நடவாத வர்கள் நமனால் தண்டிக்கப்படுவ ராகலின், 'சுருதி மொழிதப்பி னமனை விட் டிடருற வுறுக்கி' என்றனர். போற்றிப் பஃறொடை: "தான்மாள, வெற்றிக் கடுஞ்சூதர் வேகத் துடன்வந்து, பற்றித்தம் வெங்குருவின்பாற் காட்ட - விற்றைக்கு, மில்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து, நல்லதோ ரின்சொ னடுவாகச் - சொல்லியிவர், செய்திக்குத் தக்க செய லூறத்து வீரென்று, வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையறஞ், செக்கி னிடைத் திரித்துந் தீவாயி லிட்டெரித்துந் தக்க நெருப்புத்தூண் டழுவு, வித்து - மிக்கோங்கு, நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து, மீரா வுன் னூனைத் தின்னென் றடித்தும் - பேராமல், லங்காழ் நரகத் தழுத்து வித்தும் பின்னுந்தம், வெங்கோப மாறாத வேட்கையரா - யிங்கொருநா,

ளெண்ணிமுதற் காணுத வின்னற் கடுநரகம், பன்னெடுநாட் செல்லும் பணி கொண்டு" என்றதனுற் காண்க. இங்ஙனம் தண்டிக்கப்படுதலினுல் பாவ மனைத்துந் தீரப்பெற்றுச் சுகமடைவராகலின், 'இடர் தீர்த்து' என்றனர்.

உணர்ந்தகாலத்து மாயையும் ஒடுங்கினகாலத்து ஆணவமுங் கூடாமல் ஞானமு மானந்தமுமே பிரகாசிக்கத்தக்க பரமாகாயத்திலே கூடிப் பொருந்திநின் றனுபவிக்கச் செய்வஞகலின், 'இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி லிசைந்துதுயில் கொண்மினென்று, சீரிட்ட' என்றனர். திருவுந்தி யார்: "இரவுபக லில்லா வின்பவெளி யூடே, விரவி விரவிநின் றுந்தீபற, விரையவிரையநின் றுந்தீபற." என்றதனுற் காண்க.

ஒரு புத்திரனைத் தனது வயிற்றினின்று வெளிப்படுத்தலும், காப்பிடுத லும், பேரிடுதலும், அமுதூட்டலும், விளையாட் டமைத்தலும், உறக்கி யிடர் தீர்த்தலும், துயில்கொள்ளச் செய்தலுமாகிய தொழில்களைச் செய்யும் உல கன்னையைப்போல இறைவனை உருவகஞ் செய்தனராதலின் 'உலகன்னை வடிவான வெந்தையே' என்றனர். (6)

கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனையயான்
காண்தக விருக்கநீ ஞானவனன் மூட்டியே,
கனிவுபெற வுள்ளுருக்கிப்,
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே, பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல்லுவேன் ?
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்தமீதும்,
அத்துவித நிலையரா யென்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடும்,
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே !
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே !
சின்மயா னந்தகுருவே !

(இ - ள்) கரு மருவு - கருப்பையிற் பொருந்திய, குகை அனைய - குகையையொத்த, காயத்தின் நடு உள் - சரீரத்தி னிடையில், களிம்பு தோய் - களிம்புபற்றிய, செம்பு அனைய - தாமிரத்தை யொத்த, யான் - நான், காண்தக இருக்க - காணலாம்படி யிருக்க, நீ ஞான அனல்மூட்டி - நீ ஞான நெருப்பினை மூள்வித்து, கனிவு பெற - இளகும்படி, உள் உருக்கி - உள்ளே தானே உருகப்பண்ணி, பருவமது அறிந்து - பக்குவ முணர்ந்து, நின் அருள் ஆன - உன் திருவருள் ஆகிய, குளிகைகொடு பரிசித்து -

குளிகையினால் தீண்டி, வேதிசெய்து - வேதித்து, பத்துமாற்றுத் தங்கம் ஆக்கி - பத்துமாற்றுப் பசும் பொன்னாகச் செய்து, பணி கொண்ட - (என்னை) அடிமை கொண்ட, பட்சத்தை - உனது பெருங் கருணையை, என் சொல்லுகேன் - என்ன சொல்லுவேன்?, அருமை பெறு - அருமையைக் கொண்ட, புகழ் பெற்ற - கீர்த்தி யடைந்த, வேதாந்த சித்தாந்தம் - வேதாந்த சித்தாந்தங்களாகிய, ஆதியாம் அந்தமீதும் - ஆதியந்தங்களின் மேலும், அத்துவித நிலையராய் - அத்துவித நிலையை யுடையவராகி, என்னை ஆண்டு - என்னை ஆட்கொண்டு, உன் அடிமை ஆனவர்கள் - உனக்கு அடிமைப்பட்டவர்களுடைய, அறிவின் ஊடும் - அறிவினிடத்தும், திரு மருவு - அழகு பொருந்திய, கல்லால் அடிக்கீழும் - கல்லாலமரத்தின் அடியிலும், வளர்கின்ற - சிறந்திருக்கிற, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) மூசையொன்றில் களிம்புடன் கூடிய செம்பினையிட்டு, அனலில் வைத்து, அது உருகிவருஞ் சமயத்துப் பரிசனவேதியைக் கூட்டிப் பெரியோர் தங்கமாக்குதல்போல, உடலிலே ஆணவமலத்துடன் கூடிய சீவனுக்கு ஞானத்தினைத் தந்து, அந்த ஞானத்தால் அச் சீவன் பரிபக்குவ மடையுந் தருணத்து அருளினைக் கூட்டி யாசாரியர் சீவன் முத்தனாக்கி யாண்டுகொள்வாராகலின், 'கருமருவு குகையனைய......என் சொல்லுகேன்?' என்றனர். சிவஞானசித்தியார்: "செம்பிரதக் குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச், செம்பொன்னுடன் சேருமலஞ் சிதைந் தாற்சிவ, னம்பனுடன் கூடுமெனிற் பொன்போலல்ல, னற்குளிகை போல வர னணுகுமலம் போக்கி, யம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு, மக்குளிகை தானும்பொன் னாகா தாகு, மும்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய, னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே." என்றதனாற் காண்க.

'பணிகொண்ட' என்றதனால், 'செம்பொன் இரதக்குளிகை தாக்கக் களிம்பற்றுப் பொன்னுமாறுபோல' ஆன்மாவுஞ் சிவஞானத்தினாலே மலம் போய்ச்சிவனை யடைந்தவிடத்து இவனு மவனைப்போலப் பஞ்சகிருத்தியங் களையுஞ் செய்தற் குரித்தாவனென்னுஞ் சிவசமவாதியை மறுத்தவாறு யிற்று. என்னை? களங்கினைப் போக்கின பொன்னானது தான் வேறே யொரு செம்பிற் களிம்பைப் போக்கமாட்டாது, குளிகையே போக்கும், இது பொன்னாகவே யிருக்கு மாகையாலும், மல நீங்கியவழியுஞ் சிவானுபவ மொன்றற்கே சுதந்தரமாய், உயிர், ஐந்தொழி லெல்லாவற்றிற்குஞ் சுதந் தரனாகிய முதல்வனோ டொத்ததன்றாதல் செல்லாமையானும் என்க.

வேதாந்தமென்பது - ஆன்மாக்களுக்குப் பொதுவாகக் கூறியுள்ள வேதமுடிவு. சித்தாந்தமென்பது - இருவினையொப்பு மலபரிபாகம் வாய்ந்த சத்திநிபாத வுத்தமர்க்குச் சிறப்பாகக் கூறியுள்ள ஆகமமுடிவு. 'ஆதியா மந்தமீதும்' என்றதனால் நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்த

முதலியவைகளைக் கொள்க. இதனை "வீறியவே தாந்தமுன் மிக்க கலாந்தவரை, யாறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ?" என இவ்வாசிரியர் கூறுவதனானுங் காண்க.

'அத்துவித நிலையரா யென்னை யாண்டு' என்றதனால், அத்துவித மென்ற சொல்லிற்கு ஒன்றென்று சாதிப்பார் மத மறுக்கப்பட்டு, இரண்டல்ல என்று பொருள்படும் உண்மையினை நிறுத்தியவாறாயிற்று; அத்துவித மென்ற சொல்லிற்கு ஒன்றெனப் பொருள் கொளின், 'என்னை யாண்டு' என்னுஞ் சொற்களுடன் மாறுபடு மென்பதனை யூகித்தறிக. "சிவமாக்கி யெனையாண்ட" என்றார் ஆளுடையவடிகளும். (7)

"கூடுத லுடன்பிரித லற்று, நிர்த் தொந்தமாய்க்,
குவிதலுடன் விரிதலற்றுக்,
குணமற்று, வரவினொடு போக்கற்று, நிலையான
குறியற்று, மலமுமற்று,
நாடுதலு மற்று, மேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்று, விந்து
நாதமற் (று), ஐவகைப் பூதபே தமுமற்று,
ஞாதுருவின் ஞானமற்று,
வாடுதலு மற்று, மே லொன்றற் றிரண்டற்று,
வாக்கற்று, மனமுமற்று,
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலை" என்ற மௌனியே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) கூடுதலுடன் பிரிதல் அற்று - கூடுதலுடன் பிரிதலும் இல்லாததாகி, நிர்த்தொந்தம் ஆகி - தொந்தமல்லாததாகி; குவிதலுடன் விரிதல் அற்று - கூம்புதலும் மலர்தலும் இல்லாததாகி; குணம் அற்று - குணரகிதமாகி; வரவினொடு போக்கு அற்று - வருதலும் போகுதலும் இல்லாததாகி; நிலையான குறி அற்று - நிலையாகிய அடையாளம் இல்லாததாகி; மலமும் அற்று - மலரகிதமாகி; நாடுதலும் அற்று - நினைத்தலும் இல்லாததாகி; மேல்கீழ் நடு பக்கம் என - மேல் கீழ் நடு பக்கமென்று, நண்ணுதலும் அற்று - சொல்லப் பொருந்துதலும் இல்லாததாகி; விந்து நாதம் அற்று - விந்துநாதங்கள் இல்லாததாகி; ஐவகை பூதபேதமும் அற்று - பஞ்சபூத வேறுபாடுகளும் இல்லாததாகி; வாடுதலும் அற்று - வாட்டமடைதலும் இல்லாததாகி; மேல் - மேலும், ஒன்று அற்று - ஒன்றாந்தன்மை இல்லாததாகி; இரண்டு அற்று - இரண்டாந்தன்மை இல்லாததாகி; வாக்கு அற்று -

வார்த்தை யில்லாததாகி; மனமும் அற்று - மனமும் இல்லாததாகி; மன்னு - நிலைபெற்ற, பரிபூரணம் - பரிபூரணமாகிய, சுகவாரிதன்னில் - இன்பசாகரத்தில், வாய்மடுத்து உண்டு - வாய்மடுத்தருந்தி, அவசமாய் - பரவசமாகி, தேடுதலும் அற்ற இடம் - தேடுதலும் இல்லாத இடம், நிலை என்ற - உண்மை நிலையென்று உபதேசித்த, மௌனியே - மௌன குருவே!, சித்தாந்த முத்திமுதலே.—,என்க.

(வி - ரை) எல்லாப் பொருள்களிலும் கலந்துங் கலவாது மிருத்தலின், 'கூடுதலுடன் பிரிதலற்று' என்றனர். அதாவது, எல்லாமாய் அல்லதுமா யிருக்குந் தன்மையினை விளக்கியதாயிற்று. திருவாசகம்: "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி, யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க், கோனாகி, யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு, வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே." எனவும், தேவாரம்: "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி, யியமான னாயெறியுங் காற்று மாகி, யருநிலைய திங்களாய் ஞாயி றாகி, யாகாசமாயட்ட மூர்த்தி யாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும், பிறருருவும் தம்முருவுந் தாமேயாகி, நெருநலையா யின்றாகி நாளை யாகி, நிமிர்புன் சடைக ணின்ற வாறே." எனவும், "மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை மலையல்லை கடலல்லை வாயுவல்லை, யெண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை யிரவல்லை பகலல்லை யாவுமல்லை, பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை பிறிதல்லை யானும் பெரியாய் நீயே, யுண்ணல்லை நல்லார்க்குத் தீமையல்லை யுணர்வரிய வொற்றியூ ருடைய கோவே!" எனவும் வருவனவற்றாற் காண்க.

தனக்கெனச் சுகதுக்க மின்மையின் 'நிர்த்தொந்தமாய்' என்றனர். திருவாசகம்: "இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே" என்றதனாற் காண்க. விருத்திக்ஷய மின்மையின் 'குவிதலுடன் விரிதலற்று' என்றனர். குவிதலாவது அணுரூபமாக விளங்குவது. விரிதலாவது மகத்து ரூபமாக விளங்குவது. 'அற்று' என்றதனால் இவை யிரண்டு மின்றி யிருப்பது. சிவபுராணம்: "அணோரணீயாந் மகதோமகீயா நயமவ்யய:" எனவும் கைவல்யோபநிஷதம்: "அணோரயாநகமே வதத்வந் மஹாநஹம் விசித்ரம்" எனவும், வருவனவற்றாற் காண்க. பிறப்பு இறப்பு இன்மையின், 'வரவினொடு போக்கற்று' என்றனர். பிருகதாரணியோபநிடதம்: "ஸவா ஏஷமகாநஜ ஆத்மாஜரோமர:" எனவும், தேவாரம்: "பிறவாது மிறவாதும் பெருகினானைப், பேய்பட நடமாடும் பித்தன் றன்னை, மறவாத மனத்தகத்து மண்ணினானை, மலையானைக் கடலானை" எனவும் வருவனவற்றாற் காண்க. நாமரூப மின்மையின் 'நிலையான குறியற்று' என்றனர். திருவாசகம்: "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை, யுருநாமறியவோ ரந்தணனா யாண்டுகொண்டா, னொருநாம மோருருவ மொன்றுமில்லாற் காயிரந், திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ." என்றதனாற் காண்க.

அசுத்தமாயை பிரகிருதி மாயைகளைக் கடந்ததேயன்றிச் சுத்த மாயையினையுங் கடந்திருத்தலின், 'விந்துநாதமற்று' என்றனர். "நாதவிந்துகளா தீத நமோநமஃ" என்றதனுற் காண்க. 'ஒன்றற் றிரண்டற்று' என்றதனால் ஏகான்மவாதியரையும், துவைதவாதியரையு முறையே மறுத்து, "ஒன்ருகாம லிரண்டாகாமல், ஒன்றுமிரண்டு மின்ருகாமல்" என்னுஞ் சுத்தாத்வைத சித்தாந்த நிறுத்தியவா றுயிற்று. திருக்களிற்றுப் படியார்: "ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று, நன்றன்று தீதன்று நானன்று நின்ற, நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று, தலையன் றடியன்று தான்." என்றதனுற் காண்க. (8)

தீராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்,
தாயனைய கருணைகாட்டித்,
தாளிணையென் முடிசூட்டி, "அறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாயம்,
ஓராமல், மந்திரமு முன்ருமல், முத்திநிலை
யொன்ருே டிரண்டெனுமல்,
ஒளியெனவும் - வெளியெனவும் - உருவெனவும் நாதமா
மொலியெனவு முணர்வுருமல்,
பாராது பார்ப்பதே யேதுசா தனமற்ற
பரமவநு பூதிவாய்க்கும்
பண்" பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
பதிந்தநின் பழவடியர்தம்
சீரா யிருக்கநின தருள்வேண்டு மையனே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) தீராத அருள் எல்லாம் - தீரக்கூடாத உனது திருவருள் முழுதும், தந்து அருள் - தந்தருளும்படி, மௌனியாய் - மௌனகுருவாகி, தாய் அனைய - தாயையொத்த, கருணைகாட்டி - கிருபை செய்து, தாள் இணை - இரண்டு திருவடிகளை, என் முடி சூட்டி - என் சிரசில் தரித்து; அறிவில் சமாதியே - அறிவினிடத்துக் கூடும் நிஷ்டையே, சாசுவத சம்ப்ர தாயம் (என்று) - நிலையாகிய சம்பிரதாய மென்றும்; ஓராமல் - பகுத்துணராமலும்; மந்திரமும் உன்ருமல் - மந்திரத்தை நினைக்காமலும்; முத்தி நிலை - மோக்ஷ நிலையானது, ஒன்ருேடு இரண்டு என்னுமல் - ஒன்று இரண்டு என்று சொல்லாமலும், ஒளி எனவும் - ஒளி யென்றும், வெளி எனவும் - வெளி யென்றும், உரு எனவும் - உரு என்றும், நாதம் ஆம் ஒலி எனவும் - நாதமாகிய ஒலி யென்றும், உணர்வு உருமல் - அறியாமல்; பாராது பார்ப்பதே - காணுமற் காண்பதே, ஏது சாதனம் அற்ற - எவ்வகைப்பட்ட சாதனங்களும் இல்லாத, பரம அனுபூதி வாய்க்கும் பண்பு

என்று - மேலான அனுபூதி கிடைத்தற்குரிய உபாயமென்றும், உணர்த்தியது - நீ அறிவுறுத்தினவை, பாராமல் - பகுத்தறியாமல், அந்நிலை பதிந்த - அந்த நிலையிற்றங்கிய, நின் பழ அடியர்தம் - உனது பழைய அடியார்களுடைய, சீர் ஆய் இருக்க - சிறப்பை யடைந்திருக்க, நினது அருள் வேண்டும் - உன் திருவருள் வேண்டும்; ஐயனே - கடவுளே!, சித்தாந்த முத்தி முதலே!—, என்க.

(வி - ரை) முதல்வன்: சகலர்கள் புண்ணிய பாவங்கள் தொலையக் காலம் பார்த்துப், பூமியின்கண் ஆசாரியரை யதிட்டித்துக்கொண்டு, மந்த மதியான நால்வகைச் சத்திநிபாதானு குணமாகத் தீவினையைச் செய்தவர்கள் பாசத்தைச் சேதித்து, அவர்க ளறிவை விளக்கி, அதிபக்குவராயுள்ளவர்களைச் சிவானந்தானுபூதியிற் றிளைத்திருக்கும்படி யருளெலாந் தந்து, கருணையினைக் காட்டுவானாகலின், 'தாராத வருளெலாந் தந்தருள் மௌனியாய்த், தாயனைய கருணைகாட்டி' என்றனர். **சிவஞானபோதம்**: "மெஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க், கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம், பின்னுணர்ந்து மன்றிப் பிரளயா கலருக்கு, முன்னுணர்த்துந் தான் குருவாய் முன்." எனவும், **சிவஞானசித்தியார்**: "உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்று, முயரும் விஞ்ஞா னகலர்பிரளயாகலர் சகலர், நிரையின்மல மலகன்ம மலங்கன்ம மாயை, நிற்குமுதவிருவர்க்கு நிராதார மாகிக், கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற், கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்மவொப்பிற், றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித், தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபாதத்தால்." எனவும், **போற்றிப்பஃறொடை**: "தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - யன்னவனுக், காதிகுண மாதவிஞ் லாடுந் திருத்தொழிலுஞ், சோதிமணி மிடற்றுச் சுந்தரமும் - பாதியாம், பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல், வைச்சநதியு மதிக்கொழுந்து மச்சமுத, வாடு மரவு மழகார் திருநுதன்மேல், நீடுருவ வன்னி நெடுங்கண்ணுங் - கேடியலங், கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும், பூட்டரவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப வெள்ளத் தழுத்தி விடுந்தாளினுமடியா, ருள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்பும் - கள்ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக்கழலு, மொன்றுமுருகத் தோன்றும லுள்ளடக்கி யென்று, மிறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப், பிறவா முதல்வன் பிறந்து" எனவும் வருவனவற்றாற் காண்க. திருமேனிகொண்டெழுந்தருளி வந்த தம்பிரான் திருவடி தீட்சை செய்த பின்னரே அனுக்கிரகிக்க வேண்டுமாகலின், 'தாளிணையென் முடிசூட்டி' என்றனர். **திருமந்திரம்**: "திருவடி வைத்தென் சிரத்தரு ளேக்கிப், பெருவடிவு தந்தபேர் நந்தி தன்னைக், குருவடிவிற் கொண்ட கோனையெங் கோவைக், கருவழி மாற்றிடக் கண்டுகொண் டேனே." அன்றியும், "திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந், திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந், திருவடி ஞானஞ்

சிறைமல மீட்டுங், திருவடி ஞானந் திண்சித்தி முத்தியே.'' எனவும், சிவ ஞானக்கலம்பகம்: "அடங்க வெலும்புந் தோலுமா யருவ ருப்புற் றமிழ்கின்ற, வுடம்பை நானென் றிருந்தேனை யொழிவுல் கருணைச் சிவஞானி, கடந்த பிரம நீயெனவே கழற்கா லென்புற் றலைவைத்தான், முடங்கு சுருள்வா ளுய்க்கொரு பொன் முடிசூட் டினனெம் பெருமானே.'' எனவும் சிவஞான சித்தியார்: ',என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே, தன்னைவைத் தருளி ஞாலே தாளிணை தலைமேற் சூட்டும்,'' எனவும், திருக்களிற்றுப்படியார்: "சிந்தையிலு மென்றன் சிரத்திலுஞ் சேரும்வகை, வந்தவனை நாம் வாராமற் - றந்தவனை'' எனவும் வருவன வற்றாற் காண்க. போதமுளையாது பதைப்பு நீக்கி வறிதே யிருந்து அறிவிடத்துக் கூடுஞ் சமாதியே நிட்டைமுறை யாகலின், "அறிவிற் சமாதியே சாசுவத சம்பிரதாயம்'' என்றனர். தத்துவப்பிரகாசம்: "உயிரென வும் பரை யெனவுஞ் சிவமெனவு மூன்று, முருக்காண விலையான் உயிர்நடத்த லானும், பயிலுமிடத் துஞ்சுட்ட வரியதென லானும் பார்த்த தெல்லா மப்பதியின் செயலோத லானும், வியனுலக மிவனாலே சேடித்த லெனினும் வியந்துரைத்தார்க் குணர்வரிய னுய்க்கோட லானும், பயனளித் தல் கொளல்காணப் படுதலானும் பார்த்தழுந்தா திவையாகும் பதைப் பற்றுப்பாரே.'' என்றதனாற் காண்க.

ஆன்மாவுஞ் சிவமு மொன்றல்லவாகலினாலும், ஆன்மாக்கள் சீவிக்குமிடத்துச் சிவனறிவிக்க அறிந்து பிரிவற நின்று சீவிக்கையால் இரண்டல்லவாகலினாலும், 'ஒன்றேடிரண்டெண்ணாமல்' என்றனர். இருபா விருபஃது: "ஒன்றாகாம லிரண்டாகாம லொன்றுமிரண்டு மின்றாகாமல்'' என்றதனாற் காண்க. இதுவே அத்துவிதமாம். உலகத்துப் பொருளுடன் கூடுவொனாகில் முதல்வன் சாகாரியாவானாகையால் அங்ஙனங் கூடா வியல்பை யுடையனாய் நிராதிகாரியா யிருப்பனாகலின், 'ஒளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா மொலியெனவு முணர்வுறாமல்' என்றனர். சிவஞானசித்தியார்: "சிவனரு வுருவுமல்லன் சித்தினோ டசித்து மல்லன், பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடுவானு மல்லன், தவமுதலியோக போகந் தரிப்பவ னல்லன் றானே, யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னானே.'' எனவும், தேவிகாலோத்தரம்; "விஜ்ஞப்தி மாத்ரோஹீஸதார்த்த ஸூத்தஸர்வத்ரய மஸாத் - ஸததம் விமுக்த: நாதேயஹேயோப்யஹம்ப்ரத்யாஸ்திஷ்டந் ஹதாப்ரம்ஹமயோ விமோக:। யோஸொஸர்வேஷூப்ராஸ்த்ரேஷூ ப்யம்தேஹிம் ஹேஸ்வர:॥ அகாயோ நிர்கணோ க்ஷீதி நிராஜந நிஷ்ப்ர தி மந்திரீஹம்। த்ருஸ்ய மஸ்ஸாவாம சிந்த்ய ரூபம்பிவ ப்ஸகர்த்ய'' எனவும் வருவனவற்றாற் காண்க.

தற்போதத்தை முன்னிட்டுப் பாராமல் திருவருளை முன்னிட்டுப் பார்ப்பதுவே சிவத்தினைச் சார்தற் கேதுவாகலின், 'பாராது பார்ப்பதே

யேது' என்றன்ர். ஒழிவிலொடுக்கம்: "வாலே முகமாய வரவானை யேறினர், போலவுன் போதமோ போய்த்தீண்டுஞ் சாரப், பெருஞ் சிரிப் பாந் தன்னைப் பிடித்தாட்டும் பேயைத், தெரிஞ்சிருக்கத் தேடுஞ்செயல்." என்றதனுற் காண்க. (9)

போதமாய், ஆதிநடு வந்தமு மிலாததாய்ப்,
புனிதமாய் அவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்; பின்னு மறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருள்; ஆகில், எளியனேற்
கறிவாவ தே (து?) அறிவிலா
ஏதம்வரு வகையேது? வினையேது? வினைதனக்
கீடான காயமேது? என்
இச்சாசு தந்திரஞ் சிறிதுமிலை; இகபர
மிரண்டினுண் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) போதம் ஆய் - ஞானவடிவாகி; ஆதி நடு அந்தமும் இல்லாதது ஆய் - ஆதியந்தரகிதமாகி; புனிதம் ஆய் - பரிசுத்தமாகி, அவிகாரம் ஆய் - நிர்விகாரமாகி; போக்கு வரவு இல்லாத இன்பம் ஆய் - போக்குவரவற்ற சுகவடிவாகி; நின் பூரணம் - உன்னுடைய பரிபூரண நிலையையே, புகல் இடமது ஆக - அடைக்கலத் தானமாகக் கொண்டு, ஆதரவு வையாமல் - அவனிடத்து விருப்பம் வைக்காதவகை, அறிவினை மறைப்பதும் - என்னறிவைத் தடுப்பதும், நின் அருள் - உன் திருவருளே; பின்னும் - மேலும், அறிவு இன்மை தீர்த்து - அறியாமையை நீக்கி, அறிவித்து நிற்பதும் - (என்னுள்ளிருந்து) உணர்த்தி நிற்பதும், நின் அருள் - உன் திருவருளே; ஆகில் - ஆனல், எளியனேற்கு - எளியேனுக்கு, அறிவு ஆவது எது? - அறிவாவது யாது?, அறிவு இலாத ஏதம் வருவகை ஏது? - அறிவில்லாத குற்றம் உண்டாகும் வகையாது?, வினை ஏது - அறிவறியாமைகட்குக் காரணமான வினை யாது?, என் இச்சா சுதந்திரம் - என்னுடைய இச்சா சுதந்திரங்கள், சிறிதும் இல்லை - கொஞ்சமு மில்லை; இகம்பரம் இரண்டினும் - இகபரமென்னு மிரண்டிடத்தும், மலைவு தீர - எனது பிராந்தி நீங்கும்படியாக, தீது இல் அருள் கொண்டு - குற்றமற்ற திருவருளைக் கொண்டு, இனி உணர்த்தி - இனி

யேனும் அறிவுறுத்தி, என்னை ஆள்வையோ? - என்னை அடிமை கொள்வையோ ?, சித்தாந்த முத்தி முதலே—, என்க.

(வி - ரை) முதல்வனுடைய சொரூப இலக்கணம் இன்னபடித்தெனக்கூற வொண்ணுமையின், 'போதமாய், ஆதிநடு வந்தமு மிலாததாய்ப், புனிதமாய் அவிகாரமாய்ப், போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின் பூரணம்' என்றனர். தத்துவப்பிரகாசம்: "உருவுமரு வுங்கலப்பு மாயன்றிக் குறியு, முறையு முணர்ந் தறிவரிதாய்க் குணமெல்லை யிலவா, யருபரமா யானந்தக் குறிய வற்புதமா, யநாமயமாய் நிராமயமா யசலமா யின்பாய்த், தெரிவரிதா யனுபவமாய்த் முத்தசித்தா யணுவாய்ச், செல்கதியாய்ப் பல்லுருவாய்த் தீமை நன்மையின்று, யுரையிறந்து கரையிருந்த வொளியாகி வெளியா, யோங்குவது தற்சிவமென்றுங்குரைக்கு நூலே." என்றதனுற் காண்க.

கன்மசாமீபமான ஆன்மாக்களுக்குப் பரிபாகமான மலங்களினுடைய வீரியத்தைத் தடுத்தலும், ஆன்மாக்களுக்கு ஆணவமுதலிய குற்றங்களைப் போக்கி ஞானத்தினைக் கொடுத்து வீட்டை யடையச்செய்தலும் முதல்வனருளே யாகையால், 'அறிவினை மறைப்பதுநி னருள்பின்னு மறிவின்மை தீர்த், தறிவித்து நிற்பது நின்னருள்; ஆகில்' என்றனர். சிவஞானசித்தியார்: "அழிப்பிளைப்பாற்றலாக்க மவ்வவர் கன்மமெல்லாங், கழித்திடனுகரச்செய்கை காப்பது கன்ம வொப்பிற் றெழித்திட மலங்க ளெல்லா மறைப்பருட் செய்தி தானும், பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்." எனவும், தந்த்ரைவ: "பரிணமயதீதாஸ்சரோதந்தம் காகசித் விஷா॥ யதோர்மீலநமாய்த்தேத்தா நுக்ராஹி கோங்யுத இதி" எனவும் வருவனவற்றுற் காண்க.

வினு:—"அறியாமையாகிய எதமும், வினையும், காயமு மடியேனுக்கு வந்தவாறேது ?"

விடை:—"நீயுனது முந்திய சென்மத்திறுற் றேடிக்கொண்ட மலங்கள் கூட்டி வைத்தன."

வினு:—"சேட்டையற்ற சடமாகிய மலங்கள் எங்ஙனங் கூட்டிவைக்கும்?"

விடை:—"நீ யறிவுற்றவனுகையால் உன்னுடன் அம் மலங்கள் கூடுகையில் அவை சேட்டைப்படும்."

வினு:—"கடபடங்களாயுள்ள சால் குடம் புடவை சீலை முதலாயுள்ளவை அடியேனுடன் கூடிய அவசரத்துச் சேட்டைப்படக் கண்டேனில்லையே?"

விடை:—"மலங்கள் கடபடாதிகள் போலன்று. விடத்தையுடைய வசநாவி முதலாயுள நஞ்சுகள் சடமாயினும், அறிவாயிருந்த ஆன்மாக்கள் அவற்றைப் புசித்த அவசரத்து அறிவை யழித்து அவற்றின் குண

மேலிட்டு மயக்கினாற்போல, அந்த மலங்கள் சடமாயினும் அறிவுள்ள உன்னுடன் சம்பந்தமான அவதரத்து அவைகட்குச் சேட்டை யுண்டாம்."

வினா :—"மலங்களுக்கு உவமையாகக் கொண்ட நஞ்சுகள் மலங்களைப் போல் பல குணங்களைச் செய்யக் கண்டதில்லை. அன்றியும், மலங்கள் சடமானபடியால் அவை தாமே யடியேனைவந்து பொருந்தா. அடியேனோ அவற்றை வேண்டுமென உண்டாக்கிக்கொள்ளேன். முதல்வன் நின்மலனாகையால் அஞ்ஞானமாகிய மலங்களை அடியே னுக்கு உண்டாக்கப்போகிறதில்லை. மலங்களால் விளைத்தவா றெங் ஙனம்?"

விடை :—"அம்மலங்கள் ஆன்மாவாகிய நீயுள்ளவன்றே சுபாவமாக வுன்னி டத்தி லுளவாம்."

வினா :—"பாலில் வெளுப்பும், கருமையிற் கறுப்பும் இயல்பா யுள்ளன வாகலின் சுபாவத்திற் கொருகாலத்தினு நீக்க மில்லையே?"

விடை :—"நெல்லின்க ணுளதாகிய முளையைத் தோற்றுவிக்குமாறுபோல, கன்மமலம் உன்னுடைய சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும்; 'முளைத்தற்கு அனுகூலஞ் செய்து உடனிற்குந் தவிடுபோல' மாயாமலம் அச் சுகதுக்கங்க ளாண்டுத் தோற்றுதற் குத் துணைக்காரணமாய்த் தன் காரியமாகிய தனு கரண முதலியவற்றையும் உயிரையு மியைவித்து நிற்கும்; 'அம் முளை ஆண் டுத் தோன்றுதற்கு நிமித்தகாரணமாகிய உமிபோல' ஆணவமலம் அத் தோற்றத்திற்கு நிமித்தகாரணமாய் அவற்றைமுறுகுவித்துநின்று அச் சுகதுக்கங்களை உயிர் நுகருமாறு நிலைபெறச் செய்யும். இவற்றை யிங்ஙனங் கூட்டிவைப்பான் முதல்வனென் றறிக."

இவ் வினாவிடைகள், 'ஏதம்வரும் வகையேது? வினையேது? வினை தனக் கீடான காயமேது?' எனக் கூறியுள்ள வாக்கியத்தின் உள்ளுரை களா மெனக் கொள்க.

ஆன்மா ஒன்றை யறியுமிடத்துத் தானே யறியாமல் அறிவிக்க யறியுந் தன்மை யுடைத்தாகலின், 'இச்சா சுதந்தரஞ் சிறிதுமில்லை' என்றனர். சிவப்பிரகாசம்: "இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லெண்ணும், பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல, மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு, மருளையு மொழியு ஞாலத் தறிந்தவா றறியு மன்றே." என்றதனாற் காண்க. இகத்திலும் பரத்திலும் முறையே திரோதான சத்தியினைக்கொண்டும் அருட்சத்தியினைக்கொண்டும் காத்து வரவேண்டு மென்பார், 'இகபர மிரண்டினுண் மலைவுதீரத் தீதிலருள் கொண்டினி யுணர்த்தி யெனை யாள்வையோ?' என்றனர். (10)

பத்திநெறி நிலைநின்றும், நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்,
பரவையிடை மூழ்கியும், நதிகளிடை மூழ்கியும்,
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றும், உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்து
மவுனத் திருந்தும், உயர் மலைநுழை தனிற்புக்கு
மன்னுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய் தும், மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்,
சொல்லரிய வமுதுண்டும், அற்பவுடல் கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய் தும், ஞான மலதுகதி கூடுமோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரிகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே!

(இ - ள்) பத்தி நெறி - பக்திமார்க்கத்தில், நிலைநின்றும் - நிலையாய் நின்றும்; நவகண்ட - ஒன்பது கண்டங்களோடு கூடிய, பூமிப் பரப்பை - பூமியின் விஸ்தாரத்தினை, வலமாக வந்தும் - பிரதட்சணமாய் வந்தும்; பரவை இடை மூழ்கியும் - கடலில் ஸ்நானம் பண்ணியும்; நதிகளிடை மூழ்கியும் - நதிகளில் ஸ்நானம் பண்ணியும்; பசி தாகம் இன்றி - பசி தாகங்க ளில்லாமல், எழு நாமத்தி இடைநின்றும் - நெருப்பின் நடுவினின் றும்; உதிர் சருகு - உதிர்கின்ற சருகுகளையும், புனல் வாயுவினை - சலத்தினையும் வாயுவினையும், வன் பசிதனக்கு அடைத்து - வலிய பசிக்கு நிரப்பி, மவுனத்து இருந்தும் - மௌனநிலையில் இருந்தும்; உயர் மலை நுழைதனில் புக்கும் - உயர்ந்த மலைக்குகைகளில் பிரவேசித்தும்; மன்னு - நிலைபெற்ற, தசநாடி முற்றும் - தசநாடி முழுவதையும், சுத்தி செய்தும் - சுத்தப்படுத்தியும்; மூலப்ராணனோடு - மூலாதாரத்திலுள்ள பிராணவாயு வுடன், அங்கியை - அக்கினியை, சோமவட்டத்து அடைத்தும் - சந்திர மண்டலத்தில் சேர்த்தும்; சொல் அரிய - சொல்லுதற்கு அரிதாகிய, அமுது உண்டும் - அமிர்தத்தைப் புசித்தும்; அற்ப உடல் - அற்ப சரீரம், கற்பங்கள்தோறும் நிலைநிற்க - ஊழிகள்தோறும் நிலைநிற்கும்படி, வீறு - மேலான, சித்தி செய்தும் - சித்தியை யடைந்தும்; ஞானம் அலது - ஞான முண்டானா லல்லது, கதி கூடுமோ - மோட்சஞ் சித்திக்குமோ?, சித்தாந்த முத்திமுதலே—, என்க.

(வி - ரை) செநநெறியினைக் கடைப்பிடித் தொழுகுவார் செய்யுஞ் சாதனங்கட்கு ஆதரவு அவசியமாகலின் 'பத்திநெறி நிலைநின்று' என்றனர். ஆதரவு - பத்தி. திருமந்திரம்: "ஒத்துல கேழு மறியா வொருவனென்,

றத்த னிருந்திட மாரறி வார்சொல்லப், பத்தர்தம் பத்தியிற் பாற்படி லல்லது, முத்தியினை யார்சொல்ல முந்துகின் றரே." எனவும், சிவதரு மோத்தரம்: "ஆதரவே பரமான வறம தாகு, மாதிரமே வந்தமிவற் றினைத்து மாகு, மாதரவற் றவரீகை யறமே யாகா, தாதலினு லாதரவே மூல மாகு, மாதரவே பிரகிருதி யான்மா வீச னெனும்பொருளு மறிவிக்கு மமலன் றானு, மாதரவே யடைவிக்கு மாதலாலே, யனைத்தினுக்கு மாதரவே மூல மாமே." என்றதனுற் காண்க.

நவகண்டமாவன - பரத கண்டம், கிம்புருட கண்டம், அரிகண்டம், இளாவிரத கண்டம், பத்திராசு கண்டம், கேதுமாலி கண்டம், இரமிய கண் டம், குரு கண்டம். இந்நாவலந்தீவில் மனுகுலத்தில் வந்த அரசன் அக்கினி கோத்திரன். அவனுக்குப் புத்திர ரொன்பதின்மர். இக் கண்டங்களை யொவ்வொருவராக வொன்பதின்மரும் பிரித்தாண்டமையா லவரவர் பெயரா லக்கண்டங்களுக்குப் பெயராயிற்று. சிவதருமோத்தரம்: "மனு குலத்தில் வருமங்கி கோத்திரனு மன்னவன்றன், றனையர்பா தனைமுத லோர் சவுரியரொன் பதின்மருளர், இனையவர்க ளாண்டமைய வெய் தியபே ரெனவிவற்றை, நினைகபா தனுக்குரிமை பரதமே நிகழ்த்துங்கால்." என்றதனுற் காண்க. சாங்கிராயணம், தட்சணாயணம், தைமாதப் பிறப்பு, ஆடிமாதப் பிறப்பு, சித்திரை விசு, அமாவாசை, பூரணை, திருவாதிரை, விதி பாதயோகம், கிரகணகாலமுதலான கால விசிட்டண முணர்ந்து சமுத்திர ஸ்நானம் நதி ஸ்நானஞ் செய்தல் புண்ணியமாகலின் 'பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்' என்றனர். சிவதருமோத்தரம்: "அரவ மாதித்தன் றன்னை யடர்ந்திட, விரவும் வேலையும் வெண்மதி தன்னையு, மிருமை யான வயனமு மீபவர்க், குரிய வேலைகண் மற்றுமுண் டோர் கவே." என்றதனுற் காண்க.

யோகிகள் பஞ்சாக்கினி மத்தியினின்று தவஞ் செய்யுங்கால் ஒவ்வோ ரவசரத்து அவர்க ளுணவாகக் கொள்வது சருகு, வாயு, சலமுதலிய வாகலின், "எமுநா, மத்தியிடைநின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை வன் பசிதனக் கடைத்தும்' என்றனர். 'அடைத்து' என்றதனுல் வெறுப்புட னுண்பரெனக் கொள்க. அவ்யோகிகள் மனிதர் சஞ்சாரஞ் செய்யும் பட்டினங்களி லிருக்கின் பிரபஞ்ச வாசனை பலமாகத் தாக்குமென வறிந்து மலைகளின் குகைகளைத் தங்கட் கிருப்பிடமாகக் கொள்வாராகலின், 'மலை நுழை தனிற்புக்கும்' என்றனர். தசநாடியாவன - இடை, பிங்கலை, சுழு முனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலப்புடை, புருடன், சங்கினி, குரு என்பனவாம்.

யோகியர்கள் குய்யத்தின் இரண்டங்குலத்தின் கீழிலுள்ள மூலாதா ரத்து அக்கினி மண்டலத்தில் பிராணவாயுவால் வன்னிபீசத்தாய அனலை மூட்டி யெழுப்பி மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம்,

விசுத்தி, ஆக்ஞை யென்னும் ஆறு தாரங்களினும் பிரணவ தியானத்தோடு சென்று அங்கங்குள்ள விநாயகர் முதலிய கடவுளரைத் தரிசித்து, அந்த லட்சியங்களினின்று அவ்வாறுதாரங்கட்கு மேலாகிய பிரமரந்திரத்தில் அப் பிரணவத்தோடுஞ் சென்று அப்பிரமரந்திரத்தி லுள்ள சந்திர மண்டலத்தை அவ் வன்னிபீசத்தால் இளகச் செய்து, அதினின்றும் வரும் அமிர்தப்பிரவாகத்தினை யுண்டு நெடுநாள் வீற்றிருப்பராகலின், 'மூலப் ராணனோ டங்கியைச் சோமவட்டத்தடைத்துஞ், சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க டோறுநிலை நிற்க' என்றனர். சந்நிதிமுறை: "மூல நிலத்தி லதோமுகமாய் முகிழ்த்து விழியின்பொடுதுயிலு, மூரிப்பாம்பைக் காலனலை மூட்டி யெழுப்பிநிலமாறுஞ், சீலமொடும் போய்த் தரிசித்துச் செழுமாமதியி னமுதகடறேக்கி" என்றதனாற் காண்க.

சிவஞானமொன் றடையாத காலத்து, எத்தகைய அரிய காரியங்களை யொருவன் செய்யினும் அவற்றாற் பிரயோசன மில்லையென்பார், 'ஞான மலதுகதி கூடுமோ?' என்றனர். சிவநெறிப்பிரகாசம்: "செய்திடுபல் சுரர்பூசை யாதிதொழி லானும், செப்பரிய தவத்தாலுஞ் செபத்தி னாலு, மெய்தருஞ்சீ ரட்டாங்க யோகத் தாலு, மெழிற்றீர்த்த மாடியதி னாலு மன்பாய்ப், பெய்திடு தானத்தாலும் விரதத்தி னாலும், பெயர்ந்திடு மாணவ சத்திபோந் தடைவே, மெய்தருஞ்சீர் ஞானங்க டொழில்கள் சத்தி, விளங்கியிரு மலைசொரூப மலவிகற்ப மென்னே." எனவும், சிவஞான சித்தியார்: "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண, நல்லவா கமஞ்சொல்ல வல்லவா மென்னு, மூனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா, லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞானந்தா, னனத்தா லதுபோவ தலர் கதிர்முன் னிருள்போ, லஞ்ஞானம் விடப்பந்த மறமுத்தி யாகு, மீனத், தார் ஞானங்க ளல்லா ஞான, மிறைவனடி ஞானமே ஞான மென்பர்." எனவும் வருவனவற்றாற் காண்க. (11)

## மௌனகுரு வணக்கம்

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி,
ஆங்கார முளையையெற்றி,
அத்துவித மதமாகி, மதமாறு மாறுக
வங்கையின் விலாழியாக்கிப்,
பாசவிரு டன்னிழ லெனச்சுளித் தார்த்து, மேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டு, முக
படாமன்ன மாயைநூறித்,
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேயடக்கிச்,

சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்து, நின்
றிருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவளர்த்தாய் ;
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌன குருவே!

(இ - ள்) ஆசை நிகளத்தினை - ஆசையாகிய விலங்கினை, நீர்த்தூளி பட உதறி - நீர்த்தூளியாம்படி உதறி; ஆங்கார முளையை எற்றி - ஆங்காரமாகிய முளையைப் பிடுங்கி யெறிந்து, அத்துவித மதம் ஆகி - அத்துவிதமென்கிற மதத்தினைக் கொண்டு, மதம் ஆறும் - ஆறுமதங்களும், ஆறு ஆக - நதிகளாக, அங்கையின் விலாழி ஆக்கி - துதிக்கையின் விலாழியாகச் செய்து, பாச இருள் - பாசமாகிய இருளை, தன் நிழல் என - தன்னுடைய நிழலென்று நினைத்து, சுளித்து - கோபித்து, ஆர்த்து - ஆரவாரித்து; மேல் - மேலே, பார்த்துப் பரந்த - நோக்கிப் பரவிய, மனதை - மனத்தினை, பாரித்த கவளமாய் - பெருங் கவளமாய், பூரிக்க உண்டு - நிறைய உண்டு; முகபடாம் அன்ன - நெற்றிப் பட்டத்தினை யொத்த, மாயை நூறி - மாயையினை அரைத்து, தேசு பெற - ஒளி பெற, நீ வைத்த - நீ அமைத்த, சின்முத்திராங்குசம் - சின்முத்திரையாகிய அங்குசத்தினைத் தரித்த, செங்கைக்குள்ளே அடக்கி - செங்கையினிலடக்கி, சின்மயானந்த சுகவெள்ளம் படிந்து - ஞானமயமாகிய பேரானந்த வெள்ளத்தில்மூழ்கி; நின் திரு அருள் பூர்த்தியான - உனது திருவருளின் நிறைவாகிய, வாசம் உறு சற்சாரமீது - வசித்தல் பொருந்திய கூட்டத்தில், என்னை - அடியேனை, ஒரு ஞான மத்தகஜம் என வளர்த்தாய் - ஞான மதத்தினையுடைய யானையைப்போல வளர்த்தனை ; மந்த்ரகுருவே - மந்த்ராசாரியனே !, யோகதந்த்ரகுருவே - யோகதந்த்ராசாரியனே !, மூலன் மரபில் வரும் - திருமூலரது மரபில்வந்த, மௌனகுருவே - மௌனகுருவே !, என்க.

(வி - ரை) வித்தியாதத்துவத்தில் தோன்றிய அராகம் ஆன்மாக்கள் செய்த கன்மத்தினுக் கீடாகப் பிரகிருதியினின்றும் பிறந்த சுகானுபவங்களை மேலுமேலும் புசிக்கையின் பொருட்டுப் பண்ணுவிப்பது ஆசை. சிவஞானசித்தியார் : "விச்சையி விராகந் தோன்றி வினைவழி போகத்தின்க, ணிச்சையைப் பண்ணிநிற்குந் தொழிலறி விச்சைமூன்றும், வச்சபோ திச்சா ஞானக்கிரியைமுன் மருவி யான்மா, நிச்சய புருட னாகிப் பொதுமையி னிற்பனன்றே." என்றதனாற் காண்க. இவ்வாசையால் விடய விச்சை விளையும் ; இவ்விளைவால் பந்தமுண்டா மாதலினால் 'ஆசை நிகளத்தினை' என்றனர். இத்தகைய ஆசையினை நீக்கிக்கொள்ளவேண்டுவ தத்தியாவசிய மாகலின் 'நீர்த்தூளிபட வுதறி' என்றனர். கந்தரநுபூதி : "ஆசா மணியுந் துகிலும் புனைவா, னேசா! முருகா! நினதன் பருளா ; வாசா நிகளந் துகளா யினபின், பேசா வனுபூ திபிறந் ததுவே." எனவும்,

திருக்குறள் : "அஞ்சுவ தோரு மறனே யொருவனை, வஞ்சிப்ப தோரு மவர்." எனவும், திருமந்திரம் : "ஆசை யறுமின்கள் ! ஆசை யறுமின்கள் !, ஈசனோ டாயினு மாசை யறுமின்கள் !, ஆசைப்படப்பட வாய்வருந் துன்பங்க, ளாசை விடவிட வானந்த மாமே." எனவும் வருவனவற்றாற் காண்க.

புத்திதத்துவத்தினின்று மனத்திற்கு மூலமாகத் தோன்றியானென தென்பதற் கேதுவாகப் பிரதிபுருஷ நியதமாய், 'குல தன வித்யாதிகளினு லெனக்குச் சமான மில்லை' என்றும், 'யான்' என்றும், 'எனது' என்றும் அபிமானஞ் செய்துகொண்டு மோட்சபரியந்த மான்மாவை நீங்காது நிற்பதுவாய்ச் சரீரத்துவ பிராணாதி வாயுக்களைச் சேட்டிப்பது அகங்காரம். சிவஞானசித்தியார் : "ஆங்காரம் புத்தி யின்க ணுதித்தகந் தைக்குவித்தா, யீங்கார்தா னென்னோ டொப்பா ரென்றியா னென்ன தென்றே, நீங்காதே நிற்கும்." என்றதனாற் காண்க. இவ் வாங்காரத்தினை யொழித்துக் கொள்ள வேண்டியது கட்டாயமாகலின் 'ஆங்கார மூளையை யெற்றி' என்றனர். இவ் வாசிரியரே "ஆங்கார மற்றுன் னறிவான அன்பருக்கே, தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே." என்றதானுங் காண்க.

மதம் ஆறவன : உலகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை, மாயாவாதம், பாஞ்சராத்திரம். இப் புறச்சமய மாறினையும் நிராகரிக்க வேண்டுமென்பார், யானை யுமிழு நீராகிய விலாழிக் குவமையாக்கி, 'மத மாறு மாறுக அங்கையின் விலாழியாக்கி' என்றனர். திருவாசகம் : "உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாஞ், சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும், கவலைக் கெடுத்துக் கழலிணைக டந்தருளுஞ், செயலைப் பரவிநாந் தெள்ளேணங்கொட்டாமே." எனவும், திருவுந்தியார் : "சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின், றாவியறாதேயென் றுந்தீபற, அவ் வுரை கேளாதே யுந்தீபற." எனவும் வருவனவற்றாற் காண்க.

ஈண்டுப் 'பாசம்' என்றது ஆணவமலத்தினை. உலகத்து வெவ்வேறு வகைப்பட்ட குணங்களையுடைய பொருள்க ளெல்லாவற்றினையும், ஒரு பொருளாக வேற்றுமை தோன்றாது மறைத்துக்கொண்டு நிற்பது ஆணவ மாகிய இருளாகலின், 'பாசவிருள்' என்றனர். திருவருட்பயன் : "இரு ளானதன்றி யிலதெவையு மேகப், பொருளாகி நிற்கும் பொருள்." என்றத னாற் காண்க. இவ்வாணவ விருள் நீங்கினாலல்லது அருள் கூடாதாகலின் இதனைக் கடியவேண்டு மென்பார், 'பாசவிரு டன்னிழ லெனச்சுளித்து' என்றனர் திருக்கோவையார் : "உருகுதலைச் சென்ற வுள்ளத்து மம்ப லத்து, மொளியே பெருகுதலைச் சென்றுநின்றான்." என்றதனாற் காண்க.

மனமானது தைசதவகங்காரத்திற் றோன்றிப் புத்தியகங்காரங்களுக்கு முன்னே தாமொரு பொருளைப்பற்றிச் சங்கற்ப விகற்பங்களைப் பண்ணிக் கொண்டு சம்சய ரூபமாகி நிற்றலின் 'பரந்தமனதை' என்றனர். சிவஞான

சித்தியார் : "மனது தைச தத்தின் வந்தொரு பொருளைப் பற்றி, நினை வதுஞ் செய்தங்கைய நிலைமையி னிற்கு மாங்கே, யினமலி சோத்தி ராதி கன்மவிந்திரிய மெல்லா, முனமுறை செய்த வைகா ரிகந்தரு மென்பர் முன்னோர்." என்றதனாற் காண்க.

ஆன்மபோதம் நிகழ்தற்கேதுவாகிய மனதினைத் திருவருளிலே யொடுக்க வேண்டுமாகலான், 'மனத்தைப் பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டு' என்றனர். திருவிளையாடற்புராணம் : "உள்ளமென்னுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதியாகத், தள்ளரிய வன்பென்னுந் தொடர் பூட்டி யிடைப்படுத்தித் தறுகட்பாசக், கள்ளவினைப் பசுபோதக் கவள மிடக் களித்துண்டு கருணையென்னும், வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைக டீர்ப்பாம்." என்றதனாற் காண்க.

ஆனையின் முகத்தில் படாமானது யாவருங் காண அலங்காரத்துடன் பிரகாசிப்பதுபோல மாயையானது ஆன்மாக்களுக்குச் சகலத்தில் தனு கரண புவனபோகமாக பிரிந்து பிரத்தியட்சமாக விளங்கிக்கொண்டிருத்த லின், 'படாமன்ன மாயை' என்றனர். இத் தனு கரண புவன போகங் களின் காரியப் பாட்டினை விசாரித்து அநித்தியமெனக் கண்டு அவற்றையு நீங்கவேண்டுமென்பார் 'மாயை நூறி' என்றனர்.

ஆகமத்துணிபால் முப்பொருட் செய்தியினை விரல்களாற் காட்டல் சின்முத்திரை யெனப்படும்; வருமாறு: பெருவிரல் - பதி, ஆள்காட்டி விரல் - பசு, மற்றைய மூன்று விரல்கள் : ஆணவம், கன்மன், மாயையாம். கரத்தினைச் சுபாவமாக வைத்துக்கொண்டிருக்கையில் பசுவாகிய விரல், எக்காலத்தும் பதிவிரலுடன் கலவாமல் ஆணவாதி விரல்களுடனேயே சேர்ந்திருக்கும். பசுவிரல் நுனியும் பதிவிரல் நுனியு மொன்றாகச் சேர்ந்த போது மற்றைய ஆணவாதி விரல்கள் தனியே நின்றுவிடும் இங்ஙனமே பசுவானது ஆணவாதி மலங்களை நீங்கிப் பதியோடு கலக்கவேண்டுமென்னு முண்மையினைத் தெரிவிப்பதாம். மற்றுஞ் சில வுண்மை இவ் விரல்களா லறியலாம். இவற்றைச் சித்தாந்த ஞானிகளினை யடுத்தறிக.

ஆன்மாவாகிய தன்னை யானையாக வுருவகஞ் செய்ததற் கேற்பப் பிற விக்கு இடமாக்கும் ஆசையினைச் சங்கிலியாகவும், தன்னைத் தருக்கிக் கெடுப்பதாகிய ஆங்காரத்தினை முளையாகவும், ஒன்றிரண்டென்று அத்து வித நிலையினை மதமாகவும், புறச்சமயங்களை விலாழியாகவும், பாசவிருளை நிழலாகவும், மனத்தைக் கவளமாகவும், மாயையினை முகபடாமாகவும், சின்முத்திரையினை அங்குசமாகவும் இயைபுருவகமாகக் கூறினர். (1)

ஐந்துவகை யாகின்ற பூதமுத ளுதமு
 மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்கள் :
 "அறிவாக நின்றநிலையில்

சிந்தையற நில்" என்று சும்மா விருத்தி, மேற்
சின்மயா னந்தவெள்ளம்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகாண்!
"எந்தைவட வாற்பரம குருவாழ்க! வாழவரு
ளியநந்தி மரபுவாழ்க!
என்றடியர் மனமகிழ வேதாகமத்துணி
பிரண்டில்லை யொன்" றென்னவே
வந்தகுரு வே! வீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே!
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே!

(இ - ள்) ஐந்துவகை ஆகின்ற - ஐந்து வகையாகிய, பூதம் முதல் - பூதங்கள் முதலாக, நாதமும் அடங்க - நாததத்துவமும் ஆகிய முழுதும், வெளியாக வெளிசெய்து - பகிரங்கமாக வெளிப்படுத்தி, அறியாமை அறிவு ஆதி - அறியாமை அறிவு முதலியவைகளை, பிரிவு ஆக அறிவார்கள் - வேறு பிரித்தறிய வல்லார், அறிவாக நின்ற நிலையில் - அறிவுருவாக நின்ற நிலையின்கண், சிந்தை அற நில் என்று - மனமற நிற்பாயென்று, சும்மா இருத்தி - சும்மா யிருக்கும்படி செய்ப, மேல் - அதன்மேலும், சின்மயா னந்த வெள்ளம் - ஞானசொரூபமாகிய ஆனந்தப் பிரவாகத்தில், தேக்கி திளைத்து - நிறைய அனுபவித்து, நான் அது ஆய் இருக்க - நான் அதுவா யிருக்கும்படி, நீ செய் சித்ரம் - நீ செய்த விசித்திரம், மிக நன்று - மிகவும் நன்று!, எந்தை - எமது தந்தையாகிய, வடவால் - வடவா னிழற்கீ ழெழுந்தருளிய, பரமகுரு வாழ்க - பரமாசிரியர் வாழ்க!, வாழ அருளிய - அப்படி வாழும்படி அருளிச்செய்த, நந்தி மரபு வாழ்க என்று - நந்திமரபு வாழ்க என்று, அடியர் - அன்பர்கள்; மனம் மகிழ - மனமகிழும்படி, வேதாகமத் துணிபு - வேதாகம நிச்சயம், இரண்டு இல்லை - இரண்டா யிருக்கவில்லை, ஒன்று என்னவே - (பதி) ஒன்றென்று அருளிச்செய்தற்காகவே, வந்த குருவே - வந்த ஆசாரியனே!, வீறு - (எல்லாச் சாத்திரத்தினும்) மிஞ்சிய, சிவஞானசித்தி - சிவஞானசித்தி யென்று சொல்லப்படுகிற சாத்திரத்தி லுள்ள, நெறி - வழிப்படியே, மௌனோபதேசம் - மௌனோபதேசஞ் செய்யவந்த, குருவே - ஆசாரியனே!' மந்த்ரகுருவே—, என்க.

(வி - ரை) ஐந்துவகையாகின்ற பூதமாவன: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாம். பூதமுதல் நாதமாவன: பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, அந்தக்கரணம் நான்கு, கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, வித்தியா தத்துவம் ஏழு, சுத்ததத்துவம் ஐந்து, ஆக முப்பத்தாறும். 'ஐந்து வகையாகின்ற பூதம்' என்றதானும், 'பூதமுதனாதம்' என்றதானும் உலகாயதன், பாஞ்சராத்திரி, மாயாவாதி ஆகிய மூவரு மறுக்கப்பட்டனர்.

இவற்றின் விகற்பமாகிய சுட்டறிவுகளிற் றுனில்லாமல், தத்துவங்கள் தன்னைத் தாக்காமல் 'கானலைத் தண்ணீரென்று கண்டவன் கானலென்றறிந்தவிடத்துத் திரும்ப விரும்பாததுபோல' வும், 'சொப்பனத்தில் யானையேறி மாலைசூடக் கண்டவன் விழித்தவிடத்து அது மெய்யாய்க் காணுமல் பொய்யாய்க் கண்டதுபோல' வும், தன்னறிவிலே கண்டு நீங்கி யாவும் வெளியாகப் பார்க்கும் தத்துவசுத்தி ஆசாரியன் செய்தனராகலின், 'வெளியாக வெளிசெய்து' என்றனர். திருப்புகழ்: "சுட்டதுபோலாசை விட்டுலகாசாரத் துக்கமிலா ஞானச் சுகமேவிச், சொற்கரணுதீத நிர்க்குண மூடாடு சுத்தநிராதார வெளிகாண, மொட்டலாவாரீச சக்ரசடாதார மூட்டவுமீதேறியதுமீதாய், முப்பதுமாருறு முப்பதும்வேருன முத்திரையா மோன மடைவேனே" எனவும், உண்மைநெறி விளக்கம்: "மண்முதற் சிவம தீருய் வகையதிற்றுணி லாது, கண்ணுத லருளால் நீங்கல் சுத்தி யாய்க் கருத லாமே." என்றதனுற் காண்க.

முதல்வன் நிராதாரமாய்த் தோன்றவேண்டி அறியாமையும் அறிதலுமாகிய இருவகைப் பாசங்களு நீங்கி தம் அறிவின்கண்ணே கேட்ட லறிவினைக் கேட்டு முறையிற் கேட்கச் செய்தன ராசிரியனுகலின், 'அறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க ளறிவாக நின்ற நிலையில், சிந்தையற நில்லென்று' என்றனர். சிவஞானசித்தியார்: "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே, யறிவுதனை யருளினு லறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங், கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற், பிறியாத சிவன்றனே பிரிந்து தோன்றிப், பிரபஞ்ச பேதமெல்லாந் தானுய்த் தோன்றி, நெறியாலே யிவையெல்லா மல்லவாகி, நின்றென்றுந் தோன்றிடுவனிராதாரனுயே." என்றதனுற் காண்க. அன்றியும் 'அறியாமை யறிவாதி பிரிவாக' என்றது அறியாமையாகிய ஆணவத்தான் மறைப்புண்டு மயக்கமுறுங் கேவலக்கிடையும், கருவிகரணங் கூடின சகலாவத்தையுமாக இரண்டினுங் கூடாமல் எனக் கொள்ளினு மமையும். ஒரு சாரார் 'அறியாமை அசுத்த தத்துவம்' என்றும், 'அறிவு சுத்ததத்துவம்' என்றுங் கூறுவர்.

'சிந்தையற நில்லென்று' வைத்தது அலையற்ற சாகரம்போலச் சிந்தையசைவறத் தெளிந்து சுட்டற நிற்கச் செய்ததனை. திருமந்திரம்: "உரையற்ற வொன்றை யுரைசெயு மூமர்காள்!, கரையற்ற தொன்றைக் கறை காணலாகுமோ?, திரையற்ற நீர்போலச் சிந்தை தெளிந்தாற், புரையற் றிருந்தான் புரிசடை யோனே." என்றதனுற் காண்க. சும்மாவிருந்தாலே ஆனந்தங் கிடைக்குமாகலின் அங்ஙனம் வைத்தா ராசிரிய ரென்பார், 'சும்மா விருத்திமேற் சின்மயா னந்தவெள்ளம், தேக்கித் திளைத்துநானதுவா யிருக்க' என்றனர். ஞானமணிமாலை: "முத்திச் சிவானந்த முட்டாமல் மேன்மேலுந், தத்திக் கரைபுரண்ட தானுலு நித்தியமு, முன்

னால் முழுகிலது வுன்னுணை வற்றியிடு, மென்னுணை சும்மாயிரு." என்றத னுற் காண்க.

'நானதுவாக' என்றது வியாப்பிய வியாபகத்தால் கண்ணொளியும் ஞாயிற்றி னொளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினையும் முதல்வன் கலப்பினையு நோக்கி நின்று, கருடோகம்பாவனைபோலச் சிவோகம்பாவனை யொருவன் செய்யப் பெறு மாயின், அக் கருடன் அம் மாந்திரிகனுக்கு வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி விடத்தினை நீக்கித் தெளிவு செய்யுமாறு போல, முதல்வனு மிவ னில் வேறாதலின்றி யத்துவிதமாய் நின்றருளியேயாம். சிவஞானசித்தியார்: "கண்டவிவை யல்லேனு னென்றகன்று காணுக், கழிபாமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த, தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே, சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறன்றி, விண்டகலு மலங்களெலாங் கருடத்தி யானத்தின், விடமொழியு மதுபோல விமலதையு மடையும், பண்டைமறை களுமதுநா னேனென்று, பாவிக்கச்சொல்லுவ திப் பாவத்தைக் காணே." என்றதனுற் காண்க.

ஏகான்மவாத மதம்.

'கடோபாதிவசத்தால் ஆகாயமானது இரண்டாய் நின்றாற்போல' வும், 'பல பாத்திரங்களிலுள்ள சலோபாதிவசத்தால் ஒரு சந்திரன் பல வாய்த் தோன்றினாற்போல'வும், அகண்ட பரிபூரணமா யிருக்கின்ற முதல் வன்றானே மாயாகாரியங்களாக விருக்கிற தேகோபாதிகடோறும் சீவ பேதத்தினை யடைந்து பெத்த நீங்கி முத்தியின்கண் அந்தக் கடமும் பாத்தி ரங்களும் பின்னமாயுள்ளளவிற் கடாகாயமு மாகாயமு மொன்றாய் நின்றாற் போலவும், பலவாகத் தோன்றின சந்திரப் பிரதிபிம்பங்கள்போ லொன் றாய் நின்றாற்போலவும், மகத்துக்களை யாச்சிரயித்து வேதாந்த சிரவணஞ் செய்து அதனுன் முன்னுண்டான மாயோபாதி நீங்கிச் சீவனே பிரமமா யிருக்கையே நானதுவாயிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

ஒருபொரு ளிரண்டாய்ப் பின்னொன்று மென்னிற் சீவபர மிரண்டிற் குங் குணமொன்றா யிருத்தல்வேண்டும். அன்றியும், இப்படி யிருப்ப தொன் றிற்கு மாயோபாதிகளிலே நின்று சுகதுக்கப்படவும் அவை நீங்கு தற்கு மகத்துக்களைச் சேர்ந்து வேதாந்தங் கேட்கவும் வேண்டாம். அன்றியும், சாயுச்சிய வின்பம் பெற்றாலும் பின்பு செனன முண்டாதல் வேண்டும். ஆதலால், ஏகான்ம வாதம் அடாது.

சிவாத்துவித மதம்.

'அக்கினியினின்றும் பல பொறிகளும் புகையுந் தோன்றினாற்போல' அநாதியாயிருக்கிற முதல்வன்றானே பிரபஞ்ச காரணமாய்ச் சடசத்தியா

யிருக்கிற மாயை மாயைகளையும் ஆன்மாக்களையும் பகுத்துத் தன்னிடத்தி னின்றுந் தோற்றுவித்து, அந்த மாயையினாலே பிரபஞ்சத்தைப் படைத்துச், சராசரபேதமான எண்பத்துநான்கு நூறாயிரபேத யோனிகடோறு நின்று விளையாடிப், பெத்த நீங்கின முத்தியின்கண் கன்ம சமத்துவமும் சத்திநிபாதமு முண்டான வளவிற் சற்குருவை யடைந்து, சாம்பவி தீட்சை பெற்றுக், குரு உபதேசத்தாலே ஜெகத்தடங்கலையுஞ் சிவமாக அறிந்து, பேறு மிழவும் பெறுவானும் ஈவோனும் வேறில்லை யென்று கருதிச், சீவனே சிவன், சிவனே சீவனென்று பேதாபேதங்கள் கொண்டிருக்கையே ஞானதுவா யிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

சித்தாயிருக்கிற முதல்வனிடத்திலே ஆன்மாக்கள் தோன்றிற் கடாதிகளைப்போன்று மூர்த்தமா யழியும். பேறு மிழவும் பெறுவானு மீவானும் வேறில்லை யெனில், ஆசிரியனை யடைந்து பெற்ற மோட்சத்தா லொரு பிரயோசனமு மில்லையாம். ஆதலால் சிவாத்துவிதம் அடாது.

ஐக்கியவாதி மதம்.

அநாதியிலே ஆன்மாவு முதல்வனும் வேறாயிருந்து முத்தியிலே நீரில் நீரும், பாலிற் பாலும், நெய்யி னெய்யும் கலந்தாற்போல ஒன்றாயிருக்கையே ஞானதுவா யிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

அநாதியிலே வேறாயிருந்த முதலிரண்டில் ஒன்றழியும் ஆதலால் ஐக்கிய வாதம் அடாது.

பேதவாதி மதம்.

முதல்வனும் ஆன்மாவு முத்தியிலு மொன்றாது பேதமாயிருப்பதுவே ஞானதுவா யிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

சாயுச்சியமென்பது மின்றி, முதல்வனைப் பெற்றது மில்லையாம். ஆதலால், பேதவாதம் அடாது.

சங்கிராந்தவாதி மதம்.

'தீயிற் சேர்ந்த இரும்பு தீயானாற்போல' ஆன்மாவு முதல்வனுடனே கூடி முதல்வனா யிருக்கையே ஞானதுவா யிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

ஆன்மாவிற் கங்ஙனமாந் தன்மை யில்லை. அஃதெங்ஙன மெனின், தனக்குப் பிராணனாயிருக்கிற முதல்வனுடைய தலைமைபோல் இவனும் பஞ்சகிருத்தியமும் நடத்தல்வேண்டும். நடத்தில் அவனுடைய தலைமை

கெடும். அன்றியும், தீயைச் சேர்ந்த இரும்பு தீ செய்யுந் தொழிலைச் செய்யாது. இரும்பைச் சேர்ந்த தீயே தகிக்கும். ஆதலால், சங்கிராந்தவாதமு மடாது.

### மாணவகன் வினா.

இங்ஙனம் பேதமுதலியவற்றினை மறுக்கின், ஆன்மாவும், முதல்வனும் ஏகீபவித்துத் தான் கெடாமலின்றி, பரமானந்தத்தினை அநுபவிக்கு முண்மைக்கு உவமைமுகத்தா லருளிச் செய்யவேண்டும்.

விடை:—கருவிக ளெல்லாங் கழன்ற கேவலத்திலே ஆணவமலத்தினை ஆன்மா சென்று கூடாமல், ஆணவமும் ஆன்மாவினை வந்து பொருந்தாமல், ஆன்மா தான் கெடாமல், அந்த ஆணவத்தினை யிதுவென்று சுட்டிக் காணுமல், ஆணவமும் ஆன்மாவு மொன்ருகாமல்-இரண்டாகாமல் - ஒன்று மிரண்டு மின்ருகாம லிருந்ததன்மைபோலாம். ஆன்மாவும் முதல்வனும் ஐக்கியமான சாயுச்யத்தி னிலைமையாம். சிவப்பிரகாசம்: "ஒன்றிரண் டாகி யொன்றி னொருமையா மிருமை யாகி, யொன்றிலொன் றழியு மொன்ரு தென்னினொன் ருகா தீயி, னொன்றிரும் புறழி னின்ரு முயிரினைந் தொழிலும் வேண்டு, மொன்றின்ன் றுணரு முண்மைக் குவமையா ணவத்தோ டொன்றே." எனவும், திருவருட்பயன்: "ஒன்ருகு மொன்ரு திரண்டாகு மோசையெழா, தென்ருகு மொன்றிரண்டு மில்." எனவும், "தாடலைப்போற் கூடியவை தானிகழா வேற்றின்பக், கூடலை யேகமெனக் கொள்." எனவும், சிவானந்தமாலை: "தாணுவினோ டத்துவிதஞ் சாதிக்கு மாணவனே, யாணவத்தோ டத்துவித மாக்கினரார்? - கோணறவே, யென்னுணை யென்னுணை யென்னுணை யேகமிரண், டென்னுமற் சும்மா விரு." எனவும் வருவனவற்ருற் காண்க. மற்றும் இம் முத்திநிலைமையினை "சித்தாந்தவசன பூஷணம்" என்னும் சாத்திரத்து அத்துவித முத்தியிலணக்கத்திற் காண்க. வடபாற் பரமகுருவாவார், கயிலையங்கிரியில் இறைவர் தட்சண திசையை நோக்கிச் சனகன், சனந்தனன், சனுதனன், சனத்குமாரனுகிய நான்கு மகா இருடிகட்கு உபதேசித்த அவசரமாகிய தட்சணுமூர்த்தம். நந்தி மரபாவது - தக்ஷணுமூர்த்தி சிவஞானபோதத்தினைத் திருநந்திதேவருக்கு உபதேசிக்க, அவர் சனற்குமார முனிவர்க்கும், அவர் சத்தியஞான தரிசனிகளுக்கும், அவர் பரஞ்சோதி முனிவர்க்கும், அவர் மெய்கண்டதேவர்க்கும், அவர் அருணந்தி சிவாசாரியர் முதலாயினோர்க்கும், அவர் மறைஞானசம்பந்த நாயனுர்க்கும், அவர் உமாபதிசிவாசாரியர்க்கும், அவர் அருணமச்சிவாயர்க்கும் உபதேசித்த வரன்முறை வழியாம். சிவப்பிரகாசம்: "தேவர்பிரான் வளர்கயிலை காவல்பூண்ட, திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற், பரவியசத் தியஞான தரிசனிக ளடிசேர், பரஞ்சோதி மாமுனிகள் பதியாய் வெண்ணெய், மேவியசீர் மெய்கண்ட திறலார் மாரு, விரவுபுக

ழுருணர்ந்தி விறலார்செல்வத், தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச், சந்தானத் தெமையாளுந் தன்மையோரே.'' என்றதனுற் காண்க.

'வேதாகமத்துணி பிரண்டில்லை யொன்று' என்றது, ஒருவனே பதி; இரண்டாவதாக வொருவ னில்லை யென்பதாம். அதர்வசிரசு: "ஏகாகோருத்ரோநத்விதீய:" என்றதனுற் காண்க.

## ஏகான்மவாதி மதம்.

"இரண்டில்லை' என்பதற்குப் 'பிரமத்தினைக்காட்டிலும் வேறொரு பதார்த்த மில்லை' என்றும், 'ஒன்று' என்பதற்குப் 'பிரமமொன்றே' என்றும் பொருள் கூறவேண்டும்.

## மறுப்பு.

பிரமம் ஒன்றென்று சொல்லுகிற ஒருவன் அப் பிரமத்தின் வேருய பசுவென் றறிவாயாக.

## ஏகான்மவாதி வினு.

"இங்ஙனம் வேற்றுமை கூறில் பிரம" மில்லையாயின், "ஒரு பொருளுமில்லை என்னும் வேதத்திற்குத் தாற்பரிய மென்னை?"

விடை:—'அகரவுயி ரில்லையாயின் அக்கரங்க ளில்லையா' மென்னு முறைபற்றி, வேதம்: பிரமப்பொரு ளில்லையாயின், ஒரு பொருளு மில்லை யென்ருேதும். சிவஞானபோதம்: "ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா, மொன்றென்றநீ பாசத்தோ டுளகா'-ணென்றின்றே, லக்கரங்க ளின்ரு மகரவுயி ரின்றே, லிக்கிரமத் தென்னு மிருக்கு" என்றதனுற் காண்க.

அறுபான்மூன்மை நாயன்மார்களி லொருவராய் திருமூலநாயனுர் மரபிலே யவதரித்து, திருக்கயிலாய பரம்பரைச்சந்தானமாகிய மெய்கண்ட தேவநாயனுருடைய வழிக்குரவரிடத்து ஞானேபதேசம் பெற்ற சற்குருமூர்த்திகளாகிய மௌனதரு சுவாமிகள் எழுந்தருளித் தன்பால் சிவஞானசித்தியினைத் தந்து, அச் சாத்திரத்தி னெறியினை யுபதேசித்து, அச் சாத்திரத்தின் எட்டாவது சூத்திரத்து முப்பதாவது திருச் செய்யுளின் முதலிரண் டடியின் கருத்தினை விளக்கி மௌனேபதேசஞ் செய்தனராக லின், 'சிவஞான சித்திநெறி...மௌனுபதேசகுருவே!' என்றனர். அத் திருச்செய்யுளின் கருத்தினைக் குறிப்பாக "அறியாமை யறிவாதி" என்று இச்செய்யுளினும், "பாதிவிருத்தத்தாலிப்பார்விருத்த மாகவுண்மை, சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ?" என்று குருமரபின் வணக்கத்தும் அனுவதித் திருப்பதனைக் காண்க. (2)

ஆதிக்க நல்கினவ ரார்? இந்த மாயைக்கெ
னறிவின்றி யிடமில்லையோ?

அந்தரப் புஷ்பமுங், கானலின் னீருமோ
ரவசரத் துபயோகமோ?
போதித்த நிலையையு மயக்குதே; அபயநான்
புக்கவரு டோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்கு ளிந்த்ரசாலஞ்
சாதிக்கு தே; இதனை வெல்லவு முபாயநீ
தந்தருள்வ தென்று? புகல்வாய்!
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
வந்தருளு ஞானகுருவே!
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே!

(இ - ள்) இந்த மாயைக்கு - (தனு - கரண - புவன - போகமா விரிந்து கிடக்கின்ற) இந்த மாயையினுக்கு, ஆதிக்கம் நல்கினவர் ஆர் - (இத்தனை) எற்றம் கொடுத்தவர் யார்?, என் அறிவு இன்றி இடம் இல்லையோ - (இதற்கு) என் அறிவல்லது வேறிட மில்லையோ?, அந்தரப் புஷ்பமும் - ஆகாயத்தாமரையும், கானலின் நீரும் - கானற் சலமும், ஓர் அவசரத்து உபயோகமோ - ஒரு அவசர காரியத்திற்கு உபயோகமாமோ?, போதித்த நிலையயும்-நீ எனக்குப்போதித்த நிலைமையையும், மயக்குதே - மயங்கப்பண்ணுகிறதே; நான் அபயம் புக்க - நான் அபயமாக அடைந்த, அருள் தோற்றிடாமல் - திருவருள் சிறிதுந் தோற்றுவகை, பொய்யான உலகத்தை - பொய்யாகிய பிரபஞ்சத்தினை, மெய்யா நிறுத்தி - உண்மை யாகத் தாபித்து, என் புந்திக்குள் - என் அறிவினிடத்தில், இந்த்ரசாலம் - இந்திரசாலத்தினை, சாதிக்குதே - விளையாடிக் காட்டுகின்றதே; இதனை வெல்லவும் - இதை வெல்லுதற்காகவும், உபாயம் - (ஒரு) உபாயத்தினை, நீ தந்தருள்வது - நீ போதித்தருளுவது, என்று - எந்நாள்?, புகல்வாய் - சொல்லுவாய்!, சண்மத ஸ்தாபனமும் - ஆறு மதங்களினையும் நிலைப்படுத் தும் பாண்டித்ய வகையும், வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாக நிலையும் - வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாக நிர்வகிக்கத்தக்க அனுபூதி நிலையை யும், மாதிக்கொடு - பெரிய திசைகளுடன் கூடிய, அண்டம் பரப்பு எல்லாம் - உலக விஸ்தீரணமெல்லாம், அறிய - அறியும்படி, வந்தருளும் - வந்து அடியேனுக்கு அருளிச்செய்த, ஞானகுருவே - ஞானாசாரியனே!, மந்த்ர குருவே—, என்க.

(வி - ரை) முதல்வன், சுத்தனுயிருக்கப்பட்ட ஆன்மா முன்னே செய்யப்பட்ட புண்ணியபாவங்கட் கீடாக உடம்பினையும், தத்துவங்களையும், இருப்பிடங்களையும், புசிப்புக்களையும் மாயையினின்றுங் காரியப்படுத்தித்

தர அம் மாயையின் வியாபகத்தில் தான் வியாப்பியமா யடங்கிக் கிடக்கின்றேனென்பார், 'ஆதிக்க நல்கினவரார்? இந்த மாயைக்கே' என்றார். இதனால் மாயையின் ஆளுகையைக் குறித்தனர். இங்ஙனம் மாயை தனக்குத் தனு கரண புவன போகமா யிருக்கைக்குக் காரணம் பிராரத் துவமேயாம். அது முன் சென்மத்தில் ஆகாமியமாக வேறியது. அவ் வாகாமியம் விளைந்ததற்கேது அறிவாகலின், 'அறிவின்றி யிடமில்லையோ?' என்றனர். இம்மாயை நித்தியமாயினும் காரிய ரூபத்தில் அநித்தியமாகக் காணப் படுதலின், 'அந்தரப் புட்பமுங் கானலின் னீருமோ ரவசரத் துப யோகமோ?' என்றனர்.

மாயையா லுண்டான ஞானங் கிஞ்சித் விடயமாய் அனான்மாவான சரீ ராதியில் ஆன்மபாவனையை யுண்டாக்குவதால் மோக மெனப்படும். அந்த காரத்திற் றீபம் பிரகாசித்தபோதிலும் கருநெய்தல் முதலானவற்றிற் செங் கழுநீரென்னும் விபரீதஞான முண்டாகும். அங்ஙனமே மாயையில் ஞானம் பிரகாசிக்கினும் அனான்மாவான சரீராதியில் ஆன்மாவென்னும் விபரீத முண்டாக்குகிற தன்மையால் மோகமென்பது சித்தமாகலின், 'மயக்குதே' என்றனர். அன்றியும், மாயையானது ஆன்மாவின் சிற்றறிவைப்பற்றி, 'நான் சுகி' 'நான் துக்கி' என்று வரும் விபரீதஞானத்தையு முயிர்க்குப் பண்ணு மாகலினாலும் 'மயக்குதே' என்றனர். சிவஞானசித்தியார்: "மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" எனவும், தத்துவ விளக்கம்: "ஓதிய வல்வினை யூட்டக் கருவியுடம்புலக, மாதிய போகமு மாய்நின்ற மாயை மயக்க றுவித்தே, போதந் தரும் பொருளாய்நிற்கும் புவனாதிகளுக், காதியு மாய்விரிந் தந்தமு மாகி யொடுங்கியதே." எனவும் வருவனவற்றாற் காண்க. பொய்யை மெய்யாக்கிக் காட்டுதல் மாயையின் தொழிலாதலால் 'பொய் யான வுலகத்தை மெய்யாக நிறுத்தியென் புந்திக்கு ளிந்த்ரசாலம் சாதிக் குதே' என்றனர். 'மயக்குது, சாதிக்குது' என்பன மரூஉ.

**சண்மதங்களாவன** - வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. வைரவத்திற்குத் தமருகமுஞ் சிலம்புந் தரித்த மூர்த்தியாயும், வாமத்திற்கு அக்கினியும் உபவீதமுந் தரித்த மூர்த்தியாயும், காளாமுகத்திற்குப் படிகமும் புத்ரதீபமணியுந் தரித்த மூர்த்தியாயும், மாவிரதத்திற்கு என்புமாலை தரித்த மூர்த்தியாயும், பாசுபதத்திற்குத் திரு நீறுஞ் சடைமுடியுந் தரித்த மூர்த்தியாயும், சைவத்திற்குத் தாண்டவ பூஷணனென்னு மூர்த்தியாயும், அவரவர் கோட்பாடுகளுக்குத் தக்கதாக அனுக்கிரகஞ் செய்கிறவராக இருத்தலின் 'சண்மதஸ்தாபனமும்' என்றார்.

அன்றியும், 'புறச்சமயிக ளறுவர்க்குள் உலகாயதன்: பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகிய நாலு பூதங்களுமே கர்த்தாவென்பன். அருகன்: உலக மெலாம் நித்தியமாயிருக்கும் அருகேசுரன் குருத்வமாத்திரத்திலே கர்த்

தாவாயிருப்ப னென்பன். புத்தன்: தானே சுகதாகர்த்தாவென்பன். மீமாங்கிசன்: உலகமெலாநித்தியமாயிருக்கும் சரீராதி யுற்பத்தியிலே கன்மந்தானே கர்த்தாவென்பன். பாஞ்சராத்திரி: நாராயணன்தானே அபின்ன நிமித்தோ பாதானனாய் சகத்கர்த்தாவாயிருப்பனென்பன். மாயாவாதி: பிரமந்தானே தன்னிடத்திலே பரிணாமத்தினாலே தான், விவர்த்தத்தினாலேதான் சகத்கர்த்தாவாயிருக்கு மென்பன். இங்ஙனஞ் சொல்லாநின்ற அவரவர்கட்கு அவரவர்களாலே சொல்லப்பட்ட கர்த்துரு காரணங்களை யதிஷ்டித்துக்கொண்டு அந்தக்கர்த்துரு காரணஸ்வரூபியாய் நிற்பானாகலினாலும் 'சண்மதஸ்தாபனமும்' என்றார். திருவாசகம்: "திருத்தகு மறுவகைச் சமயத் தறுவகையோர்க்கும் - வீடுபே றாய்நின்ற" எனவும், சிவஞானசித்தியார்: "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே, மாதொருபாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள், வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு, மாதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே." எனவும் வருவனவற்றாற் காண்க. (3)

மின்னனைய பொய்யுடலை நிலையென்று(ம்), மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டு
மின்னார்க ளின்பமே மெய்யென்றும், வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்,
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றி, இப்
பொய்வேட மிகுதிகாட்டிப்,
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்,
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே!
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே!

(இ - ள்) மின் அனைய - தோற்ற வொடுக்கங்களால் மின்னலினையொத்த, பொய் உடலை - பொய்யாகிய உடம்பினை, நிலை என்றும் - நிலையுள்ளதென்றும்; மை இலகு விழிகொண்டு - அஞ்சனந் தீட்டப்பெற்று விளங்குகின்ற கண்களைக்கொண்டு, மையல் பூட்டும் - காமமயக்கமாகிய விளக்கினை யிடுகின்ற, மின்னார்கள் இன்பமே - மாதர்கள் சுகமே, மெய் என்றும் - உண்மையென்றும்; வளர் மாடம் - உயர்ந்த மாளிகைகளின், மேல் வீடு - மேல் உப்பரிகைகள், சொர்க்கம் என்றும் - சொர்க்கலோகம் என்றும்; பொன்னை - சுவர்னத்தினை, அழியாது வளர் பொருள் என்று -

அழியாது வளர்கின்ற பொருளென்றும், போற்றி - விரும்பி, இப் பொய் வேட மிகுதி காட்டி - இந்தப் பொய்வேடத்தின் பெருமையை வெளிப் படுத்தி; பொறை - பொறுமை, அறிவு - ஞானம், துறவு - இருவகைப் பற்றையுந் துறத்தல், ஈதல் - கொடை, ஆதி - முதலாகிய, நற்குணம் எல் லாம் - நற்குணங்கள் எல்லாவற்றையும், போக்கிலே போகவிட்டு - அவை செல்லும் வழியிற் செல்லவிட்டு; தன் நிகர் இல் - தனக்கொப்பில்லாத, லோபாதி - உலோபகுணமுதலாகிய, பாழ்ம்பேய் பிடித்திட - பாழாகிய பிசாசம் பற்றிக்கொள்ள, தரணிமிசை - உலகில், லோகாயதம் - லோகாயத னுடைய, சமயநடை சாராமல் - சமயவொழுக்கத்தினைப் பொருந்தாமல், வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி மன்ன - வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதியைப் பொருந்தும்படி, ஒருசொல் கொண்டு என்னைத் தடுத்து ஆண்டு - ஒருமொழியால் என்னை தடுத்தாட்கொண்டு, அன்பின் வாழ்வித்த - அன்பினால் வாழச் செய்தருளின, ஞான குருவே - ஞானசாரியனே!, மந்த்ர குருவே—, என்க.

(வி - ரை) உடலானது கணநேரத்தில் தோன்றிமறையு மின்னலினை யொக்குமென்பார், 'மின்னனைய பொய்யுடலை' என்றார். சித்தாந்த தரிச னம்: "நீர்க்குமிழியின்னற்குமுண்டு நிலையில்லை, யாக்கைக்கென் றெண்ணி யறிந்து." என்றதனாற் காண்க. மகளிர்களுடைய கண்ணினால் ஆடவர்க ளுடைய உள்ள முடைபட்டு மயங்குமாகலின், 'விழிகொண்டு மையல் பூட் டும்' என்றனர். திருக்கோவையார்: காய்சின வேலன்ன மின்னியல் கண் ணின் வலைகலந்து, வீசினபோதுள்ள மீனிழந் தார்வியன் றென்புலியூ, ரீசன சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப், பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே." என்றதனாற் காண்க.

உலகாயதன்: "மாதர்கள் இன்பமே மெய்யான முத்தி" என்பனாக லின், 'மின்னார்க ளின்பமே மெய்' என்றனர். தத்துவப் பிரகாசம்: "அறமென்று சொல்லுவது பிறிதொன் றில்லை, யரிவையர்க்காம் பணி செய்த லதுதானே யறமாம், புறநின்று தமொறிற் பெறலா மென்கை, போய்க்கண்டா ரிலையாமாற் பொய்மைநிலை யாகும், செறியாவ தரிவையர்க் காம் பணிசெய்து வழுத்தி, நேரின்ப மனுபவித்தல் முத்திதனி நெறியாம்." எனவும், சிவஞானசித்தியார்: "ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை யுள்கி, வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின், கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கையேயாய், நீடுவ தின்ப முத்தி யித்தினின் றோர்கண் முத்தர்." எனவும் வருவனவற்றாற் காண்க.

அன்றியும், அம் மாதர்கள் வாழுகின்ற வீடுகளின் மேல்முற்றம் சொர்க்கலோகத்திற்குச் சமானமென்பாராகலின், 'மாடமேல்வீடு சொர்க்க மென்றும்' என்றனர். சிவஞானசித்தியார்: "மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றிலேறி, முதிர்நிலா வெரிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப

மொய்த்த, கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கண்மார் பகல மூழ்கும், புதுநிலா வியநற் போகம் விடுவர்புன் சமயத்தோரே.'' என்றதனுற் காண்க. நற்குணங்களை யெல்லா மிழந்து பேய் பிதற்றுவதுபோல, ஒன்றுக்கொன்று மாறுகப் பேசி நன்மைகளை யிழந்த உலகாயதன் நடையினைச் சாருதல் தீதென்பார், 'லோபாதி பாழ்ம்பேய்ப் பிடித்திடத் தரணியிசை லோகாயதன் சமயநடை சாராமல்' என்றனர். நெஞ்சுவிடு தூது: ''இருளலகைபோ லிகலேபேசு முலகாயதன் பாலுறுதே'' என்றதனுற் காண்க. ()

''போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்,
புருஷர்பெறு தர்மாதி வேதமுட னகமம்
புகலுமதி னலாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுத
னுவி தங்கடோர்ந்து,
நானு னெனக்குழறு படைபுடை பெயர்த்திடவு
நான்குசா தனமுமோர்ந்திட் (டு),
ஆனநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற் (று),
அணுபக்ஷ சம்புபக்ஷம்
ஆமிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந், திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மர'' பென்ற பரமகுருவே!
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே!

(இ - ள்) போனகம் இருக்கின்ற சாலையிடை - மடைப்பள்ளியில், புசித்தற்கு வேண்டுவ - உண்ணுதற்கு வேண்டிய பொருள்களெல்லாம், இருக்குமதுபோல் - இருத்தல்போல்; புருஷர் பெறு - மக்க ளடைதற்குரிய, தர்மாதி - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த நான்கும், வேதமுடன் ஆகமம் - வேதத்துடன் ஆகமங்களும், புகலும் அதினல் ஆம் பயன் - சொல்லுகின்ற அதனு லுண்டாகும் பயனும், ஞானநெறி முக்ய நெறி - ஞானநெறியாகிய முக்ய நெறியும், காட்சி அனுமானம் - காட்சியனுமான மென்கிற பிரமாணங்களும், முதல் - முதலாகிய நானுவிதங்கள், தேர்ந்து - பலவகையு மாராய்ந்து; நான் நான் என - நான் நான் என்னும், குழறுபடை - குழறுபாட்டை, புடைபெயர்த்திடவும் - நிர்த்தூளியாக்கவும், நான்கு சாதனமும் ஓர்ந்திட்டு - சாதநசதுஷ்டயத்தினையும் விசாரித்துணர்ந்து; ஆன நெறி ஆம் சரியை ஆதி சோபானம் உற்று - நல்ல நெறியாகிய சரியை முதலாகிய சோபானங்களை யடைந்து; அணுபக்ஷம் சம்புபக்ஷம் ஆம் இரு விகற்பமும் - அணுபக்ஷம் சம்புபக்ஷம் என்கிற இரண்டு வேறுபாடுகளையும், மாயாதி சேவையும் - மாயாதிகளுடைய தரிசனத்தை

யும், அறிந்து - ஐயந்திரிபற வுணர்ந்து, இரண்டு ஒன்று என்னும் - இரண்டு ஒன்று என்கிற, ஓர்-ஒப்பற்ற, மானதம் விகற்பம் அற - மனோ விகற்பம் அற்றொழிய, வென்று நிற்பது - ஜயித்து நிற்பதே, நமது மரபு என்ற - நமது மரபென்றுரைத்தருளிய, பரம குருவே - பரமாசாரியனே !, மந்த்ர குருவே—, என்க.

(வி - ரை) "மடைப்பள்ளியில் உண்டிக்குரிய பொருளனைத்து மொருங் கிருப்பதுபோல" முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள் அனுட்டித்து நடக்கவேண்டிய அறம் பொருள் இன்பம் என்பனவற்றைப் பொது நூலாகிய வேதமும், சத்திநிபாதம் வாய்ந்த உத்தமர்களாகிய சித்தாந்திகளுக்குரிய வீடுபேற்றினை ஆகமும் கூறலின், 'போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ புசித்தற் கிருக்குமதுபோற், புருடர்பெறு தர்மாதி வேதமுடனாகமம் புகலும் என்றனர். அறம் பொருள் இன்பம் வீடாகிய புருஷார்த்தம் நான்கில் நான்காவதாகிய வீட்டினை யடைவதே சிறந்த செந்நெறியாதலின், 'ஞானநெறி முக்யநெறி' என்றனர்.

இதனைக் காட்சி - அனுமானம் - ஆகமம் முதலிய அளவைகளானன்றி யுண்மை தேறக்கூடாதாகலின், 'காட்சியனு மானமுதல் நானுவி தங்க டேர்ந்து' என்றனர். "இராகமறியா ரிசைப்பயன்தா னறியார், தராதரமறியார் சற்காரிய மறியா, ரோரா ரளவை யொருபயனுந் தானறியா, ராராய்ந் தளவை யறிந்துகொள் ளீரே." என்றதனாற் காண்க. அன்றியும், அளவையென்பது பிரமாணம். பிரமாணத்தின் சாமான்னிய லட்சணம் சம்சய விபரிய ஸ்மிருதி, வியதிரக்தையான ஆன்மசிற்சத்தி. இச் சிற்சத்தியினைக் கொண்டே வேதாகமங்களி னுண்மை யறியவேண்டு மாகலினானும், 'காட்சியனு மானமுதல் நானுவிதங்க டேர்ந்து' என்றனர். பௌஷ்கரம் : "சம்சயாதி விநிர்முக்தா சிச்சத்திரமான் மிஷ்யத" என்றதனாற் காண்க.

காட்சியாவது—நிருவிகற்பவுணர்வைத் தனக்கு முன்னதாகக்கொண்டு ஐய உணர்வும் விபரீதவுணர்வுமின்றி விடயங்களை நேரே யறிவதாகிய ஆன்மாவினுடைய சிற்சத்தி. அனுமானமாவது—நேரே யறியப்படுவது மின்றிச் சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்துநின்ற பொருளை அதனை விட்டு நீங்காது யாண்டு முடனாய்நிகழு மேதுவைக்கொண்டு அவ்வாறு உணர்வதாகிய ஆன்மாவினுடைய சிற்சத்தி. ஆகமமாவது—மேலிரண்டாலு மறியப்படாத பொருள்களை முதல்வன் வாக்கியங் கொண்டு அவ்வாறுணரச்செய்வதாகிய ஆன்மாவினுடைய சிற்சத்தி. சிவஞானசித்தியார் : "மாசறு காட்சியையந் திரிவின்றி விகற்ப முன்னு, வாசற வறிவ தாகு மனுபான மவினு பாவம், பேசறு மேதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகுங் காசறு முரையிம்மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்." என்றதனாற் காண்க. மற்று மிவற்றின் விரிவை தருக்கசோபானம் என்னு நூலிற் காண்க.

**நான்கு சாதனமாவன**—நித்தியாநித்யவஸ்து விவேகம், இகமுத்ரார்த்த பல போகவிராகம், சமாதிசட்கசம்பத்தி, முமுட்சுத்துவ மென்னு நான்கு மாம். நித்தியாநித்யவஸ்து விவேகமாவது - பரமான்மா நித்தியனென் றும், தேகாதிப் பிரபஞ்சம் காரியப்பாட்டால் அநித்யமென்றும் பகுத்தறிதல். இகமுத்திரார்த்த பலபோக விராகமாவது - இகலோக பரலோகங் களிலுள்ள போகங்களில் அநித்த துக்காதிதோடதரிசனத்தால் வாந்தாசன மூத்திர புரீஷங்களிற்போல அருவருப்புற்று ஆசை விடுவது. சாமாதி சட்க சம்பத்தியாவது - சமம் தமம் உபரதி திதீக்ஷை சமாதானம் சிரத்தை முதலியவற்றின் பிராப்தி. முமுட்சுத்துவமாவது - சிவப்பிராப்தியும் அனர்த்தநிவிர்த்தியும் மோட்சத்திற் கேதுவாகலின் இவற்றின்க ணுள்ளதாகு மிச்சை.

இங்குக் குறித்த சாதனங்களில் நான்காவது சாதனம் முமுட்சுத்துவம்; இந்த முமுட்சுத்துவ மெய்தினவன் முமுட்சு. இந்த முமுட்சுவாலடையத் தக்க முதல் மோட்சம் சிவசாலோக்கியம்; இரண்டாவது மோட்சம் சிவசாமீப்பியம், மூன்ருவது மோட்சம் சிவசாரூப்பியம்; நான்காவது மோட்சம் சிவசாயுச்யம்; இதுவே முடிந்த மோட்சம். இவைகளைப் பெறுதற்குச் சரியையாதிகளைச் செய்தே தீரவேண்டியது. ஆகலின், சாதன சதுஷ்டயமடைந்த பின்னர் சரியையாதிக ளடையவேண்டு மென்பார். 'நான்குசா தனமுமோர்ந்திட் டானநெறி யாஞ்சரியை யாதி' என்றனர். இதனுற் சிறப்பு நூலாகிய ஆகமங்களிற் குறித்த சாதனங்கட்குப் பொது நூலாகிய வேதங்களிற் குறித்த சாதனங்கள் சோபான மென்பதாயிற்று.

**அனுபட்சமாவது**—ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட்டடையு நெறி; இது பிரோகப்படிவை யென்றும், அபரமென்றுங் கூறுவர். **சம்புபட்சமாவது**—இறைவன் திருத்தப் பக்குவப்பட்டடையு நெறி; இது பிரோக கருவியென்றும், பரமென்றுங் கூறுவர்.

**மாயாதிசேவையாவது**—மாயையின் காரியமாகிய தத்துவதரிசனமாம். 'ஆதி' என்றதனுல் ஆன்மதரிசனமும், பரதரிசனமு மடங்கும். இம் மூன்றினையுங் கூறவே, இத் தரிசனங்கட்கு முன்னும் பின்னுமாயமைந்துள்ள தத்துவரூபமும், தத்துவசுத்தியும், ஆன்மரூபமும், ஆன்மசுத்தியும், பரரூபமும், பரயோகமும், பரபோகமு மேற்படும். இவையே தசகாரியமாம். இத் தசகாரியத்தின் உண்மை தேர்ந்தவரே மனவிகற்பஞ் சிறிதுமின்றி ஏகமிரண் டென்ஞத அத்துவித உண்மையினை யறிவாராகலின், 'மாயாதி சேவையு மறிந்திரண் டொன்றென்னுமோர், மானத விகற்பமற' என்றனர்.

**தத்துவ ரூபமாவது**—பிருதிவி முதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களும், தனுவும், கரணமும், புவனமும், போகமும், செயலும், பிரே

ரகமுமாய் நின்ற பொருளும், குணமும், தொழிலும் தனக்கு வேருகக் காண்பது.

**தத்துவ தரிசனமாவது**—பிருதிவி முதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களையும் சுத்தமாயா அசுத்தமாயா மலங்களினது காரியமென்றும், சடபதார்த்த மென்றும், தன்ருலே யறியப்பட்டதென்றும் தன்னறிவிலே விளங்கக் காண்பது.

**தத்துவசுத்தியாவது**—பிருதிவி முதல் நாதமீருன முப்பத்தாறு தத்துவங்களின் விகற்பமாகிய சுட்டறிவுகளிற் ருனில்லாமல் தத்துவங்கள் தன்னைத் தாங்காமல் 'கானலைத் தண்ணீரென்று கண்டவன் கானலென்றறிந்த விடத்துத் திரும்ப விரும்பாதது போல'வும், 'சொப்பனத்தில் யானையேறி மாலையிடக் கண்டவன் விழித்தவிடத்து மெய்யாகக் காணுமல் பொய்யாகக் கண்டதுபோல'வும், தன்னறிவிலே கண்டு நீங்கித் தானசைவின்றி யன்னியனு யெங்கு நிறைபவனுய் நித்தியமா யறிவாயுள்ள முறைமையை யறிந்துநிற்பது.

**ஆன்மரூபமாவது**—தேசிக மூர்த்தியினுடைய அனுக்கிரகத்திருலே தன்னையுந் தன்னிடத்திலே பெந்தமாயிருக்கிற தத்தவ விவகாரங்களையும் எவ்விடத்திலுந் தோன்ருமல் சகசமாய் மறைந்துநின்ற ஆணவ மலத்தினையும் நீங்கித், தானறியு முறைமையும் அவனது ஞானம் அறிவுக்கறிவாய் நின்று உபகரிக்கிற முறைமையுந் தன்னறிவிலே விளங்கக் காண்பது.

**ஆன்ம தரிசனமாவது**—ஆன்ம செய்தி யெவ்விடத்திலுந் தோன்ருமல் தத்துவ தாத்திகங்களை யென்னுடையதென்றும், பசுஞானத்தினையாலொன்று நின்ற அசத்திய போதநீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப் போதங் கழன்று நிற்பது.

**ஆன்ம சுத்தியாவது**—தனக்கெனச் செய்தி யில்லாத ஆன்மா தன்னுடைய சுட்டறிவு எவ்விடத்திலுந் தோன்ருமற் கெட்டுத் தன்னிடத்திலே விளங்கப்பட்ட அனுக்கிரக ஞானத்திலே தற்பூரணமெல்லாம் அடங்கித் தனது செய்தி யெல்லாம் அனுக்கிரகத்தினுடைய செய்தியாய், தன்னையந்த ஞானம் அடக்கின முறைமையும் தான் அந்த ஞானத்திலே யடங்கின முறைமையு மெவ்விடத்திலுந் தோன்ருமல் பெந்தத்திருலே தேகமே தானுயுந் தானே தேகமாயு நின்ற முறைபோலச் சிவமே தானுய் நிற்க வந்த அவசரம்.

**பரரூபமாவது**—சடசித்துக்களாகிய தாவர சங்கமங்களி லெல்லாந் தான் வேறற நின்று, பெருமை பொருந்தி யிருக்கப்பட்ட காருண்ணிய சத்தியே தனக்குத் திருமேனியாகி, ஆணவமலஞ் சகசமாயிருக்கப்பட்ட ஆன்மாக்கள் பாகபேதங்களைத் திருவுளத்தடைத்துத் தனது இச்சா ஞானக் கிரியையின் செய்தியாகிய மாயா தத்துவங்களினுல் சிருட்டித்தும்

திதித்தும் சங்கரித்து மலபாகவொழிவிலே இந்தத் தத்துவங்கள் வேருகும்படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்துச், சத்திநிபாதத்தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குத் தோன்ற மானிடச்சட்டை சாத்தி யெழுந்தருளிவந்து தான் வேறற நிற்கிற முறைமையைத் தருகின்றவன், ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவிற் கறிவாயிருக்கிற சிவனேயென்று பிரதிக்கினை - ஏது - திட்டாந்தங்களினுலே மயக்க விகற்பமறத் தன்னறிவிலே விளங்கக்கண்டு நிற்பது.

பாதரிசனமாவது—ஆன்மாவென்ப தெவ்விடத்திலுந் தோன்ருமல் என்னதென்றும் யானென்றும் நின்ற அசத்திய போத நீங்கத் தேசிக மூர்த்தத்தி னனுக்கிரக ஞானம் பிரகாசித்து நின்றவவதரஞ் சிவனுடைய பாதமாம். தன்னை யுணர்த்தும் பகுதியாகத் தாக்குவதான விஷய போகங்களை யவனவனதுவாய் நோக்குமிடமெல்லா மவனனுக்கிரகத்தையே கண்டனுபவிப்பது அவனது திருமுகமாம். அந்த அனுக்கிரகத்திலே தற்செயல் தோன்ருமல் பரவசப்படுவதே சிவனது திருமுடியா மென்றறிந்து இந்த வுண்மையைச் சந்தேக விகற்பமற வுள்ளபடி விசாரித்தறிந்து, இதுவு மல்லாமல், சத்தியமாயுள்ள பொருள் வேறேயு மொன்றுமில்லை யென்று தெளிந்து, என்னதியா னென்னும் விகற்பமாகிய பிருதிவி முதல் நாத மீருகச் சொல்லப்பட்ட சகல வித்தையிலும் பொருந்தாமல், இந்தக் கருவிகள் நீங்கினுல் தனக்குள்ளே சகசநிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல், இந்தக் கேவல சகல மிரண்டு நீங்கின விடத்து விளங்குவதான போதபூரணமாகிய அகம்பிரம ஞானத்திலும் பொருந்தாமல், தேசிக மூர்த்தத்தின் அனுக்கிரக ஞானத்திலே தற்பூரணமெல்லா மடங்கித், தனது செய்தியெல்லா மவனனுக்கிரக ஞானத்தினது செய்தியாய் அறிதற் கரிதாகிய மேலான பூரணவின்பந் தோன்ருமல் ஏகதேச வியாபாரமாகிய தனுகரணுதி யின்பமே தோன்ற, அந்த இன்பங்களையே மெய்யென் றனுபவித்து நின்ற முறைமைபோலத், தனுகரணுதி யின்ப மெவ்விடத்திலும் தோன்ருமல் பூரண இன்பத் தொடர்ச்சியாகிய தேசிக மூர்த்தத்தி னனுக்கிரக ஞானத்தை யெவ்விடத்திலுங் கண்டனுபவிப்பது.

பரயோகமாவது—சடசித்துக்க ளிரண்டினு நின்று விளங்குவதாகிய இதாகிதங்களுக் கேற்ற சத்தாதி விஷயங்களிலே எந்த விஷயங்கள் வந்து தாக்கினுலும், அந்த விஷயங்களை யெதிரிட்டுப் பார்த்து இது மாயா காரியமான தனு கரண புவன போகங்களினது விகற்ப மென்றும், இந்த விஷயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தினது விகற்பமென்றுங் கண்டு, தனக்கெனச் சற்றுஞ் செய்தி யில்லாத சடரூபமாகையினுலே தானுகச் செயற்பட அறியாது அந்த விஷயங்களை யதுவதுவாகப் புசிக்கு மான்மாவானவன் நித்தியனுய்ப் பூரணனு யறிவாயிருந்தாலுந் தானுக வொன்றையு மறிதற்கு அறிவில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து, அந்த ஆன்மாவி

னது அறிவிற்கறிவாய் நின்று, இந்த விஷயபோகங்களை யிடைவிடாமற் பாகமறிந் துணர்த்தி நிற்கிற திருவருளையு முள்ளபடி தரிசித்து, அந்த அருளினது நிறைவெல்லாந் தனது வடிவாகவுடைய பூரண வின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தமா யெழுந்தருளி மானிடச்சட்டை தரித்து வந்துப தேசித்த அனுக்கிரகத்தை யுள்ளபடி தரிசித்து, இவ்விடத்திலே வந்து பொருந்தப்பட்ட சத்தாதி விஷயங்களை யெல்லாம் அந்த அனுக்கிரகத்தி னுலே பொருந்திப் பார்த்து, இந்த விஷய போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விக்கிறதும் அனுக்கிரகமாகிய திருவருள்தானே ; நல் வினையைச் செய்விக்கிறது மந்தத் திருவருளே. இந்த நன்மை தீமைகளை யறியும்படிக்குப் புசிப்பாகி வந்த விஷய பேதங்களும் அவ்வனுக்கிரகமாகிய அருள்தானே யென்று யுள்ளபடி தரிசித்து, இந்த முறையன்றியிலே சித்தா கிய ஆன்மவர்க்கத்துக்கும் சடமாகிய பாசசாலங்களுக்கு மொன்றையொன் றறியவும், ஒன்றையொன்று பொருந்தவும் ஒருசற்றுஞ் செயலில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து அந்தப் பொருளோ டிசைவது.

பரபோகமாவது—எத்தகைய செய்திகளைச் செய்திடினும் தற்செய லெவ்விடத்திலுந் தோன்றாம லனுக்கிரகமாகிய அருணிறைவிலே வேறற நிற்கில் அந்த அருளிற்கு முதன்மையாகிய நேய மவனதறிவு பூரணமெல்லாந் தனது வடிவாகக் கொண்டு, தானறிந்த அறிவு பூரணத்திற் கெல்லா முயிராய் இவனதறிவு தொழிலாகிய இந்திரிய போகங்களாய் வரும் புசிப்புந் தொழிலுந் தனது புசிப்புந் தொழிலுமாகவே புசித்துத் தொழிற் படும் நானாவிதமாகிய போகங்களை யெல்லா மவனுக்குத் தனது பூரண இன்பமாகிய நேயவடிவாகவே காட்டி, இவனதறிவு பூரணமெலாந் தன தின்பப் பூரணமாகவும், தனதின்பப் பூரணமெல்லா மிவனதறிவு பூரண மாகவும் வேறறத் தோன்றிநின்று தனதின்ப நிறைவெலா மிவனது போக பூரணத்தை யழித்து நிற்பது.

அத்துவித உண்மையினை ஏகான்மவாதிகள் ஒன்றே யென்றும், துவைதிகள் இரண்டே யென்றுஞ் சாதிப்பார். சுத்தாத்வித சித்தாந்த வைதிக சைவர்கள் ஒன்றென்றும் இரண்டென்றும் கூறத் துணியாது அத்துவிதமே யென்பர். ஆகலின், ‘இரண்டொன் றென்னுமோர் மானத விகற்பமற’ என்றனர். ஒழிவிலொடுக்கம் : “என்னுணை யென்னுணை யேக மிரண், டென்னுமற் சும்மா விருவென்று சொன்னுன், திருஞான சம்பந் தன் சீகாழி நாட, னருளாளன் ஞானவினோதன்.” எனவும், திருக்களிற் றுப்படியார் : ‘ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று, நன்றன்று தீதன்று நானன்று - நின்ற, நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று, தலையன் றடி யன்று தான்.” எனவும் வருவனவற்றுற் காண்க. (5)

கல்லாத வறிவு, மேற் கேளாத கேள்வியுங்,
கருணைசிறி தேதுமில்லாக்

காட்சியுங், கொலைகளவு கட்காம மாட்சியாய்க்
காதலித் திடுநெஞ்சமும்,
பொல்லாத பொய்ம்மொழியும், அல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேதுமறியேன் ;
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேதுமில்லேன் ;
எல்லா மறிந்தநீ யறியாத தன்று ; எனக்
கெவ்வண்ண முய்வண்ணமோ ?
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம் ; பெறு
மெனக்குநின் னருடாரகம் ;
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தே ; இந்த
வஞ்சகனை யாளநினையாய் !
மந்த்ரகுரு வே ! யோக தந்த்ரகுரு வே ! மூலன்
மரபில்வரு மௌனகுருவே !

(இ - ள்) கல்லாத அறிவும் - (பதிநூல்களைக்) கல்லாமல் உண்டாகிற ஞானமும் ; மேல் - அதற்கு மேல், கேளாத கேள்வியும் - (பதிநூல்களைச்) சிரவணஞ் செய்யாத கேள்வியும் ; சிறிது ஏதும் கருணை இல்லாத காட்சியும் - மிகச் சிறிதும் தயையில்லாத அறிவும் ; கொலை களவு கள் காமம் - கொல்லுதல் திருடுதல் கள்ளுண்டல் பிறர்மனை நயத்தல் ஆகிய விவைகளை, மாட்சி ஆ - மேலான பொருள்களாகக் கொண்டு, காதலித்திடும் - அவற்றின்கண் விருப்பத்தைச் செய்கின்ற, நெஞ்சமும் - மனமும் ; பொல்லாத பொய்ம்மொழியும் - முழுப் பொய்வார்த்தையும் ; அல்லாது - அல்லது, நன்மைகள் பொருந்து குணம் - நன்மை பொருந்திய குணங்கள், ஏதும் அறியேன் - சிறிது முணர்ந்திலேன் ; புருஷர் வடிவு ஆனதே அல்லாது - புருஷரூபங்கொண்டதேயன்றி, கனவிலும் - கனவினுலும், புருஷார்த்தம் ஏதும் இல்லேன் - புருஷார்த்தம் சிறிதும் உடைய னல்லேன் ; எல்லாம் அறிந்த நீ அறியாதது அன்று - (இது) சர்வஞ்ஞனு நீ அறியாதது அல்ல ; எனக்கு - அடியேனுக்கு, எவ்வண்ணம் உய்வண்ணமோ - எந்தவகை உய்யும் வகையோ ? (அறிகிலேன்) ; இருளை இருள் என்றவர்க்கு - இருளை இருளென்று கொண்டவர்களுக்கு, ஒளி தாரகம் - ஒளியானது ஆதாரமா யிருக்கும் ; (அதுபோல) பெறும் எனக்கு - (உன்னை) அடைந்த எனக்கு, நின் அருள் தாரகம் - உன் திருவருளே ஆதாரம் ஆகும் ; வல்லான் என்னும் பெயர் - சர்வசக்தன் என்னும் பெயரானது, உனக்கே உள்ளது - உனக்கே யுண்டாயிருக்கிறது ; (ஆதலால்) இந்த வஞ்சகனை ஆளநினையாய் - இந்த வஞ்சகனை ஆண்டருள நினைவாயாக !, மந்த்ரகுருவே —, என்க.

(வி - ரை) பதிநூல்களைக் கல்லாது பசுநூல்களைப் பாசநூல்களைக் கற்றதனு லுண்டாகும் ஞானம் ஞானமன்றென்பார் 'கல்லாத அறிவும்'

என்றும்; அங்ஙனம் பதிஞானிகள்பாற் சென்று கேளாது பசுஞானிகள் பாசஞானிகள்பாற் சென்று கேட்கும் கேள்விகள் கேள்வியன்றென்பார் 'கேளாத கேள்வியும்' என்றனர். சிவஞானசித்தியார்: "வேதசாத் திர மிருதி புராணகலை ஞானம், விரும்பசபை வைகரியா தித்திரங்கண் மேலா, நாதமுடி வானவெல்லாம் பாச ஞான, நணுகியான் மாவிவைகீழ் நாட லாலே, காதலினுனன் பிரம மென்னு ஞானங், கருதுபசுஞானமிவ னுட லிற் கட்டுண், டோதியுணர்ந் தொன்றொன்று வுணர்ந்திடலாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே." எனவும், சிவப்பிரகா சம்: "பாசமா ஞானத்தாலும் படர்பசுஞானத்தாலும், ஈசனையறிய வொண்ணா திறையருள் ஞான நண்ணித், தேசுறு மதனுன் முன்னை சிற்றறி வொழிந்து சேர்ந்து, நேசமோ டியர்ப ரத்து நிற்பது ஞானநிட்டை." என வும், நாலடியார்: "அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா, துலகுநூ லோதுவ தெல்லாம் - கலகல, கூஉந்துணை யல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந் துணை யறிவாரில்." எனவும் வருவனவற்றாற் காண்க.

அருளைப் பெற்றிருப்பது அறிஞர்கள் தன்மையாதலின் பெற்றிராமை யைக் 'கருணை சிறிதுமில்லாக் காட்சியும்' என்றனர். திருக்குறள்: "அருள் சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த, இன்னா வுலகம் புகல்." என்றத னாற் காண்க. கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறன்மனை நயவாமை என்பனவாகிய இவைகளை மேற்கொண் டொழுகாமல் இவற்றின் மறுதலைகளை மேற்கொண் டொழுகினே னென்பார், 'கொலை களவு கட் காம மாட்சியாய்க் காதலித் திடுநெஞ்சமும்' என்றனர். இவை யாவுந் தீதென்பன. திருக்குறள்: "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்." எனவும், "எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங், கள்ளாமை காக்கதன் னெஞ்சு." எனவும், "உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங், கட்காதல் கொண்டொழுகு வார்." எனவும், "பிறன்பொருளாற் பெட்டொழுகும் பேதைமை ஞாலத், தறம் பொருள் கண்டார்க ணில்." எனவும் வருவனவற்றாற் காண்க. பொய் மையே எப்பெருந் தீமைக்கு மிடமாதலின், 'பொல்லாத மொய்ம்மொழி யும்' என்றனர். திருக்குறள்: "தன்னெஞ் சறிவது பொய்யற்க! பொய்த்த பின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்." என்றதனாற் காண்க.

மானிடங் கொண்டதன்றிப் புருடார்த்த மென்பது சிறிது மில்லே னென்பார், 'கனவிலும் புருடார்த்த மேது மில்லேன்' என்றனர். புரு டார்த்தமாவன: அறம், பொருள், இன்பம், வீடென நான்காம்; இவை புருஷார்த்தசதுஷ்டய மெனப்படும். 'எல்லா மறிந்த நீ' என்றதனால் முதல்வனுடைய சர்வஞ்ஞத்துவ மெனப்படும் முற்று முணர்தலும், 'வல் லான்' என்றதனால் அனந்த சத்தி யெனப்படும் அளவி லாற்றலுடைமை யுங் கூறப்பட்டன.

'ஆதித்தன் தன்னுடைய கிரணங்களினாலே யிருளை யோட்டிக் கண்ணுக்குக் காட்சி கொடுக்குமாறுபோல' முதல்வன், தன்னிடத்து நிலைபெற்றிருக்கின்ற ஆன்மாக்கட்கு உண்டாகிய ஆணவாதி தோடத்தினைப் போக்கி ஞானத்தினைப் பிரகாசிக்கச் செய்வானாதலின், 'இருளையிரு ளென்றவர்க் கொளிதாரகம், பெறு மெனக்குநின் னருடாரகம்' என்றனர். சிவஞான சித்தியார்: "அருளது சத்தியாகு மரன்றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை யந்தச்சிவமின்றிச் சத்தியில்லை, மருளினை மருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட், கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்." என்றதனாற் காண்க. (6)

கானக மிலங்குபுலி பசுவொடு குலாவு(ம்); நின்
 கண்காண மதயானைநீ
 கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய
 கட்டைமிக வேந்திவருமே;
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
 பொன்னடியி னின்றுசொலுமே;
 புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
 போற்றிஜய போற்றியென்பார்;
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
 நவநாத சித்தர்களுமுன்
 னட்பினை விரும்புவார்; சுகர்வாம தேவர்முதன்
 ஞானிகளு முனைமெச்சுவார்;
வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
 மகிமையது சொல்லவெளிதோ;
 மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
 மரபில்வரு மௌனகுருவே!

(இ-ள்) கானகம் இலங்கு புலி - காட்டில் சஞ்சரிக்கின்ற புலியானது, பசுவொடு குலாவும் - பசுவோடுகூடி விளையாடும்; நின் கண்காண - உன் கண்காணும்படி, மதயானை - மதயானையானது, நீ கைகாட்டவும் - நீ கை காட்டின அளவில், கையால் - துதிக்கையால், நெகிடிக்கு என - நெகிடிக்காக, பெரிய கட்டை - பெருங் கட்டைகளை, மிக ஏந்தி வரும் - மிகவும் சுமந்து வரும்; அ காமதேனு - அந்தக் காமதேனுவானது, நின் பொன் அடியில் நின்று - உன் திருவடிக்கீழ் நின்று, போனகம் அமைந்தது என சொல்லும் - உணவு சித்தமா யிருக்கிறதென்று சொல்லாநிற்கும்; புவிராஜர் - பூலோகத்தரசரும், கவிராஜர் - வித்துவான்களும், உன்னை - தேவரீரை, தவராஜன் என்று - தபோநிதி யென்று, போற்றி - நமஸ்காரம், ஜய - ஜயவிஜயீபவ, போற்றி - நமஸ்காரம், என்பர் - என்று புகழ்ந்துரைப்பார்கள்; ஞான கருணாகர முகம் - ஞானத்திற்கும் கருணைக்கும் பிறப்பிடமாயிருக்கிற (உனது) திருமுகத்தினை, கண்ட போதிலே -

கண்ட பொழுதிற்றானே, நவநாத சித்தர்களும் - சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், உன் நட்பினை விரும்புவார் - உனது சினேகிதத்தை யிச்சிப்பார்கள்; சுகர் வாமதேவர் முதல் ஞானிகளும் - சுகர் வாமதேவர் முதலிய ஞானவான்களும், உன்னை மெச்சுவார் - உன்னைக் கொண்டாடுவார்கள்; வானகமும் மண்ணகமும் வந்து - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வந்து, எதிர் வணங்கிடும் - எதிரே நின்று தொழுகின்ற, உன் மகிமையது - உன் பெருமையாகிய அதனை, சொல்ல எளிதோ - புகழ்ந்து சொல்லுதற்கு எளிதாகுமோ; மந்த்ரகுருவே—, என்க.

(வி - ரை) திருவருட் பெருஞ்செல்வராகிய தம்முடைய பரமாசாரியர் சந்நிதானப் பெருமையைக் கூறிய முகத்தால், சிவஞானிகளுக்குள்ள எல்லாம் வல்ல தன்மையை விளக்கினர். எத்தகைய விரோதமும் அவர் சந்நிதானத்தில் நடவா தென்பார், 'கானக மிலங்குபுலி பசுவொடு குலாவும்' என்றும், நெகிடியைக் கண்டமாத்திரத்தில் பயப்படும் யானை அவர் சந்நிதானத்தில் அஞ்சாது அந் நெகிடிக்காகக் கட்டையை யேந்திவருமென்பார், 'மதயானை நீ, கைகாட்ட வுங்கையால் நெகிடிக் கெனப்பெரிய கட்டைமிக வேந்திவரும்' என்றும், எத்தகைய அருமையான பொருளும் அவருக் கிலேசாகக் கிடைக்கு மென்பார், 'போனக மமைந்ததென வக்காம தேனுநின் பொன்னடியி னின்று சொலும்' என்றும், அவருடைய தவத்திற்கு முன்னே செல்வமுங் கல்வியுந் தலையெடா தென்பார், 'புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப் போற்றிஜய போற்றி யென்பார்' என்றும், அவர் முகத்தினைத் தரிசித்த மாத்திரத்தில் எத்தகையாரு மயங்கி வசியமாவா ரென்பார், 'ஞானகரு ணைகர முகங்கண்ட போதிலே நவநாத சித்தர்களுமுன் னட்பினை விரும்புவார்' என்றும், உண்மை ஞானிகளும் அவரை வியந்துரைப்பா ரென்பார், 'சுகர்வாம தேவர்முதல் ஞானிகளு முனைமெச்சுவார்' என்றும், ஆதலால் அவருக் கேலாத காரியம் எவ்வுலகத்து மில்லை யென்பார், 'வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கும்' என்றுங் கூறினர். இதனால் முதல்வனருளை யடைந்தார் எல்லாம் வல்லவராவ ரென்பதாயிற்று. சிதம்பரச் செய்யுட் கோவை: "கரும்புஞ் சுரும்பு மரும்பும் பொரும்படைக் காமர்வில் வேள், இரும்புங் கரைந்துருகச்செயு மாலிறும் பூதிதன்றே, விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருள் மேவிலொரு, துரும்பும் படைத்தளிக் கும்மகி லாண்டத்தொகுதியையே." என்றதனாற் காண்க. நெகிடி - தீ மூட்டம்.

நவநாத சித்தராவார்: சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் ஆகிய இவராம். சுகர், வாமதேவர் இருவரும் சிவோகம் பாவனையி னின்ற பெரியோராவார்.

(7)

சருகுசல பக்ஷணிக ளொருகோடி யல்லாற்,
சகோரபட் சிகள்போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மைய ரனந்தகோடி,
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
ஏகாந்த மோனஞான
இன்பநிஷ் டையர்கோடி, மணிமந்த்ர சித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்காத னத்தின்மிசை
கொலுவீற் றிருக்குநின்னைக்,
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண்ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள் ?
மந்த்ரகுரு வே ! யோக தந்த்ரகுரு வே ! மூலன்
மரபில்வரு மௌனகுருவே !

(இ - ள்) சருகு சல பக்ஷணிகள் ஒருகோடி - உலர்ந்த இலைகளையும் நீரையும் உண்டு உயிர் வாழ்வோர் ஒருகோடி பேர்களும்; அல்லால் - அல்லாமல், சகோரபக்ஷிகள் போல - சகோரப்பறவைகள் போல, தவள நிலவு ஒழுகு - வெண்மையாகிய சந்திரிகையோடு ஒழுகாநின்ற, அமிர்ததாரை உண்டு - அமிர்த வருஷதாரைகளைப் புசித்து, அழியாத தன்மையர் - இறவாத தன்மையையுடையவர்கள், அனந்தகோடி - அநேக கோடிபேர்களும்; இருவினைகள் அற்று - இருவினைகள் நீங்கி, இரவு பகல் என்பது அறியாத - இராப்பகல் என்பதை உணராத, ஏகாந்த மோன ஞானம் - தனிமையும் மௌனமும் ஞானமும் ஆகிய இவைகளையுடைய, இன்ப நிஷ்டையர் கோடி - சுகநிஷ்டையை யுடையவர்கள் கோடிபேர்களும், மணிமந்த்ர சித்திநிலை எய்தினர்கள் கோடி - மணிமந்திர சித்தி நிலைகளை அடைந்தவர்கள் கோடிபேர்களும், சூழ - சுற்றி நிற்க, குருமணி இழைத்திட்ட - நிறமுள்ள இரத்தினங்களைச் செதுக்கிய, சிங்காதனத்தின் மிசை - சிங்காதனத்தின்மீது, கொலுவீற்றிருக்கும் நின்னை - திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கு நின்னை, கும்பிட்டு - கைகுவித்து, அனந்தமுறை தெண்டனிட்டு - அநேகந்தரம் நமஸ்காரம் பண்ணி, என் மனக்குறை எல்லாம் - என் மனத்தின் கண்ணவாகிய குறைகளெல்லாம், தீரும் வண்ணம் - நீங்கும்படி, மரு மலர் எடுத்து - வாசனை பொருந்திய மலர்களை (விதிப்படி) எடுத்து, உன் இரு தாளை அர்ச்சிக்க - உன் இரண்டு திருவடிகளையும் அருச்சனை செய்யும்பொருட்டு, என்னை வா என்று அழைப்பது - என்னை வாவென்று தேவரீர் அழைத்தருளுவது, எந்நாள் - எந்தக்காலம் ?, மந்த்ர குருவே—, என்க.

(வி - ரை) தவசிகள் சிலர், பசியுற்ற காலத்துப் புறம்பே காணும் உலர்ந்த இலை நீர் முதலிய வுண்டு பசியாறுவராகலின், 'சருகுசல பக்ஷணிக ளொருகோடி' எனவும்; சிலர், அகத்தே பிராணவாயுவால் அக்கினி மண்டலத்தினை மூட்டி எழுப்பிச் சந்திரமண்டலத்தி னின்றுஞ் சிந்தும் அமுதப் பிரவாகத்தை யுண்டு பசியாறுவ ராகலின், 'தவளநில வொழுக மிர்த தாரையுண் டழியாத தன்மைய ரனந்தகோடி' எனவும்; சிலர், எவ்வித வுணவினையும் விரும்பாது, இருவினைக் கேதுவான செயல்களையுஞ் செய்யாது, சகல கேவலமற்ற நிலையில் உண்மை ஞானங் கூடி நிற்பாராகலின், இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத ஏகாந்த மோனஞான, இன்பநிஷ்டையர்கோடி' எனவுங் கூறினர். சிலர், மணியாலும் மந்திரத்தினாலும் எண்வகைச்சித்தி யடைவராதலின், 'மணிமந்த்ர சித்திநிலை யெய்தினர்கள் கோடி' எனவுங் கூறினர்.

மணியென்பது இரசக்குளிகை. மந்த்ரமென்பது பஞ்சாக்கரம். இவ்விரண்டாலும் சித்தி முதலிய வுண்டாகுமாதலின், 'மணிமந்த்ர சித்திநிலை யெய்தினர்கள்' என்றனர். திருவான்மியூர்ப் புராணம், மருந்தீசப்படலம்: "சுத்தமுறு முனிவரனே! நீபோந் தாருந், தொல்பொதிகை வரையுமுளவாண்டு காண்பா, யித்தகைய சூதமது வாய்க்கப் பெற்று, ரினியகம னக்குளிகை நன்கு ஞற்றிப், பத்தெனு நற்றிசைக ளொலாநொ டிக்குள், ளாப்படர்ந் திடுவர்மலை நிகர்மாழைக் குவிப்பர், சித்தியெட்டு மடைந்திடுவ ரிவர்கட் கேலாச், செயலதுதா னொன்று மிலை யுலக மூன்றும்." எனவும், "ஐந்தெழுத் தானிலவு நன்மனுநான் கென்று, வருமறைக ணனந்தலையேய்ந்தமலை செய்யு, மைந்தெழுத் தானிறைந்த தனையாய்ந்து நோக்கி, னடங்குமப் பதிபசுபா சங்கண் மூன்று, மைந்தெழுத்திலேவந்த சத்தகோடி, யாகியெங் கணுநுவலு மந்தி ரங்க, ளைந்தெழுத்திற் பரஞானப் படிய தாய, வபரகலை யாமுற்று மடங்கி நிற்கும்." எனவும் வருவனவற்றாற் காண்க.

சித்திநிலை பெற்றவர்களாவர்—அஷ்டமா சித்திவரப் பெற்றவர். அவை வருமாறு:—ஆன்மாப்போலாதல் அது அணிமா; மகத்துவமாதல் அது மகிமா; தன்னுடற் கண்டிப்பின்றாய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லவனாதல் அது கரிமா; இலகுத்துவமாதல் அது இலகிமா; வேண்டுவன அடைதல் அது பிராத்தி; நிறையுள னாதல் அது பிராகாமியம்; ஆட்சியுளனாதல் அது ஈசத்துவம்; எல்லாந் தன் வசமாக்க வல்லவனாதல் அது வசித்துவமாம். திருவிளையாடற் புராணம்: "அறவுஞ் சிறிய வுயிர்தோறும் பரம காட்டை யணுவாய்ச்சென், றுறையுஞ் சிறுமை யணிமாவா மூவரி ஞால முதன்மேலென், றறையுஞ் சிவாந்த மாறாறு முள்ளும் புறனு மகலாதே, நிறையும் பெருமை தனையன்றோ மகிமா வென்று நிரம்பிய நூல்." "இலகு மேரு பாரம்போ லிருக்கும் யோகி தனையெடுத்தா, லிலகு வான தூலமென விருப்ப திலகி மாவாகு, மிலகு வான பா

வனுப்போ விருக்கும் யோகி தனையெடுத்தா, லிலகு மேரு பாரமென விருப்ப தன்றே கரிமாவாம்." "பிலத்தி விருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலமடைதல், பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் பரகாயத்தி னண்ணுதல்வான், புலத்தி னியங்க விச்சித்த போக மனைத்துந் தானிருக் குந், தலத்தி னினைந்த படிவருதல் பிராகாமிய மாந்தவக்கொடியீர்." "விண்ணிரவிதன் னுடம்பின்வெயி லாலனைத்தும் விளங்குதற்போன், மண்ணு ளுளவாம் பொருள் பலவுங் கால மூன்றும் வானத்தின், கண்ணி லுளவாம் பொருளுந்தன் காயத்தொளியா லிருந்தறித, லெண்ணி லிதுவு மறையொருசார் பிராகா மியமென் றியம்புமால்." "ஈச னெனமுத் தொழிலுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித், தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும், பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும், வாசவாதி யெண்மருத்தின் வசமாக் கொள்கை வசித்துவமாம்." என வருவனவற்றாற் காண்க.

இங்ஙனம் கூறிய புறப்பற்றொழிந்த தவசிகளும், அகப்பற்றொழிந்த யோகிகளும் மௌன முனிவர்களும், அட்டமாசித்தி யடைந்தவர்களு மாகிய எல்லாரும் தமதாசிரியர்க் கிணையில்லை யென்பார், 'சூழக், குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை கொலுவீற் றிருக்கு நின்னை' என் றனர்.

முதல்வனுடைய திருவருளை யடையா திருப்பதுவே 'மனக்குறை' என்றனர். அம் மனக்குறை நீங்கவேண்டுமாயின் ஆசிரியர் சந்நிதானத்தில் அஞ்சலித்துத் தண்டாகாரமாக விழுந்து பணிந்து எழுந்து வாசனையோடுங் கூடிய புட்பங்களைக்கொண் டருச்சனை செய்யவேண்டு மாகலின், 'கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக் குறையெலாந் தீரும்வண்ணம், மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை வாவென் றழைப்ப தெந் நாள்?' எனவுங் கூறினார். தேவாரம்: "பூக்கைக் கொண்டரன் பொன் னடி போற்றிலார், நாக்கைக் கொண்டர னும நவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து, காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே." எனவும், திருவாசகம்: "பரந்துபல் லாய்மல ரிட்டுமுட் டாதடி யேயிறைஞ்சி, யிரந்தவெல் லாமெமக் கேபெற லாமென்னு மன்பருள்ளங், கரந்துநில் லாக் கள்வ னே! நின்றன் வார்கழற் கன்பெனக்கு, நிரந்தர மாயரு ளாய் நின்னை யேத்த முழுவதுமே." எனவும் வருவனவற்றாற் காண்க.

மற்கடநியாயமாக அடியேனை வலியவந்து தேவரீரை யடையச் சிறிதுஞ் சுதந்தர மில்லேனுகலின், மார்ச்சால நியாயமாக தேவரீரே யடியேனை வலிய ஆட்கொள்ள வேண்டு மென்பார், 'வாவென் றழைப்ப தெந்நாள்?' என்றனர். அன்றியும், வினை வயப்பட்ட ஆன்மாக்கட்கு அவ் வினை யொப்பின் வழித்தாய மலபரிபாகம் வந்தா லல்லது ஆசிரியர் படர்க்கையில் வந்தருளி யழைத்துத் திருவருட்புரியாராகலின், அத்தகைய

பக்குவ மடியேனுக்கு வருங்கால மெக்கால மென்பார், 'எந்நாள்' என்றார் எனினு மொக்கும். (8)

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
வாணவத் தினும்வலிதுகாண் ;
அறிவினை மயக்கிடு(ம்); நடுவறியவொட்டாது ;
யாதொன்று தொடினுமதுவாய்த்
தாங்காது மொழிபேசும் ; அரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னும் ;
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாதுநிற்கும் ;
'ஈங்கா ரெனக்குநிகர் ?' என்னப்ர தாபித்
திராவணா காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்கும் ; இத னொடெந்நேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ ?
மௌனோப தேசகுருவே !
மந்த்ரகுரு வே ! யோக தந்த்ரகுரு வே ! மூலன்
மரபில்வரு மௌனகுருவே !

(இ - ள்) ஆங்காரம் ஆன - ஆங்காரமாகிய, குலவேட வெம் பேய் - குல வேடரை யொத்த வெவ்விய பேயானது, பாழ்த்த ஆணவத்திலும் வலிது - பாழாகிய ஆணவப்பேயினும் வலியது ; (அது) அறிவினை மயக்கிடும் - என்னறிவை மயக்கிவிடும் ; நடு அறிய வொட்டாது - நடுவு நிலைமையை அறிய வொட்டாது ; யாதொன்று தொடினும் - யாதொரு பொருளைப்பற்றினும், அது ஆய் - அது தானேயாகி நின்று, தாங்காது மொழி பேசும் - சகிக்காது வார்த்தை சொல்லும் ; அரிகர பிரமாதி தம்மொடு சமானம் என்னும் - விண்டு உருத்திரன் பிரமாதிகளோடு நான் சமமாவேனென்று சொல்லும் ; தடை அற்ற தேரில் - தடையறச் செலுத்துகின்ற தேரினிடத்து, அஞ்சுரு ஆணிபோல - அச்சாணிபோல, தன்னில் அசையாது நிற்கும் - தன்னிடத் தசைவில்லாமலிருக்கும் ; ஈங்கு - இவ் வுலகத்தில், எனக்கு நிகர் ஆர் எனப் பிரதாபித்து - எனக்கு ஒப்பு யாவரென்று பிரஸ்தாபித்து, இராவணாகாரம் ஆகி - இராவணன் ரூபங் கொண்டு, இதயவெளி எங்கணும் - இதயாகாச மெல்லாம், தன்னரசு நாடு செய்து இருக்கும் - தன்னரசு நாடாகச் செய்துகொண் டிருக்கும் ; இதனோடு - இதனுடன், எந் நேரமும் - எப்போதும், வாங்கா நிலாது - நீங்கி நில்லாமல், அடிமை - உன தடிமையாகிய நான், போராட முடியுமோ - போர் செய்ய முடியுமோ ?, மௌனோபதேச குருவே - மௌன நிலையினை உபதேசித்தருளுகிற ஆசாரியனே !, மந்த்ரகுருவே—, என்க.

(வி - ரை) ஆங்காரமானது சாத்துவித குணுதிக்கமா யிருக்கின்ற புத்தியினின்று மிராசத குணுதிக்கமா யுற்பவித்து, விஷய பராமரிச புத்தி போதத்திற்கு வேருகிய ஆன்ம பராமரிச போதகாரணமாய் வித்தியா தத்துவம் பொருந்து மிந்திரியங்களினுலே வந்த நிருவிகற்ப ஞானுலோசித மாய் மனச் சங்கற்பிதமாய்ச் சந்தித்தமா யிருக்கிற வஸ்துவில் நானிச்சயம் பண்ணுவே னென்றும், நிரூபிப்பே னென்றுங் கர்வ சங்கற்ப ஞானக்கிரியா வியாபாரத்தினைப் பண்ணுமாகலின், 'ஆங்கார மானகுல வேடவெம்பேய்' என்றனர். ஆணவமலமானது, இங்ஙனம் யாதொரு கிரியா வியாபாரத் தினையும் பண்ணுது, தன்னையுங் காட்டாது, தனக்குள்ளே யிருக்கிற ஆன்மா வினையுங் காட்டாது நிற்கு மாகலின், 'ஆங்காரம் ஆணவத் தினும் வலிது காண்' என்றனர். சிவஞானசித்தியார்: "ஆங்காரம் புத்தி யின்க ணுதித் தகங் கைக்கு வித்தா, யீங்கார்தா னென்னே டொப்பா ரென்றியா னென்ன தென்றே, நீங்காதே நிற்குந் தானு மூன்றதாய் நிகழு மென்பர், பாங்கார்பூ தாதி வைகா ரிகந்தைச தந்தா னென்றே." எனவும், திருவருட்பயன்: "ஒரு பொருளுங் காட்டா திருளுருவங் காட்டு, மிருபொருளுங் காட்டா திது." எனவும் வருவனவற்ருற் காண்க. ஆங்கார மூனேந்து நிற்குமளவும் மெய்யுணர்வு தோன்றற் கிடமின்மையாலும், அம் மெய்யுணர்வு தோன்ரு தாகவே நடுநிலைமை விளங்கா தாகலினுலும், 'அறிவினை மயக்கி நடுவறிய வொட்டாது' என்றும், எத்தகைய வார்த்தையினும் தனக்கே சுதந்தரம் பாராட்டி வருதலின், 'அதுவாய்த் தாங்காது மொழி பேசும்' என்றும், உலகத்தினைப் படைத்துக் காத்து அழிக்குங் கர்த்தர்களையு மதியா திருக்கச் செய்தலின், 'அரிகரப்பிரமாதி, தம்மொடு சமானமென்னும்' எனவும், தான் இயங்காது நின்று தன் வழியே பொறி முதலியவற்றை மயக்குத லால், 'தேரிலஞ் சுருவாணி போலவே தன்னிலசை யாது நிற்கும்' என வும், எல்லா இந்திரியங்களின் செயல்களையும் தன் வயப்படுத்தித் தன் சொரூபத்தினையே விளக்கிக் காட்டிக்கொண் டிருத்தலின், 'இராவணுகார மாகி யிதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடு செய்திருக்கும்' எனவும், இத் தகைய காரியங்களை விளைவிப்பதாகிய அகங்காரத்தோடு எந்நாளும் வாது செய்ய வியலா தென்பார், 'எந்நேரமும், வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ" எனவுங் கூறினர். ஈண்டு முத்தேவருள் ஒருவராகக் குறித்த அரன் என்பார் குணருத்திரர். 'முடியுமோ' என்றது முடியா தென்றபடி. ஆகலின், இத்தகைய ஆங்காரத்தினை அடியோடே யொழிக்கத் தேவரீர் திருவருள் வேண்டுமென்பது குறிப்பா யடங்கிக் கிடக்கின்றது. (9)

பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்,
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்; துவிதமோ

சிற்றறி (வு); அ தன்றியும், எவரேனு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
வுளறுவேன்; முத்திமார்க்கம்
உணர்வதெப் படி? இன்ப துன்பஞ் சமானமா
யுறுவதெப் படி? ஆயினும்,
மற்றெனக் கையா! நீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்;
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே!

(இ - ள்) பற்று - பற்றுதற்குரிய இடம், வெகுவிதம் ஆகி - அனேக விதங்களாகக் கொண்டு, ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றி - ஒன்றை விட்டு ஒன்றைப் பிடித்து, உழல் - சுழல்கின்ற, கிருமி போல - புழுவைப்போல, பாழ் சிந்தை பெற்ற நான் - கொடுமையாகிய மனத்தினைப் படைத்த நான், வெளியாக - வெளிப்படையாக, நின் அருள் - உன் திருவருளை, பகர்ந்தும் அறியேன் - புகழ்ந்து மறியேன்; துவிதமோ சிற்றறிவு - துவிதநிலை யென்றாலோ அது சிற்றறிவாய் முடியும்; அது அன்றியும் - அதல்லாமலும், எவர் எனும் - யாவராயினும், ஒரு மொழி - ஒரு சொல்லை, திடுக்கென்று உரைத்தபோது - திடுக்கென்று சொன்ன காலத்தில், செவியே சிந்தை ஆக - காதே மனமாக, பறை அறைய - பறையறையவும், வெம் - வெவ்வி தாகிய, உதரத்தீ - உதராக்கினியானது, நெஞ்சம் அளவளாவ - மனத்தைக் கலக்கும்படி, உற்று - பொருந்துவதனால், உணர உணர்வு அற்று - அறிதற்குரிய அறிவும் அற்று, உன்மத்த வெறியினர்போல - உன்மத்தங் கொண்ட வெறியாளரைப்போல, உளறுவேன் - குளறுவேன்; (இப்படிப் பட்ட நான்) முத்திமார்க்கம் உணர்வது எப்படி - முத்திநெறியை யறிவது எவ்வாறு?, இன்ப துன்பம் - சுகதுக்கங்கள், சமானமாய் உறுவது எப்படி- சமானமாகப் பொருந்துவது எவ்வாறு?, ஆயினும் - ஆனாலும், ஐய - ஐயனே!, நீ எனக்கு சொன்ன - நீ யெனக்குச் சொல்லியருளிய, ஒரு வார்த்தையினை - ஒரு சொல்லினை, மலை இலக்கு என நம்பினேன் - மலையைக் குறியாகக் கொண்டாற்போல நம்பியிருக்கிறேன்; மந்த்ரகுருவே—, என்க.

(வி - ரை) 'புழுவானது ஓரிடத்தில் நிலையாகத் தங்காது பல விடங்களைத் தாவிச் செல்லுதல்போல' மனம் ஓரிடம்பற்றி நில்லாது ஓடுத லான் புழுவினை மனத்திற்கு உவமையாகக் கொண்டு, 'பற்றுவெகு வித மாகி யொன்றைவிட் டொன்றனைப் பற்றியுழல் கிருமிபோலப், பாழ்ஞ்சிந்தை பெற்றநான்' எனவும், இங்ஙனம் மனமானது நிலையுற்றிராததால் திரு வருள் மகிமையினை யறியே னென்பார், 'வெளியாக நின்னருள் பகர்ந்து

மறியேன்' எனவும், சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ செந்நெறியிலே நின்று முதல்வனை அபேதமாகக் காணாது பேதமாகக் காண்பது புறச்சமயிகள் கொள்கை யாதலின், 'துவிதமோ சிற்றறிவு' எனவும், யாரா மொருவர் வெட்டெனெ ஒரு வார்த்தை கூறுமிடத்துச் செவியால் வாங்கி மனத்தானினைத்துத் தக்க விடை கொடுக்கும் பொறுமை யின்றிச் சிறிதுஞ் சகியாது கோபாவேசங் கொண்டு பலவாறு வாயாற் பிதற்றி நிற்பேனாகலின், 'எவரேனு மொருமொழி திடுக்கென் றுரைத்தபோது, சிந்தைசெவியாகவே பறையறைய வுதரவெந் தீநெஞ்ச மளவளாவ, உற்றுணர உணர்வற்றுன் மத்தவெறி யினர்போல வுளறுவேன்' எனவும், இத்தகைய நிலைமையினை வாய்ந்த யான் சுத்தாத்துவித மோக்ஷத்தினை யடைதற்கேதுவாகிய சித்தாந்த வழியைத் தெரிந்துகொள்வ தெங்ஙன மென்பார், 'முத்திமார்க்கம் உணர்வ தெப்படி?' எனவும், அச் சித்தாந்த செந்நெறியடைதற்கு இருவினை யொப்பு அத்தியாவசிய மாதலின், 'இன்ப துன்பஞ் சமானமா யுறுவ தெப்படி?' எனவும் கூறி, ஆயினும் 'மலையானது அளக்கலாகா அளவுடையதாதலால் அதனை யிலக்காகக் கொள்ளுவோர் எவ்வழியுஞ் சென்றடையலா மதுபோல, யான் பலவகையினும் வழுவி நடப்பினும் உபதேசித்த பொருள் உய்யு நெறியிற் சேர்க்குமென்று துணிந்திருக்கிறேன் என்பார், 'ஐய! நீ சொன்னவொரு வார்த்தையினை மலையிலக் கெனநம்பினேன்' எனவும் கூறினர். 'நம்பினேன்' என்றதனால் ஆசிரியர் கூறிய ஒரு வார்த்தையானது அருமையினும் அருமை யென்ற குறிப்பினை விளக்கினர். திருமந்திரம்: "போற்றுகின்றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத், தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி, சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தை, யேற்றுகின் றேனெம் பிரானோ ரெழுத்தே." என்றதனாற் காண்க. வார்த்தை யெனினும், எழுத்தெனினுந் தம்மு ளொக்குமோ வெனின், ஓரெழுத்தாயினும் அது பிற பொருளைக் காட்டுமே யானால் வார்த்தையேயாம். தொல்காப்பியம்: "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி, யிரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி யுள்பட, மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே." எனவும், நன்னூல்: "எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற், பதமா மதுபகாப் பதம்பகு பதமென, விருபா லாகி யியலு மென்ப." எனவும் வருவனவற்றாற் காண்க. (10)

---

## கருணாகரக்கடவுள்

நிர்க்குண! நிராமய! நிரஞ்சன! நிராலம்ப!
நிர்விஷய! கைவல்யமா
நிஷ்கள! அசங்க! சஞ் சலரகித! நிர்வசன!
நிர்த்தொந்த! நித்த! முக்த!

தற்பர! விஸ் வாதீத! வ்யோமபரி பூரண!
சதானந்த! ஞான! பகவ!
சம்பு! சிவ! சங்கர சர்வேச என்றுநான்
சர்வகாலமு நினைவனோ?
அற்புத! அகோசர! நிவிர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய! சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுசூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்) நிர்க்குண - குணரகிதனே!, நிராமய - நோயற்றவனே!, நிரஞ்சன - களங்கரகிதனே!, நிராலம்ப - பற்றுக்கோ டில்லாதவனே!, நிர்விஷய - விஷயரகிதனே!, கைவல்யமாம் - மோக்ஷரூபமான, நிஷ்கள - அரூபமானவனே!, அசங்க - கூட்டமில்லாதவனே!, சஞ்சல ரகித - அசைவற்றவனே!, நிர்வசன - மௌனியே!, நிர்த்தொந்த - இரண்டாவதில்லாதவனே!, நித்த - எப்போதுமுள்ளவனே!, முக்த - பாச விமுக்தனே!, தற்பர - ஆன்மப் பிரியனே!, விஸ்வாதீத - உலகத்தினைக் கடந்தவனே!, வ்யோம பரிபூரண - பரமாகாசத்தில் நிறைந்திருப்பவனே!, சதானந்த - நித்தியானந்தனே!, ஞான - ஞானசொரூபனே!, பகவ - ஷட்குண சம்பன்னனே!, சம்பு - சுகரூபியே!, சிவ - மங்களரூபியே!, சங்கர - சுகத்தினைச் செய்கின்றவனே!, சர்வேச - சர்வேச்சுவரனே!, என்று - என்று சொல்லி, நான் சர்வகாலமும் நினைவனோ - நான் சதாகாலமும் உன்னைத் தியானிப்பனோ? அற்புத - ஆச்சர்ய பூதனே!, அகோசர - யாராலு மறியப்படாதவனே!, நிவிர்த்தி பெறும் அன்பருக்கு-நிவிர்த்தி மார்க்கத்தை யடைந்த அடியார்களுக்கு, ஆனந்த பூர்த்தியான - சுக நிறைவாகிய, அத்துவித நிச்சய - அத்துவித நிலையாகிய உண்மையினை யுடையவனே!, சொரூப - சொரூபத்தினது, சாக்ஷாத்கார அனுபூதி - பிரத்தியட்சானுபவ, அனுசூதமும் - இரகசியமும், கற்பனை அற - யதார்த்தமாக, காண - தோன்ற, முக்கண்ணுடன் - மூன்று கண்களோடு, வடநிழற்கண்ணூடு இருந்த - கல்லாலின்னிழலி லெழுந்தருளியிருந்த, குருவே - ஞானாசிரியனே!, அரிய - நினைத்தற்கரிய, சிற்சபையில் - சிற்றம்பலத்தில், ஆனந்த நிர்த்தம் இடு - ஆனந்தக் கூத்தாடுகின்ற, கருணாகரக் கடவுளே - கருணைக்குப் பிறப்பிடமாயிருக்கிற கடவுளே!, என்க.

(வி - ரை) 'நிர்க்குண!' என்பது "இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே." என்றதனாலும், 'நிராமய!' என்பது "பெண்ணமருஞ் சடைமுடியார் பேரொன்

றில்லார் பிறப்பிலா ரிறப்பிலார் பிணியொன்றில்லார்" என்றதாலும், 'நிரஞ்சன!', என்பது "ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு மேழுலகுங் கடந் தப்பாணின்ற பேரொளியை" என்றதாலும், 'நிராலம்ப!' என்பது "தானலா துலகமில்லை" என்றதாலும், 'நிர்விஷய!' என்பது "நேரிழையைக் கலந்திருந்தே புலன்களைந்தும் வென்றானை" என்றதாலும், 'கைவல்ய!' என்பது "தந்ததுன் றன்னைக்கொண்ட தென்றன்னைச் சங்கரா வார்கோலோ சதுரர், அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன் றென்பால்" என்றதாலும், 'மாநிஷ்கள!' என்பது "அருவமு முருவமு மானாய் போற்றி" என்றதாலும், 'அசங்க!' என்பது "உற்றாரென் றொருவரையு மில்லாதானே" என்றதாலும், 'சஞ்சலரகித!' என்பது "பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப்பான் காண், பொய்யாத பொழிலேழுந் தாங்கிநின்ற கற்றூண்காண்" என்றதாலும், 'நிர்வசன!' என்பது "சொல்லாமற் சொன்னவரை" என்றதாலும், 'நிர்த்தொந்த!' என்பது "தன்னியல்பால் மற்றொருவ ரில்லான் கண்டாய்" "ஒருவனென்னும் ஒருவன் காண்க" "ஒருத்தனாருலகங்கட் கொருசுடர்" என்பவைகளாலும், 'நித்த!' என்பது "காலங்களூழிகண் டிருக்கின்றானே" "ஈறிலாத வீசனொருவனே" என்பவைகளாலும், 'முக்த!' என்பது "பந்திப்பரிவாய நீயே என்றும்" "துறவாத கட்டறுத்த சோதியானை" என்பவைகளாலும், 'விசுவாதீத!' என்பது "அண்டத்துக் கப்புறமாய் நின்றார்போலும்" என்றதனாலும் 'வியோம பரிபூரண!' என்பது, "பாரிலங்கு புனலனங்கால் பரமாகாசம் பரிதிமதி சுருதியுமாய்ப் பரந்தார்போலும்" "சிற்பர வியோம மாகுந் தில்லைச்சிற் றம்பலத்து ணின்று, பொற்புறநடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி" என்பவைகளாலும், 'சதானந்த!' என்பது "இன்பனாய்த் துன்பங் களைகின்றானே" "இன்புருவ மன்றே எழிலுருவம் வேறுளவோ, வின்புருவ மேயிறைக்கு மெண்" என்பவைகளாலும், 'ஞான!' என்பது "கற்றிருந்த கலைஞான மானாய்நீயே" "ஞானப் பெருங்கடலை" என்பவைகளாலும், 'சம்பு!', என்பது, "இன்பன்காண் டுன்பங்களில்லாதான் காண்" என்றதாலும், 'சிவ!' என்பது "நிச்சல்மணாளனே யென்றே னானே" "நித்தல், மணவாளனென நிற்கின்றான்காண்" என்பவைகளாலும், 'சங்கர!', என்பது "பத்தர்களுக் கின்பம் பயந்தார்போலும்" என்றதனாலும், 'சர்வேச!', என்பது "மேலோர்க்கு மேலாய் போற்றி" என்பதாலுங் காண்க.

'பகவன்' என்பதற்கு 'ஆறு குணங்களை யுடையவன்' என்பது பொருள்; அவையாவன - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பன. பகவத்சப்தம் மற்றைத் தேவர்க்கு உபசாரமும், சிவபெருமானுக்கு வாஸ்தவமுமாம். பகவதியென்னும் பெயர் பராசத்தி

யாருக்கே உரித்தா யிருத்தலினு லறிக. அனுஸ்யூதம் என்னும் வடமொழ
'அனுசூதம்' எனத் திரிந்தது. (1

மண்ணுதி யைந்தொடு புறத்திலுள கருவியும்,
வாக்காதி, சுரோத்ராதியும்,
வளர்கின்ற சப்தாதி, மனமாதி, கலையாதி,
மன்னுசுத் தாதியுடனே,
தொண்ணூற்றெரு டாறு, மற் றுள்ளனவு(ம்), மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லுவேன்?
பண்ணுரு மிசையிெனடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவருப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணுறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணைகரக் கடவுளே!

(இ-ள்) மண் ஆதி ஐந்தொடு - மண்முதலாகிய பஞ்சபூதங்களுடன், புறத்தில் உள கருவியும் - புறக்கருவிகளும், வாக்காதி - வாக்கு முதலான கன்மேந்திரிய மைந்தும், சுரோத்ராதியும் - சுரோத்திரமுதலான ஞானேந்திரியமைந்தும், வளர்கின்ற சப்தாதி - விருத்தியடையாநின்ற சப்த முதலான விஷயமைந்தும், மனம் ஆதி - மனமுதலான அந்தக்கரணம் நான்கும், கலைஆதி - கலை முதலான வித்தியாதத்துவங்க ளேழும், மன்னு சுத்தாதியுடனே - நிலைபெற்ற சுத்ததத்துவத்துடனே, தொண்ணூற்றெரு ஆறும் - தொண்ணூற்றூறும், மற்று உள்ளனவும் - வேறுள்ளவைகளும், மௌனியாய் - மௌனகுருவாகி வந்து, சொன்ன - தேவரீர் உபதேசித்த, ஒரு சொல் கொண்டதே - ஒரு மொழியை உட்கொண்ட அளவிலே, தூவெளியதாய் - பரிசுத்தமான ஆகாயமாகி, அகண்ட ஆனந்த சுகவாரி - இடையறாத இன்பசுகசாகரம், தோற்றுமதை என் சொல்லுவேன் - காணப் படுவதை யென்னென்று சொல்லுகேன்?, பண் ஆரும் இசையிெனடு பாடி - பண்ணிறைந்த இராகத்தோடு பாடி, படித்து - படித்து, அருள் பான்மை நெறி நின்று - திருவருட்பான்மை வழிநின்று, தவரு - பிழையாத, பக்குவ விசேஷர் ஆய் - தீவிரதர பக்குவத்தினை யுடையவர்களாய், நெக்கு நெக்கு உருகி - நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகி, பணிந்து எழுந்து - தொழுதெழுந்து, இரு கை கூப்பி - இரண்டு கைகளைக் குவித்து, கண் ஆறு கரைபுரள நின்ற - கண்ணீராலாகிய நதியானது கரைபுரண்டோட நின்ற, அன்பரை யெல்லாம்-

அடியார்களை யெல்லாம், கைவிடா காட்சி உறவே - கைவிடாத அற்புத சுற்றமே!, கருதரிய சிற்சபையில்—, என்க.

(வி - ரை) மண்ணாதி யைந்தாவன - பஞ்சபூதம்; அவை: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய மென்பன. வாக்காதியென்பது - கன்மேந்திரிய மைந்து; அவை: வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தமென்பன. சுரோத்ராதியென்பது - ஞானேந்திரிய மைந்து, அவை: சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்ஙுவை, ஆக்ராண மென்பன. சப்தாதியென்பது - தன் மாத்திரை யைந்து; அவை: சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்த மென் பன. மனமாதி என்பது - அந்தக்கரணங்கள் நான்கு; அவை: மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்பன. ஆக ஆன்மதத்துவம் இருபத்து நான்கு. வராகோபநிடதம்: "ஞானேந்திரியாணி பஞ்சைவச் ரோத்ரத்வக் லோசநாதயః கர்மேந்திரியாணி பஞ்சைவ வாக்பாண்யங் கிரியாதயா; க்ர மாத்ப்ராணுதயஸ்துபஞ்சைவ பஞ்சசத்பாதயஸ்ததா, மநோபுத்திரகங்காரః சித்தஞ் சோதி சதுஷ்டயம்; சதுர்விம்சதிதத்வாநி தாநிப்ரம்ம விதோ விது" என்றதனாற் காண்க.

கலையாதி யென்பது - வித்தியாதத்துவமேழு; அவை: காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை யென்பன. சுவேதாசுவதரோப நிடதம்: "காலஸ்வபாவோநியதிர்யத் ருச்சா பூதாநி யோநி புருஷ இதி சிந்த்யம்" என்றதனாற் காண்க.

சுத்தாதி யென்பது சுத்ததத்துவ மைந்து; அவை: சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம், சத்தி, சிவமென்பன. பிருகஜாபாலோபநிடதம்: "சிவம் சக்திஞ்ச ஸாதாக்ய மீசம் வித்தியாக்யமேவச" என்றதனாற் காண்க.

தத்துவ முப்பத்தாறெனக் கூறும் இவ் வுபநிடதப் பிரமாணங்களைக் கொண்டு ஆசிரியர் 'மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும் வாக்காதி சுரோத்ராதியும், வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி மன்னுசுத் தாதி யுடனே' என்றதனால், தத்துவ மிருபத்து நான்கே யெனச் சாதிக்கும் ஏகான்மவாதிகளும், பாஞ்சராத்திரிகளு மறுக்கப்பட்டனர்.

'தொண்ணூற்றொடாறு' என்பது பூதகாரியம் இருபத்தைந்து, வாயு பத்து, கன்மேந்திரிய காரியமாகிய வசனாதியைந்து, வாக்கு நான்கு, குண மூன்று, அகங்கார மூன்று, ஆகிய அறுபதும் மேற்கூறிய முப்பத்தாறுமாம்; மற்றும் இவற்றின் விவரங்களைச் சித்தாந்தக்கட்டளை என்னு நூலிற் காண்க

"எல்லாமு னடிமையே; எல்லாமு னுடைமையே;
எல்லாமு னுடையசெயலே;
எங்கணும் வியாபிநீ" என்றுசொ லுமியல்பென்
றிருக்காதி வேதமெல்லாம்
சொல்லான் முழக்கியது; மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு

சொன்னவையு மிவை ; நல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்றா வறிந்தேன் ;
அறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினேன் ;
அதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை ;
கதிக்குவகை யேது ? புகலாய் !
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே !

(இ - ள்) எல்லாம் உன் அடிமையே - எல்லாரும் உன்னடிமைகளே ; எல்லாம் உன் உடைமையே - எல்லா வஸ்துக்களும் உன் பொருள்களே ; எல்லாம் உன்னுடைய செயலே - எல்லாச் செயல்களும் உன் செயல்களே ; எங்கணும் வியாபி நீ - எவ்விடத்தும் வியாபித்திருப்பவன் நீயே, என்று சொல்லும் இயல்பு என்று - என்று கூறு மியல்புடையதென்று, இருக்கு ஆதி வேதம் எல்லாம் - இருக்கு முதலான வேதங்கள் முழுவதும், சொல்லால் முழக்கியது - சொல்லினால் முழக்கியது ; சொல் இறந்தவரும் - பேச்சிறந்தவர்களாகிய மௌனிகளும், மிக்க உபகாரம் ஆம் - மிகுந்த உபகாரமா யெண்ணி, விண்டு சொன்னவையும் இவை - விவரித்துச் சொன்னவைகளு மிவைகளே ; நல்ல குருவான பேரும் - சதாசாரியரான பேரும், தொகுத்த நெறி இவையே அல்லாமல் - தொகுத்துரைத்த மார்க்கங்களும் இவைகளே யன்றி, இல்லை என - வேறில்லையென்று, நன்று அறிந்தேன் - நன்குணர்ந்தேன் ; அறிந்தபடி நின்று - உணர்ந்த வண்ணம் நின்று, நான் சுகம் ஆகாத வண்ணம் - நான் இன்புறாமல், இவ்வண்ணம் ஆயினேன் - இப்படியானேன் ; அதுவும் - அதுதானும், நினது அருள் என்ன - உன் திருவருளே யென்று, கல்லாத அறிஞனுக்கு உள்ளே யுணர்த்தினை - கல்லாத வறியேனுக்குள்ளே யறிவித்தாய் ; கதிக்குவகை ஏது புகலாய் - மோட்ச கதிக்கு வழி யாது சொல்லாய் !, கருதரிய சிற்சபையில்—, என்க.

(வி - ரை) பிரமன் முதல் பிபீலிகை பரியந்தமுள்ள ஆன்மாக்கணிறைந்த சகமனைத்து முதல்வனுக்கு அடிமையாதலால், 'எல்லாமு னடிமையே' என்றார். தேவாரம்: "சகமலா தடிமை யில்லைத் தானலாற் றுணையு மில்லை, நகமெலாம் தேயக் கையா னுண்மலர் தொழுது தூவி, முகமெலாங் கண்ணீர் மல்க முன் பணிந்தேத்துந் தொண்டர், அகமலாற் கோயி லில்லை யையனை யாற னார்க்கே." எனவும், திருவாசகம்: "கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி, யானாலவனுக்கிங் காட்படுவா ராரேடி, யானாலுங் கேளா யயனுந் திருமாலும், வானோர் கோவும் வழியடியார் சாழலோ." எனவும் வருவனவற்றாற் காண்க.

அனைத்துலகும் பஞ்சகிருத்தியத்துட்பட்டுக் காரியப்படுவன வாகலின் 'எல்லாமு னுடைமையே' என்றனர். திருவாசகம்: "அனைத்துலகு மாக்குவா யழிப்பா யருடருவாய் போக்குவாய்" என்றதனாற் காண்க.

'முதல்வன் அசைவித்தாலன்றி யோரணுவு மசையாதாகலின், எல்லாமுனுடைய செயலே' என்றார். தேவாரம்: "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே யடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே, ஓட்டு வித்தா லாரொருவ ரோடாதாரே யுருகுவித்தா லாரொருவ ருருகாதாரே, பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே பணிவித்தா லாரொருவர் பணியா தாரே, காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே." என்றதனாற் காண்க.

பசு பாசங்கள் சுதந்தர முடையனவல்ல. ஆன்மா சேதனனாயினு மறிவித்தாலன்றி யறியான். பாசஞ் சடமாகலின் அசைவித்தாலன்றி யசையாது. ஆன்மாவுக்குத் தனுகரணங்களை யாக்கிக்கொள்ளவும், பாசத் துக்குத் தனுகரணமாகத் திரிந்து ஆன்மாவை வந்தடையவும் வகை யில்லை. ஆன்மாவுக்குத் தனுகரணங்களை முதல்வன் கூட்டாதபோது, அதன் ஞானக்கிரியைகள் நிகழமாட்டா. அவன் காரியப்படுத்தாதபோது பாசமுந் தனுகரண முதலியவாகப் பரிணமிக்காது. இப் பசு பாசங்களை யறிவித்தலையும், அசைவித்தலையுமே 'எல்லாமுன்னுடைய செயலே' என்று கூறினர். அன்றியும், ஒருத்த ரறிவியாமல் தனக்கெனவோ ரறிவில் லாத ஆன்மா அதீதப்பட்டுக் கிடக்கு மவதரத்துத்தானாகத் தத்துவங்களைக் கூட்டி யறியமாட்டான். தனக்கென்ன வொரு காலத்திலு மறிவற்றுச் சடமாயிருக்கப்பட்ட விந்திரியங்க ளதீதப்பட்டுக் கிடக்கிற ஆன்மாவை யறிந்து கூடமாட்டாது. அங்ஙனமானாலும், தனக்கென்ன வோரறிவில் லாத வான்மா பஞ்சவன்னங்களை யடுத்த படிகம்போலத் தத்துவங்களின் சொரூபமே தனக்கு வடிவாய் நிற்பன். இங்ஙனங் கூடினதின் றன்மை யாய் நிற்கிறவனாகையால் தற்சுதந்திர முள்ளவனல்ல. ஆனாலிவை தன் னிற் கூடியறிந்தபடி யெங்ஙனே யென்னில், தனக்கொருவ ரறிவியாமற் றானே சர்வத்தையு மறியத்தக்க முதல்வனாலே யான்மா சர்வத்தையு மறிந்து சீவியாநிற்பன். ஆன்மா சர்வத்தையு மறிவனென்றது அந்தக் கரணங்களோடுங் கூடிச் சத்தாதிகளை யறிவனென்ற தெனவறிக. சிவப்பிரகாசம்: "தனக்கென வறிவி லாதான் றானிவை யறிந்து சாரான், றனக்கறி விலாதவாயி றானறி யாது சாரா, தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன், றனக்கென வறிவா னாவிச் சகலமு நுகருந் தானே." என்றதனாற் காண்க. "சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறேன்" என் றிவ்வாசிரியர் கூறுவதனானு முணர்க.

இதனால் ஆன்மாவிற்கொரு யோக்கியதையு மில்லையெனின், ஆன்மா அறிவித்தா லறிந்துகொள்ளுந் தன்மையுடையதாகலின் அது கூடாது.

அன்றியும், விதிவிலக்கு ரூபமான வேத சிவாகமங்களை முதல்வ னருளிச் செய்தமை யென்னை? யிருகாதிகள் நடந்துகொள்ளவேண்டிய முறைமைக் கென்றே? அன்றே. ஆதலின், ஆன்மா வேதாகமங்களில் விதித்த வழி விட்டு விலக்குவழியிற் சென்றால் அக் குற்றம் அவ் வான்மாவைச் சேர்ந் ததே. 'எல்லாமுனுடைய செயலே' என்றதனால் ஆன்மா செய்யுஞ் செயலு முதல்வன் செயலென்பது பாதகமாக முடியும்.

"நமஸ்தேருத்ரமன்யவே" என யஜுர்வேதமும், "நமோருத்ரமன் யவே" என ருக் வேதமும், "ருத்ராயதேநமா" எனச் சாமவேதமும், "ருத்ராயஸ்தருத்யா" என அதர்வணவேதமுங் கொண்டாடி, நான்கு வேதங்களும் சைவ சமயமாக விளங்குதலால் 'இருக்காதி வேதமெல்லாஞ் சொல்லான் முழக்கியது' என்றனர்.

குருபரம்பரையில் உபதேசித்த சித்தாந்த மிதுவே யென்பார், 'நல்ல குருவானபேருந், தொகுத்தநெறி தானுமிவையே, யல்லாமலில்லை' எனவும், இவ்வுண்மையினை நன்கு தேர்ந்திருந்தும் அச் சுகாரம்பநிலையிற் றலை கூடாது வாளா காலங் கழித்தேன் என்பார், 'நன்று வறிந்தேன்; அறிந்த படி நின்று சுகநான், ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினேன்' எனவும், அவ் வுண்மையும் தேவரீர் திருவருள் கூட்டிவைத்தா லல்லது கூடாது என்று மந்தனுக்கு விளக்கினை யென்பார், 'அதுவுநின தருளென்னவே, கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை' எனவும், எளியேனுக்குத் தேவரீரையல்லது பேரானந்த வீட்டினை யளிப்பவ ரெவரென்பார், 'கதிக்கு வகையேது? புகலாய்' எனவுங் கூறினர். (3)

பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்ததிலை குலையாது
பரமவெளி யாகவொருசொற்
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராமல், ஆராகநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல,
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி,
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவே முளைத்தமனதைக்
கட்டவறி யாமலே வாடினேன்; எப்போது
கருணைக் குரித்தாவனோ?
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்) பட்டப் பகற்பொழுதை - கடும்பகற் காலத்தினை, இருள் என்ற - இருட்காலமென்கிற, மருளர்தம் பக்ஷமோ எனது பக்ஷம் - மயக்க அறிவுடையாரது பக்ஷந்தானோ எனது பக்ஷம்?, பார்த்த இடம் எங்கணும் - கண்ட இடங்களெல்லாம், கோத்த நிலை குலையாது - என்னை விழுங்கின நிலை கெடாமல், பரம வெளி ஆக - பரமாகாயமாக, ஒரு சொல் - ஒரு மொழியை, மௌநியாய் - மௌநியாகி, திட்டமுடன் அருள் செய்திருக்கவும் - திருத்தமா யருள்செய்திருந்தும், சேராமல் - அதை யடையாமல், நான் ஆர் ஆக - என்னை வேறு யாராகவோ யெண்ணி, சிறு வீடு கட்டி - சிறிய மணல்வீடு கட்டி, அதின் அடு சோற்றை உண்டு உண்டு - அதில் சமைத்த மணற்சோற்றினைப் பலகால் உண்டாற்போல நடித்து, தேக்கு சிறியார்கள் போல - தெக்கெறிகின்ற சிறுர்கள் போல, நட்டனைய தாக்கற்ற - நடுவு நிலைமையாகக் கற்றுக்கொண்ட, கல்வியும் - கல்வியையும், விவேகமும் - கேள்வியறிவையும், நல் நிலயமாக உன்னி - நல்ல நிலையிடமாக நினைத்து, நான் என்று நீ என்று - நானென்றும் நீயென்றும், இரண்டு இல்லை என்ன - இரண்டில்லையென்று துணிந்து, நடுவே முளைத்த மனதை - நடுவி லுண்டான மனத்தினை, கட்ட அறியாமல் - தடைப்படுவ தறியாமல், வாடினேன் - மெலிந்தேன், எப்போது கருணைக்கு உரித்தாவனோ - எக்காலத்தில் உன் கருணைக்குப் பாத்திரமாவேனோ?, கருதரிய சிற்சபையில்—, என்க.

(வி - ரை) 'பட்டப் பகற் பொழுதை இருள்' என்றது, தெளியக் கிடந்த வொன்றினை விபரீதமாகக் கருதுவது. அங்ஙனம் நான் மயங்கேனென்பார், 'மருளர்தம் பக்ஷமோ வெனது பக்ஷம்' என்றனர். திருவருளானது ஒன்று யிருந்தும் அகண்டாகார பரிபூரணமாய்ச் சர்வான்மாக்க ளுள்ளும் பிரிவறநின் றுயிர்க் குயிராய் விளங்கி நிற்றலின், 'பார்த்த விட மெங்கணுங் கோத்தநிலை குலையாது பரமவெளி யாக' என்றனர். ஞானமணிமாலை: "எங்கெங்கும் பார்த்தாலு மப்பாலு முள்ளுறவே, யங்கங்கும் பார்த்தாலு மப்பாலு - மங்காத, மெய்யனே! அன்பருள மேவியற வாழ்ந்திருக்கு, மையனே! நீயலா தார்?" என்றதனுற் காண்க. இப் பரிபூரண வுண்மையினை அடியே னனுபவத்திற் காணும்படி எனது பரமாசிரியர் உபதேசித்தா ரென்பார், 'ஒரு சொற் றிட்டமுடன் மௌநியாயருள் செய்திருக்கவும்' என்றனர். இங்ஙன முபதேசிக்கப்பெற்ற பெருமையையும், அதன் வழி யொழுக வேண்டுமென்னு முரிமையையு மறந்து, உலகு நூற் கல்வியிலுங் கேள்வியிலும் காலங் கழித்துச் சிறுவர்களுக்குச் சமானமானே னென்பார், 'சேராம லாராக நான், சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு தேக்குசிறி யார்கள்போல, நட்டனைய தாக்கற்ற கல்வியும் விவேகமும் நன்னிலய மாகவுன்னி' என்றனர். பேரின்பமாகிய முதல்வனிடத் தடங்கி அதீதப்பட்டுப் பேரின்பாதீதமாய் வாழ்ந்துகொண் டிருக்கையில் தன்மை முன்னிலை தோன்று தாகையால், 'நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே' என்றனர். சித்தராந்தாதி: "அன்னையை யிங்

கென்னை யாளுடை யானை யரவிந்தத்துப், பொன்னை யடைந்துய்து மென்று கொண் டேசென்று புக்கதற்பின், றன்னையுங் காண்கின்றிலேன்சரணம் புயத்தாள் பணிந்த, வென்னையுங் காண்கின்றிலேனென்ன மாயம் வெளிப் பட்டதே." என்றதனுற் காண்க. இது சோகம்பாவனை முறைமை யாகும். மனதைக் கட்டிஞலன்றி ஆநந்தாதீத மாகிய முத்தி கைவரா தாதலால், 'மனதைக் கட்ட வறியாமலே வாடினேன்' என்றனர். திருக்கடைக்காப்பு: "சித்தந் தெளிவீர்கா, ளத்தனூரைப், பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே." என்றதனுற் காண்க. சித்தமெனினும் மனமெனினு மொக்கும். (4)

மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்ம்மையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்; இதற் கையமில்லை;
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய்குவேன்?
மைவிடா தெழுநீல கண்டகுருவே! விஷ்ணு
வடிவான ஞானகுருவே!
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே!
மதங்கடொரு நின்றகுருவே!
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்துகுருவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்) மெய்விடா நா உள்ள - மெய்யை நீங்காத நாவினையுடைய, மெய்யர் உள் நீ இருந்து - மெய்யினரிடத்தில் நீ சந்நிதி செய்திருந்து, மெய் ஆன மெய்மை எல்லாம் - உண்மையான உண்மைப் பொருள்களை யெல்லாம், மெய் என உணர்த்தியது மெய் - உண்மையாக விளக்கிக் காட்டினது சத்தியமே; இதற்கு ஐயம் இல்லை - இதற்குச் சந்தேக மில்லை; மெய் ஏதும் அறியா - உண்மையினைச் சிறிது முணராத, வெறும் பொய் விடா - வெறும் பொய்யை நீங்காத, பொய்யினேன் - பொய்யினை யுடையவனுகிய எனது, உள்ளத்து இருந்து - மனதின்கண் ணிருந்து, பொய்யான பொய்யை எல்லாம் - பொய்யாகிய பொய்ப் பொருள்களை யெல்லாம், பொய் எனுவண்ணம் - பொய்யென்று சொல்லாதபடி, புகல வைத்தாய் எனின் - (மெய் யென்று) சொல்லும்படி (என்னை நியமித்து) வைத்தனையாயின், புன்மையேன் என் செய்குவேன் - அற்பனுகிய நான் என் செய்ய வல்லேன்?, மை விடாது எழும் நீலகண்ட குருவே - கருமை நீங்காது வளர்கின்ற நீலகண்ட உருத்திர வடிவான ஆசிரியனே!, விஷ்ணு வடிவு ஆன ஞானகுருவே - திரு

மால் உருவாகிய ஞானாசிரியனே!, மலர் மேவி - தாமரையினை யிடமாகப் பொருந்தி, மறை ஓதும் - வேதாத்தியயநம் பண்ணுகிற, நான்முகக் குருவே - பிரம னுருவாகிய ஆசிரியனே?, மதங்கள் தோறும் நின்ற குருவே - எல்லாச் சமயங்களிலும் (அவரவர் கருதியபடி) நின்ற ஆசிரியனே!, கைவிடாதே என்ற அன்பருக்கு - கைவிட வேண்டாம் என்று பிரார்த்தித்த அன்பர்கட்கு, அன்பு ஆய் - அன்புருவாகி, கருத்தூடு - (அவரது) கருத்தினுள், (இருந்து) உணர்த்து குருவே - (அறிய வேண்டுவன யாவும்) அறிவித்த ஆசிரியனே!, கருதரிய—, என்க.

(வி - ரை) பூர்வ புண்ணிய வசத்தால் சத்தியத்தினைக் கைக்கொண்டொழுகுஞ் செந்நெறியாளரிடத்து அதிஷ்டான வியாப்தியா யெழுந்தருளி யிருந்து உலகோபகாரமான அனேக அற்புதச் செய்கைகளை உண்மையாய் விளக்கிக் காட்டினது பிரத்தியக்ஷம் என்பார், 'மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்து நீ மெய்யான மெய்யை யெல்லாம், மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமில்லை' என்றனர். கன்மத் தடிப்பால் சத்தியத்தினை யாராயாது பொய்யாகிய பிரபஞ்சவசமா யுள்ளவனிடத்து திரோதான சத்தியா யிருந்து அசத்திய தனுகரண புவன போகங்களைக் கூட்டி அவ் வழியே நிறுத்துவ தாகலின், 'மெய்யேது மறியா வெறும், பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான் பொய்யான பொய்யை யெல்லாம், பொய்யெனு வண்ணமே புகல வைத்தாய்' என்றனர். திருமந்திரம்: "மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப், பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை, யுய்கலந் தூழித் தலைவனு மாய் நிற்கு, மெய்கலந் தின்பம் விளைந்திடு மெய்யர்க்கே." என்றதனாற் காண்க. எச்செயலுங் கன்மத்தின் வழி கூட்டி முடிக்கின்றாய் அவ் வழியே நடக்குந் தொழிலுடையே னென்பார், 'புன்மையே னென்செய்குவேன்?" என்றனர். இதனால் ஆன்மாக்களுடைய கன்மத்திற்குத் தக்கபடி வினைப்போகங்களை யூட்டி மலபரிபாகப் படுத்துகின்றவன் நீயே யென்பதாயிற்று.

ஆசாரியனைத் திரிமூர்த்தி வடிவமாகக்கொண்டு துதிப்பது மரபு. அன்றியும், "திருமாலிந் திரன்பிரம னுபமன்யன் றபனனந்தி செவ்வேளாதி, தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கு முதற் குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த, வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்." என்றபடி கொள்ளினு மமையும். (5)

பண்ணேனு னக்கான பூசை; ஒரு வடிவிலே
பாவித்தி றைஞ்சவாங்கே
பார்க்கின்ற மலருடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்கமனமும்

நண்ணேன்; அலாமலிரு கைதான் குவிக்கவெனின்
நாணுமென் னுளநிற்றி நீ;
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலா
லென்பூசை செய்யன்முறையோ?
விண்ணே! விணுதியாம் பூதமே! நாதமே
வேதமே! வேதாந்தமே!
மேதக்க கேள்வியே! கேள்வியாம் பூமிக்குள்
வித்தே! அவித்தின்முளையே!
கண்ணே! கருத்தே! எனெண்ணே! எழுத்தே!
கதிக்கான மோனவடிவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்) உனக்கு ஆன பூசை பண்ணேன் - உனக்குப் பிரியமான பூசனையைச் செய்யேன்; ஒரு வடிவிலே பாவித்து இறைஞ்ச-ஓருருவத்தில் உன்னைப் பாவனை செய்து வணங்க, ஆங்கே - அதற்காகவே, பார்க்கின்ற மலருடு - பார்க்கின்ற மலர்க ளெல்லாவற்றுள்ளும், நீயே யிருத்தி - நீயே நீக்கமின்றி நிறைந்திருக்கின்றாய்; (ஆதலால்) அ பனி மலர் எடுக்க மனமும் நண்ணேன் - அந்தக் குளிர்ச்சியாகிய மலர்களைப் பறிக்கவும் மனம் பொருந்தேன்; அல்லாமல் - அன்றியும், இரு கை குவிக்க எனின் - இரு கரங்களைக் குவித்து வணங்கவென்றாலோ, நீ என் உள்ளம் நிற்றி - நீ என் மனத்தி லிருக்கிறாய்; (ஆதலால்) நாணும் - என் மனம் நாணுகின்றது; (அப்படி மனவொருப்பாடின்றி) நான் கும்பிடும்போது - நான் நமஸ்கரிக்கும்போது, அரை கும்பிடு ஆதலால் - (அது) அரை நமஸ்கார மாகையால், நான் பூசை செய்யல் முறையோ - நான் பூசனை புரிதல் கிரமமாகுமோ?, விண்ணே! - பரமாகாயமே!, விண் ஆதி பூதமே! - விண் முதலாகிய பஞ்சபூதமே!, நாதமே! - நாத தத்துவமே!, வேதமே! - மறையே!, வேதாந்தமே! - மறைமுடிவே!, மேதக்க கேள்வியே! - மேன்மை பொருந்திய கேள்வியே!, கேள்வி ஆம் பூமிக்குள் வித்தே! - கேள்வியாகிய நிலத்தில் முளைக்கின்ற பீஜமே!, அவித்தின் முளையே! - அந்தப் பீஜத்தினின்று முண்டாகிற அங்குரமே!, கண்ணே! - கண்களே!, கருத்தே! - மனமே!, என் எண்ணே! - என் தருக்கமே!, எழுத்தே! - இலக்கணமே!, கதிக்கு ஆன மோனவடிவே! - மோட்சத்திற் கேதுவாகிய மௌனரூபமே!, கருதரிய—, என்க.

(வி - ரை) பூசை புரிய வேண்டுவது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத கடனென்பார், 'பண்ணேன் பூசை' என்றார். தேவாரம்: "பூக்கைக் கொண்டரன் பொன்னடி பூசியார், நாக்கைக் கொண்டர னாமநவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து, காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே." எனவும், பிரபுலிங்கலீலை: "பீடுறு மானிடப் பிறப்பை

வாய்ந்துநல், ஏடவிழ் மலரினாலிறையைப் பூசியார், பாடமை நாளெலாம் பாழுக் கிறைப்பவர், மூடரை யெண்ணுங்கால் முந்தி நிற்பரே.'' எனவும் வருவனவற்றாற் காண்க. அன்புடன் புரியும் பூசையே முதல்வனுக்கா மென்பதுபற்றி, 'ஆனபூசை' என்றனர். தேவாரம்: "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன், பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு, நக்கு நிற்ப ரவர்தமை நாணியே.' என்றதனாற் காண்க.

ஒரு வடிவென்பது மகேசுர பேதங்களான சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் ஆகிய இருபத்தைந்து மூர்த்தங்களி லொன்றினை.

முதல்வன் எங்கு நிறைந்திருக்கும் வியாபகப் பொருளென்பதனைச் சிறிது நோக்காது, ஒரு வடிவத்திலேயே யேகதேசியா யிருப்ப னெனக் கொண்டு பூசித்தலும், மலரினிடத்து மிருக்க அதனைக்கொண் டருச்சித்தலும் செய்ய என்மன மொப்பவில்லை யென்பார், 'பாவித்தி றைஞ்சவாங்கே பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப் பனிமல ரெடுக்கமனமு நண்ணேன்' என்றனர். இதனால், பெருமான் சொரூப இலக்கணத்தினை நோக்குழி நிஷ்களமும், தடத்த இலக்கணத்தினை நோக்குழி சகளமும் உண்மையாகலின் இவ் விரண்டினையு மறிந்து பரிபூரணனை அன்பர் பொருட்டு ஏகதேசியாய் விளங்குவனெனத் தேர்ந்து பூசிக்கவேண்டு மென்பதாயிற்று. பட்டினத்தார்: சொல்லிலுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலு, மல்லிலு மாசற்ற வாகாயந் தன்னிலுமாய்ந்துவிட்டோ, ரில்லிலு மன்ப ரிடத்திலு மீச னிருக்குமிடங், கல்லிலுஞ் செம்பிலு மோவிருப் பானெங்கள் கண்ணுதலே.'' என்றதனால் காண்க. இத்திருச் செய்யுளில் 'செம்பிலுமோ' என்றதற்குச் 'செம்பில் மாத்திரந்தானோ' என்று பொருள் கொள்க.

கன்மத்திற்குத் தக்கபடி பரமான்மா செய்விக்க ஆன்மா செய்கின்றது நியதமாகலின், செய்தல் பாதியும், செய்வித்தல் பாதியுமாக ஒரு தொழில் முற்றுப் பெறுதலால் 'அரைக் கும்பிடு' என்றார். பரதந்திரனாகிய நான் சுதந்தரனாக வெண்ணி யஞ்சலித்தலும், பூசித்தலுங் கூடா தென்பார் 'குவிக்க வெனில் நாணும்' என்றும், 'பூசைசெய்யல் முறையோ?' என்றுங் கூறினர். இதனால் தற்போத மிழந்து வணங்குதலும், பூசித்தலும் வேண்டு மென்ப தாயிற்று.

கட்புலனுக்குத் தோன்றும் பொருள்களிலும், மனத்திற்கு விஷயமாகும் பொருள்களிலும் இருப்பதுபற்றிக், 'கண்ணே! கருத்தே!, என்றும்

வேதங்களிற் கூறப்படு மெல்லாப் பொருள்களையும் ஒருவ னுணர்தற்குத் தருக்கமும் இலக்கணமுமாகிய கருவிகளன்றி யுணரப்படாமையின், 'எண்ணே! எழுத்தே!' என்றுங் கூறினர். 'எண்' என்பதற்குத் தருக்கமே பொருளென்பதனைத், தருக்க சோபானம் என்னு நூலின் உபோற்காதத் திற் காண்க. (6)

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதாநிஷ்ட ர்நினைவதில்லை ;
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே ;
செப்பினும் வெகுதர்க்கமாம் ;
திவ்யகுண மார்க்கண்டர், சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ ?
இந்த்ராதி தேவதைகள், பிரமாதி கடவுளர்,
இருக்காதி வேதமுனிவர்,
எண்ணரிய கணநாதர், நவநாத சித்தர்கள்,
இரவிமதி யாதியோர்கள்,
கந்தருவர், கின்னரர்கள், மற்றையர்க ளியாவருங்
கைகுவித் திடுதெய்வமே !
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே !

(இ - ள்) வேதமொழி - வேத வாக்கியமானது, சந்ததமும் - சதா காலமும், யாதொன்று பற்றின் - யாதொன்றையாயினும் ஆசையாற் பற்றி னால், அதுதான் வந்து முற்றும் எனலால் - அதுவாகவே வந்து முடிவு பெறுமென்று சொல்லுதலால், சகமீது இருந்தாலும் - உலகத்தி லிருப்பி னும், மரணம் உண்டு என்பது - மரணமுள தென்பதை, சதா நிஷ்டர் நினைவது இல்லை - சகச நிட்டாபரர் நினைப்பதேயில்லை ; ஈது - இது, சிந்தை அறியார்க்கு - கருத்தறியாதவர்க்கு, போதிப்பது அல்ல - அறிவுறுத்துவ தன்று ; செப்பினும் - அறிவுறுத்தினும், வெகு தர்க்கம் ஆம் - அநேகமாகிய வாதுக்கள் விளையும் ; திவ்ய குணம்-தெய்வீகமான குணத்தையுடைய, மார்க் கண்டர் - மார்க்கண்டரும், சுகர் ஆதிமுனிவோர்கள் - சுகர் முதலாகிய முனி வர்களும், சித்தாந்தம் நித்தியர் அலரோ? - முடிவு செய்யப்பட்ட நித்யாத் மாக்க ளல்லரோ?, இந்த்ராதி தேவதைகள் - இந்த்ரன் முதலான சாமாந்ய தேவர்களும், பிரமாதி கடவுளர் - பிரமன் முதலான விசேஷ தேவர்களும், இருக்கு ஆதி வேதம் முனிவர் - இருக்கு முதலிய வேதங்களை ஐயந்திரிபற வுணர்ந்த முனிவர்களும், எண் அரிய கணநாதர் - எண்ணுத லருமையாகிய கணாதிபதிகளும், நவநாத சித்தர்கள் - சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், இரவி மதி ஆதியோர்கள் - சூரியன் சந்திரன் முதலானவர்

கள், கந்தருவர் - கந்தருவரும், கின்னரர்கள் - கின்னரரும், மற்றையர்கள் யாவரும் - வேறுள்ள எல்லோரும், கை குவித்திடு தெய்வமே! - கைகூப்பித் தொழுதற்குரிய தெய்வமே!, கருதரிய —, என்க.

(வி - ரை) உயிர்கட் கெல்லாம் எக்காலத்திலும் உண்டாகின்ற பிறவியை விளைவிப்பதாகிய காரணம் பற்று (அவா) என நூல்கள் கூறுதலின் 'சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது தான் வந்து முற்றும்' என்றனர். உத்தரவேதம்: "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான் றுந் தவாஅப் பிறப்பீனும் வித்து." என்றதனுற் காண்க.

ஒருவன் யாதானு மொன்றின்கட் சிறிதாயினும் பற்று வைக்கில், அப் பற்றினை யனுபவித்தற்குப் பிறப்பு வலையுள் அகப்படவேண்டி யிருத்தலின், 'சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது தான்வந்து முற்றும்' என்றனர். திருக்குறள்: பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப், பற்றி விடாஅத வர்க்கு எனவும், "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று, நிலையாமை காணப்படும்." எனவும் வருவனவற்றாற் காண்க. மரணமொன் றுண்டென்று நினைப்பது மோர்வகையிற் பற்றாகலினாலும், அதனைச் சிவ யோகிகள் எண்ணுவதில்லை யாகலினாலும், 'மரணமுண் டென்பது சதா நிஷ்டர் நினைவதில்லை' என்றனர். அன்றியும், சதாநிஷ்டையுடையார் தமது திருமேனி உருவச்சித்தி, அருவச்சித்தி, உருவருவச்சித்தி யென்னு மூன்றி லொன்றினைப் பெற்ற சீவன்முத்தராகையால், மரணமுண் டென்பதை நினையார். இச்சித்தி பேதங்களை யினிவரும் பராபரக்கண்ணியில் காண்க. உருவச் சித்தி பெற்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமா ணயனார் முதலியோர்; இது சுத்த தேகமெனவும், சுவர்ணதேக மெனவும், பிரணவதேக மெனவும் வழங்கும். அருவச்சித்தி பெற்றோர் மாணிக்கவாசக சுவாமிகள் முதலியோர். உருவருவச் சித்தி பெற்றோர் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் முதலியோர்.

பிரமன்முதல் பிபீலிகைபரியந்தமுள்ள சீவகோடிக ளியாவும் முதல்வனையே பூசித்தும், யாசித்தும், துதித்தும், தியானித்தும், உபவாசித்தும் வருமாகலின், 'இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள ரிருக்காதி வேத முனிவர், எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க ளிரவிமதி யாதியோர் கள், கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்க ளியாவரும் கைகுவித் திடு தெய்வமே' என்றனர். பஸ்மஜாபாலோபநிடதம்: "லிங்கரூபிணம் மாம்ஸம் பூஜ்யசிந்த்யந்தி யோகினஸ் ஸித்தாஸித்திம்கதாய ஜந்தியஜ்வா ஹேமா மேவஸ்துவந்திவே தாஸ்ஸாங்காஸ் ஸர்வோபதி ஷதஸ்ஸேஸதி ஹாஸாநஹத்தோன்ய தஹமேவ ஸர்வம் மயிஸர்வம் ப்ரதிஷ்டிதம் - ததாகாஸ்யாம்ப்ராயதைரேஹமன்வஹம் பூஜயஸ்தத்ரகணு ரௌத்ராநநா ஃ நாநாநகாநாநாஸஸ்த்ரதாரிணோ நாநாரூபதராநநா சிஸ்ஹிதாஸ்தேஸர்வே

பஸ்மதிக்தாம் காருத்ராக்ஷாபரண: க்ருதாஞ்ஜலயோ நித்யமபித்யாயம்தி தத்ரபூர்வஸ்யாம் திவிப்ரஸ்மக்ருதாஞ்ஜலிமுபாஸ்தேப்ர திச்யா மிந்த்ரஸ் ஸன்னதாங்க உபாஸ்தே உதீச்யாமக்கினிகாயாகா முபாஸதே" என்று சொல்லிய பின்னர் "தக்ஷிணயாம் திவிமுக்திஸ்தானம் முத்தி மண்டப ஸம்ஜ்ஜிதம் - தத்ராஸே ககண பால காஸ்ஸாயுத பாபகாத காஸ்தத்ர ருஷயஸ் ஸாம்பவா: பாஸுபதாம் ஹாஸைவ வேதாவதம் ஸம்சைவம் பஞ்சாக்ஷரம் ஜபமதஸ்மாரகம் ஸப்ரணவம் மோத மாணுஸ்திஷ்டம்தி." ()

துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்; கர்ம
துஷ்டதே வதைகளில்லை;
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்;
உள்ளுறையி லென்னுவி நைவேத் தியம்; ப்ராண
னோங்குமதி தூபதீபம்;
ஒருகால மன்றிது, சதாகால பூஜையா
வொப்புவித்தேன்; கருணைகூர்!
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே!
தெளிந்ததே னே! சீனியே!
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே!
தெவிட்டாத வானந்தமே!
கள்ளனறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்லவுறவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்) துள்ளும் - துள்ளிக் குதிக்கின்ற, மறியாம் மனது - மனமாகிய ஆட்டினை, பலி கொடுத்தேன் - பலியிட்டேன்; கர்ம துஷ்ட தேவதைகள் இல்லை - (ஆதலால்) கன்மமாகிய துஷ்டதேவதைகள் இனி என்னை வருத்தமாட்டா; துரியம் நிறை - துரிய பதத்தில் நிறைந்த, சாந்த தேவதை ஆம் உனக்கே - சாந்த தேவதையாம் உனக்கே, தொழும்பன் அன்பு - உன் தொண்டனாகிய அடியேனுடைய அன்பானது, அபிஷேக நீர் - திருமஞ்சன தீர்த்த மாகும்; உள் உறையில் - தேவரீர் என் மனத்திற் றங்கினால், என் ஆவி - என் உயிரானது, நைவேத்தியம் - நைவேத்திய மாகும்; ப்ராணன் - பிராணவாயுவும், ஓங்கு மதி - உயர்ந்த அறிவும், தூப தீபம் - தூப தீபங்களாகும்; இது - இவ்வாறு அடியேன் பூசனை புரிவதாகிய இது, ஒரு காலம் அன்று - ஒரு பொழுதின்மாத்திரமே யல்ல; சதாகால பூசை ஆ ஒப்புவித்தேன் - சதாகால பூசனையா யொப்புவித் தேன்; (ஆதலால்) கருணை கூர்! - மிகுந்த கிருபையைப் பண்ணு!, மறை தெள்ளி வடியிட்ட - வேதங்களால் தெளிவித்து வடிக்கப்பட்ட, அமுதப் பிழம்பே! - அமிர்தத்தொகுதியே!, தெளிந்த தேனே! -

தெளிந்த தேனே !, சீனியே ! - சீனிசர்க்கரையே !, திவ்யரசம் யாவும் - தெய்வீகமான சுவைகளெல்லாம், திரண்டு ஒழுகு பாகே ! - ஒருசேரக் கூடி ஒழுகாநின்ற பாகே !, தெவிட்டாத ஆனந்தமே ! - வெறுக்கப்படாத இன்பமே !, கள்ளன் அறிவூடும் - கள்ளனாகிய என்னறிவிடத்தும், மெள்ள மெள்ள - பையப் பைய, வெளியா கலக்க வரும் - வெளிப்படக் கலக்க வருகின்ற, நல்ல உறவே ! - நன்மையைப் பயக்கும் சுற்றமே ! கருதரிய—, என்க.

(வி - ரை) இத் திருச்செய்யுள் காயிகம், வாசிகம், மானசம் என்னு மூவகையுள் மானச பூசை முறைமை கூறியது. மனத்தினைப் பலியிடும் பொருளான ஆடாக உருவகஞ் செய்ததற்கேற்ப, கன்மத்தினைத் துஷ்ட தேவதையாகவும், சாந்தத்தினைப் பரதேவதை யாகவும், அன்பினை அபிஷேக நீராகவும், ஆவியினை நைவேத்திய மாகவும், பிராணனைத் தூப மாகவும், அறிவினைத் தீபமாகவும் கூறினர்.

அசுர ராக்கத பூதபிசாசாதிகள் மாமிசபக்ஷண போக்கியராகலின் அதுபற்றி, சாமான்னியர் துஷ்ட தேவதைகட்குப் பலியிடுதல் வழக்கமா யிருத்தலின் உலக வழக்காகப் 'பலி கொடுத்தேன்' என்றனர். உத்தம பரிபாகிகள் துஷ்ட தேவதைகளை யொருபொருளாக மதித்துப் பலி முதலிய தொழில்களை யொருபோதுஞ் செய்யத் துணியார். செந்நெறியிற் செல்லும் பெரியோர் ஒருக்கால் துஷ்ட தேவதையின் ஆலயத்தினைச் சந்திக்க நேரிடினும் அத்தேவதையின்மீது கோபித்துக்கொள்ளுதலும், பலி முதலிய காரியங்களைக் காணின் நடுநடுங்கிப் பயந்திடுதலும் பிரத்தி யட்சம். திருப்புகழ் சாமியார் : "ஒற்றியூர் காளிநீ யுனக்கேனோ வூன்விருப் பம், வெற்றிமழு வானருட்சீர் வேண்டாமா - சிற்றுயிரைக், கொல்வாருக் கின்பங் கொடாதா னவன்கண்டாய், நல்வார்த்தை சொன்னேனிந் நாள்." எனவும், திருவருட்பிரகாச வள்ளலார் : "நலிதரு சிறிய தெய்வமென் றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப், பலிதரவாடு பன்றிகுக் கிடங்கள் பலிக்கடா முதலிய வுயிரைப், பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன், கலியுறு சிறிய தெய்வ வெங் கோயில் கண்டகா லத்திலும் பயந்தேன்." எனவும் வருவனவற்றாற் காண்க.

உலகரால் அனுபவிக்கப்படும் இனிமையான பதார்த்தங்களவையோ அவைகளாக வெல்லாம் அன்பினால் முதல்வனைக் கூறுவது சாம்பிரதாய மாகலின், 'அமுதப் பிழம்பே ! தேனே ! சீனியே ! பாகே ! ஆனந்தமே ! உறவே !' எனக் கூறினர். தேவாரம் : "திருவே ! என் செல்வமே ! தேனே ! வானோர் செழுஞ் சுடரே ! செழுஞ்சுடர்நற் சோதிமிக்க உருவே ! என்னுறவே ! என்னூனே ! ஊனி னுள்ளமே ! உள்ளத்தி னுள்ளே நின்ற கருவே ! என் கற்பகமே ! கண்ணே ! கண்ணிற் கருமணியே ! மணியாடு

பாவாய்! காவாய், அருவாய் வல்வினைநோ யடையா வண்ண மாவடுதண் டுறையு மமர ரேறே!" என்றதனாற் காண்க.

வேதம் ஆன்மாக்களுடைய அதிகாரானு குணமாகப் பல பொருள்களுக்கும் பரத்துவங் கூறினபோதிலும் உபக்கிரம உபசம்மார முறையால் சிவபெருமானே பரம்பொரு ளென்று நாட்டுதலால், 'தெள்ளி மறை வடிவிட்ட வமுதப் பிழம்பே!' என்றனர். (8)

உடல்குழைய, என்பெலா நெக்குருக, விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற,
ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
ஓருறவு முன்னியுன்னிப்,
படபடென நெஞ்சம் பதைத்(து), உண் ணடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பி ஆர்த் தார்த்தெழுந்து,
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி,
வானே! அவானிலின்ப
மழையே! மழைத்தாரை வெள்ளமே! நீடூழி
வாழி! என வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ?
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ-ள்) உடல் குழைய - சரீரம் வாடவும்; என்பு எல்லாம் நெக்கு உருக - எலும்புகளெல்லாம் நெகிழ்ந்து உருகவும்; விழிநீர்கள் ஊற்று என வெதும்பி ஊற்ற - கண்ணீர் மணற்கேணி யென்னலாம்படி கொதித்தொழுகாநிற்கவும்; ஊசி காந்தத்தினைக் கண்டு அணுகல்போல - இரும்பூசியானது காந்தக் கல்லினைக் கண்டு (அதினிடத்துச் சென்று) பொருந்துதல்போல, ஓர் உறவும் உன்னிஉன்னி - ஒப்பற்ற (ஆத்ம) பந்துவாகிய வுன்னையு நினைத்து நினைத்து; நெஞ்சம் படபடென பதைத்து - மனம் படபடெனத் துடித்து; உள் நடுக்குற - உள்ளே நடுக்க மடையவும்; பாடி ஆடி குதித்து - பாடியாடித் துள்ளி, பனி மதி முகத்திலே நிலவு அனைய - குளிர்ச்சியையுடைய சந்திரனிடத்தி லுண்டாகும் சந்திரிகையை யொத்த, புன்னகை பரப்பி - புன் சிரிப்பை விரித்து; ஆர்த்து ஆர்த்து எழுந்து - பலகா லாரவாரித் தெழுந்து; மடல் அவிழும் மலர் அனைய கை - இதழ்கள் விரியாநின்ற தாமரைமலரை யொத்த கைகளை, விரித்து கூப்பி - விரித்துங் குவித்தும்; வானே! - சிதாகாயமே!, அவ்வானில் இன்ப மழையே! - அவ் வாகாயத்தினின்றும் பொழிகின்ற ஆனந்த வருஷமே!, மழை தாரை வெள்ளமே! - அந்த மழைத் தாரைகளா லுண்டாகும் பெருக்கே!, நீடூழி

வாழி என வாழ்த்தி எத்தும் - நீடூழிகாலம் வாழ்கவென்று திருப்பல்லாண்டு பாடித் துதிக்கின்ற, கடல் மடை திறந்தனைய - கடலானது மடை திறந்தாற் போன்ற, அன்பர் அன்புக்கு எளியையோ - அன்பரது அன்புக்கு எளியையா யிருப்பாயோ ?, கருதரிய—, என்க.

(வி - ரை) அன்போ டுருகி யகங் குழைவார்க்கன்றி முதல்வன் வெளிப்படானாகலின், அன்பின் மயமாகச் சரீரம் வாடுதலும், என்பு நெகிழ்ந்துருகுதலும், கண்ணீர் பெருகுதலும் அன்புடையார்க் கியற்கை யாகையால் 'உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க ளூற்றெனவெதும்பியூற்ற' என்றனர். திருமந்திரம் : "என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப், பொன்போற்கனலிற் பொரிய வறுப்பினு, மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி, என்போன் மணியினை யெய்த வொண்ணாதே." என்றதனாற் காண்க.

ஊசியானது காந்தத்தின் முன்னர் நேரிட்ட காலத்திலேயே அவ்வூசியினுக்குச் சேட்டை யுண்டாமாறு, முதல்வன் திருவருளை அடியார் முன்னிட்ட வன்றே யன்புமயமான துடிப்புண்டாமாகையால், 'ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே, ஒருறவு முன்னி யுன்னிப், படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப் பாடியா டிக்குதித்து' என்றனர். அத்தகைய யடியர் முகமலர்ச்சியுடன் அஞ்சலித்து வாயாரத் தோத்தரிப்பா ராகையால், 'பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை பரப்பியார்த் தார்த்தெழுந்து, மடலவிழ மலரனைய கைவிரித் துக்கூப்பி' என்றனர்.

ஒருவரால் காரியங் கொள்வார், அவரை வாழ்த்துதல் பெருவழக் காதலால் தமக் கெளியனாகுகைக்கு 'நீடூழி வாழி!' என வாழ்த்துவ ராயினர். திருவாசகம் : "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனநின்பால், தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச், சூழ்த்து மது கரமுரலுந் தாரோயை நாயடியேன், பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே." என்றதனாற் காண்க. இத் திருச்செய்யுள் : பத்திவலையிற் படுவோன் என்னும் உண்மையும், அப்பத்தியுடையார் தன்மையும் விளக்கியது. (9)

இங்கற்ற படியங்கும் எனவறியு நல்லறிஞ
ரெக்காலமு முதவுவார் ;
இன்சொறவ ருர் ; பொய்ம்மை யாமிழுக் குரையார் ;
இரங்குவார் ; கொலைகள்பயிலார் ;
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்தினுறை
சாக்ஷிநீ யிகபரத்தும்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தவின் பமுமுதவுவாய் ;
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே !

சிந்தாகு லந்திமிர மகலவரு பானுவே!
தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்
ககனவட் டக்கப்பலே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

(இ - ள்). இங்கு அற்றபடி - இம்மையில் முடிந்தவண்ணமே, அங்கும் என அறியும் - மறுமையினுமாமென் றறிகின்ற, நல் அறிஞர் - பேரறிவினர், எக்காலமும் உதவுவார் - எக்காலத்திலும் பிறருக்கு உதவி செய்வார்கள்; இன் சொல் தவறார் - மதுரமொழி வழுவார்கள்; இழுக்கு ஆம் பொய்ம்மை உரையார் - குற்றமாகிய பொய்யுரை யாடார்; இரங்குவார் - சீவர்கண் மேல் இரக்கஞ் செய்வார்கள்; கொலைகள் பயிலார் - சீவஹிம்சையைப் பழகமாட்டார்கள்; சங்கற்ப சித்தர் - சங்கற்பசித்தத்தினை யுடையவராகிய, அவர் - அவரது, உள்ளக் கருத்தில் - மனக் கருத்தில், உறை - வாசம் பண்ணுகிற, சாக்ஷி நீ - சாட்சிபூதனாகிய நீ, இகபரத்தும் - இம்மை மறுமைகளிலும், சந்தானம் கற்பகம் தேவு ஆய் இருந்து - சந்தான விருட்சம்போலவும் கற்பக விருட்சம்போலவும் உள்ளே தெய்வமா யிருந்து, சமஸ்த இன்பமும் உதவுவாய் - எல்லாச் சுகங்களையுங் கொடுப்பாய்; சிங்கத்தை ஒத்து - சிங்கத்தினை நிகர்த்து, எனைப்பாய வரு வினையினை - என்னைப் பாய வருகின்ற வினைகளை, சேதிக்க வருசிம்புளே! - கிழித்தெறிதற்காக வருகிற சரபமே!, சிந்தா ஆகுலம் திமிரம் அகல வரு - மனக்கிலேசங்களாகிய இருள் நீங்க வருகின்ற, பானுவே! - சூரியனே!, தீனனேன் - எளியேனாகிய நான், கரை ஏற - (பிறவிக்கடலைக் கடந்து முத்தியாகிய) கரையில் ஏறும்படி, கங்கு அற்ற - வரம்பு கடந்த, பேராசை வெள்ளத்தின் வளர் - எனது பேரன்பாகிய பிரவாகத்தில் சஞ்சரிக்கிற, அருள் ககனம் வட்டம் - கிருபையுடைய ஆகாயவட்டத்தில் (உலாவுகின்ற), கப்பலே! - மரக்கலமே!, கருதரிய—, என்க.

(வி - ரை) இத் திருப்பாடல் பொது தர்மங்களை யெடுத்தோதின நல்லறிஞராகுஞ் சித்தாந்தச் செல்வர்களை இம்மை யம்மை மறுமை யென்னு மூவகைப் பயனையுந் தரும் வினைகள் யாவுந் தொடராவாகலின், அவர்கள் 'இம்மையில் முடிந்தவண்ணமே மறுமையி லாகும்' என்று கொள்ளும் பேரறிவுடையா ராவராகலின், 'இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞர்' என்றனர். திருவருட்பயன்: "மும்மை தருவினைகண் மூளாவ மூதறிவார்க், கம்மையு மிம்மையே யாம்." என்றதனாற் காண்க.

இனிவரவைத் தன்கட் சொன்னற்கு ஈதல் அவ் அறிஞர்க் கியற்கையாதலான், 'எக்காலமு முதவுவார்' என்றும், அன்புடன் கலந்து வஞ்சனையிலவா யிருக்கின்ற அறத்தினை யுணர்ந்த அறிஞர் வாய்ச் சொற்கள் எக்காலத்து மின்சொல்லாவன வாகலின், 'இன்சொ றவறார்' என்றும்,

பிறிதோ ருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களையே யுடைய ராகலின் 'பொய்ம்மையா மிழுக் குரையார்' என்றும், அருளையே தாரக மாகக் கொண்டு வாழ்பவராகலின் 'இரங்குவார்' என்றும், பிறப்பு நின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப் பொருட்டு மனைவாழ்க்கையைத் துறந்த எல்லா ருள்ளும் கொலைப் பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாது உயர்ந்தவரே தலையாயரு ளொருவராகலின், 'கொலை கள் பயிலார்' எனவுங் கூறினர். திருக்குறள்: "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள." எனவும், "இன் சொலா லீர மளைஇப் படிறிலவாஞ், செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்." எனவும், "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந், தீமை யிலாத சொலல்" எனவும், "நல்லாற்ற ணாடி யருளாள்க பல்லாற் றாற், றேரினு மஃதே துணை." எனவும், "நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக், கொல்லாமை சூழ்வான் றலை." எனவு முறையே வருவன வற்றாற் காண்க.

சங்கற்ப சித்தராவார்: ஆகாமியமே றுதற் கிடங் கொடாமல் பிராரத் துவ மாத்திர மனுபவித்து வருஞ் சித்தாந்தச் செல்வர்கள். இத்தகையார் எக்காலமும் அதோமுகமாகத் தரிசனஞ் செய்ய அவர்க ளுள்ளத்தில் நாளு முதல்வன் விளங்குவா னாதலின், 'அவருள்ளக் கருத்திலுறை சாட்சி நீ' என்றனர். திருமந்திரம்: "நந்தி யெழுந்து நடுவுற வோங்கிய, செந்தீ கலந் துட் சிவனென நிற்கு, முந்தி கலந்தங் குலகம் வலம்வரு, மந்தி யிறைவ னதோமுக மாமே." என்றதனாற் காண்க. முதல்வன் தனது தாதான்மிய மான பராசத்தியி னொருகூறாகிய திரோதான சத்தியினைக் கொண்டு பெத்த நிலையில் மல பரிபாகம் வரச் செய்தும், முத்தி நிலையில் அச் சத்தியினையே அநுக்கிரக சத்தியாக விளங்கச் செய்து வருவா னாகலின், 'இகபரத்தும் சந்தான கற்பகத் தேவா யிருந்தே சமஸ்தவின் பமுமுதவு வாய்' என்றனர். 'சந்தானம்' 'கற்பகம்' என்பன தேவலோகத்தி லுள்ள பஞ்சதருக்களி லிரண்டு. அத்தகைய நீ என் வினையை நீக்கவேண்டு மென்பதற் குருவகமாக்கி, 'சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையி னைச் சேதிக்க வருசிம்புளே!' என்றனர். 'சிம்புள்' என்றது எண்கால் களை யுடைய ஒரு பட்சி; அது சிங்கத்தினை மிகவும் எளிதாகக் கவர்ந்து சென்று தன் குஞ்சுகளுக்கு உண்பிப்பது. ஆகையினா லன்றோ, இரணியன் பொருட்டுத் தூணிலே வந்த சிங்கஞ் செருக் குற்றபோது சிம்புளாய் வந்து பெருமான் கண்டித்தனர். பூதவிருளை நீக்கும் ஆகாய சூரியனைப்போல, கவலையா லுண்டாகும் மன விருளை நீக்கும் ஞான சூரிய னென்பார், 'சிந்தா குலந்திமிர மகலவரு பானுவே!', என்றும், பிறவிக் கடல் கடப்ப தற்கோர் புணையாயினை என்பார், 'தீனனேன் கரையேறவே, கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட் ககனவட்டக் கப்பலே!', என்றுங் கூறினர்.

# சித்தர் கணம்

திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
 சென்றேடி யாடிவருவீர்;
செம்பொன்மக மேருவொடு குணமேரு வென்னவே
 திகழ்துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்; கையி
 லுழுந்தமிழு மாசமனமா
மீரேழு கடலையும் பருகவல் லீர்; இந்த்ர
 னுலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா யெடுத்துவிளை யாடுவீர்;
 ககனவட் டத்தையெல்லாம்
கடுகிடை யிருத்தியே யஷ்டகுல வெற்பையுங்
 காட்டுவீர்; மேலுமேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
 விளங்கவரு சித்தியிலிரோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர்கணமே!

(இ-ள்) திக்கொடு திக்கு அந்தமும் - திக்குகளிலும் திக்குகளின் முடிவிலும், மனவேகம் என்ன - மனோவேகம்போல, சென்று - விரைந்து சென்று, ஓடி ஆடி வருவீர் - ஓடியும் விளையாடியும் வருவீர்கள்; செம்பொன் மகமேருவொடு - செம்பொன் மயமான மகமேரு மலையோடு, குண மேரு என்ன - நற்குணமாகிய மேரு மலைபோல, திகழ் - விளங்குகின்ற, துருவம் அளவு அளாவி - துருவ மண்டலத்தின் அளவும் போய், உக்ரம் மிகு - வேக மிகுந்த, சக்ரதரன் என்ன - சக்ராயுதத்தை யேந்திய திரிவிக்கிரமன்போல, நிற்பீர் - நிலைத்திருப்பீர்; கையில் உழுந்து - கையிலுள்ள உழுந்தினளவாக, அமிழும் ஈரேழு கடலையும் - ஆழ்ந்த சப்த சமுத்திரங்களையும், ஆசமனமா பருக வல்லீர் - ஆசமன நீராகக் குடிக்க வல்லீர்கள்; இந்திரன் உலகும் ஐராவதமும் - இந்திரலோகத்தையும் அதிலுள்ள ஐபிராவத மென்னும் யானையையும், கைக்கு இனிய பந்தா எடுத்து - கைக்கு இலேசான பந்துபோல் எடுத்து, விளையாடுவீர் - விளையாட்டுச் செய்வீர்கள்; ககன வட்டத்தை எல்லாம் - ஆகாய மண்டலங்களை யெல்லாம், கடுகிடை இருத்தி - கடுகைத் தொளைத்து (அதில்) புகட்டி, அஷ்டகுல வெற்பையும் - அஷ்டகுல கிரிகளையும், காட்டுவீர் - காண்பிப்பீர்கள், மேலும் மேலும் - மென்மேலும், மிக்க சித்திகள் எல்லாம் - மிகுந்த சித்திகளை யெல்லாம் வல்ல நீர் - செய்து காட்டவல்ல நீங்கள், அடிமை முன் விளங்க வரு சித்தி இலிரோ - உங்கள் அடிமையாகிய எனக்கு எதிரில் பலருமறிய வராநின்ற சித்தியை யுடையீர் அல்லிரோ?, வேதாந்த சித்தாந்த சமரச நல் நிலை

பெற்ற - வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாகப் பாவித்தவராகிய சிறந்த நிலையை யடைந்ததனால் உண்டாகிய, வித்தகம் - ஞானத்தினையுடைய, சித்தர் கணமே! - சித்தர் கூட்டமே!, என்க.

(வி - ரை) 'மூலன் மரபில்வரு மௌனகுருவே!' என முன் கூறியுள்ளபடி இவ் வாசிரியருக்கு ஆசிரியராகிய மௌன குருமூர்த்தி திருமூலர் மரபின ராதலானும், திருமூலதேவர் அணிமாதி சித்திகள் கைவந்தவ ராதலாலும், இங்குச் சித்தர்கள் கணத்தினைத் துதிப்பாராயினர். எவ்வகைப் பட்ட அரிய செயல்களையும் எளிதாக முடிக்க வல்லார் எழுந்தருளி வந்து அருள்புரிய வேண்டுமென்பது கருத்து. 'குணமேரு' என்பதனைக் "குண மென்னுங் குன்றேறி நின்றார்" என்னுந் திருக்குறளால் காண்க. துருவ மென்பது அசையா நிலை.

துருவமண்டலமாவது:—ஐம்பெரும் பூதங்களும் அன்னமயத்திற் பொருந்தும்; அந்த அன்னமயமும் மழையி லுண்டாம்; அம் மழைக்குக் காரணமாகிய சூரியன் முதலாகிய கிரணங்களும் நட்சத்திரங்களும் வாயுவி னாற் பிணிக்கப்பட்டு நீங்காமற் சுழன்றுகொண் டிருக்கும்படி செய்யு மேரு மலையி னுச்சியிலுள்ள வொரு சோதி சக்கரம்.

துருவன் என்பவன் சுவாயம்பு மனுவின் புத்திரனாகிய உத்தான பாத னுடைய மகன். இவன் தன் தந்தை மடிமீதேறித் தன் சுருதி யென்னும் சிற்றன்னையின் மடிமீதேற, அவள் 'என் வயிற்றிற் பிறக்கும் பாக்கியம் பெறாது, என் மாற்றாளாகிய சுநீதி மகனாயினை' என்று சொல்லக் கேட்டுப் பொறாது, தன் தாயிடஞ் சென்று சொல்லி, "தவஞ் செய்தற்குச் செல்லு கின்றேன்" என்று விடைபெற்றுப் போய்த் தவமியற்றி, விண்டு மூர்த்தி யின் கட்டளைப்படி காசிமா நகரத்தினை யடைந்து வைத்தியநாத லிங்கத் தின் சமீபத்தில் ஓர் சிவலிங்கக் குறியைப் பிரதிஷ்டை செய்து ஷை மண்ட லத்தினை யடைந்ததனால் துருவமண்டல மெனப் பெயராயிற்று. இவற்றின் விரிவைக் காசிகாண்டத்திற் காண்க.

'சக்ரதரன்' எனப் பொதுபடக் கூறினும் 'துருவம் அளவளாவி' என்றதனால் திரிவிக்கிரமனை உணர்த்தி நின்றது. 'ஆசமனம்' என்பது வலக்கையில் கோகன்ன (பசுவின் காது) முத்திரை கொண்டு ஒருளுந் தமிழுமளவு நீரெடுத்து மும்முறை குடிக்குநீர். இதனை 'முக்குடிநீர்' என் பர். எழுகடல் - உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பனவாம். ஐயிராவதம் - பாற்கடலில் அமுதொடு பிறந்த வெள்ளை யானை; இது அட்ட திக்கயங்களி லொன்றாய்க் கீழ்த்திசைக் குரி யது; தேவேந்திரன் வாகனமுமாம். அட்டகுல வெற்பு - கைலை, இமை யம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பன வாம். சித்திகளென்றது - அணிமா முதலிய எட்டு சித்திகளையும். (1)

பாட்டளி துதைந்துவளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர் ;
பத்மநிதி சங்கநிதி யிருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர் ; பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் ; கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர் ;
ஓட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்றாக
வொளிவிடும் பொன்னாக்குவீர் ;
உரகனு மிளைப்பாற யோகதண் டத்திலே
யுலகுசுமை யாகவருளான்
மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே !

(இ - ள்) பாட்டு அளி துதைந்து வளர் - இசைப்பாட்டை யுடைய வண்டுகள் நெருங்கி வளர்கின்ற, கற்பக நல் நீழலை - கற்பக நல் நிழலை, பாரின் இடை வரவழைப்பீர் - உலகத்தில் வரும்படி செய்வீர்கள் ; பத்மநிதி சங்கநிதி - பத்மநிதியையும் சங்கநிதியையும், இரு பாரிசத்திலும் - இரண்டு பக்கத்திலும், பணி செய்யும் தொழிலாளர்போல் - வேலை செய்கின்ற அடிமை யாட்கள்போல, கேட்டது கொடுத்துவர - கேட்ட வஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டு வருவதற்காக, நிற்க வைப்பீர் - நிற்கும்படி செய்வீர்கள் ; பிச்சை கேட்டு பிழைப்போரையும் - பிச்சை கேட்டுண்டு உயிர் வாழ்வோரையும், கிரீடபதி ஆக்குவீர் - முடிமன்னராகச் செய்வீர்கள் ; கற்பாந்தவெள்ளம் - கற்பமுடிவில் உண்டாகிற பிரவாகத்தினை, ஒரு கேணியிடை குறுக வைப்பீர் - ஒரு கிணற்றினிடத்துச் சுருக்கி நிற்க வைப்பீர்கள் ; ஓட்டினை எடுத்து - மட்கலஞ் சிதைந்த ஓட்டினை எடுத்து, ஆயிரத்தெட்டு மாற்றாக ஒளிவிடும் - ஆயிரத்தெட்டு மாற்றுள்ளதாகப் பிரகாசிக்கின்ற, பொன் ஆக்குவீர் - சுவர்ணம் ஆக்குவீர் ; உரகனும் இளைப்பாற - ஆதிசேஷனும் இளைப்பாறும்படி, உலகு - உலகத்தினை, யோக தண்டத்திலே சுமையாக - யோக தண்டத்தில் சுமையாக நிற்க, அருளால் மீட்டிடவும் வல்ல நீர் - கிருபையினால் மீட்டிடவும் வல்லவராகிய நீங்கள், என்மனக் கல்லை - என் மனமாகிய கற்பாறையை, அனல் மெழுகு ஆக்கி வைப்பது அரிதோ - நெருப்பிலிடு மெழுகுபோல் உருகும்படி செய்து வைப்பதாகிய இது உங்களுக்கு அரிதாமோ !, வேதாந்த—, என்க.

(வி - ரை) கற்பக நிழலைப் பாரினிடை வரவழைத்தல் முதலிய செய்தற்கரிய செயல்களைச் செய்ய வல்ல வுங்களுக்கு என் மனங் குழையும்படி

செய்தல் அருமையோ என்பதாம். பொன்னுலகத்தில் இந்திர னனுபவிக்கின்ற நவநிதிகளு ளிரண்டு சங்கநிதி பதுமநிதி யென்பன. சங்கநிதி - சங்கி னுருவாய்க் கிடக்கும் பொன். பதுமநிதி - தாமரை யுருவாய்க் கிடக்கும் பொன். இவை வேண்டியவற்றைக் கொடுக்கவல்லன. கேணி - இசைச் சொல்; இது சிறகுளம். உரகன் - உரத்தால் நகருபவன்; ஆதிசேட னெனும் பாம்பு. உரம் - மார்பு. (2)

பாரொடுநன் னீராதி யொன்றொடொன் றாகவே
பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர்; கற்பாந்த வெள்ளம்
பரந்திடி னதற்குமீதே
நீரிலுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர்; விகற்பமாகி
நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர்; பிரமாதிமுடிவில்விடை
யூர்தியரு ளாலுலவுவீர்;
உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
றுலாவினற் றாரணையினால்
மேருவென வசையாம னிற்கவல் லீர்; உமது
மேதக்க சித்தியெளிதோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) பாரொடு - நிலத்தோடு, நல் நீர் ஆதி - நல்லநீர் முதலியவைகளும், ஒன்றொடு ஒன்றாகவே - ஒன்றோ டொன்றாக, பற்றி - தொடர்ந்து, லயம் ஆம்போதினில் - ஒடுங்குகிறகாலத்தில், பரவெளியில் - பரமாகாயத்தில், மருவுவீர் - பொருந்தி யிருப்பீர்கள்; கற்பாந்த வெள்ளம் - யுகாந்த காலப் பிரளயம், பரந்திடின் - பரவினால், அதற்கு மீது - அதற்குமேல்; நீரில் உறை - நீரில்வாசம் பண்ணுகிற, வண்டு ஆய் துவண்டு - வண்டுபோலச் சுழன்று, சிவயோகநிலை நிற்பீர் - சிவயோக நிலையில் நிற்பீர்கள்; நெடிய - பெரிதான, முகில் எழும் - மேகங்கள் எழும், விகற்பமாகி - வேறுபட்டு, பரந்து - பரவி, வருஷிக்கில் - பெய்தால், நிலவு - சந்திரிகையையுடைய, மதிமண்டலமதே - சந்திர மண்டலமே, ஊர் என விளங்குவீர் - இடமாகக் கொண்டு பிரகாசிப்பீர்கள்; பிரமாதி முடிவில் - பிரமன் முதலானோருடைய முடிவுகாலத்தில், விடை ஊர்தி அருளால் - இடபவாகனனாகிய சிவபெருமானது கருணையினால், உலவுவீர் - சஞ்சரிப்பீர்கள்; உலகங்கள் - உலகங்க ளெல்லாம், கீழ்மேல் ஆக - கீழ்மேலாகும்படி, பெருங்காற்று உலாவின் - பிரசண்டமாருதம் வீசினால், நல்ல தாரணையினால் - நல்ல தாரணை யோகத்தினால், மேரு என - மேருமலைபோல, அசையாமல் -

சலிக்காமல், நிற்க வல்லீர் - நிற்க வல்லீர்கள், உமது - உம்முடைய, மேதக்க - மேன்மை பொருந்திய, சித்தி - சித்தியானது, எளிதோ-சொல்லு தற் கெளிதாமோ?, வேதாந்த—, என்க.

(வி - ரை) ஆகாயத்திற் காற்றும், காற்றில் நெருப்பும், நெருப்பில் நீரும், நீரில் நிலமுமாகத் தோன்றிய பஞ்சபூதங்கள், தோன்றிய முறையே யொடுங்குமாதலால், 'ஒன்றொடொன்றாகவே பற்றிலயமாம்' என்றனர். பஞ்சதன்மாத்திரைகளிலே பஞ்சபூதங்களுந் தோன்றி அவற்றி லொடுங்கு மென்று சித்தாந்தங் கூற, ஆகாயமாதி யொன்றிலே யொன்று தோன்றி முறையே யொடுங்கு மென்ப தென்னை யெனின், ஆகாயமுதலாக ஒன் றின்பி னொன் றுண்டாங் கிரமத்தினாலும், பஞ்சீகரணத்தினாலு மிங்ஙனங் கூறியதால் விரோத மில்லை. இதனால் பூத சதுஷ்டயமே யல்லாது ஆகாய மென்ப தொன்றில்லை யென்னும் உலோகாயதனும், பௌத்தனு மறுக்கப் பட்டனர்.

'பிரமாதி' என்றதனால், பிரமனுடன் விண்டுவையும் இந்திரனையுங் கூட்டுக. 'முடிவில்' என்றது இவர்கள் மரணத்தினைக் குறித்தது. தேவாரம்: "நூறுகோடி பிரமர்க ளுங்கினார், ஆறுகோடி நாராயண ரங்ஙனே, ஏறுகங்கை மணலெண்ணி லிந்திரர், ஈறிலாதவ னீச னொருவனே." எனவும், திருவாசகம்: "மாலயனு மிந்திரனும் வாழுவதாய் மாளுவ தாஞ், சால மயல்பார்த்துத் தலை யசைப்பர்" எனவும், இலிங்கபுராணம்: "அசங்க்யாதாச்சகாலாக்யா அசங்கியாதாஃ பிதாமகஃ அரய்ச்சாப்ய சங்க் யாதா ஏக ஏவ மகேஶ்வரஃ" எனவும் வருவனவற்றாற் காண்க.

'தாரணை' என்பது அட்டாங்கயோகத் தொன்று; இது நாபி, கண்டம், இதயம், நெற்றி, கபாலம் இவற்றி லொன்றிற் சந்ததம் சிந்தை வைத்தல். திருமந்திரம்: "அறித்த வுடலையைம் பூதத்தில் வைத்துப், பொருத்த வைம்பூதஞ் சித்தாதி யிற்போந்து, தெரித்த மனாதி சத்தாதி யிற்செலத், தரித்தது தாரணை தற்பரத் தோடே." என்றதனாற் காண்க. உலகங்கள் தட்டழியுங் காலத்தும் அசையாமல் நிற்கவல்லீர் என்பதை, "வானந் துளங்கிலென் மண்கம்பமாகிலென்...ஒருவனுக் காட்பட்ட வுத்த மர்க்கே." என்ற தேவாரத்தாற் காண்க.

பிருதிவியாதி யைம்பெரும் பூதங்களும் ஒன்றிலொன்று ஒடுங்குங் காலத்துக் கற்பாந்த வெள்ளத்தின்மீது வண்டாய் உலவுதல் முதலிய சித்தி களைச் செய்யவல்ல வுமது பெருமையை யெம்மாற் சொல்ல முடியுமோ என்பதாம். (3)

எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினும் மரிதரிதுகாண் ;
இப்பிறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ
ஏதுவரு மோவறிகிலேன் ;

கண்ணக னிலத்துநா னுள்ளபொழு தேயருட்
 ககனவட் டத்தினின் று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
 கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மை; இந் நிலைபதியு மட்டுமே
 பதியா யிருந்ததேகப்
பரிவுகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
 பண்ணவித னருளினாலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
 வேண்டுவே னுமதடிமைநான்;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) எண் அரிய - எண்ணுதற்கரிய, பிறவிதனில் - பிறவிகளுள், மானிடப்பிறவி - மனிதப் பிறப்பு, யாதினும் - எல்லாப் பிறவிகளினும், அரிது அரிது - மிகவும் அரியது; இ பிறவி - இந்தச் சன்மம், தப்பினால் - தவறினால், எ பிறவி - எந்தச் சன்மம், வாய்க்குமோ - கிடைக்குமோ?, ஏது வருமோ - என்ன அனர்த்தங்கள் உண்டாகுமோ?, அறிகிலேன் - தெரிகிலேன்; (ஆதலால்) கண்ணகல் நிலத்து - இடமகன்ற பூமியில், நான் உள்ளபொழுதே - நான் இருக்கும்பொழுதே, அருள் ககனவட்டத்தில் நின்று - திருவருளாகிய ஆகாயமண்டலத்தில் நின்றும், காலூன்றி நின்று ஆனந்தம் பொழி - நிலைத்து நின்று இன்ப மழையைப் பொழியாநின்ற, முகிலொடு - மேகத்துடன், கலந்து - சேர்ந்து, மதி அவசம் உற பண்ணுவது நன்மை - என் அறிவானது பரவசப்படும்படி செய்வது நன்மையாகும்; இந் நிலை பதியும் மட்டும் - இந் நிலையில் அழுந்துகிற வரைக்கும், பதியாய் இருந்த - எனக்கு இடமாயிருந்த, தேகப்பவுரி குலையாமல் - தேகமாகிய பவுரிக்கூத்துக் கலையாமல், கௌரி - கௌரியாகிய, குண்டலி ஆயி - குண்டலசத்தி யென்கிற, பண்ணவிதன் அருளினாலே - தேவியினது கிருபையினால், விண் நிலவும் மதி அமுதம் - சிதாகாசத்தில் நிலைபெற்றிருக்கின்ற சந்திரனிடத்திலுள்ள அமிர்தமானது, ஒழியாது பொழிய - இடையறாது பெய்ய, உமது அடிமை நான் வேண்டுவேன் - உமதடிமையாகிய நான் விரும்புவேன்; வேதாந்த—, என்க.

(வி - ரை) கீழ்ப்போன அனந்த சனனங்களில் செய்திராநின்ற மேலான தபோபலத்தினால் அரிதாகிய மானிட தேகங் கிடைப்பதாகலின்; 'எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதா னியாதினும் மரிதரிதுகாண்' என்றனர். திருமந்திரம்: "பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற் கரிய பிரானடி சேராப், பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம், பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே." எனவும், சிவஞானசித்தியார்: "அண்டசஞ் சுவேத சங்க ளுற்பீசஞ் சராயு சத்தோ, டெண்டரு நாலெண் பத்து

நான்குநா ருயி ரத்தா, லுண்டெபல் யோனி தோறு மொழித்துமா றடத்து திரத்தல், கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்." எனவும் வருவனவற்றாற் காண்க. அநித்த பிறவி யின்னதென நிச்சயிக்கக் கூடாமை பற்றி, 'இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ ஏதுவரு மோவறிகி லேன்' என்றனர். இத் தேக முள்ளபோதே இரண்டறக் கலக்கும் அத்த வித முத்தி யடையவேண்டு மென்பார், 'கண்ணக னிலத்துநா னுள்ள பொழு தேயருட் ககனவட் டத்திநின்று, காலூன்றி நின்று பொழி யானந்த முகிலொடு கலந்துமதி யவசமுறவே பண்ணுவது நன்மை' என்றனர். சிவானுபூதி யடைவதற்கு முன் தேகம் நழுவிவிடின் அது பெறுதற் கரிதாகலின், 'இந் நிலை பதியுமட்டுமே பதியா யிருந்ததேகப், பவுரிகுலையாமலே கவுரிகுண் டலியாயி பண்ணவித னருளினாலே, விண்ணிலவு மதி யமுத மொழியாது பொழியவே வேண்டுவே னுமதடிமைநான்.' என்றனர் பவுரி - கூத்தின் விகற்பம். கௌரி - கிரியின் புத்திரி. குண்டலி சத்தி - மூலாதாரத்தில் பாம்புருவமாய் இருப்பதாகிய ஓர் சத்தி. (4)

பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்;
பொழுதுபோக் கேதென்னிலோ
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்,
புசித்தபின் கண்ணுறங்கல்,
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே;
கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ? அதையறிகிலேன்;
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினொடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே! குணசாந்தரே!
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) பொய் திகழும் - பொய்யே மிகுந்து விளங்குகின்ற, உலக நடை - உலக வொழுக்கத்தினைப்பற்றி, என் சொல்கேன் என் சொல்கேன் - என்ன சொல்லுவேன் என்ன சொல்லுவேன், (ஆயினும் ஒருவிதமாகச் சொல்லுகின்றேன்); பொழுது போக்கு ஏது என்னிலோ - (இவ் வுலகத்தார்) காலங்கழித்தல் எப்படி யென்றாலோ, பொய் உடல் நிமித்தம் புசிப்புக்கு அலைந்திடல் - பொய்யுடம்பினைப் பாதுகாத்தற் பொருட்டு உணவுக்காகத் திரிதல்; புசித்தபின் கண்ணுறங்கல் - உண்டபின் நித்திரை போதல்; (ஆகிய இவைகளாலேயே) இது கைதவம் அலாமல் - இது

பொய்யொழுக்கமே யன்றி, செய் தவம் அல்லவே - செய்தற் குரித்தாம் (உயிர்க்குறுதி தருவதாகிய) தவமல்லவே; கண்கெட்ட பேர்க்கும் - குருடருக்கும், வெளியாய்க் கண்டது இது - வெளிப்படையாய்க் காணப்பட்டது இவ்வொழுக்கம்; இதை கண்டித்து விண்டு நிற்றல் எக்காலமோ? - இக் குருட்டொழுக்கத்தைக் கண்டித்துவிட்டு நிற்றல் எந்தக்காலமோ?, அதை அறிகிலேன் - அதனை யுணருமாற்ற லில்லேன்; மைதிகழும் முகிலினம் குடை நிழற்றிட - கருமை விளங்குகின்ற மேகக் கூட்டம் குடைபோல் நிழலைச் செய்ய, அட்ட வரையினொடு - எட்டு மலைகளோடு, செம்பொன் மேரு மால் வரையின் முதுகூடும் - செம்பொன் மேருவாகிய பெரிய மலையின் புறத்தும், யோகதண்டக்கோல் வரைந்து - யோகதண்டாகிய கோலை யெழுதி, சயவிருது காட்டி - வெற்றி விருதாகக் காட்டி, மெய்திகழும் - உண்மை விளங்குகின்ற, அஷ்டாங்க யோக பூமிக்குள் வளர் - அஷ்டாங்கங்களை யுடைய யோக நிலத்தில் விருத்தி யடையாநின்ற, வேந்தரே! - அரசரே!, குணசாந்தரே! - சாந்தகுண சீலரே!, வேதாந்த—, என்க.

(வி - ரை) 'என் சொல்கேன் என் சொல்கேன்' என்ற அடுக்கு இரக்கப் பொருளது; அதாவது, பிராகிருதர் நிலையினைக் கண்டு பரிதபித்துக் கூறியதாகும். உடலெடுத்ததனா லடையவேண்டிய வுண்மையினை விசாரிப்பதிற் சிறிதுங் கவலை வையாது, நிலையில்லாத உடலைக் காப்பாற்ற வேண்டி யதன்பொருட்டு நாடோறும் அலைவதும், ஓய்ந்த காலத்திலே நன்ருகத் தூங்குவதுமான தொழிலை மேற்கொண் டொழுகுதல் சிறிதும் பிரயோசனமின்றி அப்பிரயோசனமாகவே முடியுமென்பார், 'பொய்புடனிமித்தம் புசிப்புக் கலைந்திடல் புசித்தபின் கண்ணுறங்கல், கைதவ மலாமலிது செய்தவம தல்லவே' என்றனர். இங்ஙன மெடுத்துக் காட்டிய வுண்மை யாவருக்கும் பிரத்தியட்சமென்பார், 'கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க் கண்ட திது' என்றனர். இத்தகைய புன்மார்க்கத்தினை யறவே கைவிடுங் காலம் எப்போது வருமோ வென்பார், 'விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்காலமோ? அதை யறிகிலேன்' என்றனர்.

அஷ்டாங்க யோகத்தினைப் பூமியாக வுருவகஞ் செய்ததற் கேற்ப இவர்கள் அவ் வரசாண்டுவரும் வேந்தரென்றமையான், அரசன் வெண்கொற்றக் குடைநிழலி லிருக்கவேண்டு மாகலின், 'மைதிகழு முகிலினம் குடைநிழற்றிட' எனவும், அவன் ஆணையை மேருவிற் பொறித்து விருது மேற்கொண் டிருக்கு மாகலின், 'அட்ட வரையினொடு செம்பொன்மேரு மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல் வரைந்துசய விருது காட்டி' எனவுங் கூறினர்.

அஷ்டாங்க யோகமாவன:—இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்பனவாம். திருமந்திரம்: "இயம நியமமே யெண்ணிலா வாதன, நயமுறு பிராணு யாமநண் பிரத்தி

*யாகாரம், சயமிகு தாரணை தியானஞ் சமாதி, பயமுறு மட்டாங்க மாவது மாமே.*" என்றதனுற் காண்க. இவற்றுள், **இயமமாவது** - *கொல்லாமை, மெய்ம்மை கூறல், கள்ளாமை, பிறர்பொரு ளிச்சியாமை, இந்திரிய மடக்கல்.* **நியமமாவது** - *தவம், தூய்மை, தத்துவ நூலோர்தல், மன மூவந் திருத்தல், தெய்வம் வழிபடல்.* **ஆதனமாவது** - *சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம். அவையாவன :—* **சுவத்திகம்** - *தொடைக்கு முழங்காற்கு நடுவே யிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்தல்.* **கோமுகம்** - *சகனப் பக்கத்தி லிருகாற் பரட்டையு மாறவைத்து இருகாற் பெருவிரலைக் கைப்பிடித் திருத்தல்.* **பதுமம்**- *இரு தொடைமேலும் இரண்டுள்ளங் காலையு மாறித் தோன்றவைத்தல்.* **வீரம்** - *வலத்தொடையி லிடக்காற் பரட்டைச் சேர்த்து இறுமாப்புற்றிருத்தல்.* **கேசரி** - *பீசத்தின் கீழ்ச் சீவனியிடத்துப் பரட்டை வைத்திட முழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல்.* **பத்திரம்** - *பீசத்தின் கீழ்ச் சீவனியிடத் திருகாற்பரட்டையும் வைத்து அவ் விருபதத்தையு மிருகையா லிறுக்கப்பிடித் தசையாதிருத்தல்.* **முத்தம்** - *இடக்காற் பரட்டால் சீவனியை யழுத்தி வடக்காற் பரட்டாற் பரட்டின் கீழூந்த விருத்தல்.* **மயூரம்** - *முழங்கை யிரண்டும் உந்திப்புறத்தி லழுந்தப் புவியிற் கையூன்றிக் காலீட்டித் தலை நிமிர்ந்திருத்தல்.* **சுகம்** - *சுகமுந் திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ அவ்வாறிருத்தல்.* **பிராணயாமமாவது** - *பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தல்.* **பிரத்தியாகாரமாவது** - *உபாதியை நீக்கி யுண்ணோக்கல்.* **தாரணையாவது** - *கண்டம் இதயம் நெற்றி கபாலம் நாபி இவற்றி லொன்றிற் சந்ததம் சிந்தை வைத்தல்.* **தியான மாவது** - *ஐம்புலனடக்கி யோகஞ் சேர்தல்.* **சமாதியாவது** - *இந்திரிய முதலிய தத்துவ சேட்டைகட் கேதுவா யாக்கையுணின் றவற்றோடு கூடினும் அவற்றிற் பற்றின்றி யிருக்கும் ஆன்மாவாகிய தன்னைத் தான் காண்டல்.*

*கெசதுரக முதலான சதுரங்க மனமாதி*
*கேள்வியி னிசைந்துநிற்பக்,*
*கெடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்*
*கிள்ளாக்குச் செல்ல, மிக்க*
*தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்*
*சிங்காச ஞதிபர்களாய்த்*
*திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை*
*திகழ்ந்திட, வசந்தகாலம்*
*இசையமலர் மீதுறை மணம்போல வானந்த*
*மிதயமேற் கொள்ளும்வண்ணம்*
*என்றைக்கு மழியாத சிவராச யோகரா*
*யிந்த்ராதி தேவர்களெலாம்*

விஜயஜய ஜயவென்ன வாசிசொல வேகொலு
விருக்குநும் பெருமையெளிதோ ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே !

(இ - ள்) கெசதுரக முதலான - யானை குதிரை முதலான, சதுரங்கம் - சதுரங்கங்களாக, மனம் ஆதி - மனமுதலிய அந்தக்கரண நான்கும், கேள்வியின் இசைந்து நிற்ப - பணிவிடைக்கு இணங்கி நிற்கவும்; கெடி கொண்ட தலம் ஆறும் - கீர்த்தி பொருந்திய ஆறு ஆதாரங்களினும், மும் மண்டலத்திலும்-மூன்று மண்டலங்களிலும், கிள்ளாக்கு செல்ல - அதிகாரம் செல்லவும்; மிக்க தெசவிதமாய் நின்ற நாதங்கள் ஓலிட - மேலாகிய பத்து வகைப்பட்டு நின்ற நாதங்கள் முழங்கவும், சிங்காசனாதிபர்களாய் - சிங்காசனாதிபதிகளாய், திக்கு திகந்தமும் - திக்குகளிலும் திக்குகளின் முடிவு வரையிலும், பூரண மதிக்குடை திகழ்ந்திட - பூர்ண சந்திரனாகிய குடையானது பிரகாசிக்கவும்; வசந்தகாலம் இசைய - வசந்தகாலம் வர, மலர் மீது உறை மணம்போல - மலரிலிருக்கிற பரிமளம் போல, ஆனந்தம் இதய மேல் கொள்ளும் வண்ணம் - இன்பமானது இதயத்தில் குடிகொள்ளும் வகை, என்றைக்கும் அழியாத - எப்போதுங் கெடாத, சிவராசயோகராய் - சிவராஜயோகத்தையுடையராகி, இந்த்ராதிதேவர்கள் எல்லாம் - இந்திரன் முதலான தேவர்களெல்லாம், விஜய ஜயஜய என்ன ஆசி சொல்ல - விஜய ஜயஜயவென்று மங்களமொழி கூறவும், கொலு இருக்கும் - கொலு வீற்றிருக்கின்ற, நும் பெருமை எளிதோ - உமது பெருமையானது சொல்லுதற்கு எளிதாகுமோ; வேதாந்த—, என்க.

(வி - ரை) இராஜ யோகத்திற் பிறந்த அரசர்களுக்குச் சமானமாகச் சிவராஜ யோகியரையும் கூறுவான் றொடங்கி, அவர்கட்கு யானை முதலிய சதுரங்கங்களும் இவர்கட்கு மனமுதலிய சதுரங்கங்களும், அவர்கட்குக் கிள்ளாக்கு சுவர்க்க முதலிய மூன்றுலகங்களிலும், இவர்கட்குக் கிள்ளாக்கு மும்மண்டலங்களிலும், அவர்கட்கு வாத்தியம் காகள முதலான பத்தும், இவர்கட்கு வாத்தியம் தசவித நாதங்களும், அவர்கட்குத் திசையின் முடிவு வரையில் பூரணசந்திரன் போன்ற வெண்கொற்றக் குடையும், இவர்கட்கு மதி மண்டலமே வெண்கொற்றக் குடையுமாக அமைந்ததென்றும், இருவர்கட்கும் இந்திராதியர் ஆசிகூற கொலுவீற்றிருப்ப ரென்றுங் கூறினர்.

மனமாதிகள்—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. மும்மண்டலங்கள் - அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் என்பன. சுவானுபவமாலை: "மண்டலங்கள் மூன்று வகுப்பார்கள் மற்றவற்றை, விண்டுரைப்போ 'மன்பாய் வினவிடுக - மண்டங்கி, மண்டலமாதித்தனுயர் மண்டலமவெண் சந்திரன்றன், மண்டலமா மென்றே மல்."

என்றதனுற் காண்க. அக்கினி மண்டலம் மூலமுதல் நாபிவரையில், சூரிய மண்டலம் நாபிமுதல் கண்டம் வரையில், சந்திர மண்டலம் கண்டமுதல் புருவம் வரையிலாம். தசவித நாதங்கள் - சிணிநாதம், சிணிசிணீநாதம், கண்டநாதம், சங்கநாதம், வீணநாதம், தாளநாதம், முரளீநாதம், பேரீ நாதம், மிருதங்கநாதம், மேகநாதம் என்பன. ஆதாரங்கள் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை; இவற்றிற்கு முறையே இடம்: குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி.

'என்றைக்கு மழியாத சிவராச யோகம்' எனவே மற்றஃஅடயோக முதலிய நிலையற்றதென லாயிற்று. சிவராச யோகமாவது - உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கி, சுழுமுன மார்க்கத்திலே பிராண வாயுவை நிறுத்தி, விஷயங்களின் வழி மனதைச் செல்லவொட்டாமல் திருப்பி, ஒரு குறிப்பிலே நிறுத்தி, ஆறுதாரங்களின் அந்தர்மாதிருகாக்கிரமத்தை அறிந்து, அவ்வவ் வாதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து, அவ் வாறுதாரங்களினும் அசபாசத்தி சிவான்மிகையாய் நிற்கும் முறைமையைப் பார்த்து, மூலதாரந் தொடங்கி விநாயகர் முதலிய தேவதைகளைப் பொருந்தி, அபிமுகம் பண்ணிக்கொண்டு ஆறுதாரத்துக்கும் மேலாகிய பிரமரந்திரமளவும் அசபையுடன் சென்றணைந்து, அந்தப் பிரமரந்திரத்திலே அதோமுகமாய்ச் சகஸ்த்ரதளமா யிருக்கிற தாமரைமுகையைச் சோதி சோதிபதோச்சாரணத்தாலே உதிக்குஞ் சிவார்க்கனலே அலரச்செய்து, அந்தத் தாமரைப்பூவின் கேசாரக்கிரத்திலே உள்ள சந்திர மண்டலத்தை ஆகுஞ்சனஞ் செய்தலினலே மூலாக்கினியை அக்கினி பீசாக்கர உச்சாரத்தினலே எழுப்பி, நாடி சக்கரத்தைப் பேதித்து, அவ் வக்கினியினலே சந்திரமண்டலத்தை இளகப்பண்ணி, அந்த அமிர்தத்தைச் சர்வ நாடிவழியாக நிரப்பி, அவ்விடத்தி லுண்டாகிய சுகோதயத்தில் அந்தமயமான ஞானமிர்தாவத்தையை அடைந்து நின்று, சோமசூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்க ளெல்லாஞ் சூரியோதயத்திலே நட்சத்திராதிப் பிரகாசங்கள் அடங்கினற்போலத் தன்னிடத் தடங்கச் சர்வதோமுகமாய்ச் சுவய பரப்பிரகாசமாய் இருக்கின்ற பூரணப் பிரகாசத்தைப் பாவித்திருப்பதுவேயாம்.

கிள்ளாக்கு - கிள்ளிலை. சிறு பிள்ளைகள் தம்முடைய வீடுகளில் இரவிற் படித்தார்க ளென்பதற் கடையாளமாகத் தாய் தந்தையர் உபாத்தியாயர்கட்குக் கிள்ளிக் கொடுத்தனுப்பும் வெற்றிலை; இது பூர்வ வழக்கம். ஆக்கு - இலை. கிள்ளாக்கு என்னுஞ் சொல் இக் காலத்தில் அதிகாரமெனும் பொருளைப் பயக்கும். (6)

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ ?

ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் ; திருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலேன் ! இற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக னாயினேன் ; நாயினுங் கடையான
புன்மையே னின்னமின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும் ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே !

(இ - ள்) ஆணிலே பெண்ணிலே - ஆண் பெண் இரண்டனுள்ளும், என்போல ஒரு பேதை - என்னைப்போல ஒரு அறிவில்லாதவன், அகிலத்தின் மிசை உள்ளதோ - உலகத்திலுண்டோ?, ஆடிய கறங்குபோல் - சுழலாநின்ற காற்றாடிபோல, ஓடி உழல் சிந்தையை - (விஷயங்களின் மேல்) விரைந்து (அவற்றினின்றும் மீளமாட்டாது அவற்றின்கண்ணே) சுழலாநின்ற மனத்தை, அடக்கி - (அவ்வாறு செல்லாது) தடுத்து, திருவருளை ஒரு கணமேனும் யான் காணிலேன் - திருவருளை ஒரு கணப்பொழுதாயினும் யான் கண்டிலேன் ; அல்லாது - அன்றி, மௌனியாய் - மௌன நிலையை யுடையேனாகி, கண் மூடி - கண்ணிதழ்களைக் குவித்து, ஓடு மூச்சைக் கட்டி - ஓடும் இயற்கையா யுள்ள பிராணவாயுவைத் தடுத்து, கலாமதியை முட்ட - கலைகள் நிறைந்த சந்திரனைத் தொடும்படி, மூல வெங்கனலினை எழுப்ப - மூலாக்கினியை யெழுப்புதற்குரிய, நினைவும் பூணிலேன் - கருத்துங் கொண்டிலேன் ; இற்றைநாள் - இத்தனை நாள் வரைக்கும், கற்றதும் கேட்டதும் - நான் கற்ற கல்வியையும் கேட்ட கேள்வியையும், போக்கிலே போகவிட்டு - அவை செல்லும் வழியில் செல்லவிட்டு, பொய் உலகன் ஆயினேன் - பொய்யுலக வாழ்க்கையன் ஆயினேன் ; நாயினும் கடையான புன்மையேன் - நாயினும் இழிந்த அற்பத் தன்மையை யுடையவனாகிய நான், இன்னம் இன்னம் - மேன்மேலும், வீணிலே அலையாமல் - வீண் காரியங்களில் பிரவேசித்துத் திரியாமல், மலை இலக்கு ஆக - மலைக்குறி போல, நீர் - நீங்கள், வெளிப்பட தோற்றல் வேண்டும் - பகிரங்கமாகக் காட்சி கொடுத்தருளவேண்டும் ; வேதாந்த—, என்க.

(வி - ரை) மனிதப் பிறப்பினை யெடுத்ததனா லடையவேண்டிய முக்கியமாகிய பிரயோசனம், திருவருளை யனுபவித்தல். அது கிட்டாத வழி அத் திருவருளை யடைதற் கேதுவாகிய யோகத்தினையடைதல். இவ்

விரண்டி லொன்றேனுந் தானடையாது, கற்றல் கேட்டலா லுண்டாகிய அறிவை மறந்து உலகபோகத்தி லழுந்தி வாழ்ந்தே னென்பார் 'ஆணிலே பெண்ணிலே........பொய்புலக ஞயினேன்' என்றனர்.

அறிவினுக்குத் தாரகமா யிருப்பது திருவரு ளாகையால் அத்தகைய திருவருளினைத் தான் தரிசித்திலே னென்பார், 'காணிலேன் றிருவருளை' என்றனர். துகளறுபோதம்: "என்னறிவை நீயே யுணர்வையே யாமாகி, விங்கெடுநாட் பாசத் திசையாயே - யுன்னறிவை, நீங்கா வறிவாகி நீரு மிரத மும்போ லாங்கா ணரனு ரருள்." என்றதனாற் காண்க. 'மூச்சைகட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங் கனலினை யெழுப்ப நினைவும் பூணிலேன்' என்றதற்கு, சின்மயானந்தகுரு 11-வது செய்யுளி னுரையில் விரித்தாம். கற்பனவும் கேட்பனவும் ஆசிரியர் காட்டிய இன்ப நிட்டை பெருத விடத்துப் பயன்படாதாகலின், 'கற்றதும் கேட்டதும் போக்கிலே போகவிட்டு' என்றனர். இவ்வுண்மையை இவ்வாசிரியரே, "கற்றதும் கேட்டதுந் தானே யேதுக்காகக், கடபடமென் றுருட்டுதற்கோ" என்று கூறுதலினு லறிக. (7)

கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவு மடியெடுத்துக்
கடவுளர்க டந்ததல; அழுதழுது பேய்போற்
கருத்திலெழு கின்றதெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேலிட்
டிருத்தலா லித்தமிழையே
சொன்னவனி யர்வனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்தீர்
சொல்லுமென அவர்நீங்கள் சொன்னவவை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்தனெனவே
மின்னல்பெற வேசொல்ல வச்சொல்கேட் டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) கன்னல் அமுது எனவும் - கருப்பஞ் சாற்றின் சுவை போலவும், முக்கனி எனவும் - முக்கனிகளின் சுவை போலவும், வாய் ஊறு கண்டு எனவும் - நா ஊறுதற்குக் காரணமான கற்கண்டு போலவும், அடி - (சுவையுள்ள) அடியானது, கடவுளர்கள் எடுத்துத் தந்தது அல்ல - கடவுளால் எடுத்துக் கொடுக்கப்பட்டதல்ல; பேய்போல அழுது அழுது - பேய் போல பலகால் அழுது, கருத்தில் எழுகின்ற தெல்லாம் - என் மனதில் உண்டாவதாகிய எல்லாம், என்னது அறியாமை அறிவு என்னும் - எனது

உணர்வின்மை உணர்வு என்கிற, இருபகுதியால் - இரண்டு பகுப்பினுல், ஈட்டு தமிழ் - சொல்லிய தமிழ் மாலையாகும், என் தமிழினுக்கு - அப்படி என்ருற் சொல்லப்பட்ட தமிழ் மாலைக்கு, ஆராமை மேலிட்டிருத்தலால் - பேரன்பு அதிகப்பட்டிருத்தலால், உலகம் இன்னல் பகராது - உலகமானது குற்றங் கூருது ; ( அதுநிற்க ) முத்தி சித்திகள் எலாம் தோய்ந்த - முத்தி சித்திகளெலா மமைந்த, நெறியே - மார்க்கத்தையே, படித்தீர் ! - படித்தவர்களே !, இத் தமிழையே - இத் தமிழ்மாலையையே, சொன்னவன் அவன் யாவன் - சொல்லியவனுகிய அவன் எவனென்று, அவர் - அவ்வுலகத்தார், சொல்லும் என - சொல்லுங்களென்று வினுவ, நீங்கள் சொன்ன அவையில் - நீங்கள் மறுமொழியாகச் சொன்ன அவ் வார்த்தைகளினுல், சிறிது தோய்ந்த குண சாந்தன் என - சாந்தகுணம் சிறிது அமைந்தவன் என்று, மின்னல் பெற சொல்ல - பிரகாசம் உண்டாகப் புகழ, அடிமை - அடியேன், அ சொல் கேட்டு - அந்த வார்த்தையைக் கேட்டு, மனம் விகசிப்பது - மனமகிழ்ச்சி யடைவது, எந்தநாளோ - எந்தக் காலமோ ?, வேதாந்த—, என்க.

( வி - ரை ) திருவெண்ணெய்நல்லூர்ப் பொல்லாப்பிள்ளையார் மெய்கண்ட தேவருக்குச் சிவஞானபோத மியற்றும்படி "கல்லா னிழன்மலை" என்றும், அருணை அறுமுகக்கடவுள் அருணகிரி நாதருக்குத் திருப்புகழ் இயற்றும்படி "முத்தைத்தரு பத்தித்திருநகை யத்திக்கிறை சத்திச் சரவணன் முத்திக்கொரு வித்துக்கொருபர னெனவோது" என்றும் காஞ்சிக் குமரகோட்டத்து அறுமுகப் பெருமான் கச்சியப்ப சிவாசாரியருக்குக் கந்தபுராண மியற்றும்படி "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்றும், கனகசபேசன் சேக்கிழார் நாயனுருக்குத் திருத்தொண்டர் புராண மியற்றும்படி, "உலகெ லாமுணர்ந்தோதற் கரியவன்" என்றும், திருவாரூர்த் தியாகேசப்பெருமான் சுந்தரமூர்த்திநாயனுருக்குத் திருத்தொண்டத் தொகை யியற்றும்படி "தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்றும், அதிமதுரமான செந்தமிழ் மொழிக ளமைந்த அடிகளை யெடுத்துக் கொடுத்தாற்போல தனக்கியவில்லை யென்பார், 'கடவுளர் கடந்ததல, என்றனர்.

இருளுக்கும் ஒளிக்கும் இடமொன்ருயிருத்தல்போல, அறியாமைக்கும் அறிவினுக்கும் இடமொன்ருக வாய்க்கப்பெற்ற தான் சொன்ன தமிழென்பார், 'என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா மீட்டுதமிழ்' என்றனர். அங்ஙனமாயினும் இத் தமிழினைப் படிக்குந்தோறும் பண்டிதர்முதல் பாமரரீருகக் கண்ணீருங் கம்பலையுமாக மன முருகுகின்ருரென்பார், 'இன்னல்பகராதுலக மாராமை மேலிட்டிருத்தலால்' என்றனர்.

சித்தகணங்களே ! அழுதழுது கூறிய அடியேனுடைய தமிழ்ப்பாடலின் அருமையினை யறிந்த உலகினர் "இங்ஙனம் பாடினுன் யாவன் ?"

என உங்களை வினவ, "சிறிது சாந்தகுணமுடையவன்" என நீங்கள் சொல்லக்கேட்டு அவர்கள் மகிழ, அச்சொல்லினை அடியேன் கேட்டு மன மகிழ்வது எந்தக்காலமோ? என்பதாம். என்றதனால் ஒரு நூலினையும் அந் நூலாசிரியனையும் தக்கவர்கள் மதிக்கவேண்டு மென்பதாயிற்று. (8)

பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்,
போந்திடை யொடுக்கமுறலால்,
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்,
எற்பட விளங்குகக னத்திலிமை யாவிழி
யிசைந்துமே னோக்கமுறலால்,
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
யிதயங் களித்திடுதலால்,
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
படைத்துப்ர தாபமுறலால்,
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றொடர்நெடிய
பருமர வனங்களாரும்
வெற்பினிடை யுறைதலால் தவராஜ சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்!
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) பொற்பினொடு - அழகோடுகூடிய, கைகாலில் - கைகால்களில், வள் உகிர் படைத்தலால் - கூர்மையாகிய நகங்களைப் படைத்தலாலும்; இடைபோந்து ஒடுக்கம் உறலால் - இடையானது சுருங்கி வந்து இருத்தலாலும்; பொலிவு ஆன வெண்ணீறு பூசி - பிரகாசமுள்ள திருவெண்ணீற்றைப் பூசி, அருள்கொண்டு பூரித்த - திருவருள் பெற்று இறுமாந்த, எண் நீர்மையால் - மதிக்கத்தக்க குணத்தினாலும்; எல்பட விளங்கு ககனத்தில் - பிரகாசம் உண்டாக விளங்குகின்ற சிதாகாயத்தில், இமையா விழி இசைந்து - இமையாமல் கண்கள் பொருந்தி, மேல் நோக்கம் உறலால் - ஊர்த்துவ திருஷ்டியைப் பொருந்துதலாலும்; இரவு பகல் - இரவினும் பகலினும், இருளான - அஞ்ஞானாந்தகாரமாகிய, கனதந்தி பட நூறி - பெரிய யானையானது இறக்கும்படி அறைந்து, இதயம் களித்திடுதலால் - மனம் செருக்கடைந் திருத்தலாலும்; பற்பல விதம் கொண்ட - பற்பலவிதமான, புலி கலையின் உரிபடைத்து - புலித்தோலையும் மான் தோலையும் ஆசனங்களாகப் படைத்து, பிரதாபம் உறலால் - மனோபல வைபவத்தைப் பெற்றிருத்தலாலும்; பனிவெயில்கள் புகுதாமல் - பனி வெயில் முதலியவைகள் நுழையப் பெறாமல், நெடிய வான் தொடர் - விசாலமான ஆகாயத்தை அளாவிய, நெடிய - உயரமான, பரு மர வனங்கள் ஆரும் - பருத்த மரங்கள் அடரப்பெற்ற காடு நிறைந்த, வெற்பின்

இடை உறைதலால் - மலையினிடத்து வசித்தலாலும், தவராஜ சிங்கம்என - தவராஜ சிங்கமென்று, மிக்கோர் - மேலோர்கள், உம்மை புகழ்வர் - உம்மைக் கொண்டாடுவார்கள் ; வேதாந்த—, என்க.

(வி - ரை) இதில் தவசிகட்கும் சிங்கத்திற்கும் உவமைகூறித் தவராஜசிங்கமெனக் கூறியிருத்தலால், மேல் தவசிகட்குக் கூறியவை போலச் சிங்கத்திற்கும் கைகால்களில் கூரிய நகங்களும், ஒடுங்கிய இடையும், வெண்மை நிறமும், மேனோக்கிய கண்களும், யானைகளைக் கொல்லுதலால் களிப்பும், புலிகளையும் மான்களையுங் கொன்று அவற்றின் தோல்களைத் தன் குகையில் வைத்திருத்தலும், அடர்ந்த காட்டில் வாழுதலும் ஆகிய குணங்கள் பொருந்தி யிருத்தலைக் காண்க. மிருகங்களுக்குள் சிறந்து விளங்குவது சிங்கமானது போல, மனிதர்களுக்குள் சிறந்து விளங்குபவர் தவசிகள்.

'பொலிவான வெண்ணீறு' என்பதற்குப் 'பிரகாசமான வெண்ணீறு' என்றது என்னையோவெனின், வெண்மை நிறத்தோடுங் கூடிய விபூதியே சிறந்ததென்றும், அத்தகைய விபூதியினையே யாவருந் தரிக்கவேண்டுமென்றும், கருமை செம்மை முதலிய நிறம் வாய்ந்த விபூதியினைத் தரிக்கப்படாதென்றும், தரித்தால் கருகிய விபூதி வியாதியையும், செந்நிற விபூதி கீர்த்தி நாசத்தையும், புகைநிற விபூதி அபமிருத்துவையும், பொன்னிற விபூதி ஐசுவரிய நாசத்தையும் உண்டுபண்ணு மென்றும் ஆகமங்கள் கூறுதலினு லென்க. பெரியோராவார் விபூதியினைக் கேசாதிபாதம் வரையில் தரித்து முழுநீறு பூசிய முனிவராக விளங்குவராகலின், 'நீறு பூசி' என்றனர். யதிகளாகிய முனிவர்கள் சலஞ் சேர்த்துக் குழைத்துத் தரிக்காமல் உத்தூளனமாகப் பூசிக்கொள்ள வேண்டுவதே விதியாகலின் நீறுபூசி என்றன ரெனினு மொக்கும். ஆதித்ய புராணம்: "ஸார்வகாலேப வேஸ்த்ரீணும் யதீநாம் ஜலவர்ஜிதம்." என்றதனுற் காண்க. இங்ஙனம் பெரியோர் உத்தூளனஞ் செய்வானேனெனில், 'தேக முழுதும் விபூதி யணிந்துகொண்டிருக்கும் புருஷனைப் பின்றொடர்ந்தவன் மகா பாவியாயிருப்பினும் உடனே பரிசுத்தனுகிறுன்" என்று விதித்திருத்தவினுல் அங்ஙனமணிவாரென்க. ஸௌரசங்கிதை: "பஸ்மநரஸ் சந்நஸர்வாங்க மநுகஸ்சதிய: புமாந், ஸர்வபாதக யுக்தோபிஸஸஸ்த்யா : பூயதே நர:" என்றதனுற் காண்க. விபூதி யணிதலாலே மோட்சமாகிய திருவருள் கிட்டுமாதலின், 'பூசியே அருள் கொண்டு' என்றனர். பாரதம்: "நித்யம் வைதாரயேத்பஸ்ம மோக்ஷகாமீசவைத்விஜா:" என்றதனுற் காண்க. பூசி யருள்கொண்டு என்னுது 'பூசியே யருள்கொண்டு' எனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினமையின், பஸ்மம் ஒன்றே முக்கியமென்றும், அதனையே எத்தகையரு மணியவேண்டு மென்றும், அதனுலேயே எல்லாப் பலனு முண்டா மென்றும், அதை யணிந்தவர்கள் மும்

மூர்த்திகளையும், மூன்று அக்கினிகளையுந் தரித்தவ ராவாரென்றும் நிச்ச யிக்கப்படும்.

கூர்மபுராணம் : "அபிவாவைஷ்ணவோ மர்த்யோ அபிவாபீத ரோஜஸ: பஸ்மஸ்நாயீ பஸ்மதாரீகர் மஸ்வதிகரோதிவை, தத்பஸ்மதார ணம் முக்யம் ஸர்வஸ்யைவத்ரீ புண்ட்ரகம், ப்ரமவிஷ்ணு மஹேஸா நாம் த்ரயாக்நீநாஞ்ச தாரணம்." என்றதனாற் காண்க.

மாணவகன் வினா :—"விபூதி திரிபுண்டரம் அன்றி வேறு ஊர்த்துவ புண்டரம் நெற்றியில் தரிக்கப்படாதோ?"

விடை :—"வேதத்தில் விபூதி திரிபுண்டர மொன்றே சொல்லப்பட் டிருக்கிறது. வேறு ஊர்த்துவபுண்டரம் சொல்லப்படவில்லை. பராசர புராணம் : "ஸ்ரௌதலிங்கந் துவிஜ்ஞேயம் த்ரிபுண்ட்ரோத் தூளநாதி கம், அஸ்ரௌதந் தூர்த்வ புண்ட்ராதி நைவதிரியக் திரிபுண்ட்ரகம்." என்றதனாற் காண்க. அன்றியும், பிரமாவானவர் பிரஜாசிருஷ்டி செய்கை யிலேயே பஸ்ம மகிமையைச் சொல்லி அதை யணிந்துகொள்ள வேண்டு மென்று கருதியே நெற்றியைக் குறுக்காகச் சிருஷ்டித்தார். விருத்த மாகவும், ஊர்த்துவமாகவும் படைக்கவில்லை. அப்படி யிருந்தும் சிலர் நெற்றியில் திரிபுண்டர மணிவதில்லை. ஐயோ! இதென்ன ஆச்சரியம்! கூர்மபுராணம் : "ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சலே நாகத்ரி புண்ட்ரஸ்ய ப்ரஸஸ் ததாம், ஸஸர்ஜஸலலாடம் ஹிதிர்யங்நோர்த்வம் நவர்துலம், ததாபிமா நவா மூர்க்காநகுர்வந்தி த்ரிபுண்ட்ரகம்." என்றதனாற் காண்க."

வினா :—"நாராயணமூர்த்திக்கும் அவரை வழிபடுபவர்க்கு முரிய புண்டரமியாது?"

விடை :—"நாராயணமூர்த்தி யணிவதும் பஸ்பமே; அவரை வழி பட்ட ஆழ்வார்கள் அணிந்ததும் பஸ்மமேயாம்."

வினா :—"நாராயணமூர்த்தி பஸ்ம மணிந்துள்ளா ரென்பதற்குப் பிரமாணங்க ளுண்டா?"

விடை :—"அநேகமுண்டு. அவற்றுள் சில கூறுவாம்: பிரமாண்ட புராணம்: "ஸஹஸ்ரபேஸததம் விஷ்ணுர்பஸ்மதிக்கநூலத:, த்ரிபுண்ட் ராங்கித ஸர்வாங்கோ ஜடாமகுடமண்டித:" எனவும், காளிகாகண்டம்: "நாராயண ஸ்தபஸ்தேபே ஜடாமுண்டஸமேகலி, பஸ்மோத்தூளிதஸர் வாங்க த்ரிபுண்ட்ராங்கித மதஸ்க:" எனவும், இராமரகசியோபநிடதம் : "ராமந்த்ரிணேத்ரக்சோமார்த்ததாரிணம் ஸஹலிநம்பரம், பஸ்மோத் தூளித ஸர்வாங்கம் பர்திந: முபாஸ்மகே" எனவும், இராமாயணம் : "ஸ்வர்ண வர்ண ஜடாபாரம் ஞாக்ஷாத் ருத்ரமிவாபரம், பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் த்ருஷ்ட்வாகாம வஸங்கதா:" எனவும், உத்தராராமசரிதம் : "சூடா சம்பிதகங்க பத்ரம பீதஸ் தூணித்வயம் ப்ருஷ்டதோ, பஸ்மஸ்

தோகபவித்ரலாஞ்சித மூரோதத்தே த்வசம் ரௌரவீம்.'' எனவும், திருவாய்மொழி: "கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும், பெரிய கோலத் தடங்கண்ணன் விண்ணோர் பெருமான்றன்னை, உரியசொல்லா லிசைமாலைக ளேத்தி யுள்ளப்பெற்றேன், கரியதுண்டோவெனக் கின்று தொட்டு மினியென்றுமே.'' எனவும் வருவனவற்றாற் காண்க.''

வினா :—"ஆழ்வார்கள் விபூதி தரித்தார்க ளென்பதற்குப் பிரமாண மென்னை ?''

விடை :—"திருவாய்மொழி : "ஏறிய பித்தினோடெல்லா வுலகு கண்ணன் படைப்பென்னும், நீறுசெவ்வே யிடக்காணி னெடுமாலடியா ரென்றோடும், காறுறுதுழாய் மலர்காணி ஞரணன் கண்ணியீதென்னும், தேறியுந் தேறாது மாயோன் றிறத்தினளே யித்திருவே.'' என்றதனாற் காண்க.''

வினா :—"பிரபஞ்சப்பற்றுச் சிறிது மில்லாத முமுட்சுவுந் தரிக்க வேண்டு மென்பது அவசியமோ ?''

விடை :—"மீண்டும் பிறவியை அபேட்சிக்காத முமுட்சுவுந் தரிக்க வேண்டும் என்னும் பொருளால் உலகவின்பங்களை வெறுத்து மோட்சத் தையே பொருளாக மதித்த முமுட்சுவாலுந் தள்ளப்படாமற் கொள்ளப் படுவதா யுள்ளது பஸ்மமே. "தத்ஸமாசரேன் முமுக்ஷு ரபுநர்பவாய'' என்றதனாற் காண்க. அன்றியும், துறவர் சிகாமணியாய்ச் சர்வசங்க பரித் தியாகமுற்ற பட்டினத்தடிகளே விபூதி நீங்கப்பெற்றிருந்தா ரில்லையெனின் விபூதியணியாத மற்றையர் கதியினையென்னவென்று கூறுவது ? அந்தோ! இத்தகையர் நிலைமை பரிதாபம்! பரிதாபம்!! பட்டினத்தார் பாடல் : "ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவிழந்து, மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவனியான், செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டு, கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.'' என்றதனாற் காண்க.''

வினா :—"இத்தகைய வேதபடிதமான விபூதியினைச் சில பிராமணர் முதலியோர் நிந்திப்பதென்னை ?''

விடை :—"பிராமணர்கள் நிந்திக்கின் அவர்களுடைய உற்பத்தி யானது சூத்திர சம்பந்தமா யிருக்கலாமென்று புத்திமானுலே ஊகிக்க வேண்டும்'' என வாசிஷ்டலிங்கம் கூறுகிறது. "யேபஸ்மதாரிணந் த்ருஷ்ட்வாவாசாநிந்தந்திமாநவா: தேஷாம்ஸூத்ரேண ஸம்பூதிரனுமே யாவிபச்சிதா.'' எனவும், "மற்றையர் நிந்திக்கின் அவர்களுக்குக் கர்ப்பா தான முதலிய வைதிக கிரியைகள் இல்லை யென்பது நிச்சயம்'' என ஜாபாலோபநிடதம் கூறுகிறது. "ஏஷாம்நஜாயதே ஸ்ரத்தாஸ்ரௌதே

பஸ்மநிஸர்வதா, கர்ப்பாதா நாதிஸம்ஸ்காரஸ்தேஷாம் நாஸ்தீதி நிஸ்சய:”
எனவும் வருவனவற்றுற் காண்க.” (9)

கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள் ;
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தை என்சொல்கேன்? மதியையென் சொல்லுகேன்?
கைவல்ய ஞானநீதி
நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் ; கர்மமொருவன்
நாட்டிஞு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் ; வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன் ;
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன் ;
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!

(இ - ள்) கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் - கல்வியைக் கல்லாதவர்களே நல்லவர்கள் நல்லவர்கள்; கற்றும் - கல்வி கற்றும், அறிவு இல்லாத - ஞானமில்லாத, என்கர்மத்தை என் சொல்கேன்? - என் கன்மபலத்தை என்ன சொல்லுவேன்?, மதியை என் சொல்லுகேன்? - (மந்த) மதியை யென்ன சொல்லுவேன்?, கைவல்ய ஞானநீதி - கைவல்ய பதவியைக் கொடுக்கின்ற ஞானநீதியை, நல்லோர் உரைக்கில் - நல்லோர்கள் சொன்னுல், கர்மம் முக்கியம் என்று நாட்டுவேன் - கர்மமே முதன்மையானதென்று கல்வி வலியால் நிலைநிறுத்துவேன்; ஒருவன் கர்மம் நாட்டிஞுல் - ஒருவன் கருமத்தை நிலைநிறுத்திஞுல், பழைய ஞானம் முக்கியம் என்று நவிலுவேன் - முன்சொல்லிய ஞானமே முதன்மையானதென்று சாதித் துரைப்பேன்; வடமொழியிலே வல்லான் ஒருத்தன் வரவும் - வடமொழியில் வல்லவனுகிய வொருவன் வரினும், த்ராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன் - தமிழ்ப்பாஷையிலே (சிறப்பனைத்தும் வந்ததாக) விவகரித்துப் பேசுவேன்; வல்ல தமிழ் அறிஞர் வரின் - தமிழ் வல்லவராகிய அறிஞர் வந்தால், அங்ஙனே - தமிழ் வசனங்கள் சொன்னதுபோலவே, வடமொழியில் வசனங்கள் சிறிது புகல்வேன் - வடமொழியில் (சிறப்பனைத்தும் வந்ததாக) வாக்கியங்கள் சிலவற்றை யெடுத்துப் பேசுவேன்; வெல்லாமல் - நியாயமாய் வெல்லாமல், எவரையும் மருட்டிவிட வகை வந்த - யாவரையும் மருளும்படி செய்ய வகை யேற்பட்டதற்குக் காரணமான,

வித்தை - வித்தையானது, என் - என்ன பயன் தரும்?, முத்தி தருமோ - முத்தியைக் கொடுக்குமோ?, வேதாந்த—, என்க.

(வி - ரை) 'கற்றும் அறிவிலாத' என்று இழிவு சிறப்பு உம்மை கொடுத் தோதினமையின், கல்வியே அறிவை யுண்டாக்கு மெனவும், கற்க வேண்டியவைகளைக் கற்றும் அக் கல்வியில் கூறியவழி நில்லாதாரைக் காட்டிலும், கல்லாத பேர்களே நல்லவர்க ளெனவும் ஆயிற்று. கல்லாதவர்கள் தாமே தம்மை யறிந்து கற்றார்முன் ஒன்றனையுஞ் சொல்லாதிருப்பாராகலின், 'கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்' என்றனர். "கல்லாதவரு நனி நல்லர்" என்ற திருக்குறளானுங் காண்க.

கர்மமாவது - சதசத்தாற் செய்யப்படுதலின் அறம்பாவமென் றிருவகைத்தாய், இருவகைக்கு முரிய பயன் றருதலாற் செயப்படுபொருளாகிய தனக்கு முதற்காரண முண்டென்பது காட்டிக் காமியமல மென்னப்பட்டு, பந்தமுறுத்துத லொப்புமையான் மும்மலத்து ளொன்றென உடன்வைத் தெண்ணப்பட்டுக் காரண வேதுவானுங் காரிய வேதுவானும் அனுமித் தறியுமாறு நிற்பது. சிவஞானசித்தியார்: "தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந்தந்து, நன்மைதீ மையினு மின்பத் துன்பினு நாடிக் காண, முன்னமே யான்மா வின்றன் மும்மலத் தொன்ற தாகிக், கன்மமு மூலங் காட்டிக் காமீய மலமாய் நிற்கும்." என்றதனுற் காண்க. இம்மையில் நிகழ்வன யாவும் பிராரத்துவமே யாகலினும், அவ்வழியே அறிவு நடக்குமாகலினும், 'கர்மத்தை யென்சொல்கேன்; மதியை என் சொல்லுகேன்?' என்றனர்.

"ஞானமே முக்கியம்" என்றொருவர் கூறின், அதனை மறுத்து, "ஆன்மாவானவன் அறிவுள்ளவனாய் - அனேகாத்மாவாய் - வியாபியாய்ப் - புத்தியைத் தனக்குக் குணமாக வுடையனாய்ப் - புத்தியைப் பொறிகளிலே பிரவேசிக்கச் செய்து விஷயங்களை அனுபவிக்கும்பொருட்டுப் பூதங்களைப் புத்திமுதலான தத்துவங்களாகவும், தூல சூக்கும தேகமாகவுங் கொண்டு நல்வினை தீவினைக்கீடாக நரக சொர்க்கங்களை யனுபவிப்பதா யிருப்பன்." அன்றியும், உடலையுஞ் சுக துக்கங்களையும் கொடுப்பது கன்மமல்லாமல் வேறொரு தெய்வங் கொடுக்கிறதில்லை; ஞானத்தால் வீடில்லை; வினைகள் விடுகிறதற்கு வேறு விதி யில்லை; யாகஞ் செய்து அந்த யாகத்தினு லுண்டான பலன்களைச் சொர்க்கத்தி லனுபவித்து, இந்தப் பலன் நசித்துத் திரும்பி வேறு விதியில்லாமற் பூமியிற் பிறக்கும்; சுருதி மந்திரங்களாற் செபம் பண்ணினுல் கருதிய பலன்களைக் கொடுக்கும்; ஆதலின், "கருமமே முக்கியம்" என்பராகலின், 'கைவல்ய ஞானநீதி நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று நாட்டுவேன்' என்றனர்.

"கர்மமே முக்கியம்" என்றொருவர் கூறின், "கர்மமோ சடம்; அது தானே யொரு பயனையுங் கொடாது; சகலமான கலைஞானங்களும், புரா

ணங்களும், வேதாகமங்களிலுள்ள கருமகாண்டங்களும், மற்றச் சாத்திரங்களும், ஏனைச் சமய நூல்களு மாராய்ந்து பலவழிப்படுகிற பொருண் முழுவதுங் கேழெனக் கொண்டு கழித்து, மேலான பதி பசு பாசமாகிய மூன்று பொருள்களையுந் தடத்த லட்சணத்தில் வைத்து வகுத்துணர்த்தி, அம் மூன்றனுட் பதிப்பொருள் ஏனைப் பசுபாசங்கட்கு மேலாதலின் அது விளங்கச் சொரூப லட்சணத்தில் வைத்துணர்தலாகிய நல்வழிக் கேதுவான ஞானகாண்டத்தினை ஓதல் கேட்டல்களுடன் சிந்தித்து, ஞாதுரு ஞான ஞேயமாகிய பகுப்பின்றி அத்துவிதமா யகண்டாகார நித்திய வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாகி நிறைந்து நிற்கின்ற முதல்வனோடு கலக்குந் தன்மைத்தாகிய ஞானத்தினை யனுட்டித்தலே முக்கியம்" என்பராகலின், 'கர்மமொருவன், நாட்டினு லோபமைழய ஞானமுக் கியமென்று நவிலுவேன்' என்றனர்.

வடமொழியில் வல்லவனொருவன் வரின், தமிழ்மொழி அநாதியிலேயே யுள்ளதென்றும், காமிக முதலிய ஆகமங்கள் வேதமுண்டாய காலத்தே அநாதியே யிறைவனால் உண்டாக்கப்பட்டதனால் அவ் வாகமங்களு ளொன்றாய காமிகத்திலே "ஊர்த்துவம் த்ராவிட பாஷாங்கம் காநம் ந்ருத்தயுதந்துவா" என்று கூறியிருத்தலினாலும், தமிழ்மொழிப் புணர்ச்சிகட்படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சொல்லிலக்கணங்களும்; உயர்திணை, அஃறிணை, ஐம்பால் என்னுஞ் சொற்பாகுபாடுகளும்; அகம் புற மென்னும் பொருட் பாகுபாடுகளும்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை, வெட்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை என்னும் பொருட்பகுதிகளும், அவையின் றுறைகளும்; வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, அவற்றின் இனங்கள், மருட்பா முதலியவற்றின் இயல்களும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமையானும்; சிவபெருமானே சங்கப்புலவர்களோடும் தானுமோர் புலவனாக எழுந்தருளி யிருந்து பரிபா டல்முதலிய நூல்களை இயலுமிசையும் பொருந்தத் தெரிந்து ஆராய்ந்தமையானும், தியாகராஜப் பெருமானைப் பரவையாரிடத்தில் தூதின்மேற் செல்லப் போக்கினமையானும், முதலை யுண்ட பார்ப்பனப் பிள்ளையைக் கழிந்த பருவத்தோடு வருவித்தமையானும், எலும்பு பெண்ணுருவமாகச் செய்வித்தமையானும், வேதங்கள்மூடிய கதவைத் திறப்பித்தமையானும், கைலாயத்திலே வழங்கி வருகின்றமையானும், வாய் என்னும் உருப்பிற்குச் சொல்லின்றி முகத்தின் பெயர்களை வைத்து வழங்கும் வாயில்லா வடமொழியினின்றும் இன்னிசை வாய்ந்து உலகமெங்கும் தனதிசைமயமா யொலிக்கும் கரையிறந்த தமிழ்மொழி பிறந்ததல்ல வாகலினாலும், "தமிழே சிறந்தது" என்பாராகலின், 'வடமொழியிலே, வல்லானொருத்தன்வரவுந்த்ராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன்' என்றனர்.

தென்மொழியில் வல்லவனொருவன் வரின், "வேதங்களும், ஆகமங்களும், புராணங்களும், சோதிடம், வைத்தியம், சிற்பம், மந்திரம், யோகம், நீதி, ரசம், ரசாயன முதலிய பிரத்தியக்ஷ சாஸ்திரங்களும், இல்லற வாழ்க்கைக்கு ஏற்ற கன்மநூல்களும், ஸ்மிருதி, பூர்வமீமாஞ்சை முதலிய ஞான நூல்களும், உபநிஷதங்கள், உத்தரமீமாஞ்சை முதலிய பரோட்ச சாஸ்திரங்களும், சிருங்கார முதலிய ரசங்கள் ஒன்பது நிறைந்து, பெயர் கேட்குமுன்னே அதிலுள்ள சரித்திரத்தின் நாயகன் முதலிய பற்பல விஷயங்களை யூகிக்கத்தக்க நாடகங்களும், பிரகரண முதலிய அநேக வேற்றுமைகணிறைந்த காவியங்களும் வடமொழியிலேயே யிருத்தலின் இம்மொழியே சிறந்தது" என்பாராகவின், 'வல்லதமிழிறிஞர்வரி னங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன்' என்றனர்.

இதனால், ஞான முக்கியமெனின் கர்ம முக்கியமென்றும், கர்ம முக்கியமெனின் ஞான முக்கியமென்றும், வடமொழி சிறந்ததெனின் தென்மொழி சிறந்ததென்றும், தென்மொழி சிறந்ததெனின் வடமொழி சிறந்ததென்றும் பிறரை மருட்டுஞ் செய்கைகளை மேற்கொண் டொழுகும் வித்தை முத்தியினைத் தருமோ என்பதாம். (10)

---

## ஆனந்தமானபரம்

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்தவருளில்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வதெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரஜா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்குமாளோ?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ-ள்) கொல்லாமை - கொல்லாமையாகிய குணம், எத்தனை குணக்கேட்டை நீக்கும் - எத்தனை துர்க்குணங்களைப் போக்கும்;

அ குணம் ஒன்றும் ஒன்றிலேன்பால் - அக்குணம் ஒன்றும் பொருந்தாதவ ஞகிய என்னிடத்தில், கோரம் எத்தனை (அமைத்தனை) - கோரமான நடக்கைக ளெத்தனை யமைத்தாய்; பக்ஷபாதம் எத்தனை (அமைத்தனை) - பக்ஷபாதங்கள் எத்தனையமைத்தாய்; வன் குணங்கள் எத்தனை (அமைத்தனை) - வலிய குணங்கள் எத்தனை யமைத்தாய், கொடிய பாழ் கல்லாமை எத்தனை (அமைத்தனை) - கொடியனவும் பாழ்படு தற்குக் காரணமானவுமாகிய கல்லாமைக் குணங்கள் எத்தனை யமைத் தாய்; அகந்தை எத்தனை (அமைத்தனை) - அகங்கார குணங்கள் எத்தனை யமைத்தாய்; மனக்கள்ளம் எத்தனை (அமைத்தனை) - மனக் குற்றங்கள் எத்தனை யமைத்தாய்; உள்ளசற்காரியம் சொல்லிடினும் அறியாமை எத்தனை (அமைத்தனை) - உளதாகிய சற்காரியத்தைச் சொன்னலும் அதை யறிந்து கொள்ளாமையாகிய துர்க்குணங்கள் எத்தனை யமைத்தாய்; கதிக்கு என்று அமைத்த அருளில் செல்லாமை எத்தனை (அமைத்தனை) - மோக்ஷத்துக்கென்று அமைக்கப்பட்ட அருட்குணங்களில் பிரவேசியாமையாகிய குணங்கள் எத்தனை யமைத்தாய்; விர்தா கோஷ்டி என்னிலோ செல்லுவது எத்தனை (அமைத்தனை) - பயனற்ற கூட்டமென் றூலோ அதில் பிரவேசித்தற்குக் காரணமாகிய காரணங்கள் எத்தனை யமைத்தாய்; முயற்சி சிந்தை எத்தனை (அமைத்தனை) - பயனில்லாத முயற்சியில் செல்லுஞ் சிந்தைகளெத்தனை யமைத்தாய்; சலனம் இந்த்ர சாலம் போன்ற தேகத்தில் - கெடும் இயற்கையில் இந்திரசாலத்தை யொத்த சரீரத்தில், வாஞ்சைமுதலான அல்லாமை எத்தனை (அமைத் தனை) - விருப்பம் முதலியனவாகிய தகாமையாகிய குணங்கள் எத்தனை யமைத்தாய்; உனக்கு அடிமை ஆனேன் - தேவரீருக்கு அடிமையாயி னேன்; இவைக்கும் ஆளோ - (கோரம் முதலிய) இத் தீக்குணங்களுக்கும் நான் ஆளாகவோ; அண்ட பகிரண்டமும் - இவ் வண்டங்களும் இவற்றின் புறத்திலுள்ள அண்டங்களும், அடங்க - குறுகி யுள்ளடங்கும்படி, ஒரு நிறைவு ஆகி - ஒரு பரிபூரணமாகி, ஆனந்தம் ஆன பரமே - சுகரூபமான பரம்பொருளே!, என்க.

(வி - ரை) 'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என் றதனல் கொல்லாமையாகிய தருமமொன்றை அனுட்டித்து வருவதின லேயே எல்லாப் புண்ணியங்களும் இலேசாகக் கூடிவருமென்பதாயிற்று. திருக்குறள்: "அறவினை யாதெனில் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்." எனவும், சிவஞானதீபம்: "கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே கூறரிய மேலான ஞான மாகும், கொலையாதி யகன்றொழு குந் தவங்கடாமே குற்றமில்லா நற்றவமென் றுரைக்கு நூலுங், கொலை யாதி யகற்றியநல் லறங்க டாமே குவலயத்தில் ஒப்பரிய அறங்களாகுங், கொலையாதி யகன்றுபெருஞ் செல்வந் தானே கூறிலுயிர்க் கிதமான வாழ்வ தாமே." எனவும், இதிகாசம்: "ஆனை யடியி லடங்காவடியில்லை,

தானதுபோ னிற்கின்ற தன்மைதா - னூனுயிரைக், கொல்லா அறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு, மெல்லா அறமு மிசைந்து." எனவும் வருவன வற்றாற் காண்க.

'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என்றதனால், கொல்லுதலினாலேயே எல்லாப் பாவங்களு முண்டாகி அப்பாவங்களை யனுபவிப்பதற்கு நரகம் நிச்சயமாய்க் கிடைக்குமென்பதுமாம். திருமந்திரம்: "கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை, வல்லிடி காரர் வரிகயிற் றாற் கட்டிச், சொல்லிடு நீரென்று தீவாய் நரகிடை, நில்லிடுமென்று நிறுத்துவர் தாமே." எனவும், சிவஞானதீபம்: "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகு மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயில், எவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை, வவ்வியம தூதருந் தண்டஞ் செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து, வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறா வேதனைசெய் திடுவரென் றோது நூலே." எனவும், சிவதருமோத்தரம்: "உற்றிடுவருரைத்ததுய ரனைத் தினையு முயிர்க்கிரக்க, மற்றுவதைத் தவைதம்மை யவலமெனு துவற்றா னைத். துற்றினரு மற்றுமுள கொலைபுரிந்த துரிசினரும், பற்றுமிலர் படுந் துயர்க்குக் கடுந்தூதர் வலைப்பட்டே." எனவும், இதிகாசம்: "இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே யெவ்வுயிரு, முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கத்தா மெந்நோவும், பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென் றெண்ணப் படுவா ரிசைந்து." எனவும் வருவனவற்றாற் காண்க.

'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என்றதனால், கொல்லுதலினால் இம்மையிற் றுன்ப மெய்தாவிடினும் மறுசென்மத்தி லப்பாவம் வந்து மூண்டுகொண்டு நோயினைச் செய்யு மெனலுமாம். நாலடியார்: "அக்கேகையொழிய விரலழுகித், துக்கத் தொழுநோ யெழுபவே - யக்கா, லலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற, பழவினை வந் தடைந்தக் கால்" எனவும், சிவதருமோத்தரம்: "கருவினு ளழிவன் முற்றிக் கழித்துட னழிவன்காளைப், பருவமுற் றழிவ னீகை பகர்ந்துபின் னுதவாப் பாவி, பெருவலைகண்ணி யாலும் பிடித்துயிர் வதைத்த பேதை, கருதிய பொருளைத் தக்கோர்க்குதவிடான் றிளைத்த கையன்." எனவும் வருவனவற்றாற் காண்க.

'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என்றதனால், கொல்லுந்தொழிலை மேற்கொண் டொழுகுவாரிடத்துக் கோரமான நடக்கை, பட்சபாதம், வன்குணம், கற்கவேண்டியவைகளைக் கற்காமை, அகந்தை, மனக்கள்ளம், அறியாமை, அருளிற் செல்லாமை, விருதா கோஷ்டியிற் பிரவேசம், பயனில்லாத முயற்சி, அனித்திய சரீரத்தில் வாஞ்சை முதலியனவு முண்டாகு மென்பார்.

மாணவகன் வினு :—"சர்வசங்க பரித்தியாக முற்ற துறவிகளாகிய ஞானிகளும் கொல்லாமையை மேற்கொண் டொழுகவேண்டுமென்பது அவசியமோ?"

விடை :—"இல்லறத்தார் ஒருகால் தவறிக் கொல்வரேல் அப் பாவத்தினை யொழித்துக்கொள்ள அவருக்குப் பரிகார முண்டாம்; துறவிகள் மறந்துங் கொலைத்தொழில் செய்தல் கூடாது. செய்யினும் பரிகாரங் கிடையாதாம். ஆகையினு லன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனுர் தமது திருக்குறளில் கொல்லாமை யென்னு மதிகாரத்தினைத் துறவறவியலில் வைத்து "நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக், கொல்லாமை சூழ்வான் றலை" என்றேதினர். திருவருட்பா : "மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்தில் கண்விழித்து வயங்கு மப்பெண், ணுருவாணை யுருவாக்கி யிறந்தவரை யெழுப்புகின்ற வுருவனேனுங், கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக் கடித்துண்ணுங் கருத்தனேலெங், குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக் கூறெருதே." என்றதாலுங் காண்க."

வினு :—"அறுபான்மும்மை நாயன்மார்களி லொருவராய்க் கொல்லுந் தொழிலை மேற்கொண்ட கண்ணப்ப நாயனுருக்கு முதல்வன் அனுக்கிரகஞ் செய்தவா றென்னை?"

விடை:—"கண்ணப்ப நாயனுர் ஒரு ஆசிரியனை யடைந்து 'இது பாவம், இது புண்ணியம்,' 'இது செய்யலாம், இது செய்யலாகாது' எனக் கேட்டறிந்தவ ரல்லர். அவர் பழகியிருந்த பழக்கத்தைப் பக்தி மிகுதியினுற் செய்தனர். அவர் பூர்வசென்மத்திற் செய்த தபோபலத்தினுலே மோட்சம் கைகூடிற்று. அவர் வாய்நீரால் திருமஞ்சனமாட்டிச், செருப்புக்காலா லுதைப்பதுஞ்செய்து, முத்தி யடைந்தனர். சண்டேசுர நாயனுர் பிதாவைக் கொன்று முத்தி யடைந்தனர். சிறுத்தொண்ட நாயனுர் பிள்ளையை யறுத்து முத்தி யடைந்தனர். இச் சரித்திரங்களைப் பிரமாணமாகக்கொண் டொருவன் அங்ஙன நடத்தி முத்தியடைய முயலுவனே? ஆகையினுல், உலகாதீதமாகிய சிவானுக்கிரக வலியினையுடைய மிகுந்த பத்தி விதியெனக் கொள்ளுதல் கூடாது."

வினு :—"அந்தணர் யாகத்தின்கட் சீவகொலை செய்வதேன்."

விடை:—"அந்தணர் யாகத்தின்கட் கொன்ற சீவன் வேதமந்திரத்தாற் சுத்தி யடைந்து தெய்வலோகத்தை யெய்திச் சுக மடைதலால் யாகம் புரிந்த பூசுரரும் வானுலகம் புகுவர். ஆயினும், இவ் வேள்வியா லுண்டாம் பலன் சிறு பதமுத்தியேயன்றிச் சுத்திமுத்தி யன்று. ஆகையினு லன்றோ, பெருநாவலர்: "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னென்ற, னுயிர்செகுத் துண்ணுமை நன்று." எனக் கூறிப்போந்தனர். "அஹிம்சா பரமோதருமம்." என்ற வேதவாக்கியமும் காண்க."

'உனக்கடிமை யானே னிவைக்கு மாளோ' என்றதனால், கொல்லாமை யென்னுங் குணமொன் றுமொன்றிலே னாதலினால் உனக்கடிமையாகாது பல குணக்கேட்டை விளைக்குங் கொடுமைகளுக்கே அடிமையாய் வாழ்ந்தே னென்றனர்.

அண்டங்களும் இவற்றின் புறத்திலுள்ள அண்டங்களும் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா எனும் எட்டினுடங்குமாகலினாலும், அவ் வெட்டாய் விளங்குபவன் முதல்வனாகலினாலும், 'அண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி யானந்தமானபரமே' என்றனர். திருவாசகம்: "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாயமைந்தனோ டெண்வகை யாய்ப்புணர்ந்துநின்றான், னுலகே ழெனத்திசைபத்தெனத்தா னொருவனுமே, பலவாகிநின்றவா தோணோக்க மாடாமோ." என்றதனாற் காண்க. (1)

தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
    சேர்ந்துவளர் சித்தாகியச்
  சித்தெல்லாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்திரமாய்த்
    திரமாகி நானாவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
    புலனுமா யைம்பூதமாய்ப்
  புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
    போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
    யின்றாகி நாளையாகி
  என்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
    யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
    ரறிவதற் கெளிதாகுமோ?
  அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
    யானந்த மானபரமே!

(இ-ள்) தெருள் ஆகி - தெளிவாகி, மருள் ஆகி - மயக்கமாகி, உழலும் மனம் ஆய் - சுழலாநின்ற மனமாகி, மனம் சேர்ந்து வளர் சித்து ஆகி - மனமானது சேர்ந்து வளர்தற் கிடமாகிய அறிவாகி, அ சித்து எல்லாம் சூழ்ந்த சிவசித்தாய் - அந்தச் சித்தெல்லாம் சூழப்பெற்ற சிவஞானமாகி, விசித்திரமாய் - ஆச்சரியகரமாகி, திரம் ஆகி - உறுதியாகி, நானாவித பொருள் ஆகி - பலவகைப் பொருள்களாகி, அ பொருளை அறி பொறியும் ஆகி - அப்பொருளை யறிகின்ற ஐம்பொறிகளுமாகி, ஐம்புலனும் ஆய் - (அவற்றுக்கு விடயங்களாகிய) ஐம்புலன்களுமாகி, ஐம்பூதம் ஆய் - பஞ்சபூதங்களாகி, புறமும் ஆய் - வெளியுமாகி, அகமும் ஆய் - உள்ளுமாகி,

தூரம் சமீபம் ஆய் - சேய்மை யண்மைக ளாகி, போக்கொடு வரத்தும் ஆகி - செலவொடு வரவுமாகி, இருள் ஆகி - அந்தகாரமாகி, ஒளி ஆகி - பிரகாசமாகி, நன்மை தீமைகளும் ஆகி - நன்மை தீமைகளுமாகி, இன்று ஆகி - இன்ருகி, நாளை ஆகி - நாளையாகி, என்றும் ஆய் - என்றுமாகி, ஒன்றும் ஆய் - ஒன்றுமாகி, பலவும் ஆய் - பலவுமாகி, யாவும் ஆய் - எல்லாமாகி, இவை அல்ல ஆய நின்னை - இவைக ளல்லாதனவுமாகிய உன்னை, அருள் ஆகி நின்றவர்கள் - உன் திருவருளுக் கிலக்காகி நின்ற அறிஞர்கள், அறிவது அல்லால் - அறிவதேயன்றி, ஒருவர் - வேறொருவர், அறிவதற்கு - உணர்வதற்கு, எளிது ஆகுமோ - (அவ் வுணர்ச்சி) எளிதாகுமோ?, அண்டபகி—, என்க.

(வி - ரை) மலமைந்தால் வரும் அவத்தை, கோசம், ஆதாரம், போகம், மண்டலம், அத்துவா, மந்திரம், பதம், அக்கரம், புவனம், தத்துவம், கலை முதலிய யாவும் ஆன்மாவினுக்கு இன்றியமையாது வேண்டுவனவாக இருந்தாலும் இவை யனைத்துஞ் சடமா யிருத்தலினால் இவை தாமே காரியப்படாமல் முதல்வன் சன்னிதானத்தில் ஆன்மாவினுக்குக் காரியப்பட்டு வருகையால் அக் காரியங்களுட் சிலவாகிய தெருள், மருள், மனம், சித்து, சிவஞானம், பொருள், பொறி, புலன், பூதம், இருள், ஒளி, நன்மை, தீமை, இன்று, நாளை முதலிய எல்லாம் முதல்வனே என்பார், 'பலவுமாய்' என்றும்; இவையனைத்திலும் 'எள்ளிலெண்ணெயைப்போல்' நிறைந்திருத்தலின், 'அகமுமாய்' என்றும்; இவை யனைத்தையும் வியாப்பியமாகக் கொண்டிருத்தலின், 'புறமுமாய்' என்றும்; இத்தகைய முதல்வனை ஆகமஞ் சொன்ன வொழுங்கிலே நின்று அனுட்டியாதவர்களுக்குக் கூட லறிதாகலின், 'தூரமாய்' என்றும்; அனுட்டித்தவர்களுக்குக் கூடலெளிதாகலின், 'சமீபமாய்' என்றும்; இவை யனைத்தையுங் கடந்து விளங்குபவனாகலின், 'இவை யல்லவாய்' என்றுங் கூறினர். தத்துவப் பிரகாசம்: "ஆகமல மைந்தவத்தை சாக்கி ராதியவைபதினெட் டைங் கோச மாதாரமாறு, போகமண் டலமூன்று றத்து வாக்கள் புகலுமந் திரம் பதினொன் றெண்பத்தோர் பதமும், பாகவக்கரமைம்பத் தொன் றுடனே புவனம் பகருமிரு நூற்றிரு டிருபத்துநாலு, மோகதத் துவந்தொண் ணூற் றறுகலை யைந்து முதலான பாசமென மொழியு நூலே." எனவும், சிவஞானசித்தியார்: "இருவினை யநாதி யாதி யியற்றலா னுகர்வா லந்தம், வருமலஞ் சார்ந்து மாயா வுருவுகண் மருவி யார்த்துத், தருசெயன் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி யருவதாய் நின்ற ரன்ற னாணையி னமர்ந்து செல்லும்." எனவும், காசிகாண்டம்: "ஐம்பெரு பூத மாகி யவற்றுறு குணங்க ளாகி, யைம்பொறி யாகி யந்தக் கரணமா யறிவு மாகி, யைம்பெருங் கரும மாகி யனைத்தினுந் தோய்ந்துந் தோயா, வைம்பெருங் கடவு ளாகு மாதிநின் னடிகள்போற்றி." எனவு முறையே வருவனவற்ருற் காண்க.

திரோத நீங்கி யருளைத் தமக்குத் தாரகமாகப் பெற்றவர்கள், காட்சிக்கு ஆதித்தன் தன்னுடைய பிரகாசத்தாலே யிருளை யோட்டிக் காட்சியையுடைய கண்ணுக்குத் தானுந் தோன்றி நின்றாற்போல, தன்னுடைய அருட்சத்தியாகிய சஞ்சித கன்மத்தையும் போக்கி, மேலும் ஆகாமியமாய் வரும் வினையையும் வராமற் காத்து அருள்வடிவமாய்த் தன்னையுந் தரிசிப்பிப்பன் முதல்வனாகலின், 'அருளாகி நின்றவர்க ளறிவதல்லா லொருவ ரறிவதற் கெளிதாகுமோ' என்றனர். சிவஞானபோதம்: "அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே, யருளு மவனன்றி யில்லை - யருளின், றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக், கிரவிபோ னிற்பனு மெய்ந்து." என்றதனாற் காண்க. (2)

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்; சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல
மாலாகி நிற்கவறிவார்;
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வார்; ஒன்றை
மெணமெணென் றகம்வேறதாம்
வித்தையறி வார்; எமைப் போலவே சந்தைபோல்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்!
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்;
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு முளறவறிவார்;
ஆறுசம யங்கடொறும் வேறுவே றாகிவிளை
யாடுமுனை யாவரறிவார்?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ - ள்) மாறுபடு - மாறுபடுதற்குரிய, தர்க்கம் - தர்க்கம், தொடுக்க அறிவார் - தொடுக்க அறிவார்கள்; சாண் வயிற்றின் பொருட்டு ஆக - சாண்வயிற்றி னிமித்தமாக, மண் தலமும் - மண்ணுலகமும், விண் தலமும் - விண்ணுலகமும், ஒன்று ஆகி - ஒன்றாகப் பாவித்து, மனது உழல - மனஞ் சுழலாநிற்க, மால் ஆகி நிற்க அறிவார் - பேராசை கொண்டு நிற்க அறிவார்கள்; வேறு படு - வெவ்வேறு வகைப்பட்ட, வேடங்கள் - வேடங்கள், கொள்ள அறிவார் - பூண அறிவார்கள்; ஒன்றை - ஒரு மந்திரத்தை, மெண மெண என்று - மெணமெண என்று நாவினால் உச்சரியா நின்றே, அகம் வேறது ஆம் - மனம் வேறாதற்குரிய, வித்தை அறிவார் - வித்தையை அறிவார்கள்; எம்மைப்போலவே - எங்களைப்போலவே, சந்தைபோல் - சந்தையில் பல பொருள்களைப் பரப்பி வைப்பதுபோல, மெய் நூல் விரிக்க அறிவார் - உண்மை நூற்பொருள்களைப் பரப்ப அறிவார்கள்; சீறு புலிபோல்

சீறி - கோபிக்கின்ற புலியைப்போலச் சீறி, மூச்சைப் பிடித்து - மூச்சைத் தடுத்து, விழி செக்கச்சிவக்க அறிவார் - கண்கள் மிகவுஞ் சிவக்க அறிவார்கள்; தம் தம் மதத்தையே திரம் என்று - தங்கள் தங்கள் மதத்தையே திடமென்று, தாமதச்செய்கை கொடும் உளற அறிவார் - தாமதத் தொழிலை மேற்கொண்டு உளற அறிவார்கள்; ஆறு சமயங்கள் தொறும் - ஆறு சமயங்களுள்ளும், வேறு வேறு ஆகி - வெவ்வேறுருக்கொண்டு, விளையாடும் உன்னை - விளையாடாநின்ற வுன்னை, யாவர் அறிவார் - யாவர் அறிய வல்லார்?, அண்டபகி—, என்க.

(வி - ரை) வைநைகராகப் பிறந்து சாஸ்திரங்களிற் பயிலும் புண்ணியம் வாய்ந்தவராயினும், அமுர்தகலச நியாயமாகத் தாங்கள் கற்ற சாஸ்திர அளவிலேயே திருத்தி யடைந்து, சித்தாந்த சைவர்கள் கூறும் ஞான மொழிகளைக் கொள்ளாது தருக்கமாடி யவர்கள் சித்தத்தைக் கலக்குதலினாலும், தங்கள் கொள்கை தீதாயினுந் தருக்கவலியாற் றாம் பிடித்தபிடியை முற்றுஞ் சாதித்தலினாலும், 'மாறுபடு தர்க்கந் தொடுக்க அறிவார்' என்றனர். ஒழுவிலொடுக்கம்: "மூலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர், சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் - பலதாரை, வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக், கிட்டி னரகங் கிடீர்." என்றதனாற் காண்க.

மும்மை வினையின்படியே இம்மையில் யாவுங் கிடைக்குமென்று பெற்றவரையில் திருப்தி யடையாது வயிறு வளர்க்கு நிமித்தமாகவே வீணாக மனத்தினைப் பலவாறாகப் பல பொருள்களைச் சம்பாதிக்கும் பொருட்டுப் பல திசைகளிலும் பரவச்செய்து சஞ்சலமுறுவ ரென்பார், 'சாண்வயிற்றின் பொருட்டதாக மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல மாலாகி நிற்க அறிவார்' என்றனர். மூதுரை: "உண்பது நாழி யுடுப்பது நான்கு முழ, மெண்பதுகோடி நினைந் தெண்ணுவன- கண்புதைந்த, மாந்தர் குடிவாழ்க்கை மண்ணிற் கலம்போல, சாந்துணையுஞ் சஞ்சலமே தான்." என்றதனாற் காண்க.

கால தேச வர்த்தமானங்கட்குத் தக்கபடி சமயோசிதமாகப் பிறரை வஞ்சிக்கப் பற்பல வேடங் காட்டிப் பிழைப்பாரென்பார், 'வேறுபடு வேடங்கள் கொள்வர்' என்றனர். ஒழுவிலொடுக்கம்: "வேட்டியுந் தாழ் வடமும் வெண்ணீறும் வெண்பல்லும், காட்டுவது ஞானக்களவு காண்." என்றதனாற் காண்க.

மனத்தினை யொருவழியிலே செலவிட்டு வாயினாலேதோ மந்திரஞ் செபிப்பார்போலத் தந்திர வித்தை செய்து காட்டுவா ரென்பார், 'ஒன்றை மெணமெணென்றகம் வேறதாம் வித்தை யறிவார்' என்றனர். சிவவாக்கியர்: "சுற்றிவந்து மெணமெணென்று சொல்லுமந்த்ரமேதடா" என்றதனாற் காண்க.

ஈண்டு மெய்ந்நூல் என்றது மெய்கண்ட சாத்திரத்தினை. தீட்சை யடைந்த பக்குவர்களாகிய தீவிரதரமுடைய புத்திமான்கட்கு மாத்திரமே இஞ் ஞான சாஸ்திரத்தினைப் போதிக்க வேண்டுமாகலின் அங்ஙனஞ் செய்யாது அதீட்சிதர்களாகிய அபக்குவர்கட்கெல்லாஞ் சொல்லிக் கடை பரப்புதல் அசம்பிரதாய மாகலின், ' எமைப்போலவே சந்தைபோன் மெய்ந்நூல் விரிக்க அறிவார் ' என்றனர்.

" ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந் துணையும் புகழ். " என்னும் உண்மையினைச் சிறிது மறியாது, தன்னை யடைந்தார் மாட்டாரிடத்தும் எப்போதும் மிருகங்களைப் போலச் சிலர் சீறுவ ரென்பார், ' சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி செக்கச் சிவக்க வறிவார் ' என்றனர்.

தத்தம் மதத்திலே பிரதிபாதிக்கப்படுகிற கடவுளே முழுமுதற் றெய்வ மென்றும், தத்தம் மதமே சிறந்த தென்றும், தாமதகுண மேலீட்டால் வாளா வாதித்து முன்பின் முரணுகப் பேசுவ ரென்பார், ' திரமென்று தந் தம் மதத்தையே தாமதச் செய்கைகொடு மூளற அறிவார் ' என்றனர்.

அறுவகைச் சமயங்களிலும் அவ்வவ் அன்பர்கள் கருதியவாறே தனித் தனி காட்சியருளும் கடவு ளொருவரே யென்பார், ' ஆறுசம யங்கடொறும் வேறுவேறாகிவிளை யாடுமுனை யாவ ரறிவார்?' என்றனர். தேவாரம்: " அக்கினொடு முத்தினையு மணிந்து தொண்டர்க் கங்கங்கே யறுசமய மாகி நின்ற, திக்கினையென் றிருமுதுகுன் றுடையான் றன்னைத் தீவினையே னறியாதே திகைத்தவாறே. " என்றதனுற் காண்க. (3)

காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனன் மண்டிய
கடும்பசி தனக்கடைத்தும்,
கார்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதிருந்தும்,
தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளொன்பெனும்பாய்த்
தெரியமின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்,
வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
மௌனத்தி லேயிருந்தும்,
மதிமண்ட லத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூ டிருந்துமறிஞர்
ஆயுமறை முடிவான வருணடி ஞரடிமை
யகிலத்தை நாடன்முறையோ ?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே !

(இ - ள்) உதிர்ந்த காய் இலை கனி சருகு புனல் - உதிர்ந்த காயையும் இலையையும் கனியையும் சருகையும் நீரையும், மண்டிய கடும் பசி தனக்கு அடைத்தும் - மிகுந்த கடும்பசிக்கு உண்பித்தும், கார் வரையின் முழையில் - கருமையாகிய மலைக்குகையில், கருங்கல்போல் அசையாது - கருங்கல்லைப் போல அசையாமல், நெடிது கண் மூடி இருந்தும் - நெடுங்காலம் கண்மூடி யிருந்தும், தீயினிடை வைகியும் - பஞ்சாக்கினி மத்தியிற் றங்கியும்; தோயமதில் மூழ்கியும் - புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணியும்; தேகங்கள் - சரீரங்கள், என்பு எலும்பு ஆய் தெரிய நின்றும் - எலும்பெலும்பாய்த் தெரியத் தவநிலையில் நின்றும்; சென்னி மயிர்கள் கூடு ஆ - தலைமயிர்களைக் கூடாகக் கொண்டு, குருவி தெற்ற - குருவிகள் அலைக்க, வெயிலூடு இருந்தும் - வெயிலினிடத் திருந்தும்; வாயுவை அடக்கியும் - வாயுவைத் தடுத்தும்; மனதினை அடக்கியும் - மனத்தைத் தடுத்தும்; மௌனத்திலே இருந்தும் - மோனநிலையி லிருந்தும்; கனல் செல்ல மதிமண்டலத்திலே அமுது உண்டு வனமூடு இருந்தும் - தாபந் தணியும்படி சந்திரமண்டலத்திலுள்ள அமிர்தத்தை யுண்டு காட்டிற் றங்கியும், அறிஞர் - ஞானியர்கள், ஆயும் - ஆராயப்பட்ட, மறை முடிவான பொருள் நாடினர் - வேதாந்தப் பொருளை விரும்பித் தேடினார்கள்; அடிமை - அடிமை யொருவனும், அகிலத்தை நாடல் முறையோ - உலக வாழ்வை விரும்புதல் முறைமையாமோ?, அண்டபகி—, என்க.

(வி - ரை) 'அறிஞர், ஆயுமறை முடிவான வருணாடி ஞாடிமை யகிலத்தை நாடன் முறையோ' என்றதனால், அறிஞர் காயிலை முதலிய பசித்தவேளைக் குண்டனர்; யான் கிருதகுள பாயசத்துடனே யெந்நேரமு முண்டனன். அவர் முழையில் வாழ்ந்தனர்; யான் மாடமாளிகையில் வாழ்ந்தனன். அவர் அசையா திருந்தனர்; யான் ஓடியாடித்திரிந்தனன். அவர் தீயினிடை வைகினர்; யான் குளிர்ந்த நீழலிடை வைகினன். அவர் குளிர்ந்த சலத்தில் மூழ்கினர்; யான் வெந்நீரில் மூழ்கினன். அவர் எலும்பெலும்பாய்த் தெரிய நின்றனர்; யான் தேகம் பருத்து நின்றனன். அவர் தலைமயிர்ச் சிக்குண்ண வெயிலினுறைந்தனர்; யான் தலைமயிர் வாரிச் சுகமுற்றனன். அவர் வாயுவை யடக்கினர்; யான் பெருமூச்சு விட்டனன். அவர் மனத்தினை யடக்கினர்; யான் மனம் போனவழி விட்டனன். அவர் மௌனமுற்றிருந்தார். யான் பகிர்முகத்தே யிருந்து சோறுண்டேன். அவர் வனமூ டிருந்தார்; யான் நகரூ டிருந்தேன். இங்ஙனம் அறிஞர் அருளுற்று வாழ யான் மருளுற்று வாழ்தல் அழகாமோ என்றனர். (4)

சுத்தமு மசுத்தமுந் துக்கசுக பேதமுந்—
தொந்தமுட னிர்த்தொந்தமும்
ஸ்தூலமொடு சூக்ஷ்மமு மாசையு நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின்முடிவும்

பெத்தமொடு முத்தியும் பாவமொ டபாவமும்
பேதமொ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையு மருமையுட னெளிமையும்
பெண்ணினுட னாணுமற்றும்
நித்தமு மனித்தமு மஞ்சன நிரஞ்சனமும்
நிஷ்களமு நிகழ்சகளமும்
நீதியு மநீதியு மாதியொ டனாதியும்
நிர்விஷய விஷயவடிவும்
அத்தனையு நீயலதெ ளத்தனையு மில்லையெனின்
யாங்களுனை யன்றியுண்டோ?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ-ள்) சுத்தமும் அசுத்தமும் - சுத்தா சுத்தங்களும்; துக்கசுக பேதமும் - துக்கசுக பேதங்களும்; தொந்தமுடன் நிர்த்தொந்தமும் - சம்பந்தாசம்பந்தங்களும்; ஸ்தூலமொடு சூக்ஷமமும் - ஸ்தூல சூக்ஷமங்களும், ஆசையும் நிராசையும் - ஆசையும் ஆசையின்மையும்; சொல்லும் - ஒரு சொல்லின் முடிவும், வேதமும் - வேதமுடிவும்; பெத்தமொடு முத்தியும் - பந்தமோட்சங்களும்; பாவமொடு அபாவமும் - நினைத்தலும் நினையாமையும்; பேதமொடு அபேதநிலையும் - பேதாபேத நிலைகளும்; பெருமையொடு சிறுமையும் - பெருமை சிறுமைகளும்; அருமையுடன் எளிமையும் - அருமை எளிமைகளும்; பெண்ணினுடன் ஆணும் - பெண்மை ஆண்மைகளும்; மற்றும் - மேலும், நித்தமும் அநித்தமும் - நித்தியா நித்யங்களும்; அஞ்சன நிரஞ்சனமும் - தோஷமும் தோஷமின்மையும்; நிஷ்களமும் - அருபத்தன்மையும், நிகழ் சகளமும் - சம்பவிக்கின்ற உருவத்தன்மையும்; நீதியும் அநீதியும் - நீதி அநீதிகளும்; ஆதியொடு அநாதியும் - ஆதி யநாதிகளும்; நிர்விஷய விஷய வடிவும் - ஒருவர்க்குக் காணப்படாதவைகளும் காணப்படுபவைகளும்; அத்தனையும் - (ஆகிய) எல்லாமும், நீ அல்லது - நீயன்றி, எள் அத்தனையும் இல்லை யெனின் - எள்ளளவும் (வேறு நீ யில்லாப் பொருள்) இல்லையாயின், யாங்கள் உன்னை அன்றி உண்டோ - நாங்கள் உன்னையன்றி உளமாவோமோ?, அண்டபகி—, என்க.

(வி-ரை) சகத் காரணமாகிய மாயை பரிபூரணமாகிய சிவத்தினுக்கு மன்னியமல்ல வாகலினுலும், அம் மாயாகாரிய மனைத்துஞ் சிவமின்றி நிகழாவாகலினுலும், அக் காரிய மனைத்தும் பூரண நிஷ்டையில் வேற்றுமையாகக் காணப்படா வாகலினுலும், சிவானுபூதிமான்களுக்குப் பிரபஞ்சத்திற் ஜேறிற்படுவன வெல்லாஞ் சிவமின்றி யாதுமில்லையென்னத் தோன்றுமாகலினுலும், 'சுத்தமுதல் விஷயவடிவு வரையிலுள்ள, யாவு நீயலதெ ளத்தனையு மில்லை' என்றனர். திருக்கடைக்காப்பு: "குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய், சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு

சோதிநீ, கற்றநூற் கருத்துநீ யத்தமின்ப மென்றிவை, முற்றுநீ புகழ்ந்து முன் னுரைப்ப தென்ன முகமனே." எனவும், திருவாசகம்: "கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ, தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ, வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கிற், றேறும் வகையென் சிவலோகா! திகைத்தாற் றேற்ற வேண்டாவோ." பொன்வண்ணத்தந்தாதி: "தவனே யுலகுக்குத் தானே முதறான் படைத்தவெல்லாஞ், சிவனே முழுதுமென் பார்சிவ னேகம் பெறுவர் செய்ய, வவனே யடல்விடை யூர்தி கடலிடை நஞ்சமுண்ட, பவனே யெனச் சொல்லு வாரும் பெறுவரிப் பாரிடமே." எனவும் வருவனவற்றாற் காண்க.

சுத்தாசுத்த முதலிய யாவும் நீயன்றி யில்லனவாயின் நாங்கள் மாத்திரம் உன்னையன்றி வேறாவோமோ, நாங்கள் யாவும் நின்னுடைய செயலாலேயே கட்டுப்பட்டுக் கிடக்கின்றோம் என்பதாம். (5)

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென் னும்
கல்லைப்பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத்திருத்திமேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவைய ணுகாதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின்படிக்குநீ முன்னின்றுகாண்பதே
நின்னருட் பாரமென் றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே!
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ-ள்) கார் ஆரும் ஆணவம் காட்டை களைந்து - இருள் நிறைந்த ஆணவக் காட்டினை வேரறப் பறித்து, அற கண்டு - வெட்டி வெளியாக்கி, அகங்காரம் என்னும் கல்லை பிளந்து - அகங்கார மென்கிற கல்லைப் பிளந்தெறிந்து, நெஞ்சகமான பூமி வெளி காண திருத்தி - மனமாகிய நிலமானது வெளியாய்த் தோன்றும்படி திருத்தி, மேன்மேல் மேலுமேலும், பாராதி அறியாத மோனம் ஆம் வித்தை பதிந்து - பூவேசுத்தார் முதலானவர்கள் அறியாத மோனநிலை யென்கிற விதையை ஊன்றி, அன்பு நீராக பாய்ச்சி - அன்பாகிய நீரைப் பாயவிட்டு, அது ப[illegible] ஆகுமட்டும் - அது பயிராகுமளவும், மாமாயை வன்பறவை அணுக[illegible]

வண்ணம் - பெரிய மாயையாகிய வலிய பறவை சேர்ந்து அழிக்காத வகை, நேராக நின்று - தமது முயற்சியினளவிற் குறையாமல் செவ்வே நின்று அப் பயிரைக் காத்து, விளை போகம் புசித்து உய்ந்த - விளைந்த சிவ போகத்தை யனுபவித்து உச்சீவித்த, நின் அன்பர் கூட்டம் எய்த - உன் னடியார் கூட்டத்தை நானடையும்படி, நினைவின்படிக்கு - என் எண்ணத் தின்படி, நீ முன்னின்று காப்பது - நீ எனக்குப் பிரத்யக்ஷமாகி நின்று காப்பாற்றுவது, நின் அருள் பாரம் - உன் திருவருட்குரிய கடமையாம்; என்றும் - எப்பொழுதும், ஆராரும் அறியாத - எவ்வகைப்பட்ட மேலோ ரும் உணராத, சூது ஆன வெளியில் - இரகசியமான சிதாகாயத்தில், வெளி ஆகின்ற துரிய மயமே - வெளிப்படத் தோன்றுகின்ற துரிய வடிவே!, அண்டபதி—, என்க.

(வி - ரை) பெத்தர்கள் காட்டினைக் களைந்து, கற்களை நீக்கி, நிலத் தினைச் சுத்த வெளியாக்கி, நெல் விளைத்து, நீர்ப் பாய்ச்சி, பயிர் விருத்தியா ளவும் பறவைகள் சேராவண்ணம் காத்து, விளைந்த பலனை யனுபவிப் பார். அதுபோல, முத்தர்கள் ஆணவமலத்தினை நீக்கி, அகங்காரத்தினை யொழித்து, நெஞ்சத்தினைச் சுத்தமாக்கி, மௌனத்தினைத் தாபித்து, அன்பு மயமாயிருந்து, பக்குவ முண்டாமளவு மாயாகாரியங்க ளணுகாதபடி யிருந்து சிவானுபவத்தினை யனுபவிப்பர். ஆகலின், உலகவின்ப மனுபவிப் பாரோடு ஞானவின்ப மனுபவிப்பாரையுஞ் சேர்த் திவ்வாறு கூறினர்.

முதல்வன் காட்டியும் கண்டும் உபசரித்து நிற்கும் அத்துவித நிலை யினை மறவாது கடைப்பிடிக்கும் தமது ஞானக்கண்ணை யிழப்பித்துத் தீய நெறிகட் கொண்டு சென்று மலங்களாணுய பிறவிக்குழியில் வீழ்வித் துத் துயருறுத்துவராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்று தொட்டுப் பயின்று வந்த சேர்ச்சி யறும்படி, அம் மறவியை மாற்றி ஞானக்கண்ணை யுதவிப் பிறவிக் குழியினின்று மெடுத்து நன்னெறிகட் செலுத்தி வாழ்விக்குஞ் சிவனடியாருடைய கூற்றிலே பேரன்புடையவராய் அவ்வன்பு சார்பாக விளங்கும் சிவஞானக்கண்ணால் அந்நிலை கடைப்பிடித் துணரப் பெற்றவராயினாரைப் பிராரத்த வினைகள் வாதியாவாகலின், நின்னன்பர் கூட்டமெய்த நினைவின்படிக்கு நீ முன்னின்று காண்பதே ன்னருட்பாரம்' -என்றனர். சிவஞானபோதம்: "மறப்பித்துத் தம்மை லங்களில் வீழ்க்குஞ், சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை - யறப்பித்துப், த்தரினத்தராய்ப் பரனுணர்வி னாலுணரு, மெய்த்தவரை மேவா வினை." னவும், சிவஞானசித்தியார்: "ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந் ட்டவர்கரும முன்கரும மாகச்செய்து, கூசிமொழிந் தருண்ஞானக் றியினின்று கும்பிட்டுத் தண்டமிட்டுக் கூத்தாடித்திரியே!" எனவும் வனவற்றாற் காண்க.

ஆறத்துவாக்களையுங் கடந்த பரமாகாசத்தினை இடமாகக்கொண்டு ங்குபவர் பெருமானாகலின், 'ஆராரு மறியாத சூதான வெளியில்

வெளியாகின்ற துரியமயமே!' என்றனர். நீலகண்ட பாஷ்யம்: "பரமாகாசாக்யம் சிவஸ்தானம் ஷட்விதஸ் யாத்வா பாரம் தத்தீத முச்யதே" என்றதனுற் காண்க. (6)

வானாதி பூதமா யகிலாண்ட கோடியாய்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுள வெலாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகி நின்றவனு நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றிடாதே
நானு னெனக்குளறி நானு விகாரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனு லதிட்டவலி வெல்லவெளி தோபகற்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்றனை யெழுப்பவச மோவினிப்
போதிப்ப தெந்தநெறியை
ஆனாலு மென்கொடுமை யனியாய மனியாயம்
ஆர்பா லெடுத்துமொழிவேன்?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ - ள்) வானாதி பூதமாய் - ஆகாயமுதலிய பஞ்சபூதங்களாகி, அகில அண்டகோடியாய் - சமஸ்தமான அண்டகோடிகளாகி, மலை ஆகி - மலைகளாகி, வளைகடலுமாய் - (உலகத்தைச்) சூழ்ந்த கடல்களுமாகி, மதி ஆகி - சந்திரனுகி, இரவியாய் - சூரியனுகி, மற்று உள்ள எல்லாம் ஆகி - வேறுள்ள பொருள்களெல்லாமாகி, வான் கருணை வெள்ளம் ஆகி - மேலான கருணைப் பிரவாகமாகி, நான் ஆகி நின்றவனும் - நானுகி நின்றவனும், நீ ஆகி நின்றிடவும் - நீயாக நிற்கச்செய்தேயும், நான் என்பது அற்றிடாதே - நானென்பதை யொழியாமலே, நான் நான் எனக் குளறி - நான் நான் என்று குளறி, நானு விகாரி ஆய் - பலவகை விகார முள்ளவனுகி, நான் அறிந்து அறியாமை ஆய் - நானறிந்தும் அறியாமை யுள்ளவனுகி, போனுல் - (மனம் போன போக்கில்) போனுல், (அது) அதிட்டவலி - எனது அதிருஷ்டமே யாகும்; (அதனை) வெல்ல எளிதோ - வெல்லுதற்கு எளிதாகுமோ?, பகல்பொழுது புகுமுன் - பகற்காலம் அஸ்தமிக்கு முன்னமே, கண் மூடி - கண் மூடிக்கொண்டு, பொய் துயில் கொள்வான்தனை - பொய்த் தூக்கம் தூங்குபவனை, எழுப்ப வசமோ - துயிலொழிக்க (ஒருவனுக்கு) வசமாகுமோ?, இனி போதிப்பது எந்த நெறியை - இனி போதிப்பது எந்த மார்க்கத்தை?, ஆனாலும் - ஆயினும், என் கொடுமை - என் கொடுமையைப் பிறர் கேட்கச் சொல்லின், (அது) அநியாயம் அநியாயம் - அநியாயமே அநியாயமே; (அங்ஙனமாதலால்) ஆர்பால் எடுத்து மொழி

வேன் - யாவரிடத்தில் எடுத்துச் சொல்லுவேன்? (சொல்வேன்); அண்டபகி—, என்க.

(வி - ரை) வானுதி யட்டமூர்த்தமும் அவற்றினுக்குப் பரமாகியுள்ளனவும், பின்னும் வாக்கு மனத்திற்கு எட்டுவனவும் எட்டாதனவுமாய் விரிந்து நிற்பது சிவமொன்றெ யாகலின், 'வானுதி பூதமா யகிலாண்ட கோடியா ...........நீயாகி' என்றனர். திருமந்திரம்: "தானே கடன்மலை யாதியுமாய் நிற்குந், தானே திசையொடு தேவரு மாய்நிற்குந், தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந், தானே யுலகிற் றலைவனு மாமே." எனவும், திருப்பாட்டு: "ஊனுயுயி ரானுயுட லானுபுல கானுய், வானுய்நில னுய்கடலானுய்மலை யானுய், தேனுர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டுறையு, ளானுவுனக் காளாயினி யல்லேனென லாமே." எனவும் வருவனவற்றுற் காண்க.

இங்ஙனம் முதல்வனது அட்ட மூர்த்தங்களுள் தானு மொருவனுய்ப் பாதந்திரனுக விருந்தும் அவ் வுண்மையினை யறியாது தன்னைச் சுதந்திரனுக எண்ணியதால் பலவிகாரங்கட்கு உட்பட்டு வாழ்ந்தே னென்பார், 'நானென்ப தற்றிடாதே நானு னெனக்குளறி நானு விகாரியாய் நானறிந்தறியாமையாய்ப், போனு லதிட்டவலி' என்றனர். 'பொய்த்துயில் கொள்வான்றனை யெழுப்ப வசமோ' என்றது, அறிந்தறியாமையை யுடைய என்னைத் திருத்த முயலுமோ என்றதாம். என் கொடுமை என்னை யிவ்வாறுக்கினதைக் கண்டு வைத்தும் பிறர்க் கெடுத்துரைத்து அவரையும் இவ்வாறுக்குதல் பாவமென் றஞ்சி, 'ஆர்பாலெடுத்து மொழிவேன்' என்றனர். ()

பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்துநிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்!
"துய்யனே! மெய்யனே! உயிரினுக் குயிரான
துணைவனே! இணையொன்றிலாத்
துரியனே! துரியமுங் காணு வதீதனே!
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே! அப்பனே!" எனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணைவடிவே!
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ - ள்) பொய்யினேன் - பொய்யினை யுடையேன்; புலையினேன் - புலா லுண்ணுதலை யுடையேன்; கொலையினேன் - கொல்லுந் தொழிலை யுடையேன்; நின் அருள் புலப்பட அறிந்தும் - உன் திருவருளின் தன் மையை வெளிப்பட வுணர்ந்தும், நிலையா - நிலைத்திராத, புன்மையேன் - புல்லிய தன்மையை யுடையேன்; கல்லாத தன்மையேன் - கல்லாத தன் மையை யுடையேன்; பொருள் அல்லா பொருளை - பொருட்டன்மை யுடைய தல்லாத பொய்ப்பொருளை, நன்மைபோல் நாடும் - நன்மையா யெண்ணி விரும்புகின்ற, வெய்யனேன் - வெவ்வியகுண முடையேன்; வெகுளியேன் - கோப முடையேன்; வெறியனேன் - பைத்திய குண முடையேன்; சிறியனேன் - சிறுமையை யுடையேன்; வினையினேன் என்று - தீவினையை யுடையேன் என்று, என்னை நீ விட்டு விட நினைவை யேல் - என்னை நீ கைவிட நினைப்பாயானால், தட்டழிவது அல்லாது - தடு மாறுவதே யன்றி, வேறு கதி ஏது - வேறு கதி (எனக்கு) யாது?, புக லாய் - (நீயே) சொல்வாய்!, துய்யனே! - பரிசுத்தனே!, மெய்யனே! - மெய்யானவனே!, உயிரினுக்கு உயிரான துணைவனே! - உயிர்க் குயிராகிய சகாய பூதனே!, இணை ஒன்று இல்லா துரியனே! - சமானமொன்று மில் லாத துரிய சொரூபனே!, துரியமும் காணு அதீதனே! - துரிய நிலையுங் காணக்கூடாத அதீதனே!, சுருதிமுடி மீதிருந்த ஐயனே! - வேதத்தி னுச்சியி லிருந்த இறைவனே!, அப்பனே! - உபகாரகனே!, என்னும் - என்றிப்படி பல வகையாய்த் துதிக்கின்ற, அறிஞர் - அறிவுடையோரது, அறிவை - அறிவாகிய இடத்தை, விட்டு அகலா - விட்டு நீங்காத, கருணை வடிவே - கருணைரூபியே!, அண்டபகி—, என்க.

(வி - ரை) தேவரீர் கருணை வடிவினராதலின், அடியேன் பொய், புலை, கொலை முதலிய தீமைகளையுடைய அபக்குவனெனக் கருதாது, எளியேன் கொடுமைகளைச் சந்நிதானத்தி லெடுத்துக் கூறிக் காக்கவேண்டு மெனக் கேட்டுக்கொள்ளும் சிறிது பக்குவ மடைந்திருத்தலின் அது காரணமாக அடியேனைத் தடுத் தாட்கொள்ளவேண்டும்; இலையேல் கெடுவ னல்லது வேறு கதி யில்லை என்றனர். (8)

எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
னிதயமு மொடுங்கவில்லை;
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை;
யாதினும் மபிமானமென்
சித்தமிசை குடிகொண்ட(து); ஈகையொ டிரக்கமென்
சென்மத்து நானறிகிலேன்;
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
தெரிசனஞ் செய்துமறியேன்;
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
புகன்றிடேன்; பிறர்கேட்கவே

பேர்திப்ப தல்லாது சும்மா யிருந்தருள்
பொருந்திடப் பேதைநானே;
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
அவனிமிசை யுண்டோசொலாய்!
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே!

(இ - ள்) எத்தனை விதங்கள் - எத்தனை விதங்களாக, கற்கினும் கேட்கினும் - கற்றாலும் கேட்டாலும், என் இதயமும் ஒடுங்கவில்லை - என் மனமும் அடங்கவில்லை; யான் என்னும் அகந்தை எள்ளளவும் மாறவில்லை - யானென்ற அகங்காரமானது எள்ளளவாயினும் நீங்கவில்லை; யாதினும் அபிமானம் - எல்லாப் பொருள்களிலும் அபிமானமானது, என் சித்தமிசை குடிகொண்டது - என் மனதிற் குடிகொண் டிருக்கிறது; ஈகையொடு இரக்கம் - கொடையுடன் இரக்கமென்பதை, என் சென்மத்தும் நான் அறிகிலேன் - எனது சன்மகாலந் தொடங்கி இதுவரையிலும் நானறிந்திலேன்; சீலமொடு தவவிரதம் - ஆசாரத்துடன் தவவிரதங்களை, ஒரு கனவில் ஆயினும் - ஒரு சொப்பனத்திலாஹலும், தெரிசனம் செய்தும் அறியேன் - சேவித்து மறியேன்; பொய்த்த மொழி அல்லால் - பொய் வார்த்தை பேசுவதன்றி, மருந்துக்கும் - மருந்துக்கெனினும், மெய் மொழி புகன்றிடேன் - மெய்யாகிய வார்த்தையைப் பேசமாட்டேன்; பிறர் கேட்க - பிறர் கேட்கும்படி, போதிப்பது அல்லாது - போதிப்பதன்றி, சும்மா இருந்து - சும்மாவிருந்து, அருள் பொருந்திடா பேதை நானே - உன் திருவருளைப் பெறாத அறிவிலி நானே; அத்தனை குணக்கேடர் - (என்னைப்போன்ற) அவ்வளவு குணவீனர்களை, அவனிமிசை கண்டதா கேட்டதா - உலகத்தின்மேல் கண்டதாகவாயினும் (இருக்கிறார்களென்று) கேள்விப்பட்டதாகவாயினும், உண்டோ - ஒரு பிரஸ்தாபம் உளதோ?' சொலாய் - சொல்வாயாக!, அண்டபகி—, என்க.

(வி - ரை) இதய மொடுங்குதற்கும், அகந்தை மாறுதற்கும், அபிமானம் யாதினும் உண்டாகாம லிருப்பதற்கும், ஈகையொடு இரக்க முண்டாகுதற்கும், தவவிரதஞ் செய்வதற்கும், மெய்ம்மொழி புகன்றிடற்கும் காரணமாயிருப்பது கல்வியாகவே யிருப்பினும், கற்கவேண்டிய ஞான நூல்களைக் கற்றலும் கேட்டலுஞ் செய்யாது உலகவின்பத்திற்கு வேண்டிய நூல்களையே கற்றும் கேட்டும் வாழ்ந்ததால் பல குணக்கேடு விளைந்த பேதையாயினே னென்றனர். திருவாசகம்: "கல்வியெனும் பல்கடற் பிழைத்தும்." எனவும், நாலடியார்: "அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா, துலகுநூ லோதுவ தெல்லாங் - கலகல, கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந் துணையறிவா ரில்." எனவும் வருவன வற்றாற் காண்க. (9)

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
　　வேழைநீ யென்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்துகை
　　யேற்றுநம தென்றவன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
　　பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
　　பொய்யினும் பொய்யாகையான்
மைக்கா லிருட்டனைய விருளில்லை யிருவினைகள்
　　வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
　　வரவில்லை போக்குமில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லா
　　மதீதமய மானதன்றோ?
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
　　யானந்த மானபரமே!

(இ - ள்) மௌனி ஆய் வந்து - மௌனகுருவாகி வந்து, எக்காலம் - எக்காலத்திலும், நீ தனக்கென்ன - நீ சுதந்தரமாக, ஒரு செயல் இல்லா - ஒரு செய்கை யில்லாத, ஏழை என்று - அறிவிலி யென்று போதித்து, இருந்திட்டு - எழுந்தருளி யிருந்து, எனது ஆவி உடல் பொருளும் - என்னுடைய பிராணன் தேகம் பொருள் ஆகிய மூன்றையும், கை ஏற்று - கையிலே ஏற்றுக்கொண்டு, நமது என்ற அன்றே - நம்முடையதென்று தேவரீர் அருளிச்செய்த வப்போதே, பொய் கால தேசமும் - பொய்யாகிய காலமும் பொய்யாகிய தேசமும், பொய்ப்பொருளில் வாஞ்சையும் - பொய்ப் பொருளில் விருப்பமும், பொய் உடலை மெய் என்னலும் - பொய்யாகிய உடம்பை மெய்யென்று கொள்ளுதலும், பொய் உறவு பற்றலும் - பொய் யுறவினரை (மெய்யறிவினராக மதித்துப்) பற்றுதலும், பொய் ஆகும் - பொய்யாய் முடியும்; நான் என்னல் - நான் என்பது, பொய்யினும் பொய் ஆகையால் - பொய்யாய் விடுதலால், மைக்கால் இருட்டு அனைய - மழைக் கால விருட்டை ஒத்த, இருள் இல்லை - அஞ்ஞானமாகிய இருளில்லை; இருவினைகள் வந்து ஏற வழியும் இல்லை - இருவினைகள் வந்து தொடர மார்க்கமு மில்லை; மனம் இல்லை - மனமென்ப தில்லை; அம்மனத்து இனம் இல்லை - அந்த மனத்தின் இனமானது மில்லை; வேறும் ஒரு வரவு இல்லை - வேறுமொரு வரவு இல்லை; போக்கும் இல்லை - செலவும் இல்லை; அக் காலம் இக்காலம் என்பது இல்லை - அந்தக்காலம் இந்தக்காலம் என்ப தில்லை; எல்லாம் - சர்வமும், அதீத மயம் ஆனது அன்றோ - மேன்மை யான வடிவாயிற்றல்லவா?, அண்டபகி—, என்க.

(வி - ரை) ஆன்மாவானவன் ஒவ்வொரு விடயங்களை யொவ் வொன்று யிந்திரியங்களினு லறிதலானும், அறியப்பட்டவற்றை மீள மறத்த லானும், ஒருவ னுணர்த்த வுணர்தலானும், இவ்வா றறிகின்ற தன்னையுந் தானறியாமையானும், சுதந்தர அறிவின்றி அறிவிக்க அறியுந் தன்மை யுடைத்தா யிருத்தலினுலும், 'எக்காலமும் தனக்கென்ன வொருசெயலிலா வேழைநீ' என்றனர். சிவஞானசித்தியார்: "அறிந்திடு மான்மா வொன்றை மற்றொன்று லறிதலானு, மறிந்தவை மறத்த லானு மறிவிக்க வறித லானு, மறிந்திடுந் தன்னை யுந்தானறியாமை யானுந் தானே, யறிந் திடு மறிவ னன்று மறிவிக்க வறிவ னன்றே." எனவும், சிவப்பிரகாசம்: "தனக்கென வறிவி லாதான் ரூனிவை யறிந்து சாரான், றனக்கறி விலாத வாயி ரூனறி யாது சார, தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன், றனக்கென வறிவா ரூலிச் சகலமு நுகருந் தானே." எனவும் வருவனவற்றுற் காண்க.

சகலர்க்கும் பக்குவம் வந்தகாலத்தே முதல்வனே ஆசாரியவடிவங் கொண்டுவந்து ஆட்கொள்வனுகலின், 'மௌனியாய் வந்து' என்றனர். திருவாசகம்: "அருபரத்தொருவ னவனியில்வந்து, குருபரனுகி யருளிய பெருமையைச் சிறுமையென் றிகழாதே." எனவும், திருமந்திரம்: "சுத்த சிவனேகுரு வாய்வந்து தூய்மைசெய், தத்தனை நல்கருள் காணு வதி மூடர், பொய்த்தகு கண்ணுநமரென்பர் புண்ணிய, ரத்த னிவனென் றடி பணி வாரே." எனவும் வருவனவற்றுற் காண்க.

அங்ஙனம் ஆசாரியர் சீடனுடைய உடல் பொருள் ஆவி மூன்றினையுந் தமதாகக் கொள்வாராகலின், 'எனதாவி யுடல்பொருளுங் கையேற்று நம தென்றவன்றே' என்றனர். திருவாசகம்: "அன்றே யென்ற னுவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ, வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண் டோண் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானே விதற்கு நாயகமே." என்றதனுற் காண்க.

தனக்கென வொரு செயலு மின்றி உடல் பொரு ளாவி மூன்றினை யும் தத்தஞ் செய்தபின்னர் இவன் செய லனைத்துந் திருவருட் செயலாய் முடியு மாகலின், 'பொய்க்கால தேசமுதல் யாவும் அதீத மயமான தன்றே' என்றனர். சிவஞானசித்தியார்: "சிவனுமிவன் செய்தியெலா மென்செய்தி யென்னுஞ் செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும், பவமகல வுடனுகி நின்றுகொள்வான் பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே." என்றதனுற் காண்க.

# சுகவாரி

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதே
னெனருசித் திடவலியவந்
தின்பங் கொடுத்தநினை யெந்நேர நின்னன்ப
ரிடையரு துருகிநாடி
உன்னிய கருத்தவிழ வுரைகுளறி யுடலெங்கு
மோய்ந்தயர்ந் தவசமாகி
உணர்வரிய பேரின்ப வநுபூதி யுணர்விலே
யுணர்வார்க ளுள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
கருதிநகை யாவளதுபோல்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாம்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) இன் அமுது என - இனிய அமிர்தம் போலவும், கனி (என) - முக்கனிகள் போலவும், பாகு (என) - சர்க்கரைப் பாகு போலவும், கற்கண்டு (என) - கற்கண்டு போலவும், சீனி (என) - சீனி போலவும், தேன் (என) - தேன் போலவும், ருசித்திட - ருசிக்கும்படி, வலிய வந்து இன்பம் கொடுத்த நின்னை - வலிய வந்து சுகங் கொடுத்த வுன்னை, நின் அன்பர் - உன் அன்பர்கள், எந்நேரம் இடையறுது உருகி நாடி - சதா காலமும் இடையருமல் நாடி யுருகி, உன்னிய கருத்து அவிழ - நினைத்த மனமும் நெகிழ்தலால், உரை குளறி - மொழி குளறி, உடல் எங்கும் ஓய்ந்து - உடம்பெல்லாம் எய்த்து, அயர்ந்து - அயர்வை யடைந்து, அவசம் ஆகி - பரவசமாகி, உணர்வு அரிய - அறிதற்கரிய, பேரின்ப அநுபூதி யுணர்விலே - பேரின்ப அனுபவ வுணர்ச்சியால், உணர்வார்கள் - அறிந் தனுபவிப்பார்கள்; உள்ளபடி - (இது) யதார்த்தம்; கன்னிகை ஒருத்தி - ஒரு கன்னிகையானவள், சிற்றின்பம் - சிற்றின்பமானது, வேம்பு என்னினும் - வேம்பென்று சொல்வாளாயினும், பக்குவத்தில் கைக்கொள்வள் - பருவகாலத்தில் (அச் சிற்றின்பத்தையே பேரின்பமாக வெண்ணி) கைக் கொள்வாள்; கணவன் அருள் பெறின் - கணவனருளைப் பெற்று வாழ்வளாயின், முன்னே சொன்ன ஆறு என் என - முன்னே சொன்ன வழியாதாய் முடிந்ததென்று வினவ, கருதி - (அதை) நினைத்து, நகையாவள் - நகைப்பள்; அதுபோல் - அதுபோலவே, சொன்னபடி கேட்கும் - சொன்னபடி கேட்கின்ற, இ பேதைக்கு - இவ் வறிவிலேற்கு, நின் கருணை தோற்

றின் - உன் கருணை யுளதாயின், சுகாரம்பம் ஆம் - சுகோதயமாகும்; சுத்த நிர்க்குணமான பரதெய்வமே! - சுத்த நிர்க்குணமாகிய மேலான தெய்வமே!, பரஞ்சோதியே! - மேலான வொளிரூபனே!, சுகவாரியே! - இன்ப சாகரமே!, என்க.

(வி - ரை) அதி தீவிரதர பக்குவத்தினை யடைந்த அடியார்கள் முதல்வனுடன் இரண்டற விருந்து சிவானந்த வாழ்வினை யனுபவிக்குங் காலத்தில் இன்பங் கொடுத்தல் பதியாகவும், இவ்வின்பத்தினை விளைவித்தல் பாசமாகவும், இவ்வின்பத்தினை யேற்று அனுபவித்தல் பசுவாகவு மிருத்தலினால், 'இன்னமுது கனியாகு.........உணர்வார்க ளுள்ளபடி காண்' என்றனர். இதில் 'கொடுத்த நினை' என்றும், 'அவசமாகி' யென்றும், 'உணர்வார்கள்' என்றும் கூறி முப்பொருளை விளக்கினர். உண்மை விளக்கம்: "முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள், சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே, யின்பங் கொடுத்தலிறை யித்தை விளைவித்தல்மல, மன்புடனே கண்டுகொ ளப்பா." என்றதனாற் காண்க.

'சோடசகலையு நிரம்பிய சந்திரனைப்போல' வயது நிறைந்து அதி சுந்தரவதியாய் மதன கலைகளைக் கற்றுடையவ ளாயினும் பக்குவ மடையாத கன்னிகை காமரசத்தை யறியாள். பக்குவ மடைந்தபின் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டுத் தலைவனுந் தானுமாய்ப் புணர அந்தக் கலவியி லுண்டான சுக மிவ்வா றென்று 'ஊமைகண்ட கனாப்போல'ப் புறத்தியாருக்குஞ் சொல்லாதிருப்பள். அதுபோல, ஆன்மா வொருவன் சகல சாஸ்திர பாரங்கதனா யிருந்தும் பக்குவ மடையாத போது திருவருளுண்மை சிறிது மறியான்; பக்குவ மடைந்து, முதல்வனுடன் கலந்து, ஆனந்தானுபவ மடைய (அவ் வனுபவம் ஞாதாக்களுக்கே யனுபவ மொழியப்) பிறர்க் கெடுத்துச் சொல்லுந் தன்மையனவன்று. ஆகலின், 'கன்னிகையொருத்தி சிற்றின்பம்வேம் பென்னினுங் கைக்கொள்வள் பக்குவத்தில், கணவனருள் பெறின்முன்னே சொன்னவா றென்னெனக் கருதிநகை யாவள்' என்றனர். சிவஞான சித்தியார்: "கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணார் காணுதார் கன்னிகைதான் காமரதங் காணுள், மருவியிரு வரும்புணர வந்த வின்பம் வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வ, ருருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலைகாண் சிவனை யுணராதா ருணர்வினு லுணர்வதுகற் பனைகா, ணருள்பெறிலவ் விருவரையு மறிவிறந்தங் கறிவ ரறியாரேற் பிறப்பு மறுதாணவமு மறுதே." என்றதனாற் காண்க.

இவ்வாறாகக் கன்னிகைக்குச் சிற்றின்பங் கைத்தலும் பருவமடைந்த மங்கைக்கு ருசித்தலும் இயற்கை யாதல்போல, அருள் பெறாத எனக்குச் சுகானுபவம் கைப்பாகவும் பெற்ற பெரியோர்கட்கு இனிப்பாகவு மிருக்கு மென்பதாம். (1)

அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
னற்றே னலந்தேனென
என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டா
யிரங்கியொரு வழியாயினும்
இன்பவெள் ளாகவந் துள்ளங் களிக்கவே
யென்னைநீ கலந்ததுண்டோ?
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ?
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
தன்மையாற் றனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுரையாய்!
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) அன்பின் வழி அறியாத - அன்பின் மார்க்கத்தை யுணராத, என்னை - அடியேனை, தொடர்ந்து - பற்றி, என்னை அறியாத பக்குவத்தே - என்னை உணராத பருவத்திற்றானே, ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்து - ஆசை வெள்ளத்தினைப் பெருகப்பண்ணி, நான் அற்றேன் அலந்தேன் என - நான் கெட்டேன் வாடினேன் என்று சொல்லும்வண்ணம், என் புலன் மயங்க பித்து ஏற்றிவிட்டாய் - என்னறிவு மயங்கும்படி பித்தேற்றிவிட்டனை; நீ - (இப்படிச் செய்த) நீ, ஒரு வழியாயினும் இரங்கி- ஒருதரமாயினு மிரங்கி, இன்ப வெள்ளமாக வந்து - ஆனந்த வெள்ளமாக வந்து, உள்ளம் களிக்க - மனங் களிக்கும்படி, என்னை கலந்தது உண்டோ - என்னைச் சேர்ந்தது உண்டோ?, தன் பருவ மலருக்கு - தனக்குரிய பருவ கால மலருக்கு, மணம் உண்டு - வாசனை யுண்டு; வண்டு உண்டு - வண்டு மொய்த்த லுண்டு; தண்முகை தனக்கும் உண்டோ - (அவைகள்) குளிர்ச்சியாகிய அரும்புகளுக்கும் உண்டாமோ?, தமியனேற்கு - தனியேனுக்கு, இ வண்ணம் - இந்தப் பிரகாரம், திருவுளம் இரங்காத தன்மையால் - திருவுளம் கனியாத தன்மையால், தனி இருந்து துன்பம் உறின் - தனியாயிருந்து துன்பப்பட்டால், அழியாத நின் அன்பர் சுகம் - நசிக்காத உன் அன்பர்க்குரிய சுகமானது, எங்ஙன்வந்து வாய்க்கும் - எப்படி வந்து கிடைக்கும்?, உரையாய் - சொல்லாய்!, சுத்த நிர்க்குணமான—, என்க.

(வி - ரை) மலருண்டானபோதே அதில் மண மிருந்தும் அம் மலர் மலர்ந்த பின்னரே மணம் வெளிப்படும். அது வெளிப்பட்ட அவசரத்தே வண்டுவந் தம்மலரிற் பொருந்தும். அதுபோல, ஆன்மா வுள்ளவன்றே அவ்வான்மா விடத்துத் திரோதான சத்தியானது பதிந்திருந்தும் அவ்

வான்மாவினுக்கு மலபரிபாகம் வந்த பின்னரே அருட்சத்தி வெளிப்படும். அது வெளிப்பட்ட அவசரத்தே முதல்வன் பொருந்துவன். ஆகலின், இறைவனை வண்டாகவும், அறிஞரைப் பருவகால மலராகவுங் கொண்டனர். இங்ஙனமாக, அறியாத பருவத்திலேயே அன்புண்டானதற்குக் காரண மென்னையோ வெனின், பூர்வ சென்மாந்த்ர புண்ணியத்தின் தொடர்ச்சி யேயாம், அதுவும் இறைவன் அனுக்கிரகமே யாகலினால், 'அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை யறியாத பக்குவத்தே, ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா னற்றே னலந்தேன்' என்றனர். திருவாசகம்: "அறிவி லாதவெ னைப்புகுந் தாண்டுகொண் டறிவதை யருளிமே, னெறியெ லாம்புல மாக்கிய வெந்தையைப் பந்தனை யறப் பானைப், பிறிவி லாதவின் னருள்பெற் றிருந்துமா றாடுதி பிணநெஞ் சே, கிறியெ லாமிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத் தாயென்னைக் கெடுமாறே." என்ற தனாற் காண்க.

'கலந்ததுண்டோ' என்றதனால் இதுகாறுங் கலவாதிருந்து இனி நூதனமாகக் கலக்கும்படி கேட்டுக்கொண்ட தன்று. அனாதியே கலந்துள்ள முதல்வன் வெளிப்பட விரும்பியதாம். என்னுடன் கலக்கத் திருவுளப்பாங்கு உண்டாகாமையால் எண்ணி யெண்ணித் துன்பமுறுவேனுக்கு, உன்னைக் கலந்தனுபவிக்கும் அறிஞரின்பம் எனக்கெக்காலத் துண்டாமோ என்பார், 'தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத தன்மையாற் றனியிருந்து, துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர் சுகம்வந்து வாய்க்கு முரை யாய்' என்றனர். (2)

கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
    கன்னெஞ்ச முருகவிலையே
  கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
    கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
    வழக்குக் கிழுக்குமுண்டோ?
  வானமாய் நின்றின்ப மழையா யிறங்கியெனை
    வாழ்விப்ப துன்பரங்காண்!
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
    புகலிடம் பிறிதுமுண்டோ?
  பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
    புன்மையே னவனந்தோ!
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
    சும்மாவிருக்க வருளாய்!
  சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
    சோதியே! சுகவாரியே!

(இ - ள்) ஐய - ஐயனே !, கல்லேனும் ஒரு காலத்தில் உருகும் - கல்லாயினும் ஒரு கால விசேடத்தில் உருகாநிற்கும்; என் கல் நெஞ்சம் உருக இல்லையே—, (என்ன ஆச்சரியம்); நான்முகன் - பிரமன், கருணைக்கு - திருவருட்கு, இணங்காத - இணங்கியிராத, வன்மையையும் - மனவன்மையையும், கற்பிக்க - சிருட்டிக்க, ஒரு கடவுளோ - ஒப்பற்ற தெய்வமோ; வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்னும் - வல்லவன் வாய்த்ததே வாய்க்கால் என்கிற, பெரு வழக்கு - பெரு வழக்கத்துக்கு, இழுக்கும் உண்டோ - குற்ற முண்டாகுமோ?, வானமாய் நின்று - பரமா காயமாய் நின்று, இன்ப மழையாய் இறங்கி - ஆனந்த மழையாயிறங்கி, என்னை வாழ்விப்பது - என்னை (நித்திய பதவியில்) வாழச் செய்வது, உன் பரம் - உன்பாரமாகும்; பொல்லாத சேய் எனில் - பொல்லாத குழந்தையாயிருந்தால், (அதனை) தாய் தள்ளல் நீதமோ - தாயானவள் தள்ளிவிடுதல் நீதியாகுமோ?, (அவ்வாறு தள்ளிவிட்டால்) புகல் இடம் பிறிது முண்டோ - (அக்குழந்தைக்கு) அடைக்கலமான இடம் வேறும் உண்டோ?, பொய் வார்த்தை சொல்லில் - பொய் மொழி பேசுவேனாேல், திருவருட்கு அயலுமாய் - திருவருளுக்குப் புறமாகி, புன்மையேன் ஆவன்- அற்பனு மாவேன்; அந்தோ - ஐயோ !, சொல்லால் முழக்கில் - சொல் லால் முழக்குதல் செய்தால், சுகம் இல்லை - இன்ப மில்லை; மௌனி ஆய்- மௌனி ஆகி, சும்மா இருக்க அருளாய் - சும்மா இருக்கும்படி அருள் செய் வாய்; சுத்த நிர்க்குணமான—, என்க.

(வி - ரை) சூரியனுஞ் சந்திரனுஞ் சந்திக்கிற அவசரமாகிய அமா வாசையன்று கருங்க லுருகுமென்பது சாத்திர சம்மதமாகலின், 'கல்லேனு மையவொரு காலத்தி லுருகும்' என்றனர். அவ்வவசரம் ஒருவிமைப்போ தென்பர். நெஞ்சமானது கல்போன்ற ஒரு கடினமான உருவப்பொரு ளல்லவாயினும், அருள்வழி செல்லாமல் எக்காலமும் மருளினையே நாடிக் கொண் டிருத்தலின், 'கன்னெஞ்ச முருகவிலையே' எனவும், அங்ஙனம் நெஞ்சிற்குவன்மையுண்டான தன்மை பிராரத்துவத்தால் விளைந்ததல்லாது தனக்கெனச் சுதந்தரங்கொண்டு தானே யிங்ஙன முண்டாக்கப் பிரமனுக் குக் கூடாதென்பார், 'கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன் கற் பிக்க வொருகடவுளோ' எனவும், 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்னும் பழமொழிக் கிணங்க, சகல சாமர்த்தியனாகிய நீ என்னெஞ்சினை யுருகச்செய்வதில் யாதொரு தடையுமில்லை யென்பார், 'வல்லான் வகுத் ததே வாய்க்கா லெனும்பெரு வழக்குக் கிழுக்கு முண்டோ' எனவும், ஆகலின் அடியே னெஞ்ச முருகும்படி யென்பா லிறங்குவா யென்பார், 'வானமாய் நின்றின்ப மழையா யிறங்கியெனை வாழ்விப்ப துன்பரங்காண்' எனவும், எத்தகைய குரூரமான குழந்தையேயாயினும் அதனை நீங்காது ஆதரிக்குங் கடமை தாய்க்காயதுபோல, நீயே அடைக்கல மென்பார், 'பொல்லாத சேயெனிற் றாய்தள்ளல் நீதமோ புகலிடம் பிறிதுமுண்டோ'

எனவும், நடிப்பாகப் பேசுவனேல் அருளுக் கன்னியமான பிராகிதனுவே னென்பார், 'பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப் புன் மையேனுவன்' எனவும், சொற்சாலங்களாற் பிரயோசன மில்லை யென் பார், 'சொல்லான் முழக்கிலோ சுகமில்லை' எனவும், மௌனுனந்த மடைந்துகொண் டிருக்கும்படி செய்வர் யென்பார், 'சும்மா விருக்கவரு ளாய்' எனவும் கூறினர். (3)

என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லிள்கமன தழலின் மெழுகாய்
இடையறு துருகவரு மழைபோ லிரங்கியே
இருவிழிக ணீரிறைப்ப
அன்பினுன் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
அமிர்தசஞ் சீவிபோல்வந்
தாநந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
யார்க்காக வடிமைகொண்டாய்?
புன்புலான் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
சொப்பனத் தினும்வேண்டிலேன் ;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) என்பு எல்லாம் - எலும்புகளெல்லாம், நெக்குடைய - நெகிழ்ந்து உடையவும், ரோமம் சிலிர்ப்ப - உரோமஞ் சிலிர்க்கவும், உடல் இளக - உடம்பு குழையவும், மனது - மனமானது, இடையறாது - இடை யறாமல், அழலின் - அக்கினியி லிட்ட, மெழுகாய் உருக - மெழுகுபோ லுருகவும், இரு விழிகள் - இரண்டு கண்களும், வரும் மழைபோல் இரங்கி நீர் இறைப்ப - வருகின்ற மழையைப்போல இரங்கி நீரைச் சொரியவும், அன்பினல் மூர்ச்சித்த அன்பருக்கு - அன்பினுல் மூர்ச்சை யடைந்த அன் பர்களுக்கு, அங்ஙனே - அவ்விடத்தே, அமிர்த சஞ்சீவிபோல் வந்து - அமிர்த சஞ்சீவி மருந்துபோல எழுந்தருளி, ஆனந்த மழை பொழிவை - இன்பமழையைப் பொழிவாய் ; என்னை ஆர்க்காக அடிமை கொண்டாய் - என்னை யாவர்பொருட்டு அடிமை கொண்டனை ?, புன்புலால் மயிர் தோல் நரம்பு என்பு மொய்த்திடு - அழிவாகிய மாமிசம் ரோமம் தோல் நரம்பு எலும்பு ஆகிய இவைகள் நெருங்கி யிருக்கிற, புலைக்குடிலில்-புலால் நாற்றம் பொருந்திய குடிசையில், அருவருப்பு - அருவருப்பே யுள்ளது ; பொய் அல்லவே - இது பொய்யாகாதே ; என் புந்தி - என் புத்தியானது, இதனை மெய் என்று நம்பி - இதனை மெய்யென்று நம்பி, பாழிலே செல்லுமோ -

பாழ்வழியிற் செல்லுமோ ?, துன்பமாய் அலையவோ - (அப்படிச் செல்வதனால்) துன்பங்கொண்டு திரியவோ ?, ஐய - ஐயனே !, உலக நடை - உலக நடையை, ஒரு சொப்பனத்தினும் வேண்டிலேன் - ஒரு கனவினும் விரும்பேன் ; சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) என்பு நெக்குடைதல் முதலிய குணங்களுள்ள அன்பர்கட்கு நீ இரங்குத லியற்கையே ; அவை யொன்று மில்லாத என்னை யார்பொருட்டு அடிமை கொண்டாய் என்பார், 'என்பெலா நெக்குடைய......... ......ஆர்க்காக அடிமைகொண்டாய்' என்றனர். திருவாசகம் : "அன்பராகிமற் றருந்தவ முயல்வா ரயனு மாலுமற் றழலுறுமெழுகா, மென்ப ராய்நினை வாரெனைப் பலர்நிற்க விங்கனே யெற்றினுக் காண்டாய்." என்றதனாற் காண்க.

தேகமானது அதிக அருமையான இலாவண்ணியத்துடன் விளங்குவதாயினும் அது அசுத்தமே என்பார், 'புன்புலால் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு புலைக்குடில்' என்றார். திருக்கடைக்காப்பு : "நிணங்குடர் தோனரம் பென்புசே ராக்கை தானிலாய தன்றாற், குணங்களார் கல்லது குற்றநீங் காதெனக் குலுங்கினேயே, வணங்குவார் வானவர் தானவர் வைகலு மணங்கொ டேத்து, மணங்கமு ழூர்தொழு துய்யலா மையல் கொண் டஞ்சனெஞ்சே !" என்றதனாற் காண்க.

இத்தகைய தேகத்தினுக்கு உபகாரமாயிருக்கும் உலக வாழ்வும் அனித்திய மென்பார், 'உலகநடை யையவொரு சொப்பனத் தினும்வேண்டிலேன்' என்றனர். திருப்பாட்டு : "வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம், பேழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான், றாழாதறஞ் செய்மின் றடங்கண்ணான் மலரோனுங், கீழ்மேலுற நின்றான்திருக் கேதார மெனீரே." என்றதனாற் காண்க. (4)

வெந்நீர் பொறாதெனுடல் காலின்முட் டைக்கவும்
    வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
    வேறொன்றை யொருவர்சொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதும்
    ஐயநின் னருளறியுமே ;
ஆனாலு மெத்தப் பயந்தவ னியானென்னை
    யாண்டநீ கைவிடாதே !
இந்நேர மென்றிலை யுடற்சுமைய தாகவும்
    எடுத்தா லிறக்கவென்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
    இறைஞ்சுக ராதியான

தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வருத்தவருள்
துணையென்று நம்புகின்றேன்;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) என் உடல் - என்னுடம்பானது, வெந்நீர் பொறாது - வெந்நீரைப் பொறுக்கமாட்டாது; காலில் முள் தைக்கவும் - காலினிடத்து முள்ளானது தைத்துக்கொள்ளவும், வெடுக்கென்று அசைத்து எடுத்தால் - வெடுக்கென்று அசைத்துப் பிடுங்கினால், (அதற்குச் சகிக்காமல்) அங்ஙனே - அப்பொழுதே, விழி இமைத்து - கண்ணிமைத்து, தண் அருளை நாடுவேன் - தண்ணிய திருவருளைச் சிந்திப்பேன்; ஒருவர் வேறு ஒன்றைக் கொல்லின் - ஒருவர் வேறொரு சீவனைக் கொன்றால், அந்நேரம் - அப்பொழுது, ஐயோ - அந்தோ!, என் முகம் வாடி நிற்பதுவும் - எனது முகம் வாடி நான் நிற்கும் நிலையும், நின் அருள் அறியுமே - உனது திருவருளறியுமே; ஐய - ஐயனே!, ஆனாலும் - ஆயினும், யான் மெத்தப் பயந்தவன் - நான் மிகப் பயந்தவன்; (ஆதலால்) என்னை ஆண்ட நீ கைவிடாதே - என்னை யாண்டுகொண்ட நீ கைநெகிழ விடாதே; உடல் சுமை - உடற்பாரம், இந்நேரம் என்று இல்லை - இன்ன காலத்தில் விழுமென்னு நியதியில்லை; அது ஆகவும் - அது அங்ஙனமாகவும், எடுத்தால் இறக்க என்றே - உடலெடுத்தால் இறக்க என்றே, எங்கெங்கும் - எவ்விடத்தும், ஒரு தீர்வை ஆயம் உண்டு - ஒரு தீர்ப்பும் கடமையு முண்டு; ஆயினும் - ஆனாலும், இறைஞ்சு - வணங்காநின்ற, சுகர் ஆதி ஆன - சுகர் முதலான, சொல் நீர்மை ஆளர்க்கு - பழமையாகிய குணவான்களுக்கு, மானுடம் வருத்த அருள் - மனித சரீரத்தை வருத்த திருவருளை, துணை என்று நம்புகின்றேன் - சகாயம் என்று நம்புகின்றேன், சுத்த நிர்க்குணமான—, என்க.

(வி - ரை) சிறுவயது தொட்டு நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக வளர்ந்த தேகமாகலின் யாதாமொரு கஷ்ட நேரிடின் சகியாதென்பார், 'வெந்நீர் பொறாதெனுடல் காலின்முட் டைக்கவும் வெடுக்கென் றசைத்தெடுத்தால், விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்' என்றனர். ஒருவர் ஒரு சீவனைச் சிறிதுங் காருண்ணியமின்றிக் கொல்லுங்கால் பார்க்க நேரிட்டபோது எனக்குண்டாம் முகவாட்டத்தினைத் தேவரீர் நன்கறிவீ ரென்பார், 'வேறொன்றை யொருவர் கொல்லின், அந்நேர மையோ வென் முகம்வாடி நிற்பதுவும் ஐயநின் னருளறியுமே' என்றனர். இங்ஙனமிரங்குவது சன்மார்க்க நெறியினர்க் கியற்கை. திருவருட்பா: "துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத் தொடங்கிய போதெல்லாம் பயந்தேன், கண்ணினு லையோ பிறவுயிர் பதைக்கக் கண்ட காலத்திலும் பதைத்தேன், மண்ணினில் வலையுந் தூண்டிலுங் கண்ணி வகைகளுங் கண்டபோதெல்லா, மெண்ணியென் னுள்ள நடுங்கியே நடுக்கமெந்தை நின் றிருவுளமறியும்." என்றதனாற் காண்க.

பிறப்பன இறக்கும் என்பது நியதமாக ஏற்பட்டிருக்கினும், சுகர் முதலிய பெரியோர்கட்குத் தீர்க்காயுளைக் கொடுத்த திருவருளெதுவோ அதனை நாடுகின்றேன் என்பார், 'எடுத்தா லிறக்கவென்றே, எங்கெங்குமொருநீர்மை யாயமுண்டாயினும் இறைஞ்சுசுக ராதியான, தொன்னீர்மையாளர்க்கு மாணிடம் வகுத்தவருள் துணையென்று நம்புகின்றேன்' என்றனர். அங்ஙனம் அடியார்கள் தீர்க்காயுளை விரும்புவது எற்றுக்கோவெனின், வாய்ந்த சன்மத்திலேயே திருவருளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கேயாம்.

பற்றுவன வற்றிடு நிராசையென் றொருபூமி
பற்றிப்பிடிக்கு மியோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின்மன மறுமென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்கவந்த கனிபோல்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்துமொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெறுதவனு மல்லேன்
பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்கவுலகஞ்
சுற்றிநகை செய்யவே யுலையவிட் டாயெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ ?
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ-ள்) பற்றுவன - (ஐம்பொறிகளால்) பற்றப்படுகிற விடயங்கள் யாவும், அற்றிடும் - அற்றொழிகைக்குக் காரணமாகிய, நிராசை என்று - அவாவின்மையென்று சொல்லப்பட்டு, ஒரு பூமி - ஒரு பூமியுண்டு; பற்றிப் பிடிக்கும் - (பிராண வாயுவினைத் தொடர்ந்து) பிடித்து நிறுத்துகின்ற, யோக பாங்கின் - யோகாப்பியாசத்தால் கைவருகின்ற, பிராணலயம் என்னும் - வாயு நிக்கிரகம் என்கிற, ஒரு பூமி - ஒரு பூமி யுண்டு; இவை பற்றின் - இவற்றை யாதாரமாகப் பிடித்தால், மனம் அறும் என்ன - மனமிறக்குமென்று, கற்றை அம் சடை - திரட்சியாகிய அழகிய சடையையுடைய, மௌனி - மௌனகுரு, தானே - தானாகவே, கனிந்த கனி - முதிர்ந்த காயை, கனிவிக்க - பழுப்பிக்க, வந்த கனிபோல் - உண்டாகிய பழம்போல், கண்டது - கண்கூடாகக் கண்டது, இ நெறி என - இந்த மார்க்கமென்று, திருவுளக் கனிவினொடு - மன விரக்கத்துடன், கனிவாய் திறந்தும் - கனிவாய் திறந்தாயினும், ஒன்றை - ஒரு மொழியை, பெற்றவனும் அல்லேன் - சொல்லப் பெற்றேனு மல்லேன்; பெறுதவனு மல்லேன் - பெறுதேனு மல்லேன்; பெருக்கத் தவித்து உளறி - மிகவும்

இளைத்தரற்றி, பெண் நீர்மை என்ற - பெண்மைக் குணம் போல, இரு கண் நீர் இறைத்து - இரண்டு கண்களினின்றும் நீரைச் சிந்தி, நான் பேய் போல இருக்க - நான் பேய்போல அலங்கோலமா யிருக்க, (அந்த நிலையினைக் கண்டு) உலகம் - உலகமானது, சுற்றி நகை செய்ய - சூழ்ந்து நகை செய்யும்படி, உலையவிட்டாய் என்னில் - அலையவிட்டனையாயின், இனி சொல்ல வாயும் உண்டோ - இனிச் சொல்லுதற்கு (எனக்கு) வாயு முளதோ?, சுத்த நிர்க்குணமான—, என்க.

(வி - ரை) மனோநிக்கிரகத்திற்கு அத்தியாவசியமாய் முதலில் வேண்டுவது அவாவின்மை யாகலின், 'பற்றுவன வற்றிடு நிராசையென் றொருபூமி' என்றனர். திருமந்திரம்: "ஆசை யறுமின்க ளாசை யறுமின்க, ளீசனோடாயினு மாசை யறுமின்க, ளாசைப் படபட வாய்வருந் துன்பங்க, ளாசைவிட விட வானந்த மாமே." என்றதனாற் காண்க. அவா வற்றபின்பு இரண்டாவது செய்யவேண்டிய முக்கியமான காரியம் பிராண வாயுவினை யடக்க வேண்டுவதாகலின், "பற்றிப்பிடிக்கு மியோகப், பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமி' என்றனர். திருவுந்தியார்: "காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினு, ளாற்றுவ தாற்றலென் றுந்தீபற, வல்லாத தல்லலென் றுந்தீபற." என்றதனாற் காண்க.

முதல்வன் மௌனி கோலங்கொண் டெழுந்தருளி வந்து அடியேனுக்கு வைகரி வாக்கால் உபதேசியாது குறிப்பால் விளக்கிச் சொன்னாராகலின், 'கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு கனிவாய் திறந்துமொன்றைப், பெற்றவனு மல்லேன் பெறாதவனு மல்லேன்' என்றனர். அங்ஙனமாயின், கனிவாய் திறந்த தெந்த அவசரமோ வெனின், உபதேசிக்கு முன்னர் ஆசி முதலிய கூறிய காலத்திலாம்.

சன்மார்க்க நெறியினர்களாகிய அறிஞர்கள் உலகவிஷயங்களை மறந்து ஆடியும் பாடியும் அழுதும் தொழுதும் பேய்பிடி யுண்டார்போல வாழ்க்கையில் பிராகிருதர் அவர்களை நோக்கிப் பைத்தியக்காரரென மதித்து நகையாநிற்பராகலின், 'இரு கண்ணீ ரிறைத்துநான் பேய்போ லிருக்கவுலகம், சுற்றிநகை செய்யவே யுலையவிட்டாய்' என்றனர். (6)

அரும்பொனே மணியேயெ னன்பேயெ னன்பான
அறிவேயெ னறிவிலூறும்
ஆநந்த வெள்ளமே யென்றென்று பாடினேன்
ஆடினே னாடிநாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்;

இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு னுலுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ?
என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ?
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்!
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) அரும் பொன்னே - அருமையாகிய சுவர்ணமே!, மணியே - மாணிக்கமே!, என் அன்பே - என்னுடைய அன்புருவமே!, என் அன்பு ஆன அறிவே - எனது அன்பினிடத்தில் விளைந்த அறிவே!, என் அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளமே - எனது அறிவினிடத்துச் சுரக்கின்ற ஆனந்தப் பெருக்கே!, என்று என்று பாடினேன் - என்று பலகாற் சொல்லிப் பாடினேன்; ஆடினேன் - கூத்தாடினேன்; நாடி நாடி - தேடித் தேடி, விரும்பி - அபேட்சித்து, கூவினேன் - அழைத்தேன்; உலறினேன் - (நீ வாராமையால்) சினந்தேன்; அலறினேன் - (அக் கோப மாறி) வாய்விட் டரற்றினேன்; மெய் சிலிர்த்து - உடம்பு சிலிர்த்து, இரு கை கூப்பி - இரண்டு கைகளைக் குவித்து, விண் மாரி என - மேகத்தினின்றும் வீழ்கிற மழையைப்போல, என் இரு கண் மாரி பொழிய - என்னுடைய இரண்டு கண்கள் வருஷத்தினைப் பொழியா நிற்க, யான் வேசற்று அயர்ந்தேன் - நான் மனம் நொந்து வாடினேன்; இரும்பு நேர் - இரும்புக்குச் சமானமான, நெஞ்சகம் - (கடின) மனத்தையுடைய, கள்வன் ஆனாலும் - சோரனாயினும், உன்னை இடைவிட்டு நின்றது உண்டோ - உன்னை மறந்திருந்தது உண்டோ?, நீ என்று - நீ எப்பொழுது (இருந்தாய்), அன்று நான் - அன்று நானும் (இருந்தேன்); (ஆதலால் நான்) உன் அடிமை அல்லவோ - நான் உன் தொண்டன் அல்லவோ?, யாதேனும் அறியா - யாதொரு நற்காரியத்தினையும் அறியாத, வெறும் துரும்பனேன் என்னினும் - நிஷ்பிரயோசனமான துரும்பினை யொத்தவனாயினும், கைவிடுதல் - என்னைக் கைவிட்டுவிடுதல், நீதியோ - உனக்கு நியாயமாமோ; தொண்டரொடு கூட்டு - உன்னடியாரோடு சேர்த்து விடு; சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) நமக்கு அன்னியமாயுள்ள பொருள்களில் உயர்ந்தன பொன்மணி முதலிய ஆகையினால், 'அரும்பொனே மணியே' எனவும், அன்னியமா யுள்ளவற்றுள் அருமையாயின அறிவு ஆனந்த முதலியன வாகலின், 'அறிவே யெனறிவி லூறும் ஆனந்த வெள்ளமே' எனவும் கூறினர். ஞானசாரியரைத் தேடும் பக்குவ முற்ற அன்பர்கள் பாடுவதும், ஆடுவதும், கூவுவதும், உலறுவதும், அலறுவதும், மெய் சிலிர்ப்பதும், அஞ்சலிப்பதும், கண்ணீர் விடுவது முதலிய ஆராமைக்

குணங்கள் இயற்கையாக விளையுமாகலின், 'பாடினேன் ஆடினே னோடினாடி, விரும்பியே கூவினே னுலறினே னலறினேன் மெய் சிலிர்த் திருகைகூப்பி, விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே வேசற் றயர்ந்தேன்' என்றனர். திருவாசகம்: "ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப், பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர், சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிண நெஞ்சே!, தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறி யேனே." என்றதனுற் காண்க.

பதியும் பசுவும் அனாதி நித்தியமாகலின், 'என்றுநீ யன்றுநா னுன் னடிமை யல்லவோ' என்றனர். திருமந்திரம்: "பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற், பதியினைப் போற்பசு பாச மனாதி, பதியினைச் சென்றணு காப்பசு பாசம், பதியணுகிற்பசு பாச நிலாவே." எனவும், பண்டார மும்மணிக் கோவை: "எஞ்ஞான் றனையுள மஞ்ஞான் றியாமே." எனவும் வருவன வற்றாற் காண்க. இதனால் பரமான்மாவே ஆன்மாவென்றும், ஆன்மாவே பரமான்மா வென்றும் கூறுவார் மத மறுக்கப்பட்டவா றறிக. அங்ஙன மாயின், "வேதத்துள் அத்துவித மென்பது மன்றி ஏக மெனவு மோதுத லின் அதற்கு மறுதலையாய்ப் பரமான்மா ஆன்மா இரண்டும் அனாதி நித்திய மென்ப தென்னையோ?" எனின், வேதம் ஒன்றென்பதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறு பொருள் படாது. அதற்குத் தாற்பரியம் பதிப்பொரு ளொன்றே இரண்டல்ல என்பதாம். இஃதறியாது ஒன் றென்று சொல்லுகின்ற நீ அப் பதிப்பொருளின் வேறாய பசுவென் றறிவா யாக. "பதியுஞ் சேதனமாக ஆன்மாவுஞ் சேதனமாக ஆன்மாவைப் பசு வென்ற தென்னை?" எனின், ஆன்மா மலத்தோடு கட்டுற்று நின்றதாகலின் பசு வெனப்பட்டன. "இங்ஙனம் பரமான்மாவிற்கும் ஆன்மாவிற்கும் வேற்றுமை கூறில் பிரம மில்லையாயின் ஒரு பொருளு மில்லையென்னும் உபநிடதங்கட்குப் பொருள்தான் என்னை?" எனின், அகரவுயி ரில்லை யாயின் அக்கரங்கள் இல்லையாமென்னும் இம்முறைமை பற்றி யோதும். ()

பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மைகாட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டையெனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ?
காரார வெண்ணரு மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழைபொழிதல்போற்

கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா நந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே!
சுத்தநிர்க்குணமான பரதெய்வமே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) பார் ஆதி - நிலவுலகம் முதலாகிய, அண்டங்கள் அத்தனையும் - அண்டங்கள் எல்லாவற்றையும், வைக்கின்ற - எழுதி வைத்தற்குரிய, பரவெளியின் உண்மை காட்டி - பரமாகாயத்தின் உண்மையினைக் காட்டி, பற்றும் - அதைத் தொடர்கின்ற, மனவெளி காட்டி - மன ஆகாயத்தினைக் காட்டி, மன வெளியினில் தோய்ந்த - மன ஆகாயத்தில் பதிந்த, பாவியேன் பரிசு காட்டி - பாவியேனது தன்மையைக் காட்டி, தாராளமாய் நிற்க - தாராளமாய் நிலைத்திருக்க, நிச்சிந்தை காட்டி - மனம் இறத்தலையும் காட்டி, சதாகால நிஷ்டை என்ன - சதாகால நிஷ்டையென்று, சகச நிலை காட்டினை - சகச நிலையையும் காட்டி யருளினாய்; சுகாதீத நிலயந்தனை காட்ட - ஆனந்தாதீதமான நிலையைக் காட்டுதற்கு, நாள் செல்லுமோ - காலஞ் செல்லுமோ?, எண் அரும் - எண்ணுதற் கரிய, அனந்த கோடிகள் - முடிவற்ற கோடிகளாகிய, கார் - மேகங்கள், ஆர நின்று - நிறைந்து நின்று, கால் ஊன்றி மழை பொழிதல்போல் - காலூன்றி மழையைச் சொரிதல்போலே, கால் வீசி - காற்று வீசி, மின்னி - மின்னுதல் செய்து, படர்ந்து - பரவி, பரவெளி எல்லாம் கம்மி - பரமாகாச மெங்கும் மூடிக் கொண்டு, ஆனந்த வெள்ளம் - ஆனந்தப் பெருக்கை, சோராது பொழியவே - இடையறாது பொழிதற்காக, கருணையின் முழங்கி - கருணையோடு சத்தித்து, தொண்டரை - அடியார்களை, கூவும் - அழைக்கின்ற, முகிலே - மேகமே!, சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) பரமாகாய வெளியில் எண்ணிக்கையி லடங்காத அண்டங்க ளுளவாகலின், 'பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற பர வெளி' என்றனர். திருமந்திரம்: "பெறுபகி ரண்டம் பேதித்த வண்ட, மெறிகட லேழின் மணலள வாகப், பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச், செறியுமண் டாசனத் தேவர் பிரானே." என்றதனாற் காண்க. பாராதியண்டங்க ளென்றமையால் பூதாண்டம், தேவாண்டம், மகாண்டம், அகிலாண்டம், சுவாண்டம், பகிரண்டம், பத்மாண்ட முதலிய யாவும் அடங்கும். கோடானுகோடி யண்டங்களைத் தன்னகத்தே யடக்கி வைத்துக் கொண் டிருக்கினும் அவ் வெளி நிலையுள்ள தல்லவெனவும், தத்துவங்களின் காரியமாய்ச் சடமெனவும் தெரிவித்தா ரென்பார், 'பரவெளியி னுண்மை காட்டி' எனவும், அத்தகைய அசத்தான காரியங்களிலேயே நாடி வியாபித்து வாளா யுழலு மனமென அறிவித்தா ரென்பார், 'பற்றுமன வெளி காட்டி' எனவும், அம் மனம் போனவழியே அறிவைச் செலுத்தி அலையு

நிலைமையினை விளக்கினர் என்பார், 'மனவெளியிற் றேய்ந்த பாவியேன் பரிசுகாட்டி' எனவும், கூறியவை யனைத்திலுஞ் சிறிதுங் கவலை வையாது மனத்தினை யொருவழிப் படுத்துந் தன்மையினைக் குறிப்பித்தா ரென்பார், 'தாராளமாய் நிற்க' எனவும், அங்ஙன மொருவழிப்பட்ட மனமானது எக்காலத்தும் தியானத்துடனே நிற்கு நிலையினில் வைத்தார் என்பார், 'சதா கால நிஷ்டையெனவே சகசநிலை காட்டி' எனவும், இத்தகைய சோபான நிலைகள் பரோபகாரமாகக் கூட்டிவைத்தும், மேலான சுகமுதிக்குஞ் சுத்தாத்துவித அனுபவப்பேற்றினைக் கூட்டி வைப்பதென்றோ என்பார், 'சுகாதீத நிலயந் தனைக்காட்ட நாள்செல்லுமோ' எனவுங் கூறினர். (8)

பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்திறற்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கு முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே!
சாதித்த சாதனமு மியோகியர்க ணமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தாறு யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ஙனே
சோதிக்க மனமாயை தனையேவி னுலடிமை
சுகமாவ தெப்படிசொலாய்?
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) பேதித்த சமயமோ - ஒன்றற்கொன்று வேறுபட்ட சமய நூல்களோ, ஒன்று சொன்னபடி ஒன்று பேசாது - ஒன்று சொன்னபடி ஒன்று சொல்லாது; (ஆகையால்) துறவு ஆகி - துறவு அடைந்து, பேசாத பெரியோர்கள் - மௌன நிலையிலுள்ள மேலோர்கள், நிருவிகற்பத்திறல் பேசார்கள் - நிருவிகற்ப சமாதி யனுபவத்திறற் பேசா தமைந்திருப்பார்கள்; போதிக்கு முக்கண் இறை - போதித்தற்குரிய மூன்று கண்களை யுடைய இறைவன், பரம குரு ஆய் - பரமகுருவாகி வந்து, நேர்மை ஆ கைக்கொண்டு - செவ்வனே யென்னைத் தன் வயப்படுத்தி, அறிவில் போதிப்பது ஆச்சு - சின்முத்திரையாற் போதித்தற் குரியதாயிற்று, போக்கு வரவு அற - போதலும் வருதலு மில்லையாகவும், இன்பம் நீக்கம் அற - ஆனந்தம் இடையறா துண்டாகவும், எவர் - யாவர், வசனம் ஆ போதிப்பது - சொல்லாகப் போதித்தற் குரியது?, ஐயனே - கடவுளே!, சாதித்த சாதனமும் - அப்பியாசித்த அப்பியாசங்களையும், யோகியர்கள் - யோகப்பயிற்சி யுள்

ளோர், நமது என்று சங்கிப்பர் - (இச்சாதனம்) எம்மதென்று ஆட்சேபிப்பார்கள்; ஆதலாலே - ஆகையாலே, தன்னிலே தானாய் அயர்ந்து விடுவோம் என - தன்னிற்றானா யயர்ந் தடங்குவோமென்று, தனி இருந்திடின் - தனித்திருந்தால், அங்ஙனே - அவ்விடத்திலே, சோதிக்க - எனது மனநிலையைச் சோதனை செய்யும்பொருட்டு, மனமாயைதனை எவினால் - மனத்தின்கண் உண்டாவதாகிய மாயையை ஏவிவிட்டால், அடிமை - உன்னடிமையாகிய நான், சுகம் ஆவது - ஆனந்தரூபமாவது, எப்படி - எவ்வாறு?, சொலாய் - நீயே சொல்வாயாக!, சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) ஆன்மாக்களின் கர்மானுகுணமாகச் சமயங்கள் வகுக்கப்பட்டன வாகலின் ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு வகையாகக் கூறித் தம்முள் மாறுபடு மாகையால், 'பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று பேசாது' என்றனர். திருவாசகம்: "சமயவாதிக டத்த மதங்களி, லமைவ தாகவரற்றி மலைந்தனர்." எனவும், திருமந்திரம்: "ஒன்றதே பேரூர் வழியா றதற்குள, தென்றதே போலு மிருமுச் சமயங்க, ணன்றிது தீதிது வென்றுரை மாந்தர்கள், குன்று குரைத்தெழு நாயையொத் தாரே." எனவும் வருவனவற்றாற் காண்க.

அறுவகைச் சமயத்தினரும் தங்களுக்குள் முரணி யெவ்வாறு வாதமிட்டு வாழ்ந்தாலும், சன்மார்க்க நெறியினராகிய சித்தாந்தச் செல்வர்கள் இச் சமயத்தினர் போராட்டத் துட்படாமல் சமயாதீதமாய் விளங்கும் சுவாமி யொருவனையே நாடிநிற்பர் என்பார், 'பெரியோர்கள் நிருவிகற்பத்தினாற் பேசார்கள்' என்றனர். பட்டினத்துப்பிள்ளையார்: "அன்றென்று மாமென்று மாறு சமயங்க, ளொன்றொன்றோ டொவ்வா துரைத்தாலு - மென்று, மொருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கு, மருதனையே நோக்கி வரும்." என்றதனாற் காண்க. நிருவிகற்ப மென்பது விகற்ப மில்லாதது; அதாவது, இஃதொன்று தோன்ற நின்றதெனப் பொருளின்மை மாத்திரையே யறிவு ஞானசத்தி. எனவே, சமயத்தினர்களியாரும் சவிகற்பஞானிக ளென்றும், சித்தாந்திகள் நிருவிகற்ப ஞானிகளென்றுஞ் சொல்லப்படுவர். 'பேசார்கள்' என்றது சமயத்தினர்போலே முன்பின் முரணாக வாளாப் பேசா ரென்றபடியாம்; எனவே, சன்மார்க்க நெறியே பேசுவ ரென்பதாயிற்று.

பரசிவமே குருவடிவமாகி எழுந்தருளி வந்து அதிதீவிர பக்குவமுடையோனுக்கு அனுக்கிரகம் செய்வ ராகலின், 'பரமகுருவாய்ப் போதிக்கு முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு போதிப்பதாச்சு' என்றனர். திருவாசகம்: "அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர னாகி யருளிய பெருமையைச், சிறுமையென் றிகழாதே" என்றதனாற் காண்க. வைகரி வாக்கா லுபதேசியாது சின்மாத்திரையாற் போதிக்குந் தன்மை சிவபெருமா னொருவனுக்கே யன்றி மற்றியார்க் குண்டென்பார், 'போக்குவர

வறவின்ப நீக்கமற வசனமாப் போதிப்ப தெவர் ?'' என்றனர். யோகாப்பி யாசங்களிற் பழகலா மென்றாலோ, யோக மின்னதென அறியாத எனை நோக்கி உண்மையோகிகள் நகையாடா நிற்பர். தன்னந்தனியே யிருந்து தியானிப்போ மென்றாலோ, மாயாகாரியங்கள் சூழ்ந்துமயக்குகின்றன. ஆகலின், யான் என்செய்வே னென்பார், 'சாதித்த சாதனமு மியோகி யர்க ணமதென்று சங்கிப்ப ராதலாலே, தானு யயர்ந்துவிடுவோமெனத் தனியிருந்திடி னங்ஙனே, சோதிக்க மனமாயை தனையேவி னாலடிமை சுக மாவ தெப்படிசொலாய்' என்றனர். (9)

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
அனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்பர்
அகமுருகி மலர்கடூவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது ?
தொழும்பனேற் குளவுபுகலாய் !
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே ! சுகவாரியே !

(இ - ள்) அண்டமுடி தன்னிலோ - அண்டகடாகத்தின் முகட்டிலோ, பகிரண்ட மதனிலோ - வெளி யண்டத்திலோ, அலரி மண்டல நடுவிலோ - சூரிய மண்டலத்தின் நடுவிலோ, அனல் நடுவிலோ - அக்கினி மண்டலத்தின் நடுவிலோ, அமிர்த மதி நடுவிலோ - அமிர்தத்தையுடைய சந்திர மண்டலத்தின் நடுவிலோ, அன்பர் - அன்பர்கள், அகம் உருகி-மன முருகி, மலர்கள் தூவி - மலர்களைச் சொரிந்து, தெண்டமிட வரும் - நமஸ்கரிக்க - எழுந்தருளிய, மூர்த்தி நிலையிலோ - விக்ரக வடிவத்திலோ, திக்குத் திகந்தத்திலோ - திக்கிலும் திக்கின் முடிவிலோ, வெளியிலோ - பரவெளியிலோ, திகழ் - விளங்காநின்ற, விந்து நாத நிலைதன்னிலோ - விந்து நாதங்களின் நிலையிலோ, வேதாந்த சித்தாந்த நிலைதன்னிலோ - வேதாந்த சித்தாந்த நிலைகளிலோ, கண்ட பலபொருளிலோ - காணப்பட்ட பல பொருள்களிலோ, காணாத நிலை என கண்ட - காணப்படாத நிலை யெனத் துணியப்பட்ட, சூனியமதனிலோ - பாழிலோ, காலம் ஒரு மூன்றிலோ - முக்காலத்திலோ, பிறவி நிலைதன்னிலோ - ஜன்ம நிலை

யிலோ, கருவி கரணங்கள் ஓய்ந்த - கருவி கரணங்களின் சேட்டைகள் ஒடுங்கப்பெற்ற, தொண்டர்கள் இடத்திலோ - அடியார்களிடத்திலோ, நீ வீற்று இருப்பது - நீ எழுந்தருளி இருப்பது?, தொழும்பனேற்கு - உன் தொண்டனாகிய எனக்கு, உளவு புகலாய் - யதார்த்தத்தைச் சொல்வாயாக!, சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) முதல்வன் அங்கிங்கெனாதபடி யெங்கும் வியாபகனாகி யிருக்கினும் இச் செய்யுளிற் குறித்த விடங்களில் சகளமாகவும், நிஷ்களமாகவும், சகள நிஷ்களமாகவும், அவசர பேதங்களாக எழுந்தருளி யிருந்து தரிசனங் கொடுத்து வருவ ரென்பதனைக் குறிப்பித்தனர். அங்ஙனமாயினும், தொண்டர்க ளிடத்திலோவெனக் கூறி முடித்தமையின் அவ் விடமே முதல்வனுக்குச் சிறந்ததானமென்பது குறிப்பாற் காட்டிவைத்தனர். தேவாரம்: "என்னி லாருமெனக்கினி யாரிலை, யென்னி லும்மினி யாளொரு வன்னுள, னென்னு ளேயுயிர்ப் பாய்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கு மின்னம்பரீசனே." எனவும், சிவப்பிரகாசம்: "தொண்டர்க ளிடத்திலும் வானோர் தொழுந்திரு மேனிதானு, மண்டருங் கண்டிலா வண்ணலே யெனவணங்கி, வெண்டர ளங்கள் சிந்த விழிபொழி குழறி மெய்யே, கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னாரே." எனவும், ஔவையார்: "பெரிது பெரிதிப் புவனம் பெரிது, புவனமோ நான்முகன் படைப்பு, நான்முகனோ கரியமாலுந்தி வந்தோன், கரிய மாலோ அலைகடற் றுயின்றோன், அலைகட லோகுரு முனிகையி லடக்கம், குருமுனியோ கலசத்திற் பிறந்தோன், கலசமோ புவியிற் சிறுமண், புவியோ அரவினுக் கொருதலைப் பாரம், அரவோ வுமையவள் சிறுவிரல் மோதிரம், உமையவளோ விறைவர்பாகத் தொடுக்கம், இறைவரோ தொண்டரு ளடக்கம், தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் பெரிதே." எனவும் வருவனவற்றாற் காண்க. (10)

எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளெனவு
மென்னிதய மெண்ணவாட்டுதே;
ஏதென்று சொல்லுவேன்? முன்னொடுபின் மலைவறவு
மிற்றைவரை யாதுபெற்றேன்?
பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ?
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ?
சிந்தையா னதுமறிவை; என்னறிவி லறிவான
தெய்வநீ யன்றியுளதோ?
தேகநிலை யல்லவே; உடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ?

சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தன்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) கருணைக்கு உரித்து ஆகும் நாள் - உன் கருணைக்கு இலக்காதற்குரிய நாள், எந்த நாள் எனவும் - எந்தநாளோ வெனவும், என் இதயம் என்னை வாட்டுதே - என் இருதயமானது என்னை வாட்டுகின்றதே; ஏதென்று சொல்லுவேன் - யாதென்று சொல்லமாட்டுவேன்?, முன்னொடு பின் மலைவு அறவும் - முன்னுக்கும் பின்னுக்கும் விரோதம் நேரிடாதிருக்கவும், இற்றைவரை யாது பெற்றேன் - இந்நாளளவும் எந்த நிலையை யடைந்தேன்?, பந்தமானதில் இட்ட - பந்தத்தில் வைத்த, மெழுகு ஆகி - மெழுகுபோ லுருகி, உள்ளம் பதைத்து பதைத்து உருகவோ - மனம் பதைத்துப் பதைத்து உருகிறுலோ, பரம சுகம் ஆவது - பேரானந்த முண்டாவது?, (அன்றி) பொறுப்பு அரிய துயரம் ஆய் - பொறுத்தற் கரிய துன்பமுற்று, பலகாலும் மூர்ச்சிப்பதோ - பலதரமும் மூர்ச்சித்துக் கிடப்பதோ (அந்தப் பரம சுகத்திற்கு ஏது?); சிந்தையானதும் அறிவை - என் கருத்தையும் அறிவாய்; என் அறிவில் அறிவான தெய்வம் - என்னறிவி லறிவாயிருக்கிற தெய்வம், நீ அன்றி உள்ளதோ - நீயல்லது வேறொன் றுண்டோ?, தேகம்நிலை அல்லவே - சரீரம் நித்தியமல்லவே; உடை கப்பல் - உடைந்த கப்பலானது, கப்பல் ஆய் - நல்ல கப்பலாகி, திரை - அலைகளையுடைய, ஆழியூடு செலுமோ - கடலில் நடக்குமோ?; சொந்தமாய் ஆண்ட நீ - சுதந்தரமாக வந்து என்னை யாண்டருளின நீ, அறியார்கள் போலவே - தெரியாதவர்கள் போலவே, துன்பத்தில் ஆழ்த்தல் முறையோ - துக்கசாகரத்தில் அமிழ்த்துதல் உனக்கு முறைமை யாகுமோ?, சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) 'எந்தநாள் கருணைக் குரித்தாகுநாள்' என்றதனுல் இருவினை யொப்பு, மலபரிபாகம் வாய்க்கப்பெற்ற பக்குவ நிலை இன்னும் அடியேனுக்கு வரவில்லையே யெனவும், 'முன்னொடுபின் மலைவறவு மிற்றை வரை யாது பெற்றேன்' என்றதனுல் சந்தேக விபரீத ஐயங்கள் பயப்பிக்காத வைதிக சைவ சன்மார்க்க நெறியின் உண்மையினை யனுபவிக்க வில்லையே எனவும், 'பதைத்துருகவோ மூர்ச்சிப்பதோ' என்றதனுல், சிவானந் தானுபவமாகிய பரமசுகத்தினை யடைவதற்கு நிர்விகற்பத்தினைப் பெருது வீணே மனமுருகுவதினுலேயும், மறத்தலினுலேயும் கிட்டுமோ எனவும், 'அறிவான தெய்வநீ யன்றியுளதோ' என்றதனுல் என்னறிவிற் கலந்துள்ள நீ யென்னைப் பக்குவப் படுத்தாது விடின் மற்றியாவரால் முடியு மெனவும், 'உடைகப்பல் ஆழியூடு செலுமோ' என்றதனுல், யாதொரு சுகத்தினையும் அடையு முன்னரே தேக நழுவிவிடி லென்செய்வேன் எனவும், இத்தகைய

விண்ணப்பங்களைத் தேவரீர் சந்நிதானத்தில் தெரிவித்துக்கொள்ளப் பக்குவத்தினைக் கொடுத்து அடிமையாகக் கொண்ட வென்னை மேலும்மேலும் உலக போகத்தில் முழுகச் செய்வது நீதியாகுமோ எனவுங் கூறினர். (11)

எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
லிருக்கவிலை யோமனதெனும்
இயானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனோ பிரித்தா னதைக்கேட்ட
வன்றுமுத லின்றுவரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணியெங்கண்
முன்னாக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
மூடமன மிகவுமேச
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
முறைமையோ? பதினாயிரஞ்
சொன்னாலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
சுகம்வருவ தெப்படி.சொலாய்!
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

(இ - ள்) எ நாளும் - எக்காலத்திலும், உடலிலே உயிர் ஆம் உனைப் போல் - உடம்பினுள் உயிரா யிருக்கின்ற உன்னைப்போல், மனம் என்னும் யானும் - மனமென்கிற நானும், என் நட்பு ஆம் பிராணனும் - என்னுடைய நண்பனாகிய பிராணனும், இருக்க இலையோ - சரீரத்தி லிருக்கவில்லையோ?, (அப்படி யிருக்க) எம்மை சடமதென்று - எங்களைச் சடமென்றும், உன்னைச் சித்து என்றும் - உன்னைச் சித்தென்றும், அ நாளில் எவனோ பிரித்தான் - அக்காலத்தில் எவனோ வகுத்து வைத்தான்; அதை கேட்ட அன்றுமுதல் இன்று வரையும் - அதைக் கேள்விப்பட்ட அன்று முதல் இன்றுவரைக்கும், அநியாயமாய் எமை அடக்கி - அநியாயமாய் எங்களை ஒடுக்கி, குறுக்கே அடர்ந்து அரசு பண்ணி - குறுக்கே வந்து நெருங்கி அரசாட்சி செய்து, எங்கள் முன்னாக - எங்கள் கண்ணுக்கு எதிரில், நீ என்ன கோட்டை கொண்டாய் என்று - நீ எந்தக் கோட்டையைப் பிடித்தா யென்று, மூட மனம் மிகவும் ஏச - மூடமனமானது மிகவும் வைதலால், மூண்டு எரியும் அனல் இட்ட மெழுகு ஆய் - மூண்டெரியா நின்ற நெருப்பி லிட்ட மெழுகுபோல உருகி, உள்ளம் கருதல் முறைமையோ - நான் உள்ளுக்குள்ளே புழுங்குதல் முறைமையாமோ?, பதினாயிரம் சொன்னாலும் - பதினாயிரந்தரம் விண்ணப்பஞ் செய்துகொண்டாலும், நின் அருள் இரங்க இலையே - உன்னுடைய திருவருள் இரங்கவில்லையே; இனி சுகம்

வருவது எப்படி - இனி எனக்கு இன்பமுண்டாவது எப்படி ?, சொல்லாய்-கூறாய் !, சுத்த நிர்க்குண—, என்க.

(வி - ரை) மனம் :—" உயிரே ! நீ இந்த உடலில் என்று வந்தனையோ அன்றே நானும் என்னுடைய சிநேகனாகிய பிராணனும் வந்துள்ளோம். அங்ஙனமாக உனக்கும் எங்கட்கும் வித்தியாச மென்னை ?"

உயிர் :—" மனமே ! நாம் மூவரும் குடிபுகுந்த காலம் ஒன்றாகவே யிருந்தாலும் நான் சித்து, நீங்களிருவரும் சடம்."

மனம்:—" உயிரே ! சடரூபமாகிய எங்களைவிட சித்துரூபனாகிய நீ யறிந்து கொண்ட தென்னை ?"

உயிர் :—" மனமே ! அனாதியே பதியொன்றுண்டென்றும், அதனை யடைய அனாதியே என்னைச் சார்ந்துள்ள பாசத்தினை நீக்கிக்கொள்ள வேண்டு மென்றும், அங்ஙன நீக்கிக்கொள்ள சாதனங்க ளின்னவை யென்றுந் தெரிந்துகொண்டு அந் நெறிக்கு முயலுகின்றேன்."

மனம் :—" உயிரே ! இத்தகைய உனது முயற்சி யாதொரு வியஞ்சக மின்றி முடியுமோ ?"

உயிர் :—" மனமே ! என்னைப்போன்ற தத்துவ முதலியவற்றைக் கொண்டே யறியவேண்டும்."

மனம் :—" உயிரே ! எங்களையன்றி நீ சாதித்த காரியமொன்றும் காணேமே ! உனக்குக் கீழிட்ட தத்துவங்களை நோக்க நீ சித்தாயினும் உனக்கு மேலிட்ட பதியை நோக்க நீ சடத்தினை யொத்து விளங்குகின்றாய். அங்ஙனமே உன்னை நோக்க நாங்கள் சடமாயினும் எங்கட்குக் கீழிட்ட தத்துவங்களை நோக்க நாங்களும் சித்தே யாகிறோம். அங்ஙனமாக நமக்குள் பேதம் பாராட்டுவானேன் ?"

உயிர் :—" மனமே ! இது உண்மையாயினும் நின் உதவியின்றி நான் சீவிக்கக் கூடும் ; என் உதவியின்றி நீங்கள் தனித்து வாழுஞ் செயல்க ளுங்களுக் கில்லை."

மனம் :—" உயிரே ! எங்களைச் சடமென்று கழித்து நீ சித்தாக விளங்கி வாழ்ந்து இதுகாறுங் கண்ட சுகந்தா னென்னை ?"

உயிர் :—" சிவ ! சிவ ! சுத்த நிர்க்குணமான தெய்வமே ! மனம் என்னைக் குறித்துச் சொன்ன யாவு முண்மையே ; இங்ஙன மனமென்னைப் பரிகாசஞ் செய்ய, அதனால் நான் மிகவாடி யுனைநோக்கிப் பலதரம் வேண்டினும் நீ என்பால் இரங்கிக் கிருபை செய்யாவிடில் சுகமடைவ தெங்ஙனம் ?"

# எங்கு நிறைகின்ற பொருள்

" அவனன்றி யோரணுவு மசையா " தெனும்பெரிய
ஆப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில அறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்கள்யார்
மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெயித மகிதமே வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே !

(இ - ள்) அவன் அன்றி - அந்தக்கடவு ளசைப்பித்தா லன்றி, ஓர் அணுவும் அசையாது என்னும் - ஒரு அணுவேனும் அசையாதென்று சொல்லுகிற, பெரிய ஆப்தர் மொழி ஒன்று கண்டால் - பெரியோர்க ளாகிய ஆப்தருடைய வாக்கிய மொன்றின் சாரத்தினை யாராய்ந்து பார்த் தால், அறிவு ஆவது ஏது - அறிவு ஆவது யாது ?, சில அறியாமை ஏது - சில அறியாமையாவது யாது ?, இவை - இவைகளை, அறிந்தார்கள் அறி யார்கள் யார் - அறிந்தவரும் அறியாதவரும் யாவர் ?, மௌனமொடு இருந்தது ஆர் - மௌனநிலையோ டிருந்தவர் யாவர் ?, என்போல் - என் னைப்போல, உடம்பு எல்லாம் வாய் ஆய் - சரீரமெல்லாம் வாயாகக் கொண்டு, பிதற்றுமவர் யார் - பிதற்றுவோர் யாவர் ?, மனது எனவும் ஒரு மாயை எங்கே யிருந்து வரும் - மனமென்னும் ஒரு மாயையானது எவ் விடத்தினின்றும் உண்டாகும் ?, வன்மையொடு இரக்கம் எங்கே - கடினத் துடன் மிருதுத்துவம் எங்கே ?, புவனம் படைப்பது என் - உலகங்களைப் படைப்பதாவது யாது ?, கர்த்தவியம் எவ்விடம் - கர்த்தவ்வியம் எவ் விடத்தினின் றுண்டாவது ?, பூத பேதங்கள் எவ்விடம் - பூத வேறுபாடு கள் எவ்விடத்தி லுண்டாவது ?, பொய் மெய் - அசத்தியம் சத்தியம் இதம் அகிதம் - அனுகூலம் பிரதிகூலம், மேல் - மேலும், வரும் - உள வாகின்ற, நன்மை தீமையொடு - நன்மை தீமைகளுடன், பொறை பொறு மையும் எவ்விடம் - பொறுமை பொறுமைகளும் எவ்விடத்தில் உளவா வன ?, எவர் சிறியர் - எவர் சிறியார் ?, எவர் பெரியர் - எவர் பெரியார் ?,

எவர் உறவர் - எவர் உறவினர் ?, எவர் பகைஞர் - எவர் பகைவர் ?, யாதும் உன்னை அன்றி உண்டோ - எல்லாம் உன்னையன்றி யுண்டாகுமோ ?, இகபரம் இரண்டினிலும்-இம்மை மறுமை என்னும் இரண்டிடத்தும், உயிரினுக்கு உயிர் ஆகி - உயிருக்குயிராகி, எங்கும் நிறைகின்ற பொருளே - எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற வஸ்துவே !, என்க.

(வி - ரை) வேதாகமங்கள் முதல்வனை விஸ்வரூபி என்று கூறுவதால் உலகம் பெருமானுக்குத் திருமேனியாக விளங்கும். ஆகலான், அவன் அசையின் உலகம் அசையுமாகலின் 'அவனன்றி யோரணுவு மசையாது' என்றனர். இவ்வுண்மையினைக் காட்டும்பொருட்டே எந்நாளும் தில்லைச் சிற்றம்பலத்தில் சர்வலோகேசனாகிய மகா நடராசப் பெருமான் ஆனந்தக்கூத்துச் செய்து வருகின்றனர். திருமந்திரம்: "தத்துவ மாடச் சதாசிவந் தாடைச், சித்தமு மாடச் சிவசத்தி தாடை, வைத்த சராசர மாட மறையாட, வத்தனு மாடினா னானந்தக் கூத்தே." என்றதனாற் காண்க. உலகம் அவன் திருமேனி யென்பதற்குப் பெருமானை அருச்சுனனும், பாண்டியனுமடித்த அடி சராசர மனைத்திலும் பட்டதே சாட்சியாம். பாரதம்: "விண்ணிலுறை வானவரில் யாரடி படாதவர் விரிஞ்சனரியே முதலினோர், மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர் மனுக்கண் முதலோர்களதலக், கண்ணிலுறை நாகர்களில் யாரடி படாதவர் கள் கட்செவிமகி பன்முதலோ, ரெண்ணில்பல யோனியிலும் யாரடி படாரென விருந்துழி யிருந்துழியரோ." "வேதமடி யுண்டன விரிந்தபல வாகம விதங்களடி யுண்டன வொரைம், பூதமடியுண்டன விநாழிகை முதற்புகல்செய் பொழுதொடு சலிப்பில் பொருளின், பேதமடி யுண்டன பிறப்பிலியிறப்பிலி பிறங்கலரசன்றன் மகளார், நாதனமலன்சமர வேடவடிவங்கொடு நான்கையடி யுண்டபொழுதே." எனவும், திருவிளையாடற்புராணம்: "பாண்டியன் முதுகிற் பட்டதுசெழியன் பன்னியருடம்பினிற் பட்ட, தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட தரசிளங் குமரர்மேற் பட்ட, தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட திவுளிமேற் பட்டது பருமம், பூண்ட வெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க்கும் போதன்மேற் பட்டவத் தழும்பு." "பரிதியு மதியும் பாம்புமைங் கோளும் பன்னிறம் படைத்த நான்முகனு, மிருநிலம்புனல்க லெரிகடுங்கனல்வா னெனுமைம் பூதமுங் காடுஞ், சுருதியு மாறுசமயவா னவருஞ் சுரர்களு முனிவருந் தொண்டின், மருவிய முனிவர் கணங்களும் பட்ட மதுரை நாயக னடித்தழும்பு." "வானவர் மனிதர் நாகர்புள் விலங்குமாசுணஞ் சிதலெறும் பாதி, யானபல் சரமு மலைமரங் கொடிபுல்லாதியா மசரமும் பட்ட, வூனடை கருவும் பட்டன தழும்போடுதித்தன வுயிரிலோவியமும், தானடி பட்ட சராசர சடங்க டமக்குயி ராயினோன் றழும்பு." எனவும் வருவனவற்றாற் காண்க.

ஈண்டு ஆப்தர் என்றது திருநாவுக்கரசு சுவாமிகளை. 'மொழி' என்றது அவர் திருவாய்மலர்ந்தருளிய "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே"

என்ற தொடக்கத்து அருமைத் தேவாரத்தினை. இத் திராவிட வேதவாக்கியத்தினை யுள்ளபடி யறிந்த பெரியோர்கள், "உலகத்தின்கண் மனவாக்குக் காயங்களினாலே செய்யப்பட்ட புண்ணிய பாவங்களெல்லாம் முதல்வனால் கற்பிக்கப்பட்டதே" என்றும், "அந்தரியாமியாகத் தம்மிடத்திலே நின்று இச்சையாதி செலுத்தி ஞானேந்திரியங்களினாலே விஷயங்களைப் பற்றுவித்துங் கன்மேந்திரியங்களினாலே தொழில்களைச் செய்வித்துஞ் செய்கின்றான் என்றும், "ஆதலால், தம்மாற் செய்புங் கிரியை யொன்றுமில்லை" என்றும், "கிரியாசத்தியே செய்விப்பதென்றும், எவ்விடத்து மெச்செயலு முதல்வன் செயல்" என்று மெண்ணுவார்க ளாகலின் 'யாது முனையன்றி யுண்டோ' என்றனர். சிவஞானசித்தியார்: "உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று, நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று நினைவார்க்கு வினைக ளெல்லாம் நீங்குந் தானே." என்றதனாற் காண்க.

அன்னே யனேயெனுஞ் சிலசமய நின்னையே
ஐயாவை யாவென்னவே
அலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்றுமிலவாய்ப்
பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலயமென்றும்
தன்னே ரிலாததோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் காலமென்றும்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வானந்தமாய்
என்னேயெ னேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகலவெளிதோ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ - ள்) சில சமயம் - சில சமயங்கள், அன்னே அன்னே என்னும் - என்னுடைய தாயே! தாயே! என்னும்; நின்னையே - உன்னையே, சில சமயம் - சிலசமயங்கள், ஐயா ஐயா என்ன - தந்தையே! தந்தையே! என்று, அலறிடும் - அலறாநிற்கும்; அல்லாது - அவ்வாறன்றி, சில சமயம் - சில சமயங்கள், பேய்போல அலறி - பிசாசம்போலக் கதறி, ஒன்றும் இலவாய் - சிறிதும் பயனற்றனவாய், பின் ஏதும் அறியாமல் - பின் விளைவதொன்றையு முணராமல், ஒன்றைவிட்டு ஒன்றைப் பிதற்றிடும் - ஒன்றைவிட்டு ஒன்றைப் பிதற்றாநிற்கும்; சில சமயம் - சிலசமயங்கள், மேல் - மேலும், பேசு அரிய ஒளி என்றும் - சொல்லுதற்கரிய வொளியென்றும்,

வெளி என்றும் - ஆகாயமென்றும், நாதாதி பிறவுமே நிலயம் என்றும் - நாதம் முதலான பிறவற்றையே நிலைகளென்றும், தன் நேர் இலாதது ஓர் அணு என்றும் - (நுட்பத்தால்) தனக்குச் சமான மில்லாததாகிய ஒரு அணுவென்றும், மூவித தன்மை ஆம் காலம் என்றும் - முக்கால மென்றும், சாற்றிடும் - சொல்லாநிற்கும்; இவை ஆகி - இவைகளாகி, வேறது ஆய் - (இவற்றின்) வேறாகி, சதா ஞான ஆனந்தமாய் - சதா ஞான வின்பமாகி, கருணை விளையாட்டு இருந்தவாறு - திருவருள் விளையாடல் இருந்த வண்ணம், என்னே என்னே - என்ன ஆச்சரியம், என்ன ஆச்சரியம்; எம்மனோர் புகல எளிதோ - எம்மை யொத்தவர் சொல்ல எளிதாகுமோ?, இகபரம் இரண்டிலும்—, என்க.

(வி - ரை) ஆதாரசத்திமுதல் பராசத்தி யீறாகவுள்ள அனுக்கிரக சத்திகள் எவ்விடத்தும் நிறைந்த பராசத்தியிலே யுற்பவிக்கப்படுமென்றும், அந்தப் பராசத்தி செவ்வரத்தமலர் ஆதித்தன் செம்மணி உச்சித்திலகம் பரம்பும் பார்வையொளி என்னும் பிரகாசத்திலே தெரிக்குமதுவே முத்தியெனக் கொண்டு; வாமசித்தாந்தி, மிச்சிரவாமி, துவிதவாமி, அத்துவிதவாமி முதலியோர் தனக்கென வொருதன்மை யில்லாத தெய்வத்தினைப் பெண்பாலாகக்கொண்டு வணங்குவா ரென்பார், 'அன்னையனே யெனுஞ்சில சமயம்' என்றனர். தத்துவப்பிரகாசம்: "அழிவிலாதார சத்தி முதற்பரையீறாக சிவனுக்கிரகசத்தியதன் பேதமெல்லாம், ஒழிவில் பரையாலே யுற்பவமாமந்த வுயர்பரை செவ்வெளியிலே யொன்றுபடன் முத்தி" என்றதனாற் காண்க.

சிலர் அத்தெய்வத்தினை ஆண்பாலாகக் கொண்டு 'நாராயணன்' என்றும், 'இரணியகருப்பன்' என்றும், 'உருத்திரன்' என்றுங் கூறி வணங்குவார் என்பார், 'ஐயா என்னுஞ் சிலசமயம்' என்றனர். ஈண்டு உருத்திரன் என்றது குணருத்திரனை. சிலர் ஒன்றினுக்கொன்று சம்பந்த மில்லாமல் விண்டுவும் தெய்வம், பிரமனும் தெய்வம், உருத்திரனும் தெய்வம், இந்திரனும் தெய்வம், சாமியுந் தெய்வம், மதுரைவீரனுந் தெய்வம், மற்றும் மிலேச்சர்கள் கொண்டாடுந் தெய்வங்களுந் தெய்வம் எனக் கொண்டு, தங்களைச் சமரச ஞானிகளென அழைக்க ஆசைப்பட்டு ஒன்றிலும் பற்றில்லாது பேசி வாழ்வார் என்பார், 'ஒன்றைவிட் டொன்றைப் பிதற்றிடுஞ் சில சமயம்' என்றனர்.

சிலர் ஒளிரூபமாய் விளங்கும் அக்கினி, சூரியன் முதலியவற்றைத் தெய்வ மென்பராகலின், 'ஒளியென்று சாற்றிடுஞ் சிலசமயம்' என்றனர். "அக்கினி தானே யண்டமும் பிண்டமு, மக்கினி தானே யாயிற் றுண்டாவ, தக்கினி தானே யாவ தழிவ, தக்கினி காயமென் றறிந்துகொண்டேனே." எனவும், "உதையந் தனிலயனாய் வருமுயிர் காவலி லரியாய், வதைவந்திடி லரனாய் வருமாறும் பிறவங்ஙனே, யுதையங்களிலிவனே

யிறையெவை யெங்கணு மிவனே, கதையென் றறிகாணு விறைகாணு மிறை கதிரோன்." எனவும் வருவனவற்றூற் காண்க.

பிரபஞ்சமாகச் சொல்லப்பட்ட பொருள் சத்தத்தா லொழிய வேறில்லை. அச் சத்தமில்லா வளவிலே இதின் மயக்கமும் வருமாதலாற் சத்தமே உலகும் வேறில்லை. அந்தப் பொருள் வேறுண் டென்னில், அப் பொருளுஞ் சத்தமாகச் சொல்ல வேண்டுதலாற் பொருளென்பது பொய் யாம். இந்தச் சத்தம் வரும்படி பூ மா வென விரண்டு சொன்னின் றநேக பொருட் பெறும். பூ என்றது பூமிக்கும் மலருக்கும் பொலிவுக்கு மிவை போன்ற பிறவுக்குமாம். 'ம' என்ற சொல்: கறுப்பு பெருமைநிறம் விலங்கு வண்டு மாமரம் கிருமி முதலியவைக்காம். அங்ஙனம் போந்த பொருட்பே ரெல்லாஞ் சத்தமே. அதுவன்றி வேறுபட்ட பொருளுள வெனில், வேறுபட்ட பொருளும் நெல்லில் வேறுபட்ட பொருள் பொரி யென்னுஞ் சொற்பெற்றூற்போலச் சத்தந்தானே பொருளு மிப்படி வளர்ந்து செல்லும். சங்கேதமாக மாயையென்ற தொன்று உலகமென்ற தொன்று. மாயை காணப்படாது; உலகங் காணப்பட்டதாயினும் அக் காணப்படாத மாயைதானே காணப்பட்ட உருவமான தன்மைய தென் னில், அந்த முறைமையினுலே பொருளுஞ் சொல்லிற் பொருளு முடனே நிற்கப் பொருணில்லை யுடைத்தென்னில், அப்படிக் கூறிநிற்குமென்ற பொரு ளழிந்த காலத்துச் சொல்லல்லது பொரு ளொழிந்துபோ மாதலால் சொல்லே யழியாப்பொருள் என்பர் ஆகலின், 'நாதாதி நிலயமென் றும் சாற்றிடுஞ் சிலசமயம்' என்றனர். தத்துவப்பிரகாசம்: "மையலினு லுரை யுலகு பொருள் பொய்யாகு மதியுணரு மதுவீடு வருபூமா வெனவே, செய் யுரையும் பொருணெல்லிற் பொரியே போலத் திகழ்சத்த முருவாகித் திகழ்பரி ணமத்தா, மையமா மூலகமருஞ் சொல்லினலம் பொருளு மான தன் மையதென்னி லதனுலே பொருளு, மெய்யசொல்லிற் பொருளுமுட னின்ற தென்னில் வேறுபொருட் காணுசொல் விடாது நிற்பதுவே." என்றதனுற் காண்க.

"சிருட்டியாங் காலத்தி லான்மாக்கள் கன்மத்திற் கிடாகப் பரமாணு விலே பரிணமித்த பிரபஞ்ச மழிந்தபின்னும் பரமாணுக்களாய்ச் சூக்கு மித்து நின்று சிருட்டிமுதலிய ஒவ்வொரு காலத்திலே கருமத்திற் கிடாகப் பிரபஞ்சமாகத் தோன்றி நின்று, பின்பொரு காலத்திலே யழியாநிற்கும்" எனச் சிலர் கூறுவாராகலின், 'அணுவென் றுஞ் சாற்றிடுஞ் சிலசமயம்' என்றனர். சிவஞானசித்தியார்: "அழியாதபின் னணுக்கடாமே யகிலமாய் வந்துநின் று, கழிந்திடுங் கன்மத்து" என்றதனுற் காண்க.

"பிரபஞ்சமானது சங்காரமுஞ் சிருட்டியும் ஒரு காலத்தினு முண்டா காததாய், இரட்சிக்க ஒரு கர்த்தாவு மில்லையாய், அநாதியே யுள்ளதாய், ஆன்ம சம்பந்தியாய், நீக்கப்படாத புண்ணிய பாவங்களோடு கூடும் பிரு

திவி முதலாகிய தத்துவங்கள் நிலைபெற்று என்று முள்ளது " என்பர் சிலர் ஆகலின், 'காலமென்றுஞ் சாற்றிடுஞ் சிலசமயம்' என்றனர். சிவஞான சித்தியார்: "போக்கொடு வரவுகால மொன்றினிற் புணர்வதின்றி, யாக்கவே றொருவரின்றி யனாதியா யணுக்களாகி, நீக்கிடா வினையிற் கூடி நில முத லாக நீடி. யூக்கமா ருலக மென்று முள்ளதென் றுரைக்க லாமே." என்றதனாற் காண்க. (2)

வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத்துரைக்கும்;
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபண் ணு ஞானமாகும்;
ஊகமனு பவம்வசன மூன்றுக்கு மொவ்வுமீ
துபயவா திகள்சம்மதம்;
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது
மியாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்க முறலாம்;
ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ
யெந்தைநீ குறையுமுண்டோ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ-ள்) வேதமுடன் - வேதங்களோடு, ஆகம புராணம் இதிகாச முதல் - ஆகம புராண இதிகாசம் முதலாக, வேறும் உள்ள கலைகள் எல்லாம் - மற்றுமுள்ள நூல்கள் யாவும், மிக்காக - மிகுதியாக, அத்துவித துவித மார்க்கத்தையே - அத்துவித துவித மார்க்கங்களையே, விரிவு ஆ எடுத்து உரைக்கும் - விஸ்தாரமாக எடுத்துச் சொல்லாநிற்கும்; ஓது அரிய - சொல்லற்கரிய, துவிதமே - துவித ஞானமே, அத்துவித ஞானத்தை - அத்துவித ஞானத்தினை, உண்டு பண்ணும் ஞானம் ஆகும் - உண்டாக்கு கின்ற ஞானமாகும்; ஈது - இந்த வார்த்தை, ஊகம் - யுக்தி, அனுபவம் - சுவானுபவம், வசனம் - சுருதி, (ஆகிய) மூன்றுக்கும் ஒவ்வும் - மூன்றி னுக்கும் ஒத்திருக்கும்; (அன்றியும்) உபய வாதிகள் சம்மதம் ஆதலின் - இருதிறத்தார்க்கும் சம்மதமாகையால், இனி எனக்கு - இனிமேல் எனக்கு, சரியையாதிகள் போதும் - சரியையாதி மார்க்கங்கள் போதும்; நான் யாதொன்று பாவிக்க - நான் யாதொரு பொருளைப் பாவிக்கவும், அது ஆதலால் - அப் பொருள் மயமேயாய் விடுதலால், உன்னை நான் என்று பாவிக்கின் - உன்னை நானென்று பாவனை பண்ணினால், அத்துவித மார்க்கம் உறலாம் - அத்துவித நெறியை யடையலாம்; ஏது பாவித்திடினும் -

எப்பொருளாய்ப் பாவித்தாலும், நீ அது ஆகி வந்து - நீ அப்பொருளாகி வந்து, அருள் செய் - அருள் செய்கின்ற, எந்தை - எந்தை யாதலால், குறையும் உண்டோ - உன்னை யடைந்த எனக்கு ஓர் குறைபாடு முளதோ ?, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) வேதம் - இருக்குமுதலிய நான்கு. ஆகமம் - காமிகமுதலிய இருபத்தெட்டு. புராணம் - பிரமமுதல் பதினெட்டு. இதிகாசம் - சிவரகசிய முதலிய மூன்று. கலைகள் - தருமநூல் முதலியன. இவை அனைத்தும் ஒன்றாகப் பாவித்தலையும் இரண்டாகப் பாவித்தலையுமே கூறுநிற்குமாகலின், 'கலைகளெல்லாம், மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே விரிவா யெடுத்துரைக்கும்' என்றனர். துவிதம் : பரோட்ச மென்றும், அத்துவிதம் : அபரோட்ச மென்றுஞ் சொல்லப்படும். கேட்டல், சிந்தித்த லென்னு மிரண்டுந் துவிதத்திலும் ; தெளிதல் நிட்டை யென்னு மிரண்டும் அத்துவிதத்திலும் அடங்கும். ஆகலின், அத்துவிதத்தினை யடைதற்குத் துவிதமே யின்றியமையாத சோபானமாம். கேட்டல் சிந்தித்தல் இரண்டும் தெளிதல் நிட்டைகளுக்கு ஆதாரமா யிருப்பனபோலும். ஆதலினால், 'துவிதமே யத்துவித ஞானத்தை யுண்டுபண்ணு ஞானம்' என்றனர். இதனால் துவிதமும், அத்துவிதமும் ஒருவனுக்கு அத்தியாவசியமாக வேண்டுவனவாம். இவ் வுண்மையினை யறியாது துவிதவாதிகள் அத்துவிதிகளை மறுத்தும், அத்துவிதவாதிகள் துவிதிகளை மறுத்தும் ஒருவர்க்கொருவர் பிணங்குவர். வைதிக சைவ சித்தாந்த செந்நெறியி னின்றோர் இரண்டினையுந் தங்களுக் குரியதாகக் கொண்டு சுகிப்பர்.

ஊகம் - அனுமானம், அனுபவம் - காட்சி, வசனம் - ஆகமம். இவை சுருதி யுக்தி அனுபவமென்று சொல்லப்படும். இம் மூன்றினாலும் ஆராயுமிடத்துத் துவித மார்க்கம் அத்துவித மார்க்கத்திற்கு ஏதுவென்று ஏற்படுதலினாலும், இவ் வுண்மையினைத் துவிதிகளும் அத்துவிதிகளும் ஒத்துக்கொள்ளுவதனாலும், "ஊகமனு பவம்வசன மூன்றுக்கு மொவ்வுமீ துபயவாதிகள் சம்மதம்" என்றனர்.

துவிதத்திலும் அத்துவிதத்திலும் அடங்கியுள்ள - கேட்டல் - சிந்தித்தல் - தெளிதல் - நிட்டை ஆகிய நான்கும் முறையே சரியை - கிரியை - யோகம் - ஞானமாக விளங்கலால், 'எனக்கினிச் சரியையா திகள் போதும்' என்றனர்.

சோகம்பாவனை பண்ணும்பொழுது அத்துவிதமாகப் பாவிக்குமதனாலே ஞானிகள் சிவமேயாய் விளங்குவர். ஆசாரியன் காட்டின குறிவழியே நின்று தத்த மிருதயங்களிலே சிவனை யந்தரியாகமாகப் பூசித்து முடிவின்கண் கோதண்ட தானத்திலே ஏகபாவம் பிறப்பித்துக்கொண்டிருந்த கோட்பாட்டினாலும் சிவனாகி நிற்பர். இங்ஙனம் பலவாகத் தாங் குறித்துக்கொண்டு நின்ற குறிப்புகளும் குறித்தறியும் புத்தியாதிகளும்

சேர இலயத்தினைப் பொருந்தி நிற்கிற வழிபாட்டினாலும் சிவமேயாய் விடுவர். ஆகலின், 'யாதொன்று பாவிக்க நான், அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி னத்துவித மார்க்கமுறலாம்' என்றனர். சிவஞான போதம்: "தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான் கொடுத்துத், தன்னுணரத் தன்னு ளிருத்தலாற் - றன்னுணரு, நேசத்தர் தம்பா ணிகழுந் ததிசெய்போற், பாசத்தார்க்கின்றாம் பதி." எனவும், சிவஞானசித்தியார்: "சிவோகம் பாவிக்குமத்தாற் சிவனுமாவர், குறியதனை விதயத்தே யானைக்கூடும் கொள்கையினா லவனவர் குறியொடுதா மழியு, நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றூ னேசத்தாற் றொழுதெழுமின் பாசத்தாள் விடவே." எனவும் வருவனவற்றாற் காண்க.

ஆன்மாக்கள் தங்கள் தங்கள் போதத்துக்குப் பொருந்தினதொரு தெய்வத்தினை வழிபட அந்தத் தெய்வங்கள் தானேயா யங்கங்கே பரமேசுவர னிற்பனென்றும், அந்தத் தெய்வங்களுக்குச் சுகதுக்க வேதனையுஞ் சனன மரணமு முண்டா யிருக்கையினாலே தங்களை வழிபட்டவர்களை யறிந்து அனுக்கிரகிக்க மாட்டாவென்றும், பரமேச்சுரன் தன்னை வழிபட்டவர்களை யன்றியே மற்றுள்ள தெய்வங்களை வழிபட்டவர்களையு மறிந்து அனுக்கிரகஞ் செய்வன் ஆகலினால், 'ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ யெந்தைநீ' என்றனர்.

பாவனையாவது - நாடோறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தாலந்தச் சிவமே தானென அனன்னிய பாவனை செய்து தன்னறிவதன் வாயத்ததாம்படி யுறைத்து நிற்றல்.

வினா:—"சிவனை அந்தர்யாமி யென்று நினைத்துப் பாவிக்கப் படாதோ?"

விடை:—"அங்ஙனம் பாவிக்கில் மனதுண்டு; மனதினா லறியப்பட்டவையெல்லாம் அசத்தாகையால் அது கூடாது."

வினா:—"பாவனாதீதனென்று நினைத்துப் பாவிக்கப்படாதோ?"

விடை:—"அபாவம் பிரயோசன மில்லை."

வினா:—"நான்றானே யந்தச் சிவமென்று பாவிக்கப்படாதோ?"

விடை:—"கண்ணை ஆதித்தனென்று பாவித்தால் அதனால் அந்தகாரம் போகாதது போலும், நாவினைச் சர்க்கரை யென்று பாவித்தால் அதனால் மதுரமில்லாதது போலவும் பாவனைமாத்திரமே யொழியப் பலனில்லை."

வினா:—"ஒரு பாவனை பண்ணாமல் ஞான இச்சா பிரயத்தினாதிகளெல்லாங் கெட நிற்பதே பரமபாவனை யாகாதோ?"

விடை:—"அப்பொழுது விஷய சுகமும் நிருபாதிக சிதாநந்தானுபவமுமிரண்டு மில்லையாய் ஆணவ கேவலமாம்."

வினு:—"ஆயின், சிவபாவனை யெவ்வாறு."

விடை:—"மனோபாவநாதிகளை நீங்கி நின்று தேகாதி அபேட்சை யாய்ப் பரமான ஆன்மாக்களுக்குப் பரமாகிய சிவனுடைய சத்தியோகத் தினுலே சிதாநந்த ஸ்வரூபமாகிய சிவத்தினைத் தரிசித்து அதிசயோக சிவோகமென்று பாவிக்கப்படுவதாம்." (3)

சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற், சங்கற்ப மொன்றில்
தொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைப்போற் ருனே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணுது கேட்டவெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடுங்
கபடநா டகசாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்னு லடக்கவசமோ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

௰

(இ - ள்) சொல்லானதில் - சொல்லினுல், சற்றும் வாராத பிள்யு ளையை - சிறிதும் இணங்கிவராத குழந்தையை, (தாயானவள்) தொட்டில் வைத்து ஆட்டி ஆட்டி - தொட்டிலில் வைத்து அசைத்து அசைத்து தொடையினை கிள்ளல் போல் - தொடையைக் கிள்ளுதல்போல, ஒன்றில் சங்கற்பம் தொடுக்கும் - ஒன்றில் நினைப்பை யுண்டாக்கும்; தொடுத்து அழிக்கும் - உண்டாக்கி யழிக்கும்; பொல்லாத வாதனை என்னும் - பொல் லாத வாதனை என்று சொல்லப்படுகிற, சப்த பூமியிடை போந்து - அஞ் ஞான பூமிகள் ஏழனுள் வந்து, தலைசுற்றி ஆடும் - தலைசுழற்றி யாடா நிற்கும்; புருஷனில் அடங்காத பூவைபோல் - கணவனிடத் தடங்கியிராத பெண்போல, தானே புறம்போந்து சஞ்சரிக்கும் - தானே வெளிவந்து சஞ்சரியாநிற்கும்; கல்லோடு இரும்புக்கு மிக வன்மை காட்டிடும் - கல்லுக் கும் இரும்புக்கும் மிக்க வன்மையினைக் கற்பிக்கும்; காணுது கேட்ட எல்லாம் - காணுமல் கேட்டவற்றை எல்லாம், கண்டதாக் காட்டி - தான் கண்டதாகக் காட்டி, அணுவா சுருக்கிடும் - அணுவாகச் சுருக்கிவிடும்; கபட நாடக சாலம் எல்லாமும் வல்லது - கபடநாடக ஜாலங்க ளெல்லா வற்றையும் செய்ய வல்லதாகிய, இந்த மன மாயை - இந்த மனமாயை

யானது, ஏழை ஆம் என்னல் - எளியவனுகிய என்னல், அடக்க - வென் றடக்க, வசமோ - வசமாமோ?, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) 'சொல்லானதிற் சற்றும் வாராதபிள்ளையை' என்றது, ஆன்மாவானது கண்ணிலாக் குழவியைப்போல ஆணவமலத்திற் கட்டுப் பட்டிருந்த அவசரம். 'தொட்டில்வைத் தாட்டியாட்டி' என்றது, ஆன்மா விற்குக் கலையாதி தத்துவங்களைக் கூட்டிய அவசரம். 'தொடையினைக் கிள்ளல்போற், சங்கற்ப மொன்றில் தொடுக்கும்' என்றது, ஆன்மாவி னுக்கு அந்தக்கரண வியாபாரமேற்பட்ட அவசரம். 'சப்தபூமியிடை போந்துதலை சுற்றியாடும்' என்றது, ஆன்மா அவத்தைகளில் மொத்துண் ணும் அவசரம். 'புருஷனிலடங்காத பூவை' என்றது, ஆன்மா பரமான் மாவின் திருவருளிற் கட்டுப்படாது சுதந்தரம் பாராட்டித் திரியும் அவசரம். 'கல்லோடிரும்புக்கு மிகவன்மைகாட்டிடும்' என்றது, ஆன்மா தற்போதத்தால் மலத்தடிப்பாயிருந்த அவசரம். 'அணுவாச் சுருக்கிடும்' என்றது, ஆன்மா சிவபோதத்திற் கட்டுண்ட அவசரம். இத்தகைய சால மனைத்திற்குங் காரணம் மாயையே யாகையானும், அம் மாயை மனத்தினை முன்னிட்டே நடத்துகையானும், அத்தகைய மாயையினைச் சிற்றறிவினல் அடக்கியாள முடியாது என்பார், 'எல்லாமும் வல்லசித்த மனமாயை யேழையாமென்னலடக்க வசமோ' என்றனர். (4)

கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னுனுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணா! பரஞ்சோதி! அப்பா! உனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை;
அகிலமுஞ் சிறிதறியுமேல்
தண்ணாரு நின்னருள றியாத தல்லவே;
சற்றேனு மினிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறொன்
றெண்ணாம லுள்ளபடி சுகமா யிருக்கவே
யேழையேற் கருள்செய்கண்டாய்!
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ - ள்) கண் ஆர நீர் மல்கி - கண்கள் நிறைய நீர் ததும்பி, உள்ளம் நெக்கு உருகாத - மன நெகிழ்ந்து உருகாத, கள்ளனேன் ஆனுலும் - திருட னனுலும், கை குவித்து - கை கூப்பி, ஆடியும் பாடியும் - ஆடுதல் பாடுதல் களைச் செய்தும், விடாமல் - இடையருமல், கண் பனி தாரை காட்டி - கண்

களில் குளிர்ச்சியாகிய நீரொழுக்கை யுண்டாக்கி, அண்ணா! - அண்ணா! பரஞ்சோதி! - பரஞ்சோதி!, அப்பா! - அப்பனே!, யான் உனக்கு அடிமை எனவும் - நான் உனக்கு அடிமை எனவும், மேல் எழுந்த அன்பாகி - அதிகப்பட்ட அன்புடையவனாகி, நாடகம் நடித்ததோ குறைவு இல்லை - கூத்தாடினதோ குறைவில்லை; (அதனை) அகிலமும் சிறிது அறியும் எல் - உலகமுஞ் சற்று அறியும் ஆயின், தண் ஆரும் நின்னது அருள் அறியாதது அல்லவே - குளிர்ச்சி பொருந்திய உன் திருவருள் உணராததல்லவே; சற்றேனும் - கொஞ்சமாயினும், இனிது இரங்கி - இனிதா யிரங்கி, சாசுவத முத்திநிலை ஈது என்று உணர்த்தி - அழியாத முத்திநிலை யிதுவென்று தெரிவித்து, சகச நிலை தந்து - சகச நிலையைக் கொடுத்து, வேறு ஒன்று எண்ணாமல் - வேறொன்றை நினையாமல், உள்ளபடி - யதார்த்தமாய், சுகமாய் இருக்க - ஆனந்தமா யிருக்கும் வகையை, ஏழையேற்கு அருள் செய் - ஏழையாகிய அடியேனுக்கு அருள்புரிவாய்!, இகபரம் இரண்டினிலும் —, என்க.

(வி - ரை) பெருமானே! அடியேன் உள்ளபடி அன்பின் மயமாயிருந்து பத்தியிற் கட்டுண்டு மனமுருகி வாழச் சத்தியில ளாயினும், சிவனடியார்களைக் கண்டு அவர்போல் வேடம் பூண்டு, அவர்களைப்போல ஆடியும் பாடியும் அலறியும் வாழ்ந்து வருவதாகிய நடிப்பினைக் கொண்டிருக்கின்றேன். இவ் வுண்மையினை உலகம் ஏகதேசமா யறிந்துகொண்டிருக்கவும் முற்றுந் தேவரீ ரறியாத தல்ல; ஆயினும், என்பால் நிகழும் போலியன்பினை உண்மை யன்பாக மாற்றி, அவ் வன்பின் மயமா யிருத்தற்குரிய சாதனங்களைக் கூட்டிவைப்பா யென்றனர். (5)

காகமா னவைகோடி கூடிநின் றாலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்குமோ?
கர்மமா னவைகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்ர வாகவருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ?
தமியனேற் கருட்டாகமோ
சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு; வினையெலாம்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே; துன்பங்கள்
சேராம லியோகமார்க்க
சித்தியோ வரவில்லை; சகசநிஷ் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூர(ம்); நான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநாள்?
இந்நாளின் முற்றுறுதோ?
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ - ள்) கோடி காகம் ஆனவை கூடி நின்றாலும் - கோடி காகங்கள் சேர்ந்து திரண்டாலும், ஒரு கல்லின் முன் எதிர் நிற்குமோ - ஒரு கல்லுக்கு முன்னே எதிர்த்து நிற்க வல்லவை யாமோ?, (ஆகா; அதுபோல) முன்னே கோடி கர்மம் ஆனவை செய்தாலும் - பூர்வத்தில் கோடி தீவினைகளைச் செய்திருந்தாலும், (அவை) நின் கருணைப்ரவாக அருளை - உன் கிருபாவெள்ள ரூபமான திருவருளை, தாகமாய் நாடினரை - மோட்ச தாகத்துடன் விரும்பினவர்களை, வாதிக்க வல்லவோ - வருத்த வல்லனவோ?; தமியனேற்கு - தனியேனுக்கு, அருள் தாகம் - அருள்மேல் விருப்பம், சற்றும் இல்லை என்பதும் - சிறிதுமில்லை என்னுஞ் செய்தியும், வெளி ஆச்சு - வெளியாய் விட்டது; வினை எல்லாம் சங்கேதமாய் கூடி - வினைகளெல்லாங் கட்டுப்பாடாகத் திரண்டு வந்து, தேகமானதை மிகவும் வாட்டுதே - சரீரத்தினை மிகவும் வருத்துகின்றதே; துன்பங்கள் சேராமல் - துக்கங்கள் வந்து பொருந்தாமல், யோகமார்க்க சித்தியோ வரவில்லை - யோக நெறிச் சித்தியோ கைகூடவில்லை; சகச நிஷ்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம் - சகச நிஷ்டைக்கும் என் மனத்திற்கும் நெடுந்தூரம்; நான் - அடியேன், நின்னோடு ஏகமாய் இருக்கும் நாள் - உன்னோடு கூடிக் கலந்திருக்கும் நாள், எந்த நாள்? - எக்காலமோ?, (அது) இந்நாளில் முற்றுஉறாதோ - இந்தக் காலத்தில் முடிவு பெறாதோ?, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) நானொன்றைப் பிறருக்குச் செய்தேனென்றும், பிறர் தனக்கு ஒன்றைச் செய்தார்களென்றும், யானென்றும், என்னுடைய பதார்த்தமென்றும், பிறரென்றும், பிறருடைய பதார்த்தமென்றும் சொல்லுகிற அஞ்ஞானமாகிய முட்டினது திருக்கை ஞானாக்கினியினாலே வெதுப்பி நன்றாக நிமிர்த்துத் தான் அஞ்ஞானமாகிய குற்றத்தை விட்டு ஞானத்துடன் கூடி ஞானத்தின் வழியாய் நிற்கவே அந்த ஞானத்திற்கு மேலாயிருக்கிற சிவன்றானே புலப்படத் தன்னை யிவன் வசத்திலே கொடுத்து ஆன்மாவென் றொன்றில்லை யென்னும்படி தான் பிரகாசியா நிற்பன். அப்படி நிற்கவே இவனுக் குண்டான கன்ம மனைத்தும் அழியும். அங்ஙனம் பெரியோர் நிற்பராகலின், 'தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ?' என்றனர். அங்ஙனமின்றித் தன்னாலே யாவும் செய்யப்பட்டதென அகங்கரித்து நிற்கிறபோது ஆன்மாக்களுக்குக் கர்த்தா அவர்களுடனே பொருந்தி நிற்கச் செய்தேயும் தோன்றாமனின்று அவர்கள் முன் சனனங்களிற் செய்த கன்மத்திற் கீடான சுகதுக்கங்களையும் புசிப்பித்து, அது புசிப்பிக்கிற அவதரத்திலே இதர விதங்களாகிய ஆகாமியத்தினை யுண்டாக்கா நிற்பன். அத்தன்மை அடியேனுகலின், 'வினையெலாம் சங்கேத மாய்க்கூடியே, தேகமா னதைமிகவும் வாட்டுதே' என்றனர். சிவ ஞான சித்தியார்: "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு, மிக்கோனை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத், தான்செவ்வே நின்றிட

வத் தத்துவன்ஞ னேரே, தனையறித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும், நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி, நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்." என்றதனுற் காண்க.

'ஏகமாய் நின்னே டிருக்குநாள் எந்தநாள்' என்றது, ஆன்மா பரமான்மாவுட னிரண்டற நிற்கும் சுத்தாத்துவித நிலையினை.

அவிகாரவாதி.

"பதிகாரற் சென் றணையப்படு மரநிழல்போலே, முதல்வன் விகாரமின்றி நிற்ப உயிர் தானே பருவஞ் சேர்ந்தவழி ஞானக்கண்ணைப் பெற்று முதல்வனைத் தலைக்கூடுதல் ஏகமாகாதோ?"

மறுப்பு.

"மரநிழலுக்குச் சுதந்திரமின்றிச் சென் றணைவாருக்கு அச் சுதந்திரமா மாறுபோல, முதல்வனுக்குச் சுதந்திர மில்லை; அவனைத் தலைக்கூடுவதாகிய உயிர்க்கே சுதந்திர மெனப்பட்டு வழுவாம்."

பரிணாமவாதி.

"உயிர் கெட்டுக்கூடி முதல்வ னடியி லொன்ருய்ப்போத லேகமாகாதோ?"

மறுப்பு.

"கெட்டாற் கூடுமா றின்று."

பரிணாமவாதி.

"கெடாமலே கூடிநிற்கும்."

மறுப்பு.

"அவ்வாறு நின்று கூடியவழிக் கேடின்மையால் ஒன்ருதல் பெறப்பட்டது."

பரிணாமவாதி.

"கூடியபின் கெட்டுநிற்கும்."

மறுப்பு.

"கெட்டவழி முத்திபெறுவ தொன்றின்று."

பரிணாமவாதி.

"கேடே முத்தியாகும்."

மறுப்பு.

"உயிர் நித்தமாதல் செல்லாது."

ஐக்கியவாதி.

"நீரிலே நீர் சேர்ந்தாற்போல, உயிர் முதல்வ னடியைச் சேர்ந்தொன்ருதலே ஏகமெனப்படாதோ?"

மறுப்பு.

"நீரும் நீரும்போல முதல்வனுமுயிருந் தம்முட் சமமாதல் செல்லாது." (6)

ஒருமைமன தாகியே யல்லலற நின்னருளி
லொருவனான் வந்திருக்கின்,
உலகம் பொறுததோ மாயா விசித்ரமென
வோயுமோ விடமில்லையோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
வலதுகிர்த்திய கர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில
ரடாதென்ப ரோவகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
பேய்க்கோலமாய் விதண்டை
பேசுமோ வலதுதான் பரிபாக காலம்
பிறக்கவிலை யோதொல்லையாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ
ஏதுளவு சிறிதுபுகலாய்!
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ - ள்) நான் ஒருவன் - நானொருவனும், அல்லல் அற - துன்பம் ஒழியும்படி, ஒருமை மனது ஆகி - ஒருமைப்பட்ட மனமுடையவனாய், நின் அருளில் வந்திருக்கின் - உன் திருவருள் வெளிக்குள்வந்திருந்தால், (அவ்விருத்தல்) உலகம் பொறுததோ - உயர்ந்தோரால் பொறுக்கப் படாததோ?, மாயாவிசித்ரம் - மாயா விசித்திரமானது, என ஓயுமோ - என்ன ஓய்ந்துபோமோ?, இடம் இல்லையோ - (அதற்கு என்னையன்றி) வேறு இடமில்லையோ?, அருள் உடைய நின் அன்பர் - உன் திருவருள் பெற்ற உன் அன்பர்கள், சங்கை செய்திடுவரோ - ஆட்சேபிப்பரோ?, அலது - அன்றி, கிர்த்திய கர்த்தராய் - முத்தொழிற் கிறைவராகி, அகிலம் படைத்து - உலகத்தைப் படைத்து, எம்மை ஆள்கின்ற பேர் சிலர் - எம்மைக் காப்பவராகிய சிலபேர், அடாது என்பரோ-தகாது என்பார்களோ?, அகன்ற பெருமை பெறு பூரணம் குறையுமோ - விசாலித்த பெருமையைக் கொண்ட உன் பரிபூரண நிலையானது குறைந்துபோமோ?, பூதங்கள் பேய் கோலம் ஆய் - பூதங்கள் பேய் வடிவு கொண்டு, விதண்டை பேசுமோ - விதண்டாவாதம் பேசுமோ?, அலதுதான் பரிபாககாலம் பிறக்க இல்லையோ - அன்றிப் பரிபக்குவ காலமானது உண்டாகவில்லையோ?, தொல்லையாம் - பழமையாகிய, இருமை செறி - இரண்டென்னும் இலக்கத்தைப் பொருந்திய, சடவினை - அறிவில்லாத இருவினைகள், எதிர்த்து வாய் பேசுமோ - எதிரிட்டு வாய் பேசாநிற்குமோ?, உளவு ஏது - யதார்த்த

மேதோ?, சிறிது புகலாய் - சற்றுக்கூறுவாய்!, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) முதல்வனுடைய திருவருளை யடையவேண்டுமாயின் விரிந்த மனம்முதலில் குவியவேண்டு மாகலின், 'ஒருமை மனது' என ஆரம்பித்து, இங்ஙனம் மனம் குவியாதிருப்பதற்குக் காரணம் வினையாக லின், 'வினை யெதிர்த்து வாய்பேசுமோ' என முடித்தனர். ஒருமை மன தாவது ஒடுங்கு நிலையாகும். இத்தகைய நிலைமை கூடிவரின் வேறொன் றிற்கு மஞ்சவேண்டுவ தில்லை யாகலின், 'ஒருமைமன தாகியே' என்றனர். திருமந்திரம்: "ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ள, நடுங்குவதில்லை நமனு மங்கில்லை, யிடும்பையு மில்லை யிராப்பக லில்லை படும்பயனில்லை பற்றுவிட் டோர்க்கே." என்றதனாற் காண்க. வினை சடமாதலினாலும், சடமாயி னும் ஆன்மாவிற் குண்டாகும் இடையூ றனைத்தும் அவ்வினையினாலேயே விளைவு மாகலினாலும், அத்தகைய வினையை அத்தியாவசியம் விசாரித்து அதனை நீக்கிக்கொள்ளவேண்டு மாகலினாலும், 'இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ' என்றனர். திருமந்திரம்: "வினையா மசத்து விளைவ துணரார், வினைஞானந் தன்னில் வீடுஞ் தேரார், வினைவிட வீடென்னும் வேதமு மோதார், வினையாளர் மிக்க விளைவறி யாரே." என்றதனாற் காண்க.

விதண்டை யென்பது நியாயநூலிற் கூறப்படும் பதினாறு பதார்த்தங் களிலொன்று; இது தன் கோட்பாட்டை நிலைபெறுத்தாத கதை. கதை யாவது கூறுவார் பலரை யுடைத்தாய்ச் சங்கை யுத்தரங்களைப் பயக்குந் தொடர்மொழியின் கோவைப்பாடு.

அடியேனைத் தேவரீருடைய திருவருளுக் கிலக்காக்கினால் அபக்குவி யாகிய என்னிலையைப்பற்றி உன்னன்பர் முதலாயினோர் ஆட்சேபிப்பார் களோ? ஒருவரு மில்லையே? யாதுக்கு நீ என்னை யாண்டருளா திருக் கின்றனை என்பது கருத்து. (7)

நில்லாது தேகமெனு நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினையை யோவிதனை
நின்றனுட் டிக்கவென்றால்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற்று ணும்புசிப் பொவ்வாதெ நாளுமுன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராயியம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து

மனதின் படிக்கெலாஞ் சித்திபெறலா ஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்
கில்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே
யிப்போ திரங்குகண்டாய் !
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே !

(இ - ள்) தேகம் - சரீரம், நில்லாது - நிலைத்திராது, என்னும் - என்கின்ற, நினைவு உண்டு - எண்ணமுண்டு; தேகம் - (அப்படிப்பட்ட) சரீரம், நிலை நின்றிடவும் - நிலைத்திருக்கும்படியாகவும், மௌனி ஆகி - மௌன குருவாகி வந்து, நேர் உபாயம் ஒன்று - நேரான உபாயம் ஒன்றை, அருளினை - அருள் செய்தாய்; ஐயோ - அந்தோ !, இதனை - இவ்வுபாயத்தை, நின்று - நிலை நின்று, அநுஷ்டிக்க என்றால் - அநுஷ்டிக்கலாமென்றால், கல்லாத மனமோ - கல்வி கல்லாத மனமோ, ஒடுங்கி - ஒடுங்கி, உபரதி-உபரதியை, பெறக் காணவில்லை-அடையப் பார்க்கவில்லை; ஆகையாலே-ஆதலாலே, கை ஏற்று-கரத்தா லேற்று, உண்ணும்புசிப்பு-உண்ணும் உணவு, ஒவ்வாது - ஒத்திராது; எ நாளும் - எக்காலத்திலும், உன் காட்சியில் இருந்துகொண்டு - உன் சந்நிதியி லிருந்துகொண்டு, வல்லாளராய் - மனோ தைரிய முள்ளவர்களாய், இயம நியமாதி - இயம நியமாதிகளை, மேற்கொண்ட - செய்யத் தொடங்கின, மாதவர்க்கு-தவசிகட்கு, ஏவல் செய்து-பணிவிடை செய்து, மனதின்படிக்கு எல்லாம் - எண்ணத்தின்படிக் கெல்லாம், சித்தி பெறலாம் - சித்தியை அடையலாம்; ஞானம் வாய்க்கும் - ஞானமும் உண்டாகும்; (ஆனால்) ஒரு மனு - ஒரு விண்ணப்ப முண்டு; (கேட்டருள வேண்டும்; என்னெனின்), எனக்கு - அடியேனுக்கு, இங்கு-இவ்விடத்தில், இல்லாமை ஒன்றினையும் - உன் திருவருள் பெறுமையாகிய வறுமையொன்றை மாத்திரம், இல்லாமை ஆக்க - வறுமை யாக்குதற்காக, இப்போது இரங்கு - இப்போது இரங்கி யருளவேண்டும், இகபரம் இரண்டினும்—, என்க.

(வி - ரை) யாக்கை நிலையாமையினை யறிந்தே னென்பார், 'நில்லாது தேகமெனு நினைவுண்டு' என்றனர். திருமந்திரம்: "ஊரெலாங் கூடி யொலிக்க வழுதிடப், பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச், சூரையங் காட்டிடை கொண்டுபோய்ச் சுட்டிட்டு, நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தாரே." என்றதனாற் காண்க.

தேகம் நிலையல்லதாயினும் சரீரசித்தி யடைந்து வாழ ஆசிரிய ரொரு உபாயம் போதித்தனர் என்பார், 'தேகநிலை நின்றிடவு மௌனியாகி, நேரே யுபாயமொன் றருளினை' என்றனர். சரீரசித்தி வேண்டு மென்பது, திருமந்திரம்: "உடம்பா ரழியி லுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்

ஞானஞ் சேரவு மாட்டா, ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே, யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த்தேனே." என்றதனுற் காண்க.

சரீரத்திற்கு உபாயங் கண்டாலும் கல்வியிலார்க்குக் கைகூடா தென்பார், 'கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக் காணவிலை' என்றனர். திருமந்திரம் : "வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்ரு, ரல்லாதவர்க ளறிவுபல வென்பா, ரெல்லா விடத்து முளனெங்க டம்மிறை, கல்லாதவர்கள் கலப்பறி யாரே." என்றதனுற் காண்க.

"ஏற்ப திகழ்ச்சி" என ஔவை பிராட்டியாரும், "கரவாது வந்தீயுங் கண்ணன்னுர் கண்ணு, மிரவாமை கோடியுறும்." எனப் பெருநாவலரும் கட்டளை யிட்டமையின், 'கையேற் றுணும்புசிப் பொவ்வாது' என்றனர். "அன்பர்பணிக் கென்னை யாளாக்கி விட்டக்கா, லின்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே!" என இவரே பின்னர்க் கூறியிருத்தலின் அதற்கேற்ப, 'மாதவர்க் கேவல்செய்து மனதின்படிக்கெலாஞ் சித்திபெறலாம்' என்றனர். உத்தரவேதம் : "இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி, னின்மையே யின்னாதது." எனக் கூறினமையின், 'இல்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே யிப்போ திரங்குகண்டாய்' என்றனர். ஞானமுதித்தற் கேதுவாகிய ஒரு மொழி கிடைக்கப் பெருமையாகிய வறுமையினைக் குறித்து உரைத்தா ரெனினும் பொருந்தும். (8)

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்துமணல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலவனலைச்
சிரமள வெழுப்பியு நீரினிடை மூழ்கியுந்
தேகநம தல்லவென்று
சிற்சுக வபேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினு ரியாம்பாவியேம்
விரவுமறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலாமுடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்தமின்றி
இரவுபக லேழையர்கள் சையோக மாயினே
மெப்படி பிழைப்பதுரையாய் !
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே !

( இ - ள் ) மர உரி உடுத்தும் - மரநார்ச் சீரையை யுடுத்தும் ; மலை வனம் நெல் கொறித்தும் - மலை நெல்லினையும் வன நெல்லினையும் கொறித்தும் ; உதிர்வன சருகு வாயில் வந்தால் - உதிர்வனவாகிய சருகுகள் தாமிருக்கும்

இடத்தில் விழுந்தால், (அவற்றை யுண்டு) வன்பசி தவிர்த்தும் - மிக்க பசியினை நீக்கியும்; அனல் வெயில் ஆதியால் - அக்கினி வெயில் முதலானவைகளாலும், மழையால் - மழையினாலும், வருந்தியும் - துன்பப்பட்டும், மூல அனலை - மூலாதாரத்திலுள்ள மூலாக்கினியை, சிரமளவு எழுப்பியும் - சிரத்தளவாக எழுப்பியும்; நீரினிடை மூழ்கியும் - புண்யதீர்த்த ஸ்நாநம் பண்ணியும்; தேகம் நமது அல்ல என்று - சரீரம் நமதன்றென்று நிச்சயித்து, சிற்சுக அபேக்ஷையாய் - ஞானசுகத்தினை யடைய விருப்பமுடையவராய், நின் அன்பர் - உன் அன்பர், யோகம் செலுத்தினர் - யோகத்தினை நடத்தி வந்தார்கள்; யாம் பாவியேம் - பாவிகளாகிய நாங்கள், விரவும் அறுசுவையினொடு - கலந்த அறுசுவைகளுடன், வேண்டுவ புசித்து - வேண்டு முணவுகளை யுண்டு, அரையில் - இடையில், வேண்டுவ எல்லாம் உடுத்து - வேண்டும் ஆடைக ளெல்லாவற்றையும் தரித்து, மேடை மாளிகை ஆதி - மேடை மாளிகை முதலியவாகச் சொல்லப்பட்ட, வீட்டினிடை வைகி - வீடுகளில் தங்கி, வேறு ஒரு வருத்தம் இன்றி - வேறொரு துன்ப மில்லாமல், இரவு பகல் - இரவும் பகலும், ஏழையர்கள் - மாதர்களிடத்து, சையோகம் ஆயினேம் - கலவி செய்யாநின்றோம்; எப்படி பிழைப்பது - எவ்வாறு உய்வது?, உரையாய் - சொல்லாய்!, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) வனங்களிலுள்ள ஓர் வகை பெரிய மரங்களின் தோலினைப் பக்குவமாக வுரித்து ஆடைக்குப் பதிலாக முனிவர்கள் அணிவது மரவுரி; இதுவே சீரம் எனவும், சீரை எனவும் படும். கொறித்தலாவது - நெல் முதலியவற்றை ஒவ்வொன்றாகப் பல் முதலியவற்றாற் கோதுதல். அறுசுவையாவன - கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு. மூலவனலாவது - குய்யத்தின் இரண்டங்குலத்தின் கீழிருக்கும் மூலாதாரத்திலுள்ள அக்கினி. எழுப்புதலாவது - அவ் வக்கினியைக் கும்பித்த பிராணவாயுவால் வன்னிபீசங் கொண்டு மூட்டுதல். 'தேகநமதல்ல' என்பது சரீரம் நிலையற்றதென்பதாம். பெரியோர்கள் ஞானானந்தமாகிய பேரின்பத்தினை யடைய ஆசைகொண்டு மரவுரி யுடுத்தல் முதலிய கடுமையான செயல்களைப் புரிந்து உச்சீவித்தனர். சிறியேமாகிய நாங்கள் மாதர்கள் சிற்றின்பத்தினை யடைய ஆசைகொண்டு வேண்டிய உணவுகளை யுண்டும், வேண்டும் ஆடையாதிகளைத் தரித்தும் சிறிதேனும் வருந்தா திருக்கிறோம். நாங்கள் எவ்வா றுய்வோ மென்பது கருத்து. (9)

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற விருகும்ப
முலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக

வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றால்
போராட்ட மல்லவோ? பேரின்ப முத்திப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
யிவ்வுலக மறியாததோ?
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ - ள்) முத்து அனைய மூரலும் - முத்தை யொத்த பற்களும், பவளவாய் இன் சொலும் - பவளத்தினையொத்த வாயிலுள்ள இனிய சொற்களும், முகத்து இலகு பசு மஞ்சளும் - முகத்தில் விளங்குகின்ற பசிய மஞ்சளும், மூர்ச்சிக்க - மூர்ச்சிக்கும்படி, விரகசன்னதம் ஏற்ற - விரகசன்னதத்தை எழுப்ப, இருகும்ப முலையில் - இரண்டு குடங்களை யொத்த தனங்களின்மேல், மணி மாலை நால - இரத்தின ஆரங்கள் தொங்க, வைத்து - எங்களை வயப்படுத்தி, எம்மை மயக்கி - எங்களை மயங்கப்பண்ணி, இரு கண் வலையை வீசி - இரண்டு கண்களாகிய வலையினை யெறிந்து, மாயா விலாச மோக வாரிதியில் ஆழ்த்திடும் - மாயையின் விளையாட்டாகிய மோக சமுத்திரத்தில் அழுந்தப் பண்ணுகிற, பாழ்ஆன - பாழாகிய, சிறு இடை மடந்தையர்கள் - சிற்றிடையினையுடைய மாதர்களது, சிற்றின்பமோ - சிற்றின்ப மென்றாலோ, புத்தமிர்த போகம் புசித்து - புதிய அமிர்தத்தை உண்ணுதலாகிய அனுபவத்தை அனுபவித்து, விழி இமையாத - கண்ணிமைக்காத, பொன்னாட்டும் வந்தது என்றால் - பொன்னுலகத்திலும் வந்ததானால், போராட்டம் அல்லவோ - போராட்டமாய் முடியுமல்லவோ?, பேரின்ப முத்தி - பேரானந்தத்தைத் தருகின்ற மோட்சத்தினை, இ பூமியில் இருந்து காண - இவ்வுலகி லிருந்துகொண்டே அடைவதற்கு, எத்தனை விகாதம் வரும் என்று - எத்தனை தடைக ளுண்டாகுமென்று, சுகர் சென்ற நெறி - சுகமுனிவர் போன மார்க்கம், இ வுலகம் அறியாததோ - இவ்வுலகத்தாரால் அறியப்படாததோ?, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) மாதர்களுடைய அழகிய அலங்கார அவயவமனைத்தும் மாயா சாலமெனச் சிறிதும் உற்று நோக்காது அவர்கள் போகத்தி லழுந்துவதில் சிறிதுஞ் சுகமில்லை யென்பார், "மாயா விலாசமோக வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை மடந்தையர்கள் சிற்றின்பம்" என்றனர். பட்டினத்துப் பிள்ளையார்: "காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே, மாதென்று சொல்லிவருமாயை தன்னை மறலிவிட்ட தூதென்றெண்ணமற் சுகமென்று நாடித் துற்புத்தியை,

யேதென் றெடுத்துரைப் பேனிறை வா!கச்சி யேகம்பனே!" என்றதனுற் காண்க.

தெய்வலோகத்தில் வசிக்கும் தேவர்களுள்ளும் விண்டு: பிரந்தையை யும், பிரமன்: வித்யாபரனையையும், இந்திரன்: அகலிகையையும், அக்கினி: இருடி பத்தினியரையும், வாயு: குசநாபன் புத்திரிகளையும், சூரியன்: சஞ்சிகையையும், சந்திரன் தாரையையும் கண்டு மோகித்துக் காமாந்தகாரத்திற் சிக்கி மயங்கின ரென்பார், 'சிற்றின்பமோ புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத பொன்னுட்டும் வந்தது' என்றார்.

மாதர் சிற்றின்பம் முத்திக்குத் தடையாகத் தேவலோகத்திலும் புகுந்து வருத்துவதாக விருத்தலால் நான் இவ் வுலகத்தி லிருந்துகொண்டு அதனை வென்று முத்தியடைத லருமையாகு மென்று நிச்சயித்து, சுகர் பிறந்தவுடனே துறந்துசென்று நிடதமலை யேறின ரென்பார், 'சுகர் சென்ற நெறி யிவ்வுலக மறியாததோ?" என்றனர். (10)

உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடந்
துளறிடு மவத்தையாகி
உருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்
டொளிக்கின்ற விருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையினுற்
றாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனுற்
றடித்தகில பேதமான
முன்னிலை யொழிந்திட வகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினொடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்தநிறைவே!
என்னிலைமை யாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ
மெந்நாளும் வாழிவாழி!
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே!

(இ-ள்) உன் நிலையும் - உனது நிலையும், என் நிலையும் - எனது நிலை யும், ஒரு நிலை என கிடந்து - ஒரே நிலை யெனக் கொண்டு, உளறிடும் அவத்தையாகி - உளறும்படியான அவத்தையை யடைந்து, உருவுதான் காட்டாத ஆணவமும் - தன் வடிவைப் புலப்படுத்தாத ஆணவமலமும், ஒளி கண்டு - ஒளியினைப் பார்த்து, ஒளிக்கின்ற இருள் என்ன - மறைகின்ற இருளைப்போல, தன் நிலைமை காட்டாது ஒருங்க - தனது நிலைமையைப் புலப்படுத்தாமல் அடங்க, இருவினையினுல் - இருவினைகளாகிய (அலைக ளொடு), தாவு - தாவுகின்ற, சுகதுக்க வேலை - சுகதுக்கங்களாகிய சமுத்தி

ரங்கள், தட்டு அழிய - தடுமாற, முற்றும் இல்லா மாயை அதனால் - (காரியப்பாட்டில்) முழுதும் இல்லாமையாகிய மாயையினால், தடித்து - உருக்கொண்டு, அகில பேதம் ஆன - அநேக வேறுபாடாகிய, முன்னிலை ஒழிந்திட - முன்னிலைச் சுட்டொழிய, அகண்டிதாகாரமாய் - பிறிக்கப்படாத வடிவை யுடையதாய், மூதறிவு - பேரறிவானது, மேல் உதிப்ப - மேலு மேலு முண்டாக, முன் பின்னொடு - முன் பின்னோடு, கீழ் மேல் நடு பக்கம் என்னாமல் - கீழ் மேல் நடு பக்கம் என்று சொல்லாதவண்ணம், முற்றும் - முடிவு பெறுகின்ற, ஆநந்த நிறைவே ! - இன்ப நிறைவே !, என் நிலைமையாய் நிற்க - எனது நிலைமையாகக் கொண்டு அதில் நிலைத்து நிற்கும்படி, இயல்பு கூர் - எனக்கு நல்லியல்பு அருளிய, அருள் வடிவம் - அருளுருவமானது, எந்நாளும் வாழி வாழி ! - எக்காலத்தும் வாழக்கடவது ! வாழக்கடவது !, இகபரம் இரண்டினிலும்—, என்க.

(வி - ரை) அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் அனாதி முத்தனையும், அங்கங்குக் கட்டுபட்டுச் சுக துக்க மோகங்களால் மொத்துண் டுழலும் அனாதி பெத்தனையும் ஒன்றென மயங்கி நான் பிரமமெனக் கூறி ஏகான்ம வாதஞ் சாதிக்க எழும் பசு ஞானத்திற்குக் காரணம் ஆணவ மலத்தடிப் பாகையால், 'உன்னிலையு மென்னிலையு மொருநிலையெனக்கிடந் துளறிடு மவத்தையாகி, உருவுதான் காட்டாத ஆணவம்' என்றனர்.

பூத விருளானது எல்லாப் பதார்த்தத்தையு மறைத்துத் தன்னைக் காட்டி நிற்கும்; ஆணவ மலமானது தன்னையுங் காட்டாது தனக்குள்ளே யிருக்கிற ஆன்மாவையுங் காட்டா தாகலின், 'உருவுதான் காட்டாத வாணவமு மொளிகண் டொளிக்கின்ற விருளென்னவே தன்னிலைமை காட்டாது' என்றனர். திருவருட்பயன்: "ஒரு பொருளுங் காட்டா திருளுருவங் காட்டு, மிருபொருளுங் காட்டா திது." என்றதனாற் காண்க.

மாயை அனாதி நித்யமாயினும் உலகபோகத்திற்குக் காரணமாக விரிந்து கிடக்கு மாயாகாரியம் நிலையுறுத லின்மையின், 'முற்றுமில்லாமாயை' என்றனர். அருணகிரிநாதர்: "இல்லை யெனுமா யையிலிட் டனைநீ" என்றதும் இக்கருத்துப் பற்றியே என்க. கன்மம் காரணமாக விளைந்த ஆணவமலமும், மாயா மலமும் தம்தம் காரியப்பாடு குறைந்தாலன்றி மெய்ஞ்ஞானந் தலையெடா தாகையால், 'ஆணவங் காட்டா தொருங்க மாயை யொழிந்திட மூதறிவு மேலுதிப்ப' என்றனர். 'அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமா யானந்த பூர்த்தியாகி' என முன்னர்க் கூறியிருத்தற்கேற்ப ஈண்டும் 'முன்பினொடு கீழ்மே னடுப்பக்க மென்னாமன் முற்றுமானந்தம்' என்றனர். அருள்வடி வென்பது - குருமூர்த்தத்தினை. (11)

## சச்சிதானந்த சிவம்

பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று
    படர்வெளிய தாகியெழுநாப்
பரிதிமதி காணுச் சுயஞ்சோதி யாயண்ட
    பகிரண்ட வுயிரெவைக்கும்
நேராக வறிவா யகண்டமா யேகமாய்,
    நித்தமாய், நிர்த்தொந்தமாய்,
நிர்க்குண விலாசமாய், வாக்குமன மணுகாத
    நிர்மலா னந்தமயமாய்ப்,
பேராது நிற்றிநீ; சும்மா விருந்துதான்
    பேரின்ப மெய்திடாமல்
பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
    பித்தாக வோ? மனதைநான்
சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
    சாசுவத நிஷ்டையருளாய்!
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
    சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) பார் ஆதி - பிருதிவி முதலான, ககன பரப்பும் - ஆகாயப் பரப்பும், உண்டோ என்று - உளதோவென்று (சொல்லும்படி), படர் வெளியது ஆகி - வியாபிக்கின்ற பரமாகாசமாகி; எழுநா - அக்கினியும், பரிதி - சூரியனும், மதி - சந்திரனும், காணு - காணக்கூடாத, சுயம்சோதி யாய் - சுயம் பிரகாசமாகி; அண்டபகிரண்ட உயிர் எவைக்கும் - அண்ட பகிரண்டங்களிலுள்ள உயிர்க ளெல்லாவற்றிற்கும், நேராக அறிவாய் - செவ்வையாக அறிவுருவாய், அகண்டமாய் - கண்டிக்கப்படாததாய், ஏக மாய் - ஒன்றாகி, நித்தமாய் - அருவற்றதாய், நிர்த்தொந்தமாய் - தொடர் பற்றதாய், நிர்க்குண விலாசமாய் - குணங் கடந்த லீலையாகி, வாக்கு மனம் அணுகாத - வாக்கு மனங்கள் பொருந்தாத, நிர்மல ஆநந்த மயமாய் - நிர்மல சுகரூபமாகி, நீ பேராது நிற்றி - நீ அசையாது நிற்கிறாய்; சும்மா இருந்து பேரின்பம் எய்திடாமல் - சும்மா இருந்து பேராநந்தத்தைப் பெறாமல், பேய் மனதை அண்டி - பேய் மனத்தினைச் சார்ந்து, தாய் இல்லா பிள்ளை போல் - தாயற்ற குழந்தைபோல், பித்தாகவோ? - பித்தேறவோ?, மனதை நான் சாராதபடி - மனத்தை நான் அணுகாதபடி, அறிவின் - அறிவோடு கூடிய, நிருவிகற்ப அங்கம் ஆம் - நிருவிகற்ப மென்னும் உறுப்பையுடைய, சாசுவத நிஷ்டை அருளாய் - அழியாத சகசநிஷ்டையினைக் கொடுத்தருள வேண்டும்; சர்வ பரிபூரண - சகல பதார்த்தங்களிலும் பரிபூரணமான, அகண்ட தத்துவமான - அகண்ட வஸ்துவாகிய, சச்சிதானந்த சிவமே! - உண்மை யறிவானந்த ரூபமாகிய மங்கள வஸ்துவே!, என்க.

(வி - ரை) சிதாகாயத்தினை நோக்கப் பூதாகாய முதலியன பரமாணு ரூபமாகவும் மதித்திடற்கு ஏலாதிருத்தலின், 'பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று படர்வெளிய தாகி' என்றும், சூரியன் சந்திரன் அக்கினி இவர்கட்குச் சுதந்திரமாக ஒளியின்மையின் அவைகட்குப் பிரகாசத்தினைத் தந்து தான் சுயம் பிரகாசமாக விளங்குதலால், 'எழுநாப் பரிதிமதி காணுச் சுயஞ்சோதியாய்' என்றும், ஆன்மாக்கடோறும் அறிவு சொரூபமாக விளங்கிக்கொண் டிருத்தலினால், 'அண்ட பகிரண்ட வுயிரெவைக்கும் நேராக வறிவாய்' என்றும், எவ்விடத்தும் ஔபச்சிலேடிகமாக வியாபித் திருத்தலினால், 'அகண்டமாய்' என்றும், அங்ஙனம் வியாபித்திருப்பினும் அவ் வியாபகத் துட்பட்ட பொருள்க ளனைத்தும் தானுகாதென்பார், "ஏக மாய்' என்றும், ஆதி நடு அந்த மிலையென்பார், 'நித்தமாய்' என்றும், அனைத்தினிலும் வியாபித்திருப்பினும் அவற்றுட் சம்பந்தமில்லை யென் பார், 'நிர்த்தொந்தமாய்' என்றும், தனக்கென வொரு குணமில்லை யென் பார், 'நிர்க்குண விலாசமாய்' என்றும், அவாங் மனோகோசரமான மலரகித மென்பார், 'வாக்குமன மணுகாத நிர்மலா னந்தமயமாய்' என்றும் கூறினர்.

இரணியை, கனகை, இரக்தை, கிருட்டனை, சுப்பிரபை, அதிரத்தை, வெகுரூபை என்னும் எழுநாக்குகளை யுடைமையால் அக்கினியை 'எழுநா' என்றது. மதுவையுடையது மதி அல்லது மதிக்கப்படுவது மதி. (1)

குடக்கொடு குணக்காதி திக்கினை யுழக்கூடு
 கொள்ளல்போ லேந்துபூதம்
கூடுஞ் சுருங்கிலே, சாலேக மொன்பது
 குலாவுநடை மனையை,நாறும்
வடக்கயிறு வெண்ணரம் பாவென்பு தசையினால்
 மதவேள் விழாநடத்தி
வைக்கின்ற கைத்தேரை, வெண்ணீர் செநீர்கணீர்
 மலநீர்பு ணீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக், கருமருந் துக்கூட்டை
 வெட்டவெட் டத்தளிர்க்கும்
வேட்கைமர முறுகின்ற சுடுகாட்டை, முடிவிலே
 மெய்போ லிருந்துபொய்யாம்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
 தானுகி நிற்பதென்றோ?
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
 சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) குடக்கொடு - மேற்கோடு, குணக்காதி - கிழக்குமுதலிய, திக்கினை - திக்குகளை, உழக்கூடு - உழக்கினிடத்தில், கொள்ளல்போல்

கொள்ளுதல்போலே, ஐந்து பூதம் கூடும் - பஞ்சபூதங்கள் சேருகின்ற சுருங்கு இல்லை - சிறு குடிலை; சாலேகம் ஒன்பது குலாவும் - ஒன்பது பல கணிகள் விளங்குகின்ற, நடை மனையை - நடை வீட்டை; நாறும் - காணப் படுகின்ற, வடக்கயிறு - வடக்கயிறு, வெள் நரம்பு ஆ - வெண்ணரம்பாக, என்பு தசையினுல் - எலும்பு மாமிசங்களால், மதவேள் - மன்மதனுனவன், விழா நடத்திவைக்கின்ற - திருவிழா நடத்தி வைக்கின்ற, கை தேரை - சிறு தேரை, வெண்ணீர் - வெண்ணீரும், செம்நீர் - செந்நீரும், கண்ணீர் - கண்ணீரும், மலநீர் - மலநீரும், புண்ணீர் - புண்ணீரும், (ஆகிய இவற்றை) இறைக்கும் - இறைக்கின்ற, விடக்குத் துருத்தியை - மாமிசத் துருத்தியை; கரு மருந்து கூட்டை - ஜன்மமாகியமருந்து விளைகின்ற கூட்டினை, வெட்ட வெட்ட தளிர்க்கும் - வெட்ட வெட்டத் தளிர்க்கின்ற, வேட்கை மரம் உறு கின்ற - ஆசையாகிய மரங்கள் மிகாநின்ற, சுடுகாட்டை - மயானத்தை; முடிவிலே - முடிவில், மெய்போல் இருந்து - உண்மைபோலிருந்து, பொய் ஆம் - பொய்யாய்விடுகின்ற, சடக்கை - சரீரத்தை, சடக்கு என - பொய் யென்று, சின்மயம் சதம் என்று - ஞானரூபமே மெய்யென்று, தானுகி நிற் பது என்றோ - தானுகி நிற்பது எந்தக் காலமோ?, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) வெண்ணீர், செந்நீர், மலநீர், புண்ணீர் முதலிய தங்கிய ஐம்பூதங் கூடுஞ் சிறு வீடென்றும், நவத்துவாரங்களை யுடைய நடை வீடென்றும் சொல்லப்பட்ட உடல் நிலையல்ல வென்பார், 'கூடுஞ் சுருங்கிலை சடக்கைச் சடக்கென' என்ருர். திருக்கடைக்காப்பு: "என்பினுற் கழி நிறைத் திறைச்சி மண் சுவரெறிந்து நம்மில்லம், புன்புலா லுறுதோல் போர்த்துப்பொல் லாமையான் முகடுகொண்டு, முன்பெலா மொன்பது வாசலார் குரம்பையின் மூழ்கிடாதே, யன்பனு ரூர்தொழு துய்யலா மையல் கொண் டஞ்சநெஞ்சே!" என்றதனுற் காண்க. சின்மயமே மெய்யென்று துணிந்து அதின் மயமாய் நிற்பது எக்காலமோ என்பார், 'சதமென்று சின்மயந் தானுகி நின்பதென்றோ?' என்றனர். சின்மயமாவது - கதிரொளி யுடன் கண்ணொளி கலந்து நின்ருற்போல் அருளொடு ஆன்மா கலந்து நிற்றலேயாம். உபதேசப்பஃறொடை: "சீரார் கதிரொளியிற் சென் ருெடுங்குங் கண்ணொளிதா, னோரா மொளியாக வேய்ந்ததோ - பாரென்ன, நின்றவொளி யன்றி நிரூபிக்கிற் கண்ணொளிவே, றின்றெனவே நன்றென் றிரங்கியே - பொன்ருத, செய்யகதி ருஞ்சிறந்த பொருளுங் கதிர்சேர், துய்யவிழிக்கோ கதிர்க்கோ தோன்றிடுவ - தையமறச், சொல்லென் றிடினல் விழிக்கரந்தோ ளற்றவரே, புல்லும் பிறவி பொடிப்பர்" என்றத னுற் காண்க.

வெண்ணீர் - கோழை. செந்நீர் - உதிரம். மலநீர் - மூத்திரம். புண் ணீர் - மாமிசநீர். (2)

பாகத்தி னாற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லை; வேத
பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையுமில்லை;
யோகத்தி லேசிறிது முயலவென் றாற்றேக
மொவ்வாதி வூண்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னாற்செய்யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை; மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்கவென்றால்
முற்றாது; பரிபாக சத்திக ளனேகநின்
மூதறிவி லேயெழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்பிர வாகமே!
தன்னந் தனிப்பெருமையே!
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) பாகத்தினால் - பாகமாக, கவிதை பாடி படிக்கவோ - கவிகளைப் பாடிப் படிக்கவென்றாலோ, பத்திநெறி இல்லை - பத்திமார்க்கமில்லை; வேத பாராயணப் பனுவல் - தமிழ் வேதமாகிய பாராயணத்துக்குரிய (திருவாசக மென்னும்) நூலினையும், மூவர்செய் பனுவல் - மூவரருளிச்செய்த (அடங்கல் முறையாகிய) நூலினையும், பகரவோ - பாடவென்றாலோ, இசையும் இல்லை - இசை யுணர்ச்சியுமில்லை; யோகத்திலே சிறிது முயல என்றால் - யோக மார்க்கத்தில் கொஞ்சம் முயல்வோ மென்றால், தேகம் ஒவ்வாது - சரீரம் இணங்காது; இ ஊண் வெறுத்தால் - இந்த உணவை வெறுத்தால், உயிர் வெறுத்திடல் ஒக்கும் - உயிரை வெறுத்தாற்போன்றிருக்கும், அல்லாது - அன்றி, கிரியைகள் - கிரியைகளை, உபாயத்தினால் செய்யவோ - உபாயமாகச் செய்யவென்றாலோ, மோகத்திலே சிறிதும் ஒழிய இல்லை - மோகத்தில் கொஞ்சமாயினும் நீங்கவில்லை; மெய்ஞ்ஞான மோனத்தில் நிற்க என்றால் - மெய்ஞ்ஞான வரம்பாகிய மோனநிலையில் நிற்கவென்றால், முற்றாது - முடிவு பெறாது, (அதற்குக் காரணம்) பரிபாக சத்திகள் அனேகம் - என்னைத் தடைசெய்யப் பக்குவப்பட்டுள்ள பரிபக்குவ சத்திகள் அனேகங்களாயுள்ளன; நின் மூதறிவிலே எழுந்த - உன் விஷயமான பேரறிவிடத்துண்டாகிய, தாகத்திலே வாய்க்கும் - மோட்ச தாகத்தில் கிடைக்கப் பெறுகின்ற, அமுர்தப் பிரவாகமே! - அமுதப்பெருக்கே!, தன்னந் தனிப்பெருமையே! - ஏகாந்தமாகிய பெருமையே!, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) தெய்வபக்தி வாய்ந்தவர் பாடும் பாக்களே அருண்மயமான செம்பாகமாய் விளங்குவதன்றி இலக்கிய இலக்கண வலிவு

மாத்திரையானே பாடும் பாட்டு நயம்பெரு தென்பார், 'பாகத்தி ஞற் கவிதை பாடிப் படிக்கவோ பத்திநெறி யில்லை' என்ருர். இதனுல் வித்து வான்கட்கு நூலின் றுணையினும் தெய்வத்துணையே சிறந்ததென்ப தாயிற்று. புலமை யிலக்கணம்: "நூலின் றுணையினு நூறுபங் கதிகந் தெய்வத் துணையாஞ் செந்தமிழ்க் கவிக்கே." என்றதனுற் காண்க.

வேதமுடிவாகும் உபநிடதங்களை யோதின் விழுமிய முத்தி சித்திக்கு மென்பது நூற்றுணி பாகலின், உபநிடதங்கள் முற்றும் உணர்ந்து தெளி தற்கேற்ற ஆயுணீட்சியும் உணர்வு வலியும் அக்காலத்தோர்க் குண்டாயது போல இக்காலத்தோர்க் கின்மையின், எவரும் ஓர்ந்து எளிதிற் கதிபெறு மாறு முத்தி பெறற்குரிய உபநிடதங்களின் சாரமாகத் திருவாசக மொழிந்து வைத்தருளினு ரென்பார் திருவாசகத்தினை 'வேதம்' என்றனர். சைவர்கள் தங்கள் சிவபூசையில் தினந்தோறும் வட்டமிட்டு வரும் நூலாகலின் 'பாராயணப் பனுவல்' எனவும் ஓதினர். 'மூவர்செய் பனுவல், என்றது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருக்கடைக் காப்பினையும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தினையும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பாட்டினையுமாம். இம்மூவர் திருமுறைகளையும் பண்ணிசையோடு பாடவேண்டியது மரபாகலின் அவ்விசை தனக்கில்லை யென்பார், 'பகரவோ விசையுமில்லை' என்றனர். ஞானமடைய வேண்டு மாயின் அதற்குச் சோபானமான யோகத்திற் பழகிக்கொள்ள வேண்டுவது அவசியமாயினும் ஆசன முதலிய கற்பித்துக்கொண்டு அசைவற விருந்து வாழத் தேக சௌக்கியமில்லை யென்பார், 'யோகத்திலே சிறிது முயல வென் ருற்றேக மொவ்வாது' என்றனர். விரதாதிகளை யனுட்டிக்க உணவு முதலியவற்றை நீக்கி யிருக்கலா மென்ருலோ தேக நழுவும்; தேக நழுவிலோ உயிர் ஓடிவிடும்; உயிர் ஓடிவிடிலோ எடுத்துக்கொண்ட முயற்சி அப்பிரயோசனமாம் என்பார், 'ஊண்வெறுத்தால், உயிர்வெறுத் திட லொக்கும்' என்றனர். சாதனங்களாயுள்ள சரியையாதிகளில் இலேசாகப் பழகிக் கொள்ளலாமெனில் பிரபஞ்ச மயக்க நீங்கவில்லை என்பார், 'கிரியைகளுபாயத்தி ஞற்செய்யவோ மோகத்தி லேசிறிது மொழியவில்லை' என்றனர். "மோன மென்பது ஞானவரம்பு" ஆகலின், ஞானத்தினைப் பெறச் சும்மா விருப்பதற்குப் பழகிக்கொள்ளலா மெனிலோ, "ஆறுகோடி மாயாசத்திகள், வேறு வேறு தம்மாயைக டொடங்கின" என்றதற் கேற்பச் சத்திகளின் தடைகள் பற்பல என்பார், 'மெய்ஞ்ஞான மோனத்தி னிற்க வென்ருல், முற்ருது பரிபாக சத்திக ளனேகம்' என்றனர். (3)

இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
மிவ்வுலக மெவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
வென்னின்மக மேருவாக்கிச்

சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கிநாளுந்
தூர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
யம்மம்ம! வெல்லவெளிதோ?
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோவ லாதுமருளோ?
சமயநெறி காணாத சாக்ஷிநீ சூக்ஷ்மமாத்
தமியனேற் குளவுபுகலாய்!
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) மனமாயை - மனமாயையானது, இமையளவு போதை - இமைகொட்டு மளவினதாகிய காலத்தை, ஒரு கற்பகாலம் பண்ணும் - ஒரு கற்பகாலமாக்கும்; இவ்வுலகம் எவ்வுலகமோ என்ற எண்ணம் வருவிக்கும் - இவ் வுலகமானது எவ்வுலகமோ என்கிற எண்ணத்தை யுண்டாக்கும்; மாதர் சிற்றின்பமோ என்னின் - மகளிர் சிற்றின்பமோ வென்றால், மகமேரு ஆக்கி - மகமேருவாகச் செய்து, சுமை எடுமின் என்று - சுமை யெடுங்களென்று, எமை - எங்களை, சும்மாடும் ஆய் - சும்மாடாகவுஞ்செய்து, சுமை ஆளும் ஆக்கி - சுமையாளாகவுஞ் செய்து, நாளும் - நாள்தோறும், தூர்ப்புத்தி பண்ணி - தூர்ப்புத்தியை யுண்டாக்கி, உள்ள - உண்டாயிருக்கிற, நற்புத்தி யாவையும் - நல்ல புத்திகளெல்லாவற்றையும், சூறையிட்டு - சூறையாடி, இந்த்ரஜாலம் அமைய - இந்திரஜாலம் பொருந்த, ஒரு கூத்தும் சமைந்து ஆடும் - ஒரு நாடகமும் அமைந்து நடிக்கும்; அம்மம்ம! - ஆச்சரியம்! ஆச்சரியம்!, வெல்ல எளிதோ - (இதனை) வெல்லுதற்கு எளிதாகுமோ?, அருள்பெற்ற பேர்க்கு எல்லாம் - உன் திருவருளைப் பெற்ற பேர்கட்கெல்லாம், ஒளி பெற்று நிற்கும் ஈது - ஒளி விளங்க நிற்கின்ற இது, அருளோ - அருட்டன்மையோ?, அல்லாது மருளோ - அல்லது மருட்டன்மையோ?, சமய நெறி காணாத - சமயமார்க்கங்களால் காணப் படாத, சாட்சி நீ - சாட்சிபூதனாகிய நீ, சூக்ஷமம் ஆ - நுட்பமாக, தமியனேற்கு - தனியேனாகிய எனக்கு, உளவு புகலாய் - உளவு சொல்லாய்!, சர்வ பரிபூரண—, என்க.

(வி - ரை) சிவஞானசித்தியார்: "மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" எனக் கூறியதற்கேற்ப, இமைப் பொழுதினைக் கற்பகாலமாகச் செய்தலும், 'இவ்வுலகம் எவ்வுலகமோ' என்ற எண்ணத்தினை யுண்டாக்கலும் முதலிய செயவல்ல மன மாயையானது என்றால் வெல்ல வொண்ணுமோ? உன் திருவருள் பெற்றோர்க் கெல்லாம் ஒளியுருவாய் நிற்கின்ற இது அருளோ அல்லது மருளோ எனக்கு உளவு சொல்லாய் என்றனர்.

மாணவகன் வினா.

"விடிவா மளவும் விளக்கனைய மாயை" என்றபடி மாயை ஞானத்தினைப் பிரகாசிக்கு மென்று நூல்கள் கூற மயக்கத்தினைச் செய்யு மென்பானேன்?"

விடை.

"மாயையா லுண்டான ஞானங் கிஞ்சித்விடமாய் அனான்மாவான சரீராதியி லான்மபாவனையை யுண்டாக்குவதால் மயக்க மெனப்படும். அந்தகாரத்தில் தீபம்பிரகாசித்தபோதிலும் கருநெய்தல் முதலானவற்றிற் செங்கழுநீ ரென்னும் விபரீதஞான முண்டாம். அங்ஙனமே மாயையில் ஞானம் பிரகாசிக்கினும் அனான்மாவான சரீராதியி லான்மாவென்னும் விபரீத முண்டாக்குகிற தன்மையால் மயக்க மென்பது சித்தமே." (4)

இனியே தெமக்குனருள்? வருமோ வெனக்கருதி
யேங்குதே நெஞ்சமையோ!
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே!
அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
மந்தகற் காளாகவோ?
ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
மவலமாய்ப் போதனன்றோ?
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
சாமிநீ யறியாததோ?
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) எமக்கு - எங்களுக்கு, இனி உன் அருள் ஏது - உன் கிருபை கிடைப்பதேது?, வருமோ - ஒருக்கால் உண்டாகுமோ, எனக் கருதி - என்று நினைத்து, நெஞ்சம் ஏங்குதே - மனமானது ஏக்கங்கொள்ளா நின்றதே; ஐயோ - அந்தோ!, இன்றைக்கு இருந்தாரை - இன்று உயிர் வாழ்ந்திருந்தாரை, நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ - நாளைக்கு இருப்பார்களென்று நினைக்கவோ, திடம் இல்லையே! - ஸ்திர மில்லையே!, அநியாயமாய் - அநியாயமாய், இந்த உடலை - இந்தச் சரீரத்தினைக் குறித்து, நான் என்று வரும் - நானென்று அகங்கரித்துக்கொண்டு வருகின்ற, அந்தகற்கு ஆளாகவோ - நமனுக்கு அடிமையாகவோ?, நான் ஆடித் திரிந்து - நான் ஆடி உழன்று, கற்றதும் கேட்டதும் - கற்ற நூல்களும் கேட்ட கேள்வியும், அவலமாய் போதல் நன்றோ - நிஷ்பலமாய்ப் போவது

நன்மையோ?, கனி எனும் - கனியையாயினும், வறிய செங்காய் எனும் - வெறுமையான செங் காய்களையாயினும், உதிர் சருகு கந்த மூலங்கள் எனும் - உதிர்ந்த சருகு கந்த மூலங்கள் இவற்றுள் ஒன்றையாயினும், கனல் வாதை வந்து எய்தின் - உதராக்கினியின் உபத்திரவம் வந்து பொருந்தினால், அள்ளிப் புசித்து - வாரியுண்டு, நான் - அடியேன், கண் மூடி - கண்களை மூடிக்கொண்டு, மௌனி ஆகி - மௌன நிலையை யுடையேனாகி, தனியே இருப்பதற்கு எண்ணினேன் - தனியா யிருக்க நினைத்தேன்; இது எண்ணம் - இந்த எண்ணமானது, சாமி நீ அறியாததோ - சர்வ சுவாமியாகிய நீ யறியாததோ?, சர்வ பரிபூரண—, என்க.

(வி - ரை) அருளினை யடைவதற் கேதுவான சாதனங்களி லொன்றேனுந் தக்கவாறு முடித்திலே னென்பார், 'அருள் வருமோ வெனக் கருதி யேங்குதே நெஞ்சம்' எனவும், அருளடையு முன்னர் தேக நழுவிடி லென் செய்வது என்பார், 'இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென் றெண்ணவோ திடமில்லை' என்றும், அருளடையாதாதலினால் அகங்காரத்துக் குட்பட் டழிவேன் என்பார், 'அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு மந்தகற் காளாகவோ' என்றும், அருளை யடையவேண்டி முயற்சித்தவை யனைத்தும் அப் பிரயோசனமோ வென்பார், 'ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது மவலமாய்ப் போதனன்றே' எனவும், இனி, தேக பராமரிப்புக் காக வொரு சிறிது முயற்சியாது இருந்தவிடத்திலிருந்து பசி வந்திடில் கண்முன் னின்றதைப் புசித்துத் தன்னந்தனியே யிருந்து அருளுட்டத் தினை நாடுவேன். இது வுன் திருவரு ளறியு மென்பார், 'கனல்வாதை வந்தெய்தில்.........அறியாததோ' என்றுங் கூறினர். (5)

மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மோகத் திருந்துமென்? யோகத்தி னிலைநின்று
மூச்சைப் பிடித்தடைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்?
கரதலா மலகமென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவிதன்றோ?
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) மத்தம் - உன்மத்தங் கொண்ட, மதகரி - மதயானைகள், முகில் குலம் என்ன - மேக கூட்டங்கள் போல, நின்று இலகு - நின்று விளங்குகின்ற, வாயிலுடன் - முற்றத்தோடு கூடிய, மதி அகடு தோய் - சந்திரனது நடுப்பக்கத்தினைத் தொடுகின்ற, மாட கூடச் சிகரம் மொய்த்த - மாளிகைகள் வீடுகளின் சிகரங்கள் இவைகள் நெருங்கிய, சந்திரகாந்த மணி மேடை உச்சி மீது - சந்திரகாந்தக் கல்லினாற் சமைத்த இரத்தின கசிதமான மேடையின் உச்சியில், முத்தமிழ் முழக்கமுடன் - முத்தமிழ் முழக்கத்தோடு, முத்த நகையார்களொடு - முத்தினை யொத்த பற்களை யுடைய மாதர்களோடு, முத்து முத்தாய் குலாவி - பிரியமாய் விளையாடி, மோகத்து இருந்தும் என் - மோக சாகரத்தில் முழுகிக் கிடந்தா லென்ன நஷ்டம்?, யோகத்தின் நிலை நின்று - யோக நிலையி னின்று, மூச்சை பிடித்து அடைத்து - வாயுவினைத் தடுத்து, கைத்தலம் - கைகளில், நகப் படை விரித்த - நகமாகிய ஆயுதங்களை விரித்த, புலி சிங்கமொடு கரடி நுழை - புலி சிங்கங்களுடனே கரடிகள் நுழையப்பெற்ற, நூழை கொண்ட - அடர்ச்சியைக்கொண்ட, கானம் - கானத்திலும், மலை உச்சி யில் - மலையுச்சியிலும், குகையூடு - குகைகளிலும், இருந்தும் என் - இருந்தா லும் என்ன லாபம்?, கரதலம் - கையிலுள்ள, ஆமலகம் என்ன - நெல்லிக் கனிபோல, (விசதமாய்) சத்தம் அற - ஆரவாரங்க ளடங்க, மோன நிலை பெற்றவர்கள் - மௌன நிலையைப் பெற்றவர்கள், உய்வர் - உச்சீவிப்பார் கள்; சனகாதி துணிவு இது அன்றோ - சநகாதிகளுடைய நிச்சயம் இது வல்லவா?, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) பிரபஞ்ச வியாபாரங்களை விட்டு அரிய தவங்களைப் பண்ணினாலும், சர்வமும் சிவனுடைய செயலென் றறியாதவர்கட்கு யாண் டும் உய்தலில்லை யென்றும், சர்வமும் சிவனுடைய செயலென் றறிந்தவர் கட்கு இந்திரிய வியாபாரத்துடன் கூடியிருந்தாலு முய்தலுண்டாமென்பது கருத்து. சிவஞானசித்தியார்: "நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்து, நீடுபல காலங்க ணித்தரா யிருந்து நின்மலஞா னத்தை யிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பி, னேடுதரு மலர்க் குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே, யேடுவிழியின் படுகடைக்கே கிடந்து மிறை ஞானங், கூடுமவர் கூடரிய வீடு கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும் பிட்டே யிருப்பர்." எனவும், திருக்களிற்றுப்படியார்: "வீட்டிலே சென்று வினையொழித்து நின்றிடிலென், நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் - கூட்டில்வாட், சாத்திியே நின்றிலையேற் றக்கனார் வேள்வி செய்த, மாத்தி ரமே யாங்கண்டாய் வந்து." எனவும் வருவனவற்றாற் காண்க. (6)

கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
 கண்டவே தாகமத்தின்
காட்சிபுரு ஷார்த்தமதின் மாட்சிபெறு முத்தியது
 கருதினனு மானமாதி

உத்திபல வாநிரு விகற்பமே யில்லையா
லொன்றோ டிரண்டென்னவோ
உரையுமிலை நீயுமிலை நானுமிலை யென்பது
முபாயநீ யுண்டுநானும்
சித்தமுள னில்லை யெனும்வசன நீயறிவை ;
தெரியார்க டெரியவசமோ ?
செப்புகே வலநீதி யொப்புவமை யல்லவே ;
சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற வெனையாண்ட குருமௌனி கையினாற்
றமியனேற் குதவுபொருளே !
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே !

(இ - ள்) கைத்தலம் விளங்கும் - உள்ளங்கையினிடத்து விளங்காநின்ற, ஒரு நெல்லிக்கனி என - ஒரு நெல்லிப்பழம்போல, கண்ட - காணப்பட்ட, வேதாகமத்தின் காட்சி - வேதாகமங்களிற் கண்டபொருள், புருஷார்த்தம் - சதுர்வித புருஷார்த்தமாம்; அதில் - அந்தப் புருஷார்த்த சதுஷ்டயத்துள், முத்தி - வீடு எனப்படுவது, மாட்சி பெறும் - மேன்மையை யடையும் ; அது - அந்த வீட்டினை, கருதின் - நினைத்தால், அநுமானம் ஆதி யுத்தி பல ஆம் - அனுமானம் முதலிய பிரமாணங்களால் உளவாகின்ற யுக்திகள் அனேகமாகும் ; நிருவிகற்பமே இல்லை ஆல் - நிருவிகற்ப சமாதி யனுபவத்தின்கண் இந்த யுத்திகள் பயன்படாதொழியு மாதலால், ஒன்றோடு இரண்டு என்னவோ - ஒன்றுடன் இரண்டு என்று சொல்வோ மென்றாலோ, உரையும் இல்லை - சொல்லுமில்லை ; நீயும்இல்லை - நீ யென்பதும் இல்லை, நானும் இல்லை - நான் என்பதும்இல்லை, என்பதும் - என்று சொல்லுவதும், உபாயம் - தந்திரமே ; (எனெனில்) நீ உண்டு - நீ யென்பதும் உண்டு, நானும் - அடியேனும், சித்தம் உளன் - சித்தமாயிருக்கின்றேன் ; (அப்படியிருக்க) நான் இல்லை என்னும் வசனம் - நானென்பதொரு பொருள் இல்லை என்னுஞ் சொற்பொருளை, நீ அறிவை - நீ யறிவாய் ; தெரியார்கள் - அறியாதவர்கள், தெரிய வசமோ - அறிய வொண்ணுமோ ?, செப்பு - (வேதாகமங்களால்) சொல்லப்பட்ட, கேவலம் நீதி - முத்திநெறியின் ஒழுங்கிற்கு, ஒப்பு உவமை அல்லவே - (வேறு பொருள்) ஒத்துக்கொள்ளத்தக்க உவமைப்பொருளாகாதே ; சின்முத்திராங்கமரபின் - ஞானமுத்திரையை யங்கமாகவுடைய மோன மரபினால், சத்தம் அற - சொல் லடங்க, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின, குரு மௌனி கையினால் - மௌன குருவின் திருக்கரங் கொண்டு, தமியனேற்கு உதவு பொருளே - தனியேனான எனக்குக் கொடுக்கப்பட்ட வஸ்துவே !, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) 'நெல்லிக்கனியினை உள்ளங்கையினி லேந்திக்கொண்டு உற்று நோக்கினால் உள்ளே யிருக்கிற வரைகளெல்லாம் எண்ணுதற் கேற்றபடி விளங்கித் தோன்றுமாறுபோல' வேதாகமங்களில் சந்தேக மின்றிக் காணப்படுவது அறம், பொருள், இன்பம், வீடு ஆகலின் 'கைத்த லம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக் கண்ட வேதாகமத்தின், காட்சி புருஷார்த்தம்' என்றனர்.

ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் தமது பாஷ்யத்தில் "வயதுவேத சிவா கம யொபேதம் நபஸ்யாம ஃ - வேதாபி சிவாகம ஃ" எனக் கூறி யிருத்த லின், வேதத்துடன் ஆகமத்தினையுங் கூட்டி 'வேதாந்தம்' என்றனர். புருடார்த்தங்களிற் சிறந்துள்ளது வீடு ஆகலினாலும், அவ் வீட்டினைப்பற்றி நினைக்குமிடத்து அனுமான முதலிய பல யுக்திகள் வேண்டியிருத்தலி னாலும், நிருவிகற்பத்தின்கண் அவையொன்றும் வேண்டாமாகையானும் அதில் 'மாட்சிபெறு முத்தியது கருதினனு மனமாதி, உத்திபல வாசிரு விகற்பமே வில்லை' என்றனர். நிர்விகற்பமாவது - பெயர் முதலியவற்றால் பகுத்தறித லின்றி இஃதொன்று தோன்றா நின்றதெனப் பொருளுண்மை மாத்திரையே யறியு ஞான சத்தியாம். "விண்டலில்லா வறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே" எனச் சிவஞானசித்தியிற் கூறியதனாற் காண்க.

பரமான்மாவும் ஆன்மாவும் சுத்தாத்துவிதமாக இரண்டறக் கலந்த விடத்துப் பிரித்தறியக் கூடாமையின் வைகரி வாக்கால் வேறு பிரித்துக் கூறவியலா தென்பார், 'ஒன்றோ டிரண்டென்னவோ வுரையுமில' என்ற னர். ஆயினும், "அச்சுத்தாத்துவித நிலையில் ஆன்மாவைக்காட்டிலும் பரமான்மா வொன்றில்லை" என்றும், "பரமான்மாவைக் காட்டிலும் ஆன்மா ஒன்றில்லை" என்றும் கூறுவது தந்திரமே யன்றி சத்தியமல்ல என்பார், 'நீயுமில்லை நானுமில்லை யென்பது உபாயம்' என்றனர்; இதனால் ஏகான்மவாத மறுக்கப்பட்டது. உண்மையில் சுத்தாத்துவித முற்ற காலத்து இன்பத்தினை யீவானும், இன்பத்தினை யேற்பானும், இன்பத் தினை விளைவிப்பதற் கேதுவும், ஆகிய மூன்று முண்டென்பதே சத்திய மென்பார், 'நீயுமுண்டு நானும் சித்தம்' என்றனர். உண்மை விளக்கம்: "முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள்!, சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே, யின்பங் கொடுத்தாலிறை யித்தைவிளை வித்தல் மல, மன்புடனே கண்டுகொ ளப்பா!" என்றதனாற் காண்க. ஆனால், நான் இல்லை யென்னுஞ்சொல்லின் பொருளை நீ புணர்வாயன்றி அறியார்க ளறியா ரென்பார், 'நானில்லை யெனும்வசன நீ யறிவை தெரியார்கள் தெரிய வசமோ' என்றனர். ஈண்டு இல்லை யென்றது ஆன்மாவிற்கென வொரு சுதந்தரமில்லை யென்பதாம்.

வேதம் - அறியப்படுவது. ஆகமம் - பதி பசு பாசம் என்னு மூப் பொருளையும் விளக்கிக் காட்டுவது. ஆ - பசு, க - பதி, ம - மலம். அன்றி

யும், ஆ - என்பது ஞானமும், க - என்பது மோட்சமும், ம - என்பது மல நாசமுமாதலால், ஆன்மாக்களுக்கு மலத்தினை நாசம்பண்ணி, ஞானத்தினை யுதிப்பித்து, மோட்சத்தினைக் கொடுத்தல் பற்றி ஆகமம் எனக் கூறுதலு மொன்று. (7)

காயாத மரமீது கல்லேறு செல்லுமோ?
கடவுணீ, யாங்களடியேம்;
கர்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த துன்ன தருளே;
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
வைவதுவு மெங்களுலக
வாய்பாடு; நிற்கநின் வைதிக வொழுங்குநினை
வாழ்த்தினாற் பெறுபேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்ன
ருளாறுவது கருமமன்றாம்?
உபயநெறி யீதென்னி னுசிதநெறி யெந்தநெறி?
யுலகிலே பிழைபொறுக்கும்
தாயான கருணையு முனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடவருள்செய்வாய்!
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே!

(இ - ள்) காயாத மரமீது - காயாத மரத்தின்மேல், கல் ஏறு செல்லுமோ - கல்லெறிதல் செல்லுமோ?, நீ கடவுள் - நீ கடவுள், யாங்கள் அடியேம் - நாங்கள் அடிமைகள்; கர்ம பந்தத்தினால் - கர்மப் பிணிப்பினால், சன்ம பந்தம் பெற - பிறவிப் பிணிப்பை யடையும்படி, கற்பித்தது - கற்பித்துவைத்தது, உன்னது அருளே - உன் கருணையே; வாயார உண்ட பேர் வாழ்த்துவதும் - வாயார உண்டவர்கள் துதி பண்ணுவதும், நொந்த பேர் வைவதுவும் - நொந்தவர்கள் நிந்திப்பதும், எங்கள் - எங்களுடைய, உலக வாய்பாடு - உலக வழக்கம்; நிற்க - இது நிற்க, நின் வைதிக ஒழுங்கு - உனது வைதிக வொழுக்க நூல்கள், நின்னை வாழ்த்தினால் - உன்னை வாழ்த்துதல் செய்தால், பெறு பேறு - பெறுதற்குரிய மோட்ச லாபத்தினை, ஓயாது பெறுவர் என - தவறாம லடைவரென்று, முறையிட்டால் - முழங்குவதனால், பின்னர் - அதற்குமேல், உளறுவது கருமம் அன்று ஆம் - உளறுதல் நற்கருமம் அன்றாகும்; உபய நெறி ஈது என்னின் - இரண்டு மார்க்கங்கள் வைவதும் வாழ்த்துவதுமாயின், உசித நெறி எந்த நெறி - அனுகூல மார்க்கம் எந்த மார்க்கம்?, உலகிலே பிழைபொறுக்கும் - உலகத்தில் குற்றத்தினைப் பொருத்தருள்கின்ற, தாயான கருணையும் - தாயான கருணைபோன்ற கருணையும், உனக்கு உண்டு - உனக்குள்ளது; இனி - இனி

மேல், எனக்கு - அடியேனுக்கு, சஞ்சலம் கெட - மனேதுக்கம் அறும்படி, அருள் செய்வாய் ; சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) அருளுடைய பெருமானிடத்தன்றி அன்பர்கள் முறையிடார்க ளென்றதனைக் குறிப்பிக்க, 'காயாத மரமீது கல்லேறு செல்லுமோ' என்றனர். கர்மத்திற் கேற்றபடி போகத்தினை யருள் கூட்டி வைக்குமே யன்றி வேறு வகையாக விளையாதென்பார், 'கர்மபந் தத்தினற் சன்மபந் தம்பெறக் கற்பித்த தன்ன தருளே' என்றனர். பிராரத்துவ வினையின்படி யாவு முண்டாமெனத் தேராது நன்மையை யடைந்தபோது ஏத்துவதும், தீமைவந்தபோது தாழ்த்துவதும் சீவ சுபாவ மென்பார், 'வாயாரவுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர் வைவதுவு மெங்களுலக வாய்பாடு' என்றனர்.

நல்வழி : "செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கா, லெய்த வருமோ விருநிதியம்—வையத், தறும்பாவ மென்ன வறிந்தன் றிடார்க்கின்று, வெறும்பானை பொங்குமோ மேல்." என்றதனுற் காண்க.

நின்னை வாழ்த்தினல் கட்டாயமாகப் பேறனைத்து முண்டா மென்று வேதாகம புராண இதிகாச மனைத்தும் கூற, அங்ஙனஞ் செய்யாது வாளா நாட்களைக் கழித்துக் கர்மத்திற்குத் தக்கபடி தீமை வந்தகாலத்து மாத்திரம் நின்னைத் தாழ்த்திப் பிதற்றுவது நலமல்ல என்பார், 'வைதிக வொழுங்கு நினை வாழ்த்தினல் பெறு பேறுதான், ஓயாது பெறுவரென முறையிட்டதாற் பின்ன ருள்றுவது கருமமன்றும்' என்றனர். வாழ்த்தியபேரை வாழவைப்பதும் வைதபேரை மன்னிப்பதும் உனக்குரிய கருணையென்பார், 'உலகிலே பிழைபொறுக்கும் தாயான கருணையு முனக்குண்டு' என்றனர். ()

இன்னம் பிறப்பதற் கிடமென்னி னிவ்வுடல
மிறவா திருப்பமூலத்
தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண்ட லத்திலுற
வென்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
பேயேனை நல்கவேண்டும் ;
பிறவாத நெறியெனக் குண்டென்னி னிம்மையே
பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்ககண் டாகார வன்னைபால்
வினையேனை யொப்புவித்து
வீட்டுநெறி கூட்டிடுதன் மிகவுநன் றிவையன்றி
விவகார முண்டென்னிலோ
தன்னந் தனிச்சிறிய னுற்றிலேன் ; போற்றி ; வளர்
சன்மார்க்க முத்திமுதலே !
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே !

(இ - ள்) இன்னம் பிறப்பதற்கு இடம் என்னின் - இன்னமும் ஜன்மத்திற்கிட முண்டென்றால், இ உடலம் இறவாதிருப்ப - இந்தச் சரீரம் இறவாதிருக்கும்படி, மூலத்து எழும் அங்கி - மூலாதாரத்தில் உண்டாகிற அக்கினியானது, அமிர்து ஒழுகும் - அமிர்த மொழுகாநின்ற, மதி மண்டலத்தில் உற - சந்திர மண்டலத்தில் பொருந்தும்படி, என் அம்மை - என் தாயாகிய, குண்டலினிபால் - குண்டலி சத்தியினிடத்தில், பின்னம் பிறக்காது - பழுதுண்டாகாதபடி, சேய் என வளர்த்திட - குழந்தைபோல வளர்த்தற்பொருட்டு, பேயேனை நல்கவேண்டும் - பேயை யொத்த அடியேனைக் கொடுத்தல் வேண்டும்; பிறவாத நெறி எனக்கு உண்டு என்னின் - பிறவாவழி யெனக்குளதாயின், இம்மையே - இம்மையிற்றானே, பேசு - சொல்லப்பட்ட, கர்ப்பூர தீபம் - கர்ப்பூர தீபம்போல, மின்னும்படிக்கு - ஒளிவிடும்படிக்கு, அகண்டாகார அன்னைபால் - அகண்டரூப மென்கிற தாயினிடத்தில், வினையேனை ஒப்புவித்து - தீவினையே னாகிய என்னை யொப்புவித்து, வீட்டு நெறி கூட்டிடுதல் - மோட்ச மார்க்கத்தில் சேர்த்திடுதல், மிகவும் நன்று - மிகவும் நன்மை; இவை யன்றி - இவற்றையன்றி, விவகாரம் உண்டு என்னிலோ - வழக்கு இருக்கிற தென்றாலோ, தன்னந்தனி சிறியன் - தனியேனாகிய சிறியேன், ஆற்றிலேன் - பொறுத்திலேன்; போற்றி - நமஸ்காரம்; வளர் - விருத்தியடையாநிற்கிற, சன்மார்க்கம் - நன்னெறியையுடைய, முத்தி முதலே - முத்திக்கு முதல்வனே!, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) குண்டலி சத்தியை யடையின், அச் சத்தியின் உபகாரத்தால் மூலாதாரத்தி னின்றும் ஆறுதாரங் கடந்து, மதியமுதமுண்டு, அசைவறநின்ற பேரொளி தரிசனங் கண்டுய்யலாம். அகண்டாகார அன்னையாகிய பராசத்தியை யடையின் சுத்தாத்துவிதம் பெற்றுய்யலாம். இவ்விரண்டிலுஞ் சேராதிருக்கில் பிறப்பிலு மிறப்பிலு மொத்துண் டுய்ய வேண்டும். ஆகலின், அடியேனுக்குப் பிறவி யுண்டெனின், குண்டலி சத்தியாகிய தாயினிடத்தில் என்னை ஒப்புவிக்க வேண்டுமெனவும், அடியேனுக்குப் பிறப்பில்லையேல் அகண்டாகாரரூப தாயினிடத்தில் என்னை ஒப்புவிக்க வேண்டுமெனவும், இங்ஙன மிரண்டிலொன்று செய்யாமல் வைத்திருந்தால் சனன மரணங்களை யடைந்துழலத் துணையிலாச் சிறியேன் பொறுக்கிலேன் எனவும் கூறிப்போந்தனர். (9)

வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுண்
வினைப்பகுதி யென்பனந்த
வினைபேச வறியாது; நிற்கவிவை மனதால்
விளைந்ததான் மனதைநாடில்
போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ
போதமு நினைல்விளக்கம்;

பொய்யன்று ; தெய்வமறை யாவுமே நீயென்று
போக்குவர வறநிகழ்த்தும் ;
ஆதார வாதேய முழுதுநீ யாதலா
லகிலமீ தென்னையாட்டி
ஆடல்கண் டவனுநீ ! ஆடுகின் றவனுநீ !
அருளுநீ ! மௌனஞான
தாதாவு நீ ! பெற்ற தாய்தந்தை தாமுநீ !
தமருநீ ! யாவுநீகாண் !
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே !

(இ - ள்) வேதாவை - பிரமனை நோக்கி, இவ்வண்ணம் விதித்தது ஏது என்னின்-இந்தப்பிரகாரம் விதித்தது யாதினுக்கு என்று வினவினால், உன் வினைப்பகுதி என்பன் - உன் வினையின் கூறுபாடு என்று சொல்லுவான் ; அந்த வினை பேச அறியாது - அந்த வினையானது பேச அறியாது ; நிற்க - அது நிற்க ; இவை மனதால் விளைந்ததால் - இவைகள் மனத்தினால் விளைந்ததனால், மனதை நாடில் - மனத்தினை நாடுமிடத்தில், போதமே நிற்கும் - அறிவே நிற்கின்றது ; அ போதத்தை நாடிலோ - அவ்வறிவை நாடிலோ, போதமும் - அவ்வறிவும், நின்னால் விளக்கம் - உன்னால் விளக்கப்படுவது ; பொய் அன்று - இது பொய்யல்ல ; தெய்வமறை - தைவிகமான வேதங்கள், யாவுமே நீ என்று - எல்லாம் நீயே யென்று, போக்குவரவு அற நிகழ்த்தும் - போக்கு வரவொழியச் சொல்லாநிற்கும் ; ஆதார ஆதேயம் முழுதும் நீ ஆதலால் - ஆதார ஆதேயங்களாகிய முழுமையும் நீ யாகையால், அகிலமீது - உலகின்மேல், என்னை ஆட்டி - என்னை யாடும்படி பண்ணி, ஆடல் கண்டவனுநீ - அவ்வாடலைப் பார்த்தவனுநீ !, ஆடுகின்றவனு நீ - ஆடுவோனு நீ !, அருளும் நீ - திருவருளு நீ !, மௌன ஞான தாதாவு நீ - மௌனஞானக் கொடையாளனும் நீ !, பெற்ற தாய் தந்தை தாமும் நீ - பெற்ற தாய் தந்தைகளும் நீ !, தமரும் நீ - உறவினரும் நீ !, யாவும் நீ - மற்றும் எனக்கிதமான பொருள்களெல்லாம் நீயே !, சர்வ பரி பூரண—, என்க.

(வி - ரை) ஆன்மாவினுக்கு யாதொரு சுதந்தரமு மின்மையின் அவ்வான்மாவின் பூர்வ வினைக்குத் தகுந்தபடி முதல்வன் அறிவினை விளக்குவன். அவ்வறிவோ மனத்தின் மூலமாகத் தனு கரண புவன போகங்களில் வியாபாரஞ் செய்து ஆகாமிய வினையைச் சேகரித்துக்கொள்ளும். அவ் வாகாமியம் பிராரத்துவ வினையாக முடிய, அவ் வினைக்குத் தகுந்தபடி முதல்வன் ஆணையினின்று பிரமாவானவன் ஆன்மாவிற்கு வேண்டியவற்றை விதிப்பன் என்பதாம்.

ஆதாரம் - இடம், ஆதேயம் - இடத்து நிகழ் பொருள் ; இவ் விரண்டிடத்தும் முதல்வன் வியாபகம் நிறைந்திருத்தலால், 'ஆதார வாதேய

முழுதுநீ' என்றனர். உலகமும் உலகப் பொருள்களும் முதல்வனே யாகை யால் உலகத்தில் தன்னை நடிப்பிப்பவன்முதல் எல்லாம் அவனே என்பார், 'ஆடல் கண்டவனு நீ.........யாவு நீ' என்றனர். பட்டினத்துப்பிள்ளை யார்: "ஊட்டுவிப்பானு முறங்குவிப் பானுமிங் கொன்றொடொன்றை, மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை, காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி, யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே." எனவும், தேவாரம்: ' 'அப்பநீயம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனு மாமியு நீ, யொப்புடைய மாதரு மொண்பொருளு நீ யொருகுலமுஞ் சுற்றமு மோரூரு நீ, துய்ப்பனவு முய்ப் பனவுந் தோற்றுவாய் நீ துணையா மென்னெஞ்சத் துறப்பிப்பாய் நீ, யிப் பொன்னீ யிம்மணி நீ யிம்முத்து நீ யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே." எனவும் வருவனவற்றுற் காண்க. (10)

கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினுங்
குளிர்தீம் புனற்கையள்ளிக்
கொள்ளுகினு மந்நீ ரிடைத்திளைத் தாடினுங்
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வசதிபெறு போதும், வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும், வேலையமுதம்
விந்தைபெற வறுசுவையில் வந்ததென வமுதுண்ணும்
வேளையினு மாலைகந்தம்
வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினும்,
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரட்சைபுரிவாய்!
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே!

(இ - ள்) கொந்து அவிழ் - கொத்துக்கள் விரிகின்ற, மலர் சோலை - பூஞ் சோலைகளின், நல் நீழல் வைகினும் - நல்ல நிழலிற் றங்கி யிருந்தாலும்; குளிர் - குளிர்ந்த, தீ புனல் கை அள்ளி கொள்ளினும் - மதுரமாகிய நீரைக் கையினு லள்ளி உட்கொண்டாலும்; அ நீரிடை - அந் நீரினிடத்தில், திளைத்து ஆடினும் - மூழ்கி விளையாடினாலும், குளிர் சந்தவாடை - குளிர்ந்த சந்தன மணமுள்ள காற்று, மடவார் - மாதர்கள், வந்துலவுகின்றது என - வந்துலாவுகின்றதுபோல, முன்றிலிடை உலவ - முற்றத்தின்கண் உலாவும் படி, வசதி பெறுபோதும் - (விசாலமான) வீடுகளை யுடையனாகுங் காலத் திலும், வெள்ளை - வெண்மையாகிய, வட்டம் - வட்ட வடிவுள்ள, மதி - சந்திரன், பட்டப் பகல் போல - பட்டப்பகலைப் போல, நிலவு தர - சந்திரி

கையை வீசலால், மகிழ் போதும் - மகிழுங் காலத்தும், வேலை அமுதம் - கடலமுதானது, விந்தை பெற - ஆச்சரியமடைய, அறுசுவையில் - அறு சுவைப் பதார்த்தங்களில், வந்தது என - வந்த தென்னும்படி, அமுது உண்ணும் வேளையிலும் - உணவை யுண்ணுகிற காலத்திலும்; மாலை கந்தம் - பூமாலை சந்தனம், வெள்ளிலை அடைக்காய் - வெற்றிலைப் பாக்கு, (இவைகளை) விரும்பி - அபேட்சித்து உண்டு, வேண்டிய வண்ணம் விளையாடி - வேண்டியபடி விளையாடி, விழி துயிலினும் - கண்ணுறங்கினுலும்; சந்ததமும் - சதாகாலமும், நின் அருளை மறவா வரம் தந்து - உன்னருளை மறவாத வரத்தினைக் கொடுத்து, தமியேனை ரட்சை புரிவாய் - தனியேனைக் காத்தருளுவாய்!, சர்வபரிபூரண—, என்க.

(வி - ரை) எத்தன்மையவாகிய போக போக்கியங்களை அனுபவிக்கும் காலத்திலும் உன் திருவருளை யான் மறவாதிருக்கக் கிருபை செய்ய வேண்டு மென்பதாயிற்று. திருக்கருவை யந்தாதி: "இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும் போதும், பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியூண் டுய்க்கும் போதும், முருக்கிதழ் கனிவா யாரை முயங்கி நெஞ் சழியும் போதுந், திருகளா வுடைய நம்பா! சிந்தையுன் பால தாமே." என்றதனுற் காண்க. (11)

## தேஜோமயானந்தம்

மருமலர்ச் சோலைசெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்,
மந்த்ரமா லிகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்றுகொண்டு,
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச நாதிசேர்த்துக்,
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி,
உருகிவரு மமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான விழியைநாடி,
ஒன்றோ டிரண்டெனுச் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின்வண்ணம்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ?
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) மருமலர் சோலை செறி - பரிமளப் பூஞ்சோலைகள் நெருங்க, நல் நீழல் - நல்ல நிழலையுடைய, மலையாதி மன்னும் - மலைமுதலான

இடங்களில் நிலைபெற்றிருக்கின்ற, முனிவர்க்கு - முனிவரர்க்கு, ஏவலாய் - அடிமையாய், மந்த்ரமாலிகை சொல்லும் - மந்திரமாலிகையில் சொல்லப்படுகிற, இயம நியமாதியாம் - இயம நியமாதிகளாகிற, மார்க்கத்தில் நின்றுகொண்டு - நெறியி னிருந்துகொண்டு, கரு மருவு காயத்தை - கர்ப்ப வேதனையை யனுபவித்த சரீரத்தினை, நிர்மலம் ஆக - பரிசுத்த மாகும்படி, கமலாசனாதி சேர்த்து - பத்மாசன முதலான ஆசன பேதங்களில் அமைத்து, காலைப் பிடித்து - பிராண வாயுவினைத் தடுத்து, அனலை - மூலாக்கினியை, அம்மை குண்டலி அடி - தாயாகிய குண்டலி சத்தியின் திருவடியாகிய, கலை மதியினூடு தாக்கி - கலைகள் நிறைந்த சந்திரனிடத்தில் தாக்கவிட்டு, உருகி வரும் - (அதினின்றும்) உருகி ஒழுகா நின்ற, அமிர்தத்தை உண்டு உண்டு - அமுதத்தினை யிடையறா தருந்தி, உறங்காமல் - கேவல நித்திரை செய்யாமல், உணர்வான விழியினூடு - ஞானக்கண்ணாற் பார்த்து, ஒன்றோடு இரண்டு என்று - ஒன்றிரண்டென்று சொல்லப்படாத, சமரச சொரூப சுகம் - சமரச சுவரூபானந்தத்தினை, உற்றிட - அடையும்படி, என் மனதின் வண்ணம் - என் கருத்தின் பிரகாரம், திருவருள் முடிக்க - திருவருளானது முடித்துக் கொடுக்க, இ தேகமொடு காண்பனோ - இந்தச் சரீரத்துட னிருக்கும் போதே காணப்பெறுவேனோ?, தேட அரிய - தேடுத லரிதான, சத்து ஆகி - உண்மையாகி, என் சித்தமிசை குடிகொண்ட - என் மனத்திற் குடிகொண்டிருக்கிற, அறிவு ஆன தெய்வமே - ஞானரூபமாகிய கடவுளே!, தேசோமய ஆனந்தமே - தேஜோராசியாகிய இன்பமே!, என்க.

(வி - ரை) 'மந்த்ரமாலிகை' என்பது, அறுபான் மும்மை நாயன்மார்களில் ஒருவராகிய திருமூல நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரமென்னும் திருமுறையினை. இவ்வரிய திருமுறையின் உண்மைகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமாயின் தக்க பெரியோர்களை யடுத்துத் தொண்டு செய்து உணரவேண்டுவது அவசிய மாகலின், 'முனிவர்க் கேவலாய்' என்றும்; கற்க வேண்டியவைகளைக் கற்றப் பின்னர் அந்நூல் கட்டளையிட்ட வழியில் நிற்கவேண்டு மாகலின், 'மார்க்கத்தி னின்றுகொண்டு' எனவும்; பின்னர் மலசம் பந்தத்தால் மொத்துண் டுழலும் தேகத்தினைச் சுத்தமாக்க வேண்டுமாகலின், 'நிர்மலமதாகவே' என்றும்; நியமாதிகளிற் பழகவேண்டுமாயின் யோகநூல்களிற் கற்பித்த ஆசனங்களி லொன்றினைக் கொளல் வேண்டு மாகலின், 'கமலாசனாதி சேர்த்து' எனவும்; யோகானுபவத்தில் முதல்முதல் பிராணவாயுவினை வெளியிலே போகவொட்டாது தடுத்துக் கொள்ளவேண்டு மாதலால், 'காலைப் பிடித்து' எனவும்; அங்ஙனம் வாயுவினைத் தடுத்தமாத்திரத்து மூலாதாரத்தி லுள்ள அக்கினி மூண்டு பிரமரந்திரத்திலுள்ள மதியைத் தாக்குமாகலின், 'கலைமதியினூடு தாக்கி' எனவும்; அங்ஙனம் அக்கினியானது மதியைத் தாக்கிய மாத்திரத்து அம் மதியினின்றும் சொட்டுகின்ற அமிர்தம் உணவாகு மாதலின், 'அமிர்தத்தை யுண்டு' எனவும்; இத்தகைய உணவு கிடைத்தபோது பகிர்முக சுழுத்தி வாராதாகை

யால், 'உறங்காமல்' என்றும்; உறக்கம் நீங்கவே, புறக்கருவி வியாபாரம் ஒழியுமாகலின், 'உணர்வான விழியை நாடி' எனவும்; இத்தகைய நோக்கத்தில் அனுபவிக்கும் நிலைமையினில் ஏகான்மவாதிகளைப்போல பரமான்மா ஆன்மா இரண்டு மொன்றாகிவிட்டதெனக் கூறவாவது, துவைதவாதிகளைப்போல ஆன்மா பரமான்மா விரண்டும் வேறாகி நிற்பதெனக் கூறவாவது முடியாமல், வைதிக சைவ சன்மார்க்க நெறியினர்போல அத்துவிதம் கூறவேண்டி யிருத்தலின், 'ஒன்றோ டிரண்டெனாச் சமரசசொரூப சுகமுற்றிட' எனவும்; இத்தகைய சுத்தாத்துவித நிலையானது இத்தேகமுள்ளபோதே கிடைக்குமோ என்பார், 'இத்தேகமொடு காண்பனோ' எனவும் கூறினர். (1)

இப்பிறவி யென்னுமோ ரிருட்கடலின் மூழ்கி, நா
னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு, புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டும்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்,
சோராத வாசையாங் கானாறு வானதி
சுரந்ததென மேலுமார்ப்பக்,
கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு, மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே,
கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேரவுங் கருணை
செய்வையோ? சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) இ பிறவி என்னும் - இந்தப் பிறப்பென்கிற, ஓர் இருள் கடலில் மூழ்கி - ஒரு கருங்கடலில் முழுகி; நான் என்னும் - நானென்கிற, ஒரு மகரம்வாய் பட்டு - ஒரு முதலையின் வாயி லகப்பட்டு; இருவினை என்னும் - இருவினைக ளென்கிற, திரையின் - அலைகளால், எற்றுண்டு - எறியப்பட்டு; புற்புதம் என - நீர்க்குமிழி போல, கொங்கை வரிசை காட்டும் - கொங்கைகளின் ஒழுங்கைக் காட்டுகின்ற, துப்பு இதழ் - பவளத்துண்டு போன்ற அதரத்தினை யுடைய, மடந்தையர் - மாதர்களுடைய, மயல் - காம மயக்கமாகிய, சண்டமாருத சுழல் - சுழற்சியையுடைய பெருங் காற்றானது, வந்து வந்து அடிப்ப - பலகாலும் வந்து தாக்க; சோராத ஆசை ஆம் கான் ஆறு - குறையாத ஆசையாகிய காட்டாறு, வான் நதி சுரந்தது என - ஆகாய கங்கை பெருகினாற்போல, மேலும் ஆர்ப்ப - மேலும் மேலும் வந்து மோத; கைப் பரிசுகாரர்போல் - கைப்புனைக்காரர்போல, அறிவான வங்கமும்

கைவிட்டு - ஞானமாகிய மரக் கலத்தையுங் கைவிட்டு; மதி மயங்கி - புத்தி கலங்கி; கள்ள வங்கக் காலர் - திருட்டுக் கப்பலையொத்த யமபடர், வருவர் என்று அஞ்சி - வருவார்களென்று பயந்து, கண் அருவி காட்டும் எளியேன் - கண்ணீ ரருவியைக் காட்டுகின்ற எளியேன், செப்பு அரிய - செல்லுதற்கரிய, முத்தி ஆம் கரைசேரவும் - முத்தி என்கிற கரையை யடையவும், கருணை செய்வையோ - கிருபை செய்வையோ?, சத்தாகி என் சித்தமிசை—, என்க.

( வி - ரை ) பிறவி முதலியவற்றைக் கடல் முதலியவாக உருவகஞ் செய்து கூறினர். திருவாசகம்: " தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெய்வத்தடர்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக், கனியைநேர் துவர்வாயா ரென்னு மாலாற் கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட், டினியென்னேயுய்யுமா றென்றென் றெண்ணி யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை, முனைவனே முதலந்த மில்லாமற் கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே." எனவுங் கூறியுள்ளதனைக் காண்க. 'பரிசு' என்பது மூங்கில் அகணிகளால் கூடைபோல வட்டமாகப் பின்னி மேற்புறத்தில் தோலால் மூடப்பட் டிருப்பதாகிய ஒருவகைத் தெப்பம். (2)

தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லை; மணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜா லக்கோலம்;
வஞ்சனை பொறுமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை யிலாதகனவே;
எந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ?
தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

( இ - ள் ) தந்தை - தகப்பன், தாய் - மாதா, தமர் - உறவோர், தாரம் - மனைவி, மகவு - குழந்தை, என்னும் - என்று சொல்லப்படுகின்ற, இவை எல்லாம் - இப்பொருள்க ளெல்லாம், சந்தையில் கூட்டம் - சந்தையில் கூடுங் கூட்டத்தை யொக்கும்; இதிலோ சந்தேகம் இல்லை - இதனிடத்திலோ ஐயமில்லை; மணி மாடம் - இரத்தின கசிதமான வீடுகள், மாளிகை - மாளிகைகள், மேடை - மேடைகள், சதுரங்க சேனையுடனே - சதுரங்க

சேனைகளாகிய இவற்றோடு, வந்தது - உண்டானதாகிய, ஓர் வாழ்வும் - ஒப்பற்ற வாழ்க்கையும், ஓர் இந்த்ரஜால கோலம் - ஒரு இந்த்ரஜாலத்தின் அழகையொக்கும்; வஞ்சனை - வஞ்சகம், பொறாமை பொறுக்காமை, லோபம் - உலோபகுணம், (ஆகிய இவைகள்) வைத்த - தன்னிடத்து வைக்கப்பட்ட, மனம் ஆம் கிருமி சார்ந்த - மனமாகிய புழுச்சேர்ந்த, மலபாண்டமோ - மலபாண்டமாகிய தேகமோ, வாஞ்சனை இலாத கனவே - விருப்பஞ் செய்யப்படாத சொப்பனமே; (இவ் விஷயங்களை) எந்த நாளும் - (பெருக்கஞ் சுருக்கம் என்கிற) எக்காலமும், சரிஎன தேர்ந்து தேர்ந்து - சரியென்றாராய்ந்து தெளிந்து, இரவு பகல் இல்லா இடத்து - இராப்பகலற்றவிடத்தில், ஏகமாய் நின்ற - ஒன்றாகி நின்ற, நின் அருள் வெள்ளம் மீதில் - உன் திருவருள் வெள்ளத்தில், யான் என்பது அறவும் மூழ்கி - யானெனுஞ் செருக்கற்றொழிய முழுகி, சிந்தை - மனமானது, தெளியாது - தெளியாமல், சுழலும் வகை என்கொல் - சுழலும் விதம் யாது?, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) சந்தையில் சந்திப்போர்சிறிதுநேரம் அளவளாவி உடனே பிரிந்து பின்னர் ஒருவருக் கொருவர் யாதொரு சம்பந்த மின்றி வாழுதல் போல், தாய் தந்தைமுதலிய சுற்றத்தார் யாவரும் அங்ஙனமே யென்பார், 'தந்தைதாய் தமர்தார மகமென்னு மிவையெலாஞ் சந்தையிற் கூட்டம்' என்றனர். உபதேசமாலை: "தாயாரையுந் தந்தையையுந் தற்சார்ந்த கேளிரையு, மாய மயல்காட்டு மனைவியையுஞ் சீயென்று, சொப்பனம்போற் கண்டெட்டாத் தூரப்போ யோகநிலை, நிற்பவனை ஞானியென நேர்." என்றதனாற்காண்க. தேர் பரி கரி காலாள் ஆகிய நால்வகைச் சேனையுடன் கூடகோபுர மாடமாளிகையி லிருந்து வாழு மரசச் செல்வமும் நிலையல்லவென்பார், 'மாடமா ளிகைமேடை சதுரங்க சேனையுடனே, வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜாலம்' என்றனர். திருவெண்காட்டடிகள்: "முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு, பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னு மந்தப். படிசார்ந்த வாழ்வை நினைவதல் லாற்பொன்னி னம்பலத்தா, னடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறிவாரில்லையே." என்றதனாற் காண்க. தீமை யனைத்திற்கு மிருப்பிடமாகி புழுவாதி நிறைந்த வுடலு நிலையில்லை தென்பார், 'வஞ்சனை பொறாமை லோபம், வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ வாஞ்சனையிலாதகனவு' என்றனர். பட்டினத்தார்: "ஆயும் பொழுது மயிர்க்கால்க டோறு மருங்கிருமி, தோயு மலக்குட்டையாகிய காயத்தைச்சுட்டுவிட்டாற், பேயு நடன மிடுங்கட மாமென்று பேசுவதை, நீயு மறிந்திலை யோபொருட்டே நினைந்தனையே." என்றதனாற் காண்க. (3)

ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் வீழ, நேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லா திருந்தவெளிபோற்

கோடா தெனைக்கண் டெனக்குணிறை சாந்தவெளி
கூடியின் பாதீதமுங்
கூடினே னோ? சரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே னோவல்லனியா
னீடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர் பிராணனென்னு
நிருநிதி யினைக்கட்டி யோகபா னுகாம
லேழைக் குடும்பனாகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ?
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம்போல் - ஆடாமல் நின்று விட்ட பம்பரம் போல, மனம் விசை அடங்கி வீழ - மனமானது விசை யொடுங்கி விழவும்; நேரே - நேராக, அறியாமை ஆகின்ற - அஞ்ஞான மாகிய, இருள் அகல - இருள் நீங்கவும்; இருள் ஒளியும் - இருள் ஒளிகள் இரண்டும், அல்லாது இருந்த - அல்லாம லிருந்த, வெளிபோல் - பரமா காயம் போல, கோடாது என்னைக் கண்டு - பிசகாமல் என்னைப் பார்த்து, எனக்குள் நிறை - என்னுள்ளே நிறைந்து, சாந்தவெளி கூடி - உபசாந்த மென்னும் ஆகாயத்திற் சேர்ந்து, இன்ப அதீதமும் கூடினேனோ - சுகாதீத நிலயத்தையு மடைந்தேனோ?, சரியை கிரியையில் முயன்று - சரியை கிரி யையில் முயற்சி செய்து, நெறி - சன்மார்க்கத்தினை, கூடினேனோ - சேர்ந் தேனோ?, அல்லன் நான் - அப்படி யல்லாதவனாகிய நான், ஈடாக - பெரு மையாக, ஆறு வீட்டினில் நிரம்பி - (ஆறாதாரங்களாகிய) ஆறு வீடுகளில் நிறைந்து, இலகி வளர் - பிரகாசித்து வளர்கின்ற, பிராணன் என்னும் - பிராணவாயு வென்கிற, இரு நிதியினை கட்டி - பெரிய திரவியத்தினைக் கட்டி, யோகபான் ஆகாமல் - யோகவான் ஆகாமல், ஏழை குடும்பன் ஆகி - ஏழைக் குடியாகி, தேடாது அழிக்க - தேடாமல் செலவு செய்ய, ஒரு மதி வந்தது - ஒரு புத்தி யுண்டாயிற்று; என் - இதற்குக் காரணம் யாது?, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றை யனுட் டிப்போர்க்கு முறையே சிவசாலோகம், சிவசாமீபம், சிவசாரூபம், சிவ சாயுச்சியங் கிடைக்கு மென்பது நிச்சயம். இவற்றுள் யாதாயினு மொன்றி னைக் கிரமமாக அனுட்டித்து ஒரு பதவியினை யடையவேண்டியது ஒவ் வொருவருக்கும் இன்றியமையாத கடமையாம். அங்ஙனமாக, தான் இவற்றி லொன்றையேனும் அனுபவிக்க முயலாது வாளா வாழ்ந்து, திரு வருட் செல்வத்தினைப் பெறாது 'ஏழையாயினேன்' என்றனர். செய்யு

ளாகலின் தலைதடுமாற்றமாக முன்னர் ஞானத்தினையும், அதன் பின்னர் சரியை கிரியைகளையும், இவற்றின் பின் யோகத்தினையும் கூறினர். (4)

பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்லனிவனைப்
பார்மினோ பார்மினோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென்னவே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேகமேயெம்
ஆதியே சோதியே யெங்குநிறை கடவுளே!
யரசே யெனக்கூவிநான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்கருணைநீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித்ததார்?
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே!
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) பாடாது பாடிப்படித்து - பாடாததெல்லாம் பாடிப் படித்து, அளவு இல் - அளவற்ற, சமயமும் - சமயங்களும், பஞ்சுபடு சொல்லன் இவனை - பஞ்சுபோலப் பறக்கும் நொய்மையான சொற்களையுடைய இவனை, பார்மின் பார்மின் என்று - பாருங்கள் பாருங்கள் என்று சொல்லிக்கொண்டு, சபை கூடவும் - சபை சேரவும், இது பரமார்த்தம் என்ன - இது மேலான பொருளென்று, ஆடாதும் ஆடி - ஆடாத வகையாய்க் கூத்தாடி, நெஞ்சு உருகி நெக்கு ஆட - மனமுருகி நெகிழ்ந்தாட, அமலமே - பரிசுத்த வஸ்துவே!, ஏகமே - ஒன்றே!, எம் ஆதியே - எமக்குக் காரணபூதனே!, சோதியே - ஒளியே!, எங்கும் நிறை கடவுளே - எவ்விடத்தும் நிறைந்திருக்கும் கடவுளே!, அரசே - அரசனே!, என கூவி - என்று பலவகையா யழைத்து, நான் வாடாது வாடும் - நான் (ஒருவரும்) வாடாத வகையாய் வாடுகின்ற, என் முகவாட்டமும் கண்டு - எனது முகவாட்டத்தினையும் பார்த்து, வாடா என - வாடாவென்று, நீ கருணை வைத்திடா வண்ணம் - நீ கருணை செய்யாத வகை, சங்கேதமா - நியமமாக, இந்த வன்மையை வளர்ப்பித்தது ஆர் - இந்தக் கடினத்தன்மையை விருத்தி யடைவித்தது யார்?, தேடாது தேடுவோர் - தேடாது தேடுவோராகிய அறிஞர்க்கும், தேட்டு அற்ற தேட்டமே - தேடுதலில்லாத திரவியமே!, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) நவரசாலங்காரங்க ளமையச் செய்யு ளியற்றவல்ல அளவற்ற சமயத்தினர்கள் அடியேனுடைய புன் கவியினைக் கண்டு என்னை

நோக்கி, "இவன் பஞ்சுபோல மிகவும் நொய்தாய்ப் படிக்கும் சொற்களை யுடைய ஏழை; இவன் கல்வித்திறத்தினைப் பாருங்கள்!" என்று கூடிக் கூடிப் பேசுவார்கள் என்பார், 'பாடாதுபாடி...........சபை கூடவும்' என்றனர். அதைக் கண்டு சகியாமல் அடியேன் ஆதியே! சோதியே! எனப் பற்பல விதமாகத் தோத்தரித்து முகம் வாடி நிற்கவும் என்பால் கருணை வையாது கடின சித்தங்கொண் டிருப்பதென்னை என்பார், 'ஆதியே சோதியே.........வன்மையை வளர்ப்பித்ததார்?' என்றனர். 'வளர்த்ததார்' என்ற வினாவிற்கு விடையாவது 'பரிபக்குவ மெய்தப் பெறுமையின் கருணை கனியவில்லை' என்பதாம். தேடாது தேடுவோர் - தற்போதத்தினை முன்னிடாது திருவருளை முன்னிட்டுத் தேடுவோர். (5)

பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனதறப்
பேரம் பலக்கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
யமிர்தப்ர வாகசித்தி
அருளினை யலாது, திரு வம்பலமு மாகியெனை
யாண்டனை; பி னெய்திநெறியாய்க்
குறிதா னளித்தனை; நன் மரவுரிகொ ளந்தணக்
கோலமா யசபாநலங்
கூடினபின் மௌனியாய்ச் சும்மா விருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ?
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) பிறியாத - நீங்காத, தண் அருள் - தண்ணிய அருளை யுடைய, சிவஞானி ஆய் வந்து - சிவஞானியாகி வந்து, பேச அரிய வாசியால் - சொல்லுதற்கரிய வாயுதாரணையினால், பேரின்ப உண்மையை - பேரின்ப உண்மையினை, அளித்தனை - கிருபைசெய்தாய்; என் மனது அற - என் மனமிறக்க, பேரம்பலக் கடவுளாய் - பேரம்பலக் கடவுளாகி, அறிவாய் இருந்திடும் - அறிவுருவா யிருக்கின்ற, நாத ஒலி காட்டி - நாத வோசையினைக் காட்டி, அமிர்த ப்ரவாக சித்தி - அமிர்தப் பெருக்கின் பேற்றினை, அருளினை - அருள்செய்தாய்; அலாது - அன்றியும், திருவம்பலமும் ஆகி - திருவம்பல ரூபமாகி, என்னை ஆண்டனை - என்னை யாட்கொண்டாய்; பின் எய்தி - பிறகு வந்து, நெறி ஆய் - முறைமையாய், குறி தான் அளித்தனை - இலக்கையும் அருள்செய்தாய்; நல் மரவுரி கொள் - சிறந்த மரவுரியினைத் தரித்த, அந்தண கோலமாய் - அந்தண வடிவமாகி,

அசபாநலம் கூறினபின் - அஜபாக்கியை எனக்குபதேசித்தபிறகு, மௌனி யாய் சும்மா இருக்க - மௌனியாகிச் சும்மா விருக்கும்படி, நெறி கூட்டினை - நன்னெறிகட் சேர்த்தாய்; எல்லாம் இருக்க - இவைகளெல்லா மிருக்க, சிறியேன் - சிறியேனாகிய நான், மயங்கி - மயக்கங்கொண்டு, மிக அறிவின்மை யாவனோ? - மிகுதியும் அஞ்ஞானியாய் விடுவேனோ?, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமாயுள்ள சிவம், ஆன்மா மலபரிபாக முற்ற அவசரத்து குருமூர்த்தியா யெழுந்தருளு மாகையால், 'சிவஞானியாய் வந்து' எனவும்; அம் மூர்த்தி பிராணாயாம முதலிய போதித்து முதல்வன் றன்மையை விளக்கு மாகலின், 'வாசி யாலே பேரின்ப வுண்மையை யளித்தனை' எனவும்; பின்னர் தத்துவங் களைக் கடந்து அறிவுமாத்திரையாக நின்று இச்சாஞான சொரூபியான அவிநாபாவ சத்தியின் சகத்திராம்சமான நாத வுண்மையினை விளக்கினை என்பார், 'அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டி' எனவும்; பின்னர், பிரமரந்திரத்திலுள்ள அமிர்தப் பிரவாகத்தால் நிரம்பச் செய்தனை என்பார், 'அமிர்தப்ர வாகசித்தி அருளினை' எனவும்; பின்னர் திருவரு ளினை யிரண்டறவிருந்து அனுபவிக்கத்தக்க நிலையினைக் காட்டி, அதற் குபாயமான ஒரு மொழியினைப் போதித்து மௌனநிலையில் நிறுத்தினை யென்பார், 'நெறியாய்........கூட்டினை' எனவும் கூறினர்.

அசபாமந்திரமென்பது ஓரெழுத்து ஒருமொழி: அது சகல மந்திரங் கட்கு மாதாரமாய் முதல்வனைக் குறித்து நிற்பது; அது வரிவடிவிற் காட் டத்தக்க தன்று; உபதேசக் கிரமத்தா லறியவேண்டுவது; சித்தாந்த சன் மார்க்க நெறியினரை யடுத்தறிக. திருமந்திரம்: "போற்றுகின் றேன் புகழ்ந் தும்புகல் ஞானத்தைத், தோற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி சாற்றுகின் றேனறை யோசிவயோகத்தை யேற்றுகின் றேனெம் பிரானோ ரெழுத்து." எனவும், "பொன்னான மந்திரம் புகலவு மொண்ணாது, பொன் னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும், பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கில், பொன்னாகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே." எனவும் வருவனவற்றாற் காண்க. (6)

ஆரா ரெனக்கென்ன போதித்து மென்னவென்
னறிவினை மயக்கவசமோ?
அண்டகோ டிகளெலாங் கருப்பவறை போலவு
மடுக்கடுக் காவமைத்துப்
பேராம லின்றபர வெளியிலே மனவெளி
பிறங்குவத லாதொன்றினும்
பின்னமுற மருவாது; நன்னயத் தாலினிப்
பேரின்ப முத்திநிலையும்

தாராது தள்ளவும் போகா துனாலது
தள்ளினும் போகேனியான் ;
தடையேது மில்லை; ஆண் டவனடிமை யென்னுமிரு
தன்மையினு மென்வழக்குத்
தீராது; விடுவதில்லை; நடுவான கடவுளே!
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) எனக்கு-அடியேனுக்கு, ஆர் ஆர் -ஒவ்வொருவரும், என்ன போதித்தும்-எதைப் போதிப்பினும், என்ன-என்ன லாபம்?, என் அறிவினை மயக்க வசமோ-என் புத்தியைப் பேதிக்க வசமாகுமோ?, அண்டகோடிகள் எல்லாம் - அண்டகோடிகளை எல்லாம், கருப்ப அறை போலவும் - கருப்ப வீடு போலவும், அடுக்கு அடுக்கா அமைத்து - வரிசை வரிசையா யமைத்து, பேராமல் நின்ற - நிலைபெறாது நின்ற, பரவெளியிலே - பரமாகாயத்தில், மனவெளி பிறங்குவது அல்லாது - மனோகாயம் பிரகாசிப்பதன்றி, ஒன்றினும்-மற்றொன்றினும், பின்னம் உற மருவாது - அழியும்படி பொருந்தாது; நல் நயத்தால் - நல்ல விருப்பத்தால், இனி - இனி, பேரின்ப முத்தி நிலையும் - பேரானந்த ஏதுவான மோட்ச நிலையும், தாராது - கொடாமல்; தள்ளவும் போகாது - தள்ளவும் படாது; உன்னால் அது தள்ளினும் - உன் நியமனத்தால் அது தள்ளினும், யான் போகேன் - நான் போகமாட்டேன்; தடை ஏதும் இல்லை - தடை சிறிதும் இல்லை, ஆண்டவன் அடிமை என்னும் - ஆண்டவன் அடிமை யென்கிற, இரு தன்மையினும் - இரு தன்மையோடும், என் வழக்கு தீராது - என்னுடைய விவகாரம் தீர்ந் தொழியாது; (ஒழியாவிடினும்) விடுவது இல்லை - நானே விடுதல் இல்லை; நடுவான கடவுளே! - நடுவு நிலைமையுள்ள கடவுளே!, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) சூரியனொளியும் கண்ணொளியும் அபேதமாகக் கலந்து பிரபஞ்சப்பொருளை யனுபவிப்பதுபோல, சிதாகாயத்தில் மனோகாயங் கலந்து திருவருளினை யனுபவிக்கும் பெரும் பாக்கியத்தினை யடைந்தேனாதலால் இத்தகைய புண்ணியம் கைவரப்பெறாத சாமானியர் என்ன விதமாக என்னை மயக்கினும் மயங்கே னெனவும், இனி யந்நிலையினின்றும் பிரியே னெனவும், கண்ணொளியும் ஆதித்தப்பிரகாசமும் ஒன்றுபட்டுப் பிரிக்கவொண்ணாத நிலையிலிருக்கினும் உண்மையில் கண்ணொளியும் ஆதித்த னொளியும் வேறாதற்போல் முதல்வனாகிய நீயும் அடியேனும் ஆண்டானடிமையேயன்றி யொன்றன் றெனவும், இனி யுனைவிட்டு எக்காலத்து நீங்கவேண்டுவ தில்லையெனவுங் கூறினர். (7)

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம்; ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
கட்செவி யெடுத்தாட்டலாம்;
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்;
சந்ததமு மிளமையோ டிருக்கலாம்; மற்றொரு
சரீரத்தி னும்புகுதலாம்;
சலமே னடக்கலாம்; கனன்மே லிருக்கலாம்;
தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது; சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) கந்து - கட்டுத்தறியினை, உக - முறியச்செய்யும், மதகரியை வசமா நடத்தல் ஆம் - மதயானைகளை வசப்படுத்தி நடத்தல் கூடும்; கரடி வெம்புலி வாயையும் கட்டலாம் - கரடி வாயையும் கொடிய புலிவாயையும் கட்டுதல் கூடும்; ஒரு சிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம் - ஒப்பற்ற சிங்கத்தின் முதுகிலேறி உட்கார்ந் திருத்தல் கூடும்; கட்செவி எடுத்து ஆட்டலாம் - பாம்புகளைப் புற்றினின்றும் வெளிப்படுத்தி யாட்டுதல் கூடும்; வெம் தழலின் - வெய்ய நெருப்பில், இரதம் வைத்து - பாதரசத்தை யிட்டு, ஐந்து லோகத்தையும் - பஞ்சலோகங்களையும், வேதித்து - பரிசவேதி செய்து, விற்று - விக்கிரயித்து, உண்ணலாம் - (அப்பொருளைக்கொண்டு) உண்டு பிழைக்கலாம்; வேறு ஒருவர் காணாமல் - வேறொருவர் பாரா திருக்க, உலகத்து உலாவலாம் - உலகின்கண் சஞ்சரிக்கலாம்; விண்ணவரை ஏவல் கொளலாம் - தேவர்களை ஏவல் கேட்கப் பண்ணலாம்; சந்ததமும் - சதாகாலமும், இளமையோடு இருக்கலாம் - இளமைப் பருவத்துடனிருக்கலாம்; மற்றொரு சரீரத்தினும் புகுதலாம் - வேறொரு சரீரத்தினும் பிரவேசிக்கலாம்; சலமேல் நடக்கலாம் - நீரின்மேல் நடக்கலாம்; கனல் மேல் இருக்கலாம் - நெருப்பின்மேல் தங்கி யிருக்கலாம்; தன் நிகர் இல் சித்தி பெறலாம் - தமக்குச் சமான மில்லாத (பிற) சித்திகளையும் பெறலாம்; சிந்தையை அடக்கி - மனதை யடக்கி, சும்மா இருக்கின்ற திறம் அரிது - சும்மாவிருக்கும் வகை யருமையாகும்; சத்தாகி—, என்க.

(வி - ரை) ஒருவன், உலகத்தினில் எத்தகைய அரிய சித்தினை யடைந்தாலும் மனத்தினை யொருவழிப்படுத்தி நிற்கும் ஞானங் கைவரப் பெறானேல் சிறிதும் பிரயோசன மில்லை யென்றனர். "வானிலே

தாராது தள்ளவும் போகா துனலது
தள்ளினும் போகேனியான் ;
தடையேது மில்லை; ஆண் டவனடிமை யென்னுமிரு
தன்மையினு மென்வழக்குத்
தீராது; விடுவதில்லை; நடுவான கடவுளே!
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) எனக்கு-அடியேனுக்கு, ஆர் ஆர் -ஒவ்வொருவரும், என்ன போதித்தும்-எதைப் போதிப்பினும், என்ன-என்ன லாபம்?, என் அறிவினை மயக்க வசமோ-என் புத்தியைப் பேதிக்க வசமாகுமோ?, அண்டகோடிகள் எல்லாம் - அண்டகோடிகளை எல்லாம், கருப்ப அறை போலவும் - கருப்ப வீடு போலவும், அடுக்கு அடுக்கா அமைத்து - வரிசை வரிசையா யமைத்து, போராமல் நின்ற - நிலைபெறாது நின்ற, பரவெளியிலே - பரமாகாயத்தில், மனவெளி பிறங்குவது அல்லாது - மனோகாயம் பிரகாசிப்பதன்றி, ஒன்றினும் - மற்றொன்றினும், பின்னம் உற மருவாது - அழியும்படி பொருந்தாது; நல் நயத்தால் - நல்ல விருப்பத்தால், இனி - இனி, பேரின்ப முத்தி நிலையும் - பேரானந்த எதுவான மோட்ச நிலையும், தாராது - கொடாமல்; தள்ளவும் போகாது - தள்ளவும் படாது; உன்னால் அது தள்ளினும் - உன் நியமனத்தால் அது தள்ளினும், யான் போகேன் - நான் போகமாட்டேன்; தடை ஏதும் இல்லை - தடை சிறிதும் இல்லை, ஆண்டவன் அடிமை என்னும் - ஆண்டவன் அடிமை யென்கிற, இரு தன்மையிலும் - இரு தன்மையாலும், என் வழக்கு தீராது - என்னுடைய விவகாரம் தீர்ந் தொழியாது; (ஒழியாவிடினும்) விடுவது இல்லை - நானோ விடுதல் இல்லை; நடுவான கடவுளே! - நடு நிலைமையுள்ள கடவுளே!, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) சூரியனொளியும் கண்ணொளியும் அபேதமாகக் கலந்து பிரபஞ்சப்பொருளை யனுபவிப்பதுபோல, சிதாகாயத்தில் மனோகாயங் கலந்து திருவருளினை யனுபவிக்கும் பெரும் பாக்கியத்தினை யடைந்தேனாதலால் இத்தகைய புண்ணியம் கைவரப்பெறாத சாமானியர் என்ன விதமாக என்னை மயக்கினும் மயங்கேனெனவும், இனி யந்நிலையினின்றும் பிரியேனெனவும், கண்ணொளியும் ஆதித்தப்பிரகாசமும் ஒன்றுபட்டுப் பிரிக்கவொண்ணாத நிலையிலிருக்கினும் உண்மையில் கண்ணொளியும் ஆதித்தனொளியும் வேறாதற்போல் முதல்வனாகிய நீயும் அடியேனும் ஆண்டானடிமையேயன்றி யொன்றன் றெனவும், இனி யுனைவிட்டு எக்காலத்தும் நீங்கவேண்டுவ தில்லையெனவுங் கூறினர். (7)

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம்; ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
கட்செவி யெடுத்தாட்டலாம்;
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்;
சந்ததமு மிளமையோ டிருக்கலாம்; மற்றொரு
சரீரத்தி னும்புகுதலாம்;
சலமே னடக்கலாம்; கனன்மே லிருக்கலாம்;
தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது; சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) கந்து - கட்டுத்தறியினை, உக - முறியச்செய்யும், மதகரியை வசமா நடத்தல் ஆம் - மதயானைகளை வசப்படுத்தி நடத்தல் கூடும்; கரடி வெம்புலி வாயையும் கட்டலாம் - கரடி வாயையும் கொடிய புலிவாயையும் கட்டுதல் கூடும்; ஒரு சிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம் - ஒப்பற்ற சிங்கத்தின் முதுகிலேறி உட்கார்ந் திருத்தல் கூடும்; கட்செவி எடுத்து ஆட்டலாம் - பாம்புகளைப் புற்றினின்றும் வெளிப்படுத்தி யாட்டுதல் கூடும்; வெம் தழலின் - வெய்ய நெருப்பில், இரதம் வைத்து - பாதரசத்தை யிட்டு, ஐந்து லோகத்தையும் - பஞ்சலோகங்களையும், வேதித்து - பரிசவேதி செய்து, விற்று - விக்கிரயித்து, உண்ணலாம் - (அப்பொருளைக்கொண்டு) உண்டு பிழைக்கலாம்; வேறு ஒருவர் காணாமல் - வேறொருவர் பாரா திருக்க, உலகத்து உலாவலாம் - உலகின்கண் சஞ்சரிக்கலாம்; விண்ணவரை ஏவல் கொளலாம் - தேவர்களை ஏவல் கேட்கப் பண்ணலாம்; சந்ததமும் - சதாகாலமும், இளமையோடு இருக்கலாம் - இளமைப் பருவத்துடனிருக்கலாம்; மற்றொரு சரீரத்தினும் புகுதலாம் - வேறொரு சரீரத்தினும் பிரவேசிக்கலாம்; சலமேல் நடக்கலாம் - நீரின்மேல் நடக்கலாம்; கனல் மேல் இருக்கலாம் - நெருப்பின்மேல் தங்கி யிருக்கலாம்; தன் நிகர் இல் சித்தி பெறலாம் - தமக்குச் சமான மில்லாத (பிற) சித்திகளையும் பெறலாம்; சிந்தையை அடக்கி - மனதை யடக்கி, சும்மா இருக்கின்ற திறம் அரிது - சும்மாவிருக்கும் வகை யருமையாகும்; சத்தாகி—, என்க.

(வி - ரை) ஒருவன், உலகத்தினில் எத்தகைய அரிய சித்தினை யடைந்தாலும் மனத்தினை யொருவழிப்படுத்தி நிற்கும் ஞானங் கைவரப் பெறானேல் சிறிதும் பிரயோசன மில்லை யென்றனர். "வானிலே

பறக்க மண்ணிலே னுழைய வானவர் வணங்கமற் றொருவ, ரூனிலே புகுத வவரவர் தங்க ளுளந்தனி னினைந்தது முரைக்கப், போனதோ ருயிரை யெழுப்பவெண்சித்தி புகன்றதெ லாங்கையில் வரினு, ஞானமே யில்லை யாயினன் னவரை நாயினுங் கடையென நாடே." என்றதனாற் காண்க. கந்துகம் - குதிரையெனக் கூறுவாரு முளர். பஞ்சலோகங்கள் - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பன. பரிசவேதி செய்தல் - பொன்னாக்குதல். (8)

'எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
மில்லை' யெனு மிவ்வுலகமீ
தேதுமறி யாதவ னெனப்பெயர் தரித்து,மிக
வேழைக்கு ளேழையாகிக்
கல்லாத வறிவிற் கடைப்பட்ட நான், அன்று
கையினு லுண்மைஞானம்
கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன்? குற்றேவலன்;
'அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறைஎயிற்
றுபாச வடிவமான
அந்தகா! நீயொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா! காசுநம்பால்
செல்லாதடா!' என்றுபேசவா யதுதந்த
செல்வமே! சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) எல்லாம் அறிந்தவரும் - எல்லாம் தெரிந்தவர்களும், ஏதும் அறியாதவரும் - ஒன்றும் தெரியாதவர்களும், இல்லை என்னும் - இல்லை யென்று சொல்லுதற்குரிய, இ உலகமீது - இந்த உலகத்தில், ஏதும் அறியாதவன் என - ஒன்றும் அறியாதவன் என்று, பெயர் தரித்து - பெயர் படைத்து, மிக ஏழைக்குள் ஏழையாகி - மிகவும் அறிவில்லாதவர்களுக்குள் அறிவில்லாதவனாய், கல்லாத அறிவின் - (கற்கவேண்டும் அவற்றைக்) கல்லாத புல்லறிவினால், கடைப்பட்ட நான் - கடையாகிய நான், அன்று - அக்காலத்தில், கையினால் - கையமைப்பால், உண்மை ஞானம் கற்பித்த - மெய்ஞ்ஞானத்தினைக் கற்பித்த, நின் - உனது, அருளினுக்கு - திருவருளுக்கு, குற்றேவல் நான் - குற்றேவற்குரிய அடியனேன், என்ன கைம்மாறு காட்டுவேன் - என்ன பிரதியுபகாரம் செய்ய வல்லேன்?, அல் ஆர்ந்த மேனியொடு - இருள் நிறைந்த உடம்போடு, குண்டு கண் - ஆழ்ந்த கண்களையும், பிறை எயிறு - பிறைபோன்ற கோர தந்தங்களையு முடைய, உபாச வடிவமான - பார்த்தோர் அஞ்சத்தக்க பயங்கரமான உருவத்துடன் கூடிய, அந்தகா! - யமனே!, நீ ஒரு பகட்டால் பகட்டுவது - நீயொரு வெளி

வேடத்தால் மயக்குதல், அடாதடா! - தகாதடா!, காசு நம்பால் செல்லா தடா! - உன் காசு நம்மிடத்தில் எடுபடாதடா!, என்று பேச - என்று உறப்பிப் பேசுதற்கு, வாய் தந்த - வாக்குக் கொடுத்த, செல்வமே! - எனது நிதியே!, சத்தாகி—, என்க.

(வி - ரை) சர்வஞ்ஞனுகிய பெருமானையன்றி முற்று முணர்ந்தவர் ஒருவரும் ஆன்மகோடிகளில் இல்லையாகலானும், பிராகிருதருள் தங்கள் தங்களுக்குற்ற சிற்றறிவிற் கேற்றபடி ஒவ்வொரு வகையில் வல்லுநரா யிருப்பராகலினுலும், 'எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு மில்லை' என்றனர். 'கையினுலுண்மை ஞானம் கற்பித்த நின்னருள்' என்றது, சின்முத்திரை காட்டித் தடுத்தாட் கொண்ட பேறு. செய்தற் கிசையா விடினும் 'என்ன கைம்மாறு காட்டுவேன்' என்றது அன்பின் மேலீட்டா லென்க. முதல்வனருள் பெற்றூர் நமனுக்கு நடுங்கார் ஆகலின், 'அந்தகா! நீயொரு பகட்டாற் பகட்டுவ தடாதடா!' என்றனர். கந்தரலங்காரம்: "பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய, வெட்டிப்பு றங்கண்ட லாதுவி டேன்வெய்ய சூரனைப்போய், முட்டிப் பொருத செவ்வேற்பெரு மாடிரு முன்புநின்றேன், கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கைய துவே." என்றதனுற் காண்க. (9)

'மின்போலு மிடையொடியு மொடியு' மென மொழிதல்போன்
மென்சிலம் பொலிகளார்ப்ப
வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னூர்கள் பின்னுவலாய்
என்போ லலைந்தவர்கள் கற்றூர்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவருண்டோ?
என்செய்கேன்? அம்மம்ம! என்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்துமொழிவேன்?
அன்பால் வியந்துருகி யடியற்ற மரமென்ன
அடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே! உமதடிமை யாங்களெனு நால்வருக்
கறமாதி பொருளுரைப்பத்
தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற
செல்வமே! சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே!

(இ - ள்) மின்போலும் இடை - மின்னற் கொடியை யொத்த இடையானது, ஒடியும் ஒடியும் என மொழிதல் போல் - ஒடியும் ஒடியும் என்று சொல்லுதல் போல, மெல் சிலம்பு ஒலிகள் ஆர்ப்ப - மெல்லிய காற்சிலம்பு ஓசைகள் ஆரவாரிக்க, வீங்கி - பருத்து, புடைத்து - புடைகொண்டு, விழு -

(சிலநாளில்) தளர்ந் தொழியாநின்ற, சுமை அன்ன - பெரும் பாரத்தினை யொத்த, கொங்கை - தனங்களை யுடைய, மடமின்னார்கள் பின் - இளமை பொருந்திய மாதர்களின் பின், ஆவலாய் - (அவர்கள்மேல் வைத்த) விருப்பத்தால், என்போல் அலைந்தவர்கள் - என்னைப்போலத் திரிந்தவர்கள், கற்றார்கள் கல்லார்கள் - கற்றவர்கள் கல்லாதவர்கள் என்கிற, இருவர்களில் - இரு திறத்தாருள், ஒருவர் உண்டோ - ஒருவராயினு முளரோ?, என் செய்கேன் - என்ன செய்வேன்?, என் பாவம் - என் பாவத்தையும், என் கொடுமை - என் கொடுமைகளையும், ஏதென்று எடுத்து மொழிவேன் - என்னென்று எடுத்துச் சொல்லுவேன்?, அன்பால் வியர்த்து உருகி - அன்பினால் துதித்து மனங்கரைந்து, அடி அற்ற மரம் என்ன - வேரற்ற மரம் போல, அடியிலே வீழ்ந்து வீழ்ந்து - உனது திருவடியில் விழுந்து விழுந்து, எம் அடிகளே! - எமது கடவுளே!, யாங்கள் உமது அடிமை என்னும் - நாங்கள் உமது அடிமைகள் என்று பிரார்த்தித்த, நால்வருக்கு - சனகாதிகளாகிய நால்வருக்கும், அறம்ஆதி பொருள் உரைப்ப - தர்மாதிகளாகிய பொருள்களை உபதேசித்தற்காக, தென்பாலின் முகமாகி - தெற்குத் திசையின் முகமாகி, வடவால் இருக்கின்ற - கல்லாலின் நிழலின் எழுந்தருளி யிருக்கின்ற, செல்வமே! - (எமது) நிதியே!, சத்தாகி—, என்க.

(வி - ரை) மாதர்கட்கு இடை மிக நுண்ணியதாக விருக்க வேண்டிய திலக்கணமாகலின், 'மின்போலு மிடை' என்றனர். நைடதம்: "சுணங்குபூத் தொருகாழ் மணிவடங் கிடந்த துணையிள வனமுலை சுமந்து, வணங்கி நா டோறுந் தேய்ந்ததோ பெருகும் வனப்பெனுங் கடலுளாழ்ந்ததுவோ, கணங்கொள்வண் டார்க்குங் கணைமதன் கண்ணே றெய்தலுங் கழிந்ததோ வன்றி, யணங்கர வல்குற் றேர்மிசை வதிபு மனங்கனோ விடையறி கிலேமால்." என்றதனாற் காண்க. தனம் அதிகமாகப் பருத்திருக்க வேண்டு மாகலின், 'வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கை' என்றனர். இரத்தினச்சுருக்கம்: "அடர்ந்து திரண்டிடங்கொண் டண்ணாந்து விம்மிப், படர்ந்து சுணங்கு பாந்து தடங்கொண், டிளைத்துத் ததும்பி யிறுமாந்து வீங்கிப், பணைத்து முகம்பார்க்கு மதுபார்." என்றதனாற் காண்க. காற்சிலம்பு சத்தித்தல், 'பாரமான தனங்களினை நுண்ணிய இடை தாங்கின் ஒருக்கால் அவ் இடை ஒடிந்துபோமே' என வுரைப்பதனை யொக்கு மென்பார், 'ஒடியும் ஒடியுமென மொழிதல்போன் மென்சிலம்பொலிகளார்ப்ப' என்றனர்.

பிரம புத்திரர்களாகிய சனகன், சனந்தனன், சனாதனன், சனத்குமாரன் எனு முனிவர் நால்வர்க்கு வேதத்தின் உட்கிடையான சுத்தாத்துவித சித்தாந்த வுண்மையினை யுபதேசித்தருள வேண்டி முதல்வன் தட்சண திசையை நோக்கி யிருந்த அவசரத்தினை, 'நால்வருக் கறமாதி பொரு

ஞரைப்பத் தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற செல்வமே' என்றனர். கந்தபுராணம்: "இருவரு முணரா வண்ண லேனவெள் ளெயிறி யாமை, சிரநிறை யனந்தகோடி திளைத்திடு மூரத்திற் சீர்கொள், கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி, யொருகணஞ் செய லொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்." "இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு, சனகனே முதலாயுள்ளோர் தவலரு ஞானபோதம், பனுவலி னனவன் றென்னும்பான்மையைத் தெரிந்து முக்கட், புனிதன தருளாற் றந்தம் புந்தியி னொடுக்கம்பெற்றார்." எனவும் வருவனவற்றாற் காண்க. (10)

புத்தமிர்த போகமுங், கற்பகந வீழலிற்
 பொலிவுற விருக்குமியல்பும்,
 பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்,
 பூமண்ட லாதிக்கமும்
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவுமெ
 மாலுமொரு சுட்டுமறவே
 வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
 வந்தநின் னருள்வாழிகாண்!
சுத்தபரி பூரண வகண்டமே! ஏகமே!
 சுருதிமுடி வானபொருளே!
 சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
 சுரந்துபொழி கருணைமுகிலே!
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே!
 தேடரிய சத்தாகியென்
 சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
 தேசோ மயானந்தமே!

(இ - ள்) புத்தமிர்த போகமும் - நூதனமாகிய அமிர்தானுபவமும்; கற்பக நல் நீழலில் - கற்பகவிருட்சத்தின் நல்ல நிழலில், பொலிவுற இருக்கும் இயல்பும் - பிரகாசமாக வீற்றிருக்கும் தன்மையும்; பொன் உலகில் - சுவர்க்க லோகத்தில் உள்ள, அயிராவதத்து ஏறு - ஐராவதமென்னும் யானையின்மே லேறுகின்ற, வரிசையும் - சிறப்பும்; பூமண்டல ஆதிக்கமும் - பூமண்டலத்தில் ஏற்றமும்! மத்த வெறியினர் வேண்டும் - பிரபஞ்ச மாயையாகிய உன்மத்தங் கொண்ட வெறியாளரால் விரும்பப்படுகின்ற, மால் - ஆசையின் விவகாரம், என்று - என்று துணிந்து, தள்ளவும் - நீக்கவும், எம்மாலும் - எங்களாலும், ஒரு சுட்டு அறவும் - ஒரு சுட்டுதல் அற்றொழியவும், வைக்கின்ற வைப்பாளன் - எம்மை (மௌன நிலையில்) வைக்கின்ற பெருமையாளன், மௌன தேசிகன் என்ன - மௌனகுரு என்று சொல்லும்படி, வந்த - எனக்குக் கிடைத்த, நின் அருள் வாழி - உன் திருவருள்

வாழ்க!, சுத்த பரிபூரண அகண்டமே! - சுத்தமும் மிகுபூர்த்தியுமுள்ள அகண்டரூபமே!, ஏகமே! - தனிப்பொருளே!, சுருதி முடிவு ஆன பொருளே! - வேதாந்தமாகிய வஸ்துவே!, சொல் அரிய - அளவிட்டுச் சொல்லுதற்கரிய, உயிரினிடை - சீவர்களிடத்து, அங்கு அங்கு நின்று - அவ்வவ்விடங்களில் வியாபித்து நின்று, அருள் சுரந்து பொழி - அருள் மழையைச் சுரந்து பொழியாநின்ற, கருணை முகிலே! - கருணையாகிய மேகமே!, சித்திநிலை - சித்திநிலை, முத்திநிலை - முத்திநிலையாகிய பயிர்கள், விளைகின்ற பூமியே! - விளைகின்ற நன்னிலமே!, தேடரிய சத்தாகி—, என்க.

(வி - ரை) 'பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்' என்றதனால் "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே." என்னுஞ் சூத்திர விதியால், சத்தியவுலகி லன்னத்தேறு வரிசையும், வைகுந்தத்திற் கருடனிலேறு வரிசையுங் கொள்க. 'இவை மத்தவெறி யினர்வேண்டு மால்' எனவே, இவை அறிவாளிகள் அருவருத்துத் தள்ளத்தக்கனவென்றாயிற்று. பண்டார மும்மணிக்கோவை: "ஐந்தரு நிழற்கீ ழரசுவீற் றிருக்கு, மிந்திர னாகிவாழ்ந் திருப்பதோ வன்றே, மலரோ னாகி மன்னுயிர்த் தொகுதி, பலர்புகழ்ந் திசைப்பப் படைப்பதோ வன்றே, யடலரா வணையி லறிதுயி லமர்ந்த, கடவுளா யுலகங் காப்பதோ வன்றே." எனவும், திருவிளையாடற் புராணம்: "புள்ளிய தோலாடை புனைந்தரவப் பூணணிந்த, வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமல, முள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத், தள்ளிய செல்வத் தருக்கினு மென்செய்தாய்." எனவும் வருவனவற்றாற் காண்க.

ஏகதேச வுணர்வாற் சுட்டியுணரப்படுவதெல்லா மசத்தாகலின் அது நீக்கிச் சுட்டற்ற சுத்தாத்துவித நிலையில் சேர்ப்பான் என்பார், 'சுட்டு மறவே வைக்கின்ற வைப்பாளன்' என்றனர். சிவஞானபோதம்: "சுட்டி யுணர்வதனைச் சுட்டிய சத்தென்னச், சட்ட வினியுனது சத்தேகாண் - சுட்டி, யுணர்ந்ததீ சத்தல்லை யுண்மையைத் தைவம், புணர்ந்ததனாற் பொய் விட்டுப் போம்." எனவும், இந்நூல் ஆனந்தக்களிப்பில்: "முன்னிலை யேதுமில்லாதே - சுக, முற்றச்செய் தேயெனைப் பற்றிக்கொண்டாண்டி." எனவும் வருவனவற்றாற் காண்க.

திருமூலர் மரபின் வந்த தனதாசிரியராய மௌனகுரு தனக்கு அனுக்கிரகித்த திருவருளை யெண்ணி யானந்த மேலீட்டால், 'நின்னருள் வாழி' என்றனர். "கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க." என்றதும் இக் கருத்துப்பற்றியே என்க.

(11)

# சிற்சுகோதய விலாசம்

பதினான்கு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்,
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேணடன சாலையை,
மோக வாசைமுறி யிட்ட பெட்டியை, மு
மலமி குந்தொழுகு கேணியை,
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை,
முடங்க லார்கிடை சரக்கினை,
மாக விந்த்ரதனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனார்
வினைய வெய்யதடி கார னாயமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை, மெய்யெ னக்கருதி
யைய வையமிசை வாடவோ!
தெரிவ தற்கரிய பிரமமே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) காகமொடு - காகங்களுடன், கழுகு - கழுகுகளும், அலகை - பேய்களும், நாய் - நாய்களும், நரிகள் - நரிகளும், சுற்று - சுற்றுதற்கேது வாகிய, சோறு இடு துருத்தியை - சோற்றினை யடைத்த தோற்பையை; இரண்டுகால் - இரண்டு கால்களையும், நவ வாசல் - ஒன்பது வாயில்களையும், பெற்று வளர் - பெற்று விருத்தியடையாநிற்கிற, காமவேள் நடன சாலையை - மன்மதனது நாட்டிய சாலையை; மோக ஆசை முறி இட்ட பெட்டியை - மோகம் ஆசை யென்னும் இவற்றை எழுதிய முறிச்சீட்டைச் சேமித்து வைத்திருக்கிற பெட்டியை; மும்மலம் மிகுந்து ஒழுகு கேணியை - மும்மலங்கள் அதிகரித்து ஒழுகாநின்ற கிணற்றை; வெம் கிருமி - வெவ்விய புழுக்கள், மொய்த்து - நெருங்கி, தத்து - செளியாநின்ற, கும்பியை - நரகத்தை; முடங்கல் ஆர் - குற்றம் நிறைந்த, கிடை சரக்கினை - கிடைச் சரக்கை; மாகம் - ஆகாயத்தில் காணப்படுகிற, இந்த்ரதநு - இந்திரவில்லை யும், மின்னை - மின்னலையும், ஒத்து - நிகர்த்து, இலக - விளங்கும்படி, வேதம் ஓதிய குலாலனார் - வேதங்களைப் படித்த குயவர், வினைய - உண் டாக்க, யமன் ஆன - யமனாகிய, வெய்ய தடிகாரன் - வெவ்விய தடிகாரன், வந்து அடிக்கும் - வந்து உடைக்கின்ற, ஒரு மட்கலம் - ஒரு மட்கலம் போன்ற, தேகம் - உடம்பாகிய, பொய்யை - பொய்ப்பொருளை; மெய் என கருதி - மெய்ப்பொருளென்றுநினைத்து, ஐய - ஐயனே!, வையமிசை

வாடவோ - உலகின்மேல் வாடிநிற்கவோ !, தெரிவதற்கு அரிய - அறிதற் கரிதாகிய, பிரமமே - பிரமப்பொருளே !, அமலம் - பரிசுத்தமாகிய, சிற்சுகோதய விலாசமே - ஞான சுகோதய லீலையே !, என்க.

(வி - ரை) உடலினைக் காக முதலிய பட்சிகளும், நாய்முதலிய மிருகங்களும் உண்ண எக்காலமும் அவாக்கொண் டிருக்குமாகலின், 'காகமோடு கழுகலகை நாய்நரிகள் சுற்று சோறிடு துருத்தியை' என்றனர். **பட்டினத்தார்:** "எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கென்னு மிந்த மண்ணுஞ், சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கெனுந் தான்புசிக்க, நரியெனக் கென்னும்புன் னாயெனக் கென்னுமிந் நாறுடலைப், பிரியமுடன்வளர்த்தேனித னாலென்ன பேறெனக்கே?" எனவும், **திருவிளையாடற் புராணம்:** "நாய்நம தென்நரி நமதெனப் பிதா, தாய்நம தெனநமன் றனதெனப் பிணி, பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ, லாநம தெனப்படும் யாக்கை யாரதே?" எனவும் வருவனவற்றுற் காண்க. சகல தீமைகட்கும் இருப்பிடமாகிய இவ்வுடல் நிலையுள்ளதல்ல வென்பார், 'காமவே ணடன சாலையை......வையமிசை வாடவோ' என்றனர். **பட்டினத்தார்:** "ஆங்காரப் பொக்கசங் கோபக் களஞ்சிய மாணவத்தா, னீங்கா வரண்மனை பொய்வைத்த கூடம்விண் ணீடிவளர், தேங்கார் பெருமதிற் காமவி லாசமித் தேகங்கந்தல், பாங்கா யுனைப்பணிற் தெப்படி ஞானம் பலிப்பதுவே?" என்றதனுற் காண்க.

**மும்மலம்களாவன** - ஆணவம், மாயை, காமியம் என்பன. வேத மோதிய குலாலனுர் - பிரமன். கிடைச்சரக்கு - விலைப்படாத சரக்கு. (1)

குறிக ளோடுகுண மேது மின்றியன
 லொழுக நின்றிடு மிரும்பனல்
கூட லின்றியது வாயி ருந்தபடி
 கொடிய வாணவ வறைக்குளே
யறிவ தேதுமற வறிவி லாமைமய
 மாயி ருக்குமெனை, அருளினால்
அளவி லாததனு கரண மாதியை
 யளித்த போதுனை யறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
 பலநி றங்கவரு முபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
 ப்ரசாத நல்லருண் மறந்திடும்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
 மாயி ருப்பதினி யென்றுகாண்?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
 சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) குறிகளோடு - அடையாளங்களுடன், குணம் ஏதும் இன்றி - குணம் சிறிதும் இல்லாமல், அனல் ஒழுக நின்றிடும் இரும்பு - நெருப்பு மூளும்படி நின்ற இரும்பானது, அனல் கூடல் இன்றி - நெருப்போடு சேராமல், அதுவாய் இருந்தபடி - அவ் விரும்பாகவே யிருந்த வண்ணம், கொடிய - கொடிதாகிய, ஆணவ அறைக்குளே - ஆணவமாகிய வீட்டுக்குள்ளே, அறிவது ஏதும் அற - அறிதற்றன்மை சிறிது மில்லாமல், அறிவிலாமை மயமாய் இருக்கும் - அறிவின்மையே உருவா யிருக்கிற, என்னை - அடியேனை, அருளினால் - கிருபையினால், அளவு இல்லாத - எண்ணற்ற, தனு கரணம் ஆதியை - தேகம் அந்தக்கரண முதலியவற்றை, அளித்தபோது - பிரசாதித்தபோது, உன்னை அறிந்து - உன்னைத் தெரிந்துகொண்டு, நான் - அடியேன், பிறிவு இல்லாத வண்ணம் - பிரியாத வகை, நின்றிடாதபடி - நிலைத்திராமல், பல நிறம் கவரும் உபலமாய் - பல நிறங்களைக் கவரும் இயற்கையதாகிய பளிங்குக் கல்லையொத்து, பெரிய மாயையில் அழுந்தி - பெரிய மாயாசமுத்திரத்தில் ஆழ்ந்து, நின்னது ப்ரசாதம் - உனது அனுக்கிரகமாகிய, நல் அருள் மறந்திடும் - சிறந்த அருளை மறந்துவிடுகின்ற, சிறியனேனும் - அற்பனாகிய நானும், உன்னை வந்து அணைந்து - உன்னை வந்து சேர்ந்து, சுகமாய் இருப்பது - இன்பரூபமாயிருக்கிறது, இனி என்று ? - இனி எக்காலம்?, தெரிவதற்கரிய—, என்க.

(வி - ரை) இரும்பானது நெருப்பின் சம்பந்தத்தால் நெருப்பே யாகாமலும், அந் நெருப்பிற்கு அன்னியமா யிராமலும் தன் குணமிழந்து நிற்றல்போல, ஆன்மாவானது ஆணவத்தின் சம்பந்தத்தால் ஆணவமே யாகாமலும், அவ்வாணவத்திற்கு அன்னியமா யிராமலுந் தன் குணமிழந்து நிற்கும் என்பார், 'குறிகளோடுகுண மேது மின்றியன லொழுக நின்றிடு மிரும்பனல், கூட லின்றியது வாயிருந்தபடி கொடிய வாணவ வறைக்குளே, யறிவ தேதுமற வறிவி லாமை மய மாயி ருக்குமெனை' என்றனர். இது ஆன்மாவின் பெத்தநிலையென வறிக. இந் நிலையினைக் கொண்டே, ஆன்மாவானது சிவத்தின் சம்பந்தத்தால் சிவமே யாகாமலும், அச் சிவத்திற்கு அன்னியமா யிராமலும் தன் குணமாகிய தற்போத மிழந்து நிற்கும் எனு முத்திநிலையினையும் குறிப்பாகக் கிரகிக்க, சிவானந்தமாலை: "தானு விஞே டத்துவிதஞ் சாதிக்கு மாணவனை, யாணவத்தோ டத்துவித மாக்கினரார்?" எனவும், இந்நூல் எந்நாட்கண்ணியில்: "ஆணவத்தோ டத்து வித மானபடி மெய்ஞ்ஞானத், தானுவினே டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ?" எனவும் வருவனவற்றாற் காண்க.

படிகமானது தன்னிடத்திற் கூடின வன்னங்களிலே மேலிடத் தனக்கு எப்பொழுதுஞ் சுபாவமான சொரூபத்தைக் கரந்து தன்னை யடுத்த பதார்த்தத்தின் தன்மையைக் காட்டி நிற்குமாபோல், மாயையின் காரியமாகிய இந்திரியத்திற்கு வேறுபட்டிருக்கிற ஆன்மா அதனைக் கூடினவிடத்துத் தனக்

குச் சுபாவமா யிருக்கிற வடிவை மறைத்த இந்திரியங்களையே காட்டிநிற்கு மாகையால், 'பலநிறங் கவரு மூபலமாய்ப், பெரிய மாயையி லழுந்தி' என்றனர். சிவஞானசித்தியார்: "பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும்" என்றதனுற் காண்க. ஆன்மாவினை உபலத்திற் குவமையாகக் கூறினமையின், அதிற் பிரகாசிக்கும் வன்னம் பாசத்தினுக்கும், ஆதித்தப்பிரகாசம் திருவருள் ஞானத்திற்கும் உவமை யாகக் கொண்டு, பல நிறங்களையும் தன்னிடத்திலே கவர்ந்துகொள்ளுகிற அநாதியே யுடைத்தாகிய உபலத்தினது நிலைபெற்ற பிரகாசத்தினையும், அந்த உபலத்திலே பொருந்தப்பட்ட பல வன்னங்களு மதிலே பிரதிபிம்பஞ் செய்து நிற்கிற முறைமையையும், அவை யிரண்டையும் கூட்டிக் காரியப் படுத்துகிற ஆதித்தப் பிரகாசம்போல், பிரபஞ்சமாகிய பாசங்களையு மான் மாக்களையுந் தன்னுடைய சேட்டையாலே கூட்டிக் காரியப்படுத்தி நிற்குந் திருவருள் ஞானமானது அப்படிக் கூட்டிக் காரியப்படுத்தி நிற்கச்செய்து முற்கூறிய உபமானத்தில் உபலத்தையும் வன்னங்களையும் கூட்டிக் காரியப் படுத்தின ஆதித்தப் பிரகாசமும் அவற்றிற் றோய்வற்று நின்றாற்போல, சட மாகிய பாசமயக்கந் தன்னைவந்து பொருந்ாதபடி தோய்வற நிற்கிற திரு வருள் ஞானத்தினையே மேலான வுண்மை ஞானமென் றறிக. இதுகாறுங் கூறியவற்றால் உபல உவமானங் கொண்டு திரிபதார்த்தம் அநாதி நித்திய மென்பதனைக் கிரகிக்க. (2)

"ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே!
ஆதி யந்தநடு வேது மின்றியரு
ளாய்நி றைந்திலகு சோதியே!
தொந்த ரூபமுட னரூப மாதிகுறி
குணமி றந்துவளர் வஸ்துவே!
துரிய மே! துரிய வுயிரி னுக்குணர்வு
தோன்ற நின்னருள்சு பாவமே!
எந்த நாளுநடு வாகி நின்றொளிரு
மாதி யே! கருணை நீதியே!
எந்தையே!" என விடைந்தி டைந்துருகு
மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நாளுமினி யுய்வனோ?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ-ள்) ஐந்து பூதமும் - பஞ்சமகா பூதங்களும், ஒரு கானல் நீர் என அடங்க - ஒரு கானல் நீர்போல் அடங்கும்படி, வந்த - உண்டாகிய, பெரு வானமே! - பெரிய ஆகாயமே!, ஆதி அந்தம் நடு ஏதும் இன்றி -

முதல் கடை இடை யொன்று மில்லாமல், அருளாய் நிறைந்து இலகு சோதியே! - அருளாய் நிறைந்து விளங்காநின்ற ஒளியே!, தொந்த ரூப முடன் - பற்றுகிய உருவத்துடன், அரூபம் ஆதி - அருவம் முதலாகிய, குறி குணம் இறந்து - அடையாளம் குணம் இவற்றைக் கடந்து, வளர் - வளர்கின்ற, வஸ்துவே! - பொருளே!, துரியமே! - துரியபதமே!, துரியம் - துரியமாகிய, உயிரினுக்கு - உயிருக்கு, உணர்வு தோன்ற - அறிவு உதிக்கும்படி, நின்று அருள் - நின்றருள்கின்ற, சுபாவமே! - இயற்கையே!, எந்த நாளும் - எக்காலமும், நடுவாகி நின்று - நடுவினிலைமையாய் நின்று, ஒளிரும் - விளங்குகின்ற, ஆதியே! - முதலே!, கருணை - கருணையோடு கூடிய, நீதியே! - நியாயமே!, எந்தையே! - எமது தந்தையே!, என - என்று, இடைந்து இடைந்து உருகும் - நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகாநின்ற, எளியனேன் கவலை தீரவும் - எளியேனது கிலேசம் நீங்கவும், சிந்தையானதை அறிந்து - என் மனக்கருத்தை யுணர்ந்து, நீ உன் அருள் செய்ய - நீ உன்னருளைப் புரிய, (அதைப் பெற்று) நானும் இனி உய்வனோ - நானும் இனி உச்சீவிப்பனோ?, தெரிவதற்கரிய—, என்க.

(வி - ரை) 'ஐந்து பூதமொரு கானனீரென வடங்க வந்தபெரு வானமே' என்றதனால், முதல்வனுடைய வியாபகத்தையும்; 'ஆதி யந்த நடு வேது மின்றி யரு ளாய்நி றைந்திலகு சோதியே' என்றதனால், நித்தியத்தையும்; 'தொந்த ரூபமுட னரூப மாதிகுறி குணமி றந்துவளர் வஸ்துவே' என்றதனால், அமலத்தையும்; 'துரிய மேதுரிய வுயிரி னுக்குணர்வு தோன்ற நின்றருள் சுபாவமே' என்றதனால், அத்துவிதக் கலப்பையும்; 'எந்த நாளுநடு வாகி நின்றொளிரு மாதி யேகருணை நீதியே' என்றதனால், அருட் சொரூபத்தையும்; 'எந்தையே' என்றதனால் நிமித்தத்தையும் விளக்கியதென அறிக.

'வானமே! சோதியே! வஸ்துவே! சுபாவமே! நீதியே!' என்று பலபடியாகப் புகழ்ந்து மன நைந்து வருந்துகிற எளியேனுடைய கவலை நீங்க, என் கருத் தறிந்து நீ யருள்செய்ய நானு மினி உய்வேனோ என்பதாம். (3)

ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
தடங்க 'மர்க்கடவன் முட்டியாய்'
அடவி நின்றுமலை யருகி னின்றுசரு
காதி தின்றுபனி வெயிலினால்
மெய்வ ருந்துதவ மில்லை; நற் சரியை
கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கின்றசவு பாந நன்னெறி
விரும்ப வில்லை; உல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
சார தித்தொழி னடத்திடும்

புத்தி யூகமறி வற்ற மூகமிவை
பொருளெ னக்கருது மருளன்யான்,
தெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு
சேர வுங்கருணை கூர்வையோ?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) ஐவர் என்ற - ஐவரென்று சொல்லப்படுகிற, புலம்- புலன்களாகிய, வேடர் - வேடர்களுடைய, கொட்டம் அடங்க - ஒழுங்கற்ற நடையடங்க, மர்க்கடவன் முட்டியாய் - குரங்கினது வலிய பிடியைப்போன்ற பிடிப்பை யுடையேனாய், அடவி நின்று - காட்டில் தங்கியும், மலை அருகில் நின்று - மலையருகில் இருந்தும், சருகு ஆதி தின்று - சருகு முதலியவற்றை யுண்டு, பனி வெயிலினால் - பனி வெயில்களால், மெய் வருந்து - உடல் வருந்துதற்குரிய, தவம் இல்லை - தவஞ் செய்தல் இல்லை; நல் - சிறந்த, சரியை கிரியை யோகம் என்னும் - சரியை கிரியை யோகம் என்கிற, மூன்று தாய் மேவுகின்ற - மூன்றாகப் பொருந்திய, சவுபானம் - படிகளாகிய, நல் நெறி - நன்மார்க்கத்தை, விரும்பவில்லை - அபேட்சிக்கவில்லை; உலகத்திலே - உலகின்கண், பொய் முடங்கு தொழில் யாது - பொய்யாகிய தொழில் யாதோ, அதற்கு - அத் தொழிலுக்கு, நல்ல சாரதித் தொழில் நடத்திடும் புத்தி - நல்ல சாரதித் தொழிலை நடத்துகின்ற புத்தியும், யூகம் - யுக்தியும், அறிவு அற்ற மூகம் - அறிவில்லாத மூகத்தன்மையுமாகிய இவைகளையே, பொருள் என கருதும் - மெய்ப்பொருள்களென்று நினைக்கின்ற, மருளன் யான் - மருளனாகிய நான், தெய்வம் - தைவிகமான, நல் அருள் படைத்த - நல்ல அருளைப்பெற்ற, அன்பரொடு சேரவும் - உன் அன்பரோடு சேர்ந்து வாழவும், கருணை கூர்வையோ - கருணை புரிவையோ?, தெரிவ தற்கரிய—, என்க.

(வி - ரை) இல்லறத்தின்கண் ணிருந்து சரியையாதிகளை யனுஷ்டித்தாவது, துறவறம்பூண்டு தவமியற்றியாவது ஞானத்தினை அடையப் பெறாமல், அநித்தியமாகிய பிரபஞ்ச வாழ்வில் மொத்துண் டுழலும் மருளனாகிய எனக்கு அடியார் கூட்டுறவு உண்டாமோ என்றனர். திருப்போரூர்ச் சந்நிதி முறை: "இல்லறத்தா னல்லே னியற்கைத் துறவியல்லே, னல்லறத்து ஞானியல்லே னயினேன் - சொல்லறத்தி, னொன்றேனு மில்லே னுயர்ந்த திருப் போரூரா!, என்றோ னீடேறு வேன்." என்றதனாற் காண்க. அடியார் கூட்டுறவு கிடைத்திடில் திருவருள் தானே வந்து எய்துமாகலின், 'அன்பரொடு சேரவுங் கருணை கூர்வையோ' என்றனர். இந்நூல் பராபரக்கண்ணியில், "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா, லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே." என்றதாலும் காண்க. (4)

ஏக மானவுரு வான நீயருளி
ஞனே கவுரு வாகியே
எந்த நாளகில கோடி சிர்ஷ்டிசெய
விசையு நாள்வரைய நாண்முத
நாக நாளது வரைக்கு முன்னடிமை
கூட வேசனன மானதோ
அநந்த முண்டு; நல சனன மீ,திதனு
ளறிய வேண்டுவன வறியலாம்;
மோக மாதிதரு பாச மானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழுது ணர்ந்துபர மான வின்பவெள
மூழ்க வேண்டும்; இது வின்றியே,
தேக மோநழுவி நானு மோநழுவின்
பின்னை யுய்யும்வகை யுள்ளதோ?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) ஏகமான உருவான நீ - ஏகபோகமா யிருந்த நீ, அருளினுல் - கருணையினுல், அனேக உருவாகி - அனேக சொரூபங்களாகி, அகில கோடி - அண்ட கோடிகளை, சிர்ஷ்டி செய - சிருஷ்டி பண்ண, இசையும் நாள் வரை - இசைந்த நாளெல்லை, எந்த நாள் - எந்த நாளோ, அந்நாள் முதலாக - அந்த நாள் முதலாக, நாளது வரைக்கும் - நாளது வரையிலும், உன் அடிமை - உன் தொண்டனுகிய நான், கூடவே சனன மானதோ - கூடவே பிறந்த பிறவியோ, அநந்தம் உண்டு - முடிவற்றனவாக வுள்ளது; (ஆயினும்), நல்ல சனனம் ஈது - நல்ல பிறவியிது; இதனுள் அறிய வேண்டுவன அறியலாம் - இதில் அறியவேண்டும் புருஷார்த்தங்களை யறியலாம்; மோகமாதி தரு - மோகாதிகளைக் கொடுக்கிற, பாசமானதை - பாசத்தை, அறிந்து - உள்ளவாறு உணர்ந்து, விட்டு - கைவிட்டு, உன்னேயும் என்னேயும் - ஆண்டானுகிய உன்னையும் அடிமையாகிய என்னையும், முழுது உணர்ந்து - முற்று முணர்ந்து, பரம் ஆன - மேலான, இன்ப வெள்ளம் - ஆனந்த வெள்ளத்தில், மூழ்க வேண்டும் - முழுகவேண்டும்; இது இன்றியே - இது செய்த லில்லாமலே, தேகம் நழுவி - தேகம் என்னைவிட்டு நழுவி, நானுமோ நழுவின் - நானும் அதனை விட்டு நழுவுவே னுயின், பின்னை - பிறகு, உய்யும் வகை உள்ளதோ - உச்சீவிக்கும் வகையும் எனக்குண்டோ?, தெரிவதற்கரிய—, என்க.

(வி - ரை) எண்ணிறந்த ஆன்மாக்களுடைய கன்மானு குணமாகத் தனது சமவேத சத்தியினுல் மாயையைச் சோபித்துத் தனுகரணுதிகளைச் சமவாய சத்தியானுகூதமாக வுண்டாக்கி, திதி காலமெல்லாம் பிரபஞ்சத் திருந்து பிரளய காலத்திலே யொடுங்கும்படிக்குத் தான் நடத்த கர்த்தாவு

மாய், இவ்வாறிந்த பிரபஞ்சத்துடனே பிறிவறநின்று ஆன்மாக்களுடைய கர்த்திருத்தவ போக்திருத்து வாதிகளும் மாயையினுடைய சங்கோச விகாசங்களுமாய்க் காரியங்களுடைய உற்பத்தி திதி நாசங்களும் தனக் கின்றி அநாதியே சுபாவமாக அழகுபெற்ற நிர்மலனாகிச், சிவப்பிரகாச னாகிக், காலதேச வஸ்துக்களினாலே அபரிச்சின்னனாகி, நீக்கமற் றெங்கு நிற்பனாகலின், 'ஏக மானவுரு வான நீயருளி னான னேகவுரு வாகியே' என்றனர். சிவஞானபோதம்: "கந்யஸ்ஸர்வ யாப்திதோநந்ய: கர்த்தா கர்மாநுசாரத: கரோதிஸம்ஸ்ருதிம்பும்ஸாமாஜ்ஞயாசமகேதயேதி." என் றதனாற் காண்க.

ஈண்டு சிருஷ்டி யென்பதனைப் புநருற்பவமாகக் கொள்க. என்னை? பிரபஞ்சம் அநாதி நித்தியமாகலின், ஒவ்வொரு ஆன்மாவும் கன்மத்திற்குத் தக்கபடி எடுக்குஞ் சனனங்கள் எண்ணிலவாகலின், 'சனனமானதோ அநந்தமுண்டு' என்றனர். ஒரு பெரியர்: "எடுத்தசன னங்கடோறு மீன் றெடுத்த தாய்மார், கொடுத்த முலைப் பாலனைத்துங் கூட்டில் தடுத்துவளர், பைந்நா கணைதுயிலும் பாலாழி யுஞ்சிறிதா, மன்னு சிதம்பர தேவா!" என்றதனாற் காண்க. ஆன்மா எடுக்கும் எண்ணிலவாகும் சன்மங்களுக்குள் மானிடப்பிறவியே அருமை யாகலின், 'நல்ல சனனமீது' என்றனர். அறிவானந்தசித்தி: "தேரிற் சதுரயுகமிரண் டாயிரநாட் டிங்களாண், டோரினந் நூற்றி லயன்மாண்டு கார்தமுமுற்றுத்தென்பாற், சேரு நகத்துளை யின்வட பார்கழி செல்லெளிது, சாரும் பிறப்பொழித் திம்மா னுடத்திற் சனிக்கரிதே." என்றதனாற் காண்க. மானிடசெனனமே நன்மை தீமைகளை யறிதற் குரியதாகலினாலும், அறிய வேண்டுவனவாகிய தர்மார்த்த காம மோட்சங்களைத் தெரியலா மாகலினாலும், "ஈதினு லறிய வேண்டுவன வறியலாம்' என்றனர். ஆகலின், நிலையில்லாத பாசத் தினைக் கடிந்து தலைவனாகிய நின்னையும் அடிமையாகிய என்னையும் விசாரித் தறிந்து பேரானந்தத்தினை யனுபவிக்க வேண்டுமென்பார், 'பாசமானதை, யறிந்து விட்டுனையு மெனையு மே முழு துணர்ந்து பர மான வின்பவெள மூழ்க வேண்டும்' என்றனர். அடையவேண்டிய பலனைத் தேகமுள்ள போதே பெற்றுக்கொள்ளுதல் அவசியம். தேகம் தவறில் அத் தேகத்தினை யாதாரமாகக்கொண்டு வாழுகின்ற உயிருக்கொரு நிலைக்கள மின்றி ஞானம் பெறுதல் ஒருக்காலு முடியாதென்பார், 'தேகமோநழுவி னானுமோ நழு வின் பின்னை யுய்யும்வகை யுள்ளதோ?' என்றனர். திருமந்திரம்: "உடம்பா ரழியி லுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவுமாட்டா, ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே, யுடம்பை வளர்த்தே னுயிர் வளர்த் தேனே." எனறதனாற் காண்க. (5)

நியம லக்ஷணமு மியம லக்ஷணமு
மாச னாதிவித பேதமும்

நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நின்றி லங்குமஜ பாநலத்
தியல றிந்து,வளர் மூல குண்டலியை
யினிதி றைஞ்சி,அவ ளருளினால்
எல்லை யற்றுவளர் சோதி மூலவன
லெங்கண் மோனமனு முறையிலே
வயமி குந்துவரு மமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்து,நான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி,
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று, ஞானநெறி யடைவனோ?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ-ள்) நியம லக்ஷணமும் - நியமத்தி னிலக்கணத்தையும், இயம லக்ஷணமும் - இயமத்தி னிலக்கணத்தையும், ஆசனாதிவித பேதமும் - ஆசன முதலானவைகளின் வேறுபாடுகளையும், நெடிது உணர்ந்து - நன்கு யறிந்து; இதயபத்ம பீடமிசை - இதய கமலமாகிய பீடத்தின்மேல், நின்று - நிலைபெற்று, இலங்கும் - விளங்குகிற, அஜபா நலத்து - அஜபா மந்திரத் தின் நன்மையாகிய, இயல் அறிந்து - இலக்கணத்தையு மறிந்து; வளர் மூல குண்டலியை - வளர்கின்ற மூல குண்டலி சத்தியை, இனிது இறைஞ்சி - இனிதாக வணங்கி; அவள் அருளினால் - அவளுடைய கருணையினால், எல்லை அற்று வளர் - வரம்பற்று வளர்கின்ற, சோதி - தேஜசையுடைய, மூல அனல் - மூலாக்கினியோடு, எங்கள் மோனமனு முறையிலே - எங்களு டைய மௌனமந்திரக் கிரமத்தினால், வயம் மிகுந்து வரும் - வெற்றி மிகுந்து வரும், அமிர்தமண்டல மதிக்குளே - அமிர்தத்தையுடைய சந்திர மண்டலத்துக்குள்ளே, மதியை வைத்து - அறிவைச் செலுத்தி, நான் வாய் மடுத்து - நான்வாய் வைத்து, அமிர்த வாரிதியை பருகி - அமிர்தப் பிர வாகத்தினை யுண்டு, மன்னும் - நிலைபெற்று, ஆர் - அரிய, அமிர்தவடிவமாய் - அமிர்த ரூபமாய், செயம் மிகுந்து வரு - வெற்றி மிகுந்து வருகின்ற, சித்த யோகநிலை பெற்று - சித்தர்களுடைய யோகநிலையை யடைந்து, ஞானநெறி யடைவனோ? - ஞான மார்க்கத்தை யடைவனோ?, தெரிவதற்கரிய—, என்க.

(வி-ரை) 'பேதமும்' என்றதனால் இயம நியம ஆசனங்களுடன் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி முதலியவுங் கூட்டுக. இயமத்திற்கு முன்னர் நியமத்தினைக் கூறியது செய்யுள் வழக்கு. இயம நியமாதிகளின் இலக்கணங்களை சித்தர்கணம்: 5-வது பாடலின் உரையிற் காண்க. நியம விலக்கண முதலியவற்றை யாராய்ந்து, அசபையி னியலறிந்து, குண்டலி சத்தியை வணங்கி, இவளருளினால் சந்திரமண்ட

லத்தின் அமிர்தத்தைப் பருகி, அமிர்தவுருவாகி, ஜெயமிருத் தோங்கும் யோகநிலையை யடைந்து, அதன் வழியாய் ஞானமார்க்கத்தையு மடைவனே என்பதாம். இவற்றின் இயல்பினைத்து முன்னர் காண்க. (6)

எறிதி ரைக்கட னிகர்த்த செல்வமிக
வல்ல லென்றொருவர் பின்செலா
தில்லை யென்னுமுரை பேசி டாதுலகி
லெவரு மாமென மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ மும்முதவி,
நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்,
நியம மாதிநிலை நின்று, ஞானநெறி
நிஷ்டை கூடவுமெந் நாளுமே
அறிவி னின்றுகுரு வாயு ணர்த்தியது
மன்றி, மோனகுரு வாகியே
அகில மீதுவர வந்த சீரருளை
யைய வையவினி யென்சொல்கேன் ?
சிறிய னேழைநம தடிமை யென்றுனது
திருவு ளத்தினி லிருந்ததோ ?
தெரிவ தற்கரிய பிரம மே ! அமல
சிற்சு கோதய விலாசமே !

(இ - ள்) எறி கடல் திரை நிகர்த்த - வீசுகின்ற கடலின் அலைகளை யொத்த, செல்வம் - செல்வமானது, மிக அல்லல் என்று - மிகவுந் துன்பத்தைத் தருவதென்று, ஒருவர் பின் செல்லாது - ஒருவர் பின் செல்லாமலும் ; இல்லை என்னும் உரை பேசிடாது - இரப்போர்களுக்கு இல்லை என்கிற சொல்லைச் சொல்லாமலும் ; உலகில் எவரும் - உலகிலுள்ள யாரும், ஆம் என மதிக்க - ஆமென்று மதிக்கும்படி, நெறியின் வைகி - நன்மார்க்கத்தில் தங்கி ; வளர் - விருத்தி யடைவதற் கேதுவாகிய, செல்வமும் உதவி - பாக்கியத்தையுங் கொடுத்து ; நோய்கள் அற்ற சுக வாழ்க்கையாய் - பிணிகளில்லாத சுக வாழ்க்கையை யுடையேமாகி ; நியமம் ஆதி நிலை நின்று - நியமம் முதலாகிய நிலைகளில் நின்று, ஞானநெறி - ஞானமார்க்கத்தை யடைந்து, நிஷ்டை கூடவும் - நிஷ்டை கூடிச் சுவானுபூதியைப் பெறவும், எந்நாளும் - எக்காலத்தும், அறிவில் நின்று - என்னறிவிடத்து நின்று, குரு ஆய் - குருமூர்த்தமாகி, உணர்த்தியதும் அன்றி - அறிவுறுத்தினது மல்லாமல், மௌன குருவாகி - மௌன குருவாகி, அகிலமீது வர - உலகின்மேல் வரும்படியாக, வந்த - இறங்கின, சீர் அருளை - சிறந்த உன் திருவருளின் தன்மையை, ஐய ஐய இனி என் சொல்கேன் - ஐயனே ! ஐயனே ! இனி யென்னென்று புகழ்ந்துரைக்கேன் ?, சிறியன் ஏழை - சிறியவனாகிய இந்த ஏழை, நமது அடிமை என்று - நமது தொண்ட

னென்று, உனது திருவுளத்தினில் இருந்ததோ - உன் திருவுள்ளத்திற் கிடந்ததோ?, தெரிவதற் கரிய—, என்க.

(வி - ரை) செல்வமானது எந்நாளும் நிலையுறுதலின்றி மாறிக் கொண்டே யிருத்தலின், 'எறிதி ரைக்கட னிகர்த்த செல்வம்' என்றனர். நீதிநெறிவிளக்கம்: "நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம், நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரி, லெழுத்தாகும் யாக்கை நமரங்காள்! என்னே, வழுத்தாத தெம்பிரான் மன்று." எனவும், நல்வழி: "ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம், மாறிடு மேறிடு மாநிலத்தீர் - சோறிடுந், தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக, வுண்ணீர்மை வீறு முயர்ந்து." எனவும் வருவன வற்றாற் காண்க. செல்வம் மிக்க துன்பத்தினைத் தருதற் கேதுவாகலின், 'செல்வமிக வல்லல்' என்றார். சிந்தாமணி: "பெருத்திடு செல்வம் வந்துள்ள போதுகண், ணுருத்தெரி யாமலே யொளி மழுங்கிடும், மருத்துள தோவெனில் வாகடத்திலே, தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமால்." என்றதனாற் காண்க. தனக் கியன்றளவு ஏற்பார்க் கீந்து வருதலே சிறப்பாகலின், 'இல்லை யென்னுமுரை பேசிடாது' என்றனர். நாலடியார்: "இம்மி யரிசித் துணையானும் வைகலும், நும்மி லியைவ கொடுத்துண்மின் - உம்மை, கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்து அடாஅ வடுப்பி னவர்." எனவும், நைடதம்: "உரவுநீர்க் கருங்கட லுடுத்த மாநிலத், தருளுடனிம்மையி னளித்த வான்பொருள், மருவிய மறுமையில் வழங்கு பான்மையால், இரவலர் தமரினு மினிய ராவரே." எனவும், ஔவை: "இயல்வது கரவேல்." "தானமது விரும்பு." எனவும் வருவனவற்றாற் காண்க. மக்களாய்ப் பிறக்கின் புகழுக் கேதுவாகிய குணத்துடன் பிறக்க வேண்டுமாகலின், 'உலகி லெவரு மாமென மதிக்கவே' என்றனர். திருக்குறள்: "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று." எனவும், சூளாமணி: "ஒருவன திரண்டி யாக்கை யூன்பெய்து நரம்பு போர்த்த, உருவமும் புகழு மென்றாங் கவற்றினு ளூழின் வந்து, மருவிய யாக்கை யிங்கே மாய்ந்திடு மற்ற யாக்கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே." எனவும், பாரதம்: "தேடினு ரியாவ ரேகொ லெழுவகை யானுஞ் சீர்த்தி, நீடினு ரவரே யென்பர் நீணிலத் துயர்ந்த மாந்தர், பாடினு ரியாவர் யாவர் பாடுவித் தார்கொ லென்று, நாடினுர் தெளியும் வண்ண நவையற நவில லுற்றேன்." எனவும், விவேக சிந்தாமணி: "பூதலத்தின் மானிடராய்ப் பிறப்பதரி தெனப்புகல்வர் பிறந்தோர் தாமும், ஆதிமறை நூலின்முறை யருள்கீர்த்தி யெலாந்தங்க வன்பாய்ச் செய்து, நீதிவழு வாதவகை வழக்குரைத்து நல்லோரை நேயங் கொண்டு, காதவழி பேரில்லான் கழுதையெனப் பாரிலுள்ளோர் கருதுவாரே." எனவும் வருவனவற்றாற் காண்க. எல்லா நன்மையு முடையராயினும் பொருளில்லாரை யாவரு மிகழ்வாராகலின், 'நெறியின் வைகிவளர் செல்வ மும்முதவி' என்றனர். திருக்குறள்: "இல்லாரை யெல்லாரு

மெள்ளுவர் செல்வரை, யெல்லாருஞ் செய்வர் சிறப்பு." எனவும், நல்வழி "கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர் - இல்லானை, யில்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லா தவன்வாயிற் சொல்." எனவும், நீதிநெறிவிளக்கம்: "இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல், வன்சொல்லி னல்லது வாய்திறவா - என்சொலினும், கைத்துடையான் காற்கீழொதுங்குங் கடன் ஞாலம், பித்துடைய வல்ல பிற." எனவும், தனிப்பாடல்: "குணமிருந் தாலுங் குலமிருந் தாலுங் கொழுந்தமிழின், மணமிருந் தாலு மதியிருந் தாலும் வழுத்தி யவங், கனமிருந் தாலு மொருகாசு பெறுதுசிங் காரவரைப், பணமிருந் தாலவர்க் கெல்லாரு மஞ்சலி பண்ணுவரே." எனவும் வருவனவற்றாற் காண்க. சகல போகங்களும் குறைவற விருந்தும் பிணி மேலிட்டிருக்குமேல் உட னிலைபெறு தாகலினாலும், 'நோய்களற்ற சுகவாழ்க்கையாய்' என்றனர். "உடம்பா ரழியி லுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்." என்பனவற்றாற் காண்க.

செல்வ முதலியவற்றினை நிலையல்லன வென்றுணர்த்தி, மோட்சத்திற் கேதுவாகிய நியமாதிகளின் நிலையினின்று ஞானநிஷ்டை கூடும்படி அந்தர் முகத்தினுந் தெரிவித்துப், பகிர்முகத்தினும் வெளிவந்து ஆட்கொண்ட கருணையினை யென்சொல்லிப் புகழ்வேன்? இவன் சிறியன் அறிவிலி ஆயினும், நமது அடிமைதானே யென்று உன் திருவுள்த்திற் கிடந்ததோ என்பதாம். (7)

எவ்வு யிர்த்திரளு முலகி லென்னுயி
ரெனக்கு ழைந்துருகி நன்மையாம்
இதமு ரைப்ப,என தென்ற யாவையு
மெடுத்தெ றிந்துமத யானைபோல்
கவ்வை யற்றநடை பயில, அன்பரடி
கண்ட தேயருளின் வடிவமாக்,
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
கைகு வித்து,மலர் தூவியே,
பவ்வ வெண்டிரை கொடுத்த தண்டரளம்
விழியு திர்ப்ப,மொழி குளறியே,
பாடியாடியு ளுடைந்துடைந் தெழுது
பாவையொத் தசைத லின்றியே,
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
மின்ப வீட்டினி லிருப்பனோ?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) உலகில் - உலகத்தி லுள்ள, எவ்வுயிர்த்திரளும் - எவ்வகைப்பட்ட சீவராசிகளும், என் உயிர் என - என் உயிரென்று பாவித்து,

குழைந்து உருகு - (அவைகட்கு ஒரு விபத்து நேரிட்டால் அதைக் குறித்து) மனங் குழைந்து உருகி, நன்மை ஆம் இதம் உரைப்ப - நன்மையாகிய இதங்களைச் சொல்லவும்; எனது என்ற யாவையும் - எனதென்று சொல்லப்படுகிற எல்லாப் பொருள்களையும், மதயானைபோல் எடுத்து எறிந்து - மதயானை யெடுத்தெறிவதுபோல எடுத்தெறிந்து, கவ்வை அற்ற நடை பயில - துன்பமறுகைக்குக் காரணமான நன்னடையைப் பயிலவும், அன்பர் அடி கண்டதே அருளின் வடிவம் ஆ - அன்பரது திருவடியைக் கண்டதே திருவருளைக் கண்டதாகப் பாவித்து; கண்ட யாவையும்-பார்த்த எல்லாப் பொருள்களையும், அகண்டம் என்ன - அகண்டரூபமென்று நிச்சயித்து, இரு கை குவித்து - இரு கரங்கூப்பி, மலர் தூவி - மலர்களைச் சிந்தி, பவ்வம் - கடலினது, வெள் திரை - வெள்ளிய அலைகளால், கொடுத்த - எடுத்தெறியப்பட்ட, தண்தரளம் - குளிர்ந்த முத்துப்போன்ற நீர்த்துளிகளை, விழி உதிர்ப்ப - கண்கள் உதிர்க்கவும், மொழி குளறி - வார்த்தை தடுமாறி, பாடி ஆடி - பாடியும் ஆடியும், உள் உடைந்து உடைந்து - மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து, எழுது பாவை ஒத்து - எழுதிய சித்திரப்பிரதிமையை யொத்து, அசைதல் இன்றி - அசைவில்லாமல், திவ்யம் - தெய்விகமான, அன்பு உருவம் ஆகி - அன்புருவாகி, அன்பரொடும் - உன் அன்பர்களுடன், இன்ப வீட்டில் இருப்பனோ - ஆநந்த ஏதுவான மோட்சத்தி லிருக்கப்பெறுவேனோ?, தெரிவதற்கரிய—, என்க.

(வி - ரை) 'எவ்வுயிர்த்திரளும் என்னுயிர்' என்றதனால், ஜீவ காருண்ணியமும்; 'அன்பர் அடிகண்டதே அருளின் வடிவமா' என்றதனால், ஈச்சுவர பக்தியும்; 'எனது என்ற யாவையும் மதயானைபோ லெடுத்தெறிந்து' என்றதனால் பாச வைராக்கியமும்; 'அன்புருவமாகி இன்ப வீட்டினி லிருப்பனோ' என்றதனால், பிரமஞானமும் அதன்மேலும் கூறப்பட்டது.

முதல்வனை அகண்டமாகவே யெந்நாளும் பாவித்து மற்றைய வழிபாட்டினை யுறுதியாக விட்டொழிய வேண்டுமென்னும் ஏகான்மவாதிகளை மறுத்து, முதல்வனுக்குரிய இலக்கணங்களுள் அகண்டமு மொன்றுமெனவெண்ணிக் கண்டத்தும் அவன் வியாபக மிருத்தலை யாய்ந்தறிந்து கை குவித்தலும், ஆனந்தக்கண்ணீர் சிந்தலும், மலர்தூவி யருச்சித்தலும், ஆடுதலும், பாடுதலும், மனநெகிழ்தலும் வேண்டுமென்பார், 'அகண்ட மன்ன விரு..........உடைந்து' என்றனர். (8)

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யே,துரிய வடிவமாய்,
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே

பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மைய றந்தகில மாயையை
பாரு பாரென நடத்த வந்ததென் ?
பார தத்தினுமி துள்ளதோ ?
சுத்த நித்தவியல் பாகு மோ ? உனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை ; நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லை ; என்
சித்த மிப்படி மயங்கு மோ ? அருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ ?
தெரிவ தற்கரிய பிரம மே ! அமல
சிற்சு கோதய விலாசமே !

(இ - ள்) மத்தர் பேயரொடு பாலர் தன்மையது மருவி - மத்தர் பேயர் பாலர் இவர்களுடைய குணத்தினைப் பொருந்தி ; துரியவடிவம் ஆய் - துரியரூபமாகி : மன்னு - நிலைபெற்ற, தேசமொடு காலம் ஆதியை மறந்து - தேசகாலாதிகளை மறந்து, நின் அடியர் அடியிலே - உன்னடியார்களுடைய திருவடிகளில், பத்தி ஆய் - பத்தி யுள்ளவனாய் ; நெடிது நம்பும் என்னை - மிகுதியும் நம்புகின்ற என்னை, ஒரு மையல் தந்து - ஒப்பற்ற மயக்கத்தினைக் கொடுத்து, அகில மாயையை - உலக மாயையை, பாரு பார் என - பார் பார் என்று, நடத்த வந்தது என் - நடத்த வந்தது யாது?, இது பாரதத்திலும் உள்ளதோ - இது பாரதத்தினு முண்டோ ?, சுத்த நித்த இயல்பு ஆகுமோ - இது உனது சுத்த நித்த இயற்கையாமோ ?, உனது விசுவமாயை நடுவாக - உன் லோகமாயையின் இடையில், வகை சொல்லவேணும் - வழி சொல்லவேண்டும் ; நல்ல காதி கதை சொல்லும் - நன்மையாகிய காதிகதையில் சொல்லப்படுகிற, மாயையினும் - மாயையின் வைபவத்திலும், இல்லை - இவ்வா றில்லையே ; என் சித்தம் இப்படி மயங்குமோ ? - என் மனமானது இப்படி மயங்கலாமோ ?, அருளை நம்பினோர்கள் - உன் திருவருளை நம்பினவர்கள், பெறு பேறு இதோ - பெறுவதாகிய லாபம் இதுதானோ ?, தெரிவதற்கரிய—, என்க.

(வி - ரை) **மத்தராவார்** - எந்நாளு மொரு தன்மையாய் வைதாரை யும் வாழ்த்தினவரையும் பகுத்து நோக்காமல், தேக சௌக்கியங்களையு மிச்சியாம விருப்பவர். **பேயராவார்** - பேய்ப்பிடி யுண்டவன் தேகத்திலே யொருத்தர்பண்ணு மிதாகிதம் பிடித்த பேய்க்கேயாகத் தனக்குப் பாரமற நிற்பவன்போ லிருப்பவர். **பாலராவார்** - பசித்தநேரம் புசிப்பதன்றி 'இனி மேற் புசிப்புக்கு இதுவேண்டும்' என்று தேடாமலும், மாதா பிதாவிற்கு வந்த பேரிழவிற் சந்தோஷமுந் துக்கமுந் தனக்கில்லாமலும், பிரயோச னத்தை யிச்சியாம லொருதொழில் செய்வதும் ஆகிய பாலரை யொத்தவர்.

தைக ரூமத்தர் பேயரொடு பாலர் தன்மையது மருவியவர் சீவன்முத்தர். ஞான நிஷ்டையுடைய இவர்கட்குப் பண்ணவேண்டிய தொருநியம மில்லை யாகலின், 'தேசமொடு கால மாதியை மறந்து' என்றனர். சிவஞானசித்தி யார்: "ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு நன்மையொடு தீமை யில்லை நாடுவதொன்றில்லை, சீலமில்லை தவமில்லை விரதமொடாச் சிரமச், செயலில்லை தியானமில்லை சித்தமல மில்லை, கோலமில்லை புலனில்லை கரண மில்லை, குணமில்லை குறியில்லை குலமு மில்லைப், பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப் பாடலினோ டாடலிவை பயன்றிடினும் பயில்வர்." எனவும், "தர்மா தர்ம பல நோஸ்தி நதிஸ்து லௌகிகக்ரியா । ஸந்யஸேத் ஸர்வ கர்ம்மணி லோகாசாரம பேக்ஷத: ॥ ஸமயாசார நிஸ் பேக்ஷாந் க்ருதக்ருத்யாந்தநாநிச । ஸங்கல்பந்து விகல்பந்து யேசாந்யே குலதர்ம்மகா இதி ॥" எனவும் வருவனவற்றாற் காண்க.

காதி கதையாவது:—மாயா சாலத்தினைக் காட்டுதற் கேற்படுத்திய வொரு கற்பனைக் கதை. இக் கதையினை யாதாரமாகக் கொண்டு மாயை யினைப் பொய்யெனச் சாதிக்க முன்வருவர் ஏகான்மவாதியர். அங்ஙன மன்று; அனாதி நித்தியமாயுள்ள மாயையின் விகற்பத்தினைக் காட்டவே கட்டிய கதையாகும். அக்கதை வருமாறு:—

கோசலமென்னுந் தேசத்தில் காதியென்னும் பெயரையுடைய பிராமணனொருவன், ஒரு காரியத்தினை மனதி னினைத்து உறவினரை விட்டு ஒரு வனத்திற் புகுந்து, ஒரு தடாக சலமத்தியில் பொருந்திக், கண்ட மட்டு முழுக நின்று தவத்தைச் செய்து, எட்டுமாதஞ் சென்றகாலத்தில், விண்டு அக் காதியின் முன்வந்து "உன்கருத்தென்ன?" என்றனர். காதி கைதொழுது போற்றி, "மாயையின் சொரூபத்தினைக் காணும்படி யருள வேண்டும்" என்றனன். "அங்ஙனமே காணக்கடவாய்!" என்று விண்டு கூறி மறைந்தனர். உடனே காதி: வேதமந்திரங்களையும் தியானங்களையும் மறந்து தனது வீட்டில் தன்னை வியாதியினால் மரித்தவனாகப் பார்த்தான். பந்துக்க ளனைவரும் மொய்த்துக்கொண்டு கதறவும், மனைவி யலறவும், தாய் பதைபதைத்துத் தளர்ச்சி யடையவும் கண்டான். இச் சமயத்தில் தன்னை உறவினர் மயானத்தில் வைத்து அக்கினியை மூட்டச், சரீர மியாவுஞ் சாம்பலாகிவிடத் தெரிந்தான். பின்னும் அப் பிராமணன் ஊன தேசத்தின் நீசர் குலத்து ஒரு பெண்ணின் வயிற்றில் வெந்துபோன கரிக் கட்டையைப்போல் ஆண்மகனாய்ப் பிறந்து, அக் குலத்துப் பெண்ணை மணஞ் செய்து, மலைகளிலும் கானங்களிலும் உடலு முயிரும்போல வாழு நாளில், வமிசம் விளங்கச் சில பிள்ளைகளைப் பெற்றான். சிலநாளில் நரை மிக வுண்டாகவும், தழையாலொரு வீடுகட்டி யதில் வாழ்ந்து வரும்போது தன் பிள்ளைகட்கு மூப்பு வந்து பொருந்தியது. இங்ஙனம் தனக்கும், மனை விக்கும், புத்திரர்கட்கும் ஒருமித்து மூப்புவந்தடையப் பார்த்து வருத்தப் படுகின்ற காலத்துத் தன்னை நீங்கலாக எல்லாரையுங் காலன் கொல்ல, எப்

பொழுதும் வாய்விட்டழுது, தனிமையைச் சகிக்கமாட்டாமல் நிலை கெட்டு, ஓராசையு மில்லாதவனாய், அளவற்ற தேசங்களில் வெகுகாலந் திரிகின்றவன், ஒருநாள் கீரநாட்டின் பட்டினத்திற் புகுந்து விண்ணுலகத்தில் சொர்னமயமான வீதியைப்போ லிருக்கிற ஒரு தெருவிற் போகும் போதில், "இந்நகரத் தரசன் மரண மடைந்தனன், வேறொரு அரசனை எடுத்துக்கொண்டுவா!" என்று சொல்லி சிவந்த சொர்னங்களினாலும் நிறைந்த இரத்தினங்களாலும் அலங்காரஞ் செய்து அனுப்பிய பட்டத்து யானையானது 'அரசன் யார்?' என்று தேடிக்கொண்டு நேரே வரக், கறுத்த வுருவத்தோ டிருக்கிற இந்த நீசனை அந்த யானை பார்க்கவும், துதிக்கையினால் மத்தகத்தி லேற்றிக்கொண்டு போயிற்று. அப் பட்டத்து யானையால் கொண்டுவரப்பட்ட இவனை மாதர்கள் அலங்காரஞ் செய்தார்கள். பழகிய மந்திரிகளும் சேனாதிபதிகளும் இவனை அரசனாக முடிசூட்டிப் பணியைத் தலைமேல் கொண்டார்கள். இவனும் பூமிபாலனாய், நீதியை முறைமையிற் செலுத்தி, முறைமையினால் கவலனென்கிற நாமந் தரித்துக் கீரதேசத்தில் சிங்காதனத்தின்மேல் பொலிவாக வீற்றிருந்தான், எட்டுவருடங் கழியவே ஒரு தினத்திற் றனித்தவனாய், ஆபரணங்க ளனைத்தையு நீக்கித், தானே கானடையாக நடந்து வீட்டினது தெருப்புறத்தில் நீசவேடத்தோடும் உலாவுஞ் சமயத்தில் அவ்விடத்தில் சண்டாளர்கள் சிலர் வந்தார்கள். அவர்களுள் ஒரு முதியோன் வந்து இவனைப் பார்த்தவுடன் ஆசையோடும் தழுவிக் கடைஞனென்கிற பழைய நாமத்தினைச் சொல்லி, "அப் பழைய வுறவினனாகிய நீ இதுகாறு மெங்கே போனாய்? இப்பொழுதெங்கே யிருக்கிறாய்?" என்று இவன் வமிசத்தின் கிரமங்க ளனைத்தையும் விசாரித்தான். அந்த நீசனைக் கவலனென்னு மரசன் சிந்தித்துப், பெருஞ் சத்தத்துடன் அதட்டி, அவ்விடத்தினின்றும் சீக்கிரமாகவந் தந்தப்புரத்தினுக்குச் செல்லுதலும், இவைக ளனைத்தையும் இராசஸ்திரீகள் பலகணி வாசலினின்றும் பிரத்தியட்சமாகக் கேட்டு, அதிசயத்தினால் அவ்விடத்திருந்த மந்திரி முதலியவர்கட்கு அறிவிக்க, அவர்களும் 'இவன் பூர்வத்தில் சண்டாளன் போலும்' என்றாகித் தறிந்துகொண்டு மிகவும் மனவருத்த மடைந்தார்கள். அவைக ளனைத்தையும் அறியாதவனைப்போல மறைத்துக்கொண்டு முன்போலச் சிம்மாதனத்தி லிருக்கவும், அவ்விடத்திலுள்ள அவ் வரசனுக்கு முன் நெருக்கமாகிய மாதரும் அமைச்சரும் மற்றுமுள்ளவர்களும் பரிசிக்கக்கூடாத பிரேதத்தைப்போல் பார்க்காதவர்களாய் அவ்விடம் நீங்காம லிருந்தார்கள். தான் அந்தச் சனங்களுடன் கூடியிருந்தும் வேற்றுமையாகி அறிவு நிறைந்த வித்தையும் திரவியமும் ஏதுவு மில்லாமல் மறு தேயத்தில் பொருந்திய வழி நடப்பவனைப்போலு மிருந்தான். அத் தருணத்திற் சகலரும் "இவனுடைய சம்பந்தத்தால் நாமெல்லோரும் பதிதராயினோம்; கதியை யடையமாட்டோம்; பரிசுத்தமாகும்பொருட்டு அக் கினியிற் பிரவேசிப்போம்" என்று அப் பட்டினத்திலுள்ள சகலரும் குழந்

தைகள் முதலாக வார்த்திகர்கள் வரையில் ஒருமிக்கக் கூடி அக்கினியிற் பிர வேசித்தார்கள். அரசனாகிய சண்டாளன் மிகவுந் துன்பமுற்று, 'நமது தொடர்பா லல்லவோ இத்தனை பேரும் நாச மடைந்தார்கள்; நாமிருந் தென்ன?' என்று சிந்தித்து உயிரை விடும்படி நிச்சயித்து அக்கினியிற் பிர வேசிக்கும்போது, அனலில் தளிரைப்போல சிவந்த அக்கினியானது கடை ஞன் சரீரத்தி லெரிக்கச் சலத்தில் முழுகி யிருக்கிற காதியின் சரீரமானது பதைபதைத்து மகா மாயையினின்று நீங்கி, 'நான்கு கடிகையில் என்ன பார்த்தோம்? என்ன செய்தோம்?' என நினைந்து, தடாகத்திடை நின்றேறி ஆச்சரியமடைந்திருந்தான். (9)

பன்மு கச்சமய நெறிப டைத்தவரும் -
யாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் - வாத தர்க்கமிடு
படிற ருந் - தலை வணங்கிடத்,
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தருமனும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்ப,வட நீழ லூடுவளர்
சநக னாதிமுனி வோர்கடம்
சொன்ம யக்கமது தீர வங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே,
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகரசிர் பானுவாய்த்,
தென்மு கத்தின்முக மாயிருந்த கொனு
வெம்மு கத்தினும் வணங்குவேன்:
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே!

(இ - ள்) பல் முகம் - பல துறைகளையுடைய, சமயநெறி படைத்த வரும் - சமய மார்க்கங்களைப் படைத்தவர்களும்; யாங்களே கடவுள் என்றி டும் பாதகத்தவரும் - நாங்களே பிரமமென்கிற பாவிகளும்; வாத தர்க்கம் இடு படிறரும் - தர்க்க வாதம் பண்ணுகிற வஞ்சகரும்; தலை வணங்கிட - தலை வணங்கித் தொழவும், தன் முகத்தில் - தன்னிடத்தில், உயிர் - சீவ ராசிகளை, வர அழைக்கும் - வர அழைக்கின்ற, எமதருமனும் - யமதரும ராஜனும், பகடு மேய்க்கியாய் - எருமை மேய்ப்பவனாய், தனி இருப்ப - தனியே யிருக்கவும், வட நீழலூடு வளர் - கல்லாலி னிழலில் விருத்தி யடையா நிற்கிற, சநகனாதி முனிவோர்கள் - சநகாதி முனிவர்களுடைய, சொல் மயக்கமது தீர - வார்த்தையி லுண்டான மயக்கமது நீங்கும் வகை, அம் கை கொடு - அழகிய கைகளைக் கொண்டு, மோன ஞானம் உணர்த்தி - மோன நிலையாகிய ஞானத்தினை அறிவுறுத்தி, சுத்த நித்த அருள் - சுத்த நித்த அருளானது, இயல்பதாக உள - இயற்கையாக வுள்ள, சோம சேகர -

சோமசேகரன் என்கிற, கிர்பாளுவாய் - கருணாநிதியாகி, தென்முகத்தில் - தென்திசையில், முகமாயிருந்த கொலு - அபிமுகமாக விருந்த கொலுவினை, எம்முகத்திலும் வணங்குவேன் - எத்திசையிலுந் தொழுவேன் ; தெரிவதற் கரிய—, என்க.

(வி - ரை) பன்முகச் சமயநெறி படைத்தவர் - முக்கூற்றுப் புறச் சமயத்தவர். யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவர் - ஏகான்மவாதிக ளாகிய மாயாவாதிகள். வாத தர்க்கமிடு படிறர் - விதண்டா வாதிகள். முக் கூற்றுப் புறச்சமயத்தவர் ஒருவர் சென்ற நெறியே மற்றொருவர் செல்லாது தங்கள் தங்கள் சிற்றறிவிற் கெட்டியவாறு பற்பல நெறிகளை வகுத்துக் கொண்டு, ஒருவரை யொருவர் விரோதித்து உண்மை தேராது வாழ்கின்று ராகலின் அவரைப் 'பன்முகச் சமயநெறி படைத்தவர்' என்றனர். ஏகான்ம வாதிகள் அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாயுள்ள அனாதிமுத்தனாகிய பரமான்மாவையும் ஏகதேச வியாபகமுற்ற அனாதி பெத்தனாகிய ஆன்மா வையு மொன்றெனக் கூறுவாராகலினாலும், அங்ஙனங் கூறுதல் அதிபாதக மாதலினாலும் 'யாங்க ளேகடவுளென்றிடும் பாதகத்தவரும்' என்றனர். ஈண்டு 'தர்க்கர்' என்றது தார்க்கிகரை யன்று ; காரியத்தினை யொப்புக் கொண்டு அதன் நியதகாரணத்தினை யொப்புக்கொள்ளாமல் மறுக்கின்ற பொய்வாதிகளாய், இல்லையென்ற காரணுபாவத்தினை வியாப்பியமாகவும் உண்டென்ற காரியத்தினை அபாவமாக வைத்து அதனை வியாபகமாகவும் கொண்டு, "நெருப்பில்லையாயிற் புகையுமில்லை" என்று பொய் யனுபவத் துள் ஒன்றாகக் கூறிய தர்க்கத்தினை மேற்கொண்டார் தர்க்கராவர். ஒழிவி லொடுக்கம் : "மூலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர், சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் பலதாரை, வட்டிலிலே போலுமவர் மாயோக வாச கத்தைக், கிட்டி னரகங் கிடீர்." என்றதனாற் காண்க.

பல சமயிகள் பயனற்றவர்களா யொழிய, நமன் கண்ணெடுத்துப் பார்க்கவுங் கூடாதிருக்க, சனகாதி முனிவர்கட்குத் தேவரீர் 'தென்முக மாக வடநீழலின்கண் வீற்றிருந்து மோன ஞானத்தினைக் குறிப்பா யருளிய திருக்கோலத்தினை எக்காலத்தும் வணங்காநின்றேன் என்பதாம். (10)

# ஆகாரபுவனம்

# சிதம்பர ரகசியம்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆகார புவனமின்பா கார மாக
 வங்ஙனே யொருமொழியா லகண்டா கார
யோகாநு பூதிபெற்ற வன்ப ராவிக்
 குறுதுணையே! என்னளவு முகந்த நட்பே!
வாகாரும் படிக்கிசைகிண் கிணிவா யென்ன
 மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோல்
தேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
 திகழனந்தா னந்தமயத் தெய்வக் குன்றே!

(இ - ள்) ஆகாரம் - உருவமாத்திரமாய்க் காணப்படுகின்ற, புவனம் - உலகமானது, இன்ப ஆகாரமாக - சுக வடிவாக, அங்ஙனே - அவ்வாறே, ஒரு மொழியால் - ஒரு சொல்லினால், அகண்ட ஆகார யோகாநுபூதி பெற்ற - அகண்ட ரூபமான யோகானுபவம் பெற்ற, அன்பர் - அன்பரது, ஆவிக்கு - உயிருக்கு, உறு துணையே! - மிக்க துணையே!, என் அளவும் - என்னளவிலும், உகந்த - விருப்பம் வைத்த, நட்பே! - சிநேகமே!, வாகு ஆரும்படிக்கு - அழகு பொருந்தும்படிக்கு, இசை - ஒலிக்கின்ற, கிண்கிணி வாய் என்ன - கிண்கிணி வாய்போல, மலர்ந்த - விரிந்த, மலரிடை - மலரினிடத்தில், வாசம் வயங்கு மாபோல் - பரிமளம் வீசுதல்போல், தேகாதி உலகம் எங்கும் கலந்து - தனுமுதலாகிய உலகமெல்லாங் கலந்து, தானே திகழ் - தானேயாகி விளங்குகின்ற, அனந்தம் - முடிவற்ற, ஆனந்த மயம் - ஆனந்த ரூபமான, தெய்வக்குன்றே! - தெய்வத்தன்மையுள்ள மலையே!, என்க.

(வி - ரை) 'சிதம்பரம்' என்பது சர்வான்மாக்களுக்கும் பொதுவாய், சங்கார வழக்கறுக்கிற அம்பலமாய், களங்கமற்ற கனகமய ரூபமாய், சுத்த கேவலமாய், பூமிக்கு இருதய கமலமாய், யாவர்க்கும் புகலிடமாய், சாக்கிராதீதங் கழன்ற சுத்தமாய், பரஞானமாய், காணுந்தோறும் காணுந்தோறும் புதுமையா யிருப்பதாய், சத்திய ஞானரூபமாய், சுழுமுனைமார்க்கத்தி லெழுந்தருளி யிருக்கிற பிரகாசமான ஞானமாய், தன்னைத் தரிசித்தவர்களுக்கு ஞானானந்தத்தைத் தோற்றுவிக்கும் பொருளாய், பசு பாச ஞானநீக்கி யிருப்பதாய், சர்வத்திற்கு மிடங் கொடுப்பதாய், பதமுத்திகளைக் கைவிட்ட விடமாய், மாகா மாயைக்கு மேலாய் எப்பொழுது மெல்லா பாதத்திலும் விளங்கும் ஞானமாகிய சபையாய், சிவ சொரூபமாய், தத்துவாதீத சிவபிரான் அனவரதத் தாண்டவத்திற்கு அதிட்டானமா

யிருப்பது. கோயிற்புராணம்: "அத்தன் பாதத் துவனித்தாடத் தமரும் பொதுவின் பெயர்மன் றமலஞ், சத்தும் பரிரண் மயகோ சமகந் தனிபுண் டரிகங் குவைகண் ககனஞ், சுத்தம் பரமற் புதமெய்ப் பதமச் சுழுனு வழி ஞானசுகோ தயநற், சித்தம் பரமுத் திபரப் பிரமந் திகழுஞ் சபைசத் திசிவாலயமே." என்றதனுற் காண்க.

இச் சிதம்பரத்தினைச் சாமவேதிய சந்தோக்கியோபநிடதம் சத் என் றும், சபா என்றும்; கிருஷ்ணயசுர்வேதீய சுவேதாசுவதரோபநிடதம் பரம் என்றும், சத்தியம் என்றும்; வாசசநேய பிருகதாரணியோபநிடதம் மகத்து என்றும்; கைவல்யோபநிடதம் விவிக்தம் (தனி) என்றும், அற்புதம் என்றும்; சாந்தோக்கியோபநிடதம் புண்டரிகம் என்றும்; தைத்திரியோபநிடதம் குகை என்றும், ஞானனந்தம் என்றும், பரம வியோமம் என்றும், பரமாலயம் என்றும்; பிருகதாரண்ணியோபநிடதம் சுத்தம் என்றும்; தலவகாரோபநிடதம் சத்தியமாயதனம் (சத்தியாஸ் பதம்) என்றும் கூறும்.

சிகாமணிமாலையுடையார்: "இருதயகமலம் இரவிவிம்ப முதலிய எவ்வெவ்விடங்களில் சிவபெருமானைத் தியானிக்கினும் அவ்வவ்விடங்கள் அனைத்தினும் சோதிமயமாகிய கைலாசத்தை விபாவித்து அதன் மத்தியி லிருப்பவராகச் சிவபெருமானைத் தியானிக்க" என்று கூறியதுபோல, தானியாகு பெயரால் சிதம்பரம் எந்நாளும் நீக்கமின்றி விளங்கும் சேதன அசேதனங்களும் அவ்வப்பெயர் பெறுமாமென்பது தெளியப்படுகின்றது. இதுபற்றியே திருமூலநாயனுர்: "அம்பல மாவ தகில சராசர, மம்பல மாவது வாதிப் பிரானடி, யம்பல மாவது வப்புத்தீ மண்டல, மம்பல மாவது வஞ்செழுத் தாமே." என்றருளிச் செய்தார்.

"ஆகாச எவயஸ்யாயதநம், ஆகாச சரீரம் ப்ரம்ம" என்ற தைத்திரி யோபநிடதத்தானும், "க்ருத்யாகாச மயம்கோசமாநந்தம் பரமலயம்." என்ற மைத்ராயனுேபநிடதத்தானும், "யஸ்யஸாபரமா தேவீசந்திராகாச சம்ஞிதா." என்ற இரத்தினத்திரயத்தானும் சத்தி சொரூபமாகிய சரீரத்தி லடைக்கும் பிங்கலைக்கு நடுவிலுள்ள சுழுமுன நாடியும், பிரமாண்டத்தி லுள்ள இப் பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும் சிவன் ஆனந்த நிருத்தஞ் செய்யும் தானமா மென்றபடி விசாரித் துணர்தலே சிதம்பர இரகசியமாம்.

சித்தாந்த மகாவாக்கியத் தேர்ச்சியினுல் ஆகாரபுவன மனைத்தையும் சிவாகாரமாகக்கண்டு, கரணங்களைச் சிவார்ப்பிதஞ் செய்து வாழும் யோகியரிடத்து முதல்வன் நன்கு விளங்கிடுவனுகலின், 'ஆகாரபுவன மின்பா கார மாக வங்ஙனே யொருமொழியா லகண்ட கார, யோகானு பூதிபெற்ற வன்ப ராலிக் குறுதுணையே!' எனவும், அத்தகையோருக் குற்ற துணையா யிருப்பதன்றி அடியேனையு மொரு பொருட்டா மதித்து

என்னிடத்தும் அருள் வைத்தனையென்பார், 'என்னளவு முகந்த நட்பே!' எனவும், மலரினிடத்து வாசனை தாதான்மியமாக விருத்தல்போல, தனு கரண புவன போக மனைத்தினுங் கலந்துள்ளா யென்பார், 'மல ரிடை வாசம் வயங்கு மாபோல் தேகாதி யுலகமெங்குங் கலந்து' எனவுங் கூறினர். (1)

அனந்தபத வுயிர்கடொறு முயிராய், என்று
மானந்த நிலையாகி, அளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க், கீழ்மேல் காட்டாச்
சதசத்தாய், அருட்கோயிற் றழைத்த தேவே!
இனம்பிரிந்த மான்போனா னிடையா வண்ண
மின்பமுற வன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா கனமே! தண் ணருளிற் றானே
கனிபலித்த வானந்தக் கட்டிப் பேறே!

(இ - ள்) அனந்த பதம் - முடிவற்ற குறிகளையுடைய, உயிர்கள் தொறும் - உயிர்கள்தோறும், உயிராய் - உயிராகி; என்றும் ஆனந்த நிலை ஆகி - எக்காலத்தும் சுக நிலயமாகி ; அளவைக்கு எட்டா - காட்சி முதலிய பிரமாணங்கட்கு மெட்டாத, தன்னந் தனிமையான - மிகத் தனிமையான, சின்மாத்திரமாய் - சிற்சொரூப மாத்திரமாகி; கீழ் மேல் காட்டா - கீழெல்லை மேலெல்லைகளைக் காட்டாத, சதசத்தாய் - சத்தும் அசத்துமாகி; அருள் கோயில் - திருவருளாகிய கோயிலில், தழைத்த - செழித்த, தேவே! - தெய்வமே!, நான் - அடியேன், இனம் பிரிந்த மான்போல் இடையாவண்ணம் - தன் கூட்டத்தினை விட்டு நீங்கின மானைப்போல வருந்தாதவகை, இன்பம் உற - சுகவாழ்வை யடைய, அன்பர் பக்கல் - உன் தொண்டரிடத்து, இருத்திவைத்து - இருக்கச்செய்து, கனம் தரும் - சிறப்பைத் தருகின்ற, மா கனமே! - பெருஞ் சிறப்பமைந்த வஸ்துவே!, தண் அருளிற்றானே - குளிர்ச்சி பொருந்திய மாத்திற்றானே, கனிபலித்த - கனியாய்ப் பழுத்த, ஆனந்தக்கட்டி - இன்பமாகிய சர்க்கரைக் கட்டி யென்று சொல்லப்படுகிற, பேறே! - பரமலாபமே!, என்க.

(வி - ரை) ஒவ்வொரு யோனிவர்க்கங்கடோறு முண்டான ஆன்மாக்களை யளவுபடுத்தப்படாததுகொண்டே எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதத்தி லுண்டான ஆன்மாக்களையும் அளவுபடுத்தப்படாதபடி யாலும், அவதாரந்தோறும் திருவடியிலே கூடின ஆன்மாக்கள் மீளவும் சனனங்களில் வாராதிருக்கவும், பிரபஞ்ச காரியப்பட்டு வருகிற ஆன்மாக்கள் தொலையாதது கொண்டும், 'அனந்தபத வுயிர்கள்' எனவும்; ஆன்மாக்களுக்கெல்லாம் பிராணநாயகனாயிருத்தலின், 'உயிர்கடொறு முயிராய்' என்றும்; திருவுருவனைத்தும் ஆனந்தமே யாகலினாலும், அவனை யுற்று நோக்குவார்க்கும் ஆனந்தமே விளைதலினாலும், 'ஆனந்த நிலையாகி'

என்றும்; பசுசாத்திரங்களிற் படிக்கப்பட்டுப் பசுப்பிரமாணங்களாகிய புத்திப்பிரகாச லிங்கபராமரி சித்திவிருத்தி முதலாகிய பஞ்ச வவையவங்களினால் நிறைந்த பாசானுமானங்களினால் அறியப்படாதாதலின், 'அளவைக் கெட்டா' என்றும்; சுசாதி விசாதி சுகதபேதமற்று விளங்கலின், 'சின்மாத்திரமாய்' என்றும்; தான் சத்தாகவிருந்தும் அசத்தனைத்தினையும் அசைப்பித்தலின் 'சதசத்தாய்' எனவுங் கூறினர்.

அசத்தினை அபாவமெனக் கூறுவர் ஏகான்மவாதிகள். அற்றன்று, "அசத்தென்பது சத்துக்கு மறுதலை யன்மையால் பொதுவியல்புபற்றிய சத்தெனப்படுமாயினும், சிறப்பியல்புபற்றிய சத்தாதல் செல்லாமையிற் சிறப்பியல்பு நோக்கும்வழி யவை சத்தாதற் கிழுக்கின்று காரியப்பிரபஞ்சம் இத்தனைப்பொழுது நிற்குமென வறியவராது நிலைபெறுவதுபோலத் தோன்றி விரையக் கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அசத்தென் றெடுத்துக்கொள்ளப்பட்டது." என ஆசிரியர் சிவஞானயோகிகள் கூறியதனைக் காண்க. (2)

பேறனைத்து மணுவெனவே யுதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே! 'பேசா
வீறனைத்து மிந்நெறிக்கே' என்ன வென்னை
மேவென்ற வரத்தே! பாழ் வெய்ய மாயைக்
கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேட மாகிக்
குறைவறநின் றிடுநிறைவே! குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே!

(இ-ள்) பேறு அனைத்தும் - எல்லாப் பேறுகளையும், அணு என உதறித் தள்ள - அணுவாக உதறித் தள்ளும்படியாக, பேரின்பம் ஆக வந்த பெருக்கே! - பேரானந்தமாக வந்தருளிய வெள்ளமே!, பேசா வீறு அனைத்தும் - பேசாத (மௌன நிலையாகிய) பெருமை யெல்லாம், இ நெறிக்கே என்ன - இந்த நெறியின்பொருட்டே என்று, என்னை - அடியேனை நோக்கி, மேவு என்ற - இந்நெறியிற் பொருந்துவாய் என்று நியமித்த, வரத்தே! - அழிவற்ற ஊதியமே!, பாழ் - சூனியமாகிய, வெய்ய மாயைக் கூறு அனைத்தும் - கொடிதாகிய மாயாபாசங்களெல்லாவற்றையும், கடந்த - தாண்டிய, எல்லை - எல்லையாகிய, சேடம் ஆகி - சேஷமாகி, குறைவு அற நின்றிடும் - குறைவில்லாமல் நிலைபெற்றிருக்கிற, நிறைவே! - பரிபூரணமே!, குலவாநின்ற - விளங்காநின்ற, ஆறு அனைத்தும் - நதிகளெல்லாம், புகும் - புகுகின்ற, கடல்போல் - சமுத்திரம் போல, சமய கோடி அத்தனையும் - சமயகோடிகளெல்லாம், தொடர்ந்து புகும் - தொடர்ந்து புகுதற் கிடமாய, ஆதி நட்பே! - முதன்மையாகிய உறவே!, என்க.

(வி - ரை) மகத்தாகிய சிவானந்த வெள்ளத்தினை நோக்குழி உலகச் சிற்றின்ப மனைத்தும் அணுவாகத் தோன்றுதலினாலும், அவை பிரயோசன மற்றவைகளாகக் காணப்படுதலினாலும், 'பேறனைத்து மணு வெனவே யுதறித் தள்ளப் பேரின்பமாக வந்த பெருக்கே!' என்றனர். பேரின்பமாக வந்தபெருக்கே என்பதனை "ஆற்றின்ப வெள்ளமே" என்னும் திருவாசகத்தானு மறிக, 'பேசாவீறு' என்பது மோனநிலை. மாயையினை யீண்டுப் 'பாழ்' என்றது விளங்காமை பொருட்டு; 'சூனியம்' என்றது இக் கருத்தினைப்பற்றியே யென்க. கடலொன்றே நதிகளெல் லாம் புகுதற் கிடமா யிருத்தல்போல, சிவமொன்றே சமயகோடிக ளெல் லாம் அடைதற்குக் காரணமென் றாயிற்று. (3)

ஆதியந்த மெனுமெழுவா யீறற் றோங்கி,
அருமறையின் னமுங்காணா தரற்ற, நானா
பேதமதங் களுமலைய, மலைபோல் வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேயராகச்,
சாதகமோ னத்திலென்ன வடவா நீழல்
தண்ணருட்சந் திரமௌலி! தடக்கைக் கேற்ற
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
வெளியாக வந்தவொன்றே! விமல வாழ்வே!

(இ - ள்) ஆதி அந்தம் என்னும் - அடிமுடிகளென்று சொல்லப்படு கிற, எழுவாய் ஈறு அற்று ஓங்கி - உற்பத்தி நாசங்க ளில்லா துயர்ந்து; அரு மறை - அருமையாகிய வேதங்கள், இன்னமும் காணாது அரற்ற - இன்ன மும் காணப் பெறாமையால் அலறாநிற்க; நானா பேதம் மதங்களும் - பல வகைப்பட்ட வேறுபாடுள்ள மதங்களும், மலைய - ஒன்றினொன்று போர் செய்ய, மலைபோல்-(சலியாமையால்) மலையை நிகர்க்கின்ற, வாதப் பெற்றி யரும் - வாதிக்குந் தன்மை யுள்ளவரும், வாய்வாதப் பேயர் ஆக - வாக்கு வாதத்தை யுடைய பேயரா யொழிய; சாதகம் மோனத்தில் என்ன - முத்தி யடைவதற்குரிய பழக்கம் மௌனநிலையி லுண்டென்று எமக்கு வெளியிட்டருளும் பொருட்டு, வடவால் நிழல் - கல்லாலின் நீழலில் எழுந் தருளிய, தண் அருள் - தண்ணிய அருளையுடைய, சந்திரமௌலி! - சந்திர சேகரனே!, தடக்கைக்கு ஏற்க - விசாலமாகிய முத்திரைகளுக் கிணங்க, வேதக சின்மாத்திரமாய் - எமது தன்மையை வேறு படுக்கு மியல்பமைந்த சித்ரூபமாத்திரமேயாகி, எம் அன்னோர்க்கும் - எங்களை யொத்தவர்களுக் கும், வெளியாக வந்த - வெளிப்பட வந்த, ஒன்றே! - ஏக வஸ்துவே!, விமல வாழ்வே!, நிர்மல வாழ்வே!, என்க.

(வி - ரை) உற்பத்தி திதி நாசமின்றிக், கால தேச வஸ்துக்களி னாலே யபரிச்சின்னமாய் விளங்கலின், 'ஆதியந்த மெனுமெழுவா யீறற் றோங்கி' எனவும்; பதியினால் பாரம்பரியமாய் அதிஷ்டிக்கப்பட்டுத் தனத

வதி சர்வஞ்ஞ யிருக்கிற பசுவினுற் பண்ணப்பட்டபடியால், சிறிதிடத்து மதிஞானமென்றும் - பசுஞான மென்றும் - பதிப்ரமாண மென்றும் - பசுப் பிரமாண மென்றுஞ் சொல்லப்பட்டிருக்கினும், இயற்கையால் நாதரூப மாதலாலும், ஆன்மஞானத்தினை விளக்குதலால் ஞானமென் றுபசரித்தலா லும், பாசஞான மென்றும் பாசப்ரமாண மென்றும் சொல்லப்பட் டியல் பினு லான்ம சிற்சத்தியைப் பொருந்திப் பசு பாச பதார்த்தமாத்திரையே படித்தலினுல், 'அருமறையின் னழுங்காணு தாற்ற' எனவும்; உலகாய தன் முதலாகச் சொல்லப்பட்ட முக் கூற்றுப் புறச்சமயத்தவர்கள் வைதிக சைவ சித்தாந்த செந்நெறியினைத் தேராதவராகலின், 'நாஞ, பேதமதங் களுமலைய' எனவும்; யாவ ரேது நன்கு கூறினுந் தான் பிடித்த பிடி விடாது தருக்க வலியாற் ருமுற்றுஞ் சாதிப்பர் தர்க்க ராகலின், 'வாதப் பெற்றியரும் வாய்வாதப் பேயராக' எனவும்; "மோனமென்பது ஞான வரம்பு." என ஔவைப்பிராட்டியார் கூறியபடி ஞானமாகுஞ் சாத்தியத் தினை யடையச் சாதகமா யிருப்பது மௌனமாக விருத்தலின், 'சாதகமோ னத்திலென்ன' எனவும்! வடவிருட்சத்தின்கண் எழுந்தருளும் மதிமுடி வேணியனே தாங் காட்டியருளும் மௌனமுத்திரைக் கேற்ப மௌன தேசிகனுய் வெளிவந்தா ரென்பார், 'வடவா நீழல்......வந்தவொன்றே' எனவும் கூறினர். (4)

விமலமுதற் குணமாகி நூற்றெட் டாதி
வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க,
அமையுமிலக் கணவடிவாய், அதுவும் போதா
தப்பாலுக் கப்பாலாய், அருட்கண் ணுகிச்,
சமமுமுடன் கலப்புமவிழ் தலுமியாங் காணத்
தண்ணருடந் தெமைக் காக்குஞ் சாட்சிப் பேறே!
இமையளவு முபகார மல்லால் வேறென்
றியக்கநிர்க் குணக்கடலா யிருந்த வொன்றே!

(இ - ள்) வேதம் - வேதங்கள், நூற்றெட்டு ஆதி - நூற்றெட்டு முதலாக, எடுத்து எடுத்து உரைத்த - எடுத்தெடுத்துச் சொல்லிய, விருத் திக்கு எற்க - இலட்சண விரிவிற் கிணங்க, விமலம் முதல் குணம் ஆகி - நிர்மல முதலிய குணங்களை யுடையதாகி; அமையும் - அமைந்திருக்கின்ற, இலக்கண வடிவு ஆய் - இலட்சண சகிதமான ரூபமாகி, அதுவும் போதாது- அதுவும் பற்ருமல், அப்பாலுக்கு அப்பாலாய் - அப்புறத்திற்கும் அப்புற மாகி; அருள் கண்ணுகி— ; சமமும் - சமானமும், உடன் கலப்பும் - உடன் கூட்டமும், அவிழ்தலும் - பிரிவும், யாம் காண - நாங்கள் காணும்படி, தண் அருள் தந்து - தண்ணிய அருள் புரிந்து, எம்மை காக்கும் சாட்சி பேறே! - எங்களை இரட்சிக்கின்ற சாட்சிபூதமான லாபமே!, இமை அள வும் - இமைக்கு மளவாயினும், உபகாரம் அல்லால் - பிறர்க்கு இதஞ்செய்த

லன்றி, வேறு ஒன்று இயக்கா - வேறொன்றைச் செய்யாத, நிர்க்குண கடலாய் இருந்த ஒன்றே!-சமுத்திரமாயிருந்த ஒப்பற்ற பொருளே !, என்க.

(வி - ரை) 'நாற்றெட்டாதி வேதம்' என்பது உபநிடதங்களை. 'ஆதி' என்றதனால் நூற்றெட்டிற்கு மேலுஞ் சில உண்டெனக் கொள்க. இவை யனைத்தும் சிவபெருமானையே வாச்சியார்த்தமாகவும் லக்ஷியார்த்த மாகவும் கூறுதலின், 'வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க, அமையுமிலக் கணவடிவாய்' எனவும் ; அவ் உபநிடதங்களாலும் கண்டிப்பா கக் கூறொணாதாகி நிற்கின்றானாகலின், 'அப்பாலுக் கப்பாலாய்' எனவும் ; சித்தாகு மினத்தால் சமத்துவமாதலையும், அத்துவித அபேதக் கலப்பால் உடன் கலப்பாதலையும், ஆன்மா பரமான்மாவென்னும் பேதத் தன்மை யால் பிரிந்ததன்மைபோல் இருத்தலையும் காணும்படி செய்தா ரென்பார், 'சமமுமுடன் கலப்புமவிழ் தலுமியாங் காண' எனவும் ; ஆன்மாக்கள் மாட்டுச் செய்யுங் கிருத்திய மனைத்தும் உபகாரமே என்பார், 'இமையளா வும் உபகார மல்லால் வேறொன் றியக்காநிர்க் குணக்கடல்' எனவுங் கூறி னார். 'நிர்க்குணம்' எனவே பிரகிருதி வியக்தமான குணங்களை யுடையவ னல்லன் என்றபடியாம். அருட்குணமுடையவ னென்பதிற் றட்டில்லை. (5)

ஒன்றாகிப், பலவாகிப், பலவாக் கண்ட
    வொளியாகி, வெளியாகி, உருவுமாகி,
நன்றாகித், தீதாகி, மற்று மாகி,
    நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி,
இன்றாகி நாளையுமாய், மேலு மான
    எந்தையே! எம்மானே! என்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
    கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே !

(இ - ள்) ஒன்று ஆகி - ஒரு பொருளாகி ; பல ஆகி - பல பொருள்க ளாகி ; பலவா கண்ட - பலவாகக் காணப்பட்ட, ஒளி ஆகி - ஒளியுடைய பொருள்களாகி ; வெளி ஆகி - அவை இயங்குதற் கிடமாகிய ஆகாயமாகி ; உருவம் ஆகி - ரூபமுமாகி ; நன்று ஆகி - நன்மை ஆகி ; தீது ஆகி - தீமை யாகி ; மற்றும் ஆகி - வேறுள்ளவனுமாகி ; நாசமுடன் உற்பத்தி நண்ணாது ஆகி-இறப்பும் பிறப்பும் இல்லாததாகி; இன்று ஆகி நாளையும் ஆய்-இன்று ஆகி நாளையுமாகி, மேலும் ஆன-அதன்மேலுள்ள காலமுமான, எந்தையே!-எமது தந்தையே !, எம்மானே! - எம்பெருமானே !, என்று என்று-என்று பலகாற் சொல்லி, ஏங்கி - ஏக்கமுற்று, கன்று ஆகி கதறினர்க்கு - கன்றுபோலக் கதறினவர்களுக்கு, சேதா ஆகி - ஈன்றணிமை யுடைய பசுப்போன்று, கடிதினில் வந்து - விரைவில் வந்து, அருள் கூறும் - அருள் புரியாநின்ற, கருணை விண்ணே ! - கருணை வடிவாகிய ஆகாயமே !, என்க.

(வி - ரை) பதிக்குச் சமானமாக வேறொரு பதார்த்த மெங்கு மெக் காலத்து மில்லை ஆகலின், 'ஒன்றாகி' எனவும்; எண்ணிறந்த பசுக்களுடன் எங்கு மெக்காலத்தும் அத்துவிதமாக விரவி நிற்றலின், 'பலவாகி' எனவும்; தனக்கென நிறமில்லாத படிகமானது கூடினதி னிறமா யிருந்தாற் போலத் தனக்கெனச் சொரூப மில்லாத பரன் பரையினது சொரூபமாகி விளங்கலின், 'ஒளியாகி' எனவும்; நான்கு பூதங்களை வியாப்பியமாகக் கொண்டிருக்கும் ஆகாயம் போலப் பசு பாசங்களை வியாப்பியமாகக் கொண்டு விளங்கலின், 'வெளியாகி' எனவும்; இங்ஙனம் அருவமாக விளங்கினும் சத்தியினை யதிட்டித்துக்கொண்டு அருட்டிருமேனியாக வெளிப்படுத்தலின், 'உருவமாகி' எனவும்; பசுக்களின் கன்மத்திற்குத் தக்கபடி இருவினைகளையுங் கூட்டிவைத்தற்கு நிமித்தமா யிருத்தலின், 'நன்றாகித் தீதாகி' எனவும்; நித்தியமாய் வாழ்தலின், 'நாசமுடனுற்பத்தி நண்ணாதாகி' எனவும்; முப் பொருள்களையும் தன்வயப்படுத்தும் காலத்தினுக்கும் காரணனாயிருந்து காரியப்படுத்தலின், 'இன்றாகி நாளையுமாய்' எனவும்; சர்வான்ம கோடிகளையுந் தந்த பரைக்குப் பரனாயிருத்தலின், 'எந்தையே!' எனவும்; மனங் கசிந்து எங்குதல் முதலாயின செய்யார்க்கு அருள்கூர்தலிலன் என்பார், 'ஏங்கிக் கன்றாகிக் கதறினர்க்குச் சேதாவாகிக் கடிதினில்வந் தருள்கூரும்' எனவும் கூறினர். (6)

அருள்பழுத்த பழச்சுவையே! கரும்பே! தேனே!
ஆரமிர்தே! என்கண்ணே! அரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே! கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே! புனித வாழ்வே!
கருதரிய கருத்ததனுட் கருத்தாய், மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக், கருவி யாதி
விரிவினையுங் கூட்டியுயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே! யான்சொலும்விண் ணப்பங் கேளே!

(இ - ள்) அருள் பழுத்த பழச்சுவையே! - அருளுருவாகப் பழுத்த பழத்தின் சுவையே!, கரும்பே! - கரும்பின் இரசமே!, தேனே! - தேனே!, ஆர் அமிர்தே! - அரிய அமிர்தமே!, என் கண்ணே! - என் விழியே!, அரிய ஆன பொருள் அனைத்தும் - அரியனவாகிய பொருள்களெல்லாவற்றையும், தரும் பொருளே! - கொடுக்கிற வஸ்துவே!, கருணை நீங்கா - கிருபை நீங்காத, பூரணமாய் நின்ற ஒன்றே! - நிறைவாகி நின்ற வொப்பற்ற வஸ்துவே!, புனித வாழ்வே! - பரிசுத்தமான வாழ்க்கையே!, கருது அரிய - நினைத்த லரிதான, கருத்து அதனுள் - நினைப்பதனுள், கருத்தாய் - நினைப்பாகி, மேவி - பொருந்தி, காலமும் தேசமும் வகுத்து - காலதேயங்களையு முண்டாக்கி, கருவி ஆதி - கருவிகள் முதலான, விரி வினையும் கூட்டி - விரிவையுஞ் சேர்த்து, உயிர் திரளை ஆட்டும் - உயிர்த் தொகுதியை நடிப்பிக்கின்ற, விழு பொருளே! - மேலான பொருளே!,

யான் சொல்லும் - நான் சொல்லுகின்ற, விண்ணப்பம் கேள் - விண்ணப்பத்தினைக் கேட்டருளுவாய் !, என்க.

(வி - ரை) தாம் பிரத்தியட்சமாகக் கண்ட பொருள்களுள் இனிமையும் அருமையுமென எவ்வெவற்றினை மதித்தனரோ அவ்வப் பெயர்களால் முதல்வனை யழைக்க ஆசைகொண்டு பழச்சுவைமுதல் விழுப்பொருளீறாகக் கூறிப் புகழ்ந்தனர். ஆன்மாக்களின் கன்மத்திற் கீடாக அவரவர்க் கேற்ற போகத்தினை யூட்டுவித்து இயக்குவிப்பா னென்பார், 'கருவி யாதி விரி வினையுங் கூட்டி யுயிர்த்திரளை யாட்டும்' என்றனர். திருவெண்காடர் : " ஊட்டுவிப்பானு முறங்குவிப் பானுமிங் கொன்றோ டொன்றை, மூட்டுவிப்பானு முயங்குவிப் பானு முயன்றவினை, காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி, யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே. " என்றதனாற் காண்க. (7)

விண்ணவரிந் திரன்முதலோர், நார தாதி,
விளங்குசப்த ரிஷிகள்,கன வீணை வல்லோர்,
எண்ணரிய சித்தர்,மநு வாதி வேந்தர்
இருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

(இ - ள்) விண்ணவர் - தேவர்களாகிய, இந்திரன் முதலோர் - இந்திரன் முதலிய விசேஷ தேவர்கள் ; விளங்கு - விளங்காநின்ற, நாரதாதி - நாரதர் முதலானோர் ; சப்த ரிஷிகள் - இருடியர் எழுவர் ; கன வீணை வல்லோர் - பெரிய வீணை வல்லோராகிய தும்புரு முதலானோர் ; எண் அரிய - எண்ணுதற்கரிய, சித்தர் - சித்தர்கள் ; மநுவாதி வேந்தர் - மநு முதலிய அரசர்கள் ; இருக்காதி மறை முனிவர் - இருக்கு முதலிய வேதங்களை யோதி அவற்றின் பொருளை யுள்ளவா றுணர்ந்த முனிவர்கள், எல்லாம் - ஆகிய எல்லாரும், இந்த கண் அகல் ஞாலம் மதிக்க - இந்த இடம் அகன்ற உலகம் மதிக்கும்படியாக, உள்ளங்கையில் நெல்லிக் கனி போல - உள்ளங்கை நெல்லிப்பழம் போல, காட்சி ஆக - பிரத்தியட்சமாக, திண்ணிய - கலங்காத, நல் அறிவால் - சிறந்த ஞானத்தினைக்கொண்டு, இ சமயத் தன்றோ - இச்சமயத்தி லிருந்துகொண்டல்லவா, என்றும் - எக்காலத்தும், செப்பு அரிய - சொல்லுதற்கரிய, சித்தி முத்தி சேர்ந்தார் - சித்தி முத்திகளை யடைந்தார்கள், என்க.

(வி - ரை) அகஸ்தியர், தூர்வாசர், நந்திகேசுவரர், மகாகாளர், ததீசி, பாணினி, கந்தர், பிருங்கி, வீரபத்திரர், பிரம்மா, விண்டு, இந்திரன், பாணாசுரன், இராவணன், வசிஷ்டர். வால்மீகர், பாரத்வாஜர், கௌதமர், மற்

றுஞ் சிவகணத் தலைவர் முதலிய எண்ணிலர் பரமசைவர்களாய் வாழுத லின், 'விண்ணவரிந்திரன் முதலோர்........இச்சமயத் தன்றோ செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தார்' என்றனர். "ததாகஸ்த்யாதிமுநயோ துர்வாஸா நந்திகேஶ்வரஃ। மஹாகாளோஃததீசிஶ்ச பாணிநிஶ்ச கணாதயஃ। ஸ்கந்தோ ப்ருங்கிரிடிர் வீரபத்ரஶ்ச ப்ரமதாதயஃ। அஜோ ஹரிஸ்ஸஹஸ்ராக்ஷோ பாணு ஸூர்யதஶாநநௌ। வஸிஷ்டகுரு வால்மீகி பரத்வஜாஶ்சகௌதமஃ। ஏதே பரம ஶைவஶ்சபஜிந்த பராமுதா" எனவும், "ஶிவஸ்ய பூஜ்யதே லிங்கம் ஸர்வைர் தேவாஸுரைர்ந்ருபிஃ। ஶிவேந பூஜிதஃ கோவா வதந்து ப்ரதி வாதிநஃ॥" என வாமனபுராணத்தில் வருவனவற்றாற் காண்க.

சித்தியும் முத்தியும் சிவபெருமானாலேயே யடையத்தக்கதென்று வெளிப்படுதலின், 'சித்திமுத்தி சேர்ந்தார்' என்றனர். திருமந்திரம்: "சிவமான ஞானந் தெளியவொண் சித்தி, சிவமான ஞானந் தெளியவொண் முத்தி, சிவமான ஞானஞ் சிவபரத் தேயாகச், சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே." என்றதனாற் காண்க.

சப்தரிஷிகளாவார்: அத்திரி, ஆங்கீரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாஜன், வசிஷ்டன், விசுவாமித்திரன் என்பார். அன்றி: அகத்தியன், ஆங்கீரசன், கௌதமன், காசிபன், புலஸ்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்னு மிவர்களைக் கூறுதலு முண்டு. (8)

செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தம்
  தெய்வமே தெய்வமெனும்; செயற்கை யான
அப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
  லடுத்தவந்நூல் களும்விரித்தே யநுமா நாதி
ஒப்பவிரித் துரைப்பர்; இங்ஙன் பொய்மெய் யென்ன
  ஒன்றிலையொன் றெனபார்ப்ப தொவ்வா தார்க்கும்;
இப்பரிசாஞ் சமயமுமாய் அல்ல வாகி,
  யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.

(இ - ள்) செப்பு அரிய - சொல்லுதற்கரிய, சமயநெறி எல்லாம் - சமய மார்க்கங்க ளெல்லாம், தம் தம் தெய்வமே தெய்வம் என்னும் - தங்கள் தங்கள் தெய்வங்களையே தெய்வங்களென்று சாதியாநிற்கும்; செயற்கை ஆன - அந்தச் செய்கைக்குள்ளான, அ பரிசாளரும் - அந்தச் சமய நெறியினரும், அஃதே பிடித்து - அதையே பற்றி, ஆலிப்பால் - ஆரவாரத்தால், அடுத்த - தமக்கடுத்தனவாகிய, அ நூல்களும் விரித்து - அந்தச் சமயநூல்களை விரித்தும், அநுமானாதி ஒப்ப விரித்துரைப்பர் - அநுமான முதலிய பிரமாணங்களுக் கிணங்க விரித்துப் பேசுவார்கள்; இங்ஙன் - இப்படி, பொய் மெய் என்ன - ஒன்று பொய் ஒன்று மெய் என்றும், ஒன்று இல்லை ஒன்று (உண்டு) என - ஒன்று இல்லை ஒன்று உண்டு என்றும், பார்ப்பது - நோக்குவது, ஆர்க்கும் ஒவ்வாது - யார்க்கும் ஒத்திராது; இ பரிசு

ஆம் - இத்தன்மையாகிய, சமயமும் ஆய் - சமயங்களாகியும், அல்ல ஆகி - அவை யல்லாதனவாகியும், யாது சமயமும் - எந்தச் சமயமும், வணங்கும் - தொழும்படியான, இயல்பது ஆகி - இயற்கையுடையதாகி, என்க.

(வி - ரை) சமயமானது மனிதர்கள் அறிவு விளக்கம் பெற்று உறுதி யெய்தி இன்பவாழ்வு அடைதற்குச் சாதனமாயுள்ள தாகலின், 'செப்பரிய சமயநெறி' என்றனர். ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் தங்கள் சமயத் திலே பிரதிபாதிக்கப்படுகிற கடவுளையே முழுமுதற் கடவுளெனச் சாதித் தும், அதற்கேற்றபடி பற்பல நூல்களினை யெடுத்துக் காட்டியும் பேசி முன் னுக்குவர, அவர்கள் கொள்கையினைப் பொய்யென்றுவது மெய்யென்று வது காட்ட வாக்கு வல்லபத்தால் ஏலாதாகலின், 'தந்தம் தெய்வமே தெய்வ மெனும்........ஒவ்வா தார்க்கும்' என்றனர்.

தத்துவ ஞானசித்தி யுடையார் நிறுத்திய அகச்சமயங்கள், கலைஞான சித்தியுடையார் நிறுத்திய அகப்புறச் சமயங்கள், பிராகிருத விசேட புத்தி மான்கள் நிறுத்திய புறச்சமயங்கள், பிராகிருத சாமானிய புத்திமான்கள் நிறுத்திய புறபுறச் சமயங்கள் ஆகிய எல்லாம் முழுமுதற் கடவுள் நிறுத்திய அதீத சன்மார்க்க சைவ சமயத்தினுக்குச் சோபானமுமாய் வியாப்பியமு மாய் விளங்கலின், 'சமயமுமா யல்லவாகி யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.' என்றனர். (9)

இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டி,அன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்,
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி,
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க, மௌந மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராஜாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ !

(இ - ள்) என்றும் - எக்காலத்தும், இயல்பு திரியாமல் - தன் னியற்கை கெடாமல், இயமம் ஆதி - இயமம் முதலாகிய, எண் குணமும் காட்டி - எட்டுக் குணங்களையுங் காட்டி ; அன்பால் - அன்பினால், இன்பம் ஆகி - ஆனந்தமாகி ; பயன் அருள் - பயன் அளிக்க, பொருள்கள் - பொருள்களும், பரிவாரம் - பரிவாரங்களும், ஆகி - ஆகி ; பண்பு உறவும் - குணத்தைப் பொருந்தவும், சௌபாந பக்ஷம் காட்டி - சௌபாந பக்ஷத் தினைக் காட்டி ; மயல் அறு - மயக்கமறுகைக் கேதுவான, மந்திரம் - மந்திரமும், சிக்ஷை - சிட்சையும், சோதிடாதி - சோதிடமுதலாகிய, மற்று- வேறுயுள்ள, அங்க நூல் - உறுப்பு நூல்களும், வணங்க - தொழும்படி, மௌந மோலி - மௌந நிலையாகிய கிரீடத்தினை, அயர்வு அற - சோர்வற, சென்னியில் வைத்து - சிரசில் வைத்து, ராஜாங்கத்தில் - ராஜரீகத்தில்,

அமர்ந்தது - வீற்றிருந்தது, வைதிக சைவம் - வேதசம்பந்தமாகிய சைவ சமயம், அழகு இது - இது அழகானது, அந்தோ! - அன்றோ!, என்க.

(வி - ரை) தத்துவஞான சித்திபுடையார் முதலியோர் நிறுத்திய சமயங்களெல்லாம் ஒவ்வோர் வகுப்பினராயுள்ள அதிகாரிகளுக்கே உரியன வாய்க் காலந்தோறும் தன்மை வேறுபட்டு வருதல்போ லன்றி, முழுமுதற் கடவுள் நிறுத்திய அதீத சுத்தாத்துவித சித்தாந்த சைவசமயமாகிய செந் நெறி மற்றைச் சமயங்கள் சொல்லும் பொருள்களெல்லாம் தன்னிடத் தடக்கிக்கொண்டு எக்காலத்தும் வேறுபடாது விளங்கும் பூரண மார்க்க மாகலின், 'இயல்பென்றுந் திரியாமல்' என்றனர்.

சரியை, கிரியை, யோகமுதலிய ஞானநெறியாகிய சைவ சமயத்தினை யடைய ஏதுவாகி யிருத்தலின், 'இயம மாதி......பட்சங் காட்டி' என்றனர்.

'மந்திரம் சிக்ஷை சோதிடாதி' என்றது - மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் வேதங்களை. "அஷ்டா தஸாநாம் வித்யாநா மேதஸாம் பிந்த வர்த்மநாம் । ஆதிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாச் சூலபாணிர் மஹேஸ்வரஃ ॥" என்கிற வாக்கியத்தால் அஷ்டாதச வித்தைக்குங் கர்த்தா: சூலபாணியாகிய சிவபெருமானே யென்று பெறப்பட்ட வுண்மையால், 'நூல் வணங்க' என்றனர்.

சைவசமயமானது தான் பரம்பொருளெனக் கூறும் தெய்வத்திற்கு நால்வகை யோனி வாய்ப்பட்டுப் பிறந்து இறந்து செல்லுங் கர்மகதி கூறின தில்லை யாகலினாலும், பிற சமயங்களும் சாஸ்திரங்களும் சொல்லும் பொரு ளெல்லாம் தன்கண் அடங்கக்கொண்டு அவை சொல்லாத பல நுண் பொருள் சொல்லி மேம்படுதலினாலும், சமயங்களெல்லாம் சீவர்கள் கன்ம பேதத்திற் கேற்க முதற் கடவுள் நிறுத்தியன வென்பதாலும், யாதொரு தெய்வங் கொண்டு வழிபாடு செய்யினும் முதற்கடவுள் அவ்வத் தெய்வங்க ளிடமாக நின்று அவ் வழிபாடு கொண்டருளி அருள் வழங்கு மென்ப தாலும், முக்கூற்றப் புறச்சமயங்களையும் தனக்குச் சோபனமாகக் கொண்டு தான் தலைமை பெற்று விளங்குதலினாலும், 'அயர்வறச்சென் னியில்வைத்து ராஜாங்கத்தி லமர்ந்துவை திகசைவ மழகி தந்தோ!' என்றனர். (10)

அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும், பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு, மற்று மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்,
இதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை;
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

(இ - ள்) அந்தோ - அன்னே!, ஈது அதிசயம் - இது ஆச்சரியகரம், (ஆதலால்) இ சமயம்போல் இன்று - இந்தச் சமயம்போல் வேறொன்று மில்லை; அறிஞர் எல்லாம் - ஞானிகளெல்லாம், நடு அறிய - நடுவு நிலைமையி லிருந்து உணருமிடத்து, அணிமா ஆதி - அணிமா முதலியவைகள், வந்து-கைகூடி, ஆடி திரிபவர்க்கும் - விளையாடித் திரிபவர்க்கும்; பேசா மோனம் வைத்திருந்த - பேசாத மௌனநிலையினைத் தமக்குப் பற்றுக்கோடாக வைத் திருந்த, மாதவர்க்கும் - பெரிய தவத்தினை யுடையார்க்கும்; மற்றும் மற்றும்-மேலுமேலும், இந்த்ராதி போக நலம் பெற்றபேர்க்கும் - இந்திரன்முதலிய இறைவர்பத சுகங்களை யடைந்தவர்க்கும்; இது அன்றி - இதை யல்லது, தாய் அகம் - மாத்ருஸ்தானம், வேறு இல்லை இல்லை - மற்றொன்றுமில்லை யில்லை; சந்தான கற்பகம்போல் - சந்தான கற்பக விருட்சங்கள்போல, அருளைக் காட்ட - திருவருளைக் காட்டுதற்கு, தக்க நெறி - தகுதியாகிய மார்க்கம், இ நெறியே - இந்த மார்க்கமே; சன்மார்க்கம் - (இதுவே) சன் மார்க்கமென்று சொல்லப்படும், என்க.

(வி - ரை) பரம்பரையில் முத்திக்கு வாயிலாகும் சமயகோடிகள் போலன்றி, சாட்சாத்தாகவே முத்திக்குவாயிலாயுள்ளது முழுமுதற் கடவுள் நிறுத்திய அதிதவருள்மார்க்கம் சைவசமய மாகலின், 'அந்தோவீ ததிசயம்' என்றனர். யோகிகள், சித்தர்கள், தீட்சிதர்கள், வேதங்கள், உபநிடதங்கள், இதிகாசங்கள், சிவகணங்கள், பிரமன், விஷ்ணு, இந்திரன், உருத்திரர், இருடியர், சாம்பவர், பாசுபதர், மகாசைவர் முதலிய சர்வமான வர்களும் சிவபெருமானையே பூசித்தும், அர்ச்சித்தும், துதித்தும், தியா னித்தும், உபாசித்தும், பஞ்சாக்கரத்தினைச் செபித்தும் வருகிறார்க ளெனப் பெறப்படுகின்றமையின் 'அறிஞரெல்லாம்......இல்லை யில்லை' என்றனர். பஸ்மஜாபாலம்: "லிங்க ரூபிணம் மாம்ஸம் பூஜ்ய சிந்யாதி யோகீஸ்வஸித்தாஸ் ஸித்திம் கதாய ஜயந்தீயஜாநோ மாமே வஸ்து வந்தி வேதாஸ்ஸரம் காஸ்பர்வேப நிஷதஸ்ஸேதி ஹம்ஸாநஷத்தோங்ய தஹமே வஸ்வாம் மதஸர்வம் ப்ரதிஷ்டிதம் ததஃ காமயாம் ப்ரயதைமேஹ மங்வ ஹம் பூஜ்யஸ்த நாசிஸ்ஹிதஸ்தே ஸர்வே பஸ்மதிக் தாம்பா ருத்ராக்ஷா பரணஃ க்ருதாம் ஜலயோகித்ய மஹித்யாயஞ்சிச தத்ரபூர்வ ஸ்யந்தி ஸிப் ரஹ்ம க்ருதாம் ஜலரஹர்நிம ரூபாஸ்தேபம் தக்ஷிணயாந்திஸி விஷ்ணுஃ க்ருத்வைவ மூர்த்தம் ஜரிமுபாஸ்தே ப்ரதீச்யா மிந்த்ரஸ்ஸ பதாம்பக வாஸ்தே உதிச்யாமக்நி காயாமாமுபாஸ்தோ." என்று சொல்லிய பின்னர், "தக்ஷிணயாங்நி ஸிமுக்திஸ்தாநம் முக்திமம்பஸம்ஜ்ஜிதம் தத்ராநேககணாஃ பாலகாஸ்ஸாதுதாஃ பாபதா தகாஸ்தத்ர ருஷயஸ்ஸாம்பவாஃ பம்ஸ பதாமஹா ஸைவா வேதாவதம் ஸம்ஸைவம் பாசாக்ஷரம் ஜபம்தஸ்மாரகம் ஸப்ரஹவம் மோத மாஸ்திஷ்ட்டந்தி" எனக் கூறியதாற் காண்க.

சைவசமயமானது மனிதர்களுடைய இகபர சுகங்களுக்கு இன்றியமையாத சாதகங்களெல்லாவற்றினையும் அவர்களுக்குக் குறைவறக்கொடுக்கும் சர்வசத்தப் பிரமரூபமான ஒரு கற்பகத்தருபோல் விளங்கலின், 'சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத் தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்' என்றனர். (11)

சன்மார்க்க ஞானமதின் பொருளும், வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை;
பகர்வரிய தில்லைமன்றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
வெச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்;
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுட னானந்தங் காண்ட லாகும்.

(இ - ள்) சன்மார்க்க ஞானமதின் பொருளும் - சன்மார்க்கமென்கிற சைவசமய ஞானப்பொருளும், வீறு-தாம்தாமே மேலானவை யென்று இறுமாந்திருக்கிற, சமயம்-சமய நூல்களால், சங்கேதம்-நிர்ணயிக்கப்பட்ட, பொருளும் - அர்த்தமும், ஒன்று ஆக - ஒன்றுபட்டிருக்க, பன்மார்க்க நெறியினிலும் - பலசமய வழிகளிலும், கண்டது இல்லை - பார்த்ததில்லை; பகர்வு அரிய - சொல்லுதற்கரிய, தில்லை மன்றுள் - தில்லையம்பலத்தில், பார்த்தபோது - கண்டபோது, அங்கு - அவ்விடத்தில், என் மார்க்கம் இருக்குது - என்னவழி யிருக்கிறது?, எல்லாம் வெளியே என்ன - யாவும் வெளியே யென்று, எ சமயத்தவர்களும் - எந்தச் சமயத்தாரும், வந்து இறைஞ்சாநிற்பர் - வந்து வணங்கா நிற்பர்; கல்மார்க்க நெஞ்சம் உள்ள - கல்லின தியற்கையுள்ள மனத்தையுடைய, எனக்கும் - அடியேனுக்கும், கண்டவுடன் - பார்த்தவுடன், ஆனந்தம் காண்டல் ஆகும் - இன்பம் காணலாயிருக்கும், என்க.

(வி - ரை) சைவசமயமானது பல சமயங்களிலுங் கண்ட முடிவுகளைத் தனக் குடன்பாடாகக் கொண்டு அவ்வம் முதலுக்குப் பலனுளதெனவுங் கூறி, அவை யாவும் சோபான முறையில் தன்னுடைய முடிவினைப் பயப்பிக்கும் என நிச்சயித்தலால், 'சன்மார்க்க ஞானமதின்......கண்டதில்லை' என்றனர். சைவசமயமானது மற்றச் சமயங்களை விரோதியாது ஒருவன் அடையவேண்டிய நன்மை யனைத்தினுக்கும் ஏதுவாக விருக்குஞ் சிறப்பினை நோக்கிச் 'சன்மார்க்கம்' என்றனர். ஆதலின், சைவசமயமெனினும் சன்மார்க்கமெனினும் ஒக்கும்.

ஆத்திகருள் தாம் வழிபடும் தெய்வத்தினை உருவமாகவும், அருவமாகவும், அருவுருவமாகவும் கொண்டு வணங்கினும், முதல்வன் சொரூப விலக்கணம் அருவமென்பதில் யாவரு மொப்பினவராய் ஆத்திகர் யாரும் பேதம்

பாராட்டாது வந்து வணங்கத் தில்லைமன்றுள் சிதாகாயமாகிய வெறு வெளியா யிருத்தலினாலும், உருவங் கொள்வார்க்கு மகா நடராசப் பெருமானும், அருவுருவங் கொள்வார்க்குத் திருமூலத் தானமுடைய சிவலிங்கப் பெருமானும், அருவங் கொள்வார்க்கு ஞானகாயமாயும் காட்சி கொடுத்தலினாலும், 'பகர்வரிய தில்லைமன்றுள்......வந் திறைஞ்சா நிற்பர்' என்றனர். தில்லைமன்றுள் கண்டால் அறிஞர்க்கு ஆனந்த முண்டாதலேயன்றிக் கன்னெஞ்சர்க்கும் இன்ப முதிக்குமென்பார், 'கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே, கண்டவுட னானந்தங் காண்ட லாகும்.' என்றனர். திருவாசகம்: "வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னாதே, கன்னெஞ் சுருக்கிக் கருணையினா லாண்டுகொண்ட, வன்னந் திளைக்கு மணி தில்லை யம்பலவன், பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ." என்றதனாற் காண்க.

அன்றியுங் கர்ம பிர்மவாதியாய்க் கடவுளிடத்துச் சிறிது மெண்ணமின்றிக் கன்னெஞ்சராய்த் தீர்த்த யாத்திரையின் பொருட்டுத் தேச சஞ்சாரஞ் செய்துகொண்டு வந்த சைமினி முனிவர் தில்லை வழியாய் வருகையில், திடீலென அற்புத சின்மய பரம நாயக மூர்த்தியாம் நடராஜப் பெருமானைத் தரிசிக்க நேரிட்டமாத்திரத்துத் தனது கன்னெஞ்சங் கரைந்துருக, "அந்தோ! இறுகாறுந் தெய்வ மில்லையெனப் பிதற்றிக் கெட்டேனே; இதோ எனையாளுந் தெய்வ மிங்கிருக்கின்றதே" எனக் கூறி ஆனந்தித்துப், பரவசனாகி, வேதபாத ஸ்தவம் எனும் ஒரு அரிய நூலினை யியற்றி அதீத சன்மார்க்க சைவசமயங் கொண்டு வாழ்ந்த சரிதமும் பிரசித்தம். ()

காண்டல்பெறப் புறத்திலுள்ள படியே யுள்ளுங்
  காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவு ளே! நீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
  நிறைபரிபூ ரணவறிவாய், நித்த மாகி,
வேண்டுவிருப் பொடுவெறுப்புச், சமீபந் தூரம்,
  விலகலணு குதன்முதலாம் விவகா ரங்கள்,
பூண்டவளா வைகள்மனவாக் காதி யெல்லாம்
  பொருந்தாம லகம்புறமும் புணர்க்கை யாகி.

(இ - ள்) காண்டல் பெற - பிரத்தியட்சமாக, புறத்தின் உள்ள படியே - புறத்தி னுள்ளவண்ணமே, உள்ளும் - உள்ளிடத்துமாமென்று, மெய் - உண்மையாகிய, காட்சி நூல் சொல்லும் - அறிவு நூல் சொல்லாநிற்கும், பதி ஆம் - பதிப் பொருளாகிய, கடவுளே! - தெய்வமே!, நீ - நீ, நீண்ட நெடுமையும் - நீண்ட நீட்சியும், அகல குறுக்கும் - அகலக் குறுக்கங்களும், காட்டா - காட்டாத, நிறை பரி பூரண அறிவாய்-நிறைந்த பரிபூரண ஞானமாகி; நித்தம் ஆகி - சாசுவதமாகி; வேண்டு விருப்பொடு - விரும்புகின்ற விருப்பத்துடன், வெறுப்பு - வெறுப்பும், சமீபம் தூரம் - சமீப

னுரங்களும், விலகல் அணுகுதல் - நீங்குதல் சேர்தல்களும், முதல் ஆம் விவகாரங்கள் - முதலாகிய விவகாரங்களும், பூண்ட அளவைகள் - பொருந்திய பிரமாணங்கள், மனவாக்காதி யெல்லாம் - மனம் வாக்கு முதலாகிய யாவும், பொருந்தாமல் - அணுகப்பெறாமல், அகம் புறமும் புணர்க்கை ஆகி - உள்ளும் புறமும் பொருந்துவதாகி, என்க.

(வி - ரை) அண்டமும் பிண்டமும் ஆகிய இருவகையும் பதியினுடைய வியாபகத்தி லடங்கிக் கிடத்தலின் புறப்பொருள்களை அசைவிப்பது போல அகத்திலுற்ற தத்துவங்களையும் பதியே காரியப்படுத்தலின், 'காண்டல் பெறப் புறத்திலுள்ளபடியே யுள்ளும், காட்சி மெய்ந்நூல் சொலும்பதியாங் கடவுளே!' என்றனர். நெடுமை அகல முதலிய இலக்கணங்களும் விவகாரங்களும் கண்டப் பொருளுக்கேயன்றி அகண்டமாகிய சித்துக்குக் காலத்திரயத்து மில்லையாகலின், 'நெடுமையு மகலக் குறுக்கும்......பொருந்தாமல்' என்றனர். (12)

ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற
வமலமாய் நடுவாகி யனந்த சத்தி
யோகமுறு மானந்த மயம தாகி
உயிர்க்குயிரா யெந்நாளு மோங்கா நிற்ப
மோகவிருண் மாயைவினை யுயிர்கட் கெல்லா
மொய்த்ததென்கொ லுபகார முயற்சி யாகப்
பாகமிக வருளவொரு சத்தி வந்து
பதிந்ததென்கொ ணெனுமப் பான்மை யென்கொல்?

(இ - ள்) ஆகிய சற்காரிய ஊகத்துக்கு ஏற்ற - உண்டாகிய சத்கிருத்யத்துக்குரிய யுக்திக் கிணங்கின, அமலமாய் - மலவிமுக்தமாய்; நடு ஆகி - நடு நிலை யுள்ளதாகி; அனந்த சத்தி யோகம் உறும் - முடிவற்ற சக்திகளின் சேர்க்கையைப் பொருந்திய, ஆனந்தமயமதாகி - சுகரூபமாகி; உயிர்க்கு உயிராய் - உயிர்க்குயிராகி; எந்நாளும் - எக்காலத்தும், ஓங்காநிற்ப - உயரா நிற்க, மோக இருள் - அஞ்ஞான இருளும், மாயை - மாயையும், வினை - அதனால் நிகழ்விக்கப்படுகிற வினைகளும், உயிர்கட்கு எல்லாம் - எல்லா உயிர்களுக்கும், மொய்த்தது என் - வந்தடைந்ததற்குக் காரணம் யாது?, உபகாரம் முயற்சி ஆக - தன்னால் செய்யப்படும் உபகாரமே உயிர்களின் பிரயத்தனமாக, பாகம் - பரிபக்குவத்தை, மிக அருள - மிகவும் அளித்தற் பொருட்டு, ஒரு சத்தி வந்து பதிந்தது என் - ஒரு சத்தி வந்து பதிந்ததற்குக் காரணம் யாது?, நான் என்னும் அ பான்மை என் - நான் என்று சொல்லுகின்ற அந்தத் தன்மை யுண்டானதற்குக் காரணம் யாது?, என்க.

(வி - ரை) காரணம்போல் காரியமும் நித்தியமே யாகலான், 'சற்காரியம் என்றனர். ஆகலினாலன்றோ சைவம் சற்காரிய வாதமென அழைக்கப்பட்டது. முதல்வன் அமலமாதி இலக்கணங்களை வாய்ந்து ஆன்மாக்க

ளுடன் அத்துவிதப்பட்டு உயிருக்குயிராய் அநாதிதொட்டிருக்க ஆன்மாக்களிடத்தில் மும்மலம் வந்தடையவும், சத்தியொன்று புதிதாக வந்து பதியவும், அகங்கார முளைத்துத் தோன்றவும் ஏது என்னை யென்பார், 'அமலமாய் நடுவாகி......மொய்த்ததென்கொல்' என்றனர். இதனால் பதி பசு பாச மூன்றும் அநாதி நித்திய மென்றும், ஆகந்துகமாக யாதொன்றும் வந்ததில்லை யென்றும், திரோதான சத்தியானது அருட்சத்தியாக வெளிப்பட்ட அவசரமே சத்தி பதித லென்றும், கன்மத்திற்குத் தக்கபடி அகங்கார முளைக்கு மென்றுங் கூறியபடியாம். சிவபோகசாரம்: "அன்றே யநாதி யமைந்தபடி யல்லாதொன், றின்றே புதிதா யிசையுமோ - என்றுஞ், சலியா தியற்றுவான் றன்னையே நோக்கி, மெலியா திருந்து விடு." என்பதனாற் காண்க.

ஞானசாத்திரங்கள் பதினான்கி லொன்றாகிய இருபாவிருபஃதில் வினவெழுப்பி விடை யிறுக்காது குறிப்பாக சாத்திர வுண்மையினை விளக்கிய வாறு இச் செய்யுள் நின்றது. இதுபோன்ற செய்யுள் இனி பல ஆங்காங்கு வரும். (13)

நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானா வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்?
ஊனென்று முடலென்றுங் கரண மென்றும்
முள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற
வானென்றுங் காலென்றுந் தீநீ ரென்று
மண்ணென்று மலையென்றும் வனம தென்றும்.

(இ - ள்) நான் என்னும் ஓர் அகந்தை - நானென்கிற ஒரு அகம்பாவமானது, எவர்க்கும் வந்து - யாவரிடத்து முண்டாகி, நலிந்தவுடன் - அவர்களை வருத்தினவுடன், சகமாயை - உலக மாயையானது, நானா ஆகி - பலவகையாகி, வந்து தொடரும் - வந்து பற்றும்; இத்தால் வளரும் - இதனால் விருத்தியடைகின்ற, துன்ப சாகரத்தின் பெருமை - துக்க சாகரத்தின் பெருமையை, சாற்ற வல்லார் எவர்? - எடுத்துச்சொல்ல வல்லவர் யாவர்?, ஊன் என்றும் - மாமிசமென்றும், உடல் என்றும் - அதனாற் செய்யப்பட்டதாகிய உடம்பென்றும், கரணம் என்றும் - அதற்குளிருக்கிற அந்தக்கரணங்க ளென்றும், உள் என்றும் புறம் என்றும் - அகமென்றும் புறமென்றும், ஒழியாநின்ற - ஒழியாதுநின்ற, வான் என்றும் - ஆகாயமென்றும், கால் என்றும் - காற்றென்றும், தீ நீர் என்றும் - அக்கினி சலங்களென்றும், மண் என்றும் - பிருதிவி யென்றும், மலை என்றும் - மலைக ளென்றும், வனமது என்றும் - காடென்றும், என்க.

(வி - ரை) அகங்காரமானது ஆன்மாக்களிடத்துக் கிரியா ரூபமாகப் பாகிய விஷயங்களைக் கிரகிப்பதா யிருந்துகொண்டு பலகோடி துன்பங்கட் கேதுவாக விருத்தலின், 'நானென்னு மோரகந்தை......பெருமையெவர் சாற்ற வல்லார்?' என்றனர். அதாவது, புத்தி தத்துவத்திலேநின்றும் மனதிற்கு மூலமான அகங்காரந் தோன்றி, யான் எனதென்றவற்றிற்கு மூலமாய்ப் பிரதிபுருட நியதமாய், குல தன வித்யாதிகளினாலே எனக்குச் சமனாரென்றும், யானென்றும், என்னதென்றும் அபிமானத்தினைப் பண்ணிக்கொண்டு மோட்சபரியந்தம் ஆன்மாவினை நீங்காமல் நிற்பதுவுமாய்ச், சரீரத்துவ பிராணாதி வாயுக்களைச் சேஷ்டிப்பதுமா யிருக்கும். பௌஷ்கரம்: "அதௌர்த்வ மஹங்கார தத்வம் ஸம்க்ஷிப்ய வர்ண்யதே। ப்ரத்யாத்ம நிரதம் தச்சப்ரஸித்த மஹமாத் மகம்॥ தந: பூர்ஷமயஸ்தத்வம் ததஏவோபஜாயதஇதி" எனவும், மிருகேந்திரம்: "அத்வ்யக்தாந்தராத் புத்தேர்கர்வோ பூத்கரணம்தி: வ்யாபாரம்த்யஸ்ய சேஷ்டாந்தேஸரீர: பந்தவாயவ இதி॥" எனவும் வருவனவற்றாற் காண்க.

ஊன் முதல் வனமதீறாகவுள்ள பொருள்களைச் சவிகற்பமாகக் காண்டற்குங் காரணம் அகங்கார மென்பார், 'ஊனென்று...வனம தென்றும்' என்றனர்.

மலைமலையாங் காட்சிகண்கா ணாமை யாதி
மறப்பென்று நினைப்பென்று மாயா வாரி
அலையலையா யடிக்குமின்பத் துன்ப மென்று
மவைவிளைக்கும் வினைகளென்று மதனைத் தீர்க்கத்
தலைபலவாஞ் சமயமென்றுந் தெய்வ மென்றுஞ்
சாதகரென் றும்மவர்க்குச் சாக்ஷி யாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்க மென்றுங்
கடலுறுநுண் மணலெண்ணிக் காணும் போதும்.

(இ - ள்) மலை மலை ஆம் காட்சி - மலை மலையாகக் காணப்படுங் காட்சியும், கண் காணாமை ஆதி - கட்புலனாகாமை முதலாகிய, மறப்பு என்றும் - மறதியென்றும், நினைப்பு என்றும் - நினைவு என்றும், மாயா வாரி - மாயைக்கடலுள், அலை அலை ஆய் அடிக்கும் - அலையலையாய் மோதுகின்ற, இன்பம் துன்பம் என்றும் - சுக துக்கங்களென்றும், அவை விளைக்கும் - அவற்றை யுண்டாக்குகின்ற, வினைகள் என்றும் - கர்மங்களென்றும், அவற்றை தீர்க்க - அவற்றை நீக்க, தலைபல ஆம் சமயம் என்றும் - பல காரணங்களா லுண்டாகிய சமயங்கள் என்றும், தெய்வம் என்றும் - அவைகட் கேற்ற தெய்வங்க ளென்றும், சாதகர் என்றும் - அப்பியாசிகளென்றும், அதற்கு சாட்சியாக - அந்த அப்பியாசத்திற்குச் சாட்சிபூதமாக, பலகலை ஆம் நெறி என்றும் - பல நூல்களா லுரைக்கப்பட்ட மார்க்கங்கள் என்றும், தர்க்கம் என்றும் - நியாயசாஸ்திர மென்றும், கடல் உறும் -

கடலில் பொருந்திய, நுண் மணல் - நுண்ணிய மணலை, எண்ணிக் காணும் போதும் - எண்ணிப்பார்த்து அளவு காணுமிடத்தும், என்க.

(வி - ரை) மேற்சொன்ன அகங்காரமானது தூலப்பொருள்கள் இலக்காவதற்குக் காரணமின்றிச் சூக்குமமான காரியம் விளைவதற்குங் காரணமென்பார், 'மறப்பென்றும் நினைப்பென்றும்' எனவும்; இவை இரண்டுங் காரணமாக மாயையின் வயப்பட்டுச் சுகதுக்கம் விளையும் என்பார், 'மாயா காரிஅலையலையா யடிக்கு மின்பத் துன்ப மென்றும்' எனவும்; இவை காரணமாக ஆகாதபடி தடுத்துக்கொள்ளும் பொருட்டுப் பல அறிவினர் தங்கள் தங்கள் புத்திக்குத் தகுந்தபடி சமயங்கள் பல வகுத்துக்கொண்டன ரென்பார், 'தலைபலவாஞ் சமயமென்றும்' எனவும்; அவரவர்கள் வகுத்துக்கொண்ட சமயங்கட்கு அவரவர் கன்மத்திற் கேற்ற வாறு ஏற்படுத்திக் கொண்ட தேவர்கள் பல ரென்பார், 'தெய்வமென்றும்' எனவும்; அவ்வத் தெய்வங்களை வழிபடற்கு அவரவர்கள் சமயங்களிற் குறித்த உபாயங்களிற் பழகி வருபவர் பல ரென்பார், 'சாதகரென்றும்' எனவும்; அவ் உபாயங்களைச் சாதிப்பதற்குப் பலவகையாக நூல்க ளேற் பட்டுள்ளன வென்பார், 'கலைபலவா நெறியென்றும் தர்க்க மென்றும்' எனவும்; இவைபோல்வன எண்ணில வென்பார், 'கடலுறு நுண்மணல்' எனவுங் கூறினார். (16)

காணரிய வல்லலெல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட
ஊணுறக்க மின்பதுன்பம் பேரூ ராதி
யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
கோணறவோர் 'மான்காட்டி மானை யீர்க்குங்
கொள்கையென' அருண்மௌன குருவாய் வந்து.

(இ - ள்) காண் அரிய - அளவு காண்டற்கரியவான, அல்லல்எல்லாம் - துன்பங்கள் எல்லாம், கட்டு கட்டு ஆக விளையும் - கூட்டங் கூட்டமாக உளவாகும்; அதை - அவ் விளைவை, கட்டோடே - கட்டோடே, வீணினில் - பயனிலதாக, கர்ப்பூர மலை - கர்ப்பூர மலையானது, படு தீ பட்ட விந்தை என காண - மிகுந்த தீப்பட் டழிந்த ஆச்சரியம்போலத் தோன்றும்படி, ஒரு விவேகம் காட்ட - ஒரு ஞானத்தினை எனக் கறிவுறுத்தற்காக, ஊண் உறக்கம் - ஆகாரம் நித்திரைகளும், இன்ப துன்பம் - சுக துக்கங்களும், பேர் ஊர் ஆதி - பெயர் கிராமாதிகளும், ஒவ்விடவும் - ஒவ்வாநிற்கவும், என்னைப்போல உருவம் காட்டி - என்னைப்போல மானுடச் சட்டை சாத்தி, கோண் அற - களங்கம் நீங்க, ஓர் மான் காட்டி - ஒரு மானைக் காட்டி, மானை ஈர்க்கும் கொள்கை என - மற்றொரு மானைப் பிடிப்பதுபோல,

அருள் - அருளையுடைய, மௌனகுருவாய் வந்து - மௌனகுருவாகி எழுந்தருளி, என்க.

(வி - ரை) இதுகாறுங் கூறிய வனைத்தும் வினையின் காரியமாகலின், பக்குவப்பட் டமைந்த அவ் வினையானது உடம்பிற் கமைத்த காலவரையறையிலே தொலையும், இடைப்பட்ட காலத்தில் வந்து பொருந்தும் வினைகளௌவாயின் ஆசாரிய னனுக்கிரகமாகிய அருளென்னும் நெருப்பினாலே வெந்துபோம் என்பார், 'கர்ப் பூரமலை படுதீப் பட்ட விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட' என்றனர். அதனால் சஞ்சிதம் நீங்காமல் ஞானம் வெளிப்படாது; வெளிப்படாதாகவே ஆகாயமியந் தீர்வதில்லை. 'தீப்பட்ட' என்றதனால் சஞ்சித அருளாலே நீங்கவேண்டு மென்றாயிற்று. திருவருட்பயன்: "என்றவினை யுடலோ டேகுமிடை யேறும்வினை தோன்றி லருளே சுடும்." என்றதனாற் காண்க.

பக்குவப்பட்ட சகலரை யநுக்கிரகிக்கும் பொருட்டு ஊண் முதலிய வொன்றும் தனக்கென இல்லாத முதல்வனே ஊண்முதலிய கொண்டு திருமேனி வாய்ந்து வருவானாகலின், 'ஊணுறக்க மின்பதுன்பம் பேரூராதி யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டி' என்றனர். போற்றிப்றொடை: "ஒன்று முருத்தோன்றும லுள்ளடக்கி - யென்று, மிறவாத பத் தெமை யிருத்த வேண்டிப், பிறவா முதல்வன் பிறந்து - றவ தாருலாவும் புயத்துச் சம்பந்த நாதனென்று, பேரிலா நாதனொரு புனைந்து - பாரோர்த, மூண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக் கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி." என்றதனாற் காண்க.

அங்ஙனந் திருமேனி கொண்டு வந்தானாகையில் பார்வையிட்டு மற்றொன்று பிடிக்குமாறுபோலச் செய்வனென்பார், 'மான்காட்டி மானையீர்க்குங் கொள்கையென' என்றார். சிவப்பிரகாசம்: "நாதன் தீவகமாமென உருவாய் வந்து." என்றதனாற் கொள்க. 'மௌனகுருவாய் வந்து' என்றதனால், பாலி னெய்போல மறைந்துநின்ற முதல்வன் சுத்தான்மசைதன்னியமே தனக்குச் சொரூபமாகக் கொண்டு தயிரி னெய்போல விளங்கின னென்பதாயிற்று. (17)

வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே யத்துவா மார்க்க நோக்கி,
ஐந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை;
இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை;
'யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய' சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்.

(இ - ள்) வந்து - வந்து, என் உடல் பொருள் ஆவி மூன்றும் - என் உடம்பும் பொருளும் உயிரும் ஆகிய மூன்றும், தன் கைவசம் என - தன் கைவசமானவை யென்று அங்கீகரித்துக்கொண்டு; அத்துவா மார்க்கம் நோக்கி - அத்துவா மார்க்கத்தினைப் பார்த்து, ஐந்து புலன் - ஐந்து புலன்களும், ஐம்பூதம் - பஞ்சபூதங்களும், கரணம் ஆதி - அந்தக்கரணங்கள் முதலாக, அடுத்த குணம் அத்தனையும் - பொருந்திய குணங்கள் எல்லாம், அல்லை அல்லை - நீ யல்லையல்லை; இந்த உடல் - இந்த உடம்பும், அறிவு அறியாமையும் - அறிவறியாமைகளும், நீ அல்லை - நீ யல்லை; யாதொன்று பற்றின் - யாதொரு பொருளைக் கவரினும், அதன் இயல்பாய் நின்று - அதன் மயமாகி நின்றும், பந்தம் அறும் - அதன் தொடர்பு தனக்கில்லாத, பளிங்கு அனைய - படிகத்தினை யொத்த, சித்து நீ - சித்துப்பொருள் நீயாயிருக்கின்றனை; உன் பக்குவம் கண்டு - உன் பருவம் நோக்கி, அறிவிக்கும் பான்மையேம் - அறிவுறுத்தும் தன்மையினை யுடையேம், யாம் - நாமாக விருக்கிறோம், என்க.

(வி - ரை) ஒருவன் தனக்குச் சுதந்தரமாகக் கொண்டிருந்த தனது உடல் பொருள், ஆவி மூன்றினிடத்தும் பற்றின்றி நின்ற வமையத்தே அவற்றினை ஆசாரியன் தனதாகக் கொள்வ னென்பார், 'வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை, வசமெனவே' என்றனர். திருவாசகம்: "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ, வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே!, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே." என்றதனாற் காண்க.

உடல் பொரு ளாவி மூன்றினையும் தத்தம் பண்ணின மாணவனுக்கு ஆசாரியர் முதலில் அத்துவசுத்தி பண்ணுவது சாம்பிரதாய மாகலின், 'அத்துவா மார்க்க நோக்கி' என்றனர். அத்துவாக்களாவன - அத்த ரூபம் சத்த ரூபமாகிய மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என ஆறும். அத்துவ சுத்தியாவது - சடத்துவாவிலும் சஞ்சிதமாயிருந்த கன்மங்களை யெல்லாம் நசிப்பித்தல்; கன்மங்கள் நசிக்கவே மாயையும் நீங்கும்; ஆணவ மலத்தினுடைய தடையையு மொழிந்து நித்திய ஞானானந்த மயமான சிவம் ஆன்மாவினிடத்திலே யபிவியக்தி யாவதற்கு முன் இராசாதிகலுஷிதமா யிருக்கிற பசுஞானம் போக ஆன்மசுவரூப ஞானத்தினைப் பிரகாசிப்பித்து மேல் சனனங்கள் எடாதபடிக்குச் சுத்தம் பண்ணும். சுவாயம்பாகமம்: "பதிபும்ஸோர் விபுத்வே வித்ராவிஷ்டோத்வாத யோர்யயா। தமேதாச்யதே ஶ்ருணுப்ரம்ஹ நயநம் புருஷஸ்யச। தீக்ஷாகர்ம க்ரமேணோக்த மாயாபரிண தாயதஃ। ஸோத்பாபரிண திஸ்தஸ்மாதேஶாதி ஶயவர்திநீ॥ பும்பந்தா பாவமா பந்தாக்ரமஸஃ ப்ரத்யுரிச்சயா। ப்யுகஃ க்ரமேணு பநேயா ஸௌ ஶிவா ஸங்கம நம்ப்ரதி॥ அந்தரங்கதரா ஶோத்யா பஹிரங்கதரா

பிச । பஹிரங்கே பநீதேஸ்யா தந்தரம்க க்ரியாக்ரமம் । ஏவமத்வா ஙிவஸ் யோக்தம்பும்பந்தக்ரம யோகதஃ । லோகேசாத்வப்யவஸ்தேயம்த்ருஷ்டா சாத்வநிபந்தநே ॥ பந்தஸம்ஸார பீஜஸ்ய யாபும்ஸோ பஸ்சிமாஸ்திதிः । ஸரகதிஸ்த ஸ்யவிஜ்ஞேயாநந்தேஸாந்த ரசம் வி திரிதி ॥ " என்றதனாற் காண்க.

'புலன்' முதல் 'அறியாமை' ஈறாகச் சொல்லப்பட்ட யாவும் ஆன்மா அல்லவென்ன ஆசாரிய னறிவித்தன னென்பார், 'ஐந்துபுல னைம்பூதம் கரணமாதி யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை, இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை' என்றனர். சிவஞானசித்தியார்: "என்னுடல் பொறிபி ராணன் கரண மென் றுணர்வென் றக்காற், றன்னின்வே றாகு நீயென் றன்மனை யென்ற வெல்லா, நின்னின்வே றாகு மென்னி னீங்கிடா வினை யிங் கென்னி, னுன்னின வாகு நீயா மூன்மயி ருகவுங் காண்டி." என்றத னாற் காண்க.

'தன்னாற் சாரப்பட்ட பன்னிறங்களின் இயல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகம்போலே' தன்னாற் சாரப்பட்ட இந்திரி யங்களின் இயல்பையே சார்ந்ததன் வண்ணமாய்த் தன்மாட்டு விளங்கிநிற் கும் ஆன்மா வாகலின், 'யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று பந்த மறும் பளிங்கனைய சித்து' என்றனர். சிவஞானபோதம்: "பன்னிறமே காட்டும் படிகம்போ லிந்திரியம், தன்னிறமே காட்டுந் தகைநினைந்து— பன்னிறத்துப், பொய்புல வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான், மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு." என்றதனாற் காண்க.

ஆணவமலப் பரிபாகமான காலத்தில் தீவிரசத்திநிபாதம் பதிய ஆசாரியன் கருணையினாலே சிவஞானம் ஆன்மாவிடத்தில் பிரகாசிப்பச் செய்வ ராகலின், 'பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்' என்ற னர். சிவஞானசித்தியார்: "மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத, மேவுதலு ஞானம் விளைந் தோர்குருவி னருளாற், புக்கு." என்றதனாற் காண்க. (18)

அறிவாகி யானந்த மயமா யென்று
மழியாத நிலையாகி, யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவேவேண்டின்
நெறியாகக் கூறுவன்கே ளெந்த நாளு
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க!
செறிவான வறியாமை யெல்லா நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுக! பந்தந் தீர்க வென்றே.

(இ-ள்) அறிவாகி - சித்தாகி, ஆனந்த மயமாய் - ஆனந்தவடிவ மாகி, என்றும் அழியாத நிலையாகி - சத்தாகி, யாதின்பாலும் - எதனிடத்

தும், பிரியாமல் - நீங்காமல், தண் அருளே கோயில் ஆன - தண்ணிய அருளே கோயிலாகப் பெற்ற, பெரிய பரம் பதியதனை - பெரிய மேலான பதிப்பொருளை, பெற வேண்டின் - பெறுதலையே விரும்பினையாயின், நெறியாகக் கூறுவன் - முறையாகச் சொல்லுவன், கேள் - கேட்பாயாக !, எந்நாளும் - எக்காலத்தும், நிர்க்குணம் - நிர்க்குணப்பொருள், நிற்கு - உனக்கு, உள்ளம் வாய்த்து - மனத்திற் பொருந்தப்பெற்று, நீடு வாழ்க ! - நெடுங்காலம் வாழக்கடவை !, செறிவான - மிகுதியான, அறியாமை எல்லாம் நீங்க - அஞ்ஞான முற்று மொழிய, சிற்சுகம் பெற்றிடுக ! - ஞானானந்த சுகத்தினைப் பெறக்கடவை !, பந்தம் தீர்க, என்று - என்று சொல்லி, என்க.

(வி - ரை) ஆன்மாவும் அறிவு சொரூபமா யிருக்க ஈண்டு முதல்வனை 'அறிவாகி' என்றதனால் விசேட மென்னையோ வென்ன, ஆன்மா முதல்வனாலே யறிகிறதொழிந்து தானே யறியமாட்டாது; ஒருவர்க்கு அறிவிக்கவு மாட்டாது; முதல்வன் தானே அறிந்தும் பிறர்க்கு அறிவித்தும் நிற்பனெனக் காண்க. சித்தியார்: "அறிவித்தா லன்றி யறியா வுளங்கள்" எனவும், "சிவனே யெல்லா மறிந்தறிவித்து நிற்பன்" எனவும் வருவனவற்றாற் காண்க. முதல்வன் சுகசொரூபி யாதலின், 'ஆனந்த மயமாம்' எனவும்; நித்தியனாகலின், 'அழியாத நிலையாகி' எனவும்; யாவற்றினும் அத்துவிதமாய்க் கலந்திருத்தலின், 'யாதின் பாலும், பிரியாமல்' எனவும் கூறினர். ஈண்டு 'அருள்' என்றது சத்தியினை. அச் சத்தியினையே யிடமாகக் கொண்டிருத்தலின், 'தண்ணருளே கோயிலான பெரியபரம் பதி' என்றனர். சிவஞானசித்தியார்: "அருளது சத்தியாகு மரன்றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை" என்றதனாற் காண்க.

பகிர்முகத்தில் சகளத் தியானஞ் செய்வதுபோலவே அந்தர்முகத்திலும் நிட்களத் தியானஞ் செய்துவரல் கடமை என்பார், 'எந்நாளும், நிர்க்குணநிற்குளம் வாய்த்து' என்றனர். சிவஞானசித்தியார்: "அந்தரியாகந் தன்னை முத்திசா தனமா யறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகும்." என்றதனாற் காண்க. அங்ஙனம் அந்தரியாம பூசையான நிட்களத் தியானஞ் செய்துவரவே சிவம் பிரகாசித்து ஆணவமலம் நீங்கு மென்பார், 'அறியாமை யெல்லா நீங்கச் சிற் சுகம்பெற் றிடுக பந்தந் தீர்க வென்றே' என்றனர். சிவஞானசித்தியார்: "சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க, வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே, வரவரவந் திடுவன் பின் மலமான தறுமே." என்றதனாற் காண்க. (19)

பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளி, அந்தப் பண்புக் கேதான் :

சிந்தையில்லை ; நானென்னும் பான்மை யில்லை ;
தேசமில்லை ; காலமில்லை ; திக்கு மில்லை ;
தொந்தமில்லை ; நீக்கமில்லை ; பிறிது மில்லை ;
சொல்லுமில்லை ; இராப்பகலாந் தோற்ற மில்லை ;
அந்தமில்லை ; ஆதியில்லை ; நடுவு மில்லை ;
அகமுமில்லை ; புறமுமில்லை ; அனைத்து மில்லை.

(இ - ள்) பந்தம் அறும் - பந்தமறுகைக்குக் காரணமான, மெய்ஞ் ஞானமான - உண்மை யறிவாகிய, மோனப் பண்பு ஒன்றை அருளி - மோன நிலையாகிய ஒப்பற்ற பொருளை யருளிச்செய்து, அந்த பண்புக்கு - அந்த நிலைக்கு, சிந்தை இல்லை - மன மில்லை ; நான் என்னும் பான்மை இல்லை - நானென்னும் தன்மை யில்லை ; தேசம் இல்லை - தேசமென்பது இல்லை ; காலம் இல்லை - காலமென்பது இல்லை ; திக்கும் இல்லை - திசை யும் இல்லை ; தொந்தம் இல்லை - தொடர்பு இல்லை ; நீக்கம் இல்லை - பிரிவு இல்லை ; பிறிதும் இல்லை - இவைகட்கு அயலாந் தன்மையும் இல்லை ; சொல்லும் இல்லை - வாக்கும் இல்லை ; இரா பகல் ஆம் தோற்றம் இல்லை - இராப் பகல்களாகிய காட்சி இல்லை ; அந்தம் இல்லை - முடிவில்லை ; ஆதி இல்லை - முதல் இல்லை ; நடுவும் இல்லை - இடையும் இல்லை ; அகமும் இல்லை - உள்ளும் இல்லை ; புறமும் இல்லை - வெளியும் இல்லை ; அனைத் தும் இல்லை - எல்லாம் இல்லை, என்க.

(வி - ரை) மேற்சொன்ன ஆணவ நீக்கம் ஆனவுடன் ஆசாரியர் மௌன நிலையினைப் போதிக்க அந்நிலையினின்ற காட்சியிலே மாணவ கனுக்கு அன்னியமாக ஒன்றும் காணப்படா தென்பார், 'சிந்தை முதலாக அனைத்து மில்லை.' என்றனர். **கந்தரலங்காரம்** : "வரையற் றவுணர் சிர மற்று வாரிதி வற்றச்சென்ற, பரையற்ற வேலவன் போதித்தவா பஞ்ச பூதிகமற், றுரையற் றுணர்வற் றுளமற் றுயிரற் றுபாயமற்றுக், கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே." எனவும் ; **பட்டினத்துப் பிள்ளையார்** : "பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப், பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக், காதங் கரணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே, யேதங்க ளைந்திருப் பேனிறை வாகச்சி யேகம்பனே." எனவும் வருவனவற்றாற் காண்க. (20)

இல்லையில்லை யென்னினொன்று மில்லா தல்ல,
இயல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்,
சொல்லரிய தன்மையதா, யான்று னென்னத்
தோன்றுதெல் லாம்விழுங்குஞ் சொரூப மாகி,
அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னுகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே.

(இ - ள்) இல்லை இல்லை என்னின் - இல்லை இல்லை என்று சொன்னால், ஒன்றும் இல்லாதது அல்ல - ஒன்றும் இல்லாததல்ல, இயல்பு ஆகி - தன்மையாகி, என்றும் உள்ள இயற்கை ஆகி - எக்காலத்தும் உள்ள இயற்கையாகி, சொல் அரிய தன்மையதாய் - சொல்லுதற்கரிய குணத்தையுடையதாய், யான் தான் என்ன தோன்றாது - யான் தான் என்று காணப்படாமல், எல்லாம் விழுங்கும் சொரூபம் ஆகி - எல்லாவற்றையும் உட்கொள்ளுகின்ற பேருருவாகி, அல்லை உண்ட பகல் போல - இருளைக் கெடுக்கும் சூரியன்போல, அவித்தை எல்லாம் - அஞ்ஞானத்தினை எல்லாம், அடைய உண்டு - முழுதுங் கெடுத்து, தடை அற - தடைகளற்றுப் போக, உன் அறிவைத்தானே - உன் அறிவை, வெல்ல - வென்று, உண்டு - விழுங்கி, இங்கு - இவ்விடத்து, உன்னையும் - ஆன்மாவாகிய உன்னையும், தானாக கொண்டு - பரமான்மாவாகிய தனக்குச் சொந்தமாகக்கொண்டு, பேசாமை - மோன நிலையானது, வேதகமாய் விளங்கும் - உனது நிலையை வேறுபடுத்துவதாய் உனக்கு விளக்கிக் காட்டும், என்க.

(வி - ரை) மேற்குறித்த யாவும் இல்லையென்று சொன்னதினாலேயே யாவும் சூனியமாம் எனக்கொண்டு ஏகான்ம வாதத்தில் வீழாமல், யாவும் அனாதி நித்தியமாகவே காரண காரியப் பட்டுக்கொண்டு இருக்குமெனவும், அக் காரியமும் சற்காரியமெனவும் கொள்ளவேண்டும் என்பார், 'இல்லையில்லை யென்னினொன்று மில்லா தல்ல வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை ஆகி' என்றனர். அங்ஙனமாயின், இல்லையென்றதென்னையெனின், மோன நிலையில் அன்னியமாக ஒன்றும் எடுத்துக் கூறுதற்குக் கூடாமல் அருள்வயப்பட்டுத் தாளொருமுத விருப்பதாக மூளைவு தோன்றாது என்பார், 'சொல்லரிய தன்மையதா யான்றானென்னத் தோன்றாதெல் லாம்விழுங்குஞ் சொரூப மாகி' என்றனர்.

ஒளிக்கும் இருளுக்கும் இடம் ஒன்றேயாயினும், ஒளி மேலிட்ட காலத்து இருள் குறைந்தும், இருள் மேலிட்ட காலத்து ஒளி குறைந்து நிற்குமாறுபோல, அருளிற்கும் ஆணவத்திற்கும் இட மொன்றாயிருந்து, அருள்மேலிட்ட காலத்து ஆணவ மறைந்தும், ஆணவ மேலிட்ட காலத்து அருள் மறைந்து நிற்குமாகலின், ஈண்டு, இருள் : ஒளியின்கண்ணே மயங்கியதுபோல அருளின் வசத்தே அவித்தை மறைந்த தென்பார், 'அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா மடைய வுண்டு' என்றனர்.

'தானாகக் கொண்டு' என்றது, சீவன்முத்தன் கோபப் பிரசாதங்களினாலே பண்ணுகிற நிக்கிரகானுக்கிரகம் எல்லாம் முதல்வனாகிய தான் பண்ணினதே யென்றும், இவனுக் கொருத்தர் பண்ணின உபகார அபகாரங்களெல்லாம் தனக்குப் பண்ணினதே யென்றும், இவனுக்குச் சனனத்துக் கேதுவான ஆகாமிய கன்ம மேறாம லொழியும்படி வேறறநின் றிவனைத் தானாகவே யங்கீகரித்துக் கொள்ளுதலாம். சிவஞானசித்தியார்: "சிவனு

மிவன் செய்தியெலா மென் செய்தி யென்றுஞ், செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்றும், பவமகல வுடனாகி நின்று கொள்வன்." என்றதனாற் காண்க. (21)

தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது; தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்;
ஞானாகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்;
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வார்?
அதுவானா லதுவாவர்; அதுவே சொல்லும்.

(இ - ள்) தான் ஆன - எல்லாப் பொருள்களும் தானேயான, தன் மயமே அல்லால் - தன்மயமே யன்றி, ஒன்றை தலையெடுக்க ஒட்டாது - வேறொன்றையுந் தலையெடுக்க விடாது; தலைப்பட்டு ஆங்கே போனாலும் - தலையெடுத்து அவ்விடத்தே சென்றாலும், கற்பூர தீபம்போல - கற்பூர தீபத்தினை யொத்து, போய் ஒளிப்பது அல்லாது - ஒன்றுபட்டு மறைவது அன்றி, புலம் வேறு இன்று ஆம் - (உள்) அறிவு வேறாய் (ஒன்று) இல்லையாகும்; (மேலும்) ஞானாகாரத்தினொடு - ஞானரூபத்தோடு, ஞேயமும் - காணப்படு பொருளும், ஞாதுருவும் - காண்பானும், நழுவாமல் நழுவி நிற்கும் - நீங்காமல் நீங்கி நிற்கும்; ஆனாலும் - ஆயினும், இதன் பெருமை - இதின் ஏற்றத்தை, எவர்க்கு ஆர் சொல்வார் - எவர்க்கு எவர் சொல்ல வல்லார்?, அது ஆனால் - அதுவாகிவிட்டால், அது ஆவர் - (தாம்) முன்னிருந்த தன்மை தோன்றாமல் அதுவே யாகிவிடுவார்; அதுவே சொல்லும் - அந்தப் பொருளே (அதினேற்றத்தினை) அறிவிக்கும், என்க.

(வி - ரை) மேற் குறித்தபடி ஆன்மாக்களை முதல்வன் தானாகக் கொண்ட காலத்தில், அவ் வான்மாக்கள் மேலான சிவஞானத்தாலே அசத்தியத்தினை அசத்தியமென் றறிந்து நீங்கிச், சத்தியமாயுள்ள முதல்வனைத் தரிசித்து, அம் முதல்வனையே எவ்விடத்திலுங் கண்டு, வாதனா மார்க்கத்திலே பிரபஞ்ச விஷயங்கள் மேலிட்டாலு மதிற் கூடார்கள். ஆகையால், 'தானான தன்மயமே யல்லா லொன்றைத் தலையெடுக்க வொட்டாது' என்றனர். சிவஞானசித்தியார்: "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" என்றதனாற் காண்க. அங்ஙனம் ஆன்மாக்கள் முதல்வன் மயமாய் நின்றகாலத்து அவர்கள் தேகம் கற்பூர தீபம்போல் கரைந்து போய்விடு மாகலின், 'கர்ப்பூர தீபம்போலப் போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்' என்றார். அங்ஙனந் தேகங் கரைந்துவிட்ட காலத்தே திரிபுடி தோன்றா தென்பார், 'ஞானாகா ரத்தினொடு ஞேய மற்ற ஞாதுருவு நழுவாம னழுவினிற்கும்'

என்றார். (ஞாதுரு - ஆன்மா, ஞேயம் - சிவம், ஞானம் - அறிவு.) இவ்வாறு ஆன்மா அடைந்த அத்துவித நிலையினை பிறருக் கெடுத்துக் கூறுதல் முடியாதென்பார், 'இதன் பெருமை யெவர்க்கார் சொல்வார்?' எனவும்; அவ் வனுபவத்தினாலேயே யாவு மறியவேண்டும் என்பார், 'அதுவானால் அதுவாவ ரதுவே சொல்லும்' எனவும் கூறினர். முதல் அது அத்துவித நிலை, இரண்டாவது அது சிவம், மூன்றாவது அது அனுபவம். ஆன்மா சிவமாந் தன்மை யடைந்த பின்னரும் அனுபவ விளைவு உண்டோ எனின், "உயிர்தானுஞ் சுவானுபவ மொன்றினுக்கு முரித்தே" என்றதனாற் காண்க. (22)

அதுவென்றா லெதுவெனவொன் றடுக்குஞ் சங்கை;
ஆதலினா லதுவெனவு மறவே விட்டு,
மதுவுண்ட வண்டென'வுஞ் சநக னாதி
மன்னவர்கள், சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்,
பதிபிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூர்; இந்தக்
கதியன்றி யுறங்கேன்; மேற்கருமம் பாரேன்.

(இ - ள்) அது என்றால் - அதுவென்று சொன்னால், எது என - எது வென்று, சங்கை ஒன்று அடுக்கும் - ஆசங்கையொன் றுண்டாகும்; ஆதலினால் - ஆகையால், அது எனவும் - அது என்பதையும், அறவே விட்டு - முழுதுமேவிட்டு, மது உண்ட வண்டு எனவும் - மதுபானம் பண்ணின வண்டுபோலவும், சநகன் ஆதி மன்னவர்கள் - சனகன் முதலிய மன்னவர்களும், சுகர் முதலோர் - சுகர்முதலிய மகரிஷிகளும், வாழ்ந்தார் என்றும் - வாழ்ந்தனர் என்றும்; இந்த நிலை - இந் நிலையில், பதி எனவும் - படிந்து நில்லென்று நியமித்தும், என்னை ஆண்டபடிக்கு - என்னை யாண்டருளின படியே, நிருவிகற்பத்தால் - நிர்விகற்ப சமாதியால், பரம் ஆனந்த கதி - மேலாகிய இன்பக்கதியை, கண்டுகொள்ளவும் - கண்டுகொள்ளும்படியாகவும், நின் அருள்கூர் - உன் கிருபைகூர்ந் தருளவேண்டும்; இந்த கதி அன்றி - இந்தக் கதியை யடைந்தன்றி, உறங்கேன் - தூங்கேன்; மேல் கருமம் பாரேன் - மேல் நடக்கவேண்டிய காரியங்களையும் நோக்கேன், என்க.

(வி - ரை) முப்பத்தாறு தத்துவத்திற்கு மதீதமா யிருந்த ஆணவமல வாசனையெலா நீங்கியவிடத்து ஆன்மா சிவத்தைச் சென்று கூடுதலும், சிவம் ஆன்மாவைப் பொருந்தலுமாகிய இருவகை யசைவுமின்றி யிரண்டற் றிருந்த அவசரத்து அன்னியமாக ஒன்றினை யொன்று சுட்டுதற் கேலாதென்பார், 'அதுவென்றா லெதுவெனவொன் றடுக்குஞ் சங்கை யாதலினா லதுவெனவு மறவே விட்டு' என்றனர். திருக்களிற்றுப்படியார்: "அது விது வென்று மவனானே யென்று, மதுநீயே யாகின்றா யென்று - மது

வானே, னென்றுந் தமை யுணர்ந்தா ரெல்லா மிரண்டாக, வொன்றாகச் சொல்வரோ வுற்று.'' என்றதனுற் காண்க. 'தேனுண்ட வண்டு அசைவின்றி அத் தேன்மயமா யிருத்தல்போல' ஆனந்தானுபவத்தர் போதவசைவின்றி ஆனந்தமயமா யிருப்பரென்பார், 'மதுவுண்ட வண்டெனவும்' என்றனர்.

"அரசருட் சிறந்த சனகனுதியரும் முனிவருட் சிறந்த சுகரும் அனுபவித்தநிலை யின்னதெனவும், அவ் வழியில் நீ நில்'' எனவும் கூறி யாட்கொண்ட வண்ணமே, பெயர் முதலியவற்றாற் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்று நின்றதெனப் பொருளுண்மை மாத்திரையே அறியு ஞானசத்தியினைக் கண்டு கொள்ளவும் செய்வாயெனவும், அது கிட்டும் வரையில் மற்றொன்றிலுங் கவனியேன் எனவுங் கூறுவார், 'சனகனுதி......பாரேன்' என்றனர்.

சனகன் :—மிதிலாபுரியை யரசாண்ட அரஸ்வரரோமன் புத்திரனுய்த் தர்மத்துவஜன் என்னும் பெயர் வாய்ந்து வாழ்ந்த வொருஞானி, தனது அரண்மனை அக்கினிவாய்ப்பட் டழியவும் அதன் பொருட்டுக் கவலை யடையாது, அவ்வரண்மனைப் புறத்திலே காயவைத்த கௌபீனத்திற் காகக் கவன்றோடிய சுகமுனிவரை நோக்கி, "உமது துறவு நன்றாயிருக்கின்றது?'' எனப் பரிகசித்து அவர்க்கு அனுபவத்தில் ஐய மறுத்தவன்.

சுகர் :—இவர் வியாசருக்கும், கிளிரூபத்துடனே யிருந்த கிருதாசியென்னும் அப்சரமாதுக்கும் பிறந்தவர். இவர் பிறந்தவுடனே துறவு பூண்டவர். இவர் அரம்பை யென்னும் தெய்வப்பெண் தன்னுடன் சேருமாறு தன்னுலியன்றவாறு காதல் காட்டியுஞ் சித்தஞ் சலியாத சுத்த வைராக்கியமுடையவர். முனிவருள் இவர் ஒருவரே பெண் போகத்திலே மயங்காதவர். (23)

பாராதி விண்ணனைத்து நீயாச், சிந்தை
பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து,
'வாராயோ வென்ப்ராண நாதா!' என்பேன்;
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு
பூராய மாமேலொன் றறியா வண்ணம்
புண்ணுளர் போனெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்பேன்.

(இ - ள்) பார் ஆதி விண் அனைத்தும் - மண்ணுதி விண்ணீருயுள்ள பூதங்களும், நீ ஆ - நீயாகவே பாவித்து, சிந்தை - என் மனத்தை, பரிய மடலா - பெரிய ஏடாகக் கொண்டு, எழுதி - அவ் வேட்டினில் இதனை எழுதி, பார்த்து பார்த்து - பலகாலும் நோக்கி, என் ப்ராண

நாதா ! - என் பிராண நாயகனே !, வாராயோ என்பேன் - வந்தருளாயோ! என்று சொல்லுவேன்; என்னை வளைத்து வளைத்து - என்னைத் தடுத்துத் தடுத்து, நீ ஆ வைத்துக்கொண்டு - நீயாக வைத்துக்கொள்ளுமாகையால், மேல் ஒன்று - மேலே ஒரு காரியத்தையும், பூராயமா - ஆத்யந்தமாக, அறியாவண்ணம் - உணராதபடி, புண்ணுளர் போல் - புண்ணுளிகள்போல, நெஞ்சம் உள்ளே புலம்பி நீராளமாய் உருகி - மனமானது வருந்தி உள்ளிடத்திற்றானே ஜலப்பிரவாகமாய் உருகி, கண்ணீர் சோர - கண்ணீரா யொழுக, நெட்டுயிர்த்து - பெருமூச்செறிந்து, மெய்மறந்து - சரீரத்தினை மறந்து, ஓர் நிலையாய் நிற்பேன் - ஒரு நிலைப்பட்டு நிற்பேன், என்க.

(வி - ரை) "காடுஞ் செடியு மவளாகத் தோன்றுதென் கண்ணெதிரே' என்றபடி, காமுக னொருவனுக்குத் தன்முன் தோன்றுவன வெல்லாந் தான் இச்சித்த சிவமாய் விளங்குமாகலின், 'பாராதி விண்ணனைத்து நீயா' என்றனர்; இங்ஙனந் தரிசித்தல் சிவதரிசன மென்பார், ஞானசாகர வெண்பா: "மன்னு மொளி யாலே வளர்கதிரைக் காண்பதுபோ, லின்னருளா லுள்ளுணர்வா மீசனைக்கண் - டுன்னிடம் பேர், னீடுமோ ரெவ்விடத்து நின்றநிலை காண்பதே, நாடுஞ் சிவதரிச னம்." என்றதனாற் காண்க. உயிர்க்குயிராதலை நோக்கி 'என் பிராணநாதா!' என்றார். தேவாரம்: "என்னி லாரு மெனக்கினி யாரில்லை, யென்னி லுமினி யாவொரு வனுள, னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே." என்றதனாற் காண்க. (24)

ஆயுமறி வாகியுன்னைப் பிரியா வண்ண
மணைந்துசுகம் பெற்றவன்ப ரையோ வென்னத்,
தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன், வாழ்வான்
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானம்
கடன்மலையெங் கேயெனவுங் கவலை யாவேன்;
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன், வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே.

(இ - ள்) உன்னை ஆயும் அறிவு ஆகி - உன்னை ஆராய்கின்ற அறிவினை யுடையவராகி, பிரியாவண்ணம் அணைந்து - நீங்காதபடி சேர்ந்து, சுகம் பெற்ற அன்பர் - இன்பமுற்ற தொண்டர்கள், ஐயோ என்ன - ஐயோவென்றிரங்க, தீய - கொடிய, கொலை சமயத்தும் சிந்தை செல்ல - கொலை புரியுஞ் சமய நெறிகளிலும் மனம் செல்ல, தெளிந்திடவும் - (அம் மனம் அச் சமயநெறிகளிற் செல்லாது) தெளிவடையவும், சமாதானம் செய்வேன் - சமாதானம் பண்ணுவேன், வாழ்வான் - உயிர் வாழும் பொருட்டு, காய் இலை புன் சருகு ஆதி அருந்த - காய் இலை அற்பமாகிய சருகு முதலியவற்றை யுண்ணும் பொருட்டு, கானம் - காடும், கடல் - கட

னும், மலை - மலையும், எங்கே எனவும் - எங்கே யுள்ளன வென்றும், கவலை ஆவேன் - கவலைப்படுவேன் ; வானில் - ஆகாயத்தில், மதி கதிரை - சந்திர சூரியர்களை, முன்னிலையா வைத்து - முன்னிலையாக வைத்துக் கொண்டு, நேரே - அவர்களுக்கெதிரே, வாயில் கும்பம் போல் - வாய் இல்லாத குடம் புரள்வதுபோல, கிடந்து புரள்வேன் - விழுந்து புரள் வேன், என்க.

(வி - ரை) ஞான சாத்திரங்களை நன்கு விசாரிக்கும் விசாலமான அறிவுடையவரே முதல்வனைப் பிரியாது வாழ்வ ராகலின், 'ஆயுமறி வாகி யுன்னைப் பிரியாவண்ணம்' என்றனர். ஆன்மாவும் பரமான்மாவும் பிரிவற நின்ற சுத்தாத்துவித நிலையிலேயே சுகம் உண்டென்பார், 'பிரியா வண்ண மணைந்து சுகம்பெற்ற அன்பர்' என்றனர். 'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என்றதற்கேற்பத் 'தீய கொலை' என்றனர். பழக்க வாசனையால் ஒவ்வொரு காலத்தில் தொழிலை மேற்கொண்டிருக்கிற சமயங் களில் மன நாட அதைத் திருப்பிக்கொண்டேன் என்பார், 'தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன்' என் றார். தவநிலையி லாயினு மிருந்து வாழலாமோவென மனம் வருந்துவேன் என்பார், 'காயிலைபுன் சருகாதி யருந்தக் கானம் கடன்மலையெங் கேயென வுங் கவலையாவேன்' என்றனர்.

ஒன்றிலு மனம் நிலைபெறுதலின்றி வாளா அலைந்து உழல்வேன் என் பார், 'வாயில் கும்பம் போற்கிடந்து புரள்வேன்' என்றனர். வாயுள்ள கும்பத்தினைக் கவிழ்த்து வைக்கின் நிலைபெற்று அசையாது நிற்கும்; வாயற்ற கும்பம் அங்ஙனம் நிலைபெறாது உருண்டுகொண்டே நிற்கும் ஆக லின், 'வாயில் கும்பம்' என்றனர். (25)

'நேரேதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர வுங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே?' என்பேன்;
'அடிக்கின்ற காற்றே! நீ யாரா லேதான்
பேராதே சுழல்கின்றாய்?' என்பேன்; 'வந்து
பெய்கின்ற முகில்காள்! எம் பெருமா னும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதகமென் னே? கருதிச் சாற்றும்' என்பேன்.

(இ - ள்) நேரே - நேராக, இரவு பகல் - இராப்பகல்கள், கோடா வண்ணம் - வழுவாவகை, நித்தம் வர - நாள்தோறும் வரும்படி, உங்களை - சந்திர சூரியர்களாகிய உங்களை, இ நிலைக்கே வைத்தார் - இந்த நிலையிற் றானே நிலைபெறுத்தி வைத்தவர், ஆர் - யாவர்?, அங்கு அவர் பெருமை - அவ்விடத்து அவர் பெருமையை, என் என்பேன் - என்னென்று வியக்கக் கடவேன்?, அடிக்கின்ற காற்றே! - வீசாநின்ற வாயுவே!, நீ - நீ, யாரால் -

யாவருடைய கட்டளையினால், பேராதே - இடையறாமல், சுழல்கின்றாய் - சுழலாநின்றாய், என்பேன் - என்று சொல்லுவேன்; வந்து பெய்கின்ற முகில்காள்! - வந்து மழையைப் பொழிகின்ற மேகங்களே!, எம்பெருமான் - எம்மிறைவனை, நும்போல் - உங்களைப்போல, தாராளமா - மிகுதியாக, கருணை பொழிய - அருள் மழையைப் பொழியும்படி, செய்யும் - செய்ய வேண்டிய, சாதகம் - அப்பியாசம், என் - யாது?, கருதி - நீங்கள் ஆலோசித்து, சாற்றும் என்பேன் - சொல்லுங்கள்! என்று கேட்பேன், என்க.

(வி - ரை) இரவுகாலத்தும் பகற்காலத்தும் முறையே சந்திரனுஞ் சூரியனும் தவறாதபடி ஆகாயத்திற் சஞ்சரிப்பதும், காலத்திற் கேற்றபடி காற்று வீசுதலும் முதல்வன் ஆணையினாலேயே யென்றும், முதல்வன் கருணைக்கு அளவில்லை யென்றும் குறிப்பால் இச்செய்யுளிற் கூறியருளினர். ()

‘கருதரிய விண்ணே! நீ யெங்கு மாகிக்
கலந்தனையே; உன்முடிவின் காட்சி யாக
வருபொருளெப் படியிருக்கும்? சொல்லாய்!’ என்பேன்;
‘மண்ணே! உன் முடிவிலெது வயங்கு மாங்கே
தூரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லானோ? சொல்!’ என்பேன்; ‘சுருதி யே! நீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
னுரையன்றோ? உன்முடிவை யுரை! நீ’ என்பேன்.

(இ - ள்) கருதஅரிய - நினைத்தற்கு அருமையான, விண்ணே! - ஆகாயமே!, நீ - நீ, எங்கும் ஆகி கலந்தனையே - எவ்விடத்தும் பரவிக் கலந்திருக்கின்றனையே; உன் முடிவின் - உன் முடிவாகிய எல்லையில், காட்சி ஆக வருபொருள் - காணப்படுவதாய் வரும் பொருளானது, எப்படி இருக்கும் - எவ்வாறாகிய இலட்சணங்களோடு கூடி யிருக்கும்?, சொல்லாய்! - சொல்லுவாய்!, என்பேன் - என்று சொல்வேன்; மண்ணே - பூமியே!, உன் முடிவில் - உன் முடிவெல்லையில், எது வயங்கும் - எந்தப் பொருள் நின்று பிரகாசிக்கும்?, ஆங்கு - அவ்விடத்துள்ள, தூரிய அறிவு உடை - மேலான அறிவையுடைய, சேடன் - ஆதிசேடன், ஈற்றின் உண்மை சொல்லானோ - முடிவான பொருளின் உண்மையைச் சொல்லமாட்டானோ?, சொல் என்பேன் - சொல்லுவாய்! என்று கேட்பேன்; சுருதியே - வேதமே!, நீ - நீ, ஒருவரைப்போல் - ஒருவர்க்குப் போல, அனைவருக்கும் - எல்லாருக்கும், உண்மை ஆம் - மெய்யாய் விளங்குகின்ற, முன் உரை அன்றோ - முதனூலா யிருக்கின்றாய் அல்லவோ?, நீ உன் முடிவை உரை - நீ உன் முடிவான பொருளைச் சொல்லாய்!, என்பேன் - என்று சொல்லுவேன், என்க.

(வி - ரை) பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகிய நான்கு பூதங்களும் பிரத்தியட்ச காட்சியினுக்கு அனுபவ மாமாறு ஆகாய மின்றாகலின், ‘கருதரிய விண்ணே’ எனவும்; நான்கு பூதங்களையும் வியாப்பியமாகக் கொண்டு

அவற்றுள்ளும் விரவி நிற்றலின், 'கலந்தனையே' எனவும்; வியாபகமாயுள்ள ஆகாயத்தினையுங் கடந்து நிற்பது முதல்வனிலையென்பதனைக் குறிக்கச் 'சொல்லா யென்பேன்' எனவும்; அறிவிற் சிறந்த ஆதிசேடனாலும் முதல்வன் றன்மை குறிக்க லொதென்பதனைத் தெரிவிக்கச் 'சொல்லானே' எனவும்; எல்லாச் சமயத்தாரும் தத்தமக் குறுதியாகிய பிராமணமெனக் கோடற்குரிய முன்னூலாகிய மறையானுங் காண்டற்கரியனென்பதனைக் குறிப்பிக்க 'உன் முடிவை யுரைநீ' எனவும் குறிப்பாக இச் செய்யுளிற் காட்டி வைத்தனர். (27)

'உரையிறந்து, பெருமைபெற்றுத், திரைக்கை நீட்டி
  யொலிக்கின்ற கடலே! இவ்வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தா ரியாரே?' என்பேன்;
  'கானகத்திற் பைங்கிளிகாள்! கமல மேவும்
வரிசிறைவண் டினங்காளோ திமங்கா டூது
  மார்க்கமன்றோ? நீங்களிது வரையிலேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
  பேசியதுண் டோ? ஒருகாற் பேசும்' என்பேன்.

(இ - ள்) உரை இறந்து - பேச்சற்று, பெருமை பெற்று - பெருமையையடைந்து, திரை கை நீட்டி - அலைகளாகிய கைகளை நீட்டி, ஒலிக்கின்ற கடலே! - சப்திக்கின்ற சமுத்திரமே!, இ உலகம் சூழ - இவ் வுலகத்தினை வளைந்திருக்கும்படி, கரையும் இன்றி - கரையும் இல்லாமல், உன்னை வைத்தார் - உன்னை யமைத்து வைத்தவர், யாரே என்பேன் - யாவரே? என்று சொல்லுவேன்; கானகத்தில் - காட்டிலுள்ள, பைங்கிளிகாள்! - பசுமையாகிய கிள்ளைகளே!, கமலம் மேவும் - தாமரைமலரிற் பொருந்திய, வரி சிறை - நீண்ட சிறைகளையுடைய, வண்டு இனங்காள்! - வண்டுக் கூட்டங்களே!, ஓதிமங்காள்! - அன்னங்களே!, தூது மார்க்கம் அன்றோ - (நீங்கள் காலங் கழிப்பது) தூதுமார்க்கத்தி லல்லவா!, நீங்கள் இதுவரையிலேயும் - நீங்கள் இதுவரைக்கும், பெரிய பரிபூரணம் ஆம் - பெரிதாகிய பரிபூரண மென்கின்ற, பொருளை - வஸ்துவை, கண்டு பேசியது உண்டோ? - கண்டு வார்த்தை சொன்னதுண்டோ?, ஒருகால் - ஒருதரம், பேசும் என்பேன் - பேசுங்கள்! என்று சொல்வேன், என்க.

(வி - ரை) அளவினுக் கடங்காத அதி விலாசம் பொருந்திய கடலானது கரையின்றி நிலையுற்றிருப்பது முதல்வன் ஆணையேயெனக் குறிப்பிக்கக், 'கடலே யுன்னை வைத்தா ரியாரே?' என்றனர். கிளிகளும், வண்டினங்களும், ஓதிமங்களும் எவ்விடத்தும் எவரிடத்தும் தூதாகச் செல்லுந் தன்மை யுண்டாயினும் முதல்வனைக் காணுந் திறமையானது சிறிது மின்றெனக் குறிப்பிப்பார், 'பைங்கிளிகாள்.....பேசியதுண்டோ' என்றார். கிளிமுதலிய தூதினுக்குரிய வென்பது, "இயம்புகின்ற காலத் தெகின

மயில் கிள்ளை, பயம்பெரு, மேகம் பூவை பாங்கி - நயந்தகுயில், பேதை நெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் துடை." என்னும் இரத்தினச்சுருக்கத்தாற் காண்க. (28)

ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
யோட்டுதல்போ னன்பேதை யுப்போ டப்பை
மருவவிட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்யமுன்னி வருந்தி நிற்பேன்;
அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென் றும்மெனக்கே யாண வாதி
பெருகுவினைக் கட்டென்று மென்னாற் கட்டிப்
பேசியதன் றேயருணூல் பேசிற் றன்றே.

(இ - ள்) ஒரு வனவன் - ஒரு வேடனானவன், யானைகெட - எதிர் நின்ற யானையானது மறைய, (அதைத் தேடுதற் பொருட்டு) குடத்துள் - குடத்திற்குள்ளே, செங்கை ஓட்டுதல் போல் - செவந்த கையை யிட்டுத் துழாவுதல்போல, பேதை நான் - அறிவிலியாகிய நான், உப்போடு அப்பை மருவ இட்டும் - உப்புடன் நீரைப் பொருந்தும்படி கலக்கவிட்டும், கர்ப்பூரமதனில் - கர்ப்பூரத்தில், தீபம் - விளக்கினை, வயங்க இட்டும் - பிரகாசிக்கச் சேர்த்தும், ஐக்கியம் உன்னி - (இன்னும்) ஒற்றுமையை நினைந்து, வருந்தி நிற்பேன் - துன்பமுற்று நிற்பேன்; அருள் உடைய பரம் என்றோ - திருவருளைத் தனக்குத் துணைக்காரணமாகவுடைய பரம்பொருள் என்றுளதோ, அன்றுதானே - அன்றே, யான் உளன் என்றும் - நானும் உளேன் எனவும்; எனக்கே - என்றனுக்கே, ஆணவாதி - ஆணவ முதலிய வைகள், பெருகு - அதிகரித்தற் கேதுவாகிய, வினைக் கட்டு என்றும் - வினைப்பிணிப்புள்ள தென்றும், என்னால் கட்டி பேசியது அன்று - என்னாற் கற்பித்துச் சொல்லப்பட்டதன்று; அன்றே - பூர்வத்திற்றானே, அருள் நூல் - மோக்ஷநூல்களால், பேசிற்று - சொல்லப்பட்டதே, என்க.

(வி - ரை) 'அப்பினில் உப்பு கலந்ததுபோல' எனது சிவபோதம் அருட்போதத்திற் கலந்தும், 'கற்பூரம் தீபத்தால் விழுங்கப்பட்டதுபோல' எனது சிவ போதத்தினை அருட்போதம்விழுங்கியும் இருக்க, மேலும் மேலும் ஐக்கியத்தினை எண்ணி நான் வருந்துவது, தன் வயத்திருந்த யானையினைக் காணாத வேடனொருவன் 'ஒருக்கால் இப் பாண்டத்திற்குள் ஒளித்துக்கொண்டதோ' எனத் தன் முன்னிருந்த ஒரு பாண்டத்தினிற் கரத்தினை விட்டுத் தேடிப்பார்க்கும் பேதைத் தன்மையினை யொக்கு மென்றனர். இது அந்தர்முகத்தில் சுவாநுபூதி நிலையிலிருந்த அவசரத்தினின்றும் நீங்கிப் பகிர்முகத்தில் வந்த அவசரத்திற் சொல்லியது. சுவானுபூதிமான்கட்கும் இத்தகைய பேதபுத்தி யுண்டாமோவெனின்?, பரமுத்தியினை யடையாது சீவன்முத்தநிலையி லுள்ளவரைக்கும் ஒவ்வொரு சமய முண்டா

மென்பது தேவார திருவாசகங்களி லூகித்தறிக. வேதாகமங்கள் முதல் வனை 'அறுதிமலமுத்தன்' என்றும், அணுன்மாவினை 'அறுதிமலபெத்தன்' என்றுங் கூறுவது உண்மையென்பார், 'அருளுடைய பரமென்றே ......அருணூல் பேசிற்றன்றே' என்றனர். (29)

அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
 யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே; எடுத்த தேக
 மெப்போதோ தெரியாதே; இப்போ தேதான்
துன்றுமனக் கவலைகெடப் புலைநா யேனைத்
 தொழும்புகொளச் சீகாழித் துரையே! தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்! நஞ்
 சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே!

(இ - ள்) அன்றுமுதல் - படைப்புக்காலந் தொடங்கி, இன்றைவரை - இன்றளவும், சனனகோடி அடைந்து அடைந்து - சனனபரம்பரை பலகாலு மடைந்து, இங்கு - இந்தப் பொய்திகழு முலகில், யாதனையால் - துன்பத்தினால், அழிந்தது அல்லால் - அழிந்ததேயன்றி, இன்றை வரை - இன்றளவும், முத்தி இன்றே - முத்தியை யடைதலின்றி யொழிந்ததே; எடுத்த தேகம் - வினைக் கீடாக எடுக்கப்பட்ட உடம்பு, எப்போதோ - (விடுப்பது) எந்தப்பொழுதோ?, தெரியாதே - அறியப்படாதே; (ஆதலால்) இப்போதே - இன்றே, துன்று - அதிகரித்த, மனக்கவலை கெட - மனக்கிலேசங்க ளொழிய, புலை - நீசத் தன்மையுள்ள, நாயேனை - நாயினேனை, தொழும்பு கொள - தொண்டுகொள்ள, சீகாழித் துரையே! - சீகாழிக்குத் தலைவனே!, தூது சென்றிட - பரமசிவன் தூது செல்ல, பொருளை வைத்த - நிதிக்குவியலை யிட்ட, நாவலோய்! - திரு நாவலூரனே!, நம் சிவன் - நமது பரமசிவன், அப்பா என்ற - அப்பா! என்றழைத்த, அருள் செல்வம் - திருவருளாகிய செல்வத்தையுடைய, தேவே! - தெய்வமே!, என்க.

(வி - ரை) சிருட்டிகாலந் தொடங்கி இதுகாறும் எடுத்த சனனங் கட்கு எண்ணிக்கையில்லை யென்பார், 'அன்றுமுதல்......முத்தியின்றே' எனவும்; இனிப் பிறப்பெடாதபடி வாய்க்குநாள் எந்நாளோ என்பார், 'எடுத்த தேக மெப்போதோ தெரியாதே' எனவும் கூறினர். சீர்காழி யென்பது சோழநாட்டில் காவேரிக்கு வடகரையிலுள்ள அறுபான் மூன்று தலங்களி லொன்று; காளிதமான விடத்தினையுடைய காளியென்கிற நாகம் பூசிக்கையாலே 'சீகாளி' எனப் பெயர் வாய்ந்தது. காளி - காழியெனத் திரிந்தது, 'துரையே!' என்றது அத் தலத்தில் அவதாரஞ் செய்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளை. 'தூது, சென்றிடவே பொருளை வைத்த' என்றது, பரவை நாச்சியாருடைய ஊடலைத் தவிர்க்கப் பேயும்

உறங்கும் அர்த்தராத்திரியில் திருவாரூர் வீதிவிடங்கப் பெருமானை ஆளுடைய நம்பிகள் தூதுகொண் டருளியது. 'நாவலோய்!' என்றது, திருநாவலூரிலே யவதாரஞ் செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகளை, கைலாயத்தில் சிவபெருமான் வாகீச முனிவரை 'அப்பா!' என்றழைத்தன ராகலின் 'நஞ்சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே!' என்றனர். இப்பெயரினாலேயே திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகளை யழைத்தது முண்டு. (30)

'தேவர்தொழும் வாதவூர்த் தேவே!' என்பேன்;
'திருமூலத் தேவே!இச் சகத்தோர் முத்திக்
காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
வரசே! சும் மாவிருந்துன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருண கிரியே! மற்றைப்
புண்ணியர்காள்' ஓஎன்பேன்; புரையொன் றில்லா
ஓவியம்போ லசைவறவுந் தானே நிற்பே
னோதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே.

(இ - ள்) தேவர் தொழும் - தேவர்கள் வணங்குகின்ற, வாதவூர்த் தேவே - திருவாதவூரடிகளே!, என்பேன் - என்று சொல்லுவேன்; திருமூல தேவே! - திருமூலர் என்ற திருப்பெயரினையுடைய சுவாமீ!, இ சகத்தோர் - இந்த உலகத்தோர், முத்திக்கு ஆவல் உற - மோட்ச மடைதற் பொருட்டு ஆசை யதிகரிக்க, சிவ என் வாக்குடனே வந்த - சிவவென்கிற வாக்கியத்துடன் பிறந்த, அரசே! - இறைவனே!, சும்மா இருந்து கொண்டு - சீவர்கள் சும்மா விருந்து கொண்டு, உன் அருளை சார - உன்னருளை யடைதற்காக, பூவுலகில் - பூலோகத்தில், வளர் - விருத்தி யடையாநிற்கிற, அருணகிரியே! - அருணகிரி சுவாமி!, மற்றை புண்ணியர்காள் - மற்றுமுள்ள புண்ணியவான்களே!, ஓ என்பேன் - ஓவென்று முறையிடுவேன்; புரை ஒன்று இல்லா - குற்றம் சிறிது மில்லாத, ஓவியம் போல் - சித்திரப்பாவை போல, அசைவு அறவும் நிற்பேன் - சலனமற்றும் நிற்பேன்; ஓது அரிய - சொல்லுதல் அருமையாகிய, துயர் கெட - துயரம் நசிக்கும்படி, உரைக்கும் முன்னே - சொல்லு முன்னமே, என்க.

(வி - ரை) 'வாதவூர்த் தேவே!' என்பது மாணிக்கவாசக சுவாமிகளை. இலக்கணக் கொத்தாசிரியர்: "மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம்." என்றபடி மாணிக்கவாசக சுவாமிகட்கும் சிவபெருமானுக்கும் பேதமில்லை யெனக் கருதித் 'தேவர்தொழுந் தேவே!' என்று கூறினர். இக்கருத்துப்பற்றியே மாணிக்கவாசக சுவாமிகளை நாயன்மாருள் ஒருவராகத் தொகைப்படுத்தாது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டைத் தொகையினும், நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியினும், அருண்மொழித்தேவர் பெரியபுராணத்தினும் எடுத்துரையா

ராயினூர். திருமூலராவார்: மூவாயிரம் பாடலடங்கிய திருமந்திர மென்னுந் திருமுறையினைத் திருவாய்மலர்ந்தருளியவர். சிவசிவ என்னும் வாக்குடனே அவதாரஞ் செய்த அரச சிவவாக்கியர். "செம்மான் மகளைத் திருடுந் திருடன், பெம்மான் முருகன் பிறவா னிறவான், சும்மா விரு சொல் லறவென் றலுமற், றம்மா! பொருளொன் றுமறிந்திலனே." என்னுந் திருப்பாடலைக் கந்தரனுபூதியில் அருளிச் செய்தவர் அருணகிரிநாதராதலால் அவருக்கு அதனையே விசேடணமாக, 'சும்மாவிருந்துன் னருளைச் சாரப் பூவுலகில் வளரருண கிரியே!' என்றார். (31)

'ஓதரிய சுகர்போல வேனே னென்ன
வொருவரிலை யோ' எனவு முரைப்பேன்; 'தானே
பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ? ஆலடியிற் பெரிய மோன
நாதனொரு தரமுலகம் பார்க்க விச்சை
நண்ணுனோ?' என்றென்றே நானு வாகிக்
காதன்மிகு மணியிழையா ரெனவா டுற்றேன்;
கருத்தறிந்து புறப்பதுன்மேற் கடன்மூக் காலும்.

(இ - ள்) ஓது அரிய - தபோமகிமையினை யெடுத்துச் சொல்லுதற்கரிய, சுகர் போல - சுகமுனிவர் போல, என் என் என்ன - என் என் என்று பிரதி தொனி கொடுக்க, ஒருவர் இல்லையோ எனவும் உரைப்பேன் - ஒருவர் இல்லையோவென்றுஞ் சொல்லுவேன்; தானே - தானே, பேதம் அபேதம் கெடவும் - பேதா பேதங்கள் ஒழியவும், ஒரு - ஒப்பற்ற, பேசாமை - மவுன நிலையானது, பிறவாதோ - உண்டாகாதோ?, ஆல் அடியில் - வடவிருட்ச மூலத்தி லெழுந்தருளிய, பெரிய மோனநாதன் - பெரிய மௌன நிலைமையுடைய இறைவன், ஒரு தரம் - ஒரு முறை, உலகம் பார்க்க - உலகத்தைக் கடைக்கணிக்க, இச்சை நண்ணுனோ? - விருப்பங் கொள்ளானோ?, என்று என்று - என்று பலகாற் சொல்லி, நானு ஆகி - பலவகையாய்க் கலங்கி, காதல் மிகும் - (பிரிந்து சென்ற தங் கொழுநர் நியமப்படி வாராமையால் அவர்கள்மேல்) ஆசை மிகுந்த, அணி இழையார் என - மாதரைப்போல, வாடுற்றேன் - வாட்ட மடைந்தேன்; கருத்து அறிந்து - என் கருத்தை யுணர்ந்து, புரப்பது - காத்தருள்வது, மூக்காலும் - மூன்று தரமும், உன்மேல் கடன் - உனக்குக் கடமை ஆகும், என்க.

(வி - ரை) சுகமுனிவர் அவதரித்தவுடன் பிரபஞ்ச மாயைக்கு அஞ்சியோட, அவர் தந்தை வேதவியாச முனிவரர் அவரைப் பின்றொடர்ந்து "ஓ மகனே!" என்று அழைத்துக்கொண்டு போனபோது அங்கிருந்த விருட்சங்க ளெல்லாம் பிரதித்வனி செய்தன வென்பார், 'சுகர்போல என் என் என்ன வொருவரிலையோ?' என்றனர். சடசித்துக்க

ளனைத்தினும் முதல்வன் வியாபக மிருத்தலினாலும், அவ் வியாபகவருள் வயத்தவனாய் சுகர் இருத்தலினாலும், மரங்களினை யதிட்டித்து நின்ற தெய்வங்கள் சுகர் வடிவினுக்கும் தமக்கும் வேற்றுமை யறியாது பிரதித் வனி செய்தன. புள் விலங்கு மர முதலியவற்றுக் கெல்லாம் அதி தெய்வ மந்திரமு முண்டென்பது சர்வஞானோத்தர முதலியவற்றுட் காண்க.

சும்மாவிருக்கு நிர்விகற்பநிலை சமாதியில் பேதாபேதந் தோன்றா தாக லின், 'பேதமபே தங்கெடவு மொருபே சாமை பிறவாதோ?' என்றனர். அன்று கைலையில் நால்வர்க்குக் கல்லால விருட்சத்தின் கீழ் எழுந்தருளிக் காட்சி கொடுத்ததுபோல் உலகி லின்னும்வந் தொருதரம் அத்தகைய காட்சி கொடுக்கப்படாதோ வென்பார், 'ஆலடியிற் பெரிய மோன, நாத னொரு தரமுலகம் பார்க்க விச்சை நண்ணாதோ?' என்றனர். கணவர் பிரிவாற்றாது வருந்து மாதரைப்போல வருந்தா நின்றேன் என்பார், 'காதன்மிகு மணியிழையா ரெனவா டுற்றேன்' என்றனர். (32)

காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி! கருணை வாழி!
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி!
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி!
ஆலடியிற் பரமகுரு வாழி! வாழி!
அகண்டிதா காரவரு ளடியார் வாழி!

(இ - ள்) காலமொடு - கால தத்துவத்தோடும், தேசவர்த்தமானம் ஆதி - தேயவர்த்தமானாதிகளோடும், கலந்து நின்ற நிலை - பிரிவறக் கலந்து நிற்கும் நிலையுடைப் பொருள், வாழி! - வாழ்க!, கருணை - (அப் பொருளிற் பிரிவறநின் றியங்கும்) திருவருள், வாழி! - வாழ்க!, மால் அறவும் - மயக்கம் ஒழியவும், சைவம் முதல் மதங்கள் ஆகி - சைவமுதலாகிய பல வேறு மதங்களாய் நின்றும், மத அதீதம் ஆன - மதங்களுக் கெட்டாத தான, அருள் மரபு - திருவருள் மரபானது, வாழி! - வாழ்க!, சாலம் மிகும் - மாயாவிகாரம் மிகுந்த, எளியேன் - ஏழையேன், இ வழக்கு பேச - இந்த விவகாரம் பேசும்படி, தயவு வைத்து வளர்த்த - கிருபை வைத்து வளர்த்த, அருள் தன்மை - திருவருட்குணம், வாழி! - வாழ்க!, ஆல் அடியில் - வடமூலத்தி லெழுந்தருளிய, பரமகுரு - பரமாசாரியன், வாழி! வாழி! - வாழ்க! வாழ்க!, அகண்டிதம் - சேதிக்கப்படாத, ஆகாரம் - உருவத்தையுடைய, அருள் - உன் திருவருளுக்கு, அடியார் - தொண்டு பூண்டார், வாழி! - வாழ்க!, என்க.

(வி - ரை) 'காலமொடு தேசவர்த்த மான மாதி கலந்துநின்ற நிலை வாழி!' என்றது பரமசிவத்தினை. 'கருணைவாழி!' என்றது சிவசத்தியினை. 'அருள் மரபு வாழி!' என்றது சந்தான குரவரை. 'அருட்டன்மை வாழி!' என்றது பரசிவத் திருவருளினை. 'ஆலடியிற் பரமகுரு வாழி!' என்றது தட்சணாமூர்த்தியினை. 'அடியார் வாழி!' என்றது சமய குரவர் முதலாயினாரை. சந்தான குரவர் இன்னாரென்பதனையும், சமய குரவர் முதலாயினா ரின்னா ரென்பதனையும் இந்நூலின் குருமரபின் வணக்கத்திலும், அடியார் வணக்கத்திலும் முறையே காண்க. (33)

---

## தேன்முகம்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

'தேன்முகம் பிலிற்றும் பைந்தாட்
செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே! நின்னு
னாட்டிய வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ!
கானலம் புனலே யென்கோ!
வான்முக முளரி யென்கோ!
மற்றென்கோ! விளம்பல் வேண்டும்.'

(இ - ள்) தேன் - தேனை, முகம் - தன்னிடத்தினின்றும், பிலிற்றும் - துளிக்கின்ற, பைந்தாள் - பசிய நாளத்தினையுடைய, செய்ய - சிவந்ததாகிய, பங்கயத்தில் - தாமரை மலரின்மேல், மேவும் - வீற்றிருக்கின்ற, நான்முக தேவே! - நான்கு முகங்களை யுடைய பிரமதேவனே!, நின்னால் நாட்டிய - உன்னால் படைத்து நிலைபெறுத்தப்பட்ட, அகிலம் - பிரபஞ்சத்தினைப் பற்றிய, மாயை - மாயையானது, கான் - காட்டில் வாழ்கின்ற, முயல் - முயலினது, கொம்பே என்கோ! - கொம்புதா னென்று சொல்லுவேனோ!, கானல் புனலே என்கோ! - கானல் நீர்தான் என்று சொல்லுவேனோ!, வான்முகம் - ஆகாயத்தி னிடத்திலுள்ள, முளரி என்கோ! - தாமரை மலர் என்று சொல்லுவேனோ!, மற்று என்கோ! - இவற்றின் வேறாகிய பொருள் என்று சொல்லுவேனோ?, விளம்பல் வேண்டும் - (அதை) நீயே சொல்லல்வேண்டும், என்க.

(வி - ரை) விஷ்ணுமூர்த்தியினுடைய உந்தியிற் பூத்த தாமரையிலுதித்து அம் மலரினையே தனக்கிடமாகக் கொண்டிருப்பன் பிரமனாகலின், 'பங்கயத்தின் மேவும்' என்றனர். பிரமன் ஒருகாலத்தில் தனது படைத்தற்றொழிலை வியந்து தனக்குமே லொருவரு மில்லையென இறுமாந்த காலத்

தில், முதல்வன் வயிரவக்கடவுளைக் கொண்டு அவன் ஐம்முகத்திலொன்றி னைக் கிள்ளி யெறிய அதுமுதல் நாலு முகங்களுடனே வாழ்ந்து வருகின்ற னாகலின், 'நான்முகத் தேவே!' என்றனர். பிரபஞ்ச முழுதும் மாயையின் காரியமாக என்றும் விளங்கி யிருத்தலின், 'அகில மாயை' என்றனர். பிர பஞ்ச மசத்தாமாற்றிற் குவமை யாராயின், முயற்கொம்பும், கானலும், புன லும், வான்முக முளரியுமாம். பசுபாசங்கள்போ லன்றி யிருவகை யியல்பி னுலும் காட்சிப்புலனு யித்துணைப் பொழுது நிற்குமென நம்மனோரால் அறிய வாராது, நிலைபெறுவது போல் தோன்றி, விரையக் கெட்டு மறைந்து போதற் சிறப்புடைமையான் இங்ஙன முதாரணமுகத்தால் நிலையின்மை யினை விளக்கிக் காட்டினர். இதுவே சற்காரியவாதங் கூறுஞ் சித்தாந்த மரபாகும். பிரபஞ்சத்தினைச் சூனியமெனக் கொள்ளற்க. (1)

'வேண்டுவ படைத்தாய், நுந்தை
விதிப்படி புரந்தா னத்தைக்,
காண்டக வழித்தான் முக்கட்
கடவுடா னினைய வாற்றல்
ஆண்டவ னெவனோ வென்ன
வறிகிலா தகில நீயே
ஈண்டிய வல்ல றீர
வெம்மனோர்க் கியம்பு கண்டாய்'

(இ-ள்) வேண்டுவ - உலகத்தாரால் வேண்டப்படுவனவாகிய பொருள் களை, படைத்தாய் - நீ படைத்தனை; நுந்தை - உன் தந்தையாகிய திருமால், விதிப்படி புரந்தான் - காக்கவேண்டிய முறைப்படி காத்தான்; அத்தை - அதனை, முக்கண் கடவுள் - மூன்று கண்களையுடைய உருத்திர மூர்த்தி, காண்தக அழித்தான் - யாவருங் காணும்படி அழித்தொழித்தான்; இனைய ஆற்றல் - இந்தப் பிரகாரத்தால், ஆண்டவன் எவன் என்ன - இறைவன் யாவனென்று, அகிலம் அறிகிலாது - உலகம் உணரமாட்டாது; (ஆதலால்) ஈண்டிய - மிகுந்த, அல்லல் தீர - சந்தேக நீங்க, எம்மனோர்க்கு - எம்மை யொத்தவர்கட்கு, நீயே இயம்பு - நீயே சொல்லாய்!, என்க.

(வி-ரை) அவற்றை யென்பது 'அத்தை' என நின்றது. சோமனை யும் சூரியனையும் அக்கினியையும் கண்களாக வுடைமையின், 'முக்கட் கட வுள்' என்றனர். அன்றியும், உலகத்தில் அறிவுடையவனைக் கண்ணுடையவ னென்றும், அறிவில்லாதவனைக் கண்ணில்லாதவ னென்றும் கூறுவது வழக்கமாகக் கண்டோம். அறிவுக்கு நிலைக்களம் லலாட மத்தியாம். ஆக லின், பரமசிவன் நெற்றியிற் கண்ணுடையவனு யிருத்தலினுல் அவன் எக் காலத்தும் அறிவுடையவனுகவே யிருக்கின்றவனென ஏற்படும்; இதனுல் ஒரு காலத்தில் அறிவோடு விழித்துக்கொண்டும் ஒரு காலத்தில் அறிவின் றித் தூங்கிக்கொண்டு மிருக்குந் தெய்வமல்லவென ஏற்பட்டது. ஆகையால்,

அந்த அறிவாகிய நெற்றிக் கண்ணுடன் மற்றைய விரண்டு கண்களையும் கூட்டி 'முக்கண் உடையான்' எனினும் பொருந்தும்.

பிரமனாகிய நீயும், உன் தந்தையாகிய விண்டுவும், திருநேத்திரதாரி யாகிய கடவுளும் முறையே படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய முத்தொழில் களை யியற்றுவதனால், நீங்கள் மூவரும் சமமாக உலகினுக்குக் காரணப்படு கின்றமையின், உங்களுக்குள்ள முதல்வன் எவன், சந்தேகமறச் சொல்ல வேண்டும் என்பதால், இதனால் படைப்புத் தொழிலும், காப்புத் தொழிலும் அத் தொழிற் கதிபதிகளும் சங்கார காலத்தில் ஒழிந்து போகின்றமையால் அச் சங்காரத் தொழிலுக்குத் தலைவராகிய கடவுளே முதல்வ னென்ற படியாம்.

வேதத்துட் காரண வாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் முதலியோரைக் காரணமென்றது, குயவன்போல வந்த காரணமாதல் பற்றியே யாகலின், அவையெல்லா மாகுபெயராற் சங்கார காரணராகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்கு மாகலினாலும்; செய்தும், செய்வித்து மெல்லாத் தொழிற்கும் வினை முதலாய் நிற்கு முதற்கடவுள் சங் கார கருத்தா வொருவனேயாம்.

அங்ஙனமாயின், பிரமா முதலிய கிருத்திய கர்த்தாக்களைச் சிவனென்று சொல்லுவ தென்னெனின், சிருட்டி முதலிய கிருத்தியங்களைச் செய்யுஞ் சிவசத்தி பிரமா முதலாயினா ரிடத்துப் பதிய அவர்களும் சிருட்டி முதலிய அவனுடைய பிரேரகத்தி லிவர்களும் தொழில்களைச் செய்கையால், இவர் களையுஞ் சிவனெனப்படும். எதுபோல வெனின்? ஆசாரியரை யந்தச் சிவ னது சத்தி யதிட்டித்துக் கிரியையைக் கடந்த அவரைச் சிவனென்றே கருதுமாறு போலாம். மிருகேந்திரம்: "ஸ்வா வேவ்யாஸ்தே போதயந் ரோதயோக்யாந் ரோத்யாந் ருந்தந் வாசயந் கர்மி கர்மா । மாயா ஶக்திர் வித்தியோக்யா: ப்ரகுர்வந் பஶ்யந ஸர்வம் யத்ய தாவஸ்தி" என்றதனாற் காண்க. (2)

கண்டன வல்ல வென்றே
கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதிலா முத்தி; அத்தால்
பண்டையிற் படைப்புங் காப்பும்
பறந்தன மாயை யோடே;
வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன்?

(இ - ள்) கண்டன - காணப்பட்டனவாகிய பொருள்களெல்லாம், அல்ல என்றும் - பரம்பொருளல்ல என்று, கழித்திடும் - நேதி வாக்கியத்

தால் களைந்து சொல்லுகின்ற, இறுதிக்கண் - முடிவிடத்தில், கொண்டது - பரம்பொருளென்று கொள்ளப்பட்டது யாது?, (அது) பரமானந்தம் - மேலான சுகத்தினைத் தருகின்ற, கோது இல்லா - குற்றமற்ற, முத்தி - மோட்சமாகும்; அத்தால் - அதனால், பண்டையின் - முன்னதாகிய, படைப்பும் - சிருட்டியும், காப்பும் - திதியும், மாயையோடே பறந்தன - மாயையோ டொழிந்தன; வெள் தலைவிழி - வெண்மையாகிய தலையும் கண்ணும், கை காலில் - முறையே கையினிடத்தும் காலினிடத்தும், விளங்கிட - பிரகாசிக்கும்படி, நின்றான் - சர்வசங்கார காலத்தில் தனித்து நின்றவன், யாவன் - எவன்?, என்க.

(வி - ரை) வாழையி னுள்ளீடாகிய தண்டு தோன்றுமளவும் மட்டைகளைக் கழித்துக்கொண்டே போவதுபோல, காணப்பட்ட பொருள்களெல்லாவற்றையும் 'இது பொருளல்ல, அது பொருளல்ல' என்றும் பரம்பொருள் தோன்றுமளவும் கழித்துக்கொண்டே செல்லவேண்டுமென்பார், 'கண்டன அல்லவென்று கழித்திடும்' என்றனர். ஏகமாகிய முதல்வன் அத்துவிதமா யிருத்தலின் இன்மை மறுதலையாகக் கூறும் பொருள்களுக்கிடனாகாது, ஒன்றாகாமலும், இரண்டாகாமலும், ஒன்று மிரண்டு மின்றாகாமலுமாயுள்ள அனன்னியத்தினை விளக்கும் அன்ன பொருளுக் கிடனாய் நிற்றலின், 'கண்டன அல்லவென்றே கழித்திடும்' என்றன ரெனலுமாம். திருவிளையாடற் புராணம்: "அல்லவீ தல்லே யீதெனா மறைகளு மன்மைச் சொல்லினாற் றுதித் திளைக்கும்." என்றதனாற் காண்க. இங்ஙன நியதிகளைந்து சென்றவிடத்து சேஷத்துத் தத்துவாதீதனாய் நிற்பது முதல்வனாகலினாலும், அதனாலே கிடைப்பது மோட்சமாகலினாலும், 'இறுதிக்கண்ணே, கொண்டது பரமா னந்தக் கோதிலா முத்தி' என்றனர்.

பிரமாவினாற் படைக்கப்பட்டும், விஷ்ணுவால் காக்கப்பட்டும் வருகிற பிரபஞ்சமானது மாயாகாரிய மாகலினால், சர்வசங்கார காலத்தில் காரியமாகிய பிரபஞ்சம் மாயையி லொடுங்கப், படைப்பும் காப்பு மக்காலத் தொழிந்துபோ மாதலினால் 'பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயையோடே' என்றனர். வெண்டலை - பிரம கபாலம். விழி - திருமாலின் கண். தானே பிரமமெனத் தருக்குற்ற பிரமனது ஐந்தாவது தலையை நக நுனியால் வைரவர் கிள்ளிக் கரத்தி லேற்றமையே பிரமகபாலமாம். பிரமாண்ட புராணம்: "ஸஸர் ஜஸ்வாத்யக꞉ கிம்சித்பைரவம் லோகதாருகம் । ஸ்வியம் ஸாக்ஷாத் மஹாதேவ꞉ க்ஷணு வைகால பைரவ꞉ சகர்த்தகர ஜாக்ரேண ஸ்ரஹ்மண꞉ பஞ்ச சமம் ஶிர꞉" எனவும், வாமன புராணம்: "தர்ச்ரித்வாக் ரோதயுக்தே நஶம் கரேணமஹாத்மநா நகாக்ரேண ஶிரஶ் சிந்நம்ப்ராஹ்மம் பருஷ வாதியத் । தச்சிந்நம் ஶங்கம் வ்யை வஸவ்யே கரதலே ஸவத்பதிநேநததா சித்து தச்சம்ஙராச்சிர꞉ ॥ இத்யாதிஸக்ருத் வாஸ꞉ மஹத்புத்தம் ப்ரஹ்மண꞉ கரலபைரவ꞉ சகர்த்ததஸ்யவதநம் விரிஞ்சஸ்யா தபம் சமம் ।" எனவும் வருவனவற்றாற் காண்க.

காஞ்சிப் புராணம்: "வருபடை வேகக் காற்றினின் முரிய விரைந்து செல்வயிரவப் புத்தே, ளிருமலர்க் குரிசில் பழித்திடு மஞ்சாஞ் சிரத்தினை யுகிரினாற் கொய்தான், பெருவிர லுயிர்போல் விழுந்தபின் மீளப் பிஞ்ஞக னருளினா லுய்ந்துமருள்வலி நீங்கியெழுந்தனன், மறையோன் வள்ளலை வணங்கிநின்றேத்தும்." எனவும் வருவனவற்றாற் காண்க.

அசுரர் உபத்திரவத்தினைச் சகியாத தேவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி அவர்களைச் சங்கரிக்கத்தக்க வொரு ஆயுதம் வேண்டுமெனக் கருதிய விண்டுவானவர், திருமாற்பேறு என்னுந் தலத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து, நாளொன்றுக்கு ஆயிரந் தாமரை மலர்களால் அநேக காலஞ் சிவார்ச்சனை செய்துவந்தனர். ஒருநாள், முதல்வன் அவர் பத்தி முதிர்ச்சியானது யாவருக்குந் தெரியும்படி தாமரைமல ரொன்றினை மறைக்கத், திருமால் தன் கண்ணொன்றினைத் தாமரையாகப் பாவித்து அருச்சித்தனர். அப்பொழுது முதல்வன் இடபாரூடராய்த் தரிசனந் தந்து ஒரு சக்கராயுத முதவி, "இதனா லசுரரை யழித்தி" என்றருளி, கண்ணையும் முன்போற் கடாட்சித்துச் செந்தாமரைக் கண்ணனெனப் பெயருங் கொடுத்தனுப்பினரெனப் பன்னூல்கள் கூறுதலின், 'விழிகால்' என்றனர். திருவாசகம்: "சலமுடைய சலந்தரன்ற னுடறடிந்த நல்லாழி, நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ, நலமுடைய நாரணன்ற னயனமிடந் தரனடிக்கீ, ழலராக விடவாழி யருளினன் காண் சாழலோ." எனவும், கூர்ம புராணம்: "வையம் பொதிந்த செங்கனிவாய் மாயோ னன்புக் குண்மகிழ்வுற், றையன் கையாற் புறநீவி யடியிற் புனைந்த மர்க்கண்ணு, மெய்த நல்கிச் சுதரிசன மென்னுஞ் சுடரா ழியுமீந்து, செய்யக் கமலக் கண்ணனெனும் பெயருஞ் சிறப்பி னொடுமளித்தான்." எனவும், உபதேச காண்டம்: "நின்பா லுருகி நினதடிக்கீழ் நெடுங்கண் சாத்து நிலையுலக, மன்பா லறிவா னெனக்கிருக ணம்போ ருகத்தி னருள்கென்னா, மின்பா லுகந்தோ னஃதருளி வேண்ட வேண்டும் வரங்கொடுத்தான், பொன்பான் மருமத் திகிரியினா னடைந்தா னமரர் புடைபோற்ற." எனவும், காஞ்சிப் புராணம்: "ஆங்கவனை யெதிர்நோக்கி நின்பூசைக் ககமகிழ்ந்தே முனக் கின் ஞான்று, தேங்கமல விழியளித்தோம் பதுமாக்க னெனும்பெயரிற் றிகழ்வா யிவ்வூர், பாங்குபெறு திருமாற்பே றெனப்பொலிக வென்றருளிப் பானுகோடி, தாங்குகதிர்ச் சுதரிசனம் பெயராழித் தனிப்படையு முதவி யெங்கோன்" எனவும் வருவனவற்றாற் காண்க. (3)

விளங்கவெண் ணீறு பூசி,
விரிசடைக் கங்கை தாங்கித்,
துளங்குநன் னுதற்கண் டோன்றச்,
சுழல்வளி நெடுமூச் சாகக்,
களங்கமி லுருவந் தானே
ககனமாய்ப் பொலியப், பூமி

வளர்ந்ததா ளென்ன வுள்ள
மன்றென மறையொன் றின்றி.

(இ - ள்) விளங்க - பிரகாசிக்கும்படி, வெள் நீறு பூசி - திரு வெண்ணீற்றினை யணிந்து; விரி சடை - பரந்த சடையினிடத்து, கங்கை தாங்கி - கங்கையைச் சுமந்து; துளங்கு - ஒளியைச் செய்கின்ற, நல் - அழகாகிய, நுதல் கண் தோன்ற - நெற்றிக்கண் காணப்படவும்; சுழல் வளி - சுழலா நின்ற காற்றானது, நெடு மூச்சு ஆக - பெருமூச்சாகவும்; ககனமே - ஆகாயமே, களங்கம் இல் - குற்றமற்ற, உருவமாய் பொலிய - வடிவாகப் பிரகாசிக்கவும்; பூமி - பூமியே, வளர்ந்த தாள் என்ன - நீண்ட திருவடியாகவும், மன்று - சிற்சபையானது, உள்ளம் என - இதயமாகவும், (கொண்டு) மறை ஒன்று இன்றி - சிறிது பிரகசிய மில்லாமல், என்க.

(வி - ரை) மேற்பாட்டின் கடையடியில் 'யாவன்' என்ற வினாவிற்கு விடையாக இச் செய்யுளினையும் அடுத்த செய்யுளினையும் நிறுத்தி, முதல்வனுடைய அடையாளங்களை நன்கு விளக்கி, யாவர்க்கு மிறைவ னிவன்றானென நிரூபிக்கின்றனர். சர்வசங்கார காலத்தில் தான் தனித்து நின்று தனது அருட்சத்தி மாத்திரங் காண நின்றாடுஞ் சமயத்தில், நெற்றியில் விபூதியானது காணப்படு மென்பார், 'விளங்கவெண் ணீறுபூசி' என்றனர்.

முதல்வன் திருவிழிகளை லீலார்த்தமாக வொருகாலத்தில் தேவியார் தமது திருக்கரங்களால் மூடிய கணமொன்றில் உயிர்கட்கு ஊழி பல இருண்டமை கருதி உடனே எடுக்கையில் அம்மையாருக்கேற்ற அச்சத்தில் விரல்கள் பத்திலும் வியர்வுண் டாகிய கங்கை உலகத்தினை யழிக்கும்படி யிரைந்து வருகையில், அதன் வீறு குன்ற விமலர் தமது வேணியலணிந்தமையானும்; முதல்வன் பிரசாதத்தினாற் பிரமன் ஒரு காலத்தில் தனது மனோவதி நகரினுக்குக் கொண்டுபோன கங்கை, பகீரதன் வேண்டுகோளால் பூமியில் வந்தபோது உலக மழியாமல் முதல்வன் தனது சடையிலேற்றமையானும், 'விரிசடைக் கங்கை தாங்கி' என்றனர். திருவாசகம்: "மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி, சலமுகத்தா லவன்றலையிற் பாயுமது வென்னேடி, சலமுகத்தா லவன்றலையிற் பாய்ந்திலளேற் றரணியெலாம், பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ." எனவும், கந்தபுராணம்: "அக்கதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை, தன்னருந் திறலின் மிக்க பகீரதன் தவத்தான் மீளப், பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றாங்கி, இச்சில வரைப்பிற் செல்ல விரையதில் விடுத்தல் செய்தான்." எனவும், நவமஸ்கந்தம்: "கம்சதா ரதிதா வேகம் பதிஷ்யௌமி பஹீதலே। பரீரத: தாரதிஷ்யதிதே வேகம்ருத்ர ம்ஸாத்மாமரீரிணாம் । யஸ்மந்தத மிதம்ப்ரோதம் விம்வம் । மாடீவதம் துஷு-" எனவும் வருவனவற்றாற் காண்க.

முதல்வனது விராட்டுருவத்தில் வளி மூச்சாகவும், உருவம் ககனமாக வும், பூமி தாளாகவும், உள்ளம் மன்றாகவும் பொலிந்திருக்கு மென்றனர். உள்ளத்தினை 'மன்று' என்றது தில்லை யிருதயபுண்டரீக மாகலி னென்க. (4)

மறைமுழக் கொலிப்பத் தானே,
வரதமோ டபயக் கைகள்
முறைமையி னோங்க, நாத
முரசெனக் கறங்க, எங்கும்
குறைவிலா வணநி றைந்து
கோதிலா நடனஞ் செய்வான்
இறையவ னெனலா மியார்க்கு
மிதயசம் மதமீ தல்லால்.

(இ - ள்) மறை முழக்கு ஒலிப்ப - வேத முழக்கமானது சத்திக்கவும்; வரதமோடு அபய கைகள் - வரதாபய அஸ்தங்கள், முறைமையின் ஓங்க - முறையாக மிக்கு விளங்கவும்; நாதம் - நாத தத்துவமானது, முரசு என கரங்க - பேரிகை போல வொலிக்கவும்; எங்கும் - எவ்விடத்தும், குறைவு இல்லா வண்ணம் - குறைவில்லாதபடி, நிறைந்து - நிறம்பி, கோது இல்லா நடனம் செய்வான் - குற்றமற்ற நடனம் பண்ணுவோன் யாவன்?, (அவன்) இறைவன் - முதல்வன், எனலாம் - என்று சொல்லலாம்; யார்க்கும் - எல்லார்க்கும், இதய சம்மதம் - இதய சம்மதமான காரியம், ஈது அல்லால் - இதுவாமன்றி, என்க.

(வி - ரை) வரதக் கை - வரங் கொடுக்கும் இடது கை. அபயக் கை - பயமொழிக்கும் வலது கை. கோதிலாத நடனம் - ஞானநடனம். முந்திய செய்யுள்களில் 'இறைவன் யார்' எனச் சங்கித்து, 'பிரமனும் விண்டுவும் இறைவரல்ல' எனக் காரணங் கூறிக் கழித்து, இறைவ னிவன்றானென அவனருமை அடையாளங்களில் சில எடுத்துக் கூறி, இச் செய்யுளில் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆனந்த நிர்த்தனஞ்செய்யும் ஆண்டவனே இறைவ னெனத் தாபித்தனர். வரதக்கையானது அடியாரை நோக்கி, 'அன்பர்காள்! இத் திருவடியின் கீழ் நீழலை அடையுங்கள்!' எனக் குஞ்சித பாதத் தினைக் காட்டிக்கொண் டிருக்கும். 'அங்ஙன மடைந்தால் மோட்சமளித்து ஆதரிப்போம்; பயப்பட வேண்டாம்' என அபயக்கை காட்டிக்கொண் டிருக்கும். (5)

அல்லலாந் தொழில்ப டைத்தே,
அடிக்கடி யுருவெ டுத்தே,
மல்லன்மா ஞாலங் காக்க
வருபவர் கடவு ளென்னில்,

தொல்லையாம் பிறவி வேலை
தொலைந்திடா திருணீங் காது;
நல்லது மாயை தானு
நானென வந்து நிற்கும்.

(இ - ள்) அல்லல் ஆம் தொழில் படைத்து - துக்கரூபமாகிய தொழிலைப் பெற்று, அடிக்கடி உரு எடுத்து - அடிக்கடி சரீரம் எடுத்து, மல்லல் - வளம்பொருந்திய, மா - பெரிய, ஞாலம் - உலகத்தினை, காக்க வருபவர் - இரட்சிக்க வருபவர்கள், கடவுள் என்னின் - கடவுள் என்றால், தொல்லை ஆம் - பழமையாகிய, பிறவி வேலை - பிறவிக் கடலானது, தொலைந்திடாது - நீங்காது; இருள் நீங்காது - அஞ்ஞானம் விலகாது; நல்லது மாயைதானும் - நன்மையாய்த் தோன்றுகிற மாயையும், நான் என வந்து நிற்கும் - நானென்று வந்து நிற்கும், என்க.

(வி - ரை) படைப்பும் காப்பும்: தனு கரண புவன போகங்களில் ஆன்மாக்கள் மொத்துண்டலைவதற்குக் காரணமாக விருத்தலின், 'அல்லலாந் தொழில்' என்றனர். அத்தகைய படைப்புக்கும், காப்புக்கும், கர்த்தாக்களாயுள்ள பிரமனும், விண்டுவும் அடிக்கடி பிறக்கின்ற தன்மையையுடையவர்களாகையால், 'அடிக்கடி வுருவெடுத்தே' என்றனர். பல நூல்களிலும் அவ்விருவருக்கும் இறப்பு, பிறப்பு ஏராளமாகக் கூறப்பட்டிருத்தலினு லிங்ஙனங் கூறினர். சிவஞானதீபம்: "சதுரியுக மவையிரண்டா யிரந்தான் சென்றாற் சதுமுகனுக் கொருதிவசம் தகையார் வாணி, பதிமகிழ்ந் தினத்திலொரு பகலிற்றானே பதினால்வ ரிந்திரர்தம் பதம்போ மிந்த, விதிபடைவே பிரமரொரு கோடி நீங்கில் விண்டுவினுக் கொருபகலாய் விழியிற் றுஞ்சு, மதிதிருமா லொருகோடி யிறக்குங் காலமலரளக மலிழ்த்துமையாள் முடிக்கு நேரம்." எனவும், அருணையந்தாதி: "கோடிவிதி மாளிற் குலாவுகம லக்கண்ண, னோடி வடபா லுறங்குமே - நாடுங்கா, லக்கண்ணர் கோடி யழியிலரு ணேசன், நக்கனருள் சற்றே நகும்." எனவும், தேவாரம்: "நூறு கோடி பிரமர்க ணொங்கினர், ஆறு கோடி நாராயண ரங்ஙனே, ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர், ஈறிலாதவ னீசனொருவனே." எனவும், அதர்வசிகை: "ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேஸ்தே ஸவேஸம் ப்ரஸூயந்தே" எனவும் வருவனவற்றாற் காண்க. (இச் சுலோகத்தில் ருத்திர னென்றது குணருத்திரனை.)

அந்தக னொருவன் கண்ணுள்ளா னொருவனைத் துணையாகக் கொண்டு நடக்கின் தானினைத்த பதியிற் போய்ச் சேருவன்; அங்ஙன மல்லாது தன்னைப்போலு மந்தகனைத் துணையாகக் கொண்டு நடக்கின் இருவரும் படுகுழியில் வீழ்ந்து துன்பமடைவர். அதுபோல, பிறவியில் மொத்துண்டலைபவன் பிறப்பில்லாத முதல்வனைத் துணையாகக் கொள்ளின் தான் கருதிய பலனை யடைவன்; அங்ஙன மல்லாது தன்னைப்போலும் பிறப்பில் மொத்

துண் டுழலுங் கடவுளினைத் துணையாகக்கொள்ளின் இருவரு மொருங்கு சேர்ந்து துன்பப்படவேண்டு மாகலின், 'கடவுளென்னில் தொல்லையாட பிறவிவேலை தொலைந்திடாது' என்றனர். அக் கடவுளரை நம்புவார்க்கும் பிறவி நீங்கா தொழியவே, ஆணவந் தலையெடுக்கு மாகலின், 'இருணீங காது' என்றனர். ஆணவங் காரணமாக மாயை வந்தடையு மாகலின் 'மாயைதானு நானெனை வந்துநிற்கும்' என்றனர்.

மாயையானது, ஆன்மாக்களுக்கு முதல்வனுடைய ஞானமாகிய கிரணந் தோன்றி ஆணவவிருள் நீங்குமளவும் தன்னிடத்தே னின்றுந் தனு கரண புவன போகங்கள் அவரவர்கள் புண்ணிய பாவங்களுக் கீடாகத் தோன்றிச் சிறிதே மலவிருளினை நீக்கி விடய வின்பங்களைக் காட்டும் விளக்குப்போன் றிருப்பதால், 'நல்லது மாயை' என்றனர். திருவருட்பயன் "விடிவா மளவும் விளக்கனைய மாயை, வடிவாதி கன்மத்து வந்து" என்றதனாற் காண்க. (6

நானெனை நிற்கு ஞான
ஞானமன் றந்த ஞானம்
மோனமா யிருக்க வொட்டா;
மோனமின் றாக வேதான்
தேனெனை ருசிக்கு மன்பாற்
சிந்தைநைந் துருகும் வண்ணம்
வானெனை நிறைந்தா னந்த
மாகடல் வளைவ தின்றே.

(இ - ள்) நான் என நிற்கும் ஞானம் - நானென்று விவரிக்காநிற்கின்ற ஞானமானது, ஞானம் அன்று - ஞானமல்ல; (எனெனின்) அந்த ஞானம் - அந்த ஞானமானது, மோனமாய் இருக்கவொட்டா - மோனமாயிருக்கவொட்டாது; (ஆதலால்) மோனம் இன்றாகவே - மோனம் இல்லையாயினபோதே, தேன் என - தேன்போல, ருசிக்கும் அன்பால் - உருசிக்கின்ற அன்பினாலே, சிந்தை - மனமானது, நைந்து உருகும் வண்ணம் - நைந்து கரையும்படி, ஆனந்தம் - சுகமாகிய, மா - பெரிய, கடல் - கடலானது, வான் என நிறைந்து - மேகங்கள்போல நிறைந்து, வளைவது இன்று - வளைதல் இல்லை, என்க.

(வி - ரை) நானெனக் கூறப்படுவதாகிய மயக்கத்தினை அறுத்துள்ள புருஷன் யாவனோ அவனே மெய்யுணர்வுடைய ஞானியாகலின், 'நானெனை நிற்கு ஞான ஞானமன்று' என்றனர். பிரபுலிங்கலீலை: "யானெனை தென்ப திருந்திடு காறு, ஞானமு ஞானது நண்ணில ஞயிற், றுனிலை யாத சகந்திகழ் கிற்கும் தீனமி லாத சிவந்திக ழாதே." எனவும், திருக்குறள்: "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்." எனவும் வருவனவற்றாற் காண்க. மோனங் கைகூட வேண்டு

மாயின் ஞான மத்தியாவசிய மாகலின், அந்த ஞானம் நானெனை நிற்கு ஞானமல்ல வாகையால், இந்த ஞானத்தால் மோனம் கூடாதென்பார், 'மோனமா யிருக்க வொட்டா' என்றனர். மோன நிலை பெறுதிருக்கவே சிவானந்தம் விளையாதென்பார், 'ஆனந்த மாகடல் வளைவ தின்றே.' என்றனர். பஞ்சாக்கரவந்தாதி: "பாடுவதும் பஞ்சாக் கரவனை யென்றும் படர்தலொடுங், கூடுவ தன்னவன் பாத மதுவர்து கூடுதலு, நீடுவ தின்ப மனவாக்குக் காய நிகழ்செயலற், ருேடுவ வாளாங் கிருப்பதல் லாற்பின்னை யொன்றில்லையே." என்றதனுற் காண்க. (7)

இன்றென விருப்போ மென்னி
னென்றுஞ்சூ னியமா முத்தி;
நன்ருெடு தீது மன்றி
நாமுன்னே பெறும வித்தை
நின்றது; பெத்தந் தானே
நிரந்தர முத்தி யென்னின்,
ஒன்ருெரு வரைநான் கேட்க
வுணர்வில்லை; குருவு மில்லை.

(இ - ள்) இன்று என இருப்போம் என்னின் - இல்லையென் றிருப்போ மென்ருல், என்றும் - எக்காலத்தும், முத்தி - முத்தியென்பது, சூனியம் ஆம் - சூனியமாய் முடியும்; (அப்போது) நன்ருெடு தீதும் அன்றி - நன்மையொடு தீமையு மல்லாமல், நாம் முன்னே பெறும் அவித்தை நின்றது - நாம் முன்னமே யடைந்திருந்த அவிச்சை நிலைபெற்றது; பெத்தம் தானே - அந்த அவிச்சை நிலைபெற்றிருந்த பெத்தநிலையே, நிரந்தரம் - சதாகாலமும், முத்தி என்னின் - முத்தியென்று சொன்னல், ஒருவரை - ஒருத்தரை, நான் ஒன்று கேட்க - நானென்றைக் கேட்பதற்கு, உணர்வு இல்லை - அறிவில்லை; குருவும் இல்லை - ஆசாரியனு மில்லை, என்க.

(வி - ரை) ஆனந்தமொன்று வேண்டுவதில்லையென விருப்போ மெனில், வேதாகம இதிகாச புராணங்களிற் கூறப்படும் முத்தியெனு மொரு நிலை யில்லையாய் முடியுமாகையால், 'இன்றென விருப்போ மென்னி னென்றுஞ் சூனியமா முத்தி' என்றனர். முத்திக்கேதுவான ஆனந்த மொன்றினை யனுபவிக்க வேண்டுமென்கிற முயற்சி யொழியவே, இது நன்மை இது தீமையென்னும் விசாரமற்று வாழ நேரிட்டு அஞ்ஞானந் தலையிடு மென்பார், 'நன்ருெடு தீதுமன்றி நாமுன்னே பெறுமவித்தை' என்ருர். 'பெத்த நிலையே சத்தியமெனவும், முத்திநிலை யென்ப தொன்றில்லை யெனவும் கொள்வோம்' என்னில், குருசீட பரம்பரை யென்ப தொழிந்து போம் என்பார், 'நின்றது பெத்தந் தானே நிரந்தர முத்தி யென்னின், ஒன்ருெரு வரைநான் கேட்க வுணர்வில்லை, குருவு மில்லை' என்றனர். (8)

இல்லையென் றிடினிப் பூமி
　　யிருந்தவா றிருப்போ மென்னில்,
நல்லவன் சாரு வாகன்;
　　"நான்சொலு நெறிக்கு வீணில்
தொல்லையேன்? ஆக மாதி
　　தொடுப்பதேன்? மயக்க மேதிங்
கொல்லவந் திருமின்!" என்ன
　　உறவுசெய் திடுவ னந்தோ.

(இ - ள்) இல்லை என்றிடின் - இல்லையென்று சொல்லின்; இ பூமி-இந்த உலகம், இருந்தவாறு - இருந்த பிரகாரம், இருப்போம் என்னில் - இருப்போமென்றால், நல்லவன் சாருவாகன் - நல்லவனாகிய சாருவாகன், நான் சொலு நெறிக்கு - நான் சொல்லுகின்ற மார்க்கத்தை யனுட்டிப்பதற்கு, வீணில் - வீணாக, தொல்லை என்? - தொந்தரவு யாதுக்கு?, ஆகமாதி தொடுப்பது என்? - ஆகமமுதலியவைகளைத் தொடங்குவது யாதுக்கு?, மயக்கம் ஏது - மயக்கம் யாதுக்கு?, இங்கு - இவ்விடத்தில், ஒல்லை - விரைவில், வந்து இருமின் என்ன - வந்து என்னோடு கூடி யிருங்களென்று, உறவு செய்திடுவன் - நட்பு செய்வான், என்க.

(வி - ரை) இயற்கையா யாவும் நடக்கிறபடி நடக்கிறது, குரு சீட விவகார மெற்றுக்கென்னில், உடனே கிரீச்சுரவாதி வந்தடுத்து, 'ஆம் ஆம்; அது மெய்; ஆகமமுதலிய நூல்களை நம்பித் தொல்லை யுறுவானேன்? என்னுடன் கூடிச் சுகமாக வாழ்வாய்" என்று சிநேகஞ் செய்துகொள்வன் என்பார், 'இல்லையென் றிடில்......உறவுசெய் திடுவ னந்தோ' என்றனர். சாருவாக னென்னும் கிரீச்சுரவாதி யென்பான் பிரத்தியட்சமொழிய அனுமானமுதலிய கொள்ளாமல், கன்மமும் ஆன்மாவும் கடவுளுமில்லையென்று சொல்லி இம்மைப் பயனாகிய மகளிரிடத்துண்டாகிய இன்பமே பொருளெனக் கொண்டவன். சித்தியார்: "ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை யுள்ளி, வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின், கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கையாகி, நீடுவ தின்ப முத்தி யித்தினின் றோர்கள் முத்தர்." எனவும், "வாசமார் குழலார் தங்கள் மணியல்குற் றடத்தே மூழ்கி, நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறைய வுண்டு, தேசுலா மணிமென் றோண்மேற் சேர்ந்துவீற் றிருந்தி டாதே, வாசுலா மனத்தோ ரெல்லா மறுமைகொண் டழிவர் மன்னோ." எனவும், "வீட்டினை யுளதென் றோடி மெலிவதிங் கென்னை வீடு, காட்டுவோர் கண்டோர் கேட்டோர் கரியவை யுண்டேற் காட்டீர், நாட்டினி லரச ராணைக் கிசையவே நடந்து நாளு, மீட்டிய பொருள்கொண் டிங்கே யின்பத்தி னிசைந்தி டீரே." எனவும் வருவனவற்றாற் காண்க. (9)

அந்தணர் நால்வர் காண
வருட்குரு வாகி வந்த
எந்தையே! எல்லாந் தானென்
றியம்பின னெமைப் படைத்த
தந்தைநீ; எம்மைக் காக்குந்
தலைவனே நுந்தை யன்றோ?
பந்தமில் சித்தி முத்தி
படைக்கநின் னருள்பா லிப்பாய்!

(இ - ள்) அந்தணர் நால்வர் காண - வேதியர் நால்வர் காணும்படி, அருள் குரு ஆகி வந்த - அருளுருவாகிய ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளின, எந்தையே! - எமது பிதாவாகிய முதல்வனே!, எல்லாம் தான் என்று - எல்லாப் பொருள்களுந் தானேயென்று, இயம்பினன் - சொல்லினான்; (ஆயினும்) எம்மைப் படைத்த தந்தை நீ - எங்களைச் சிருஷ்டித்த பிதாவு நீ; எம்மை - எங்களை, காக்கும் - இரட்சிக்கின்ற, தலைவன் - முதல்வன், நுந்தை அன்றோ? - உன் தந்தையாகிய திருமாலல்லவா?, பந்தம் இல் - பிணிப்பற்ற, சித்தி முத்தி படைக்க - சித்தி முத்திகளைப் பெற்று வாழ்வதற்கு, நின் அருள் பாலிப்பாய்! - உன் கிருபையைத் தந்தருள வேண்டும், என்க.

(வி - ரை) முதல்வன் திருக் கைலாயத்திலே, கல்லால விருட்சத்தின் நீழலிலே, தட்சணாமூர்த்தி கோலங்கொண் டெழுந்தருளிச் சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் ஆகிய நால்வருக்குஞ் சிவஞானபோத முபதேசித்த முதல்வனே, உடலும் உயிரும் போலவும், பாலுநீரும் போலவும், பரிதியு மதியும் போலவும், உலகத்தோடு வேற்றுமையின்றிக் கலப்பால் ஒன்றாய்த்தான் இருப்பேனென் றுரைத்தா னென்பார், 'அந்தணர் நால்வர் காண வருட்குருவாகி வந்த எந்தையே! யெல்லாந் தானென், றியம்பினன்' என்றார். படைப்புக் கடவுள் பிரமனும், காப்புக்கடவுள் அவன் றந்தையு மாகலான், 'எமைப்படைத்த தந்தைநீ; எம்மைக் காக்குந் தலைவனே நுந்தை யன்றோ?' என்றனர். சித்தி - இம்மைப்பலனும், முத்தி மறுமைப் பலனுமாம். ஈண்டுப், 'பந்தமில் சித்தி' என்றதனால், அருட்சித்தி யெனக் கொள்க; அணிமாமுதலிய சித்தியை யன்று; இவை பந்தமுறு சித்தியாம். "அஷ்டமா சித்தியு மென்செய" என இவ்வாசிரியரே கூறியுள்ளதனைக் காண்க. (10)




# பன்மாலை

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்ச மென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர் ;
நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன் ;
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனே னெந்நாளுந் துதித்து நிற்பேன் ;
என்மாலை யறிந்திங்கே 'வா ! வா !' என்றே
யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பி ரானே !

(இ - ள்) பன்மாலை திரள் இருக்க - பலவகையாகிய பூமாலைத் தொகுதி யிருக்கச்செய்தே, (அவற்றில் விருப்பம்வையாது) தம்மை உணர்ந்தோர் - தம்மை யுணர்ந்தோர்களாகிய ஞானிகளுடைய, பாமாலைக்கே - கவி மாலைகளிடத்தே, நீ - நீ, பட்சம் என்று - விருப்பஞ் செய்வாயென்று, நன்மாலை ஆ - (பூமாலை பாமாலை யென்னு மிரண்டனுள் பாமாலையே) சிறந்த மாலையாக, எடுத்து - தெரிந்தெடுத்து, நல்லோர் - பெரியோர்கள், சொன்னார் - உன் திருவடியிற் சூட்டினார்கள் ; நலம் அறிந்து - நன்மையாவ திதுவென்று பாகுபடுத் துணர்ந்து, கல்லாத - அந் நன்மையைத் தரும் வீட்டு நூல்களைக் கற்றறியாத, நானும் - அடியேனும், சொன்னேன் - பாமாலை சூட்டினேன் ; சொல் - சொல்லப்பட்ட, மாலை மாலை ஆ - தாரை தாரையாக, கண்ணீர் சோர - கண்ணீ ரொழுக, தொண்டனேன் - உன் தொழும்பு பூண்டவனாகிய நான், எந்நாளும் - (இன்று போலவே) எக்காலத்திலும், துதித்து நிற்பேன் - வழுத்தாநிற்பேன் ; திருக்கருணை எம்பிரானே ! - சிறந்த கருணையினையுடைய எம்மிறைவனே !, என் மாலை அறிந்து - என் விருப்பத்தை யுணர்ந்து, இங்கே வா ! வா ! என்றே - இங்கே வருவாய் வருவாய் என்று சொல்லிக்கொண்டே, என்னை கலப்பாய் - என்னைச் சேர்வாயாக, என்க.

(வி - ரை) கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகை மலர்களாற் சமைத்த பூமாலைக்கு மணமறல், வாடல், தேன்பிலிற்றாமை முதலிய குணங்க ளுண்மையாலும் ; பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொன்மலர் பத்தியிற் பதிய, எண்சுவைத் தேன் பரவ, அணி வாய்ப்ப, திக்கு முழுமையுஞ் சிவமணங் கமழ்தர, அன்பெனு நாரிற் றொடுக்கப்படுஞ் சிறப்பு சொன்மாலைக் குண்மையானும், பூமாலையினுஞ் சொல்மாலையி னிடத்திலேயே முதல்வனுக்கு விருப்ப மென்பார், 'பன் மாலைத் திரளிருக்கத்தமையுணர்ந்தோர் பாமாலைக் கேநீதான் பட்ச

மென்று' என்றனர். திருவாநர் நான்மணிமாலை: "தண்மல ரும்பொ ழிற் றென்கம லேசற்குச் சாத்துகின்ற, வொண்மலர் சொன்மலர்க் கொவ் வாதுபோலுமற் றோர்புலவன், பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த, கண்மலர் சாத்தியுங் காண்பரி தான கழன் மலரே." என் றதனுற் காண்க. ஆகலின், திருவருட் பெருஞ் செல்வராகிய சமயகுர வர்கள் முதலியோர் பாமாலையினையே சூட்டினு ரென்பார், 'நன்மாலையா லெடுத்துச் சொன்னார் நல்லோர்' என்றனர். ஆகையால் முதல்வனாகிய நீ பாமாலையிடத்துப் பிரியம் வைத்திருத்தலினாலேயும், "மையல்கொண்டழு கேனே" எனவும், "அழுதாலுன்னைப்பெறலாமே" எனவும் திருவாதவூரடிகள் கட்டளையிட் டிருத்தலினாலும், நான் அழுது அழுது பாடினேன் என்பார், 'சொன்மாலை மாலையாகக் கண்ணீர் சோரத் தொண்டனே னெந்நாளுந் துதித்து நிற்பேன்' எனறனர். (1)

கருணைமொழி சிறிதில்லேன்; ஈத லில்லேன்;
கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக் கேற்க
ஒருபொழுதும் பெற்றறியேன்; என்னை யாளு
மொருவா! உன் னடிமைநா னொருத்த னுக்கோ
இருவினையு, முக்குணமுங், கரண நான்கும்,
இடர்செயுமைம் புலனுங்,கா மாதி யாறும்,
வரவரவு மேழைக்கோ ரெட்ட தான
மதத்தொடும்வந் தெதிர்த்தநவ வடிவ மன்றே!

(இ-ள்) கருணை மொழி சிறிது இல்லேன் - நான் தயையோடு கூடிய மொழி சிறிது மில்லாதவன்; ஈதல் இல்லேன் - ஈகையில்லாதவன்; என்றன் கருத்துக்கு ஏற்க - என் கருத்துக் கிணங்க, ஒரு பொழுதும் - ஒரு காலத்தும், கண்ணீர் கம்பலை பெற்று அறியேன் - கண்ணீர் கம்பல்களைப் பெற்றறியேன்; என்னை ஆளும் ஒருவா - என்னை ஆண்டருளாநின்ற ஒப் பற்றவனே,, உன் அடிமை நான் ஒருத்தனுக்கே - உன்னடிமையாகிய என் ஒருவனுக்குத்தானே, இரு வினையும் - இரு வினைகளும், முக்குணமும் - முக்குணங்களும், கரண நான்கும் - நாற்கரணங்களும், இடர் செய்யும் ஐம் புலனும் - துன்பத்தைச் செய்கின்ற ஐம்புலன்களும், காமாதி ஆறும் - காமம் முதலாகிய ஆறும், வரவரவும் - வரவர, ஏழைக்கு - அறிவிலியாகிய எனக்கு, ஓர் எட்டதான - ஒரு எட்டாகிய, மதத்தொடும் - கர்வங்களுடன், வந்து எதிர்த்த - வந்து சம்பவித்தன; நவ வடிவம் - நவந்தரு பேதமா யுள்ள, மன்றே! - சிதாகாயமே!, என்க.

(வி-ரை) 'ஞயம்பட வுரை." "ஐயமிட் டுண்." என்பவை கட்கு மாறாக உள்ளேன் என்பார், 'கருணைமொழி சிறிதில்லேன், ஈத லில்லேன்' என்றனர். "அழுகே னின்பா லன்பா மனமாய்" என்றதற் கேற்ப, 'கண்ணீர்கம்பலையென்றன் கருத்துக் கேற்க, 'ஒருபொழுதும்

பெற்றறியேன்' என்றனர். கம்பலை - நடுக்கம். இருவினை - நல்வினை, தீவினைகள். முக்குணம் - சாத்துவிகம், இராசதம், தாமதம். கரணம் நான்கு - மனம், புத்தி, சித்தம், அகங்காரம். ஐம்புலன் - சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம். காமாதி ஆறு - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம். எட்டான மதம் - குலம், ரூபம், யவ்வனம், வித்தை, தனம், பிரபுத்துவம், சகாயம், சகசம். நவந்தரு பேதம் - பிரமன், விண்டு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், சத்தி, சிவம், நாதம், விந்து. (2)

வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே! எளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவே! என் றெய்வமே! கோதி லாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படியெனக்குன் றிருக்கருணை பற்றுமாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்க வேண்டும்;
அடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே!

(இ - ள்) வடிவு அனைத்தும் தந்த - உருவங்கள் எல்லாவற்றையும் படைத்த, வடிவு இல்லா - உருவ மில்லாத, சுத்தம் - தூய்மையான, வான் பொருளே! - மேலான பொருளே!, எளியனேன் - எளியனேனது, மனம் ஆம் - மனத்தி லுண்டாகிய, மாயை - மாயையின், குடி கெடுக்க - குடியைக் கெடுப்பதற்காக, துசம் கட்டிக்கொண்ட - கொடி கட்டிக்கொண்ட, மோன குருவே! - மௌனகுருவே!, என் தெய்வமே! - எனது கடவுளே!, எனக்கு - அடியேனுக்கு, கோது இல்லாதபடி - குற்ற மில்லாதபடி, ஆனந்தவெள்ளம் - சுகவாரியானது, வந்து தேக்கும்படி - வந்து நிறையவும், எனக்கு - அடியேனுக்கு, உன் திருக்கருணை பற்றுமாறு - உன் சிறந்த அருள் பதியவும், இன்னம் - (முன் வைத்ததுபோல) இன்னம், அடி எடுத்து - உன் திருவடியைத் தூக்கி, என் முடிமேல் வைக்கவேண்டும் - என் சிரசின்மீது வைத்தருளலே தகுதியாகும்; அடிமுடி - முதல் இறுதிகள், ஒன்று இல்லாத - சிறிது மில்லாத, அகண்ட வாழ்வே! - வியாபக மான பெரிய வாழ்வே!, என்க.

(வி - ரை) அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபகமாயுள்ள முதல்வனது சந்நிதானத்தின் விசேஷத்தால் மாயை பரிணமித் துருவங்களாய் விளங்கிக்கொண் டிருக்கின்றன வாகலின், 'வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்தவான்பொருளே!' என்றனர். முதல்வன் ஆசாரிய வடிவங் கொண் டெழுந்தருளி வந்து தீட்சித்த மாத்திரத்து இதுகாறுஞ் சத்திய மென மன மெண்ணியிருந்த யாவும் மாயாகாரியமெனத் தேர்ந்து, அவற்றி னிடத்துப் பற்றண்டாகா தொழிந்த தென்பார், 'எளியனேன் மனமா

மாயைக் குடிகெடுக்கத் துசங் கட்டிக் கொண்ட மோன குருவே' என்றனர். திருவடி தீட்சையாற் சகல சித்தியு முண்டாகு மாகலின், திருக் கருணை பற்று மாறும், ஆனந்தவெள்ளந் தேக்குமாறும் 'அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்க வேண்டும்' என்றனர். திருமந்திரம்: "திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும், திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந், திருவடி ஞானஞ் சிறைமல மீட்டுந், திருவடி ஞானந் திண்சித்தி முத்தியே." என்றதனுற் காண்க. "ஆதியு மந்தமு மில்லாவரும் பெருஞ் சோதி" என்றதற் கேற்ப, 'அடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே!' என்றனர். (3)

வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன்; தேர்ந்த
வாறேநா னப்பாலோர் வழிபா ராமல்
தாழ்வுபெற்றிங் கிருந்தே னீதென்ன மாயம்?
தடையுற்றுன் மேற்கதியுந் தடைய தாமே;
ஊழ்வலியோ? அல்லதுன்றன் றிருக்கூத் தோ? இங்
கொருதமியேன் மேற்குறையோ? உணர்த்தா யின்னம்
பாழவதிப் படவெனக்கு முடியா தெல்லாம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசி ஞனே!

(இ - ள்) வாழ்வு அனைத்தும் - பிரபஞ்ச வாழ்வுக ளெல்லாம், மயக்கம் என - மயங்குதற் கேதுக்களே யென்று, தேர்ந்தேன் - தெளிந்தேன்; தேர்ந்தவாறே - தெளிந்தவண்ணமே, நான் - அடியேன், அப்பால் ஓர் வழி பாராமல் - அப்பாலொரு நல்வழியை நோக்காமல், தாழ்வு பெற்று - தாமதித்து, இங்கு இருந்தேன் - இந்தப் பொய்யுலகி லிருந்தேன்; ஈது என்ன மாயம்? - இது என்ன மாயாகாரியம்?, தடை உற்றால் - தடைப்பட்டால், மேல் கதியும் தடையது ஆமே - மேலாகிய மோட்சகதியும் தடைப்படுமே; (இதற்குக் காரணம்) ஊழ்வலியோ? - ஊழினது வலிமையோ?, அல்லது - அன்றி, உன்றன் திருக்கூத்தோ? - உன் திருவிளையாட்டோ?, இங்கு - இவ்விடத்தில், ஒரு தமியேன் மேல் குறையோ? - தமியேனிடத்துக் குறை பாடோ? (அறிந்திலேன்), உணர்த்தாய் - (அதனை நீயே) அறிவிப்பாய்!, எல்லாம் - எல்லாப் பொருள்களையும், படைத்து - சிருட்டித்து, அளித்து - காத்து, துடைக்க வல்ல - சங்கரிக்கவல்ல, பரிசினனே! - குணத்தை யுடையவனே!, இன்னம் - இன்னமும், பாழ் - பாழான, அவதிப்பட - துன்பப்பட, எனக்கு முடியாது - எனக்குக் கூடாது, என்க.

(வி - ரை) பிரபஞ்ச வாழ்க்கை யனைத்தும் மாயாகாரியமென நன்கு தேர்ந்தும் அனுபவத்திற் கண்டு நீங்கி நலமடையக் கருதினே னல்லேன் என்பார், 'வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன்; தேர்ந்த, வாறேநா னப்பாலோர் வழிபா ராமல், தாழ்வுபெற்றிங் கிருந்தேன்' என்றனர். அனுபவத்திற் கொண்டு வாராமையால் அத்தியாவசியமாக அடையவேண்

டிய கதிக்குத் தடை நேர்ந்ததென்பார், 'தடையுற்றான் மேற்கதியுந் தடைய தாமே' என்றனர். பிரபஞ்ச வாழ்க்கை மாயாகாரியமென உண்மை தேர்ந்தும் அனுபவத்திற்குக் கொண்டு வராதபடி தடை நேர்ந்ததற்குக் காரணம், 'ஊழ்வலியோ? உன் திருக்கூத்தோ? தமியேன்மேற் குறையோ?' என்றனர். குறையினை யீற்றில்வைத்துக் கூறினமையின் தன் குறையே காரணமெனத் தீர்மானித்துக் கொண்டனர். இனிச் சகிக்கமுடியா தென்பார், 'பாழுவதிப் படவெனக்கு முடியாது' என்றனர். "அனைத்துலகு மாக்குவாய் காப்பா யழிப்பாய்" என்ற சிவபுராண அகவலுக்கு ஏற்ப, 'படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசினனே' என்றனர். (4)

நானானென் றெனுமகந்தை யெனக்கேன் வைத்தாய்?
நல்வினைதீ வினையெனவே நடுவே நாட்டி
ஊனாரு முடற்சுமையென் மீதேன் வைத்தாய்?
உயிரெனவு மென்னையொன் றுவுள்ளேன் வைத்தாய்?
ஆனாமை யாயகில நிகில பேத
மனைத்தினுள்ளுந் தானாகி, அறிவா னந்தத்
தேனாகிப், பாலாகிக், கனியாய்க், கன்னற்
செழும்பாகாய்க், கற்கண்டாய்த், திகழ்ந்த வொன்றே!

(இ - ள்) இங்கு - இவ்விடத்தில்; நான் நான் என்னும் அகந்தை - நான் நான் என்கிற அகங்காரத்தை, எனக்கு ஏன் வைத்தாய்? - என்னிடத்தில் ஏன் வைத்தனை?, நல்வினை தீவினை என - நல்வினை தீவினை என்று, நடுவே நாட்டி - இடையில் நிறுத்தி, ஊன் ஆரும் உடல் சுமை - மாமிசம் நிறைந்த உடற்பாரத்தை, என்மீது ஏன்வைத்தாய்? - என்மேல் ஏன் வைத்தனை?, என்னை - அடியேனை, உயிர் எனவும் - உயிர் என்று சொல்லவும், உள் - உடற்குள், ஒன்று ஆ - ஒரு பொருளாக, ஏன் வைத்தாய்? - ஏன் வைத்தனை?, ஆனாமையாய் - நீங்காமையாகி, அகிலம் - பிரபஞ்சத்திலுள்ள, நிகிலபேதம் அனைத்தின் உள்ளும் - பேத ரூபங்கள் எல்லாவற்றுள்ளும், தான் ஆகி - தானே நிறைந்து, அறிவு ஆனந்த தேன் ஆகி - ஞானானந்தத் தேனாகி, பால் ஆகி - பாலாகி, கனி ஆய் - பழமாகி, செழு - செழுமையாகிய, கன்னல் பாகு ஆய் - சர்க்கரைப் பாகாகி, கற்கண்டு ஆய் - கற்கண்டாகி, திகழ்ந்த ஒன்றே! - பிரகாசிக்கின்ற ஒப்பற்ற பொருளே!, என்க.

(வி - ரை) ஆணவமலத்தின் காரியமாகிய 'நானானென்றெனுமகந்தை' யும், கன்ம மலத்தின் காரியமாகிய 'நல்வினை தீவினையும்' மாயா மலத்தின் காரியமாகிய 'ஊனாரு முடற்சுமை' யும், அநாதியாகிய உயிருக்குப் பிராரத்துவத்திற்குத் தக்கபடி யமைத்துவர, 'ஏன் வைத்தாய்?' என்றது பரவைவழக்கு நோக்கியேயாம். திருவாசகம்: "கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச், சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்ற." எனக்

கூறியுள்ளதற் கேற்பத், 'தேனாகிப், பாலாகிக், கனியாய்க் கன்னற் செழும்பாகாய்க், கற்கண்டாய்த், திகழ்ந்த வொன்றே !' என்றனர். (5)

ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னே? என்னை
யுன்னியுன்னும் பொருளலைநீ ; உன்பா லன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வை ராக்கிய னல்லேன் ;
நிவர்த்தியவை வேண்டுமிந்த நீல னுக்கே ;
என்றுமென்று மிந்நெறியோர் குணமு மில்லை ;
இடுக்குவார் கைப்பிள்ளை யேதோ வேதோ?
கன்றுமனத் துடனாடு தழைதின் றாற்போற்
கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே.

(இ - ள்) ஒன்றி ஒன்றி - ஒவ்வொரு நூல்களி லழுந்தி யழுந்தி, நின்றும் நின்றும் - அவ்வந்நூல்களிற் கூறியபடி யிருந்து பார்த்தும், என்னை? - என்ன பயன்?, நீ - நீ, என்னை உன்னி - என்னை முன்னிட்டு, உன்னும் - நினைக்கப்படுகிற, பொருள் அல்லை - பொருளா யிருப்பாயல்லை ; (ஆதலால்) உன்பால் அன்பால் நின்ற - உன்னிடத் தன்புபூண்டுநின்ற, தன்மைக்கு - அன்பர் குணத்தைப் பெறும்பொருட்டு, இரங்கும் - உன்னை நோக்க இரங்கும்படியான, வைராக்கியன் அல்லேன் - பிரபஞ்ச மார்க்கத்தில் வெறுப்புடையே னல்லேன் ; இந்த நீலனுக்கு - இந்தப் பொய்யனுக்கு, அவை நிவர்த்தி வேண்டும் - அப் பொய் நெறிகள் ஒழிதல் வேண்டும் ; என்றும் என்றும் - எக்காலத்தும், இ நெறி - இந்த நன்னெறியை யடைதற்கு, ஓர் குணமும் இல்லை - சிறிது நற்குணமு மில்லை ; (அங்ஙனமாக) இடுக்குவார் கைப்பிள்ளை ஏதோ ஏதோ? - அணைப்பார் கைப்பிள்ளையாதற்குக் காரணம் யாதோ?, கன்றும் மனத்துடன் - வருந்துகின்ற மனத்துடன், ஆடு தழை தின்றால்போல் - ஆடு தழை மேய்ந்தாற்போல, கல்வியும் கேள்வியும் ஆகி - பல்வகைக் கல்வி கேள்விகளை யுடையேனாகி, கலக்குற்றேன் - கலங்கலுற்றேன் ; ஏ - இதென்ன கொடுமை?, என்க.

(வி - ரை) வேதங்களாலேயும், புராணங்களாலேயும், இதிகாசங்களாலேயும், சுருதிகளாலேயும், சாத்திரங்களாலேயும் அறியப்படாத முதல்வனை, அவ்வந்நூல்களி லழுந்தி யழுந்தி, ஆராய்ந்தும் ஆராய்ந்தும் பிரயோசன மில்லை யென்பார், 'ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னே?' என்றனர். அதுதற்போத முனைவுகொண் டாராய்வார்க்குக் கிட்டாதென்பார், 'என்னை யுன்னி யுன்னும் பொருளலைநீ' என்றனர். அதாவது, முன்னிலைச் சுட்டிக்கொண் டாராய்தலினா லறியப்படா ரென்றதாம். **திருவாசகம் :** "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம் திருப்பெருந் துறையுறை சிவனே!, ஒன்றநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே." என்றதனாற் காண்க.

அறுபான்மூம்மை நாயன்மார் முதலியர் நின்னிடத்தி லன்பு பாராட்டிய தன்மைபோல் பத்திவாய்ந்து பிறபொருளி லாசையற் றிருந்திலே னென்பார், 'உன்பா லன்பால், நின்றதன்மைக் கிரங்கும்வை ராக்கிய னல்லேன்' என்றனர். வைராக்கியம் - ஆசையற்றிருத்தல். பொய் சொல்லி அதை யுண்மையெனச் சாதிக்கு மாதினை உலகில் 'நீலி' என அழைத்தல் போல, அத்தகைய புருடனை 'நீலன்' எனலுமாம். அழாது நற்குணம் வாய்ந்த குழந்தையினைக் கண்டோர் யாரும் எடுத்தணைக்க விரும்புவது போல், நற்குணம் வாய்ந்தாரிடத்து எவரும் நேசிக்க முன்வருவர். நான் அத்தகைய குணமொன்று மில்லே னென்பார், 'குணமு மில்லை; இடுக்கு வார் கைப்பிள்ளையேதோ?' என்றனர். கல்வி கேள்களில் நிரம்பத் தெரிந்துகொள்ளாது சிறிது சிறிது தேர்ந்து வாழ்ந்தேன் என்பார், 'ஆடு தழைதின் றாற்போற் கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே' என்றனர். (6)

உற்றதுணை நீயல்லாற் பற்று வேறொன்
றுன்னேன்; பன் னாளுலகத் தோடியாடிக்
கற்றதுங்கேட் டதுமிதனுக் கேது வாகும்;
கற்பதுங்கேட் டதுமமையும்; காணா நீத
நற்றுணையே! அருட்டாயே! இன்ப மான
நாதாந்த பரம்பொருளே! நார ணாதி
சுற்றமுமாய், நல்லன்பர் தமைச்சே யாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே! சோதிக் குன்றே!.

(இ - ள்) உற்றதுணை நீ அல்லால் - பொருந்திய துணை நீயேயன்றி, பற்று - ஆதாரமாக, வேறு ஒன்று உன்னேன் - வேறொன்றையுங் கருதேன்; பலநாள் - பலநாளும், உலகத்து - உலகில், ஓடி ஆடி - ஓடியும் ஆடியும், கற்றதும் கேட்டதும் - கற்ற கல்வியும் கேட்ட கேள்வியும், இதனுக்கு ஏது ஆகும் - இதற்குக் காரணமாகும்; கற்பதும் கேட்பதும் - (இனி) கற்கப்படுவதும் கேட்கப்படுவதும், அமையும் - பற்றும்; காணா - யாவருங் காணக்கூடாத, நீதம் - நியதமுள்ள, நல் துணையோ! - சிறந்த துணையே!, அருள் தாயே! - கிருபையுள்ள அன்னையே!, இன்பம் ஆன - ஆனந்தரூபமான, நாதாந்தம் - நாததத்துவத்தின் முடிவிலுள்ள, பரம்பொருளே! - மேலான பொருளே!, நாரணாதி - நாரணன் முதலானோர், சுற்றமும் ஆய் - உறவினராகவும், நல் அன்பர் தம்மை - நல்லன்பரை, சேய் ஆக - புதல்வராகவும், தொழும்பு கொள்ளும் - அடிமை கொள்ளுகின்ற, கனகனமே! - மிகக் கனத்த பொருளே!, சோதிக்குன்றே! - சுடர்மலையே!, என்க.

(வி - ரை) பிரபஞ்சத்தில் இதுகாறும் அலைந்து அனேக நூல்களைக் கற்றதனாலும், பல பெரியோர்களை யடைந்து கேட்டதனாலும், 'உன்னையன்றி வேறு துணையில்லை' எனு முண்மையினை யறிந்துகொண்டே னாத

லின், இனி வேறு துணை நாடேன் என்பார், 'உற்றதுணை நீயல்லாற் பற்று வேறொன், றுன்னேன்; பன்னூலுகத் தோடியாடிக், கற்றதுங்கேட் டதுமிதனுக் கேது' என்றனர். அறியவேண்டிய உண்மையினை யறிந்த பின்னர் இனிக் கற்பதினாலும், கேட்பதனாலும் பிரயோசன மில்லையென்பார், 'கற்பதுங்கேட் டதுமமையும்' என்றனர். (7)

குன்றாத மூவுருவா யருவாய் ஞானக்
 கொழுந்தாகி யறுசமயக் கூத்து மாடி
நின்றாயே; மாயையெனுந் திரையை நீக்கி
 நின்னையா ரறியவல்லார்? நினைப்போர் நெஞ்ச
மன்றாக வின்பக்கூத் தாட வல்ல
 மணியே! என் கண்ணே! மா மருந்தே! நால்வர்க்
கன்றாலின் கீழிருந்து மோன ஞான
 மமைத்தசின்முத் திரைக்கடலே! அமர ரேறே!.

(இ-ள்) குன்றாத - அழியாத, மூவுரு ஆய் - மூன்றுருவங்களாகி, அரு ஆய் - அருவமாகி, ஞானக்கொழுந்து ஆகி - ஞானமுடிவாகி, அறுசமயக் கூத்தும் ஆடி - அறுசமயக் கூத்தாடியும், நின்றாயே - நின்றனையே; மாயை என்னும் திரையை நீக்கி - மாயை யென்கிற திரையை விலக்கி, நின்னை - உன்னை, அறிய வல்லார் யார்? - உணரவல்லவர் யாவர்?, நினைப்போர் நெஞ்சம் - நினைப்பவர்கள் மனமே, மன்று ஆக - நடனசபையாகக் கொண்டு, இன்பக்கூத்து ஆட வல்ல - ஆனந்தக்கூத் தாடவல்ல, மணியே! - இரத்தினமே!, என் கண்ணே!—, மாமருந்தே!—, நால்வர்க்கு - சநகாதி நால்வருக்கு, அன்று - அக்காலத்தில், ஆலின் கீழ் இருந்து - ஆலமரத்தின் கீழிருந்து, மோன ஞானம் அமைத்த - மௌன ஞானத்தினை யுணர்த்தின, சின்முத்திரை கடலே! - சின்முத்திரா சாகரமே!, அமரர் ஏறே! - தேவர்களுக்குள் உத்தமனே!, என்க.

(வி-ரை) முதல்வனது அதிகாரசத்தி மும்மூர்த்திகளிடத்துப் பதிந்து முத்தொழில்களைச் செய்துவரலால், 'மூவுருவாய்' எனவும்; தான் தனித்து நான்காவதாக விளங்கியிருத்தலின், 'அருவாய்' எனவும்; ஞானத்தாலாராய்ந்து நாட முடிவில் ஞேயமாய் நின்ற பொருளா யிருத்தலின், 'ஞானமுடிவாகி' எனவும்; அறுசமயத்தினருக்கும் அவரவர்கள் தியானிக்கு மூர்த்திபேதங்கள் தானாய் நின்று அருள் பாலித்து வருதலின், 'அறுசமயக் கூத்தும் ஆடி' எனவும் கூறினர்.

மாயையானது ஆணவ விருளை யொழிக்கும் ஒளிபோன் றிருக்கினும்; "மாயை மயக்கமும் செய்யுமன்றே." என்றதற்கேற்பத் தனது காரியப் பாட்டினில் ஆன்மாக்களை யழுத்தி விடுதலின், "மாயையெனுந் திரையை நீக்கி, நின்னையா ரறிய வல்லார்?" என்றனர். அடியார்க ளிதயத்தினையே

மன்றாகக் கொண்டு நடனஞ் செய்யவல்லா னென்பார், 'நினைப்போர் நெஞ்ச மன்றாக வின்பக்கூத் தாடவல்ல மணியே!' என்றனர். ஈண்டு 'நெஞ்சு' என்றது இதயமாம். திருமந்திரம்: "இருதயந் தன்னி லெழுந்த பிராணன், கரசர ணாதி கலக்கும் படியே, வரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன், குரவனா யெங்கணுங் கூத்துகந் தானே." என்றதனாற் காண்க.()

திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து
 தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்லாம்
கரையவே கனிந்துருக்கு முகத்தி லேநீ
 கனிந்தபர மானந்தக் கட்டி; இந்நாள்
வரையிலே வரக்காணேன்; என்னாற் கட்டி
 வார்த்தைசொன்னாற் சுகம்வருமோ? வஞ்ச னேனை
இரையிலே யிருத்தி,நிரு விகற்ப மான
 இன்பநிஷ்டை கொடுப்பதையா! எந்த நாளோ?

(இ-ள்) திரை இல்லா கடல்போல - அலை அற்ற சமுத்திரம்போல, சலனம் தீர்ந்து - அசைவற்று, தெளிந்து உருகும் பொன்போல - தெளிவாகி யுருகுகின்ற பொன்போல, செகத்தை எல்லாம் - பிரபஞ்சத்தை யெல்லாம், கனிந்து கரைய - இளகிக் கரைய, உருக்கும் முகத்தில் - உருக்கு மிடத்தில், கனிந்த - நன்றா யுருகிநின்ற, பரமானந்தக் கட்டி - பரம சுகத்தைக் கொடுப்பதாகிய பொன்கட்டி, நீ - நீயா யிருக்கிறாய்; (ஆனால்) இந்நாள் வரையில் - இந்நாள் அளவும், வர காணேன் - நீ வரக் கண்டிலேன்; என்னால் கட்டி - என்னால் நிர்ப்பந்தித்து, வார்த்தை சொன்னால் - பேசினதனால், சுகம் வருமோ? - இன்ப முண்டாகுமோ?, வஞ்சனேனை - வஞ்சகனாகிய என்னை, இரையிலே இருத்தி - சோற்றுத் துருத்தியாகிய உடம்பிலிருக்கச்செய்து, நிருவிகற்பம் ஆன - விகற்ப மில்லாத, இன்பம் - சுகத்தைத் தருகின்ற, நிஷ்டை கொடுப்பது - நிட்டையை அனுக்கிரகிப்பது, எந்த நாளோ? - எந்தக் காலமோ? (அறிகிலேன்), ஐயா! - ஐயனே!, என்க.

(வி-ரை) அலைபற்ற சாகரம்போலச் சித்த மசைவறத் தெளிந்து நின்ற காலத்தி லருளடைதற் கேதுவாகு மாகலின், 'திரையில்லாக் கடல் போலச் சலனந் தீர்ந்து' என்றனர். திருமந்திரம்: "உரையற்ற வொன்றை யுரைசெய்யு மூமர்காள்!, கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ?, திரையற்ற நீர் போலச் சிந்தை தெளிந்தாற், புரையற் றிருந்தான் புரிசடையோனே." என்றதனாற் காண்க. மாயாகாரியமாகிய பிரபஞ்சத்தின் உண்மையை யாய்ந்து அது நிலையற்றதெனத் தேர்ந்து பிரபஞ்ச வாசனை சிறிதுமின்றி நின்ற அவசரத்தில் முதல்வன் வெளிப்படுவ னாகலின், 'தெளிந்துருகும் பொன்போலச் செகத்தையெல்லாம், கரையவே கனிந்துருக்கு முகத்திலே நீ கனிந்தபர மானந்தக் கட்டி' என்றனர். அங்ஙனம்

பிரபஞ்சத்தி னுண்மையைத் தேராததால் நீ வெளிப்படவில்லை யென்பார், 'இந்நாள் வரையிலே வரக்காணேன்' என்றனர். அனுபவத்தாலன்றி வாசக ஞானத்தால் நான் சுகமடையக் கூடுமோ என்பார், 'என்றுற் கட்டி வார்த்தைசொன்றுற் சுகம்வருமோ?' என்றனர். தேகாபிமான முள்ள வரையில் நிஷ்டை கைகூடி வாராதாகையால், 'இரையிலே யிருத்தி, நிரு விகற்பமான இன்பநிஷ்டை கொடுப்பதையா! எந்த நாளோ?' என்றனர்.

எந்தநா ளுனக்கடிமை யாகு நாளோ?
எந்நாளோ கதிவருநாள்? எளிய னேன்றன்
சிந்தைநா ளதுவரைக்கு மயங்கிற் றல்லால்
தெளிந்ததுண்டோ? மௌனியாய்த் தெளிய வோர்சொல்
தந்தநாண் முதலின்பக் கால்சற் றல்லால்
தடையறவா நந்தவெள்ளந் தானே பொங்கி
வந்தநா ளில்லை; மெத்த வலைந்தேன்; உன்னை
மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே.

(இ-ள்) எந்த நாள் - எந்தக் காலம், உனக்கு அடிமை ஆகும் நாளோ - உனக்கு அடிமைப்படுங் காலமோ?, கதி வரும் நாள்-பரகதி யுண்டாகுங்காலம், எந்நாளோ? - எந்தக் காலமோ? எளியனேன்தன் - எளியேனது, சிந்தை - மனமானது, நாளதுவரைக்கும் - இதுவரையிலும், மயங்கிற்று அல்லால் - மயங்கினதேயன்றி, தெளிந்தது உண்டோ? - தெளிவடைந்த துண்டோ? (இல்லையே); மௌனியாய் - மௌனகுருவாக வந்து, தெளிய - என் மனந் தெளியும் வண்ணம், ஓர் சொல் தந்த நாள் முதல் - ஒரு மொழியை யனுக்கிரகித்த நாள் முதலாக, இன்பக்கால் சற்று அல்லால் - ஆநந்தக்கால் சிறிது பெருகா நிற்பதன்றி, தடை அற - தடையொழிய, ஆநந்தவெள்ளம் - ஆநந்தக் கடலானது, தானே பொங்கி வந்த நாள் இல்லை - தானே பெருகி வந்தநாள் இன்று; (ஆதலால்) மெத்த அலைந்தேன் - மிகவும் வருந்தினேன்; (அவ்வருத்தத்தால் இறந்துபட்டிருப்பேன்) உன்னை மறவா இன்பத்தால் வாழ்கின்றேன் - உன்னை மறவாமையாகிய ஆனந்தத்தினுல் இதுவரையும் உயிர் வாழாநிற்கின்றேன், என்க.

(வி - ரை) பிரபஞ்சமுகமாயிருந்து காலங்கழிக்கும் வரையில் முதல்வனுக் கடிமைப்பட முடியாதென்றும், கதிவருநா ளுண்டாகா தென்றும் சிந்தை தெளிவுறு தென்றும் கூறுவார், 'எந்தநா ளுனக்கடிமை..........., தெளிந்த துண்டோ' என்றனர். ஆசாரியரிடத்து உபதேசம் பெற்றும் அதனை அனுபவிக்குங் காலையில் பிரபஞ்சமுகமா யிருந்துகொண் டிருத்தலின் உபதேச மொழியால் விளையும் ஆனந்தம் ஒவ்வொருகால் சிறிதுண்டாகுதலே யன்றி வரம்பின்றி விளைவதில்லை யென்பார், 'மௌனியாய்........வந்தநா ளில்லை' என்றனர். அருளுபதேசம் பெற்றும் அத

ளுல் அடையவேண்டிய முழுப் பிரயோசனத்தினை அடையாத துக்கத்தால் தேகத்தினை மாற்றிக்கொள்ள வேண்டும்; ஆயினும், ஆசிரியனை மறவாத வின்பமாத்திரம் எந்நேரமும் தோன்றிக்கொண் டிருத்தலின் அங்ஙனஞ் செய்ய இசையவில்லை என்பார், 'உன்னை மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே' என்ருர். (10)

---

## நினைவொன்று

ஞானிகளிடம் பொருளேவல்.

நினைவொன்று நினையாம லிற்கினக மென்பார் ;
நிற்குமிட மேயருளா(ம்); நிஷ்டையரு ளொட்டும் ;
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்கும்; இன்பந் தன்மயமே யதுவாம்;
பினையொன்றும் மில்லை; அந்த வின்பமெனு நிலயம்
பெற்ருரே பிறவாமை பெற்ருர்; மற் றுந்தான்
மனையென்றும், மகவென்றுஞ், சுற்றமென்று மசுத்த
வாதனையா மாசையொழி! மன்ஞெருசொற் கொண்டே.

(இ-ள்) நினைவு ஒன்றும் நினையாமல் நிற்கின் - சிறிதும் எண்ண மற்று நின்ருல், அகம் என்பார் - (அப்படி நிற்றலே அறியாத) இடமென் பர் மேலோர்; நிற்கும் இடமே - (அவ்வாறு) நிற்கின்ற இடமே, அருளாம் - அருணிலையாம்; நிஷ்டை அருள் ஒட்டும் - நிட்டையால் உளதாகு மருளும் சித்திக்கும்; தன்னை என்றும் மறந்திருப்ப - தன்னை யெக்காலத்தும் மறந் திருக்கின்ற, அருள் வடிவானது - அருளுருவமானது, மேல்தட்டி எழுந் திருக்கும் - மேலே தட்டிக்கொண்டு எழாநிற்கும்; இன்பம் தன்மயமே அதுவாம் - தன்மயமாயிருப்பதே ஆனந்தமாகும்; பின்னை ஒன்றும் இல்லை - வேறொன்று மில்லை; அந்த இன்பம் என்னும் நிலயம் பெற்ருரே - அந்த ஆனந்த மென்னும் நிலையை யடைந்தவர்களே, பிறவாமை பெற்ருர் - பிற வாமையாகிய பெருஞ் செல்வத்தை யடைந்தவர்கள்; மற்றும் - மீண்டும், மனை என்றும் - வீடென்றும், மகவு என்றும் - புதல்வர்க ளென்றும் சுற்றம் - உறவின ரென்றும், (சொல்லப்பட்ட) அசுத்தவாதனை ஆம் ஆசை - அசுத்தவாசனை யென்கிற பற்றை, மன் ஒரு சொல் கொண்டு - ஞாஞசிரியனது ஒரு மொழியினுல், ஒழி! - நீக்கிவிடு!, என்க.

(வி-ரை) ஞாஞசிரிய னுரைத்த உபதேச மொழியினை யாதார வாகக்கொண்டு பிரபஞ்ச போகவாசனையை மறந்து தற்போத முனைவற்ற விடமே மேலானதென்றும், அந்நிலையே திருவரு ளெய்துதற் கிடனு மென்றும், அவ்விடத்தே நிட்டையும் கைகூடி வருமென்றும், அவ்வா

திருந்து தன் னிலையினையு மறந்த அவசரத்து அருண்மயமாமென்றும், அத்தகைய ஆனந்தத் தழுந்தினவரே பிறவாச் செல்வத்தினை யுடையவ ரென்பதாம். ஞானிகட்குத் தற்போதமற்ற நிலை - இடம், பிறவாமை - பொருள், உபதேசமொழி - ஏவலாம். (1)

"ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும்; அந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்கும்" எனமொழிந்த
குருமொழியே மலையிலக்கு; மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்!
கருமொழியிங் குனக்கில்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனை; மேல்
தருமொழியிங் குனக்கில்லை; உன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே!

(இ - ள்) ஒரு மொழியே - ஒரு சொல்லே, பல மொழிக்கும் இடம் கொடுக்கும் - பல சொற்களுக்கும் இடந் தராநிற்கும்; அந்த ஒருமொழியே - அந்த வொரு சொல்லே, மலம் ஒழிக்கும் ஒழிக்கும் - மலங்களைப் போக்கும் போக்கும்; என மொழிந்த - எனச் சொன்ன, குரு மொழியே - ஆசாரிய வசனமே, மலை இலக்கு - மலைக்குறி போல்வது; மற்றை மொழி எல்லாம் - மற்றைய வாசகங்கள் எல்லாம், கோடு இன்றி வட்டாடல் கொள்வது ஒக்கும் - வகுத்த இடமில்லாமல் வட்டாடலை யொத்திருப்பன; இங்கு உனக்கு - இவ்வாறுய உனக்கு, கரு மொழி இல்லை - கர்ப்ப வாசம் என்கிற சொல்லே இல்லை; மொழிக்கு மொழி ருசிக்க - கணுவுக்குக் கணு மதுரிக்கிற, கரும்பு அனைய - கரும்பையொத்த, சொல் கொடு - (மொழிக்குமொழி மதுகரிக்கிற) சொற்களைக்கொண்டு, உன்னைக் காட்டவும் - உன்னைக் காண்பிக்கவும், கண்டனை - நீயும் தரிசித்தனை; இங்கு - இப்படியாயினபின், உனக்கு தரும் மொழி இல்லை - உனக்குப் போதித்தற்குரிய சொற்க ளில்லை; (ஆதலால், இனி) உன்னை விட்டு நீங்கா - உன்னை விட்டு நீங்காத, தற்பரமாய் - தற்பரமாகவும், ஆனந்த பொன் பொதுவாய் - இன்பப் பொற்சபையாகவும், நில்! - நிற்கக்கடவாய்!, என்க.

(வி - ரை) 'ஒரு மொழி' என்றது சித்தாந்த மகா வாக்கியத்தினை. வேதாகம இதிகாச புராணங்களைக் குறித்தும் இவற்றுற் பிரதிபாதிக்கப் படும் சிவம், அருள், ஆன்மா, திரோதானம், மலமுதலியவற்றினைக் குறித்தும் எடுத்து விளக்குவதற்கு இவ் வொருமொழி இடங் கொடுத்தலின், 'பல மொழிக்கு மிடங்கொடுக்கும்' என்றனர். மந்திர சக்தி யுடையவர்கட்கு விடமுதலிய குரூரசத்திகள் தாக்காதவாறுபோல, ஒரு மொழியினை ஆசிரியர் அனுக்கிரகத்தால் வந்தபடியே அறிந்து அனுபவ பூருவமாக உச்சரித்தவர்களைப் பிராரத்துவ கன்மம் வாதிக்கமாட்டா தாகையால், 'ஒரு

மொழியே மலமொழிக்கும்' எனவும், 'குருமொழியே மலையிலக்கு' எனவும், 'குருமொழியிங் குணக்கில்லை' எனவும் கூறினர்.

வட்டு - சொக்கட்டான் காய் (சொல் கேட்டான் காய்). வீடு வகுத்துக் கொள்ளாமல் சொக்கட்டான் ஆடில் தோற்புக் கெலிப்பு ஏற்படாதது போல, உண்மை தேறாமல் புறச்சமயர் கொண்டாடி வருகிற மொழிகளை யாதாரமாகக் கொண்டு முத்தி வழியை நாடில் பிரயோசனமில்லை என்பார், 'மற்றைமொழி யெல்லாம் கோடின்றி வட்டாடல் கொள்வதொக்கும்' என்றனர். ஆணவமும் அதன் வழியே பொருந்தின திரோதாயியும் பொருந்தாமல் விட்டு நீங்கும்படி ,சிவமுதலாகச் செபிக்கின், திரோதான சத்தி தானே மலத்தினைப் போக்கி அனுக்கிரக சத்தியாக மேலிட்டுச் சிவத்தினைக் கூட்டிவைக்கும். கூட்டிவைக்கவே, ஆன்மாவானது அருளே பற்றுக்கோடாகப் பொருந்தி அவ்விடத்திலே முற்றுணர்வு முதலிய சட்குணங்களாலே சிவனைப்போன்று கலப்பினாலே ஒன்றுமாகலின், இத்தகைய தன்மையை யனுபவித்தனை என்பார், 'கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனை' என்றனர். இம்மொழியினு மேற்பட்ட மொழி வேதாதிகளிற் காணப்படவில்லை என்பார், 'தருமொழியிங் கில்லை' என்றனர். ஆகலின், அம் மொழியி னனுசந்தான வழியினின்று சிவமாய் விளங்கக்கடவாய் என்பார், 'தற்பரமாய் ஆனந்தப் பொற்பொதுவாய் நில்லே!' என்றனர். இம்மொழி யின்னதென முன்ன ரெடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.(2)

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்:
நேயவருண் மெய்யன்றோ? நிலயமதா நிற்கக்
கல்லாதே யேன்படித்தாய்; கற்றதெல்லா மூடம்;
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று;
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி; மர்க்கடம்போற் றொட்டதுபற் றுநில்!
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடநீ,
இராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே.

(இ - ள்) நில்லாத ஆக்கை - நிலைத்திராத சரீரம், நிலை அன்று எனவே கண்டாய் - நிலையன்றென்றே பார்த்தாய்; நேயம் அருள் மெய் அன்றோ? - (சீவர்கள்மேல்) கிருபையுள்ள திருவருளானது உண்மை யல்லவா?, அது நிலயம் ஆ நிற்க கல்லாது - அத் திருவருளே யிடமாகக் கொண்டு அதிற் படிந்து நிற்கக் கல்லாமல், ஏன் படித்தாய் - வேறாகிய கல்விகளை என் கற்றாய்?, கற்றது எல்லாம் மூடம் - நீ கற்ற கல்வியெல்லாம் மூடத்தனத்துக் கேதுவே; கற்றது எல்லாம் மூடம் என்றே கண்டனையும் அன்று - (ஆனால்) கற்றதெல்லாம் மூடமென்றே தெரிந்து கொண்டாயு மில்லை; (மற்றென்னெனின்), சொல்லாலே பயன் இல்லை - சொற்களாலே பிரயோசன மில்லை; சொல் முடிவைத்தானே - சொற்

களின் முடிவையே, தொடர்ந்து பிடி - தொடர்ந்து பற்று; மர்க்கடம் போல் - குரங்குபோல், தொட்டது - பிடித்ததையே, பற்று நில்! - பற்றுகக் கொண்டு நிலைத்திடு!, (அதன்பிறகு) இராபகல் இல்லா இடமே - இராப் பகலற்ற இடமே, எமக்கு இடம் என்று அறிந்து - எமக்கிடமாவதென் றுணர்ந்து, எல்லாரும் அறிந்திட - (அவ்வனுபவ விசேடத்தை) யாவரு முணருமாறு, நீ வாய்ப்பறை கொண்டு அடி - நீ வாயாகிய பறையைக் கொண்டு சாற்றி யறிவி!, என்க.

(வி - ரை) ஆக்கை நிலையல்ல வென்பது பிரத்தியட்சப் பிரமாண மென்பார், 'நில்லாத வாக்கைநிலை யன்றனவே கண்டாய்' என்றனர். தேவாரம்: "நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர், சுடலை சேர்வது சொற்பிரமாணமே" என்றதனுற் காண்க. அருளானது முதல்வனுக் கியற்கைக்குண மெனப்படும் சத்தியாகலான், குணங் குறியை விட்டு நீங்காமையின் ஞாயிற்றிற் கொளிபோல முதல்வனுக்கு அவ்வருட்குண மேம் படுதலின், 'நேயவருள் மெய்யன்றோ' என்றனர். சிவஞானசித்தியார்: "அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை," என்றதனுற் காண்க. அவ்வருளை அடைதற் கேதுவாகிய சாத்திரங்களைக் கல்லாமல் பிரபஞ்ச சம்பந்தமான சாமான்னிய கல்வியிற் பழகுவதிற் பிரயோசன மில்லை யென்பார், 'நிலயமதா நிற்கக், கல்லாதே யேன் படித்தாய்' என்றார். அறிவை விளக்குவதற் கேதுவாகிய அருணூல் களைக் கல்லாது வேறு நூல்களைப் படித்தல் அப்பிரயோசனமென மேலும் வற்புறுத்துவார், 'கற்றதெல்லா மூடம்' என்றனர். நாலடியார்: "அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா, துலகுநூ லோதுவ தெல்லாம் - கலகல, கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந் துணையறி வாரில்." என்றதனுற் காண்க முதல்வனைப்பற்றிச் சொல்லாலே கூறு மளவும் முன்னிலைச் சுட்டினுக் கேதுவா மெனவும், சொல்லா வெடுத்துக் கூறுதற் கேலாது நின்ற அவசரம் அத்துவிதநிலை யெனவுமாகலின், 'சொல்லாலே பயனில்லை; சொன் முடிவைத் தானே தொடர்ந்து பிடி' என்றனர். குரங்குக் குட்டியானது தானே வலியத் தன் தாயினைத் தாவிப் பிடித்துக்கொண்டு விடாதிருத்தல் போலச், சொன்முடிவின் பற்றுண்டாக வேண்டு மென்பார், 'மற்கடம்போற் றொட்டது பற்றுநில்' என்றனர். இராப்பக லில்லா விடமாவது, சகல கேவல மற்ற விடம். (3)

இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே,
எங்கேநீ யகப்பட்டாய்? இங்கேநீ வாடா?
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே! நிராசை
மன்னிடமே யிடம்,அந்த மாநிலத்தே பொருளும்;
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்;

'கடம்பெறுமா மதயானை யென்ன' வுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே!

(இ - ள்) இடம் பொருள் ஏவலை குறித்து - இடம் பொருள் ஏவல் களையடைய விரும்பி, மடம் புகு நாய் என - மடத்திற் பிரவேசிக்கிற நாய் போல, எங்கே நீ அகப்பட்டாய்? - எங்கே நீ சிக்கிக்கொண்டாய்?, நீ இங்கே வாடா! - நீ இவ்விடத்திற்கு வாடா!, மடம் பெறு - அறியாமையையுடைய, பாழ் நெஞ்சாலே - பாழ் மனத்தாலே, அஞ்சாதே-பயப்படாதே!, நிராசை மன் இடமே இடம் - அவாவற்று நிலைத்த இடமே இடமாவது; அந்த மா நிலத்தே - அந்தப் பெரிய இடத்தின்கண்ணே, பொருளும் - (சிவானு பூதிச் செல்வமென்கிற எல்லாப்) பொருள்களு முளவாம்; இடம் பெறவே நிற்கின் - இடமும் பொருளுமாகிய இவைகள் நிலையாக நிற்குமாயின், எல்லா உலகமும் வந்து - எல்லா உலகங்களும் வந்து, ஏவல் செய்யும் - பணிவிடை செய்யும்; இந்த நிலை நின்றோர் - இந்நிலையிலூன்றி நின்றவர்கள், செனகன்முதல் முனிவர் - சனகன் முதலான முனிவர்கள்; கடம் பெறும் - மதத்தை யுடைய, மா - பெரிய, மதயானை என்னவும் - மதயானை போல வும், நீ - நீ, பாச கட்டு ஆன - பாசப் பிணிப்பாகிய, நிகள பந்த கட்டு - விலங்கினை யொத்த பந்தவேதுவாகிய தளை, அவிழ - தானே யவிழ்ந் தொழியும்படி, பார்! - உபாயந்தேடு!, என்க.

(வி - ரை) சனகன்முதலிய பெரியோர் கொண்ட நிராசையினு லேயே இடம் பொரு ளேவல்கள் கைகூடு மென்பது இதனாற் போந்த பொருளாம். கந்தரனுபூதி: "ஆசா மணியுந் துகிலும் புனைவா, ணேசா! முருகா! நினதன் பருளா, லாசா நிகளந் துகளா யினபின், பேசா வனுபூ திபிறந் ததுவே." என்றதனாற் காண்க. பிரபஞ்சத்தில் ஒருவன் இடம் பொரு ளேவலை யெதிர் பார்த் தலைவது, வைதிகர்கள் வாழு மடத்தில் ஒரு நாய் பிரவேசித்து மொத்துண் டலைவதனை யொக்குமென்பார், 'மடம்புகு நாய்' என்றனர். அன்றியும், உடம்பின் நிலையையும், உயிரின் நிலையையும், உடம்புக்கும் உயிருக்கு முள்ள சம்பந்தத்தினையு மறியாது உடம்பின் பொருட்டு இடம் பொரு ளேவலுக்கு வாளா யலைவது, மடம்புகும் நாய் போலும் எனினும் பொருந்தும். திருமந்திரம்: "உடம்பு முடம்பு முடம் பைத் தழுவி, யுடம்பிடை நின்ற உயிரை யறியா, ருடம்பொ டுயிரிடை நட் பறி யாதார், மடம்புகு நாய்போன் மயங்குகின் றாரே." என்றதனாற் காண்க. நிராசை யடையின் அதே யிடமாகவும், அவ்விடத்திலே யனுப விக்கும் பொருள் சிவானுபூதிச் செல்வமாகவும், அச் செல்வம் அனுபவிக் கையில் உலக மனைத்தும் வணங்குதலே ஏவலாகவும் அமைந்துவிடும் என்றனர். (4)

பராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே? முடிவினின்று பாரெதுதா னின்ற

தாராலு மறியாத சத்தன்றோ? அதுவா
யங்கிருநீ! எங்கிருந்து மதுவாவை கண்டாய்!
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே! சஞ்சலமாப் புத்தியைநாட் டாதே!
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே!
உள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே!

(இ - ள்) பார் ஆதி - மண்முதலியவற்றி லுளதாய, அண்டம் எல்லாம் - பிரபஞ்ச மெல்லாம், படர் - பரவிய, கானல் சலம் போல் - கானல் நீர் போலப் (பொய்யா யொழிவதை), பார்த்தனையே? - கண்டாயன்றே?, முடிவில் நின்று பார் - அந்தத்திலிருந்து நோக்கு?, எதுதான் நின்றது - அவ்விடத்தில் நின்றது யாது?, (அது) ஆராலும் அறியாத சத்து அன்றோ? - யாவராலு முணரப்படாத சத்தல்லவா?, நீ அது ஆய் அங்கு இரு! நீ அப்பொருளாகி அவ்விடத்தே யிரு!, (அவ்வாறிருப்பையாயின்) எங்கு இருந்தும் - எவ்விடத்திருப்பினும், அது ஆவை-அப்பொருளே யாவாய்; நீ - நீ, பூராயம் ஆகவும் - ஆதி யந்தமாகவும், மற்றொன்றை விரித்துப் புலம்பாதே - வேறொன்றை விவரித்துப் புலம்ப வேண்டாம்!, மா புத்தியை-பேரறிவை, சஞ்சலம் நாட்டாதே! - சலனத்தில் அழுத்தாதே!, நீ ஒன்றையும் ஓராதே! - நீ ஒன்றையு மெதிரிட்டுணராதே!, (நீ ஒன்றையும்) முன்னிலை வையாதே! - நீ ஒன்றையும் சாட்சி வையாதே!, எல்லாம் - யாவும், உள்ளபடி முடியும் - உள்ளவாறே முடியும்; உள்ளபடி -(இது) யதார்த்தம், என்க.

(வி - ரை) சிவபோகசாரம்: "எத்திசையு மெவ்வுலகு மெத்தொழிலு மெப்பயனு, நித்தியமென் றென்று நினையாதே. புத்தியினாற், கண்ணாடியிற் றோன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக், கண்ணாடி யிற்கனவிற் காண்." என்றதற் கேற்ப, 'பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்' என்றனர். சுட்டி யுணரப்பட்ட பிரபஞ்சத்தை யிது சத்தன்று. இது சத்தன்று என ஒழித்து அவ்வாறு கண்டொழிந்த தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற சத்தாகிய சிவத்தை யறிந்து, அச் சிவமாக விளங்கவேண்டு மென்பார், 'முடிவினின்று பாரெதுதா னின்ற, தாராலு மறியாத சத்தன்றோ? அதுவா, யங்கிருநீ! எங்கிருந்து மதுவாவை கண்டாய்!' என்றனர். 'அதுவா யங்கிருநீ' என்பது சிவோகம் பாவனையாம்; அது கருடோகம் பாவனைபோலும். சிவஞானபோதம்: "கண்டதை யன்றன்றெ விட்டுக் கண்டசத்தா, யண்டனை யான்மாவி னெய்ந்துணரப்—பண்டணைந்த, வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி னெண் கருட, சானத்திற் றீர்விடம்போற் றான்." என்றதனாற் காண்க. ஒன்றையு மோராமையாவது ஞாதுரு ஞான ஞேயந் தோன்றாதிருத்தல். வினாவெண்பா: "காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை, காண்பார்க ணன்முத்தி காணார்கள் -

காண்பானுங், காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தை சம்பந்தன், வாட்டு நெறி வாரா தவர்." என்றதனாற் காண்க. (5)

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டா! நிஷ் களங்கமதி யாகிக்,
கள்ளமனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி, இன்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே!

(இ - ள்) உள்ளபடி என்னவும் - உள்ளபடி முடியுமென்று நான் சொல்லவும், (அதை யநாதரித்து) நீ மற்றொன்றை தொடர்ந்திட்டு - நீ வேறொன்றைப் பற்றிக்கொண்டு, உளம் கருதவேண்டா! - மனமே! நீ அதையே கருதிக் கவலைப்படவேண்டாம்; நிஷ்களங்க மதி ஆகி - களங்க மற்ற அறிவினையுடைத்தாகி; கள்ளம் மனம் - வஞ்சக மனத்தோடு கூடிய, துறவை விட்டு - பொய்த் துறவை யொழித்து; எல்லாம் துறந்த - (மெய் யாகவே) எல்லாவற்றையும் விட்ட, துறவோர் - மெய்த்துறவினர், கற்பித்த மொழிப்படியே - கற்பித்த சொற்படியே, கங்குல் பகல் அற்ற - இராப் பகல்களில்லாத, வெள்ள வெளிக் கடல் மூழ்கி - (சதோதயமாகிய) ஒளிக் கடலில் முழுகி; இன்பமய பொருள் ஆய் விரவி - சுகரூபமான பொருளாகி அதனோடு வேறுபாடின்றிக் கலந்து, எடுத்து எடுத்து எடுத்து விள்ளவும்-மூக் காலும் எடுத்துச் சொல்லுதற்கும், வாய் இன்றி - வாயில்லாமல், கொள்ளை கொண்ட - மிகுதியாகிய, கண்ணீரும் கம்பலையும் ஆகி - கண்ணீரும் சரீர நடுக்கமுங் கொண்டு, கும்பிட்டு - இருகரங்களையும் குவித்து, சகம் பொய் என - பிரபஞ்சம் பொய்யென்று, தம்பட்டம் அடி! - பறை யறையாய்!, என்க.

(வி - ரை) சைவசமய மல்லாத வேறு சமயத்தினர்கள் கொண்டா டும் கடவுளர்களு ளொருவரைப் பற்றவேண்டா மென்பார், 'மற்றொன் றைத் தொடர்ந்திட் டுளங்கருத வேண்டா!' என்றனர். சைவ சமயத் திற் கொண்டாடும் முதல்வனை யடைதற்குக் களங்கமற்ற மனத்தினை யுடைத்தா யிருக்கவேண்டு மென்பார், 'நிஷ்களங்கமதி யாகி' என்றனர். வேடமாத்திரத்தால் துறவினைக் காட்டாது அகப்பற்றுப் புறப்பற்றுக் களை யொருங்கொழித்த சர்வ சங்க பரித்யாகமுற்ற பெரியோர் கட்டளையி னிற்கவேண்டு மென்பார், 'கள்ள மனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர், கற்பித்த மொழிப்படியே' என்றனர். 'கங்குல்பக லற்ற வெள்ளவெளி' என்றது சகல கேவல மற்ற சிதாகாயம். முதல்வ னுடைய சொரூபவிலக்கண மின்னபடித்தென எடுத்துக் கூறுதற்

குக் காலத்திரயத்து முடியா தென்பார், 'எடுத் தெடுத்தெடுத்து விள் ளவும்வா யின்றி' என்றனர். திருவுந்தியார்: "எங்ங னிருந்ததென் றெவ்வணஞ் சொல்லுகே, னங்ங னிருந்ததென் றுந்தீபற, கருதற் கரிய தென் றுந்தீபற." என்றதனுற் காண்க. திருவருளிற் றிளைத்த அடியார் கள் ஆனந்தக் கண்ணீரில் மூழ்கி மெய்ந்நடுக்க முதலிய அடைவார்க ளாத லின், 'கொள்ளைகொண்ட கண்ணீரும் கம்பலையு மாகி' என்றனர். ஒழிவி லொடுக்கம்: "வேர்க்குங்கண் ணீர்ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும், வார்த்தை நழுவு மனம்பதறும் - கார்க்கதமாய்க், காந்து முரோமாஞ் சலி யாகுங் காதலித்தார்க், கேய்ந்தகுணங் காணிவையெட் டும்." என்றதனுற் காண்க. தம்பட்ட மடித்தல் - ஞானப்பறை சாத்தல். (6)

அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
 லத்துவித வானந்த சித்தமுண்டா(ம்); நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை; எடுத்த
 கோலமெல்லா நன்றாகும்; குறைவுநிறை வறவே
'விடியுமுத யம்போல' அருளுதயம் பெற்ற
 வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்;
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
 பாலருட னுன்மத்தர் பசாசர்குணம் வருமே.

(இ - ள்) அடி முடியும் நடுவும் அற்ற - அடி முடிகளும் நடுவு மில் லாத, பர வெளி மேற்கொண்டால் - பரமாகாசத்தை மேற்கொள்ளின், அத்துவிதம் - (முதல்வனுடன்) இரண்டறக் கலந் தனுபவித்தற் கேது வாகிய, ஆனந்தம் - இன்பத்தையுடைய, சித்தம் உண்டாம் - மன முண்டா கும்; நமது குடி முழுதும் பிழைக்கும் - நமது குடும்பமெல்லாம் உச்சீவிக் கும்; ஒரு குறையும் இல்லை - ஒரு தாழ்வுமில்லை; எடுத்த கோலம் எல்லாம் நன்று ஆகும் - கொண்ட கோலமெல்லாம் நன்றாகவே முடியும்; குறைவு நிறைவு அற - தாழ்வு மிகுதிக ளற, விடியும் உதயம் போல - விடிகிற உதய காலம்போல, அருள் உதயம் பெற்ற - அருளுதயத்தைத் தம்மிடத்துப் பெற்ற, வித்தகரோடும் - ஞானியரோடும், கூடி விளையாடல் ஆகும் - சேர்ந்து விளையாடல் கூடும், படி முழுதும் - மண்ணுலக முழுதையும், விண் முழுதும் - விண்ணுலக முழுதையும், தந்தாலும் - கொடுத்தாலும், களியா - களிப்படையாத, பாலருடன் - பாலகரோடு, உன்மத்தர் - பிறழ வுணர்ந் தோர், பசாசர் - பேய்க்கோட்பட்டார், (ஆகிய இவர்களுடைய) குணம் வரும் - குணமுண்டாகும், என்க.

(வி - ரை) "ஏஷ ஆகாச ஆனந்தோ நஸ்யாத்" என்றபடி, "ஆகா சத்தையும் ஆனந்தத்தையும் ஒன்றும் என்ற கருத்தினுல் சமானுதிகரணத் தில் வைத்துச் சொல்லி (சிதம்பர சத்தியிலே) பரமாகாசத்திலே ஆனந்த முடிவுபெற்று" என்று உபநிடதங்களில் கூறி யிருத்தலின், அடி முடியு

நடுவு மற்ற பரவெளியாகிய சிதம்பரத்தினை யடைந்தபேர்கட்கு ஆனந்த மூண்டா மென்பார், 'அத்துவித வானந்த சித்தமுண்டாம்' என்றனர். ஆனந்த மென்னாது அத்துவிதானந்த மென்றதனால் இன்பாதீதமாகிய அரிய அத்துவித சமாதியி னுறைந்து, அச் சிவமேயா யொன்றுபட் டிருக்கின்ற முத்தனுக்கு முப்பொருளு நித்திய மென்றும், முத்தியினு மூன்று முதலாய் நிற்குமெனவும் எற்படும். உண்மை விளக்கம்: " முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள், சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே, யின்பங் கொடுத்தலிறை யித்தைவினை வித்தன்மல, மன்புடனே கண்டுகொ ளப்பா!" என்றதனாற் காண்க. அத்துவித மென்றதற்குப் பொருள் மூன்றாவது செய்யுளிற்குரைத்த விருத்தியுரையிற் காண்க.

பாலர் குணமாவது—பசித்த நேரம் புசிப்பதன்றி யினிமேற் புசிப்புக்கு இது வேண்டுமென்று தேடாமலும், மாதா பிதாவிற்கு வந்த பேரிழவிற் சந்தோஷமும் துக்கமுந் தனக்கில்லாமலும், பிரயோசனத்தை யிச்சியாம லொரு தொழில் செய்வது.

உன்மத்தர் குணமாவது—ஒரு தன்மையாய் வைதவரையும் வாழ்த்தினவரையும் பகுத்து நோக்காமல், தேக சௌக்கியங்களையு மிச்சியாம லிருக்கை.

பசாசர் குணமாவது—பேய்பிடி யுண்டவன் தேகத்திலே யொருத்தர் பண்ணு மிதாகிதங்கள் பிடித்த பேய்க்கேயாகத் தனக்குப் பாரமற நிற்பது. ()

வரும்போமென் பனவுமின்றி, என்றுமொரு படித்தாய்,
வானாதி தத்துவத்தை வளைந்தருந்தி, வெளியாம்
இரும்போ? கல் லோ? மரமோ? என்னுநெஞ்சைக் கனன்மே
லிட்டமெழு காவுருக்கும்; இன்பவெள்ள மாகிக்
கரும்போ? கண் டோ? சீனி சருக்கரையோ? தேனோ?
கனியமிர்தோ? எனருசிக்கும்; கருத்தவிழ்ந்தோ ருணர்வார்;
அரும்போநன் மணங்காட்டும்? காமரசங் கன்னி
யறிவாளோ? அபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும்?

(இ - ள்) வரும் போம் என்பனவும் இன்றி - வரும் போம் என்பவை களு மில்லாமல்; என்றும் - எக்காலமும், ஒரு படித்தாய் - ஒரு தன்மைத்தாகி; வான் ஆதி - ஆகாய முதலாகிய, தத்துவத்தை - தத்துவத் தொகுதியை, வளைந்து அருந்தி - வளைத்து உட்கொண்டு; வெளி ஆம் - புறப்படும், இரும்போ? - (வன்மையால்) இரும்புதானோ?, கல்லோ? - சிலைதானோ?, மரமோ? - மரந்தானோ?, என்னும் - என்று சொல்லப்படுகிற, நெஞ்சை - மனத்தை, கனல்மேல் இட்ட - நெருப்பின்மேல் வைத்த, மெழுகு ஆ - மெழுகைப்போல, உருக்கும் - உருக்காநிற்கும்; இன்பவெள்ளம் ஆகி - ஆனந்த சாகரமாகி; கரும்போ? - (இனிமையால்) கருப்பஞ்சாறோ?, கண்டோ? - கற்கண்டோ?, சீனி சருக்கரையோ? - சீனிச் சர்க்கரை

தானோ ?, தேனோ ? - மதுவோ ?, கனியோ ? - முக்கனிகளோ ?, அமிர்தோ ? - அமிருதமோ ?, என - என்று சொல்லும்படி, ருசிக்கும் - தித்திக்கும் ; ( அதனை ) கருத்து அமிழ்ந்தோர் உணர்வார் - மனமாரப் பெற்றவர்கள் அறிவார்கள் ; அரும்போ - பூவரும்போ, நல் மணம் காட்டும் ? - நல்ல மணத்தைக் கொடுக்கும் ?, கன்னி - கன்னிகையானவள், காமரசம் அறிவாளோ ? - காமச்சுவையை யறிவாளோ ?, அ நலம் - அந்தப் பரமானந்தம், அபக்குவர்க்கோ விளங்கும் ? - பக்குவ மல்லார்க்கோ தெரியும் ?, என்க.

( வி - ரை ) " அறிபவ ருள்ளத் தமுதே போற்றி " எனப் போற்றித் திருவகவலிற் குறித்தபடி, இரும்பு, கல், மர முதலியவற்றிற்குச் சமானமான மனமானது மெழுகினைப் போல உருகிய அவசரத்தே கரும்பு, சீனி, கண்டு, சருக்கரை, தேன், கனி, அமிர்தம்போல ஆனந்தம் விளையு மென்பார், ' இரும்போ.........அமிர்தோ, என ருசிக்கும் ' என்றனர். சோடச கலையும் நிறைந்த சந்திரனைப்போலப் பதினாறுவயதும் நிறைந்த அதி சுந்தர வதியாய் மதன கலைகளைக் கற்றுடையவளாயினும் கன்னிகை காமத்தை யறியாள். பருவமடைந்து கணவனுக்கு வாழ்க்கைப்பட்டுக் கலவியுற்ற காலத்தே யறிவாள். இதுபோல, ஆன்மாவும் முதல்வனுங் கலந்தவிடத் தல்லது ஆனந்தானுபவ முண்டாகா தென்பார், ' காமரசங் கன்னி யறிவாளோ ? அபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும் ?' என்றனர். ( 8 )

தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனாக வொருமுதலிங் குண்டெனவும் யூகங்
கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக வம்முதலே நிற்குநிலை நம்மால்
மதிப்பரிதா மெனமோனம் வைத்ததுமுன் மனமே ;
ஆனாலு மனஞ்சடமென் றழுங்காதே யுண்மை
யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே.

( இ - ள் ) தானேயும் - தானாகவேயும், இ வுலகம் - இவ் வுலகமானது, ஒரு முதலும் ஆகா தன்மையினால் - ஒரு முதற்பொருளு மாகாத தன்மையால், படைத்து அளிக்கும் - இதனைப் படைத்துக் காக்கின்ற, தலைமையது ஆன - தலைமை யுடைத்தான, கோனாக - இறைவனாக, ஒரு முதல் - ஒரு முதற்பொருள், இங்கு உண்டு எனவும் - இவ்விடத்துளதென்னும், யூகம் - யுக்தியை, கூட்டியதும் - உண்டாக்கினதும், சகம் முடிவில் - உலக முடிவில், குலவுறும் - விளங்காநின்ற, மெய்ஞ்ஞான வான் ஆக - உண்மையாகிய ஞானாகாயமாக, அ முதலே - அந்த முதற்பொருளே, நிற்கும் நிலை - நிற்கின்ற நிலையானது, நம்மால் மதிப்பு அரிது ஆம் என - நம்மால் மதிக்கப்படுவது அரிதாகுமென்று, மோனம் வைத்ததும் - மௌனநிலையை

யமைத்ததும், உன் மனமே - உன் மனதே ; ஆனாலும் - ஆயினும், மனம் - மனமானது, சடம் என்று அழுங்காதே - சடமென்று வருந்தாதே ; உண்மை அறிவித்த இடம் - மெய்யை யுணர்த்தின இடத்தில், குரு ஆம் - அதுவே ஆசாரியனாகும் ; அருள் இலது - அருள் இல்லாதது ஆகிய, ஒன்று இல்லை - ஒரு பொருளும் இல்லை, என்க.

(வி - ரை) அவயவப் பகுப்புடைத்தாய்க் கூறப்படும் பிரபஞ்சத் தொகுதி தோன்றுதற்குரிய சற்காரிய முறையால் தோன்றி நிற்றலேயன்றி அழிதலு முடைமையால், 'தானேயு மிவ்வுலக மொருமுதலு மகாத் தன்மை யினால்' என்றனர். அப் பிரபஞ்சம் தன்னைத் தோற்றுவிப்பா னொரு வினை முதலை அவாய் நிற்கும் என்பார், 'படைத்தளிக்குந் தலைமையது வான, கோனாக வொருமுதலிங் குண்டு' என்றனர். பிரபஞ்ச மொரு முதலாகா தென்றும், இதற்கு முதல்வ னொருவ னுண்டென்றும், அவனை யறிவதற்கு மௌனநிலையே யமைவுடைத் தெனவும் அறிதற்குக் காரண மனமா யிருத்தலின், அம் மனத்தினைச் சடமென அசட்டை செய்யாது அதனையு மொரு குருவாகவே கொள்ளவேண்டும் என்றனர். (9)

---

## பொன்னை மாதரை

### கலி விருத்தம்.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன் ;
என்னை நாடிய வென்னுயிர் நாதனே !
உன்னை நாடுவன் ; உன்னருட் டூவெளி
தன்னை நாடுவன் தன்னந் தனியனே.

(இ - ள்) பொன்னை - பொருளையும், மாதரை - மாதர்களையும், பூமியை - பூமியையும், நாடிடேன் - விரும்பேன் ; என்னை நாடிய - என்னை விரும்பிய, என் உயிர் நாதனே ! - என்னுயிர்த் தலைவனே !, உன்னை நாடுவன் - உன்னை விரும்புவன் ; உன் அருள் - உன் அருளாகிய, தூ வெளி தன்னை நாடுவன் - பரிசுத்தமான வெளியை விரும்புவேன், தன்னந்தனியன் - தனியேனாகிய யான், என்க.

(வி - ரை) நல்வழி: "ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம்" எனவும் ; திருமந்திரம்: "மனைபுகு வார்கண் மனைவியை நாடிற், சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்கும், கனவது போலக் கசிந்தெழு மன்பை, நனவதுபோல நாடவொண் ணாதே." எனவும் ; ஞானசாகர வெண்பா : "மன்னகர் மன்றுமனை வாவிகூட பங்கழனி, யென்னதெனை வந்தவர்க ளெல்லையிலை - யின்னமது, சொல்லவரு வாருந் துலைவரிய ரென்னறிந்து, நில்ல

தனை வேருக நீ." எனவும் வருவனவற்ருல், 'பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்' என்றனர். தேவாரம்: "என்னி லாரு மெனக்கினி யாரிலை, யென்னி லும்மினி யாரொரு வன்னுளன், என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே." என்றபடி உயிரினுஞ் சிறந்த பொருள் உலகத்தில்லை யாதலாலும், அவ் வுயிர்க்கு நாதன் நீயாதலாலும், உன்னை விட்டுப் பொன்னை மாதரைப் பூமியை நாடு வனோ என்றனர். (1)

தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றனை ; நின்னிடத் தேதந்தேன் ;
இன்ன மென்னை யிடருறக் கூட்டினுல்
பின்னை யுய்கிலன் பேதைய னுவியே.

(இ - ள்) தன்னது என்று - தனது என்று, உரை சாற்றுவன எல்லாம் - சொல்லாற் சொல்லப்படுவன வெல்லாம், நின்னது என்றனை - உனது என்று சொல்லினை ; (ஆதலால்) நின்னிடத்தே தந்தேன் - அவைகளை உன்னிடத்தே ஒப்புவித்தேன் ; என்னை - அடியேனை, இன்னம் - இன்னமும், இடர் உற கூட்டினுல் - துக்கம் வந்து பொருந்தும்படி பொருத்திவிட்டால், பின்னை - பிறகு, பேதையன் - அறிவிலியாகிய நான், ஆவி உய்கிலன் - உயிர் பிழைக்கும் ஆற்றலிலேன், என்க.

(வி - ரை) முதல்வன், ஆசாரியர் கோலங்கொண் டெழுந்தருளி வந்து தீட்சிக்குங்காலத்துச் சீடனுடைய உடல், பொருள், ஆவி மூன்றினையுந் தனதாகக் கொண்டருளுவ னுகலின், 'தன்ன தென்றுரை சாற்று வனவெலாம், நின்ன தென்றனை' என்றனர். திருவாசகம்: "அன்றே யென்ற னுவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ." என்றதனுற் காண்க. (2)

ஆவி யே ! உனை யானறி வாய்நின்று
சேவி யேன் ; களச் சிந்தை திறைகொடேன் ;
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாள் ! எனை யாட்கொண்ட கோலமே !

(இ - ள்) ஆவியே! - என் உயிரே !, உன்னை - (அறிவிற் கறிவாய் நிற்கின்ற) உன்னை, யான் அறிவு ஆய் நின்று - நான் அறிவுருவாய் நின்று, சேவியேன் - வணங்கேன் ; கள்ள சிந்தை - வஞ்சமனத்தை, திறை கொடேன் - பகுதியாகக் கொடேன் ; பாவியேன் - பாவச் செய்கையே னுகிய நான், உள்ள பான்மையை கண்டும் - இருக்கிற தன்மையைப் பார்த்தும், நீ கூவி ஆள் ! - நீயே யழைத்து ஆள்வாய் !, என்னை ஆட்கொண்ட கோலமே ! - என்னை யடிமை கொண்ட அருளிறையே !, என்க.

(வி - ரை) முதல்வனது சொரூப இலக்கணத்தினை யறியவேண்டு மாயின் ஆன்மாவிற்கு அறிவு உதயமானாலல்லது கூடாதென்பார், "ஆவியே யுனை யானறி வாய்நின்று, சேவியேன்" என்றனர். திருமந்திரம்: "அறி வுடை யார் நெஞ் சகலிட மாவ, தறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவ, தறி வுடை யார் நெஞ்சொ டாதிப் பிரானு, மறிவுடை யார்நெஞ்சத் தங்கு நின் றானே." என்றதனாற் காண்க. சிந்தைதிறை கொடுத்தலாவது தற்போத மிழத்தல். (3)

கோல மின்றிக், குணமின்றி, நின்னருட்
சில மின்றிச், சிறியன் பிழைப்பனோ?
ஆல முண்டு மமிர்துரு வாய்வந்த
கால மெந்தை! கதிநிலை காண்பதே.

(இ - ள்) எந்தை! - என் தந்தையே!, கோலம் இன்றி - உன்னுடைய சின்னங்க ளில்லாமலும், குணம் இன்றி - அவைகளைத் தரிக்கத்தக்க நற் குண மில்லாமலும், நின் அருள் சீலம் இன்றி - உன் அருளை யடைதற் குரிய நல்லொழுக்க மில்லாமலும், சிறியன் பிழைப்பனோ? - சிறியன் உய் வேனோ?, (இவைகள் ஒன்றுமின்றி நான் பிழைக்க வேண்டின்) ஆலம் உண்டும் - விடத்தை யுண்ணினும், (அது) அமிர்து உருவாய் வந்தகாலம் - அமிர்து ரூபமாய்த் தோன்றின காலத்தில்தான், கதி நிலை காண்பது - உன் சிவகதியின் நிலையை நான் காணப்பெறுவது, என்க.

(வி - ரை) கோலமாவது: விபூதி ருத்திராட்சம் தரித்தல். குண மாவது: கருணை, பொறை, ஈகை, தயை முதலிய உடைத்தா யிருத்தல். சீலமாவது: சிவபூசை, சிவாலய தரிசனம், சிவனடியார் பணிவிடை, சிவ விரத முதலிய அனுட்டித்தல். இவை முதலிய வன்றி மோட்சமடையக் கரு தல் ஒருகாலத்தும் முடியாதென்பார், 'சிறியன் பிழைப்பனோ? என்றனர். தேவாரம்: "குறிகளும் மடை யாளமும் கோயிலும், நெறிக ளும்மவர் நின்ற தோர் நேர்மையும், அறிய வாயிர மாரண மோதினும், பொறியி லீர்மன மென்கொல் புகாததே." என்றதனாற் காண்க. அமுதமாக விடத்தினை யுண்டு பிழைத்திருக்க வல்லவ னொருவ னுளனேல், அத்தகையான் கோல மின்றி, குணமின்றி, சீலமின்றிப் பிழைக்கக் கூடுமென்பார், 'கதிநிலை காண்பதே.' என்றனர். (4)

காணுங் கண்ணிற் கலந்தகண் ணே! உனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ?
ஆணும் பெண்ணும், அதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே.

(இ - ள்) காணும் - நோக்குதற்குரிய, கண்ணில் - அறிவாகிய கண்ணி னிடத்து, கலந்த - பொருந்திய, கண்ணே! - பெருமையே!, ஆணும் -

ஆண்பாலும், பெண்ணும் - பெண்பாலும், அது என்னும் பான்மையும் - அதுவென்னும்பகுதியும், (ஆகிய இவைகளை) பூணும் - கொண்ட, கோலம் - உன் திருக்கோலமானது, பொருந்தி உள் நிற்க - பொருந்தி அவர்களுடைய மனத்தின் கண் நிலைபெற் றிருக்கச்செய்தே, உனை - உன்னை, சேணும் - விண்ணிலும், பாரும் - மண்ணிலும், திரிபவர் - தேடித் திரிவோர், காண்பரோ? - காண்பார்களோ?, என்க.

(வி - ரை) ஆண், பெண், அதுவாகி அறிவின்கண்ணே விளங்கி நிற்கு முதல்வனை அந்தர்முகத்தே தரிசியாது பகிர்முகத்தே தேடுவார்க்குக் காணப்படா னென்பார், 'சேணும் பாருந் திரிபவர் காண்பரோ?' என்றனர். சேணிற் றிரிந்தவர் - பிரமன். பாரிற் றிரிந்தவர் - விண்டு. தேவாரம்: "செங்கணனும் பிரமனுந் தம்முளே, எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலர், இங்குற்றேனென் றிலிங்கத்தே தோன்றினன், பொங்கு செஞ்சடைப் புண்ணியமூர்த்தியே!" என்றதனாற் காண்க. (5)

நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றார்,அருள்
வர்க்க மன்றி மனிதரன் றே; ஐயா!
துர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டென்பெயர் சொல்வதே?

(இ - ள்) நிற்கும் - நிற்றற்குரிய, நல் நிலை - நல்ல நிலையில், நிற்கப் பெற்றார் - அமைந்து நிற்கப் பெற்றவர்கள், அருள் வர்க்கம் அன்றி - அருள் வர்க்கமென்று சொல்லப்படுவா ரன்றி, மனிதர் அன்றே - (அவர்கள்) மனிதர்களென்று சொல்லப்படார்களே; ஐயா! - ஐயனே!, துர்க்குண கடல் - தீக்குணமாகிய கடலி லகப்பட்ட, சோங்கு அன்ன - மரக்கலத்தை யொத்த, பாவியேற்கு - பாவியேனுக்கு, என் குணம் கண்டு - என்ன குணத்தைப் பார்த்து, என் பெயர் சொல்வது - என்ன பெயரிட் டழைப்பது?, என்க.

(வி - ரை) நன்னிலையாவது சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ நிலை. இந் நிலையி னின்றவர் திருவருளிற் றிளைப்பவ ராகலின், 'அருள் வர்க்கம்' என்றார். இவர்கட்குத் தொண்டர் எனவும், நாயனர் எனவும், பெரியர் எனவும், அடியவர் எனவும், சுவாமிகள் எனவும் பெயர் வழங்குமாகலின், 'மனிதரன்றே' என்றார். 'என் பெயர் சொல்வதே' என்றதனால் நன்னிலையில் நில்லார்க்கு யாதொரு பெயரு மில்லை யென்பதாம். அதாவது, அத்தகையர் பிறந்து வாழ்ந்து இறந்து மண்ணாய்ப் போவாரே யன்றி அவர்கட்கு ஒரு பெயர் உலகத்தில் நிலைபெறுத லில்லையாம். தேவாரம்: "ஆளாகா ராளானாரை யடைந்துய்யார், மீளாவாட்செய்து மெய்ம்மையு ணிற்கிலார், தோளாத சுரையோ தொழும்பர்செவி, வாளா மாய்ந்து மண்ணாகிக் கழிவரே." என்றதனாற் காண்க. (6)

சொல்லை யுன்னிக துடித்தத லால்,அருள்
எல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன் ;
வல்லை நீயென்னை வாவென் றிடாவிடின்
கல்லை யாமிக் கருமி நடக்கையே.

(இ - ள்) சொல்லை உன்னி - நீ சொன்ன சொல்லை நினைத்து, துடித்தது அல்லால் - பதைத்ததே யன்றி, அருள் எல்லை உன்னி - அருளி னெல்லையை நினைத்து, என்னை - என்னை, அங்கு - அவ்விடத்தில், வைத்திலேன் - அமைத்திலேன் ; வல்லை - விரைவில், நீ என்னை வாவென்றிடா விடின் - நீ யென்னை வாவென் றழையாவிட்டால், இ கருமி நடக்கை - இத் தீவினையேனது ஒழுக்கமானது, கல்லை ஆம் - பொய்யாகும், என்க.

(வி - ரை) ஆசாரியர் உபதேசித்த மொழியி னருமையினைத் தெரிந்திடினும், அம் மொழியின் வழியே நின்று அருளிற் றலைப்பட்டாலல்லது பிரயோசனமில்லை யென்பார், 'சொல்லை யுன்னித் துடித்தத லாலருள், எல்லையுன்னி யெனையங்கு வைத்திலேன்' என்றனர். திருமந்திரம்: "அருளிற் றலைநின் றறிந்தழிந் தாளா, ரருளிற் றலையில்லா ரைம்பாச நீங்கா, ரருளிற் பெருமைய றியார் செறியா, ரருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே." என்றதனாற் காண்க. (7)

கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
ஐய ! தந்ததற் கைய மினியுண்டோ ?
பொய்ய னென்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்ப மென்று விளைவதே ?

(இ - ள்) கையும் - கைகளையும், மெய்யும் - சரீரத்தையும், கருத்துக்கு இசைய - கருத்திற் கிணங்க, ஐய ! - ஐயனே !, தந்ததற்கு - நான் கொடுத்ததற்கு, இனி ஐயம் உண்டோ ? - இனிச் சந்தேக முண்டோ ?, பொய்யனேன் - பொய்யினேனது, சிந்தை - மனத்திலுள்ள, பொய் கெட - பொய்யொழிய, பூரணம் - நிறைவாகிய, மெய்யதாம் இன்பம் - உண்மையாகிய சுகம், என்று விளைவது - எக்கால முண்டாவது ?, என்க.

(வி - ரை) கையினு லஞ்சலி செய்தும், காயத்தினுல் வலம் வந்தும், மனத்தினுல் நினைந்தும் வாழ்ந்தேன் என்பார், 'கையு மெய்யுங் கருத்துக் கிசையவே, ஐய ! தந்ததற் கைய மினியுண்டோ ?' என்றனர். இங்ஙனம் செய்ய வேண்டுமென்றதற்குத், தேவாரம்: "கைகாள் ! கூப்பித்தொழீர் ! கடி - மாமலர் தூவி நின்று, பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக், கைகாள் ! கூப்பித்தொழீர் !" "ஆக்கையாற் பயனென் ? அரன் - கோயில் வலம் வந்து, பூக்கையா லட்டிப் போற்றியென் னுதவிவ், வாக்கையாற் பயனென் ?" "நெஞ்சே! நீ நினையாய் ! நிமிர் - புன்சடை நின்மலனை,

மஞ்சாடு மலைமங்கை மணாளனை, நெஞ்சே! நீ நினையாய்!" என வருவன வற்றாற் காண்க. (8)

என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னே; அருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்?
நன்று தீதற வைத்த நடுவதே!

(இ - ள்) நன்று தீது அற - நன்மை தீமைகள் இல்லா தொழிய, வைத்த - என்னை உன் திருவருணிலையில் அமைத்து வைத்த, நடுவதே! - பஞ்ச கிருத்தியங்களுக்கும் பொதுவாய் நிற்கும் பொருளே!, என்றும் - எக்காலமும், உன்னை - உன்னை, இதயம் - இதயமாகிய, வெளிக்குளே துன்ற - ஆகாயத்திற் பொருந்த, வைத்தனனே - வைத்தேனே; (அதற் கிணங்கி) அருள் சோதி - அருளொளியாகிய, நீ நின்ற தன்மை நிலைக்கு - (என்னிதயத்தில்) நீ நின்ற தன்மையாகிய நிலைமைக்கு, என்னை நேர்மை ஆம் - என்ன ஒப்பாகும்?, என்க.

(வி - ரை) முதல்வன் பொதுவாகச் சர்வவியாபகனா யிருந்திடினும், அவனை இருதயத்திற் சிறப்பாகத் தரிசித்தலே விசேடமாகலின், 'என்று முன்னை யிதயவெளிக்குளே, துன்றவைத்தனன்' என்றனர். தேவாரம்: "முன்னெஞ்சம் மின்றி மூர்க்கராய்ச் சாகின்றார், தன்னெஞ்சந் தமக்குத் தாமி லாதவர், வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே, என்னெஞ்சி லீசனைக் கண்டுள்ளமே." என்றதனாற் காண்க. (9)

வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னானருள் பெற்றுந் திடமிலேன்;
சித்த மோன! சிவ! சின்ம யானந்தம்
வைத்த வைய! அருட்செம்பொற் சோதியே!

(இ - ள்) சித்தம் - உண்மையான, மோன! - மௌன நிலையினை யறிவிப்பவனே!, சிவ! - மங்களகரனே! சின்மயானந்தம் - ஞானசுகத்தை, வைத்த - எனக்கு அருள்செய்த, ஐய! - ஐயனே!, அருள் கிருபையோடு கூடிய, செம் பொன் சோதியே! - செம்பொன் னொளியே!, வைத்த - அமைக்கப்பட்ட, தேகம் - சரீரம், வருந்த - வருந்துதலினாலே, வருந்திடும் - துன்பப்படுகின்ற, பித்தன் - பித்தனாகிய, நான் - அடியேன், அருள் பெற்றும் - (நினது) திருவருளினை யடைந்தும், திடம் - (அசைவற விருக்கும்) திடமானது; இலேன் - இல்லாதவனாக விருக்கிறேன், என்க.

(வி - ரை) உயிரானது உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றலின் அவ்வுடல் வருந்த அவ் வுயிரும் தேகாபிமானியாய் வருந்தும். உடலின் இலக்கணத்தினையும், உயிரி னிலக்கணத்தினையும்

உள்ளபடி விசாரித்தறிந்து வாழ்வோருக்கு உடலால் வருந் துன்பத்திற்கு உயி ரிலக்காகமாட்டாது. இத்தகைய விசாரணை சிறிது மில்லாதவ னென்பார், தன்னைப் 'பித்தன்' எனவும், அதனால் தேகாபிமானியாய் வருந்துகின்றேன் என்பார், 'வைத்த தேகம் வருந்த வருந்திடும், பித்தன்' எனவும் கூறினர். அருளினை யடைந்தும் அவ்வருண் மயத்து நில்லேன் என்பார், 'அருள் பெற்றுந் திடமிலேன்' என்றனர். முதல்வன் மற்றைய தேவர்கள்போல இறப்பினும் பிறப்பினு மொத்துண் டலையாது நித்தியனா யுள்ளவ னாகலின், 'சிவன்' என அழைக்கப்பட்டனன். (10)

செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரே! முழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி,
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்;
'நம்பி! வா' வெனி னென்கொல் செய்வதே?

(இ - ள்) செம் பொன் - செவ்விய பொன்னினை யொத்த, மேனி - நிறத்தினை வாய்ந்த, செழுஞ்சுடரே! - செழுமையாகிய வொளியே!, முழு வம்பனேன் - அதி துட்டனாகிய நான், உன்னை வாழ்த்தும் - உன்னைத் துதித்தற்குரிய, மதி இன்றி - அறிவில்லாமல், இம்பர் வாழ்வினுக்கு - இவ் வுலக வாழ்க்கையின்பொருட்டு, மனம் இச்சை வைத்தேன் - மனம் விரும்பினேன்; நம்பி - சிறந்தோனே!, வா எனின் - (என்னை நீயே) வாவென் றழைத்திடில், நான் செய்வது என்? - அடியேன் செய்யக் கிடந்தது யாது?, என்க.

(வி - ரை) பிரத்தியட்சத்தில் பஞ்சேந்திரியங்கட்கும் இன்பத்தினைக் கொடுக்கின்ற உலக வாழ்க்கையி லிச்சை வைத்துத் தேவரீரை மறந்துள்ள மதியிலியேனை வலியவந்து ஆட்கொள்ளின், அக் காலத்தும் நின்னை யறிந்து வாழ்த்தாது சுதந்தரம் பாராட்டி வருவனோ என்பதாம். (11)

செய்யுஞ் செய்கையுஞ், சிந்திக்குஞ் சிந்தையும்,
ஐய! நின்னதென் றெண்ணு மறிவின்றி,
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேன்; என்ன புன்மையே?

(இ - ள்) செய்யும் செய்கையும் - செய்யுந் தொழிலும், சிந்திக்கும் சிந்தையும் - எண்ணுகின்ற எண்ணமும், ஐய! - ஐயனே!, நின்னது என்று எண்ணும் - உன்னதென்றெண்ணுகிற, அறிவு இன்றி - ஞானமில்லாமல், வெய்ய - கொடிய, காம வெகுளி மயக்கம் ஆம் - காம வெகுளி மயக்கங் களாகிய, பொய்யிலே - பொய் நடையிலே, சுழன்றேன் - சுழன்றேன், என்ன புன்மை? - இது என்ன இழிவான காரியம்?, என்க.

(வி - ரை) செயலும், எண்ணமும் கன்மத்தினுக்குத் தக்கபடி புண்டா மென்றும் அங்ஙன முண்டாதலும் முதல்வனாலேயே யென்றும்,

சிறிது மோராது அவ் விரண்டிலுஞ் சுதந்தரம் பாராட்டித் திரிகின்றேன் என்பார், 'செய்யுஞ் செய்கையும், சிந்திக்குஞ் சிந்தையும், நின்னதென் றெண்ணு மறிவின்றி' என்றனர். அங்ஙனஞ் சுதந்தரம் பாராட்டி வாழ்த லின் காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றத்திற் பட்டன னென்பார், 'வெய்ய காம வெகுளி மயக்கமாம் பொய்யி லேசழன் றேன்' என்றனர். இம் மூன்று குற்றமு நீங்கினு லல்லது என்ன பிரயோசன மென்பார், 'என்ன புன்மையே?' என்றனர். திருமந்திரம்: "காமம் வெகுளி மயக்கம் மிவைகடிந் தேமம் பிடித்திருந் தேனுக் கெரிமணி, யோமெனு மோசையி னுள்ளே யுறைவதோர், தாம மதனைத் தலைப்பட்ட வாலே." என்றதனுற் காண்க. (12)

புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ?
என்பொ லாமணி யே! இறை யே! இத்தால்
துன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே.

(இ - ள்) புல் - அற்பமான, புலால் - மாமிசத்தையும், நரம்பு - நரம் பையும், என்பு - எலும்பையும், உடை - உடைய, பொய்உடல் - பொய் உடம்பானது, அன்பர் யார்க்கும் - அன்ப ரெல்லார்க்கும், அருவருப்பு அல்லவோ? - அருவருக்கத்தக்க பொருளல்லவோ?, என் - என்னுடைய, பொலா - தொளைக்கப்படாத, மணியே! - முழு மணியே!, இறையே! - தலைவனே!, இத்தால் - இவ் உடம்பினுல், துன்பம் அன்றி - துக்கமே அன்றி, சுகம் ஒன்றும் இல்லை - சுகம் சிறிதும் இல்லை, என்க.

(வி - ரை) யாக்கை நிலையாமையினை நன்குவிசாரித்து அறிந்து கொண்ட மகான்கட்குத் தேகத்தைத் தாங்கிக்கொண்டிருத்தல் வெறுப் பாகத்தோன்று மாகையால், 'புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல், அன்பர்யார்க்கு மருவருப் பல்லவோ?' என்றனர். ஆசிரியர் சிவஞான யோகிகள்: "பந்தவுடல் வீண்பாடு பட்டவுடல் சீசீதூர்க், கந்தவுட லொன் றுக்கா காதவுட - லிந்தவுடல், வைத்துப்பார்த் தென்ன வலிய வுயிர்மாய்த் துச், செத்துப்போ னுலுநல்ல தே." என்றதனுற் காண்க. (13)

இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினும்
சொல்ல வோவறி யாத தொழும்பன்யான்,
செல்ல வேறொரு திக்கறி யேன்; எலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே.

(இ - ள்) இல்லை உண்டு என்று - இல்லை யென்றும் உண்டென்றும், எவர் பக்கம் ஆயினும் - எவர்களுடைய இடத்திற்காயினும் போய், சொல்ல அறியாத - கூற அறியாத, தொழும்பன் யான் - தொண்டனுகிய யான், செல்ல - போக, வேறு ஒரு திக்கு அறியேன் - மற்றொரு கதி யறியேன்;

எல்லாம் வல்ல நீ - எல்லாம் செய்ய வல்லவனாகிய நீ, என்னை - அடியேனை, வாழ்விக்க வேண்டும் - வாழ்வித் தருளவேண்டும், என்க.

(வி - ரை) தனக்கென வொரு சுதந்தரம் வாய்ந்திருக்குமளவும் முதல்வன் அன்னியனாகக் காணப்படுவன்; அங்ஙன மின்றித் தன் சுதந்தரமிழந்து 'நீயே கதி வேறுகதி காணேன்' எனத் தனித்த காலத்து முதல்வன் அனன்னியனாக விருந்து ஆதரிப்பனென்பது நிச்சயமாகலின், 'செல்ல வேறொரு திக்கறியேன்; எலாம், வல்ல நீ யென்னை வாழ்விக்க வேண்டுமே' என்றனர்.

(14)

வேண்டுஞ் சீரருள் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ
ஆண்ட நீயுன் னடியவ னானென்று
தூண்டு வேனன்றித் தொண்டனென் சொல்வதே?

(இ - ள்) சீர் - சிறந்த, அருள் - உன் அருளானது, வேண்டும் - அடியேனால் விரும்பப்படும், மெய் அன்பர்க்கே - உன் மெய்யடியார்களுக்கே, அன்பு பூண்ட நான் - அன்புகொண்ட நான், என் புலம் அறியாதது - என்னுளமறியாமல், ஆண்ட நீ - என்னை யாட்கொண்ட நீ, உன் அடியவன் நான் என்று - உன் தொண்டன் நான் என்று, தூண்டுவேன் அன்றி - எச்சரிப்பேன் அல்லது, தொண்டன் - தொழும்பனேன், என் சொல்வது? - யாது சொல்லத்தக்கது?, என்க.

(வி - ரை) அன்பர் பணியிற் கட்டுப்பட்டு அவர் ஏவல் வழியி னின்றுவிடில், முதல்வன் மனத்தின்கண்ணே யிருந்து அறிவை விளக்கி ஆண்டு கொள்வனாதலின், 'மெய்யன்பர்க் கேயன்பு, பூண்ட நானென் புலமறியாததோ ஆண்ட நீ' என்றனர்.

(15)

எனக்கு ளேயுயி ரென்ன விருந்தநீ,
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ?
கனத்த சீரருட் காட்சியலா லொன்றை
நினைக்க வோவறி யாதென்ற னெஞ்சமே.

(இ - ள்) எனக்கு உள்ளே - என திதயத்தினிடத்தே, உயிர் என்ன - உயிரென்று சொல்லும்படியாக, இருந்த நீ - எழுந்தருளி யிருந்த நீ, மனக் கிலேசத்தை - மனத்தில் விளையுந் துன்பத்தினை, மாற்றல் - நீக்கிவிடுதல், வழக்கு அன்றோ? - (தேவரீருக்குக்) கடமையல்லவோ?; கனத்த - மேலான, சீர் - சிறப்பினை வாய்ந்த, அருள் காட்சி அல்லால் - திருவருள் தரிசனத்தினை யல்லாது, ஒன்றை - வேறொன்றினை, நினைக்கவோ - எண்ணவென்றாலோ, என்றன் - அடியேனது, நெஞ்சம் - மனமானது, அறியாது - என்னை அறியாது, என்க.

(வி - ரை) உயிருக்குயிராய் வாழ்பவன் முதல்வனாகிய நீயேயென் றறிந்த பின்னர் உன்னுடைய திருவருளை கதியென நம்பி அதிற் கட்டுப் பட்டு, ஐம்புலன் வழி செல்லாத மனத்தில் ஏகதேசம் பழைய வாசனையால் சிற்சில போது கிலேசம் விளையின் அதனை மாற்றுவது நின் கடமையன்றோ என்பார், 'மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ?' என்றார். (16)

நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்ச லென்ற வருளறிந் தேயையா!
தஞ்ச மென்றுன் சரணடைந் தேன்; எங்கும்
செஞ்செ வேநின்ற சிற்சுக வாரியே!

(இ - ள்) நெஞ்சு - மனம், உகந்து - விரும்பி, உன்னை - தேவரீரை, நேசித்த - விசுவாசித்த, மார்க்கண்டர்க்கு - மார்க்கண்ட முனிக்கு, அஞ்சல் என்ற - பயப்படாதே யென்ற, அருள் அறிந்து - திருவருளைத் தேர்ந்து, ஐயா! - ஐயனே!, தஞ்சம் என்று - அடைக்கலமென்று, உன் - தேவரீரது, சரண் - திருவடிகளில், அடைந்தேன் - அடைந்தேன்; எங்கும் - எவ்விடத் தும், செஞ்செவே - செப்பமாக, நின்ற - நிறைந்த, சிற்சுக வாரியே! - ஞானானந்த சமுத்திரமே!, என்க.

(வி - ரை) மார்க்கண்டர்க்கு அஞ்சல் என்றதாவது, அவருயிரைக் கவரவந்த காலனுயிரைக் கவர்ந்தது. கந்தபுராணம்: "மகத்தான் மிக்கான் மற்றிவன் மைந்த னுயிர்வவ்வப், பதைத்தா னென்றோ வுன்னி வெகுண் டான் பதிமூன்றுஞ், சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி, யுதைத்தான் கூற்றன் விண்முகில் போன்மண் ணுறவீழ்ந்தான்." என்றத னாற் காண்க. தஞ்சமென்போரை அஞ்சலென் றருள்வோன் நீயே யென வறிந்த நானும் தஞ்சமென உன் சரணடைந்தே னென்பதாம். (17)

வாரி யேழு(ம்), மலையும், பிறவுந்தான்
சீரி தானநின் சின்மயத் தேயென்றால்,
ஆரி லேயுள தாவித் திரள்? அதை
ஓரி லேன்; எனை யாண்ட வொருவனே!

(இ - ள்) என்னை - அடியேனை, ஆண்ட - ஆண்டுகொண்ட, ஒரு வனே! - ஒப்பற்றவனே!, வாரி ஏழும் - ஏழு சமுத்திரங்களும், மலையும் - (எட்டு) மலைகளும், பிறவும் - மற்றுள்ளனவும், (இருப்பது) நின் சின் மயத்தே என்றால் - உன்னுடைய சிற்சொரூபத்தி லென்றால், ஆவித் திரள்- உயிர்க்கூட்டம், ஆரிலே - எவரிடத்து, உள்ளது?, - இருக்கின்றது?, அதை- அந்த உண்மையை, ஓரிலேன் - ஆராய்ந்திலேன், என்க.

(வி - ரை) முதல்வனுடைய திருமேனியாகிய சிற்சத்தி மாயையைப் பதிந்தபோது பிரபஞ்சந் தோன்றிச், சத்தி பராமுகையானபோது பிர பஞ்ச மொடுங்கு மாகலின், 'வாரி யேழு(ம்), மலையும், பிறவுந்தான், சீரி

தானநின் சின்மயத்தே' என்றனர். சிவஞானசித்தியார்: "கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும், பெற்றியுஞ் சாக்கி ராதி யுயிரினிற் பிறங்கெதாடுங்க, முற்றதும் போல வெல்லா வுலகமு முதித்தொடுங்கும், பற்றொடு பற்றநின்றி நின்றனன் பானு மன்றே." என்றதனாற் காண்க. உலக மவனிடத்து உளதாகவே, உயிர்த்தொகையும் அவனிடத்துள வென்பதிற் றட்டில்லை யென்பார், 'ஆரி லேயுள தாவித் திரளதை, ஓரிலேன்' என்றனர். (18)

ஒருவ ரென்னுளத் துள்குங் குறிப்பறிந்
தருள்வ ரோ? என்னை யாளுடை யண்ணலே!
மருள னேன்பட்ட வாதை விரிக்கினோ
பெருகு நாள்; இனிப் பேச விதியின்றே.

(இ - ள்) ஒருவர் - நீயன்றி வேறொருவர், என் உளத்து - அடியேன் மனத்து, உள்கும் - நினைக்கின்ற, குறிப்பு அறிந்து - கருத்தைத் தேர்ந்து, அருள்வரோ? - அருள்வாரோ?, என்னை ஆள் வுடை - என்னை யடிமையாக வுடைய, அண்ணலே! - பெரியோனே!, மருளனேன் - மயக்கத்தை யுடைய நான், பட்ட வாதை - பட்ட துன்பத்தை, விரிக்கின் - விவரமாக வெடுத்துச் சொன்னால், நாள் பெருகும் - நாள் அதிகரிக்கும்; (ஆதலால்) இனி பேச விதி இன்று - இனிப் பேசுதற்கு முறைமை யில்லை, என்க.

(வி - ரை) முதல்வன் சர்வ வியாபகனாதலின் ஒவ்வொருவர் உள்ளத்தினு மிருந்து விளங்குவ னெனவும், மற்றையர் ஏகதேசிகளாகலின் அங்ஙனம் அறியா ரெனவும் குறிப்பிப்பார், 'ஒருவ ரென்னுளத் துள்குங் குறிப்பறிந், தருள்வரோ வென்னை யாளுடை யண்ணலே' என்றனர். திருமந்திரம்: "உள்ளத்து ளேதான் கரந்தெங்கு நின்றவன், வள்ளற் றலைவன் மலருறை மாதவன், பொள்ளக் குரம்பைப் புகுந்து புறப்படுங், கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே." என்றதனாற் காண்க. (19)

இன்று னக்கன் பிழைத்தில னென்றே
அன்று தொட்டென்னை யாளர சே! என்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டால்,
மன்ற மெப்படி நின்னருள் வாழ்த்துமே?

(இ - ள்) இன்று - இப்பொழுது, நான் - அடியேன், உனக்கு - தேவரீருக்கு, அன்பு இழைத்திலன் என்று - அன்பு செய்திலே னென்று, அன்று - பூர்வம், தொட்டு - தொடங்கி, அரசே! - இறைவனே!, என்னை - அடியேனை, ஆள் என்று - ஆள்வா யென்று, நின்று அரற்றிய - நின்று கதறின, நீலனை - வஞ்சகனாகிய என்னை, கைவிட்டால் - கைநெகிழ விடுவையாயின், மன்றம் - உலகமானது, நின் அருள் - உன்னருளை, எப்படி - எவ்வாறு, வாழ்த்தும் - துதிக்கும்?, என்க.

(வி - ரை) இருவினையொப்பு, மலபரிபாகம் வாய்ந்த பெரியோர்கட்கு அனுக்கிரகித்தல் அவ்வளவு அருமை யன்றெனவும், அவர்கள் அடைந்துள்ள பரிபக்குவமே திருவருட் பேற்றினுக்கு அவர்களை ஆளாக்கி விடுமெனவும், இத்தகைய தன்மை சிறிது மில்லாதவனையே திருத்தி யாட்கொள்வது சிலாக்கிய மெனவும், இத்தகையானைக் கைவிட்டால் அருளடைய வேண்டுமென முயற்சிக்கும் யாரும் மனந் தளருவா ரெனவும் குறிப்பிப்பார், 'நின்றரற்றிய நீலனைக் கைவிட்டால், மன்றமெப்படி நின்னருள் வாழ்த்துமே?' என்றனர். (20)

வாழ்த்து நின்னருள் வாரம்வைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ ?
சூழ்த்து நின்ற தொழும்பரை யானந்தத்
தாழ்த்து முக்க ணருட்செம்பொற் சோதியே !

(இ - ள்) சூழ்ந்து நின்ற - வளைந்து நின்ற, தொழும்பரை - அடியார்களை, ஆனந்தத்து - ஆனந்தத்தில், ஆழ்த்தும் - முழுகச் செய்கின்ற, முக்கண் - மூன்று கண்ணையும், அருள் - அருளினையுமுடைய, செம்பொன் சோதியே! - செம்பொன் போன்ற பிரகாசமுடையவனே!, வாழ்த்தும் - யாவரும் வாழ்த்துதற் குரிய, நின் - தேவரீரது, அருள் - திருவருளானது, வாரம் வைத்தால் அன்றி - என்மீது அன்பு வைத்தால் அல்லது, பாழ்த்த சிந்தை - பாழாகிய மனத்தினை யுடைய, பாதகனும் - பாவியாகிய நானும், உய்வனோ? - பிழைப்பனோ?, என்க.

(வி - ரை) கண்கட்குப் புறவிருளைக் கிரணத்தா லோட்டிப் பிரகாசத்தினைச் செய்கின்ற ஞாயிற்றுக் கொளிபோல, உயிர்கட்கு மயக்கத்தினைத் திருவருளா னீக்கி யனுக்கிரகஞ் செய்கின்ற இறைவனுக் கவ்வருட்குண மேம்படுதலின், 'நின்னருள் வாரம்வைத் தாலன்றிப், பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ?' என்றனர். சிவஞான சித்தியார்: "மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட், கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்." என்றதனுற் காண்க. திருவாசகம்: "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்றது மிக்கருத்துப்பற்றியே என்க. (21)

சோதி யே ! சுட ரே ! சுக மே ! துணை
நீதி யே ! நிச மே! நிறை வே ! நிலை
ஆதி யே ! உனை யானடைந் தேன் ; அகம்
வாதி யாதருள் வாய் ! அருள் வானையே.

(இ - ள்) சோதியே! - ஒளியே!, சுடரே! - (அவ்வொளிக்குக் காரணமாயுள்ள) விளக்கே!, சுகமே! - இன்பமே!, துணை - சகாயமாயுள்ள, நீதியே! - நீதி நெறியே!, நிசமே! - உண்மையே!, நிறைவே! - பூரணமே!, நிலை - எக்காலும் நிலைத்திருக்கின்ற, ஆதியே! - முதலே!, உன்னை - தேவரீரை, யான் - அடியேன், அடைந்தேன் - சரணடைந்தேன்;

அகம் - என் மனம், வாதியாது - என்னை வருந்தாதிருக்கும்படி, அருள் வான் - அருள் வெளியினை, அருள்வாய்! - கிருபை செய்வாய்!, என்க.

(வி - ரை) மனமானது மாயாகாரிய மாகலினாலும், அம் மாயையி னின்று நீங்கினாலன்றி அருள் வான் கிட்டாதாகலினாலும், 'அகம், வாதி யாதருள்' என்றனர். திருமந்திரம்: "மனமாயை மாயை யிம்மாயை மயக்க, மனமாயை தான் மாயு மற்றொன்று மில்லை" என்றதனாற் காண்க. ஈண்டு 'வான்' என்றது ஆகாயத்தினை. என்னை? முதல்வன் அவ் வாகாய சொரூபனா யிருத்தலின். 'அருள் வான்' என்றதனால் சிதாகாய மெனக் கொள்க. திருமந்திரம்: "ஆகாசவண்ண மமர்ந்தத லக்கொழுந், தேகாச மாசுண மிட்டங் கிருந்தவ, னாகாச வண்ண மமர்ந்தநின் றப்புற, மாகாச மாயங்கி வண்ணனு மாமே." என்றதனாற் காண்க. (22)

வானைப் போல வளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்துக லந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவ(ன்); நானெனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே.

(இ - ள்) வானைப்போல - மேகங்களைப்போல, வளைந்துகொண்டு - சூழ்ந்துகொண்டு, ஆனந்தத்தேனை - ஆனந்த மயமாகிய தேனினை, தந்து - சொரிந்து, என்னை - அடியேனை, சேர்ந்து கலந்து - பிரிவறக் கலந்து, மெய்ஞ்ஞான தெய்வத்தை - உண்மையான ஞானத்தினைக் கொடுக்கின்ற கடவுளை, நாடுவன் - தியானிப்பேன்; (அதனால்) நான் என்னும் - நான் என்று விவகரிக்கின்ற, ஈனம் - இழிவாகிய, பாழ் - பாழ் நெறி, கெட - அழிய, என்றும் - எக்காலத்தும், இருப்பன் - வாழ்ந்திடுவன், என்க.

(வி - ரை) மாயையா லுண்டான தனு கரண புவன போகங்கள் நான்கினுள்ளும் தனு கரணங்களை நான் நான் எனும் அகங்கார முண்டாந் தோறும் சனன மரண நீங்கா. இவை நீங்காதிருக்கவே என்று நித்தியமா யிருக்கும் தன்மை யுண்டாகா தாகலின், 'நானெனும், ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே." என்றனர். திருக்குறள்: "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்." என்றதனாற் காண்க. பெருநாவலர்: "நீடு வாழ்வார்" என்றதற் கேற்ப 'என்று மிருப்பனே' என்றனர். (23)

'இரும்பைக் காந்த மிழுக்கின்ற வா' றெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்து, கண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்! என தன்னையொப் பாமனே!

(இ - ள்) இரும்பை - இரும்பினை, காந்தம் - காந்தக் கல்லானது, இழுக்கின்ற ஆறு - கவர்கின்ற விதம், என்னை - அடியேனை, திரும்பி

பார்க்கவொட்டாமல் - மீட்டும் பிறவியினைத் திரும்பிப் பார்க்காத வண்ணம், திருவடி - தேவரீர் திருவடிகளாகிய, கரும்பை தந்து - கரும்பினைக் கொடுத்து ; கண்ணீர் - கண்ணீரும், கம்பலை - மெய்ந்நடுக்கமும் ஆகிய, எல்லாம் - அடியார்க்குரிய இலக்கணமெல்லாம், அரும்ப செய் ! - அடியேனிடத்து உண்டாகச் செய்வாய் !, எனது அன்னை - என் தாய்க்கு, ஒப்பு ஆம் - சமானமாகிய, மன்னே ! - இறைவனே !, என்க.

(வி - ரை) காந்தம் இரும்பினை விகாரமின்றியே தன் வசத்தாக்கிக் கொண்டதுபோல, முதல்வன் ஆன்மாவை விகாரமின்றித் தன் வசத்தாக்கிக் கொண்டு, அவனுக்கு ஓரிச்சையுந் தொழிலு மின்றி, எல்லாந் தனது செயலாக நிற்பனாகலின், 'இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத், திரும்பிப் பார்க்கவொட் டாமல் என்றனர். சிவஞான போதம்: "வலிந்திரும்பைக் காந்தம் வசஞ் செய்வான் செய்தல், சலிம்பில் விகாரியலன் றான்." எனவும், சிவஞானசித்தியார்: "இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லியைந்தங் குயிரை" எனவும் வருவனவற்றாற் காண்க. (24)

அன்னை யப்பனென் னாவித் துணையெனுந்
தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென் ?
என்னைப் பூரண வின்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே.

(இ - ள்) அன்னை - தாய், அப்பன் - தந்தை, என் - அடியேன், ஆவி துணை - உயிர்த்துணை, என்னும் - என்று சொல்லப்படுகிற, தன்னை - தன்னை, ஒப்பு அற்ற - நிகரற்ற, சற்குரு என்பது என் ? - ஞானாசாரியன் என்று சொல்லுவதென்ன ?, என்னை - அடியேனை, பூரண இன்பம் - பூரணாநந்தமாகிய, வெளிக்குளே - வெளியினிடத்தே, துன்ன வைத்த - பொருந்த வைத்த, சுடர் எனத் தக்கது - சோதியென்று சொல்லத் தக்கது, என்க.

(வி - ரை) பக்குவரான சகலர்க்கு முதல்வன் பார்வையிட்டு மற்றொன்று பிடிக்குமாறுபோலத் திருமேனிகொண்டு வந்து தீட்சையால் மும்மலங்களும் நாசத்தை யடைய அனுக்கிரகத்தினைச் செய்வனாகலின், குரு வேறு, முதல்வன் வேறு என்றெண்ணப்படா தென்பார், 'சற்குரு வென்பதென்...சுடரெனத் தக்கதே' என்றனர். திருமந்திரம்: "குருவே சிவமெனக் கூறினன் நந்தி, குருவே சிவமென் பதுகுறித் தோராற், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுணர்வற்ற தோர் கோவே." என்றதனாற் காண்க. (25)

திக்க கேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்க தாக விளங்கு முதலொன்றே,

எக்க ணுந்தொழ யாவையும் பூத்துக்காய்த்
தொக்க நின்றுமொன் றாய்நிறை வானதே.

(இ - ள்) தக்க கேள்வியின் - தகுதியாகிய கேள்வி என்னும் பெயரினுல், சார்ந்த - பொருந்திய, நல் பூமியில் - நல்ல நிலத்தில், மிக்கது ஆக விளங்கும் - மேலானதாக விளங்குகின்ற, முதல் ஒன்றே - வித்து ஒன்றுமாத்திரமே, எக்கண்ணும் தொழ - எத்திசையும் வணங்க, யாவையும் - எல்லாவற்றையும், பூத்து காய்த்து - பூவெடுத்துக் காய்த்து, ஒக்க நின்றும் - (அவைகளுடன் தனித்தனியே) கூடிநின்றும், ஒன்றாய் நிறைவு ஆனது - ஒரு பொருளாகியே எல்லாவற்றிலும் அகம்புற மென்னுதபடி நிறைவுற் றிருந்தது, என்க.

(வி - ரை) ஞானவேள்வி நான்கினுள் முதலாவது கேட்டலாகலி னுலும், இது காரணமாகவே சிந்தித்தல், தெளிதல், நிட்டை கைகூடிவரு மாகலினுலும், கேட்ட பின்னர்க் கேட்க வேண்டாமையானும், சிந்தித்த பின் நூல் வேண்டாமையானும், தெளிந்தவழி நிட்டை மேவுதற்கு இடையீ டின்மையானும், கேட்டன் முதலியவற்றில் நின்றார் சுத்த தத்துவ புவனங் களின் அபர முத்தராக வைகியவாறே பரமுத்தியைத் தலைப்படுவதன்றி மீளுத லின்மையாலும், இத்தகைய யாவற்றிற்குங் கேட்டலொன்றே காரணமா யிருத்தலினுலும், 'தக்க கேள்வியில்.........நிறை வானதே' என்றனர். (26)

ஆன மான சமயங்க ளாறுக்கும்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய
ஞான பூரண நாதனை நாடியே
தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே.

(இ - ள்) ஆன - உண்டாகிய, மானம் - பெருமை பொருந்திய, சமயங்கள் ஆறுக்கும் - ஆறு சமயங்களுக்கும், தானம் ஆய் நின்று - இடமாய் நின்று, தன் மயம் காட்டிய - தன்னுருக் காட்டிய, ஞான பூரண நாதனை நாடி - ஞான நிறைவுள்ளவனுகிய தலைவனை நாடி, தீனனேன் - எளியனேன், இன்பம் - நிரதிசயானந்தத்தை, தேக்கி திளைப்பன் - பூர்ணமா யநுபவிப்பேன்.

(வி - ரை) நூறு கணக்காக விரிந்துள்ள பற்பல சமயங்களும் அறு வகைச் சமயத்து ளடங்கு மாகலின், 'சமயங்க ளாறுக்கும்' என்றனர். திருமந்திரம்: "நூறு சமயமு மாறுவலுங்கா, வாறு சமயவவ் வாறுட் படுவன, கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா, நெறியன்றே." என்றத னுற் காண்க. அவ் ஆறு சமயங்களும் அகச்சமயத் துட்படுமாகலின், 'மான சமயம்' என்றனர். ஆறுவகைச் சமயத்துள்ளார்க்கு மவ்வவர் கொண்ட கோட்பாடுகளுக்குத் தக்கவாறு அனுக்கிரகஞ் செய்கிற தன்மை யால், 'தான மாய்நின்று தன்மயங் காட்டிய' என்றனர். திருவாசகம்:

" திருத்தகு மறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும் வீடுபேறுய் நின்ற " என்றதனுற் காண்க. (27)

தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்க மாயெனக் கானந்த மாகியே
போக்கி ேைனடு வரவற்ற பூரணம்
தாக்கி நின்றவா தன்மய மாமதே.

(இ - ள்) இன்பம் - ஆனந்தம், தேக்கி - பூரணமா யடைந்து, திளைக்க திளைக்க - அனுபவிக்குந்தோறும், ஆக்கம் ஆய் - விருத்தி யடைந்து, எனக்கு ஆனந்தம் ஆகி - எனக்கு இன்பம் ஆகி, போக்கினேடு வரவு அற்ற - போக்கும் வரவு மில்லாத, பூரணம் தாக்கி நின்றவா - பூரணப் பொருளானது வந்து மேலிட்டு நின்றவாறு என்னே ?, அதே தன்மயம் ஆம் - அதுவே தன்மயமாம், என்க.

(வி - ரை) முதல்வனுடைய நிரதிசயானந்தத்தில் ஆன்மாவானவன் மூழ்கி யனுபவிக்குந்தோறும் தன் தோற்றம் வேறுகத் தோன்றுது அவ் வானந்தமயமேயாகி விளங்கிப் பேரின்பாதீதமாய் வாழ்ந்து கொண்டிருப் பானுகலின், 'தேக்கியின்பம்......தன்மய மாமதே' என்றனர். துகளறு போதம் : " ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா, னன்றி யொரு பொருளு மாகாதே - நின்றமுழ்ந்திச், சொல்லரிய வின்பஞ் சுகத்துக் கதீத மாய், நில்லவன்றா னுமே நிலை." என்றதனுற் காண்க. திருவாசகம் : " போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே." என்றதற் கேற்ப, 'போக்கினேடு வரவற்ற பூரணம்' என்றனர். (28)

அதுவென் றுன்னு மதுவு மறநின்ற
முதிய ஞானிகண் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவன் ? ஏழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே.

(இ - ள்) அது என்று உன்னும் அதுவும் - அதுவென் றெண் ணும் எண்ணமும், அற நின்ற - இல்லாமல் நின்ற, முதிய ஞானிகள் - பெரிய ஞானவான்களுடைய, மோனப்பொருள் அது - மௌன நிலையினுற் பலிக்கும் பொருளாய அது, எது என்று எண்ணி - எதுவென்று மதித்து, இறைஞ்சுவன் - தொழுவேன் ?, ஏழையேன் - எளியேனுடைய, மதியுள் நின்று - அறிவினின்று, இன்ப வாரி வழங்கும் - ஆனந்தப்பெருக்குப் பெருகாநிற்கும், என்க.

(வி - ரை) முதல்வனை - ஞானிகள் உள்ளும் புறம்பு மொரே வகை யாகக் கண்டு தரிசித்து வாழ்வாராகலின் ஏகதேசம் சுட்டுணர்விற் காணு ரென்பார், 'அதுவென் றுன்னு மதுவு மறநின்ற, முதிய ஞானிகள்' என்ற னர். திருமந்திரம் : " அதுவிது வென்பவ ரவனை யறியார், கதிவர நின்ற

தோர் காரணங் காணார், மதுவிரி பூங்குழன் மாமங்கை நங்கை, திதமது வுன்னார்க டேர்ந்தவர் தாமே.'' என்றதனாற் காண்க. அத்துவிதமாய் அறிவுக்கு அறிவாயிருந்து ஆனந்தத்தினை விளைவித்துக்கொண் டிருக்கும் முதல்வனை வேறுபடுத்தி எங்ஙனமாகப் பாவித்து வணங்குவதற் கேலு மென்பார், 'எதுவென் றெண்ணி யிறைஞ்சுவ னேழை யேன், மதியு ணின் றின்ப வாரி' என்றனர். (29)

வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை;
ஓரிற் 'கண்டிடு மூமன் கனவென'
யாருக் குஞ்சொல வாயிலை யையனே!

(இ - ள்) என்னை - அடியேனை, வாரிக்கொண்டு - கவர்ந்துகொண்டு, வாய் மடுத்து - வாயிற் பெய்து, இன்பம் ஆய் - சுகரூபமாகி, பாரில் - உலகில், கண்டவை யாவும் பருகினை - காணப்பட்ட பொருள்களெல்லாவற்றையும் விழுங்கிவிட்டனை; ஓரில் - ஆராயுமிடத்தில், ஊமன் கண்டிடும் கனவு என - ஊமன் காணும் கனவுபோல, யாருக்கும் சொல்ல - யாருடனுஞ் சொல்லுதற்கு, வாய் இல்லை - வாக்கில்லை; ஐயனே! - இறைவனே!, என்க.

(வி - ரை) மருளினிற் கட்டுப்பட்டுக் கிடந்த ஆன்மாவிற்குப் பக்குவமுற்ற காலத்து முதல்வன் அம் மருளினை நீக்கித் தனது அருள் வயத்தனாக்கித் தன்னைத் தவிர ஒன்றுந் தோன்றாதவாறு செய்தல் சாம்பிரதாயமாகலின், 'வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப், பாரிற் கண்டவை யாவும் பருகினை' என்றனர். அருள் வயப்பட்டோர் ஞான முடையவராய் எக்காலத்து மௌனமுற் றிருப்பா ராகலின், 'ஊமன் கனவென' யாருக் குஞ்சொல வாயிலை' என்றனர். (30)

ஐய மற்ற வதிவரு ணர்க்கெலாங்
'கையி லாமல கக்கனி' யாகிய
மெய்ய னே! இந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே?

(இ - ள்) ஐயம் - சந்தேகம், அற்ற - நீங்கின, அதி வருணர்க்கு எல்லாம் - அதி வர்ணாச்சிரமிகளாகிய ஞானியர்க்கெல்லாம், கையில் - கையிலிருக்கிற, ஆமலகக்கனி ஆகிய - நெல்லிக்கனி போன்ற, மெய்யனே! - உண்மையானவனே!, இந்த மேதினிமீது - இந்தப் பூமியின்மேல், உழல் - சுழலுகின்ற, பொய்யனேற்கு - பொய்யனாகிய அடியேனுக்கு, புகல் இடம் எங்ஙன்? - சரணடைதற்கு இடம் எங்குள்ளது?, என்க.

(வி - ரை) சாதி குலம் சமய முதலியவற்றிற் சிறிதும் பற்றின்றித், தனதென வொரு நியதியும் வைத்துக்கொள்ளாது, தங்கால முழுவதும் முதல்வனை விசாரித்து, அவன் உண்மையைத் தேர்ந்து, அவ் வுண்மை

நிலையிலே யிருந்து வாழுபவர் அதி வருணாசிரமிகள். இவர்கட்குப் பிர பஞ்ச விசார மின்மையின் இவரிடத்து முதல்வனுடைய சாநித்தியம் நிலை பெறு மென்பார், 'ஐய மற்ற வதிவரு ணார்க்கெலாங், கையி லாமல கக்கனி யாகிய, மெய்யன்' என்றனர். அத்தகைய நிலை அடியேனுக் கின்மையின் என் கதி யாதென்பார், 'மேதினி மீதுழல், பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே?' என்றனர். (31)

எங்ங னேயுய்ய? யானென தென்பதற்
றங்ங னேயுன் னருண்மய மாகிலேன்;
திங்கள் பாதி திகழப், பணியணி
கங்கை வார்சடைக் கண்ணுத லெந்தையே!

(இ - ள்) திங்கள் - சந்திரன், பாதி - ஒரு பங்காக, திகழ - பிர காசிக்க; பணி - பாம்பினை, அணி - தரித்த, கங்கை - கங்கை தங்கிய, வார் - நீண்ட, சடை - சடாபாரத்தினையுடைய, கண் நுதல் - நெற்றிக்கண் ணோடு கூடிய, எந்தையே! - தந்தையே!, யான் எனது என்பது அற்று - யான் என்னது என்பதாகிய அகங்கார மமகாரங்கள் நீங்கி, அங்ஙனே - அப்படி யற்றவிடத்திற்றனே, உன் அருள் மயம் ஆகிலேன் - உன்னுடைய திருவருள் மயமானேனில்லை; எங்ஙன் உய்ய? - அடியேன் எப்படிப் பிழைக்க?, என்க.

(வி - ரை) பிரபஞ்சமுகமாயிருந்து மாயாகாரியமானவற்றிற் பற் றுள்ள வரையில் உய்தற் கிடமில்லை யாகையால், 'எங்ங னேயுய்ய? யானென தென்பதற், றங்ங னேயுன் னருண்மய மாகிலேன்' என்றனர். முதல்வன், தன்னை யடைக்கலமென வடைந்தாருக்குக் கிருபை செய்பவ னென்றும், பிறர் தனக்குச் செய்யுந் தீமை பலியா தென்றும், எத்தகைய செருக்கினையு மடக்கி யொடுக்குவ னென்றும் குறித்தற்குத் திங்கள் பணி கங்கை மூன்றினையுங் கூறினர். (32)

கண்ணிற் காண்பதுன் காட்சி; கை யாற்றொழில்
பண்ணல் பூசை; பகர்வது மந்திரம்;
மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லே! உன் னருள்வடி வாகுமே.

(இ - ள்) கண்ணின் - கண்ணினால், காண்பது - பார்க்கப்படுவது, உன் காட்சி - உன்னுடைய சேவையே; கையால் - என்னுடைய கைக ளால், தொழில் பண்ணல் - தொழில் செய்வது, பூசை - உன்னுடைய பூசையே; பகர்வது - நான் சொல்லுவது, மந்திரம் - உன்னுடைய மந்தி ரமே; மண்ணொடு - மண்ணோடு கூடிய, ஐந்தும் - ஐந்தென்னுந் தொகை பெற்றிருக்கிற பூதங்களும், வழங்கு - வழங்கப்படுகிற, உயிர் யாவும் -

உயிர்த்தொகை யாவும், அண்ணலே! - பெரியோனே!, உன் அருள் வடிவு ஆகும் - உன் அருளுருவ மாகும், என்க.

(வி - ரை) தேவாரம்: "கண்காள்! காண்மின்களோ!" எனவும், "கைகாள்! கூப்பித்தொழீர்! கடிமாமலர் தூவிநின்று" எனவும், "வாயே! வாழ்த்து கண்டாய்!" எனவும் கூறியவற்றாற் காண்க. ஈண்டு 'மந்திரம்' என்றது பஞ்சாக்கர மகா மந்திரத்தினை. (33)

வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக்
கடிய னேனுமுன் காரணங் காண்பனோ?
நெடிய வானென வெங்கு நிறைந்தொளிர்
அடிக ளே! அர சே! அரு ளத்தனே!

(இ - ள்) வடிவு எல்லாம் - உருவங்கள் எல்லாம், நின் வடிவு என - உன்னுருவமென்று, வாழ்த்திடா - துதிக்கின்ற, கடியனேனும் - கடின சித்தத்தை யுடையேனும், உன் காரணம் காண்பனோ? - உன் முதன்மையி னைக் காண வல்லனோ?, நெடிய வான் என - பெரிதாகிய ஆகாயம்போல, எங்கும் - எவ்விடத்தும், நிறைந்து ஒளிர் - நிறைந்து விளங்குகின்ற, அடி களோ - சுவாமீ!, அரசே! - இறைவனே!, அருள் அத்தனே! - கிருபை யுள்ள தந்தையே!, என்க.

(வி - ரை) எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறம்பும் கலந்து நின்று அவைகளைக் காரியப்படுத்தி அவைகளேயென்று சொல்லும்படி முதல்வன் சர்வ வியாபியா யிருத்தலின், அவ் வுண்மையினை யறிந்தவரே அம் முதல்வனின் முதன்மையினைக் காண வல்லவராகலின், 'வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக், கடிய னேனுமுன் காரணங் காண் பனோ?' என்றனர். திருமந்திரம்: "இருக்கின்ற தெண்டிசை யண்டம் பாதாளம், முருக்கொடு தன்னடி வேரங்கலிவ் வண்ணக், கருக்கொண்டு வெங்குங் கலந்திவன் றானே, திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே" என்றதனாற் காண்க. (34)

அத்த னே! அகண் டானந்த னே! அருட்
சுத்த னே! என வுன்னைத் தொடர்ந்திலேன்;
மத்த னேன்பெறு மாமல மாயவான்
கத்த னே! கல்வி யாதது கற்கவே?

(இ - ள்) அத்தனே! - தந்தையே! அகண்ட - விசாலமான, ஆனந் தனே! - ஆனந்தத்தை யுடையவனே!, அருள் - கிருபையுள்ள, சுத்தனே! - தூய்மையுள்ளவனே! என - என்று புகழ்ந்து, உன்னைத் தொடர்ந்தி லேன் - தேவரீரைப் பற்றிலேன்; மத்தனேன் - உன்மத்தனாகிய நான், பெறும் - அடைந்திருக்கிற, மா மலம் - பெரிய மலங்கள், மாய - அழியும்

படி, வான் கத்தனே! - மேலான சர்வ சக்திமானே! யாது கல்வி - எந்தக் கல்வியை, கற்க? - கற்கட்டும்?, என்க.

(வி - ரை) முதல்வனைப் பற்றவேண்டுமாயின், மலத்தினின்று நீங்க வேண்டும்; அந் நீக்கம் கல்வியாலன்றி யமையாது; அக்கல்வியோ அறிவை விளக்கஞ் செய்தலுக் கேற்றதாகவே இருக்கவேண்டு மென்பதாம். திருமந்திரம்: "குறிப்பறிந் தேனுட லுயிரது கூடிச், செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை, மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான், கறிப்பறி யாமிகு கல்வி கற்றேனே." என்றதனாற் காண்க. (35)

கற்று மென்பலன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்பமோ? நெறி
நிற்றல் வேண்டு(ம்); நிருவிகற்ப பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே!

(இ - ள்) நிருவிகற்பச் சுகம் - நிருவிகற்ப சமாதி சுகத்தினை, பெற்ற பேர் - அடைந்தவர்கள், பெற்ற - அனுபவித்த, பேசா பெருமையே! - பேசப்படாத பெரும் பொருளே!, கற்றிடு கற்றும் - கற்கவேண்டிய பல நூல்களைக் கற்றும், என் பலன் - என்ன பலனுடைத்தாம்?, நூல் முறை - அச் சாத்திர முறைகள், சொற்ற சொற்கள் - சொன்ன சொற்கள், சுகாரம்பமோ? - சுகோதயகாரணமோ?, நெறி - அவை சொன்ன நெறியில், நிற்றல் வேண்டும் - நிற்கவேண்டும், என்க.

(வி - ரை) சவிகற்ப முடையாருக்குப் பகிர்முகத் தோற்றமும், நிருவிகற்ப முடையாருக்கு அந்தர்முகத் தோற்றமும் எக்காலத்து முண்டாமாகலின் 'நிருவிகற் பச்சுகம், பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே' என்றனர். கற்கவேண்டிய கல்வியினைக் கற்றும் சாத்திரவழி நில்லாது வாழ்தல் சிறிதும் பிரயோஜனமில்லை யென்பார், 'கற்று மென்பலன்' என்றனர். திருக்குறள்: "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ, னற்றாள் தொழாஅ ரெனின்," என்றதனாற் காண்க. அறிவு நூல்களைக் கற்று அவ்வழியிலேயே நிற்கவேண்டு மென்பார், 'நிற்றல் வேண்டும்' என்றனர். திருக்குறள்: "கற்க கசடறக் கற்பவை கற்றபின், னிற்க வதற்குத் தக." என்றதனாற் காண்க. (36)

பெருமைக் கேயிறு மாந்து பிதற்றிய
கருமிக் கைய! கதியுமுண் டாங்கொலோ?
அருமைச் சீரன்பர்க் கன்னையொப் பாகவே
வருமப் பேரொளி யே! உன்ம ணுந்தமே!

(இ - ள்) அருமை சீர் - அருமையான சிறப்பினை வாய்ந்த, அன்பர்க்கு - அன்பர்களுக்கு, அன்னை - தாய்க்கு, ஒப்பு ஆக - சமானமாக, வரும் - வருகின்ற, அ பேரொளியே - அந்தப் பெரிய சோதியே!, உன்

மனோந்தமே! - உன்மனிசத்திக்கும் முடிவான இடமே!, பெருமைக்கே - பெருமையின்பொருட்டே, இறுமாந்து பிதற்றிய - இறுமாந்து குழறிய, கருமிக்கு - தீவினையேனுக்கு, ஐய! - ஐயனே!, கதியும் உண்டாம் கொலோ - நற்கதியு முண்டாகுமோ?, என்க.

(வி - ரை) உன்மனி சத்தியாவது - சாந்தியாதீதை; இஃது தொடங்கு மிடம் சிவசாதாக்கியம்; இது கரணவியாத்திக் கெட்டாத அதி சூக்கும மாய், அளவு படாத பிரகாசமாய்த், தியானரூபமாய் விளக்கப்பட்டுச், சர்வ வியாபியாக விருப்பது. உன்மனோந்தம் - பராற்பரநாத முடிவுமாம். பெருமையென்பது அகங்காரத்தின் கூறுகலின் அதனை விரும்பித் திரியும் தீவினையேனுக்கு நற்கதி யுண்டாகுமோ என்பதாம். (37)

உன்ம னிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்
சின்ம யப்பொரு ளே! பழஞ் செல்வமே!
'புன்ம லத்துப் புழுவன்ன' பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவதே.

(இ - ள்) உன்மனிக்குள் - உன்மனி சத்திக்குள்ளே, ஒளிர் - விளங்குகின்ற, பரஞ்சோதி ஆம் - பேரொளியாகிய, சின்மய பொருளே - ஞானகாரப் பொருளே!, பழஞ்செல்வமே! - தொன்மையான பாக்கியமே!, புல் - அற்பமாகிய, மலத்து - மலத்திலுள்ள, புழு அன்ன - புழுவினை யொத்த, பாவியேன் - பாவியாகிய என்னுடைய, கல் மனத்தை - கல்லை யொத்த நெஞ்சை, கரைக்கக்கடவது - உருக்கக்கடவை, என்க.

(வி - ரை) திருவாசகம்: "கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை வெள்ளத் தழுந்தி வினைகடிந்த வேதியனை." என்றதற் கேற்ப, 'கன்மனத்தைக் கரைக்கக் கடவதே' எனவும், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாய் விளங்குபவ னாகலின், 'பழஞ்செல்வமே' எனவும் கூறினர். (38)

கரையி லின்பக் கடலமு தே! இது
வரையி னானுனை வந்து கலந்திலேன்;
உரையி லாவின்ப முள்ளவர் போலவித்
தரையி லேநடித் தேனென்ன தன்மையே?

(இ - ள்) கரை இல் - அளவில்லாத, இன்பக்கடல் அமுதே! - ஆனந்த சாகரத்தி லுண்டாகிய அமிர்தமே!, இதுவரையில் - இன்றளவும், நான் - அடியேன், உனை வந்து கலந்திலேன் - உன்னை வந்து சேர்ந்தே னில்லை, உரை இல்லா - பேச்சிறந்த, இன்பம் உள்ளவர்போல - சுகத்தினை யடைந்தவர் போல, இத்தரையிலே நடித்தேன் - இப் பூமியிலே நடித்தேன்; என்ன தன்மை? - இது என்ன குணம்?, என்க.

(வி - ரை) ஈண்டுக் 'கலந்திலேன்' என்றது 'தன்னுடன் நாளும் அத்துவிதமாயுள்ள முதல்வனை விசாரித்து உண்மை தேர்ந்திலேன்' என்றதாம். என்னை? பரமான்மா ஆன்மாவினுக்கு என்றும் அன்னியமல்லவாகலான். "நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே, வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்" என்ற திருவாசகத்திற் கேற்ப, 'உரையி லாவின்ப முள்ளவர் போலவித், தரையி லேநடித் தேனென்ன தன்மையே' என்றனர். (39)

மையு லாம்விழி மாதர்க டோதகப்
பொய்யி லாழும் புலையினிப் பூரைகாண்;
'கையி லாமல கக்கனி' போன்றவென்
ஐய னே! எனை யாளுடை யண்ணலே!

(இ - ள்) மை உலாம் விழி - மை தீட்டிய கண்களையுடைய, மாதர்கள் - மங்கையர்களுடைய, தோதகம் - வஞ்சகத்தோடு கூடிய, பொய்யில் - பொய் யின்பத்தில், ஆழும் - அழுந்துகின்ற, புலை - நீசத்தன்மை, இனி பூரை - இனிப் போதும்; கையில் - கையிலிருக்கின்ற, ஆமலகக்கனி போன்ற - நெல்லிக்கனி போன்ற, என் ஐயனே! - என் தந்தையே!, என்னை ஆளுடை அண்ணலே! - என்னை அடிமையாக வுடைய பெரியோனே!, என்க.

(வி - ரை) மகளிர் கூட்டுறவு மிக இழிவு என்பார், 'மையு லாம்விழி மாதர்க டோதகப், பொய்யி லாழும் புலையினிப் பூரை' என்றனர். திருமந்திரம்: "கோழை யொழுக்கங் குளமூ பொசியி, லாழ நடுவா ரளப்புறு வார்களைத், தாழத் துடக்கிற் றடுக்ககில் லாவிடிற், பூழை நுழைந்தவர் போகின்ற வாறே." என்றதனுற் காண்க. முதல்வன் பிரத்தியட்சமாய் விளங்குபவ னென்பார், 'கையிலாமல கக்கனி போன்றவென், ஐயனே!' என்றார். திருவாசகம்: "தடக்கையி னெல்லிக் கனியெனக் காயி" எனவும், தேவாரம்: "மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம், கையி லாமல கக்கனி யொக்குமே." எனவும் வழிவனவற்றுற் காண்க. (40)

அண்ண லே! உன் னடியவர் போலருட்
கண்ணி னுலுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னுலென் பசுத்துவம் போயுயும்;
வண்ண மாக மனுலயம் வாய்க்குமே!

(இ - ள்) அண்ணலே! - பெரியோனே!, உன் அடியவர்போல் - உன் தொண்டரைப்போல, அருள் கண்ணினுல் - உன் திருவருளாகிய கண்ணைக் கொண்டு, உன்னை காணவும் - உன்னைச் சேவிக்கவும், வா என பண்ணினுல் - வருவாயாகவென்று நான் சொல்லும்படி செய்தனையாயின், என் பசுத்துவம் போய் - என் சீவத்தன்மை நீங்கி, உய்யும் வண்ணமாக -

பிழைக்கும் விதமாக, மனோலயம் வாய்க்கும் - மனோநாசம் சித்திக்கும், என்க.

(வி - ரை) ஒருவனுக்குச் சிவதரிசனங் கிடைக்க வேண்டுமாயின், பசுத்துவம் கெடவேண்டும்; அப் பசுத்துவங் கெடவேண்டுமாயின், மனோலயம் வேண்டும். 'கண்ணி னுனைக் காண' என்பது சிவதரிசனம்; தேவிகாலோத்தரம்: "கருத்தடங்கின் முத்தியது கையலிற் கட்டாகும், விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர், திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாம, லருத்தியுட னிலைநிறுத்து மதுவறிவின் பயனாமால்." என்றதனால் மனோலயமும்; தேவாரம்: "பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புற, மின்னு ளத்திரள் வெண்பிறை யாயிழை, நின்னுள் ளத்தருள் கொண்டிரு ணீங்குத, லென்னுள் ளத்துள தெந்தை பிரானிரே.." என்றதனால் பசுத்துவ நீக்கமும்; திருக்கடைக்காப்பு: "கள்ள நெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியே, குற்ற மொன்றி யுள்குவா ருளத்துளா னுகந்தவூர், துள்ளு வாளை பாய்வயற் சுரும்பு நாறு செய்தல்வா, யள்ளனு நாயாரல் வாருமந்தணாரு ரென்பதே." என்றதனால் அருள் தோற்றமாகிய சிவதரிசனமு முறையே யுண்டா மென்பதனைக் காண்க. (41)

வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பக லற்றிடா
நாய்க்கு மின்பமுண் டோ? நல் லடியரைத்
தோய்க்கு மானந்தத் தூவெளி வெள்ளமே!

(இ - ள்) வாய்க்கும் கைக்கும் - வாய்க்கும் கைக்கும், மௌனம் மௌனம் என்று - மவுனம் மவுனம் என்று, ஏய்க்கும் - ஏமாத்தும், சொல் கொண்டு - சொல்லைக் கொண்டு, இராபகல் அற்றிடா - இராப்பகல் அற்றொழியாத, நாய்க்கும் - நாயினேனுக்கும், இன்பம் உண்டோ? - சுகமுளதோ?, நல் அடியரை - நல்லன்பரை, தோய்க்கும் - முழுகுவிக்கின்ற, ஆனந்தம் - இன்பமாகிய, தூ வெளி வெள்ளமே! - பரிசுத்தமான ஆகாயத்தினின்றும் ஒழுகாநின்ற பிரவாகமே!, என்க.

(வி - ரை) பஞ்சேந்திரியங்களின் சேட்டைகளை நீக்கி, மனமொடுங்கப் பெற்று, அந்தர்முக நோக்கிலிருக்கும் மௌனிகளைப்போல, அடியேனுமிருப்பதாக நடித்து, வாயாற் பேசாமலும் கையை யாட்டாமலு மிருந்துகொண்டே மாத்துகிறே னென்பார், 'வாய்க்குங் கைக்கு மௌனமௌனமென், றேய்க்கும்' என்றனர். இராப்பகல் - கேவல சகலம். தூவெளி சிதாகாசம், அதாவது சிதம்பரம். (42)

தூய தான துரிய வறிவெனும்
தாயுநீ யின்பத் தந்தையு நீயென்றால்,

சேயதா மிந்தச் சீவத் திரளன்றோ?
ஆயும் பேரொளி யான வகண்டமே!

(இ - ள்) ஆயும் - அறிஞரால் ஆராயப்படுகிற, பேரொளி ஆன - பரஞ் சோதியாகிய, அகண்டமே - வியாபகமே!, தூயதான - பரிசுத்த மான, துரிய அறிவு என்னும் - துரியஞான மென்கிற, தாயும் நீ - அன்னையு நீ, இன்பம் - சுகத்தினைக் கொடுக்கின்ற, தந்தையும் நீ - பிதாவும் நீ, என்றால் - என்று சொன்னால், இந்த சீவத்திரள் அன்றோ - இவ்வுயிர்த் தொகுதியல்லவா, சேய் ஆம் - மக்களாகும், என்க.

(வி - ரை) சிவத்தினைத் 'தந்தை' என்றும், சிவையைத் 'தாய்' என்றும், சீவான்மாக்களைச் 'சேய்கள்' என்றுங் கூறினமையால், பரமான்மா ஒன்றென்றும், சீவான்மா பலவென்றும், அச்சீவான்மாக்கள் பரமான்மாவை யருள்மூலமா யடையவேண்டு மெனவும் ஏற்பட்டு, ஏகான்ம வாத மறுக்கப்பட்டது. (43)

அகண்ட மென்ன வருமறை யாகமம்
புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ?
செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை
உகந்த பேருனை யொன்றுவ ரையனே!

(இ - ள்) அகண்டம் என்ன - அகண்ட மென்று, அரு மறை - அரிய வேதங்களும், ஆகமம் - ஆகமங்களும், புகன்ற - சொல்லிய, நின் தன்மை - உன் இயற்கையானது, போதத்து அடங்குமோ? - தற்போதத் துக் குள்ளாமோ?, செகங்கள் எங்குந் திரிந்து - உலக முழுவதுஞ் சஞ் சரித்து, நல் மோனத்தை உகந்த பேர் - சிறந்த மோனநிலையினை யடைந்த பேர்கள், உன்னை ஒன்றுவர் - உன்னை யடைவார்கள், ஐயனே! - கடவுளே! என்க.

(வி - ரை) சர்வ வியாபகமாக விளங்குஞ் சிவபெருமான் வியாபக அருட்போதத்தாலன்றி, ஏகதேசப்பட்ட சிவபோதத்தா லறியக்கூடா தென்பார், 'அகண்ட மென்ன வருமறை யாகமம், புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ?' எனவும், மூர்த்தி தலந் தீர்த்த முறையே தரிசித்த வர்க்கே மௌனநிலை யுண்டென்பார், 'செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை, உகந்த பேர்' எனவுங் கூறினர். (44)

ஐய னே! உனை யன்றி யொருதெய்வம்
கையி னுற்றொழ வுங்கரு தேன்கண்டாய்!
பொய்ய னகிலும் பொய்யுரை யேன்; சுத்த
மெய்ய னுமுனைக் கேவெளி யாகுமே.

(இ - ள்) ஐயனே! - கடவுளே!, உன்னை அன்றி - தேவரீரை யல்லாமல், ஒரு தெய்வம் - வேறொரு தெய்வத்தினை, கையினால் - கரத்தினால், தொழவும் - தொழுதற்கும், கருதேன் - நினைக்கமாட்டேன்; பொய்யன் ஆகிலும் - பொய்யினேனானாலும், பொய் உரையேன் - பொய் சொல்லேன்; சுத்த மெய்யன் ஆம் - சுத்த மெய்யனாகிற, உனக்கே வெளி ஆகும் - உனக்கே விசிதமாகும், என்க.

(வி - ரை) திருவாசகம்: "பழுதிறொல் புகழான பங்கநீ யல்லாற் பற்று நான் மற்றிலேன் கண்டாய், செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே! திருப்பெருந் துறையுறை சிவனே!, தொழுவனோ பிறரைத் துதிப்பனோ வெனக்கோர் துணையென நினைவனோ சொல்வாய், மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய் வருகவென் றருள்புரி யாயே." என்றதற் கேற்ப, 'ஐய னேயுனையன்றி யொருதெய்வம், கையி னாற்றொழ வுங்கரு தேன்கண் டாய்!' என்றனர். 'கையினாற் றொழவும்' என்றதனால் கருத்தால் எண்ணவும், வாக்கால் கூறவும் செய்யேன் என்றதாயிற்று. (45)

வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
ஒளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தவன் றோ? கற்ற கல்வியே.

(இ - ள்) வெளியில் நின்ற - சிதாகாயத்தில் நிலைபெற்றிருந்த, வெளியாய் விளங்கிய - ஞானவெளியாய்ப் பிரகாசித்த, ஒளியில் நின்ற - பூதவொளியில் நிலைபெற்றிருந்த, ஒளி ஆம் - பரவொளியாகிய, உன்தன்னை தேவரீரை, நான் - அடியேன், தெளிவு தந்த - எனக்குத் தெளிவை கொடுத்த, கல்லால் அடி தே என்று - கல்லால விருட்சத்தினடியி லெழுந்தருளி யிருந்த தெய்வமென்று, களி பொருந்த அன்றோ? - மனமகிழ்ச்சியடைதற் கல்லவோ?, கற்ற கல்வி - அடியேன் கற்ற கல்விகள், என்க.

(வி - ரை) 'வெளி' என்றது சிதாகாயமாகிய சிதம்பரம்; மற்றொரு வெளி ஆனந்த வெளியின் சொரூபமான நடராஜமூர்த்தி. 'ஒளி' என்றது பூத சம்பந்தமான ஒளி; மற்றொரு ஒளி அதற்காதார பூதமான ஒளி. 'கல்லாலடித்தே' என்றது தட்சணாமூர்த்தியினை. இம் மூர்த்தியினை யடைந்து மகிழ்தலே கற்ற கல்வியினாற் பிரயோசன மென்பார், 'களிபொ ருந்தவன் றோ? கற்ற கல்வியே' என்றார். திருக்குறள்: "கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன், நற்றா டொழாஅ ரெனின்." என்றதனாற் காண்க.

'கல்லை யுற்ற கருத்தினர்' 'கார்நிறத்
தல்லை யொத்த குழலின' ராசையால்
எல்லை யற்ற மயல்கொள வோ? எழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே!

(இ - ள்) எழில் - அழகைக் கொண்ட, தில்லையில் - சிதம்பரத்தில், திகழும் - பிரகாசிக்கின்ற, திரு பாதனே! - திருவடிகளை யுடையவனே!, கல்லை - கல்லின் தன்மையை, உற்ற - அடைந்த, கருத்தினர் - மனத்தினை யுடையவர்களும்; கார் நிறத்து - கருமேகத்தின் நிறத்தினைத் தன்னிடத்துக் கொண்டிருத்தலால், அல்லை ஒத்த - இரவினை யொத்த, குழலினர் - கூந்தலினை யுடையவர்களுமாகிய மாதருடைய, ஆசையால் - ஆசையினால், எல்லை அற்ற - அளவு கடந்த, மயல் கொள்ளவோ? - மயக்கங் கொண்டு நசிக்கவோ அடியேன் பிறந்தது?, என்க.

(வி - ரை) மாதர்களின் மயலிற் சிக்குண்டோர் நல்லறிவிற் றலையெடார் என்பார், 'குழலின ராசையால், எல்லையற்ற மயல்கொள வோ' என்றனர். திருவிளையாடற் புராணம்: "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ" என்றதனாற் காண்க. 'தில்லை யிற்றிக ழுந்திருப் பாதன்' என்பது 'பொன்னம்பலத்தின்கண்ணே குஞ்சித பாதத்தோடு விளங்கும் ஆனந்த நடராஜமூர்த்தியை.' (47)

திருவ ருட்டெய்வச் செல்வி மலைமகள்
உருவி ருக்கின்ற மேனி யொருபரம்
குருவை, முக்கணெங் கோவைப், பணி; நெஞ்சே!
கருவி ருக்கின்ற கன்மமிங் கில்லையே.

(இ - ள்) திருவருள் - திருவருளென்கின்ற, தெய்வ செல்வி - தெய்வச் செல்வத்தை யுடையவராகிய, மலைமகள் - பார்வதிதேவியின், உரு - வடிவானது, இருக்கின்ற - அமைந்திருத்தற்குரிய, மேனி - திருமேனியையுடைய, ஒரு - ஒப்பற்ற, பரம் குருவை - பரமாசாரியனை, முக்கண் எம் கோவை - மூன்று கண்களையுடைய எம்மிறைவனை, நெஞ்சே! - மனமே!, பணி - வணங்கு!, (வணங்குவையாயின்) கரு இருக்கின்ற - கருப்பத்திற் றங்குதற்குரிய, கன்மம் - தீவினையானது, இங்கு இல்லை - இவ் வுலகத்தில் நமக்கு) உண்டாவதில்லை, என்க.

(வி - ரை) "அருளது சத்தியாகும்" என்ற சிவஞானசித்தியார் வாக்கியத்தினுக்கேற்ப, 'திருவ ருட்டெய்வச் செல்வி மலைமகள்' என்றனர். 'மலை' என்றது ஈண்டு 'இமயமலை.' சிருஷ்டிகாலத்தில் சதாசிவ தவநாயனுர் தமது காருண்ணியத்திலே திருமேனியைத் தரித்துக் கொண்டு வேதாகமங்களை யருளிச்செய்தா ராகலின், 'குருவை' என்றனர். சிவஞானசித்தியார்: "ஆரண மாகமங்க ளருளினு லுருவு கொண்டு, காரண னருளா ஞகிற் கதிப்பவ ரில்லை யாகும்" என்றதனாற் காண்க. (48)

கன்ம மேது? கடுநர கேது? மேற்
சென்ம மே(து); எனைத் தீண்டக் கடவதோ?

என்மனோரத மெய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்க ணாத னிருக்கவே.

(இ - ள்) என் மனோரதம் - அடியேன் விருப்பத்தினை யெல்லாம், எய்தும்படிக்கு - நான் அடையும்படி, அருள் - கிருபை செய்கிற, நன்மை கூர் - நன்மை மிகுந்த, முக்கண் நாதன் - மூன்று கண்களையுடைய இறைவன், இருக்க - எனக்குள்ளீடா யிருக்கும்போது, கன்மம் ஏது? - தீவினையேது?, கடு நரகு ஏது? - கொடிய நரகமேது?, மேல் சென்மம் ஏது? - மேல் உண்டாகும் பிறவி ஏது?, என்னை தீண்டக்கடவதோ? - (இவற்று ளொன்றாயினும்) என்னைப் பற்றக்கடவதோ?, என்க.

(வி - ரை) ஒருவனுக்கு முதல்வன் கிருபையிருக்கும்பட்சத்தில் கன்ம முதலிய வினை யாவுக் தொடரா தென்பார், 'கன்மமேது? கடுநரகேது? மேற், சென்மமே (து)? எனைத் தீண்டக் கடவதோ?' என்றனர். தேவாரம்: "அல்ல லென்செயு மருவினை யென்செயும், தொல்லை வல்வினைத் தொண்டன்றா னென்செயும், தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க், கெல்லையில்லதோ ரடிமைபூண் டேனுக்கே" என்றதனாற் காண்க. (49)

நாத கீதன்,என் னாதன்,முக் கட்பிரான்,
வேத வேதியன், வெள்விடை யூர்தி,மெய்ப்
போத மாய்நின்ற புண்ணியன், பூந்திருப்
பாத மேகதி; மற்றிலை; பாழ்நெஞ்சே!

(இ - ள்) நாதகீதன் - நாதகீதங்களை யுடையவன்; என் நாதன் - என் தலைவன்; முக்கண் பிரான் - மூன்று கண்களையுடைய பிரான்; வேத வேதியன் - வேதத் தலைவனாகிய விப்பிரன்; வெள் விடை ஊர்தி - வெண்மையான இடப வாகனத்தினை யேறி நடாத்துபவன்; மெய்போதம் ஆய் நின்ற புண்ணியன் - உண்மை அறிவாகி நின்ற தருமமூர்த்தி, (அவனுடைய) பூ - தாமரை மலர்போன்ற, திருபாதமே - திருவடிகளே, கதி - நமக்குப் புகலிடம்; மற்று இல்லை - வேறில்லை; பாழ் நெஞ்சே! - பாழ் மனமே!, என்க.

(வி - ரை) முதல்வன் சாமவேதப் பிரியன் என்னு மருமைத் திருப் பெயருடையவனாதலின் 'நாத கீதன்' என்றனர். "ப்ராஹ்மணோ பகவாந் ருத்ரோ க்ஷத்ரியோபரமோஹரீ꞉। வைஸ்ய꞉ பிதாமஹச் சைவ இந்த்ரஸ்ச ஶூத்ர அஜாயதே॥" என்ற சுருதியின்படி முதல்வன் பிராமணனாகலின் 'வேதியன்' என்றனர். வேதமும் முதல்வன் றிருமுகத்திற் பிறந்ததாகலின் 'வேத வேதியன்' என்றனர். (50)

மற்று னக்கு மயக்கமென்? வன்னெஞ்சே!
கற்றை வார்சடைக் கண்ணுத லோனருள்

பெற்ற பேரவ ரேபெரி யோர்,எலாம்
முற்று மோர்ந்தவர், மூதுரை யர்த்தமே.

(இ - ள்) வல் நெஞ்சே! - வலிய மனமே!, உனக்கு மற்றும் - உனக்கின்னமும், மயக்கம் என்? - மயக்க முளதாதற்குக் காரணமென்னை?, கற்றை - திரட்சியாகிய, வார் சடை - நீண்ட சடையையுடைய, கண்ணுதலோன் - நெற்றிக் கண்ணனது, அருள் பெற்ற பேர் அவரே - அருளைப் பெற்றோராகிய அவர்களே, பெரியோர் - ஞானிகளும், மூதுரை அர்த்தம் எல்லாம் - வேதப்பொருள்களை எல்லாம், முற்றும் ஓர்ந்தவர் - முழுதும் உணர்ந்தவரும் (ஆவர்), என்க.

(வி - ரை) முதல்வனுடைய அருளிற் றிளைத்தவரே முற்றுணர்ந்த பெரியோர்களாகிய ஞானிக ளென்பார், 'அருள், பெற்ற பேரவ ரேபெரி யோர் எலாம், முற்று மோர்ந்தவர், மூதுரை யர்த்தமே' என்றனர். திருமந்திரம்: "சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர், சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர், சிவனரு ளால்சிலர் சேரகி லாமை, சிவனருட் கூறிலச் சிவலோக மாமே." என்றதனுற் காண்க. (51)

உரையி றந்துளத் துள்ள விகாரமாம்
திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்,
பரை நிறைந்த பரப்பெங்க னங்ஙனே
கரைக டந்தின்ப மாகக் கலப்பனே.

(இ - ள்) உரை இறந்து - சொல்லற்று, உள்ளத்து உள்ள - மனத்தினுள்ள, விகாரம் ஆம் - வேறுபாடாகிய, திரை கடந்தவர் - ஆவரணத்தைக் கடந்தவர்கள், தேடும் - தேடுகின்ற, முக்கண் பிரான் - மூன்று கண்களையுடைய பிரானது, பரை நிறைந்த - திருவருட் சத்தி நிறைந்த, பரப்பு எங்கன் - நிலம் எங்கு, அங்ஙனே - அவ்விடத்தே, கரை கடந்து - வரம்பு கடந்து, இன்பம் ஆக கலப்பன் - சுக வடிவாகக் கலப்பேன், என்க.

(வி - ரை) திருவருட் பெருஞ் செல்வர்களாகிய சமயாசாரியர்கள், வாக்காலு மனத்தாலும் வியாபாரஞ் செய்திருக்கக் கண்டாமன்றே? அங்ஙனமாக, 'உரையி றந்துளத் துள்ள விகாரமாம், திரைக டந்தவர் தேடு முக் கட்பிரான்' என்றதென்னையோ வெனின், தற்போதத்தினை முன்னிட்டு, உரையாடாமலும் மனத்தினைச் செலுத்தாமலும், அருள் வியாபாரத்தி லிருத்தலுக்கே உரைமன மிறந்த லென்பதாம். 'பரைநி றைந்த பரப்பு' என்றது முதல்வன் தன் திருவருள் விலாச வியாபகம். (52)

கலந்த முத்தி கருதினுங் கேட்பினும்
நிலங்க ளாதியு நின்றெமைப் போலவே
அலந்து போயின மென்னு மருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே!

(இ - ள்) அரு மறை - அரியவேதங்களை, வாய் மலர்ந்த - திருவாய் மலர்ந்தருளிய, முக்கண் மாணிக்க சோதியே! - முக்கண் மாணிக்கச் சுடரே!, கலந்த முத்தி - கலந்த முத்திநிலையினை, கருதினும் - நினைக்கினும், கேட்பினும் - கேட்கினும், நிலங்கள் ஆதியும் - பிருதுவி முதலானவைகளும், எம்மைப் போலவே நின்று - எம்மைப்போலவே திகைத்து நின்று, அலந்து போயினம் என்னும் - துன்பப்பட்டுப் போயினோமென்னாநிற்கும், என்க.

(வி - ரை) 'கலந்த முத்தி' ஆவது இரண்டறக் கலந்தனுபவிக்கும் சுத்தாத்துவித நிலை. அநந்யமாகவிருந் தனுபவிப்பவர்க்கே யன்றி அந்யமா யுற்றவர்கட்கு எவ்வகையாலு முத்தியி னருமை தெரிந்துகொள்ளுதற்குக் கூடாதென்பார், 'அலந்து போயின மென்னு மருமறை' என்றனர். (53)

சோதி யாதெனைத், தொண்டருட் கூட்டியே,
போதி யாதவெல் லாமெளப் போதிக்க,
ஆதி காலத்தி லுன்னடிக் காந்தவம்
ஏது நான்முயன் றேன்? முக்க ணெந்தையே!

(இ - ள்) முக்கண் எந்தையே! - திரிநேத்திரதாரியாகிய தந்தையே!, என்னை சோதியாது - அடியேனைப் பரீட்சியாமல்; தொண்டருள் கூட்டி - அடியார்களுடன் சேர்த்து; போதியாத எல்லாம் - போதிக்கக் கூடாத அருமையான பொருள்களை யெல்லாம், மெள்ள போதிக்க - மெள்ள போதித்தற்கு, ஆதிகாலத்தில் - முற்காலத்தில், உன் அடிக்கு ஆம் - உன் திருவடித் தொண்டுக்குரியனாகும்படியான, ஏது தவம் - என்ன தவத்தினை, நான் முயன்றேன்? - அடியேன் முயன்று செய்தேன்?, என்க.

(வி - ரை) சோதித்தலாவது - அடியார் வைத்துள்ள அன்பினருமையினைப் பிறருக்கு வெளிப்படுத்தல்; அது சிறிது அல்ல வீந்தே சோதித்தறிதல் வழக்கமாயிருத்தலின், அவ் வல்லலிற்பட் டுண்மையினைச் சாதிக்கும் வலியிலேனாகையால், 'சோதி யாதெனை' என்றனர். அடியாருறவு கிடைக்கில் சகல வின்பமுஞ் சித்தியா மாகலின், 'தொண்டருட் கூட்டியே' என்றனர். திருமந்திரம்: "அறிவா ரமரர் தலைவனை நாடிச், செறிவார் பெறுவர் சிவதத்துவத்தை, நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும், பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே." என்றதனாற் காண்க. ()

எந்த நாளைக்கு மீன்றரு டாயென
வந்த சீரருள் வாழ்கவென் றுன்னுவேன்;
சிந்தை நோக்கந் தெரிந்து, குறிப்பெலாம்
தந்து காக்குந் தயாமுக்க ணாதியே!

(இ - ள்) சிந்தை நோக்கம் தெரிந்து - அடியார் மனத்தினது நோக்கத்தினைத் தேர்ந்து, குறிப்பு எல்லாம் - அவர்கள் கருதினவற்றை யெல்லாம், தந்து காக்கும் - கொடுத்துக் காக்கின்ற, தயா - அருளினை யுடைய, முக்கண் ஆதியே! - முக்கண் முதல்வனே!, எந்த நாளைக்கும் - எக்காலத்தும், ஈன்று அருள் தாய் என - பெற்றருளிய தாயைப்போல, வந்த - வந்து என்னைக் காத்தருளிய, சீர் அருள் - சிறப்பினையுடைய உன் திருவருளானது, வாழ்க என்று - வாழக்கடவதென்று, உன்னுவேன் - பிரார்த்திப்பேன், என்க.

(வி - ரை) ஆன்மா கன்மத்திற் கீடாக எடுக்கும் எண்ணிலாச் சென்மங்கடோறும், தாயாயிருந்து கருணை செய்து, கன்மத்தினைப் பக்குவப்படுத்தி வருதலின், 'எந்த நாளைக்கு மீன்றரு டாயென' என்றனர். "கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னை" என்ற தேவாரத்தின் கருத்தினுக் கேற்ப, 'சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாம், தந்து காக்குந் தயாமுக்க ணாதியே!' என்றனர். (55)

கண்ண கன்றவிக் காசினி யூடெங்கும்
பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை
எண்ண வோவரி தேழை கதிபெறும்
வண்ண முக்கண் மணிவந்து காக்குமே.

(இ - ள்) கண் அகன்ற - இடமகன்ற, இக் காசினி ஊடு எங்கும் - இவ் வுலகத்தில் எவ்விடத்தும், பெண்ணொடு ஆண்முதல் ஆம் - பெண்ணோடு ஆண் முதலாகப் பிறந்த, என் பிறவியை - என் சனனங்களை, எண்ணவோ அரிது - அளவிட வென்றாலோ அருமையாகும்; (இங்ஙனமாகவும்) ஏழை - அறிவிலியாகிய நான், கதி பெறும்வண்ணம் - முத்தியை யடையுமாறு, முக்கண் மணிவந்து காக்கும் - முக்கண் மாணிக்கம் வந்து காத்தருளும், என்க.

(வி - ரை) பட்டினத்தடிகள்: "முன்னை யெத்தனை யெத்தனை சென்மமோ." என்றதற் கேற்ப, 'பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை, எண்ணவோவரி தேழை' என்றனர். (56)

காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு
போக்கு மில்லை; என் புந்திக் கிலேசத்தை
நீக்கி யாளுகை நின்பரம்; அன்பினர்
ஆக்க மே! முக்க ணானந்த மூர்த்தியே!

(இ - ள்) அன்பினர் - அன்பினர்களுக்கு, ஆக்கமே! - செல்வமே!, முக்கண் - மூன்று கண்களையுடைய, ஆனந்த மூர்த்தியே! - சுகவடிவை யுடையவனே!, காக்கும் - காத்தலையே யியலா யமைத்த, நின் அருள் காட்சி அல்லால் - தேவரீர் திருவருட் டெரிசனத்தையே யன்றி, ஒரு

போக்கும் இல்லை - (அடியேனுக்கு) வேறொரு புகலிடமு மில்லை; (ஆதலால்) என் புந்தி கிலேசத்தை நீக்கி - என்னுடைய மனவருத்தத் தினைப் போக்கி, ஆளுகை - ஆண்டருளுதல், நின் பரம் - உனக்கே பார மாகும், என்க.

(வி - ரை) ஆன்மகோடிகள் யாவரையும் ஆணவ மலத்தினின்றும் வெளிப்படுத்தி, மாயையினின்றுந் தனு கரண போகங்களை யுண்டாக்கி யவர்கட் கீந்து, பின் தன்னிடத்திலேயே யொடுக்கும் முதல்வன் றிருவரு ளின்றி யொன்று நடவா தாகலின், 'காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு, போக்கு மில்லை' என்றனர். 'ஆக்கம்' என்றது திருவருட் செல்வத்தினை, அடியார்கட்கே அருட்செல்வ முண்டாவ துண்மையாக லின், 'அன்பின ராக்கமே' என்றனர். (57)

ஆனந் தங்கதி யென்னவென் னானந்த
மோனஞ் சொன்ன முறைபெற முக்கணெங்
கோனிங் கீந்த குறிப்பத னல்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே.

(இ - ள்) ஆனந்தம் - ஆனந்தமே, கதி என்ன - அடைக்கலமெனத் தெரியவும், என் ஆனந்த மோனம் சொன்ன - எனக்கு ஆனந்தரூபமான மௌன நிலையினை அருளிச்செய்த, முறை பெற - முறையினை அடையவும், முக்கண் - மூன்று கண்களையுடைய, என் கோன் - எம்முடைய இறைவன், இங்கு ஈந்த - இவ்விடத் தருளிச்செய்த, குறிப்பதனல் - குறிப்பினாலே, வெறும் தீனன் செய்கை - மிகவும் ஏழையாகிய என் செய்கை, திருவருள் செய்கையே - திருவருட் செய்கையே, என்க.

(வி - ரை) தனக்கென வொரு செய லில்லை யெனவும், யாவுந் திரு வருட் செயலே யெனவும் குறிப்பாகத் தனக்குணர்த்திய கோலம் முக்கண் மூர்த்தியாகலின், அத் திருவுருவத்தினையே முன்னிலையாகக் கொண்டு, 'முக்கணெங்கோன்' எனவும், 'முக்கணுதன்' எனவும், 'முக்கட்பிரான்' எனவும், 'கண்ணுதலோன்' எனவும், 'முக்கண் மாணிக்கச் சோதி' எனவும், 'முக்க ணெந்தை' எனவும், 'முக்கணுதி' எனவும், 'முக்கண் மணி' எனவும், 'முக்கணனந்த மூர்த்தி' எனவும் பலகாலும் போந்த செய்யுட்களிற் கூறிவந்தனர். (58)

கையி னற்றொழு தேத்திக் கசிந்துள
மெய்யி னலுனைக் காண விரும்பினேன்;
ஐய னே! அர சே! அரு ளே! அருள்
தைய லோர்புறம் வாழ்சக நாதனே!

(இ - ள்) ஐயனே! - கடவுளே!, அரசே! - அரசனே!, அருளே! - தயை யுடையோனே!, அருள் தையல் - திருவருட்சத்தியாகிய முதல்வி-

ஓர் புறம் வாழ் - திருமேனியி னொருபாகத்தில் வசித்தற்குரிய, சக நாதனே ! - உலக நாதனே !, கையினுல் தொழு - என்னுடைய கரங்களி னுல் வணங்கி, ஏத்தி - வாயால் தோத்தரித்து, உள்ளம் கசிந்து - மன முருகி, மெய்யினுல் - மெய்யன்பினுல், உன்னை - தேவரீரை, காண - தரி சிக்க, விரும்பினேன் - ஆசைகொண்டேன், என்க.

(வி - ரை) மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினுலும் வழிபட்டே னென்பார், 'தொழுது, ஏத்தி, காண விரும்பினேன்' என்ருர். முதல்வ னும் முதல்வியும் வேற்றுமையின்றி யோருருக் கொண்டு விளங்குபவரென் பார், 'தையலோர்புறம் வாழ்சக நாதனே !' என்றனர். பொன்வண்ணத் தந்தாதி : "வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலமிடமே, கலந்தான் வலநீ றிடஞ்சாந் தெரிவலம் பந்திடமென், பலந்தார் வலமிட மாடகம் வேல்வல மாழியிடஞ், சலந்தாழ் சடைவலந் தன்னங் குழலிடஞ் சங்கரற்கே." என்றத னுற் காண்க. (59)

சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிகுத்த தீமை விளைய விளைக்கின்றேன் ;
அகத்து ளாரமு தாமைய ! நின்முத்திச்
சுகத்தி னுன்வந்து தோய்வதெக் காலமோ ?

(இ - ள்) சகத்தின் - உலகத்தின், வாழ்வை - வாழ்வினை, சதம் என - நிலையென்று, எண்ணி - நினைத்து, மிகுத்த - அதிகமான, தீமை - தீமைகள், விளைய - உண்டாம்படி, விளைக்கின்றேன் - விளையா நிற்கின் றேன் ; அகத்துள் - (அன்பர்) மனத்துள்ளே, ஆர் - அரிய, அமுது ஆம் - அமிர்தம்போல உருசிக்கின்ற, ஐய ! - ஐயனே !, நின் - தேவரீரது, முத்தி சுகத்தில் - மோட்சசுக வாரிதியில், நான் - அடியேன், வந்து தோய்வது - வந்து படிவது, எக்காலம் ? - எக்காலம் ?, என்க.

(வி - ரை) உயிர்ச் சார்பாயுள்ள குடும்ப முதலாகிய பலவகைப்பட் டிருக்கின்ற தேகாதி பிரபஞ்ச வாழ்வுக ளனைத்தும் அநித்திய மென்பார், 'சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே' என்றனர். நாலடியார் : "கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி, வாளாதே போவரான் மாந்தர் கள் - வாளாதே, சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல, யாக்கை தமர்க்கொழிய நீத்து." என்றதனுற் காண்க. சகம் - தோன்றியழிதன் மாலையது. (60)

காலமூன்றுங் கடந்தொளி ராநின்ற
சீல மே ! நின் றிருவரு ளாலிந்த்ர
சால மாமிச் சகமென வெண்ணி,நின்
கோல நாடுத லென்று ? கொடியனே.

(இ - ள்) காலம் மூன்றும் - முக்காலங்களையும், கடந்து - கடந்து, ஒளிரா நின்ற - விளங்குகின்ற, சீலமே! - குணவானே! நின் திருவருளால் - தேவரீர் திருவருளினால், இ சகம் - இவ்வுலகமானது, இந்த்ரசாலம் ஆம் என - இந்திரசாலமாமென்று, எண்ணி - நினைத்து, நின் கோலம் - உன் திருக்கோலத்தினை, கொடியன் - கொடியேன், நாடுதல் - நாடுவது, என்று? - எப்போது?, என்க.

(வி - ரை) சுத்தாத்துவாக்களுக்கு மப்பாற்பட்ட முதல்வன் மிச்சிராத்துவாக்களிலுள்ள காலத்தினைக் கடந்துநிற்பனாகலின், 'கால மூன்றுங் கடந்தொளி ராநின்ற, சீலமே!' என்றனர். இந்த்ரசாலம் - கண்கட்டு வித்தை; தோன்றும்பொழுதே யில்லையாய் வேறுவன. (61)

கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளே! நினக் கன்பின்றிப்
படியி லேழைமை பற்றுகின் றேன்வெறும்
மிடியி னேன்கதி மேவும் விதியின்றே.

(இ - ள்) கொடிய - கொடிதாகிய, வெம் வினை - தீவினை யென்கிற, கூற்றை - யமனை, துரந்திடும் - ஓட்டுகின்ற, அடிகள் ஆம் பொருளே! - கடவுளென்று சொல்லப்படுகிற வஸ்துவே!, வெறும் மிடியினேன் - மிகவும் வறியனாகிய நான், கதி மேவும் விதி இன்று - நற்கதியை யடைதற்குக் காரணமாகிய ஆகூழ் இல்லாமையால், நினக்கு அன்பு இன்றி - உன்னிடத் தன்பில்லாமல், படியில் - இவ்வுலகில், ஏழைமை பற்றுகின்றேன் - அறிவில்லாமையையே ஆதாரமாகப் பற்றா நிற்கின்றேன், என்க.

(வி - ரை) பிரபஞ்சத்தின்கண் பற்றுவைத்து அதன் மயமா யிருக்கிறவரையில் திருவருட் செல்வ மடைவதற் கேதுவில்லை யாகலின், 'மிடியினேன்' எனவும், அத் திருவருட் செல்வங் கிட்டாதபோது மோட்ச சாம்பிராச்சியங் கிட்டாதென்பார், 'கதி மேவும் விதியின்றே' என்றனர். இவையனைத்திற்குங் காரணம் முதல்வனிடத் தன்பில்லாமையே என்பார், 'நினக் கன்பின்றிப், படியி லேழைமை பற்றுகின்றேன்' என்றனர். (62)

விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்
பதிய வைத்த பசுபதி! நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே?

(இ - ள்) விதியையும் விதித்து - விதியையும் வகுத்து; என்னை விதித்து - அவ் விதிக்கிடமாக அடியேனையும் வகுத்து; இட்ட மதியையும் விதித்து - எனக்கென் றமைத்த புத்தியையும் வகுத்து, அம் மதி - அந்தப் புத்தியானது, மாயையில் பதிய வைத்த - மாயையின்கண்ணே அழுந்த வைத்த, பசுபதி! - பசுபதியே!, நின் அருள் கதியை - உன்னருளாற்

கிடைக்கும் கதியினை, கண்டு களிப்பது எப்படி? - கண்டு மகிழ்வது எவ்வாறு?, என்க.

(வி - ரை) விதியும், அவ் விதிக்கேற்ற உடலும், அவ் வுடலில் மதியும், அம் மதி மாயையிற் சிக்குண்டு கிடத்தலும், பிராரத்துவ கன்மத்தினுக்குத் தக்கபடியே யாயினும் அவைகள் யாவும் முதல்வன் சந்நிதானத்திலன்றிக் காரியப்படா தாகலின், அவன் விதித்ததாகக் கூறினர். (63)

'கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்'
பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்
அண்ட னே! உனக் கோர்பதி னாயிரம்
தெண்டன்; என்பொய்ம்மை தீர்த்திடல் வேண்டுமே.

(இ - ள்) கண்ட - பார்த்த, கண்ணுக்கு - கண்களுக்கு, காட்டும் - பதார்த்தங்களை விளக்கிக் காட்டுகின்ற, கதிர் என - சூரியன் போல, பண்டும் - முற்பொழுதும், இன்றும் - இப்பொழுதும், என்பால் நின்று - என்னிடத்தினின்று, உணர்த்திடும் - உள்ளவா றுணர்த்துகின்ற, அண்டனே!- தேவனே!, உனக்கு - தேவரீருக்கு, ஓர் பதினாயிரம் தெண்டன் - எண்ணிலாத நமஸ்காரம் செய்கின்றேன்; என் - அடியேனுடைய, பொய்ம்மை - பொய்யொழுக்கத்தினை, தீர்த்திடல் வேண்டும் - நீக்கியருள வேண்டும், என்க.

(வி - ரை) கண்ணுக்குக் கதிரானது எக்காலத்தும் அத்துவிதமாக இருந்து உபகரித்து வருதல்போல, முதல்வனுந் தன்னுடன் அத்துவிதமாக எக்காலத்து மிருந்து உபகரித்து வருகிறா னென்பார், 'கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப், பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்' என்றனர். கதிர் கலக்கப்பட்டவற்றைக் கண்ணிற் பிரகாசமானது வேறாக நின்றே காணும். இப்படி அகலநின்று காண்கையிலும் கதிரொடு காண்டலன்றி கண்ணொளிகள் தாமே காணமாட்டா. கண்ணொளியும் கதிரும் தம்மிற் கலந்து நிற்கும். கலந்தாலும் பொருந்திய பொருள் ஐக்கியத்தால் ஒன்றென லின்றிப் பொரு ளிரண்டேயா மென இவ் உவமானங் காட்டிக் கண்ணுக்கு ளொளியைக் கதிர் கொடுத்துப் பொருள்களைத் தரிசிப்பிக்குமெனும் நிமித்த பரிணாம வாதத்தையு மறுத்தது. சிவப்பிரகாசம்: "கண்ணொளி விளக் களித்துக் காட்டிடு மென்னின் முன்னங், கண்ணொளி யொன்று மின்றாம் விளக்கொளி கலந்த வற்றைக், கண்ணொளி யகல நின்றே கண்டிடும் வேறு காணுக், கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே." என்றதனாற் காண்க. (64)

வேண்டும் யாவு மிறந்து, வெளியிடைத்
தூண்டு வாரற்ற சோதிப் பிரான்! நின்பால்

பூண்ட வன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல்,
ஈண்டு சன்ம மெடுப்ப னனந்தமே.

(இ - ள்) வேண்டும் - விரும்பப்படுகிற, யாவும் - எல்லாப் பொருள்களையும், இறந்து - கடந்து, வெளியிடை - பரவெளியில், தூண்டுவார் - தூண்டுவாரை, அற்ற - இல்லாத, சோதி - சோதிமயமான, பிரான்! - கடவுளே!, நின்பால் - தேவரீரிடத்து, பூண்ட - அன்பு பூண்ட, அன்பர் - அடியார்கள், பொன் பணி - திருப்பணி, வாய்க்குமேல் - கிடைப்பதாயின், ஈண்டு - நெருங்கிய, அனந்த சன்மம் - முடிவில்லாத சன்மங்களை, எடுப்பன் - எடுப்பேன், என்க.

(வி - ரை) அன்பர் பணி மாத்திரங் கிடைக்கும் பட்சத்தில் சன்மமே வேண்டும் என்பார், "அன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல், ஈண்டு சென்ம மெடுப்பன்" என்றனர். "மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும் வந்துநின் னன்பர்தம் பணியாம், அறமது கிடைக்கின்" என்று ரிவ்வாசிரியரே மற்றோ ரிடத்தும். (65)

எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து, நின்னையுங் கூடவுங் காண்பனோ?
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே!

(இ - ள்) அடுத்த பேர் - ஆசிரயித்தவர்களுடைய, அறிவாய் - அறிவுருவாய், அறியாமையை - அவருடைய அஞ்ஞானத்தை, கெடுத்த - அழித்த, இன்பம் - சுகத்தைத் தருகின்ற, கிளர் - விளங்குகின்ற, மணி குன்றமே! - மாணிக்க மலையே!, எடுத்த தேகம் இறக்கும் முன்னே - எடுத்த உடம்பு இறந்தழிவதன் முன்னே, என்னைக் கொடுத்து - என்னை யுனக்குக் கொடுத்து, நின்னையும் - தேவரீரையும், கூடவும் - கூடப்பெறவும், காண்பனோ - காண்பேனோ?, என்க.

(வி - ரை) 'கொடுத்து' என்றது தனக்கென ஏற்பட்டிருக்கும் சுதந்திரத்தை யிழந்து என்றதாம். 'கூடவுங் காண்பனோ?' என்றது என்னுடன் அனுதியே இரண்டறக் கலந்திருக்கும் உண்மையினைத் தெரிந்து கொண்டு வாழுந் தன்மையினை யடைவனோ வென்பதாம். (66)

குன்றி டாத கொழுஞ்சுட ரே! மணி
மன்று ளாடிய மாணிக்க மே! உனை
அன்றி யார்துணை? யாருற வார்கதி?
என்று நீயெனக் கின்னருள் செய்வதே?

(இ - ள்) குன்றிடாத - அழியாத, கொழும் சுடரே! - செழுஞ் சுடரே!, மணி மன்றுள் - தில்லைச் சிற்றம்பலத்தில், ஆடிய - ஞான நட

னஞ் செய்கின்ற, மாணிக்கமே - மாணிக்கமே !, உன்னை அன்றி - உன்னை யல்லாமல், துணையார்? - அடியேனுக்குத் துணையெவர்?, உறவு யார்? - உறவாவர் யாவர்?, கதி ஆர்? - புகலிடமாவர் யார்?, (ஒருவருமில்லையாத லால்) நீ - தேவரீர், எனக்கு - அடியேனுக்கு, இன்னருள் செய்வது - இன்னருள்புரிவது, என்று? - எக்காலம்?, என்க.

(வி - ரை) ஆன்மாவிற்கு எக்காலத்திலும் தோன்றாத் துணையாகியும், சென்மங்கடோறும் உறவாகியும், தன்னை யடைந்தவர்க்குக் கதியாகியு முதல்வ னிருத்தலால், 'யார்துணை? யாருற வார்கதி?' என்றனர். தேவாரம்: "துணையா யென்னெஞ்சத் துறப்பிப்பாய் நீ" எனவும், "உற வெல்லா மாவான்றான் காண்" எனவும், "அமருலகத்த மடைந்தார்க் காட்சிபோலும்" எனவும் வருவனவற்றாற் காண்க. (67)

அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
பொருளெ லாம்வல்ல பொற்பொது நாத! என்
மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால்
இருளெ லாமிரிந் தெங்கொளித் திட்டதே?

(இ - ள்) அருள் எல்லாம் - திருவருள் முழுவதும், திரண்டு - ஒருங்கு சேர்ந்து, ஓர் வடிவு ஆகிய - ஒரு வடிவுகொண்டு விளங்குகின்ற, பொருள் எல்லாம் வல்ல - எல்லாப் பொருள்களையும் காத்தளித் தழிக்க வல்ல, பொன் பொது - பொன்னம்பலத்தில், நாத! - எழுந்தருளி யிருக் கிற நடராஜ மூர்த்தியே!, என் - அடியேனுடைய, மருள் எல்லாம் - மயக்க முழுவதும், கெடுத்து - ஒழித்து, உள்ளம் - அடியேன் மனதில், மன்ன லால் - தேவரீர் நிலைபெற்றிருத்தலால், இருள் எல்லாம் - ஆணவவிருள் முழுவதும்; இரிந்து - ஓடி, எங்கு ஒளித்திட்டது? - எவ்விடத்து மறைந்து விட்டது?, என்க.

(வி - ரை) 'மருள்' என்றது ஈண்டு மயக்கம். இது மாயா காரி யத்தால் விளைந்தது. மாயா காரியமாகிய தனு கரண புவன போகங்களை விசாரித்து அவை நிலையல்லனவென முதல்வ னருளால் தெரிந்தபோதே அம் மயக்க மொழியும்; அது ஒழியவே, இதுகாறும் அத்துவிதமாக விருந்த முதல்வன் வெளிப்படுவன்; வெளிப்படவே, ஆணவமல மறைந்து விடும் என்பார், 'மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால், இருளெ லாமி ரிந் தெங்கொளித் திட்டதே?' என்றனர். (68)

எங்கு மென்னை யிகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றற்றால்
அங்க ணா! உன் னடியிணை யன்றியே
தங்க வேறிட முண்டோ சகத்திலே?

(இ - ள்) எங்கும் - எவ்விடத்திலும், என்னை - அடியேனை, இகல் உற - பகை மிக, வாட்டி - வாடச்செய்து, பங்கம் செய்த - பங்கப்படுத்தின, பழ வினை - பழமையாம் வினையானது, பற்று அற்றால் - சம்பந்தம் நீங்கிப் போனால், அம்கணா! - அழகிய (நெற்றிக்) கண்ணனே!, உன் - தேவரீருடைய, அடி இணை - இரண்டு பாதங்கள், அன்றி - அல்லாமல், சகத்தில் - இவ் வுலகில், தங்க - யான் சென்று தங்கியிருக்க, வேறு இடம் உண்டோ? - வேறிட முளதோ?, என்க.

(வி - ரை) ஈண்டு 'பழவினை' என்றது பிராரத்துவ கன்மம். இது உள்ளவளவும் உலகத்திலே பலபல சென்மங்கடோறும் பற்பல தனு கரண புவன போகங்களை யனுபவித்து உழன்றுகொண்டே யிருக்கவேண்டுமெனவும், அவ்வினை முற்று மனுபவித்து, அவ் வினை மறுபடியு முண்டாவதற் கேதுவாகிய ஆகாமிய வினை யேறாதபடி தடுத்துக்கொண்டபோது, ஆன்மாவினுக் கிருப்பிடம் முதல்வன் றிருவடியே யன்றி வேறில்லை யெனவும் என்பார், 'பழவினை பற்றற்றால்...........அடியிணை யன்றியே, தங்க வேறிட முண்டோ' என்றனர். (69)

உண்ட வர்க்கன்றி யுட்பசி யோயுமோ?
கண்ட வர்க்கன்றிக் காத லடங்குமோ?
தொண்ட ருக்கெளி யானென்று தோன்றுவான்?
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே.

(இ - ள்) உண்டவர்க்கு - புசித்தவர்களுக்கு, அன்றி - அல்லாமல், உட்பசி ஓயுமோ? - (மற்றவர்கட்குப்) பசி யடங்குமோ?, கண்டவர்க்கு - நேரே பார்த்தவர்க்கு, அன்றி - அல்லாமல், காதல் அடங்குமோ? - (மற்றவர்கட்கு) ஆசை தீருமோ?, வண் தமிழ்க்கு - செந்தமிழ்ப் பாடலுக்கு, இசைவு ஆக - பொருத்தமாக, மதிக்க - யாவரு மதிக்கும்படி, தொண்டருக்கு - அடியார்கட்கு, எளியான் - எளியவனாகிய எமது முதல்வன், என்று - எக்காலத்து, தோன்றுவான்? - வெளிப்படுவான்?, என்க.

(வி - ரை) வயிறார அன்ன முண்டவர்க்கே பசி நீங்குதல்போலவும், ஒரு பதார்த்தத்தை நேரே கண்டவர்க்கே அதனிடத்து வைத்த ஆசை நீங்குதல்போலவும், முதல்வனைக் கண்ணாரத் தரிசித்தவர்க்கே அருளேக்க நீங்கு மென்பதாம். தொண்டராவார் வைதிக சைவ சமயாசாரியர்களாகி விளங்கும் திருவருட்பெருஞ் செல்வர்களாகிய நால்வர், 'தொண்டருக் கெளியான்' என்றது, "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" என்றதனாற் காண்க. 'வண்டமிழ்' என்றது செந்நெறித் தமிழாகிய திராவிட வேதம். ()

மதியுங், கங்கையுங், கொன்றைய(ம்), மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனித! நின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே.

(இ - ள்) மதியும் - சந்திரனும், கங்கையும் - கங்காநதியும், கொன்றையும் - கொன்றை மலரும், மத்தமும் - மத்த மலரும், பொதியும் - தரித்திருக்கின்ற, சென்னி - சடாபாரத்தினையுடைய, புனித! - நின்மலனே!, நின் - தேவரீருடைய, பொன் - அழகிய, அடி - திருவடியாகிய, கதியை விட்டு - புகலிடத்தினை விட்டு, இந்தக் காமத்தில் ஆழ்ந்த - இந்த காமக் கடலி லழுந்திய, என் விதியை - என்னுடைய ஊழினை, எண்ணி - நினைத்து, விழி - என்னுடைய கண்கள், துயிலாது - உறங்காது, என்க.

(வி - ரை) காமத்தி லழுந்தில் பாரின்பமே யன்றிப் பேரின்பமொரு போது முண்டாகா தாகலின், அதனால் வருந்துகிறே னென்பார், 'கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென், விதியை யெண்ணி விழிதுயிலாதன்றே' என்றனர். நீதிநெறிவிளக்கம்: "சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார், மற்றின்பம் யாவையும் கைவிடப - முற்றுந்தாம், பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ, பாரின்பப் பாழ்ங்கும்பி யில்." என்றதனாற் காண்க. (71)

அன்றெ னச்சொல, ஆமென, அற்புதம்
நன்றெ னச்சொல, நண்ணிய நன்மையை,
ஒன்றெ னச்சொன வொண்பொரு ளே! ஒளி
இன்றெ னக்கருள் வாய்! இரு ளேகவே.

(இ - ள்) அன்று என சொல்ல - அல்லவென்றும் சொல்லவும்; ஆம் என - ஆமென்று சொல்லவும்; அற்புதம் நன்று என சொல்ல - அதிசயம் நேர்த்தியா யிருக்கிறதெனச் சொல்லவும், நண்ணிய - பொருந்தியிருந்த, நன்மையை - நல்ல பொருளை, ஒன்று என சொன்ன - ஆசாரிய கோலங் கொண்டெழுந்தருளிவந்து ஒன்றேயென்று திருவாய் மலர்ந்தருளிய, ஒண் - மேலான, பொருளே! - வஸ்துவே!, இருள் - அஞ்ஞானம், ஏக - நீங்கும் படி, இன்று - இப்போது, எனக்கு - அடியேனுக்கு, ஒளி - ஞானப் பிரகாசத்தினை, அருள்வாய்! - கிருபை செய்வாய்!, என்க.

(வி - ரை) ஒரு தனி முதல்வனை அன்றென்றும், ஆமென்றுங் கூறி முரண்படுவோர் புறச்சமயத்தினர்; சன்மார்க்க நெறியினராகிய சித்தாந்தச் செல்வ ரொன்றேயெனக் கூறி மகிழ்வராகலின் 'அன்றெ னச்சொல ஆமென, அற்புதம், நன்றெ னச்சொல' எனவும், 'ஒன்றெ னச்சொன வொண்பொருள்' எனவுங் கூறினர். பட்டினத்தார்: "அன்றென்று மாமென்று மாறு சமயங்க, ளொன்றொன்றோ டொவ்வா துரைத்தாலு - மென்று, மொருதனையே நோக்குவா ருளத்திருக்கு, மருதனையே நோக்கி வரும்." எனவும், இவ்வாசிரியர் கூறிய ஆனந்தக்களிப்பில், "அன்றென்று மாமென்று முண்டோ - வுனக், கானந்தம் வேண்டி லறிவாகிச் சற்றே, நின்றாற் றெரியு மெனவே - மல, நீக்கி யெம்மாதி நிகழ்த்தினன் றோழி." எனவும் வருவனவற்றாற் காண்க. (72)

இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரேதுணை யென்றுண ராய்! நெஞ்சே!
வருவ ரேகொடுங் காலர்கள்; வந்தெதிர்
பொருவ ரே; அவர்க் கென்சொல் புகல்வதே?

(இ - ள்) இருவரே - பிரம விட்டுணுக்களாகிய இருவரே, புகழ்ந்து - புகழ்ந்து, எத்தற்கு - துதித்தற்கு, இனியர் ஆம் - இனியராயிருந்த, ஒருவரே - ஒப்பற்றவரே, துணை என்று - நமக்குத் துணையாவரென்று, உணராய்! - அறிவாயாக!, நெஞ்சே! - மனமே!, கொடும் காலர்கள் - கொடிய எம தூதர்கள், வருவரே - வருவார்களே; எதிர் வந்து - எதிரிலே வந்து, பொருவரே - போர் செய்வரே; அவர்க்கு - அத்தூதர்கட்கு, என் சொல் புகல்வது? - என்ன சமாதானஞ் சொல்லக்கடவது?, என்க.

(வி - ரை) ஈண்டு இருவர் என்றது பிரமனையும், விட்டுணுவையும். இனியாராவார் திருவண்ணாமலையில் அக்கினிப்பிழம்பா யெழுந்தருளி அவ்விருவருக்குங் கிருபை செய்த முதல்வர். திருக்கடைக்காப்பு: "நாகம் வைத்த முடியா னடிகை தொழுதேத்து மடியார்க, ளாகம் வைத்த பெருமான் பிரமன் னொடுமாலுந் தொழுதேத்த, வேகம் வைத்த வெரியாய் மிக வோங்கிய வெம்மானிடம்போலும், போகம் வைத்த பொழிலின்னிழ லான் மதுவாரும் புகலூரே." என்றதனாற் காண்க. எக்காலத்திலும் எவற்றிற்கு முதல்வனே துணையென்பார், 'ஒருவ ரேதுணை' என்றனர். திருக்கருவை வெண்பா வந்தாதி: "பார் முதலாய் வானப் பரப்பா யனைத்தினுக்குங், கார்முதலா யுண்டியருள் காப்பாகிச் - சீர்முதலா, யாவர்க்குந் துணையாங் களவீச நின்னையன்றி, பார்க்கி லுண்டோ வின்பம் பகர்." என்றதனாற் காண்க. (73)

புகழுங், கல்வியும், போதமும், பொய்யிலா
அகமும், வாய்மையும், அன்பு, மளித்தவே;
சுகவி லாசத் துணைப்பொரு டோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே.

(இ - ள்) சுக விலாசம் - இன்பத்தினை யளிக்கின்ற லீலையினையுடைய, துணை பொருள் - உயிர்த்துணைப் பொருளாகிய முதல்வனுடைய, தோற்றம் ஆம் - சேவைக்குரிய, ககன மேனியை - செவ்வானம்போன்ற திருமேனியினை, கண்டன கண்கள் - தரிசித்தனவாகிய நேத்திரங்கள், புகழும் - கீர்த்தியையும், கல்வியும் - கல்வியையும், போதமும் - அறிவையும், பொய் இல்லா - பொய்மை யொழிந்த, அகமும் - மனத்தையும், வாய்மையும் - சத்தியத்தையும், அன்பும் - அன்பினையும், அளித்த - கொடுத்தன, என்க.

(வி - ரை) அந்திவானத்து நிறத்தினையுடைய சகளத்திருமேனி வாய்ந்த முதல்வனைக் கண்ணாரத் தரிசித்தவர்கட்குப் புகழ்முதலிய யாவும்

உண்டாமென்பதாம். ஆன்மா இவ்வுலகத்தில் அனுபவிக்கும் போகங்கள் பலவேனும், அவற்றுள் இன்றியமையாதனுபவிக்க வேண்டுவன புகழ், கல்வி, போதம், பொய்யிலா அகம், வாய்மை, அன்பு என்றனர். (74)

கண்ணு ணின்ற வொளியைக், கருத்தினை,
விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை,
எண்ணி யெண்ணி யிரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்றொழுந் தெய்வமே.

(இ - ள்) கண்ணுள் - நேத்திரத்துள், நின்ற - நிலைபெற்ற, ஒளியை - பிரகாசத்தினை; கருத்தினை - என் கருத்தாயிருப்பதை; விண்ணுள் - பரவெளியில், நின்று - நிலைபெற்று, விளங்கிய - பிரகாசித்த, மெய்யினை - உண்மைப் பொருளை; எண்ணி எண்ணி - பலகால் சிந்தித்து, இரவும் பகலும் - இராப்பகலாக, நண்ணுகின்றவர் - இடையறாது அடைந்திருப்பவர், நான் - அடியேன், தொழும் - வணங்கும்படியான, தெய்வம் - தெய்வமாவார், என்க.

(வி - ரை) வேதங்களிற் றெய்வங்கள் பலபடக் கூறியிருப்பினும், அங்ஙனமே உலகத்தாராற் கொண்டாடப்படினும், கண்ணுக்குங் கருத்தினுக்கும் பிரத்தியட்சமாய் விளங்கிச் சிதாகாய சொரூபியா யிருப்பவன் சிவனே யாதலால், அவனே 'நான்றொழுந் தெய்வம்' என்றனர். (75)

தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவ ரென்பது(ம்), நற்பர தற்பர!
சைவ சிற்சிவ னே! உனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும், யானுணர்ந் தேனுற்றே.

(இ - ள்) வேறு தெய்வம் - சிவபெருமானுக்கு அந்நியமாக ஒரு தெய்வம், உளது - உண்டு, என்பவர் - என்று சாதிப்பவர், சிந்தனை நைவர் என்பதும் - மனம் வருந்துவர் என்பதையும், நல் - சிறந்த, பரம் - மேலாகிய, தற்பர! - தற்பரனே!, சைவ - சைவசமயத்தினுற் பிரதிபாதிக்கப்படுகிற, சித் - ஞானசுகத்தினை யளிக்கின்ற, சிவனே! - மங்களகரனே!, உன்னை சார்ந்தவர் - தேவரீரை யடைந்தவர்கள், உய்வர் என்பதும் - கடைத்தேறுவர்க ளென்பதையும், உற்று - ஆராய்ந்தமைந்து, யான் உணர்ந்தேன் - அடியேன் தேர்ந்தேன், என்க.

(வி - ரை) சிவபெருமானைச் சிந்தனை செய்யாதவர் 'நைவர்' எனவும், சிவபெருமானைச் சார்ந்தவர் 'உய்வர்' எனவுங் கூறினர். அதாவது முதல்வனை நம்பினோர் விண்ணுலகாள்வர், நம்பாதவர் நரகமடைவரென்பதாம். தேவாரம்: "இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன், றலங்களோடே னேசல வூன்றிய, நலங்கொள் சேவடி நாடொறு நாடொறும், வலங்கொண் டேத்துவார் வானுல காள்வரே." எனவும், "வெள்ளெருக்

கரவம் விரிவுஞ் சடைப் புள்ளிருக்கு வேளூரான் பொற்கழல், உள்ளிருக்கு மூணர்ச்சி யிலாதவர் நள்ளிருப்பர் நரகக் குழியிலே." எனவும் வருவன வற்றூற் காண்க. (76)

உற்ற வேளைக் குறுதுணை யாயிந்தச்
சுற்ற மோநமைக் காக்குஞ்சொ லாய்? நெஞ்சே!
கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே.

(இ - ள்) உற்ற வேளைக்கு - விபத்து சம்பவித்த காலத்தில், இந்த சுற்றமோ - இந்த உறவோ, உறு துணை ஆய் - உற்ற துணையாகி, நம்மை காக்கும்? - நம்மைக் காப்பாற்றும்?, நெஞ்சே! - மனமே!, சொல்லாய் - புகலாய்!, கற்றை-திரட்சியாகிய, வார்-நீண்ட, சடை - சடாபாரத்தினையும், கண் நுதல்-நெற்றிக்கண்ணையுமுடைய முதல்வனுடைய, பாதமே-திருவடியே பற்றது ஆயின் - நமக்குப் பற்றாகக் கொள்ளுவோமாயின், பரசுகம் - சிவா னந்த வின்பம், பற்றும் - உண்டாகும், என்க.

(வி - ரை) ஆபத்து நேரிடுங்காலத்தில் முதல்வனை யன்றிச் சுற்றத் தார் சிறிது முதவுவாரல்ல வென்பார் 'உற்ற வேளைக்குறுதுணை யாயிந்தச், சுற்றமோ நமைக் காக்கும்?' என்றனர். தேவாரம்: "உற்றாரியா ருளரோ? உயிர்கொண்டு போம்போது, குற்றாலத்துறை கூத்தரல் லானமக்கு" என் றதனாற்காண்க. அடியார்கட்கு அவனடியே ஆனந்தம் விளைக்கு மென் பார், 'பாதமே, பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே' என்றனர். திருமந்திரம்: "அடியா ரரனடி யானந்தங் கண்டோ, ரடியா ரான வரத்தரு ளுற்றோ, ரடி யார் பவரே யடியவ ராமா, லடியவர் பொன்னம்பலத்தாடல் கண் டோரே." என்றதனாற் காண்க. (77)

பற்ற லாம்பொரு ளேபரம்; பற்றினல்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே;
மற்றும் வேறுள மார்க்கமெ லாமெடுத்
தெற்று வாய்! மன மே! கதி யெய்தவே.

(இ - ள்) பற்றினல் - அன்பு ஊறப் பிடிக்கின், உற்ற மாதவர்க்கு - மிக்க தபோதனர்கட்கு, உண்மையை நல்கும் - உண்மையாகிய மோட்ச சாம்பிராச்சியத்தினை யருளும்; (ஆதலால்) பரம் - பரம்பொருளானது, பற்றலாம் பொருளே - ஆசிரயிக்கத்தக்க பொருளே; மனமே - நெஞ்சே!, கதி எய்த - மோட்ச மடைதற்காக, மற்றும் வேறு உள்ள - இதையன்றி வேறுள்ள, மார்க்கம் எல்லாம் - சமயங்களெல்லாம், எடுத்து எற்றுவாய்!- எடுத்தெறியக்கடவாய்!, என்க.

(வி - ரை) சன்மார்க்கமாகிய சித்தாந்த சைவசமய மல்லாத வேறு சமயங்களைச் சேரவேண்டாமென்பார், 'வேறுள மார்க்கமெ லாமெடுத்,

தெற்று வாய்! மனமே!' என்றனர். திருவுந்தியார்: "சாவிபோ மற்ற சமயங்கள் புக்குநின், றாவி யுறுதேயென் றுந்தீபற, அவ்வுரை கேளாதே யுந்தீபற." எனவும், இவ்வாசிரியரே, "பொய்வர் தழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம்" எனவும் கூறியுள்ளனவற்றைக் காண்க. (78)

---

# ஆரணம்

---

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆரண மார்க்கத் தாகம வாசி
யற்புத மாய்நடந் தருளும்
காரண முணர்த்துங் கையு(ம்),நின் மெய்யும்,
கண்கண்மூன் றுடையவென் கண்ணே!
பூரண வறிவிற் கண்டிலம்; அதனாற்
போற்றியிப் புந்தியோ டிருந்து,
தாரணி யுள்ள மட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத் தகுமே.

(இ-ள்) கண்கள் மூன்று உடைய - திரிநேத்திரங்கள் வாய்ந்த, என் - அடியேனுடைய, கண்ணே! - நேத்திரமே!, ஆரண மார்க்கத்து - வேதவீதியில், ஆகம வாசி - ஆகமக் குதிரை, அற்புதம் ஆய் - ஆச்சரியமாய், நடந்தருளும் - நடத்தியருளுகின்ற, காரணம் - காரணத்தினை, உணர்த்தும் - தெரிவியாநின்ற, நின் - தேவரீருடைய, கையும் - திருக்கரத்தையும், மெய்யும் - திருமேனியையும், பூரண அறிவில் - வியாபக அறிவினில், கண்டிலம் - கண்டோமில்லை; அதனால் - ஆகையால், தாரணி - உலகத்தில், உள்ளமட்டும் - உள்ளவளவும், போற்றி - புகழ்ந்து, இப் புந்தியோடு - இம் மன நிலையோடு, இருந்து - வாழ்ந்து, வணங்க - காயத்தால் வணங்க, தமியனேன் - தமியேன், வேண்டிடத்தகும் - விரும்பத்தகும், என்க.

(வி-ரை) ஒருவன் ஒரு இடத்தினைக் கருதிச் செல்வானுக்கு வீதியும் குதிரையும் அவசியமாவது போல, முதல்வன் திருவடியினைக் குறித்துச் செல்வார்கட்கு வேதமும் ஆகமமும் அத்தியாவசிய மாகலின், வேதத்தினை வீதியாகவும், ஆகமத்தினைக் குதிரையாகவும் உவமித்துக் கூறினர். இதனால் ஒருவனுக்கு வேதமும் ஆகமமும் அத்தியாவசியமென ஏற்பட்டது. ஆயினும், வீதியினையும் குதிரையையு நோக்க வீதியினைக் காட்டிலும் குதிரைக்கு அதிக சிறப்புடைத்தா மாறுபோல, வேதத்தினும் ஆகமம் அதிகச் சிறப்படைந்து, வேதம் பொதுவாகின்றது. திருமந்திரம்: "வேதமோ டாகம மெய்யா மிறைவனூல், ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென்னுக!, நாத னுரையவை நாடி லிரண்டந்தம், பேதம தென்பார் பெரி

யோர்க் கபேதமே.'' என்றதனுற் காண்க. வேதம் பல பொருள்படத் தோன்றுஞ் சூத்திரம்போலவும், ஆகமம் அதனை அவ்வாருகவொட்டாது தெளிந்துரைக்கும் பாடியம்போலவும் நூலாருந்ததி முறைபற்றி முதல்வனு லிருவகையாகச் செய்யப்பட்டன.

'காரண முணர்த்துங் கை' ஆவது சின்முத்திரைக் கை. முதல்வன் தடத்தமாய் நின்றகாலத்துச் சொரூபம் வெளிப்படா தாகலின், 'பூரண வறிவிற் கண்டிலம்' என்றனர். உருவத் தியானத்திலேயே அன்பும், ஆராமையும், ஆனந்தமும், சித்தியும் விளையு மாகலினுலும், அருவத்தியா னத்தி லத்தகையவொன்று முண்டாவதற் கேதுவில்லை யாகலானும், கண் கள் மூன்றுடைய கடவுளினையே மனம் வாக்குக் காயங்களா லெக்காலத் தும் வழிப்பட்டுய்வேன் என்பார், 'போற்றியிப் புந்தியோ டிருந்து, தாரணி யுள்ளமட்டுமே வணங்கத் தமியனேன் வேண்டிடத் தருமே.' என்றனர். 'போற்றி' என்றதனுல் வாக்கும், 'புந்தி' என்றதனுல் மனமும், 'வணங்க' என்றதனுல் காயமும் பெறப்பட்டன. "உருவத் தியான முடனேவாச் செபஞ்செய், ஒருதொழி லேசித்தி யுதவு - மருவ மெனப், பிஞ்சிற் பழுத் தாற்போற் பேசிவீணுள் கழித்தால், நெஞ்சு புண்ணுகிக் கெடுஞ்சொன் னேன்'' என்றதனுற் காண்க. இதனுல் நிஷ்கள தியானத்தினுஞ் சகள தியானமே சிறப்பென ஏற்பட்டது. (1)

இடமொரு மடவா ளுலகனைக் கீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றும்,
தடமுறு மகில மடங்குநா ளம்மை
தன்னையு மொழித்து,விண் ணெனவே
படருறு சோதிக் கருணையங் கடலே!
பாயிருட் படுகரிற் கிடக்கக்
கடவனே? நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே.

(இ - ள்) இடம் - இடப்பாகத்தினை, ஒரு - ஒப்பற்ற, மடவாள் - மடப்பத்தினை யுடையாளாகிய, உலகு அன்னைக்கு - உலக மாதாவாகிய பார்வதியாருக்கு, ஈந்திட்டு - கொடுத்திட்டு, எவ்வுலகத்தையும் - உலகங்க ளனைத்தையும், ஈன்றும் - சிருட்டித்தும்; தடம் - பெருமை, உறும் - தங்கிய, அகிலம் - உலகம், மடங்கும் நாள் - அழியுங் காலத்தில், அம்மை தன்னையும் - பார்வதியாரையும், ஒழித்து - அடக்கிக்கொண்டு, விண் என - ஆகாயம்போல, படர் உறு - எங்கும் வியாபித்திருக்கிற, சோதி - ஒளி யாகிய, கருணை கடலே! - கிருபாசமுத்திரமே!, பாய் - பரவாநின்ற, இருள் - அஞ்ஞான விருள் வாய்ந்த, படுகரில் - பிறவிச் சமுத்திரத்தில், கிடக்கக்கடவனே? - அழுந்தியிருக்கத் தக்கவனே?, நினைப்பு மறப்பு என்னும் திரையை - சகலகேவல மென்னும் அலையினை, கவர்ந்து - கிரகித்

துக்கொண்டு, என்னை - அடியேனை, வளர்ப்பது - வளர்த்துவருவது, உன் கடன் - தேவரீர் கடமையாம், என்க.

(வி - ரை) முதல்வனும் முதல்வியும் குணங்குணி சம்பந்தமாயுள்ள உண்மையினைச் சகளத் திருமேனியினுங் காட்டுவான் அம்மையார் விரும்ப இறைவன் தனதொரு இடப்பாகத்தினை ஈந்தன னாகலின், 'இடமொரு மடவா ளுலகனைக் கீந்திட்டு' என்றனர். "என வணங்கி யிமாசலக் கன்னிகை, தனது பத்தித் தவத்திற் றுதித்தபின், கனக மேருவ ளைத்தகைக் காரணர், மனம கிழ்ந்து தம் வாமம் வழங்கினர்." என்றதனுற் காண்க. சர்வசங்காரகாலத்து எல்லா மொடுங்குகையில் சத்தியும் சிவத்தி லடங்கி நிற்கு மாகலின் 'அம்மை தன்னையு மொழித்து' என்றனர். ஈன்ற நாளையும் அடங்கு நாளையும் குறிக்கவே காக்கு நாளையுங் கொள்க. என்னை? முதல்வனே முத்தொழிலுக்குந் தலைவ னாகலின், திருவாசகம்: "படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை காப்போற் காக்கும் கடவுள் காப்பவை, கரப்போன் கரப்பவை" என்றதனுற் காண்க. (2)

வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து,
மண்ணையும் விண்ணையுந் தெரியா
தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை
யானந்த மாகவே யலந்தேன்;
களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக்
காட்சியே! சாட்சியே! அறிஞர்
உளம்பெறுந் துணையே! பொதுவினி னடிக்கு
முண்மையே உள்ளவா றிதுவே.

(இ - ள்) வளம் பெறும் - வளம் பொருந்திய, ஞான வாரி - ஞானக் கடலை, வாய் மடுத்து - வாயாற் பருகி, மண்ணையும் - பூமியையும், விண்ணையும் - ஆகாயத்தையும், தெரியாது - அறியாமல், அளம் பெறும் - கடலிற் பட்ட, துரும்பு ஒத்து - துரும்பினை யொத்து, ஆவியோடு - உயிருடன், ஆக்கை - உடம்புகள், ஆனந்தமாக - இன்புருவாக, அலந்தேன் - வருந்தினேன்; களம் பெறு - வஞ்சகங்கொண்ட, வஞ்ச நெஞ்சினர் - கபட மனத்தினர், காணு - காணக்கூடாத, காட்சியே! - பிரத்தியட்சமே!, சாட்சியே! - சாட்சியா யுள்ளவனே!, அறிஞர் - ஞானிகள், உள்ளம் பெறும் - மனதினை யிடமாகக் கொண்ட, துணையே! - உயிர்த் துணையே!, பொதுவினில் - தில்லைச் சிற்றம்பலத்தில், நடிக்கும் - ஆனந்த நடனஞ் செய்யும், உண்மையே! - மெய்ப்பொருளே!, உள்ள ஆறு இதுவே - உண்மையான நிலையிதுவேயாகும், என்க.

(வி - ரை) கள்ளமே குடிகொண்ட நெஞ்சினை யுடையவர்கட்கு முதல்வன் காணப்படானுகலின், 'வஞ்ச நெஞ்சினர் காணுக் காட்சி' என்றும்; அங்ஙன மில்லாத அறிஞரிடத்து எக்காலமும் விரவியிருப்பா னுக

லின், 'அறிஞருளம் பெறுந் துணையே!' என்றனர். தேவாரம்: "கரவாகும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால், விரவாகும் பெருமானை விடையேறும் வித்தகனை, யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி, யிரவாடும் பெருமானை யென் மனத்தே வைத்தேனே." என்றதனாற் காண்க. (3)

உள்ளமே நீங்கா வென்னை 'வா! வா!' வென்
றுலப்பிலா வானந்த மான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே!
வெப்பிலாத் தண்ணருள் விளக்கே!
கள்ளமே துரக்குந் தூவெளிப் பரப்பே!
கருவெனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப்
பாலிப்ப துன்னருட் பரமே.

(இ-ள்) உள்ளமே நீங்கா - அடியேனுடைய மனத்தை விட்டுப் பிரியாதிருந்து, என்னை - அடியேனை, வா! வா! என்று - வருவாய்! வருவாய்! என்று கூப்பிட்டு, உலப்பு இல்லா - கெடுத லில்லாத, ஆனந்தமான - இன்பமாகிய, வெள்ளமே - மழையினையே, பொழியும் - சொரிகின்ற, வான் - மேம்பட்ட, கருணை - கிருபையாகிய, முகிலே! - மேகமே!, வெப்பு - சூடு, இல்லா - இல்லாத, தண் - குளிர்ச்சி பொருந்திய, அருள் விளக்கே! - திருவருள் தீபமே!, கள்ளம் - வஞ்சனையாகிய இருளினை, துரக்கும் - நீக்கும், தூ - பரிசுத்தம் பொருந்திய, வெளிப்பரப்பே! - ஆகாயமே!, கரு எனக் கிடந்த, - கருப்பமெனச் சொல்லக்கிடந்த, பாழ் - சூனியமாகிய, மாயம் பள்ளம் - மாயையாகிய கடலில், வீழாது - வீழாதபடி, என்னை - அடியேனை, கரை எற்றி - கரையிலேற்றி, பாலிப்பது - காப்பது, உன் - தேவரீருடைய, அருள் பரம், - திருவருட் பாரமாகும், என்க.

(வி-ரை) சர்வ வியாபகமாக விருக்கும் முதல்வன், அன்பர்கள் உள்ளத்து எக்காலத்தும் வாழ்வா னாகலின், 'உள்ளமே நீங்கா' என்றனர். திருமந்திரம்: "உள்ளத்து ளோன்கரந் தெங்கு நின்றவன், வள்ளற் றலைவன் மலருறை மாதவன், பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படுங், கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே." என்றதனாற் காண்க. முதல்வன், உள்ளத்திலே வாழினும் அன்பர்கள் பரிபக்குவ மடைந்தகாலத்து ஆசாரிய மூர்த்தியாக வெளிவந்து முன்னின்று அனுக்கிரகிப்ப னென்பார், 'என்னைவா வாவென் றுலப்பிலா வானந்த மான, வெள்ளமே' என்றனர். பூத விளக்கல்ல என்பார், 'அருள் விளக்கே!', என்றனர். 'மாயப் பள்ளம்' என்றது பிறப்பினை. பிறப்பற்ற மூர்த்தியே பிறப்பினின்று மெடுத்தருளுவா னாகலின், 'பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப் பாலிப்ப துன்னருள்' என்றனர். திருமந்திரம்: "பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கும்,

மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும், குறப்பெண் குவிமுலை கோமள வல்லி, சிறப்பொடு பூசனை செய்பநின் ரூர்க்கே." என்றதனாற் காண்க. (4)

பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த
பழவடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்குந் தானகற் பகமே!
சோதியே! தொண்டனே னின்னை
யிரந்துநெஞ் சுடைந்து கண்டுயில் பெறும
லிருந்தது மென்கணி லிருட்டைக்
கரந்துநின் கண்ணாற் றுயிற்பெறல் வேண்டிக்
கருதினேன்; கருத்திது தானே.

(இ - ள்) பரம்பரம் ஆகி - வமிச பாரம்பரையாக, பக்குவம் - பக்குவம், பழுத்த - முதிர்ந்த, பழ அடியார்க்கு-பழமையான தொண்டர்களுக்கு, அருள் பழுத்து - அருட்கனி பழுத்து, சுரந்து - இன்பத்தேன் சுரந்து, இனிது - இனிதாக, இரங்கும் - இரங்குகின்ற, தான கற்பகமே - கொடையினிற் சிறந்த கற்பகத்தருவே!, சோதியே! - ஒளியே!, தொண்டனேன் - அடியேன், நின்னை - தேவரீரை, இரந்து - பிரார்த்தித்து, (இரங்காமையால்) நெஞ்சு - மனது, உடைந்து - கலங்கி, கண் - நேத்திரங்கள், துயில்- உறக்கம், பெறுமல் - கொள்ளாமல், இருந்ததும் - இருந்ததையும், என் - அடியேனுடைய, கண்ணில் - கண்ணிலுள்ள, இருட்டை - இருளை, கரந்து- மறைத்து, நின் - தேவரீரது, கண்ணால் - திருவருளே நேத்திரத்தால், துயில் பெறல் - துயில் கொள்ளுதலை, வேண்டி - விரும்பி, கருதினேன் - நினைத்தேன்; கருத்து இதுதான் - அடியேன் உள்ளக்கருத்து இதுதான், என்க.

(வி - ரை) பக்குவமாவது - இருவினையொப்பும், மலபரிபாகமும் வாய்ந்தபின் சத்திநிபாத முற்ற அவசரமேயாம். பழமையாக முதல்வனை யுபாசித்து வரும் அடியார்கள் பவமனைத்தினையும் போக்கி, அருள் சுரந்து காப்பனென்பார், 'பழவடி யார்க்கருள் பழுத்துச், சுரந்தினி திரங்குந் தான கற்பகமே!' என்றனர். தேவாரம்: "பழையதம் மடியார் செயும் பாவமும் பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே" என்றதனாற் காண்க. சுழுத்தி யவத்தையா லுண்டாகும் தூக்கத்தினை நீக்கிப், பேரின்பாதீதத்து நித்திரையினை யருளவேண்டு மென்பார், 'என்கணி லிருட்டைக், கரந்துநின் கண்ணாற் றுயில்பெறல் வேண்டிக் கருதினேன்' என்றனர். (5)

கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன்; மதியின்மை தீர்ப்பார்
ஒருத்தரார்? உளப்பா டுணர்பவர் யாவர்?
உலகவர் பன்னெறி யெனக்குப்

பொருத்தமோ? சொல்லாய்! மௌனசற் குருவே!
போற்றிநின் பொன்னடிப் போதே.

(இ - ள்) கருத்தினுள் - அறிவின்கண்ணே, கருத்தாய் - அறிவுமய மாய், இருந்து - எழுந்தருளியிருந்து, நீ - தேவரீர், உணர்த்தும் - அறிவிக் கும், காரணம் - காரணத்தினை, கண்டு - நோக்கி, சும்மா வருத்தம் அற்று இருந்து - சும்மா வருத்தமில்லாம லிருந்து, சுகம் பெறுவண்ணம் - இன்பம் அடையாத வகையாக, வருந்தினேன் - வருத்தமுற்றேன்; மதி இன்மை - அடியேனுடைய அறிவின்மையை, தீர்ப்பார் - நீக்குவோராகிய, ஒருத்தர் - ஒப்பற்றோர், ஆர்? - யார்?, உள்ளப்பாடு - அடியேன் மனவருத்தத்தினை, உணர்பவர் யாவர்?, அறிபவர் யாவர்? உலகவர் - உலகத்தாருடைய, பல் நெறி - பல மார்க்கங்கள், எனக்கு பொருத்தமோ? - எனக்குச் சம்மத மாகுமோ?, சொல்லாய்! - சொல்லுவாய்!, மௌன சற்குருவே? - மவுன தேசிகனே!, நின் - தேவரீரது, பொன் அடிப்போது - திருவடித் தாமரை கட்கு, போற்றி - நமஸ்காரம், என்க.

(வி - ரை) உயிர்களெல்லாந் தத்தமக்குரிய வழியின் வைத்து முதல்வனறிவிக்க அறியு மியல்பினவன்றி ஒன்றுபோல் அறிவிக்க அறியு மியல்பின வல்ல வாகலான், 'கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங் காரணங்கண்டு' என்றனர். சிவஞானபோதம்: "அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்" என்றதனுற் காண்க. சும்மா இருப்பதுவே சுகமாகலின், 'சும் மாதான், வருத்த மற்றிருந்து சுகம் பெறு வண்ணம்' என்றனர். சிவபோக சாரம்: "அருளறிந்து தானு மறிவறிந்தே யாங்குப் பொருளறிந்து தான டங்கிப் போத - விருளகல, விம்மாதிருந்து விகற்பல ஒன்றாகிச், சும்மா விருக்கச் சுகம்." என்றதனுற் காண்க. சமயவாதிகள் பல சமயங்களை யுடன்பாடாகக்கொண்டு மலைகின்றாராகலின், அவை யனைத்து மெனக் குப் பொருத்தமாகா தென்பார், 'உலகவர் பன்னெறி யெனக்குப், பொருத்தமோ சொல்லாய்' என்றனர். திருவாசகம்: "சமய வாதிக டத்த மதங்களி லமைவதாக வரற்றி மலைந்தனர்." என்றதனுற் காண்க.

"அடியெனு மதுவும், அருளெனு மதுவும்,
அறிந்திடி னிர்க்குண நிறைவும்
முடியெனு மதுவும், பொருளெனு மதுவு(ம்),
மொழிந்திடிற் சுகமன மாயைக்
குடிகெட வேண்டிற் பணியற நிற்றல்
குணம்" எனப் புன்னகை காட்டிப்,
படிமிசை மௌனி யாகிநீ யாளப்
பாக்கிய மென்செய்தேன்? பரனே!

(இ - ள்) அடி - முதல், என்னும் - என்று சொல்லப்படுகிற, அது வும் - அந்தப் பொருளும்; அருள் - திருவருள், என்னும் - என்று சொல்

லப்படுகிற, அதுவும் - அந்தப் பொருளும்; அறிந்திடின் - அறியுமிடத்து, நிர்க்குண - நிர்க்குணமாம், நிறைவும் - பூரண தவமாகிய, முடி - அந்தம், என்னும் - என்று சொல்லப்படுகின்ற, அதுவும் - அப் பொருளும், பொருள் - பரம்பொருள், என்னும் - என்று சொல்லப்படுகிற; அதுவும் - அந்தப்பொருளும், மொழிந்திடின் - கூறுமிடத்து, சுகம் - அதுவே இன்பம்; மனம் மாயை - மனத்தால் விளைந்த மாயையானது, குடி கெட - குடிவிட்டோட, வேண்டின் - விரும்பினுல், பணி அற - தொழிலற, நிற்றல் - நிற்பதே, குணம் - நற்குணமாகும், என - என்றுகூறி, புன்னகை - புன்முறுவல், காட்டி - செய்து, படிமிசை - உலகத்தில், மௌனி ஆகி - மௌன குருவாகி வந்து, நீ ஆள - தேவரீர் அடியேனைத் தடுத்தாட்கொள்ள, என் பாக்கியம் - என்ன பாக்கியம், செய்தேன்? - பூர்வத்தில் செய்திருந்தேன்?, பரனே! - மேலானவனே! என்க.

(வி - ரை) முதல்வனைப்பற்றி விசாரிக்கு மவசரத்தில் அவன் திருவருளி னுண்மை தோன்றவே பிரகிருதி சம்பந்தமான குணங்களொழிந்து நிர்க்குணந் தோன்றுமாகலின், 'அருளெனு மதுவும், அறிந்திடில் நிர்க்குணம்' எனவும், அவ் வருளிற்றிளைத்த பின் முதல்வனுண்மை வெளிப்பட்ட அவசரம் சுகமென்பார், 'பொருளெனு மதுவு(ம்), ஒழிந்திடிற் சுகம்' எனவும், இவை யனைத்து முண்டாவதற்கு முந்தி மனத்தில் விளையும் காரியஞ் செயலற்றிருக்கவேண்டிய குணம் வாய்க்கவேண்டு மென்பார், 'மன மாயைக், குடிகெடவேண்டிற் பணியற நிற்றல் குணம்' என்றனர். (7)

என்செய லின்றி யாவுநின் செயலென்
றெண்ணுவே னொவ்வொரு காலம்;
புன்செயன் மாயை மயக்கினென் செயலாப்
பொருந்துவே னஃதொரு காலம்;
பின்செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்;
பித்தனே னன்னிலை பெறனின்
றன்செய லாக முடித்திடல் வேண்டும்;
சச்சிதா னந்தசற் குருவே!

(இ - ள்) என் - அடியேனுடைய, செயல் இன்றி - செய லில்லாமல், யாவும் - எல்லாம், நின் செயல் என்று - தேவரீர் செயலாமென்று, ஒவ்வொரு காலம் - (தற்போத முனைவு இல்லாத) ஒவ்வொரு காலத்தில், எண்ணுவேன் - சிந்தியாநிற்பேன்; அஃது - அதனை, ஒரு காலம் - ஒரு காலத்தில், புன் செயல் - புன் செய்கையுடைய, மாயை மயக்கின் - மாயா மயக்கத்தால், என் செயல் ஆ - அடியேனுடைய செயலாகக் கொண்டு, பொருந்துவேன் - அமைந்திரா நிற்பேன்; பின் - பின்பு, செயல் - எவ்வெவர் செயல்களையும், யாதும் - சிறிதாயினும், நினைவு இன்றி - நிலைத்தல்

இல்லாமல், கிடப்பேன் - சும்மா இருப்பேன்; பித்தனேன் - (இவற்றால்) பித்தனென்று சொல்லப்படுவேன்; (ஆதலால்) நல் நிலை பெற - (இத்த கைய தடுமாற்றங்க ளில்லாத) மேலான நிலையினைப் பொருந்த, நின்தன் - தேவரீருடைய, செயல் ஆக - செயலேயாக, முடித்திடல் வேண்டும் - முடிவு செய்தருளவேண்டும்; சச்சிதானந்த சற்குருவே! - சச்சிதானந்த ரூபியாகிய சதாசாரியனே!, என்க.

(வி - ரை) முதல்வனே தனக்குண்ணின்றுஞ் செய்கின்றானாகலின், உலகினில் தன்னாற் செய்யப்படு மிதமகிதமெல்லா முதல்வன் செய்யுஞ் செயலே யென்றும், முதல்வனே பிறரைக் கொண்டு செய்வித்தும் செய்கின்றானாகலின், பிறரால் தனக்குத் தரு மிதமகிதங்களு முதல்வன் செய்யுஞ் செயலே பிறிதில்லை என்பார், 'என்செய லின்றி யாவுநின் செய லென், றெண்ணுவேன்' என்றார். சிவஞானசித்தியார்: "உலகிலென் செயலெல்லா முன் விதியே நீயே, புண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று, நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே" என்றதனாற் காண்க. சிவஞானசித்தியார்: "மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே" என்றதற் கேற்ப மாயை மயக்கத்தினையும் செய்தலாகிய இலக்கணங்களை யுடையதாகலின், 'புன்செயன் மாயை மயக்கில்' என்றனர், இம் மாயா மயக்கத்தால் தற்போத மூளத்தபோது, யாவுநின்செய லென்பதனை மறந்து, யாவும் என் செயலென்பே னென்பார், 'என் செயலாப் பொருந்துவேன்' என்றனர். நிர்விகற்ப சமாதி காலத்தில் நின்செயல் என்செய லென்கிற தோற்ற மொன்றுமில்லா திருப்பே னென்பார், 'செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்' என்றனர். பித்தனைப்போல இங்ஙனம் வேளைக் கொரு குணம் வாய்ந்து விபரீத மடையாதபடி ஒரு நிலையிலேயே யிருக்கச் செய்ய வருவா யென்பார், 'பித்தனே னன்னிலை பெறநின், றன்செயலாக முடித்திட வேண்டும்' என்றனர், என்க. (8)

குருவுரு வாகி, மௌனியாய், மௌனக்
கொள்கையை யுணர்த்தினை; அதனாற்
கருவுரு வாவ தெனக்கிலை; இந்தக்
காயமோ பொய்யெனக் கண்ட
திருவுரு வான னுபவ நிலையுஞ்
சேருமோ? ஆவலோ மெத்த;
அருவுரு வாகி, அல்லவாய்ச், சமய
மளவிடா வானந்த வடிவே!

(இ - ள்) குரு வுருவு ஆகி - ஆசாரிய கோலங் கொண்டு, மௌனியாய் - மௌனத்தன்மையுற்று, மௌன கொள்கையை - மௌன நிலையின் உண்மையினை, உணர்த்தினை - அடியேனுக்கு உபதேசித்தனை; அதனால் - அக் காரணத்தால், எனக்கு - அடியேனுக்கு, கரு - கருப்பத்தில், உரு

ஆவது - உருவு கொள்ளுதல், இல்லை - இனி யில்லை; (ஆயினும்) இந்த காயமோ - இச் சரீரமோ, பொய் என கண்ட - நிலையில்லாதெனக் கண்ட, திரு உருவாளர் - சிவஞானச் செல்வர்கள், அனுபவ நிலையும் - அனுபோக நிலையும், சேருமோ? - அடியேனுக்குக் கிட்டுமோ?, ஆவலோ - (அந் நிலை யினைப்பற்றி யுண்டாயிருக்கும்) ஆசையோ, மெத்த - மிகுதியா யிருக்கின் றது; அரு உரு ஆகி - அருவுருவங்களாகி, அல்ல ஆய் - அவைகள் அல்ல வாகி, சமயம் - சமய நூல்களால், அளவு இடா - அளவுபடுத்தி யுரைக்கப் படாத, ஆனந்தவடிவே! - இன்பவுருவே!, என்க.

(வி - ரை) குரு கடாட்ச முண்டானபோதே பிறவித்துயர் நீங்கு வது உண்மை யாகலின், 'குருவுரு வாகி...கருவுரு வாவ தெனக்கில்லை' என்றனர். திருமந்திரம்: "கறுத்த விரும்பே கனகம தானன், மறித் திரும் பாகா வகையதுபோலக், குறித்தவப் போதே குருவருள் பெற்றான், மறித்துப் பிறவியில் வந்தணு காரே." என்றதனாற் காண்க. திரு வுருவாள ரநுபவ நிலையாவது, பகிர்முக வனுபவ மேதேனு மனுசரியா திருத்தல். திருமந்திரம்: "மலமில்லை மாசில்லை மானாபி மானக், குல மில்லை கொள்ளுங் - குணங்களு மில்லை, நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே, பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே." என்றதனாற் காண்க. (9)

வடிவிலா வடிவாய், மனநினை வணுகா
மார்க்கமாய், நீக்கருஞ் சுகமாய்,
முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன்
மோனமல் லால்வழி யுண்டோ?
படியிரு ளகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை யடக்கி,யோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே!
அன்பரைப் பருகுமா ரமுதே!

(இ - ள்) வடிவு - உருவு, இலா - இல்லாத, வடிவு ஆய் - உருவாகி; மன நினைவு - மனக்கருத்து, அணுகா - அணுகப்பெறாத, மார்க்கம் ஆய் - நெறியாகி; நீக்கு அரு - இடையீ டில்லாத, சுகம் ஆய் - இன்பமாகி, முடிவு இலா - கேடில்லாத, வீட்டின் - மோட்ச நிலையின், வாழ்க்கை - வாழ்க் கையை, வேண்டினர்க்கு - விரும்பினோர்க்கு, உன் மோனம் - தேவரீரது மௌனநிலை, அல்லாமல் - அல்லாமல், வழி உண்டோ? - (வேறு) மார்க்க முளதோ?, படி இருள் - உலக அஞ்ஞான இருள், அகல - ஒழிய, சின் மயம் பூத்த - ஞானமயமாகிய மலர்களைப் பூத்த, பசும்கொம்பை - பசுமையாகிய கொடியை, அடக்கி - உள்ளடக்கிக் கொண்டு, ஓர் - ஒரு, கல்லால் அடியிலே - கல்லால மரநீழலில், இருந்த - தட்சிணாமூர்த்தியா யெழுந்தருளியிருந்த, ஆனந்த அரசே! - இன்பத்தினை யுதவும் அருள்

வேந்தே!, அன்பரை - பத்தி செய்வாரை, பருகும் - பருகுகின்ற, ஆர் அமுதே! - அரிய அமுதமே!, என்க.

(வி - ரை) 'வடிவிலா வடிவாய்' என்றது சதாசிவ மூர்த்தியினை, என்னை? அது அருவம் உருவம் இரண்டிற்கும் பொதுவா யிருத்தலின். போதவிகற்பங்க ணீங்கினவிடத்து இருந்தபடி சும்மா விருத்தலே மோட்ச நிலை யாகலின், 'வீட்டின் வாழ்க்கை வேண்டினர்க்குன் மோனமல் லால் வழி யுண்டோ?' என்றனர். திருக்களிற்றுப்படியார்: "அன்றிவரு மைம் புலனு நீபு மசையாம, னின்றபடி நிற்க முன்னிற்கும் - சென்று, கருதுவ தன் முன்னும் கருத்தழியப் பாயு, மொருமகடன் கேள்வ னுனக்கு." என்றதனாற் காண்க. முதல்வன் தட்சிணாமூர்த்தி கோலங் கொண்ட காலத்து சிவசத்தி யின்றித் தனித்திருந்தா ராகலின், 'பசுங்கொம்பை யடக்கி' என்றனர். (10)

---

## சொல்லற்கரிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சொல்லற் கரிய பரம்பொருளே!
சுகவா ரிதியே! சுடர்க்கொழுந்தே!
வெல்லற் கரிய மயலிலெனை
விட்டெங் கொளித்தாய்? ஆகெட்டேன்;
கல்லிற் பசிய நாருரித்துக்
கடுகிற் பெரிய கடலடைக்கும்
அல்லிற் கரிய வந்தகனார்க்
காளாக் கினையோ? அறியேனே.

(இ - ள்) சொல்லற்கு அரிய - வாக்கினாலெடுத்துக் கூறுதற் கருமை யான, பரம்பொருளே! - மேலான பொருளே!, சுகவாரிதியே! - ஆனந்த சாகரமே!, சுடர் கொழுந்தே! - சோதிக் கொழுந்தே!, வெல்லற்கு அரிய - நீங்குதற் கருமையாகிய, மயலில் - மயக்கத்தில், என்னை விட்டு - அடியேனை விடுத்து, எங்கு - எவ்விடத்து, ஒளித்தாய்? - மறைந்தனை?, கல்லில் - கல்லினிடத்து, பசிய - பசுமையாகிய, நார் உரித்து - நாரை யுரித்து, கடுகில் - கடுகினிடத்து, பெரிய கடல் - பெரி கடலினை, அடைக்கும் - அடைத்தலில் வல்லவனை, அல்லின் கரிய - இரவினுங் கரியனை, அந்தகனார்க்கு - யமனார்க்கு, ஆளாக்கினையோ? - அடிமை யாக்கினையோ?, அறியேன் - உணர்கிலேன், என்க.

(வி - ரை) 'சொல்லற் கரிய பரம்பொருள்' என்றதனால், சொல் சம்பந்தமாகவுள்ள வேதாகம புராண இதிகாசங்களுக்கு எட்டாதவ

னென்றபடியாம்; அதாவது, அபரஞான இலக்கண வகையாற் கூறுதற்கரியவ னென்றதாம். மாயையானது அகடிதகடனா சாமர்த்திய முடைய தாகலின், 'வெல்லற் கரிய மயல்' என்றனர். 'ஒளித்தாய்' என்றதனால் முன்னொருதரம் என் முன்வந்து தேவரீர் கிருபை செய்திருக்கவும், இப்போது மறைந்திருத்தல் நலமோ என்றபடியாம். கல்லில் நாருரித்தல் முதலியன சமர்த்தனென்பதைக் காட்டற்குக் கூறியதாம். (1)

'அறிவிற் கறிவு தாரக, மென்
றறிந்தே, அறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய்
நின்ற நிலையுந் தெரியாது
குறியற் றகண்டா தீதமயக்
கோதி லமுதே! நினைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ?
பேயேற் கினிநீ பேசாயே!

(இ-ள்) அறிவிற்கு - சீவபோதத்திற்கு, அறிவு - சிவபோதம், தாரகம் என்று - ஆதாரமென்று, அறிந்து - உணர்ந்து; அறிவோடு அறியாமை - அறிவு அறியாமைகளாகிய, நெறியில் - மார்க்கத்தில், புகுதாது - பிரவேசியாமல், ஓர் படித்தாய் - ஒரு தன்மைத்தாகி, நின்ற நிலையும் - நின்ற நிலையையும், தெரியாது - உணர்கிலாது; குறி அற்று - அடையாளம் மற்று, அகண்ட அதீத மயம் - அகண்டாதீத மயமாகிய, கோது இல் - குற்றமற்ற, அமுதே! - அமிர்தமே!, நின்னை குறுகி - தேவரீரை யடைந்து, பிறிவு அற்று - நீக்கமற்று, இருக்க வேண்டாவோ? - இருக்கவேண்டாமோ?, பேயேற்கு - பேயேனுக்கு, இனி - இனியாயினும், நீ பேசாய்! - நீ சொல்லாய், என்க.

(வி-ரை) உயிர்க்கு உயிராய்நின் றறிவிக்கு மறிவு முதல்வ னாகலின், 'அறிவுக் கறிவு தாரகம்' என்றனர். ஒழிவிலொடுக்கம்: "அறிவுக்கறிவா யகண்டமாய் நின்ற, நிறைவை" என்றதனாற் காண்க. சகல கேவலமாகிய அறியாமை நீங்கித், தன்னை யருளாற் கண்டு, அவ்வருள் அறிவாகிய முன் மலமாகிய அறியாமையின் மறைந்திருந்தாற்போல், அவ்வறிவுதானே யறியாமையாகி யதனுண் மறைந்து, இவ்வறிவென்பதுந் தானென்பதுமாகிய இரண்டுமேற்றிருத்தல் வேண்டு மென்பார், 'அறிவோ டறியாமை, நெறியிற் புகுதாது' என்றனர். ஒழிவிலொடுக்கம்: "அறியாமை நீங்கிய யறிவா யறிவே, யறியா மலமிரண்டு மற்றுப் - பிறியாதார், தன்னிழப்பின் ஞான சமாதிக்குச் சாதகரா, மந்நிலைக்கே சீவன்முத்த ராம்." என்றதனாற் காண்க. (2)

பேசா வனுபூ தியையடியேன்
பெற்றுப் பிழைக்கப் பேரருளால்

தேசோ மயந்தந் தினிபொருகால்
சித்தத் திருளுந் தீர்ப்பாயோ?
பாசா டவியைக் கடந்தவன்பர்
பற்று மகண்டப் பரப்பான
ஈசா! பொதுவில் நடமாடு
மிறைவா! குறையா வின்னமுதே!

(இ - ள்) பாச அடவியை - ஆசையாகிய காட்டினை, கடந்த - கடந்த, அன்பர் - பத்தர்கள், பற்றும் - பற்றுகின்ற, அகண்ட பரப்பு ஆன - கண்டிக்கப்படாத பெரும் பரப்பாகிய, ஈசா! - ஈசனே!, பொதுவில் - அம்பலத்தில்; நடம் ஆடும் - நடிக்கின்ற, இறைவா! - தலைவனே!, குறையா - குறையாத, இன் அமுதே! - இனிய அமிர்தமே!, பேசா - பேசாமைக்குக் காரணமாகிய, அனுபூதியை - சிவானுபூதியினை, அடியேன் - ஏழையேன், பெற்று பிழைக்க - அடைந்து உய்யுமாறு, பேரருளால் - பெருங்கருணையால், தேசோமயம் தந்து - உனது தேஜோமயத்தைக் கொடுத்து, இனி ஒருகால் - இனி யொருதரம், சித்தத்து - அடியேனுடைய மனத்தின்கண்ணுள்ள, இருளும் - இருளினையும், தீர்ப்பாயோ? - நீக்கிவிடுவாயோ?, என்க.

(வி - ரை) பூதவிருளை நீக்குவதற்குச் சூரியவொளி அத்தியாவசியமாக விருத்தல்போல, சித்தத்தே செறிந்திருக்கும் ஆணவ இருளுக்குத் திருவருளாகிய ஒளி வேண்டுமென்பார், 'தேசோ மயந்தந்து' என்றனர். இத் தேசோமய முண்டானபோதே ஆணவவிரு ளொழிய, அது சம்பந்தமான மற்றைய மலங்களு நீங்க, மௌனநிலை பிறக்கு மென்பார், பேசா வனுபூ தியையடியேன் பெற்றுப் பிழைக்க' என்றனர். கந்தரநுபூதி: "ஆசா நிகளந் துகளாயின பின், பேசா வநுபூ திபிறந் ததுவே." என்றதனாற் காண்க. (3)

இன்பக் கடலிற் புகுந்திடுவா
னிரவும் பகலுந் தோற்றாமல்,
அன்பிற் கரைந்து கரைந்துருகி,
அண்ணா! அரசே! எனக்கூவிப்,
'பின்புற் றழுஞ்சே' யென விழிநீர்
பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனோ?
சொரூபா னந்தச் சுடர்க்கொழுந்தே!

(இ - ள்) சொரூபம் - சகள வடிவின்கண்ணே விளைவதாகிய, ஆனந்தம் - ஆனந்தமாகிய, சுடர் - ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற, கொழுந்தே! - சிகையே!; இன்பம் - ஆனந்தமயமாகிய, கடலில் - சமுத்திரத்தில், புகுந்திடுவான் - பிரவேசித்தற்பொருட்டு, இரவும் - அல்லும், பகலும் - பகலும், தோற்றாமல் - காணாமல்; அன்பின் - அன்பினால்,

கரைந்து கரைந்து - தேகம் தளர்ந்து, உருகி - மனமிளகி; அண்ணா ! - அப்பா !, அரசே ! - அரசனே !, என - என்று, கூவி - அழைத்து; பின்பு - பின்பாக, உற்று - தொடர்ந்து, அழும் - அழாநின்ற, சேய் என - குழந்தையைப்போல, விழி நீர் - கண்ணீரை, பெருக்கி பெருக்கி - மிகவும் பெருகச் செய்து, பித்து ஆகி - பித்தனாகி, துன்பம் - துக்கமாகிய, கடல் விட்டு - சமுத்திரத்தினின்றும், அகல்வேனோ ? - நீங்குவேனோ ?, என்க.

(வி - ரை) இன்பக்கடலாவது - அந்தர்முகத்தே நின்று இரண்டற அனுபவிக்கும் திருவருள். துன்பக்கடலாவது - பகிர்முகத்தே நின்று பிரபஞ்சத்தை யனுபவிப்பது. இரவும் பகலு மென்பது - சகல கேவலம். "அழுத பிள்ளை பால் குடிக்கும்" என்னும் பழமொழிக்கிணங்க, மனங் கசிந்து அழைக்கும் அன்பர்க்கே முதல்வன் அருள்செய்வா னென்பார், 'விழிநீர் பெருக்கிப் பெருக்கிப் பித்தாகி' என்றனர். அன்பர்கட்கு ஆனந்தம் சகள வடிவிலேயன்றி அகள வடிவி லல்லவாகலின், 'சொரூபானந்தச் சுடர்க்கொழுந்தே !' என்றனர். (4)

கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக்
கோவே ! மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே ! இமயவரை
யென்றாய் கண்ணுக் கினியானே !
தொழுந்தெய் வமுநீ ; குருவுநீ ;
துணைநீ ; தந்தை தாயுநீ ;
அழுந்தும் பவநீ ; நன்மையுநீ ;
ஆவி யாக்கை நீதானே.

(இ - ள்) கொழுந்து - சிகை (ஓங்கி), திகழ் - விளங்குகின்ற வெண் - வெண்மையான, பிறை - சந்திரனது கலையினைத் தரித்த, சடிலம் - சடாபாரத்தினை யுடைய, கோவே ! - இறைவனே !, மன்றில் - சபையில், கூத்தாடற்கு - நிருத்தஞ் செய்தற்பொருட்டு, எழுந்த - தோன்றிய, சுடரே ! - ஞானவொளியே !, இமயவரை - இமயத்தி லவதாரஞ் செய்த, என் தாய் - அடியேன் அன்னையாகிய உமாதேவியின், கண்ணுக்கு - நேத்திரங்கட்கு, இனியானே ! - இனிமையா யிருப்பவனே !, தொழும் - அடியேன் வணங்கும், தெய்வமும் நீ - கடவுளும் நீயே ; தந்தை தாயும் நீ - தந்தையுந் தாயு நீயே ; அழுந்தும் - (அடியேன்) அழுந்திக் கிடக்கிற, பவம் நீ - பவரூபமு நீயே ; நன்மையும் நீ - நன்மையு நீயே ; ஆவி (நீ) - உயிரு நீயே ; யாக்கை (நீ) தான் - உடம்பு நீயே, என்க.

(வி - ரை) கண்டுப் 'பிறை' என்றது சந்திரனது ஒற்றைக் கலையினை. மன்றென்றது சிதம்பரத்தினை, கூத்தாவது - கனகசபையின் கண்ணே செய்யும் ஞானநடனம். சுடராவது - ஞான வொளியாய்த் திகழும் நடராஜ மூர்த்தி. ஆன்மாக்களின் புண்ணியபாவத்திற் கேதுவாகிய கன்ம

மானது சடமாயினும், முதல்வன் சந்நிதான விசேஷத்தாற் காரியப்பட்டுப் பலனை யளிக்குமாதலின், 'அமுர்தும் பவநீ; நன்மையுநீ; என்றனர். முதல்வன் அந்தராத்மாவாக இருந்து உயிரை அசைவிக்க, அது யாக்கையினை யசைவிக்கின்றதாகலின் 'ஆவி யாக்கை நீதானே' என்றனர். (5)

தானே யகண்டா காரமயந்
 தன்னி லெழுந்து பொதுநடஞ்செய்
வானே! மாயப் பிறப்பறுப்பான்
 வந்துன் னடிக்கே கரங்கூப்பித்,
தேனே! என்னைப் பருகவல்ல
 தெள்ளா ரமுதே! சிவலோகக்
கோனே! எனுஞ்சொன் னினதுசெவி
 கொள்ளா தென்னோ? கூறுயே!

(இ - ள்) தானே - சுயமாகவே, அகண்டாகாரமயம் தன்னில் - சர்வ வியாபகமாந் தன்மையிலிருந்து, எழுந்து - சகளீகரித்து, பொதுநடம் - பஞ்ச கிருத்தியங்கட்கும் பொதுவாகிய கூத்தினை, செய்வானே! - செய்பவனே!, மாயப்பிறப்பு மாயா சம்பந்தமாக வுண்டான பிறவியை, அறுப்பான் - நீக்கிக்கொள்வதற்கு, வந்து - தேவரீர் சந்நிதானத்தில் வந்து, உன் - தேவரீருடைய, அடிக்கே - திருவடிகளுக்கே, கரம் கூப்பி - அஞ்சலித்து, தேனே! - தேனே!, என்னை பருகவல்ல - அடியேனைப் பருக வல்லதான, தெள் - தெளிந்த, ஆர் - அரிய, அமுதே! - அமுதமே!, சிவலோகம் - சிவபுரத்திற்கு, கோனே! - இறைவனே!, என்னும் - என்று நானழைக்கின்ற, சொல் - வார்த்தையை, நினது - தேவரீருடைய, செவி - திருச்செவியில், கொள்ளாது - ஏற்றுக்கொள்ளா திருப்பது, என்னோ? - என்ன காரணத்தினாலோ?, கூறாய்! - சொல்லாய்!, என்க.

(வி - ரை) எத்தகையர்களாலும் அறிவதற் கேலாது பரிபூரணமாயுள்ள முதல்வன் ஆன்மாக்களின்பொருட்டுச் சகளவடிவாய்த் தானே எழுந்தருளினன் என்பார், 'தானே யகண்டா காரமயந் தன்னி லெழுந்து பொதுநடஞ்செய், வானே!, என்றனர். திருவுந்தியார்: "அகளமா யாரு மறிவரி தப்பொருள், சகளமாய் வந்ததென் றுந்தீபற, தானாகத் தந்ததென் றுந்தீபற." என்றதனுற் காண்க. இங்ஙனம் சகளீகரித்துச் சிதம்பரத்துச் சிற்சபையின்கண் ஞானத்தாண்டவஞ் செய்தருளும் ஆனந்த நடராஜ மூர்த்தியின் திருவடியினைப் பணியின் பிறவி யொழியு மாகலின், 'மாயப் பிறப்பறுப்பான்' என்றனர். திருவாசகம்: "மாயப் பிறப்பறுக்கு மன்ன னடி போற்றி" என்றதனுற் காண்க. (6)

கூறு நின்ற விடர்க்கவலைக்
 குடும்பக் கூத்துட் டுளைந்துதடு

மாறு நின்ற பாவியைநீ
வாவென் றழைத்தா லாகாதோ?
நீறார் மேனி முக்கணுடை
நிமலா! அடியார் நினைவினிடை
யாறாய்ப் பெருகும் பெருங்கருணை
அரசே! என்னை யாள்வானே!

(இ - ள்) நீறு - விபூதி, ஆர் - பொருந்திய, மேனி - திருமேனியை யும், முக்கண் - மூன்று கண்களையும், உடை - உடைய, நிமலா! - நின் மலனே!, அடியார் - அடியவர்கள், நினைவின் இடை - மனத்தினிடத்து, ஆறாய் - ஆறுபோலாகி, பெருகும் - பெருகுகின்ற, பெரும் கருணை - பெருங் கருணையை யுடைய, அரசே! - இறைவனே!, என்னை - அடியேனை, ஆள் வானே! - ஆண்டருள்பவனே!, கூறுநின்ற - சொல்லப்படுகிற, இடர் - துன்பத்திற்குக் காரணமாகிற, கவலை - வியசனத்தினைத் தருகின்ற, குடும்பம் - சமுசாரமாகிய, கூத்துள் - கூத்தாட்டில், துளைந்து - படிந்து, தடுமாறுநின்ற - தடுமாறுகின்ற, பாவியை - பாபிஷ்டனாகிய அடியேனை, நீ - நீயே, வா என்று அழைத்தால் - வாவென் றழைத்தருளினால், ஆகாதோ? - உனக் கடாததோ?, என்க.

(வி - ரை) முதல்வன் திருமேனி முழுவதும் விபூதியால் சண்ணிக் கப் பட்டிருக்கு மாகலின் 'நீறார் மேனி' என்றனர். தேவாரம்: "மெய் யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் றாடொழாதே, யுய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தென் னுள்ளம் விட்டுக், கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூரரைக், கையினாற் றொழாதொழி ந்து கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே." என்றதனாற் காண்க. சில ரொருங்குகூடி இரவில் வேடங் கட்டிக்கொண்டு இன்னான் அரசன், இன்னவள் அரசி, இன்னவன் மந்திரி, இன்னவன் சேவகன் எனப்பற்பல பெயர் கொண்டு இரவுமுழுவதும் கூத்தாடிப் பொழுது விடிந்தவுடன் வெவ்வேறு பெயர்களுடையவராக ஆதல்போல, ஒரு குடும்பத்தில் சிலர்கூடி, இவன் தந்தை இவள் தாய், இவன் அண்ணன், இவன் தம்பி, இவன் புத்தி ரனெனப் பல பெயர்கொண்டு, சிலநாள் வாழ்ந்து பிரிந்து, பின்னர் வெவ் வேறாக ஆதலின், 'குடும்பக் கூத்து' என்றார். (7)

வானே முதலாம் பெரும்பூதம்
வகுத்துப், புரந்து, மாற்றவல்ல
கோனே! என்னைப் புரக்குநெறி
குறித்தா யிலையே! கொடியேனைத்
தானே படைத்திங் கென்னபலன்
றன்னைப் படைத்தாய்? உன்கருத்தை
நானே தென்றிங் கறியேனே;
நம்பி னேன்,கண் டருள்வாயே!

(இ - ள்) வானே - ஆகாயமே, முதல் ஆம் - முதலான, பெரும் பூதம் - ஐம்பெரும் பூதங்களையும், வருத்து - படைத்து, புரந்து - காத்து, மாற்ற வல்ல - அழிக்கவல்ல, கோனே! - தலைவனே!, என்னை - அடியேனை, புரக்கும் - காக்கும், நெறி - வழியை, குறித்தாய் இல்லையே - திருவுளம் பற்றினா யில்லையே; கொடியேனைத்தானே - கொடியேனை மாத்திரமே, படைத்து - சிருட்டித்து, இங்கு - இவ்விடத்து, என்ன பலன்-என்ன பிரயோசனத்தினை, படைத்தாய்? - பெற்றாய்?, உன் - தேரீர், கருத்தை - திருவுள்ளக்கிடையை, நான் - அடியேன், ஏது என்று - யாதென்று, இங்கு - இவ்விடத்து, அறியேன் - அறிகிலேன்; (ஆயினும்) நம்பினேன் - (உன்னையே) நம்பி யிருக்கின்றேன்; கண்டு - இவ் வுண்மையினைத் தேவரீர் தெரிந்துகொண்டு, அருள்வாய்! - கிருபை செய்யவேண்டும், என்க.

(வி - ரை) பஞ்ச பூதங்களையும் மாயையினின்றுங் காரியப்படுத்திக் காத்து மறுபடியு மாயையி லொடுக்க வல்லவன் முதல்வனே யென்பார், 'வானே முதலாம் பெரும்பூதம் வருத்துப் புரந்து மாற்றவல்ல, கோனே!' என்றனர். திருவாசகம்: "அனைத்துலகு மாக்குவாய் காப்பா யழிப்பாய்" என்றதனாற் காண்க. ஆன்மாக்கள் அனாதி நித்தியமாய்க் கன்மத்திற் கேதுவாகப் பிறப்பதும், அக் கன்மங்களை யனுபவிப்பதும், கன்ம நீங்கிய பின் அருள் பெறுவதுமாக விருத்தல் சகசமாகலின், ஒரு பயனைக் குறித்து முதல்வன் ஆன்மாக்களைப் படைத்திலன் என்னும் குறிப்பை யுள்ளடக்கி, 'தானே படைத்திங் கென்ன பலன் றன்னைப் படைத்தா யுன்கருத்தை, நானே தென்றிங் கறியேனே' என்றனர். (8)

கண்டார் கண்ட காட்சியுநீ;
காணார் காணக் கள்வனுநீ;
பண்டா ருயிர்நீ; யாக்கையுநீ;
பலவாஞ் சமயப் பகுதியுநீ;
எண்டோண் முக்கட் செம்மேனி
யெந்தாய்! நினக்கே யெவ்வாறு
தொண்டாய்ப் பணிவர்? அவர்பணிநீ
சூட்டிக் கொள்வ தெவ்வாறே?

(இ - ள்) கண்டார் - (உண்மையினைக் கண்ட) அறிஞர்கள், கண்ட - தரிசித்த, காட்சியும் நீ - பிரத்தியட்சமாக விளங்கும் பொருளு நீயே; காணார் - (உண்மையினை யறியாத) அறிவிலிகள் காண - தரிசியாத, கள்வனும் நீ - மறைந் துறைபவனு நீயே; பண்டு - பழமையாக, ஆர் - பொருந்திய, உயிர் நீ - உயிரு நீயே; யாக்கையும் நீ - உடலு நீயே; பல ஆம் - பலவாகிய, சமய பகுதியும் நீ - சமய வேறுபாடுகளு நீயே; (ஆதலால்) எண் தோள் - எட்டுத் தோள்களையும், முக்கண் - மூன்று கண்களையும், செம் மேனி - செம்மையாகிய திருமேனியையுமுடைய, எந்தாய்! - எந்தையே!,

நினக்கு - தேவரீருக்கு, எவ்வாறு - எவ்விதம், தொண்டு ஆய் - தொண்டராய், பணிவர்? - வணங்குவர்?, அவர் - அவருடைய, பணி - தொண்டினை, நீ - தேவரீர், சூட்டிக்கொள்வது - ஏற்றுக்கொள்வது, எவ்வாறு? - எவ்விதம்?, என்க.

(வி - ரை) முதல்வன்மாட்டு அன்புடையராய் விளங்குபவர்கட்கு அவன் தரிசனந் தந்தும், அன்பிலார்மாட்டு அவன் மறைந்து மிருப்பனாக லின், 'கண்டார் கண்ட காட்சியுநீ, காணார் காணாக் கள்வனுநீ,' என்றனர். தேவாரம்: "மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு, விரும்பாத வரும் பாவி யவர்கட்கென்றும், பொய்யானை" என்றதனாற் காண்க. ஒவ்வொரு சமயிகளும் தாங்கள் தாங்கள் விசுவாசிக்கும் மூர்த்தியாய் முதல்வனே யிருந்து அவரவர்கள் மதத்துக் கீடாக அருள் பாலித்து வருகின்றன னென் பார், 'பலவாஞ் சமயப் பகுதி நீ' என்றனர். எல்லா நீயேயா யிருத்தலால், தொண்ட ருன்னைப் பணிவ தெவ்வாறு? அவர் பணியைநீ யேற்றுக் கொள் வது எவ்வாறு? என இத் திருச்செய்யுளின் கருத்தாயினும், அவர் அவர் விருப்பத்திற் கேற்றபடி விளங்கு மூர்த்தியுமாவர் முதல்வன் என்ற கருத்து முள்ளீடா யிருத்தல் காண்க. (9)

சூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி, எனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து, வினைவழியே
கூத்தாட் டினையே; நினதருளால்
வீட்டைக் கருது மப்போது
வெளியா முலக வியப்பனைத்தும்
எட்டக் கடங்காச் சொப்பனம்போ
லெந்தாய்! இருந்த தென்சொல்வேன்?

(இ - ள்) சூட்டி - பெற்றுக்கொண்டு, எனது என்றிடும் - எனதெனக் கொள்ளும், சுமையை - சுமையினை, சுமத்தி - சுமக்கச்செய்து; எனையும் - அடியேனையும், சுமை ஆள் ஆ - சுமை யெடுக்கும் ஆளாக, கூட்டிப் பிடித்து - சேர்த்துப் பிடித்து, வினை வழியே - இருவினை வழியாக, கூத்தாட்டினையே - கூத்தாடுவித்தனையே; நினது - தேவரீருடைய, அருளால் - திரு வருளினாலே, வீட்டை - மோட்சத்தை, கருதும் - விரும்பும், அப்போது - அக்காலத்தில், வெளி ஆம் - வெளிப்படையாகத் தோற்றுகின்ற, உலக வியப்பு - உலகத்தின் அதிசயங்கள், அனைத்தும் - எல்லாம், எட்டுக்கு - எட்டினி லெழுதுதற்கு, அடங்கா - அடங்காத, சொப்பனம்போல் - கனவை யொத்து, இருந்தது - இருந்த தன்மையினை, எந்தாய்! - என் தந்தையே!, என் சொல்வேன்? - என்னவென்று சொல்லவல்லேன்?, என்க.

(வி - ரை) வினைக்குத் தக்க விளைவினையே யொருவ னுலகத்தி லனுபவிக்க வேண்டுவது அத்தியாவசிய மாகலினாலும், அவ் வினையே

சொல்லி உள்ளே வஞ்சிக்க நினைப்போன், வாய்ந்த தேகத்தில் அடிக் றியாமை வந்து தாக்குதலின் இவ் வறியாமை காரணமாக மல மாயா கள் அடருமாகலான், 'மலமாயை கன்மம் திரும்புமோ தொடுவழுக் என்றும், பிறவி மறபடியு மெய்துதற்கு அம் மும்மலங் காரணமாத 'சென்மம் வருமோ எனவும் யோசிக்குதே' எனவுங் கூறினர். கைவாள் போலாது, நீரன்பெற்ற வாளே பிரயோசனப் படுமாறு, " மெய்ஞ்ஞான மடைந்த வொருவனது சிரத்தையே பந்தத்தை ாகலின், 'சிரத்தையெனும் வாளுமுதவிப், பந்தமற மெய்ஞ்ஞான ந் தந்தெனைப் பாதுகாத்து அருள்செய்குவாய்' என்றார். 'சிரத்தை' து ஞான சாத்திரங்களிலிடத்து மனத்தினை நிறுத்தல்; இங்ஙன தின் மலமாயை கன்மங்க ளெருக்குத லருமை; ஆகலினன்றே ன்வி மூபல்" என்றனர் மூதாட்டியார். (5)

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்;
பொறிபுல னடங்கு மிடமே
பொருளென்பர் சிலர்; கரண முடிவென்பர் சிலர்; குணம்
போனவிட மென்பர் சிலபேர்;
நாதவடி வென்பர்சிலர்; விந்துமய மென்பர்சிலர்;
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலர்; உருவ மாமென்பர் சிலர்; கருதி
நாடியரு வென்பர்சிலபேர்;
பேதமற வுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்;
பேசினரு ளென்பர் சிலபேர்;
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்;
பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிஷ்டைபெறுமோ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே!

(இ - ள்) பூதம் - ஐந்து பூதங்களும், லயம் ஆகின்ற - ஒடுங்குதற்கு ந்காரணமான, மாயை - மாயையே, முதல் என்பர் - முதற்பொரு ன்பர், சிலர் - சிலர்; பொறி புலன் - ஐம்பொறிகளாலும் கவரப்படும் பாதிக ளைந்தும், அடங்கும் இடமே - ஒடுங்கு மிடமே, பொருள் என் முதற்பொரு ளென்பர், சிலர் - சிலர்; காணம் முடிவு என்பர் - அந்தக் ர மொடுங்குமிட மென்பர், சிலர் - சிலர்; குணம் போன இடம் - முக் ங்களு மொடுங்கின விடமே, என்பர் - முதற்பொரு ளென்பர், சில - சிலபேர்; நாத வடிவு என்பர் - நாதரூபமே பொருள் என்பர், - சிலர்; விந்துமயம் என்பர் - விந்து ரூபமே பொருளென்பர், - சிலர்; நட்டநடுவே இருந்த - நடுவாகவிருந்த, நாம் என்பர் - ஆன்மா ய நாமே முதற்பொரு ளென்பர், சிலர் - சிலர்; உருவமாம் என்பர் -

நினக்கு - தேவரீருக்கு, எவ்வாறு - எவ்விதம், தொண்டு ஆய் - தொண்டராய், பணிவர்? - வணங்குவர்?, அவர் - அவருடைய, பணி - தொண்டினை, நீ - தேவரீர், சூட்டிக்கொள்வது - ஏற்றுக்கொள்வது, எவ்வாறு? - எவ்விதம்?, என்க.

(வி - ரை) முதல்வன்மாட்டு அன்புடையராய் விளங்குபவர்கட்கு அவன் தரிசனந் தந்தும், அன்பிலார்மாட்டு அவன் மறைந்து மிருப்பனாகலின், 'கண்டார் கண்ட காட்சியுநீ, காணார் காணாக் கள்வனுநீ,' என்றனர். தேவாரம்: "மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு, விரும்பாத வரும் பாவி யவர்கட்கென்றும், பொய்யானை" என்றதனாற் காண்க. ஒவ்வொரு சமயிகளும் தாங்கள் தாங்கள் விசுவாசிக்கும் மூர்த்தியாய் முதல்வனே யிருந்து அவரவர்கள் மதத்துக் கிடாக அருள் பாலித்து வருகின்றன ரென்பார், 'பலவாகு சமயப் பகுதி நீ' என்றனர். எல்லா நீயேயா யிருத்தலால், தொண்ட ருன்னைப் பணிவ தெவ்வாறு? அவர் பணியைநீ யேற்றுக் கொள்வது எவ்வாறு? என இத் திருச்செய்யுளின் கருத்தாயினும், அவர் அவர் விருப்பத்திற் கேற்றபடி விளங்கு மூர்த்தியுமாவர் முதல்வன் என்ற கருத்து முள்ளீடா யிருத்தல் காண்க. (9)

சூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி, எனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து, வினைவழியே
கூத்தாட் டினையே; நினதருளால்
வீட்டைக் கருது மப்போது
வெளியா முலக வியப்பனைத்தும்
ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போ
லெந்தாய்! இருந்த தென்சொல்வேன்?

(இ - ள்) சூட்டி - பெற்றுக்கொண்டு, எனது என்றிடும் - எனதெனக் கொள்ளும், சுமையை - சுமையினை, சுமத்தி - சுமக்கச்செய்து; எனையும் - அடியேனையும், சுமை ஆள் ஆ - சுமை யெடுக்கும் ஆளாக, கூட்டிப் பிடித்து- சேர்த்துப் பிடித்து, வினை வழியே - இருவினை வழியாக, கூத்தாட்டினையே - கூத்தாடுவித்தனையே; நினது - தேவரீருடைய, அருளால் - திருவருளினாலே, வீட்டை - மோட்சத்தை, கருதும் - விரும்பும், அப்போது - அக்காலத்தில், வெளி ஆம் - வெளிப்படையாகத் தோற்றுகின்ற, உலக வியப்பு - உலகத்தின் அதிசயங்கள், அனைத்தும் - எல்லாம், ஏட்டுக்கு - ஏட்டினி லெழுதுதற்கு, அடங்கா - அடங்காத, சொப்பனம்போல் - கனவை யொத்து, இருந்தது - இருந்த தன்மையினை, எந்தாய்! - என் தந்தையே!, என் சொல்வேன்? - என்னவென்று சொல்லவல்லேன்?, என்க.

(வி - ரை) வினைக்குத் தக்க வினைவினையே யொருவ னுலகத்திலனுபவிக்க வேண்டுவது அத்தியாவசிய மாகலினாலும், அவ் வினையே

சடமா யிருத்தலினாலும், அவ் வினையினைத் தானே தேடி யனுபவிக்க ஆன்மா அசக்தனா யிருத்தலினாலும், இவை யனைத்தையும் கூட்டி யாட்டி வைப்பான் முதல்வனே யாகலின், 'வினைவழியே கூத்தாட்டினையே' என்றனர். பட்டினத்துச் சுவாமிகள்: "ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானு மிங் கொன்றோ டொன்றை, மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்ற வினை, காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி, யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே." என்றதனாற் காண்க. சத்திய மான திருவருள் நாட்டத்தினை யடைந்தபோது, காரியப்பாட்டால் சத்திய மாக விளங்கும் உலக வாழ்வனைத்தும் பொய்யாகத் தோன்றுமாகலின், 'வீட்டைக் கருது மப்போது, வெளியா முலக வியப்பனைத்தும், ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போ, லெந்தா யிருந்தது' என்றனர். (10)

---

## வ ம் ப னே ன்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வம்பனேன் கள்ளங் கண்டு
'மன்னருள் வெள்ள ராய
உம்பர்பா லேவல் செய்'யென்
றுணர்த்தினை ; ஓகோ ! வானோர்
தம்பிரா னே ! நீ செய்த
தயவுக்குங் கைம்மா றுண்டோ ?
எம்பிரா னுய்ந்தே னுய்ந்தேன் ;
இனியொன்றுங் குறைவி லேனே.

(இ - ள்) வம்பனேன் - துட்டனுடைய, கள்ளம் - வஞ்சகத்தை, கண்டும் - பார்த்தும், மன் - நிலைபெற்றுள்ள, அருள் - திருவருள், வெள்ளர் ஆய - கடலினராகிய, உம்பர்பால் - தேவராகிய தேவரீரிடத்து, ஏவல் செய் என்று - தொண்டு புரியென, உணர்த்தினை - தெரிவித்தனை, ஓகோ! - ஆச்சரியம்!, வானோர் - தேவர்கட்கு, தம்பிரானே! - தலைவனே!, நீ - தேவரீர், செய்த - இயற்றிய, தயவுக்கும் - கிருபைக்கும், கைம்மாறு உண்டோ? - (அடியேன்) பிரதியுபகார முளதோ?, எம்பிரான் - எம் மிறைவனே!, உய்ந்தேன் உய்ந்தேன் - பிழைத்தேன் பிழைத்தேன்; இனி - இனிமேல், ஒன்றும் - சிறிதும், குறைவு இலேன் - குறைவற்றவனானேன், என்க.

(வி - ரை) தீமையுடையவ ரேனும் அவர் தீமையினை நீக்கி யடிமை யாக்கி யாட்கொள்ளுதல் முதல்வன் கருணைக் கிலக்கணமாயிருந்து கொண்டிருத்தலின், 'வம்பனேன் கள்ளங் கண்டு மன்னருள் வெள்ள ராய, உம்

பர்பா லேவல் செய்யென் றுணர்த்தினே ' என்றனர். தேவாரம்: " இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத், தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற் சிவலோக நெறியறியச் சிந்தை தந்த, வருளானை யாதிமா தவத்து ளானை யாறங்கம் நால்வேதத் தப்பா னின்ற, பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே யாற்றநாள் போக்கினேனே." என்றதனுற் காண்க. (1)

குறைவிலா நிறைவாய் ஞானக்
கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித்
துளைந்துநான் றோன்று வாறுள்
ளுறையிலே யுணர்த்தி, மோன
வொண்சுடர் வைவா டந்த
இறைவனே! உனைப் பிரிந்திங்
கிருக்கிலே னிருக்கி லேனே.

(இ - ள்) குறைவு இல்லா - குறைவற்ற, நிறைவு ஆய் - நிறைவாகி, கோது இல் - குற்றமற்ற, ஞான - ஞானமென்னும், ஆனந்த வெள்ளம் - ஆனந்தப் பெருக்கின், துறையிலே - வழியில், படிந்து மூழ்கி - முழுகிப் படிந்து, துளைந்து - அழுந்தி, நான் - அடியேன், தோன்று ஆறு - தோன்றாத வகை, உள்ளுறையிலே - மறைவாக, உணர்த்தி - அறிவுறுத்தி; ஒள் - ஒள்ளிய, சுடர் - ஞானவொளியாகிய, வை - கூர்மையுடைய, மோன வாள் - மவுன நிலையாகிய வாளை, தந்த - கொடுத்தருளிய, இறைவனே! - தலைவனே! உன்னை - தேவரீரை, பிரிந்து - நீங்கி, இங்கு - இவ் வுலகத்தில், இருக்கிலேன் இருக்கிலேன் - தங்கிலேன் தங்கிலேன், என்க.

(வி - ரை) 'குறைவிலா நிறைவாய் ஞானக் கோதிலா னந்த வெள்ளத் துறை' என்றது (சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சமயமாக விளங்கும்) சைவ சமயம். என்னை? இச் சமயத்தினை யடைந்து திருவருளிற் றிளைத்து வாழ்வோர் சிவானந்த வெள்ளந் தேக்குற வாழ்வராகலின். இதுகுறித்தே, "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" என்றனர் அருண்மொழித்தேவர். இச் செந்நெறியினர் அடைந்த ஞானம் மாயாகாரியமாகிய அஞ்ஞான விருட்சங்களைக் களைதற்கு ஞானவாளாக விளங்குமாகலின், 'மோன வொண் சுடர் வைவா டந்த' என்றனர். (2)

இருநில மாதி நாத
மீறதா மிவை கடந்த
பெருநில மாய தூய
பேரொளிப் பிழம்பாய் நின்றும்,
கருதரு மகண்டா னந்தக்
கடவுள்! நின் காட்சி காண

'வருக' வென் றழைத்தா லன்றி
வாழ்வுண்டோ? வஞ்ச னேற்கே!

(இ - ள்) இரு - பெரிய, நிலம் ஆதி - பிருதிவிதத்துவமுதல், நாதம் ஈறது ஆம் - நாததத்துவ மிறுதியாகவுள்ள, இவை - இவற்றை, கடந்த - கடந்து நின்ற, பெரு - பெரிய, நிலம் ஆய - நிலமாகிய, தூய - பரிசுத்த மான, பேர் - பெரிதாகிய, ஒளி பிழம்பாய் - ஒளித்திரளாய், நின்றும் - இருப்பினும், கருது அரும் - நினைத்த லரிதாகிய, அகண்டானந்தம் - விசேஷ சுகத்தைத் தருகின்ற, கடவுள்! - கடவுளே!, நின் - தேவரீர், காட்சி - தரிசனம், காண - கண்டெய்தற்பொருட்டு, வருக என்று - வாவென்று, அழைத்தால் அன்றி - அழைத்தாலல்லது, வஞ்சனேற்கு - கள்ளனாகிய எனக்கு, வாழ்வு - இன்பம், உண்டோ? - உளதோ?, என்க.

(வி - ரை) 'நாதம்' என்பது முப்பத்தாறாவது தத்துவம்; இத் தத்துவாதீதமாக விளங்கு மிடமே 'பெருநிலம்', இது ஞானகாயமாம்; சிதம்பர மெனினும் ஒக்கும்; இங்கு விளங்கு முதல்வனே பேரொளிப் பிழம் பாம். ஆன்மா பரதந்திரனா யிருத்தலின் மார்ச்சால நியாயமாக முதல் வனே வலிய வந்து ஆட்கொண்டாலல்லது வேறு கதி யில்லை யென்பார், 'வருகவென் றழைத்தாலன்றி, வாழ்வுண்டோ?' என்றனர். "அவனரு ளாலே யவன்றாள் வணங்கி" என்றதும் இக் கருத்துப்பற்றியேயாம். (3)

வஞ்சனை யழுக்கா றாதி
வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை, வலிதின் மேன்மேல்
நெக்குநெக் குருகப் பண்ணி,
அஞ்சலி செய்யுங் கையு
மருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத்
தற்பரா! பரமு னக்கே.

(இ - ள்) தற்பரா! - தற்பரனே!, வஞ்சனை - கள்ளமும், அழுக் காறு ஆதி - அழுக்கை முதலிய குணங்கள், வைத்திடும் - வைக்கப்பட் டிருக் கின்ற, பாண்டம் ஆன - பாத்திரமாகிய, நெஞ்சனை - மனத்தினை யுடைய வனை; வலிதின் - பலாத்காரமாக, மேன்மேல் - மேன்மேலும், நெக்கு நெக்கு - நெகிழ்ந்து, உருக பண்ணி - உருகும்படி செய்து; அஞ்சலி செய் யும் கையும் - குவிந்த கையும், அருவி - அருவியாறுபோல, நீர் விழியும் - நீர்ப்பாயுங் கண்களும், ஆக - பண்ணி, தஞ்சம் என்று - தேவரீரே ஆதார மென, இரங்கி - மனங்கசிந்து, காக்க - காப்பாற்ற, உனக்கே பரம் - தேவரீ ருக்கே பாரமாகும், என்க.

(வி - ரை) 'ஆதி' என்றதனுல் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் முதலியவுங் கொள்க. இவை யனைத்து நிறைந்த ஒருவனுக்கு மனம் நெக்குருகுதலும், கை யஞ்சலியாதலும், கண்ணீர் வார்தலும் உண்டாகா தாகலின் இவை யனைத்து முண்டாகத் தேவரீரே வலியவந்து ஆட்கொண்டு இவை யுண்டாம்படி செய்யவேண்டு மென்றனர். இவை யனைத்தும் தற்போத மொழிந்த சிவனடியார்கட்கு இயற்கையாகவே விளையும் நற்செயல்களாம். தற்போத முடைய சிலரும் பிறர் வியக்க இங்ஙனஞ் செய்தலுமுண்டு. இங்ஙனம் போலியாகச் செய்யினும் இச் செயல்கள் ஒரு காலத்தில் நன்மையினை யடைதற் கேதுவாக விளையினும் விளையும். (4)

உனக்குநா னடித்தொண் டாகி
யுன்னடிக் கன்பு செய்ய,
எனக்குநீ தோற்றி யஞ்சே
லென்னுநா ளெந்த நாளோ?
மனக்கிலே சங்க டீர்ந்த
மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே!
சச்சிதா னந்த வாழ்வே!

(இ - ள்) மனக்கிலேசங்கள் - மனோ வியாகுலங்கள், தீர்ந்த - நீங்கப் பெற்ற, மாதவர்க்கு - பெரிய தபோதனர்க்கு, இரண்டு - இரண்டாந்தன்மை யற்று, ஓங்கும் - ஓங்கிய, தனக்கு நேர் இல்லா - சமான ரகிதமான, ஒன்றே! - ஒப்பற்ற வஸ்துவே!, சச்சிதானந்த - சத்து சித்து ஆனந்த வுருவமாகிய, வாழ்வே!—,உனக்கு - தேவரீருக்கு, நான் - அடியேன், அடித் தொண்டு ஆகி - அடிமையாகி, உன் - தேவரீரது, அடிக்கு - திருவடிகட்கு, அன்பு செய்ய - அன்பு பாராட்ட, எனக்கு - அடியேனுக்கு, நீ - தேவரீர், தோற்றி - வெளிவந்து, அஞ்சேல் - பயப்படேல், என்னும் நாள் - என்று சொல்லுகிற நாள், எந்த நாள்? - எந்நாளோ?, என்க.

(வி - ரை) அன்பு செய்வாரிடத்திலேயே முதல்வன் றோன்றி விளங்குவ னுகலின், 'அன்பு செய்ய, எனக்குநீ தோற்றி' என்றனர். திருமந்திரம்: "அன்புறு சிந்தையின் மேலெழு மவ்வொளி, யின்புறு நண்ணியொ டேற விசைந்தன, துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்றுத், தன்புறு சிந்தையை நாடுமி னீரே." என்றதனுற் காண்க. மனக்கிலேச முள்ள வரைக்கும் தன்னிடத்திலேயே திரோதானத்தால் மறைந்திருந்த முதல்வன் மனக்கிலேசமற்றவழி யுடனே அனன்னியமாகத் தோன்றி விளங்குவன் என்பார், 'மனக்கிலே சங்க டீர்ந்த, மாதவர்க் கிரண்டற் றோங்கும்' என்றனர். (5)

வாழ்வென வயங்கி யென்னை
வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த

ஊழ்வினைப் பகுதி கெட்டிங்
குன்னையுங் கிட்டு வேனோ?
தாழ்வெனுஞ் சமய நீங்கித்,
தமையுணர்ந் தோர்கட் கெல்லாம்
சூழ்வெளிப் பொருளே! முக்கட்
சோதியே! அமர ரேறே!

(இ - ள்) தாழ்வு என்னும் - அப்பிரயோசனமாகப் பெரியோர் மதிக்கும், சமயம் - சமயத்தினை, நீங்கி - ஒழித்து; தமை - தங்களின் ஆன்ம நிச்சயத்தினை, உணர்ந்தோர்கட்கு - அறிந்தவர்கட்கு, எல்லாம் - எல்லாவகையானும், சூழ் - ஆராயப்படுகிற, வெளிப்பொருளே! - பிரத்தியட்சமாகத் தோன்றுகிற வஸ்துவே!, முக்கண் சோதியே! - திரிநேத்திரங்களை யுடைய வொளிரூபமே!, அமரர் - தேவர்களாகிய யானைகட்கு, ஏறே - ஆண் சிங்கமே!, வாழ்வு என - (உலக) வாழ்க்கையென, வயங்கி - விளங்கி, என்னை - அடியேனை, வசம்செய்து - வசீகரித்து, மருட்டும் - மயக்குகின்ற, பாழ்த்த - பாழாகிய, ஊழ்வினை பகுதி - ஊழ்வினைப் பகுப்பு, கெட்டு - நசித்து, இங்கு - இப்பிறப்பிற்றானே, உன்னையும் - தேவரீரையும், கிட்டுவேனோ? - அடைவேனோ?, என்க.

(வி - ரை) 'ஊழ்வினைப் பகுதி' என்றது ஈண்டு சஞ்சிதத்தினை. புறச் சமயங்கள் யாவும் முதல்வனின் உண்மையினை யின்னதெனத் தெரிவியாது, பலவாறு தருக்க விரோதமாகக் கூறித் தாழ்தலின், 'தாழ்வெனுஞ் சமயம்' என்றனர். திருமந்திரம்: "ஆயத்து ணின்ற வாறு சமயங்களுங், காயத்து ணின்ற கடவுளைக் காண்கிலா, மாயக் குழியில் விழுவர் மனைமக்கள், பாசத்தி லுற்றுப் பதைக்கின்ற வாறே." என்றதனாற் காண்க. கன்மத்தினுக்குச் சுபாவம் மாயா காரியங்களாகிய உலகப் பொருள்களிலேயே சுவையை யூட்டுவித்து விருப்பத்தினை விளைவித்துக்கொண்டிருப்பதாகலின், 'வாழ்வென வயங்கி யென்னை, வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த, ஊழ்வினை' என்றனர். சனன மரணங்கட்கு வினையே காரணமாயிருத்தலின் 'பாழ்த்த ஊழ்வினை' என்றனர். (6)

ஏறுவாம் பரியா, ஆடை
இருங்கலை யுரியா, என்றும்
நாறுநற் சாந்த நீறு,
நஞ்சமே யமுதாக் கொண்ட
கூறருங் குணத்தோய்! உன்றன்
குரைகழல் குறுகி னல்லால்,
ஆறுமோ தாப சோபம்?
அகலுமோ வல்ல றானே?

(இ - ள்) ஏறு - இடபமானது, வாம் - தாவுகின்ற, பரிசு - குதிரையாகவும்; இரு - பெரிய, கலை - மானினது, உரி - தோல், ஆடை ஆ - உடையாகவும்; நீறு - விபூதி, என்றும் - எக்காலத்தும், நாறும் - பரிமளிக்கின்ற, நல் - நல்ல, சாந்தம் ஆ - சந்தனமாகவும்; நஞ்சமே - விடமே, அமுது ஆ - உணவாகவும், கொண்ட - உகந்தருளிய, கூறு அரு - சொல்லுதற் கருமையாகிய, குணத்தோய்! - (மங்கள) குணங்களை யுடையவனே!, உன்தன் - தேவரீருடைய, குரை - சப்திக்கின்ற, கழல் - வீரகண்டாமணி யணிந்த திருவடிகளை, குறுகின் அல்லால் - அடைந்தால் அல்லது, தாபம் - தாபத்தா லுண்டாகிய, சோபம் - விடாயானது, ஆறுமோ? - தணியுமோ?, அல்லல் - துன்பமானது, அகலுமோ? - நீங்குமோ?, என்க.

(வி - ரை) விசையாகச் செல்லத்தகுந்த குதிரையும், பீதாம்பர முதலிய உயர்ந்த வஸ்திரமும், மிகுந்த பரிமளத்துடன் கூடிய சந்தனமும், அதிக சுவை வாய்ந்த அமுதமும் இருக்க, இவைகளை நீக்கி மந்த கதியினை யுடைய இடபத்தினையும், மிருகத்தின் தோலையும், சாம்பரையும், கொல்லத்தகுந்த விடத்தினையும், ஒவ்வோர் காரணம்பற்றி ஆன்மாக்க ளுய்யும் பொருட்டுக் கொண்டாராகலின், 'கூறருங் குணத்தோய்!' என்றனர். ஒரு மரத்தின் நிழலை யடைந்தவர்கட்கே சூரியனா லுண்டாகுந் தாபம் நீங்குமாறு போல, முதல்வன் திருவடியை யடைந்தவர்க்கே சென்மதாபம் நீங்குமென்பார், 'குரைகழல் குறுகினல்லா லாறுமோ தாபம்' என்றனர். தாபம் மூவகைப்படும்; அவையாவன:—ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன. (7)

தானமுந், தவமும், யோகத்
 தன்மையு முணரா வென்பால்:
ஞானமுந், தெவிட்டா வின்ப
 நன்மையு நல்கு வாயோ?
பானலங் கவர்ந்த தீஞ்சொற்
 பச்சிளங் கிள்ளை காண,
வானவ ரிறைஞ்ச, மன்றுள்
 வயங்கிய நடத்தி னானே!

(இ - ள்) பால் - பாலினுடைய, நலம் - சுவையினை, கவர்ந்த - கிரகித்துக்கொண்ட, தீ சொல் - மதுரமாகிய சொல்லினை வாய்ந்த, பச்சிளம் கிள்ளை - பசுமையான இளங்கிளி போல்வாளாகிய உமாதேவியானவள், காண - தரிசித்துக் களிக்கவும்; வானவர் - தேவர்கள், இறைஞ்ச - வணங்கவும்; மன்றுள் - சபையினிடத்து, வயங்கிய - விளங்கிய, நடத்தினனே! - நடனத்தினை யுடையவனே!, தானமும் - கொடையையும், தவமும் - தவத்தினையும், யோக தன்மையும் - யோகத்தினது தன்மையினையும், உணரா - அறியாத, என்பால் - அடியேனிடத்தில், ஞானமும் - ஞானத்தினையும்,

தெவிட்டா - தெவிட்டாத, இன்பம் - சுகமாகிய, நன்மையும் - நன்மையையும், நல்குவாயோ ? - கிருபை செய்வாயோ ?, என்க.

(வி - ரை) இல்லறத்திற்குரிய தானத்தையாகிலும், வானப்பிரஸ்தத்திற்குரிய தவத்தையாகிலும், துறவுக்குரிய யோகத்தையாகிலுஞ் சிறிது மறியே னென்பார், 'தானமும் தவமும் யோகத், தன்மையு முணரா' என்றனர். உலக சம்பந்தமாக விளையும் இன்ப மனைத்தும் ஒவ்வொரு காலத்தில் வெறுப்பாக மாறும். முதல்வன் றிருவடி யின்பமோ எக்காலத்து மொருபடித்தா யிருக்குமாகலின், 'தெவிட்டா வின்பம்' என்றனர். ஈண்டு 'பச்சிளங்கிள்ளை' என்றது சிவகாம சுந்தரியினை. சபேசன் நடன தரிசனத்தைக் காண ஆன்மாக்கள் சக்தியிலராய் அம்மையார் மூலமாகவே தரிசித்துப் பேறடையவேண்டி யிருத்தலின், 'பச்சிளங்கிள்ளை காண' என்றனர். (8)

நடத்தியிவ் வுலகை யெல்லாம்
நாத ! நீ நிறைந்த தன்மை
திடத்துட னறிந்தா னந்தத்
தெள்ளமு தருந்தி டாதே,
விடத்திர ளனைய காம
வேட்கையி லழுந்தி, மாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்
தளரவோ தனிய னேனே ?

(இ - ள்) நாத ! - இறைவனே !, இவ்வுலகை எல்லாம் - எல்லா உலகங்களையும், நடத்தி - அசைவித்து, நீ - தேவரீர், நிறைந்த - (அவ்வுலகமனைத்தினும்) வியாபித்திருக்கும், தன்மை - தன்மையினை, திடத்துடன் - உறுதியுடன், அறிந்து - தெரிந்து, ஆனந்தம் - பேரின்பமாகிய, தெள் - தெளிவான, அமுது - அமுதத்தினை, அருந்திடாதே - உண்ணுமலே, விடத்திரள் - விடத்திரட்சியினை, அனைய - ஒத்த, காம வேட்கையில் - (மாதர்) விருப்பத்தில், அழுந்தி - முழுகி, மாயை - மாயா காரியமாகிய, சடத்தினை - உடம்பை, மெய் என்று - நிலையானதென்று, எண்ணி - நினைத்து, தனியனேன் - தனிமையாகிய நான், தளரவோ ? - தளர்ச்சியினை யடையவோ ?, என்க.

(வி - ரை) முதல்வனின் சர்வ வியாபகமாகிய சொரூப இலக்கணத்தினை யறிந்து, அத்துவிதக் கலப்புற்று, ஆனந்தத்தினை யறியாது விட்டேன் என்பார், 'உலகை எல்லாம்......அருந்திடாதே' என்றனர். விடமுண்டோர் எங்ஙனம் பிழையாது சாவரென்பது நிச்சயமோ, அங்ஙனமே காமத்திற் பட்டோர் தலையெடா ரென்பார், 'விடத்திர ளனைய காம, வேட்கையி லழுந்தி' என்றனர். கந்தபுராணம்: "தீமை யுள்ள யாவையுந் தந்திடும் சிறப்பும், தோமில் செல்வமுங்கெடுக்கும், நல் லுணர்வினைத்

தொலைக்கும், எம நன்னெறி தடுத்திருளுய்த்திடு மிதனால், காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்" என்றதனாற் காண்க. தேகம் நிலையுறாத் தன்மையுடைய தல்லவாகலின், 'சடத்தினை மெய் யென் றெண்ணித் தளரவோ' என்றனர். சித்தாந்த தரிசனம்: "நீர்குமிழி மின்னற்கு முண்டு நிலையில்லை, யாக்கைக்கென் றெண்ணி யறிந்து." என்ற தனாற் காண்க. (9)

தனிவளர் பொருளே! மாறாத்
தண்ணருங் கருணை பூத்த
இனியகற் பகமே! முக்க
ணெந்தையே! நினக்கன் பின்றி,
நனிபெருங் குடிலங் காட்டு
நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கி லாழ்ந்து
வருந்தவோ வம்ப னேனே?

(இ - ள்) தனி - ஒப்பற்ற, வளர் - வளர்ந்த, பொருளே! - பொருளே!, மாறா - நீங்காத, தண் - குளிர்ச்சி பொருந்திய, அரு - கிடைத்தற் கரிய, கருணை - கருணையாகிய, பூத்த - (மலர்களைப்) பூத்த, இனிய கற்பகமே! - (மனத்திற்கு) இன்பத்தைத் தருகின்ற கற்பகத்தருவே!, முக்கண் - மூன்று கண்களையுடைய, எந்தையே! - என் தந்தையே! வம்பனேன் - வீணனாகிய நான், நினக்கு - தேவரீரிடத்து, அன்பு இன்றி - அன்பில்லாமல்; நனி - மிக, பெரும் - பெரிய, குடிலம் - கொடுமையை, காட்டும் - செய்கின்ற, நயன வேல் - விழிகளாகிய வேல்களையும், கரிய கூந்தல் - கறுத்த கூந்தலையு முடைய, வனிதையர் - மாதர், மயக்கில் - மயக்கமாகிய (படுகுழியில்), ஆழ்ந்து - அழுந்தி, வருந்தவோ? - வருத்தப் படவோ?, என்க.

(வி - ரை) முதல்வன் சமானரகித னென்பார், 'தனிவளர் பொருளே!' என்றனர். ஆன்மாக்களிடத்து மிகுந்த காருண்ய முடையவ னென்பார், 'கருணை பூத்த' என்றனர். அடியார் வேண்டிய யாவும் அளிப்ப னென்பார், 'இனிய கற்பகமே!' என்றனர். மாதர் கண் ஆடவரை வருத்துந் தொழிலினை மேற்கொண் டிருத்தலின், 'குடிலங் காட்டு நயனவேல்' என்றனர். "காய் சினவேல்" எனத் திருக்கோவையாரினும், "விடமென வயிலென வடுவென நடுவெ..மிளிர்வன சுழல்விழி" எனத் திருப்புகழினும் வருதலாற் காண்க.

# சிவன் செயல்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சிவன்செய லாலே யாதும்
வருமெனத் தேறே(ன்); நாளும்
அவந்தரு நினைவை யெல்லா
மகற்றிலேன்; ஆசை வெள்ளம்
கவர்ந்துகொண் டிழுப்ப, அந்தக்
கட்டிலே யகப்பட் டையோ!
பவந்தனை யீட்டி யீட்டிப்
பதைக்கின்றேன் பாவி யேனே.

(இ - ள்) யாதும் - எதுவும், சிவன் செயலாலே - சிவபெருமான் செயலால், வரும் என - வருமென்று, தேறேன் - தெளியேன்; நாளும் - எந்நாளும், அவம்-அப்பிரயோசனத்தினை, தரும்-கொடுக்கின்ற, நினைவை - எண்ணங்களை, எல்லாம் - எல்லாம், அகற்றிலேன் - ஒழித்திலேன்!; ஆசை-ஆசை யென்னப்படும், வெள்ளம் - பெருக்கானது, கவர்ந்துகொண்டு - கிரகித்துக்கொண்டு, இழுப்ப - இழுக்க, அந்தக் கட்டிலே - அந்தப் பிணிப்பிலே, அகப்பட்டு - சிக்கி, ஐயோ! - அந்தோ!, பவம்தன்னை - பாவத்தினை, ஈட்டி ஈட்டி - சம்பாதித்துச் சம்பாதித்து, பாவியேன் - பாவியாகிய நான் பதைக்கின்றேன் - பதையாநின்றேன், என்க.

(வி - ரை) உலகத்தின்கண் மனம் வாக்குக் காயங்களாலே ஆன்மா செய்யப்பட்ட புண்ணிய பாவங்களெல்லாம் முதல்வனாற் கற்பிக்கப்பட்டதே. முதல்வனே அந்தரியாமியாக ஆன்மாவிடத்தில் நின்று அவரவர்கள் கன்மத்திற் கேற்றபடி இச்சையாதி செலுத்தி, ஞானேந்திரியங்களினாலே விஷயங்களைப் பற்றுவித்தும், கன்மேந்திரியங்களினாலே தொழில்களைச் செய்வித்துஞ் செய்கிறா னென்றும்; ஆதலால், ஆன்மா செய்யுங் கிரியை யொன்றுமில்லை, முதல்வனுடைய கிரியாசக்தியே செய்விப்பதென்றும், இதனால் எவ்விடத்தும் எச்செயலும் சிவன் செயலென்றும் எண்ணுவர் சிவன் முத்தராகலின், 'சிவன்செயலாலே யாதும் வருமெனத் தேறேன்' என்றனர். சிவஞானசித்தியார்: "உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே புண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்று யென்று, நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே." எனவும்; சிவபோகசாரம்: "அவரவருக் குள்ளபடி யீசனருளாலே, யவரவரைக் கொண்டியற்று மாறு - லவரவரை, நல்லார்பொல்லாரென்று நாடுவதே னெஞ்சமே!, எல்லாஞ் சிவன் செயலென் றெண்!" எனவும் வருவனவற்றாற் காண்க.

நினைவனைத்தும் மாயா காரியங்களை யேற்றுச் செல்லு மாகலினாலும், அம் மாயா காரியங்களோ நிலையுற்று வாழுந் தன்மையுடைய தல்லவாகலி னாலும், முடிவில் அம் மாயா காரியங்களால் யாதொரு பிரயோசனமு மில்லை யாகலானும், 'அவந்தரு நினைவை' என்றனர். 'ஆசைக்கோ ரளவில்லை' என இவ் வாசிரியரே குறித்திருப்பதற் கேற்ப 'ஆசை வெள்ளம்' என்றனர். ஆசை காரணமாகவே எல்லாத் துன்பங்களும் விளையுமாகலான், 'ஆசைவெள்ளம்........பதைக்கின்றேன்' என்றனர். திருமந்திரம்: "ஆசை யறுமின்கள்! ஆசை யறுமின்கள்!, ஈசனோ டாயினு மாசை யறுமின்கள்!, ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள், ஆசை விடவிட வானந்த மாமே." என்றதனாற் காண்க. (1)

பாவியே னினியென் செய்கேன்?
பரமனே! பணிந்துன் பாதம்
சேவியேன்; விழிநீர் மல்கச்
'சிவசிவ' என்று தேம்பி,
ஆவியே! நிறைய வந்த
அமுதமே! என்னேன்; அந்தோ!
சாவிபோஞ் சமயத் தாழ்ந்து
சகத்திடைத் தவிக்கின் றேனே.

(இ - ள்) பாவியேன் - பாவியாகிய நான், இனி என் செய்கேன் - இனிமேலென்னசெய்வேன்?; பரமனே! - மேலானவனே!, உன் - தேவரீருடைய, பாதம் - திருவடிகளை, பணிந்து - வணங்கி, சேவியேன் - தரிசிக்கேன்; விழி - கண்களில், நீர் - நீரானது, மல்க - ததும்ப, சிவசிவ என்று - சிவசிவ எனச் செபித்து, தேம்பி - வாடி; ஆவியே! - உயிரே!, நிறைய வந்த - பூரணமான, அமுதமே! - அமிர்தமே!, என்னேன் - எனச் சொல்லித் துதியேன்; அந்தோ! - ஐயோ!, சாவிபோம் - பாழாகப்போகின்ற, சமயத்து - (புறச்) சமயங்களில், ஆழ்ந்து - அழுந்தி, சகத்திடை - உலகத்தின்கண், தவிக்கின்றேன் - தளர்கின்றேன், என்க.

(வி - ரை) திருவடியினைத் தஞ்சமென் றடைந்தவர்கட்குச் சகலமுஞ் சித்தியாகு மாகலின், 'பாதம் சேவியேன்' என்றனர். திருமந்திரம்: "திருவடி யேசிவ மாவது தேரிற், றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற், றிருவடி யேசெல் கதியது செப்பிற், றிருவடி யேதஞ்ச முட்டெளி யவர்க்கே" என்றதனாற் காண்க.

'சிவ' என்றது வேத இருதய மகா மந்திரமாக விளங்கும் சூக்கும பஞ்சாக்கரம். எங்ஙனமெனின், மூன்று வேதங்களின் நடுவி லுள்ளது யசுர்வேதம். அதன் ஏழு காண்டங்களி னடுவிலுள்ளது நான்காவது காண்டம். அக் காண்டத்தி னடுவி லுள்ளது ஐந்தாவது பிரச்நமாகிய ஸ்ரீ ருத்திரம். அதனடுவி லுள்ளது "நமச்சோமாயசா" என்னும் அறுவா

கம். அதனடுவி லுள்ளது "நமச்சிவாயசா" என்னும் வாக்கியம். அதனடுவி லுள்ளது "சிவ" ஆகலின், 'சிவசிவ என்று' என்றனர். "மும்மறையுணடுமறையின் முனிவிலெழு காண்டத்துட், செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையி, லம்மநடுச் சங்கிதையினடுவி லொழித்தநடுப், பொம்மலுற வுயர்மனுவின் பொருளாவா னெவன் மைந்த." என்றதனாற் காண்க.

அன்றியும், இச்சிவமந்திரத்தினை இரட்டித்துச் செபிப்பவர் பவமனைத்து நீங்க முத்தி யின்பத்தினைச் சத்தியமாகப் பெறுவா ராகலின், 'சிவசிவ' என்றனர். திருமந்திரம்: "சிவசிவ வென்கிலர் தீவினை யாளர், சிவசிவ வென்றிடத் தீவினைமாளும், சிவசிவவென்றிடத் தேவரு மாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே." எனவும்; "சிவசிவவெனவே தெளிகிலருமர், சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் ளடங்கச், சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள், சிவசிவ வாகுந் திருவருளாமே." எனவும் வருவனவற்றாற் காண்க.

அன்றியும், "சிவ என்னும் மகா மந்திரத்தினைச் செபிப்பவர் பஞ்சமரேயாயினும் அத்தகையினரைச் சமத்துவமாகக் கொண்டு அவருட னுறைக" என வேதங் கூறுமாகலின், 'சிவசிவ வென்று' என்றனர். சிவஞான முனிவர்: "சிவவெனு மொழியைக் கொடியசண் டாளன் செப்பிடி னவனுட னுறைக, வவனொடு கலந்து பேசுவா னொடரு கிருந்துண் ணுகவென்னு, மூவமையிற் சுருதிப்பொருள்." என்றதனாற் காண்க.

அன்றியும், சிவசிவவென்று மனமாரத் துதி செய்பவர்களுக்கு எதிரே உமையவளை இடப்பாகத்தி லுடைய பரமசிவன் அவர்களை விட்டு நீங்காமல் எப்போதுந் திருநடனஞ் செய்தருளுவர். அவர்களை நமனும் வணங்குவான். அவர்கள் முகத்தில் நான்கு வேதங்களு மிருக்கும். அவர்கள் செய்த பாவமெல்லாம் 'சூரியனைக் கண்ட பனிபோல்' நீங்கிப்போம். அவர்கள் பிறவிக் கடலின் மூழ்கமாட்டார்கள். பூமியின்கண் நீசர்களானாலும் மரணகாலத்தில் அங்ஙனந் துதித்தால் அவர்களும் சிவசாரூபம் பெறுவார்க ளாகலின், 'சிவசிவ வென்று' என்றனர். விருத்தாசல புராணம்: "சிவசிவ வென்பாரவர்முனே திருத்தஞ் செய்திடு மறலியும் பணிபு, மவரைவிட் டகலா னம்பிகை பாக னாரண மவர் முகத் திருக்குந், தபனனைக் கண்ட பனியெனப் பாவஞ் சரிந்திடும் பவக்கட லழுந்தார், புவனியின் மரண காலையிற் புகலிற் புலையரு மடைவர் சாரூபம்" என்றதனாற் காண்க.

அன்றியும், ஒருவனுடைய செவியினிடத்திற் றெளிவாகக் கேட்கும்படி சிவசிவ என்று திரிகரண சுத்தியுடன் சொன்னால், அவனுடைய பாதகங்களெல்லாம் 'இடிவிழுந்த பனைபோல்' எரிந்துபோம்; அவனது இறப்பும் பிறப்பும் நீங்கிப்போம், ஒருவன் தன்னுடைய வாயாரச் சிவ வென்று இரண்டு தரம் சொன்னால் அவ்விரண்டில் ஒரு மொழிக்கு அவனைப் பரமசிவன் தமது உலகமாகிய சிவலோக பதத்தில் வைப்பர். மற்றையொரு

மொழியும் பரமசிவன்மேற் கடனதா யிருக்கும். ஷை விருத்தாசல புராணம்: "திருத்தமா யொருத்தன் செவிப்புலன் கேட்கச் சிவசிவ வென்றிடிற் பனைமே, விருத்திய விடிபோ லெரிந்திடும் பாவ மிறப்பொடு பிறப்பெலா மிரியு, மொருத்தன்வா யாரச் சிவவென விருகா லுரைத்திடி னுருரை யதற்குக், கருத்தன்வாழ் பதத்தி லிருத்திடு மொன்றுங் கடவுண்மேற் கடனதாய் நிற்கும்." என்றதனுற் காண்க.

ஆன்மாவுஞ் சிவமும் வேறற நிற்கு மனுபோக விரதமாகிய வைதிக சைவ சித்தாந்தத் திரமொழிந்து, ஒருவன் பசிதீரச் செய்த பயிரானது பயன்படு மளவும் பயிர்போல வந்து பலிக்கத்தக்க நாள்களிலே சாவி போன தன்மைபோல முக்கூற்றப் புறச்சமயங்கள் நன்மையான புண்ணியங்களை விளைவிப்பன போலக் காட்டினும், கடைசியில் யாதொரு பயனையும் விளைவிக்காது அப் பிரயோசனமாய்விடு மாகலின், 'சாவிபோஞ் சமயம்' என்றனர். திருவுந்தியார்: "சாவிபோ மற்ற சமயங்கள் புக்குநின், றாவி யழுதே யென் றுந்தீபற, யவ்வுரை கேளாதே யுந்தீபற." என்றதனுற் காண்க. (2)

இடைந்திடைந் தேங்கி, மெய்புள கிப்ப,
எழுந்தெழுந் தைய! நின் சரணம்
அடைந்தன னினிநீ கைவிடே லுனக்கே
யபயமென் றஞ்சலி செய்துள்
'உடைந்துடைந் தெழுது சித்திரப் பாவை'
யொத்துநா னசைவற நிற்பத்
தொடர்ந்துநீ யெனையாட் கொள்ளுநா ளென்றோ?
சோதியே! ஆதிநா யகனே!

(இ - ள்) சோதியே! - ஒளியே!, ஆதி நாயகனே! - முதல்வனே!, இடைந்து இடைந்து - விலகி விலகி; ஏங்கி - அழுது; மெய் புளகிப்ப - உடல் புளகாங்கிதங் கொள்ள, எழுந்து எழுந்து - பலகா லெழுந்து, ஐய! - அழகனே!, நின் - தேவரீர், சரணம் - பாதங்களை, அடைந்தனன் - சேர்ந்தேன்; இனி - இனிமேல், கைவிடேல் - (எளியேனைக்) கைவிடாதே; உனக்கே - தேவரீரிடத்திலேயே, அபயம் - அடைக்கலம், என்று - என விண்ணப்பஞ் செய்து, அஞ்சலி செய்து - கும்பிட்டு, உள் உடைந்து உடைந்து - மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து, எழுது - எழுதின, சித்திரப் பாவை - சித்திரப் பிரதிமையினை, ஒத்து - போன்று, நான் - அடியேன், அசைவு அற - அசையாதபடி, நிற்ப - நிற்க, நீ - தேவரீர், என்னை - அடியேனை, தொடர்ந்து - விடாதுபற்றி, ஆட்கொள்ளும் - அடிமையாகக் கொள்ளும், நாள் - (நல்ல) நாள், என்றோ? - எந்நாளோ?, என்க.

(வி - ரை) இடைதலும், ஏங்குதலும், மெய் புளகித்தலும், எழுதலும், கருவிகளைப் பொய்யென் றறிந்தவிடத்தும், திருவரு ளுதித்தவிடத்தும், சிவனடியார்கட்கு வரும் குணங்களாம். 'உடைந்துடைந் தெழுது சித்திரப்

பாவை யொத்துநா னசைவற நிற்ப' என்றது அடிக்கடி நிற்றலும், இருத்தலும், கிடத்தலு முதலிய அங்க சேஷ்டைக ளின்றிச் சித்தத்தை யசைவற நிறுத்தி மோன சமாதி கூடி யிருத்தலேயாம். திருமந்திரம்: "நின்றா ரிருந்தார் கிடந்தா ரெனவில்லை, சென்றார் தஞ்சித்த மோன சமாதியா, மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு, சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே." என்றதனாற் காண்க. (3)

ஆதியாய், நடுவாய், அந்தமாய்ப், பந்தம்
யாவுமற் றகம்புற நிறைந்த
சோதியாய்ச், சுகமா யிருந்தவெம் பெருமான்!
தொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணங் கைவிடன் முறையோ?
புன்மையே னென்செய்கேன்? மனமோ
வாதியா நின்ற தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே.

(இ - ள்) ஆதி ஆய் - முதலாகி; நடு ஆய்-இடையாகி; அந்தம் ஆய்-கடையாகி; பந்தம் யாவும் - பற்றுக்களெல்லாம், அற்று - நீங்கி, அகம் - அகத்தும், புறம் - புறத்தும், நிறைந்த - வியாபித்து நின்ற, சோதியாய் - ஒளிப்பிழம்பாய்; சுகமாய் - ஆநந்தமாய், இருந்த - எழுந்தருளி யிருந்த, எம் பெருமான்! - எமது இறைவனே!, தொண்டனேன் - அடிமையாகிய நான், சுகத்திலே இருக்க - இன்பநிலையி லிருக்கும்படி, போதியாவண்ணம் - போதியாத வகை, கைவிடல் - சோரவிடுதல், முறையோ? - முறைமையாமோ?, புன்மையேன் - புன்மையினை யுடைய அடியேன், என் செய்கேன்? - என் செயக்கடவேன்?, மனமோ - மனதோ, வாதியா நின்றது - வருத்தாநின்றது; அன்றியும் - அல்லாமலும், புலன் சேர் - விஷயங்கள் சேர்தற்குரிய, வாயிலோ - பொறியோ, தீயினும் - நெருப்பினைக் காட்டிலும், கொடிதே - கொடியதே, என்க.

(வி - ரை) மனமானது ஒரு கண்ணாடிபோ லிருந்து பிரபஞ்ச காரியங்களைத் தன்னிடத்திற் பிரதிபலிக்கச் செய்து தன்னை மயக்குந் தன்மை வாய்ந்திருத்தலின், 'மனமோ, வாதியா னின்றது' என்றனர். திருமந்திரம்: "மனத்தி லெழுந்ததோர் மாயக் கண்ணாடி, நினைப்பி னதனி னிழலையுங் காணார், வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார், புறக்கடை யிச்சித்துப் போகிய வாறே." என்றதனாற் காண்க. புலனே மனத்தினைத் தன் வழிப் படுத்திப் பிரபஞ்ச காரியங்களுக் குட்படுத்தி யலைக்கச்செய்யு மாகலானும், புலன் காரணமாகவே பொறி, பூதம், கரணம், சத்த முதலியவைகள் விரியுமாகலானும், தீமையான வினைவு அனைத்திற்குங் காரணமா யிருத்தலானும், 'புலன்சேர் வாயிலோ தீயினுங் கொடிதே' என்றனர். (4)

வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர்
வந்தெனை யீர்த்து,வெங் காமத்
தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்,
சிந்தைநைந் துருகி,மெய்ம் மறந்து,
'தாயிலாச் சேய்போ' லலைந்தலைப் பட்டேன்?
தாயினுங் கருணையா மன்றுள்
நாயக மாகி யொளிவிடு மணியே!
நாதனே! ஞானவா ரிதியே!

(இ - ள்) தாயினும் - தாயைக் காட்டிலும், கருணை ஆம் - கருணை செய்கின்ற, மன்றுள் - கனகசபையில், நாயகம் ஆகி - தலைவனாகி, ஒளி விடும் - பிரகாசிக்கின்ற, மணியே! - மாணிக்கமே!, நாதனே! - முதல்வனே!, ஞானவாரிதியே! - ஞான சாகரமே!, வாயில் - பொறிகளாகிய, ஓர் ஐந்தில் - ஓரைந்து வழிகளில், புலன் என்னும் - ஐம்புல னென்கிற, வேடர் வந்து - வேடுவர்கள் நெருங்கி, என்னை - அடியேனை, ஈர்த்து - இழுத்து, வெம் - கொடிய, காமத் தீயிலே - காம நெருப்பினால், வெதுப்பி - சுட்டு, உயிரொடும் - பிராணனுடன், தின்ன - உண்ண, சிந்தை நைந்து - மனம் நைந்து, உருகி - இளகி, மெய் மறந்து - சரீரத்தினை மறந்து, தாய் இல்லா - தாயற்ற, சேய்போல் - குழந்தையைப்போல, அலைந்து - திரிந்து, அலைப்பட்டேன் - வருந்தினேன், என்க.

(வி - ரை) காட்டினிடத்தே வேடர்கள்தங்கி அவ்வழியே வருபவர்களின் திரவியங்களைக் கொள்ளை யடித்தல்போல தத்துவக்காட்டில் புலனெனும் வேடுவர்கள், ஆன்மாவின் நற்குணங்க ளனைத்தினையும் தடுத்தலின், 'புலனெனும் வேடர்' என்றனர். காமத்தினை விளைத்தற் கேதுவாகிய மாதர்களை நோக்கற்குப் புலன்களே காரணமாயிருத்தலின், 'வந்தெனை யீர்த்து' என்றனர். அங்ஙனம் புலன்கள் வழியே சென்ற மனமானது மாதர்களைக் கண்ணுற்று காமத்தினால் மொத்துண் டலைதலின், 'காமத், தீயிலே வெதுப்பி' என்றனர். அதனால் உயிர் வேறுவழியிற் செல்லாது நாளு மயங்கிக் கிடத்தலின் 'உயிரொடுந் தின்ன' என்றனர். இத்தகைய துன்பங்களால் சிந்தையானது ஒரு வழியி னிலையுறாது வருத்தமடையு மாகலினால், 'சிந்தை நைந்துருகி' என்றனர். இவ்வளவிற்கும் காரணமான புலன்களின் உண்மையினைத் தெரிவித்து அவற்றின் வழி போகவொட்டாமல் தடுத்தற்கு ஒருவரு மெனக் கேற்பட வில்லை யாதலால், 'தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்' என்றனர். (5)

ஞானமே வடிவாய்த் தேடுவார்த் தேடு
நாட்டமே! நாட்டத்து ணிறைந்த
வானமே! எனக்கு வந்துவந் தோங்கு
மார்க்கமே! மருளர்தா மறியா

மோனமே! முதலே! முத்திநல் வித்தே!
முடிவிலா வின்பமே செய்யுந்
தானமே! தவமே! நின்னைநா னினைந்தேன்
தமியனேன் றனைமறப் பதற்கே!

(இ - ள்) ஞானமே - அறிவே, வடிவு ஆய் - உருவமாகி, தேடுவார் தேடும் - தேடுவோர் தேடுகின்ற, நாட்டமே! - தேடப்படு பொருளே! நாட்டத்துள் - அப் பொருள்கள்தோறும், நிறைந்த - தங்கிய, வானமே! - வெளியே!, எனக்கு - அடியேனுக்கு, வந்து வந்து - சமீபித்துச் சமீபித்து, ஓங்கும் - உயர்ந்து தோன்றுகின்ற, மார்க்கமே! - நெறியே!, மருளர் தாம் - மயக்கினையுடையவர், அறியாத - உணராத, மோனமே! - மௌனநிலையே!, முதலே! - தலைவனே!, முத்தி - மோட்சத்தினை விளைவிக்கத் தகுந்த, நல் வித்தே! - நல்ல விதையே!, முடிவு இல்லா - இறுதி யில்லாத, இன்பமே - ஆநந்தத்தையே, செய்யும் - செய்கின்ற, தானமே! - ஈகையே!, தவமே! - தவமே!, தமியனேன்தன்னை - அடியேனை, மறப்பதற்கு - மறந்துவிடுதற்பொருட்டு, நான் - அடியேன், நின்னை - தேவரீரை, நினைந்தேன் - சிந்தனை செய்தேன், என்க.

(வி - ரை) முதல்வன், ஞானமே திருமேனியாகக் கொண்டு விளங்குபவனாகலின் அவனை யடைதற்கு ஞானமே சாதனமாம். ஆகலின், அந்த ஞானத்தைப் பூரணமாய்ப் பெற்ற ஞானியர்களே அம்முதல்வனை யறிவ ரென்பார், 'ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடும் நாட்டமே' என்றார். அத்தகைய ஞானத்தினை யடையாதார் அஞ்ஞானிக ளாதலின் அவர்கட்கு முதல்வன் காலத்திரயத்து மெட்டா னென்பார், 'மருளர்தா மறியா, மோனமே! முதலே!' என்றனர். தன்னை முன்னிட் டறியும்வரையில் முதல்வன் காணப்படா னெனவும், முதல்வனைக் கலந்துழி தான் காணப்படுவனாகவும் அனுபவம் விளங்கலின், 'நின்னைநா னினைந்தேன், தமியனேன் றனைமறப் பதற்கே.' என்றனர். (6)

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்,
வந்துநின் னன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கின்; அன்றியா னந்த
வற்புத நிட்டையி னிமித்தம்
துறவது வேண்டு(ம்); மௌனியா யெனக்குத்
தூயநல் லருடரி னின்னம்
பிறவியும் வேண்டும்; யாெனன திறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே!

(இ - ள்) நின் - தேவரீர், அன்பர்தம் - அடியார்களுடைய, பணி ஆம் - தொண்டாகிய, அறம் - தருமம், வந்து கிடைக்கின் - வந்து கிடைக்கப்பெறுவே னாயின், மறம் மலி - பாவம் மிகுந்த, உலக வாழ்க்

கையே - பிரபஞ்ச வாழ்வே, வேண்டும் - (அடியேனுக்கு) வேண்டும்; அன்றி - (அடியார்) தொண்டு கிடையாதவிடத்து, ஆனந்தம் - இன்பத்தினை விளைக்கின்ற, அற்புத - அதிசயமான, நிஷ்டையின் நிமித்தம் - நிஷ்டை கூடும்பொருட்டு, துறவது வேண்டும் - துறவு வேண்டும்; மௌனியாய் - மௌனகுருவாகி வந்து, எனக்கு - அடியேனுக்கு, தூய - பரிசுத்தமான, நல் - நன்மையான, அருள் தரின் - அருளைத் தருவதாயிருப்பின், இன்னம் - இனிமேலும், பிறவியும் வேண்டும் - சன்மமும் வேண்டும்; யான் எனது - யான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமகாரமும், இறக்கப்பெற்றவர் - ஒழிந்தவர்கள், பெற்றிடும் - அடைகின்ற, பேறே! - இலாபமே!, என்க.

(வி - ரை) இவ் வுலகமானது எத்தகையினரையும் தன்முகமாக கிரகித்துக்கொண்டு அநித்தியமாகிய தேகாதி பிரபஞ்சவாழ்வுக ளனைத்தினிலும் ஆசையை விளைவித்து அவற்றி லழுத்திவிடுகின்றமையான், 'மறமலி யுலக வாழ்க்கை' என்றனர். உலகில் ஒருவன் அன்பர் பணியொன்றினையே கடைபிடித் தொழுகுவனாயின் அவ னடையவேண்டிய சாம்பிராச்சியங்க ளனைத்தையும் இலேசாகப் பெறுவனாகலின், 'உலக வாழ்க்கையே வேண்டும், வந்துநின் னன்பர்தம் பணியாம், அறமது கிடைக்கின்' என்றனர். இவ்வாசிரியரே, "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா, லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே!" எனக் கூறியதனுற் காண்க. இத்தகைய அரிய அன்பர் கிடைக்காதபட்சத்தில் நிட்டைமேவியிருக்கத் துறவு வேண்டுமென்றும், தனது மௌனாசிரியர் அருள் கிடைக்குமேல் மேற் 'பிறவியும் வேண்டும்' என்றனர். இதனால் அன்பர் பணியொன்றானே நிட்டையும், அருளு முண்டாமென ஏற்பட்டது. (7)

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே!
பெருகிய கருணைவா ரிதியே!
நற்றவத் துணையே! ஆனந்தக் கடலே!
ஞாதுரு ஞானஞே யங்கள்
அற்றவர்க் கறாத நட்புடைக் கலப்பே!
அனேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ? காணே.

(இ - ள்) பெற்றவர் - ஞானங் கைவரப்பெற்றவர்கள், பெற்ற - அடைந்த, பெரு - பெரிய, தவக்குன்றே! - தவமலையே!, பெருகிய - பெருக்கெடுத்த, கருணை வாரிதியே! - கருணை சாகரமே!, நல் - நல்ல, தவத்துணையே! - தவத்தினுக்கு உதவி செய்வோனே!, ஆனந்தக் கடலே! - இன்ப வாரிதியே!, ஞாதுரு - காண்பான், ஞானம் - காட்சி, ஞேயம் - காணப்படுபொருள், அற்றவர்க்கு - (இம் மூன்றும்) நீங்கினவர்கட்கு,

அருத - நீங்காத, நட்பு - சிநேகிதத்தை, உடை - உடைய, கலப்பே! - கூட்டுறவே!, அனேகமாய் - வெகுமுகமாய், கற்றதும் - படித்ததும், கேள்வி கேட்டதும் - விசாரித்ததும், நின் - தேவரீருடைய, அடிக்கு - திருவடிக்கு, அன்பு - அன்புசெய்து, நின்னை - தேவரீரை, கண்டிடும்பொருட்டு - தரிசிக்கும்பொருட்டு, அன்றோ ? - அல்லவா ?, என்க.

(வி - ரை) திரிபுடியாகிய ஞாதுரு, ஞானம், ஞேய ஆகிய மூன்றும் சங்கற்ப ஞானமாகலின் இவை கடந்துநின்ற ஞானமே சிவஞானமாம். இச் சிவஞானத்தினைக் கண்டவரே சிவத்தினை யறிவ ரென்பார், 'ஞாதுரு ஞானஞே யங்கள், அற்றவர்க் கருத நட்புடைக் கலப்பே!' என்றனர். சிவஞானசித்தியார்: "தருஞானம் போக ஞாதுரு ஞானஞேயந், தங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகுந், திருஞானமிவை யெல்லாங்கடந்த சிவ ஞான மாதலினாற், சிவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்" என்றதனாற் காண்க. ஞானசாத்திரங்களைப் படிப்பதும், ஞானசாத்திரங்களை விசாரிப் பதும், அச் சாத்திரங்களாற் பிரதிபாதிக்கப்படும் முதல்வனைத் தரிசித் தற்கேயன்றி, வாசகஞானமாகப் பேசிக் காலங் கழிப்பதற்கன் றென்பார். 'கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக், கண்டிடும் பொருட்டன்றோ?' என்றனர்.

(8)

அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டு
மன்புடைச் சோதியே! செம்பொன்
மன்றுண்முக் கண்ணுங் காளகண் டமுமாய்
வயங்கிய வானமே! என்னுள்
துன்றுகூ ரிருளைத் துரந்திடு மதியே!
துன்பமு மின்பமு மாகி
நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே!
நேசமே! நின்பரம் யானே.

(இ - ள்) அன்று - அந்நாளில், நால்வருக்கும் - சனகாதி நால்வ ருக்கும், ஒளி நெறி காட்டும் - அருளொளியோடுங் கூடிய மார்க்கத்தைக் காட்டிய, அன்புடை - அன்பினையுடைய, சோதியே! - ஒளிப்பிழம்பே!, செம்பொன் மன்றுள் - கனக சபையில், முக்கண்ணும் - மூன்று கண் களும், காளகண்டமும் ஆய் - காளகண்டமுமாகி, வயங்கிய - விளங்கிய, வானமே! - பரமாகாயமே!, என்னுள் - அடியேனிடத்து, துன்று - செறிந்த, கூர் - மிகுந்த, இருளை - அஞ்ஞான விருளினை, துரந்திடும் - ஓட்டுகின்ற, மதியே! - ஞானசந்திரனே!, துன்பமும் - துக்கமும், இன்ப மும் ஆகி - சுகமுமாகி, நின்ற - நிலைபெற்ற, வாதனையை - வேதனைகளை, கடந்தவர் - நீங்கிய அறிஞர், நினைவே! - எண்ணமே!, நேசமே! - அன்பே!, யான் - நான், நின் - தேவரீருடைய, பரம் - பட்சம், என்க.

(வி - ரை) பிரமபுத்திரர்களாகிய சனகன், சனந்தனன், சநாதனன், சனத்குமாரன் என்னும் முனிவர் நால்வரும் மனமொடுங்கி, ஞானநிலை புணர்ந்து, பேரின்பப் பெருக்கி லழுந்திச் செயலொன்று மில்லாதிருக்க முதல்வன் திருக்கரமொன்றனைத் திருமார்பிற் சேர்த்துச் சின்முத்திரை காட்டி க்ஷணப்பொழுது திவ்விடை கூடிக் காட்டின ரென்பார், 'அன்று நால் வருக்கு மொளிநெறி காட்டு மன்புடைச் சோதியே!' என்றனர். 'செம்பொன், மன்றுண்முக் கண்ணுங் காளகண் டமுமாய் வயங்கிய' என்றது, தில்லைச் சிற்றம்பலத்தின் கண்ணே ஞானத்தாண்டவஞ் செய்யும் ஆநந்த நடராஜமூர்த்தியினை. 'வானமே!' என்றது அச் சிற்றம் பலத்தே காணப்படும் இரகசியத்தினை. (9)

யானெனல் காணேன் பூரண நிறைவில்;
யாதினு மிருந்தபே ரொளிநீ
தானென நிற்குஞ் சமத்துற வென்னைத்
தன்னவ னாக்கவுந் தருங்காண்!
வானென வயங்கி, ஒன்றிரண் டென்று
மார்க்கமா நெறிதந்து, மாறாத்
தேனென ருசித்து ளன்பரைக் கலந்த
செல்வமே! சிற்பர சிவமே!

(இ - ள்) வான் என - மேகத்தினைப்போல, வயங்கி - விளங்கி; ஒன்று இரண்டு என்று - ஒன்றெனவும் இரண்டெனவும் சொல்லப்படாத, மார்க்கமாம் - செந்நெறியாம், நெறி - வழியை, தந்து - அளித்த, மாறா - மாறுபடாத, தேன் என - தேனைப்போல, ருசித்து - சுவையினைத் தந்து, அன்பரை - அன்பர்களை, உள் கலந்த - உள்ளே கலந்துநின்ற, செல்வமே! - ஐசுவரியமே!, சிற்பரசிவமே! - ஞானமயமாகிய மங்களமே!, பூரண நிறைவில் - சர்வ வியாபகத்தில், யான் எனல் - யான் யென்பதை, காணேன் - அறிகிலேன்; யாதினும் - எப்பொருளினும், இருந்த - தங்கிய, பேர் ஒளி - பரஞ்சோதி, நீதான் என - தேவரீரே யென்று, நிற்கும் - நிற்கின்ற, சமத்து - சமநிலையில், உற - பொருந்தும்படி, என்னை - அடியேனை, தன்னவன் ஆக்கவும் - உன்னவனாக்கிக்கொள்ளவும், தரும் - தரும், என்க.

(வி - ரை) முதல்வனுடைய திருவருள் வியாபகத்திற் கலந்து பேராநந்தத்தை யனுபவிக்கின்ற வமையத்துத் தானென்ன வொருமுத லிருப்பதாக முனைந்து தோன்றா தாகலின், 'யானெனல் காணேன் பூரண நிறைவில்' என்றனர். 'யாதினு மிருந்த பேரொளி' என்றதனால் முதல்வனது ஔபச்லேஷிக வியாப்பியத்தினை விளக்கியவாறும்; அதாவது, பாலில்நெய்போலவும், பழத்தில் மதுரம்போலவும், எள்ளில் எண்ணெய்போலவு மிருக்கை. 'ஒன்றிரண்டென்று மார்க்கமா நெறி' என்றது சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவமாகிய செந்நெறியினை. (10)

---

## தன்னையொருவர்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தன்னை யொருவர்க் கறிவரிதாய்த்,
　　தானே தானா(ய்), எங்குநிறைந்
துன்னற் கரிய பரவெளியாய்,
　　உலவா வமுதா(ய்), ஒளிவிளக்காய்
என்னுட் கலந்தா(ய்); யானறியா
　　திருந்தா(ய்); இறைவா! இனியேனும்
நின்னைப் பெறுமா றெனக்கருளா
　　நிலையைக் கொடுக்க நினையாயோ?

(இ - ள்) தன்னை - (முதல்வனாகிய) தன்னை, ஒருவர்க்கு - மற்றொருவருக்கு, அறிவு அரிது ஆய் - அறிதலருமையாகி; தானே தான் ஆய் - தானேதானாகி; எங்கும் நிறைந்து - சர்வ வியாபகமாகி, உன்னற்கு அரிய - நினைத்தற் கரிதாகிய, பரவெளி ஆய் - பரமாகாயமாகி; உலவா - கெடாத, அமுது ஆய் - அமுதமாகி; ஒளி விளக்கு ஆய் - பிரகாசத்தோடுங் கூடிய தீபமாகி, என்னுள் - அடியேனிடத்து, கலந்தாய் - கலந்திருந்தாய்; (அங்ஙன மிருந்தும்) யான் - அடியேன், அறியாது - தேவரீரை யறியாதபடி, இருந்தாய் - மறைந்திருந்தாய்; இறைவா! - தலைவனே!, இனியேனும் - இனியாயினும், நின்னை - தேவரீரை, பெறுமாறு - அடையும்படி, எனக்கு - அடியேனுக்கு; அருள் ஆம் - திருவருளாகிய, நிலையை - நிலையினை, கொடுக்க - அளித்தருள, நினையாயோ? - கருதாயோ!, என்க.

(வி - ரை) முதல்வன் அங்கிங்கெனாதபடி யெங்கும் வியாபகமாய் ஆன்மாக்களோடு மிருக்கினும் அவ்வவ் ஆன்மாக்கள் கன்மத்திற் கீடாகத் திரோதான சத்தியான் மறைக்கப்பட்டு முதல்வனை யறியாதிருப்பாராகலின், 'என்னுட் கலந்தா யானறியா திருந்தா யிறைவா!' என்றனர். இனியாயினுங் கருணை கூர்ந்து அத் திரோதத்தை நீக்கித் தேவரீரை யான் அனுபவிக்கும்படி செய்வா யென்பார், 'நின்னைப் பெறுமா றெனக்கருளா நிலையைக் கொடுக்க நினையாயோ?' என்றனர். (1)

நினையு நினைவுக் கெட்டாத
　　நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரமவின்ப
　　வெள்ளப் பெருக்கே! நினதருளால்
மனைவி புதல்வ ரன்னைபிதா
　　மாடு வீடென் றிடுமயக்கம்
தனையு மறந்திங் குனைமறவாத்
　　தன்மை வருமோ? தமியேற்கே.

(இ - ள்) நினையும் - எண்ணுகின்ற, நினைவுக்கு - கருத்தினுக்கு, எட்டாத - எட்டாத, நெறி பெற்று - மௌன நிலையடைந்து, உணர்ந்த - அந்நெறியா லுன்னை யறிந்த, நெறியாளர் - சன்மார்க்கருடைய, வினையை - வினைகளை, கரைக்கும் - நாளுக்குநாள் கெடுக்கும், பரம - மேலான, இன்ப வெள்ளப்பெருக்கே! - ஆனந்தப் பிரவாகத்தின் மேன்மையே!, நினது - தேவரீருடைய, அருளால் - திருவருளால், மனைவி - மனைவி, புதல்வர் - புத்திரர், அன்னை - தாய், பிதா - தந்தை, மாடு - மாடு, வீடு - மனை, என்றிடும் - என்று சொல்லிடும், மயக்கம்தன்னையும் - மயக்கத்தினையும், மறந்து - மறந்து; இங்கு - இவ்விடத்து, உன்னை - தேவரீரை, மறவா தன்மை - மறவாதகுணம், தமியேற்கு - அடியேனுக்கு, வருமோ? - உண்டாகுமோ?, என்க.

(வி - ரை) "தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லா மெரித்தானை" என்னுந் திருத்தாண்டகத்தினுக் கேற்ப, 'நெறியாளர், வினையைக் கரைக்கும் பரம வின்ப வெள்ளப் பெருக்கே!' என்றனர். மனைவி புதல்வர் முதலியோர் முதல்வன் றிருவடிப் பேற்றினை யடைதற்கு இடையூறா யிருத்தலின் அவை 'மயக்கம்' எனவும், அவரிடத்துப் பற்று வையாது முதல்வனை யெண்ணி யுய்தல்வேண்டு மென்பார், 'மனைவி புதல்வர்......மறந்திங் குனைமறவாத் தன்மை வருமோ?' என்றனர். தேவாரம்: "அருத்தமு மனையா ளொடுமக்களும், பொருத்த மில்லை பொல்லாதது போக்கிடும், கருத்தன் கண்ணுதலண்ணல் காட்டுப்பள்ளி, திருத்தன் சேவடியைச் சென்று சேர்மினே." என்றதனாற் காண்க. (2)

வரும்போ மென்னு மிருநிலைமை
 மன்ற தொருதன் மைத்தாகிக்
கரும்போ, தேனோ, முக்கனியோ,
 என்ன வென்னுட் கலந்துநலம்
தரும்பே ரின்பப் பொருளே! நின்
 றன்னை நினைந்து நெக்குருகேன்;
இரும்போ, கல்லோ, மரமோவென்
 னிதய மியாதென் றறியேனே.

(இ - ள்) வரும் போம் என்னும் - வருவதும் போவதுமாகிற, இரு நிலைமை - இருவகைப்பட்ட நிலைமையினை, மன்றது - பொருந்தாமல், ஒரு தன்மைத்து ஆகி - ஒருவழிப்பட்ட நிலைமையினை யடைந்து; கரும்போ - கரும்பின் சாறோ, தேனோ - மதுவோ, முக்கனியோ - முப்பழங்களோ, என்ன - என்று சொல்லும்வண்ணம், என்னுள் - அடியேனிடத்து, கலந்து - சேர்ந்து, நலம் தரும் - நன்மையினைத் தருகின்ற, பேரின்பப்பொருளே! - பேரானந்த சொரூபமாகிய வஸ்துவே!, நின் தன்னை - தேவரீரை, நினைந்து - எண்ணி, நெக்கு - நெகிழ்ந்து, உருகேன் - உருகிலேன்; என் - அடியே

னுடைய, இதயம் - இதயமானது, இரும்பு - இரும்புதானோ, கல்லோ - கல் தானோ, மரமோ - மரந்தானோ, யாது என்று - இவற்றுள் யாதென்று; அறியேன் - அறிகிலேன், என்க.

(வி - ரை) 'வரும் போம்' என்னு நிலைமையாவது - நினைப்பு மறைப் பென்னுந் தன்மை. அதிக சுவையுடன் கூடிய கரும்பு முதலிய பதார்த்தங் களைப்போல இன்பத்தைக் கொடுத்தற் கேதுவாக அநாதியே தன்னுடன் கலந்திருந்த அந்தர்முகமாக இருந்து அவ் வின்பத்தினை யனுபவியாது பகிர் முகமாகவிருந்து வாளா நாளைக் கழிக்கின்றமையின் நெஞ்சமானது கல்லு முதலிய கடின பதார்த்தங்களுக்குச் சமான மென்றனர். (3)

அறியுந் தரமோ? நானுன்னை
அறிவுக் கறிவாய் நிற்கையினால்
பிறியுந் தரமோ! நீயென்னைப்,
பெம்மா னே! பே ரின்பமதாய்ச்
செறியும் பொருணீ! நின்னையன்றிச்
செறியாப் பொருணான் பெரும்பேற்றை
நெறிநின் றொழுக விசாரித்தால்
நினக்கோ வில்லை, எனக்காமே.

(இ - ள்) அறிவிற்கு - (ஆன்மாவின்) அறிவினுக்கு, அறிவு ஆய் - உணர்வாகி, நிற்கையினால் - நிற்கையால், நான் - அடியேன், உன்னை அறியும் - தெரிந்து கொள்ளும், தரமோ? - தன்மை யுண்டோ?, பெம்மானே! - பெருமானே!, பேரின்பமது ஆய் - பேரானந்தமாகி, செறியும் பொருள் நீ - எவற்றினும் நிறைந்திருக்கும் வஸ்து நீ, (ஆதலால்) நீ - தேவரீர், என்னை - அடியேனை, பிரியும் - பிரிந்திருக்கும், தரமோ? - தன்மைத்தோ?, நின்னை அன்றி - தேவரீரை யல்லாமல், செறியா பொருள் நான் - நீங்காத பொருள் யான், பெறும் பேற்றை - அடையும் பிரயோஜனத்தினை, நெறி நின்று - நன்னெறியினின்று, ஒழுக விசாரித்தால் - முற்றும் விசாரிக்கின், நினக்கோ இல்லை - தேவரீருக்கோ இல்லை; எனக்கு ஆம் - அடியேனுக்கே யாம், என்க.

(வி - ரை) உடலுயிர் போலவும், கண்ணருக்கன் போலவும், அறி வொளி போலவும் அநாதியே ஆன்மாவும் பரமான்மாவும் அத்துவிதமாக விருத்தலின், ஆன்மாவைப் பரமான்மாவாகிலும், பரமான்மாவை ஆன்மா வாகிலும் பிரிந்திருத்தற்கு யாதொரு ஏதுவுமில்லை யென்பார், 'அறியுந் தரமோ........செறியாப் பொருணான்' என்றனர். அங்ஙனமாயினும், பரமான்மாவால் ஆன்மாவிற்குப் பிரயோஜனமே யன்றி, ஆன்மாவால் பர மான்மாவிற்குப் பிரயோஜன மில்லை யென்பார், 'பெரும்பேற்றை நெறி நின் றொழுக விசாரித்தால் நினக்கோ வில்லை யெனக்காமே' என்றனர். பட்டினத்துச் சுவாமிகள்: "பொன்னாற் பிரயோசனம் பொன்படைத்

தாற்குண்டு பொன்படைத்தோன், தன்னாற் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டத் தன்மையைப்போ, லுன்னாற் பிரயோசனம் வேணதெல் லாமுன் றனைப்பணியு, மென்னாற் பிரயோசன மேதுண்டு காளத்தி ஈச் சுரனே!" என்றதனாற் காண்க. (4)

எனதென் பதும்பொய் ; யானெனல்பொய் ;
எல்லா மிறந்த விடங்காட்டும்
நினதென் பதும்பொய் ; நீயெனல்பொய் ;
நிற்கு நிலைக்கே நேசித்தேன் ;
மனதென் பதுமோ வென்வசமாய்
வாரா தைய! நின்னருளோ
தனதென் பதுக்கு மிடங்காணேன்!
தமியே னெவ்வா றுய்வேனே?

(இ - ள்) எனது என்பதும் - என்னுடைய பொருளென்று யாவற்றை யும் விவகரித்தலும், பொய் - பொய்யாம் ; யான் எனல் - யான் எனவிவக ரித்தும், பொய் - பொய்யாம் ; எல்லாம் - எல்லா விவகாரங்களும், இறந்த - அற்ற, இடம் - இடத்தினை, காட்டும் - காட்டுகின்ற, நினது என்பதும் - நின்னதென்று விவகரித்தலும், பொய் - பொய்யாம் ; நீ எனல் - நீ என்று விவகரித்தலும், பொய் - பொய்யாம் ; (ஆகையால்) நிற்கும் - நிலைபெற் றிருக்கும், நிலைக்கே - தன்மைக்கே, நேசித்தேன் - விரும்பினேன் ; மனது என்பதுமோ - மனமென்று சொல்லப்படும் பொருளோ, என் வசமாய் - என் வழியில், வாராது - வருவதில்லை ; ஐய! - ஐயனே!, நினது - தேவரீ ருடைய, அருளோ - திருவருளோ, தனது என்பதற்கும் - தன்னுடைய தென்று சொல்வதற்கும், இடம் காணேன் - இடங் கண்டிலேன் ; தமி யேன் - அடியேன், எவ்வாறு உய்வேன் ? - எவ்விதம் பிழைப்பேன்?, என்க.

(வி - ரை) 'எனது' என்பது புறப்பற்று. தனக் கன்னியமாயுள்ள புறப்பொரு ளனைத்தும் மாயாகாரிய மாகலின் 'எனதென்ப தும்பொய்' என்றனர். 'யான்' என்பதும் ஆகாமிய மேறுதற்குக் காரணமாகிய அபி மான மாகலினாலும், அவ் அபிமானம் துக்கத்திற் கேதுவாகலினாலும், 'யானெனல்பொய்' என்றனர். எல்லாப் பொருளும் முதல்வன் சங்கற்பத் தாற் காரியப்படுதலின் அவன் பொருள்க ளென்னலாமோ வெனின், அனைத்தும் முதல்வன் முன் சூனியமாகலின், 'நினதென் பதும்பொய்' என்றனர். (சூனிய மென்பது ஈண்டு விளங்காமைபொருட்டு) தன் னுடனே யெக்காலத்தும் அத்துவிதமாக முதல்வனிருத்தலின் முன்னிட்டு அன்னியமாகக் காணுதலில்லை யென்பார், 'நீயெனல் பொய்' என்றனர். ஆகலின், இவை யனைத்து நீங்கப்பெற்று முதல்வனுடன் இரண்டறக் கலந்துநின் றனுபவிக்கு நித்தியானந்த நிலையினையே விரும்பினே னென் பார், 'நிற்கு நிலைக்கே நேசித்தேன்' என்றனர். மன மொருவழிபட்டு

நிற்கவில்லை யாகையாலும், எங்ஙன முய்வேனென்பார், ‘மனதென்பது......
உய்வேனோ?’ என்றனர். (5)

உய்யும் படிக்குன் றிருக்கருணை
யொன்றைக் கொடுத்தால், உடையாய்! பாழ்ம்
பொய்யு மவாவு மழுக்காறும்
புடைபட் டோடு(ம்); நன்னெறியா
மெய்யு மறிவு பெறும்பேறும்
விளங்கும்; எனக்கு னடியார்பாற்
செய்யும் பணியுங் கைகூடும்;
சிந்தைத் துயரந் தீர்ந்திடுமே.

(இ - ள்) உய்யும்படிக்கு - கதி யடையும்பொருட்டு, உன் - தேவரீருடைய, திருக்கருணை ஒன்றை - திருவரு ளொன்றினை, கொடுத்தால் - கொடுத்தனையாயின், உடையாய்! - எல்லா முடையவனே!, பாழ்பொய்யும் - பாழாகிய அசத்தியமும், அவாவும் - ஆசையும், அழுக்காறும் - பொறாமையும், புடை பட்டு - புடை பெயர்ந்து, ஓடும் - ஒழியும்; நல்நெறி ஆம் - நன்மார்க்கத்திற் கேதுவாகிய, மெய்யும் - சத்தியமும், அறிவு பெறும் பேறும் - அறிவினாற் பெறும் பிரயோசனமும், விளங்கும் - பிரகாசிக்கும்; எனக்கு - அடியேனுக்கு, உன் - தேவரீருடைய, அடியார்பால் செய்யும் - அடியவர்களிடத்துச் செய்யவேண்டிய, பணியும் - தொண்டும், கை கூடும் - கைவசப்படும்; சிந்தை துயரம் - மனோ வியாகுலம், தீர்ந்திடும் - நீங்கிப்போம், என்க.

(வி - ரை) ஈண்டு ‘கருணை’ என்றது திருவருள். முதல்வன் திருவருளொன்றினைமாத்திர மடையப் பெறுவரேல், மருள் சம்பந்தமான பொய் முதலிய வொழியப்பெற்று, அருள் சம்பந்தமான மெய்முதலிய அடைந்து பெரும் பேறடைவர்க ளென்பதாம். திருமந்திரம்: “அருள் பெற்ற காரண மென்கொ லமரி, லிருளற்ற சிந்தை யிறைவனை நாடி, மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப், பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே.” என்றதனாற் காண்க. இதனால், முதல்வன் திருவருள் கிடைத்தாலன்றித் தீமை நீங்குதற்கும், நன்மை யுண்டாதற்கும் ஏதுவில்லை யென்பதாம். “அவனரு ளாலேயவன்றாள் வணங்கி” என்றது மிக்கருத்துப் பற்றியேயாம். (6)

சிந்தைத் துயரென் றொருபாவி
சினந்து சினந்து போர்முயங்க;
நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்;
எந்தப் படியுன் னருள்வாய்க்கும்?
எனக்கெப் படிநீ யருள்செய்வாய்?

பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே!

(இ - ள்) பந்தத் துயர்-பிறவியால் வந்த துன்பத்தினை, அற்றவர்க்கு - நீங்கினவர்க்கு, எளிய - எளியனாகிய, பரமானந்தம் - மேலான வின்பத்தினைத் தருகின்ற, பழம் பொருளே! - பழைய பொருளே!, சிந்தை துயர் என்ற - மனோதுக்க மென்கிற, ஒரு பாவி - ஒரு பாவி, சினந்து சினந்து - கோபித்துக் கோபித்து, போர் முயங்க - போரினைச் செய்ய, சிந்தைக்கு இடம் ஆய் - சிந்தனைக் கிடமாகி; சக வாழ்வை - பிரபஞ்ச வாழ்க்கையை, நிலை என்று - நிலையானதென் றறிந்தே, நிற்கின்றேன் - பற்றுள்ளவனாய் நிற்கின்றேன்; உன் - தேவரீரது, அருள் - திருவருள், எந்தப்படி வாய்க்கும்?- எப்படி கிடைக்கும்?, எனக்கு - அடியேனுக்கு, நீ - தேவரீர், எப்படி அருள் செய்வாய்? - எவ்வாறு கிருபை பண்ணுவாய்?, என்க.

(வி - ரை) உயிர்ச் சார்பாயுள்ள குடும்ப முதலாகிய பலவகைப்பட்டிருக்கின்ற தேகாதி பிரபஞ்ச வாழ்வுக ளனைத்தும் அநித்யமாக விருக்கவும், அதை நித்தியமென் றுணர்ந்தே னென்பார், 'சிந்தைக்கிடமாய்ச் சக வாழ்வை நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்' எனவும், இங்ஙன நின்றார்க்கு முதல்வன் றிருவருள் உண்டாவது அருமை யென்பார், 'எந்தப் படியுன் னருள்வாய்க்கும்?, எனவும், பிறவித் துயரினுக்குக் காரணமாகிய பிரபஞ்ச வாழ்விற் பற்றற்றவர்க்கே முதல்வன் கருணை யிலேசில் செய்வ னென்பார், 'பந்தத் துயரற் றவர்க் கெளிய பரமா னந்தப் பழம்பொருள்' எனவுங் கூறினர். (7)

பொருளைப், பூவைப், பூவையரைப்
பொருளென் றெண்ணு மொருபாவி,
இருளைத் துரந்திட் டொளிநெறியை
யென்னுட் பதிப்ப தென்றுகொலோ?
தெருளத் தெருள வன்பர் நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குணமுகிலே!
அறிவா னந்தத் தாரமுதே!

(இ - ள்) தெருள தெருள - (மனம்) தெளியத்தெளிய, அன்பர் - அடியார்கள், நெஞ்சம் - மனத்தின்கண், தித்தித்து - இனித்து, உருக - உருகும்படி, தெவிட்டாத - வெருக்காத, அருளை - கிருபை யாகிய மழையினை, பொழியும் - சொரிகின்ற, குண முகிலே! - குண மேகமே! அறிவு - அறிவு சொரூபமாகிய, ஆனந்தத்து - ஞானானந்தமாகிய, ஆர் - அருமையான, அமுதே! - அமிர்தமே!, பொருளை - திரவியத்தினையும், பூவை - பூமியையும், பூவையரை - மாதரையும், பொருள் என்று - உண்மைப் பொருள்களென்று, எண்ணும் - நினைக்கின்ற, ஒரு பாவி - ஒரு பாவி,

இருளை - அஞ்ஞான விருட்டினை, துரந்திட்டு - நீக்கிவிட்டு, ஒளி நெறியை - ஒளியையுடைய சன்மார்க்கத்தினை, என்னுள் - அடியேன் மனத்தின் கண்ணே, பதிப்பது - பதியச்செய்வது, என்று கொல்? - எந்நாளோ? அறியேன், என்க.

(வி - ரை) நிலைபெறுதனவும், துயரத்தினை விளைவிப்பனவுமாகிய பொருளாவன: பொருள் பூமி பூவையர் என்பன. இவைபால் நாட்டமுள்ளளவும் அஞ்ஞானம் நீங்காதாகலின், 'பொருளை......என்று கொலோ?' என்றனர். விடய பேதத்தால் மனோநாட்டம் அநேகமாக விருக்கவும், இம் மூன்றினை மாத்திரம் தொகுத்துக் கூறிய தென்னையெனின், மனோரத மியாவும், இம் மூவேடனையு ளடங்கு மென்பர். அருணகிரிநாதரும்: "மூவே டனையென்று முடிக் கிடுமோ?" என்றார். மூவேடனையாவன: மண், பொன், பெண். (8)

ஆரா வமிர்தம் விரும்பினர்க
ளறிய விடத்தை யமிர்தாக்கும்
பேரா னந்தச் சித்தனெனும்
பெரியோய்! ஆவிக் குரியோய்! கேள்!
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த களைகளெல்லாம்
ஊரா லொருநாள் கையுணவேற்
றுண்டா லெனக்கிங் கொழிந்திடுமே.

(இ - ள்) ஆரா - தெவிட்டாத, அமிர்தம் - அமுதத்தினை, விரும்பினர்கள் - விரும்பினவர்களாகிய (தேவர்கள்), அறிய - (தேவரீர் மகிமையினை) அறியும்படி, விடத்தினை - நஞ்சினை, அமிர்து ஆக்கும் - அமுதமாக்கிய, பேரானந்த சித்தன் என்றும் - பேரானந்த சித்தன் என்கிற, பெரியோய்! - பெரியோனே!, ஆவிக்கு - (அடியேன்) உயிரினுக்கு, உரியோய்! - உரியவனே!, கேள்! - கேட்பாயாக!, கார் ஆர் - கருமை தங்கிய, கிரக வலையினிடை - சமுசார வலையில், கட்டுண்டு இருந்த - கட்டுப்பட்டிருந்த, களைகள் எல்லாம் - விடாய்க ளெல்லாம், ஊரால் - ஊர்தோறும், ஒரு நாள் - ஒவ்வொரு நாளாக, கை உணவு - கைப் பிச்சை, ஏற்று உண்டால் - வாங்கி யுண்பேனாயின், இங்கு - இவ்விடத்து, எனக்கு - அடியேனுக்கு, ஒழிந்திடும் - ஒழிந்துபோம், என்க.

(வி - ரை) ஒரு பொருளை மற்றொரு பொருளாகக் காட்டி மயங்கிப் பிறருக்கு அதிசயத்தினை விளைவிப்பவர் சித்தரென அழைக்கப்படுவர். முதல்வன் உண்மையிலேயே விடத்தினை அமுதமாக மாற்றின எல்லாம் வல்ல சித்தராகலின் 'சித்தர்' என்றார். இங்ஙனம் கூறியது உலக வழக்கினை நோக்கியேயாம். முதல்வனுண்டது ஆலமே; அவ்வாலத்திற் கவர்

பால் நீங்கிழைக்கு மாற்றலில்லை. கையேற் றுண்ணுங் கால நேரிடின் பிர பஞ்ச பந்த மனைத்துந் தானே யொழிந்துவிடு மாகலின், அத்தகைய நிலை மையினைத் தந்தருள வேண்டுமெனக் குறிப்பித்தனர். அங்ஙனம் குறிப்பிக் கவே சுக முண்டென்ப தாயிற்று. பட்டினத்துச் சுவாமிகள்: "ஆறுண்டு தோப்புண் டணிவீதி யம்பலந் தானுமுண்டு, நீறுண்டு கந்தை நெடுங்கோ வணமுண்டு நித்தநித்த, மாறுண் டலாவி மயங்கு நெஞ் சேமனை தோறுஞ் சென்று, சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமு முண்டே." என்றதனாற் காண்க. (9)

எனக்கென் றிருந்த வுடல்பொருளும்
யானு நினவென் றீந்தவண்ணம்
அனைத்து மிருந்து மிலவாகா
வருளாய் நில்லா தழிவழக்காய்
மனத்துட் புகுந்து மயக்கவுமென்
மதிக்குட் களங்கம் வந்ததென்னோ?
தனக்கொன் றுவமை யறநிறைந்த
தனியே தன்னந் தனிமுதலே!

(இ - ள்) தனக்கு - தனக்கு, ஒன்று உவமை அற - ஒருவமை யில் லாதவகை, நிறைந்த - வியாபித்த, தனியே! - ஒப்பற்ற பொருளே!, தன் னந் தனிமுதலே!, எனக்கு என்று இருந்த - அடியேனுக்கென்று நம்பி யிருந்த, உடல் பொருளும் - உடலும் பொருளும், யானும் - நானும், நின என்று - தேவரீருடையன வென்று, ஈந்தவண்ணம் - கொடுத்தபடி, அனைத் தும் இருந்தும் - எல்லா மிருந்தும், இல ஆகா - இல்லாதனவாகா, அரு ளாய் நில்லாது - அருள்வடிவமாய் நிற்காமல், அழி வழக்காய் - கெடு வழக்காகி, மனத்துள் புகுந்து - மனத்திற் பிரவேசித்து, மயங்கவும் - கலங்கவும், என் மதிக்குள் - என்னறிவுக்குள், களங்கம் வந்தது - களங்கம் வந்ததற்குக் காரணம், என்னோ? - யாதோ? அறிகிலேன், என்க.

(வி - ரை) உடல் பொருள் ஆவி மூன்றினையுந் தத்தஞ்செய்த பின்ன ரும் மனத்தில் மயக்கம் விளைவதற்கு நியாய மென்ன வென்பார், 'உடல் பொருளும்......என்னோ?' என்றனர். இதனால் சுதந்தரவீன முற்றும் ஒழிந்த தில்லையாகிச் சிறிது ஒவ்வோரமயம் வந்து தாக்கிக்கொண் டிருக் கின்ற தென்பதாயிற்று. (10)

# ஆசையெனும்

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
　　தலையுங் காலம்
மோசம்வரும்; இதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து,
　　முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப், புலனாயிற் கொடுமைபற்றி
　　நிற்ப ரந்தோ!
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே! நிராசையின்றேற்
　　றெய்வ முண்டோ?

(இ - ள்) ஆசை எனும் - ஆசை யென்று சொல்லப்படுகிற, பெரும் காற்றூடு - பெருங்காற்றில், இலவம்பஞ்சு எனவும் - இலவம்பஞ்சு அலைவது போலவும், மனது - மனமானது, அலையும் காலம் - அலையுங் காலத்தில், மோசம் வரும் - மோசம் நேரிடும்; இதனாலே - இதனால், கற்றதும் - கற்ற கல்விகளும், கேட்டதும் - கேட்ட கேள்விகளும், தூர்ந்து - வீணாகி, முத்திக்கு - மோட்சத்திற்கு, ஆன - ஆகிய, நேசமும் - விருப்பமும், நல் - நல்ல, வாசமும் - சிவக்ஷேத்திர வாசமும், போய் - நீங்கி; புலன் ஆய் - ஐம்புலன் வழியாகி, இல் கொடுமை பற்றி - கொடுமையான சமுசாரத்தி லழுந்தி, நிற்பர் - ஆசை வலையே கட்டுப்படுவர்; (ஆதலால்) தேசு பழுத்து- ஒளி மிகுந்து, அருள் பழுத்த - அருள் மிகுந்த, பராபரமே! - பராபரமே!, நிராசை இன்றேல் - அவாவறுதி யில்லையேல், தெய்வம் உண்டோ? - ஒருவனுக்கு தெய்வமு முளதாமோ?, என்க.

(வி - ரை) ஒருவனுக்கு நிராசை யுண்டானாலன்றித் தெய்வவுண்மை விளங்கா தென்பதாம். திருமந்திரம்: "வாசியு மூசியும் பேசி வகையினாற், பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை, யாசையு மன்பு மறுமி னறுத்தபி, னீச னிருந்த விடமெளி தாமே." என்றதனாற் காண்க. (1)

'இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செயென
　　வேசற் றேதான்
புரப்பான்ற னருணாடி யிருப்பதுபோல்,' எங்குநிறை
　　பொருளே! கேளாய்!
மரப்பான்மை நெஞ்சினன்யான், வேண்டுவகேட்டிரங்கெனவே
　　மௌனத் தோடந்
தரப்பான்மை யருணிறைவி லிருப்பதுவோ பராபரமே!
　　சகச நிட்டை.

(இ - ள்) இரப்பான் ஒருவன் அவன் - யாசகஞ் செய்பவனாகிய ஒருவனென்னும் அவன், வேண்டுவ - தனக்கு வேண்டியவற்றை, கேட்டு - செவி

யுற்று, அங்கு - அவ்விடத்து, அருள் செய் என - கிருபை செய்தருளவேண்டு மென, எசற்று - பழிப்பற்று, புரப்பான் - ரக்ஷிப்பவனுடைய, அருள் - கிருபையினை, நாடி இருப்பதுபோல் - நோக்கி யிருப்பதுபோல, எங்கும் நிறை பொருளே! - எங்கும் வியாபகமான வஸ்துவே!, கேளாய்! - கேட்பாயாக!, மரப்பான்மை - மரத்தின் தன்மையினை யொத்த, நெஞ்சினன் யான் - மனத்தினை யுடைய நான், வேண்டுவ - விரும்புமவற்றை, கேட்டு - திருச்செவி சாத்தி, இரங்கு - இரங்கி யருள்வாயென்று, மௌனத்தோடு - மௌன நிலையுடன், அந்தரப் பான்மை - ஆகாயத்தின் றன்மை யமைந்த, அருள் நிறைவில் - தேவரீர் திருவருட் பூரண நிலையில், இருப்பதுவோ - இருப்பதுதானோ, பராபரமே! - பராபர வஸ்துவே!, சகச நிஷ்டை - அடியேனுக்குச் சகசநிஷ்டை யென்று சொல்லப்படுவது, என்க.

(வி - ரை) இரப்பாளன் ஈகையாளனுடைய அருளொன்றினையே நாடி வேறொன்றிலு மனத்தினைச் செலுத்தாது, அவ் ஈகையாளனையே யெண்ணி வாழ்த்தல் போல, முதல்வன் திருவரு ளொன்றினையே நாடி, வேறு முகத்தில் சிறிதும் அறிவைச் செலுத்தாது, அவ்வருள் வியாபகத்திலேயே யிருத்தல் சகசநிட்டை யென்பதாம்; அதாவது, இடைவிடாது ஒரு வழியிலேயே அறிவைச் செலுத்தி யிருத்தலாகும். (2)

'சாட்டையிற் பம்பர சாலம் போ'லெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து, நெஞ்சமே!
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே.

(இ - ள்) நெஞ்சமே! - மனமே!, சாட்டையின் - கயிற்றினு லாட்டப் படுகிற, பம்பர சாலம்போல் - பம்பரக் கூட்டங்கள் போல, எல்லாம் - எல்லா உயிர்களையும், இறை - முதல்வன், ஆட்டுவான் என - ஆட்டுவிப்பானென்று, அறிந்து - தெரிந்து; தேட்டம் ஒன்று அற - கவலையொன்று மில்லாது, அருள் செயலில் - திருவருட் செய்கைக் குட்பட்டு, நிற்றியேல் - நிற்பையாகில், வீட்டு அறம் - இல்லறம், துறவு அறம் - துறவறம், இரண்டும் - ஆகிய இரண்டறங்களும், மேன்மையே - மேன்மையை யுடையனவே, என்க.

(வி - ரை) ஈண்டு, 'சாட்டை' என்பது பாசம். 'பம்பரசாலம்' என்பது பசுக்கள். 'ஆட்டுவான்' என்பது பதி. ஆன்மாக்களை வினைவழி யாட்டுவிப்பான் முதல்வனாகலின், 'சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம் ஆட்டுவா னிறை' எனவும், அருள் வயப்பட்டோர்க்கு எத்தகைய ஆசிரமங்களும் சமமே யென்பார், 'அருட் செயலி னிற்றியேல், வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே' என்றனர். பட்டினத்துச்சுவாமிகள்: "ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்றோ டொன்றை, மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை, காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றுவழி, யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்ப

லத்தே." எனவும்; "காடே திரிந்தென்ன காற்றைப் புசித்தென்ன கந்தை சுற்றி, யோடே யெடுத்தென்ன வுள்ளன்பில் லாதவ ரோங்குவிண்ணோர், நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால், வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே." எனவும் வருவனவற்றாற் காண்க. ( )

தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான் ஞானமெனுந் தன்மை பேச
உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே; அதனையுன்னி யுருகேன்; ஐயா!
வன்னெஞ்சோ? இரங்காத மரநெஞ்சோ? இருப்புநெஞ்சோ? வைர மான
கன்னெஞ்சோ? அலதுமண்ணாங் கட்டிநெஞ்சோ? எனதுநெஞ்சங் கருதிற் றனே.

(இ - ள்) நெஞ்சம் - மனமானது, தன் நினைப்பு ஒழியாத - தன்கண்ணுள்ள எண்ணங்கள் நீங்காத, அறிவிலி நான் - அறிவிலியாகிய அடியேன், ஞானம் என்னும் - ஞானமென்று சொல்லப்படுகிற, தன்மை பேச - தன்மையினை யெடுத்துப் பேசும்படி, உன் நெஞ்சம் - தேவரீர் உள்ளம், மகிழ்ந்து - சந்தோஷித்து, ஒரு சொல் - ஒரு மொழி, உரைத்தனையே - போதித்தனையே; அதனை உன்னி - அம் மொழியினை நினைந்து, உருகேன் - உருக மாட்டேன்; (ஆதலால்) ஐயா! - ஐயனே!, எனது - அடியேனது, நெஞ்சம் - மனமானது, கருதின் - எண்ணுமிடத்து, வல் நெஞ்சோ? - வன் மனமோ?, இரங்காத - இரக்கமில்லாத, மர நெஞ்சோ? - மர மனமோ?, இருப்பு நெஞ்சோ? - இரும்பு மனமோ?, வைரம் ஆன - வயிரம் பற்றிய, கல் நெஞ்சோ? - கல் மனமோ?, அலது - அல்லது, மண்ணாங்கட்டி நெஞ்சோ? - மண்ணாங்கட்டி மனமோ? அறிந்திலேன், என்க.

(வி - ரை) ஞானவிவகாரஞ் செய்தற் குரியர் அறிஞரே யாவர். அங்ஙனமாக, அறிவிலியாகிய நான் அத்தகைய ஞான விவகாரஞ் செய்யும் வண்ண மடியேனுக்கொரு சொல்லாற் றிருவருள் புரிந்தும், அவ் வுபகாரத்தினை நினையாத ஏழையே னெஞ்சம் கல் மண் முதலியவற்றிற்குச் சமமே யென்பார், 'வன்னெஞ்சோ? இரங்காத மரநெஞ்சோ? இருப்பு நெஞ்சோ? வைர மான கன்னெஞ்சோ? அலது மண்ணாங்கட்டி நெஞ்சோ?' என்றனர். திருவாசகம்: "வெள்ளந்தான் பாயாத நெஞ்சங் கல்லாங் கண்ணிணையு மரமாந் தீவினையி னேற்கே" என்றதனாற் காண்க. (4)

வாழி சோபனம்! வாழிநல் லன்பர்கள்!
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபனம்!
ஆழி போலரு ளையன் மவுனத்தால்
ஏழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்!

(இ - ள்) சோபனம் - அடியேன் பாடும் சோபனமானது, வாழி!- வாழ்க !, நல் அன்பர்கள் - நன்மையினையே செய்கின்ற அடியார்கள், வாழி! - வாழ்க !, சூழ - அடியேனைச் சூழுமாறு, வந்து அருள் - வந்து கிருபை புரிந்த, தோற்றமும் - திருவருட் டோற்றமும், சோபனம்! - சுகமாகுக !, ஆழிபோல் - கடல்போல, அருள் - அருளினையுடைய, ஐயன் - குருவின், மவுனத்தால் - மௌனோப தேசத்தால், ஏழையேன் - எளியேன், பெற்ற - அடைந்த, இன்பமும் - சுகமும், சோபனம்! - சுகமாகுக !, என்க.

(வி - ரை) இவ் வாசிரியர் தான் வாய்நிரம்பப் பாடிய ஆனந்த மேலீட்டால் முதல்வன் தன்னாற் பாடுவித்த பாக்களும், அடியார்களும், திருவருளும், குருவும் வாழ்கவென மங்களங் கூறினர். திருவாசகம் : "நமச்சிவாய வாழ்க......குருமணிதன் றாள்வாழ்க......இறைவனடி வாழ்க" என்றதனுல் காண்க. (5)

கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா
தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா
துள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடும்;
தண்டமிழ் மாலைகள்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
ததுபரஞ் சோதி.

(இ - ள்) தண் - தண்ணிய, தமிழ் - தமிழ் மொழிகளாலாகிய, அலங்கல் - மாலைகளை, தொடுக்கின்றோர்களை - தொகுத்துச் சாத்துகின்ற அடியார்களை, சோதியாதது - சோதனை செய்யாததாகிய, பரஞ்சோதி - பரஞ்சுடரானது, கொடுக்கின்றோர்கள் பால் - கொடையாள ரிடத்து, குறைவையாது - குற்றம் பாராட்டாது ; யான் என்னும் - யான் என்கின்ற, குதர்க்கம் - குதர்க்கத்தினை, விடுக்கின்றோர்கள் பால் - விடுப்பவ ரிடத்து, பிரிகிலாது - நீங்கி யிராது ; உள் அன்பு - மனத்தினிடத்து அன்பு, விடாது - நீங்காமல், அடுக்கின்றோர்களுக்கு - அடுப்பவர்கட்கு, இரங்கிடும் - இரங்கியருளும், என்க.

(வி - ரை) தருமவான்க ளிடத்தும், அகங்காரம் அற்றவ ரிடத்தும், அன்புடையாரிடத்தும் முதல்வன் கிருபை செய்தருளுவா னென்பார், 'கொடுக்கின் றோர்கள்பால் குறைவையாது' எனவும், 'குதர்க்கம் விடுக்கின் றோர்கள்பால் பிரிகிலாது' எனவும், 'அடுக்கின் றோர்களுக் கிரங்கிடும்' எனவுங் கூறினர், பெரியபுராணம் : "நமக்கு மன்பிற்பெருகிய சிறப்பின்மிக்க, அர்ச்சனைபாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச் சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" என்றதற் கேற்ப முதல்வன் தமிழ்மாலைக ளிடத்து அதிகமாக அன்பு பாராட்டுபவ னாகலின்

பாடுவாரிடத்து அவர்கள் குறைகளைச் சிறிதுங் கவனியாது அனுக்கிரகமே செய்துவருவா னென்பார், 'தண்டமி ழலங்கல், தொடுக்கின் றோர்களைச் சோதியா ததுபரஞ் சோதி.' என்றனர். (6)

உலக மாயையி லேவெளி யேன்றனை
யுழல விட்டனை யே; உடை யாய்! அருள்
இலகு பேரின்ப வீட்டினி லென்னையும்
இருத்தி வைப்பதெக் காலம்? சொ லாய்! எழில்
திலக வாணுதற் பைந்தொடி கண்ணிணை
தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலாம்
அலகி லாவினை தீர்க்கத் துசங்கட்டும்
அப்ப னே! அரு ளானந்தச் சோதியே!

(இ - ள்) எழில் - அழகு வாய்ந்த, திலகம் - பொட்டணிந்த, வாள் - ஒளிபொருந்திய, நுதல் - நெற்றியையும்; பை - பசிய, தொடி - வளையலையு முடைய உமாதேவியின், கண் இணை - இரு விழிகள், தேக்க - நிறையும்படி, நாடகம் செய்து - திருத்தம் செய்து; அடியார்க்கு எல்லாம் - அடியவர்கட்கு எல்லாம், அலகு இல்லா - அளவற்ற, வினைதீர்க்க - கன்மங்களை யொழித் தற்காக, துசம் கட்டும் - கொடி கட்டுகின்ற, அப்பனே! - தந்தையே!, அருள் - அருளையும், ஆனந்தம் - ஆனந்தத்தினையு முடைய, சோதியே! - சுடரே!, வெளியேன் தனை - ஏழையேனை, உலக மாயையிலே - பிரபஞ்ச மாயையிலே, உழலவிட் டனையே - அலையவிட்டாயே; உடையாய்! - என்னை அடிமையாக வுடையாய்!, அருள் இலகு - உன் திருவருளால் விளங்குகின்ற, பேர் இன்ப வீட்டினில் - மோட்ச வீட்டினில், என்னையும் - அடியேனையும், இருத்தி வைப்பது - இருக்கச் செய்வது, எக்காலம்? - எந்நாள்?, சொல்லாய்! - பேசுவாயாக!, என்க.

(வி - ரை) முதல்வன் ஆன்மாக்களை அநாதியே அடிமையாக வுடையவனாகலின், "உடையாய்" என்றனர். இக் காரணம்பற்றியே சித் தாந்தச்செல்வர்கள் ஆன்மார்த்தமாகப் பெட்டகத்தில் வைத்துப் பூசிக்கும் பெருமானை 'உடையவர்' என்றும், பூசையை 'உடையவர் பூசை' எனவும் கூறுவது சம்பிரதாயம். இங்ஙனம் உடையவனா யிருக்கும் அடி யேனை மாயாமயமான விடத்தில் வையாது மாயை யிறந்தவிடத்து வைத் தாள லெக்கால மென்பார், 'உலகமாயையி......லுழல விட்டனையே பேரின்ப வீட்டினில் வைப்ப தெக்காலம்?' என்றனர். (7)

'முன்னிலைச்சுட் டொழிதி' யெனப் பல்காலு நெஞ்சே! நான்
மொழிந்தே னே; நின்
றன்னிலையைக் காட்டாதே, என்னையொன்றாச் சூட்டாதே
சரணென் போந்த

அந்நிலையே நிலை ; அந்த நிலையிலே சித்திமுத்தி
யனைத்துந் தோன்றும் ;
நன்னிலையீ தன்றியில்லை ; சுகமென்றே சுகர் முதலோர்
நாடி னாரே.

(இ - ள்) நெஞ்சே ! - மனமே !, முன்னிலை சுட்டு - முன்னிலையாகச் சுட்டுதலை, ஒழிதி என - ஒழிவாயாகவென்று, பல்காலும் - பல தாமும், நான் - நான், மொழிந்தேனே - சொன்னேனே ; நின்றன் - உன்னுடைய, நிலையை - நிலைமையினை, காட்டாது - காட்டாமலும், என்னை - என்னை, ஒன்று ஆ - ஒரு பொருளாக, சூட்டாது - வையாமலும், நான் - நான், சரண் போந்த - அடைக்கலம் புகுந்த, அ நிலையே - அந்த நிலையே, நிலை - நன்னிலையாகும் ; அந்த நிலையிலே - அந் நிலையிற்றானே, சித்தி - சித்திகளும், முத்தி - மோட்சமும், அனைத்தும் - மற்ற யாவும், தோன்றும் - உண்டாகும் ; ஈது அன்றி - இஃதன்றி, நன்னிலை இல்லை - நல்ல நிலையில்லை ; சுகம் என்றே - இதுவே இன்பநிலையம் என்று, சுகர்முதலோர் நாடினார் - சுகர் முதலிய பெரியோர்கள் இந்த நிலையை விரும்பினார்கள், என்க.

(வி - ரை) முன்னிலைச் சுட்டாவது : பெயர் சாதிமுதலிய விசேடண விசேடியங்களின் சம்பந்தம் சுவரும் ஞானங்கொண்டு பிரபஞ்ச முகமாக விருத்தல். அத்துவித மடைதற் கேதுவாகிய நிர்விகற்ப ஞானத்திற்குச் சவிகற்ப ஞானம் - விரோதமாகலின், ' முன்னிலைச்சுட் டொழிதி' என்றனர். தன்மையினும் முன்னிலையினும் முனைவு தோன்றாது நின்ற நிலையே சுத்தாத்துவித நிலையாகலின், ' அந்நிலையே நிலை ' என்றனர். ஈண்டு ' தன்னிலை ' என்றது முன்னிலை. ' என்னை யொன்றாச் சூட்டாதே ' என்றது தம்மை. அத்துவிதானுபவமுடையாருக்குச் சகலமுஞ் சித்திக்குமென்பார், ' அந்த நிலையே சித்தி முத்தி யனைத்துந் தோன்றும் ' என்றனர். இவ் வத்துவித நிலையினையே பெரியோர் பல ரனுபவித்தா ரென்பார், ' சுகர்முதலோர் நாடினாரே ' என்றனர். (8)

அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல், யானெனும்பே
யகந்தை யோடு
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப இன்னமின்னம்
வருந்து வேனோ ?
சுத்தபரி பூரணமாய், நின்மலமாய், அகண்டிதமாய்ச்
சொரூபா னந்தச்
சத்திகனீங் காதவணந் தன்மயமாய், அருள்பழுத்துத்
தழைத்த வொன்றே !

(இ - ள்) சுத்த - சுத்தநிலையாகிய, பரிபூரணமாய் - வியாபகமாகி ; நின்மலமாய் - நிருமலமாகி ; அகண்டிதமாய் - அளவு கடந்ததாகி ; சொரூபானந்த சத்திகள் - சொரூபானந்த சத்திகள், நீங்காதவண்ணம் -

விலகாத வகை, தன் மயமாய் - தன் மயமாகி; அருள் பழுத்து - திருவருள் கனிந்து, தழைத்த - செழித்த, ஒன்றே! - ஒப்பற்ற பொருளே!, பெறும் பேறு - அடையத்தக்க பலன், அத்துவிதம் என்று - அத்வைதமென்று, அறியாமல் - ஆராய்ந்துணராமல், யான் என்னும் - நான் என்கின்ற, பேய் - பேய்த்தன்மை பொருந்திய, அகந்தையோடு - அகங்காரத்துடன் கூடி, மத்தம் மதியினர்போல - உன்மத்தங் கொண்டவர்போல, மனம் கிடப்ப - மனமழுந்திக் கிடக்க; இன்னம் இன்னம் வருந்துவேனோ? - மேலும் மேலும் துன்ப முறுவனோ?, என்க.

(வி - ரை) சுத்தாவத்தைதனை யறிந்து சென்று போதமற்று முதல்வனுடன் இரண்டறக் கலந்த அத்துவித நிலையினை யுடையோர்க்கே ஓரனுபவந் தோன்றாது மவுனானந்த நிலையாகிய பெரும்பே றடைவராகலின், 'அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல்' என்றனர். ஒழிவிலொடுக்கம்: "சாத்துவிக மெட்டாய்த் தசவவத்தை யாய்த்தன்னை, நீத்தவனாய்த் தானாய்ப்பின் னேயமாய்க் - கூர்த்தெல்லாஞ், சுத்த வவத்தைத் துவட்சித் துகளற்ற, வத்துவிதர்க்கேது முதியா." என்றதனாற் காண்க. ()

தந்தை தாயுநீ; என்னுயிர்த் துணையுநீ;
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ; உனையலான்
மற்றொரு துணைகாணேன்;
அந்த மாதியு மளப்பருஞ் சோதியே!
ஆதியே! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ்
சிரகிரிப் பெருமானே!

(இ - ள்) அந்தம் (உம்) - முடிவும், ஆதியும் - முதலும், அளப்பு அரு - அளத்தற் கரிதாயுள்ள, சோதியே! - சுடர்ப்பிழம்பே!, ஆதியே! - முதல்வனே!, அடியார் - அன்பர்கள், சிந்தை - மனத்தில், மேவிய - பொருந்திய, தாயுமானவன் எனும் - தாயுமானவன் என்று சொல்லப் படுகிற, சிரகிரி பெருமானே! - திரிசிரமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே!, தந்தை (உம்) - தகப்பனும், தாயும் - அன்னையும், நீ - நீயே; என் - அடியேனுடைய, உயிர் துணையும் - உயிர்த் துணைவனும், நீ - நீயே, சஞ்சலம் - மனத்துயரம், தீர்க்க - நீக்குதற்காக, வந்த - எழுந்தருளி வந்த, தேசிக வடிவும் - குரு மூர்த்தமும், நீ - நீயே; உனை - தேவரீரை, அல்லால் - அல்லாமல், மற்றொரு - வேறொரு, துணை காணேன் - துணையைக் கண்டிலன், என்க.

(வி - ரை) 'அந்த மாதியும் அளப்பருஞ் சோதி' என்றது நான்முகன் அன்ன வடிவாகி ஆகாயத்திற் சென்றும், நாரணன் ஏன வடிவாகி யிருநிலம் புகுந்தும் அறியாத அடிமுடிகளை யுடைய சோணசைல நாதனை

தாயுமானவ னென்பது திரிசிரபுரத்தில் திருக்கோயில்கொண் டெழுந் தருளி யிருக்கும் சதாசிவ மூர்த்தியினை வடமொழியில் மாத்ருபூதேசுவரன் என வழங்கப்படும்.

திரிசிரபுரத்தில் சிவபக்தியிற் சிறந்த தனகுத்தன் என்னும் வணிகன் மனைவியாகிய அரதனவதி என்பாளுக்குக் கருப்பம் வாய்ந்து பத்தாமாத நெருங்குகையில், காவிரிப்பூம் பட்டினத்துள்ள இவள் தாய் கேள்வியுற்றுக் காயமுதலிய அமைத்துக்கொண்டு பிரயாணப்பட்டு வருகையில், காவிரி நீர் இருகரையும் பெருக்கெடுத் தோடக்கண்டு திரும்பித் தன் வீடு சேர்ந்து விய சனமுற் றிருந்தனள். தாய் வராமை கண்டு அரதனவதி கவலையுற்றுச் சுவாமி யைத் தியானித்துக்கொண் டிருக்கையில், சிரபுரத்துப் பெருமான் அவள் தாய்போல் கோலங்கொண்டு அவளிடம் வந்து அளவளாவியிருந்து, மருத்து வத் தொழில் புரிந்து பிள்ளை பிறந்தவுடன் தொட்டிவிட்டு, ஒருமாதவரையி லுட னுறைந்தனர். காவிரியில் வெள்ளங் குறைந்தவுடன் தாய் வந்து சேர்ந் தனள். முன்னிருந்த தாயினுக்கும் பின் வந்த தாயினுக்கும் வித்தியாசம் தெரியாது அரதனவதி மயங்குகையில் சுவாமி மறைந்து இடபவாகனரூட ராய்க்காட்சிகொடுத் தேகினர். இந்நாள்முதல் இத்தலத்துப் பெருமானுக் குத் **தாயுமானவர்** எனப் பெயர் வழங்கலாயிற்று. இந் நூலாசிரியர் இத் தலத்தி லவதரித்தமையின் இவர் தாய்தந்தையர் இத்தலத்துப் பெருமான் பேரையிட் டழைத்தனர். (10)

காதி லோலையை வரைந்துமேற் குமிழையுங்
கறுவிவேள் கருநீலப்
போது போன்றிடுங் கண்ணியர் மயக்கிலெப்
போதுமே தளராமல்,
மாது காதலி பங்கனை, அபங்கனை,
மாடமா ளிகைசூழுஞ்
சேது மேவிய ராமநா யகன்றனைச்,
சிந்தைசெய்! மடநெஞ்சே!

(இ - ள்) மடம் - அறியாமையுடன் கூடிய, நெஞ்சே! - மனமே!, காதில் - செவியி லணிந்த, ஓலையை - பொன்னோலையினை, வரைந்து - தொலைத்து; மேல் - பின்னர், குமிழையும் - குமிழம்பூவினை யொத்த நாசியையும், கறுவி - சினந்து; வேள் - மன்மதனுடைய, கருநீலபோது - கருநீலப் பூவினை, போன்றிடும் - ஒத்திருக்கின்ற, கண்ணியர் - கண்களை யுடைய மாதர்களுடைய, மயக்கில் - மயக்கத்தில் அகப்பட்டு, எப்போ தும் - எக்காலத்தும், தளராமல் - தளர்ச்சி யடையாமல்; மாது காதலி - ஆசைநாயகியாகிய உமாதேவியை, பங்கனை - பாகத்தி லுடையவனை; அபங்கனை - நாச மில்லாதவனை; மாட மாளிகை சூழும் - மாட மாளிகை சூழ்ந்திருக்கின்ற, சேது மேவிய - சேதுவி லெழுந்தருளி யிருக்கின்ற,

ராமநாயகன்றனை - இராமநாதனை, சிந்தை செய்! - தியானிப்பாயாக!, என்க.

(வி - ரை) 'சேது' என்பது இராமர் இலங்கைக்குச் சேரும்படி குரங்குகளைக்கொண்டு கட்டிய எழுநூற்று முப்பது யோசனை நீளமுள்ள பாலம். சேதுபுராணம்: "பயங்கொ ளிருளின் படங்கிழிக்கும் பரியொளி போற் படியிலதாம், வயக்கொ ளிராமன் வானரத்தால் வகுத்தசேது." என்றதனுற் காண்க. இராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பூசித்த பெருமானுக்கு இராமநாதன் எனப் பெயர். இவ் இலிங்கம் கந்தமாதனத்துச் சேதுவி லுள்ளது. இராவணன் இறந்தபின் அவன் பேயுருவங் கொண்டு வந்து நீடித்துப் பயமுறுத்திய துன்பத்தினை யொழித்துக் கொள்ளும்பொருட்டு இராமர் தாபித் தேத்தினர். இத்தலமே இராமேச்சுரம் என்னப்படும். ஷை புராணம்: "பூந்தவிசி னிருந்தபிரான் முதலோர் நாணப் புண்டரிக மகன்கொழிநன் புகழ்ி லங்கை, வேந்தனுயிர்ப் பழி கழிய முகத்தால் யார்க்கும் விடையவனே யுடையவனும் வேத வாய்மை, யாந்தரங்கம் வெளிசெய்வா னனைவ ரோடு மணைந்துகந்த மாதனத்தி லருச்சித் தேத்து, மேந்துபுனற் சடிலமுடி யிராம நாத னிணையடிச்செந் தாமரைக ளிறைஞ்சி வாழ்வாம்." என்றதனுற் காண்க. (11)

அண்டமுமாய்ப், பிண்டமுமாய், அளவி லாத
வாருயிருக் கோருயிரா யமர்ந்தாயானுல்,
கண்டவரார்? கேட்டவரார்? உன்னு லுன்னைக்
காண்பதல்லால், என்னறிவாற் காணப் போமோ?
வண்டுளப மணிமார்பன் புதல்வ னோடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்
புண்டரிக புரத்தினினு தாந்த மௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே!

(இ - ள்) வண் - வளப்பமாகிய, துளபம் - துளசி மாலையினையும், மணி-கௌத்துப மணியினையும், அணிந்த மார்பன்-மார்பினையுடையவிண்டு, புதல்வனோடும் - புத்திரனுகிய பிரமனோடும், மனைவியொடும் - இலக்குமியோடும், குடி இருந்து - குடியாக விருந்துகொண்டு, வணங்கி போற்றும் - வணங்கி யேத்தும், புண்டரிக புரத்தினில்-புண்டரிக புரமாகிய சிதம்பரத்தினில், நாதாந்தம் - நாத தத்துவத்தின் முடிவாயுள்ள, மௌனம் - மனுதீதத்தில், போதாந்தம் - உணர்வுக் கெட்டாத, நடம் புரியும் - நடனஞ் செய்யும் புனித வாழ்வே! - பரிசுத்தமான வாழ்வானவனே!, அண்டமும் ஆய் -, அண்ட வடிவாகியும்; பிண்டமும் ஆய் - பிண்ட வடிவாகியும்; அளவு இல்லாத - எண்ணிறைந்த, ஆர் - நிறைந்த, உயிருக்கு - ஆன்மாக்களுக்கு; ஓர் - ஒப்பற்ற, உயிராய் - உயிராகியும், அமர்ந்தாய் ஆனுல் - அமர்ந்திருப்பையாயின்; கண்டவர் ஆர்? - (தேவரீரைக்) கண்டவர் யாவர்?, கேட்டவர் ஆர்? - (தேவரீரைக்) கேட்டவர் யாவர்?, உன்னுல் - தேவரீரால்,

உன்னை - தேவரீரை, காண்பது அல்லால் - தரிசித்த லல்லாமல், என் அறிவால் - அடியேன் சிற்றறிவால், காணப்போமோ-தரிசித்தல் கூடுமோ?, என்க.

(வி - ரை) "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமான னாயெறியுங் காற்றுமாகி, யருநெறிய திங்களாய் ஞாயிறாகி யாகாச மாயட்ட மூர்த்தியாகி." எனவும்; "எல்லா உலகமு மானாய் நீயே" எனவும் வருவன வற்றால் 'அண்டமுமாய்' என்றனர். ஆன்மாக்களின் கன்மத்திற் கிடாக ஏற்பட்டுள்ள பௌதிகதனு சிவரூபமே யென்பார், 'பிண்டமுமாய்' என்றனர். திருமந்திரம்: "மானிடராக்கை வடிவு சிவலிங்க, மானிடராக்கை வடிவு சிதம்பர, மானிட ராக்கை வடிவு சதாசிவ, மானிட ராக்கை வடிவு திருக்கூத்தே." என்றதனாற் காண்க. கண்ணொளி ஆன்மபோதம் போல் முதல்வன் ஆன்மாவை யொற்றிற்று நின்று உபகரிக்குந் தன்மையின், 'அளவி லாத வாருயிருக் கோருயிராய்' என்றனர். முதல்வன் அவாங்மனோ கோசரனாய்ப் பூதசம்பந்தமான கண்ணுக்கும் செவிக்கும் எட்டாதவ னென்பார், 'கண்டவரார்? கேட்டவரார்?' என்றனர். "அவனருளாலே யவன்றாள் வணங்கி" எனவும், "அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்" எனவும், "அறிவிக்கப்படுஞ் சித்திவன்" எனவும் வருவனவற்றிற் கேற்ப, 'உன்னா லுன்னைக்காண்பதல்லால், என்னறிவாற் காணப் போமோ?' என்றனர். திருமால் குடும்பத்துடன் சிதம்பரத்தினை யடைந்து ஆனந்த நடராஜமூர்த்திக்குக் கொத்தடிமையாய்ப் பழயடியராக வாழ்ந்து வருகிறா ரென்பார், 'வண்டுளப மணிமார்பன் புதல்வனோடு மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்' என்றனர். புண்டரிக மென்பது புலி. புலிரூபம் வாய்ந்து வியாக்கிரபாதர் பூசித்த தலமாகலின் புண்டரிக புர மெனப் பெயர் வந்தது. புலியூர் யென்பது இக்காரணம் பற்றியேயாம். அன்றியும் புண்டரிக மென்பது இருதயம். விராட்புருஷனுக்குச் சிதம்பரம் இருதயத்தானமாக விளங்கலின் புண்டரீகபுர மெனவுமொக்கும். 'நாதாந்தம்' எனவும், 'போதாந்தம்' எனவும் இரண்டு கூறவே மற்றைய நான்கு அந்தங்களையும் கூட்டிக்கொள்க. திருமந்திரம்: 'வேதத்தி னந்தமு மிக்கசித் தாந்தமு, நாதத்தி னந்தமு நற்போத வந்தமு, மோதத் தகுமெட்டி யோகாந்த வந்தமு, மாதிக் கலாந்தமு மாறந்த மாமே." என்றதனாற் காண்க. சபேசன் ஞானத்தாண்டவம் உறைவிடமாக விடத்திலும், மன விகற்ப மற்ற அறிவின் முடிவிலும் நிகழுவ தாகலின், 'நாதாந்த மௌன போதாந்த நடம்புரியும்' என்றனர். (12)

பொறியிற் செறியைம் புலக்கனியைப்
புந்திக் கவராற் புகுந்திழுத்து
மறுகிச் சுழலு மனக்குரங்கு
மாள வாளா விருப்பேனோ?

அறிவுக் கறிவாய்ப், பூரணமாய்,
அகண்டா னந்த மயமாகிப்,
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப்,
பெம்மா னே! எம் பெருமானே!

(இ - ள்) அறிவுக்கு - உணர்விற்கு, அறிவு ஆய் - உணர்வு ஆகி; பூரணமாய் - வியாபகமாய்; அகண்ட - கண்டிக்கப்படாத, ஆனந்தமயம் ஆகி - சுகரூபமாகி; பிறிவு அற்று - நீக்கமற்று, இருக்கும் - இருக்கின்ற, பெரும் கருணை - பெருங் கருணையினை யுடைய, பெம்மானே! - பெருமானே!, எம் பெருமானே! - எமது இறைவனே!, பொறியில் - ஐம்பொறியில், செறி - தொங்குகின்ற, ஐம்புலக் கனியை - ஐம்புலன்களாகிய பழங்களை, புந்தி - புந்தியென்னும், கவரால் - மரக்கப்பில், புகுந்து - ஏறி, இழுத்து - இழுத்து, மறுகி - மயங்கி, சுழலும் - சுழலுகின்ற, மனக்குரங்கு - மனமாகிய குரங்கு, மாள - மடியும்படி, வாளா - சும்மா, இருப்பேனோ? - இருப்பேனோ?, என்க.

(வி - ரை) மெய் - வாய் - கண் - மூக்கு - செவியென்னும் ஐம்பொறிகளின் வழியே விளையும் சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றம் என்னும் ஐம்புலன்களை மனமானது புந்தியின் மூலமாகக் கிரகித்து விவகாரங்களிற் செல்லுகையினால், பொறிகளை விருட்சங்களாகவும், புலன்களைக் கனிகளாகவும், புந்தியினைக் கப்பாகவும், மனம் அக் கனிகளைக் கிரகிப்பதாகவும் கூறினர். விவகாரத்தால் மனமானது ஒருவழிப்படாமல் எக்காலமும் சஞ்சலங் கொண்டிருத்தலின் அம் மனத்தினைக் 'குரங்கு' என்றனர். முதல்வனை உயிராகிய அறிவிற்கு அறிவிக்கும் அறிவென்று கூறுதலின், 'அறிவுக்கு அறிவாய்' என்றனர். "அறிவுக்கறி வென்னு மாகமங்கள்" என்றதனாற் காண்க. (13)

உரையுணர் விறந்து, தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே! மாறாப்
பரை யெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே! நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ? சிறிய னேனே.

(இ - ள்) உரை - சொல்லும், உணர்வு - உணர்ச்சியும், இறந்து - இறக்கப் பெற்று, தம்மை உணர்பவர் - தம்மை யுணர்பவராகிய (அறிஞரது), உணர்வின் ஊடே - அறிவினுள்ளே, கரை இல்லா - கரையற்ற, இன்பம் வெள்ளம் - ஆனந்தப் பெருக்கை, காட்டிடும் - காட்டுகின்ற, முகிலே! - மேகமே!, மாறு - நீங்காத, பரை எனும் - பரையென்று சொல்லப்படுகிற, கிரணம் சூழ்ந்த - கிரணம் சூழப்பெற்ற, பானுவே! - சூரியனே!, நின்னைப்பற்றி - தேவரீரைப்பற்றி, திரை இல்லா - அலை யில்லாத, நீர் போல - கடல்போல, சிறியனேன் - சிறியனேன், சித்தம் - மனம், தெளிவனோ?—, என்க.

(வி - ரை) 'தம்மை யுணர்பவர்' ஆவார், தம்மைத் தம்முடைய தேகத்திற்கு அந்நியமென வுணர்ந்தார்; இது ஆன்ம தரிசனம். ஆன்மதரிசனம் பண்ணுமிடத்துப் பரதரிசனஞ்செய்து நீக்கவேண்டுதலின் பரதரிசனமும் பண்ணினவ ராவர். இவர்கள் பரதரிசனமும் ஆன்மதரிசனமும் பண்ணவே தம்மை யடிமையாக வுடைய சிவதரிசன மிலேசாம்; எனவே பதி பசு பாசங்களை யுணர்ந்த ஞானிகளாவர். இத்தகைய சுவானுபூதிமான்களிடத்து முதல்வன் றிருவருளோராளமாகத் ததும்புமாகலின், 'தம்மை யுணர்பவ ருணர்வி னூடே, கரையிலா வின்ப வெள்ளம் காட்டிடு முகிலே" என்றனர். சூரியனும் கதிரும் பொருட்டன்மையா லிரண்டாகக் காணப் படினும், தாதான்மியத்தா லொன்று யிருத்தல்போலப், பரனும் பரையுங் காணப்படுதலின், 'பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே!' என்றனர். இதனால் பரையின்றிப் பர மில்லையாம். (14)

கேவல சகல மின்றிக், கீழொடு மேலாய், எங்கும்
மேவிய வருளின் கண்ணாய் மேவிட, மேலா யின்பம்
தாவிட வின்பா தீதத் தனியிடை யிருத்தி வைத்த
தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தை செய்வாம்.

(இ - ள்) கேவலம் - மறப்பும், சகலம் - நினைப்பும், இன்றி - இல்லாமல்; கீழொடு - கீழுடனே, மேலாய் - மேலாகி; எங்கும் - எவ்விடத்தும், மேவிய - பொருந்திய, அருளின் கண் ஆய் - அருட்கண்ணாகி, மேவிட - பொருந்தவும்; இன்பம் - ஆனந்தம், மேலாய் - மேலிட்டு, தாவிட - சிறக்கவும்; இன்பாதீதம் - ஆனந்தாதீதமாகிய, தனியிடை - தனியிடத்தில், இருத்தி வைத்த - (அடியேனை) இருத்திவைத்த, தே என்னும் - தெய்வமென்கிற, மௌனி - மௌன குருவின், செம்பொன் - செம் பொற்கழலணிந்த, சேவடி - திருவடிகளை, சிந்தை செய்வாம் - சிந்தை பண்ணுவோம், என்க.

(வி - ரை) ஆன்மாக்களின் பரிபக்குவத்திற்குத் தகுந்தபடி அவர்கட்கனுக்கிரகஞ் செய்வான் முதல்வனே ஆசாரியமூர்த்தங்கொண் டெழுந்தருளுவ னாகலின், முதல்வனுக்கும் ஆசாரியனுக்கும் பேதமில்லை யென்பார், 'தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தை செய்வாம்' என்றனர். திருமந்திரம்: "குருவே சிவமெனக் கூறினன் நந்தி, குருவே சிவமென் பது குறித் தோரார், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுரை யுணர் வற்றதோர் கோவே." என்றதனாற் காண்க. (15)

நேற்றுளா ரின்று மாளா நின்றனர்; அதனைக் கண்டும்
போற்றிலே னின்னே; அந்தோ! போக்கினேன் வீணேகாலம்;
ஆற்றிலேன்; அகண்டா னந்த வண்ணலே! அளவின் மாயைச்
சேற்றிலே யின்னம் வீழ்ந்து திளைக்கவோ? சிறிய னேனே.

(இ - ள்) நேற்று உள்ளார் - நேற்றையதின மிருந்தவர், இன்று - றுன்றையதினம், மாளாநின்றனர் - மடியாநின்றனர் ; அதனை - அவ்வகை நிலையாமையை, கண்டும் - (பிரத்தியட்சமாகப்) பார்த்தும், நின்னை - நித்தியனுகிய தேவரீரை, போற்றிலேன் - வணங்கிலேன் ; அந்தோ ! - ஐயோ!, காலம் - பொழுதினை, வீணே - வீணுகவே, போக்கினேன் - கழித்தேன் ; ஆற்றிலேன் - (இனி) சகித்திலேன் ; அகண்ட ஆனந்தம் - அகண்ட சுகத்தை விளைவிக்கும், அண்ணலே ! - பெரியோனே !, சிறியனேன் - சிறியேன், அளவு இல் - அளவில்லாத, மாயை - மாயையாகிய, சேற்றிலே - அளற்றிலே, வீழ்ந்து - விழுந்து, இன்னம் - இன்னமும், திளைக்கவோ ? - துன்பத்தை யனுபவிக்கவோ ?, என்க.

(வி - ரை) ஒருநா ளிருந்தாரை யடுத்தநா ளிருக்கக் காண்பதில்லை யென்பார், 'நேற்றுளா ரின்றுமாளா நின்றனர்' என்றனர். திருக்குறள்: "நெருந லுள னொருவ னின்றில்லை யென்னும், பெருமை யுடைத்திவ் வுலகு." எனவும் ; பட்டினத்துச் சுவாமிகள்: "நேற்றிருந்தா ளின்று வெந்து நீறானாள் - பார்த்தெளிக்க, எல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல், எல்லாஞ் சிவமயமேயாம்." எனவும் வருவனவற்றுற் காண்க. (16)

போத மென்பதே விளக்கொவ்வும் ; அவித்தை பொய்யிருளாம் ;
தீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா
தாத லால், "அறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லை" யென் றெம்பிரான் சுருதியே யியம்பும்.

(இ - ள்) போதம் என்பதே - அறிவெனப்படுவதே, விளக்கு ஒவ்வும் - தீபத்தினை யொக்கும் ; அவித்தை - அஞ்ஞானமே, பொய் - பொய்யாகிய, இருள் ஆம் - இருளை யொக்கும் ; தீது இல்லா - குற்ற மில்லாத, விளக்கு எடுத்து - தீபத்தை யேந்திக்கொண்டு, இருள் தேடவும் - இருளைத் தேடினும், சிக்காது - கிடைக்காது ; ஆதலால் - ஆகையால், அறிவாய் நின்றவிடத்து - ஞானமயமாய் நின்றவிடத்தில், அறியாமை - அஞ்ஞானமானது, ஏதும் இல்லை என்று - சிறிது மில்லையென்று, எம்பிரான் - எம்மிறைவன் (வெளியிட்ட), சுருதியே - வேதங்களே, இயம்பும் - கூறாநிற்கும், என்க.

(வி - ரை) ஒளிக்கும் இருளுக்கு மிட மொன்றா யிருந்தும், ஒளி மேவிட்ட காலத்து இருள் நில்லாதது போல, ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் இடமொன்றா யிருந்தும், ஞான மேவிட்டகாலத்து அஞ்ஞான நில்லா தென்பார், 'போத மென்பதே விளக்கொவ்வும் ; அவித்தைபொய் யிருளாம் ; தீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா' என்றனர். கோடிக் கவி: "ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேவிடி லொன் றொளிக்கும்" என்றதனாற் காண்க. (17)

சுருதி யே! சிவா கமங்களே! உங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொரு ளளவையீ தென்னவா யுண்டோ?
பொருதி ரைக்கட னுண்மண லெண்ணினும், புகலக்
கருத வெட்டிடா நிறைபொரு ளளவையார் காண்பார்?

(இ-ள்) சுருதியே! - வேதங்களே!, சிவாகமங்களே! - சைவாகமங்களே!, உங்களால் சொல்லும் - உங்களால் பிரதிபாதிக்கப்படுகிற, ஒரு தனிபொருள் - ஒரு ஒப்பற்ற பொருளினுடைய, அளவை - அளவையானது, ஈது என்ன - இதுதானென்று துணிந்து சொல்ல, வாய் உண்டோ? - வாக்குளதோ?, பொரு திரை - மோதுகின்ற அலைகளையுடைய, கடல் - கடலிலுள்ள, நுண் மணல் - நுண்ணிய மணலை, எண்ணினும் - எண்ணித் தொகை செய்யினும், புகல - சொல்லவும், கருத - நினைக்கவும், எட்டிடா - எட்டாத, நிறை பொருள் - பரிபூரணப் பொருளின், அளவை - அளவை, யார் காண்பார்? - யாவர் காண வல்லவர்?, என்க.

(வி-ரை) வேதாகமங்கள் பொதுவும் சிறப்புமாய் விளங்கும் பிரபல சுருதிகளே யாயினும் அவை மாயா காரியமாகிய வைகரியாதி வாக்கின் பகுதியாக விருத்தலின், அவைகளால் 'முதல்வன் இத்தகையன்' எனக் கூறிச் சாற்றிடற்குக் கூடாதென்பது கருத்து. (18)

மின்னைப் போன்றன வகிலமென் றறிந்து,மெய்ப் பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொரு ளில்லையென் றோர்ந்து,
பொன்னைப் போன்றநின் போதங்கொண் டுன்பணி பொருந்தா
என்னைப் போன்றுள வேழைய ரைய! இங் கெவரே?

(இ-ள்) அகிலம் - உலகங்கள், மின்னலை போன்றன - (நிலையாமையின்) மின்னலை யொத்தன, என்று அறிந்து - என்று தேர்ந்து; மெய் பொருள் ஆம் - உண்மைப் பொருளாகிய, உன்னைப்போன்ற - தேவரீரை யொத்த, நல் பரம்பொருள் - நன்மையைத் தருகின்ற மேலான பொருள், இல்லை என்று - இல்லையென்று, ஓர்ந்து - ஆராய்ந்து; பொன்னை போன்ற - பொன்னைப்போலச் சிறந்த, நின் போதம் கொண்டு - தேவரீரருளிய ஞானத்தைக் கொண்டு, உன் பணி - தேவரீர் திருத்தொண்டை, பொருந்தா - பொருந்தாத, என்னை போன்று உள்ள - அடியேனை யொத்துள்ள, ஏழையர் - அறிவிலிகள், ஐய! - ஐயனே!, இங்கு எவர்? - இவ்வுலகத்தில் யாவர்?, என்க.

(வி-ரை) சிவபோகசாரம்: "எத்திசைபு மெவ்வுலகு மெத்தொழிலு மெப்பயனு, நித்திய மென்றென்று நினையாதே - புத்தியினூற், கண்ணாடி யிற்றோன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக், கண்ணாடியிற் கனவின் காண்." என்றதற் கேற்ப, 'மின்னைப் போன்றன வகிலம்' என்றனர். ஒருவரே ருத்திரர், இரண்டாவதாக ஒருவ ரிலரெனச் சுருதி

கூறலின், 'உன்னைப் போன்றநற் பரம்பொரு ளில்லை' என்றனர். அதர்வ சிரசு: 'ஏகோருத்ரோநத்வாதீய' என்றதனாற் காண்க. (19)

தாயுந் தந்தையு மெனக்குற வாவதுஞ் சாற்றின்,
ஆயு நீயுநின் னருளுநின் னடியரு மன்றோ?
பேய னேன்றிரு வடியிணைத் தாமரை பிடித்தேன்;
நாய னே! எனை யாளுடை முக்கணு யகனே!

(இ - ள்) தாயும் - அன்னையும், தந்தையும் - பிதாவும், எனக்கு - அடியேனுக்கு, உறவு ஆவதும் - சுற்றமாவதும், சாற்றின் - சொல்லுமிடத்து, ஆயும் - தக்கவர்களால் ஆராயப்படுகின்ற, நீயும் - தேவரீரும், நின் அருளும் - தேவரீருடைய திருவருளும், நின் அடியரும் - தேவரீ ரடியாரும், அன்றோ? - அல்லவோ?, பேயனேன் - பேயேனாகிய நான், திருவடி - உன் திருவடியாகிய, இணை தாமரை - இரண்டாகிய தாமரைகளை, பிடித்தேன் - பற்றினேன்; நாயனே - நாதனே!, என்னை - அடியேனை, ஆள் உடை - அடிமையாக வுடைய, முக்கண் நாயகனே! - மூன்று கண்களையுடைய தலைவனே!, என்க.

(வி - ரை) தாயும் - தந்தையும் - உறவும் முறையே, இறைவனும் - அருட் சத்தியும் - அடியாருமாகக் கொண்டனர். தேவாரம்: "அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனுமாமியுநீ, ஒப்புடைய மாதரு மொண் பொருளுநீ யுயர்குலம் சுற்றமு மோரூருநீ" என்றதனாற் காண்க. (20)

காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லும், அக்
 காந்தத் தொன்றா
தோய்ந்தவிட மெங்கேதா னங்கேதான் சலிப்பறவு
 மிருக்கு மாபோல்,
சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தாற்
 சலிக்குஞ் சித்தம்;
வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமை நின்றநிலை
 வாய்க்கு மன்றே.

(இ - ள்) காந்தமதை - காந்தத்தினை, எதிர் காணின் - முன்னிட்டுக் கண்டால், கருந்தாது - இரும்பானது, செல்லும் - அக் காந்தத்திற்கு முன் செல்லும்; அ காந்தத்து - அக் காந்தத்துடன், ஒன்றா - பொருந்தாமல், ஓய்ந்த இடம் எங்கே - ஒழிந்து நின்ற இடமெங்கே, அங்கே - அவ்விடத்தில், சலிப்பறவும் - அசைவில்லாமலும், இருக்குமாபோல் - இருக்குமாறு போல; சாந்த பதம் - சாந்த பதமாகிய, பரம்பொருளே - பர வஸ்துவே, பற்று பொருள் - பற்றுதற்குரிய விடயப்பொருள்கள், இருக்குமத்தால் - இருப்பதினாலே, சித்தம் - மனமானது, சலிக்கும் - அசைவுறும்; வாய்ந்த - எதிரீடாகப் பொருந்திய, பொருள் - விடயப்பொருள், இல்லை எனின் -

இல்லையானல், பேசாமை - மவுனமாக, நின்ற நிலை - நிலைபெற்ற நிலையானது, வாய்க்கும் - உண்டாகும், என்க.

(வி - ரை) அசைவற்றிருக்கும் இரும்பானது காந்தத்தினைக் கண்டமாத்திரத்தில் அசைவடைவதுபோல, சலனமற் றிருக்கவேண்டிய மனமானது பிரபஞ்சப் பொருள்களைக் கண்டமாத்திரத்தில் சலனமுறுகிற தென்பதாம். நின்ற நிலையாவது - மோட்ச நிலை. இதனல் மனம் சலனமுறுது லயப்படவேண்டுமெனவும், அந்த லயமே மோட்சமெனவுங் கண்டுகொள்க. திருமந்திரம்: "மன மாயை மாயைமாய மயக்கம், மனமாயை தாண்டமாயமற் றென்றுமில்லை, பினைமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம், தனையாய்த் திருப்பது தத்துவந்தானே." என்றதனற்காண்க. (21)

பொற்பு றுங்கருத் தேயக மாயதிற் பொருந்தக்,
கற்பின் மங்கைய ரென,விழி கதவுபோற் கவினச்,
சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி யிருந்தநான் சோர்ந்து
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொல்? நிமலா!

(இ - ள்) நிமலா! - மலமில்லாதவனே!, கற்பின்மங்கையர் என - கற்பினை வாய்ந்த மாதர்களைப்போல, பொற்பு உறும் - அழகினையுடைய, கருத்தே - கருத்து தானே, அகமாய் - வீடாக, அதில் பொருந்த - அதில் பொருந்தவும்; விழி - கண்கள், கதவுபோல் - கதவினைப்போல, கவின - அழகு செய்யவும்; சொற்பனத்தினும் - கனவிலும், சோர்வு இன்றி - தளர்ச்சி யில்லாமல், இருந்த நான் - வாழ்ந்த அடியேன், சோர்ந்து நிற்பதற்கு - வாடியிருப்பதற்கு, இந்த வினை - இக் கர்மம், வந்த ஆறு என்? - உண்டான வகை யாது?, என்க.

(வி - ரை) சதா நிஷ்டையோடு கூடியிருக்குமெனக்குப் பகிர்முகவாசனை ஒவ்வோரமயத்து வரவேண்டிய தென்னை யென்பது கருத்து. இதனல் தேக முள்ளளவும் பிராரத்துவ கன்ம முண்டாயிருத்தலினல், அது எதுவாக ஒரோவழி பழைய பூர்வவாசனை வந்து தாக்கு மென்பதாயிற்று. (22)

வந்தவா றிந்தவினை, வழியிது, எனமதிக்கத்
தந்தவா றுண்டோ? உள்ளுணர் விலை; அன்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவு மிலை; கற்ற நூலால்
எந்த வாறினித் தற்பரா! உய்குவே னேழை?

(இ - ள்) இந்த வினை - இப்பொழுதனுபவிப்பதற் கேதுவாயுள்ள கர்மம், வந்த ஆறு (இது) - வந்த வகைக்குக் காரணமிது, வழி இது - (அதை நீக்குவதற்கு) மார்க்கமிது, என மதிக்க - எனத் தேற, உள் உணர்வு - அக வுணர்ச்சி, தந்தவாறு உண்டோ? - தேவரீர் கொடுத்த துண்டோ?, இல்லை - இல்லை; அன்றி - அஃதல்லாமலும், தமியேன் -

அடியேன், நொந்தவாறு கண்டு - வாடியிருப்பதனை நோக்கி, இரங்கவும் இல்லை - இரங்கியருளவு மில்லை; தற்பரா - தற்பரனே!, ஏழை - அடியேன், கற்ற நூலால் - கற்றுக்கொண்ட நூலுணர்ச்சியால், எந்தவாறு - எந்த வகை, இனி உய்குவேன்? - இனி பிழைப்பேன்?, என்க.

(வி - ரை) முதல்வன் ஆன்மாக்களுக்குத் தன்மை முன்னிலை படர்க்கையாக நின்று அனுக்கிரகித்து வருவது சகஜமாகவிருந்தும் இவற்றி லோர் வகையானும் கிருபை செய்தாரில்லை யென்றனர். நூலுணர்ச்சி கற்றலுக்கும் பிரயோசன மில்லையாகலின், 'கற்ற நூலால், எந்த வாறினித் தற்பரா! உய்குவேன்?' என்றனர். (23)

சொல்லாலும், பொருளாலும், அளவை யாலும்
தொடரவொண்ணு வருணெறியைத் தொடர்ந்து நாடி
நல்லார்க ளவையகத்தே யிருக்க வைத்தாய்;
நன்னர்நெஞ்சந் தன்னலமு நணுகு வேனே?
இல்லாளியாயுலகோ டுயிரை யீன்றிட்(டு),
எண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்,
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே! பராபரமே! கயிலை வாழ்வே!

(இ - ள்) இல்லாளியாய் - குடும்பத்தனாய், உலகோடு - பிரபஞ்சத்துடன், உயிரை - ஆன்மாக்களை, ஈன்றிட்டு - தோன்றுவித்து; எண் அரிய - நினைத்தற் கருமையாகிய, யோகினுக்கு - யோக மார்க்கத்திற்கும், இவனே என்ன - இவனே சிறந்தவனென்று சொல்லும்படி, கல்லாலின் - கல்லால மரத்தின், கீழ் இருந்த - அடியி லெழுந்தருளியிருந்த, செக்கர் மேனி - செந்நிறமுள்ள, கற்பகமே! - கற்பக விருட்சமே!, பராபரமே! - பராபர வஸ்துவே!, கயிலை வாழ்வே! - கைலையில் வாழ்கின்றவனே!, சொல்லாலும் - வாக்காலும், பொருளாலும் - அருத்தத்தாலும், அளவையாலும் - அளவைகளாலும், தொடர ஒண்ணு - பற்றக்கூடாத, அருள் நெறியை - அருள் வழியை, தொடர்ந்து நாடி - பற்றி நாடி, நல்லார்கள் - அறிஞர்கள், அவையகத்தே - சபையிடத்தே, இருக்க வைத்தாய் - இருக்க வைத்தனை; நன்னர் - நல்ல, நெஞ்சம் தன் - மனத்தினது, நலமும் - பேற்றையும், நணுகுவேனே? - அடைவனே?, என்க.

(வி - ரை) உலகத்தின்கண்ணே போகம், யோகம் நடைபெற தானே போகியாயும், யோகியாயு மிருந்து காட்டினு னாகலின், 'இல்லாளியாயுலகோ டுயிரை யீன்றிட்(டு), எண்ணரிய யோகினுக்கு மிவனே யென்ன' என்றனர். சிவஞான சித்தியார்: "போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதலோரார், யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார், வேகியா னுற்போற் செய்த வினையினை யோட்ட லோரா, ருகிய

மூட ரெல்லா மும்பரி லொருவ னென்பர்.'' என்பதனுற் காண்க. சொல்லும், பொருளும், அளவையும் மாயாகாரிய மாகலின் அவற்ருல் முதல்வ னறியப்படா னென்பார், 'சொல்லாலும், பொருளாலும், அளவை யாலும் தொடரவொண்ணு' என்றனர். (24)

சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்,
சத்தாதி, வசனுதி வாயு பத்தும்,
நீக்கமிலந் தக்கரணம், புருட ளுேடு
நின்றமுப் பானைந்து (ம்): நிலவுங் கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்;
அடுத்தனசத் தாதிவச னுதி யாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட,
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே.

(இ - ள்) இந்திரியம் பத்தும் - மெய்யாதி இந்திரியங்கள் பத்தும், சத்தாதி (பத்தும்) - சத்தமாதி விடயங்கள் பத்தும்; வசனுதி (பத்தும்) - வசனுதி விடயங்கள் பத்தும்; வாயு பத்தும் - பிராணனுதி வாயுக்கள் பத்தும்; நீக்கம் இல் - நீங்குதலில்லாத, அந்தக்கரணம் - மனமாதி நான்கு கரணங்களும்; புருடனுேடு - ஆன்மாவுடனே, முப்பான் ஐந்து - முப்பத்தைந்தும், நுதலினில் (நின்ற) - இலாடத்தில் நின்ற அவஸ்தை, சாக்கிரம் ஆ - சாக்கிராவஸ்தை யாகவும்; நிலவும் - விளங்குகின்ற, கண்டத்து - கண்டத்தில், ஆக்கிய - உண்டாக்கப்பட்டிருக்கின்ற, சொப்பனம் அதனில் - சொப்பனுவத்தையில், வாயு பத்தும் - பத்து வாயுக்களும்; அடுத்தன - அடுத்திருப்பனவாகிய, சத்தாதி வசனுதி ஆக - சத்தாதி வசனுதி பத்து விஷயங்களாக, நோக்கு - பார்க்கப்படுகிற, கரணம் புருடனுடனே கூட - அந்தக்கரணங்கள் ஆன்மாவுட னிற்க, இருபத்தைந்து ஆ - இருபத்தைந்து தத்துவங்களாகவும், நுண்ணியோர் - நுண்ணறிவினை யுடையோர், நுவல்வர் - கூறுவர், என்க.

(வி - ரை) இந்திரியம் பத்தாவன - ஞானேந்திரியங்க ளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும்; கன்மேந்திரியங்களாகிய வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் ஆகிய ஐந்துமாம். சத்தாதி வசனுதி பத்தாவன - ஞானேந்திரிய விடயங்களாகிய சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்தும்; கன்மேந்திரிய விடயங்களாகிய வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் ஆகிய ஐந்துமாம். வாயு பத்தாவன - பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன. அந்தக்கரணம் நான்காவன - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. சிவஞான சித்தியார்: "சாக்கிரமுப் பத்தைந்து நுதலினிற் கனவு தன்னிலாக்கிய விருபத்தைந்து" என்றதனுற் கண்டு கொள்க.

றுதலிற் ரெடுங்கித் தாலு மூலத்தளவுஞ் சாக்கிரத்தான மாகையா னும், தைசத ஆங்காரத்திற்குத் தானம் சோத்திராதிகளுடைய தான மாகையானும், வைகரி ஆங்காரத்திற்குத் தான மூலதந் தோட்டங்களாகை யானும், ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் ஆங்காரங்களிலே தோன்றுகையானும், அவை சீவிக்குமிடத்து ஆகாயமிடமாகச் சீவிக்கை யானும், சாக்கிரத்திற்குக் கருவி முப்பத்தைந்தாயின.

கண்டந் தொடங்கி இதயமளவாகச் சொப்பனத்தான மாகையானும், அதிலே கண்டத்திற்குக் கீழ் இதயத்திற்கு மேல் பாதியளவாக மனதிற்குத் தானமாகையானும், மனம் வசன முதலாயினவற்றிற்கு உபாதான மாகை யானும், நின்ற பாதி தொடங்கி இதயத்தளவும் புத்திக்குத் தானமாகை யானும், புத்தியிலே பூதாதி யாங்காரம் தோன்றுகையானும், அந்த ஆங் காரம் சத்த முதலானவற்றிற்கும், வாயுக்க ளொன்பதிற்கும் உபாதானங்க ளாகையானும், இவை தாம் வாயுவிடமாகச் சீவிக்கையானும் சொப்பனத் தானத்திற்குக் கருவி யிருபத்தைந்தாயின. (25)

சுழுத்தியித யந்தனிற்பி ராணஞ், சித்தம்,
சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்;
வழுத்தியநா பியிற்றுரியம்; பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்;
அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியா தீதம்;
அதனிடையே புருடனொன் றி யமரு ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவ ரவத்தை யைந்திற்
பாங்குபெறக் கருவி நிற்கும் பரிசுதானே.

(இ-ள்) சுழுத்தி - சுழுத்தியவத்தைக் கிடமாகிய, இதயந்தன்னில் - இதயத்தானத்தில், பிராணன் - பிராணவாயு, சித்தம் - சித்தம், சொல் அரிய - சொல்லுதற் கரிதாகிய, புருடனுடன் - புருடனுடனே, மூன்றதாகும் - மூன்றாகும்; வழுத்திய - சொல்லப்பட்ட, நாபியில் - உந்தியில், துரியம் - துரியாவத்தை யுளது; பிராணனோடு - (அவ்விடத்தில்) பிராண வாயுவோடு, மன்னு - நிலைபெற்ற, புருடனும் - புருடனும், கூட - கூடவே, வயங்கா நிற்கும் - பிரகாசியாநிற்கும்; அழுத்திடும் - அழுத்துதற் குரிய, மூலந்தன்னில் - மூலத்தானத்தில், துரியாதீதம் - துரியாதீத அவத்தையாம்; அதனிடை - அதனிடத்தில், புருடன் - புருடனுடனே, ஒன்றி - பொருந்தி, அமரும் - அமர்ந்திருக்கும், அவத்தை ஐந்தில் - பஞ்சா வத்தைகளில், பாங்கு பெற - பாங்காக, கருவி நிற்கும் பரிசு - கருவி நிற்குந் தன்மையை, ஞானம் பழுத்திடும் - ஞான முதிர்ந்த, பக்குவர் - பக்குவிகள், அறிவார் - அறிவார்கள், என்க.

(வி-ரை) இதயந் தொடங்கி நாபிக்குமேல் சுழுத்தித் தானமாகை யானும், சித்தம் நினைவிற்கு உபாதான மாகையானும், நினைவெழுந்திருக்கு

மவதர மக்கினி யெழுப்பவேண்டு மாகையானும், அவ் வக்கினிக்குத் தானம் இதயமாகையானும், சுழுத்தி யவத்தைக்குக் கருவி மூன்றாயின.

நாபி துரியத்தான மாகையானும், நாபிக்குக் கீழ் பிராணவாயு இயங்கா தாகையானும், அப்புவை யொழித் தெழுந்திரா தாகையானும், அவ் அப்புவிற்குத் தானம் நாபி யாகையானும், துரியாவத்தைக்குக் கருவி யிரண்டாயின.

பிருதிவித் தானமாகிய மூலாதாரத்தே கருவி கரணாதிக ளொன்று மின்றி அவியக்தனாயிருக்கும் ஆன்மா எனவே அவியக்தன் ஒரு கருவி யாம். அதுவே புருட னெனலுமாம். (26)

'இடத்தைக் காத்திட்ட சுவாவெனப்' புன்புலா லிறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினேன், உன்னன்பர் தயங்கும்
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ,
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய்! நின்னருள் வேண்டும்.

(இ - ள்) இடத்தை - (எசமானன்) வீட்டினை, காத்திட்ட - காத் திருந்த, சுவா என - நாய்போல, புன் - புல்லிய, புலால் - புலால் நாற்றம் வீசுகின்ற, இறைச்சி - மாமிசத்தா லாக்கப்பட்ட, சடத்தை - தேகத்தினை, காத்திட்ட - காத்திருந்த, நாயினேன் - நாயேன்; உன் - தேவரீர், அன் பர் - அடியார்கள், தயங்கும் - சஞ்சரிக்கின்ற, மடத்தை - மடத்தினை, காத்து - காத்திருந்து, இட்ட - அவர்களிட்ட, சேடத்தால் - பரிகல சேஷத்தால், விசேடமாய் வாழ - பெருமையுடன் வாழ்தற்கு, விடத்தை - விஷத்தை, காத்திட்ட - தடுத்தருந்தின, கண்டத்தோய்! - திருமிடற்றை யுடையாய்!, நின் - தேவரீர், அருள் - கிருபை, வேண்டும் - அடியேனுக்கு வேண்டும், என்க.

(வி - ரை) இடத்தினைக் காத்தலே தனக்குரிய தொழிலெனக் கருதி வேறு பிரயோஜன மொன்று மடையாது வாளா வாழ்ந்து ஒழியும் நாயினைப்போல, உடலைப் புரத்தலே பயனெனக் கருதி, மேல் விசாரமின்றி யிருந்தேனென்பார், 'இடத்தைக் காத்திட்ட......நாயினேன்' என்றார். மடங்களி லெழுந்தருளி யிருப்போர் சர்வசங்க பரித்தியாக முற்றுச், சிவ வேடம் பூண்டு, ஞானசாஸ்திர பாரங்கதராய், உலோகோபகாரமாகச் சிவா லய பரிபாலகரான பெரியோராகலின், அத்தகையர் பரிகல சேடங் கிடைக்கின் விசேட மென்பார், 'மடத்தைக் காத்திட்ட......நின்னருள் வேண்டும்' என்றார். திருமந்திரம்: "பலியு மவியும் பரந்து புகையு, மொலி யுமெம் மீசன் றனக்கென்றே யுள்கிக், குவியுங் குருமடங் கண்டவர் தாம் போய்த், தளிரு மலரடிச் சார்ந்து நின்றாரே." என்றதனாற் காண்க. (27)

வாத னைப்பழக் கத்தினன் மன(ம்); அந்த மனத்தால்
ஓத வந்திடு முறை; உரைப் படிதொழி லுளவாம்;

ஏத மம்மன மாயையென் றிடிற், கண்டவெல்லாம்
ஆத ரஞ்செயாப் பொய்; அதற் கையமுண் டாமோ?

(இ - ள்) வாதனை பழக்கத்தினால் - (பிரபஞ்சமுகமாக விளையும் பிராரத்துவ) வாதனையின் பழக்கத்தால், மனம் - மனம் வெளிப்படும்; ஓத - சொல்லுமிடத்து, அந்த மனத்தால் - அந்த மனத்தினாலே, உரை வந்திடும் - சொல் விளையும்; உரைப்படி - அச் சொல்லின்படியே, தொழில் உள ஆம் - தொழில் உண்டாகும்; ஏதம் அ மனம் - வாதனையாற் சிக்கியுள்ள அம் மனமானது, மாயை என்றிடில் - மாயா காரியமெனக் கூறிடில், கண்ட எல்லாம் - பிரத்தியட்சமாகக் காணப்படுவன வெல்லாம், ஆதரம் செய்யா - விரும்பத்தகாத, பொய் - (காரிய ரூபத்தால்) மித்தையேயாம்; அதற்கு - அங்ஙனம் சொல்வதற்கு, ஐயம் உண்டாமோ? - சந்தேகம் உளதாமோ?, என்க.

(வி - ரை) மாயா காரியமாகிய மனத்தால் பற்றுதற் கேதுவாகிய பிரபஞ்ச மனைத்தும் காரியரூபமாகிய'பொய்யெனக் கூறினர். ஞானசாகர வெண்பா: "மன்னகர் மன்று மனைவாவிகூட பங்கழனி, யென்ன வந்தவர்க ளெல்லையிலை - யின்னமது, சொல்ல வருவாருந் தலைவரிய ரென்றறிந்து, நில்லதனை வேறாக நீ." என்றதனாற் காண்க. (28)

ஐய! வாதனைப் பழக்கமே மனநினை வதுதான்;
வைய மீதினிற் பரம்பரை யாதினு மருவும்;
மெய்யி னின்றொளிர் பெரியவர் சார்புற்று விளங்கிப்,
பொய்ய தென்பதை யொருவி,மெய் யுணருதல் போதம்.

(இ - ள்) ஐய! - ஐயனே!, மன நினைவது - மனத்தின் எண்ணங்கள், வாதனை பழக்கமே - பிராரத்வ வாதனையின் பழக்கத்தால் விளைவதேயாம்; வையம் மீதினில்-உலகத்தில், பரம்பரை-பாரம்பரியமாக, யாதினும்-எல்லாப் பொருள்களினும், மருவும்-பொருந்தும்; மெய்யில் - உண்மையில், நின்று - நிலைத்து, ஒளிர் - பிரகாசிக்கின்ற, பெரியவர் - பெரியோர்களுடைய, சார்பு உற்று - சார்பினையடைந்து, விளங்கி - விளங்கி, பொய்ய தென்பதை ஒருவி - பொய் யென்பதை நீங்கி, மெய் உணருதல் - யதார்த்தத்தை யறிதலே, போதம் - ஞானம் என்க.

(வி - ரை) அடியார் கூட்டுறவு ஒருவனுக்கு உண்டாகுமேல் வினையனைத்தும் நீங்கி ஞானோதய முண்டாவது சத்தியமாகலின், 'பெரியவர் சார்புற்று' என்றார். சிவஞானபோதம்: "மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்குஞ், சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை - யறப்பித்தும், பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு, மெய்த்தவரை மேவா வினை." என்றதனாற் காண்க. (29)

குலமி லான், குணங் குறியிலான், குறைவிலான், கொடிதாம்
புலமி லான், தனக் கென்னவோர் பற்றிலான், பொருந்தும்
இலமி லான்மைந்தர் மனைவியில் லான், எவன்? அவன்சஞ்
சலமி லான், முத்தி தரும்பர சிவனெனத் தகுமே.

(இ - ள்) குலம் இலான் - குலமில்லாதவனும்; குணம் (இலான்) - குணமில்லாதவனும்; குறி இலான் - (பெயராகிய) அடையாள மில்லாதவனும்; குறைவு இலான் - தாழ்வில்லாதவனும்; கொடிது ஆம் - கொடிதாகிய, புலம் இலான் - விடயப் பற்றில்லாதவனும்; தனக்கு என்ன - தனக்கென்று, ஓர் பற்று இல்லான் - ஒரு ஆதாரமில்லாதவனும்; பொருந்தும் - பொருந்துகின்ற, இல்லம் இலான் - வீடில்லாதவனும்; மைந்தர் மனைவி இல்லான் - புத்திரா களத்திரம் இல்லாதவனும், எவன்? - யாவன்?, அவன் - அவனே, சஞ்சலம் இலான் - சலன மற்றவனும்; முத்தி தரும் - மோட்சத்தினைத் தருதற்குரிய, பரசிவன் - பரமசிவனும் ஆவன், என தகும் - என்று சொல்லத்தகும், என்க.

(வி - ரை) அடியார்கட்கும் அமலனுக்கும் வித்தியாசமில்லை யென்பார், முதல்வ னிலக்கண மனைத்தையும் அடியார் மேலேற்றிக் கூறினர். இதனால் அடியாரைச் சிவனாகப் பாவிக்கவேண்டு மெனவும், பாவிக்கவே அம்முதல்வன் அடியாராக விருந்தருளுவ னென்பதாம். ஈண்டு அடியாரென்றது ஆசாரியரை; சிவஞானசித்தியார்: "பரப்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும் பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்று, மறன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று மருட்குருவை வழிபடவே யவனிவன்றா னாயே, யிரங்கியவா ரணம்யானை மீனண்டஞ் சினையை யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்திவைதா மாக்குமா போற் சிவமே யாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே." என்றதனாற் காண்க. (30)

கடத்தை மண்ணென வுடைந்தபோ தோ? இந்தக் கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோ தோ? சொலத் தருமம்;
விடத்தை நல்லமிர் தாவுண்டு, பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டி, எவ் வுயிரையு நடிப்பிக்கு நலத்தோய்!

(இ - ள்) விடத்தை - நஞ்சினை, நல் - நல்ல, அமிர்து ஆ - அமுதமாக, உண்டு - உட்கொண்டு; பொன் பொது - பொன்னம்பலமாகிய, வெளிக்கு - சிதாகாயத்தில், நடத்தை காட்டி - நடனஞ் செய்து, எவ்வுயிரையும் - ஆன்ம கோடிகளை யெல்லாம், நடிப்பிக்கும் - ஆட்டுகின்ற, நலத்தோய்! - நன்மை செய்பவனே!, கடத்தை - மட்குடத்தை, உடைந்தபோதோ - உடைந்த பொழுதிற்றானோ, மண் என (சொல தருமம்) - மண்ணென்று சொல்லத் தருமமாகும்?, இந்த - இந்த, கருமம் - வினை வயத்தான் வந்த, சடத்தை -

சரீரத்தினை, இறந்த போதோ? - இறந்தபொழுதிற்றானே, பொய் என சொல தருமம் - பொய் என்னச் சொல்லத் தருமமாகும்?, என்க.

(வி - ரை) "தானுடைத் தன்றசை யாடும்" என்ற முதுமொழிக் கேற்ப, முதல்வனுடை ஆன்ம கோடிக ளாடுமென்பார், 'ஈடத்தைக் காட்டி யெவ் வுயிரையு நடிப்பிக்கு நலத்தோய்!' என்றனர். திருமந்திரம்: "தேவர் சுரர்நரர் சித்தர்வித்தியாதரர், மூவர்க ளாதியின் முப்பத்து மூவர்கள், தாபதர் சத்தர் சமையஞ் சராசரம், யாவையு மாடிடு மெம்மிறை யாடவே" என்றதனாற் காண்க. கடமுடைந்த பின்னர் அதனை மண்ணெனக் கூறி னும், அது உடைவதற்கு முந்தியும் மண்ணே யாதல்போல, உடல் விழுந்த பின், அதனைப் பொய்யெனக் கூறினும், அது விழுதற்கு முந்தியும் பொய் யேயாம் என்றனர். (31)

நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாமல்
நடுவே சும்மா
தானமரு நிலையிதுவே சத்தியஞ்சத் தியமெனநீ
தமிய னேற்கு
மோனகுரு வாகியுங்கை காட்டினையே! திரும்பவுநான்
முளைத்துத் தோன்றி,
மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே, பரந்தேனே,
வஞ்ச னேனே.

(இ - ள்) நான் எனவும் - நானென்றும், நீ எனவும் - நீ யென்றும், இருதன்மை நாடாமல் - இருவகையாகப் பிரித்துணராமல், நடுவே - இடை யாக, சும்மாதான் - மவுனமாய், அமரும் - இருக்கின்ற, நிலை இதுவே - நிலையாகிய இதுவே, சத்தியம் சத்தியம் என - உண்மை உண்மை என்று, நீ - தேவரீர், தமியனேற்கு - தமியேனுக்கு, மோனகுரு ஆகியும் - மவுன குருவாகியும், கை காட்டினையே - வந்து கையமைத்துக் காட்டினையே; (அவ்வாறு காட்டியும்) திரும்பவும் - மறுபடியும், நான் முளைத்து தோன்றி - நான் வெளிவந்து, மானத மார்க்கம் - மனம்போன வழியே, புரிந்து - செய்து, இங்கு - இவ்விடத்து, அலைந்தேனே - திரிந்தேனே, பரந் தேனே - பரவினனே, வஞ்சனேன் - பாவியே னுதலினால், என்க.

(வி - ரை) முன்னிலையிலும் தன்மையிலும் முனைப்புத் தோன்றாது நடு நிலையாகிய சமநிலையே சும்மாவிருக்கும் நிலையெனக் கூறினுயாயினும், பிரா ரத்துவ கன்மத்தால் தன்மையில் சுதந்திரம் பாராட்டி முனைப்புண்டாய தென்றனர். ஒழிவிலொடுக்கம்: "கிரியைக் கிளைத்துவந்து கேட்டவர்க் குச் சும்மா, திரியச் சுகம்விளைத்த சீமான். குருவன்றிச், சற்றே பதைப்பத் தரினுஞ் சகம் படைக்கக், கற்றானுங் காலனுமாங் காண்." என்றதனாற் காண்க. (32)

தன்மயம், சுபாவம், சுத்தம், தண்ணருள் வடிவம், சாந்தம்
மின்மய மான வண்ட வெளியுரு வான பூர்த்தி,
என்மய மெனக்குக் காட்டா தென்னையப கரிக்கவந்த
சின்மய மகண்டா காரந் தக்ஷிணா திக்க மூர்த்தம்.

(இ - ள்) தக்ஷிணாதிக்க மூர்த்தம் - தட்சிணாமூர்த்தமானது, தன் மயம் - தன்மயமும், சுபாவம் - சுபாவமும், சுத்தம் - சுத்தமும், தண் அருள் வடிவம் - குளிர்ந்த அருளுருவமும், சாந்தம் - சாந்தமும், மின் மய மான - மின்னுருவமான, அண்ட வெளி - அண்ட வெளியில், உருவான - உருவாகின்ற, பூர்த்தி - நிறைவும்; என் மயம் - என் உருவத்தினை, எனக்குக் காட்டாது - எனக்குத் தோன்றாதபடி, என்னை - என்னை, அபகரிக்க வந்த - விழுங்க வந்த, சின்மயம் - ஞானரூபமும், அகண்டாகாரம் - அகண்டாகாரமும் ஆம், என்க.

(வி - ரை) எல்லாப் பொருளும் முதல்வன் வியாபகத் தடங்கலின் 'தன்மயம்' என்றும், சுயம்புவா யிருத்தலின் 'சுபாவம்' என்றும், அமல னாதலின் 'சுத்தம்' என்றும், கருணாகர னாதலின் 'தண்ணருள் வடிவம்' என்றும், அனுக்கிரக மூர்த்தியாதலின் 'சாந்தம்' என்றும், சிதாகாயனாத லின் 'வெளியுருவான பூர்த்தி' என்றும், அடியாரை யவனாக்கிக்கொள்பவ னாதலின் 'அபகரிக்கவந்த சின்மயம்' என்றும், அளவிடப்படா னாதலின் 'அகண்டாகாரம்' எனவும் கூறினர். (33)

சிற்ற ரும்பன சிற்றறி வாளனே தெளிந்தால்,
மற்ற ரும்பென மலரெனப் பேரறி வாகிக்,
கற்ற ரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்ற ரும்பிய மௌனியாய்ப் பரத்திடை முளைப்பான்.

(இ - ள்) சிற்றரும்பு அன்ன - சிறிய மலரின் அரும்பினை யொத்த, சிற்றறிவாளனே - சிறிய அறிவினை யுடையவனே, தெளிந்தால் - தெளி வான அறிவினை ஆசாரியமூர்த்தியால் அடைந்தால்; மற்று அரும்பு என - முன்னரும்பினும் வேறுபட்ட பெரிய அரும்பினைப்போலவும், மலர் என—, பேர் அறிவு ஆகி - விசாலமான அறிவினை புடையவனாகி; கற்று - கற்க வேண்டிய நூல்களைக்கற்று, அரும்பிய கேள்வியால் - உண்டாகிய கேள் வியினாலே, மதித்திட - யாவரும் மதிக்கும்படி, கதி சீர் முற்று அரும்பிய - நற்கதிக்குரிய சிறந்த குணங்களெல்லாம் அடைந்து, மௌனி ஆய் - மவுன நிலையை யுடையவனாகி, பரத்திடை - மோட்ச நிலத்தில், முளைப்பான் - போய்ச் சேருவன், என்க.

(வி - ரை) அவத்தையுடன் கூடிய பெத்தனொருவனே, ஞான நூல் களி னாராய்ச்சியாலும், ஆசாரிய மூர்த்தியின் அனுக்கிரகத்தாலும், நாளுக்கு நாள் பக்குவ மடைந்து, சிவத்துடன் கூடிய பெத்தனாக விளங்கி வாழ்வ

னென்பது கருத்து. உபதேச மாலை: "பார்த்தான் பரிசித்தான் பாவியேன் சென்னிமிசைச், சேர்த்தான் றிருவடியைச் சிந்தித்தா னேனைத் துரைத்தா, னஞ்சு கலையு மடைவி னறுத்தொழித்தா, னென்செய்தே னென்றுரைக்கே னியான்." என்றதனாற் காண்க. (34)

மயக்கு சிந்தனை தெளிவென விருநெறி வகுப்பால்
நயக்கு மொன்றன்பா லொன்றிலை யெனனல வழக்கே;
இயக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற லினிதாம்;
பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்கெய்தல் பண்போ?

(இ - ள்) மயக்கு சிந்தனை (என) - மயக்கப்பட்ட மனமெனவும், தெளிவு என - தெளிந்த மனமெனவும், இரு நெறி - இரண்டு மார்க்கத்தின், வகுப்பால் - பிரிவினால், நயக்கும் - விரும்பப்பட்ட, ஒன்றன்பால் - ஒரு வகையினிடத்து, ஒன்று இல்லை எனல்-ஒன்று இல்லையென்று சொல்லுதல், நல்ல வழக்கே - நல்ல வழக்கமேயாம்; இயக்கம் உற்றிடும்-சஞ்சரிக்கின்ற, மயக்கத்தின் - மயக்கத்தினும், தெளிவுறல் - தெளிவடைதல், இனிது ஆம் - இனிதாகும்; பயக்க வல்லது - பயன்படுதல் வல்லதாகிய, ஓர் - ஒப்பற்ற, தெளிவுடையவர்க்கு - தெளிவினை யுடையவர்க்கு, எய்தல் - மயக்கம் வந்து பொருந்துதல், பண்போ? - குணமோ?, என்க.

(வி - ரை) பற்றுந் தருமத்தினையுடைய மனமானது எதனை நாடுமோ அதன் வயத்ததாதல் சகச மாகலின், மயக்கத்தின் வழி மயங்கிய மனமாகவும், அறிவின் வழி தெளிந்த மனமாகவு மிருத்தலான், தெளிவுடையா ரிடத்து அதற்கு நேர் விரோதப் பொருளாகிய மயக்க முண்டாதல் பொருத்தமன் றென்பதாம். (35)

அருள்வடி வேழு மூர்த்தம்;
அவைகள்சோ பான மென்றே
சுருதிசொல் லியவாற் றாலே
தொழுந்தெய்வ மெல்லா மொன்றே;
மருளெனக் கில்லை முன்பின்
வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னிலையா முன்னைச்
சேர்ந்தியான் றெளிகின் றேனே.

(இ - ள்) அருள் வடிவு - தேவரீர் அரு ளுருவமானது, ஏழு மூர்த்தம் - ஏழுருவங்களாகும்; அவைகள்-அந்த மூர்த்தங்கள், சோபானம் என்று - தேவரீரை யடைவதற்குப் படிகளென்ன, சுருதி - வேதம், சொல்லிய - கட்டளையிட்ட, ஆற்றாலே - தன்மையினாலே, தொழும் தெய்வம் - எல்லாச் சமயத்தாராலுந் தொழப்படுகின்ற கடவுள், ஒன்றே - ஒன்றே யாகும்; முன் பின் வருநெறிக்கு - முன்னும் பின்னும் வந்ததும் போவதுமாகிய வழிக்கு, எனக்குமருள் இல்லை - அடியேனுக்கு மயக்க

யில்லை; தெருளின் - தெளிவாக, முன்னிலை ஆம் உன்னை - பிரத்தியட்ச மாக விளங்குந் தேவரீரை, சேர்ந்து - அடைந்து, இ வழக்கு - இந்த வழக் கினை, யான் தெளிகின்றேன் - நான் தெளியாநின்றேன், என்க.

(வி - ரை) சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் ஆகிய எழுருவங்களும் முதல்வனை யடைதற் கேதுவாயுள்ளனவா யிருத்தலின், 'அருள்வடி வேழு மூர்த்த மவைகள் சோபானம்' என்றனர். இவ் வடிவங்களை யதிட்டித்துக் கிருபை செய்பவன் அம்முதல்வனேயாகவே யிருத்தலின், 'தொழுந் தெய்வ மெல்லா மொன்றே' என்றனர். காளத்தி யந்தாதி: "இவரே முதற்றேவ ரெல்லார்க்கு மிக்கா, ரிவரல்ல வென் றிருக்க வேண்டாங்—கவராதே, காதலித்தொன் றேத்துதிரேற் காளத்தி யாள்வார்நீ, ராதரித்த தெய்வமே யாம்" என்றதனாற் காண்க. (36)

எத்தனைப் பிறப்போ? எத்தனை யிறப்போ?
எளியனேற் கிதுவரை யமைத்த(து);
அத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை;
அறிவிலி யறிகிலேன்; அந்தோ!
சித்தமும் வாக்குந் தேகமு நினவே;
சென்மமு மினியென லாற்றா;
வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா!
மறைமுடி யிருந்தவான் பொருளே!

(இ - ள்) எளியனேற்கு - எளியனுக்கு, இதுவரை - இச் சென்ம வரையில், அமைத்தது-அமைக்கப்பெற்றது, எத்தனை பிறப்போ? - எத்த னைச் சென்மமோ?, எத்தனை இறப்போ? - எத்தனை மரணமோ?, அத்தனை - அவ்வளவையும், எல்லாம் அறிந்த நீ - சர்வஞ்ஞனை தேவரீர், அறிவை - அறிவாய்; அறிவிலி - அறிவில்லாதவனாகிய நான், அறிகிலேன்- அறியு மாற்றலிலேன்; அந்தோ! - ஐயோ!, சித்தமும்-மனமும், வாக்கும்- வாக்கும், தேகமும் - காயமும், நினவே-உன்னுடையனவே; சென்மமும்- பிறப்பும், இனி என்னல் ஆற்றா - இனி என்னால் சகிக்க முடியாது, (ஆதலால்) இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, நின் - தேவரீர், அடி குடி ஆ - அடிமைக் குடியாக, வைத்திடு - வைத்தருளுவாய்!, மறை முடி இருந்த - வேதத்தின் சிரசில் தங்கியிருந்த, வான் பொருளே! - மேலான வஸ்துவே!, என்க.

(வி - ரை) ஒவ்வொரு ஆன்மாவும் எடுத்த பிறப்பினுக்கும் இறப்பி னுக்கும் எண்ணிக்கை யில்லையாகலின், 'எத்தனை பிறப்போ? எத்தனை யிறப்போ? எளியனேற்கு' என்றனர். இனிச் சனன மரணங்களிற் பட முடியா தென்பார், 'இனியென லாற்றா' என்றனர். பட்டினத்துச் சுவாமி கள்: "நெடுநா, ளிறந்தும் பிறந்து மிளைத்தனம்" எனவும், "யானினிப் பிறத்த லாற்றேன்" எனவும் வருவனவற்று லுணர்க. (37)

வான்பொரு ளாகி யெங்குநீ யிருப்ப,
வந்தெனைக் கொடுத்துநீ யாகா
தேன்பொருள் போலக் கிடக்கின்றேன்? முன்னை
யிருவினை வாதனை யன்றோ?
தீன்பொரு ளான வமிர்தமே! நின்னைச்
சிந்தையிற் பாவனை செய்யும்
நான்பொரு ளானே னல்லனல் லரசே!
நானிறந் திறப்பது நாட்டம்.

(இ - ள்) வான் - மேலான, பொருள் ஆகி - பொருள் ஆகி, எங்கும் - எவ்விடத்தும், நீ இருப்ப - தேவரீர் இருக்கச் செய்தே, வந்து - தேவரீரை யடுத்து, என்னை - அடியேனை, கொடுத்து - உனக்குக் கொடுத்து, நீ ஆகாது - நீயாய்விடாமல், பொருள்போல - சடப்பொருள் போல, என் கிடக்கின்றேன்? - ஏனோ கிடவாநின்றேன்?, (இதற்குக் காரணம்) முன்னை - முன் சென்மத்திற் செய்த, இரு வினை - இரு வினைகளின், வாதனை அன்றோ? - வாதனையல்லவோ?' தீன் பொருள் ஆன - பருகுதற்குரிய பொருளாகிய, அமிர்தமே! - அமுதமே!, நின்னை - தேவரீரை, சிந்தையில் - மனத்தில், பாவனை செய்யும் - பாவனை பண்ணுகின்ற, நான் - அடியேன், பொருள் ஆனேன் - ஒரு பொருட்டன்மையாயினேன், நல்ல நல் - மிகவும் நல்ல, அரசே! - அரசே!, நான் இறந்திருப்பது - நான் சுதந்திர மிழந்திருப்பது, நாட்டம் - என்னால் விரும்பப்படுவது, என்க.

(வி - ரை) ஆன்மாச் சித்துப்பொருளாயினும், தன் சுதந்திர மிழந்து முதல்வனை அடையாதவரையில் சடப்பொருளுக்குச் சமானமெனவும், அம் முதல்வனைப் பாவனை செயின் ஒரு பொருளாக மதிக்கத் தகுந்த சித்துப்பொருளா மெனவும், இங்ஙன மாகாததற்குத் தடையாயிருப்பது பிராரத்துவ வினையே யெனவும், தான் எந்நாளும் சுதந்திர மிழந்திருப்பதற்கே பிரியம் வைத்துள்ளா ரெனவுங் கூறினர். (38)

நாட்டமூன் றுடைய செந்திற மணியே!
நடுவுறு நாயக விளக்கே!
கோட்டமில் குணத்தோர்க் கௌியநிர்க் குணமே!
கோதிலா வமிர்தமே நின்னை
வாட்டமி னெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து
வாய்மடுத் தருந்தினன்; ஆங்கே,
'பாட்டளி நறவ முண்டயர்ந் ததுபோற்'
பற்றயர்ந் திருப்பதெந் நாளோ?

(இ - ள்) நாட்டம் - நேத்திரங்கள், மூன்று உடைய - மூன்றாக வாய்ந்த, செந்திற மணியே! - செந்திறமுள்ள மாணிக்கமே!, நடுவுறு -

எல்லாப்பொருள்களுக்கும் நடுவாக, நாயக விளக்கே! - தலைமை வாய்ந்த தீபமே!, கோட்டம் இல் - குற்றமற்ற, குணத்தோர்க்கு - நற்குணத்தினை வாய்ந்தவர்கட்கு, எளிய - எளியனாகத் தோன்றுகின்ற, நிர்க்குணமே - நிர்க்குண வஸ்துவே!, கோதுஇல்லா - குற்றமில்லாத, அமிர்தமே! - அமுதமே, நின்னை - தேவரீரை, வாட்டம் இல் - வாடுதலில்லாத, நெஞ்சம் - மனம், கிண்ணம் ஆ சேர்த்து - கிண்ணமாகப் பொருந்தி, வாய் மடுத்து - வாய் வைத்து, அருந்தினன் - பருகினன்; ஆங்கே - அவ்வாறே, பாட்டு அளி - இசை பாடுகின்ற வண்டுகள், நறவம் உண்டு - தேனுண்டு, அயர்ந்தது போல் - அயர்ந்தாற்போல், பற்று அயர்ந்து இருப்பது - பற்றுதலற்று இருப்பது, எந்நாளோ?—, என்க.

(வி - ரை) அறிஞர்கட்கு நலமாவது, குணங்களாலாய நலமே நலமெனவும், அவை தொழிந்த உறுப்புக்களாலாய நலம் ஒருநலத்தினுமுள்ள தன்றாகலின், 'கோட்டமில்குணத்தார்' என்றனர். திருக்குறள்: "குணநலஞ் சான்றோர் நலனேபிறநல, மெந்நலத்துள்ளதூஉ மன்று." என்றதனாற் காண்க. அத்தகைய நற்குணம் வாய்ந்தவரிடத்திலேயே முதல்வன் விளங்குவனாதலின், 'குணத்தோர்க் கெளியநிர்க் குணமே' என்றனர். 'நிர்க்குணன்' என்றதனால் யாதொரு குணமில்லாதவனன்று. ஆன்மாக்கட்குள்ள மூவகைப்பட்ட விபரீத குணங்கள் போலாது, அருட்குணமுடையன் என்பதாம். (39)

என்னுடை யுயிரே! என்னுளத் தறிவே!
 என்னுடை யன்பெனு நெறியாய்!
கன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
 கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய வுறவே! உன்னைநான் பிரியா
 வண்ணமென் மனமெனுங் கருவி
தன்னது வழியற் றென்னுழை கிடப்பத்
 தண்ணருள் வரமது வேண்டும்.

(இ - ள்) என்னுடை உயிரே! - எனது உயிரே!, என் உள்ளத்து - என் மனத்தினுளதாகிய, அறிவே! - உணர்வே!, என்னுடை அன்பு எனும் - எனது அன்பென்கிற, நெறியாய்! - நெறியை யுடையவனே!, கன்னல் - கருப்பஞ்சாறும், முக்கனி - முப்பழங்களும், தேன் - தேனும், கண்டும் - கற்கண்டும், அமிர்தும் - அமிர்தமும், என்ன - போல, என்னை - அடியேனை, கலந்து மேவிட - கூடிவாழ, கருணை மன்னிய - கிருபை நிலை பெற்ற, உறவே! - உறவே!, உன்னை - தேவரீரை, நான் - அடியேன், பிரியாவண்ணம் - பிரியாவகை, என் - எனது, மனம் என்னும் - மனமென்று சொல்லப்படுகின்ற, கருவி - சாதனமானது, தன்னதுவழி - தன்னெறியை, அற்று - விட்டு, என்னுழை - என்னிடத்து, கிடப்ப - தங்க,

தண் அருள் - தண்ணிய தேவரீரது அருள், வரமது வேண்டும் - வரம் எனக்கு வேண்டும், என்க.

(வி - ரை) மனமானது பிரபஞ்சமுகமாய்ச் சதா இருந்துகொண்டு தன் வயத்து நில்லாமையால் முதல்வனுடன் கூடி வாழுந் தன்மை யுண்டாகவில்லை யெனவும், அம் மனமானது அந்தர்முகமாய் நின்று ஒரு வழிப் படின் முதல்வன் கலப்புண்டாதற் றடையில்லை யெனவும் ஏற்படுதலின், மனத்தினை வயப்படுத்த வேண்டு மென்பார், 'மனம்........என்னுழை கிடப்பத், தண்ணருள் வரமது வேண்டும்' என்றார். இச்சித்த பொருளை யடைதற் கேதுவான முக்கிய சாதனமானது ஒவ்வொருவருக்கும் மனமே யாகலின், 'மனமெனுங் கருவி' என்றார். (40)

---

## எனக்கெனச் செயல்

### கலிநிலைத்துறை.

எனக்கெ னச்செயல் வேறிலை; யாவுமிங் கொருநின்
தனக்கெ னத்தகும்; உடல்பொரு ளாவியுந் தந்தேன்;
மனத்த கத்துள வழுக்கெலா மாற்றி,எம் பிரானீ
நினைத்த தெப்படி யப்படி யருளுத னீதம்.

(இ - ள்) எனக்கு என - என்றனக்கென்ன, வேறு செயல் இல்லை - அன்னியமாக வொரு செய்கை யில்லை; யாவும் - எல்லாம், இங்கு - இவ் விடத்தில், ஒரு - ஒப்பற்ற, நின் தனக்கு - தேவரீருக்கே, என தகும் - உரியனவெனச் சொல்லத்தகும்; (ஆகையால்) உடல் - (அடியேன்) உடலினையும், பொருள் - பொருளினையும், ஆவியும் - உயிரினையும், தந்தேன் - தேவரீருக்குக் கொடுத்தேன்; மனத்து அகத்து உள்ள - அடியேன் மனத்தின்கண்ணுள்ள, அழுக்கு எல்லாம் - களங்க மனைத்தினையும், மாற்றி - நீக்கி, எம்பிரான் - எமது பெருமானே!, நீ - தேவரீர், நினைத்தது - கருதினது, எப்படி - எவ்வாறோ, அப்படி - அவ்வாறே, அருளுதல் - கிருபை செய்தல், நீதம் - நீதியாகும், என்க.

(வி - ரை) ஆன்மா சுதந்திர வீனனாகலின், 'எனக்கெனச் செயல் வேறிலை' என்றனர். பட்டினத்துச் சுவாமிகள்: "என்செய லாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே, யுன்செய லேயென் றுணரப்பெற் றேன்." எனவும், சிவஞான சித்தியார்: "நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று, நினைப்பார்க்கு வினைகளெல்லா நீங்குந்தானே." எனவும் வருவனவற்றாற் காண்க. (1)

உளவ றிந்தெலா நின்செய லாமென வுணர்ந்தோர்
களவி லானந்த மளித்தனை; அறிவிலாப் புன்மைக்

களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை ; கருத்துத்
தளருந் தன்மையிங் காரொடு புகலுவேன்? தக்கோய்!

(இ - ள்) உளவு அறிந்து - (ஞான சாத்திரங்களின்) இருதயந் தேர்ந்து, எலாம் நின் செயல் ஆம் என - எல்லாம் உன்செயலேயென, உணர்ந்தோர்க்கு-அறிந்தவர்கட்கு; அளவு இல் - அளவில்லாத, ஆனந்தம்-இன்பத்தினை, அளித்தனை-கொடுத்தனை; அறிவு இல்லா-அறிவற்ற, புன்மை-அற்பத்தன்மையும், களவு - திருட்டுத்தனமுமுள்ள, நாயினேற்கு - நாயேனுக்கு, இவ்வண்ணம் - இவ்வாறு, அமைத்தனை - அமைத்தாய்; கருத்து - மனமானது, தளரும் தன்மை - தளர்ச்சியடையுந் தன்மையை, தக்கோய்! - தகுதி யுடையோனே! இங்கு - இவ்விடத்து, ஆரொடு புகலுவேன்? - ஆரோடு சொல்லுவேன்?, என்க.

(வி - ரை) 'உளவறிந்து' என்றது, ஆன்மா முதல்வனை யடைதற் கேதுவாயுள்ள உண்மைகளை நன்கு விளக்குவதாகிய ஞானசாத்திரங்களைத் தெரிந்து கொள்ளுதலாம். 'எலா நின்செய லாமென வுணர்ந்தோர்க், களவி லானந்த மளித்தனை' எனவறிந்து சகல சுதந்திரங்களையு முடைய முதல்வனை யடுக்க, முதல்வன் அவனைத் தன் வயமாக்கிக் காப்பாற்றவே யானந்தத்திற் குள்ளாவ னென்பதாம். சிவஞான சித்தியார்: "சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத் தானாக்கித் தலைவனவர் தாஞ்செய் வினை தன்னை, னலமுடனே பிறர் செய்வினை யூட்டியொழிப் பானாய் நணுகா மல் வினையவரை நாடிக் காப்பன்." என்றதனாற் காண்க. (2)

என்னைத் தானின்ன வண்ணமென் றறிகிலா வேழை,
தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய்!
பின்னைத் தானின்ற னருள்பெற்ற மாதவப் பெரியோர்
நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்.

(இ - ள்) என்னை - அடியேனை, இன்ன வண்ணம் என்று - இன்ன தன்மையை யுடையனென்று, அறிகிலா - அறிந்துகொள்ளக்கூடாத, ஏழை - எளியேன்; தன்னைத்தான் அறிந்திட - தன்னைத்தான் தெரிந்து கொள்ளுமாறு அருள் புரிதியேல் - அருள் செய்வையாயின்; தக்கோய்! - தகுதியான தன்மையை யுடையோனே!, பின்னை - பிறகு, நின்றன் - தேவரீரது, அருள் பெற்ற - கிருபை பெற்ற, மா தவம் - மகத்தாகிய விரதாதி தவங்களை முடித்த, பெரியோர் - அறிஞர்கள், நெறியால் - முறையால், நின்னை - தேவரீரை, நிகர் - நிகர்வார், ஆர் என - யாவரென்று, வாழ்த்துவர் - புகழ்வார்கள், என்க.

(வி - ரை) "அறிவித்தா லன்றி யறியா வுளங்கள்" என்றதற் கேற்ப, முதல்வன் தெரிவித்தா லல்லாமல் தன்னைத் தானே யறிந்துகொள் ளுந் தன்மை ஆன்மாவிற் கின்மையின், 'என்னைத் தானின்ன வண்ண

மென் றறிகிலா வேழை' என்றனர். 'பெரியோர், நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்' என்றதனால், அறிவிலாச் சிறியர் முதல்வ னுக்குச் சமத்துவமாக வேறு தெய்வங் கூறுவ ரென்பதாம். அருணைக் கலம்பகம்: "ஓதருணை வித்தகரை மூவரிலொ ருத்தனென வோதியிடு மற்ப மதியீர்" என்றதனாற் காண்க. (3)

ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புதா னீட்டும்
காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்
போத! நித்திய! புண்ணிய! எண்ணரும் புவன
நாத! தற்பர! நானெவ்வா றுய்குவேன்? நவிலாய்!

(இ - ள்) ஏதம் - குற்றம், இன்றி - இல்லாமல், தன் - தேவரீர், அடி இணைக்கு - இரு திருவடிகட்கு, அன்பு - அன்பினை, ஈட்டும் - செய்கின்ற, காதல் - ஆசையினை வாய்ந்த, அன்பர்க்கு - அன்பர்கட்கு, கதி நிலை - முத்தி நிலையானது, ஈது என காட்டும் - இதுவென்று காட்டுகின்ற, போத! - அறிஞனே!, நித்திய! - சாசுவதனே!, புண்ணிய! - புண்ணிய வானே!, எண் அரு - எண்ணுதற் கருமையாகிய, புவனம் - புவனங்கட்கு, நாத! - இறைவனே!, தற்பர! - தற்பரனே!, நான்-அடியேன், எவ்வாறு - எவ்விதம், உய்குவேன்? - பிழைப்பேன்?, நவிலாய்! - சொல்வாய்!, என்க.

(வி - ரை) தன்பா லன்புடையார்க்கே முதல்வன் கருணை செய்வா னென்பார், 'அன்பு தானீட்டும், காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும் போத!' என்றனர். திருமந்திரம்: "அன்புறு சிந்தையின் மேலெழு மவ்வொளி, யின்புறு கண்ணியொ டேற விசைந்தன, துன்புறு கண்ணி யைந் தாடுந் துடக்கற்று, நண்புறு சிந்தையை நாடுமி னீரே." என்றதனாற் காண்க. (4)

வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத! நித்திய! பரம்பர! நிரந்தர! பரம!
நாத! தற்பர! சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத! நிர்க்குண! நினையன்றி யொன்றுநா னினையேன்.

(இ - ள்) வேதம் - வேதமென்பது, எத்தனை - எத்தனை, அத்தனை- அத்தனை, சிரத்தினும் - வேதங்களின் முடிகளிலும், விளங்கும் - பிரகாசியா னின்ற, பாத! - திருவடிகளை யுடையவனே!, நித்திய! - நித்திய மான வனே!, பரம்பர! - பரம்பரனே!, நிரந்தர! - சாசுவத மானவனே!, பரம! - மேலானவனே!, நாதா! - நாயகனே!, தற்பர! - தற்பரனே!, சிற்பர வடிவமாய்-ஞானவடிவாகி, நடிக்கும் - நடிக்கின்ற, நீத! - நீதியுடைய வனே!, நிர்க்குண! - நிர்க்குணனே!, நின்னை அன்றி - தேவரீரையல்லது, ஒன்றும் - வேறொன்றையும், நான் - அடியேன், நினையேன் - கருதேன் என்க

(வி - ரை) அநேக வேதங்களினாலே நான் அறியப்பட்டேன், வேதாந்தஞ் செய்தவனு நான், வேதத்தை அறிந்தவனு நான் என்னுங் கருத்தினை, கைவல்யோபநிடதம் : "வேதைரநேகைரஹமேவவேத்யோ வேதாந்தக்ருத்வேத விதேவசாஹம்." என்றதனால், 'வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும், பாத!' என்றனர். (5)

நெறிக டாம்பல பலவுமாய், அந்தந்த நெறிக்காம்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்,
அறியுந் தன்மையிங் காருனை? அறிவினா லறிந்தோர்
பிறியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய்!

(இ - ள்) நெறிகள்தாம் - மார்க்கங்கள், பல பலவும் ஆய் - அநேகமாய்; அந்த அந்த நெறிக்கு ஆம் - அந்தந்த மார்க்கங்களுக்கு இணங்கிய, செறியும் தெய்வமும் - பொருந்திய தெய்வங்களும், பல பல ஆகவும் - அநேகமாகவும், செறிந்தால் - (தேவரீர்) நிறைந்திருப்பின், இங்கு - இவ் வுலகில், உன்னை - தேவரீரை, அறியும் - தெரிந்துகொள்ளும், தன்மை - விதத்தினர், ஆர்? - யார்?, அறிவினால் - விவேகத்தினால், அறிந்தோர் - (தேவரீரைத்) தெரிந்தோர், பிரியும் தன்மை - நீங்கும் வகை, இல்லா வகை - இல்லாதபடி, கலக்கின்ற - அவர்கள் பால் வெளிப்படுகின்ற, பெரியோய்! - பெரியோனே!, என்க.

(வி - ரை) உலகின்கண்ணே சமயங்கள் பலவும், அச் சமயங்களாற் பிரதி பாதிக்கப்படுகின்ற தெய்வங்கள் பலவுமாக விருக்கினும், அங்கங்கே யிருந்து பூசைகொள்ளுந் தேவர்களும் தேவசுவாமியாகிய முதல்வனுடைய அதிகார சத்தி யதிட்டிக்கப் பெற்றவர்களாக விருப்பார்க ளாகலின், 'நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காம், செறியுந் தெய்வமும் பல பல வாகவுஞ் செறிந்தால்' என்றனர். சிவஞானசித்தியார் : "எங்கும் வாழ் தெய்வ மெல்லா மிறைவனாணையினா னிற்கு, மங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பாலளிப்பன்" என்றதனாற் காண்க. (6)

பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்(து), அதிற்பிறங்கும்
உரிய பல்லுயி ரெத்தனை யமைத்(து), அவைக் குறுதி
வருவ தெத்தனை யமைத்தனை? அமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ! எனக்கிந்த வண்ணமே னமைத்தாய்?

(இ - ள்) பெரிய - பெரியனவாகிய, அண்டங்கள் - அண்டங்கள், எத்தனை அமைத்து - எத்தனை வகுத்து, அதில் - அவ் அண்டத்துள், பிறங்கும் - விளங்குகின்ற, உரிய - உரியனவாகிய, பல் உயிர் - பல வகைப்பட்ட உயிர்கள், எத்தனை அமைத்து - எத்தனை வகுத்து, அவைக்கு உறுதி வருவ - அவைகட்கு உறுதி பயப்பனவாகிய பொருள்கள், எத்தனை அமைத்தனை? - எத்தனை வகுத்தாய்?, அமைத்து - இவ்வாறு வகுத்து,

அருள் வளர்க்கும் - அவற்றினிடத்துக் கிருபையைப் பெருக்குகின்ற, அரிய தத்துவ ! - அரிதாகிய வுண்மைப் பொருளே !, எனக்கு - அடியேனுக்கு, இந்த வண்ணம் - இந்தப் பிரகாரம், என் அமைத்தாய் ?—, என்க.

(வி - ரை) சகல அண்டங்களையும், அவ் வண்டங்களி னுயிர்களையும், அவ் உயிர்கட்கு வேண்டிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பொருள்களையும், முதல்வனே அமைத்துக் காத்து அனுக்கிரகித்து வருவனென்பார், 'பெரிய வண்டங்க ளெத்தனை ......வளர்க்கு மரிய தத்துவ !' என்றனர். (7)

கணம தேனுநின் காரணந் தன்னையே கருத்தில்
உணரு மாதவர்க் கானந்த முதவினை ; ஒன்றும்
குணமி லாதபொய் வஞ்சனுக் கெந்தை !நிர்க் குண !மா
மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார் ?

(இ - ள்) கணமதேனும் - க்ஷணகால மாயினும், நின் - தேவரீரது, காரணந் தன்னையே - சர்வத்திற்குங் காரணமாயிருக்குந் தன்மையினையே, கருத்தில் - மனத்தினில், உணரும் - அறிகிற, மாதவர்க்கு - பெரிய தவத்தினர்கட்கு, ஆனந்தம் - இன்பத்தினை, உதவினை - கொடுத்தனை ; ஒன்றும் - சிறிதும், குணம் இல்லாத - நற்குண மில்லாத, பொய் வஞ்சனுக்கு - பொய் வஞ்சனை யுடையேனுக்கு, எந்தை ! - பிதாவே !, நிர்க்குண ! - நிர்க்குணனே !, மா - அதிகமான, மணம் - வாசனை, உலாம் - தங்கிய, மலர் - தாமரை மலர்போன்ற, பாதம் - திருவடிகளை, தரின் - கொடுத்தனையாயின், உன்னை - தேவரீரை, மறுப்பார் - தடுக்க வல்லவர்கள், யார் ? - யாவர் ?, என்க.

(வி - ரை) 'கணம தேனுநின் காரணந் தன்னையே கருதி, உணரு மாதவர்' என்றதனால், மகத்தாகிய தவத்தினை யுடையவர்களேனும் முதல்வனுடைய வுண்மையினை யறிதல் துல்லப மெனவும், அத்தகையர் ஒருகணங் கருதினும் ஆனந்த முதவுவ ரென்னின் யாவரும் அறிதல் கூடாதெனவும் சொல்லியவாறாயிற்று. 'மலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார் ?' என்றதனால், மாதவர்க்கு அருள் செய்ததுபோல் மாதவமில்லாத அடியேனுக்கும் அருள் செய்தால் சுதந்திரரான வுன்னைத் தடுப்பவ ராரென்பதாம். சோணசைல மாலை : "கன்மனக் கொடியனுக் கென்னீ துனிமலை பிறவி தவிர்த்தனை யெனநிற் சுளிபவ ரிலையெனக் கிரங்காய்." என்றதனாற் காண்க. (8)

சின்னன், முக்கனி, கண்டு,தேன், சருக்கரை கலந்த
தென்ன, முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்
நன்ன லத்தநின் னற்பதந் துணையென நம்பச்
சொன்ன வர்க்கெனு லாங்கைம்மா றில்லை;என் சொல்வேன் ?

(இ - ள்) கன்னல் - கரும்பின்சாறும், முக்கனி - முக்கனிகளும், கண்டு - கற்கண்டும், தேன் - தேனும், சருக்கரை - சருக்கரையும், கலந்தது என்ன - கலந்தாற்போல, முத்தியில் - முத்தி நிலையில், கலந்தவர்க்கு - கூடினவர்கட்கு, இன்பமாய் இருக்கும் - சுகரூபமா யிருக்கின்ற, நல் - சிறந்த, நலத்த - அழகையுடைய, நின் - தேவரீரது, நல் பதம் - நல்ல திருவடியே, துணை என - துணை யென்று, நம்ப - நம்பும்படி, சொன்னவர்க்கு - சொல்லிய அறிஞர்கட்கு, என்னால் ஆம் - என்னாற் செய்ய வியல்வதாகிய, கைம்மாறு - பிரதி யுபகாரம், இல்லை - (எக்காலத்தும்) இல்லை; என் சொல்வேன்? - அவ் அறிஞன் பெருமையினை என்னென்று கூறுவேன்?, என்க.

(வி - ரை) கரும்பின்சாறு முதலிய சுவைப் பொருள்களெல்லாம் ஒன்றாகக் கலந்தவழி யுளதாகிய சுவை இஃ தியல்பிற்றெனப் பிரித்தறிய வாராமைபோல, இறைவனு முயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி இஃ தியல்பிற்றெனப் பிரித்தறிய வாராது ஆனந்த சொரூபமாய் நிற்பன் ஆகலான், 'கன்னன் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த, தென்ன முத்தி' என்றனர். சிவஞான சித்தியார்: "கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத் திருப்பன் முத்தியிற் கலந்தே." என்றதனாற் காண்க. (9)

"தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாஞ் சகத்தில்
பந்த மா"மென்றே யருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை, நீயெனை யின்னமவ் வல்லலி லிருத்தின்,
சிந்தை தான்றெளிந் தெவ்வண முய்வணம்? செப்பாய்!

(இ - ள்) தந்தை - பிதா, தாய் - மாதா, தமர் - உறவினர், மகவு - புத்திரன், என்னும் - என்று சொல்லப்படுகிற, அவை எலாம் - அவைகளெல்லாம், சகத்தில் - உலகில், பந்தம் ஆம் என்றே - தளையாகு மென்றே, அரு மறை - அரிய வேதங்களை யருளிச்செய்த, வாயினால் - திருவாக்கால், பகர்ந்த - திருவாய் மலர்ந்தருளிய, எந்தை - எமது தந்தையாகிய, நீ - தேவரீர், என்னை - அடியேனை, இன்னம் - இன்னமும், அ - அந்த, அல்லலில் - துன்பத்தில், இருத்தின் - அழுத்தினால்; சிந்தை - மனம், தெளிந்து - தெளிந்து, உய் வண்ணம் - உய்யும் வகை, எவ் வண்ணம் - எவ்வகை?, செப்பாய்! - சொல்லுவாய்!, என்க.

(வி - ரை) தாய் தந்தை முதலாயினார்மாட்டு வைத்த பேரன்பினால் முதல்வனை மறந்து பிரபஞ்சமாய் வாழுபவர்கட்கு அவ் அன்பே பந்தமாய் விடுமாகலின், 'தந்தை தாய் தமர் மகவெனு மவையெலாஞ் சகத்தில், பந்தமாம்' என்றனர். உபதேச காண்டம்: "மக்களை நிதியைப் பேதை மகளிரை மருங்கு சூழ்ந்த, வொக்கலை நோக்கி யேமாந் துறுகதி நோற்க

லாராய், மிக்கிழி நரகத்தாழ்வர் மென்சிறு பறவை கண்டந்தோ, தக்க வெஞ் சுழனுக் கண்டை கொண்டுவின் டுயலா தன்றே" என்றதனுற் காண்க. (10)

தூய்யன், தண்ணருள் வடிவினன், பொறுமையாற் றுலங்கும்
மெய்ய னென்றுனை யையனே! அடைந்தனன்; மெத்த
நொய்யன், நுண்ணிய அறிவிலன், ஒன்றைநூ றுக்கும்
பொய்ய னென்றெனைப் புறம்விடி னென்செய்வேன்? புகலாய்!

(இ - ள்) தூய்யன் - பரிசுத்தன், தண் - குளிர்ந்த, அருள் - அருண்மயமான, வடிவினன் - உருவாயிருப்பவன், பொறுமையால் - பொறுமையுடனே, துலங்கும் - விளங்குகின்ற, மெய்யன் - மெய்ம்மையான், என்று - எனத் துணிந்து, ஐயனே! - இறைவனே!, உன்னை - தேவரீரை, அடைந்தனன் - அடைந்தேன்; மெத்த - மிகவும், நொய்யன் - அற்பன்; நுண்ணிய - நுட்பமாகிய, அறிவு இலன் - அறிவில்லாதவன்; ஒன்றை - ஒன்றினை, நூறு ஆக்கும் - நூறாக விருத்தி செய்கின்ற, பொய்யன் - பொய்மையன், என்று - என்றறிந்து, என்னை - அடியேனை, புறம் விடின் - புறமே விட்டுவிட்டால், என் செய்வேன்?' - என்செயக் கடவேன்?' புகலாய்! - சொல்லாய்!' என்க.

(வி - ரை) ஆன்மா எக்காலத்தும் தனக்கெனவோர் சுதந்திரமின்றி வாழ்பவனுகலின், அவனே யொன்றைப் பற்றிடற்குக் காலத்திரயத்துங் கூடாதாகையால், சகல சுதந்திரமும் வாய்ந்த முதல்வனே வலியக் கைப் பற்றி யாண்டு கொள்ளவேண்டு மென்பார், 'புறம்விடி னென்செய்வேன் புகலாய்!' என்றனர். பொய்மையினை யியற்கையாக உடையனுதலின் ஒரு பொய்யினைப் பிறர் நம்பும்படி தாபிக்கக் கருதி அநேகமான பொய்களைச் சொல்லவேண்டி யிருத்தலின், 'ஒன்றை நூறுக்கும் பொய்யன்' என்றனர். (11)

ஒன்ற தாய்ப், பல வாய், உயிர்த் திரட்கெலா முறுதி
என்ற தாய், என்று முள்ள தாய், எவற்றினு மிசைய
நின்ற தாய், நிலை நின்றிடு மறிஞ! என் னெஞ்சம்
மன்ற தாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

(இ - ள்) ஒன்றதாய் - ஒன்றாகி; பல ஆய் - பலவாகி; உயிர்த்திரட்கு எல்லாம் - ஆன்ம கோடிகட்கெல்லாம், உறுதி என்றதாய் - ஆதாரமாய்; என்றும் உள்ளதாய் - நித்தியமாய்; எவற்றினும் - எவ்வகைப்பட்ட பொருள்களினும், இசைய நின்றதாய் - கலந்து வாழுவதாய், நிலை நின்றிடும் - சாசுவதமாக நிற்கும், அறிஞ - முற்றறிவினை யுடையவனே!, என் நெஞ்சம் - அடியேன் மனம், மன்றது ஆய் - சபையாகக் கொண்டு, இன்ப உருக்கொடு - சுகவடிவு தாங்கி, நடித்திடின் - நடிப்பையாயின், வாழ்வேன் - பிழைப்பேன், என்க.

(வி - ரை) "இலங்கு முயிருட லனைத்து மீசன் கோயில்" என்ற தற்கேற்ப, ஆன்மாக்களின் மனத்தினை முதல்வன் அநாதி தொட்டுக் கோயிலாகக் கொண்டிருக்கினும், மலத்தடிப்புள்ள வரையில் மறைந்தும், மலவொதுக்கத்தில் வெளிப்பட்டும் விளங்குவ னாகவினும், அங்ஙனம் வெளிப்பட்ட காலத்திலேயே திருவருள்பெற் றுய்தற் கிடமாகவினும், தன்னிடத்து வெளிப்பட வேண்டு மென்பார், 'நெஞ்சம், மன்ற தாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்' என்றனர். (12)

தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடன்!இது சமயம்;என் னிதயக்
கனிவு மப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித! நீயறி யாததொன் றுள்ளதோ? புகலாய்;

(இ - ள்) தனி இருந்து - தனித்திருந்து, அருள் - அருட்டன்மை யான, சகசமே பொருந்திட - சகசநிஷ்டையே யடைந்திட, தமியேற்கு - தமியேனுக்கு, இனி - இனிமேல், இரங்குதல் - கிருபை செய்தல், கடன் - தேவரீர் கடனாகும்; இது சமயம் - (அதற்கு) இது சமயமாம்; என் இதய கனிவும் - என்னுடைய இதயத்தின் கனிவும், அப்படி ஆயினது - அவ் வாறே யாயிற்று; ஆதலால் - ஆகையால், கருணை புனித! - கருணைமூர்த்தி யாகிய பரிசுத்தனே!, நீ - தேவரீர், அறியாதது ஒன்று உள்ளதோ? - அறியாததொரு பொருளுண்டோ?, புகலாய் - சொல்வாய்!, என்க.

(வி - ரை) சகசநிஷ்டை யென்பது மோனசமாதி யாகும். அதாவது, சதா அந்தர்முகமாகவிருந்து ஆனந்தாதீதத்தி லழுந்தியிருப்பதாம். திருமந்திரம்: "ஒன்றியின் றுள்ளே யுணர்ந்தேன் பராபர, மொன்றியின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி, யொன்றியின் றுள்ளே யுணர்ந்தே னுணர் வினை, யொன்றியின் றேபல வூழி கண்டேனே." என்றதனாற் காண்க. அவா எழுந்தகாலத்தி லதைப் பூர்த்தி செய்துவைக்கின் அது பலிக்கு மாக லின், 'இதயக், கனிவு மப்படியாயின், இரங்குதல் கடனிது சமயம்' என்றனர். (13)

திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாணல்ல புண்ணியஞ் செய்யுநாள், பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநாள் என்றால்
அருந்த வா!உனைப் பொருந்துநா ளெந்தநாள்? அடிமை.

(இ - ள்) திருந்து - திருத்தமாகிய, சீர் - சிறப்படைந்த, அடி தாமரைக்கு - திருவடித் தாமரைகளுக்கு, அன்புதான் செய்யப்பொருந்தும் நாள் - அன்பு செய்யப் பொருந்திய நாள், நல்ல-நன்மையான, புண்ணியம் - புண்ணியமுண்டாதற் கேதுவாகிய, நாள் - நன்னாளாகும்; பொருந்ாது இருந்த - அன்புவையாதிருந்த, நாள் - நாளானது, வெகு - அநேகமான,

தீவினை - பாவங்களை, இழைத்த நாள் - செய்த நாளாகும், என்றால் - என்று சொல்லுமிடத்து, அருந்தவா ! - அருமையான தவ சொரூபனே !, அடிமை - அடியேன், உன்னை - தேவரீரை, பொருந்து நாள் - அடையு நாள், எந்த நாள் ? - எந்த நாளோ ?, என்க.

(வி - ரை) முதல்வன் திருவடியினை மனத்தின்கண்ணே சிந்தித்த மாத்திரத்தில் ஐம்புலன் வழியே செல்லவொட்டாமற் றடுத்து, இருவினைத் தொழிலினையு மாற்றி, உண்மையினை யறிவிக்குந் தன்மையைப் பயப்பிக்கு மாதலால், 'சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப், பொருந்துநாணல்ல புண்ணியஞ்செய்யு நாள்' என்றனர். திருமந்திரம் : "வைத்தே னடிக்கண் மனத்தி னுள்ளேநான், பொய்த்தே யெரியும் புலன்வழி போகாம, லெய்த்தே னுழலு மிருவினை மாற்றிட்டு, மெய்த்தே னறிந்தேனவ் வேதத்தி னந்தமே." என்றதனாற் காண்க. (14)

பின்னு(ம்), முன்னுமாய்' நடுவுமா(ய்), யாவினும் பெரிய
தென்னுந் தன்மையாய், எவ்வுயிர்த் திரளையு மியக்கி
மன்னுந் தண்ணருள் வடிவமே! உனக்கன்பு வைத்தும்,
துன்னு மின்னலேன்? யானெனு மகந்தையேன்? சொல்லாய்!

(இ - ள்) பின்னும் (ஆய்) - பிற்காலத்து முள்ளதாகி; முன்னும் ஆய் - முற்காலத்து முள்ளதாகி; நடுவும் ஆய் - இடையே யுள்ளதுமாகி; யாவினும் - எல்லாப் பொருள்களினும், பெரியது என்னும் தன்மையாய் - பெரிய பொருள் என்று சொல்லப்படுகிற தன்மையாகி; எவ்வுயிர்த் திரளையும் - ஆன்மகோடிகளை யெல்லாம், இயக்கி - அசைவித்து, மன்னும் - நிலைபெற்றுள்ள, தண் - குளிர்ந்த, அருள் வடிவமே ! - அருளுருவமே !, உனக்கு - தேவரீரிடத்து, அன்பு வைத்தும் - அன்பு செய்தும், துன்னும் - மிகுதியான, இன்னல் என் - துன்பம் யாதுக்கு ?, யான் என்னும் - நானென்னும், அகந்தை என் - அகங்காரம் யாதுக்கு ?, சொல்லாய் ! - கூறாய் !, என்க.

(வி - ரை) 'அன்பு வைத்தும், இன்னலேன் ? அகந்தையேன் ?' என்ற தென்னையோ வெனின், முதல்வனை முன்னிலையாகக்கொண்டு அவன்பாலன்பு பாராட்டி வருமளவும் பிராரத்துவ வாசனை தாக்கி இன்னல் முதலிய ஒரோவழி யுண்டா மென்பதாம். அன்பினுக்கு முதல்வனுக்கும் பேதமில்லை யெனத் தேர்ந்து அம் முதல்வனைத் தன்னுள்ளே யத்து விதமாகக் கண்டு அனுபவிப்பதற் கேதுவாயுள்ள அன்பு விளைந்தவழி, பிராரத்துவ வாசனை தாக்காது, இன்னல் முதலியனவும் விளையா வென்பதாம். (15)

'மின்னை யன்னபொய் வாழ்க்கை' யே நிலையென மெய்யாம்
உன்னை நான்மறந் தெவ்வண முய்வணம்? உரையாய்!

முன்னை வல்வினை வேரற முடித்(து); என்று முடியாத்
தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடும் தக்கோய்!

(இ - ள்) முன்னை - பூர்வ சென்மங்களிற் செய்த, வல்வினை - வலிய பாவத்தின், வேர் அற - மூல மொழிய, முடித்து - பண்ணி; என்றும் - எக்காலத்தும், முடியா - கெடாத, தன்னை - உன்னை, தன் அடியார்க்கு - உன்னடியார்கட்கு, அருள் புரிந்திடும் - அருள் செய்கின்ற, தக்கோய்! - நடுவானவனே!, மின்னை அன்ன - மின்னலை யொத்த, பொய் வாழ்க்கையே - பொய் வாழ்வினையே, நிலை என - நிலையென்று, மெய் ஆம் - உண்மையாகிய, உன்னை - உன்னை, நான் மறந்து - நான் மறந்துவிட்டு, உய்வணம் - பிழைக்கும் வகை, எவ்வண்ணம்? - எவ்வகை?, உரையாய்! - சொல்லாய்!. என்க.

(வி - ரை) சென்மாந்தர வினைகளையு மொழிக்க வல்லவன் முதல்வனென்பார், 'முன்னை வல்வினை வேரற முடித்து' என்றனர். தேவாரம்: "மேலைப் பண்டை வினையறுப்பான் பைங்க ணேற்றூர் பலியேற்றூர் பந்தனை நல்லூராரே" என்றதனாற் கண்டுகொள்க. அங்ஙனம் வினையை நீக்கி அடியார்கட்கு அருளுஞ் செய்வ னாகலின், 'அடி யார்க்கருள் புரிந் திடுந் தக்கோய்!' என்றனர். தேவாரம்: "தன்னடி யார்க்கருள் புரிந்த தாகவுந் தோன்றும்" என்றதனாற் காண்க. (16)

'எம்ப ராபர! எம்முயிர்த் துணைவ!' என் றிறைஞ்சும்
உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின் றாய்; உன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை
நம்பி னேன்; இனிப் புரப்பதெக் காலமோ? நவிலாய்!

(இ - ள்) எம் - எம்முடைய, பராபர! - பராபரனே!, எம் - எம்முடைய, உயிர் துணைவ! - உயிர்த் துணைவனே!, என்று இறைஞ்சும் - என்று வணங்குகின்ற, உம்பர் - அவ் வுலகினர்க்கும், இம்பர்க்கும் - இவ் வுலகினர்க்கும், உளக்கணே - அவர் மனத்தின்கண்ணே, நடிக்கின்றாய் - நடனஞ் செய்கின்றனை; உன்றன் - தேவரீருடைய, அம் - அழகிய, பொன் - பொன்போன்ற, மா - பெருமை பொருந்திய, மலர் - தாமரை போன்ற, பதத்தையே - திருவடியையே, துணை என - துணையென்று, அடிமை - அடியேன், நம்பினேன் - நம்பியிருக்கின்றேன்; இனி புரப்பது - இனிக் காத்தருள்வது, எக்காலமோ? - எந்தக் காலமோ?, நவிலாய்! - சொல்லாய்!, என்க.

(வி - ரை) தேவாரம்: "விண்ணுளாரும் விரும்பப்படுவர், மண்ணு ளாரு மதிக்கப் படுவர், எண்ணி னூர்பொழில் சூழிடை மருதினை, நண்ணி னாரைநண் ணாவினை நாசமே." என்றதனால் இருவகை யுலகத்தினரும் முதல்வனை விரும்பி மதித்து வாழவே அவர்கள் வினையைப் போக்குவான்

அம் முதல்வன் அவர் மனத்தின்க ணின்றியமையாது வாழ்வா ளுகலின், 'உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்ருய்' என்றனர். (17)

பாடி, ஆடி,நின் றிரங்கி, நின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தனர் அமல! நின் னடியர்; யான் ருெழும்பன்
நாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே; என்னினிச் செய்வேன்?

(இ - ள்) பாடி - பாடியும், ஆடி - ஆடியும், நின்று இரங்கி - நின் றழுது, நின் - தேவரீரது, பதமலர் - திருவடிமலரை, முடிமேல் சூடி - சிர சிற் றரித்து, நின் அடியர் - உன்னடியார், அமல! - பரிசுத்தனே!, வாழ்ந்த னர் - நித்தியவாழ்வை யடைந்தார்கள்; தொழும்பன் யான் - தொண்ட ளுகிய நான், இந்த உலகத்தை நாடி - இவ் வுலகினை விரும்பி, மெய் என நம்பி - உண்மையென்று நம்பி, வெறும் தீமையே - அநேக பாவத் தினையே, தேடினேன் - சம்பாதித்துக் கொண்டேன்; இனி என் செய் வேன் - இனிமே லென்செய்குவேன்?, என்க.

(வி - ரை) அடியார்கள் ஆனந்தமேலீட்டால் முதல்வன் சந்நிதானத் தில் ஆடியும் பாடியும் அகங் கசிந்துருகித் திருவடியிற் பணிவார்க ளாகை யால், 'பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல் சூடி வாழ்ந்தனர்' என்றனர். திருவாசகம்: "பாட வேண்டுநான் போற்றி நின்னையே பாடி நைந்துநைந்துருகி நெக்குநெக், காட வேண்டுநான் போற்றி யம்பலத் தாடு நின்கழற்போது நாயினேன், கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக் கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம், வீட வேண்டுநான் போற்றி வீடுதந் தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே." என்றதனுற் காண்க. இத்தகைய காரியங்களிற்ருென்றுஞ் செய்யாது பிரபஞ்சமுக மாகவிருந்து கெட்டே னென்பார், 'உலகத்தை மெய்யென நம்பித், தேடி னேன்வெறுந் தீமையே' என்றனர். (18)

களவு, வஞ்சனை, காமமென் றிவையெலாங் காட்டும்
அளவு மாயையிங் காரெனக் கமைத்தனர்? ஐயா!
உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தின்,உன் னடிமை
வளரு மாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன்.

(இ - ள்) களவு - திருட்டு, வஞ்சனை - கபடம், காமம் - விருப்பம், என்ற - என்ற, இவை எல்லாம் - இவைகளை யெல்லாம், காட்டும் - காட் டும், அளவு - அளவினையுடைய, மாயை - மாயையினை, இங்கு - இவ் விடத்து, எனக்கு - அடியேனுக்கு, அமைத்தனர் - வைத்தவர், ஆர்? - யாவர்?, ஐயா! - ஐயனே!, உளவிலே - இரகசியத்திலே, உள்ளவாறு - உள்ளபடி, எனக்கு - அடியேனுக்கு, உணர்த்தின் - தெரிவிக்கின்; உன் அடிமை - தேவரீரின் அடிமையேன், மதி தளர்வு - அறிவு தளர்ச்சி, இன்றி-

இல்லாமல், வளரும் - விருத்தி யடைகின்ற, மா மதிபோல் - பெரிய சந்திரன்போல, வாழ்வேன் - வாழ்ந்திருப்பேன், என்க.

(வி - ரை) பொல்லாங்கு செய்தலும், பொய் சொல்லுதலும், கண்டதை மறந்து மயங்கிவருகிறதும், காம ஆசையால் மூர்ச்சிக்கிறதும், ஆசையுண்டாய் அதனை யில்லையாக வொளித்தலும், உயிருக்கு இறுதி வருமென்று அச்சப்பட்டுத் திரிகையும் மாயையின் குணங்களாதலால், 'களவு வஞ்சனை, காமமென் றிவையெலாங் காட்டும், அளவு மாயை' என்றனர். ஆன்மாக்கட்கு மாயை யனாதி யெனவும், ஆகந்துகமாக வந்ததில்லை யெனவும் குறிப்பிப்பார், 'மாயையிங் காரெனக் கமைத்தனர்?' என்றார். மாயையின் மயக்கத்தால் நாளுக்குநாள் அறிவு தேய்பிறைபோலாகின்றதெனக் குறிப்பிப்பார், 'உளவிலேயெனக் குள்ளவா றுணர்த்தின், உன்னடிமை, வளரு மாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன்' என்றனர். ()

வான நாயக! வானவர் நாயக! வளங்கூர்
ஞான நாயக! நான்மறை நாயக! நலஞ்சேர்
மோன நாயக! நின்னடிக் கன்பின்றி முற்றும்
தின னாய்அகம் வாடவோ? என்செய்வேன்? செப்பாய்!

(இ - ள்) வான நாயக! - விண்ணுலகத் தலைவனே!, வானவர் நாயக! - தேவர்கட்குத் தலைவனே!, வளம் கூர் - வளமிகுந்த, ஞான நாயக! - ஞானாதிபனே!, நான்மறை - நான்கு வேதங்கட்கும், நாயக! - முதல்வனே!, நலம் சேர் - நன்மை பொருந்திய, மோன நாயக! - மௌன நிலைக் கிறைவனே!, நின் - தேவரீர், அடிக்கு - திருவடிக்கு, அன்பு இன்றி - அன்பு செய்த லில்லாமல், முற்றும் - முழுதும், தீனன் ஆய் - எளையாகி, அகம் வாடவோ? - மன நோவவோ?, என் செய்வேன்? - என் செய்ய வல்லேன்?, செப்பாய்! - சொல்லாய்!, என்க.

(வி - ரை) 'விஸ்வாத்மகம் ஸதஸதம்தமநந்தமீஸம் விஸ்வேஸ்வரம் பர ் காரணமப்ரமேயம் விஸ்வாதிபம் பரமகாரண கார்யஹீநம் நித்யம்" எனவும்; தேவாரம்: "வேத நாயகன் வேதியர் நாயகன், மாதி நாயகன் மாதவர் நாயகன், ஆதி நாயக னாதிரை நாயகன், பூதநாயகன், புண்ணிய மூர்த்தியே." எனவும் முதல்வனைச் சுருதிகள் கூறுகின்றமையின், வானமுதலான யாவற்றிற்கும் நாயகனே என்றனர். (20)

ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே!
பாத கக்கருங் கன்மனங் கோயிலாப் பரிந்து,
சூத கத்தனா யாதினு மிச்சைமேற் றோன்றும்
வாத னைக்கிட மாயினேன்; எவ்வணம் வாழ்வேன்?

(இ - ள்) ஏதம் - குற்றம், அற்றவர்க்கு - நீங்கினவர்கட்கு, இன்பமே - சுகத்தினையே, பொழிகின்ற - சொரிகின்ற, இறையே! - இறைவனே!,

பாதகம் - பாவவுருவாகிய, கருங்கல் - கருங்கல்லினைப் போன்ற, மனம் - மனமானது, கோயிலா - ஆலயமாக, பரிந்து - விரும்பி, சூது - வஞ்சனைக் கிடமான, அகத்தனாய் - மனத்தினனாய், யாதினும் - எப்பொருளினிடத்தினும், இச்சை மேல் தோன்றும் - விருப்ப மிகுதியாகத் தோன்றுகின்ற, வாதனைக்கு - துன்பத்திற்கு, இடம் ஆயினேன் - இடமா யிருக்கின்றேன் ; எ வண்ணம் வாழ்வேன் ? - எவ்விதம் வாழ்வேன் ?, என்க.

(வி - ரை) எதமாகிய சிற்றின்பத்திற்கே மனத்தினை யிடமாக்கி வைத்துக்கொண் டிருந்தார், அச் சிற்றின்பத்தினால் விளையும் பிரயோசனம் உபயோகமில்லை யெனக் கருதிய மாத்திரத்தே அம் மனத்தின்கண்ணே பேரின்பம் விளையு மாகலின், 'எத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே!' என்றனர். இத்தகைய பேரின்பத்தினுக்கு இடங் கொடாது, சூதுமுதலிய துர்க்குணங்கட்கே யிடமா யிருத்தல்பற்றி மனத்தினைக், 'கருங்கல் மனம்' என்றனர். (21)

தெளிவோ டீகையோ வறிகிலான், அறிவிலான், சிறிதும்
அளியி லான்,இவன் றிருவருட் கயலென வறிந்தோ
எளிய னாக்கினை? என்செய்வேன்? என்செய்வேன்? எல்லா
வொளியு மாய்,நிறை வெளியுமா(ய்), யாவுமா முரவோய்!

(இ - ள்) எல்லா ஒளியும் ஆய் - பிரகாசத்துடன் கூடிய எவ்வகைப் பொருளுமாகி ; நிறை - எங்கும் நிறைந்த, வெளியும் ஆய் - வெளியுமாகி ; யாவும் ஆம் - மற்றைய எல்லாப் பொருளுமாகி நின்ற, உரவோய்! - அறிவனே !, தெளிவோடு - மனத் தேற்றத்தோடு, ஈகையோ - கொடையோ, அறிகிலான் - தெரிகிலான் ; அறிவு இல்லான் - அறிவில்லாதவன் ; சிறிதும் - கொஞ்சமும், அளி இல்லான் - கிருபை யில்லாதவன் ; இவன் - இத்தகையன், திருவருட்கு - திருவருளினுக்கு, அயல் என - புறம்பு என, அறிந்தோ - உணர்ந்தோ, எளியன் ஆக்கினை - ஏழை யாக்கினை ?, என் செய்வேன் என் செய்வேன் - என்செயக் கடவேன் ? என் செயக்கடவேன் ?, என்க.

(வி - ரை) திருவருளினுக்குப் பாத்திர முடையார், தெளிவும், ஈகையும், அளியும், அறிவும் உடையரா யிருத்தல்வேண்டு மாகலின், அத்தகைய செயல் சிறிது மில்லாதவ னாகலின், திருவருளைக் கூட்டிவையாது கழித்தனை யென்பார், 'தெளிவோ......எளிய னாக்கினை' என்றனர். ஈண்டு 'எளியன்' என்றது 'திருவருட் செல்வ மடையாதவன்' என்றபடியாம். ()

'கண்ணி னுண்மணி' யென்னவே தொழுமன்பர் கருத்துள்
நண்ணு கின்றநின் னருளெனக் கெந்நா ணணுகும்?
மண்ணும், விண்ணு(ம்)மற் றுள்ளன பூதமு(ம்), மாறாப்
பெண்ணு மாணுமாய், அல்லவாய் நிற்கின்ற பெரியோய்!

(இ - ள்) மண்ணும் - பூமியும்; விண்ணும் - ஆகாயமும்; மற்று உள்ளன - இவற்றிற்கு அன்னியமாயுள்ளனவாகிய, பூதமும் - (தீ புனல் காற்று முதலிய) பூதங்களும்; மாறா - நீங்காத, பெண்ணும் - பெண்ணும், ஆணும் ஆய் - ஆணுமாகி; அல்ல ஆய் நிற்கின்ற - அவை யல்லனவுமாகி நிற்கிற, பெரியோய்! - பெரியோனே!, கண்ணின் உள் - கண்ணுக்குள்ளே, மணி என்று - மணியென்று சொல்லும்படி, தொழும் - வணங்குகின்ற, அன்பர் கருத்துள் - அன்பர் மனத்தின்கண்ணே, நண்ணுகின்ற - பொருந்துகின்ற, நின் அருள் - தேவரீர் திருவருளானது, எனக்கு - அடியேனுக்கு, எந்த நாள் - எக்காலத்தில், நணுகும் - பொருந்தும்?, என்க.

(வி - ரை) மண், நீர், தீ, காற்று, ஆகாயம் முதலியனவும், மற்றையவும் முதல்வனே என்பார், 'மண்ணும்......பெரியோய்!' என்றனர். தேவாரம்: "நீரவன் தீயி னோடு நிழலவ னெழில தாய, பாரவன் விண்ணின் மிக்க பரமவன் பரம யோகி, யாரவ னண்ட மிக்க திசையினோ டொளிகளாகிப், பாரகத் தமுதமானார் பழனத்தெம் பரம னாரே." என்றதனாற் காண்க.

(23)

சகமெ லாந்தனி புரந்தனை; தகவுடைத் தக்கோர்
அகமெலா நிறைந் தானந்த மாயினை; அளவில்
மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனை; மாறா
இகமெ லாமெனைப் பிறந்திடச் செய்ததேன்? எந்தாய்!

(இ - ள்) சகம் எல்லாம் - உலகங்களனைத்தினையும், தனி புரந்தனை - பொதுவறக் காத்தனை; தகவு உடை - தகுதியினை வாய்ந்த, தக்கோர் - மேலோர்களுடைய, அகம் எல்லாம் - மனமெல்லாம், நிறைந்து - தங்கி, ஆனந்தம் ஆயினை - இன்ப வுருவாயினை; அளவு இல் - அளவற்ற, மகம் எல்லாம் - யாகங்களெல்லாவற்றையும், புரிந்தோரை - செய்தவர்களை, வாழ்வித்தனை - வாழச் செய்தனை; மாறா - நீங்காமல், என்னை - அடியேனை, இகம் எல்லாம் - இவ் வுலகங்களி லெல்லாம், பிறந்திடச் செய்தது - பிறக்கும்படிச் செய்தது, என்? - யாதுக்கு?, எந்தாய்! - எந்தையே!, என்க.

(வி - ரை) இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய அனைத்தினையும் கொடுப்பது வேள்வியாகலினாலும், அவ் வேள்விக்குத் தலைவன் முதல்வனே யாகலினாலும், 'மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனை' என்றார், காஞ்சிப் புராணம்: "எச்ச மொன்றே யிருமையினு மேலா மிமையோர்க் குவப்பாவ, தெச்ச மொன்றே மகத்திறையா மெம்மான் விழையப் படுவதுவு, மெச்ச மொன்றே நனிசாலச் சிறந்த பொருளு மிருக்கரும, வெச்ச நிகர்வே றில்லை யெனப் பாத்து வாச னியம்பினனால்." என்றதனாற் காண்க. ஈண்டு 'மகம்' என்றது பசுக்கொலை புரிந்து ஏகான்மவாதிகள் செய்யும் யாகமன்று. இது சைவ யாகமேயாம்.

(24)

ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலாய் எளியேன்,
வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்!
ஆய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவால்
தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந் தூயோய்

(இ - ள்) ஏய்ந்த - பொருந்திய, நல் அருள் - சிறந்த அருளினை, பெற்றவர்க்கு - அடைந்தவர்கட்கு, எளியேன் - ஏழையேன், ஏவலாய் - ஏவலாளாகி; வாய்ந்த - வாய்ப்பாகிய, பேர் அன்பு - மிகுந்த அன்பினை, வளர்க்கவும் - பெருக்குமாறும், நீ - தேவரீர், கருணை - கிருபையை, வளர்ப்பாய்! - விருத்தி யாக்குவாய்!, ஆய்ந்த - ஆராயப்பட்ட, மா - பெரிய, மறை எத்தனை - வேதங்க ளெத்தனை, அத்தனை - அத்தனையும், அறிவால் - ஞானத்தினால், தோய்ந்த பேர்கட்கும் - கிடைக்கப் பெற்றவர்கட்கும், தோன்றிலா - காணப்படாத, தோன்றல் ஆம் - பெரியோனாகிய, தூயோய்! - பரிசுத்தனே!, என்க.

(வி - ரை) பாசம் நீங்கும்பொருட்டுச் சிவஞானச் செயலை மேலிட்டிருக்கின்ற அறிஞர்கள் முதல்வனுடைய திருவருள் பெற்றவர்கட்கே அடிமை செய்யவேண்டு மாகலின், 'அருள் பெற்றவர்க் கேவலா யெளியேன், வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்!' என்றனர். சிவஞான சித்தியார்: "திங்கண் முடியா ரடியோ மென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தி யுடையோரே." என்றதனாற் காண்க. (25)

தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித், தமியேன்
மிக்க தெய்வமே! நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்;
ஒக்க றாய்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே
துக்கவெள்ளத்தி லாழ்கின்றேன்; என்செய்வான் றுணிந்தேன்?

(இ - ள்) தக்க - தகுதியினையுடைய, நின் - தேவரீரது, அருள் - திருவருளைப்பற்றிய, கேள்வியோ சிறிது இன்றி - கேள்வியோ சிறிது மில்லாமல்; தமியேன் - தமியனேன், மிக்க தெய்வமே! - மேற்பட்ட தெய்வமே!, நின் - தேவரீரது, இன்ப வெள்ளத்தில் - ஆனந்தக் கடலில், வீழேன் - மூழ்காதவனாயினேன்; ஒக்கல் - சுற்றத்தினர், தாய் தந்தை - தாய் தந்தையர், மகவு - புதல்வன், என்னும் - என்கின்ற, பாச கட்டுடனே - பாசத் தளையுடன், துக்க வெள்ளத்தில் - துன்ப சாகரத்தில், ஆழ்கின்றேன் - மூழ்காநின்றேன்; என் செய்வான் துணிந்தேன்? - என்ன செய்யத் துணிந்தேன்?, என்க.

(வி - ரை) திருவருட் சம்பந்தமான கேள்வி யிலையேல் சிந்தித்தலும் தெளிதலு முண்டாகா தாகலினும், அவை யுண்டாகாதாகவே துக்க சாகர நீத்தலும், ஆனந்த சாகர மடைதலும் கிட்டா தாகலினும், இது பற்றியே "கேள்வி முயல்" என மூதாட்டியாருங் கூறியிருத்தலினும்,

'நின்னருட் கேள்வியோ சிறிதின்றி' எனவும், 'இன்ப வெள்ளத்தில் வீழேன்' எனவும், 'துக்க வெள்ளத்தி லாழ்கின்றேன்' எனவுங் கூறினர்.

பவம்பு ரிந்திடும் பாவியேற் கருணிலை பதியத்
தவஞ்செ யும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்;
அவம்பு ரிந்திடார்க் கானந்த வமிர்தத்தை யளிக்க
நவங்கொ டத்துவத் திரையெறி கடலெனு நலத்தோய்!

(இ - ள்) அவம் - வீணான காரியங்களை, புரிந்திடார்க்கு - செய்யாதார்க்கு, ஆனந்த அமிர்தத்தை - ஆனந்தாமிருதத்தினை, அளிக்க - கொடுக்க, நவம் கொள் - புதுமையை வாய்ந்த, தத்துவம் - தத்துவமாகிய, திரை எறி - அலைகளை வீசா நின்ற, கடல் என்னும் - சமுத்திரமென்று சொல்லப்பட்ட, நலத்தோய்! - நன்மையினை யுடையோனே!, பவம் புரிந்திடும் - பாவத்தினைச் செய்கின்ற, பாவியேற்கு - பாவியாகிய அடியேனுக்கு, அருள் நிலை - திருவருணிலை, பதிய - உண்டாக, தவம் செய்யும் படி - தவத்தைப் புரியும்வண்ணம், தயவு செய்து அருள்வதே - தயைசெய் தருளுதலே, தருமம் - தருமமாகும், என்க.

(வி - ரை) முதல்வன் றிருவருள் அடையவேண்டின் எல்லா விரதங்களுள்ளும் தவம் சிறந்ததாகலின், 'தவஞ்செ யும்படி தயவுசெய் தருள்வதே தருமம்' என்றனர். காஞ்சிப் புராணம்: "தவமே மேலா நெறியாகுந் தவமே சிவனார் தமைக் காட்டும், தவமே துறக்க மடைவிக்கும் தவமே நமனைத் தேவாக்குந், தவமே வலாரித் திசைக்கிறைவர் சார்ங்கனயனு மாக்குவிக்குந், தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ வென்று சாற்றினனால்." என்றதனாற் காண்க. (27)

உற்று ணர்ந்தெலா நீயல தில்லை யென் றுனையே
பற்று கின்றனர்; எந்தை! நின் னடியர்,யான் பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென 'முதறான்
அற்றி ருந்திடத் தொழில்செய்வான் றனை' நிக ரானேன்.

(இ - ள்) நின் - தேவரீருடைய, அடியார் - அடியார்கள், உற்று உணர்ந்து - ஆராய்ந்தறிந்து, எல்லாம் - எல்லாப் பொருள்களும், நீ அல்லது - தேவரீரல்லது, இல்லை என்று - அன்னியமாக வேறு பொருளில்லையென்று, எந்தை! - எந்தையே!, உன்னையே - தேவரீரையே, பற்றுகின்றனர் - அடைகின்றனர்; யான் - அடியேன், பாவி - பாவி, முற்றும் - முழுவதும், மாயம் ஆம் - காரியத்தாற் பொய்யாகிய, சகத்தையே - உலகத்தினையே, மெய் என - சத்தியமென, முதல் தான் அற்று இருந்திட - முதலே யற்றொழிய, தொழில் செய்வான் தன்னை - தொழில் செய்பவனை நிகர் ஆனேன் - நிகர்ப்பவனானேன், என்க.

(வி - ரை) "எல்லா வுலகமு மானாய் நீயே" என்ற தேவாரச் சுருதியின் உண்மை யுணர்ந்த பெரியோர்கள், தேவரீரையே நாடுகின்றனர். அவ்வுண்மையினை யறியாத பாவியாக அடியே னிருத்தலின், தேவரீரை நாடாது அசத்தியப் பிரபஞ்சத்தி லாழ்ந்து கிடக்கின்றேன் என்றதாம். ()

---

# ம ண் ட ல த் தி ன்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மண்டலத்தின் மிசையொருவன் செய்த வித்தை
யகோவெனவும், வாரணுதி
அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி னிறுத்துமவ
தானம் போல,
எண்டருநல் லகிலாண்ட கோடியைத்தன் னருள்வெளியி
லிலக வைத்துக்
கொண்டுநின்ற வற்புதத்தை, எவராலு நிச்சயிக்கக்
கூடா வொன்றை.

(இ - ள்) மண்டலத்தின் மிசை - உலகத்தின்மீது, ஒருவன் செய்த - ஒருவன் காட்டிய, வித்தை - வித்தையானது, அகோ எனவும் - ஆச்சரியமெனவும்; வாரணுதி - கோழிமுதலியவற்றின், அண்டமவை - முட்டைகளை, அடுக்கு அடுக்காய் - அடுக்கடுக்காக, அந்தரத்தில் - ஆகாயத்தில், நிறுத்தும் - வைக்கின்ற, அவதானம்போல - சாமர்த்தியம்போல, எண் தரும் - எண்ணிக்கையி லமர்ந்த, நல் - சிறந்த, அகிலாண்ட கோடியை - கோடிக்கணக்கான உலகங்கள், தன் - தன்னுடைய, அருள் வெளியில் - சிதாகாயத்தில், இலக - பிரகாசிக்கும்படி, வைத்துக்கொண்டு நின்ற - அடக்கி வைத்துக்கொண் டிருக்கிற, அற்புதத்தை - அதிசயப்பொருளை; எவராலும் - எவர்களாலும், நிச்சயிக்கக் கூடா - இத்தகையதெனத் துணியக்கூடாத, ஒன்றை - ஒப்பற்றதனை, என்க.

(வி - ரை) இந்திரசாலவித்தை காட்டுவா னொருவன் அநேகமான முட்டைகள் ஒன்றின்மே லொன்றாக ஆகாய வெளியி னிற்குமாறு காட்டுவதுபோல, முதல்வன் பல்லாயிர அண்டங்களையும் ஆகாயத்தி லடுக்கடுக்காய் வைத்துள்ளா னென்பதாம். கடலினிடத்துள்ள மணற்கூட்டங்கள் போல அண்டங்கள் எண்ணில விருத்தலின், 'அண்டகோடி' என்றனர். திருமந்திரம்: "பெருபகி ரண்டம் பேதித்த வண்ட, மெறிகட லேழின் மணலள வாகப், பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச், செறியுமண் டாசனத் தேவர் பிரானே." என்றதனுற் காண்க. முதல்வன் சர்வ வியாபியாகலின் பல்லாயிர அண்டங்களும் அவனுள் வியாப்பியமாகு மென்பார்,

'அகிலாண்ட கோடியைத் தன் னருள்வெளியி லிலகவைத்து' என்றனர். இதுமுத லெட்டுச் செய்யுள் வரையிற் குளகம். என்னை? "குளகம் பல பாட் டொருவினை கொள்ளும்." 'அரோ' என்பது வியப்பிடைச்சொல்.

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்(து), ஏழாம்
 யோக பூமி
நின்று,தெளிந் தவர்பேசா மௌனநியா யத்தை,நிறை
 நிறைவைத், தன்னை
யன்றியொரு பொருளிலதா வெப்பொருட்குந் தான்முதலாய்
 அசல மாகி,
என்றுமுள்ள வின்பத்தைத், தண்ணென்ற சாந்தபத
 வியற்கை தன்னை.

(இ - ள்) ஒன்று இரண்டு ஆய் - ஒன்றாகவும் இரண்டாகவும், விவகரிக்கும் - விவகாரஞ் செய்யும், விவகாரம் - விவகாரத்தினை, கடந்து - ஒழிந்து; ஏழாம் யோக பூமி - ஏழாவது யோகபூமியில், நின்று - தங்கி; தெளிந்தவர் - அறிவோர்க்கு, பேசா - பேசாமையான, மௌன நியா யத்தை - மவுன நீதியினை, நிறை நிறைவை - முழு நிறைவினை, தன்னை அன்றி - தன்னையல்லது, ஒரு பொருள் இலதா - ஒரு பொருளு மில்லாத தாக, எப்பொருட்கும்-எல்லாப் பொருள் களுக்கும், தான் முதலாய்-தானே முதற்பொருளாகி; அசலம் ஆகி - சலியாததாகி; என்றும் உள்ள - எக்கா லத்தும் நிலைபெற்ற, இன்பத்தை - ஆநந்தத்தை, தண் என்ற சாந்த பத இயற்கை தன்னை—, என்க.

(வி - ரை) ஏகான்ம வாதியைப்போல் ஒன்றென்றும், பேத வாதி யைப்போல் இரண்டென்றும் கூறாது, போதத்தை யொழித்து மவுனனாந் தமா யிருக்கவேண்டு மென்பார், 'ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்து' என்றார். ஒழுவிலொடுக்கம்: "ஏகமிரண் டென்னுமற் சும்மா விருவென்று சொன்னான்" என்றதனாற் காண்க. யோகபூமிகள் ஏழாவன: சுபேச்சை, விசாரணை, தனு மானசி, சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்த பாவனை, துரியகை என்பனவாம். இவை முறையே: நற்சங்க வற்சிதர் களும், ஞானசாத்திரம் பயின்றவர்களும், மூவேடனை நீத்தவர்களும், ஞான வுணர்ச்சி யடைந்தவர்களும், தவம் புரிந்தவர்களும், திரிபுடி யற்றவர்களும், சிவமாந் தன்மை யடைந்தவர்களு மடையும் பூமிகளாம். (2)

பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப்
 பரிசு காட்டிச்,
சதமாகி, நிராலம்ப சாக்ஷியதாய், ஆரம்பத்
 தன்மை யாகி,
விதமியாவுங் கடந்தவித்தை பெனுமிருளைக் கீண்டெழுந்து
 விமல மாகி,

மதமாறுங் காணாத வானந்த சாகரத்தை,
மௌன வாழ்வை.

(இ - ள்) பதம் மூன்றும் - முப்பதங்களையும், கடந்தவர்க்கு - தாண்டினவர்க்கு, மேலான - மேன்மையாகிய, ஞான பதம் - ஞானமாகிய பதத்தின், பரிசு காட்டி - தன்மையினைக் காட்டி; சதம் ஆகி - சாசுவதமாகி; நிராலம்ப - பற்றுக்கோ டில்லாத, சாக்ஷியதாய் - சாட்சிபூதமாகி; ஆரம்பத் தன்மை ஆகி - ஆதியாந்தன்மையுடையதாகி; விதம் யாவும் கடந்து-எல்லா விதங்களையுந் தாண்டி, அவித்தை என்னும் - அஞ்ஞானமென்னும், இருளை- அந்தகாரத்தினை, கீண்டு - பிளந்து, எழுந்து - எழுந்து, விமலம் ஆகி - மல ரகிதமாகி; மதம் ஆறும் - ஆறு சமயங்களும், காணாத - காணக்கூடாத, ஆனந்த - சாகரத்தை - இன்பக் கடலை; மௌன வாழ்வை - மவுன வாழ்க்கையை, என்க.

(வி - ரை) சரியை, கிரியை, யோக முதலியவற்றால் அடைதற் கேதுவாயுள்ள சிவசாலோக, சிவசாமீப, சிவசாரூபமாகிய முப்பதங்களை யடைதற்குக் காரணமாய தன்மையினைப் பெற்றவர்கட்கே ஞானம் சித்திக்குமாகலின், 'பத மூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப், பரிசு காட்டி' என்றனர். சுத்தாத்துவித சித்தாந்த சன்மார்க்கர் அறியத்தகுந்த முதல்வனது உண்மை நிலையினைச் சோபான மார்க்கத்தார் அறியா ராகலின், 'மதமாறுங் காணாத வானந்த சாகரத்தை' என்றனர். (3)

வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை, நல்லமிர்தை,
மணியைப், பொன்னைத்,
தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை, அத்துவித
சாரந் தன்னைச்,
சூழ்பெரும்பே ரொளியை,ஒளி பரந்தபர வெளியை,இன்பச்
சுகத்தை, மாறா
தேழுலகுங் கலந்(து), இன்றாய், நாளையாய், என்றுமா
மியற்கை தன்னை.

(இ - ள்) வாழ்வு அனைத்தும் - எல்லா வாழ்வுகளையும், தந்த - அருளிய, இன்ப கடலை - ஆனந்த சாகரத்தினை; நல் - சிறந்த, அமிர்தை - அமுதத்தினை; மணியை - மாணிக்கத்தினை; பொன்னை - சுவர்ணத்தினை; தாழ்வு அற - இழிவற்ற, என் - அடியேனது, உள்ளத்து - மனத்தினிடத்து, இருந்த - எழுந்தருளி யிருந்த, தத்துவத்தை - உண்மைப் பொருளை; அத்துவித சாரம் தன்னை - அத்துவித சாரத்தினை; சூழ் - வளைந்த, பெரும் பேர் ஒளியை - மிகவும் பெரிதாகிய ஒளியினை; ஒளி பரந்த - ஒளி பரவிய, பர வெளியை - பரமாகாயத்தினை, இன்ப சுகத்தை - பேரானந்தத்தை, மாறாது - நீங்காது, எழ் உலகும் கலந்து - எழு உலகத்திலும் வியாபித்து,

இன்று ஆய் - இன்று ஆகி, நாளை ஆய் - நாளையாகி, என்று ஆம் - என்று மாகின்ற, இயற்கை தன்னை - இயற்கையினை, என்க.

(வி - ரை) ஆன்மகோடிகள் அவரவர்கள் செய்த கன்மத்திற்கேற்ப அவரவர்கள் போகங்களை அவரவர்கட்குக் கூட்டிவைப்பான் முதல்வனே யாதலின், 'வாழ்வினைத்துர் தந்தவின்ப மாகடலே' என்றனர். சுத்தாத்து வித சித்தாந்தத்தின் அனுபவமாயுள்ள ஞேயப்பொருள் முதல்வனே யாக லின் 'அத்துவித சாரந் தன்னை' என்றனர். இன்றைக்கிருந்து நாளைக் கில்லாத தன்மையினை வாய்ந்த ஆன்மாக்களைப்போ லல்லாது என்று முள் ளவன் முதல்வ னாகலின், 'இன்றாய் நாளையாய் என்றுமா மியற்கைதன்னை' என்றனர். (4)

தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ்
சமத்தை, லோகம்
மின்னைநிகர்த் திடவழியாச் சொரூபானந் தச்சுடரை,
வேத மாதி
யென்னையறி வரிதென்னச்-சமயகோ டிகளிடைய-
இடைய றாத
பொன்னைவிரித் திடுமுலகத் தும்பருமிம் பரும்பரவும்
புனித மெய்யை.

(இ - ள்) தன்னை அறிந்தவர் - தன்னை புணர்ந்தவர், தம்மை - தங் களை, தான் ஆக செய்தருளும் - தானாகச் செய்தருளுகின்ற, சமத்தை - சமய நிலையை, லோகம் - உலகத்தினை, மின்னை - மின்னலை, நிகர்த்திட - ஒத்து (அழியவும்) அழியா - கெடாத, சொரூபானந்த சுடரை - சொரு பானந்த சோதியை; வேதம் ஆதி - வேதமுதலியவை, என்னை அறிவு அரிது என்ன - என்னை யறிதல் அரிதா மென்னவும்; சமய கோடிகள் - பல சமயங்களும், இடைய - (காணாது) பின் வாங்கவும்; இடை அறாத - விட்டு நீங்காத, பொன்னை விரித்திடும் உலகத்து - பொன்னுலகத்தின், உம்பரும் - தேவர்களும், இம்பரும் - மனிதர்களும், பரவும் - துதிக்கின்ற, புனித மெய்யை - திருவருள் மேனி யுடையதை, என்க.

(வி - ரை) தன்னைத் தன்னுடைய தேகத்தினுக் கன்னிய மென்ப தனை யறிந்து ஆன்ம தரிசனஞ் செய்தவரே சிவ தரிசனத்திற்கு யோக்கியர் களாய், அவர்கள் சுவானுபூதியாகிய ஞேயத்தழுந்தி, முதல்வனுட னொன்று படுவாராதலால், 'தன்னையறிந் தவர்தம்மைத் தானாய்ச் செய்தருளும் சமத்தை' என்றனர். "சிவமாக்கி யெனையாண்ட" என்ற பெரியோர் கருத்து மிதுவேயாம். முதல்வன்: வேதாதிகளாலும், சமயங்களாலும் அறிதற்கரிய அகளனாய் விளங்குபவனாயினும், பக்தியாய் வழிபடுவார்கட்கு அருட்டிருமேனி கொண்டு சகளனாய் விளங்குவ னாகலின், 'வேதமாதி புனித மெய்யை' என்றனர். (5)

பரவரிய பரசிவமாய், அதுவெனலாய், நானெனலாய்ப்
பாச சாலம்
விரவிநின்ற விசித்திரத்தை, ஐக்யபதத் தினிதிருந்த
விவேகந் தன்னை,
இரவுபக னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க
ளிதயம் வேதச்
சிரமெனவாழ் பராபரத்தை, ஆனந்த நீங்காத
சிதாகா சத்தை.

(இ - ள்) பரவ அறிய - துதித்தற்கரிய, பரசிவமாய் - பரமசிவமாகி; அது எனல் ஆய் - அது எனற் கேதுவாகி; நான் எனல் ஆய் - நான் என்பதற் கேதுவாகி; பாச சாலம் - பாசக் கூட்டத்தால், விரவி நின்ற காரியப்பட்டுள்ள, விசித்திரத்தை - விசித்திர ரூபத்தினை; ஐக்ய பதத்து கலப்பில், இனிது இருந்த - இன்பமயமா யிருந்த, விவேகம் தன்னை - ஞான சொரூபத்தினை, இரவு பகல் - இராப்பகல், நினைப்பு மறப்பு - நினைப்பு மறைப்புக்கள், என்னும் - என்று சொல்லப்படுகிற, தொந்தம் - தொடர்பினை, அறியார்கள் - அறியாதவர்களுடைய, இதயம் - இருதயமே வேத சிரம் என - வேத முடியென்று, வாழ் - அதனிடத்து விளங்குகின்ற, பராபரத்தை - பராபர வஸ்துவினை; ஆனந்தம் நீங்காத - இன்ப நிறைந்த, சிதாகாசத்தை - ஞானகாயத்தினை, என்க.

(வி - ரை) முதல்வன் யாவரு மறிதற் கரியவனா யிருப்பினும் அது எனச் சுட்டியறிதற் கேதுவாயுள்ள முன்னிலையிலும், நானெனச் சொல்லுதற் கேதுவாயுள்ள தன்மையினும், மாயா காரியமான பிரபஞ்ச சொரூபமெனற் கேதுவாயுள்ள படர்க்கையினும் விளங்குவ னென்பதாம். (6)

அத்துவித வனுபவத்தை, அனந்தமறை யின்னமின்ன
மறியே மென்னும்
நித்தியத்தை, நிராமயத்தை, நிர்க்குணத்தைத், தன்னருளா
னினைவுக் குள்ளே
வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக வெந்நாளும்
வளர்த்துக் காக்குஞ்
சித்தினை,மாத் தூவெளியைத், தன்மயமா மானந்தத்
தெய்வந் தன்னை,

(இ - ள்) அத்துவித அனுபவத்தை - அத்துவிதானுபவப் பொருளை; அனந்தமறை - அனந்தமான வேதங்கள், இன்னம் இன்னம் - இன்னும் இன்னும், அறியேம் என்னும் - அறியோமென்னற்குரிய, நித்தியத்தை - என்று முள்ளதை; நிராமயத்தை - நோயில்லாததை; நிர்க்குணத்தை - குண மின்மையினை; தன் அருளால் - தன்னுடைய அருளினாலே, நினைவுக்குள்ளே - கருத்தினிடத்தே, வைத்து வைத்து பார்ப்பவரை - அனவரதம்

நோக்குபவரை, தான் ஆக - தானேயாகும்படி, எ நாளும் வளர்த்து - எந் நாளும் விருத்தி யடைவித்து, காக்கும் - காக்கின்ற, சித்தினை - சிற் பொருளை; மா - பெரிய, தூ - பரிசுத்தமாகிய, வெளியை - ஆகாயத் தினை; தன்மயம் ஆம் - தன்மயமாகிய, ஆனந்தத் தெய்வம் தன்னை - இன் பம் அருளும் தெய்வத்தை, என்க.

(வி - ரை) சகல சமயாதீத சுத்தாத்துவித சித்தாந்தச் செல்வர்கள் அனுபவிக்கும் பொருள் என்பார், 'அத்துவித அநுபவத்தை' என்றனர். முதல்வன் யாரானும் எட்டுதற்கரிய இயல்பின னாயினும் அருளை முன் னிட்டு அறியும் சித்தாந்தச் செல்வர்கள் தரிசித்தற்கு அவர்கள் மனத்தின் கண்ணே விளங்கித் தோன்றி, அவர்களைத் தன்மயமாக்கிக் கொள்வான் என்பார், 'நித்தியத்தைக்...காக்குஞ் சித்தினை' என்றனர். (7)

தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக
சமாதி யாகப்
'பொன்னிலே பணிபோலு' மாயைதரு மனமே! உன்
புரைகள் தீர்ந்தா
லென்னினே யான்பிழைப்பேன்; எனக்கினியா ருன்போல்வார்
இல்லை யில்லை;
உன்னிலோ திருவருளுக் கொப்பாவாய்; என்னுயிர்க்கோ
ருறவு மாவாய்.

(இ - ள்) தன்னிலே - தன் தேகத்தினிடத்திலே, தான் ஆக - தேகத்தினுக்கு அன்னியமாம் தான் ஆன்மசொரூபமா யிருப்பதாக, நினைந்து - (விசாரித்து) எண்ணி, கனிந்து - (மனங்) கசிந்து, அவிழ்ந்து - (மனம்) வெளியாகி, சுகசமாதி ஆக - சுகத்தை விளைக்கின்ற சமாதி யுண்டாக, பொன்னிலே - பொன்னினாற் காரியப்பட்ட, பணி போலும் - ஆபரணம்போலும், மாயை தரும் - மாயா காரியமாக விளையும், மனமே! - நெஞ்சே!, உன் - உனது, புரைகள் - குற்றங்கள், தீர்ந்தால் என்னின் - நீங்கினையாயின், யான் பிழைப்பேன் - யான் உய்வேன்; இனி - இனி, எனக்கு - எனக்கு, உன்போல்வார் - உன்னைப்போலச் சகாயம் செய்வார், யார் - யாவர்?; இல்லை இல்லை - ஒருவரும் இல்லை இல்லை; உன்னிலோ - எண்ணிப் பார்த்தாலோ, திரு அருளுக்கு - திருவருளுக்கு, ஒப்பு ஆவாய் - சமானமாவாய்; என் உயிர்க்கு - என்னுடைய உயிரினுக்கு, ஓர் உறவும் - ஒப்பற்ற உறவும், ஆவாய் - ஆவாய், என்க.

(வி - ரை) ஆன்மாவாகிய தான்: உபாதி ரகிதனாய், எல்லாவற் றையுந் தன்னிற் கண்டு, தவங் கூடி, முதல்வனை நினைந்து மனங் கசிந்து, சுக மனுபவித்தலே சமாதியாகலின், 'நினைந்துகனிந் தவிழ்ந்துசுக சமாதி யாக' என்றனர். திருமந்திரம்: "காரிய மான வுபாதியைத் தான்கடந், தாரிய காரணமேழுந்தன் பாலுற, வாரிய காரண மாய்ந்த வத்திடைத்,

தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே." என்றதனுற் காண்க. தட்டா ஞெருவன் பொன்னினைப் பணியாகக் காரியப்படுத்தியது போல, முதல் வன், மாயையினை மனமாகக் காரியப்படுத்தினு ஞதலின், 'பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமே!' என்றனர். பிரபஞ்சத்தின்கண்ணே சகல தீமைகளும் விளைதற்குக் காரணம் மனமா யிருத்தலினுலும், அத் தகைய மனத்தில் தீமைமாத்திரம் விளையாதிருக்கின் ஆன்மா அடைய வேண்டிய சாம்பிராச்சியத்தினை யடைந்துவிடு மாகலின், 'மனமே!... ஆவாய்' எனப் புகழ்ந்தார். (8)

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்து தள்ளற்
கறவுமரி தரிதன்றோ? இகபரமு முன்னையன்றி
யாவ துண்டோ?
வறிதிலுன்னை யசத்தென்னல் வழக்கன்று; சத்தெனவும்
வாழ்த்து வேன்; என்
சிறுமைகெடப் பெருமையினின் சென்மதே யத்தினிநீ
செல்லல் வேண்டும்.

(இ - ள்) உற - மிகவும், உடலை எடுத்தவரில் - பிறந்தவர்களில், பிரமாதியேனும் - பிரமாதியானுலும், உன்னை ஒழிந்து - (மனமே) உன்னை நீங்கி, தள்ளற்கு - காலங் கழித்தற்கு, அறவும் - மிகவும், அரிது அரிது அன்றோ? - அருமையாகு மல்லவா?, இகபரமும் - இகபர சித்தி களும், உன்னை அன்றி - உன்னை யல்லது, ஆவது உண்டோ? - கடை கூடுவதுளதோ?, வறிதில் - வீணே, உன்னை அசத்து என்னல் - உன்னை அசத்தென்று சொல்லுதல், வழக்கு அன்று - விவகாரமல்ல; சத்து எனவும் வாழ்த்துவேன் - சத்தென்றும் வாழ்த்தா நிற்பேன்; என் சிறுமை கெட - என்னுடனே தாழ்வு நீங்க, பெருமையின் - பெருமையின், நின் சென்ம தேயத்து - உன் சன்ம பூமிக்கு, இனி நீ செல்லல் வேண்டும் - இனி நீ போதல் வேண்டும், என்க.

(வி - ரை) மனமானது அசத்தேயாயினும், பிரமாதி தேவர்களும் மனம் காரணமாகவே தாங்கள் போக மனுபவித்து வருகின்றன ராகலி னுலும், இகபர சித்திகளை யடையவேண்டு மாயினும் மனமே காரணமா யிருத்தலினுலும், அம் மனத்தினை அசத்தெனக் கூறுதற் கேலாது சத் தெனக் கூறுதற்கே யிடமுண் டென்பார், 'உறவுடலை......சத்தென வாழ்த்துவேன்' என்றனர். 'பிரமாதி' என்றதனுல் விண்டு முதலியோ ரையுங் கூட்டுக. எல்லா விபரீதங்கட்கும் காரணமா யிருப்பது மனமாக லின் அது இறந்துபடவேண்டு மென்பார், 'என், சிறுமை கெட......செல் லல் வேண்டும்" என்றனர். (9)

வேண்டியநா ளென்னோடும் பழகியநீ யென்னைப்பிரிந்த
விசாரத் தாலே
மாண்டுகிடக் கினுமந்த வெல்லையையும் பூரணமா
வணக்கஞ் செய்வேன் ;
ஆண்டகுரு மௌனிதன்றா லியானெனதற் றவனருளா
ஞவேன் ; பூவிற்
காண்டகவெண் சித்திமுத்தி யெனக்குண்டாம் ; உன்றலென்
கவலை தீர்வேன்.

(இ - ள்) வேண்டிய நாள் - அநேக நாளாக, என்னோடும் - என்னுடனே, பழகிய நீ - பழகியிருந்த நீ, என்னைப் பிரிந்த - என்னை விட்டு நீங்கிய, விசாரத்தாலே - துன்பத்தினாலே, மாண்டு கிடக்கினும் - நீ மடிந்து இருந்தாலும், அந்த எல்லையையும் - அந்த இடத்தினையும், பூரணமாய் - பூர்த்தியாய், வணக்கம் செய்வேன் - வணங்காநிற்பேன் ; ஆண்ட - (நீ யொழிந்து போனதினால்) என்னை யாண்டருளின, குரு மௌனி தன்றால் - மௌன குருவினால், யான் எனது அற்று - யான் எனது என்பது நீங்கி, அவன் அருள் - அக் குருவின் திருவருளே, நான் ஆவேன் - நானாகி விடுவேன் ; பூவில் - உலகத்தில், காண்தக்க - காணும்படி, எண் சித்தி - அட்டசித்திகளும், முத்தி - மோட்சமும், எனக்கு உண்டாம் - எனக் குளதாகும் ; உன்றால் - உன்னாலே, என் கவலை தீர்வேன் - என் வியசன மொழிவேன், என்க.

(வி - ரை) கோடானுகோடி சன்மங்கடோறும் தன்னுடனிருந்து சகல போகங்களையும் கூட்டிவைத்த மனமானது இச்சென்மத்தி னீங்கவே அதற்குபகாரமாக வணங்குவேன் என்பார், 'வணக்கஞ் செய்வேன்' என்றனர். மாயா காரியமாகிய மன நீங்கவே, தன்னை யாண்டுகொண்ட சற்குருவின் உபதேசத்தால் அகங்கார மமகாரமற்று, சகல சித்திகளையு மடைவே னென்பார், 'ஆண்ட குரு......உண்டாம்' என்றனர். (10)

தீராத வென்சென்ன வழக்கெலாந் திருமிந்தச்
சென்னத் தோடே ;
யாரேனு மறிவரிய சிவன்முத்தி யுண்டாகும் ;
ஐய ! ஐயோ !
காரேனுங் கற்பகப்பூங் காவேனு முனக்குவமை
காட்டப் போமோ ?
பாராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை
பகர லாமோ ?

(இ - ள்) தீராத - நீங்காத, என் சென்ன வழக்கு எல்லாம் - என் சென்மத்திலுண்டாகிய விவகாரங்கள் யாவும், இந்த சென்னத்தோடே தீரும் - இச் சென்மத்திலேயே நீங்கிவிடும் ; யாரேனும் - எவராயினும்,

அறிவு அரிய - அறிதலருமையாகிய, சீவன் முத்தி உண்டாகும் - சீவன் முத்தி நிலைமையு முண்டாகும்; ஐய! - ஐயா!, ஐயோ! - அந்தோ!, கார் எனும் - மேகத்தை யானாலும், கற்பக பூங்கா எனும் - கற்பகப் பூஞ் சோலையே யானாலும், உனக்கு - (மனமாகிய) உனக்கு, உவமை - ஒப்புப் பொருளாக, காட்டப்போமோ? - எடுத்துச் சொல்லப்படுமோ?, பார் ஆதியாக - பூமி முதலாகவுள்ள, எழு மண்டலத்தில் - சத்த லோகங்களில், நின் மகிமை - உன் பெருமையை, பகரலாமோ - சொல்லுதற் கமையுமோ?, என்க.

(வி - ரை) மனங் காரணமாகவே பல சென்மங்கள் உண்டாயின ஆகவினாலும், அது இப்போது நீங்கவே பிறப்புக்குக் காரண மொழிந்து சீவன் முத்தி நிலை உண்டான தாகவினாலும், 'தீராத வென்செனனம்...... உண்டாகும்' என்றனர். மனம்போல நிமிடத்திற்குள் பலகோடி காலங் களை விளைவிக்கும் பதார்த்தம் வேறொன்று உலகிலில்லை என்பார், 'காரேனும்......பகரலாமோ?' என்றனர். (11)

---

## பாயப்புலி

கட்டளைக் கலித்துறை.

'பாயப் புலிமுன மான்கன்றைக் காட்டும் படி' அகில
மாயைப் பெரும்படைக் கேயிலக் காவெனை வைத்தனையோ?
நீயெப் படிவகுத் தாலுநன் றே; நின் பெருங்கருணை
தாயொத் தடியர்க் கருள்சச்சி தானந்த தற்பரமே!

(இ - ள்) பாய் - பாய்கின்ற, அப் புலி முன்னம் - அப் புலியினுக் கெதிரில், மான் - மானினது, கன்றைக் காட்டும்படி - தன் கன்றினைக் காட்டுதல்போல, அகில மாயை - பிரபஞ்ச மாயையான, பெரும்படைக்கே, பெரிய ஆயுதத்தினுக்கே, இலக்கு ஆ - இலட்சியமாக, என்னை - அடியேனை, வைத்தனையோ? - வைத்திட்டாயோ?, நீ - தேவரீர், எப்படி - எவ்வித மாக, வகுத்தாலும் - வகைப்படுத்தினாலும், நன்றே - நல்லதே; நின் - தேவரீரது, பெரும் கருணை - பெரிய அருளை, அடியார்க்கு - அடியவர் கட்கு, தாய் ஒத்து - தாயினை நிகர்த்து, அருள் - கிருபை புரிகின்ற, சச்சி தானந்த - சத்து சித்து ஆனந்த சொரூபமாகிய, தற்பரமே! - தற்பர வஸ்துவே!, என்க.

(வி - ரை) அதிக கொடுமையோடுங் கூடிய புலிமுன் மான்கன்று எதிர்ப்பட்ட காலத்துத் தப்பாது அழியுமாபோல, அதிக காலத்தோடுங் கூடிய மாயா காரியமாகிய பிரபஞ்சத்தின் முன் ஆன்மா எதிர்ப்பட்ட காலத்துத் தப்பாது மயங்கி துன்பமடையு மென்பது நிச்சயமாக, எனை

இங்ஙனஞ் செய்தல் தருமமாமோ என்பார், 'பாயப்புலி வைத்தனையோ' என்றார். புலியெதிர்த்த காலத்து மானானது தன் கன்றினைக் காட்டித் தான் மறைதல் வழக்க மாகலினாலும் இவ்வா றெடுத்துக் காட்டினார். நன்மையே செய்யினும், தீமையே செய்யினும் அது நின் பார மென்பார், 'எப் படிவகுத் தாலுநன்றே' என்றனர். திருவாசகம் : "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ, வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோள் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே." என்றதனாற் காண்க. (1)

தற்பர மாஞ்சிற் பரமாகி மன்றந் தனினடித்து
நிற்பர்,அம் போருகன் மால்பணி நீதர் ; என் னெஞ்சகமாங்
கற்பரந் தாங்கு கரைந்திட வானொத்த காட்சிநல்கும்
பொற்பர மாயென் வினைக்கருந் தாதைப் பொடிசெய்ததே.

(இ - ள்) அம்போருகன் - மலரோனும், மால் - விண்டுவும், பணி - வணங்கத்தக்க, நீதர் - நீதியையுடையவர், தற்பரம் ஆம் - தற்பரமாகிய, சிற்பரம் ஆகி - சிற்பரமாகி, மன்றம் தன்னில் - அம்பலத்தினில், நடித்து நிற்பர் - திருக்கூத்தினைச் செய்து எழுந்தருளுவர் ; (அத்தகையர்) என் - அடியேனது, நெஞ்சம் ஆம் - மனமாகிய, கல் - கல்லானது, பரந்தாங்கு - பரவினாற்போல, கரைந்திட - உருகிட, வான் ஒத்த - மேன்மையாகிய, காட்சி - காட்சியினை, நல்கும் - கொடுக்கும், பொற்பு - அழகாகிய, அரம் ஆய் - அரமாகி, என் வினைய - அடியேன் தீவினையாகிய, கருந்தாதை - இரும்பினை, பொடி செய்தது - பொடியாக்கினது, என்க.

(வி - ரை) இவ் வாசிரியர் முன்னர் 'வண்டுளப மணிமார்பன் மனைவியோடும் புதல்வனோடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்' என்றதற் கேற்ப, 'அம்போருகன் மால்பணி' என்றனர். முதல்வன் காட்சியினைக் காண்டல் மாத்திரத்தானே கன்மனமுங் கரைந்து கருந் தாதை யொத்த வினையு நீங்குமாகலின், 'கருந்தாதைப் பொடி செய்ததே.' என்றனர். (2)

செய்யுந் தவஞ்சற்று மில்லாத நான்,உன் றிருவடிக்கே
கொய்யும் புதுமல ரிட்டு,மெய் யன்பர் குழாத்துடனே,
கையுஞ் சிரமிசைக் கூப்பி,நின் றாடிக் கசிந்துருகி
உய்யும் படிக்கருள் செய்வதென் றோ? புலி யூரத்தனே !

(இ - ள்) புலியூர் - சிதம்பரத்தி லெழுந்தருளி யிருக்கின்ற, அத்தனே! - தந்தையே!, செய்யும் தவம் - செய்தற்குரிய தவமானது, சற்றும் இல்லாத - சிறிது மில்லாத, நான் - அடியேன், உன் - தேவரீரது, திருவடிக்கு - திருப்பாதங்களுக்கு, கொய்யும் - பறிக்கப்படுகின்ற, புது மலர் -

அன்று பூத்த மலரை, இட்டு - தரித்து, மெய்யன்பர் - சிவனடியார், குழாத்துடனே - திருக் கூட்டத்துடனே (கலந்து), கையும் - கரங்களையும், சிரமிசை கூப்பி - சிரசின்மீது அஞ்சலித்து, நின்று - நின்று, ஆடி - கூத்தாடி, கசிந்து - மனங் கசிந்து, உருகி - மெய்யுருகி, உய்யும்படிக்கு - பிழைக்கும்படிக்கு, அருள் செய்வது - கிருபை பாலிப்பது, என்றோ? - எந்நாளோ?, என்க.

(வி - ரை) புதுமலர் இடுதல், அடியாருடன் கூடுதல், கை குவித்தல், கூத்தாடுதல், மனங் கசிதல், மெய் யுருகுதல் முதலிய சிவனடியார்க் கின்றியமையாது அமைந்த இலக்கணங்களாம். இக் கருத்துப்பற்றியே, திருவாசகத்தில்: "ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப் பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பாதமலர், சூடு கின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே!, தேடு கின்றிலை தெருவுதோ லறறிலை செய்வதொன் றறியேனே." எனக் கூறியதுவுமாம். (3)

அத்தனைச், சிற்றம் பலவனை, என்னுயி ராகிநின்ற
சுத்தனைச், சுத்த வெளியா னவனைச், சுகவடிவாம்
நித்தனை, நித்த நிராதார மாகிய நின்மலனை,
எத்தனை நாள்செல்லு மோ? மன மே! கண் டிறைஞ்சுதற்கே.

(இ - ள்) மனமே! - நெஞ்சமே!, அத்தனை - (எனது) அப்பனை; சிற்றம்பலவனை - சிதாகாயத்து நடிப்பவனை; என் - அடியேனுடைய, உயிர் ஆகிநின்ற - உயிராகி யெழுந்தருளிய, சுத்தனை - பரிசுத்த முடையவனை; சுத்த வெளி ஆனவனை - வெறு வெளியானவனை; சுக வடிவு ஆம் - சுக சொரூபமாகிய, நித்தனை - நித்தியமானவனை; நித்தம் - எக்காலத்தும், நிராதாரமாகிய - ஆதார மற்றிருக்கின்ற, நின்மலனை - மலமில்லாதவனை; கண்டு - கண்ணாரத் தரிசித்து, இறைஞ்சுதற்கு - வணங்குவதற்கு, எத்தனை நாள் - எத்தனைகாலம், செல்லுமோ? - கழியுமோ? (சொல்வாயாக!) என்க.

(வி - ரை) 'எத்தனை நாள்செல்லு மோ? மன மே! கண் டிறைஞ்சுதற்கே' என்றதனால், இதுகாறும் இவர் கண்டதும் இறைஞ்சினதும் தடத்தின்பாலேயாகி இனிச் சொரூபத்தினை நாடிக்காணவேண்டு மெனவும் விரும்பினாராயிற்று. தடத்தமும், சொரூபமுமாகிய இரண்டும் முதல்வனுக்குரிய அனாதி நித்தியமாகிய இலக்கணமே யாயினும், தடத்தம் துவிதத்தையும், சொரூபம் அத்துவிதத்தினையும் விளக்கலின் இரண்டாவதனையும் நாடினர். (4)

கண்டா ருளத்தினிற் காலூன்றிப் பெய்யுங் கருணைமுகி
லண்டார் புரத்துக்கு மன்பர் வினைக்கு மசனிதன்னைக்
கொண்டாடி னோர்முனங் கூத்தாடு மத்தன்றன் கோலமெல்லாம்
விண்டாலம் மா! ஒன்றுங் காணாது; வெட்ட வெறுவெளியே.

(இ - ள்) கண்டார் - (முதல்வனாகிய) தன்னை யுள்ளபடி தரிசித்தார், உள்ளத்தினில் - மனங்களில், கால் ஊன்றி - அடியிட்டு, கருணை பெய்யும் - கருணை மழையினைப் பொழிகின்ற, முகில் - மேகமாம், அண்டார் - பகைவர்களுடைய, புரத்துக்கும் - திரிபுரங்கட்கும், அன்பர் - சிவனடியார், வினைக்கு - வினையினுக்கும், அசனி - இடியாம், தன்னை - (முதல்வனாகிய) தன்னை, கொண்டாடினர் - தேடித்தரித்தார், முன்னம் - (அவர்கட்கு) எதிரில், கூத்தாடும் - நிர்த்தனஞ் செய்யும், மத்தன் - உன்மத்தன், கோலம் எல்லாம் - (அம் முதல்வன்) திருக்கோலங்களையெல்லாம், விண்டால் - சொல்லலாமென்றாக், ஒன்றும் - சிறிதும், காணாது - காணப்படாது: வெட்ட வெறு வெளியே - (காணப்படுவது) சிதாகாயமேயாம்; அம்மா! - ஆச்சரியம்! என்க.

(வி - ரை) அடியார்க்குக் கருணை செய்வானும், அவர் வினைகளைப் போக்குவானும், அவர்கள் முன் பிரத்தியட்ச மாவானுமாகிய முதல்வன் உண்மையினை விசாரிக்குமிடத்து எவற்றினையுங் கடந்து நின்ற சிதாகாய சொரூபனென்பார், 'கோலமெல்லாம், விண்டாலம் மா! ஒன்றுங் காணாது; வெட்ட வெறுவெளியே' என்றனர். திருமந்திரம்: "பெருநில மாயண்ட மாயண்டத்தப்பாற், றருநில மாய்நின்ற கொள்கைய னீசன், பெருநில மாய்நின்ற தாங்கிய தானோ, னருநிலை யாய்நிறை வாதிப் பிரானே!" என்றதனாற் காண்க. (5)

வெளியான நீயென் மனவெளி யூடு விரவின்ஐயா!
'ஒளியாருங் கண்ணு மிரவியும் போ'னின் றுலாவுவன்காண்;
அளியாருங் கொன்றைச் சடையாட, அம்புலி யாடக்,கங்கைத்
துளியாட, மன்று ணடமாடு முக்கட் சுடர்க்கொழுந்தே!

(இ - ள்) வெளியான நீ - சிதாகாயரூபமாக விளங்குந் தேவரீர், என் - அடியேனுடைய, மன வெளியூடு - மனாகாயத்தின்கண்ணே, விரவின் - கலந்தால், ஐயா! - ஐயனே, ஒளி ஆரும் - ஒளி பொருந்திய, கண்ணும் - விழியும், இரவியும் - சூரியனும், போல - போல, நின்று - தங்கி, உலாவுவன் - உலாவுவேன்; அளி ஆரும் - வண்டுகள் நிறைந்த, கொன்றை - கொன்றைமாலையினைத் தரித்த, சடை ஆட - சடாபாரம் அசையவும், அம்புலி ஆட - அச் சடையின்கண்ணே மெள்ள சந்திரன் அசையவும், கங்கை - கங்கையின், துளி ஆட - நீர்த்துளி அசையவும், மன்றுள் - சிற்சபையில், நடம் ஆடும் - ஆனந்த நிர்த்தனஞ்செய்யும், முக்கண் - மூன்று விழிகளையுடைய, சுடர் கொழுந்தே! - அக்கினிப் பிழம்பே!, என்க.

(வி - ரை) மனவெளியூடு விரவல் ஆவது, ஆன்மாவினிடத்தில் திரோதான சத்தியால் தடையுற்றிருந்த முதல்வன் வெளிப்பட்ட அவசரமேயாம். அங்ஙனம் வெளிப்பட்ட காலத்து ஆன்மாவும் பரமான்மாவும் கண்ணும் இரவியும்போல அத்துவிதமாக விளங்குவா ராகலின், 'கண்ணு

பிரவியும் போனின் றலாவுவன்' என்றனர். அது அபேதத் தன்மையினை விளக்கியவாறாயிற்று. இதனால், பொற்பணிபோ லபேதங் கூறுவார் மத மறுக்கப்பட்டது, என்னை? பொன்னுக்கு பணிக்கு மாற்ற ஒன்றுஞற் போல, எல்லார்க்குஞ் சுகதுக்கங்கள் ஒத்தல்வேண்டு மாகலின். (6)

கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக் குரைகடலி
லழுந்தாத வண்ணநின் பாதப் புணைதந் தருள்வதென்றோ?
எழுந்தா தரவுசெ யெம்பெரு மான்! என் றிறைஞ்சி விண்ணோர்
தொழுந்தா தையே! வெண் பொடிபூத்த மேனிச் சுகப்பொருளே!

(இ - ள்) விண்ணோர் - தேவர்கள், எழுந்து - எழுந்துநின்று, எம் பெருமான் - எமது பெருமானே, ஆதரவு செய் - ஆதரவினை யுண்டாக்கு!, என்று - என்னத் தோத்தரித்து, இறைஞ்சி தொழும் - வணங்கித் தொழுதற்கேற்ற, தாதையே! - தந்தையே!, வெண்பொடி பூத்த - திருவெண்ணீறுண்டாய, மேனி - திருமேனியினை வாய்ந்த, சுக பொருளே! - ஆனந்த சொரூபமே!, கொழு - செழிய, தாது உறை - மகரந்தம் பொருந்திய, மலர் கோதையர் - மலரைச் சூடிய மாதர்களுடைய, மோகம் - ஆசையாகிய, குரை கடலில் - ஆரவாரத்துடன் கூடிய சமுத்திரத்தில், அழுந்தாதவண்ணம் - அமிழாதபடி, நின்பாதப்புணை - தேவரீர் திருவடியாகிய மரக்கலத்தினை, தந்தருள்வது - கொடுத்தருளுவது, என்றோ? - எக்காலமோ? (அறிகிலேன்), என்க.

(வி - ரை) உலகர் மரக்கலத்தினைக் கொண்டு சமுத்திரத்தினைக் கடப்பதுபோல, சிவனடியார் இறைவ னடியினைக் கொண்டு மோகக்கடலைக் கடப்ப ராகலின், முதல்வன் பாதத்தினைப் புணையாகவும், மோகத்தினைக் கடலாகவும் கூறிவைத்தனர். திருக்குறள்: "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேரா தார்." என்றதும் இக் கருத்துக்கொண்டேயாம். இதனால் இறைவ னடியினை யடையாதார்க்கு மோகக்கடல் கடத்தலருமையா மென்பதாயிற்று. (7)

சுகமாகு ஞானந் திருமேனி யாகநல்ல தொண்டர்தங்க
ளகமேபொற் கோயி லெனமகிழ்ந் தோமன்று ளாடியகற்
பகமே! உன் பொன்னடி நிழல்கண் டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யானவ ருங்கோடை நீங்குந் திறமிலையே.

(இ - ள்) சுகம் ஆகும் - சுகோதயம் விளைவதற் கேதுவாகிய, ஞானம் - ஞானமே, திருமேனி ஆய் - திருமேனியாகக் கொண்ட, நல்ல தொண்டர்தங்கள் - சிறந்த அடியார்களுடைய, அகமே - மனமே, பொன் கோயில் என மகிழ்ந்து - அழகிய கோயிலாகக் கொண்டு சந்தோஷித்து, மன்றுள் - சிற்றம்பலத்தில், ஆடிய - கூத்தாடின, கற்பகமே! - கற்பக விருட்சமே!, உன் - தேவரீருடைய, பொன் - அழகிய, அடிநிழல் - திரு

வடி நிழலை, கண்டால் அன்றி - தரிசித்தால் அல்லது, பாவிக்கு - பாவி யாகிய அடியேனுக்கு, இந்த செகமாயை ஆன - இப்பிரபஞ்ச மாயை யாகிய, அரும் கோடை - நீக்குதற்கரிய கோடையானது, நீங்கும் திறம் இல்லை - நீங்கும் வகை யில்லை, என்க.

(வி - ரை) உலகர் கோடையினு லுண்டாகிய வெப்பத்தினைத் தணித்துக்கொள்ளற்கு மரநிழலைத் தேடி யடைதல்போல, சிவனடியார் மாயையா லுண்டாகிய தீமையினை நீக்கிக்கொள்ளற்கு முதல்வன் றிருவடி யினை நாடுவராகலின், மாயையினைக் கோடையாகவும், இறைவன் அடி நிழலினை மரநிழலாகவும் கூறினர். இதனால் இறைவ னடியினை யடையா தார்க்குப் பிரபஞ்சமாயை நீங்கும் வகை யில்லை யென்பதாயிற்று. (8)

நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே
தூங்காமற் றூங்கினல் லாதே யெனக்குச் சுகமுமுண்டோ ?
ஓங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப்,
பாங்கா நடத்தும் பொருளே ! அகண்ட பரசிவமே !

(இ - ள்) ஓங்காரம் ஆம் - பிரணவ சொரூபமாகிய, ஐந்து எழுத்தால் - பஞ்சாக்கரத்தால், புவனத்தை - புவனங்களை, உண்டுபண்ணி - உண்டாக்கி, பாங்கு ஆ - முறையாக, நடத்தும் - அவைகளை நடத்து கின்ற, பொருளே ! - வஸ்துவே !, அகண்ட பரசிவமே ! - அகண்டாகார பரமசிவனே !, நீங்காது - நீங்காமல், உயிருக்கு - ஆன்மாக்களுக்கு, உயிர் ஆகி - ஆன்மாவாகி, நின்ற - தங்கிய, நின்னை - தேவரீரை, அறிந்து - உணர்ந்து, தூங்காமல் தூங்கின் அல்லது - தூங்காமல் தூங்கினாலன்றி, எனக்கு - அடியேனுக்கு, சுகமும் உண்டோ ? - ஆனந்த முண்டாகுமோ ? என்க.

(வி - ரை) உச்சாரணமாத்திரத்தால் பாசத்தினின்றுந் தாண்டி யுயாச் செய்கின்றமையால் ஓம் என்று கூறப்படும். ஓம் என்று உச்சரிக்கப் படும்போது நாதமாயும், ஓம் என்று எழுதும்போது விந்துவாயும், அகர உகர மகர மூன்றும், விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலிவடிவுங் கூடிய போது ஐந்தெழுத்தாயும் விளங்கும். இது தூல பஞ்சாட்சரமாம். சூட்சும பஞ்சாட்சரம் - “ந - ம - சி - வ - ய” என்பதேயாம். தூல பஞ்சாட்சரமாகிய பிரணவம் வேறு துணை வேண்டாது உச்சரிக்கப்படுவது போல, சூட்சும பஞ்சாட்சரமும் வேறொன்றி னாசிரய மில்லாம லுச்சரிக் கப்படும். எங்ஙனமெனின், ஓம் என்பது சேராத வொரு மந்திரமு மில்லை. ஓம் என்பது உயிரும், ஏனை மந்திரம் உடல்களுமாம். “ஓம் - ந - மோ - நா - ரா - ய - ணா - ய” என்பதில் ஓம் என்பதனை நீக்கின் அஷ்டாக்ஷரி போய் சடாட்சரியாம். ஓம் என்பது சேராதபோது அந்த மந்திரம் அவலமாம். இப்படியே எந்த மந்திரத்தையும் படிக்கவேண்டும். இந்நியதி பஞ்சாட்சரத்திற்கு மாத்திரங் கிடையாது. இதில் பிரணவஞ்

சேர்த்தால் பஞ்சாட்சரமென்பது போய் சடாட்சரமாகச் சொல்ல வேண்டி வரும். ஆகையினாலேயே ஓம் என்பது சேராமலே பஞ்சாட்சரம் சீவித்தும், ஓம் என்பது சேர்ந்தே ஏனைய மந்திரங்கள் சீவித்தும் இயங்கலால், பஞ்சாட்சர மந்திரம் சீவிதமந்திர மென்றும், ஏனைய தேவதாபரமான மந்திரங்கள் பிரணவம் சேராதபோது சடமந்திரங்க ளென்றுங் கூறப்படும். பிரணவத்திற்கும் பஞ்சாட்சரத்திற்கும் இத்தகைய சமத்துவ அபேத சம்பந்தங் கண்டே 'ஓங்கார மாமைந் தெழுத்து' என்றனர். (9)

சிவமாதி நான்முகக் கோவந்த மாமறை செப்புகின்ற
நவமா யிலங்கிய வொன்றே! இரண்டற்ற நன்மைபெறு
தவமே தருமைம் புலப்பொறிக் கேயென் னறிவுபொல்லாப்
பவமே விளைக்கவென் றோவெளி மானெனப் பாய்ந்ததுவே.

(இ - ள்) சிவம் - சிவபெருமானே, ஆதி - முதற்பொருள், (என்று) நான்முகக்கோ - பிரமன், வந்த - கற்றுக்கொண்ட, மா மறை - பெரிய வேதங்கள், செப்புகின்ற - சொல்லுகின்ற, நவம் ஆய் - புதுமை யுடையதாய், இலங்கிய - விளங்காநின்ற, ஒன்றே! - ஒப்பற்ற பொருளே!, இரண்டு அற்ற - அத்துவித சம்பந்தமாயுள்ள, நன்மை பெறுது - நலத்தினை யடையாமல், அவமே தரும் - பயனற்றதனையே கொடுக்கும், ஐம்புலப் பொறிக்கே - பஞ்சேந்திரியங்களில், என் அறிவு - என் மனமானது, பொல்லா - கொடிதாகிய, பவமே விளைக்க என்றோ - பிறவியையே விளைவித்தற் கென்றுதானோ, வெளிமான் என - வெளிமானைப்போல, பாய்ந்தது - தாவிக் குதித்தது, என்க.

(வி - ரை) அதர்வசிகோபநிடதம் : 'ஶிவ ஏகோத்யேயஸ்ஶிவக ஃ ஸர்வ மந்யத்பரியஜ்யமாப்தாதாவஶிவா " சிவசங்கரனான சிவனொருவனே மற்றெல்லாவற்றையும் விட்டுத் தியானிக்கத்தக்கவன்" எனக் கூறினமையின், 'சிவமாதி நான்முகக் கோவந்த மாமறை செப்புகின்ற, நவமாய்' என்றனர். மாண்டுக்கியோபநிடதம்: "ஸ்வம்ஸாந்தமத்வைதம்" எனக் கூறினமையின், 'ஒன்றே! யிரண்டற்ற நன்மை' என்றனர். ஈண்டு 'இரண்டற்றது' என்றது அத்வைதம். 'வெளிமான்' என்றது 'தாவுதற் றொழிலிலே வல்ல வொருமான்.' (10)

ஆறொத் திலங்கு சமயங்க ளாறுக்கு மாழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான வானந்த வெள்ளமொன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர் சித்தத்திலே
யூறிப் பரந்தண்ட கோடியெல் லாநின் றுலாவியதே.

(இ - ள்) ஆறு - நதிகளை, ஒத்து இலங்கு - ஒத்து விளங்குகின்ற, சமயங்கள் ஆறுக்கும் - ஆறு சமயங்களுக்கும், ஆழ் கடலாய் - ஆழ்ந்த கடலுக்கு நிகராய், வீறி பரந்த - விஞ்சிப் பரவிய, பரமான - மேலான,

ஆனந்த வெள்ளம் ஒன்று - ஆனந்தப் பெருக்கொன்று, தேறி தெளிந்து - தெள்ளிதிற் றெளிந்து, நிலைபெற்ற - நிலையினை யடைந்த, மாதவர் - தவத்தினர், சித்தத்திலே - இருதயத்திலே, ஊறி - கசிந்து, பார்த்து - பரவி, அண்டகோடி எல்லாம் - அண்டகோடிகளெல்லாம், நின்று உலாவியது - நின்று வியாபித்தது, என்க.

(வி - ரை) நதிகள் சமுத்திரத்தினை யடைவதுபோலச், சமயங்கள் முதல்வனை யடைதற் கேதுவாக வுள்ளன என்பார், 'ஆறெறத் திலங்கு சமயங்க ளாறுக்கு மாழ்கடலாய்' என்றனர். ஈண்டுச் 'சமயங்க ளாறுக்கும்' என்றதனால் அகச் சமயங்களை மாத்திரம் கொள்ளவேண்டும். என்னை ? சில நதிகள் சமுத்திரத்தினில் சங்கம மாகாமல் இடைவழியிலே நின்றுவிடுமாறுபோல, மற்றைய முக்கூற்றுப் புறச் சமயங்கள் முதல்வனை யடைதற்கு எதுவாகா திருத்தலினு லென்க. (11)

நடக்கினும், ஓடினும், நிற்கினும் வேறொரு நாட்டமின்றி
கிடக்கினுஞ், செவ்வி திருக்கினும், நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்ச(ம்); மனமற்ற பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்; பர மாநந்த நித்திரை மூடிடுமே.

(இ - ள்) நடக்கினும் - நடந்தாலும்; ஓடினும் - ஓடினாலும்; நிற்கினும் - நின்றாலும்; வேறு ஒரு நாட்டம் - அந்நிய சிந்தை, இன்றி - இல்லாமல், கிடக்கினும் - கிடந்தாலும்; செவ்விது - சுகமாக, இருக்கினும் - இருந்தாலும்; நல் - உத்தமமான, அருள் கேள்வியில் - திருவருட் சம்பந்தமான விசாரணையில், என் - எளியேனுடைய, நெஞ்சம் - மனமானது, தொடக்கும் - கட்டுப்பட்டுக் கிடக்கும்; யான் - அடியேன், மனம் அற்ற - மன மிறந்த, பூரண தொட்டிக்குள்ளே - வியாபகத் தொட்டிலில், முடக்குவன் - அடங்குவேன்; பரமானந்த - சிவானந்தமாகிய, நித்திரை - யோக நித்திரை, மூடிடும் - அடியேனை மூடிக்கொள்ளும், என்க.

(வி - ரை) உண்மை யடியவர்கள் எக்காலத்தும் முதல்வனைச் சிந்தித்துக் கொண்டிருப்ப ராகலின், 'நடக்கினும்......நல்லருட் கேள்வியில், தொடக்கும்' என்றனர். திருக்கருவையந்தாதி : "இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும்போதும், பொருக்கென நடக்கும் போதும் பொருந்திவூண் டுய்க்கும்போதும், முருக்கிதழ் கனிவா யாரை முயங்கி நெஞ் சழியும் போதும், திருக்களா வுடைய நம்பா! சிந்தையுன் பாலதாமே." என்றனர். (12)

என்னாத தெண்ணிய நெஞ்சே! துயரொழி! என்னிரண்டு
கண்ணே! உறங்குக! என்னுணை முக்கட் கருணைப்பிரான்
தண்ணார் கருணை மௌனத்தி னுன்முத்தி சாதிக்கலாம்;
நண்ணாத தொன்றில்லை; எல்லா நலமு நமக்குளவே.

(இ - ள்) எண்ணுதது - எண்ணத்தகாததனை, எண்ணிய - நினைத்த, நெஞ்சே ! - மனமே !, துயர் - நினது துன்பத்தினை, ஒழி ! - நீக்குவாயாக !, என் - என்னுடைய, இரண்டு கண்ணே ! - இரண்டு கண்களே !, உறங்குக - (சுகமாக) உறங்குவீர்களாக !, என் ஆணை - என்மீது ஆணை, முக்கண் - திரிநேத்திரதாரியாகிய, கருணைப்பிரான் - காருண்ணிய மூர்த்தியினது, தண் ஆர் - தன்மையினை வாய்ந்த, கருணை - கருணையினுல் (உண்டாகும்), மௌனத்தினுல் - மோன நிலையினுல், முத்தி சாதிக்கலாம் - முத்தியினை யடையலாம்; நண்ணுதது - (இனி நமக்குக்) கிடையாத பொருள், ஒன்று இல்லை - சிறிது மில்லை; எல்லா நலமும் - எல்லா நன்மைகளும், நமக்கு உள - (இனி) நமக்கு உண்டாகும், என்க.

(வி - ரை) "மோன மென்பது ஞான வரம்பு" என்றதற்கேற்ப ஒருவனுக்கு மோனநிலை கைகூடி வரவே, ஞானங் கைவல்யமாம்; ஞானங் கைவல்யமாகவே, முதல்வன் தன்னுள் வெளிப்படுவன்; வெளிப்படவே, முத்திநிலை சித்திக்கு மென்பார், 'மௌனத்தி னுன்முத்தி சாதிக்கலாம்' என்றனர். திருக்களிற்றுப்படியார்: "அன்றிவரு மைம்புலனு நீயு மசையாமல், னின்றபடி நிற்க முன்னிற்கும் - சென்று, கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு, மொருமகடன் கேள்வ னுனக்கு." என்றதனுற் காண்க.

நானென் றொருமுத லுண்டென்ற நான்றலை நாண, என்னுள்
தானென் றொருமுதல் பூரண மாகத் தலைப்பட்(டு),ஒப்பி
லானந்தந் தந்(து),என் னறிவையெல் லாமுண் டவசநல்கி,
மோனந் தனைவிளைத் தாலினி யாது மொழிகுவதே?

(இ - ள்) நான் என்று - நான் என்று, ஒரு முதல் - ஒரு முதன்மையான பொருள், உண்டு என்ற - உண்டென அகங்கரித்துத் திரிந்த, நான் - அடியேன்; தலை நாண - வெட்கமடைய, என்னுள் - என் மனத்தின் கண்ணே, தான் என்று - தான் என்று, ஒரு முதல் - ஒரு (ஒப்பற்ற) முதற்பொருள், பூரணமாக தலைப்பட்டு - வியாபகமுற்று, ஒப்பில் - சமத்துவ மில்லாத, ஆநந்தம் தந்து - சிவானந்தத்தைக் கொடுத்து; என் அறிவை எல்லாம் - என்னறிவு முழுவதினையும்; உண்டு - வியாப்பியமாகக் கொண்டு, அவசம் நல்கி - பரவசங் கொடுத்து; மோனந்தனை - மவுனநிலையினை, விளைத்தால் - உண்டாக்குவதானுல், இனி யாது மொழிகுவது? - இனி என் சொல்வது?, என்க.

(வி - ரை) 'நானென் றொருமுத லுண்டென்ற நான்' என்பது அறிவிலாமையாகக் கிடந்த நானும். அங்ஙன மிருந்தானைக் கண்டு வலிய ஆட்கொண்டா னென்பார், 'என்னுள், தானென் றொருமுதல் பூரண மாகத் தலைப்பட்டு' என்றனர். திருவாசகம்: "அறிவிலாமை யன்றே கண்ட தாண்டநா ளறிவனே வல்லனே வருளீசனே." என்றதனுற்

காண்க. 'அறிவனோ வல்லனோ' என்ற குறிப்பு யாது மொழிகுவதே யென்றதாம். (14)

தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தானறிந்து,
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாய்த்
தீனன் றனக்கிங் கிரங்கினை யே! இனிச் சிந்தைக்கென்று
மானந்தந் தானல்ல வோ? பர மே! சச்சி தானந்தமே!

(இ - ள்) தானம் - கொடை, தவம் - தவம், சற்றும் இல்லாத - சிறிது மில்லாத, நான் - அடியேன், உண்மைதான் அறிந்து - யதார்த் தத்தைத் தேர்ந்து, மோனம் - மவுனநிலையே, பொருள் என - (சத்தியப்) பொருளென, கண்டிட - தெரிந்து கொள்ள, சற்குரு மோனனுமாய் - மவுன சற்குருவாகி, தீனன் தனக்கு - எளியேனுக்கு, இங்கு - இவ்விடத்து, இரங்கினையே! - இரங்கி யருளினையே!, இனி - இனி, சிந்தைக்கு - மனத் திற்கு, என்றும் - எக்காலமும், ஆனந்தந்தான் அல்லவோ - இன்ப மன்றோ?, பரமே! - மேலானவனே!, சச்சிதானந்தமே - உண்மை யறிவா னந்தப் பொருளே!, என்க.

(வி - ரை) நன்மை சிறிது மில்லாத எளியேனிடத்து வலிய வந்து ஆட்கொண்டு உண்மை யறிவித்துக் காத்தனை யென்பார், 'தானந் தவஞ் சற்றுமில்லாத......இரங்கினை' என்றனர். திருவாசகம்: "வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று, போதுநான் வினைக்கேடனென்பாய் போல, வினையறு னென்றுன்னை யறிவித் தென்னை, யாட்கொண்டெம் பிரானு னாய்" என்றதனுற் காண்க. (15)

எனக்கோர் சுதந்திர மில்லையப் பா! எனக் கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொரு ளே! என்னை வாழ்வித்திட
நினக்கே பர(ம்); நின்னை நீங்காத பூரண நின்கருணை
தனக்கே பரம்; இனிச் சும்மா விருக்கத் தகுமென்றுமே.

(இ - ள்) அப்பா! - அப்பனே!, எனக்கு - அடியேனுக்கு, ஓர் சுதந் திரம் இல்லை - யாதொரு சுதந்திரமு மில்லையாகும்; எனக்கு - அடியே னுக்கு, எய்ப்பில் - இளைப்பில், வைப்பு ஆய் - நிட்சேபமாகி, மனக்கோது - மனக்கிலேசத்தினை, அகற்றும் - நீக்கும், பரம்பொருளே! - மேலான வஸ்துவே!, என்னை - அடியேனை, வாழ்வித்திடல் - வாழ்விப்பது, நினக்கே - தேவரீருக்கே, பரம் - கடமையாகும்; (அன்றியும்) நின்னை - தேவரீரை, நீங்காத - பிரியாத, பூரணம் - பூரணமாகிய, நின் கருணை தனக்கே - பெருங் கருணைக்கே, பரம் - கடமையாகும்; (இது வாய்த்தால்) இனி - இனிமேல், சும்மா இருக்க - (அடியேன்) மவுனமுற்றிருக்க, என் றுமே தகும் - எக்காலமுந் தகும், என்க.

(வி - ரை) 'எனக்கோர் சுதந்திரமில்லை' என்றதனால் ஆன்மா எக்காலத்தும் பாரதந்திரனே யன்றி சுதந்திர னல்லவென்றும், முதல்வனே சுதந்திர னென்றும் ஏற்படும். என்னை? ஆன்மா அறிவிக்க அறிதலானும், அறிந்தவை மறத்தலானும், அறிந்திடுந் தன்னையுந் தானறியாமையானுமாம். சிவஞான சித்தியார்: "அறிந்திடு மான்மா வொன்றை யொன்றினா லறிதலானு, மறிந்தவை மறத்தலானு மறிவிக்க வறித லானு, மறிந்திடுந் தன்னை யுந்தா னறியாமை யானுந் தானே, யறிந்திடு மறிவ னன்று மறிவிக்க வறிவ னன்றே." என்றதனாற் காண்க. (16)

இடப்பெறு வீடு மின்னார்சேய் சகமு மிருநிதியு
முடம்பைவிட் டாருயிர் போம்போது கூடியுடன் வருமோ?
மடம்பெறு மாயை மனமே! இனியிங்கு வா! மௌனி
திடம்பெற வைத்த மௌனஞ் சகாயம்; தெரிந்துகொள்ளே!

(இ - ள்) இடம்பெறு - விசாலமான, வீடும் - இடமும், மின்னார் - மாதர்கள், சேய் - புத்திரர், சகமும் - உலகமும், இரு நிதியும் - அபார மான திரவியமும், (இவை யனைத்தும்) ஆர் - அருமையான, உயிர் - உயிரானது, உடம்பை விட்டு - தேகத்தினை நீங்கி, போம்போது - போம் காலத்தில், கூடி - ஒருங்கு சேர்ந்து, உடன் வருமோ? - (நம்முடன்) வருமோ?, மடம் பெறு - அறியாமை வாய்ந்த, மாயை - மாயா காரிய மாகிய, மனமே! - நெஞ்சே!, இனி - இனிமேல், இங்கு வா - என் சமீபத்தில் வருக!, மௌனி - மவுனகுரு, திடம் பெற வைத்த - பலமாக வமைத்த, மௌனம் - மவுனநிலையே, சகாயம் (நமக்கு எப்போதும்) உதவியாகும்; தெரிந்துகொள் - உணர்வாயாக!, என்க.

(வி - ரை) பிரபஞ்சத்தின்கண்ணே நம்மதென்று சொல்லிக்கொண் டிருந்த யாவும் நீங்கப்பெற்று, ஆன்மா வொன்றே களித்து இவ் வுலகினை விட்டு நீங்கு மென்பார், 'இடம்பெறு வீடும்......உடன்வருமோ?' என்றனர். பட்டினத்தார்: "மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசன் மட்டே, யினமான சுற்ற மயானமட் டேவழிக் கேது துணை?" என்றதனாற் காண்க. மோனமாகிய தவமே ஆன்மாவிற்குத் தக்க துணையென்பார், 'மௌனஞ் சகாயம்; தெரிந்து கொள்ளே!' என்றனர். ஷை "தினையா மளவேனு மளவா கினுமுன்பு செய்த தவந், தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே." என்றதனாற் காண்க. (17)

நாற்றச் சடலத்தை, ஒன்பது வாச னடைமனையைச்,
சோற்றுப் பசையினை, மும்மல பாண்டத் தொடக்கறையை,
ஆற்றுப் பெருக்கன்ன கன்மப் பெருக்கை, அடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குண் டோகதி சேர்வதுவே?

(இ - ள்) நாற்றம் - துர்க்கந்தம் வீசத்தகுந்த, சடலத்தை - உடலினை; ஒன்பது வாசல் - ஒன்பது துவாரங்களையுடைய, நடை மனையை -

நடக்கும் வீட்டினை ; சோற்றுப் பசையினை - சாதத்தாலாகிய பசையினை ; மும்மல பாண்டத் தொடக்கு - மூன்று மலங்க ணிறைந்த பாண்டமாகிய தொடக்கினையுடைய, அறையை - சிறு வீட்டினை ; ஆற்றுப் பெருக்கு அன்ன - நதியின் பெருக்கினை யொத்த, கன்மப் பெருக்கை - கரும வெள்ளத்தினை ; அடர் - நெருங்கிய, கிருமி - புழுக்களையுடைய, சேற்றை - சேற்றினை, துணை என்ற - சகாயமென் றெண்ணி யிருந்த, நாய்க்கும் - நாயினேற்கும், கதி சேர்வது - கதியை யடைவது, உண்டோ? - உளதோ ?, என்க.

(வி - ரை) ஆன்மாத் தாங்கிக்கொண் டிருக்கும் உடலானது எந்த வகையினும் பிரயோசன முள்ளதல்ல வென்பார், 'நாற்றச் சடலத்தை...... உண்டோ கதி சேர்வதுவே' என்றதனுற் காண்க. பட்டினத்தார்: "ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த, பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய, காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே, யேற்றுத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி யேகம்பனே!" என்றதனுற் காண்க. (18)

பொய்யா ருலக நிலையல்ல, கானற் புனலெனவே!
மெய்யா வறிந்தென்ன?, என்ற னிதனை விடப்போமோ?
கையான் மௌனந் தெரிந்தே,கல் லானிழற் கண்ணிருந்த
வையா! அப் பா! என் னரசே! முக் கண்ணுடை யாரமுதே!

(இ - ள்) பொய் ஆர் - பொய் நிறைந்த, உலகம் - இவ் வுலகமானது, நிலை அல்ல - நிலையுடைத்தான தன்று, கானல் புனல் - கானற்சலம்போன் றிருப்பதாம், என - என்று, மெய் ஆ - உண்மையாக, அறிந்து என்ன - தெரிந்துகொண் டதனு லென்ன பிரயோசனம் ?, என்னல் - அடியேனல், இதனை விடப்போமோ ? - இவ் வுலகை நீங்கக்கூடுமோ ?, கையால் - (சின் முத்திரைக்) கையால், மௌனம் தெரிந்து - மவுனநிலை யோர்ந்து, கல்லால் நிழல்கண் - கல்லால விருட்சத்தின் நிழலில், இருந்த - எழுந்தருளி யிருந்த, ஐயா ! - ஐயனே !, அப்பா ! - அப்பனே !, என் அரசே ! - என் னரசனே !, முக்கண்ணுடைய - மூன்று கண்களையுடைய, ஆர் அமுதே ! - அரிய அமுதே !, என்க.

(வி - ரை) பல சென்மங்களாக இவ் வுலகவாழ்வினை யனுபவித்து வந்த தன்மையால் திடீரென இவ் வுலகினை வெறுத்தற் கேலாதென்பார், 'பொய்யா ருலகம்......விடப்படுமோ' என்றனர். பட்டினத்தார்: "விடப் படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கை" என்றதனுற் காண்க. (19)

ஆரா வமுதென மோனம் வகித்துக்,கல் லானிழற்கீழ்ப்
போராது நால்வ ருடன்வாழ்முக் கண்ணுடைப் பேரரசே!
நீரா யுருகவுள் ளன்புதந் தே,சுக நிட்டையைநீ
தாரா விடினென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே.

(இ - ள்) ஆரா - தெவிட்டாத, அமுது என - அமுதம்போல, மோனம் வகித்து - மவுன முத்திரையைத் தாங்கி; கல்லால் - கல்லால விருட்சத்தின், நிழல் கீழ் - நிழலிலே, பேராது - நீங்காமல், நால்வருடன் - சனகாதி முனிவர் நால்வர்களுடன், வாழ் - வாழ்கின்ற, முக்கண் உடை - மூன்று கண்களினையுடைய, பேர் அரசே! - பெரிய அரசனே!, நீராய் - நீரின் தன்மையாய், உருக - உருகும்வண்ணம், உள் அன்பு - மனத்தி லன்பினை, தந்து - கொடுத்து; சுக - ஆநந்தமயமாகிய, நிட்டையை - நிட்டையினை, நீ - தேவரீர், தாராவிடின் - கொடாவிடில், என் - அடியேனுடைய, பெருமூச்சுதான் - நெட்டுயிர்ப்புத் தான், அ தனஞ்சயனே - தனஞ்சயன் என்னும் அக் காற்றேயாகும், என்க.

(வி - ரை) தசவாயுக்குள் தனஞ்செயனென்பதொன்று. இது உயிர் நீங்கிய பின் தலையினைக் கிழித்துச் செல்வது. சுக நிஷ்டையாவது - சிவ ராஜயோகமாம். இந் நிஷ்டையே சிவஞானத்திற் கங்கமாம்; அல்லாத நிஷ்டை ஹடயோக மென்னப்படும். இந் நிஷ்டையிற் சிறிது பிழைத்தால் தேகத்தில் யாதாமொரு பாரிசத்தில் கிழிப்புண்டு உயிர் நீங்குமாம். இக் கருத்துப்பற்றியே 'சுக நிட்டையை நீ, தாரா விடினென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே' என்றனர். (20)

**வா**யுண்டு வாழ்த்த; மௌனஞ்செய் போது மௌனவருட்
டாயுண்டு; சேயென்ன வென்னைப் புரக்கச் சதானந்தமா
நீயுண்டு; நின்னைச் சரண்புக நானுண்(டு); என் னெஞ்சமையா!
'தீயுண் டிருந்த மெழுகல வோ?' கதி சேர்வதற்கே.

(இ - ள்) ஐயா! - ஐயனே!, வாழ்த்த - தேவரீரை வாழ்த்திடற்கு, வாய் உண்டு - வாயுள்ளது; மௌனம் செய்போது - மௌனநிலை கூடும் போது, மௌன அருள் - (அதனைக் கூட்டி முடிப்பிக்க) மோன சொரூப மாகிய திருவருளென்னும், தாய் உண்டு - தாயுண்டு; சேய் என்ன - பிள்ளையைப்போல, என்னை - அடியேனை, புரக்க - காப்பாற்ற, சதானந்தம் ஆம் - நித்தியானந்தமாகிய, நீ - தேவரீர், உண்டு - உண்டு; நின்னை - தேவரீரை, சரண் புக - அடைக்கலமாகவடைய, நான் உண்டு - அடியேனுண்டு; கதி சேர்வதற்கு - மோட்சமடையும்பொருட்டு, என் - அடியேன், நெஞ்சம் - மனமானது, தீயுண்டிருந்த - தீயினால் காய்ச்சிய, மெழுகு அல்லவோ? - மெழுகாமல்லவோ?, என்க.

(வி - ரை) மோட்சத்தை யடைவதற்கு ஏதுவாயுள்ள சாதனங்களைப் பூர்த்தி செய்துகொள்ளுதற்கான கருவிகளும், அக் கருவிகளைக்கொண்டு அநுபவித்தற் கேதுவாயுள்ள ஆன்மாவும், அவ் ஆன்மா அடையவேண்டிய பலனைத் தருதற்கு முதல்வனும் குறைவற அமையவே, மனம் வயப்படுதற் கென்ன தடை யென்பதாம். (21)

கல்லா லெறிந்தும், கைவில்லா லடித்தும், கனிமதுரச்
சொல்லாற் றுதித்து(ம்),நற் பச்சிலை தூவியுந், தொண்டரின
மெல்லாம் பிழைத்தனர்; அன்பற்ற நானினி யேதுசெய்வேன்?
கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே!

(இ - ள்) கொல்லா விரதியர் - சிவனடியார்கள், நேர் நின்ற - (முன்னில்) பிரத்தியட்சமாக எழுந்தருளிய, முக்கண் - மூன்று கண்களை யுடைய, குருமணியே! - நிறம் வாய்ந்த மாணிக்கமே!, கல்லால் - கற்களினுல், எறிந்தும் - வீசியும்; கை வில்லால் - கையிலேந்திய வில்லினுல், அடித்தும் - மோதியும்; கனி - முக்கனிபோன்ற, மதுரம் - மதுரம் பொருந்திய, சொல்லால் - சொற்களினுல், துதித்தும் - தோத்தரித்தும்; நல் - பரிசுத்தமான, பச்சிலை - பசுமையான பத்திரங்களை, தூவியும் - சாத்தியும்; தொண்டர் இனம் - அடியவர் கூட்டம், எல்லாம் - எல்லாரும், பிழைத்தனர் - பிழைத்தனர்கள்; அன்பு அற்ற - அன்பில்லாத, நான் - அடியேன், இனி - இனிமேல், ஏது செய்வேன்? - என்ன தொண்டினைச் செய்து பிழைக்கக்கடவேன்?, என்க.

(வி - ரை) கொல்லா விரதிய ராவார் - சைவர். 'நேர்நின்ற முக்கட் குருமணியே!' என்றதனுல் முதல்வன் சைவருக்கே முன்னின்று அநுக்கிரகம் செய்வ னென்பதாம். எனவே அசைவர்கட்குக் காலத்திரயத்தும் முதல்வன் அநுக்கிரகம் எவ்விதத்திலுஞ் செய்யா னென்பது சத்தியம். கல்லால் எறிந்தவர் - சாக்கியநாயனுர். கை வில்லா லடித்தவர் - அருச்சுனன். கனிமதுரச் சொல்லாற் றுதித்தவர் - நால்வர் முதலாயினோர். நற்பச்சிலை தூவினோர் - வியாக்கிரபாதர் முதலியோர். ஈண்டு 'மதுரச்சொல்' என்றது தமிழ் மொழியினை, மெல்லோசை யின்ப மியல்பாக இயைந்திருத்தலினுனு மென்க. இது வடமொழிக் கின்றேவெனின், இன்றும். என்னை? அது உரப்பியும், எடுத்தும், கனைத்தும் கூறும் வல்லோசைகளோடு விரவித் திரிபெய்துதலின். இவ் வுண்மை தென்மொழி யென்றதானும் விளங்கும்; தென் - மதுரமான இசை. (22)

முன்னிலைச் சுட்டொழி! நெஞ்சே! நின் போத முளைக்கிலையோ!
பின்னிலைச் சன்மம் பிறக்குங்கண் டாய்! இந்தப் பேய்த்தனமேன்?
தன்னிலை யேநில்லு! தானே தனிச்சச்சி தானந்தமா
நன்னிலை வாய்க்கும்; எண் சித்தியுங் காணு(ம்); நமதல்லவே.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, முன்னிலை சுட்டு - முன்னிலைச் சுட்டினை, ஒழி! - நீக்குவாயாக!, நின் - உன்னுடைய, போதம் - அறிவானது, முளைக்கில் - தலைதூக்கில், ஐயோ! - அந்தோ!, பின்னிலை - பிறகே, சன்மம் - பிறப்பு, பிறக்கும் - உண்டாகும்; இந்த - இத்தகைய, பேய்த்தனம் - பேய்த்தன்மை, என் - எற்றுக்கு?, தன்நிலையே நில்லு! - தனது உண்மை நிலையிற்றனே நிற்பாய்!, தானே - வலிய, தனி - ஒப்பற்ற, சச்சி

தானந்தமாம் - உண்மை யறிவானந்தமாகிய, நல் நிலை வாய்க்கும் - நன்னிலை யானது உண்டாகும்; எண் சித்தியும் - எட்டுவகைச் சித்திகளும், காணும் - பலிக்கும்; நமது அல்லவே - (முன்னிலையாகக் காணப்படும் பொருளனைத்தும்) நம்முடைய தல்லவாம், என்க.

(வி - ரை) பகிர்முகத்திற் காணப்படும் போகங்களில் அறிவைச் செலுத்தில் அவ் அறிவின் வழியே அவா வுண்டாகி, அவ் அவாவினை யனுபவித்தற் பொருட்டுப் பிறப்புண்டாம். ஆகலின், எவ்வகையினும் துவித பாவனை யின்றி வாழுதலினாலேயே முதல்வன் கருணையும், அணிமாதி சித்திகளு முண்டா மென்பதாம். இதனால் என்றும் சுட்டற்று நிற்கவேண்டு மென்பதாயிற்று. ஞானமணிமாலை : "என்னுணை மாணவகா வீடென்று சுட்டாதே, பன்னுரு முண்மைதனைப் பாராதே—நின்னாலே, யொன்றிலது வொன்றுதங் குன்றுனை யொன்றுயே, லொன்றுமிரண் டல்லாத வொன்று." என்றதனாற் காண்க. (23)

சொல்லான் மௌன மௌனமென் றேசொல்லிச் சொல்லிக்கொண்ட
தல்லான் மனமறப் பூரண நிட்டையி லாழ்ந்ததுண்டோ?
கல்லாத மூட னினியென்செய் வேன்? சகற் காரணமாம்
வல்லாள னான மௌன சதானந்த மாகடலே!

(இ - ள்) சகத் காரணம் ஆம் - உலகத்திற்குக் காரணமாகிய, வல்லாளன் ஆன - வல்லவனாகிய, மௌன சதானந்த - மவுனத்தினால் நித்தியானந்தமாகிய, மா கடலே! - பெருஞ் சமுத்திரமே!, சொல்லால் - சொல்லினால், மௌனம் மௌனம் என்றே - நான் மவுனமாக வுள்ளேன் என, சொல்லி - பேசி, சொல்லிக்கொண்டது அல்லால் - சொல்லிக்கொண்டதே யல்லாமல்; மனம் அற - மனம் ஒடுங்க, பூரண நிட்டையில் - பரிபூரண நிட்டையினில், ஆழ்ந்தது உண்டோ? - அழுந்தியது உண்டோ?, கல்லாத மூடன் - (இதற்கேற்ற கல்வியினைக்) கல்லாத மூடனாகிய நான், இனி - இனிமேல், என் செய்வேன்? - என்செயக்கடவேன்?, என்க.

(வி - ரை) பகிர்முகமாயுள்ள பிரபஞ்ச போகங்களிற் சிறிது மறிவைச் செலுத்தாது, பஞ்சேந்திரிய சேஷ்டை யற்று, அந்தர்முகமாக இருந்து முதல்வனை யனுசந்தானஞ் செய்துவரும் மௌன ஞானிகளைப் போல் அடியே னிராது, வாயொன்றினையே மூடிக்கொண்டு காலங் கழிக்கு நானும் மவுனியென அடிக்கடி கூறிவருகின்றே னென்பதாம். (24)

ஆரணா மாகம மெல்லா முரைத்த வருண்மௌன
காரண மூலங்கல் லாலடிக் கேயுண்டு; காணப்பெற்றால்
பாரணங் கோடு சுழனெஞ்ச மாகிய பாதரச
மாரண மாய்விடும்; எண்சித்தி முத்தியும் வாய்த்திடுமே.

(இ - ள்) ஆரணம் - வேதங்கள், ஆகமம் - ஆகமங்கள் ஆகிய, எல்லாம் - எல்லாக் கலைகளும், உரைத்த - திருவாய் மலர்ந்தருளிய, அருள் - கிருபையுள்ள, மௌனம் - மவுன நிலையையுடைய, காரண - (எல்லாவற்றிற்கும்) ஆதாரமான, மூலம் - முதற்பொருள், கல்லால் அடிக்கீழ் - கல்லால விருட்சத்தின் கீழ், உண்டு - உளது ; (அப்பொருளைக்) காணப் பெற்றால் - காணக் கிடைத்தால், பார் - நிலத்தோடும், அணங்கோடு - மாதரோடும், சுழல் - சுழலாநின்ற, நெஞ்சம் ஆகிய - மனமாகிய, பாதரசம் - பாதரசமானது, மாரணம் ஆய்விடும் - மடிந்தொழியும்; எண் சித்தி - எட்டுவகைச் சித்திகளும், முத்தியும் - மோட்சமும், வாய்த்திடும் - கிடைக்கும், என்க.

(வி - ரை) திருமந்திரம்: “வேதமோடாகம மெய்யாமிறைவனூல்” என்றதற் கேற்ப, ‘ஆரண மாகம மெல்லா முரைத்த’ என்றனர். பாதரசம்போல நிலையற்றுத் தத்தளித்துக்கொண் டிருக்கும் மன மொருமைப் பட மவுனநிலைசாதிக்க வேண்டுமாயின், மவுன மூர்த்தியினையே வழிபட்டாலல்லது சித்தியா தென்பதாம். அம் மௌனமூர்த்தி யாவார் கல்லாலடிக் கீழிருந்த தட்சிணாமூர்த்தியேயாம். இம் மவுனங் கைகூடி வரவே சித்தியும் முத்தியும் வாய்த்திடு மென்க. (25)

சித்த மவுனி, வடபான் மவுனி,நந் தீபகுண்ட
சுத்த மவுனி, எனுமூவ ருக்குந் தொழும்புசெய்து,
சத்த மவுன முதன்மூன் றுமௌனமுந் தான் படைத்தேன்;
நித்த மவுனமல் லாலறி யேன்மற்றை நிட்டைகளே.

(இ - ள்) சித்த மவுனி - சித்த மவுனி, வடபால் மவுனி - வடபால் மவுனி, நம் தீபகுண்ட சுத்த மவுனி - நமது தீபகுண்ட சுத்தமவுனி, என்னும் - என்று சொல்லப்படுகிற, மூவருக்கும் - மூன்று பேர்கட்கும், தொழும்பு - தொண்டு, செய்து - இயற்றி, சத்த மவுனமுதல் - சத்தமவுன முதலாகிய, மூன்று மவுனமும் - மூன்று மவுனங்களையும், தான் படைத்தேன் - தான் பெற்றேன் ; நித்தம் - எக்காலத்தும், மவுனம் - மோனம், அல்லால் - அல்லாமல், மற்றை - வேறாகிய, நிட்டைகள் - யோக நிஷ்டைகளினை, அறியேன் - நான் அறிந்தேனில்லை, என்க.

(வி - ரை) வடபால்மவுனி, சித்தமவுனி, தீபகுண்ட மவுனியென அன்வயங்கொண்டு, வடபால்மவுனியாவார் - தட்சிணாமூர்த்தி யெனவும், சித்தமவுனியாவார் - தன்னைத் தடுத்தாண்டுகொண்ட மௌனமுனி யெனவும், தீபகுண்ட சுத்தமவுனியாவார் - மண்டலகுண்ட வேதிகையிட்டுத் தனக்கு மந்திரோபதேசஞ் செய்த தீட்சாகுரு வெனவுங் கொள்க, ‘சத்த மவுன முதல்மூன்று’ என்றது, ‘வாக்கு மவுனம், மன மவுனம், காய மவுன’மாம் ; இவைமுறையே, பொறிமவுனம், கரண மவுனம், காஷ்ட மவுனம் எனவும் சொல்லப்படும். (26)

கண்டே னினதருள் : அவ்வரு ளாய்நின்று காண்பதெல்லா
முண்டே; அதுவு நினதாக்கி னேன்; உவட் டாதவின்ப
மொண்டே யருந்தி யிளைப்பாறி னே(ன்) நல்ல முத்திபெற்றுக்
கொண்டேன்; பராபர மே! எனக் கேதுங் குறைவில்லையே.

(இ - ள்) நினது - தேவரீருடைய, அருள் - திருவருளினை, கண்டேன் - தரிசித்துக்கொண்டேன்; அவ்வருளாய் - அதனருள்மயமாய், நின்று - இருந்து, காண்பது - காணுவது, எல்லாம் - யாவும், உண்டே - உளதே; அதுவும் - அங்ஙனங் காணுந் தன்மையும், நினது - தேவரீரது ஆக, ஆக்கினேன் - அர்ப்பணஞ் செய்துவிட்டேன்; உவட்டாத - தெவிட்டாத, இன்பம் - ஆனந்தத்தை, மொண்டு - முகந்து, அருந்தி - உண்டு, இளைப்பு - மெலிவினை, ஆறினேன் - தீர்த்தேன்; நல்ல - உண்மையான, முத்தி பெற்றுக்கொண்டேன் - மோட்சத்தினை யடைந்தேன்; பராபரமே!- பராபரப்பொருளே!, எனக்கு - அடியேனுக்கு, இனி - இனிமேல், ஏதும் குறைவு - சிறிதும் குறை, இல்லை - இல்லை, என்க.

(வி - ரை) 'முத்தி பெற்றுக்கொண்டேன்' என்பது சீவன்முத்த னாயினேன் என்றபடி. சீவன்முத்த ராவார் திருவருண்மயமா யிருந்து அநுபவிக்கும் போக மனைத்தையும் சிவார்ப்பணஞ் செய்து வாழ்வா ராகலின், 'நினதாக்கினேன்' என்றனர். (27)

மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட மூலத்து வெந்தழலைச்
சூற்கொண்ட மேக மெனவூமை நின்றுசொரிவதையென்
னாற்கண்ட தன்று; மௌனோப தேசி யளிக்கையினிப்
பாற்கண்டு கொண்டனன்; மேலை யமிர்தம் பருகுவனே.

(இ - ள்) மேற்கொண்ட - மேல் நோக்கிச் செல்லுகின்ற; வாயுவும் - காற்றும், கீழ்ப்பட - கீழாக, மூலத்து - மூலாதாரத்திலுள்ள, வெம் தழலை - வெப்பமிக்க அக்கினியை. சூல் கொண்ட - கருப்பம் வாய்ந்த, மேகம் என - மேகம்போல, ஊமை நின்று - மௌனமந்திரம் நிலையுற்று, சொரிவதை - சொரிதலை. என்னால் - அடியேனால், கண்டது அன்று - தெரிந்துகொண்டதல்ல; மௌனஉபதேசி - மௌன குரு, அளிக்கையின் - கிருபை பாலித்ததினால், இப்பால் - இவ்விடத்தில், கண்டு கொண்டனன் - தெரிந்து கொண்டனன்; மேலை - இனிமேல், அமிர்தம் - (சந்திர மண்டலத்திலுள்ள) அமுதத்தினை. பருகுவன் - உண்பேன், என்க.

(வி - ரை) வாயுவானது பூரியாநிற்கவும், மூலாதாரத்தில் அக்கினி யுண்டாகவும், அமுதை மழையெனச் சொரியவும் விளைவதாகிய யோகானுபவம் தனது மவுனகுருதேசிகர் அருள் கிடைக்காதவரையில் தெரிந்து கொண்டேனில்லை யென்பார், 'என் னாற்கண்ட தன்று' என்றனர். இவ் வநுபவ நிலையினை அனுபவத்திற் காணவே, 'பிராணவாயுவினைக் கும்பித்த

லால் காலனல் மூண்டு சந்திரமண்டலத்தைத் தாக்க அதினின்றும் இளகி வழியும் அமிர்தப் பிரவாகத்தினை யுண்டு வருகிறே னென்பார், 'அமிர்தம் பருகுவேன்' என்றனர். ஈண்டு ஊமை யென்றது அசபை. இது வைகரி வாக்கால் விளக்கத்தக்க தன்று; அனுபவத்தா லரியத்தக்கது; முன்னரும் எழுதியுள்ளாம். சுத்தாத்துவித சித்தாந்த வைதிக செல்வரை யடுத்து உபதேச மூலமாகத் தெரிந்துகொள்ளுதல் மரபாம். திருமந்திரம்: "பொன்னான மந்திரம் புகலவு மொண்ணாது, பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும், பொன்னான மந்திரம் புகைபுண்டு பூரிக்கிற், பொன்னாதும் வல்லார்க் குடம்புபொற் பாதமே." என்றதனாற் காண்க. (28)

சொல்லாற் றொடர்பொரு ளாற்றொட ராப்பரஞ் சோதி! நின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி லேன்; சக மார்க்கத்திலுஞ்
செல்லாதென் சிந்தை; நடுவே கிடந்து திகைத்துவிம்மி
யல்லான தும்பக லானதும் வாய்விட் டரற்றுவனே.

(இ - ள்) சொல்லால் - வார்த்தையாலும், தொடர் - வார்த்தை சம்பந்தமாக விளைகின்ற, பொருளால் - பொருளினாலும், தொடரா சம்பந்த முறாத, பரம் சோதி! - பரஞ்சோதியே!, நின்னை - தேவரீரை, வல்லாளர் - அறிஞர்கள், கண்ட வழி - தெரிசித்த வகை, கண்டிலேன் - தெரிந்தே னில்லை; சக மார்க்கத்திலும் - பிரபஞ்ச வழியிலும், என் - அடியேன், சிந்தை - மனமானது, செல்லாது - நாடாது; நடுவே - இரண்டிற்கு மத்தியிலே, கிடந்து - தங்கி, திகைத்து - மயங்கி, விம்மி - விம்மி, அல்லானதும் - இருள் காலத்திலும், பகலானதும் - பகற்காலத்திலும், வாய் விட்டு - வாய் திறந்து, அரற்றுவன் - அலறுவேன், என்க.

(வி - ரை) மனமானது யாதா மொன்றினைப் பற்றியிருத்தலே சுபாவம். அங்ஙனமாகவும் பிரபஞ்ச காரியத்தினை நோக்க அது நிலையுறு பொருளன்றெனத் தெளிந்தமையின் அவ் வழியில் பற்று நீங்கியது. மேல் முதல்வன் பற்றினை நாட முயன்றாலோ பற்றும் வழிக்குச் சாதனந் தெரிய வில்லை ஆகலின், இருவழியிலு மாதாரங் கிட்டலின்றி யலைந்து மயங்கித் துக்கமுறுவே னென்பார், 'வழிகண்டிலேன்......வாய்விட் டரற்றுவனே' என்றனர். (29)

அறியாத வென்னை யறிவாயு நீயென் றகம்புறமும்
பிரியா தறிவித்த பேரறி வாஞ்சுத்தப் பேரொளியோ?
குறியாத வானந்தக் கோவோ? அமுதருள் குண்டலியோ?
சிறியேன் படுந்துயர் கண்டுகல் லானிழல் சேர்ந்ததுவே.

(இ - ள்) சிறியேன் - அற்பனாகிய நான், படும் துயரம் - அனுபவிக்கும் துன்பத்தினை, கண்டு - பார்த்து, கல்லால் நிழல் - கல்லாலி னிழலை,

சேர்ந்தது - எழுந்தருளியது, அறியாத - எவராலும் அறியக்கூடாத, என்னை - அடியேனை, அறிவாயும் - அறிகின்றவனும், நீ என்று - தேவரீர் என்று, அகம் - உள்ளும், புறமும் - வெளியும், பிறியாது - நீங்காதிருந்து, அறிவித்த - தெரிவித்த, பேர் அறிவாம் - பெரிய அறிவாகிய, சுத்த பேரொளியோ? - அருட்பெருஞ்சோதியோ?, குறியாத - எண்ணக்கூடாத, ஆனந்தக் கோவோ? - இன்பத் தலைவனோ?, அமுது அருள் - அருள் அமுதினை யருளுகின்ற, குண்டலியோ? - குண்டலி சத்தியோ?, என்க.

(வி - ரை) கல்லாலின் கீழ் எழுந்தருளிய தட்சிணாமூர்த்தி, சர்வ வியாபகனாயுள்ள தனிப்பெருஞ் சோதியோ? ஆனந்த சொரூபனாய் வந்த குருமூர்த்தியாகிய தலைவனோ? சிவ சிற்சத்தியோ? என்பார், 'பேரொளியோ? கோவோ? குண்டலியோ?' என்றனர். என்றதனால், ஆசாரியர் அனுக்கிரகத்தினால், திருவருட் சத்தி பதிய அது காரணமாக முதல்வன் தட்சிணாமூர்த்தியாகக் காட்சி கொடுத்தருளினா னென்பதாம். (30)

எல்லா முதவு முன்னையொன்றிற் பாவனை யேனுஞ்செய்து,
புல்லா யினுமொரு பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி
நில்லே(ன்); நல் யோக நெறியுஞ்செ யேன்; அரு ணீதியொன்றுங்
கல்லேன்! எவ் வாறு பரமே! பரகதி காண்பதுவே?

(இ - ள்) பரமே! - பரம்பொருளே!, எல்லாம் - எல்லாவற்றையும், உதவும் - கொடுக்கும், உன்னை - தேவரீரை, ஒன்றில் - விக்கிரகத்தில், பாவனையேனும் செய்து - பாவனையாகிலும் பண்ணி, புல்லாயினும் - புல்லையாயினும், ஒரு பச்சிலை ஆயினும் - ஒரு பசுமையான இலையையாயினும், போட்டு - தூவி, இறைஞ்சி - வணங்கி, நில்லேன் - நில்லேன்; நல்-சிறந்த, யோக நெறியும் - யோக மார்க்கத்தையும், செய்யேன் - அனுட்டியேன்; அருள் - திருவருட் சம்பந்தமான, நீதி ஒன்றும் - தருமநூல் ஒன்றையாயினும், கல்லேன் - கற்றிலேன்; எவ்வாறு - (இத்தகைய நான்) எவ்வகை, பரகதி - முத்தி நிலையை, காண்பது? - கண்டுகொள்வது?, என்க.

(வி - ரை) சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய சாதனங்கள் நான்கினு ளொன்றேனும் செய்திலே னென்பார், 'பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சேன், யோக நெறியுஞ் செயேன், அருணீதி யொன்றுங் கல்லேன்' என்றனர். கண்டிச் சரியையும், கிரியையும் ஒன்று வைத்துப் பூசையிற் கூறினர் முதல்வனைச் கருதியனைத்தும் சர்வப்ரதன் என வியந்து கூறுகின்றமையின், 'எல்லா முதவும்' என்றனர். (31)

ஒன்றுந் தெரிந்திட வில்லை: என் னுள்ளத் தொருவ! எனக்(கு),
என்றுந் தெரிந்த வினை; அவை கேள்! இரவும்பகலும்
துன்றுந், துயிலும், வனமு(ம்), மலையுங், குகைகடலு(ம்),
மன்று(ம்), மனையு(ம்), மனமாதி தத்துவ மாயையுமே.

(இ - ள்) என் - அடியேனுடைய, உள்ளத்து - மனதின்கண்ணே விளங்கும், ஒருவ ! - ஒப்பற்றவனே !, எனக்கு - அடியேனுக்கு, ஒன்றும் - (மாயைக்கு அன்னியமாக) ஒரு பொருளும், தெரிந்திட இல்லை - தோன்றவில்லை; என்றும் - எக்காலத்தும், தெரிந்த - (அடியேனுக்குத்) தெரிந்திருப்பன, இவை - (அடியிற் குறித்த) இவைகளேயாம் ; அவை கேள் ! - அவற்றைக் கேட்பாயாக !, இரவும் பகலும் - இராக்காலமும் பகற்காலமும், குன்றும் - சிறு மலையும், குழியும் - குளமும், வனமும் - காடும், மலையும் - பெருமலையும், குரை - சத்திக்கின்ற, கடலும் - சமுத்திரமும், மன்றுள் - அம்பலமும், மனையும் - வீடும், மனம் ஆதி - மன முதலிய, தத்துவம் - தத்துவத் தொகுதியாகிய, மாயையுமே - மாயா காரியங்களுமேயாம், என்க.

(வி - ரை) மனதிற்கு எக்காலத்தும் விருத்தி பகிர்முகத்திலேயேயெனவும், அங்ஙனம் பகிர்முகத்தில் தோன்றுவன வெல்லாம் தனு கரண புவனங்களேயா மெனவும், அவை யாவும் அசுத்த மாயா காரியமேயா மெனவும், ஆகலின், இவற்றிற்கெல்லா மன்னியமாய் மனதிற்குத் தோன்றுவன வொன்றுமில்லையெனவும் கூறினர். இதனால் அங்ஙனம் மனத்தினைச் செலுத்தாது, அந்தர் முகத்திலே நிறுத்தி, மாயைக் கன்னியமாகிய உண்மையினை யறிந்துகொள்ளவேண்டு மென்பதாம். (32)

பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்குந் தன்றாட் புணையை வியந்தளித்தான் ;
தொழுகின்ற வன்ப ருளங்களி கூரத் துலங்குமன்று
ளெழுகின்ற வானந்தக் கூத்தன்,என் கண்மணி, என்னப்பனே.

(இ - ள்) தொழுகின்ற - வணங்குகின்ற, அன்பர் - அடியார்களுடைய, உள்ளம் - மனமானது, களி கூற - சந்தோஷிக்க, துலங்கும் - விளங்குகின்ற, மன்றுள் - சபையின்கண்ணே, எழுகின்ற - நடிக்கின்ற, ஆனந்த கூத்தன் - ஆனந்த நிர்த்தனன் ; என் கண்மணி - அடியேன் கண்மணியை யொப்பவன் ; என் அப்பன் - அடியேன் தந்தை (ஆகிய முதல்வன்): பழுதுண்டு - துன்பமுற்று, பாவையர் - மாதர்களுடைய, மோக விகாரம் - காமவிகார மென்னும், பரவையிடை - சமுத்திரத்தில், விழுகின்ற - அழுந்துகின்ற, பாவிக்கும் - பாவியேனுக்கும், தன் - தன்னுடைய, தாள் - திருவடியாகிய, புணையை - மரக்கலத்தினை, வியந்து - அதிசயித்து, அளித்தான் - தந்தான், என்க.

(வி - ரை) காமாந்தகாரமாகிய கடலில் மூழ்கிக்கிடந்த தன்னை முதல்வன் வலியவந் தாண்டுகொண்டனன் என்றனர். திருவாசகம்: "பொருந்துமிப் பிறப்பிலை நினையாது பொய்களே புகன்றுபோய்க், கருங்குழலினார் கண்களா லேறுண்டு கலங்கியே கிடப்பேனைத், திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத் திருவொடு மகலாதே, யருந்துணைவனாயாண்டு கொண்டருளிய வற்புத மறியனே." என்றதனாற் காண்க. ()

அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை யா! நின் னருள்வழங்கி
னிழுக்காகு மென்றெண்ணி யோவிரங் காத வியல்புகண்டாய்!
முழுக்காத லாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனுங்
குழுக்காண நின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே!

(இ - ள்) முழு காதல் ஆகி - பூரண அன்புள்ளவர்களாகி, விழி நீர் - கண்ணீர், பெருக்கிய - சிந்திய, முத்தர் எனும் - சீவன்முத்தர் என்கின்ற, குழு - கூட்டம், காண - சேவிக்க, நின்று - எழுந்தருளி, நடம் ஆடும் - நடனஞ் செய்கின்ற, தில்லை - சிதம்பரத்தில், கொழும் சுடரே! - செழுமிய வொளியே!, ஐயா! - ஐயனே!, அழுக்கு - வஞ்சகம், ஆர்ந்த - நிறைந்த, நெஞ்சு உடையேனுக்கு - மனமுடையேனுக்கு, நின் அருள் - தேவரீர் திருவருளை, வழங்கின் - தரின், இழுக்கு ஆகும் என்று - குற்றமாகுமென்று, எண்ணியோ - நினைத்தோ, இரங்காத இயல்பு - (அடியேனிடத்து) தேவரீர் இரக்கம் செய்யாத தன்மை, என்க.

(வி - ரை) மலபரிபாக மடைந்த பின்னரே திருவருள் பதிவது சகஜமாதலின், அங்ஙனம் பாகமுறாத எளியன்பால் தேவரீர் திருவருள் விளையுமோ எனுங் குறிப்பினை யடக்கி, 'அழுக்கார்ந்த நெஞ்சுடையேனுக்கையா! நின்னருள் வழங்கி, னிழுக்காகு மென்றெண்ணி யோவிரங்காத வியல்பு' என்றனர். (34)

ஆலம் படைத்த விழியார்கண் மால்கொண் டவர்செயிந்திர
சாலம் படைத்துத் தளர்ந்தனை யே; என்றுந் தண்ணருள்கூர்
கோலம் படைத்துக்கல் லாலடிக் கீழ்வைகுங் கோவுக்கன்பாங்
காலம் படைக்கத் தவம்படை யாதென்கொல்! கன்னெஞ்சமே!

(இ - ள்) கல் நெஞ்சமே! - கருங்கல்லினையொத்த மனமே!. ஆலம் படைத்த - விடம் பொருந்திய, விழியார்கள் - கண்களையுடைய மாதர்கள் மேல், மால்கொண்டு - மோகங் கொண்டு, அவர் செய் - அம் மாதர் காட்டுகின்ற, இந்திரசாலம் படைத்து - இந்திரஜாலத்தினுக் குள்ளாகி, தளர்ந்தனையே - தளர்ச்சியுற்றனையே; என்றும்-எந்நாளும், தண் அருள் கூர்-குளிர்ச்சியாகிய அருள் மிகுந்த, கோலம் படைத்து - திருவுருவுடன் விளங்கி, கல்லால் - கல்லாலவிருட்சத்தின், அடிக்கீழ் - அடியில், வைகும் - எழுந்தருளியிருக்கின்ற, கோவுக்கு - இறைவனுக்கு, அன்பு ஆம் - அன்பு பாராட்டும்படியான, காலம் படைக்க - காலமுண்டாக, தவம் படையாதது - தவஞ் செய்யாமைக்குக் காரணம், என் ? - யாது ?, என்க.

(வி - ரை) ஈடேறுதற்குச் சிறிதும் ஏது இல்லாத விடத்தினையொத்த மாதரிற் சிக்கி பழிதற்கே நினைக்கின்றாடல்லது மனமே! ஈடேறுதற் கேதுவாயுள்ள முதல்வன் திருவடியை நாடிப் பிழைப்பதற்கு வேண்டிய தவத்தில் முயலாததென்னை ? என்றனர். (35)

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா ! நிரந்தரஞ் சொல்லவுங், கேட்டும், அறிவின்றியே
பெம்மான் மௌனி மொழியையுந் தப்பியென் பேதைமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேன் ; அந் தோ ! வென் விதிவசமே.

(இ - ள்) அம்மா !-அம்மா !, சும்மா இருக்க-மௌனமாக விருக்கின், சுகம் சுகம் என்று - சுகம் விளையும்சுகம் விளையும் என்று, சுருதி எல்லாம் - மறைகளெல்லாம், நிரந்தரம் - எக்காலமும், சொல்லவும் - சொல்லாநிற்கவும் ; கேட்டும் - (அவ் வுண்மையினைக்) கேட்டிருந்தும் ; அறிவு இன்றியே - உணர்வு இல்லாமலே, பெம்மான் - எமது பெருமானாகிய, மௌனி - மௌனகுருவின், மொழியையும் - உபதேசத்தையும், தப்பி - தவறி, என் - அடியேனுடைய, பேதமையால் - அறிவீனத்தால், - வெம் - வெவ்விய, மாய காட்டில் - வஞ்ச அடவியில், அலைந்தேன் - திரிந்தேன் ; அந்தோ ! - ஐயோ !, என் - அடியேனுடைய, விதி வசமே - இது தலைவிதியேயாம், என்க.

(வி - ரை) ஒரு வழியாகவே மறைகளும் மவுன குருவும் 'சும்மா விருக்கின் சுகம் கிடைக்கும்' என எந்நாளுஞ் சொல்லிவரவும், அதற்கு மாறாக விவகாரத்திலேயே யலைந்துகொண் டிருப்பது கர்மத்தின் வழியென்பதாம். "பாராதே நீண்டாதே பத்திபுற மெய்ப்பொருளை, நேராகப் பூண்டு நினையாதே - போராத, போதமற்று நிட்டையற்றுப் பூரணமா முண்மைதனி, லேதமற்றுச் சும்மாவிரு." என்றதனாற் காண்க. (36)

தினமே செலச்செல, வாழ்நாளு நீங்கச், செகத்திருள்சொற்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும், பாசபந்த
வினமே துணையென் றிருந்தோ(ம்); நமன்வரி னென்செய்குவோ(ம்)?
மனமேநம் போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே?

(இ - ள்) மனமே ! - நெஞ்சே !, தினம் - ஒவ்வொரு நாளும், செல செல - கழியக் கழிய ; வாழ்நாளும் நீங்க - ஆயுளும் ஒழிய, செகத்து-பிரபஞ்சத்து, இருள் - இருளானது, சொற்பனமே என - கனவே என, வெளி - வெளிப் படையாக, கண்டேயிருக்கவும் - பார்த்திருந்தும், பாச பந்த இனமே - பாசக் கூட்டமே, துணை என்று - உதவியென்று, இருந்தோம் - எண்ணி வாழ்ந்தோம் ; நமன் வரின் - எமன் எதிரில், என்செய்குவோம்?- எது சமாதானம் சொல்லுவோம் ? ; நம்போல - நம்மைப்போல, சுத்த மூடர் - முழு மூடர், இ வையகத்து உண்டோ ? - இவ்வுலகத்தில் உண்டோ ?, என்க.

(வி - ரை) மூடராவார், பதிஞானத்தினை யறியாது, பசு பாச ஞானங்களையே சத்தியமெனக் கருதிக் காலங் கழித்து வருவராகலின், இத்தகையர் தங்கள் வாழ்நாள் முடிவில் அடைவது இயமலோகமேயன்றி

வேறில்லை யென்பது நிச்சயமெனக் கருதி 'நமன்வரின் என்செய்குவோம்?' எனவும், 'நம் போல வுண்டோசுத்த மூடர்' எனவுங் கூறினர். (37)

கடலெத் தனை,மலை யெத்தனை யத்தனை கன்மம்; அதற்
குடலெத் தனையத் தனைகட லுண்மணலொக்கும்; இந்தச்
சடலத்தை நான்விடு முன்னே யுனைவந்து சாரவிருட்
படலத்தை மாற்றப் படாதோ? நிறைந்த பராபரமே!

(இ - ள்) நிறைந்த - எங்கும் வியாபகமாயுள்ள, பராபரமே! - பராபரமே!, கடல் - சமுத்திரங்கள், எத்தனை - எத்தனை, மலை - பருவதங்கள், எத்தனை - எத்தனை, அத்தனை - அவ்வளவினையுடையது, கன்மம் - கன்மமாகும்; அதற்கு - அக்கன்மத்திற்குத் தகுந்தபடி, உடல் - சரீரங்கள், எத்தனை - எத்தனை, அத்தனை - அவ்வளவினை, கடல் - கடலிலேயுள்ள, நுண் - நுண்ணிய, மணல் - மணலினை, ஒக்கும் - ஒத்திருக்கும்; (ஆதலால்) இந்த சடலத்தை - இச் சரீரத்தினை, நான் - அடியேன், விடு முன்னே - விட்டு நீங்கு முன்னமே, உனை வந்து சார - தேவரீரை வந்து அடையும்படி, இருள் படலத்தை - ஆணவ விருத்தியை, மாற்றப்படாதோ? - நீக்கப் படாதோ?, என்க.

(வி - ரை) கன்மம் பிரவாக நதியாகலின், கடலின் பரப்பினையும், மலையி னுயரத்தினையும் ஒப்பாகக் கூறினர். சனனங்கடோறு மெடுத்த உடல்கட்குக் கணக்கில்லை யாகலின், 'கட லுண்மண லொக்கும்' என்றனர். கன்ம முண்டாதற்கும், அக் கன்மத்தா லனேக வுடல்களை யெடுத்தற்கும் காரணமா யிருப்பது மூலமலமாகிய ஆணவமல மாகலின், 'இருட் படலத்தை மாற்றப் படாதோ?' என்றனர். (38)

நினைய நினைவு நினையன்றி யில்லை; நினைத்திடுங்கால்
வினையென் றொருமுதல் நின்னையல் லாது விளைவதுண்டோ? [யா
தனையுந் தெளிந்(து)உன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந் தாமரை
மனையும்,பொன் மன்றமு நின்றாடுஞ் சோதி மணிவிளக்கே!

(இ - ள்) தனையும் தெளிந்து - தங்கள் உண்மைத் தன்மையினையும் தெளிந்து; உன்னை - தேவரீரை, சார்ந்தோர்கள் - விரும்பினோர்களுடைய, உள்ளம் - மனமாகிய, செந்தாமரை ஆம் மனையும் - செவ்விய தாமரையாகிய வீட்டினிடத்தும், பொன் மன்றமும் - பொன்னம்பலத்தினிடத்தும், நின்று - எழுந்தருளி, ஆடும் - நிர்த்தனம் செய்யும், சோதி - பிரகாசம் பொருந்திய, மணி விளக்கே! - இரத்தின தீபமே!, நினையும் - நினைக்கின்ற, நினைவும் - எண்ணமும், நின்னை அன்றி - தேவரீரை யன்றி, இல்லை - நிகழ்வதில்லை; நினைத்திடுங்கால் - எண்ணுமிடத்து, வினை என்ற - வினை என்று சொல்லப்படுகிற, ஒருமுதல் - ஒரு முதலாகிய கன்மப் பொருள், நின்னை அல்லாது - தேவரீரை யல்லாது, விளைவது உண்டோ? -

(வி - ரை) ஆன்மாக்கள் ஈட்டிய கன்மங்கட்குத் தக்கபடி கூட்டி முடிப்பவன் முதல்வனே யன்றி வேறின்மையாலும், கன்மத்திற்குத் தக்க படியே நினைவு முண்டாகு மாகையாலும், கன்மம் சடமாகையாலும், 'நினை யும் நினைவும் வினையும் முதல்வனே யல்லா தில்லை' என்றனர். "அறி வானுந் தானே யறிவிப்பான் றானே" என்ற அம்மை திருவாக்கு மிக்கருத் தினையே விளக்குவதாம். (39)

உள்ளத் தையுமிங் கெனையுநின் கையினி லொப்புவித்துங்,
கள்ளத்தைச் செய்யும் வினையால் வருந்தக் கணக்குமுண்டோ?
'பள்ளத்தில் வீழும் புனல்போற்' படிந்துன் பரமவின்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேயெளி தாந்தில்லை வித்தகனே!

(இ - ள்) பள்ளத்தில் - தாழ்ந்த நிலத்தில், வீழும் - பாய்ந்து ஓடு கின்ற, புனல்போல் - நீர்போல், படிந்து - அமைந்து, உன் - தேவரீரது, பரம - மேலான, இன்ப வெள்ளத்தில் - ஆனந்த சாகரத்தில், மூழ் கினர்க்கே - திளைத்தவர்கட்கே, எளிது ஆம் - எளிமையாகின்ற, தில்லை வித்தகனே! - சிதம்பரத்தில் மேவிய ஞானமயனே!, உள்ளத்தையும் - எனது மனத்தையும், இங்கு - இவ்விடத்து, என்னையும் - அடியேனையும், நின் - தேவரீரது, கையினில் - இடத்தில், ஒப்புவித்தும் - ஒப்புவித்தும்; (இன்னமும்) கள்ளத்தை - வஞ்சனையை, செய்யும் - புரிகின்ற, வினையாம் - கர்மத்தினால், வருந்த - துன்பமடைய, கணக்கும் உண்டோ? - கணக்கு முளதோ?, என்க.

(வி - ரை) ஈண்டு 'வினை' என்பது உயிரையும், 'உள்ளத்தை' என்பது உடலினையும் குறிக்கவே பொருளினையும் கூட்டிக்கொள்ளுக. உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றனையும் முதல்வன்பால் ஒப்புவித்துத் தனக்கென யாதொரு சுதந்திரமுங் கொள்ளாது வாழ்க்கையில், அம் மூன்றினால் வினையும் நய நஷ்ட மனைத்து முதல்வனுக்கே யென்பார், 'வினையால் வருந்தக் கணக்கு முண்டோ? என்றனர். (40)

கள்ளம் பொருந்து மடநெஞ்ச மே! கொடுங் காலர்வந்தா
லுள்ளன் பவர்கட்குண் டோ? இல்லை யே; உல கீன்றவன்னை
'வள்ளம் பொருந்து மலரடி' காணமன் றாடுமின்ப
வெள்ளச்செம் பாதப் புணையேயல் லாற்கதி வேறில்லையே.

(இ - ள்) கள்ளம் - வஞ்சம், பொருந்தும் - பொருந்திய, மடம் - அறியாமை வாய்ந்த, நெஞ்சமே! - மனமே!, கொடும் - கொடிய, காலர் - யமபடர், வந்தால் - சேர்ந்தால், அவர்கட்கு - அவர்களுக்கு, உள் அன்பு - மன நெகிழ்ச்சி, உண்டோ? - உளதோ?, இல்லையே - (சிறிதும்) இல்லையே; உலகு - பிரபஞ்சத்தினை, ஈன்ற - பெறாது பெற்ற, அன்னை - தாய், வள்ளம் - திண்ணத்தினைப்போல, பொருந்தும் - பொருந்தித்

தோன்றுகின்ற, மலர் - தாமரைமலரைப்போன்ற, அடி - திருவடியை, காண - தரிசிக்கும்படி, மன்று - அம்பலத்தில், ஆடும் - நடிக்கின்ற, இன்ப வெள்ளம் - ஆனந்தக் கடலாகிய இறைவனது, செம்பாதம் - சேவடியாகிய, புணையே அல்லால் - தெப்பமே யன்றி, கதி வேறு இல்லை - வேறு புகலிடம் இல்லை, என்க.

(வி - ரை) பிறவிப் பெருங்கடலை நீந்துதற்கு இறைவ னடியே புணை யெனக் கொள்ளாதார், பாரபட்சம் பாராட்டாத இயமனிடம் சாருதலே வேண்டு மென்பதாம். ஆனந்த சிற்சபேசன் அதியற்புத மகா நடனத்தினை நேரே காணத்தக்க தன்மை அம்மையாருக்கே யாகலின், 'மலரடி காண மன்றாடும்' என்றனர். (41)

தன்மய மானசு பாவத்தின் மெள்ளத் தலைப்படுங்கால்
'மின்மய மானசகம்' யா துரைத்தென்? வெளியிலுய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய் யாகத் தெளிந்தநெஞ்சே!
நின்மய மென்மய மெல்லா நிறைந்த நிராமயமே.

(இ - ள்) தன் மயம் ஆன - (ஆன்மாவாகிய) எனது வியாபகமான, சுபாவத்தில் - இயற்கையில், மெள்ள - அமைவாக, தலைப்படுங்கால் - உணருமிடத்து, மின் மயம் ஆன - மின்னலின் தன்மையை யமைந்த, சகம் - உலகம், யாது உரைத்து என்? - என்சொல்லியென்ன?, வெளியில் உய்த்த - விளக்கமாகத் தந்த, சின்மய முத்திரைக் கையே - மவுன முத்திரையுடன் கூடிய திருக்கரமே, மெய் ஆக - சத்தியமாக, தெளிந்த நெஞ்சே! - தெரிந்து கொண்ட மனமே!, நின் மயம் - தேவரீர் வியாபகமும், என் மயம் - அடியேன் வியாபகமும், எல்லாம் - இரண்டும், நிறைந்த - எங்கும் பூரணமான, நிராமயமே - நிராமயமேயாம், என்க.

(வி - ரை) ஆன்மாவினைத் தடத்த விலக்கணத்தில் வைத்து ஆராயும் வழி, முதல்வனுக்கு அன்னியமாகக் கண்டபொருளாய்த் தோன்றினும், உண்மை வடிவாகிய சொரூப விலக்கணத்தில் வைத்து ஆராயும் வழி, பரான்மாவாகிய சித்தின் வியாபகம்போலவே ஆன்மாவாகிய சித்தும் வியாபகப் பொருளேயாமென்பார், 'நின்மய மென்மயம்' என்றனர். (42)

ஆயுங் கலையுஞ், சுருதியுங் காண்டற் கரியவுனைத்,
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்! சுக வான்பொருளே!
தாயும், பிதாவுந், சமருந், குருவுந், தனிமுதலும்,
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேன்; இது நிச்சயமே.

(இ - ள்) ஆயும் - ஆராயப்படுகிற, கலையும் - பல நூல்களும், சுருதியும் - மறைகளும், காண்டற்கு - பிரத்தியட்சமாகக் காண்டற்கு, அரிய - அருமையாகிய, உன்னை - தேவரீரை, தோயும்படிக்கு - அடையும்படிக்கு,

கருணை செய்வாய்! - கிருபை புரிவாய்!, சுக - ஆனந்த ரூபமாகிய, வான் - மேலான, பொருளே! - பொருளே!, தாயும் - அன்னையும், பிதாவும் - தந்தையும், தமரும் - சுற்றத்தினரும், குருவும் - ஆசாரியனும், தனி - ஒப்பற்ற, முதலும் - முதற்பொருளும், நீயும் பரையும் - தேவரீரும் நினது சத்தியும், என்றே - என்றே, உணர்ந்தேன் - தெரிந்தேன்; இது நிச்சயமே - இது சத்தியமே, என்க.

(வி - ரை) "வேதங்கள் 'ஐயா' என வோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்ற சுருதிக்கேற்ப, 'காண்டற் கரியவனே' என்றனர். "அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனு மாமியுநீ" என்றதற் கேற்பத், 'தாயும், பிதாவுந், தமருங், குருவுந், தனிமுதலும், நீயும் பரையும்' என்றனர். (43)

அல்லும் பகலு முனக்கே யபய மபயமென்று
சொல்லுஞ்சொ லின்னந் தெரிந்ததன் றோ? துதிப் பார்கன்மனக்
கல்லுங் கரைக்கு மௌனா! உனது கருணையென்பாற்
செல்லும் பொழுதல்ல வோ,செல்லு வேனந்தச் சிற்சுகத்தே.

(இ - ள்) துதிப்பார்கள் - தோத்திரிப்பவர்களுடைய, மனக் கல்லும் - நெஞ்சமாகிய கல்லினையும், கரைக்கும் - உருகச் செய்கின்ற, மௌனா! - மவுனகுருவே!; அல்லும் பகலும் - இரவும் பகலும், உனக்கே - தேவரீருக்கே, அபயம் அபயம் - அடைக்கலம் அடைக்கலம், என்று - என்று, சொல்லும் சொல் - கூப்பிடும் வார்த்தை, இன்னம் - இன்னமும், தெரிந்தது - (நினது காதினுக்கு) எட்டியது, அன்றோ? - இல்லையோ?, உனது - தேவரீருடைய, கருணை - கிருபையானது, என்பால் - அடியேனிடத்து, செல்லும் - அடையும், பொழுதல்லவோ - காலத்தன்றோ, அந்த சிற்சுகத்து - அந்த ஞானானந்தத்தில், செல்லுவேன் - புகுவேன், என்க.

(வி - ரை) "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்றதற்கேற்ப, முதல்வனது கருணை ஆன்மாவினிடத்தில் சென்றா லல்லது இவனுக் கியற்கையாகச் சுகானந்தம் விளையாதாகலின், 'உனது கருணையென்பாற், செல்லும்பொழுதல்ல வோசெல்லு வேனந்தச் சிற்சுகத்தே' என்றனர். (44)

எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்னருளை
யல்லாற் புகலிடம் வேறுமுண் டோ? அது வேநிலைபா
நில்லாய்! உன் னாற்றமி யேற்குக் கதியுண்(டு); இந் நிலத்திற்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ தென்ன? புகனெஞ்சமே!

(இ - ள்) எல்லாம் - யாவும், சிவன் செயல் என்று - முதல்வன் செயலேயென்று, அறிந்தால் - தெரிந்தால், அவன் - அம் முதல்வனது, இன் - இனிமையான, அருளை அல்லால் - திருவருளையன்றி, புகல்

இடம் - அடைக்கல மடைதற்குரிய இடம், வேறும் உண்டோ? - மற்று ளதோ?, அதுவே நிலை ஆ நில்லாய்! - அதுவே நிலையாக நிற்கக்கடவாய்!, (அங்ஙனம் நிற்பையாயின்) தமியேற்கு - தமியேனுக்கு, உன்னால் - தேவரீ ரால், கதி - நல்ல கதி, உண்டு - உளது: இ - இந்த, நீள் - பெரிய, நிலத்தில் - உலகில், பொல்லா மயக்கத்தில் - தீமையாகிய மயக்கத்தினில், ஆழ்ந்து - அழுந்தினதால், ஆவது - உண்டாகிய பிரயோசனம், என்ன? - யாது?, நெஞ்சமே! - மனமே!. புகல் - சொல்வாயாக!. என்க.

(வி - ரை) ஆன்மாக்கள் தூல சூக்கும தேகங்களிலும் இந்திரியங் களிலும் முதல்வனை யன்றி யொன்றை யறியவும் ஒரு கிரியை பண்ணவு மறியார்கள். முதல்வனும் நேரே ஆன்மாக்களிடத்திலே பொருந்தி நின்று அவரவர்கள் பண்ணுங் கன்மங்க ளெல்லாம் அறிந்து; அந்தக் கன் மங்களுக்கீடாக ஆன்மாக்களைப் பிரவிருத்தி பண்ணுவித் தெவ்விடத்தும் பிரிவறக் கூடி நிற்பன். இவ் வான்மாக்கள் ஞானக்கிரியைகள் ஆணவத்தி னாலே மறைந்து நின்று பிரகாசிக்கும்போது அந்த முதல்வனை யன்றிப் பிரகாசியாது. ஆகலின், 'எல்லாஞ் சிவன்செயல்' என்றனர். சிவஞான சித்தியார்: "எவ்விடத்து மிறையடியை யின்றியமை ரொன்றை யறிந் தியற்றி டாவுயிர்க ளீசன் றானுஞ், செவ்விதினி னுளம்புகுந்து செய்தி யெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்." என்றத னாற் காண்க. இவ் வுண்மையினை யறிந்தா னொருவனுக்கு அவ் விறைவனை விட்டுத் தனித்து நிற்றல் ஓரிடத்தினு மில்லை யென்பார், 'புகலிடம் வேறு முண்டோ?' என்றனர். ஷை சித்தியார்: "அரனடியை யகன்று நிற்ப தெங்கேயாமே?" என்றதனாற் காண்க. (45)

ஒளியே! ஒளியி னுணர்வே! உணர்வி னுவகைபொங்குங்
களியே! களிக்குங் கருத்தே! கருத்தைக் கவளங்கொண்ட
வெளியே! வெளியின் விளாசுக மே! சகர் வீறுகண்டுந்
தெளியேன்: தெளிந்தவரைப்போற்றிடேன்; என்ன செய்குவனே?

(இ - ள்) ஒளியே! - பிரகாசமே!, ஒளியின் - அந்தப் பிரகாசத்தி னுடைய, உணர்வே! - அறிவே!, உணர்வின் - ஆன்மாவின் அறிவி னிடத்து, உவகை - விருப்பம், பொங்கும் - மிகுகின்ற, களியே! - களிப்பே!, களிக்கும் - ஆனந்திக்கும், கருத்தே! - கருத்தே!, கருத்தை - ஆன்மாக்களின் கருத்தினை, கவளம் கொண்ட - விழுங்கின, வெளியே! - சிதாகாயமே!, வெளியின் - அச் சிதாகாயத்தின், விளா - உண்டாகிற, சுகமே! - இன்பமே!, சகர் - சகவிருடியினது, வீறு - பெருமையினை, கண்டும் - (நூல்களில்) படித்தும், தெளியேன் - தெளிந்திலேன்; தெளிந் தவரை - (உண்மை) தெளிந்தவரை, போற்றிடேன் - வணங்கேன்; என்ன செய்குவன்? - யாது செய்குவேன்?, என்க.

(வி - ரை) சுகர் என்னும் இருடியானவர் வியாசருக்குக் கிருதாசி யென்னும் அப்சரஸ்திரீயிடத்துப் பிறந்த புத்திரனூர். கிளி ரூபத்தோடிருந்த கிருதாசியிடத்தே பிறந்தமையின் இவர் சுகரெனப்பட்டார். இவர் பிறந்தவுடனே தத்துவஞானி யாயினர். இவர் அரம்பையென்னும் தெய்வப்பெண் தன்னோடு சேருமாறு தன்னு லியன்றவா றெல்லாம் காதல் காட்டியும் சித்தம் சலியாத சுத்த வைராக்கிய முடையவர். முனிவருள் பெண்போகத்தில் மயங்காதவர். இவர் மகிமையினை யறிந்திருந்தும் தெளிவடைந்திலேன் என்பார், 'சுகர் வீறுகண்டும், தெளியேன்' என்றனர். ()

மறக்கின்ற தன்மை யிறத்தலொப் பாகும்; மனமொன்றிற்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகும்; இப் பேய்ப்பிறவி
இறக்கின்ற வெல்லைக் களவில்லை யே; இந்தச் சன்மவல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்? பர மே! நின் றொழும்பனுக்கே.

(இ - ள்) பரமே! - பரம்பொருளே!, மறக்கின்ற தன்மை - (ஆன்மாக்கள்) மறக்குந் தன்மை, இறத்தல் ஒப்பாகும் - இறத்தலுக்கு நிகராகும்; மனம் - மனமானது, ஒன்றில் - ஒருபொருளினிடத்து, பிறக்கின்ற தன்மை - பற்றுந் தன்மை, பிறத்தல் ஒப்பாகும் - பிறத்தலுக்கு நிகராகும்; இ - இந்த, பேய் பிறவி - பேய்ப் பிறவிகள், இறக்கின்ற - கழிக்கின்ற, எல்லைக்கு - அளவிற்கு, அளவில்லையே - வரம்பில்லையே; இந்த சன்மம் - இப் பிறவியால் விளையும், அல்லல் - துன்பத்தை, துறக்கின்ற - விட்டு நீங்கும், நாள் - காலம், நின் - தேவரீருடைய, தொழும்பனுக்கு - தொண்டனுக்கு, எந்த நாள்? - எக்காலம்?, என்க.

(வி - ரை) உலகத்தில் மனமானது ஒவ்வொரு கணந்தோறும் ஒரு பொருளைப் பற்றுதலும், உடனே மறத்தலும் ஆகிய தன்மை, அம் மனம் பிறத்தலுக்கும் இறத்தலுக்குஞ் சமான மாகிறது. இங்ஙனம் மனத்திற்கு உண்டாம் கோடானுகோடி நினைப்பு மறப்புகளைப்போல, ஆன்மாவிற்கும் எண்ணிலவாகிய சென்மங்க ளுண்டாய் வருகின்ற தாகலின், இத்தகைய பிறவிகளை யொழித்துக் கொள்ளுநாள் எந்நா ளென்பார், 'இந்தச் சன்மவல்லல், துறக்கின்ற நாளெந்தநாள்?' என்றனர். (47)

காட்டிய வந்தக் கரணமு மாயைக் காயமென்று
சூட்டிய கோலமு நானு வியங்கச், சுழையிதனு
ளூட்டிய நான்றனக் கென்றே றறிவற்ற நானிவற்றைக்
கூட்டிநின் றூட்டினை யே; பர மே! நல்ல கூத்திதுவே.

(இ - ள்) பரமே! - பரம்பொருளே!, காட்டிய - விளக்கிய, அந்தக்கரணமும் - மனமாதி கரணங்களும்; மாயை - அசுத்த மாயாகாரியமாகிய, இ காயம் என்று - இச் சரீரமென்று, சூட்டிய - பெயர் சூட்டப் பெற்ற, கோலமும் - உருவும், நானு - பலவிதமாக, இயங்க - இயங்கா

நிற்க ; துறை இதனுள் - பற்பல துறைகளையுடைய இதற்குள்ளே, நாட்டிய-நிலைக்கச்செய்து, நான் - நானே, தனக்கு என்று - தனக்கென்ன, ஓர் அறிவு - ஒரு சுதந்திர அறிவு, அற்ற - இல்லாத, நான் - நான் ( ஆக விருக்கின்றேன் ), இவற்றை - இத் துறைகளை, கூட்டி - சேர்த்து, நின்று ஆட்டினையே - இருந்து ஆட்டுவித்தனையே !, இது - இது, நல்ல கூத்தே - நல்ல கூத்தேயாகும், என்க.

(வி - ரை) சூத்திரதாரியொருவன் சடமாகிய பதுமைகளை யாட்டுவிப்பதுபோல், சுதந்திர மற்ற ஆன்மாக்களினை மாயா காரியங்களிற் கூட்டி யாட்டுவிப்பது தருமமோ என்பார், 'பர மோசல்ல கூத்திதுவே' என்றனர். ஆதலால், சுதந்திர மற்ற ஆன்மாவினையும், சடமாகிய கன்மத்தினையும் கூட்டிப் போகத்தை அனுபவிக்கச் செய்வான் முதல்வனே யென்றாயிற்று.

'பொல்லாத மாயர்க் கடமனமே!' என்னைப் போலடுத்த
எல்லாவற் றையும்பற்றிக் கொண்டனையே; என்னை? நின்மயமா
நில்லாய்! அருள்வெளி நீ; நானிற் பேனரு ளிட்டையொரு
சொல்லாற் பதித்து; பரிபூர ணானந்தத் தோய்குவனே.

(இ - ள்) பொல்லாத - துன்பங்களுக் கேதுவாகிய, மா - பெரிய, மர்க்கடமனமே! - குரங்குபோன்ற நெஞ்சமே !, என்னைப்போல் - என்னை நீ பற்றிக் கொண்டாற்போல, அடுத்த - என்னைச் சூழ்ந்திருக்கின்ற, எல்லாவற்றையும் - சகல பொருள்களையும், பற்றிக்கொண்டனையே - தாவி யிருக்கின்றனையே ; என்னை ? - இதுவென்னை ?, நீ - நீ, அருள் வெளி - சிதாகாயத்தில், நின்மயம் ஆ - தன்மயமாக, நில்லாய் ! - நிற்கக்கடவாய் !, ( அங்ஙனம் நின்றால் ) நான் - நான், அருள் நிட்டை - திருவருள் நிட்டையினை, ஒரு சொல்லால் - ஒரு சொல்லினால், பதித்து - பதியப்பெற்று, நிற்பேன் - இருப்பேன் ; பரிபூரணானந்தம் - பரிபூரண சுகத்தில், தோய்குவன் - மூழ்குவேன், என்க.

(வி - ரை) மனதிற்குரிய செயல் எக்காலமும் ஒன்றினைப் பற்றிக் கொண்டிருத்தலே தருமமா யிருத்தலின், ஆன்மாவினையும் ஆன்மாவினைச் சூழ்ந்த மாயாகாரியங்களையும் பற்றுவதுபோல், அவற்றை விட்டுச் சிதாகாயத்தினைப் பற்றுமேயாகில் நிட்டை கூடிப் பரிபூரண சுக முண்டாதற் கேதுவாகு மென்பதாம். (49)

வாராய்!நெஞ் சே!உன்றன் றுன்மார்க்கம் யாவையும் வைத்துக் கட்
டாராய்! அடிக்கடி சற்றுகின் றாய்; உன் னவலமதிக் [(டு); இங்
கோரா பிரம்புத்தி சொன்னாலு மோர்கிலை; ஓகெடுவாய்! [டே.
பாராய்:உனைக்கொல்லு வேன்,வெல்லு வேன்,அருட் பாங்குகொண்

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, வாராய்! - வருவாயாக !, உன்றன் - உனக்கு இயற்கையாகவுள்ள, துன்மார்க்கம் - தீமைகள், யாவையும் -

எல்லாவற்றையும், வைத்து கட்டு - ஒருபுறத்தே வை; இங்கு - இவ்விடத்தினின்று, ஆராய்! - ஆராய்வாயாக!, அடிக்கடி - எந்நேரமும், சுற்றுகின்றாய் - (உலகமெங்கும்) சுழலுகின்றாய்; உன் - உன்னுடைய, அவல மதிக்கு - சபல புத்திக்கு, ஓர் ஆயிரம் - அநேகமான, புத்தி சொன்னாலும் - புத்திகளைப் போதித்திடினும், ஓர்கிலை - ஆராய்ந்து பார்க்கவில்லை; ஓ கெடுவாய்! - ஆ கெட்டுப்போவாய்!, பாராய்! - ஆலோசித்துப் பார்ப்பாயாக!, உன்னை - உன்னை, அருள் - திருவருளென்னும், பாங்கு கொண்டு - ஆயுதங் கொண்டு, கொல்லுவேன் - அழிப்பேன்; வெல்லுவேன் - தலையெடாதபடி செய்வேன், என்க.

(வி - ரை) முதல்வன்றன் திருவருள் பெறாதகாலத்து மனம் போனவழியே அறிவு சென்று பல அவதிக் குள்ளாகிச் சஞ்சலப்பட வேண்டுமெனவும், திருவருள் பூரணமா யடைந்தகாலத்து அத் திருவருளின் மயமாய் அறிவு நிற்க, மனத்தின் செயல் சிறிது மின்றி யொடுங்கிவிடுமென்பதாம். (50)

மாதத்தி லேயொரு திங்களுண் டாகி மடிவதைநின்
போதத்தி லேசற்றும் வைத்திலை யே! வெறும் புன்மைநெஞ்சே!
வேதத்தி லேதர்க்க வாதத்தி லேவிளங் காதுவிந்து
நாதத்தி லேயடங் காதந்த வான்பொரு ணாடிக்கொள்ளே!

(இ - ள்) வெறும் புன்மை - மிக இழிவாகிய, நெஞ்சே! - மனதே!, மாதத்திலே - ஒவ்வொரு மாதத்திலேயும், ஒரு திங்கள் - ஒவ்வொரு சந்திரன், உண்டாகி - தோன்றி, மடிவதை - மறைந்துவிடுவதை, நின் - உனது, போதத்திலே - அறிவிடத்து, சற்றும் - சிறிதும், வைத்திலையே! - எண்ணிலையே!, வேதத்திலே - மறைகளினாலேயும், தர்க்க வாதத்திலே - தருக்க வாதங்களினாலேயும், விளங்காது - விளங்காமலும்; விந்து - விந்துவிலும், நாதம் - நாதத்திலும், அடங்காது - அடங்காமலும் (இருக்கின்றன); அந்த வான் பொருள் - அந்த மேலான பொருளை, நாடிக்கொள் - ஆராய்ந்து பற்றிக்கொள்வாயாக, என்க.

(வி - ரை) மாதங்கடோறும் தோன்றி மறையும் எண்ணிலவான சந்திரன்களைப்போலக், காலந்தோறும் தேகங்கள் தோன்றி மறைவது பிரத்தியட்சமாகலின், இதனை யெண்ணிப் பார்த்தாயில்லை யென்பார், 'போதத்தி லேசற்றும் வைத்திலை' என்றனர். "வேதங்க ளையா வென வோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே!" என்றதனால் வேதத்திலே விளங்காதவ னென்றும், "குறைவிலா அறிவினாலுங் கூறொணாதாகி நின்ற விறைவனார்" என்றதனால், தர்க்க வாதத்திலே விளங்காதவ னென்றுங் கூறினார். நாத விந்துக்கள் சுத்த மாயா காரியங்களாகையினாலும், அந்த மாயையினைக் கடந்தவன் முதல்வனாகையினாலும், 'விந்து, நாதத்தி லேயடங் காது' என்றுங் கூறினார். (51)

எங்கும் வியாபித் துணர்வாய்; உனக்கென் னிதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத வண்ணந் தடைசெய்ததார்?
அங்கங் குழைந்துள் ளுருகுமன் பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலே! சம் பூரண போதத்தனே!

(இ-ள்) அங்கம் - சரீரம், குழைந்து - இளகி, உள் - மனமானது, உருகும் - உருகும், அன்பாளர்க்கு - அடியவர்கட்கு, அணை கடந்து - வரம்பு கடந்து, பொங்கும் - பொங்குகின்ற, கருணை கடலே! - கருணை சமுத்திரமே!, சம்பூரண - பரிபூரண, போதத்தனே! - ஞானசொரூபனே!, எங்கும் வியாபித்து - எவ்விடத்து நிறைந்து, உணர்வாய் - உணர்கின்றாய்; (அங்ஙனமாக) உனக்கு - உனக்கு, என் - அடியேன், இதயத்துள்ளே - மனத்தில், தங்கும் - நிலைபெறும், துயரம் - துன்பம், தெரியாவண்ணம் - தெரியாதவகை, தடை செய்தது ஆர்? - மறைத்தது யார்?, என்க.

(வி-ரை) சர்வ வியாபகனாகிய முதல்வன் எங்கு நிறைந்திருப்பது போல, ஆன்மாவினிடத்தும் பூரணமாக விருந்தும், ஆணவமலத் தடையால் அவ் வியாபகத்தன்மையினை ஆன்மா அறிந்துகொள்வதற்குத் தடையாக வுள் ளேற்பட்டுள்ள தென்பதனைக் குறிப்பாற் றெரிவிப்பான், 'தெரியாத வண்ணந் தடைசெய்ததார்?' என்றனர். (52)

வையக மாதர் சுகத்தையும், பொன்னையு(ம்), மாயைமல
மெய்யையு(ம்) மெய்யென்று; நின்னடியார்தம் விவேகத்தையும்
ஐயமில் வீட்டையு(ம்), மெய்நூலை யும்பொய்ய தாகவெண்ணும்
பொய்யர்தந் நட்பை விடுவதென் றோ? பரி பூரணமே!

(இ-ள்) பரிபூரணமே! - சர்வ வியாபியாயுள்ள வஸ்துவே!, வையகம் - உலகில், மாதர் - பெண்டிர்கள், சுகத்தையும் - இன்பத்தையும், பொன்னையும் - பொருளையும், மாயை - மாயாகாரியமாகிய, மலம் - அழுக்குள்ள, மெய்யையும் - தேகத்தினையும், மெய்யென்று - சத்தியமென்று; நின் - தேவரீருடைய, அடியார்தம் - அடியார்களுடைய, விவேகத்தையும் - விவேகத்தினையும்; ஐயம் இல் - சந்தேகமில்லாத, வீட்டையும் - பரமுத்தியையும்; மெய் நூலையும் - உண்மை நூல்களையும், பொய்யதாக - பொய்யாக, எண்ணும் - நினைக்கின்ற, பொய்யர்தம் - பொய்யர்களுடைய, நட்பை - சினேகிதத்தை, விடுவது - நீங்குவது, என்றோ? - எக்காலமோ?, என்க.

(வி-ரை) பெண், பொன், உடல் மூன்றும் இகத்தில் ஏகதேச சுகத்தினைக் கொடுப்பதற் கேதுவாக இருந்தும், மறுமைக்குச் சிறிதும் பிரயோசனமில்லாத அனித்தியமானவற்றைச் சத்தியமெனக் கருதி வாழ்ந்தேன் என்பார், 'வையக மாதர் சுகத்தையும், பொன்னையு(ம்), மாயைமல, மெய்யையு(ம்) மெய்யென்று,' என்றனர். அடியார்தம் விவேகமாவது - சிவஞானியர்கள் தேர்ந்த உண்மையறிவு. ஐயமில் வீடாவது - சுத்தாத்து

வித முத்தி. மெய் நூலாவது - மெய்கண்டார் சொல்லிய **சிவஞானபோ**தம். பொய்யர்தம் நட்பாவது - பொய் கண்டார்களாகிய மூக்கூற்றப் புறச்சமயத்தவர்களுடைய சினேகம். (53)

'அளியுங் கனிபோத்' தருவினை யாநொந் தயர்வுறுவேன்;
தெளிவும் படிக்குப் பரிபாக காலமுஞ் சித்திக்குமோ?
ஒளியுங், கருணையு(ம்), மாறாத வின்பமு மோருருவாய்
வெளிவந் தடியர் களிக்கநின் றாடும் விழுப்பொருளே!

(இ - ள்) ஒளியும் - பிரகாசமும், கருணையும் - கிருபையும், மாறாத - நீங்காத, இன்பமும் - இன்பமும், ஓர் உரு ஆய் - ஒரு திருவுருவாகி, வெளிவந்து - சகளீகரித்து, அடியர் - சிவனடியார்கள், களிக்க - சந்தோஷிக்க, நின்று - சிற் சபையி லெழுந்தருளி, ஆடும் - ஆனந்த நிர்த்தனம் செய்யும், விழுப்பொருளே! மேற்பட்ட வஸ்துவே!, அளியும் - கனிந்த, கனி ஒத்து - கனிபோன்று, அரு வினையால் - கொடிய வினையினால், நொந்து - வாடி, அயர்வுறுவேன் - அயர் வடைகின்றேன்; தெளியும்படிக்கு - தெளியும்வண்ணம், பரிபாக காலமும் - பரிபக்குவ காலமும், சித்திக்குமோ? - அடியேனுக்கு உண்டாகுமோ?, என்க.

(வி - ரை) நல்வினை யீட்டுந்தோறும் சுகானுபவமும், தீவினை யீட்டுந்தோறும் துக்கானுபவமும் பல சென்மங்களினுந் தொடர்ந்துவரச் சிவ புண்ணிய விசேடத்தால் நல்வினையால் சந்தோஷமும், தீவினையால் வருத்தமுங் கொள்ளாது, இருவினையினும் சம புத்தி சேர்ந்த காலத்திலேயே மலபரிபாக முண்டாகுமென்னுங் குறிப்பினைக் காட்டுவார், 'பரிபாக காலமுஞ் சித்திக்குமோ?' என்றனர். (54)

அடையார் புரஞ்செற்ற தேவே! நின் பொன்னடிக் கன்புசற்றும்
படையாத வென்னைப் படைத்(து)இந்தப் பாரிற், படர்ந்தவினைத்
தடையாற் றளையிட்டு, நெஞ்சம்புண் ணாகத் தளரவைத்தாய்!
உடையா யுடைய படியன்றி யான்செய்த தொன்றில்லையே.

(இ - ள்) அடையார் - பகைஞர்களுடைய, புரம் - திரிபுரத்தினை, செற்ற - எரித்த, தேவே! - தேவனே!, நின் - தேவரீருடைய, பொன்னடிக்கு - அழகிய திருவடிக்கு, அன்பு - அன்பினை, சற்றும் - சிறிதும், படையாத - கொள்ளாத, என்னை - அடியேனை, இந்த பாரில் - இவ் உலகின்கண்ணே, படைத்து - உண்டாக்கி; படர்ந்த - பரவிய, வினை - வினையென்னும், தடையால் - விலக்கினால், தளை இட்டு - தளைபூட்டி; நெஞ்சம் - மனமானது, புண் ஆக - புண்பட, தளர வைத்தாய்! - தளர வைத்தனை!; உடையாய் - (எல்லாம்) உடையவனாகிய, (நீ - தேவரீர்), உடையபடி அன்றி - உடைத்தார் தன்மையன்றி, யான் செய்தது - அடியேன் செய்தது, ஒன்று இல்லை - யாது மில்லை, என்க.

(வி - ரை) ஒருவன் தன் கருமத்திற்குத் தக்கபடி யுலகில் உடலெடுப்பதும், அவ்வுடல் சன்மத்திற்குத் தக்கபடி வினையினால் கட்டுப்படுவதும், அவ்வினையினை யநுபவிக்குந்தோறும் பற்பல துன்பங்கட் காளாவதும், ஆகிய அனைத்தும் முதல்வன் வாளாவிருக்க அவன் சந்நிதி மாத்திரத்தானே நடக்குமே யன்றிச் சுதந்திரமற்ற ஆன்மாவால் விளைவ தொன்றுமில்லை யென்பார், 'உடையா யுடைய படியன்றி யான்செய்த தொன்றில்லை.' என்றனர். (55)

'ஆடுங் கறங்கு, திரிகையும் போல' அலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல் லால்,நின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுய லாத கொடியர்,எமன்
தேடும் பொழுதென்ன செய்வார்? பரானந்த சிற்சுடரே!

(இ - ள்) பரானந்தம் - மேற்பட்ட இன்பத்தினைத் தரும், சிற்சுடரே! - ஞானதீபமே!, ஆடும் - ஆகாயத்தில் பறக்கும், கறங்கும் - காற்றாடியையும், திரிகையும் போல - குலாலன் சக்கரத்தினையும் போன்று, அலைந்து அலைந்து - திரிந்து திரிந்து, காடும் - காட்டினிடத்தும், கரையும் - நதியினிடத்தும், திரிவது - சஞ்சரிப்பது, அல்லால் - அல்லாமல்; நின் - தேவரீருடைய, கருணை - கிருபை, வந்து கூடும்படிக்கு - வந்து அடையும்படிக்கு, தவம் - தவத்தை, முயலாத - செய்யாத, கொடியர் - கொடியோர்; எமன் - யமன், தேடும்பொழுது - தேடுங்காலத்தில், என்ன செய்வார்? - ஏது செய்யக்கடவர்?, என்க.

(வி - ரை) முதல்வ னுண்மையினை நன்கு தேர்ந்து, அவன்பா லன்பு கொண்டு, சிவத்தலங்களி லிருந்து சிவபூசையாதி தவங்களை யனுட்டியாது, காடு முதலியவற்றிற் சென்று திரிந்து, உண்மை தெளியாது தவஞ் செய்து, வாணாளை வீணாகக் கழித்து வருபவர் தம் ஆயுள் முடிவில் எமனுலகினையே சத்தியமாக அடைவ ரென்பதாம். (56)

கற்றும், பலபல கேள்விகள் கேட்டுங், கறங்கெனவே
சுற்றுந் தொழில்சுற்றுச், சிற்றின்பத் தூடு சுழலிலென்னாம்?
குற்றங் குறைந்து, குணமே லிடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்! சுத்த மூடநெஞ்சே!

(இ - ள்) சுத்த மூட நெஞ்சே! - மிகவும் மூட மனமே!, கற்றும் - பல நூல்களைப் படித்தும்; பல பல கேள்விகள் கேட்டும் - பற்பல கேள்விகளைக் கேட்டும்; கறங்கு என - காற்றாடியைப் போல, சுற்றும் தொழில் - திரியும் தொழிலினை, சுற்று - தேர்ந்து; சிற்றின்பத்தூடு - உலக வின்பத்தின், சுழலின் - அலையின், என் ஆம் - என்ன பிரயோசனம்?, குற்றம் குறைந்து - குற்றமின்றி, குணம் மேலிடும் - நற்குணம் அதிகரிக்கின்ற, அன்பர் கூட்டத்தை - சிவனடியார்கள் சங்கத்தினையே, முற்றும் துணை என - முழுவதுந் துணையென்று, நம்பு! - நம்புவாயாக!, என்க.

(வி - ரை) 'கற்றும், பலபல கேள்விகள் கேட்டும்' என்றதனால், சிந்தித்தலையும் தெளிதலையும் கூட்டுக. இந் நான்கின் வழியே நின்ற பெரியோர்களும், அச் சாதனங்கட்கு இடையூறு வாராது அவற்றாலாய சாத்தியத்தினை யடையவேண்டு மாயின் சாதுசங்கமாகிய சிவனடியார் கூட்டுறவே அத்தியாவசிய மென்பதாம். பட்டினத்தார்: "அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்பு மன்றிப், படிமீதில் வேறு பயனுளதோ?" என்றதனாற் காண்க. (57)

'நீயென நானென வேறில்லை' யென்னு நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனை யே! பர மே! நின் றிருவருளுக்
கேயென்ன செய்யுங்கைம் மாறுள தோ? சுத்த வேழையனே.

(இ - ள்) பரமே! - பரம்பொருளே!, நீ என - நீ யென்றும், நான் என - நானென்றும், வேறு இல்லை என்னும் - அன்னியமா யில்லையென்னும், நினைவு - எண்ணமானது, அருள - அடியேனுக்கு உண்டாக, தாய் என - தாயினைப்போல, மோன குரு ஆகி - மௌன குருவாகி, வந்து - எழுந்தருளி, தடுத்து - (பிரபஞ்ச விசாரத்தினின்றும்) தடுத்து, அடிமை - அடிமையாகிய நான், சேய் என - (தேவரீருடைய) குழந்தையென, காத்தனையே! - காத்தருளினையே!, நின் - தேவரீருடைய, திருவருளுக்கு - திருவருட்கு, சுத்த ஏழையன் - மிகவு மெளியன், செய்யும் கைம்மாறு - செய்தற்குரிய பிரதியுபகாரம், உளதோ? - உண்டோ?, என்ன - (உளதாயின்) கட்டளை யிடுவாயாக!, என்க.

(வி - ரை) முதல்வன் மௌன குருவாய்த் திருக்கோலங்கொண்டு எழுந்தருளி வந்து தனக்கு உண்மையாகிய சித்தாந்த மகா வாக்கியத்தினை யுபதேசிக்கு முனவும், பரமான்மாவிடத்தில் தனக்குத் துவித பாவனையே தோன்றிக் கொண்டிருந்த தெனவும், உபதேசித்த பின்னர் அனுபவத்தில் அத்துவித பாவனை சேர்ந்ததெனவும் கூறுவார், 'நீயென நானென வேறில்லை' என்னு நினைவருள' என்றனர். (58)

ஆத்திரம் வந்தவர் போலலை யாமல், அரோகதிட
காத்திரந் தந்(து), என்னை யென்னை போலுங் கருணைவைத்திம்
மாத்திர முன்னின் றுணர்த்தினை யே; மௌன ே! இனிநான்
சாத்திரஞ் சொன்ன படியிய மாதியுஞ் சாதிப்பனே.

(இ - ள்) மௌனா! - மௌன குருவே!, ஆத்திரம் - மிகுந்த அவசரம், வந்தவர்போல் - அடைந்தவர்போல, அலையாமல் - திரியாமல்; அரோகம் - நோயின்மையாகிய, திட காத்திரம் - வலிவான சரீரம், தந்து - கொடுத்து; என்னை - அடியேனை, அன்னைபோலும் - தாயைப்போலும், கருணை வைத்து - கிருபைசெய்து; இம்மாத்திரம் - இம்மட்டாயினும்,

முன் நின்று - பிரத்தியட்சமாகி, உணர்த்தினையே - தெரிவித்தனையே ; இனி - இனிமேல், நான் - அடியேன், சாத்திரம் சொன்னபடி - சாத்திரம் சொன்னவண்ணம், இயமாதியும் - இயம முதலிய எண்வகை யோக வுறுப்புக்களையும், சாதிப்பன் - செய்து முடிப்பேன், என்க.

(வி - ரை) முதல்வன் மௌன குருவாகி யெழுந்தருளி அத்தியா வசியமாக அடையவேண்டிய சாத்தியத்தினுக் கேதுவாயுள்ள சாதனங்க ளின்னவெனச் சொல்லிவைத்தன ராகலின், அச் சாதனங்களை விளக்குவ தாகிய சாஸ்திரங்களை யாராய்ந்து அதன்வழி நிற்பேன் என்பார், 'சாத்திரஞ் சொன்ன படியிய மாதியுஞ் சாதிப்பனே' என்றனர். (59)

## உடல்பொய்யுறவு

நேரிசை வெண்பா.

உடல்பொய் யுறவாயின், உண்மையுற வாகக்
கடவாரார்? தண்ணருளே கண்டாய் !—திடமுடனே
யுற்றுப்பார் ! மோனனொரு சொல்லே யுண்மை ; நன்றாய்ப்
பற்றிப்பார் ! மற்றவெல்லாம் பாழ்.

(இ - ள்) உடல் - தேகமே, பொய் உறவாயின் - நமக்குப் பொய்யுறவானால், உண்மை உறவு - மெய்ம்மையாகிய சுற்றம், ஆகக்கடவார் ஆர் ? - உண்டாகுபவர் யாவர் ?, தண் - தண்ணிய, அருளே - திருவருளே ; திடமுடனே - உறுதியுடன், உற்று பார் ! - நோக்கிப்பார் !, மோனன் - மௌன குருவின், ஒரு சொல்லே - (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு மொழியே, உண்மை - சத்தியமாம் ; நன்று ஆக - நன்றாக, பற்றிப் பார் - பற்றிப் பார்ப்பாயாக, மற்ற எல்லாம் - மற்றவைகளெல்லாம், பாழ் - பொய்யாம், என்க.

(வி - ரை) பிறந்த நாள்முதல் இறக்கும் நாள்வரையில் உடனிருந்து சுக துக்கங்களை யனுபவித்து வந்து நீங்காதிருந்த உடலும் பொய்யாகி விடும். நாலடியார் : "யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்தாம் பெற்ற யாக்கையா லாயபயன் கொள்க—யாக்கை, மலையாடு மஞ்சுபோற் றோன்றி மற்றாங்கே, நிலையாது நீத்து விடும்." என்றதனாற் காண்க. ஆனால், என் றும் மெய்யாகி யிருந்து உபகரித்து வருவது முதல்வன் றிருவருளும், அம் முதல்வன் கருணைத் திருவுருவான மவுனகுரு உபதேசித்த சித்தாந்த மகா வாக்கியமுமாம். சித்தாந்த மகாவாக்கிய மின்னதென்பது முன்னர் விளக்கப்பட் டிருக்கிறது. (1

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்;—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லால்,
கற்குநெறி யாதினிமேற் காண்!

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, பார் ஆதி - பிருதிவிமுதலிய, பூதம் எல்லாம் - பூதங்கள் யாவும், பார்க்குங்கால் - ஆராயுமிடத்து, அ பரத்தின் - அந்தப் பரம்பொருளின், சீர் ஆக - சிறந்த வடிவாக, நிற்கும் திறம் - இருக்கும் விதத்தினை, கண்டாய் - தெரிந்தாய்; (ஆதலால்) யாம் - நாம், நேராக நிற்கும் - ஒழுங்காக நிற்கின்ற, திருவருளில் - திருவருணிலையினில், நிற்பது அல்லால் - இருப்பதல்லாமல், இனிமேல் - இனிமேல், கற்கும் நெறி - தெரிந்துகொள்ளும் வழி, யாது? - யாதுளது?, என்க.

(வி - ரை) பிரத்தியட்சமாக நம்மாற் பார்க்கப்படும் பிருதிவிமுதலிய பூத மனைத்து முதல்வன் றிருமேனியே யென்னு முண்மையினைத் தெரிந்து கொள்ளுவோமாகில், நாம் முதல்வன் றிருவருணிலையி னிற்பதன்றி அன்னியமாகத் தெரிந்துகொள்ளுவதற்கு ஒன்றுமில்லை யென்பதாம். 'ஆதி' என்றதனால் பிருதிவியுடன் அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆன்மாமுதலிய கூட்டுக. இவையே முதல்வனுக்கு அட்ட திருமேனியாம்.

மெய்யான தன்மை விளங்கினால், யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ?—ஐயாவே!
மன்னுநி ராசையின்னம் வந்ததல்ல; உன்னடிமை
யென்னுநிலை யெய்துமா றென்?

(இ - ள்) ஐயாவே! - ஐயனே!, மெய்யான தன்மை - உண்மையான தன்மை, விளங்கினால் - விளங்குமேயானால், யார்க்கு ஏனும் - எத்தகையர்க்கேனும், பொய்யான தன்மை - பொய்யாகிய தன்மை, பொருந்துமோ? - உண்டாகுமோ?, மன்னும் - நிலையுற்ற, நிராசை - ஆசையின்மை, இன்னம் வந்தது அல்ல - இன்றளவும் வரவில்லை; (அங்ஙனமாயின்) உன் - தேவரீருடைய, அடிமை என்னும் - அடிமை என்று சொல்லும்படியான, நிலை - நிலையானது, எய்துமாறு என்? - அடையும் விதம் எங்ஙனம்?, என்க.

(வி - ரை) 'மெய்யான தன்மை' ஆவது - மெய்கண்ட ஞான சாத்திரங்களாற் பிரதிபாதிக்கப்படும் முதல்வனுடைய உண்மை. 'பொய்யான தன்மை' ஆவது - பொய்கண்டார்களாகிய முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள் பசுநூல்களாலும் பாசநூல்களாலும் சாதிக்கப்படுகிற பொய்ம்மை. பசுபாசங்களில் அவாவற்றவர்க்கே பதிஞான முண்டாக, அப் பதி யருண் மேனி கொண்டுவந்து அடிமையாகக் கொள்வா னென்பார், 'உன்னடிமை, யென்னுநிலை யெய்துமா றென்?' என்றனர். (3)

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயாம்;
நீயுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக் கோர் நாமமிட்ட தே?

(இ - ள்) அறியாமை - அஞ்ஞானம், மேலிட்டு - அதிகரித்து, அறிவு இன்றி - ஞானமின்றி, நிற்கும் - வாழும், குறியேற்கு - இலட்சியமுடைய அடியேனுக்கு, அறிவு என்ற கோலம் - அறிவுடையவ னென்ற உருவம், வறிதே ஆம் - வீணாகும்; நீ - தேவரீர், உணர்த்த - உள்ளத்தினின் றறிவிக்க, நான் - அடியேன், உணரும் - எல்லாவற்றையும் அறியும், நேசத் தாலோ - அன்பினு லன்றோ, எனக்கு - அடியேனுக்கு அறிவு என்று - அறிவுடையவ னென்று, ஓர் நாமம் - ஒரு பெயர், இட்டது? - ஏற்றப்பட்டது?, என்க.

(வி - ரை) முதல்வன் ஆன்மாக்களின் சகலாவத்தையிலே கலாதி தத்துவங்களில் தத்துவ தேவதா பாரம்பரியமாய் வந்து மறைந்துநின்று, அவைகளைச் செலுத்தி, அவரவர் பருவத்திற்குத் தக்கபடி போதிக்க ஆன்மாக்கள் உணர்தலின், 'நீயுணர்த்த நானுணரு நேசத்தால்' என்றனர். இதனால் ஆன்மாக்கள் எக்காலத்தும் சுதந்திரவீன ரெனவும், முதல்வ னெக்காலத்தும் சுதந்திர னெனவு மேற்பட்டது. (4)

ஏதுக்குச் சும்மா விருமனமே! என்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்?—'வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல்' வாதாடினு யே; உன்
புந்தியென்ன? போதமென்ன? போ!

(இ - ள்) மனமே! - நெஞ்சமே!, ஏதுக்கு - என்ன காரணத்திற்காக (அலைகிறது)?, சும்மா இரு என்று - மவுனங் கூடியிரு என்ன, உனக்கு போதித்த - உனக்கு பலகால் உபதேசித்த, உண்மை - உண்மை நிலையினை, எங்கே - எவ்வழியிலே, போகவிட்டாய்? - போகவிட்டனை?, வாதுக்கு - வீண் தர்க்கத்திற்கு, வந்து எதிர்த்த - வந்து எதிர்கொண்ட, மல்லரைப்போல் - மல்லரைப்போல், வாதாடினுயே - வம்பு செய்தனையே; உன் - உனது, புந்தி என்ன? - புந்தி யிருந்தபடி யென்ன?, போதம் என்ன? - அறிவு இருந்த வகைதானென்ன?, போ! - (எனைவிட்டு) ஒழிவாயாக!, என்க.

(வி - ரை) மன வாக்குக் காயங்களால் பிரபஞ்சமுகமாக உண்டாகும் செயல்களை யற்று அந்தர்முகமாக இருந்து முதல்வனைத் தியானித்துக் கொண்டிருக்கும் மவுன நிலையே எல்லா நிலைகளைக் காட்டிலும் உன்னத நிலை யென்பார், 'ஏதுக்குச் சும்மா விருமனமே!' என்றனர். பஞ்சாக்கர வந்தாதி: "பாடுதும் பஞ்சாக் கரவனை யென்று படர்தலொடும், கூடுவ

தன்னவன் பாத மதுவந்து கூடுதலு, நீடுவ தின்ப மனவாக்குக் காய நிகழ் செயலற், றேடுவ வாளாங் கிருப்பதல் லாற்பின்னை யொன்றில்லையே." என்றதனாற் காண்க. (5)

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தால், துக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ? சோரா—திகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்
கட்டுக்கு ளாவதென்றோ? காண்.

(இ - ள்) சகம் அனைத்தும் - உலக முழுதும், பொய் என உணர்ந்தால் - அசத்தெனத் தெரிந்தால்; துக்கம் - துன்பம், சுகம் - இன்பம், அனைத்தும் - எல்லாம், பொய் அன்றோ? - பொய்யாக முடியுமல்லவா?, சோராது - தளராமல், இகபரத்தும் - இகபரங்களிலும், விட்டுப் பிரியாத - விட்டு நீங்காத, மேலான - மேலாகிய, அத்துவிதம் - அத்துவித மென்கிற, கட்டுக்கு உள் ஆவது - கட்டுக் குட்படுவது, என்றோ? - எக்காலமோ? என்க.

(வி - ரை) ஈண்டு 'பொய்' என்பது திரிபு; அதாவது, எந்நாளும் ஒரு படித்தாயிராமல் காரண காரியப்பட்டுக்கொண்டே யிருத்தல். 'பொய்' என்றதனால் அநித்யமெனக் கொள்ளற்க! பிரபஞ்சம் இங்ஙனம் நிகழ்தலின், 'சகமனைத்தும் பொய்' என்றனர். இவ்வுண்மை தோன்றவே இச் சக சம்மந்தமாக நிகழ்ந்து வரும் இன்ப துன்பங்களும் பொய்யாய் முடியுமாகலின், 'துக்க சுகமனைத்தும் பொய்யன்றோ?' என்றனர். ஆன்மாவுடன் பரமான்மா எக்காலத்தும் அத்துவிதமாக விளங்கியுள்ளா னெனவும், இம்மையில் அத்தன்மை விளங்காதபடி திரோதானத்தால் தடைபட்டிருப்பதெனவும், அத் திரோதானம் அருளாக விளங்கிய காலத்து அத்துவித உண்மை தோன்றுமெனவும், அதுவே முத்தியா மெனவும் மெய்கண்ட சாத்திரம் விளக்கலின், 'இகபரத்தும், விட்டுப் பிரியாத மேலான வத்துவிதம்' என்றனர். அத்துவித வுண்மை முன்னர் விளக்கப்பட்டிருக்கிறது.

கற்கண்டோ? தேனோ? கனிரசமோ? பாலோ? என்
சொற்கண்டா(து); ஏதெனநான் சொல்லுவேன்?—விற்கண்ட
வான மதிகாண மௌனிமவு னத்தளித்த
தானமதி லூறுமமிர் தம்.

(இ - ள்) வில்கண்ட - பிரகாசம் பொருந்திய, வான மதி - உயர்ந்த சந்திர மண்டலத்தை, காண - தரிசிக்கும்படி, மௌனி - மவுனகுரு, மௌனத்து அளித்த - மவுன நிலையில் உபதேசித்த, தானமதில் - அம் மண்டலத்தில், ஊறும் - சுரக்கின்ற, அமிர்தம் - அமுதமானது, கற்கண்டோ? - கற்கண்டு தானோ?, தேனோ? - தேன்றானோ?, கனிரசமோ? - முக்கனிகளின் சாறுதானோ?, பாலோ? - பால்தானோ!, என்

சொற்கு - அடியேன் வார்த்தைக்கு, அண்டாது - எட்டாது ; ஏது என - இவற்றுள் எத்தன்மைத்தென, நான் சொல்லுவேன் - நானறிந்து சொல்ல வல்லேன் ?, என்க.

(வி - ரை) மூலாதாரத்தில் கீழ் நோக்கிய முகமாய்க் கண்களை மூகிழ்த்துக் குண்டலி சத்தியினைக் கும்பித்த பிராணவாயுவால் அக்கினி மண்டலத்தினை மூட்டி யெழுப்பி, மூலாதாரமுதல் ஆக்கினையீருக ஆறு தாரங்களிடத்தும் சென்றால், சந்திரமண்டலத்தினின்றும் அமுதப் பிரவாகம் சிந்த, அதனை மடுத்து வீற்றிருப்பவர் சிவயோகிகளாதலினால், அத்தகைய தன்மையை யான் அனுபவிக்கும்படி செய்தன ரென்பார், 'வான மதிகாண மௌனிமவு னத்தளித்த, தானமதி லூறுமமிர் தம்.' என்றனர். (7)

சேட்டலுடன், சிந்தித்தல், கேடிலா மெய்த்தெளிவால்,
வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ ?—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்.

(இ - ள்) கேட்டலுடன் - சிரவணத்துடன், சிந்தித்தல் - மனனம், கேடு இல்லாத - தீமையில்லாத, மெய்த்தெளிவால் - உண்மையாகிய நிதித்தியாசனம் இவைகளால், வாட்டம் அறு - தளர்ச்சி நீங்காத, உற்பவ நோய் - பிறவிப்பிணி, மாறுமோ ? - ஒழியுமோ ?, நாட்டம் உற்று - இலட்சியம் வைத்து, மெய் ஆன - உண்மையான, நிட்டையினை - நிஷ்டையினை, மேவினர்கட்கு அன்றோ - அடைந்தவர்கட்கல்லவோ, பொய் ஆம் - பொய்யாகிய, பிறப்பு இறப்பு போம் - சனன மரண மொழியும், என்க.

(வி - ரை) 'நிட்டை' என்னும் மெய்ஞ்ஞானமாகிய சாத்தியத்தினை யடைவதற்குக் கேட்டலும், சிந்தித்தலும், தெளிதலும் சோபானமான சாதனங்களாகலின் இம் மூன்றிலேயே திருப்தி யடையாது நான்காவதனையும் அத்தியாவசியமாக அனுட்டிக்கவேண்டு மென்பார், 'மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான், பொய்யாம் பிறப்பிறப்புப்போம்' என்றனர். இதனால், நிட்டைகூடவே, வேண்டுதல் வேண்டாமை விளையாதெனவும், அவை விளையாதாகவே, பிறப்பிறப் பொழியு மெனவும் பெறப்பட்டது. (8)

மாயா சகத்தை மதியாதார் மண்முதலா
யேயான தத்துவத்தி லெய்துவரோ ?—நேயானு
பூதிநிலை நிற்கப் பொருந்துவர்கள் ; அன்னவர்த
நீதியையே யோர்மனமே ! நீ.

(இ - ள்) மனமே ! - நெஞ்சமே !, மாயா சகத்தை - மாயா காரிய ரூபமாகிய உலகத்தினை, மதியாதார் - சத்தியமாக மதியாதவர்கள், மண்

முதலாய் ஆன - பிருதிவி முதலாயுள்ள, தத்துவத்தில் - தத்துவங்களில், எய்துவரோ? - பொருந்துவார்களோ?, நேயம் - அன்பான, அனுபூதிநிலை - சிவானுபூதி நிலையினில், நிற்க - இருக்க, பொருந்துவர்கள் - இருப்பார்கள்; (ஆதலால்) அன்னவர் தம் - அத்தகையார், நீதியையே - நீதியினையே, நீ - நீ, ஓர் - அறிவாயாக!, என்க.

(வி - ரை) அசுத்த மாயாகாரியரூப பிரபஞ்சத்தினு லனுபவிக்கப் படும் போக மனைத்தும் பிரதிபந்தத்திற் கேதுவே யல்லாமல் நிவிர்த்தி யடைவதற்குக் கூடாதாகலின், சுத்தாத்துவித சித்தாந்த சிவானுபூதியினை யனுபவிக்கும் சன்மார்க்க நெறியினர்களாகிய வைதிக சைவர்கள் வழியே நிற்கவேண்டு மென்பார், 'நேயானு, பூதிநிலை நிற்கப் பொருந்துவர்கள்; அன்னவர்த, நீதியையே யோர்மனமே!' என்றனர். (9)

இகமுழுதும் பொய்யெனவே யேய்ந்துணர்ந்தா லாங்கே
மிகவளர வந்தவருண் மெய்யே;—அகநெகிழப்
பாரீர்! ஒருசொற் படியே யனுபவத்தைச்
சேரீர்! அதுவே திறம்.

(இ - ள்) இக முழுதும் - இவ் வுலக மனைத்தும், பொய் எனவே - நிலையல்லன வெனவே, ஏய்ந்து - பொருந்தி, உணர்ந்தால் - தெரிந்து கொண்டால், ஆங்கே - அக்கணமே, மிக வளர வந்த - அதிக பெருக்கத் தினை யடைய ஏற்பட்ட, அருள் - திருவருள், மெய்யே - (அடைவது) உண்மையேயாம்; அகம் - மனமானது, நெகிழ - கசிய, பாரீர்! - பாருங் கள்!, ஒரு சொல்படியே - ஒருமொழிப்படியே, அனுபவத்தை சேரீர் - சிவானுபவத்தினைச் சேருங்கள்!, அதுவே - அங்ஙனம் செய்தலே, திறம் - உறுதியாகும், என்க.

(வி - ரை) ஆசாரியர் உபதேசித்த சித்தாந்த மகாவாக்கியமாகிய வொரு சொல்லினை யனுசந்தானஞ் செய்துவரின், அசுத்த மாயாகாரிய ரூபப் பிரபஞ்ச சம்பந்தமாக விளையும் மருளானது நீங்க, அருளானது கைவல்லியமா மென்பார், 'ஒருசொற் படியே யனுபவத்தைச், சேரீ ரதுவே திறம்' என்றனர். (10)

ஆரணங்க ளாகமங்கள் யாவுமே யானந்த
பூரணமே யுண்மைப் பொருளென்னுங்—காரணத்தை
யோராயோ? உள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ? நெஞ்சே! பகர்!

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, ஆரணங்கள் - வேதங்கள், ஆக மங்கள் - சிவாகமங்கள் (ஆகிய), யாவும் - எல்லாக் கலைகளும், ஆனந்த பூரணமே - சுக நிறைவினையே, உண்மை பொருள் என்னும் - சத்தியப் பொருளென்று உரைத்திடும், காரணத்தை - இவ் வேதுவினை, ஓராயோ?-

ஆராய்ச்சி செய்யாயோ?, உள்ளுள்ளே - உள்ளத்திலேயே, உற்று உணர்ந்து - நோக்கி யறிந்து, அ உண்மையினை - அம் மெய்யினை பாராயோ? - பார்த்திடாயோ?, பகர்! - சொல்வாயாக!, என்க.

(வி - ரை) 'யாவுமே' என்றதனால் ஆரணங்கள் ஆகமங்களுடன் புராண இதிகாசங்களையுங் கூட்டுக. 'ஆனந்த பூரணம்' என்பது ஆனந்த சொரூபியாகிச் சர்வ வியாபியாயுள்ள சிவபெருமானை. வேதாதி கலையனைத்தும் சிவ பெருமானையே முழுமுதற்கடவுளென அறிதியிட்டுக் கூறுதலின், 'ஆரணங்க ளாகமங்கள் யாவுமே யானந்த, பூரணமே யுண்மைப் பொருள்' என்றனர். இதுபற்றியே சுருதி: "ஈசாநஸ்ஸர்வவித்யாநாம்" என்று வியந் தோதியது; அன்றியும், "அஸ்ருஜத்ஸர்வ சாஸ்த்ராணி மஹாதேவோமஹேஸ்வர" என்று பாரதம் சாந்திபர்வம் கூறியது. (11)

நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
யாரா யலைந்தீர்நீர்? ஆகெடுவீர்;—தேரீர்!
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்
கரையும்! கரையுமனக் கல்.

(இ - ள்) நேராய் - நேராக, அ மௌன நிலை - அந்த மவுன நிலையில், நில்லாமல் - நிற்காமல், வாய் பேசி - வாயினாற் பேசிக்கொண்டு, நீர் - நீங்கள், ஆராய் அலைந்தீர்? - யாராகவெண்ணி யலைந்தீர்கள்?, ஆ - ஐயோ!, கெடுவீர் - கெட்டுப்போவீர்கள்; தேரீர்! - ஆராயுங்கள்!, திரை - அலை, உந்து - பொருந்தி, இரையும் - ஒலிக்கும், நதி - கங்கையினை வாய்ந்த, சென்னியனை - சிரசினனை, நாவால் - நாவினால், கரையும்! - சொல்லும்!, (அங்ஙனம் செய்தால்) மனக்கல் - கல்போன்ற நெஞ்சமானது, கரையும் - உருகும், என்க.

(வி - ரை) சர்வ மங்கள விக்கிரகரூபனாய் விளங்கும் கங்காதர மூர்த்தியை நாளும் மனத்தில் தியானஞ் செய்துகொண்டு பஞ்சேந்திரியங்களையு மொடுக்கி, மவுன நிலையிலிருந்து வாழாமல், வாசா கைங்கரியமாகப் பேசி நாளைக் கழித்தல் அப்பிரயோசன மென்பதாம். (12)

அற்ப மனமே! அகிலவாழ் வத்தனையுஞ்
சொற்பனங்கண் டாய்; உண்மை சொன்னேனான்;—கற்பனை
றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக் [யொன்
கல்லாய்! நீ தானோர் கவி.

(இ - ள்) அற்ப மனமே! - இழிவாகிய நெஞ்சே!, அகில வாழ்வு - உலக வாழ்வு, அத்தனையும் - எல்லாம், சொற்பனம் - கனவாகும்; நான் - நான், உண்மை சொன்னேன் - சத்தியம் பகர்ந்தேன்; கற்பனை - அன்னிய பாவனை, ஒன்று இல்லா இடத்து - சிறிது மில்லாத இடத்தில், எனை - என்னை, சும்மா வைத்திருக்க - மவுனங் கூடியிருக்க, நீ - நீ, ஓர் கவி - ஓர் கவியினை, கல்லாய்! - கற்றுக் கொள்வாயாக!, என்க.

(வி - ரை) ஈண்டுக் 'கற்பனை யில்லாவிடம்' ஆவது - துவைத பாவனை யற்ற நிலை; கவியாவது - உபதேச மொழி. கனுப்பொருள் முடிவு பெறுதலின்றி இடையே மறைந்துபோதல் போல, காரண காரியங்களால் பிரபஞ்சந் தோன்றி மறைதலின், 'அகிலவாழ் வத்தனையுஞ், சொற்பனம்' என்றனர். அன்னிய பாவனையான துவைதநிலையுள்ளளவும் மவுனம் கூடா தாகலின், 'கற்பனையொன், றில்லாவிடத்தே யெனைச்சும்மா வைத்திருக்க' என்றனர். ஆகலின், அனன்னிய பாவனையான மவுனநிலை கூடுதற்கு உப தேசமொழி அத்தியாவசிய மென்பார், 'கல்லாய்! நீ தாஞோர் கவி' என்றனர். (13)

ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோ? செல்லாதே; செல்லுமிட மின்பமலாற்
சொல்லுமோ வேதத் தொனி?

(இ - ள்) ஏதும் - யாதும், திருவருளின் - திருவருளினுடைய, இச்சை ஆம் என்று என்று - சங்கற்பமே யாகுமென எண்ணி எண்ணி, எப்போதும் பொருந்தும் - எக்காலமும் அமைந்திருக்கின்ற, புனிதர்பால் - சுத்தர்களிடத்து, தீது நெறி - தீமையாகிய விதம், செல்லுமோ? - செல்வதோ?, செல்லாதே - (எந்நாளும்) செல்லாதே, செல்லும் இடம் - (விடயங்கள்) அடைதற்குரிய (புனிதர்கள்) இடமானது, இன்பம் அல்லால் - ஆனந்தமேயன்றி, வேத தொனி - வேதவொலி, சொல்லுமோ - (இன்பத்திற்கு அன்னியமாக) வேறொன் றுண்டெனச் சொல்லுமோ?, என்க.

(வி - ரை) "சிவன் செயலாலே யாதும் வரும்" எனத் தேர்ந்துள்ள சித்தாந்தச் செல்வரிடத்து விடய பஞ்சகமாதிய சேராவெனவும், அவர்கள் சிவானந்த சொரூபராகவே நாளும் விளங்குவ ரெனவும், வேத மறுதியிட்டுக் கூறுமென்பதாம். (14)

'கல்லேறுஞ், சில்லேறுங், கட்டியே றும்போல'ச்
சொல்லேறப் பாழ்த்த தொளைசெவிகொண்—டல்லேறு
நெஞ்சனென நிற்கவைத்தாய்; நீதியோ? தற்பரமே!
வஞ்சனல்லேன்; நீயே மதி!

(இ - ள்) தற்பரனே! - கடவுளே!, கல்லேறும் - கல்லெறிதலையும், சில்லேறும் - ஓடெறிதலையும், கட்டியேறும் - மண்ணுங்கட்டி யெறிதலையும், போல - ஒத்திருக்கின்ற, சொல் - பற்பல சொற்கள், ஏற - கேட்ட, பாழ்த்த - பாழான, தொளைச்செவி கொண்டு - செவித்தொளை வாய்ந்து, அல் ஏறு - அஞ்ஞான மேறிய, நெஞ்சன் என - மனத்தை யுடையனென்ன, நிற்க வைத்தாய் - (அடியேனை) நிலைப்பித்தாய்; நீதியோ - (தேவரீருக்கு) நீதியாகுமோ?, வஞ்சன் அல்லேன் - (அடியேன்) வஞ்சனல்லவே; நீயே மதி! - தேவரீரே மதித் தறிவீர்!, என்க.

(வி - ரை) முக்கூற்றுப் புறச்சமயத்தினர்களும் தங்கள் தங்கள் சமய கொள்கைகளுக் கீடாகத் தருக்க விரோதமான வாக்கியங்களைப் பலகாலெடுத்துக் கூறக் கேட்ட காது என்பார், 'சொல்லேறப் பாழ்த்த தொளைசெவி' என்றனர். சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ சமயத்தினர் அருங்கொள்கைக் கேற்ற உண்மைச் சொற்களைக் கேளாதபடி வைத்தல் நலமோ என்பார், 'நீதியோ' என்றனர். (15)

அப்பொருளு மான்மாவும், ஆரணநூல் சொன்னபடி,
தப்பில்லாச் சித்தொன்றுஞ் சாதியினால் ;—எப்படியுந்
தேரிற் றுவிதம் ; சிவாகமமே சொல்லுநிட்டை
யாருமிடத் தத்துவித மாம்.

(இ - ள்) ஆரணநூல் - வேதம், சொன்னபடி - சொன்ன பிரகாரம், அ பொருளும் - அந்தப் பரமான்மாவும், ஆன்மாவும் - ஆன்மாவும், சாதியினால் - மரபினால், தப்பு இல்லா - தவறுத லில்லாத, சித்து ஒன்று ஆம் - சித்தாகிய வொருவகைப் பொருளேயாம் ; எப்படியும் - எவ்வகையினும், தேரின் - ( பெத்ததசையிலே ) ஆராயின், துவிதம் - (ஆன்மாவும் பரமான்மாவும் ) துவைதமாக விளங்கும் ; சிவாகமமே - சிவாகம மொன்றே, சொல்லும் - ( அறுதியிட்டுக் ) கூறும், நிட்டை - சகச நிஷ்டையினை, ஆரும் இடத்து - கூடுங்காலத்து, அத்து விதமாம் - ( அவ்வான்மாவும் பரமான்மாவும் ) அத்துவித மாகும், என்க.

(வி - ரை) ஆன்மாவும் பரமான்மாவும் சித்தாகிய பொருள்களே யாகினும், ஆன்மா தூல சித்தெனவும், பரமான்மா சூக்கும சித்தெனவுங் கொள்க. என்னை? ஆன்மாவிற்குத் தன்னறிவு நிகழ்ச்சிக்கு அறிவிக்க அறிதலாகிய வியஞ் சகத்தை யின்றியமையாமையானும், பரமான்மா தனக்கென வொருவியஞ்சகம் வேண்டாது தானே யறியுந்தன்மை யுடைமை யானுமாம். சிவஞான சித்தியார் : "அறிவிக்க வறித லானு மழிவின்றி நிற்ற லானும், குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக் கீச, னெறிநித்த முத்த சுத்த வத்தென நிற்ப னென்றும், பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளி னாலே." என்றதனாற் காண்க. இதனால் சித்தொன்றே இரண்டாகு மென்னும் ஏகான்மவாதம் மறுக்கப்பட்டது. ஆன்மாக்களுடன் எக்காலத்தும் முதல்வன் அத்துவிதமாக விருக்கினும் பெத்த தசையில் விசாரிக்கின்ற மலத்தடையால் துவிதமாகவே விளங்குவதாகலின், 'தேரிற் றுவிதம்' என்றனர். மலத்தடை நீங்கியகாலத்து முத்த தசையில் அத்துவிதமாக விருப்பனென்பார், 'நிட்டை, யாருமிடத் தத்துவிதம்' என்றனர். ஆகமத்திற் கூறும் நிஷ்டையே உண்மை யிலக்கணத்துடன் கூடிய தென்பார், தேற்றேகாரந் தந்து, 'சிவாகமமே சொல்லு நிட்டை' என்றனர். (16)

வேத முதலாய் விளங்கும் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாமல்,—ஏதமிகு
மோகாதி யல்லலிலே மூழ்கினையே ; நெஞ்சே ! இத்
தேகாதி மெய்யோ ? தெளி !

(இ - ள்) நெஞ்சே ! - மனமே !, வேத முதலாய் - வேத முதலாகி, விளங்கும் - விளங்குகின்ற, சிவ வடிவு ஆம் - சிவ சொரூபமாகிய, போத நிலையில் - ஞானநிலையில், பொருந்தாமல் - பொருந்தியிராமல், ஏதம் மிகும் - குற்ற மதிகரிக்கின்ற, மோகாதி - மோக முதலிய, அல்லலிலே - துன்பங்களிலே, மூழ்கினையே - அழுந்தினையே ; இ தேகாதி - இந்தத் தேகாதிகள், மெய்யோ ? - மெய்யாகுமோ ?, தெளி ! - தெளிவாயாக !, என்க.

(வி - ரை) வேதங்களும், ஆகமங்களும், புராணங்களும், சாஸ்திரங்களும், இதிகாசங்களும் ஆகிய கலைக ளனைத்தும் சிவபெருமா னொருவனையே பேசுதலின், 'வேத முதலாய் விளங்கும் சிவவடிவாம்' என்றனர். மற்றைய தேவர்களையும் அவ்வேதமாதி கூறுவதென்னையெனின், அம் முதல்வனின் அதிகார சத்தியினை அத் தேவர்கள் தாங்கி விளங்கலின் அவர்களையும் உபசாரமாக அலங்கார பிரசம்சை செய்து தேவர்க ளெனக் கூறும். (17)

நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்,—காக்குமுயிர்
அத்தனைக்கு நானடிமை யாதலினால், யானெனதென்
றித்தனைக்கும் பேசவிட மில்.

(இ - ள்) நோக்கற்கு - காண்டலுக்கு, அரிது ஆன - அருமையான, நுண்ணிய - நுட்பமாகிய, வான் - மேலான, மோனநிலை - மௌன நிலையினை, தாக்கற்கு - அடைதற்கு, உபாயம் - தந்திரத்தினை, சமைத்த - விதித்த, பிரான் - பெருமான் ; காக்கும் - இரட்சிக்கும், உயிர் - ஆன்ம கோடிகள், அத்தனைக்கும் - எல்லாவற்றிற்கும், நான் - அடியேன், அடிமை ஆதலினால் - அடிமையாகையால், யான் எனது என்று - நான் என்னது என்று, இத்தனைக்கும் - இவ்வளவிற்கும், பேச - பேசுதற்கு, இடம் இல் - இடமில்லை, என்க.

(வி - ரை) மவுனநிலையினை யுபதேசித்த பெருமானால் அதிகரிக்கப் பட்டு வரும் ஆன்மாக்க ளனைவருக்கும் அடிமைபூண் டொழுகவே, தற்போத மிழந்த என்பால் அகங்கார மமகார முளைத்தற்கு ஏதுவொன்று மில்லையென்பார், 'யானெனதென், றித்தனைக்கும் பேசவிட மில்' என்றனர். (18)

'ஒன்றுமற நில்'லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்றுணைத்தா ணீடூழி தாம்வாழ்க!—என்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்கே
கைக்குவரு மின்பக் கனி.

(இ - ள்) ஒன்றும் அற - ஒரு விகற்பமு மில்லாமல், நில் என்று - நிருவிகற்பமாக விரு என்று, உணர்த்திய - உபதேசித்த, மோன குரு - தன் மவுன குருவினுடைய, துணைத்தாள் - இரண்டு திருவடிகள், நீடூழி - நெடுங்காலம், வாழ்க ! - வாழக்கடவதாக !, என்று என்றே - என்று வாழ்த்தியே, திக்கு அனைத்தும் - எத்திசையினும், கைகுவிக்கும் - அஞ்சலி செய்யும், சின்மயராம் - ஞானிகளாகிய, தன்மையர்க்கே - தன்மை யுடையவர்கட்கே, இன்பம் கனி - சுகக்கனியானது, கைக்கு வரும் - கைக்குக் கிடைக்கும், என்க.

(வி - ரை) ஆசாரியரிடத்துச் சிறந்த பக்தி யுடையவராய் அவரை எக்காலத்தும் வாழ்த்தி யுய்வார்களிடத்திலேயே முதல்வன் விளங்குவது நிச்சயமென்பார், 'கைக்குவரு மின்பக் கனி' என்றனர். "கற்றவர்க ளுண்ணுங் கனி" என ஆளுடையவரசு அருளிச் செய்ததற் கேற்ப, முதல்வனை இவ்வாசிரியரும் 'கனி' என்றனர். (19)

மனத்தாலும் வாக்காலு மன்னவொண் ணாமோன
வினத்தாரே நல்ல வினத்தார் ;—கனத்தபுகழ்
கொண்டவரு மன்னவரே ; கூறரிய முத்திநெறி
கண்டவரு மன்னவரே ; காண்.

(இ - ள்) மனத்தாலும் - மனத்தினாலும், வாக்காலும் - வாக்கினாலும், மன்ன ஒண்ணா - நிலைக்கக்கூடாத, மோனம் - மவுன நிலையினையுடைய, இனத்தாரே - கூட்டத்தினரே, நல்ல இனத்தார் - நல்ல கூட்டத்தினர்; கனத்த விசேஷமான, புகழ் - கீர்த்தியினை, கொண்டவரும் - அடைந்தவரும், அன்னவரே - அத்தன்மையினரே ; கூறு அரிய - சொல்லுதற் கரிய, முத்தி நெறி - மோட்ச மார்க்கத்தினை, கண்டவரும் - அனுபவித்தவரும், அன்னவரே - அத்தன்மையவரே, என்க.

(வி - ரை) மோனவினத்தாராவார் மௌனஞானிக ளெனப்படுவர். இம் மவுனஞானம் சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவர்கட்கே சித்திக்கும். இவரே சன்மார்க்க ராவர் ஆகலின், 'நல்ல இனத்தார்' என்றனர். இவரே நற்கீர்த்திக்கு உடையவராகலின், 'புகழ், கொண்டவர்' என்றனர். இவரே சுத்தாத்துவிதானுபவத்திற் குரியவ ராகலின் 'முத்தி நெறி, கண்டவரு மன்னவரே காண்' என்றனர். (20)

கண்ணொளியே! மோனக் கரும்பே! கவலையறப் [வுன்
பண்ணொளிக்கு முள்ளொளியாம் பான்மையினை—நண்ணிட

சித்த மிரங்கிலதென் ? சித்தந் தெளியாவே
றித்தனைக்கு மாதரவு மில்.

(இ - ள்) கண் ஒளியே! - கண்ணுக்குள் ஒளியே!, மோன கரும்பே! - மௌனக் கரும்பே!, கவலை அற பண் - சஞ்சல மில்லாது செய்கின்ற, ஒளிக்கும் - ஒளியினுக்கும், உள் ஒளியாம் - உள்ளே விளங்குகின்ற ஒளியாகும், பான்மையினை - தன்மையினை, நண்ணிட - அடைந்திட, உன் - தேவரீரது, சித்தம் - மனமானது, இரங்கிலது என் ? - இரங்காததென்னையோ?, சித்தம் - என் மனம், தெளியா - தெளியாதிருக்கின்ற, இத்தனைக்கும் - இவ்வளவினுக்கும், வேறு ஆதரவு - வேறுவிதமான ஆதாரம், இல் - இல்லை, என்க.

(வி - ரை) என்னிடத்தி விருந்து நிகழும் செயலனைத்திற்குங் காரணம் தேவரீரேயாக விருக்கவும், உம்மையன்றி வேறுவிதமான ஆதாரமில்லா திருக்கவும், உம்மிடத்து அடியேன் சித்த மிரங்கும்படி செய்வது உமது பாலதா யிருக்கவும், எனக்கு மன நெகிழ்ச்சி விளையாததற்குக் காரணம் யாதென்பார், 'சித்த மிரங்கிலதென் ?' என்றனர். (21)

அறியாமை சாரி னதுவாய், அறிவா
நெறியான போததுவாய் நிற்கும்—குறியாற்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய்.

(இ - ள்) அறியாமை - அறியாமையினை, சாரின் - பொருந்தினால், அது ஆய் - அவ்வறியாமையேயாக ; அறிவு ஆம் - அறிவுமயமாகிய, நெறி ஆனபோது - நெறியினைச் சார்ந்தபோது, அது ஆய் நிற்கும் - அவ்வறிவாகவே யிருக்கும், குறியால் - (இத்தகைய) தன்மையால், சதசத்து-சத்து அசத்தென்று, அருள் உணர்த்த - திருவருள் அறிவிக்க, தான் உணரா நின்ற - தான் அறியாநின்ற, விதம் உற்று - விதத்தினைப் பொருந்தி, அறிவு எனும் பேர் - அறிவென்கின்ற பேர், மெய் - மெய்யாகும், என்க.

(வி - ரை) சத்து அசத்தினை அறியாது ; அசத்து சத்தினை அறியாது ; சத்தினையும் அசத்தினையும் அறிவது சதசத்து ஆம். சத்து சிவம். அசத்து பிரபஞ்சம், சதசத்து ஆன்மா எனப்படும். சிவஞான சித்தியார் : "சத்தசத் தறிவதான்மாத் தான்சத்து மசத்து மன்று, நித்தனுய்ச் சதசத் தாகி நின்றிடு மிரண்டின் பாலும்" என்றதனாற் காண்க. இதனால் ஆன்மா பரமான்மாவின் பரிணாமமென்பார் மதமும், ஆன்மா பரமான்மா விடத்தில் விவர்த்தமாகத் தோன்று மென்பார் மதமும் மறுக்கப்பட்டன. ஷை சித்தியார் : "அறிவிக்க வறிதலானும்" என்பதற் கேற்ப, "அருளுணர்த்தத் தானுணரா நின்ற விதமுற்று." சிவஞான போதம். (22)

குருலிங்க சங்கமமாக் கொண்டேதிரு மேனி
கருவொன்று மேனிநம்பாற் காட்டா(து);—அருளென்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது,
கொண்டவர்க்கிங் கென்னகிடைக் கும்?

(இ - ள்) குரு ஆக - ஆசாரியனாகவும், லிங்கம் (ஆக) சதாசிவ மூர்த்தியாகவும், சங்கமம் (ஆக) - அடியார்களாகவும், கொண்ட - வெளிப்பட்ட, திருமேனி - அருள்மேனிகளே யல்லால், கரு ஒன்று - பிறப்பிற்பட்ட, மேனி - உருவம், நம்பால் - நம் முன்னே, காட்டாது - காட்டமாட்டாது; அருள் என்று - திருவருளென்று, கண்டவர்க்கே - (உண்மை) தேர்ந்தவர்க்கே, ஆனந்தம் - இன்பம், கண்டுகொளலாம் - அனுபவிக்கப்படும், அல்லது - அன்றி, கொண்டவர்க்கு - வேறுவகையாகப் பாவித்தவர்கட்கு, இங்கு - இவ் வுலகில், என்ன கிடைக்கும் - ஏது சித்தியுண்டாம்?, என்க.

(வி - ரை) முதல்வன் மற்றைய தேவர்களைப்போல எக்காலத்தும் பிறப்பிற் படாதவனாகலின் அவன், அடியார்கட்கு அனுக்கிரகிக்கு நிமித்தமாக, ஆசாரியனாக அருட்டிருமேனி கொண்டும், சதாசிவத் திருவுருவாகிய சிவலிங்கமாக விருந்தும், அடியார் கோலங் காட்டியும் எழுந்தருளியிருப்ப னல்லது வேறு வகையிற் காணப்படா னென்பதாம். (23)

புலியி னதளுடையான், பூதப் படையான்,
பலியிரந்து மெல்லாம் பரிப்பான்;—மலிபுனல்சேர்
பொன் முடியான், முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா(து)? ஏதுமுள தே.

(இ - ள்) புலியின் - புலியினுடைய, அதள் உடையான் - தோலினை யாடையாக வுடையவன்; பூத படையான் - பூதங்களைப் படையாக வுடையவன்; பலி இரந்தும் - பலியேற்றும், எல்லாம் - எல்லாவற்றினையும், பரிப்பான் - தாங்குவான்; மலி - நிறைந்த, புனல் சேர் - நீரையுடைய கங்கையை யணிந்த, பொன் முடியான் - அழகிய முடியினை யுடையவன். முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, புனிதன் - பரிசுத்தன், சரண் - அவனுடைய திருவடிகளில், புகுந்தோர்க்கு - அடைந்தவர்கட்கு, என் முடியாது? - எக் காரியந்தான் முடியாது?, ஏதும் - எல்லாம், உளதே - சித்திக்குமாம், என்க.

(வி - ரை) சிவபத்தி யில்லாது கரும பிரமவாதிகளா யிருந்த தாருகா வன முனிவர் செய்த அபிசார வேள்வியிற் றோன்றி, அவர்கள் ஏவலின் படி வந்த புலியைச் சங்கரித்து உடையாகப் போர்த்த கோலமே சார்த்துல ஹாரமூர்த்தம் எனப்படும். அம் முனிவர்கள் தவத்தை மாற்ற முதல்வன் திகம்பரராய்ப் பிரம கபாலந் தாங்கி யேற்கச்சென்ற கோலம் பிட்சாடன

மூர்த்தம் எனப்படும். தேவியாரது திருவிரல் வியர்வினு லுண்டாகிய கங்கை உலகத்தை யழிக்கும்படி யிசைந்து வருகையில் அது வீறுகுன்ற முதல்வன் தனது வேணியிலணிந்த காரணத்தால் கங்காதரமூர்த்தி யெனப்படும். ஆகலின், 'புலியி னதளுடையான், பலியிரந்து பரிப்பான், புனல்சேர் முடியான்' என்றனர். (24)

சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
யல்லும் பகலு மரற்றுவதென் ?—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்க ளுமில்லை யென்பர் ; அந்தோ !
மோனமய மான முறை.

(இ - ள்) சொல்லுக்கு - வாக்கினுக்கு, அடங்கா - எட்டாத, சுகப் பொருளை - இன்ப மயமான முதல்வனை, நாம் எனவே - ஆன்மாக்களாகிய நாமே என்று, அல்லும் - இரவிலும், பகலும் - பகலிலும், அரற்றுவது - பிதற்றுவது, என் ? - என்ன ?, நல்ல - நல்ல, சிவஞான மயம் - சிவஞான மயத்தினை, பெற்றோர்கள் - அடைந்த அன்பர்கள், நாம் இல்லை - முதல்வ னுக்கு அன்னியமாக நாம் நிற்பதில்லை, என்பர் - என்று சொல்லுவர் ; அந்தோ ! - ஐயோ !, மோன மயமான - மவுனத் தன்மையான, முறை - முறைமை யிதுவேயாகும், என்க.

(வி - ரை) அநாதியே சுக சொரூபமாயுள்ள முதல்வனை அநாதியே துக்க ரூபமாயுள்ள ஆன்மாக்களெனக் கூறி இரவும் பகலும் அழுவதென் என்பார், 'அரற்றுவதென் ?' என்றனர். இங்ஙனம் கூறித் திரிவார் பதி ஞானம் சிறிதும் கைவரப் பெறாத பசுஞானிகளே யாவார். சிவஞான சித்தி யார் : "காதலினுன் பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" என் றதனுற் காண்க. இதனால் ஏகான்மவாதிகள் மறுக்கப்பட்டனர். அநாதி யுடனின்ற ஆணவ மலத்தைவிட்டு நீங்கி முதல்வனுடன் கூடுமாயின், அம் முறைபற்றி முதல்வனையு மொரோவழி விட்டு நீங்கப்பெறும்போலு மென்னு மவ்வாதிகளை நோக்கி, அது கூடாமைக்கு 'ஞானமயம் பெற் றோர்க ளுமில்லை யென்பர்' என்றனர். சிவஞான சித்தியார் : "அர னடியை யகன்று நிற்பதெங்கே யாமே" என்றதனுற் காண்க. இதனால் சிவசமவாதிகள் மறுக்கப்பட்டனர். (25)

ஐயா ! அருணகிரி யப்பா ! உனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார் ?—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றார் ; தன்னனையாய் ! முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னான்.

(இ - ள்) ஐயா ! - ஐயனே !, அருணகிரி - அருணகிரி நாதனெனுந் திருபெயரினை வாய்ந்த, அப்பா ! - என் அப்பனே !, உனைப்போல - உன் னைப்போல, மெய்யாக - உண்மையாக, ஓர் சொல் - ஒரு மொழியினை,

விளம்பினர் யார்? - சொன்னவர் யாவர்?, வையகத்தோர் - உலகத்தவர்கள், சாற்று அரிது என்று - சொல்லுதல் அருமையாகுமென்று, எசற்றார் - இளைத்துப்போனார்கள்; தன் அனையாய்! - தன்னைத்தானே நிகர்த்தவனே!, முக்கண் எந்தை - திரிநேத்திரதாரியாகிய எமது எந்தை, நாற்றிசைக்கும் - எத்திசையினுக்கும், கை காட்டினார் - முத்திரைக்கை காட்டினார், என்க.

(வி - ரை) சனகாதியர் நால்வருக்குக் கல்லால விருட்சத்தின் கீழிருந்து முதல்வன் உபதேசித்த மவுன மொழியினை முருகக்கடவுள் அருணகிரிநாதருக்கு உபதேசிக்க, அவர் அந்த உண்மையினைத் தானருளிச் செய்த கந்தரநுபூதியினில்: "செம்மான் மகளைத் திருடுந் திருடன், பெம்மான் முருகன் பிறவா னிறவான், சும்மா விருசொல் லறவென் றலுமே, யம்மா பொருளொன் றுமறிந் திலனே." எனக் கூறிவைத்த அருமையினை நோக்கி, 'ஐயா! அருணகிரியப்பா! உனைப்போல, மெய்யாக வோர் சொல் விளம்பினர் யார்?' என்றனர். கந்தரநுபூதியில் "பொருளொன் றுமறிந் திலனே" என்றது பிரபஞ்சத்தின்கண்ணே தனக் கன்னியமாகத் தோன்றும் மாயா காரியங்களனைத்தும் பெருமான் 'சும்மாவிரு' என்றவுடன் தோன்றவில்லை யென்பதாம். (26)

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ?
தீதற்ற காயமுமச் செய்கையே;—போதமாய்
நிற்பரல்லா விச்சகத்தி னேரார்கள்; நேர்ந்திடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம்.

(இ - ள்) காது - துளை, அற்றுபோன - அறுந்துபோன, முறி - எழுதோலையை, கட்டிவைத்தால் - கட்டிவைத்ததினால், ஆவது உண்டோ? - பிரயோசன முண்டோ?, (அதுபோல்) - அதுபோலவே, தீது அற்ற - நோய்முதலிய வில்லாத, காயமும் - தேகமும், அச் செய்கையே - அத்தன்மைத்தே; (ஆகையால்) போதமாய் - ஞானவடிவமாய், நிற்பர் அல்லால் - இருப்பரல்லாமல், இச் சகத்தில் - இவ் வுலகில், நேரார்கள் - பொருந்தார்கள்; நேர்ந்திடினும் - ஒருகால் பொருந்திடினும், தற்பரமாக் கண்டிருப்பார் - தற்பர சொரூபமாகவே பார்த்திடுவர், என்க.

(வி - ரை) கட்டாகவுள்ள காதற்ற வோலைகளை எடுத்தாளுதற் கெங்ஙன முபயோகப்படாவோ, அங்ஙனம் சிரவணஞான மடையப்பெறாத சரீரங்களும் பிரயோசனமில்லை யென்பதாம். போதமயமாய் நிற்பவர் - சீவன் முத்தர்கள். தற்பரமாகக் கண்டிருப்பவர் - எல்லாவற்றையும் சிவமாகப் பார்ப்பவர்கள். (27)

'வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினான்'
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனே—னுள்ளத்தில்

இல்லனென்றால், அன்னவன்று னெங்கும் வியாபகத்தா
னல்லனென்றுஞ் சொல்லவழக் காம்.

(இ - ள்) வெள்ளம் - கங்கையானது, குலாவு - பொருந்திய, சடை - சடாபாரத்தினை யுடைய, வெள்ளக் கருணையினான் - கருணாசமுத்திரமான முதல்வன், கள்ளம் - கபடம், குலாவு - பொருந்திய, வஞ்சம் - வஞ்சனையை யுடைய, கள்ளனேன் - கள்வனாகிய என்னுடைய, உள்ளத்தில் - மனதில், இல்லன் என்றால் - இல்லையென்றால், அன்னவன்தான் - அம் முதல்வன்தான், எங்கும் - எவ்விடத்தும், வியாபகத்தான் அல்லன் என்றும் - சர்வவியாபி யல்லனென்றும், சொல்ல - கூறுதற்கு, வழக்கு ஆம் - நியாயமாகும், என்க.

(வி - ரை) வஞ்சகத்தினை யுடைய மனத்தின்கண்ணே முதல்வனிரானென்றால் அவன் சர்வ வியாபகத்திற்குப் பழுதுண்டா மென்பதாம். இங்ஙனம் கூறவே, மனத்தின்கண்ணே வஞ்ச முள்ளளவும் முதல்வன் தோன்றாதபடி திரோதான சத்தியால் மறைக்கப்படுமெனவும், வஞ்சக மொழிந்து சுத்தமுறவே அருட் சத்தியால் வியாபகம் விளங்குமெனவு மாயிற்று. (28)

தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்,
வைத்தவருண் மோன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு; போற்றக் கரமெழும்பும்;
காணத் துடிக்குமிரு கண்.

(இ - ள்) தத்துவப் பேயோடே - தத்துவங்களாகிய பேய்களுடனே, தலை அடித்துக்கொள்ளாமல் - தலை மோதிக்கொள்ளாதபடி, அருள் வைத்த - கிருபை பாலித்த, மோன வள்ளலையே - மவுனோபதேசஞ் செய்த வள்ளலையே, நித்தம் - பிரதிதினம், அன்பு பூண - அன்பு உண்டாக, நெஞ்சு - மனமானது, கருதும் - தியானிக்கும்; போற்ற - அஞ்சலிக்க, கரம் எழும்பும் - கையெடுக்கும்; இருகண் - இரண்டு நேத்திரங்களும், காண - தரிசிக்க, துடிக்கும் - பதைக்கும், என்க.

(வி - ரை) அநித்தியமான தத்துவங்களுடன் தொடக்குண்டு பிரபஞ்ச முகமாக விருந்து அவதிப்படாமல் அந்தர்முகமாக இருந்து ஆனந்தாதீதத்தினை யனுபவிக்க, அஜபாமந்திரத்தினை யுபதேசித்த ஆசாரியரை நினைக்குந்தோறும் தியானிக்கவும், கும்பிடவும், தரிசிக்கவும் மனம், கைகள், கண்கள் முந்துகின்றன என்பதாம். (29)

தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை யெய்துவனோ ?—வல்லவனா
மோன குருவே ! முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே ! நவில் !

(இ - ள்) தொல்லை வினைக்கு - பழமையான வினைக்கு, ஈடாய் - சரியாக, சுழல்கின்ற - திரிகின்ற, நான் ஒருவன் - ஒருவனாகிய நான், எல்லை இலா - அளவில்லாத, நின் - தேவரீருடைய, கருணை - கிருபையை, எய்துவனோ? - அடைவனோ?, வல்லவன் ஆம் - எல்லாம் வல்லவனாகிய, மோன குருவே! - மவுன குருவே!, முழுதினையும் - எல்லாவற்றையும், தான் உணர்ந்த - தானே தெரிந்துகொண்ட, ஞான குருவே! - ஞானத்தினையுடைய ஆசாரியனே!, நவில்! - சொல்வாயாக!, என்க.

(வி - ரை) ஒவ்வொரு ஆன்மாவும் உலகத்தின்கண்ணே தனு கரண புவன போகங்களை யனுபவிக்கையில் அவற்றில் கட்டுண்டு, அவற்றின் வழியே காரியங்களை யனுபவித்து வருவதற்குக் காரணம், அவரவர்கள் மூந்திய ஜன்மங்களில் செய்த கர்மங்களே யன்றி வேறில்லை யாகலின், 'தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற' என்றனர். இத்தகையனுக்கு இருவினையொப்பு வாய்க்குமோ என்பார், 'நின்கருணை யெய்துவனோ?' என்றனர். (30)

மூன்றுகண்ணா! முத்தொழிலா! மும்முதலா! மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலே!—ஈன்றவன்னை
தன்னைப்போ லன்பு தழைத்தோய்!ஒருதெய்வ
முன்னைப்போ லுண்டோ வுரை?

(இ - ள்) மூன்று கண்ணா! - மூன்று நேத்திரங்களை யுடையவனே!, முத்தொழிலா! - முத்தொழிலை யுடையவனே!, மும்முதலா! - மூன்று மூர்த்திகளா யுள்ளவனே!, மூவுலகும் தோன்ற - மூன்று உலகங்களும் தோன்ற, கருணை பொழி - கிருபை செய்கின்ற, தோன்றலே! - பெரியோனே!, ஈன்ற அன்னை - பெற்ற தாய், தன்னைப்போல் - தன்னைப் போல, அன்பு தழைத்தோய்! - அன்புடையவனே!, உன்னைப்போல் - தேவரீருக்குச் சமானமாக, ஒரு தெய்வம் உண்டோ? - ஒரு கடவுளுளதோ?, உரை - சொல்லுவாய்!, என்க.

(வி - ரை) திரிநேத்திரதாரியாகிய முதல்வன், பிரம விஷ்ணு ருத்திரரை யதிட்டித்துக்கொண்டு, முத்தொழிலை யுலகில் நடத்தி வருகின்றானென்பார், 'மூன்றுகண்ணா!......தோன்றலே!' என்றனர். சிவஞான சித்தியார்: "தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்ற தோரார்" என்றதனாற் காண்க. சிவபிரானுக்கு மேலாக மற்றோர் காரிய காரண மில்லையாமென்றும், அவருக்கே மேலானவரும் ஒப்பானவரு மில்லையென்றும் சுருதி கூறுதலின், 'ஒரு தெய்வம், உன்னைப்போ லுண்டோ வுரை?' என்றனர். சுவேதாசுவதரோபநிஷதம்: "நதஸ்யகார்யம் கரணஞ்சவித்யதே, நதத்மசாப்யதிகச்ச திருச்யதே" என்றதனாற் காண்க. (31)

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான், மோனா ! நிருவிகற்ப நிட்டைநிலை
என்றுவரு மோ ? அறியே னே.

(இ - ள்) மோனா ! - மவுன குருவே !, நேசிக்கும் - விரும்புகின்ற, சிந்தை - மனமானது, நினைவுக்குள் - எண்ணத்தில், உன்னை - தேவரீரை, வைத்து - எழுந்தருளச்செய்து, பூசிக்கும் - ஏத்தும், தான் - தானே, நிறைந்து - நிறைவுற்று, பூரணம் ஆய் - நன்றாக, யோசித்து - ஆலோசித்து, நின்றது அல்லால் - நின்றதே யன்றி, நிருவிகற்ப நிட்டை நிலை - நிருவிகற்ப நிட்டை நிலையானது, என்று வருமோ ? - எக்காலத் தெய்துமோ ?, அறியேன் - அறிகிலேன், என்க.

(வி - ரை) முதல்வனை மனமானது தன்னிடத்தில் துவிதபாவனையாகக் கொண்டு தியானிப்பதல்லாமல் அத்துவித பாவனை சிறிதும் கொள்ளவில்லை யென்பார், 'நிருவிகற்ப நிட்டைநிலை, என்றுவரு மோ ? வறியே னே' என்றனர். நிருவிகற்ப நிட்டையாவது - பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் முதலியவற்றாற் பகுத்தறித லின்றிப் பொருளுண்மை மாத்திரையே அறியும் ஞான சித்தியாகும். (32)

அறிவி லறியாமை யற் ( று ), அறிவாய் நின்று,
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்,—குறியவிழ்ந்தால்,
அன்றைக் குடல்வேண்டேன் ; ஐயா ! இவ் வாக்கையையே
யென்றைக்கும் வேண்டுவனே யான்.

(இ - ள்) ஐயா ! - ஐயனே !, அறிவில் - அறிவுடனே, அறியாமை - அறியாமையினை, அற்று - நீங்கி ; அறிவாய் - அறிவே யுருவாகி, நின்று - இருந்து ; பிறிவு அற - நீக்கமற, ஆனந்தமயம் பெற்று - ஆனந்த வடிவமடைந்து ; குறி அவிழ்ந்தால் - எண்ண மொடுங்கினால் ; அன்றைக்கு - அக்காலத்தில், உடல் வேண்டேன் - சரீரவுற்பத்தி விரும்பேன் ; ( அங்ஙனமில்லாதவிடத்து ) என்றைக்கும் - எக்காலத்தும், இவ் ஆக்கையையே - இச் சரீரத்தினையே, யான் வேண்டுவன் - நான் விரும்புவேன், என்க.

(வி - ரை) 'அறிவி லறியாமை யற்று' என்பது இருவகைப் பாசங்களையும் நீங்கியிருத்தல். 'பிறிவறவானந்தமயம்' என்பது அத்துவிதமாயிருந்து ஆனந்தித்தல். 'குறியவிழ்தல்' என்பது மன மொருமைப்படல். இம் மூன்று நேர்ந்த காலத்தில் உடல்வேண்டா மெனவும், நேராத காலத்து அவை யுண்டா மளவும் உடல் வேண்டுமெனவும் கூறினவாறாயிற்று. (33)

உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ ? மெய்யைப்—படபடென

வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனான் ;
ஆண்டநீ தானே யறி.

(இ - ள்) உடலை - சரீரத்தினை, பழித்து - நிந்தித்து, இங்கு - இவ்விடத்தில், உணவும் - ஆகாரமும், கொடாமல் - தராமல், மெய்யை - சரீரத்தினை, விடவிடவே - விட்டுவிடவே, நாடுவரோ? - விரும்புவரோ? (விரும்பார் ஆதலால்) படபடென - விரைவாக, இந்த உடல் - இந்தச் சரீரத்தினை, மெய் உணரா - உண்மை யறியாத, பொய்யன் நான் - பொய்யனாகிய நான், வேண்டுவேன் - விரும்புவன் ; ஆண்ட - அடியேனை யாட்கொண்ட, நீதானே - தேவரீரே, அறி - அறிவாயாக !, என்க.

(வி - ரை) ஞான மடைவதற்கு இன்றியமையாக் காரணமா யிருப்பது சரீரமே யாகலின், சரீரத்தினுக்கு வேண்டிய உணவு முதலியவற்றைக் காலத்திற்குத் தக்கபடி யூட்டி வளர்த்து வரவேண்டுமென்பது அத்தியாவசிய மென்பதாம். திருமந்திரம்: "உடம்பா ரழியி லுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார், ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே, யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே." என்றதனாற் காண்க. (34)

அறியாயோ வென்னையுநீ ? ஆண்டநீ, சுத்த
வெறியாய் மயங்கவுமேன் விட்டாய் ?—நெறிமயங்கிக்
குன்றுஞ் செடியுங் குறுகுமோ ? ஐயாவே !
கன்றுகெட்டாற் றாயருகே காண்.

(இ - ள்) ஐயாவே ! - ஐயனே !, நீ - தேவரீர், என்னையும் - அடியேனையும், அறியாயோ ? - அறிந்திலையோ ?, ஆண்ட நீ - (அடியேனை) ஆண்டருளின தேவரீர், சுத்த வெறியாய் - (அடியேன்) அதிக வெறியனாகி, மயங்கவும் - மயங்கிவிடவும், என் விட்டாய் ? - என் கைவிட்டாய் ?, கன்றுகெட்டால் - கன்றானது மறைந்துவிடில், அருகே - சமீபத்திலுள்ள, தாய் - தாய்ப்பசுவானது, நெறி மயங்கி - வழி தவறி, குன்றும் - குன்றுகளையும், செடியும் - செடிகளையும், குறுகுமோ ? - அணுகுமோ ?, என்க.

(வி - ரை) காட்டினிடத்தே சிறிய கன்றானது வழிதவறி மறைந்துவிட்டபோது, தாய்ப்பசு அங்குமிங்கு மலைந்து திரிந்து கன்றுக்குட்டியைக் கண்டுபிடித்துத் தன் சுதந்திரஞ் செய்துகொள்ளுதல்போல, சுதந்திரமில்லாத அடியேன் வைதிக சைவ செந்நெறி தவறிப் பிரபஞ்சத்தி லலையுங் காலத்துத் தேவரீர் வலிய வந்து ஆண்டுகொள்ள வேண்டு மென்பதாம். ()

ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தேன் ? ஐயனே !
ஆதிக்க மோன வருட்டாயே !—சோதியா
மன்ன ! நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின்.

(இ - ள்) ஐயனே ! - ஐயாவே !, ஆதிக்கம் - உரிமைவாய்ந்த, மோனம் - மௌன நிலையினை, அருள்-கொடுக்கின்ற, தாயே !-அன்னையே!, சோதி ஆம் - பிரகாசமாகிய, மன்னன் ! - இறைவனே !, நிருவிகற்பம் - நிருவிகற்பமாகிய, ஆனந்த - சிவாநந்தம் ( விளங்குவதற் கேதுவாகிய ), நிட்டையிலே - நிட்டையினிலே, பின்னம் அற - பிறிவற, நில்லாத பின்-இராத போது, எதுக்கு - எதன் பொருட்டு, உடல் சுமை கொண்டு - தேகமாகிய சுமையினைத் தாங்கி, என் இருந்தேன் ? - எதன்பொருட்டு வாழ்ந்தேன் ?, என்க.

(வி - ரை) சரியை கிரியைகளை முறையே யனுட்டித்து அத்துவித சாயுச்சியப் பேற்றினுக்குக் காரணமான சிவஞான மடைதற் கேதுவாகிய சிவ ராஜ யோகத்தினைப் பயிலாது வீணே தேகத்தினைத் தாங்கித் திரிதலினால் யாதொரு பிரயோசனமு மில்லை யென்பதாம். பின்னமற நிற்றல் - அத்துவிதமாக விருத்தல். (36)

பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனால்
என்னபல னுற்றிருந்தோமே ?—அன்னதனு
லானந்தந் தானேதா னாகும் ; எம் மையனே !
ஏனிந்தத் துன்பமினி ?

(இ - ள்) எம் ஐயனே ! - எமது ஐயனே !, பின்னும் - மேலும், உடல் - உடலினை, சுமை ஆ - சுமையாக, பேசும் - சொல்லும், வழக்கு அதனால் - வழக்கத்தினால், என்ன பலன் - யாது பிரயோசனம், நாம் உற்றிருந்தோம் - நாம் அடைந்திருந்தோம் ?, அன்னதனால் - அவ் வுடலினால், ஆனந்தம் - சிவானந்தமானது, தானேதான் ஆகும் - தன்னாலேயே விளையும்; இனி - இனி, இந்த துன்பம் - இத்தகைய விசாரமான துன்பமானது, ஏன் ? - எதுக்கு ? என்க.

(வி - ரை) முதல்வனுக்கு இருப்பிடமாயும், வீட்டினுக்கு ஏதுவாகிய சாதனங்களில் முக்கியமுமாயுள்ள உடலை வீணே நிந்தியாது ஓம்பவேண்டு மென்பதாம். திருமந்திரம் : "உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தே, னுடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டே, னுடம்புளே யுத்தமன் கோயிற் கொண் டானென் னுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே." என்றதனாற் காண்க. (37)

துன்பக் கடலிற் றுளைந்ததெலாந் தீர்ந்ததே !
இன்பக் கடலி லிருமென்ன,—அன்பிற்
கரைந்து கரைந்துருகிக், கண்ணருவி காட்ட,
விரைந்துவரு மானந்த மே.

(இ - ள்) துன்ப கடலில் - துக்க சாகரத்தில், துளைந்தது எல்லாம் - திளைத்தது எல்லாம், தீர்ந்தது - முடிந்தது ; இன்பக்கடலில் -

(இனி) சகக் கடலில், இரும் என்ன - இருப்பாயென மனத்திற்கு வற்புறுத்தி, அன்பில் - அன்பினால், கரைந்து கரைந்து உருகி - கசிந்து கசிந்து உருகி; கண் அருவி - கண்களிடத்தே நீரினை, காட்ட - சிந்த; ஆனந்தம் இன்பமானது, விரைந்து வரும் - அதிசீக்கிர முண்டாம், என்க.

(வி - ரை) உலக வியாபாரமனைத்தும் துன்பமென எண்ணி வெறுத்து, இன்பக் கடலிற் றிளைத்து வாழ முதல்வனை யுன்னிக் கசிந்து கண்ணீருங் கம்பலையுமாக நின்றால், சிவானந்த விளைவு உண்டாகு மென்பதாம். (38)

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த,—நிரந்தரமு
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய்; மோனா! நான்
என்னைமுழு துங்கொடுத்தே னே.

(இ - ள்) மோனா! - மௌனாசிரியனே!, கரைந்து கரைந்து - உருகி உருகி, உருகி - கசிந்து, கண்ணீர் ஆறாக - கண்ணீர் ஆறுபோலப் பெருக, விரைந்து - விரைவாக, நிருவிகற்பம் - ஞானநிஷ்டை, எய்த - அடைய, நிரந்தரமும் - எப்போதும், நின்னையே - தேவரீரையே, சிந்திக்க - நினைக்க; நீ கொடுத்தாய் - தேவரீர் அருளினை; நான் - அடியேன், என்னை - எளியேனை, முழுதும் - முற்றும், கொடுத்தேன் - தத்தம் செய்தனன், என்க.

(வி - ரை) சிவசிந்தனையாக எக்காலமு மிருந்து சிவராஜ யோகத்திலே நிலைபெற்றிருக்கும்படி ஆசிரியன் அனுக்கிரகித்த மாத்திரத்தில் சீவசுதந்திரங் கழன்று, சிவபோத முற்று வாழ்ந்தே னென்பதாம். (39)

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ? கன்னெஞ்சே!—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய்? சந்ததமு நீயிருந்த
வெய்ப்பிலே யானந்த மே.

(இ - ள்) கல் நெஞ்சே! - கன் மனமே!, அல்லும் பகலும் - இரவும் பகலும், பேரன்புடனே - அதிக அன்பு பாராட்டி, தான் இருந்தால் - தானிருந்து கொண்டிருந்தால், கல்லும் - கருங்கல்லும், உருகாதோ? - உருகிப்போகாதோ?, பொல்லாத - தீமையான, தப்பு வழி - விபரீத வழியினை, ஏன் நினைந்தாய்? - ஏன் எண்ணினை?, சந்ததமும் - எக்காலமும், நீ - மனமாகிய நீ, இறந்த - ஒடுங்கிய, எய்ப்பிலே - நிலையிலே, ஆனந்தம் - சுகம் உண்டு, என்க.

(வி - ரை) மனமொடுங்கிய காலத்திலேயே சிவானந்தம் விளையு மெனவும், அங்ஙன மனமொடுங்குவதற்கு எக்காலத்திலும் அன்புட னிருத்தல் வேண்டு மெனவும் கூறாநிற்ப, வீணே தீமையான வழியிற் செல்லுவதிற் பிரயோஜன மில்லை யென்பதாம். (40)

கொடுத்தேனே யென்னைக், கொடுத்தவுட னின்ப
மடுத்தேனே ; நீடூழி வாழ்ந்தே—யடுத்தேனே ;
பெற்றேனே ; பெற்றுப் பிழைத்தேனே ; சன்மவல்ல
லிற்றேனே ; ஏழையடி யேன்.

(இ - ள்) ஏழை - அறிவிற் குறைந்தவனாகிய, அடியேன் - அடியனேன், கொடுத்தேன் என்னை - என்னைக் கொடுத்துவிட்டேன் ; கொடுத்தவுடன் - அங்ஙனம் கொடுத்தவுடனே, இன்பம் - இன்பத்தினை, மடுத்தேன் - உண்டேன் ; நீடூழி - பல்லூழி, வாழ்ந்து - வாழ்ந்திருந்து, அடுத்தேன் - அடுத்திருந்தேன் ; பெற்றேன் - பெறவேண்டியவற்றைப் பெற்றேன் ; பெற்று - அங்ஙனம் பெற்றபின், பிழைத்தேன் - உச்சீவித்தேன் ; சன்மம் - பிறப்பா லுண்டாய, அல்லல் - துன்பத்தினை, இற்றேன் - ஒழித்தேன், என்க.

(வி - ரை) கொடுத்தலாவது உடல் பொருளாவி மூன்றினையும் ஆசாரியனிடத்தில் தத்தஞ்செய்து இருத்தல். இன்பமடுத்தலாவது - அங்ஙனம் தத்தஞ்செய்து பின் இவன் செயல் யாவும் அவன் செயலாக நின்ற வவதரத்து விளையு மின்பம். நீடூழி வாழ்தலாவது - சகல கேவல மற்றிருக்கை. அடுத்தலாவது - குருவருளினை பெற்றேனே யென்பது - சிவானந்தத்தினை. பிழைத்தலாவது - அவத்தை யடையாதிருத்தல். சன்ம வல்ல லிற்றே னென்பது - பிறவித் துன்பமடையா திருத்தலாம். (41)

பெற்றோம் பிறவாமை, பேசாமை யாயிருக்கக்
கற்றோம், எனவுரைக்கக் காரியமேன் ?—சற்றேனு
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி, ஏசற்று,
வாக்கற்றாற் பேசுமோ ? வாய்.

(இ - ள்) பிறவாமை - அடிக்கடி பிறப்பின் வராமையை, பெற்றோம் - அடைந்தோம், பேசாமையாய் இருக்க - மவுனமாக விருக்க, கற்றோம் - தெரிந்துகொண்டோம், என வுரைக்க - என வாய்மொழியால் யாருக்கு மெடுத்துரைக்க, காரியம் என் ? - பிரயோசன மென்ன ?, சற்றேனும் - சிறிதேனும், நீக்கற்ற - பிரிவற்ற, இன்ப நிலை - சிவானந்த நிலை, பொருந்தி - அடைந்து, ஏசற்று - பழியற்று, வாக்கு அற்றால் - பேச்சுநின்று விட்டால், வாய் பேசுமோ ? - வாயானது சொல்லிக்கொள்ளுமோ ?, என்க.

(வி - ரை) பிறவாமை பெற்றேன், பேசாமை யடைந்தேன் என வைகரி வாக்காற் கூற, அவ் வைகரி வாக்குக் காரியப்படுதற்குச் சகல தத்துவங்களும் காரியப்பட வேண்டு மாகலின், இதனாற் பெற்றதும் அடைந்ததும் இல்லை யென ஏற்படும். ஆகலின், அவ் வைகரி வாக்கும் நிகழா திருக்கவேண்டு மாகலின், சகநிலை யடையவேண்டு மென்பதாம். ()

காலன் றனையுதைத்தான், காமன் றனையெரித்தான்,
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான், பேரருளை நாடார்க்
கென்னே நடக்கை யினி?

(இ - ள்) காலன்தனை - இயமனை, உதைத்தான் - உதைத்தவனும்; காமன்தனை - மன்மதனை, எரித்தான் - எரித்தவனும்; பாலன் - பாலனுடைய, பசிக்கு இரங்கி - பசியினுக் கிரக்கமுற்று, பால் கடலை - பாற்கடலை, ஞாலம் மெச்ச - பூலோகம் அதிசயிக்க, பின்னே - அப் பாலனுக்குப் பின்னே, நடக்க விட்டான் - குடிக்கும்படி செல்ல விட்டவனுமாகிய முதல்வனுடைய, பேர் அருளை - திருவருளை, நாடார்க்கு - விரும்பாதவர்கட்கு, இனி - இனிமீது, என் - என்ன, நடக்கை? - நடக்கையுள்ளது?, என்க.

(வி - ரை) சைவ முனிபுங்கவராகிய மார்க்கண்டேயர் முதல்வன் திருவருட் பிரசாதம் பெற்று வாழு முண்மையினை யறியாது, அம் முனிவரின் சிவபூசைக் கிடுக்கண் விளைத்த இயமனை யெட்டி யுதைத்தா னென்பார், 'காலன் றனையுதைத்தான்' எனவும்; நால்வரின்பொருட்டு முதல்வன் யோகித்திருந்த காலத்து அவ் வியோகத்தினைக் கலைப்பான் தேவர் தூண்டுதலால் வந்த மாலின் புத்திரனுகிய மன்மதனைச் சாம்பலாக்கினு னென்பார், 'காமன்றனை யெரித்தான்' எனவும்; வியாக்கிரபாதர் புத்திரராகிய உபமன்னியு பகவானுக்குக் குழந்தைப் 'பருவத்திலுண்டாகிய பசியைத் தணிப்பான் பாற்கடலை யீந்தா னென்பார், பாற்கடலை...நடக்க விட்டான்' எனவுங் கூறினர். இத்தகைய முதல்வனை வணங்காதார் நடக்கை பிரயோசனமில்லை யென்பார், 'இனி யென்னே நடக்கை?' என்றனர். (43)

'விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ' லேயிரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த
வெள்ளமே! ஆனந்த வெற்பே! எனத்தொழுவோ
ருள்ளமே ஞான வொளி.

(இ - ள்) விண் - ஆகாயத்திலுள்ள, அருவி - கங்கையாகிய பிரவாகம், மேல் மேல் - மேலும் மேலும், விளங்குவபோல - பெருக்கெடுத் தோடுவதுபோல, இரண்டு கண் - இரண்டு கண்களிலும், அருவி வெள்ளமொடு - அருவிப் பெருக்குடன், கை கூப்பி - அஞ்சலித்து, தண்ணமிர்தம் - குளிர்ச்சிபொருந்திய, வெள்ளமே! - பிரவாகமே!, ஆனந்தம் - ஆனந்த சொரூபமாகிய, வெற்பே! - மலையே!, என தொழுவோர் - எனத் தோத்தரித்து வணங்குவோர், உள்ளமே - மனமே, ஞான - ஞானமயமாகிய, ஒளி - சுடராம், என்க.

(வி - ரை) கண்ணின்கண்ணே வெள்ளம் பெருகச் செய்தல், மனத்தொழில். கைகூப்புதல், காயத்தொழில். 'வெள்ளமே வெற்பே' எனல், வாக்குத் தொழில். ஆகவே, மன வாக்குக் காயங்களால் வழிபடுவோர் இருதயத்தின் கண்ணேயே முதல்வன் விளங்குபவ னென்பார், 'உள்ளமே ஞானவொளி' என்றார். (44)

பிள்ளைமதிச் செஞ்சடையான், பேசாப் பெருமையினான்,
கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியான்,—உள்ளபடி
கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்வசன
மெல்லாரு மீடேற வே.

(இ - ள்) பிள்ளை மதி - பாலசந்திரனைத் தரித்த, செம் சடையான் - செவ்விய சடையினை யுடையவன்; பேசா - (வேதாகமங்களால்) பேசற்கரிய, பெருமையினான் - பெருமையினை யுடையவன்; கள் - தேனானது, அவிழும் - சிந்தும், பூ - அழகிய, கொன்றை கண்ணியான் - கொன்றை மாலையினையுடையவனாகிய (முதல்வன்); கல்லாலின் - கல்லால விருட்சத்தின், கீழிருந்து - நிழலிலிருந்து, உள்ளபடி - சத்தியமாக, எல்லாரும் - யாவரும், ஈடேற - பிழைக்க, ஓர் வசனம் - ஒரு வசனத்தினை, கற்பித்தான் - கட்டளையிட் டருளினான், என்க.

(வி - ரை) ஓர் வசன மென்பது சித்தாந்த மகாவாக்கியத்தினை. இதனை முன்னர்க் காட்டியுள்ளாம். அவ் வசனம் முதல்வன் தட்சிணா மூர்த்தி கோலங்கொண்டு சனகாதியர் நால்வருக்கு உபதேசஞ் செய்தருளினும், அதுகொண்டு அந்நால்வரின் வழியே வந்த மெய்கண்ட சந்தானமியாரும் தேறின ரென்பார், 'எல்லாரு மீடேற வே' என்றனர். (45)

புலனைந்துந் தானே பொரமயங்கிச், சிந்தை
யலமந் துழலு மடிமை,—நலமிகுந்த
சித்தான மோன சிவனே! நின் சேவடிக்கே
பித்தானா லுண்டோ பிறப்பு?

(இ - ள்) நலம் மிகுந்த - நன்மை மிகுந்த, சித்து ஆன - ஞான சொரூபமான, மோன சிவனே! - மௌன நிலையினை யுணர்த்த வெழுந்த முதல்வனே!, புலன் ஐந்தும் - பஞ்சேந்திரியங்களும், தானே பொர - தாமே (வலிய வந்து) தாக்கலால், சிந்தை மயங்கி - மனங்கலங்கி, அலமந்து - சுழன்று, உழலும் அடிமை - உழலுகின்ற அடிமை, நின் - தேவரீரது, சேவடிக்கே - திருவடிக்கே, பித்தானால் - பித்தேறப் பெற்றால், பிறப்பு - சென்மம், உண்டோ? - உண்டாகுமோ?, என்க.

(வி - ரை) பித்தாதல் முதல்வன் திருவடியினையே யடையவேண்டுமென மோகித்திருத்தல். அங்ஙன மடைந்தவற்கே சனன முண்டாவதில்லை யென்பார், 'உண்டோ பிறப்பு?' என்றனர். ஆகவே, முதல்வ

னடியினைச் சேராதார்க்குப் பிறப்பு அடிக்கடி யுண்டா மென்பதாம். திருக்குறள்: "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவனடி சேரா தார்." என்றதனுற் காண்க. (46)

நிறைகுடந்தா னீர்கொளுமோ?—நிச்சயமாமோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்?—பிறையணிந்த
மிக்ககை லாயமலை வித்தனே! வேதியனே!
செக்கரணி மேனியனே! செப்பு!

(இ - ள்) நிறை குடம் - (நீர்) நிறைந்த குடமானது, நீர் - (வேறு) நீரினை, கொளுமோ? - கொள்ளுமோ?, நிச்சயம் ஆம் - சத்தியமாகிய, மோனமுறை - மவுன நிலையினை, உணர்ந்தார் - தெரிந்தவர்கள், யாதை - (அதற்கன்னியமாக) எதனை, முயல்வார்? - முயற்சிப்பர்?, பிறை - சந்திரகலையினை, அணிந்த - தரித்த, மிக்க - மேலான, கைலாய மலை - வெள்ளியங்கிரியில் எழுந்தருளி யிருக்கின்ற, வித்தகனே! - ஞானத்தை வாய்ந்தவனே!, வேதியனே! - பிராமணனே!, செக்கர் - செம்மை, அணி - வாய்ந்த, மேனியனே! - திருமேனியினை யுடையவனே!, செப்பு! - சொல்லுவாயாக!, என்க.

(வி - ரை) நிறை குடம் வேறுநீரைக் கொள்ளாததுபோல, மௌனமாகிய திருவருள் நிறையப்பெற்றவர்கள் வேறொன்றில் நாட்டம் வையார்கள். ஆகவே, முதல்வன் றிருவருளைப் பெறுதாரே சகல சமயத்தினும் பற்றுவைத் தொன்றிலும் நிலையுற்றிரார்க ளென்பதாம். (47)

துங்கமழு மானுடையாய்! சூலப் படையுடையாய்!
திங்களணி செஞ்சடையாய்! சேவுடையாய்!—மங்கையொரு
பாலுடையாய்! செங்கட் பணியாய்! என் சென்னிமின்மேற்
காலுடையாய்! நீயே கதி.

(இ - ள்) துங்கம் - பரிசுத்தம் பொருந்திய, மழு - மழுவினையும், மான் - மானினையும், உடையாய்! - ஏந்தியிருப்பவனே!, சூலப்படை - மூவிலை ஆயுதத்தை, உடையாய்! - கரத்துடையவனே!, திங்கள் - சந்திரனை, அணி - தரித்த, செம்சடையாய் - செவ்விய சடாபாரத்தினை யுடையவனே!, சே உடையாய்! - இடபவாகனத்தை யுடையவனே!, மங்கை - பார்வதியாரை, ஒருபால் - ஒரு பக்கத்தில், உடையாய்! - வைத்தவனே!, என் - அடியேனுடைய, சென்னியின்மேல் - சிரத்தின்மீது, கால் உடையாய்! - (வைத்த) திருவடியினை யுடையவனே!, நீயே கதி - நீயே (அடியேனுக்குப்) புகலிடம், என்க.

(வி - ரை) சர்வ சங்கார காலத்தில் முதல்வனைத் தவிர வேறொரு பதார்த்தம் காலத்திரயத்து மில்லை யென்பது நிச்சய மாகலினுலும், அவனிடத்திலேயே யெல்லா மொடுங்கவேண்டு மாதலினுலும், அவனிடத்

திருந்தே யெல்லாம் தோன்றவேண்டு மாகலினாலும், அவனே ஆன்மகோடிகட் கெல்லாம் அடைக்கல மென்பார், 'நீயே கதி' என்றனர். (48)

இனிய கருணைமுகி லெம்பிரான் ; முக்கட்
கனி,அமிர்த வாரி ; யின்பக் கட்டி ;—தனிமுதல்வன் ;
நித்தன் ; பரமன் ; நிமல(ன்), நிறை வாய்நிறைந்த
சுத்த(ன்) ; நமக் கென்றுந் துணை.

(இ - ள்) இனிய - இனிதான, கருணை - கருணைமழை பொழியும், முகில் - மேகம், எம்பிரான் - எமதுபிரான் ; முக்கண் - மூன்றுகண்களுடன் கூடிய, கனி - பழம் ; அமிர்த வாரி - அமுத சாகரம் ; இன்பக் கட்டி - இன்பத்தினை விளைவிக்கும் கருப்புக்கட்டி ; தனி முதல்வன் - ஒப்பற்ற முதல்வன் ; நித்தன் - என்று முள்ளவன் ; பரமன் - மேலானவன் ; நிமலன் - நின்மலன் ; நிறைவாய் - எங்குமாய், நிறைந்த - பரவிய, சுத்தன் - பரிசுத்தன் ; (இத்தகைய முதல்வன்) நமக்கு - எங்கட்கு, என்றும் - எக்காலத்திலும், துணை - துணையாகும், என்க.

(வி - ரை) பூதசம்பந்தமான மேகமும், கருப்புக் கட்டியும் முறையே மழை பொழிந்து உலகத்திற்குச் சுகத்தையும், வாய்க்குத் தித்திப்பையும் பயக்குமாறுபோல, முதல்வன் கருணையைப் பொழிந்து ஆன்மாக்களுக்குச் சுகத்தையும், பேரின்பத்தையும் தருதலால் 'முகில் கட்டி' என்றனர். இம்மையிலும் மறுமையிலும் ஆன்மாக்கட்கு முதல்வன் தோன்றாத்துணையாக விருத்தலின் 'துணை' என்றனர். (49)

நீதியாய்க், கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெல்லாம் போதித்தான் ;—ஏதில்
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான
தினகரனு மௌன சிவன்.

(இ - ள்) ஞான - ஞானமயமாகிய, தினகரனும் - சூரியனும், மௌன சிவன் - மௌன நிலையினை வாய்ந்த பெருமான், நீதியாய் - நீதியை யுடையவனாகி, கல் ஆலின் - கல்லாலமரத்தின், நீழலின் - நீழல் பரவிய, கீழே - அடியிலே, இருந்து - எழுந்தருளியிருந்து, ஏதம் இல் - குற்றமில்லாத, சனகாதி ஆய - சனகாதிகளாகிய, தவத்தோர்க்கு - தபோதனர்கட்கு, போதியா - போதித்த, உண்மை - யதார்த்தங்கள் எல்லாம் - எல்லாவற்றினையும், போதித்தான் - உபதேசித்தான், என்க.

(வி - ரை) பூதவிருளை உலகத்தின்கண்ணே நீக்கும் பௌதிக சூரியனைப்போல, முதல்வனும் ஆன்மாக்களிடத்தி லுள்ள ஆணவ விருளை நீக்குதலின், 'ஞான சூரியன்' என்றனர். சனகாதியர் பொருட்டு முதல்வன் யோகத்திலிருந்து உண்மையினைக் காட்டின னாகலின் 'மௌன சிவன்' என்றனர். (50)

*தேகச் செயறானும் சிந்தையுட னேகுழையில்,*
*யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ?—மோகநிலை*
*யல்லலிலே வாழ்வாரோ? அப்பனே! நீயற்ற*
*எல்லையிலே சும்மா விரு!*

(இ - ள்) அப்பனே! - (மனமாகிய) அப்பனே; தேகச் செயல் தானும் - சரீரச் செய்கையும், சிந்தையுடனே - உள்ளத்துடனே, குழையில் - கலந்து குழைந்து விடுமேயானால், யோகநிலை - நிஷ்டையானது, ஞானிகளுக்கு - ஞானிகளுக்கு, ஒப்புவதோ? - ஒத்திருப்பதோ?, (அவர்கள்) மோகநிலை - ஆசை நிலையாகிய, அல்லலிலே - துன்பத்திலே, வாழ்வாரோ - வாழ்ந்திருப்பரோ?, நீ அற்ற - நீயென்ப தற்ற, எல்லையிலே - இடத்திலே, சும்மா இரு - சும்மா விருக்கக்கடவாய்!, என்க,

(வி - ரை) யோகமென்பது ஞானம் அடைதற்குச் சோபான நிலையாகும். ஞானமோ மன வியாபாரம். பகிர்முகத்தில் உலக சம்பந்தமாகச் சிறிதுமின்றித் தேகப் பற்றற்று நின்ற அவசரம் யோகம் ஆகலின், பெரியோர் யோகத்திலேயே காலத்தினைக் கழிக்காது அதற் கப்பாற்செல்வர். அத்தகையருக்குப் பிரபஞ்ச மோகமின்றி, முன்னிலையற்று, மௌன நிலையினி லிருப்ப ரென்பதாம். (51)

*சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே;*
*இம்மாயா யோகமினி யேனடா?—தம்மறிவின்*
*சுட்டாலே யாகுமோ? சொல்லவேண் டாம்! கன்ம*
*நிட்டா! சிறுபிள்ளாய்! நீ.*

(இ - ள்) கன்ம நிட்டா! - கரும நிஷ்டையி லிருப்பவனே!, சிறு பிள்ளாய்! - சிறுவனே!, நீ - நீ, சும்மா இருக்க - மௌனமாக விருக்க, சுகம் உதயம் - சுகோதய நிலை, ஆகுமே! - உண்டாகுமே!, இம் மாயா யோகம் - இப்பிரபஞ்ச மாயா காரியமாகிய யோகம், இனி என் அடா - இனிமேல் எதுக்கடா?, தம் - தம்முடைய, அறிவின் - அறிவினுடைய, சுட்டாலே - சுட்டுதலினாலே, ஆகுமோ? - (மேற்சொன்ன) சுகோதயம் விளையுமோ?, சொல்லவேண்டாம்! - வற்புறுத்தவேண்டாம்!, என்க.

(வி - ரை) உலக வியாபாரத்தின்கண்ணே யிருந்து, தனக் கன்னியமாயுள்ள பதார்த்தங்களிடத்திற் புத்தி செலுத்தி, ஒவ்வொன்றினையும் சுட்டியறிகிற அறிவு உள்ளவரையில் சுகோதயம் சிறிதும் விளையாதெனவும், இத்தகைய வியாபார மனைத்தையும் அறவே விட்டு நிருவிகற்பமா யிருக்கு நிலையினை யடைந்தவர்கட்கே சுகோதயம் உண்மையில் விளையுமென்பதாம்.

*நீயற்ற வந்நிலையே நிட்டை; அதி னீயிலையோ?*
*வாயற் றவனே! மயங்காதே!—போயற்*

றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் ; சும்மா
வருந்தாதே இன்பமுண்டு ; வா !

(இ - ள்) நீ - நீ, அற்ற - இறந்த, அ நிலையே - அந்த நிலையே, நிட்டை - நிட்டையாகும் ; அதில் - அந்நிலையில், இலையோ - நீ நின்று யிலையோ ?, வாய் அற்றவனே ! - மௌனியே !, மயங்காதே ! - மயங்க வேண்டாம் !, போய் - யோக நிலையிற்போய், அற்று - மறந்து, இருந் தாலும் - நீ இருந்திடினும், நீ - மனமாகிய நீ, என்று முள்ளாய் - எக் கலாத்து முள்ளாய் ; சும்மா - வீணுக, வருந்தாதே ? - வருத்தமுறுதே ?, இன்பம் - இன்பமானது, உண்டு - எக்காலத்திலு முண்டு ; வா ! - வருவா யாக !, என்க.

(வி - ரை) நீயற்ற நிலையாவது - மன வியாபாரமற்ற மற்ற விடம். 'நீ யிலையோ ?' என்பது நிஷ்டைபுரியுங் காலத்து மனவியாபாரம் நிகழுத லில்லையே யன்றி மனமில்லையோ வென்பதாம். வாயற்றவனென்பதும் வியாபாரமற் றிருத்தலேயாம், 'நீ போகாய்' என்றது மறந்தகாலத்து மன முண் டென்பதாம். ஆகலின், எக்காலத்து மனமுண்டென்பது பெற்றும். மனமானது பாசத்தின் காரியம். பாசமானது இம்மையில் உலகவின் பத்தை யூட்டுவதுபோல, மறுமையிலும் பேரின்பத்தை யூட்டுதலின், எக் காலத்தும் பாசமுண்டு. "முத்தியிலு மூன்று முதலு மொழியக்கேள் !" என்றதனுற் காண்க. (53)

வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே !—நீவாடா !
எல்லா நமக்கெனவே யீந்தனையே ! ஈந்தபடி
நில்லா யதுவே நிலை.

(இ - ள்) வா வா என்று - வா வா என்று, இன்பம் - சுகத்தை, வர வழைக்கும் - வருவிக்கின்ற, கண்ணீரோடு - கண்ணீருடன், ஆவா என்று அழுத - ஐயோவென் றழுத, அப்பனே ! - அப்பா !, நீ வாடா ! - நீ வருவா யடா !, எல்லாம் - யாவும், நமக்கு எனவே - நமக்கென்றே, ஈந்தனையே ! - கொடுத்தனையே !, ஈந்தபடி - கொடுத்தபடி, நில்லாய் ! - நிற்பாயாக !, அதுவே நிலை - அதுவே உனக்கான நிலையாகும், என்க.

(வி - ரை) சுகமயமாய் நின்றதற் கேற்ப ஆனந்தக் கண்ணீர் விட்டுத் தனக்குரிய பிரபஞ்ச சேட்டை முற்று மறவே விட்டபின் மறுபடியும் அதிற் பழக இச்சித்தலைச் செய்யாது இன்பமயமாகவே நிற்க வேண்டு மென்பார், 'நில்லாயதுவே நிலை' என்றனர். (54)

நில்லாப் பொருளை நினையாதே ! நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே !—கல்லாத

சிந்தை குழைந்துசுகஞ் சேரக்குருவருளால்
வந்தவழி நல்ல வழி.

(இ - ள்) நில்லா - நிலையில்லனவாகிய, பொருளை - உலகப் பொருள்களை, நினையாதே! - சிந்தியாதே!, நின்னை - உன்னை, உள்ளோர் - உள்ளிட்டார், சொல்லா - சொல்லத்தகாத, பொருள் திரளை - பொருள் கூட்டத்தை, சொல்லாதே! - பேசாதே!, கல்லாத - உண்மையினைக் கற்காத, சிந்தை - மனம், குழைந்து - உருகி, சுகம் சேர - சுகமடைய, குரு அருளால் - ஆசாரியர் கருணையால், வந்த வழி - வந்த நெறியே, நல்ல வழி - சுகமான வழியாகும், என்க.

(வி - ரை) அழிதற்பாலதாய உலகப்பொருள்களிடத்திலும், அவலமான வார்த்தைகளிலும் காலத்தினை வாளாக் கழியாது சுகத்தை யடைய வேண்டுமோயின், ஆசாரியர் அநுக்கிரகித்த சன்மார்க்க வழியினையே யடைய வேண்டு மென்பதாம். (55)

வழியிதென்றும், அல்லா வழியிதென்றுஞ் சொற்
பழிபழியா(ம்); நல்லருளாற் பார்த்(து),ஓர்—மொழியுனக்கே
யேற்றிருக்கச் சொன்னவன்றே எங்கும் பெருவெளியாம்;
பார்த்தவிட மெல்லாநீ பார்!

(இ - ள்) வழி - (நல்ல) மார்க்கம், இது என்றும் - இதுவே யென்றும்; அல்லா வழி - தீமையான மார்க்கம், இது என்றும் - இதுவே யென்றும், சொல்லின் - பிரஸ்தாபிக்கின், பழி பழி ஆம் - குற்றமாகும்; நல் - நல்ல, அருளால் - கிருபையால், பார்த்து - நோக்கி, ஓர் மொழி - ஒரு வார்த்தையை, உனக்கு - உன்றனக்கு, ஏற்றிருக்க - உபதேசித்திருக்க, சொன்ன அன்றே - அவ் வுபதேசம் கேட்டவன்றே, எங்கும் - எவ்விடத்தும், பெரு வெளியாம் - பெரிய வெளியாகும்; பார்த்த - நோக்கிய, இடம் எல்லாம் - இட முழுதும், நீ பார்! - நீ மறுபடியும் பார்ப்பாயாக!, என்க.

(வி - ரை) ஆசாரியர் அனுக்கிரகித்த மகா மந்திரத்தினை அனுசந்தானஞ் செய்த காலத்தே பேதபுத்தி யனைத்து மொழிந்து, யாவும் அபேதமாய்த் தோன்றிநிற்க, மறுபடியும் பிரபஞ்சத்தின் முகமாகவிருந்து வியஷ்டி விசாரணையிற் றலையிடுதல் கூடா தென்பதாம். (56)

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போ
லாருந் துறக்கை யரிதரிது;—நேரே
மனத்துறவு மப்படியே; மாணு! இயற்றி
னுனக்கிசைந்த வாறென்றே யோர்

(இ - ள்) பார் அனைத்தும் - உலக மனைத்தும், பொய் எனவே - நிலையல்லவென்றே, பட்டினத்துப் பிள்ளையைப்போல் - பட்டனத் தடிகளைப்போல, ஆரும் - எத்தகையாரும், துறக்கை - துறவடைதல், அரிது

அரிது - மிக அருமையாகும் ; நேரே - நேராக, மனத்துறவும் - அகத்துறவும், அப்படியே அங்ஙனமே யாகும் ; மாணு ! - மாணவகனே !, இவற்றில் - இவ்விரண்டினுள், உனக்கு இசைந்த - உனக்குப் பொருத்தமாகிய, ஆறு ஒன்றே - வழி யொன்றினையே, ஓர் ! - ஆராய்ந்து கொள்வாயாக !, என்க.

(வி - ரை) ஈண்டு பட்டினமென்பது காவிரிப்பூம் பட்டினம். திருவெண்காடர் அளகேசனைப்போன்ற செல்வத்தினையும், அருந்ததிபோன்ற கற்பினை யுடைய மனைவியையும், காமனைப்போலும் கட்டழகினையும் துன்பமென்று அவற்றில் பற்று ஓரணுவளவு மின்றித் துரிசறக் கைவிட்ட தவராஜசிங்க மாகலின், 'துறக்கை யரியரிது' என்றனர். "ஓட்டுடன் பற்றின்றி யுலகைத் துறந்த செல்வப் பட்டினத்தார்" என அடியார் வணக்கத்திற் கூறியுள்ளதையுங் காண்க. இப் பெரியாரைப்போல ஏககாலத்தில் அகத்துறவும் புறத்துறவும் கொள்ளுதல் அரிதாகலின், இவற்றுளொன்றினைப் பற்றுக என்பார், 'இவற்றிலுனக்கிசைந்த வாறொன்றே யோர் !' என்றனர். (57)

ஓராம லே ; ஒருகா லுன்னுமல், உள்ளொளியைப்
பாராமல், உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ ?
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான்.

(இ - ள்) ஓராமல் - (ஒன்றினையும்) ஆராயாமலும் ; ஒருகால் - ஒருதரமாகிலும், உன்னுமல் - (ஒன்றினையும்) நினையாமலும் ; உள் ஒளியை - மனவொளியினை, பாராமல் - ஏகதேசமாக நோக்காமல் ; உள்ளபடி - யதார்த்தமாக, பார்த்திருந்தால் - (சமட்டி ரூபமாக) நோக்கினுல், ஆனந்த வெள்ளம் - சிவானந்த வெள்ளமானது, தத்தி - தாவி, கரை புரண்டு-கரை கடந்து, எழுந்து - மேலெழும்பி, பத்துத் திசையும்-எத்திக்கினும், பரந்து - பரவி, வாராதோ ? - வாராதோ ? என்க.

(வி - ரை) போதமானது அணுவளவுந் தோன்ருது சுட்டற நிற்க, ஆனந்த வெள்ளம் தானே மேலிடு மென்பதாம். சிவானந்தமாலை : "ஆருறுக் கப்பாலா மானந்த மாக்கடரு, ஞருறு நீந்தி யணைந்தாலும் வேருகி, யான்முழுகில் வற்றியிடும் யாளுென்றும் செய்யாக்கா, ருன்முழுது மேலிடுமே தான்." என்றதனுற் காண்க. (58)

தானுன தன்மைவந்து தாக்கினு லவ்விடத்தே
வானுதி மாயை வழங்காதோ ?—ஞானு ! கேள் !
உன்னுள்ளே தோன்ரு வுறவாகி நின்றதெனை
என்னுள்ளே யென்று மிரு !

(இ - ள்) தான் ஆன - தானென்னு மகங்காரமான, தன்மை வந்து - தன்மை யுண்டாகி, தாக்கினுல் - விளைந்தால், அவ்விடத்தே - அவ்விடத்

திற்றுனே, வானாதி - ஆகாயமுதலிய, மாயை - மாயாகாரியங்கள், வழங்காதோ? - விளையாதோ?, ஞானா! - ஞானத்திற் குரியவனே!, கேள்! - கேட்பாயாக!, உன்னுள்ளே - உனக்குள்ளே, தோன்றா - தோன்றாத, உறவு ஆகி - நான் உறவாகி, நின்றது என - நின்றதுபோல், என்னுள்ளே - எனக்குள்ளே, என்றும் - எக்காலத்தும், இரு! - நீ இரு!, என்க.

(வி - ரை) தான் என்னு மகங்காரம் பிரகிருதி புருஷ நியதமாய், குல தன வித்தையாதிகளினாலே யெனக்குச் சமனாரென்றும், யானென்றும், என்னதென்றும் அபிமானத்தைப் பண்ணிக்கொண்டு, மோட்ச பரியந்தம் ஆன்மாவை நீங்காதே நிற்பதுமாய், சரீரத்துவ பிராணாதி வாயுக்களைச் சேட்டிப்பதா யிருத்தலினால் 'தானான தன்மைவந்து தாக்கினால்......வழங்காதோ?' என்றனர். பௌஷ்கரம்: "ப்ரத்யாத்ம நியதம் தச்சப்ர சித்த மகமாத்மகம் மநாஃ பூர்ஷமய ஸ்தத்வம்யதயேவோ பஜாயத இதி" என்றதனாற் காண்க. (59)

என்னையுன்னை யின்னதிது வென்னாம லிற்கும்நிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே!
உள்ளத்தி னுள்ளே யுணர்.

(இ - ள்) ஐயனே! - ஐயனே!, என்னை உன்னை - என்னையும் உன்னையும், இன்னது இது என்னாமல் - இன்னது இதுவென்று சுட்டாமல், நிற்கும் நிலைதன்னை - நிற்கும் நிலையினை, அருள் என்ற தருணத்தில் - அருள் புரியவேண்டு மெனும் சமயத்தில், அன்னை - தாயானவள், பெற்ற பிள்ளைக்கும் - தான் பெற்ற பிள்ளைக்கும், சொல்லாத - சொல்லக்கூடாத, பெற்றி - தன்மையை, உள்ளத்தினுள்ளே - மனத்தினிடத்தே, உணர் - அறிவாயாக, என்க.

(வி - ரை) ஆன்மாவினுக்கு அன்னியமாக மனம் ஒன்றுண்டென்றும், மனத்திற்கு அன்னியமாய் ஆன்மா ஒன்றுண்டென்றும் பேதபுத்தி பாராட்டாது, அபேதமாய் நின்ற அவசரத்து, திருவருள் தாக்கும் நிலைமையினைப் பிறருக்கு எடுத்துக்கூற ஏலாததாய்த், தன்னுள்ளே மாத்திரம் சிந்திக்கும் தன்மை யுடைத்தாம் என்க. (60)

சொன்னவர்தா நிட்டை தொகுத்திரார்; நிட்டையிலே
மன்னினவர் போதியார்! மாமௌனன்—தன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடநீழ
லிருப்பா னிருவிகற்பத் தே.

(இ - ள்) சொன்னவர்தாம் - பேசுபவர்தாம், நிட்டை தொகுத்து - நிட்டை கூடி, இரார் - இருக்கமாட்டார்கள்; நிட்டையிலே - யோகத்திலே, மன்னினவர் - நிலைபெற்றவர்கள், போதியார் - பிறரிடம் பேசார்; மா -

பெரிய, மௌனன் - மவுனகுரு, தன்னுள் - தன்னிடத்து, விருப்பாக - ஆசையாக, கைகாட்டி - சின்முத்திரை காட்டி, மிக்க - மேலான, வட நீழல் - கல்லாலின் னிழலிலே, நிருவிகற்பத்தே இருப்பான் - நிருவிகற்ப சமாதியி லெழுந்தருளுவன், என்க.

(வி - ரை) அந்தர்முக நிட்டையில் கைகூடிநின்ற பெரியார் பகிர்முக விவகாரம் அணுவளவுஞ் செய்யார். பகிர்முக விவகாரத்தில் தலையிட்டுத் திரிபவர்கட்கு நிட்டை கைகூடிவராதெ தன அறிக என்பதாம். இதற்குச் சாட்சி சனகாதியர் பொருட்டுக் கல்லாலடியில் உண்மை நிஷ்டை கூடிய முதல்வன் யாதொன்றுந் திருவாய்மலர்ந்தருளாது சின்முத்திரைக் கோலத்தால் வேண்டியவற்றைக் குறிப்பித்தனர். (61)

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் ; செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்லா
லாடுவதேன்? ஆட்டு மவன்.

(இ - ள்) இந்த நிருவிகற்பத்து - இந்த நிருவிகற்ப சமாதியில், எந்தை - எமது பிதாவே, நிட்டை இருக்க - நிஷ்டை கூடியிருக்க, நீ சிந்தை தேறாய்! - நீ அந்த நிஷ்டையின் அருமையினை மனத்திற் றேராய்; செகம் அனைத்தும் - உலக முழுவதும், வந்த - விளைந்துள்ள, தொடர்ப்பாடு - கன்மத் தொடர்ச்சி, கெட அன்றோ - நீங்கற் பொருட்டன்றோ, ஆட்டும் - பிரபஞ்சத்தினை யாட்டுவிக்கும், அவன் - நிஷ்டை கூடியிருக்கும் முதல்வன், ஓர் பாத்திரத்துக்கு - ஒரு விளையாட்டிற்கு, ஆடல் - நடஞ் செய்தல், அல்லால் - அல்லாமல், ஆடுவது என்? - நடனஞ்செய்த லெதன் பொருட்டு?, என்க.

(வி - ரை) ஈண்டு 'எந்தை' என்பது தட்சிணாமூர்த்தியினை. "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே" என்றதற் கேற்ப, உலகத்தை யாட்டுவிக்கு முதல்வன் தட்சிணாமூர்த்தி கோலத்தினின்று நீங்கித் தானுடுவ தெற்றுக்கெனின், உலகத்தில் கன்ம நசிக்கச் செய்யவேண்டி யாடும் திருவிளையாட்டேயாம். எங்ஙனமெனின், உயிரசையின் உடலசையுமாறு போல, உயிருக்கு உயிராயுள்ள முதல்வன் அசையின் உயிரசையும்; உயிரசையவே கன்மத்தை யனுபவிக்க நேரிடும்; அங்ஙன மனுபவிக்கவே நாளுக்குநாள் கன்மம் நசியும் என்க. ஈண்டு விளையாட் டென்பது பாரமறநின் றெளிதாகச் செய்வ னென்பதாம். திருவெம்பாவை: "ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டி, னுய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந் தொழிந்தே." என்றதனுற் காண்க. (62)

நாளவங்கள் போகாமல், நாடோறு நந்தமையே
யாளவந்தார் தாளின்கீ ழாட்புகுந்தாய் ;—மீளவுன்னைக்

காட்டாம னிற்குங் கருத்தறிந்தால், நெஞ்சே! உன்
னுட்டானு னையமில்லை யால்.

(இ - ள்) நாள் - காலம், அவங்கள் - வீண் காரியங்களில், போகாமல் - கழியாமல், நாள்தோறும் - எந்நாளும், நம்தமையே - நம்மையே, ஆள வந்தார் - ஆளவந்த ஆசாரியனது, தாளின் கீழ் - திருவடியின் கீழ், ஆள் புகுந்தாய் - அடிமையாயினை; மீள - மறுபடியும், உன்னை - உன்றனை, காட்டாமல் - தோற்றுவியாமல், நிற்கும் - இருக்கும், கருத்து - கருத்தினை, அறிந்தால் - அறிந்தனையாயின், நெஞ்சே! - மனமே!, நான் - யான், உன் - உன்னுடைய, ஆள்தான் - அடிமைதான்; ஐயம் இல்லை - சந்தேகமில்லை, என்க.

(வி - ரை) ஞானாசாரியனை வழிபட் டெய்த பின்னர் பிரபஞ்சமுகமாக மனத்தினைச் செலுத்தாது வாழுதலே மேலுமேலு மாசாரிய னனுக்கிரக முண்டாதற் கேதுவுண்டாகு மென்பதாம். (63)

'யான்றா னெனலறவே யின்பநிட்டை' யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ?—தோன்றி,
இழுக்கடித்தாய், நெஞ்சே! நீ யென்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்.

(இ - ள்) யான் தான் எனல் - யான் என்பதும் தானென்பதும், அறவே - அற்றொழிகையே, இன்ப நிட்டை என்று - சுக நிஷ்டையென, அருணைக் கோன்தான் - அருணகிரிநாதன்றான், உரைத்த மொழி - கட்டளையிட்ட மொழி, கொள்ளாயோ? - சிந்தியாயோ?, தோன்றி-முன் தோன்றி, நெஞ்சே! - மனமே!, என் - என்னுடைய, கலைகள் - ஆடைகள், சோர - சோரும்படி, அழுக்கடிக்கும் - அழுக்கொழிய அடிக்கின்ற, வண்ணார்போல் ஆய் - வண்ணாரை யொத்து, நீ இழுக்கடித்தாய் - நீ (என்னை) இழுக்கடித்தனை, என்க.

(வி - ரை) 'யான்' என்பது அகங்காரம், 'தான்' என்பது மமகாரம் என்க. இவை இரண்டு முள்ளளவும் பிரபஞ்சப் பற்று விடாதாகலின், இவை யொழியு மளவும் சுகநிஷ்டனுகக் கூடிவரா தென்பதாம். (64)

எங்குஞ் சிவமே, இரண்டற்று நிற்கினெஞ்சே!
தங்குஞ் சுக(ம்); நீ சலியாதே!—அங்கிங்கென்
றெண்ணாதே! பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே! யானுன் பரம்.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, இரண்டு அற்று - துவிதபாவனை நீங்கி, நிற்கில் - நின்றால், எங்கும் சிவமே - எவ்விடத்தும் சிவசொரூபமாம்; (அங்ஙனமாயின்) சுகம் - இன்பமானது, தங்கும் - நிலைபெறும்; நீ சலியாதே! - நீ யசையாதே!; அங்கு இங்கு என்று எண்ணாதே - அவ்விட

மூண்டு இவ்விட மில்லை யென்றும் நினையாதே !, பாழில் - வீணாக, இறந்து - மரணமடைந்தும், பிறந்து - உற்பத்தியாயும், உழலப்பண்ணாதே - உழலச் செய்யாதே !, யான் - நான், உன்பரம் - உன்னுடைய அடைக்கலம், என்க

(வி - ரை) துவிதபாவனை அற நிற்கில் எல்லாம் சிவமயமாகத் தோன்றுமாகலின், 'எங்குஞ் சிவமே, இரண்டற்று நிற்கில்' என்றனர். சிவத்தை யன்றி வேறு பொருளை யறியாத சீவன்முத்தர்கட்குத் தமக்கு முன்னே தோன்றும் பிரபஞ்சப் பொருளனைத்தும் சிவமாகத் தோன்று மென்பது அனுபவமாகலின், 'எங்கும் சிவமே' என்றனர். "எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை" என்றதனாற் காண்க. அங்கிங்கென் பது துவிதபாவனை யாகலின், 'அங்கிங்கென் றெண்ணாதே' என்றனர். 'அங்கிங் கெனாதபடி' என்றதும் இக்கருத்துப் பற்றியேயாம். (65)

மெய்மைப்பொய் யென்றிடவு(ம்),மெய்யணையாப் பொய்ந்நெஞ்சே!
பொய்மைத்தான் மெய்யெனவும் போகுமோ ?—ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்த
மென்மயமு நின்மயமு மே.

(இ - ள்) மெய்மை - மெய்யானவற்றை, பொய் என்றிடவும் - பொய் யென்று சொல்லவும்; மெய் அணையா - மெய்மை யறியாத, பொய் நெஞ்சே ! - பொய்மை யனுசரித்த மனமே !, பொய்மைத்தான் - பொய் யினையே, மெய் எனவும் - மெய்யென்று சொல்லவும், போகுமோ ? - தகுமோ ?, ஐயம் அற - சந்தேக மொழிய, தன் மயத்தை - தன் மயமான ஆன்ம நிச்சயத்தை, மெய் எனவே - உண்மையென்றே, சார்ந்தனையேல் - அடைவாயானல், என் மயமும் - என்னுருவமும், நின்மயமுமே - உன் னுருவுமே, ஆனந்தம் - சுகரூபம், என்க.

(வி - ரை) காரியப்பாட்டாற் பொய்யாகிய பிரபஞ்சத்தினைச் சத்திய மெனவும், ஆனந்தானுபவமாகிய மோட்ச வின்பத்தினைப் பொய்யெனவும் கூறித் திரியாது, ஆன்மாவின் உண்மைத் தன்மையினை விசாரித்து ஆனந்த மயமா நிற்க, மனமும் அம்மயமேயா மென்க. (66)

பூங்கா வனநிழலும், புத்தமுதுஞ், சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையும்—நீங்காவாம் ;
'சொல்லிறந்து மாண்டவர்போற் ; றாமௌன பூமியினா
னில்லையென நின்ற விடம்.

(இ - ள்) சொல் இறந்து - வாக்கிறந்து, மாண்டவர்போற் - இறந் தாரைப்போல, ஆ - சுத்தமான, மௌன பூமியில் - மௌன பூமியில், நான் இல்லைஎன - நான் என்னும் தற்போத மொழிய, நின்ற இடம் - நின்ற விடத்தில், பூங்காவன நிழலும் - கற்பகத்தி னிழலும், புத்தமுதும் - புதிய தேவாமிர்தமும், சாந்த பதம் - சாந்தபதம், வாங்காத - நீங்காத,

ஆனந்த - ஆனந்தமயமான, மா மழையும் - இன்ப மழையும், நீங்கா ஆம் - நீங்காதிருப்பனவாகும், என்க.

(வி - ரை) மவுன நிலையிலிருந்து தவ மியற்றிய பெரியார்கட்கு இந்திராதியர் செல்வம் இலேசாகக் கிடைப்பதன்றி மோட்ச சாம்பிராச்சியமுஞ் சித்திக்கு மென்பதாம். இவ் வுண்மை அகத்தியாதி முனிபுங்கவ ரிடத்திற் காண்க. (67)

இடங்கான(ம்), நல்லபொரு ளின்ப(ம்), எனக்கேவ
லடங்காக் கருவி, அனைத்து—முடனுதவ
மந்தார தாருவென வந்து மவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான்.

(இ - ள்) எனக்கு - அடியேனுக்கு, இடம் - தங்கும் இடமானது, கானம் - காடாகவும்; பொருள் - அனுபவிக்கும் பொருள், நல்ல இன்பம் - நற்சுகமாகவும்; ஏவல் - ஏவலாளர்கள், அடங்கா - இலேசில் வசப்படாத, கருவி - தத்துவமாகவும்; அனைத்தும் - இவை யனைத்தும், உடன் உதவ - உடனே யருளுவதற்காக, மந்தார தாரு என - மந்தார விருட்சத்தினைப் போல், வந்து - எழுந்தருளி, மவுன குரு - மவுன தேசிகன், ஓர் சொல் கொண்டு - ஒரு சொல்லினை யுபதேசித்து, தந்தான் - எல்லாவற்றையும் தந்தருளினான், என்க.

(வி - ரை) பெத்தர்கள்: உலகத்தில் வீடாகிய இடத்தினையும், பொன்னாகிய பொருளினையும், அடிமைகளாகிய ஏவலாளரையும் வைத்தனுபவிப்பது போல்; முத்தனாகிய நான்: ஆசாரியன் அனுக்கிரகத்தினால் காடாகிய இடத்தினையும், சுகமாகிய பொருளினையும், தம் வழிபட்ட தத்துவங்களாகிய ஏவலாளர்களையும் அடைந்தன னென்பதாம். (68)

தானந், தவஞானஞ், சாற்றரிய சித்தி; முத்தி
ஆனவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமா யிரு! மனமே!
இன்ன மயக்க முனக்கேன்?

(இ - ள்) மனமே! - நெஞ்சே!, மோன குரு - மவுன குரு, சொன்ன - உபதேசித்த, ஒரு சொல்லால் - ஒரு சொல்லினால், தானம் - ஈகையும், தவம் - தவமும், ஞானம் - ஞானமும், சாற்று அரிய - சொல்லற்கரிய, சித்தி - அஷ்டமா சித்தியும், முத்தி - மோட்சமும், ஆனவை எல்லாம் - மற்றவை யெல்லாம், தாமே - வலிய, ஆகும் - சித்திக்கும்; (ஆகலின்) சுகமாய் - (இனி) சுகமாக, இரு! - இருக்கக்கடவாய்!, இன்னமும் - இன்னமும், உனக்கு - உனக்கு, மயக்கம் என் - மயக்கம் யாதுக்கு?, என்க.

(வி - ரை) ஆசாரியர் உபதேசித்த ஒரு மொழியினை யனுசந்தானஞ் செய்து மவுனநிலையி லிருந்தவரின், இம்மையில் அனுபவிக்கவேண்டியன வும், மறுமையி லடையவேண்டியனவும் எளிதிற் கைகூடு மென்பதாம். ()

உன்னை, உடலை, உறுபொருளைத் தா! எனவே
யென்னை யடிமைக் கிருத்தினான்—சொன்னவொரு
சொல்லை மறவாமற் றோய்ந்தாலெனெஞ் சே! உன்னா
லில்லை பிறப்பதெனக் கே.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, உன்னை - ஆவியினையும், உடலை - தேகத்தினையும், உறு பொருள் - உரிய செல்வத்தினையும், தா என - தருவாயென ஏற்றுக்கொண்டு, என்னை - அடியேனை, அடிமைக்கு - தொண்டினுக்கு, இருத்தினான் - வைத்துக்கொண்டவனாகிய ஆசாரியன், சொன்ன - உபதேசித்த, ஒரு சொல்லை - ஒரு மொழியினை, மறவாமல் - இடைவிடாமல், தோய்ந்தால் - அனுசந்தானஞ் செய்து அதி லழுந்தினால், உன்னால் - உன்னாலே, எனக்கு - எனக்கு, பிறப்பது இல்லை - பிறத்த லில்லை, என்க.

(வி - ரை) ஆசாரியன் அனுக்கிரகிக்கு முன்னமே உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றினையுந் தன் மயமாக்கிக்கொள்ளுதல் மரபாகலின், 'உன்னை, உடலை, உறுபொருளைத் தா! எனவே' என்றனர். திருவாசகம்: "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யானையா யென்னை யாட் கொண்ட போதே கொண்டிலையோ?" என்றதனாற் காண்க. ஆசாரிய னுபதேசித்த உபதேச மொழியினை யனுசந்தானஞ் செய்தவரின் பிறப்பு உண்டாவ தில்லை யென்பதாம். (70)

எனக்கு முனக்குமுற வில்லை யெனத்தேர்ந்து,
நினைக்கவரி தானவின்பநிட்டை—தனைக்கொடுத்தே
யாசான் மவுனி யளித்தா(ன்); நெஞ் சே! உனையோர்
காசா மதியேனான் காண்.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, எனக்கும் - எனக்கும், உனக்கும் - உனக்கும், உறவு இல்லை என - சம்பந்த மில்லையென, தேர்ந்து - தெரிந்து; நினைக்க - எண்ணுதற்கு, அரிதான - அரிதாகிய, இன்ப நிட்டைதனை - சுக நிஷ்டையினை, ஆசான் மௌனி - மவுன குருமூர்த்தியானவர், கொடுத்து அளித்தான் - அனுக்கிரகித் தருளினன்; (ஆகலின்) உன்னை - உன்னை, நான் - யான், ஓர் காசு ஆ - ஒரு காசுக்குஞ் சமமாக, மதியேன் - மதிக்கமாட்டேன், என்க.

(வி - ரை) மனமே!, புருடனன்றி மற்றில்லை யெனத் தீர்மானித் திருந்தோன் முன் ஆசாரிய னெழுந்தருளி, "வியாபகமாய்ச் சித்தாயுள்ள ஆன்மாவிற்கும், சுட்டுப்பொருளாய்ச் சடமாயுள்ள மனத்திற்குஞ் சம்பந்த

யில்லை" என விளக்கினு ரென்பார், 'எனக்கு முனக்குமுற வில்லை' என்றனர். சித்தாந்த தரிசனம்: "என்மனத்தா லியானொந்தே னென்றுரைக்கப் பட்டமையின், றன்மனத்தா னன்றுதனி" என்றதனாற் காண்க. இங்ஙன முண்மை தேர்ந்தமையின், இனி மனத்தினைச் சிறிது மதிப்பதில்லை யென்பார், 'காசா மதியேனுன்' என்றனர். (71)

ஆனந்த மோனகுரு வாமெனவே யென்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால்,—தேனுந்து
சொல்லெல்லா மோனம்; தொழிலா தியுமோனம்;
எல்லாநன் மோனவடி வே.

(இ-ள்) ஆனந்தம் - ஆனந்தமயனுயுள்ள, மோன குரு - மவுன ஆசாரியர், ஆம் எனவே - எனக்கு மவுனம் உண்டாமெனவே, என் அறிவில் - அடியேன் அறிவினிடத்து, மோனம்தனக்கு இசைய - மௌனத்திற் குரித்தாக, முற்றியதால் - எல்லாங் கைகூடி வந்ததனால், தேன் உந்து - தேன்போல உருசிக்கின்ற, சொல் எல்லாம் - வார்த்தை யனைத்தும், மோனம் - மோனமேயாயிற்று; தொழில் ஆதியும் - காரியங்க ளனைத்தும், மோனம் - மோனமாயிற்று; எல்லாம் - மற்றெல்லாமும், நல் மோன வடிவே - நல்ல மவுனவடிவே யாயிற்று, என்க.

(வி-ரை) ஆசாரிய ரெழுந்தருளி மவுன முண்டாம்படி ஆசீர்வதித்த அளவிலே, வைகரியாதி வாக்காற் காரிய மில்லையாயின; காயத்தா னிக ழுங் காரிய மில்லையாயின; பிரபஞ்சமுகமாக நடக்குங் காரிய மனைத்து மில்லையாயின என்பதாம். (72)

எல்லாமே மோனநிறை வெய்துதலால், எவ்விடத்து
நல்லார்கண் மோனநிலை நாடினார்;—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன்? மோனகுரு வே!

(இ-ள்) மோன குருவே! - மவுன குருவே!, எல்லாமே - சகலமுமே, மோன நிறைவு - மவுனப் பூர்த்தியினை, எய்துதலால் - அடைதலினால், நல்லார்கள் - அறிஞர்கள், எவ்விடத்தும் - எவ்விடத்தினும், மோன நிலை - மவுன நிலையினையே, நாடினார் - விரும்பினார்கள்; பொல்லாத நான் என - புல்லறிவினையுடைய நானே, இங்கு - இவ்விடத்து, ஒன்றை - ஒன்றினை, நடுவே - இடையிலே, முளைக்கவிட்டு - உண்டாக்கிக் கொண்டு, இங்கு - இவ் வுலகில், என் அலைந்தேன்? - யாதின்பொருட்டுத் திரிந்தேன்?, என்க.

(வி-ரை) உலகத்தின்கண்ணுள்ள அறிஞர்கள் பலரும் மவுன நிலையே சுகத்திற் கேதுவெனத் தேர்ந்து அதனையே கைப்பற்றி வாழ்ந்

தய்ய, யான் மாத்திரம் அங்ஙன நாடாது முனைந்து அகங்கரித்து வாழு தலிற் சிறிதும் பயனில்லை யென்பதாம். (73)

மோன குருவளித்த மோனமே யானந்தம்;
ஞான வருளுமது; நானுமது;—வானாதி
நின்ற நிலையுமது; நெஞ்சப் பிறப்புமது
வென்றறிந்தேன்! ஆனந்த மே.

(இ - ள்) மோன குரு - மவுன தேசிகன், அளித்த - உபதேசித்த, மோனமே - மவுன நிலையே, ஆனந்தம் - ஞானானந்தமாகும்; (என்னெனின்) ஞானம் - ஞான சொரூபமாயிருக்கிற, அருளும் அது - திருவருளுமது; நானும் அது - ஆன்மாவாகிய அடியேனும் அது; வானாதி - ஆகாயமுதலிய பஞ்சபூதங்கள், நின்ற நிலையும் - நிற்கின்ற இடமும், அது - அதுவே; நெஞ்சப்பிறப்பும் அது - மன முண்டாதற் கேதுவாயிருப்பது மதுவே, என்று அறிந்தேன் - என்றுணர்ந்தேன்; (இங்ஙன முணர்ந்த பின்பு) ஆனந்தமே - எல்லா மானந்தமேயாம், என்க.

(வி - ரை) மவுனதேசிக னெழுந்தருளி யுபதேசித்த பின்னர், திருவருளாகிய ஞானமும், அதை அடைதற் கேதுவாகிய ஆன்மாவும், பஞ்சபூதநிலையும், மனோற்பத்தியும் சிவானந்தமயமாக விளங்கின வென்பதாம்.

அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை;
மறிந்த மனமற்ற மவுனஞ்—செறிந்திடவே
நாட்டினான்; ஆனந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினான்; மோன குரு.

(இ - ள்) அறிந்த - என்னாலறிந்த, அறிவு எல்லாம் - அறிவனைத்தும், (என்னுடைய) அறிவன்றி இல்லை - அறிவன்றி அன்னியமாக வில்லை; மறிந்த - தடைபட்ட, மனம் அற்ற - மனமிறந்த, மவுனம் - மவுன நிலையானது, செறிந்திட - பொருந்த, மோன குரு - மவுன தேசிகன், நாட்டினான் - என்னிடம் நிலைபெறச் செய்தனன்; ஆனந்த நாட்டில் - சிவானந்த வாழ்வில், வாழ்க்கை குடி - வாழ்ந்திருக்குங் குடியாக, கூட்டினான் - கூட்டி வைத்தான், என்க.

(வி - ரை) மவுனதேசிகன் மவுனோபதேசஞ் செய்த பின்னர், பிரபஞ்சத்தின்கண்ணே பல இடங்களிற் சென்று அவ்வவ் விடங்களிலுள்ள பொருள்களனைத்தையும் நோக்கி ஏகதேசமாக அறியுமறிவு மொழிந்து, இருந்தவிடத்திலேயே யிருந்தபடி எல்லாப் பொருள்களையும் சமஷ்டி ஞானத்தால் அறிவிற்காணும் தன்மை யுண்டாயிற் றென்பதாம். (75)

குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனா!
உருநீ டியர்பொருளு மொக்கத்—தருதியென

வாங்கினையே! வேறுமுண்மை வைத்திடவுங் கேட்டிடவு
மீங்கொருவ ருண்டோ? இனி.

(இ - ள்) மோனா! - மவுன குருவே!, குரு ஆகி - தேவரீர் ஆசாரிய ராகி, தண் அருளை - தண்ணிய திருவருளை, கூறு முன்னே - அடியே னுக்கு உபதேசிக்கு முன்னரே, உரு - உடலினையும், நீடு உயிர் - நித்திய மான உயிரினையும், பொருளும் - பொருளினையும், ஒக்க - ஒருசேர, தருதி என - தந்திடுவா யென்ன, வாங்கினையே - பெற்றுக்கொண்டனையே; வேறும் - மற்றும், உண்மை வைத்திடவும் - உண்மையைப் போதிக்கவும், கேட்டிடவும் - கேட்கவும், ஈங்கு - இவ்விடத்தில், இனி ஒருவர் - வேறொரு வர், உண்டோ? - உளரோ?, என்க.

(வி - ரை) மவுனதேசிகன் மாணவகனுடைய உடல் பொருள் ஆவி மூன்றினையுங் கிரகித்துக்கொண்டு மவுனோபதேசஞ் செய்த பின்னர்ச் சகல சுதந்திரமு மிழந்து தனக்கென வொரு செயலு மில்லாத மாணவக னுக்கு வியாபாரம் சிறிது மில்லை யென்பதாம். (76)

இனிய கருப்புவட்டை யென்னாவி லிட்டா
னனியிரத மாறாது; நானுந்—தனியிருக்கப்,
பெற்றிலேன் மோனம்; பிறந்தவன்றே மோனமல்லாற்
கற்றிலே னேதுங் கதி.

(இ - ள்) இனிய - சுவையான, கருப்புவட்டை - வெல்லக்கட்டி யினை, என் - அடியேனுடைய, நாவில் இட்டால் - நாவில் வைத்தால், நனி - மிகவும், இரதம் - இரசமானது, மாறாது - நீங்காது; நானும் - நானும், தனி இருக்க - தனித்திருக்குமளவும், மோனம் - மவுனநிலை, பெற்றிலேன் - அடைந்தேனில்லை; பிறந்த அன்றே - உற்பத்தியான காலத் திலேயே, மோனம் அல்லால் - மவுன மல்லாது, ஏதும் - யாதும், கதி - நூதனமான வழியை, கற்றிலேன் - கற்றேனில்லை, என்க.

(வி - ரை) கருப்புக்கட்டி நாவில் வந்த பின்னரே அதன் உருசி தோன்றியதுபோல, மவுன உபதேசம் காதிற் கேட்டபின்னரே சுகந் தோன்றியதெனவும்; தன்னந்தனியனா யிருந்தபோது, உருசி தெரியாதது போலச், சுகமுந் தெரிந்திலே னெனவும்; சென்மாந்தர புண்ணியத்தால் கருவி லமைந்திருந்த மவுனநிலை திரோதானத்தா லிருகாறு மறைக்கப் பட்டிருந்து இப்போது அடைந்தேனே யல்லது நூதனமாகப் பெற்றிலே னெனவும் கூறியதாயிற்று. (77)

'ஏதுக்குஞ் சும்மா விருநீ!' எனவுரைத்த
சூதுக்கோ, தோன்றாத் துணையாகிப்—போதித்து
நின்றதற்கோ, என்னையா! நீக்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ, பேசாக் குறி.

(இ - ள்) என் ஐயா! - என் ஐயனே!, எதுக்கும் - யாவற்றினுக்கும், நீ சும்மா இரு - நீ மவுனமா யிருப்பாயாக!, என உரைத்த - எனக் கட்டளையிட்ட, சூதுக்கோ - தந்திரத்திற்கோ; தோன்றா - கண்முன் காணப்படாத, துணையாகி - துணையாகி, போதித்து - உபதேசித்து, நின்றதற்கோ - இருந்ததற்கோ; நீக்கி - (என்னை மாயையினின்றும்) பிரித்து, பிரியாமல் - வேறாக்காமல், கொன்றதற்கோ - (மாயா பாசங்களனைத்தும் தலையெடாதபடி) யடக்கியதற்கோ, பேசா குறி - பேசாதிருக்குமடையாளம், என்க.

(வி - ரை) வைகரி வாக்காற் பேசாதிருந்த தன்மையானது: பிரபஞ்ச வியாபாரத்திற் சிறிதும் செல்லவொட்டா திருக்கும்படித் தந்திரமாய் மவுனோபதேசிகர் சும்மா விருக்கும்படி செய்த தன்மைக்கும், அவ்வமயங்களில் மனத்தின்கண்ணே யுண்டாகிய விவேகத்திற்கும், மாயா சாலத்தால் விளைந்தன யாவற்றையும் தலையெடாதபடி யடக்கியதற்கும், ஏதுவாக விருந்ததென்பதாம். (78)

குறியுங் குணமுமறக், கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட, ஆங்கே—பிரிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோன! நின்பாற்
கைம்மாறு நானொழிதல் காண்.

(இ - ள்) குறியும் - அடையாளமும், குணமும் - குணமும், அற - நீங்க; கூடாத - கூடுவதற்கரிய, கூட்டத்து - சிவனடியார் சங்கத்து, அறிவு அறிவாய் - அறிவு மயமாய், நின்றுவிட - இருந்துவிட; ஆங்கே - அப்படி நின்ற அவசரத்தே, பிரிவு அறவும் - நீக்க மறவும், சும்மா இருத்தி - மவுனமாக விருக்கச் செய்து, சுகம் - இன்பத்தினை, கொடுத்த - தந்த, மோன! - மவுன தேசிகனே!, நின் பால் - தேவரீர்பால், கைம்மாறு - (நான் செய்யவேண்டிய) பிரதியுபகாரம், நான் ஒழிதல் - நான் நீங்கி யிருத்தலேயாம், என்க.

(வி - ரை) ஈண்டு 'குறி' என்றது, முன்னிலைச் சுட்டு. 'குணம்' என்றது, இராசத தாமதங்கள். 'கூடாத கூட்டம்' என்றது, சிவனடியார். 'அறிவறிவாய்' என்றது, அந்தர்முக பாவனை. 'பிரிவு அற' என்றது, பெத்தநிலை யொழிதல். இவை யனைத்தையுங் கூட்டிவைத்த ஆசாரியனுக்குச் செய்யுங் கைம்மாறு நான் என்னும் அகங்காரம் தலையெடாதபடி யிருத்தலே யாம். (79)

நான்றா னெனுமயக்க நண்ணுங்கால், என்றுணை
வான்றா னெனநிறைய மாட்டாய்நீ—யூன்றாமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம்.

(இ-ள்) நான் தான் எனும் - நான் என்னு மகங்காரமும் தான் என்னும் மமகாரமுமாகிய, மயக்கம் - மயக்கமானது, நண்ணுங்கால் - பொருந்து மிடத்து, என் ஆணை - என்மீது ஆணையாக, வான் தான் என - ஆகாயத்தினைப் போல, நீ நிறையமாட்டாய் - (மனமே!) நீ வியாபக மாகாய்!, ஊன்றாமல் - யாதினும் இலட்சியம் வையாமல், வைத்த - வைத்த, மவுனத்தாலே - மவுன நிலையாலே, மாயை மனம் - மாயா காரியமாகிய மனம், இறந்து - ஒழிந்து, ஞான சுகம் - ஞானனந்தம், துய்த்துவிடும் - அனுபவ மாகிவிடும், என்க.

(வி-ரை) அகங்காரம் மமகாரங்களிற் கட்டுப்பட்டிருக்குங்காறும் ஏகதேச அறிவே யன்றி வியாபக அறிவு விளங்காதெனவும், சுட்டற்று நிற்கும் மவுன நிலையானது ஞானனந்தத்தை யுண்டாக்கு மென்பதாம். (80)

ஞானநெறிக் கேற்றகுரு ; நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு ;—மானமொடு
தாயெனவும் வந்தெனைத் தந்தகுரு, என்சிந்தை
கோயிலென வாழுங் குரு.

(இ-ள்) என் சிந்தை - அடியேன் மனம், கோயில் என - திருக்கோயிலாக, வாழும் குரு - வாழ்கின்ற மவுன குருவானவரே!, ஞான நெறிக்கு - ஞான மார்க்கத்தினுக்கு, ஏற்ற குரு - தகுதியான குரு ; நண் அரிய - அடைதற்கரிய, சித்தி முத்தி - இம்மை மறுமைப் பயன்களும், தானம் தருமம் - தான தருமங்களும், தழைத்த குரு - செழித்த குரு, மானமொடு - பெருமையுடன், தாய் எனவும் - தாய்போலவும், வந்து - எழுந்தருளி வந்து, என்னை - அடியேனை, தந்த குரு - ஈன்ற குருவாம், என்க.

(வி-ரை) சன்மார்க்கத்தினை யடைவதற்கு உபகரிக்கத் தகுந்தவரும், இம்மைக்கு வேண்டியனவும் மறுமைக்கு வேண்டியனவு மாகியவற்றை அனுக்கிரகிக்கத் தகுந்தவரும், நற்கருமங்களை விளைவிக்கச் செய்பவரும், தாயாகி வந்து ஆட்கொள்பவரும், சிந்தையிற் குடிகொண்டிருப்பவரும் மவுன தேசிகரேயாம். (81)

'சித்துஞ், சடமுஞ் சிவத்தைவிட இல்லை' யென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்,—சுத்தநிலை
பெற்றோமே ; நெஞ்சே! பெரும்பிறவி சாராமற்,
கற்றோமே மோனக் கரு.

(இ-ள்) நெஞ்சே! - மனமே!, சித்தும் - அறிவுடன் கூடிய பொருளும், சடமும் - அறிவில்லாத பதார்த்தங்களும், சிவத்தை விட - சிவபெருமானை விட, இல்லை என்ற - விளக்கமுறுதலில்லையென்ற, நித்தன் - நித்தியனுகிய, பரம குரு - பரம குருவின், நேசத்தால் - அனுக்கிரகத்தினுல், சுத்த நிலை பெற்றோம் - பரிசுத்தமான நிலையினை யடைந்தோம் ; பெரும் பிறவி -

பெரும் பிறப்பினை, சாராமல் - அடையாமல், மோன கரு - மவுன வித்தையை, கற்றோம் - தெரிந்துகொண்டோம், என்க.

(வி - ரை) முதல்வனுடைய சந்நிதியிலே பிரபஞ்சம்; காரியப்படு மாகையாலும், ஆன்மாக்க ளனைத்தும் எவ்விடத்தும் வியாபகமாகிய முதல்வனது சிற்சத்தியால் வினைப்பயன்களை யறிந்தனுபவிக்கும் தன்மை யுண்டாதலினாலும், 'சித்தும் சடமும், சிவத்தைவிட இல்லை' என்றனர். சிவஞான சித்தியார்: "ஆன்மாக்க ளனைத்து மெங்குஞ் செறிதரும் சிவன்றனாலே யறிதரும்," எனவும், "இறைவன்றன் சந்நிதிக்க ணுலகின்றன் சேட்டை," எனவும் வருதலாற் காண்க. இங்ஙனமாயின், முதல்வன் விகாரியாகானோவென மீமாஞ்சகன் வினவில், "ஆகான்; என்னை? விகாரமாவது மாயா சம்பந்த மாகையால், முதல்வன் மாயையைப் பொருந்தான். மாயை சடமாகையால், பிரகாசத்தினிடத்து அந்தகார நில்லாததுபோல, நித்திய வியாபக சித்ரூபியான முதல்வனிடத்தில் மாயை பொருந்தா தாகலின். ஆகில் ஆன்மாக்களறிவைப் பிரகாசிப்ப தெவ்வாறெனில்?. தேகேந்திரியாதிகளையுடைய ஆன்மாக்களுக்கெல்லா மலகன்ம பரிபாக அனுகுணமாக, அறிவானது: அயக்காந்த சந்நிதியிலே அயத்துக்குச் சேட்டை யுண்டானதுபோல, முதல்வன் சந்நிதிமாத்திரத்திலே பிரகாசிக்கும்." சிவஞான போதம்: "தத்விகாரி சிவச்சேந்த காந்தோயோவத்ஸ தந்தசேத்" என்றதனாற் காண்க. (82)

---

## ஏசற்றவந்நிலை

### கோச்சகக் கலிப்பா.

ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே;
'ஊசற் சுழல்போ' லுலகநெறி வாதனையாற்
பாசத்துட் செல்லாதே! பல்காலும், பாழ்நெஞ்சே!

(இ - ள்) பாழ் - வீணிலே பாடுபடுகின்ற, நெஞ்சே! - மனமே!, ஏசு அற்ற - குற்றமில்லாத, அ நிலையே - அந்த மவுன நிலையிலேயே, எந்தை - எமது பிதாவாகிய (சிவம்), பரிபூரணமாய் - பரிபூரணமாகி, மாசு அற்ற - குற்றமில்லாத, ஆனந்த வாரி - சிவானந்தப் பெருக்கை, வழங்கிடும் - தந்தருளுவன்; ஊசல் சுழல்போல் - ஊசற் கயிற்றின் நிலையில்லாமைபோல, உலக நெறி - பிரபஞ்ச மார்க்கத்தின், வாதனையால் - வாசனையினால், பல்காலும் - பலதரமும், பாசத்துள் - பாசத்தளையுள், செல்லாதே! - புகாதே!, என்க.

(வி - ரை) மவுனநிலையோடுங் கூடி வாழாநின்ற பெரியோர்கட்கு முதல்வனாற் சிவானந்த முண்டா மென்பார், 'ஏசற்ற......வழங்கிடும்' என்

றனர். ஒழிவிலொடுக்கம்: "கிரியைக் கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா, திரிய சுகம் விளைத்த சிமான்" என்றதனாற் காண்க. சிவஞான சித்தி யார்: "பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலு மீசனை யறிய வொண்ணாது." என்றதனாற் 'பாசத்துட் செல்லாதே' என்றனர். (1)

பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்து
மாழாழி யின்பத் தழுந்தப் படியாயோ?
தாழாயோ? எந்தையருட் டாட்கீழ்; நெஞ்சே! எனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ண மிருப்பாயே!

(இ - ள்) நெஞ்சே! - மனதே!, பாழாகி - வீணாகி, அண்டப்பரப்பை எல்லாம் - உலக விசால மனைத்தையும், வாய் மடுத்தும் - உட்கொண்டும், ஆழ் - ஆழ்ந்த, ஆழி இன்பத்து - ஆனந்தக்கடலில்; அழுந்த - மூழ்க, படி யாயோ? - கல்லாயோ?, எந்தை - எமது பிதா, அருள் தாள் கீழ் - திரு வருளாகிய திருவடியின் கீழ், தாழாயோ? - வணங்காயோ?, (அங்ஙனம் தாழின்) எனைப்போல் - என்னைப்போல, வாழாது வாழ்ந்து - வாழாமல் வாழ்ந்து, அழியாவண்ணம் - அழியாம லிருக்க, இருப்பாய்! - இருக்கக் கடவாய்!, என்க.

(வி - ரை) இன்பமயமே முதல்வனாக விளங்குதலின் உலக முழுவது சிறிதுந் தோன்றாதபடி சிவானந்தத்திற் றிளைக்கின் முதல்வன் திருவடிநிலை யுண்டா மாதலின் இன்பத்தினையும், முதல்வன் றிருவருள் தாளினையு மடைந்தால் மோட்ச சாம்பிராச்சிய முண்டா மென்பதாம். சிந்தாந்த தரி சனம்: "இன்ப மய னீசனின்பம் விளைத்தலாற் சம்புவெனும் பேருந் தகும்" என்றதனாற் காண்க. (2)

இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக்கே நமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ?
அருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வா! கண்டாய், வஞ்சநெஞ்சே!

(இ - ள்) இருப்பாய் - பொக்கிஷமாய், இருந்திட - உண்டாக, நமக்கு - நங்கட்கு, குரு பார்வை அல்லாமல் - குரு கடாட்சம் வியையாமல், பேரின்ப வெளிக்கு - பேரானந்தவெளியை, கூட - அடைய, கிடைத்திடு மோ? - கிட்டுமோ?, நமக்காக நம்பொருட்டு, அருட்பாய் - அருளை விரித்து, ஆளவந்தார் - ஆட்கொள்ள வந்தவராது, பொன் அடி கீழ் - அழகிய அடியின்கீழ், மருள் - மருள் வாய்ந்த, பேயர் போல் - பேயாற் பிடிபட்டார் போல, இருக்க - இருக்க, வஞ்சம் - வஞ்சமே குடிகொண்ட, நெஞ்சே! - மனமே!, வா! - வருவாயாக!, என்க.

(வி - ரை) ஈண்டு 'இன்பவெளி' என்றது சிதம்பரமாகிய சிதாகாய வெளி. ஆசாரியர் அனுக்கிரகமின்றி யிது கிட்டாதென்பார், 'குருப்

பார்வை யல்லாமற்கூடக் கிடைத்திடுமோ?' என்றனர். இம்மைச் சுக மனுபவிக்க வேண்டுமாயின் பிரகஸ்பதியாகிய குருவின் பார்வையும், மறுமைச்சுக மனுபவிக்க வேண்டுமாயின் முதல்வனுகிய குருவின் பார்வையும் வேண்டுமென்பதாம். 'ஆளவந்தார்' என்றது, பிரபஞ்சப் பற்றறத் தடுத்தாள வந்த ஆசாரியர். 'பேயர்போ லிருக்க' என்றது பிரபஞ்ச வாசனை யற்றிருக்கை. (3)

வஞ்சகமோ? பண்டையுள வாதனையா னீயலைந்து
கொஞ்சமுற்ருய்; உன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ?
'அஞ்சலஞ்ச' லென்றிரங்கு மானந்த மாகடற்கீழ்
நெஞ்சமே! என்போல நீயழுந்த வாராயோ?

(இ - ள்) நெஞ்சமே! - மனமே!, வஞ்சமோ - (நீ செய்வது) வஞ்சனையோ (இல்லை); பண்டை உள - பூர்வ சென்மத்தால் சேர்ந்த, வாதனையால் - தொடர்ச்சியால், நீ அலைந்து - நீ புலகி லலைந்து, கொஞ்சம் - சிறுமையினை, உற்ருய் - அடைந்தாய்; உன்னை - உன்னிடத்தில், குறை சொல்ல - குற்றஞ் சொல்ல, வாயும் - வாயும், உண்டோ? - உளதோ?, அஞ்சல் அஞ்சல் என்று - (இனி) பயப்படாதே பயப்படாதே என்ன, இரங்கும் - இரங்குகின்ற, ஆனந்த மாகடல் கீழ் - பேரானந்தக் கடலில், என்போல் - என்னைப்போல, நீ அழுந்த வாராயோ? - நீ மூழ்க வாராயோ?, என்க.

(வி - ரை) மாதாவின் கருப்பத்தி லிருக்குமிடத்து உண்டான விசனம், பின் சனனம், நரை, திரை, யமதண்டம், நரகவேதனையாகிய ஆதி தெய்வீகங்களும் - குளிர், வெப்பம், மழை, காற்று, மின்னல், இடி முதலிய வற்ருல் நேரிடும் ஆதிபௌதீகங்களும்; சரீர வியாதியாலும், மிருகங்களாலும், இராசாங்கத்தாராலும், பேய்களாலும், கள்வராலும், மனிதராலுமுண்டாகுந் துக்கம் - பிறருடைய கல்வியும் சௌந்தரியமும் செல்வமுங் கண்டு பொருமை கொள்ளல், அபிமானங் கெடுதல், எழுந்தது புத்தியாகச் செய்தல், கோபித்தல் முதலிய ஆதியான்மிகங்களும் பூர்வ சென்மாந்தரத்துப் பிராரத்துவத்தினுலேயே விளையுமாதலின், 'பண்டையுள வாதனையால்' என்றனர். (4)

வாரா வரவாய், வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்ருே?
ஓராயோ? நெஞ்சே! உருகாயோ? உற்றிருந்து
பாராயோ? அவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமோ?

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, வாரா வரவாய் - வரத்தகாத வரவாகி; வட நிழல் கீழ் - (கைலையில்) கல்லாலவிருட்சத்தின் நிழலில், வீற்றிருந்த - எழுந்தருளியிருந்த, பூராயம் - (உண்மை) வரலாறு, நம்மை -

நம்மை, புலப்படுத்த வேண்டி அன்றோ - தெரிவிக்கவேண்டியல்லவோ? (அன்றி வேறில்லை); ஓராயோ? - (மனமே) நீ இதனை யறியாயோ?, உருகாயோ? - உருகமாட்டாயோ?; உற்றிருந்து பாராயோ? - உற்றிருந்து நோக்காயோ?, அவ்வுருவைப் பார்க்க - அத் திருவுருவினைத் தரிசிக்க, நிறைவாய்விடும் - (ஆனந்தம்) பூர்த்தியாகிவிடும், என்க.

(வி -ரை) கைலையில் கல்லாலின் நீழலில் எழுந்தருளியிருக்கும் தட்சிணாமூர்த்தி அக் கைலையை விட்டு மவுனகுருவாய் நம்முன் வந்தது பதி பசு பாச வுண்மைகளைச் சங்கையறத் தெரிவித்து, பசு பாச சம்பந்தமான பிரபஞ்சமுக வாசனையை யறவே யொழித்து, பதி சம்பந்தமான உண்முக வாசனையால் விளை பேரின்பத்தை யனுபவிக்கவேண்டியேயாம். இதனையே 'பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டி' என்றனர். (5)

வாயாதோ வின்பவெள்ளம்? வந்துன் வழியாகப்
பாயாதோ? நானும் பயிராய்ப் பிழையேனோ?
ஓயாமலுன்னி யுருகு! நெஞ்சே! அந்நிலைக்கே
தாயான மோனனருள் சந்திக்க வந்திடுமே.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, இன்பவெள்ளம் - சுகக்கடல், வாயாதோ? - ததும்பாதோ?, உன் வழியாக - நினது மூலமாக, வந்து - விளைந்து, பாயாதோ? - பரவாதோ?, நானும் - (அவ் வின்ப வெள்ளத்தை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கும்) நானும், பயிர் ஆய் - (அன்பென்னும்) பயிராக, பிழையேனோ? - பிழைக்க மாட்டேனோ?, ஓயாமல் - இடையறாமல், உன்னி - நினைத்து, உருகு! - கரைவாயாக!, அந்நிலைக்கே - அந்நிலைக்கே, தாயான - தலைமையான, மோனன் அருள் - மவுனகுருவின் கிருபையானது, சந்திக்க - சந்திக்க, வந்திடும் - கிடைக்கும், என்க.

(வி - ரை) முதல்வன் உருவ மின்பமயமாக விளங்குதலின் இடையறாத கரணங் கரைந்து நிற்பார்க்கு முதல்வனருள் கிடைக்கு மென்பதாம். திருவருட்பயன்: "இன்பதனை யெய்துவார்க்கிய மலர்க்குருவ, மின்பமா மாதலினாலில்." என்றதனாற் காண்க. (6)

வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்து கன்ம
பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்?
இந்தமதி யேயுனக்கிங் கென்மதிகேள்! என்னுடைய
சந்ததநெஞ் சே! பரத்திற் சாரின்ப முண்டாமே.

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, வந்த - பிரபஞ்சத்தின்கண் வந்த, வரவை - வரவின் காரணத்தை, மறந்து - மறந்து, உலகு ஆய் - பிரபஞ்ச மயமாக, வாழ்ந்து - இருந்து, கன்ம பந்தம் - கன்மப்பிணிப்பு, உற - பொருந்த, உன்னை படிப்பிக்க - (இவ்வாறு) உன்னைக் [illegible], கற்றவர் யார்? - படித்தவர் யாவர்?; உனக்கு இந்த மதி - உனக்கு இந்த

கைய அறிவு, என்?-எற்றுக்கு?, என் மதி - என்னுடைய புத்தியை, கேள்!- கேட்பாயாக!, என்றாலே - என் மூலமாக, சந்ததம் - எப்போதும், பரத்தில் - முதல்வனிடத்தில், சாரின் - அடைந்தால், இன்பம் உண்டாம் - சுகம் இண்டாகும், என்க.

(வி - ரை) மனித சென்மம் ஏன் வந்தது? வந்ததனு லென்ன பிரயோசனம்? இந்தச் சென்மத்தைக்கொண்டு என் செய்வது? அங்ஙனம் செய்தாலடையும் பல னியாது? அப் பலனை யடைதற்குச் சாதனங்கள் யாவை? அச்சாதனங்களா லடையும் சாத்திய மெத்தகையது முதலிய விசாரஞ் சிறிதும் செய்யாது, மேலுமேலுஞ் சென்ம மெடுத்தற் கேதுவா யுள்ள பந்தத்தி லழுந்திக் கிடப்பது பிரயோசனமில்லை யென்பதாம். (7)

இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்கு
னன்புநிலை யென்பார்; அதுவுநினை யன்றியுண்டோ?
உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய்! நெஞ்சே! நீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே!

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, இன்ப மயமாய் - சுக சொரூபமாகி, உலகம் எல்லாம் - பிரபஞ்ச முழுவதும், பிழைப்பதற்கு - உய்வதற்கு, உன் - உன்னுடைய, அன்பு - அன்பானது, நிலை என்பார் - காரணமென்பார்; அதுவும் - அந்த அன்பின் நிலையும், நின்னை அன்றி - உனக்கு அன்னியமாக, உண்டோ? - உளதோ? உன் - உன்னுடைய, புலத்தை - அறிவை, ஓரின் - ஆராயின், அருட்கு - திருவருளுக்கு, ஒப்பு ஆவாய் - சமானமாவாய்!, நீ - நீ, தென்புலத்தாரோடு - பிதிர்தேவர்களுடன், இருந்து - வாழ்ந்து, செய் பூசை - நான் செய்யும் பூசையினை, கொண்டருள்! - ஏற்றுக்கொள்வாயாக!, என்க.

(வி - ரை) பற்றும் பதார்த்தங்களின் மயமாக விளங்குதல் மனத்திற்குரிய தொழிலாகலின், மருளைப் பற்றில் அம் மருள் மயமாகவும், அருளைப் பற்றில் அவ்வருள் மயமாகவு மனமிருக்குமாகலின், இத்தகைய மனம் அருண்மயஞ் சார்தலை யறவே விட்டுப் பிரபஞ்சமுகமாக விருந்து வாளா அலைக்காது தென்புலத்தாரை அம் மனம் அடையின் அவரோடு சேர்த்து மனத்தையும் பூசித்து வருவே னென்பதாம்; அதாவது, மன மிறந்துபட வேண்டு மென்பதாம். (8)

அருளேயோ ராலயமா வானந்த மாயிருந்த
பொருளோடி யானிருக்கப், போயொளித்த நெஞ்சே! நீ
மருடீர் முயற்கோடோ? வான்மலரோ? பேய்த்தேரோ?
இருடீர நீயுறைந்த தெவ்விடமோ? காணேனே!

(இ - ள்) நெஞ்சே! - மனதே!, அருளே - திருவருள்தானே, ஓர் ஆலயம் ஆ - ஒரு கோயிலாக, ஆனந்தமாய் இருந்த - சுகசொரூபமாக

விருந்த, பொருளோடு - முதல்வனுடன், யான் இருக்க - நான் வாழ; போய் ஒளித்த - போய் மறைந்த, நீ - மனமாகிய நீ, மருள் தீர் - மயக்க மற்ற, முயல் கோடோ? - முயற் கொம்போ?, வான் மலரோ? - ஆகாயத் தாமரையோ?, பேய் தேரோ? - கானற் சலமோ?, இருள் தீர - என்னுடைய அஞ்ஞானம் ஒழிந்தவுடன், நீ உறைந்தது - நீ போய்த் தங்கியது, எவ்விடமோ? - எந்த இடமோ?, காணேன் - அறிந்திலேன், என்க.

(வி - ரை) ஆன்மா பிரபஞ்சரூபமாக இருக்குமளவும் மனமானது கூடவிருந்து, இவ்வளவெனச் சுட்டுதற்கரிய எண்ணிறந்த போகங்களை யூட்டிப், பம்பரம்போ லாட்டி வைத்துக்கொண்டிருந்து, ஆன்மா திருவருள் மயமானவுடன் இருந்தவிட மின்னதென்று கொள்ளாதவகை யொழிந்து விட்ட தென்பதாம். (9)

எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே,
அவ்விடத்தே வுன்னைநெஞ்சே! ஆராயிற் கண்டிலனே;
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ? அவ்விடமுஞ்
செவ்விடமே; நீயுஞ் செனனமற்று வாழியவே!

(இ - ள்) நெஞ்சே! - மனமே!, எவ்விடத்தும் எல்லா இடத்திலும், பூரணம் ஆம் - பரிபூரணமா யிருக்கின்ற, எந்தை பிரான் - என் தந்தை யாகிய பெருமானது, தண் - தண்ணிய, அருளே - திருவருளே; அவ் விடத்தே - அப்பரிபூரணத்தே, உன்னை - மனமாகிய உன்னை, ஆராயின் - விசாரிக்கின், கண்டிலனே - கண்டேனில்லை; அவ்விடத்து - அப் பரிபூர ணத்தில், மாயையிலே - மாயையினிடத்து, மாண்டனையோ? - ஒடுங் கினையோ?, அவ்விடமும் - அம்மாயையும், செவ்விடமே - தக்க இடமே; (ஆகலின்) நீயும் - மனமாகிய நீயும், செனனம் அற்று - மறுபடியும் முளைத்த லின்றி, வாழிய - அம் மாயையினின்றும் வாழக்கடவாய், என்க.

(வி - ரை) முதல்வன் அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமாயுள்ள தன்மையை விசாரித்து உண்மை தேர்ந்து எல்லாஞ் சிவமயமாய் நோக்கு மிடத்து மன முளைந்து தோன்றாதாகலின், 'கண்டிலன்' எனவும்; சிவன் முத்தனிலையில் தத்துவங்களுக்குப் பிரபஞ்சமுகமாகச் சேட்டையின்றி யொடுங்குங் காலத்து மனதிற்கு ஒடுக்கம் மாயையி லாகலின், 'மாயையிலே மாண்டனையோ?' எனவும்; இத்தகைய நிலையில் மன முளைத்தற்கு ஏது வில்லை யாகலின், 'செனனமற்று' எனவும்; இதுகாறும் தன்னைப் பிர பஞ்சத்தின் கண்ணே யலைத்து வந்த மனம் இனித் தன்னிடம் வருதற் கேதுவிலாமையாய்ப் போனதால் 'வாழியவே' எனவும் கூறினர். (10)

## காடுங் கரையும்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

காடுங் கரையு மனக்குரங்கு
கால்விட் டோட, அதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ?
ஒன்றாய்ப், பலவாய், உயிர்க்குயிரா
யாடுங் கருணைப் பரஞ்சோதி
யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர்!
சேர வாருஞ் சகத்தீரே!

(இ - ள்) மனக்குரங்கு - மனமாகிய குரங்கானது, காடும் - காட்டினிடத்தும், கரையும் - மேட்டினிடத்தும், கால் விட்டு - காலுதறிக் கொண்டு, ஓட - கண்ட கண்ட இடங்கட்கு ஓடாநிற்க, அதன் பிறகே-அம்மனத்தின் பிறகே, ஓடும் - ஓடித் திரிகின்ற, தொழிலால் - தொழிலை மேற்கொள்ளுதலினால், பயன் - ஒரு பிரயோசனம், உளதோ? - உண்டாகுமோ?, (இல்லை;) ஒன்று ஆய்-ஒன்றாகி; பல ஆய் - பலவாகி; உயிர்க்கு உயிராய் - உயிர்க்கு உயிராகி, ஆடும் - நடிக்கின்ற, கருணை பரஞ்சோதி - கருணைப் பரஞ்சுடரினது, அருளை பெறுதற்கு - திருவருளை யடைதற்கு, அன்பு நிலை - அன்பி னிலையினை, தேடும் - தேடற்குரிய, பருவம் - சமயம், இது - இதுதான்; (ஆதலால்) சகத்தீரே! - உலகத்தினரே!, சேர வாரும் - சேர வாருங்கள்!, என்க.

(வி - ரை) திருமந்திரம்: "நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம், வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லவும், ஊன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரம், தான்பற்றப் பற்றத் தலைப்படுந்தானே." என்றதற்கேற்ப, 'சகத்தீரே!' என உலகத்தினரை விளித்துக் கூறுவாராயினர். ஈண்டு 'காடுங் கரையும்' என்றது உலகத்தினை. நிமிடத்திற்கு நிமிடம் மனமானது உலகமனைத்துஞ் சென்று மீளுதலின் காடுங் கரையு மென்றனர். குரங்கானது ஒரு மரத்தில் கிளைக்குக்கிளை தாவிக்கொண்டு சஞ்சரித்தல்போல, மனமானது பிரபஞ்சத்தில் ஒரு பதார்த்தத்தை விட்டு ஒரு பதார்த்தத்தைத் தாவிக்கொண்டே யிருத்தல் சுபாவமாகலின், 'மனக்குரங்கு' என்றனர். மனத்தின்வழியே புத்தியைச் செலுத்துவா ரடையும் பிரயோசனஞ் சிறிதுமில்லை யாகலின், 'பிறகே, யோடுந் தொழிலாற் பயனுளதோ?' என்றனர். 'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்ற கருத்து மிதுவே. ஆன்மாவும் பரமான்மாவும் பொருட்டன்மையால் கண்ணி னருக்கன்போல முதல்வன் ஆன்மாக்களைக் காட்டிலும் வேறுமா யிருத்தலினாலும், ஆன்மாவும் பரமான்மாவும் கலப்பினா லுட

லுயிர்போல் பரமான்மா அவ்வுயிர்களேயா யிருத்தலினாலும், ஆன்மாவும் பரமான்மாவும் கண்ணொளியி னன்மபோதம் போலப் பரமான்மா உயிருக்குயிராதற் றன்மையாலும், முறையே 'ஒன்றாய்ப், பலவாய், உயிர்க்குயிராய்' என்றனர். சிவஞானசித்தியார்: "உலகெலா மாகி வேறா யுடனுமாய்" என்றதனாற் காண்க. 'ஆடுங் கருணைப் பரஞ்சோதி' என்றது தில்லைச் சிற்றம்பலத்தின்கண்ணே ஆன்மாக்களிடத்தில் வைத்த கருணை மிகுதியால் ஆனந்த நிர்த்தனஞ் செய்யும் அருட்பரஞ்சோதி. அருளானது தொடர்புபற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்தவழி உளதாகிலின், 'அருளைப் பெறுதற் கன்புநிலை' என்றனர். திருக்குறள்: "அருளென்னு மன்பின் குழவி" என்றதனாற் காண்க. அன்பு செய்வாரையே யறிவன் சிவனாகலின், 'அன்புநிலை, தேடும் பருவமிது கண்டீர்' என்றனர். திருமந்திரம்: "அன்புறு சிந்தையின் மேலெழு மவ்வொளி, யின்புறு கன்னியோ டேற விசைந்தன. துன்புறு கண்ணியைத் தாடுந் துடக்கற்று, நண்புறு சிந்தையை நாடுமினீரே." என்றதனாற் காண்க. 'இன்றைக் கிருப்பாரை நாளைக் கிருப்பரென் றெண்ணவுந் திடமில்லையே' என்றதற்கேற்ப நிலையாமையினைக் கருதி 'பருவமிது கண்டீர்' என்றனர். (1)

சைவ சமய மேசமயம்;
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக்
காட்டும், இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி
புகுத வேண்டா(ம்); முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாரும்! சகத்தீரே.

(இ-ள்) சைவ சமயமே - சைவ சமய மொன்றுமே, சமயம் - (உண்மையான) சமயம்; (என்னெனின்) சமயாதீதம் - அதீத சமயமாகிய அச் சைவ சமயத்திலே விளங்கும், பழம் பொருளை - அநாதி நித்தியமாயுள்ள முதல்வனை, கை வந்திட - கைவசமாக, மன்றுள் - அம்பலத்தில், வெளி காட்டும் - வெளிப்படையாகக் காட்டாநிற்கும், இந்த கருத்தை - இந்த வுண்மையை, விட்டு - கைவிட்டு, பொய் வந்து உழலும் - பொய் மேலிட்டுழலும், சமயநெறி - புறச்சமய மார்க்கங்களில், புகுத வேண்டாம் - நுழையவேண்டாம்; முத்திதரும் - மோட்சத்தைக் கொடுக்கின்ற, தெய்வ சபையை - தெய்வ மெழுந்தருளியிருக்கும் சபையை, காண்பதற்கு - தரிசித்தற்கு, சகத்தீரே! - உலகத்தீரே!, சேர வாரும் - ஒருசேர வாருங்கள்!, என்க.

(வி-ரை) சைவம் - சிவசம்பந்த முடையது; சிவம் - மங்களம்; எனவே, சைவம் - மங்களமுடையது என்பதாம். இதனால் மற்றைத் தெய்

வங்கள் அசிவமும், மற்றைச் சமயங்கள் அசைவமுமாம். புறத் தெய்வங் களும் புறமார்க்கங்களும் அமங்கள மெனவே, அத் தெய்வங்களாலும் சமயங்களாலும் ஒரு பயனுமின்றே வெனின், அவ்வவற்றி னேற்றங்களிற் படிப் பல னுண்டென்க. 'சைவ சமயமே' எனத் தேற்றேகாரங் கொடுத் துக் கூறினமையின், சைவதரமான வுயர்ந்த மார்க்கங் கிடையாதென்பது போதரும். 'சமயாதீத' என்றது முன்னர்க் கூறிய சைவத்தையே வலி யுறுத்தி அது அதீத சமயமென வலியுறுத்தப்பட்டது. "அயர்வறச் சென்னியில் வைத்து ராஜாங்கத்தி லமர்ந்தது வைதிக சைவ மழகி தந்தோ" எனவும், "சந்தான கற்பகம்போ லருளைக் காட்ட, தக்கநெறி யிந்நெறியே தான்சந் மார்க்கம்" எனவும் போந்த வாக்கியங்களே யிவ் வுண்மையினைக் காட்டும். 'பழம் பொருள்' என்றது அவ் வதீதமாகிய அச் சைவத்தாற் பெறப்பட்ட நித்திய வுண்மைப்பொருள். திருவாசகம்: "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருள்" என்றதனுற் காண்க. சைவசமயத்தாற் பிரதிபாதிக்கப்படும் சிவம் பழம்பொரு ளெனவே, சிவம் என்றும் பிறவாத நித்தியப்பொரு ளெனவும், மற்றைய தேவர்கள் அடிக்கடி பிறக்கும் தன்மையினை வாய்ந்துள்ள புதுப்பொருள்க ளாகிய அனித்தியப் பொருள்களாம். 'சமயாதீதப் பொருள்' என்றத னுல் 'சைவசமயத்திலும் அதிகரித்த வேதாந்த ஞானம்' என்று ஏகான்ம வாதிகள் கூறுவர். அது 'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்" என்று கூறிய வாக்கியத்தால் மறுக்கப்படுதலின், அங்ஙனங் கூறுதலடாது. அன்றியும், சைவமே பரமமாகிய தருமமாகவும், அதுவே முக்கியமாக அனுஷ்டிக்கப்பாலதாகவும், அச் சிவ தருமத்திலேயே சாட்சாத்தாக வீடளிப்பவர் சிவபிரானேயாகவு மிருத்தலின், 'சமயாதீதப் பழம்பொருள்' என்றனர். வாயுசங்கிதை: "சைவோகி பரமோதர்மா ஸ்ரேஷ்டா னுஷ்டா நஸப்திதா" என்றதனுற் காண்க. தரிசிேனுபநிஷத்தில்: "சிதம்பரங் ஹ்ருத்மத்யே" என்றதனுல் "சிதம்பரம் ஹ்ருத்பத்மத்திய க்ஷேத்திரம்" என்று பிரகாசப்பட்டிருப்பதினுலும்; ஈஸ்வர சர்வ பூதா னும் இருதே சேஜ்ருநதிஷ்டதி" என்றதனுல், முதல்வன் சமஸ்த பிராணி களுடைய இருதயத்தி லிருக்கப்பட்டவனுகக் கீதை சொல்லுகையினுலும்; "அஸ்மிந்ப்ரஹ்மபுரே யேச்மதகரம் யதிதம் முநே, புண்டரீகந் துதந்மத்யே ஆகாசோத ஹரோஸ்திதத், ஸசிவஸ்ஸச் சிதானந்தஸ் ஸோந்வேஷ்டவ் யோ முமூட்சுபி" என்றதனுல் சிதம்பரம்: பிரமபுரம், இருத் புண்டரீக புரம், தகராகாசபுரம் என்று பிரஸ்தாபிக்கப்பட்டுச் சிவ சச்சிதானந்த சப்த பந்திகளால் ஜ்ஞேயவஸ்து நிரூபணம் செய்யப்பட்டிருத்தல் பிரத்தியட்ச மாகையால் 'மன்றுள் வெளிகாட்டும்' என்றனர். முக்கூற்றுப் புறச் சமயங்களை யனுபவிப்போர் இன்றியமையாது அனுபவிக்க வேண்டிய மோட்ச சாம்பிராச்சியத்தினை யடையா ராகலின், 'பொய்வந் துழலுஞ் சமயநெறி' என்றனர். திருவாசகம்: "இருமுச் சமயத்தொருபேய்த்

தேரினே, நீர் நசை தரவரு நெடுங்கண் மான்கணந், தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடு, மவப்பெருந் தாம நீங்கா தசைந்தன." என்றதனாற் காண்க. திருவாரூரிற் பிறந்தவர்க்கும், காசியி லிறந்தவர்க்கும், சிதம்பரத்தில் தரிசித்தவர்க்கு முத்தி யென்பது பிரசித்தமாகலின், 'முத்திதருந், தெய்வச் சபையைக் காண்பதற்குச் சேரவாரும்' என்றனர். கோயிற் புராணம்: "மெய்ம்மைநற் சரியை பத்தி விளங்கிய ஞான மேவா, வெம்மையொப் பவர்க்கு முத்தி யிறையிலியாக விட்ட, மும்மைநற் பதிக டம்மின் மூளைத்தவர் முடிந்தோர் மூவாச், செம்மலர்க் கழல்கண் டோர்கள் சிவத்தினைச் சேர்வ ரன்றே." என்றதனாற் காண்க. செகத்தவரெல்லாம் வியட்டியால் அத் தில்லை எல்லையினின்ற கடவுளையே 'தந்தெய்வ மெந்தெய்வமென் றெங்குந் தொடர்ந் தெதிர் வழக்கிடவு நின்றதெது?' என்று வழக்குப் பேசலால், அவரையே யவ்வழக் கறுத்தருளும் பொருட்டுச் 'சேரவாரும்' என் றழைத்தபடியாம். (2)

காக முறவு கலந்துண்ணக்
கண்டீர்; அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ!
இன்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும்! சகத்தீரே!

(இ - ள்) காகம் - காகமானது, உறவு கலந்து - தன் இனமாகிய காகங்களோடு கலந்து, உண்ண - புசிக்க, கண்டீர் - கண்டீர்கள்; (ஆகலின்) அகண்ட ஆகாரம் - சர்வ வியாபகத்தை வாய்ந்த, சிவபோகம் என்னும் - சிவானுபவம் என்கின்ற, பேரின்ப வெள்ளம் - பேரானந்தப் பெருக்கானது, பொங்கி - பொங்கி, ததும்பி - வழிந்து, பூரணமாய் - நிறைவாகி, ஏக வுருவாய் - ஏக உருவமாகி, கிடக்குது - இருக்கின்றது; ஐயோ! - அந்தோ!, நாம் - நாம், இனி - இனிமேல், இன்புற்றிட - சுகமடைய, எடுத்த தேகம் - பிறந்த உடல், விழுமுன் - அழியுமுன்னே, புசிப்பதற்கு - அந்த இன்ப வெள்ளத்தினை உண்ணற்கு, சகத்தீரே! - உலகத்தினரே!, சேர வாரும்! - ஒருசேர வாருங்கள்!, என்க.

(வி - ரை) அகண்ட பரிபூரணமா யோங்கி நிற்கின்ற பரமசிவமே பேரின்பமாகலின் 'அகண்டா காரசிவ, போக மெனும்பே ரின்பவெள்ளம்' என்றனர். சிந்தனை வெண்பா: எல்லா வுயிர்கட்கு மின்பங் கொடுத்தலால், எல்லாருஞ் சிவனையே யெண்ணலா - லெல்லாஞ், சிவனுருவே யாமாற் றெவிட்டாப்பே ரின்பம், சிவனுருவ மென்றுணர்விற் றேர்." என்றதனாற் காண்க. அகண்டாகார பரிபூரணமாய்ப் பொங்கித் ததும்பி

யெங்குந் தானுய் நிறைந்தோங்கி நிற்கின்ற அப் பெரும் போகத்தினைப் பேரின்பானுபவமாக அனுபவிப்பவர்க்கே முதல்வன் கலப்புண்டா மாதலின் 'புசிப்பதற்குச் சேரவாரும்' என்றனர். சிற்றம்பலநாடிகள்: "எண்ணரிய பேரின்ப மிப்போது போலமுன்னு, நண்ணி யருந்தாம னாளவமே போக்கினமே." எனவும், சிவபோகசாரம்: "இற்றைவரைக் கரணத்தோ டிணங்கி நின்றனையே, யற்றைவரைச் சென்ம மெடுத்தனையே யிற்றைவரைத், துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யீதறநல், லின்பவெள்ளத் துள்ளே யிரு." எனவும் வருவனவற்றாற் காண்க. இப்போது எடுத்துள்ள தேகமானது, ஒருகாலத்தில் அழிவது நிச்சயமாகலின், அங்ஙன மழிவதன்முன் பேரின்பத்தினை யனுபவிக்க வேண்டுமென்பார், 'எடுத்த, தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும்' என்றனர். தணிகை யாற்றுப்படை: "பலவகைத் தொழிலும் பண்புற நவின்று, சிந்தை வழிச்செலு மைந்து நிலைபெறீஇ, யாள்வினைத் திறத்தி னயரா யாக்கை, யட்டி நீடின்றிரிபு நிலைமை நாடி" என்றதனாற் காண்க. ஒரு பொருள் கிடைக்கின் அதனைத் தனியே யுண்ணுமல் தன்னினத்தை யழைத்துக் கூட்டிக்கொண் டுண்ணும் காகம்போல, சிவபோகத்தினை நாமெல்லாருங் கூடியுண்ண வாருங்கள் என்பதாம். (3)

---

# எடுத்ததேகம்

## கட்டளைக் கலிப்பா.

எடுத்த தேகம் பொருளாவி மூன்றுநீ
'எனக்கொன் றில்லை' யெனமோன நன்னெறி
கொடுத்த போதுகொ டுத்ததன் றோ? பினுங்
குளறி நானென்று கூத்தாட மாயையை
விடுத்த வாறுங்,கண் ணீரொடு கம்பலை
விலகு மாறும்,என் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும், புகலாய்! சிரகிரித்
தாயு மான தயாபர மூர்த்தியே!

(இ - ள்) எடுத்த - உலகின்கண்ணே பிறந்த, தேகம் - இந்த உடல், பொருள் - பொருள், ஆவி - உயிர், மூன்றும் - இம் மூன்றும், நீ - தேவரீர், எனக்கு ஒன்று இல்லை என - எனக்கென வொரு சுதந்தரமு மில்லையென, மோன நன்னெறி - மவுன நன்னிலையினை, கொடுத்தபோது - தந்தபோது, கொடுத்தது அன்றோ? - மேற்படி மூன்றையும் நான் உமக்குக் கொடுத்து விட்ட தல்லவா?, (அங்ஙனமாக) பின்னும் - மீட்டும், நான் என்று - நானொருவன் சுதந்தரங் கொண்டுளேன் என்று, குளறி - குழறி, கூத்தாட -

கூத்தாடும்படி, மாயையை - மாயையினை, விடுத்தவாறும் - ஏவின விதமும், கண்ணீரொடு - கண்ணீருடன், கம்பலை - அச்சம், விலகுமாறும் - விலகின விதமும்; என் - அடியேன், வேட்கை - ஆசையாகிய, ப்ரவாகத்தை - வெள்ளத்தினை, தடுத்தவாறும் - தடை செய்த விதமும், புகலாய்! - சொல்வாயாக!, சிரகிரியில் - திரிசிர புரத்தில் (எழுந்தருளிய) தாயுமான - தாயுமான சுவாமி என்னும் திருப்பெயரை வாய்ந்த, தயாபர - கருணையிற்சிறந்த, மூர்த்தியே! - முதல்வனே!, என்க.

(வி - ரை) முதல்வன் குருமூர்த்தி கோலங்கொண் டெழுந்தருளி வந்து உடல் பொரு ளாவி ஆகிய மூன்றினையுங் கைக்கொண்டு, மவுன நிலையினை யுபதேசித்த பின்னரும் மாயா காரியங்கள் அடிக்கடி தாக்குவ தென்பதாம். திருவாசகம்: "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண் டிலையோ, வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்க ணெம் மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே." என்றதனாற் காண்க. குருநாதன் றிருவருள் பெற்றவழியும் பயிற்சி வயத் தால் தேக முள்ளளவும் மாயை ஏகதேசம் வந்து தாக்கும். எங்ஙனமெனின், நன்னீரானது கடனீருடனே யொன்றாய்த் தன்றன்மை கெட்டு மீண்டும் அந்த வாற்றாலே நெடுந்தூர மெதிர்த்தாலும், முன்போல நன்னீ ராகாமல் உப்புநீரே யானாற்போல, ஞானத்தாலே திருவருளடைந்த சிவயோகிகளும் பிராரத்தத்தாலே அனுபூதி திரியும். (1)

நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின்
னூலிற் சொன்ன முறையிய மாதிநான்
றோயும் வண்ண மெனைக்காக்குங் காவலும்,
தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய்;
'ஓயுஞ் சன்மம்; இனியஞ்ச லஞ்சல்!' என்
றுலகங் கண்டு தொழவோ ருருவிலே
தாயுந் தந்தையு மானாய்! சிரகிரித்
தாயு மான தயாபர மூர்த்தியே!

(இ - ள்) நோயும் - வியாதியும், வெம் - கொடிய, கலி பேயும் - வறுமையாகிய பிசாசும், தொடர - (அடியேனைத்) தொடருதலால், நின் - தேவரீரது, நூலில் - (சிவாகமமாகிய) நூலில், சொன்ன முறை - விதித்த படி, இயமாதி - இயமமாதிகளை, நான் - அடியேன், தோயும் வண்ணம் - அனுபவிக்குமாறு, எனை - அடியேனை, காக்கும் - (விடயங்களிற் செல் லாது) காக்கின்ற, காவலும் - துணையும்; தொழும்பு கொள்ளும் - (என்னை) அடிமையாகக் கொள்ளும், சுவாமியும் - கடவுளும், நீ - நீயே; சன்மம் - பிறவி, ஓயும் - ஒழிந்துபோகும்; இனி - இனி, அஞ்சல் அஞ்சல்! என்று - அஞ்சாதே! அஞ்சாதே! என்று சொல்லி, உலகம் - உலகத்தார்,

கண்டு தொழ - பார்த்து வணங்கும்படி, ஓர் உருவிலே - ஒரு வடிவிற்றானே, தாயும் தந்தையும் - தாயுந் தந்தையும், ஆனாய்! - ஆனவனே!, சிரகிரி - திரிசிரபுரத்தில், தாயும் ஆன - தாயுமானவரென்னும், தயாபர - கருணையிற் சிறந்த, மூர்த்தியே! - முதல்வனே!, என்க.

(வி - ரை) வாத பித்த சிலேட்டுமம் உடலுக்கும், வறுமையும் செல்வமும் உயிருக்கும் அமைவது இயல்பாதலின், 'நோயும் வெங்கலிப் பேயும்' என்றனர். ஈண்டு 'நின்னூல்' என்றது சிவாகமத்தினை. என்னை? இயமாதிகளைச் சாதனமாகக் கொண்ட நிஷ்டையை 'சிவாகமமே சொல்லு நிஷ்டை' என இந் நூலாசிரியரே முன்னர்க் கூறியிருத்தலின். ஆளுடைய வாசு: "அப்பனீ யம்மைநீ யையனுநீ" என்றதற் கேற்ப சுவாமியும், 'தாயுந் தந்தையு மானாய்' என்றனர். (2)

---

## முகமெலாம்

---

முகமெ லாங்கண்ணீர் முத்தரும் பிடச்,செங்கை முகிழ்ப்ப,
அகமெ லாங்குழைந் (து), ஆனந்த மாகநல் லறிஞ
ரிகமெ லாந்தவ மிழைக்கின்றார் ; என்செய்கோ வேழை?
சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய்!

(இ - ள்) முகம் எல்லாம் - முகம் முழுமையும், கண்ணீர் - கண்ணீராகிய, முத்து - முத்துக்கள், அரும்பிட - உதிர்ந்திட ; செங்கை - செவ்விய கைகள், முகிழ்ப்ப - குவிக்க ; அகம் எல்லாம் - மன முழுவதும், குழைந்து - உருகி ; ஆனந்தமாக - இன்பமயமாக, நல் அறிஞர் - உத்தம அறிவாளிகள், இகம் எலாம் - இம்மை முழுவதும், தவம் இழைக்கின்றார் - தவத்தினைச் செய்கின்றார்கள் ; ஏழை - எளியனேன், என் செய்கோ? - என்ன செய்வேனோ?, சகம் எலாம் - உலக மனைத்தையும், பெற - பெறுதற்காக, நல் அருள் - சிறந்த அருளே, உதரம் ஆ - திருவயிறாக, சமைந்தோய்! - பெற்றவனே!, என்க.

(வி - ரை) தவமாவது - சிவத்தைத் சிந்தித்துக் கண்ணீர் வார்தலும், அஞ்சலித்தலும், மனங் குழைதலுமாக இருத்தலன்றித் தன்னை மறந்து அறிவிழந்து நிற்றலல்ல வென்பார், 'முகமெ லாம்......இழைக்கின்றார்' என்றனர். "சிவஞ் சத்தி தன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்று முவந்திரு வருஞ் சேர்ந்திங்குல குயிரனைத்து மீன்றும்" எனச் சிவஞான சித்தி கூறுதற்கேற்பச், 'சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய்!, என்றனர். (1)

# தி ட மு ற வே

## கோச்சகக் கலிப்பா.

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணி, நின்னைக் கைகுவித்தோ னலனோ?
அடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா(து); என்னாவிப் பற்றே! பராபரமே!

(இ-ள்) திடம் உற - திடம் பொருந்த, நின் - தேவரீரது, அருளை - திருவருளினை, சேர்த்து - கூட்டி, என்னை - அடியேனை, காத்து ஆள - காத்து இரட்சிக்க, உனக்கு - தேவரீருக்கு, கடன் என்று - கடமை யென்று, எண்ணி - நினைத்து, நின்னை - தேவரீரை, கை குவித்தோன் - கைகூப்பி வணங்கினேன், நான் அலனோ? - அடியேன் அல்லவோ?, அடைவு கெட்ட - முறை கெட்ட, பாழ் - பாழான, மாயை - மாயையென்னும், ஆழியிலே - சமுத்திரத்திலே படிந்து, இன்னம் - இன்னமும், அல்லல்பட - துன்ப மடைய, முடியாது - முடியாது; என் - அடியேன், ஆவி - உயிருக்கு, பற்றே! - ஆதாரமே!, பராபரமே! - பராபரமே! என்க.

(வி-ரை) இடையறாத அன்போடு சிவத்தைப் பொருந்தி அதீதத்தை யடையும் இச்சையுடையார் அச் சுத்தாவத்தை நிலையேயாய் நிற்பர். ஒரோ வழி 'தடாகத்திற் கல் லெறியும்போது பாசியானது நீங்கி அஃதில்லாதபோது பாசி பரவுமாறுபோல' மாயையானது சிவத்தை யுணரும்போது நீங்கி, அதனை யுணராத சமயம் பார்த்து வந்து மாயை தலைப்படும் என்னுங் குறிப்பினை விளக்குவார், நின்னைக் கைகுவித்த எனக்கு, 'மாயை யல்லலிற் பட முடியாது' என்றனர். (1)

ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ? வந்து வருத்தமெல்லாந் தீராயோ?
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே! பராபரமே!

(இ-ள்) ஆராமை கண்டு - அடியேன் அறியாமையை நோக்கி, இங்கு - இவ்விடத்து, அருள் குருவாய் - அருட்குருவாகி, நீ - தேவரீர், ஒருகால் - ஒருதரம், வாராயோ? - வருவாயோ, வந்து - அங்ஙனம் வந்து, வருத்தம் எல்லாம் - எல்லாத் துன்பத்தினையும், தீராயோ? - நீக்காயோ?, பூராயமாக - விசித்திரமாக, அருள் பூரணத்தில் - திருவருள் நிறைவில், அண்ட முதல் - உலகத்திற்கு முதலாகிய, பார் ஆதி - பிருதிவி முதலாகிய பஞ்ச பூதங்களை, வைத்த - வகுத்து வைத்த, பதியே! - இறைவனே!, பராபரமே! - பராபரனே!, என்க.

(வி - ரை) உலகினுக்குக் காரணமாயுள்ள பஞ்சபூத மனைத்தும் சடமாகலினாலும், அவைதானே காரியப்படா வாகலினாலும், முதல்வன் றிருவருட் பிரேரகத்தால் அவன் சந்நிதானத்தில் தொழில் அடைந்து பல வகையில் நிலையுற்று விளங்கலின், ‘அருட் பூரணத்தி லண்டமுதற், பாராதி வைத்த பதியே! பராபரமே!’ என்றனர். (2)

வாழாது வாழ,உனை வடைந்ததோ ரெல்லாரு
மாழாழி யென்னவரு ளானார்; அழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி நாளொருவன்
பாழாகா வாறுமுகம் பார்! நீ பராபரமே!

(இ - ள்) வாழாது - (அநித்திய வாழ்வினுக்கு ஏதுவாக) வாழாமல், வாழ - (நித்திய வாழ்வினுக்கு) ஏதுவாக வாழ; உனை வந்து - தேவரீரிடம் வந்து, அடைந்தோர் - அடைக்கலமென அடைந்தோர், எல்லாரும் - யாவரும், ஆழ் - ஆழமாகிய, ஆழி என்ன - கடலென்ன, அருள் ஆனார் - அருள் வடிவமானார்கள்; அழுக்காற்றோடு - பொறாமையுடன் கூடிய, ஏழாய் - அறிவிலி, என - என்று, உலகம் ஏசும் - உலகம் பழித்தற்குரிய, நான் ஒருவன் - நானொருவனும், இனி - இனிமேல், பாழ் ஆகாவாறு - பாழாந்தன்மை யடையாதபடி, நீ - தேவரீர், என் - எளியேன், முகம் பார்! - முகம் பார்த்திரங்கு!, பராபரமே!—, என்க.

(வி - ரை) ஈண்டு ‘வாழாது வாழ’ என்றது தற்போத நினைவால் அழிதற் கேதுவாகிய வாழ்வினில் நடவாது, அருள் முனைவால் என்றும் நிலையுற்று வாழ்தற் கேதுவான தன்மையினை யடைதல். இத்தகைய அறிஞரே திருவருண் மயமாய் நிற்பரெனவும், இங்ஙனம் நின்றவரே முதல்வன் திருவடியை யடைதற் குரியராவ ரெனவும், அழுக்காற்றுடன் வாழ்பவர் ஒருகாலும் அடையா ரெனவும் குறிப்பித்தனர். (3)

உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ?
‘வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற்’ பதைத்தேன் பராபரமே!

(இ - ள்) உள்ளத்தின் உள்ளே - அடியேன் மனத்திலே, ஒளித்து - மறைந்திருந்து, என்னை - அடியேனை, ஆட்டுகின்ற - நடப்பிக்கின்ற, கள்ள கருணையை - வஞ்சகக் கருணையினை, யான் காணும் - அடியேன் தரிசிக்கும், தரம் ஆமோ? - தரமாகுமோ?, விடக்கு - மாமிசத்தினை, உண்பார் - உண்ணுகின்ற (பாவிகள்), வெள்ளத்தை - (பள்ளத்தில் நிற்கும்) அந்நீரை வடியச்செய்து, நஞ்சு - விஷத்தினை, ஊட்டும் - சிறிது நீரிற் கலக்கும், பள்ளத்தில் - பள்ளத்திலுள்ள, மீன்போல் - மீன்களைப்போல, பதைத்தேன் - துடித்தேன், பராபரமே!—, என்க.

(வி - ரை) "உள்ளத்துற் றவர்வருந்த வுரைப்பவர்க்கொளித்தும்" எனவும், "ஒளிக்குஞ் சோரனே" எனவும் திருவண்டப்பகுதியில் அருளிச் செய்தவாறு, 'உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற, கள்ளக் கருணையை' என்றனர். மலபரிபாகம் உண்டாமளவும் வெளிப்படாது கருணையே வடிவான அந்தராத்மாவாகவுள்ள முதல்வன் உள்ளத்திற் கிரங்கிப் போகத்தைக் கன்மத்தினுக்குத் தக்கபடி யூட்டி வருகிறவனாக லின், 'கள்ளக் கருணை' என்றனர். "ஆட்டுவித்தா லியாரொருவ ராடா தாரே" என்ற ஆளுடையவரசு திருவாக்கினுக் கேற்ப 'ஆட்டுகின்ற' என்றனர். (4)

வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண்
டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்!
'பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போல' வொன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே! பராபரமே!

(இ - ள்) வாவி - தடாகத்திலுள்ள, கமல மலர் - தாமரை மலரில், வண்டு ஆய் - வண்டுபோலாகி, துவண்டு துவண்டு - வாடி வாடி, ஆவிக்குள் - உயிரினுக்குள்ளே, நின்ற - நிலைத்திருக்கின்ற, உனக்கு - உன்மேல், அன்பு வைத்தார்க்கு - அன்பு வைத்த அடியார்க்கு, அஞ்சல் - அஞ்சாதே, என்பாய்! - என்போய்!, பூ விற்கும் - புட்பம் விற்கும், வான் கடையில் - சிறந்த கடையில், புல் விற்போர்போல - புல் விற்பாரைப்போல, ஒன்றை - (உன்னை யன்றி) வேறு பொருளை, பாவிக்கமாட்டேன் - பாவனை செய்ய மாட்டேன்; பதியே! - இறைவனே!, பராபரமே!—, என்க.

(வி - ரை) அன்பின் மயமாகி யுள்ளார்க்கே எவ்விதத்தும் முதல்வன் துணை செய்வா னென்பார், 'அன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்?' என்றனர். திருமந்திரம்: "அன்பினுள் யான்புறத் தானுட லாயுளான், முன்பினுள் ளான் முனி வர்க்கும் பிரானிவ, னன்பினுள் ளானகி யமரு மரும்பொரு, ளன்பினுள் ளார்க்கே யணைதுணை யாமே." என்றதனாற் காண்க. திருவாசகம்: "மற்றுமோர் தெய்வந் தன்னை யுண்டென நினைத்தெம் பெம்மாற், கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" என்றதற் கேற்ப, 'ஒன்றைப், பாவிக்கமாட்டேன் பதியே பராபரமே!' என்றனர். (5)

'விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கென' மார்பிற்
கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல்வெள்ளங் கண்டிலையோ?
தண்ணாறு சாந்தபதத் தற்பரமே! நால்வேதப்
பண்ணாறு மின்பப் பதியே! பராபரமே!

(இ - ள்) விண் ஆறு - ஆகாய கங்கை, வெற்பில் - மலையில், விழுந்தாங்கு என - விழுந்தாற்போல, மார்பில் - அடியேன் மார்பின்மீது, கண்

ஆறு - கண்ணீராகிய நதியை, பாய்ச்சிடும் - பாய்ச்சிடுகின்ற, என் - என்னுடைய, காதல் - ஆசையாகிய, வெள்ளம் - பெருக்கை, கண்டிலேயோ? - பார்த்திலேயோ?, தண் - குளிர்ச்சியே, நாறு - மிகுகின்ற, சாந்த பதம் - சாந்தமான பதத்தையுடைய, தற்பரமே! - தற்பரமே!, நால்வேதப் பண் - நான்கு வேதப் பண்களுள்ளும், நாறும் - பிரகாசிக்கின்ற, இன்பம் - சுக சொரூபமாகிய, பதியே! - இறைவனே!, பராபரமே!—, என்க.

(வி - ரை) 'இடையறு துருகவரு மழைபோ லிரங்கியே யிருவிழிகணீர் இறைப்ப, அன்பினால் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே அமிர்த சஞ்சீவி என' இந்நூலாசிரியர் முனம் கூறியுளதற் கேற்க ஈண்டும், 'விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பிற், கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல் வெள்ளங் கண்டிலேயோ?' என்றார். திருவாசகம்: "அழுதா லுன்னைப் பெறலாமே." என்றதனாற் காண்க. (6)

'கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்கும்' என
வாடியவென் னெஞ்சமுக வாட்டமுநீ கண்டிலேயோ?
தேடியநின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய்! பதியே! பராபரமே!

(இ - ள்) கூடிய - ஒருங்கு சேர்ந்த, நின் - தேவரீரது, சீர் - சிறப்பினை வாய்ந்த, அடியார் - சிவனடியார்களது, கூட்டம் - சங்கமானது, என்று - எக்காலத்து, வாய்க்கும் என - கிடைக்கு மென்று, வாடிய - மனம் வாடின, என் - அடியேனது, நெஞ்சம் - மனத்தையும், முக வாட்டமும் - முக வாட்டத்தினையும், நீ - தேவரீர், கண்டிலேயோ? - பார்த்திலேயோ?, தேடிய - அன்பர்களால் தேடப்பட்ட, நின் சீர் - தேவரீரது சிறந்த, அருளை - அருளைக் குறித்து, திக்கு அனைத்தும் - திசை யனைத்தும், கை குவித்து - அஞ்சலித்து, பாடிய நான் - துதித்துக்கொண்டிருக்கு நான், கண்டாய்! - தெரிவாய்!, பதியே! - இறைவனே!, பராபரமே!—, என்க.

(வி - ரை) சிவபத்தர்மாட் டன்புடையாய்! மனஞ் சொற் செய்கைகளால் அவர் வழி நிற்பார்க்கு உலகிய லுணர்வு மாறிச் சிவானுபூதி யுணர்வே மேம்பட்டு நிகழுமாகலின், 'கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென' என்றனர். பாடுவார்கட்குப் பரமன் திருவருள் பாலிப்பது நிச்சயமாகலின், 'கைகுவித்துப் பாடியநான் கண்டாய்!' என்றனர். தேவாரம்: "வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர் இனத்தகத்தார்" என்றதனாற் காண்க. (7)

நெஞ்சத்தி னூடே நினைவாய், நினைவூடு
மஞ்சலென வாழுமென தாவித் துணைநீயே
சஞ்சல்மாற் றினை; இனிமேற் றுய்க்குபசா ரம்புகன்று
பஞ்சரிக்க நானார்? பதியே! பராபரமே!

(இ - ள்) நெஞ்சத்தின் ஊடே - அடியேன் மனத்திலுள்ளே, நினைவு ஆய் - நினைவாகி; நினைவு ஊடும் - அந்த நினைவினுள்ளும், அஞ்சல் என - பயப்படாதே யென்னவிருந்து, வாழும் - வாழுகின்ற, எனது - அடியேனது, ஆவி துணை - உயிர்த்துணையாகிய, நீயே - தேவரீரே, சஞ்சலம் - அடியேன் மனோசலனத்தை, மாற்றினை - நீக்கினாய்; இனிமேல் - இனிமேல், தாய்க்கு - தாய்போன்ற வுனக்கு, உபசாரம் - உபசார வார்த்தை, புகன்று - சொல்லி, பஞ்சரிக்க - கெஞ்ச, நான் ஆர்? - நான் யார்?, பதியே! - தலைவனே!, பராபரமே!—, என்க.

(வி - ரை) முதல்வன், அடியார்கள் மனத்திலும் நினைவிலுந் தங்கியிருந்து வேண்டிய முடித்தருளுவோ னாதலின், 'நெஞ்சத்தி னூடே நினைவாய், நினைவூடு, மஞ்சலென வாழுமென தாவித் துணைநீயே' என்றனர். தேவாரம்: "வாயானை மனத்தானை மனத்துணின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னை" என்றதனாற் காண்க. (8)

புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலு
முத்திநெறி வேண்டாத மூடனேன், ஆ! கெடுவேன்;
சித்திநெறிக் கென்கடவேன்? சீரடியார்க் கேவல்செயும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்! நீ பராபரமே!

(இ - ள்) புத்தி நெறியாக - புத்தியின் வழியாக, உன்னை - தேவரீரை, பலகாலும் - பலதரமும், போற்றி - துதித்து, முத்தி நெறி - முத்தி மார்க்கத்தை, வேண்டாத - விரும்பாத, மூடனேன் - மூடனாகிய நான், ஆ! - ஐயோ!, கெடுவேன் - கெடுவேன்; சித்தி நெறிக்கு - சித்தி மார்க்கத்திற்கு, என் கடவேன்? - என் செய்வேன்?, சீர் - சிறந்த, அடியார்க்கு - தேவரீரடியவர்கட்கு, ஏவல் செயும் - பணி செய்தற்குரிய, பத்தி நெறிக்கேனும் - பத்திமார்க்கம் உண்டாதற்கேனும், நீ - தேவரீர், முகம் பார்! - என் முகத்தினைப் பார்ப்பாயாக!, பராபரமே!—,என்க.

(வி - ரை) 'அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா, லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே!" என இவ் வாசிரியரே பின்னர்க் கூறியிருப்பதற் கேற்ப, அடியார்க்கு ஏவல் செய்கின்ற பத்தி மார்க்க மாத்திர முண்டாகுமேல் இன்பநிலைக் கேதுவாகிய சித்திநெறியும் முத்திநெறியு முண்டாதற்குத் தட்டில்லை யெனக் கூறினர். (9)

கண்டறியேன்; கேட்டறியேன்; காட்டுநினை யேயிதயங்
கொண்டறியேன்; முத்தி குறிக்குந் தரமுமுண்டோ? [ம்;
தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேனின் றொன்மையெல்லா
பண்டறிவாய் நீயே பகராய்! பராபரமே!

(இ - ள்) கண்டு அறியேன் - (பிரத்தியட்சமாகப்) பார்த்தறிந்திலேன்; கேட்டு அறியேன் - (காதினால்) கேட்டறிந்திலேன்; காட்டும்

னினையே - எல்லாவற்றையும் (ஆன்மாவிற்கு) அறிவிக்கும் தேவரீரையே, இதயம் கொண்டு - மனத்தில் வைத்து, அறியேன் - அறிந்திலேன்; முத்தி குறிக்கும் - (இத்தகைய அடியேனுக்கு) முத்தியை நினைக்கும், தரமும் - யோக்கியதையும், உண்டோ? - உளதோ?, தொண்டு அறியா - அடிமைத் திற மறியாத, பேதமையேன் - அறிவின்மையை யுடையேன், நின் - தேவரீரது, தொன்மை எல்லாம் - பழமை யனைத்தும், சொல்லேன் - சொல்லி யறியேன்; பண்டு அறிவாய் - (எனக்குள்ள இன்பத்தையெல்லாம்) முன்பே யறிவாயாகிய, நீயே - தேவரீரே, பகராய்! - சொல்லாய்!, பராபரமே!—, என்க.

(வி - ரை) முதல்வனது சர்வ மங்கள சகள சொரூபத்தினையாவது, அவனது அனந்த குணங்களையாவது, அவனது அகண்ட வியாபக சச்சிதானந்த நிஷ்களத் தன்மையினையாவது, முறையே கண்டும் கேட்டும் தியானித்து மிராதவனுக்கு முத்தி யெங்ஙனம் சித்திக்கு மென்பதாம். ஈண்டு 'தொண்டு' என்பது சரியையாதி சாதனங்கள். தொன்மையாவது - முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளா யிருக்கும் பழமை. (10)

---

# தன்னை

தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்து
மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே!
பொன்னைப், புவியை,மடப் பூவையரை, மெய்யெனவே
என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே?

(இ - ள்) தன்னை - (முதல்வனாகிய) தன்னை, அறிய - உணர, தனது - முதல்வனது, அருளால் - திருவருளினால், தான் - (முதல்வனாகிய) தான், உணர்த்தும் - உணர்த்துகின்ற, மன்னை - இறைவனை, பொருள் என - உறுதிப் பொருளென, வாழாமல் - வாழாமல்; பாழ் நெஞ்சே! - பாழ் மனமே!, பொன்னை - பொருளினையும், புவியை - நிலத்தினையும், மடப்பூவையரை - இளமை பொருந்திய மாதரையும், மெய் என - மெய்யென்று கொண்டு, என்னை - அடியேனை, கவர்ந்து - பற்றி, இழுத்திட்டு - இழுத்திட்டு, என்ன பலன் - என்ன பயனை, கண்டாய்? - அனுபவித்தாய்?, என்க.

(வி - ரை) நாடி முதலியவற்றுள் 'யான் யார்? என்னைத் தேடியு மறிகிலேன்' என்று இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சி யறிவின்கண்ணே இதனைத் தெளிவிப்பதோ ரறிவு வேறுண்டெனை ஆராய்ந்து நோக்கி, அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய் முதல்வனது திருவடி ஞானத்தால் முதல்வனை யுணர்வ ராகலின், 'தன்னை யறியத் தனதருளாற்றானுணர்த்து'

என்றனர். பொன்னாலும், புவியாலும், பூவையராலும் யாதொரு பிரயோசனமு மில்லையென்பார், 'பொன்னை......என்ன பலன் கண்டாய்?' என்றனர். பட்டினத்தார்: "மண் பெண் பொன் ஞசை மயக்கத்தி லேவிழுந்து, கண்கெட்ட மாடதுபோல் கலங்கினேன் பூரணமே!" என்றதனாற் காண்க.

## ஆக்குவை

ஆக்குவை மாயை யாவு(ம்); நொடியினி லவற்றை மாள
நீக்குவை; நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்,
போக்கொடு வரவு மின்றிப் புனிதநல் லருளா னந்தந்
தாக்கவுஞ் செய்வா யன்றோ? சச்சிதா னந்த வாழ்வே!

(இ-ள்) மாயை யாவும் - மாயைகளெல்லாவற்றையும், ஆக்குவை - உண்டாக்குவாய்; அவற்றை - அம் மாயையை, நொடியினில் - நொடிப் பொழுதினில், மாள - ஒழிய, நீக்குவை - நீக்கிடுவை; நீக்கம் இல்லா - நீங்குத லில்லாத, நினைப்பொடு - நினைப்புடன், மறப்பும் - மறப்பையும், மாற்றி- ஒழித்து; போக்கொடு வரவும் - போக்குடன் வரவும், இன்றி - இல்லாமல், புனிதம் - பரிசுத்தமாகிய, நல் - சிறந்த, அருள் - அருண்மயமாகிய, ஆனந்தம் - ஆனந்தத்தை, தாக்கவும் - அடையவும், செய்வாய் அன்றோ - செய்பவன் நீயல்லவா?, சச்சிதானந்த வாழ்வே! - சச்சிதானந்த சொரூபனே!, என்க.

(வி-ரை) 'ஆக்குவை' என்றதனால் சிருட்டியும், 'நீக்குவை' என்றதனால் சங்காரமும், 'ஆனந்தந்தாக்கவும் செய்வாய்' என்றதனால் அனுக்கிரகமும் கூறியவாற்றால், திதியும், திரோபவமும் கூட்டிக்கொள்க, ஆகப் பஞ்சகிருத்தியத்தினையும் முதல்வனே செய்பவ னென்பதாம். திருவாசகம்: "போற்றி யெல்லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம், போற்றியெல்லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள், போற்றியெல் லாவுயிர்க்கு மீறா மிணையடிகள், போற்றிமா லான்முகனுங் காணாத புண்டரீகம், போற்றியா முய்யவாக் கொண்டருளும் பொன்மலர்கள்." என்றதனாற் காண்க. (1)

## கற்புறுசிந்தை

கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோ
ரிற்புறத் தவரை நாடார்; யாங்களு மின்ப வாழ்வுந்
தற்பொறி யாக நல்குந் தலைவ! நின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய்! பூரணா னந்த வாழ்வே!

(இ - ள்) கற்பு - கற்பானது, உறு - மிருந்த, சிந்தை - மனத்தினை யுடைய, மாதர் - மாதர்கள், கணவரை - (தமது) கணவரை, அன்றி - நாடுதலன்றி, வேறு - அந்நியமாகிய, ஓர் - ஒரு, இல் புறத்தவரை - அயல் வீட்டாரை, நாடார் - நாடார்கள்; (அதுபோல) யாங்களும் - நாங்களும், இன்ப வாழ்வும் - சுகவாழ்க்கையையும், தன்பொறி ஆக - தன் செல்வமாக, நல்கும் - தந்தருளுகின்ற, தலைவ! - முதல்வனே!, நின் அலது - உன்னை யன்றி, ஓர் தெய்வம் - மற்றொரு தெய்வத்தை, பொற்பு உற - பொலிவடை தற் பொருட்டு, கருதோம் - நாடோம்; பூரண ஆனந்த வாழ்வே! - பரி பூரணானந்த இன்பவாழ்தலை யுடையவனே!, என்க.

(வி - ரை) மாதர்கள் தங்கள் கணவரை நாடாமல் தங்கள் கணவ னுக்குச் சமமமாகவாவது உயர்வாகவாவது எண்ணி அந்நியபுருடரை நாடின் கற்பிழந்து நரகத்தை யடைவர். அதுபோன்று, சைவர்கள் தம் முதல்வனாகிய சிவபெருமானை நாடாமல் சிவபெருமானுக்குச் சமத்துவமாக வாவது உயர்வாகவாவது அன்னிய தேவர்களை நாடின் துன்பத்தினை யடைவ ரென்பதாம். அதாவது முதல்வனுக்கு மேற்பட்டதேவ ரொருவரு மில்லையெனவும், சர்வ வியாபகனுயுள்ள அவனை விட்டு வேறு நாடுபவர்கள் இறப்பினும் பிறப்பினும் துன்பம் அடைவரென்பதாம். **திருமந்திரம்:** "சிவனொடொக்குந்தெய்வந் தேடினுமில்லை, யவனொடொப் பாரிங் கியா வரு மில்லை, புவனங்கடந்தன்று பொன்னொளி மின்னுந், தவளச் சடை முடித் தாமரை யானே." எனவும், "கற்றுங் கழுதைகள் போலுங் கலதி கள், சுத்த சிவனெங்குந் தோய்வற்று நிற்கின்றான், குற்றந் தெரியாதார் குணங்கொண்டு கோதாட்டார், பித்தேறி நாளும் பிறந்திறப்பாரே." எனவும் வருவனவற்றாற் காண்க. (1)

'முருந்திள நகையார்' பார முலைமுகந் தழுவிச், செவ்வாய்
விருந்தமிர் தெனவ ருந்தி, வெறியாட்டுக் காளாய், நாளு
மிருந்தலோ காய தப்பே ரினத்தனு யிருந்த வேழை
பொருந்தவுங் கதிமே லுண்டோ? பூரணா னந்த வாழ்வே!

(இ - ள்) முருந்து - மயிலிறகி னடிபோன்ற, இள நகையார் - சிறிய பல்வரிசையையுடைய மாதரது, பாரம் - பெரிய, முலை முகம் - முலை முகட்டை, தழுவி - தழுவிக்கொண்டு; செவ்வாய் - சிவந்த அதரத்தினை, விருந்து - விருந்தாகக் கொடுக்கப்பட்ட, அமிர்து என - தேவாமிர்தம் போலக் கருதி, அருந்தி - பானம் பண்ணி, வெறி ஆட்டுக்கு - வெறி யாட லுக்கு, ஆள் ஆய் - ஆளாகி, நாளும் இருந்த - நாடோறு மிருந்த, லோகாய தப் பேர் - உலோகாயதம் என்னும் பேர் பூண்ட, இனத்தனாய் இருந்த - கூட்டத்தனா யிருந்த, ஏழை - அறிவிலியாகிய நான், மேல் கதி பொருந்த வும் - இனி யொருகால் நற்கதி யடையவும், உண்டோ? - விரகுண்டோ?, பூரணானந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) லோகாயதமாவது :—" காண்டலளவை யொன்றே பிரமாணம், காணப்படும் நிலம், நீர், தீ, வளி என நான்கே தத்துவங்கள். இவை நித்தப் பொருள்கள்; இவற்றின் கூட்டமே உடம்பு. பாகடையும் சுண்ணும்புங் கூடிய வழிச் செவ்வண்ணம் பிறக்குமாறுபோல, இவற்றின் கூட்டுறவினுல் ஒருணர்வு உண்டாம்; அவ்வுணர்வு உடம்பு வளர வளரும் தேயத் தேயும். ஆகலின், உடம்பிற்கு வேறே உயிரென்பதும் பொய்; உடம்பிற்கு இன்ப துன்பங்கள் இயல்பாயுள்ளன; இவற்றிற்குக் காரணம் வினையென்பது பொய். மயிலைச் சித்திரித்தாரையும், குயிலைக் கூவுவித்தாரையுங் காணுமையிற் கடவு ளுண்டென்பதும் பொய்; இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரோடு மணந்து உண்டுடுத்து வாழ்வதே துறக்க வின்பம்; அது பொருது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களால் பிறவாற்ருல் வருந்துவதே நிரயத்துன்பம். வேறே துறக்க நிரய முளதென்பதும் பொய். நான்கு பூதக் கூட்டுறவிற் பிராணவாயு ஒன்று நீங்கில் உணர்விழந்து உடம்பு நாசமாம்; அதுவே வீடுபேறு; வேறே வீடுபே றுண்டென்பதும் பொய். இவ் வுண்மை யுணராத மடவோர் மறுமை யுண்டெனக் கொண்டு, தவங்கள் பட்டினி முதலியவற்ருல் வருந்துவர். கற்பு முதலிய சங்கேத நூல்கள் மதுகையின்றி மதியுடையோராற் செய்யப்பட்டன. தேவதலம், தண்ணீர்ப் பந்தல், கூவல், பொய்கை, சோலைமுதலியன செய்தலை உயர்த்துக் கூறும் நூல்கள் வழிச்செல்வோராற் கூறப்பட்டன. ஆதலான், இவற்றைக் கைவிட்டு, உழவு - பசுக்காவல் - வாணிபம் - செங்கோன்முறைமை முதலியனவாக ஆன்ருேர் காட்டிய நெறியினின்று இம்மை யின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப்பயன் என்பதாம்." (இது திராவிடமகாபாடியத்திற் கண்டது.) (2)

தீதெலா மொன்ரும் வன்மை செறிந்திருட் படலம் போர்த்த
பாதகச் சிந்தை பெற்ற பதகனுன் பாத நீழ
லாதர வடைய வுள்ளன் பருள்கிலை யாயின், மற்றியார்
போதனை செய்ய வல்லார்? பூரணு னந்த வாழ்வே!

(இ - ள்) தீது எலாம் - தீமைகள் எல்லாம், ஒன்று ஆம் வன்மை - ஒன்ருகக் கூடியிருந்தாற் போன்று, செறிந்து - பொருந்தி, இருள் படலம் - (அஞ்ஞானமாகிய) இருட் போர்வையை, போர்த்த - மூடப்பெற்ற, பாதக சிந்தை பெற்ற - பாபச் சிந்தனையுள்ள, பதகன் - பாபியாகிய நான், உன் பாத நீழல் - உன் திருவடி நீழலை, ஆதரவு அடைய - ஆதாரமாகவடைய, உள் அன்பு - உள்ளன்பை, அருள்கிலையாயின் - தந்தருளாயானுல், போதனை செய்ய வல்லார் - (என் பாவந் தொலையப்) போதிக்க வல்லவர்கள், மற்று யார்? - வேறு யாவர்?, பூரணுனந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) தேவாரம்: "இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி யிடர் பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத், தெருளாத சிந்தைதனைத் தெருட்டித்

தன்போற் சிவலோக நெறியானை யறியச் சிந்தை, தந்த வருளானை" எனப் பெரியார் கூறியிருத்தலுக் கேற்பப் பாவ சிந்தனை யுடையனேனும் அப் பாவத்தினை யொழித்து உன்னிடத்து அன்பு விளையச் செய்பாயாயின் எங்ஙன முய்வேன் என்பதாம். (3)

நாதனை, நாதா தீத நண்பனை, நடுவாய் நின்ற
நீதனைக் கலந்து நிற்க, நெஞ்சமே! நீவா வென்றால்
வாதனை பெருக்கி யென்னை வசஞ்செய்து மனந்துன் மார்க்க
போதனை செய்த னன்றோ? பூரணா னந்த வாழ்வே!

(இ - ள்) நாதனை - இறைவனை; நாத அதீத - நாத தத்துவங்களுக்கு மெட்டாத, நண்பனை - துணைவனை; நடுவாய் நின்ற - நடுநிலையி லிருந்த, நீதனை - நீதிமானை, கலந்து நிற்க - கூடி நிற்க, நெஞ்சமே! - மனமே!, நீ வா என்றால் - நீ வருக என்றால், மனம் - என் மனமானது, வாதனை பெருக்கி - உலக வாதனையைப் பெருகச்செய்து, என்னை - அடியேனை, வசம் செய்து - வசீகரித்து, துன்மார்க்க போதனை செய்தல் - தீமையான வுபதேசத்தைச் செய்தல், நன்றோ? - நன்மையோ?, பூரணானந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) ஒருவன் மனத்தின் வழி தன்னை நடத்தின் இருவினைக் குள்ளாகவும், தன் வழி மனத்தை நடத்தின் இருவினையொப்புக் குள்ளாக வும் ஆவன். ஆகலின், என் மனம் நின்னை யடைய என் வழி வராது என்னை யிழுத்துத் தீ நெறியைச் சேரச் செய்தல் அழகோ வென்றனர். பிரபுலிங்கலீலை: "கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை, எடுக்க வல்லது மிம்மன மென்றதை, அடக்க வல்ல வினைய பவக்கடல் கடக்க வல்லவ னுவன் கடிதரோ." என்றதனாற் காண்க. (4)

எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணி,என் னறிவை யெல்லாம் பாழாக்கி, எனைப்பா ழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று, சிறியனை யுய்யக் கொண்டாற்
புண்ணிய நினக்கே யன்றோ? பூரணா னந்த வாழ்வே!

(இ - ள்) எண்ணிய - நான் நினைத்த, எண்ணம் எல்லாம் - நினை வனைத்தையும், இறப்பு மேல் - மரணத்தினுக்கு மேல் வருவதாகிய, பிறப் புக்கு - பிறப்பினுக்கு, ஆசை பண்ணி - விருப்பமாகச் செய்து; என் - அடி யேனது, அறிவை எல்லாம் - அறிவு முழுதினையும், பாழாக்கி - பாழ்படுத்தி; என்னை - என்னையும், பாழ் ஆக்கும் - பாழாக்குகின்ற, திண்ணிய வினையை - வல்வினையை, கொன்று - கெடுத்து; சிறியனை - சிறியேனை, உய்யக் கொண் டால் - உய்விக்க ஏற்றுக்கொண்டால், புண்ணியம் - அப் புண்ணியம், நினக்கே அன்றோ? - உனக்கே யல்லவா?, பூரணானந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) எல்லா வகையான கேட்டிற்கும் வினையே காரணமாக விருத்தலின் அவ் வினையை யொழித்தாலல்லது முதல்வன் மனத்தின் கண்ணே விளங்கா னென்பார், 'வினையைக் கொன்று, சிறியனை யுய்யக் கொண்டாற், புண்ணிய நினக்கே யன்றோ?' என்றனர். திருமந்திரம்: "வினைகடிந்தா ருள்ளத் துள்ளொளி மேவித், தனையடைந் தார்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்ப, னெனை யடிமைகொண்ட வேந்திழை யீசன், கணவனைக் காண வனுதியு மாமே." என்றதனாற் காண்க. (5)

பத்திநீ; பத்திக் கான பலனுநீ; பலவாச் சொல்லுஞ்
சித்திநீ; சித்தர் சித்தித் திறமுநீ; திறமார் மோன
முத்திநீ; முத்திக் கான முதலுநீ; முதன்மை யான
புத்திநீ; எனக்கொன் றுண்டோ? பூரண னந்த வாழ்வே!

(இ - ள்) பத்தி நீ - பத்திரூபமா யிருப்பவனு நீயே; பத்திக்கு ஆன- பத்தியினுக்கு ஆன, பலனும் நீ - பிரயோஜனரூபனு யிருப்பவனு நீயே; பல ஆ சொல்லும் - பலவகையாய்ச் சொல்லப்படுகின்ற, சித்தி நீ - சித்தர்களு நீயே; சித்தர் - சித்தருடைய, சித்தி திறமும் - சித்தி வகைகளும், நீ - நீயே; திறம் ஆர் - உறுதியாகிய, மோன முத்தி நீ - மௌன முத்தியு நீயே; முத்திக்கு ஆன - முத்தியை யுதவுதற் குரிய, முதலும் நீ - முதல்வனு நீயே; முதன்மையான - முதன்மையாகிய, புத்தி நீ - அறிவு நீயே; எனக்கு ஒன்று உண்டோ? - எனக்கென ஒருபொரு ளுளதோ?, பூரணனந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) அறிவானும், அறிவிப்பானும், அறிவா யறிகின்றவனும், அறிகின்ற மெய்ப்பொருளும் முதல்வனே யாகி ஆன்மாவினுக்கு உப கரித்து நிற்றலின், அவ் வான்ம சம்பந்தமாக விளையும் பத்திமுதலிய அனைத்தும் முதல்வனே யென்பார், 'எனக்கொன் றுண்டோ?' என்றனர். அற்புதத் திருவந்தாதி: "அறிவானுந் தானே யறிவிப்பான்றானே, "யறிவா வறிகின்றான் றானே - யறிகின்ற, மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாச, மப்பொருளுந் தானே யவன்." என்றதனாற் காண்க. (6)

தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடைய னாகிப் பிதற்றுதல் செய்த னன்றோ?
'தீயிடை மெழுகாய்' நொந்தேன்; தெளிவிலேன்; வீணே காலம்
போயின தாற்று கில்லேன்; பூரண னந்த வாழ்வே!

(இ - ள்) தாயினும் - தாயைக்காட்டிலும், இனிய - இனியனான, நின்னை - தேவரீரை, சரண் என - அடைக்கலமாக, அடைந்த - அடைந்த, நாயேன் - நாயினேன், பேயினும் - பேயைக்காட்டிலும், கடையன் ஆகி - இழிந்தவனாகி, பிதற்றுதல் செய்தல் - பிதற்றுவது, நன்றோ? - நன்மையோ?, தீயிடை - செந்தழலில், மெழுகு ஆய் - மெழுகுபோல, நொந்தேன் - உருகி

னேன்; தெளிவிலேன் - தெளிவிலாதேன்; காலம் - காலம், வீணே போயினது - பயனற் றொழிந்தது; ஆற்றுகில்லேன் - தரிக்ககில்லேன்; பூரணானந்த வாழ்வே!—, என்க.

(வி - ரை) தாயானவள் தன் புத்திரனுக்கு அவ்வவ் வமயங்களில் உடலில் உண்டாகும் நோயைப் போக்கி உடலைத் தேற்றுவள். முதல்வனோ "பிணியுடைய வடியாரைத் தீர்ப்பார்போலும்" என்றதற் கேற்ப, உடனோயை யொழிப்பதுடன், "பண்டை வினையறுப்பார்" என்றபடி ஆன்மாவினுக்குள்ள வினை நோயினையும் நீக்குவா னாகலின், 'தாயினு மினியன்' என்றனர். தேவாரம்: "தாயினு நல்ல சங்கரனுக் கன்பர், ஆயவுள் ளத்தமு தருந்தப் பெற்றோர், பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய, மாயன் மாயத்துட் பட்ட மனத்தரே." என்றதனாற் காண்க. தேவாரம்: "பேசாத நாளெல்லாம் பிறவாநாளே" என்றதற் கேற்ப, 'வீணே காலம், போயின தாற்று கில்லேன்' என்றனர். (7)

---

## மலைவளர்காதலி




பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பதியுண்டு; நிதியுண்டு; புத்திரர்கண் மித்திரர்கள்
 பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு; தவிசுண்டு; திட்டாந்த மாகயம
 படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு; ஞானமாங் கதிருண்டு; சதிருண்டு;
 காயசித் திகளுமுண்டு;
கறையுண்ட கண்டர்பா லம்மை! நின் றாளிற்
 கருத்தொன் றுமுண்டாகுமேல்,
'நதியுண்ட கடலெனச்' சமயத்தை யுண்டபர
 ஞானவா னந்தவொளியே!
நாதாந்த ரூபமே! வேதாந்த மோனமே!
 நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே!
 மதுரூத னன்றங்கையே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
 வளர்காத லிப்பெண்ணுமையே!

(இ - ள்) நதி - பற்பல நதிகளையும், உண்ட - தன்னுள் அடக்கிக் கொண்ட, கடல் என - சமுத்திரமென்ன, சமயத்தை - பல சமயங்களையும், உண்ட - தன்னிடம் வைத்த, பரம - மேலான, ஞான - ஞான சொரூபமாகிய, ஆனந்த ஒளியே! - ஆனந்த சுடரே!, நாதாந்த ரூபமே! - நாத

தத்துவத்தினைக் கடந்த உருவே!, வேதாந்த மோனமே! - வேத முடியில் விளங்கும் மௌன நிலையே!, நான் எனும் - நான் என்று சொல்லப்படுகிற, அகந்தை தீர்த்து - அகங்காரத்தை யொழித்து, என் - அடியேனது, மதி - அறிவை, உண்ட - விழுங்கிய, மதி ஆன - அறிவுருவமாகிய, மதிவதன - பூர்ண சந்திரனுக்கு நிகரான முகத்தினை வாய்ந்த, வல்லியே! - கொடி போல்வாளே!, மதுசூதனன் - நாராணனுக்கு, தங்கையே! - தங்கையே!, வரை ராஜனுக்கு - மலையரையனுக்கு, இரு கண்மணியாய் - இரண்டு கண் மணிபோல, உதித்த - அவதாரஞ் செய்த, மலை வளர் - இமயமலையினிடம் வளர்ந்த, காதலி பெண் - (தாய் தந்தையர்) விரும்பத்தக்க புத்திரியாகிய, உமையே! - இறைவியே!, கறை - விஷம், உண்ட - உட்கொண்ட, கண் டர்பால் - கண்டரிடத்து அமர்ந்த, அம்மை! - அன்னையே!, நின் தாளில் - உன் திருவடியினிடத்தில், கருத்து ஒன்றும் - நினைப்பொன்றும், உண்டாகு மேல் - உளதாயின், பதி உண்டு - இடமுண்டு; நிதி உண்டு - செல்வமுண்டு; புத்திரர்கள் - புதல்வர்களும், மித்திரர்கள் - நண்பர்களும், பக்கம் - உற வினரும், உண்டு - உண்டு; எக்காலமும் - எப்பொழுதும், பவிசு உண்டு - திறமை உண்டு; தவிசு உண்டு - நற்சயன முண்டு; திட்டாந்தமாக - திருட் டாந்தமாக, யமபடர் - எமதூதர், எனும் - என்கிற, திமிரம் - இருள், அணுகா - அணுகாத, கதி உண்டு - மோட்ச முண்டு; ஞானம் ஆம் - ஞான மாகிய, கதிர் உண்டு - சூரியனுண்டு; சதிர் உண்டு - திறமை உண்டு; காய சித்திகளும் உண்டு - தேகத்தை நீடித்த காலம் வைத்துக்கொண் டிருக்கும் படியான தன்மையு முண்டு, என்க.

(வி - ரை) 'பதியுண்டு' எனப் பொதுப்படக் கூறினமையின், மண் ணுலகத்தின்கண்ணே வேண்டிய இடமே யல்லாமல், விண்ணுலகத்தின் கண்ணே வேண்டிய இடம் உண்டா மெனவும்; 'நிதியுண்டு' என்றதனால் மண்ணுலகில் வேண்டிய செல்வமே யல்லாமல் விண்ணுலகினும் சங்கநிதி பதுமநிதி உண்டா மெனவும்; 'புத்திரர்கள்' உண்டெனவே, பழி பிறங் காப் பண்புடை மக்களும்; 'மித்திரர்கள்' உண்டெனவே, உடுக்கை இழந் தவன் கைபோல வாங்கே யிடுக்கண் களைபவராய நட்பினரும்; 'பக்க முண்டு' எனவே, சுற்றத்தாரேயன்றி யாவரும் தன்பால் பட்சமா யிருப்பா ரெனவும்; 'பவிசுண்டு' எனவே, திறமையே யன்றி நல்வாழ்வு முண் டெனவும்; 'தவிசுண்டு' எனவே சுக சயனமேயன்றி அரச சிம்மாசனமுங் கிடைக்கு மெனவும்; 'யமபட ரணுகாக் கதியுண்டு' என்றதனால், யமபட ரணுகும் பதமுத்திகளைக் கடந்த திருக்கைலையே கிடைக்கு மெனவும்; 'ஞானக் கதிருண்டு' எனலால், ஞானவாளுகப் பிரகாசிப்பதுடன் பயிர்க் கதிரு முண்டெனவும்; 'சதிருண்டு' எனவே திறமையடைவதுடன் தன் முன்னே சபை கூடிச் செய்யும் நடன முண்டெனவும்; 'காயசித்தி' எனவே, நீடித்த காலமுடன் சகல சித்திகளு முண்டா மென்பதாம். பற்பல நதிகளும் வந்தடைதற்கு இடங் கொடுத்திருப்பதாய கடலென்ன,

பல் சமயங்கட்கும் இடமாயுள்ள சித்தாந்த சமயத்தின்கண்ணே விளங்கும் ஞானவொளி யாகலின், 'ஆனந்த ஒளியே!' எனவும்; அபரஞான மனைத்திற்கும் காரணமாயுள்ள நாத தத்துவமானது சத்தியாகிய தான் குடிலையை யதிட்டித்ததனாலேயே விளையுமாகலின் 'நாதாந்த ரூபமே!' எனவும்; உபநிடதங்களினால் கொண்டாடப்படுகிற பொருளாகலின் 'வேதாந்த மோனமே!' எனவும்; அறிவு ரூபமாக என்றும் விளங்கிக் கொண்டிருத்தலின் 'மதியான வல்லியே!' எனவும் கூறினர். திருமால், மது வென்பவனைக் கொன்றவ ராகலின், 'மதுசூதனன்' என்றனர். தேவைநகரி லெழுந்தருளி யிருக்கின்ற தேவியார் திருப்பெயர் மலைவளர் காதலி. (1)

தெட்டிலே வலியமட மாதர், வாய் வெட்டிலே,
சிற்றிடையிலே, நடையிலே,
'சேலொத்த விழி'யிலே, 'பாலொத்த மொழி'யிலே,
'சிறுபிறை நுதற்கீற்'றிலே,
பொட்டிலே, அவர்கட்டு பட்டிலே, புனைகந்த
பொடியிலே, அடியிலே,மேற்
பூரித்த முலையிலே, நிற்கின்ற நிலையிலே,
புந்திதனை நுழையவிட்டு,
நெட்டிலே யலையாம(ல்); அறிவிலே பொறையிலே,
நின்னடியர் கூட்டத்திலே,
நிலைபெற்ற வன்பிலே, மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே, உன்இருதாண்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ?
வளமருவு தேவையரசே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!

(இ-ள்) வளம் மருவு - வளம் பொருந்திய, தேவை அரசே! - தேவை நகர்க்கரசியே!, வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப் பெண் உமையே!—, வலிய மட மாதர் - வன்மையாகிய மடப்பத்தையுடைய மாதரது, தெட்டிலே - வஞ்சகத்திலும்; வாய் வெட்டிலே - வாயின் வெட்டு வார்த்தையிலும்; சிற்றிடையிலே - சிறிய இடையிலும்; நடையிலே - நடையிலும்; சேல் ஒத்த - சேல்மீன் போன்ற, விழியிலே - கண்களிலும்; பால் ஒத்த - பால் போன்ற, மொழியிலே - இன்சொலிலும்; சிறு பிறை - சிறு பிறை போன்ற, நுதல் கீற்றிலே - நெற்றி வகிரிலும்; பொட்டிலே - அந் நெற்றியிலிட்ட பொட்டிலும்; அவர் கட்டு பட்டிலே - அவரணிந்திருக்கும் பட்டாடையிலும்; புனை கந்த பொடியிலே - பூசப்பட்ட பரிமளப் பொடியிலும்; அடியிலே - பாதங்களிலும்; மேல் - மேலிடத்து, பூரித்த - இறுமாந்த, முலையிலே - முலைகளிலும்;

நிற்கின்ற நிலையிலே - நிற்கின்ற நிலையிலும், புந்திதனை நுழைய விட்டு - புத்தியைப் புகவிட்டு, நெட்டிலே - மனம்போன போக்கிலே, அலையாமல் - உழலாமல்; அறிவிலே - ஞானமார்க்கத்திலும்; பொறையிலே - பொறுமையிலும்; நின் அடியர் கூட்டத்திலே - உன் தொண்டர் குழாத்திலும்; நிலைபெற்ற அன்பிலே - நிலைபெற்ற அன்பிலும்; மலைவு அற்ற - மயக்க மற்ற, மெய்ஞ்ஞான ஞேயத்திலே - உண்மையான நேயத்திலும்; உன் இருதாள் மட்டிலே - உன் இரண்டு திருவடியி னளவிலும், மனது செல - அடியேன் மனஞ் செல்லும்படி, நினது அருளும் - உன்னருளையும், அருள்வையோ? - தந்தருள்வையோ?, என்க.

(வி - ரை) காமக்கிழத்தியர்களின் அங்க முதலியவற்றில் மோகம் வைத்தலினால் அனேகமான கெடுதல் விளையுமென்பார், அவர்கள் நெட்டிலே அலையாதபடி 'நினதருளு மருள்வையோ?' என்றனர். பட்டினத்தார்: "காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே, மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட, தூதென்றெண் ணமற் சுகமென்று நாடிய் துற்புத்தியை, யேதென் றெடுத்துரைப் பேனிறைவாகச்சி யேகம்பனே." என்றதனாற் காண்க. ஆகலின், அத்தகைய மாயா மோகத்தினை விட்டு அடியார் கூட்ட முதலியவற்றை நோக்கவரின் பயனுளதாகு மாகலின், 'மனதுசெல நினதருளு மருள்வையோ?' என்றனர். பட்டினத்தார்: "அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப், படிமீதில் வேறு பயனுளதோ" என்றதனாற் காண்க, தெட்டென்பது காமுகரை மயக்கும் எத்து. வலிய மடமாதர் என்பதற்கு வலிய வந்தணையும் மடமாத ரெனினும் பொருந்தும். என்னை? அத்தகையரால் விளையு மின்பத்திற்கு இடையூறு கோரிடல் இல்லையாகலின். திருப்புகழ்: "புதைய லெடுத்தத னம்போலே யிருமுலையாலே, வலியவணைந்த சுகம்போலே யொரு" என்றதனாற் காண்க. வெட்டென்பது அன்பின் மிகுதியால் கடுமைக்குறிப்பாகப் பேசும் சொல். சிற்றிடையென்பது இல்லையெனச் சாதித்தற் கேதுவாகவுள்ள சிறுமையி னிறுதியெல்லை யுடையது, திருக்கோவையார்: "பொட்டணியானுதல் போயிறும் பொய்போ லிடையென." என்றதனாற் காண்க. நடையானது அன்னப் பேட்டி னடை. ஷை "மருவளர்மாலையோர் வல்லியி னொல்கியன நடை" என்றதனாற் காண்க. 'சேலொத்த விழி' என்றது கயல்போல மிளிருங் கண். திருப்புகழ்: "இலகி யிருகுழை கிழிகயல் விழியினும்" என்றதனாற் காண்க. 'பாலொத்த மொழி' ஆவது, பாலின் சுவைபோலும் சுவை வாய்ந்த மொழி, திருவாசகம்: "பாலூறு தேன்வாய்ப்படிறீ கடைதிற வாய்" என்றதனாற் காண்க. 'சிறுபிறை நுதல்' ஆவது, பூர்வபட்சத்து அட்டமிச் சந்திரன் போன்றது. பொட்டாவது ஆடவரை வசிகரித்தற் பொருட்டு நெற்றியிலிடுந் திலகம். விறலிவிடுதூது: "சிக்காப்புள் - ஒட்டுக்குள் ளாவதுபோ லுள்ளபணக் காரர்களுன், பொட்டுக்குள் ளாக

வென்று பொட்டிட்டாள்" என்றதனுற் காண்க. 'பூரித்த முலை' என்றது, காமுகர் கண்களைக் கவர்வதாய்க் கச்சினு ளடங்காது விம்மிப் புடைத்திறு மாந்துற் றிருக்கு முலை. திருக்கோவையார்: "புலியூரம் பலவர்க்குற்ற பத்தியர்போலப் பணைத் திறுமாந்த பயோதரத்து" எனவும்; காளிமுத்து: "வனக்கொந் தளவஞ்சி பூஞ்சோலைத் தஞ்சி வளருமிரு, தனக்குன்ற செய்யுந் தொழில்சொல்ல வோதமி யேனைக்கண்டால், கனக்கும் புளகிக் கும் பூரிக்கும் பாரிக்குங் கண்கறுக்குஞ், சினக்குந் தனக்கு மெனக்கு முண் டாக்குந் தினஞ்சண்டையே." எனவும்; அரிச்சந்திர புராணம்: "இருப்பை விட் டயனுர் நெடிதுநாட் டவஞ்செய் திருகையுஞ் சிந்தையும் வருந்திச், செருப்பயின் றிறந்த மதனனைச் சூட்டத் திருமுடி வேண்டுமென் றியானை, மருப்பையும் கும்ப ஸ்தலத்தையும் படைத்துத் தெளிந்தபின் படைத்த புளகித பூரண முலையாள்" எனவும்; கல்லாடம்: "கல்லாக் கயவர்க் கருநூற் கிளைமறை சொல்லினர் தோமெனத் துணைமுலை பெருத்தன" எனவும் வருவனவற்றுற் காண்க. (2)

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போதபூ ரணவெளிக்கு
ளேதுமற நில்லென் றுபாயமா வைத்துவினை
வெல்லாஞ்செய் வல்லசித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே! நின்னையே
யெளியேன் மறந்துய்வனே?
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கு(ம்),
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்,
வீறுவா தம்புகலுவாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந்துக் கமிர்தமே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!

(இ-ள்) வேதம் முதலான - வேத முதலாகிய, நல் ஆகம தன்மையை - சிறந்த ஆகமத் தன்மையினை, விளக்கும் - விளக்கிக் காட்டுகின்ற, உட்கண் இல்லார்க்கும் - அகக்கண் இல்லாதார்க்கும்; மிக்க - மேலான, நின் மகிமையை - உன் பெருமையை, கேளாத - கேட்காத, செவிடர்க்கும் - செவிடர்கட்கும்; வீறு வாதம் - விஞ்சிய வாதம், புகலும் - பேசும், வாய் - வாயையுடைய, வாத நோயாளர்க்கும் - வாத நோயாளிகட்கும், எட்டாத - எட்டப்படாத, முக்கண் உடை - மூன்று கண்களையுடைய, மா மருந்துக்கு - பெரிய அமிர்தத்துக்கு, அமிர்தமே! - அமிர்தமா யிருப்

பவளே!, வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப்பெண் உமையே!—, பூத முதலாக - பிருதிவியாதி பூதமுதலாக, நாத பரியந்தமும் - நாததத்துவம் வரைக்கும், பொய் என்று - பொய்யாம் என்று, என்னை காட்டி - என்னை யறிவுறுத்தி, என் போதத்தின் நடுவாகி - என்னறிவின் இடையாகி, அடி ஈறும் இல்லாத - ஆதியந்தங்க ளில்லாத, போத பூரண வெளிக்குள் - ஞான பூரணமாகிய சிதாகாயத்தில், ஏதும் அற நில் என்று - ஒன்றுமற நிற்பாயென்று, உபாயமா வைத்து - உபாயமாக வைத்து; நினைவு எல்லாம் - எண்ணங்களை யெல்லாம், செய் வல்ல - பலிக்கச் செய்யவல்ல, சித்தாம் - ஞானமாகிய, இன்ப உருவை தந்த - சுக வடிவைத் தந்தருளிய, அன்னையே! - தாயே! நின்னையே - உன்னையே, எளியேன் - ஏழையேன், மறந்து உய்வனோ? - மறந்துய்வேனோ?, என்க.

(வி - ரை) பிருதிவி தத்துவமுதல் நாததத்துவம் வரையில் உள்ள வனைத்து நாமல்ல வெனவும், நமக்கு அன்னியமெனவும், அவை யனைத்தும் பொய்யெனவும், அவைக் கன்னியமாக நானுண் டெனவும் காட்டினு யென்பார் 'பூதமுத லாகவே நாதபரி யந்தமும் பொய்யென் றெனைக் காட்டி' என்றனர். சிவாகமக் கச்சிமாலை: "மண்ணுதி நாதவரையுரு நாமன் றெனமதியா, நண்ணு வறிவுரு நாமெனக் கண்டுமெய்ஞ் ஞானத்தினு, லுண்ணுடி யொன்றிரண் டென்னு துறங்குவ தன்றியுன்னைக், கண்ணு லறியப் படுமோ கச்சியே கம்பனே." என்றதனுற் காண்க. அறிவினை யுணர்ந்து அறிவின் மயமாகி நின்ற நிலையிலேயே பேரின்பசுகம் விளையுமாகலின், அங்ஙனம் செய்தா யென்பார், 'போதத்தி னடு......இன்பவுரு வைத் தந்த வன்னையே!' என்றனர். ஞானசாகர வெண்பா: "தன்னையறியத் தனக்கறிவாய் நின்றறிவு, தன்னை யறிந்து தனித் தடங்கித் - தன்னறிவு, மன்னறிவே யாகி வலத்தழிய நின்றுவிடி, லந்நிலையே சுத்தநிலையாம்." என்றதனுற் காண்க, 'நல்லாகமம்' என்றதனுல் ஆகமம் சிறப்பு நூலெனவும், வேதம் பொதுநூ லெனவுமாம். 'உட்கண்' என்பது ஞானக்கண். ஞானக்கண் ணில்லார்க்கு எட்டாத முக்கண்ணுடைய மாமருந்து என்றதனுல், ஊனக் கண்ணுகிய பசு அறிவானும், அப்பசுவைப் பந்திக்கும் பாச அறிவானும் காணப்படாதவ னெனவும், ஞானக் கண்ணுகிய திருவடி ஞானத்தாலே காணத் தக்கவ னெனவுமாம். சிவஞானபோதம்: "ஊனக் கண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்றதனுற் காண்க. 'ஞானக்கண்' என்பதற்குத் 'திருவடி ஞானம்' என்பது ஆசிரியர் சிவஞான யோகிகள் கருத்து. (3)

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளுடைந்து,
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனுந்

துடியிட்ட வெவ்வினையை யேவினுன் ; பாவிநான்
றொடரிட்ட தொழில்களெல்லாந்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வதென்றோ ?
வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
லரிவையோர் பரவைவாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே !
வளமருவு தேவையரசே !
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே !

(இ - ள்) அடியிட்ட - பழமையாகிய, செந்தமிழின் - செவ்விய தமிழின், அருமையிட்டு - அருமையைக் குறித்து, ஆரூரில் - திருவாரூரின் கண்ணே, அரிவை - அரிவையாகிய, ஓர் - ஒப்பற்ற, பரவை - பரவை யென்னும் அருமைத் திருநாம முடையாரது, வாயில் - தலைவாயிலாகிய, அம்மட்டும் - அத் தலைவாயில் வரைக்கும், அடியிட்டு - திருவடிகளை வைத்து, நடை நடந்தருள் - நடை நடந்தருளிய, அடிகள் - இறைவரது, அடி ஈது - மூலமாகிய திருவடி யிது, முடி ஈது - திருமுடியாகிய ஈது இது, என - என்று, வடியிட்ட - தெளிவித்த, மறை - வேதங்களை, பேசு - பேசுகின்ற, பச்சிளம்கிள்ளையே ! - பச்சிளங்கிளியே !, வளம் மருவு தேவை அரசே வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப் பெண் உமையே !—, மிடியிட்ட - வறுமையாகிய, வாழ்க்கையால் - வாழ்க்கையினுல், உப்பு இட்ட - உப்பு வைத்த, கலம் எனவும் - மட்கலம் போலவும், மெய் எலாம் - சரீர மனைத்தும், உள் உடைந்து - உள்ளுடைந்து ; வீறிட்ட - மிகுந்த, செல்வர் - செல்வரது, தலை வாசல் - தலைவாயிலே, வாசமாய் - வாசமாகக் கொண்டு, வேதனைகள் உற - துன்பங்களை யடைய, வேதனும் - பிரமனும், துடியிட்ட - பதைத்தற்குரிய, வெம் வினையை - வெவ் வினைகளை, ஏவினுன் - ஏவிவிட்டான் ; பாவி நான் - பாவியாகிய நான், தொடரிட்ட - தொடங்கின, தொழில்கள் எல்லாம் - தொழில்கள் அனைத்தும், துண்டிட்ட - துண்டிக்கப்பட்ட, சாண் கும்பியின் பொருட்டாயது - சாண்வயிற்றி னளவாயினவே ; (இது கடந்து) உன் தொண்டர் - உன்னடியார், பணி - பணிகளை, செய்வது என்றோ ? - செய்வதெந்தக் காலமோ ?, என்க.

(வி - ரை) உப்பிட்ட பாண்டமானது மேலுக்கு நன்கு தோன்றினும் உள்ளே யுளுத்துப் பொடியா யுதிர நிற்பதுபோல, உடலும் மேலுக்கு நன்கு தோன்றினும் உள்ளே துக்க முதலியவற்றால் சிதைந்திருக்கு மென்பார், 'உப்பிட்ட கலம்' என்றனர். பட்டினத்தார் : "ஊறை யிறைக்கின்ற

உப்பிருந்த பாண்டத்தை" என்றதனுற் காண்க. ஷை "செல்வரைப் பின் சென்று சங்கடம் பேசித் தினந்தினமும், பல்வினைக் காட்டிப் பரிதவியாமல்" என்றதற் கேற்ப, 'வீறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய் வேதனைகளுற' என்றனர். உலகி லொவ்வொருவரும் செய்யு முயற்சி யனைத்தும் வயிற்றின்பொருட் டாகலின், 'தொழில்களெல்லாம், துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயது' என்றனர். பட்டினத்தார்: "சிந்தைகெட்டுச், சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே." என்றனர். 'செந்தமிழி னருமையிட்டு' என்பது 'சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாட்டின் அருமையினைக் குறித்து' என்றபடி. 'பரவை வாயில், அம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிகள்' என்றது, பரவையாருடைய ஊடலைத் தவிர்க்கப் பேயும் உறங்கும் அர்த்த ராத்திரியில் ஆளுடைய நம்பியின் பொருட்டுத் தூதுசென்ற திருவாரூர்த் தியாகராஜப் பெருமானை. திருவிளையாடற் புராணம்: "பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பாதி, யிரவினிற் றூதுகொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்." என்றதனுற் காண்க. (4)

பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி,
புராந்தகி, த்ரியம்பகி, எழிற்
புங்கவி, விளங்குசிவ சங்கரி, சகஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கு
நாரணி, மனாதீத நாயகி, குணாதீத
நாதாந்த சத்தி,என்றுன்
னாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்கவசமோ?
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடியீன்ற
வன்னையே! பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூபமயிலே!
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவையரசே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!

(இ-ள்) ஆர் - ஆத்திமாலை, அணி - அணிந்த, சடை - சடையினையுடைய, கடவுள் - சிவபெருமான், ஆரணி - வேத முதல்வி, என புகழ - என்று துதிக்க, அகிலாண்டகோடி - அண்டகோடிகள் எல்லாவற்றையும், ஈன்ற - பெற்றருளிய, அன்னையே! - தாயே!, பின்னையும் - (பெற்றருளிய) பின்னும், கன்னி என - கன்னிகையென, மறை பேசும் - வேதங்கள் துதிக்கின்ற, ஆனந்தரூப மயிலே! - சுகரூபமாகிய மயில்போல்வாளே!, வார் அணியும் - கச்சை யலங்கரிக்கின்ற, இரு கொங்கை -

இரண்டு தனங்களையுடைய, மாதர் - மாதர்கள், மகிழ் - மகிழும்படியான, கங்கை - கங்கையினால், புகழ் - புகழப்பெற்ற, வளம் மருவு தேவை அரசே! வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலைவளர் காதலிப் பெண் உமையே!—, பூரணி - பூரணி யென்றும்; புராதனி - புராதனி யென்றும்; சுமங்கலை - சுமங்கலை யென்றும்; சுதந்தரி-சுதந்தரி யென்றும்; புராந்தகி - புராந்தகி யென்றும்; த்ரியம்பகி - திரியம்பகி யென்றும்; எழில் - அழகு வாய்ந்த, புங்கவி - புங்கவி யென்றும்; விளங்கும் - விளங்குகின்ற, சிவசங்கரி - சிவசங்கரி யென்றும்; சகஸ்ர தள - ஆயிரந் தளங்களுள்ள; புட்ப மிசை - புட்பத்தின்மீது, வீற்றிருக்கும் - எழுந்தருளி யிருக்கும், நாரணி - நாரணியென்றும்; மன அதீத நாயகி - மனதுக் கெட்டாத இறைவி யென்றும்; குணாதீதம் - குணங் கடந்த, நாதாந்த சத்தி என்று - நாதாந்த சத்தி யென்றும்; உன் நாமமே - உனது திருநாமங்களையே, உச்சரித்திடும் - உச்சரிக்கின்ற, அடியார் - சிவனடியார், நாமமே - திருப் பெயர்களையே, நான் - அடியேன், உச்சரிக்க - செபிக்க, வசமோ? - வசமாமோ?, என்க.

(வி - ரை) சிவஞானசித்தியார்: "அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை" எனவும் "எத்திற னின்று னீச னத்திற மவளு நிற்பள்." எனவும் வருவனவற்றால் 'பூரணி' முதலிய திருநாமங்கள் முதல்வனைப்பற்றி முதல் விக்கு முளவதனால் இவ்வாறு கூறினர். சர்வ வியாபியாய் விளங்கலின், 'பூரணி' எனவும், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளாய் விளங்குபவ ளாகலின் 'புராதனி' எனவும் கூறினர். எல்லாத் தேவர் கட்கும் எல்லா நூல்களிலேயும் மரணம் கேட்கப்படுகையால் அவர்கள் மனைவிமா ரனைவரும் ஒவ்வோர் காலங்களில் அமங்கலை யாவா ரென்பது நிச்சயம். அங்ஙனம் முதல்வனுக்கு மரணம் கேட்கப்படாமையாலும், அநாதி நித்தியமென்ன அருமறைகள் யாவும் அறுதியிட்டுக் கூறுதலினாலும், அவன் மனைவியினைச் 'சுமங்கலை' என்றனர். சௌந்தரியலகரி: "வேத ரஞ்சகன் மால்பு ரந்தரன்வேக சண்டகு பேரனோ, டாதி யெண்டிசை பாலர் பொன்றவு மாதி யந்தமி லாததோர், நாதர் பொன்றில ரேதுன் மங் கல நாணு றுந்திற மாதலால், நீத ழைந்தது யோக மம்பிகை நீலியென்பது பாவமே." என்றதனாற் காண்க. தன்வயத்தி யாகலின் 'சுதந்தரி' எனவும், திரிபுரநாசனி யாகலின் 'புராந்தகி' எனவும், சுகத்தை யுண் டாக்குபவ ளாகலின் 'சங்கரி' எனவும், ஆறாதாரங்களைக் கடந்த சிரத் திலே ஆயிர மிதழுடனே கூடியிருக்கும் தாமரையி னடுவே வீற்றிருக் கின்றவ ளாகலின் 'புஷ்பமிசை வீற்றிருக்கும் நாரணி' எனவும், பாச ஞானத்திற் கெட்டாதவ ளாகலின் 'மநாதீத நாயகி' எனவும், அசுத்த மாயா சம்பந்தமான குணங்களைக் கடந்து நாத தத்துவத்திற்கு மேற்பட்டு விளங்குதலின் 'குணாதீத நாதாந்த சத்தி' எனவும் கூறினர். ஈண்டு முதல்

வியை 'நாரணி' என்றதனுல் முதல்வனுக்கு நாராயண நாமம் பெறப் பட்டது. இந்த நாராயணனுமம் விண்டுவிற்கு இடுகுறி யெனவும், முதல்வனுக்குக் காரணக்குறி யெனவும் நியாய வாயிலா யெடுத்துக் கூறி நன்கு திராவிட மாபாடியத்தில் விளக்கியுள்ளார் ஆசிரியர் சிவஞானயோகிகள், ஆண்டுக் காண்க. முதல்வன் சர்வான்மாக்களையும் தோற்றுவித் தூட்டி, யுறக்கி யனுக்கிரகித்து நிற்கையால், 'அகிலாண்ட கோடியீன்ற அன்னையே! என்றனர். சிவஞான சித்தியார்: "பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட், டாசகலு மடியருளத் தகப்பனுடனிருக்கு மன்னை," என்றதனுற் காண்க. இங்ஙனம் உலக மனைத்தையும் பெருது பெற்றெடுத்த முதல்வியைக் 'கன்னி' என்றது என்னையோ வெனின், ஷெ "சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்று, முவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும், பவன் பிரம சாரியாகும் பான்மொழி கன்னி யாகுந் தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் றெரியு மன்றே." என்றதனுற் காண்க. (5)

பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்; மல
பரிபாகம் வரவுமனதிற்
பண்புமோ சற்றுமிலை; நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை; ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன்; பேரின்பமோ
சேரவென் றுற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்?
மோகமோ? மதமோ? குரோதமோ? லோபமோ?
முற்றுமாற் சரியமோதான்
மூறியிட் டெனைக்கொள்ளு(ம்); நிதியமோ தேடவெனின்
'மூசுவரி வண்டுபோல'
மாகமோ டவும்வல்லன்; எனையாள வல்லையோ?
வளமருவு தேவையரசே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!

(இ-ள்) உன்னை - உன்னை, பாகம் பெற - நயமுற, பாட அறியேன் - பாட அறிந்திலேன்; மல பரிபாகம் வரவும் - மலபரிபாக முண்டாதற்கும், மனதில் - என் மனதினில், பண்புமோ - நற்குணமோ, சற்றும் இலை - சிறிதுமில்லை; நியமமோ செய்திட - நியமம் பண்ண வென்ருலோ, பாவியேன் - பாவியாகிய எனது, பாப ரூப - பாவ வடிவாகிய, தேகமோ - உடலோ, திடம் இல்லை - வலிவு இல்லை; ஞானமோ - ஞானத்தை யென்ருலோ, கனவிலும் - கனவிலும், சிந்தியேன் - நினையேன்; பேரின்,

பம் - பேரானந்தத்தை, சேர என்றாலோ - அடையவென்றாலோ, கள்ள மனதும் - வஞ்ச மனமும், மெத்தவும் - மிகவும், சிந்திக்குது - ஆலோசிக்கிறது; என் செய்குவேன்? - என்ன செய்யக் கடவேன்?, மோகமோ - மோகமாத்திரமோ, மதமோ - மதமாத்திரமோ, குரோதமோ - குரோதமாத்திரமோ, லோபமோ - லோபமாத்திரமோ, முற்றும் மாற் சரியமோ - முற்றுப்பெற்ற மாற்சரியந்தானோ, (இவையனைத்தும்) முறியிட்டு - முறியோலை யெழுதிக்கொண்டு, எனை கொள்ளும் - என்னை யடிமையாகக் கொள்ளும்; நிதியமோ - (இவற்றினுடனே) பொருளை, தேட எனின் - தேடவென்றாலோ, மூசு - (மலர்களில்) மொய்க்கும், வரி வண்டுபோல - கீற்றமைந்த வண்டுபோல, மாகம் ஓடவும் வல்லன் - (பூமியிலேயன்றி) ஆகாயத்தில் ஓடவும் வல்லேன்; எனை - (இத்தகையனாகிய) அடியேனை, ஆள வல்லையோ? - ஆட்கொள்ள வல்லையோ?, வளம் மருவு தேவை அரசே, வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப் பெண் உமையே!—, என்க.

(வி - ரை) 'பாகம்' என்றது: சொன்னயம், தொடைநயம், பொருணய முதலியவற்றை. செந்தமிழ்ப் பாட்டினைக் கேட்டுப் பய னளிப்பவன் பரமசிவனாதலால் 'பாடவறியேன்' என்றனர். தேவாரம்: "பாடுவார் பாடலுக் குவப்பாய் போற்றி" எனவும்; "பாட்டுக்கு மாட்டுக்கும் பண்பா போற்றி" எனவும், வருவனவற்றாற் காண்க. மலபரிபாகமாவது - ஆன்மாவினுக்கு இருவினை யொப்பு வந்தவழி பாசம் விலகுதல். இப் பாசத்திற்கு மனம் சாத்துவிகநிலையி லிருக்கவேண்டு மாகலின் 'மனதிற் பண்புமோ சற்றுமிலை' என்றனர். நியம முதலிய கூடிய யோகத்தினில் நிலைபெற அனுசரித்தற்குத் திடம் வேண்டுமாகலின், 'திடமில்லை' என்றனர். ஞானமொன் றிருப்பதாக எக்காலத்து நினைத்திலேன் என்பார், 'ஞானமோ கனவிலுஞ் சிந்தியேன்' என்றனர். இவற்றால் முறையே ஞானத்திற் சரியையாவது, ஞானத்திற் கிரியையாவது, ஞானத்தில் யோகமாவது, ஞானத்தில் ஞானமாவது முடித்திலேனென்றதாயிற்று. 'மோகம், மதம், குரோதம், லோபம், மாற்சரியம்' என்றதனால் கர்மத்தினையும் கூட்டுக. அறுவகை விகாரங்களிற் கட்டுப்பட்டுச் செல்வத்தின் பொருட்டு எத்திசையுந் தேடியலையு மென்றனக்கு அருள் கிட்டுமோ என்பார், 'மோகமோ......ஆளவல்லையோ' என்றனர். மேற்சொன்ன அறுவகை விகாரங்களுடன் இடும்பை அசூயை யிரண்டினையும் கூட்டி எண்வகையாகக் கூறுவாரு முளர். (6)

'தூளேறு தூசுபோல் வினையேறு மெய்'யெனுந்
தொக்கினுட் சிக்கி,நாளுஞ்
'சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்'
சூறையிட் டறிவையெல்லாம்

நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றி
னட்பேற வுள்ளுடைந்து,
'நயனங்க ளற்றதோ ரூரேறு போல' வே
நானிலந் தனிலலையவோ ?
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று,
விரையேறு மாலைசூடி,
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய் !
'வாளேறு கண்ணி' யே ! விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே !
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே !

(இ - ள்) வேள் ஏறு - மன்மதன் ஏறி நடத்தும், தந்தியை - (இரு ளாகிய) யானையை, கன தந்தியுடன் - பருத்த யானைகளுடன், வென்று - ஜயித்து; விரை ஏறு - வாசனை மிகுந்த, மாலை - மலர் மாலைகளை, சூடி - தரித்து; விண் - ஆகாயத்தில், ஏறு - சஞ்சரிக்கின்ற, மேகங்கள் - மேகங்கள், வெற்பு ஏறி - மலையேறி, மறைவுற - ஒளித்துக்கொள்ள, வெருட்டிய - பயமுறுத்திய, கரும் கூந்தலாய் ! - கருமையான கூந்தலை யுடையவளே !, வாள் ஏறு - வாளின் தன்மையை யொத்த, கண்ணியே ! - திருக்கண்களை யுடையவளே !, விடை ஏறும் - இடபம் ஊரும், எம்பிரான் - எம்பெருமா னுடைய, மனதுக்கு - மனதினுக்கு, இசைந்த - ஒத்த, மயிலே ! - மயில் போன்ற சாயை யுடையாளே !, வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப்பெண் உமையே !—, தூள் ஏறு - (அழுக்கெ னும்) அணுக்க ளடைந்த, தூசுபோல் - வஸ்திரம்போல, வினை ஏறு - கன்மஞ் சேர்ந்த, மெய் எனும் - சரீரமென்கிற, தொக்கினுள் - தோற்பை யுள்ளே, சிக்கி - அகப்பட்டு; நாளும் - எந்நாளும், சுழல் ஏறு - சுழலினையு டைய, காற்றினிடை - காற்றி லகப்பட்ட, அழல் ஏறு - நெருப்புப்பட்ட, பஞ்சு என - பஞ்சுபோல, அறிவை எல்லாம் - என்னறிவை முற்றும், சூறையிட்டு - சூறையாடி; நாள் ஏற நாள் ஏற - நாள்கள் செல்லச் செல்ல, வார்த்திகம் எனும் - மூப்பு என்கிற, கூற்றின் - யமனது, நட்பு ஏற - சினேக முண்டாக, உள் உடைந்து - மனங் கலங்கி; நயனங்கள் - நேத்திரங்கள், அற்ற - இழந்ததாகிய, ஓர் - ஒரு, ஊர் ஏறு போலவே - ஊர்ப்பன்றி போலவே, நான் - யான், நிலந்தனில் - உலகினில், அலையவோ ? - திரிய (உனக்குத் திருவுளந்தானோ ?), என்க.

(வி - ரை) வெண்மையான வஸ்திரத்தில் சிறிது சிறிதாக அழுக் கேறுவதுபோல், ஆன்மாக்க ளெடுக்கப்பட்ட தேகந்தோறும் சிறிது சிறி தாகக் கன்ம மடைந்து அறிவை மயக்கிப் புண்ணிய பாவங்கட்குள் சிக்கும் படிச் செய்து அதனால் பல சென்மங்கொண்டு அலையும்படி கோருதலாயிற்

றென்பார், "நாளேறு......அலையவோ?" என்றனர். தத்துவவிளக்கம்: "பிணைந்தவக் கன்மம் பெருகிய வாசை -யனுநுகர்தற், கணைந்தன கன்ம மிருவகைத் தாமறம் பாவமென்ப, தணைந்து மணைந்துதன் சார்பினிற் றேன் றுமன் சந்நிதியா, லுணர்ந்தவர் வித்தும் விளைவுமொப் பாமென வோது வரோ." என்றதனுற் காண்க. எந்த வயதினும் இயமன் வருவது உலக வியல்பாயினும் இவ்வுண்மை யறிஞருக்கே யன்றி அஞ்ஞானிகட்குத் தோற் ருது. மூப்படைந்தபின் மறலி வருவ னென்பது எத்தகையரும் அறிந்து எதிர்பார்ப்பது சகச மாகலின், 'நாளேற நாளேற வார்த்திக வெனுங்கூற்றி னட்பேற' என்றனர். கூந்தலின் கருமையினை நோக்க இருளும் யானை யும் மேகமும் கொண்ட கருமை நிகரல்ல வென்பார், 'வென்று வெருட்டிய கருங்கூந்தலாய்!' என்றனர். (7)

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்,
புந்திமுத லான பேய்கள்,
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்கள்,என்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தான்; இவல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே!
நாதாந்த வெட்டவெளியே!
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே!
ஞானவா னந்தமயிலே!
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!

(இ-ள்) நாத வடிவாகிய - நாத ரூபமாகிய, மஹா மந்த்ர ரூபியே! - மகாமந்திர ரூபமானவளே!, நாதாந்த - நாதாந்தமாகிய, வெட்ட வெளியே! - வெறு வெளியே!, நல் சமயமான - சைவ சமயமான, பயிர் - பயிர், தழையவரு - செழிக்க வருகின்ற, மேகமே! - மேகமே!, ஞான ஆனந்த - ஞானனந்தங்களையுடைய, மயிலே! - மயிலே!, வாதம் இடு - குதர்க்கம் செய்கின்ற, பரசமயம் யாவுக்கும் - இதர சமயங்கள் எல்லாவற் றிற்கும், உணர்வு அரிய - அறித லருமையாகிய, மகிமை பெறு - மேன்மை பெற்ற, பெரிய பொருளே! - பெரிய வஸ்துவே!, வரை ராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்த மலை வளர் காதலிப்பெண் உமையே!—, பூதமொடு - பூதங்களுடன், பழகி வளர் - பழகி வளர்கின்ற, இந்திரியம் ஆம் - இந்திரி யங்களாகிய, பேய்கள் - பேய்கள்; புந்தி முதலான - புத்தி முதலாகிய,

பேய்கள்—, போராடு - போராடுகின்ற, கோபாதி - கோப முதலாகிய, ராக்ஷச பேய்கள்—, (ஆகிய இவைகள்) என் போதத்தை - என் அறிவை, ஊடு அழித்து - உள்ளழித்து, வேதனை - துன்பத்தினை, வளர்த்திட - விருத்தி செய்யும்படி, சதுர்வேத வஞ்சன் - நான்மறைப்பிரமன், விதித்தான் - வகுத்தான்; இ அல்லல் எல்லாம் - இத் துன்பங்கள் எல்லாம், வீழும்படிக்கு - கெடும்படிக்கு, உனது - உன்னுடைய, மௌன மந்த்ரம் - மவுன மந்திரமாகிய, ஆதிக்ய வித்தையை - மேன்மையான வித்தையை, வியந்து - மனமகிழ்ந்து, அருள்வையோ? - அருளிச்செய்வையோ?, என்க.

(வி - ரை) பேய் பிடியுண்டா னொருவன் அப் பேயின் வயப்பட்டு, அப் பேயின் செயலனைத்தும் தனது செயலாய்த், தனக்கென வொரு சுதந்திரமு மின்றி வாழுதல்போல, தத்துவத்துட் கட்டுப்பட்ட ஆன்மா வானது தத்துவத்தின் வயப்பட்டு, அத் தத்துவத்தின் செயலனைத்தும் தன்னுடைய செயலாய்த், தனக்கென வொரு செயலின்றி வாழுத லனுபவமாக விருத்தலின், அத் தத்துவத்தின்கூறாகிய இந்திரியங் களையும், புந்தி முதலானவற்றையும், கோபாதிகளையும் 'பேய்கள்' என்றனர். இத் தத்துவப் பேய்களுடன் மொத்துண் டலைவதற்குக் காரணம் பிறப்பாகலினாலும், அப் பிறப்புக்குக் காரணம் பிரம னாகலினாலும், 'சதுர்வேத வஞ்சன் விதித்தான்' என்றனர். 'வித்தை' என் றது ஈண்டு ஸ்ரீவித்தையை; அதாவது, திரிபுர சக்கரத்தினை. இது வரு மாறு: நான்கு புறத்தும் வாயில் விட்ட மூன்று சதுரமிட்டு, அதனடுவே மூன்று வட்டமிட்டு, அதனடுவே சூழப் பதினாறிதழிட்டு, அதனடுவே சூழ எட்டிதழிட்டு, அதனடுவே வொரு வட்டமிட்டு, அதனடுவே ஒன்பதுரேகை ஒன்றுக்கொன் றளவுபெற வெழுதித் துடைக்கும் இரேகை யளவறிந்து துடைக்க. துடைத்தபின் ஒன்பது ரேகையும், ஞாயிறு திங்கள் செவ் வாய் புதன் வியாழம் வெள்ளி சனி இராகு கேது என வொன்பது கோளின் பெயரும் முறையே பெறும். அவற்றுள் ஞாயிற்றைச் சனியுட னும், திங்களைக் கேதுவுடனும், வியாழத்தைச் செவ்வாயுடனும் கூட்ட நாற் பத்து மூன்று கோணமாக விருக்கும். இம் முறையை யெழுதுவது சங்காரக் கிரமம். ஓர் முக்கோணம் அதற்குமேல் எண் கோணமும், அதற்குமேற் பதின்கோணமும், அதற்குமேல் மற்றொரு பதின் கோணமும், அதற்குமேல் பதினாறு கோணமும், அதற்குமேல் வட்டமும் - எட்டிதழும், அதற்குமேல் பதினாறிதழும், அதற்கு மேல் மூன்று வட்டமும், அதற்குமேல் மூன்று சதுரமும், ஆக முறையே யெழுதுவது சிருட்டிக் கிரமம். விந்துவை முக்கோணத்தில் எழுதுவது கௌளமதம். முக்கோணத்தின் கீழாக ஓர் சதுர மிருக்கும். அதனடுவே விந்துவை யெழுதுவது சமய மதம். விந்து, சிவன் வடிவும்; முக்கோணம் சத்திவடிவு மாம். இவ்வாறு எழுதிய விந்துவும் முக்கோணமும் சந்திரகண்டம் என் றும், எண்கோணமும் இரண்டு பத்து கோணங்களும், பதினான்கு கோண

மும் அக்கினிகண்டம் என்றும், அதற்குமேலிருக்கிற நாலுவகையுஞ் சூரிய கண்டம் எனவும் பெயர்பெறும். இங்ஙனம் பெறுதலின் திரிபுரசக்கரம் எனப் படும். ஆகவே மகாதேவிக்குத் திரிபுர சுந்தரியெனப் பெயராயிற்று. 'மகா மந்த்ரரூபி' என்றது, பஞ்சதசாட்சரி ரூபியா யிருத்தலை : வருமாறு-சிவத்தி னுடைய எழுத்தும், சத்தியினுடைய எழுத்தும், மன்மதனுடைய எழுத்தும், பூமியினுடைய எழுத்தும், சூரியனுடைய எழுத்தும், சந்திரனுடைய எழுத் தும், காமனுடைய எழுத்தும், திருமாலுடைய எழுத்தும் ஆகிய இவற்றை விளங்க வுரைப்பின் கூறிய இவை மூன்று கண்டமு முரியதாகப் பெறும். இறுதி மாயையினுடைய எழுத்தொன்றையும் மும்முறையாக வமைத்துப் பதினைந்தாகப் பொருந்துகின்றது பஞ்சதசாட்சரியாம். இவற்றின் விரிவை உபதேச முறையா லுணர்க. (8)

---

## அகிலாண்ட நாயகி

**சந்த விருத்தம்.**

வட்ட மிட்டொளிர்பி ராண வாயுவெனு
  நிகள மோடுகம னஞ்செயு
 'மனமெ னும்பெரிய மத்த யானை' யையென்
  வசம டக்கிடின்,மு மண்டலத்
திட்ட முற்றவள ராஜ யோகமிவன்
  யோக மென்றறிஞர் புகழுவே
 யேழை யேனுலகி னீடு வாழ்வன், இனி
  யிங்கி தற்குமனு மானமோ?
பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
  பாக்ய மானசுக யோகமும்,
 பார காவிய கவித்வ நான்மறை
  பராய ணஞ்செய்மதி யூகமு(ம்),
மட்ட சித்தியுத லன்ப ருக்கருள
  விருது கட்டியபொ னன்னமே!
 அண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
  லாண்ட நாயகியெ னம்மையே!

(இ - ள்) வட்டமிட்டு - சுழன்று, ஒளிர் - பிரகாசிக்கின்ற, பிராண வாயு எனும் - பிராணவாயு வென்கிற, நிகளமோடு - விலங்குடன், கமனம் செய்யும் - நடக்கின்ற, மனம் எனும் - மன மென்கிற, பெரிய மத்த யானையை - பெரிய மதயானையை, என் வசம் - அடியேன் வசம், அடக் கிடின் - அடங்கும்படிச் செய்தால் ; மும்மண்டலத்து - மூன்றுலகங்களி

லும், இட்டமுற்ற - விரும்பத்தகுதியான, வளம் - வளம் பொருந்திய, ராஜயோகம் - ராஜயோகமே, இவன் யோகம் என்று - இவனது யோக மென்று, அறிஞர் புகழ - அறிஞர் புகழும்படி, எழையேன் - எளியேன், உலகில் நீடு வாழ்வன் - உலகில் நெடுங்காலம் வாழ்வேன்; இனி - இனி, இங்கு - இவ்விடத்து, இதற்கும் - இதற்கும், அனுமானமோ? - அனுமானந் தானோ?, பட்டவர்த்தனர் - அரசர்கள், பராவு - துதிக்கத்தக்க, சக்ரதர - சக்ரவர்த்தித்துவ மென்கிற, பாக்கியமான - பாக்கியமாகிய, சுக யோக மும் - சுபயோகத்தையும், பார காவிய - பெருங்காவிய, கவித்வம் - கவித் வத்தையும், நான்மறை - நான்கு வேதங்களை, பாராயணஞ் செய் - பாரா யணம் செய்யும்படியான, மதி ஊகமும் - மதி நுட்பத்தையும்; அட்டமா சித்தியும் - அட்டமாசித்திகளையும், நல் அன்பருக்கு - நல்ல அடியார் கட்கு, அருள - அருளிச்செய்ய, விருது கட்டிய - விருது கட்டிக்கொண்ட, பொன் அன்னமே! - சுவர்ண அன்னம் போல்பவளே!, அண்டகோடி புகழ் - உலகனைத்தும் புகழ்கின்ற, காவை - திருவானைக்காவில், வாழும் - வாழ்கின்ற, அகிலாண்ட நாயகி - அகிலாண்ட நாயகி யென்னும், என் அம் மையே - என் அம்மையே!, என்க.

(வி - ரை) சிவராஜ யோகத்தினுக்கு முக்கிய சாதனம் மனவொடுக்க மாகலினாலும், அம் மனவொடுக்கம் பிராணவாயுவினை யடக்குதலினா லுண் டாகு மாகலினாலும், மனமென்னும் யானைக்கு நிகளமா யிருப்பது பிராண வாயு வென்றனர். இச் சாதனத்தினையே பிராணயாம மென்பார். திரு மந்திரம்: "ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்கும், காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை, காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக் கூற்றை யுதைக்குங் குறியதுவாமே." என்றதனாற் காண்க. 'யோகம்' என்பது, ஆனந்த விளைவிற்கு ஏதுவான சைதன்னிய ஆன்ம ஒருமைப்பாடேயாம். பட்டினத்தார்: "மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும், வீய விட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந், தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந், தேயுமதேநிட்டை யென்றா னெழிற் கச்சி யேகம்பனே." என்றதனாற் காண்க. சன்மார்க்க சைவ ரனைவரும் இலேசாக வருத்தமின்றிச் செய்யப்படுவதைப்பற்றி இது ராஜயோக மென்று வழங்கப்படுவ தாயிற்று. எனவே, சீவான்மாவின்கணுள்ள அறி யாமையினைச் சிறிது சிறிதாக அகற்றி அதனறிவை விளக்கி, இறைவ னுடைய ஞானசத்தியிற் றோய்விக்கு முயற்சியே இராஜயோக மெனப் படும். சீவனைப் பக்குவப்படுத்தி ஆணவத்தை நீக்கி வருகின்ற இறைவ னருட் சத்தியே அறிவும் ஆனந்தமுமாய் நின்று ஆன்மாவுக்குப் பஞ்ச கஞ்சுக வாயிலாய் அவற்றைச் சிறிது சிறிதாய் நுகர்வித்துப் பின் அக் கஞ்சுக மெல்லாம் முழுதும் உருவி அதனைத் தன் வயப்படுத்திக் கொள்ளு மென்பதும், அங்ஙனம் உபசரித்து வருகின்ற திருவருட் சத்தியி னியல்பை யறிந்து அதனுட் படிந்து பேரின்பானுபவ மெய்துதலே

சிவராஜயோகப் பயன். இப்பய னுண்டாகவே யெல்லாப் பயனு முண் டாகி நித்திய வாழ்வை யடைவே னென்பார், 'உலகினீடு வாழ்வன்' என்றனர். கோடீச்சுரத் தன்மையும், கவீச்சுரத் தன்மையும் யோகீச்சுரத் தன்மையும் தனது அன்பருக்கு முதல்வி யுபகரித்து வருவது திண்ணமாக லின், 'அன்பருக்கருள விருது கட்டிய பொனன்னமே' என்றனர். (1)

---

# பெரிய நாயகி விருத்தம்

---

'காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி'
கன்மப் புனற்குளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்து ளெனையிருத்திச்,
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குண் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேன்? அருட்
டோயநீ பாய்ச்சல்செய்து,
ஈற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப், புலப்பட்டியு
நமனை தீப்பூடு மணுகாமன், முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுத்தருளி யெனையாள வல்லையோ?
பெரியவகி லாண்டகோடி
பெற்றநா யகி! பெரிய கபிலைமா நகர்மருவு
பெரியநா யகியம்மையே!

(இ - ள்) காற்றைப் பிடித்து - வாயுவினைப் பற்றி, மண் கரகத்து - மண் கலயத்தில், அடைத்தபடி - அடைத்ததுபோல, கன்மப் புனற்குள் - கருமமாகிய நீரில், ஊறும் - ஊறிக்கொண்டிருக்கும், கடைகெட்ட - இழிந்த, நவவாயில் பெற்ற - ஒன்பது வாயில்களையுடைய, பசு மட்கலம் - பச்சைமண் பாத்திரம் போன்ற, காயத்துள் - தேகத்தினுள்ளே, எனை - அடியேனை, இருத்தி - இருக்கச் செய்து; சோற்றை - அன்னத்தை, சுமத்தி - ஏற்றி, நீ - நீ, பந்தித்து - கட்டி, வைக்க - வைக்க, துருத்திக் குள் - துருத்தியி லடைத்துவைத்த, மது என்ன - கள்ளைப்போல, துள்ளி துடித்து - துள்ளிப்பதைத்து, என்ன பேறு - என்ன லாபம், பெற்றேன் - அடைந்தேன்?, (ஒன்றுமில்லை யாதலால்) நீ - நீ, அருள் - உன் திருவரு ளாகிய, தோயம் - நீரை, பாய்ச்சல் செய்து - பாய்ச்சி, நாற்றை பதித்தது என - நாறு பதித்தாற்போல, ஞானம் ஆம் - ஞானமாகிய, பயிரதனை - பயிரை, நாட்டி - நட்டு, புலம் - ஐம்புலன்களாகிய, பட்டியும் - பட்டிமாடு

களும், நமன் ஆன - யமன் என்று சொல்லப்படுகிற, தீப்பூடும் - தீப்பூடும், அணுகாமல் - சேராமல், முன் நின்று - எதிரில் நின்று, நாடு - விரும்புதற்குரிய, சிவபோகம் ஆன - சிவானுபவமாகிய, பேற்றை - பலனை, பகுத்து அருளி - பகுத்தருளி, எனை - அடியேனை, ஆளவல்லையோ - அருளவல்லையோ ?, பெரிய - பெரிதாகிய, அகிலாண்டகோடி - அகிலாண்டகோடிகளை, பெற்ற - பெறாது பெற்ற, நாயகி ! - இறைவியே !, பெரிய - பெரிய, கபிலை மாநகர் - கபிலைமா நகரில், மருவு - எழுந்தருளி யிருக்கிற, பெரிய நாயகி அம்மையே! - பெரியநாயகியம்மையே !, என்க.

(வி - ரை) காற்றினுக்குச் சமானமான உயிரையும், மண்பாண்டத்திற்குச் சமானமான உடலையும் நம்பித், 'தோற்பையில் கள் பொங்குவது போல' உலகில் வீணே குதித்தாடித் திரிவதில் யாதொரு பிரயோசனமுமில்லையெனவும், மனமாகிய கழனியில் அருளாகிய நீரினைப் பாய்ச்சி, ஞானமாகிய பயிரை விளைவித்துப், புலன்களாகிய மாடுகள் மேய்ந்திடாமலும், எமனாகிய பூண்டு விளையாமலும் காத்துச், சிவபோகமாகிய நெல்லினைக் கொள்ளவேண்டுவதே பிரயோஜனமா மென்பதாம். சிவபோகமாவது, சடசித்துக்க ளிரண்டினு நின்று விளங்குவதாகிய இதாகிதங்கட் கேற்ற சத்தாதி விஷயங்களில் எவ் விஷயம் வந்து தாக்கினும் அவ் விஷயம் எதிரிட்டுப் பார்த்து இது மாயா காரியமாகிய தனு கரண புவன போகங்களின் விகற்பமென்றும், அவ் விஷயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தின் விகற்பமென்றும் கண்டு, அவ் விஷயங்களை அதுவதுவாகப் புசிக்கு மான்மாவை நித்தியனாய்ப் பூரணனா யறிவதாயிருக்கினும் தானா யொன்றையு மறிதற் கறிவில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து, அவ் வான்மாவின் அறிவுக் கறிவாய் நின்று இவ்விஷய போகங்களை இடைவிடாமற் பாகமறிந்து உணர்த்தி நிற்குந் திருவருளையு முள்ளபடி தரிசித்து, அவ்வருளின் நிறைவெல்லாந் தன் வடிவாகவுடைய பூரண வின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தமா யெழுந்தருள மானுடச்சட்டை தரித்துவந் துபதேசித்த அனுக்கிரகத்தை உள்ளபடி தரிசித்து, இவ்விடத்தில் வந்து பொருந்தப்பட்ட சத்தாதி விஷயங்களையெல்லாம் அவ் வனுக்கிரகத்தினால் பொருந்திப் பார்த்து, இவ் விஷய போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விப்பதும், அனுக்கிரகமாகிய திருவருள் தானே நல்வினையைச் செய்விப்பதும், அத் திருவருள்தானே இந் நன்மை தீமைகளை யறியும்படிப் புசிப்பாகி வந்த விஷய பேதங்களும், அவ் வனுக்கிரகமாகிய ஆன்ம வர்க்கத்துக்கும் சடமாகிய பாச சாலங்களுக்கு மொன்றை யொன் றறியவும், ஒன்றையொன்று பொருந்தவும் ஒரு சற்றுஞ் செயலில்லை யென்னும் முறைமையை உள்ளபடி தரிசித்து அப் பொருளோ டிசைவதுவேயாம். உண்மைநெறிவிளக்கம்: "எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங் கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா, மொப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங், குற்றதெல்லா மதனாலே பற்றி

நோக்கித், தப்பிணைசெய் வதுமதுவே நினைப்பு மதுதானே தருமுணர்வு புசிப்புமது தானே யாகி, யெப்பொருளு மசைவில்லை யெனவாதப் பொருளோ டிசைவதுவே சிவயோக மெனுமிறைவன் மொழியே.” என் றதனுற் காண்க. (1)

## தந்தை தாய்

தந்தைதாய், மகவு,மனை வாழ்க்கை, யாக்கை
சகமனைத்து மௌனியரு டழைத்த போதே
யிந்திரசா லங்கனவு கான னீரா
யிருந்ததுவே; இவ்வியற்கை யென்னே? என்னே?

(இ-ள்) தந்தை தாய் - பிதா மாதா, மகவு - பிள்ளை, மனை - மனைவி, வாழ்க்கை - (இவர்களுடன் கலந்து வாழும்) வாழ்வு, யாக்கை - சரீரம், சகம் - உலகம், அனைத்தும் - இவை யனைத்தும், மௌனி - மவுன குருவினுடைய, அருள் - திருவருள், தழைத்தபோதே - உண்டாயின போதே, இந்திர சாலம் - இந்திரசாலம் (ஆய்), கனவு - கனவாகவும், கானல் நீர் ஆய் - கானற்சலம்போலவும், இருந்ததுவே - இருந்ததே; இவ் வியற்கை - இச்சுபாவம், என்னே என்னே - யாதே? யாதே?, என்க.

(வி-ரை) உயிர்க்குயிராய் அகண்டாகார பரிபூரணமாகிய சர்வ முதன்மையுங் கொண்டிருக்கிற முதல்வன் ஞானமே திருமேனியாகக் கொண்டு ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளி வந்து, சத்திநிபாதம் பதிந்த பக்குவனுக்கு அனுக்கிரகம் செய்தமாத்திரத்தில், உற்றார் வெறுப்பும், உடல் வெறுப்பும், உலகவெறுப்பு முண்டாவது சகசமாகலின், அங்ஙனமே தனக்குண்டாயிற் றென்பார், ‘மௌனியரு டழைத்தபோதே......யிருந் ததுவே’ என்றனர். திருவருட்பயன்: “ஆரறிவா ரெல்லா மகன்ற நெறி யருளும், பேரறிவான் வாராத பின்.” எனவும், ஞானசாகர வெண்பா: “ஏற்கும் புவியிடத்தி லிந்திரசா லங்கனவு, நீர்க்குமிழி பேய்த்தேர் நினைப்புமறப் பார்க்குமது, போலநிலை நில்லாத பொய்வாழ்வை மெய்வாழ் வென், றேலநிலை நில்லாவா றென்.” எனவும்; “ஒழிந்தபிறப் பெல்லா முடனுகி வேருய்க், கழிந்தவர்க ளெல்லையில்லை கண்டாய்-மொழிந்துலகிற், றந்தைதாய் தம்பி தமையன் புதல்வனென, வந்ததா லுள்ள வழக்கு” எனவும் வருவனவற்றால் முறையே காண்க. (1)

என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால
மியாதிருந்தேன்? எவைபோயென்? என்னை நீங்கா
அன்னைபோ லருள்பொழியுங் கருணை வாரி!
ஆனந்தப் பெருமுகிலே! அரசே! சொல்லாய்!

(இ - ள்) என்னை - (ஆன்மாவாகிய) என்னையே, நான் கொடுக்க நான் தேவரீருக்குத் தத்தஞ் செய்ய, ஒருப்பட்ட காலம் - சம்மதித்த காலத்தில், யாது இருந்து என் - எது எனக்கிருந்து என்ன பிரயோஜனம்?, எது போய் என் - எது என்னை விட்டுப்போயினும் கஷ்டமென்ன?, என்னை நீங்கா - எக்காலத்தும் என்னை விட்டுப் பிரியாத, அன்னைபோல் - தாயைப் போல், அருள் பொழியும் - அருள் மழையைச் சொரிகின்ற, கருணைவாரி!- கருணைசமுத்திரமே!, ஆனந்த பெருமுகிலே! - இன்பப் பெருமேகமே!, அரசே! - அரசனே!, சொல்லாய்! - சொல்வாயாக!, என்க.

(வி - ரை) ஆன்மாவாகிய தன்னை ஆசிரியர் தந் திருவடியில் சிவார்ப்பணம் செய்த பின்னர் அவ் வான்மாவினுக்கு இதுகாறும் இன்றியமையாது வேண்டுவனவாக விருந்த உடலும் பொருளும் சிறிதும் பிரயோசனமில்லை யென்பார், 'என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால, மியாதிருந்தென்? எவை போயென்?' என்றனர். இருப்பது உடல் போவது பொருள். (2)

அரசே! நின் றிருக்கருணை யல்லா தொன்றை
யறியாத சிறியேனு னதனுன் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.

(இ - ள்) அரசே! - அரசனே!, நான் - யான், நின் - தேவரீரது, திருக்கருணை - திருவருளை, அல்லாது - அன்றி, ஒன்றை - வேறொரு பொருளை, அறியாத - அறிந்துகொள்ளாத, சிறியேன் - சிறியனேன்; அதனால் - ஆதலால், முத்தி கரை - முத்தியாகிய கரையை, சேரும்படிக்கு - அடையும்வண்ணம், உன் - தேவரீருடைய, அருள் - திருவருளாகிய, புணையை - மரக்கலத்தை, கூட்டும் - கிடைக்கச் செய்கின்ற, கைப்பிடியே - உன் கைப்பிடியே, கடைப்பிடி ஆ - கருமம் முடிக்கும் துணிவாக, கருத்துள் - மனத்தில், கண்டேன் - பார்த்தேன், என்க.

(வி - ரை) எவ்விதத்தானுந் திருவருளை யொழியத் தனக்காயதோர் தலைமையைக் காணுதபடியால், அத் திருவருளே தலைமை யுடையதெனக் கண்டு, அத் திருவருளே தாரகமாகக் கொண்டு முதல்வன் றிருவடியினை யடையவேண்டு மென்பதாம். திருவருட்பயன்: "அருளிற் பெரிய தகிலத்து வேண்டும், பொருளிற் றலையிலது போல்." எனவும்; "அருளொடுங் கூடியரன்பா லொன்ரு, யருளை மறந்தபின் னறியகிலேன்." எனவும் வருவனவற்றுற் காண்க. (3)

கண்டேனிங் கென்னையும்,என் றனையு நீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்;
விண்டேனென் றனைப்புறம்பாத் தள்ள வேண்டாம்!
விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்ரே?

(இ - ள்) இங்கு - இவ்விடத்தில், என்னையும் - அடியேனையும், கண்டேன் - பார்த்தேன்; என்றனையும் - என்னையும், நீங்கா - நீங்காத, கருணையும் - கருணையினையும் நின்தன்னையும் - தேவரீரையும், நான் - அடியேன், கண்டேன் கண்டேன் - பார்த்தேன் பார்த்தேன்; (ஆனால்) விண்டேன் என்று - இவ் வுண்மையினை வெளிப்படச் சொன்னேனென்று, என்னை - அடியேனை, புறம்பு ஆ - வெளியாக, தள்ளவேண்டாம் - தள்ளவேண்டாம்; விண்டதும் - (இங்ஙனம்) நான் சொன்னதும், நின் - தேவரீரது, அருள் களிப்பின் - திருவருட் களிப்பாலாகிய, வியப்பால் - அதிசயத்தால், அன்றே? - அல்லவோ?, என்க.

(வி - ரை) திருவருட் பிரகாசத்திற் பிரிவறக் கலந்துநின்று அப் பிரகாசத்தின் வலிமையைக் கொண்டு யாவையினும் வியாபித் தறிகின்றவனாகிய ஆன்மா தன்னையும் தலைவனையும் இடைநின்ற திருவருளையும் சுட்டாது அனுபவிப்ப னாகலின் ஆன்ம தரிசனமும், திருவருட் டரிசனமும், சிவ தரிசனமும் கண்டே னென்றனர். திருவிடைமருதூர் மும்மணிக்கோவை: "ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின், நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலு, மென்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன், நின்னிலை யனைத்தினுங் கண்டே, னென்னை நின்னைக் காணு மாந்தர், தன்னையுங் காணாத் தன்மை யோரே." என்றதனாற் காண்க. "கண்டவர் விண்டிலர்" என்றதற் கேற்ப இங்ஙனம் கண்ட அருணிலையைப் பிறரறியச் சொல்வது கூடாதாயினும், "நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்றபடி அருண்மேலீட்டா லுரைத்தன ரென்பார், 'விண்டதுநின் னருள்' என்றனர். (4)

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென வுவட்டாவின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ? செகவி லாசம்.

(இ - ள்) ஓ என்ற - ஓவென்று கொண்டாடத்தக்க, சுத்த வெளி - வெறு வெளி, ஒன்றே நின்று - ஒன்றின்கண்ணே நின்று, இங்கு - இவ்விடத்திலுள்ள, உயிரை எல்லாம் - உயிர்களை யெல்லாம், வம்மின் என - வாருங்களென் றழைத்து, உவட்டா இன்பம் - தெவிட்டாத ஆனந்தத்தை தருகின்ற, தே என்ற - தெய்வமென்று சொல்லப்படுகின்ற, நீ - தேவரீர், கலந்து கலந்து - கூடிக்கூடி, முத்தி சேர்த்தனையேல் - மோட்சத்தில் சேர்த்தனையாயின், செக விலாசம் - பிரபஞ்ச லீலை, குறைவு ஆமோ? - குறைவுபடுமோ?, என்க.

(வி - ரை) பஞ்சகிருத்தியம் கிரமமாக நடக்கவும், பக்குவப்பட்ட ஆன்மாக்கள் மாத்திரம் முத்தியிற் கலக்கவும், அல்லாதவர்கள் உலகில் இறப்பிற் பிறப்பிற் கட்டுப்பட் டுழலவும் நடந்துவரும் ஒரு பெரு நியதித்

தத்துவத்தை மாற்றி ஏக காலத்தில் ஆன்மாக்க ளனைவரையும் முத்தியங் கரை சேர்க்கில் என்ன கெடுதி விளையு மென்பார், 'குறைவாமோ?' என்றனர். உலகத் திண்டாட்டத்தை நோக்கி யிங்ஙனங் கருணை மிகுதியாற் கூறினரேனும், நியதித் தத்துவ மாறுபடாது என்பது நிச்சயம். (5)

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறு வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பை; அணுத் திரளை யெல்லா
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா! நீநினைத்த வாறே யெல்லாம்.

(இ - ள்) செகத்தை எல்லாம் - உலக மனைத்தையும், அணுவளவும் - அணுமாத்திரமும், சிதறுவண்ணம் - கெடாதவகை, அணுவில் - பரமாணுவிடத்து, வைப்பை - ஒடுக்குவை; அணுத்திரளை எல்லாம் - பரமாணுத் திரளை யெல்லாம், மகத்துவம் ஆ - ஆச்சரிய முண்டாக, பிரமாண்டம் ஆக - பெரிய செகமாக, செய்யும் - உண்டாக்கும், வல்லவா! - வல்லனே!, எல்லாம் - யாவும், நீ - தேவரீர், நினைத்த ஆறே - சங்கற்பித்தபடியே, என்க.

(வி - ரை) சர்வசங்கார காலத்தில் பிரபஞ்ச மனைத்தையும் ஒடுக்குகிற காலத்தில் மாயா காரணத்தை யடையு முன்னின்ற அவசரம் அணுவளவாக நிற்கு மாகையாலும், மறுபடியும் காரியப்படுகிற காலத்தில் அவ்வணு காரணமாக பிரபஞ்சமாக விரியு மாகலினாலும், இங்ஙனம் காரிய காரணப்படுகிற காலத்து ஒரு சிறிதும் இல்லது வாராமலும், உள்ளது போகாமலும், நியதியாக நடப்பது முதல்வன் சங்கற்பத்தின் படியேயாகலான், 'வல்லவா! நீ நினைத்த வாறே யெல்லாம்' என்றனர். (6)

சொல்லாலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்த நெஞ்சுங் கல்லான் முக்கட்
கனியே! நெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ?

(இ - ள்) சொல்லாலே - சொற்களினாலே, வாய் துடிப்பது அல்லால் - வாய் பதைத்திடுவ தல்லாமல், நெஞ்சம் - மனம், துடித்து - பதைத்து, இரு கண் - இரண்டு கண்கள், நீர் அருவி - நீர் அருவியினைப்போல, சொரிய - பொழிய, தேம்பி - வாடி, கல்லால் - கல்லால விருட்சத்தின் கீழிருக்கின்ற, முக்கண் கனியே! - திருநேத்திர தாரியாயுள்ள கனியே!, கல்லால் ஏய் இருந்த - கல்போல சமைக்கப்பட்டிருந்த, நெஞ்சும் - மனமும், நெக்கு - நெகிழ்ந்து, உருகிடவும் - உருகவும், காண்பேனோ? - காண்பேனோ?, என்க.

(வி - ரை) மடமடெனப் பற்பலப் பாக்களை யெடுத்துக் கூறி வாசா கைங்கரியமாக எல்லா அனுபவமும் அனுபவித்தாரைப் போலப்பேசுவ

தன்றி உள்ளபடி கண்ணீருங் கம்பலையுமாக நின்று மன நெகிழ்ந்து நில்லேன் என்பார், 'உருகிடவும் காண்பேன் கொல்லோ' என்றனர். (7)

# பெற்றவட்கே

பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம்; பிள்ளை
பெறுப்பேதை யறிவாளோ? பேரா னந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகும்;
உறாதவரே கன்னெஞ்ச முடைய ராவார்.

(இ - ள்) பெற்றவட்கே - (பிள்ளை) பெற்றவட்கே, அந்த வருத்தம் - அந்த (கருவுயிர்க்குந்) துன்பம், தெரியும் - தெரியும்; பிள்ளை பெறாப் பேதை - பிள்ளை பெறாத பேதைப் பெண், அறிவாளோ - (அந்த வருத்தம்) அறிவாளோ?, (அறியாள், அதுபோல) பேரானந்தம் - பெரிய சிவானந்தம், உற்றவர்க்கே - அனுபவிப்பவர்கட்கே, கண்ணீர் - கண்ணீரும், கம்பலை - நடுக்கமும், உண்டாகும் - உளவாகும்; உறாதவரே - (ஆனந்தம்) அடையாதவரே, கல் - கல்போன்ற, நெஞ்சம் - மனதை, உடையர் ஆவார் - உடையவர்களாவார்கள், என்க.

(வி - ரை) பிள்ளை பெற்றவட்குப் பெறுதற் கேதுவாகி யிருந்த காரியானுபவம் நினைக்குந்தோறும் தோன்றும். அதுபோன்று, சிவானந்தம் பெற்றவர்க்கு அவ்வானந்தம் விளைதற் கேதுவாகியிருந்த சிவானுபவந் தோன்றும். 'பிள்ளைப் பேற்றி னுண்மை மலடி யறியாதவாறுபோல'க் கன்னெஞ்ச முடையார் சிவானுபவப் பேற்றினை யறியார். "அகத்தி லழகு முகத்தே விளங்கும்." என்ற பழமொழியின்படி, மனநெகிழ்ச்சி விளையின் முகத்தின்கண்ணே கண்ணீர் முதலிய விளையும்; கன்னெஞ்ச முடையார்க்கு அங்ஙனம் யாதொன்றும் நிகழாதென்பதாம். (1)

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி,
அப்பனே! ஆனந்த வடிக ளே! நீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்!
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே!

(இ - ள்) ஆவா என்று - ஐயோ என்று, அழுது - புலம்பி, தொழும் - வணங்குகின்ற, கையர் ஆகி - கரங்களை யுடையவராகி; அப்பனே! - ஐயனே!, ஆனந்த அடிகளே! - இன்பத்தை விளைவிக்கும் சுவாமியே!, நீ - தேவரீர், வா வா என்று - வாவாவென் றழைத்தவர்கட்கு, அருளும் - அருள் செய்கின்ற, கருணை - கருணையையுடைய, எந்தாய்! - என்றாயே!, நீ - தேவரீர், வன்னெஞ்சர்க்கு - வலிய நெஞ்சினை யுடையவர் கட்கு, இரங்குவது - இரங்கியருள்வது, எவ்வாறு - எவ்விதம்?, என்க.

(வி - ரை) "அழுதா லுன்னைப் பெறலாமே" என்ற திருவாசகத்தின்படி 'ஆவாவென் றழுதுதொழுங் கையராகி' எனவும்; "வஞ்சர் நெஞ்சி னில்லானை" என்ற தேவாரத்தின்படி 'வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ்வாறு நீயே?' எனவுங் கூறினர். இதனால் மனத்தின்கண் அன்புடையார்க் கன்றி வன்புடையார்க்கு முதல்வன் வெளிப்படா னென்பதாயிற்று.

நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே,
பேயேற்குந் தனக்கெனவோ ரன்பு முண்டோ?
பெம்மானே! இன்னமன்பு பெருகப் பாராய்!

(இ - ள்) நினைவு ஊடே - (அடியேன்) நினைவின்கண்ணே, நின்று - இருந்து, உணர்த்தி - அறிவுறுத்தி, நிகழ்த்தலாலே - நடத்துகையாலே, எளியேற்கும் - எளியேனுக்கும், தாகமோகம் - தாகமோகரூபமா யுள்ளவன், நீயே - தேவரீரே; பேயேற்கும் - பேயனேனுக்கும், தனக்கு என - தனக்கென்று, ஓர் அன்பும் - ஒரு அன்பும், உண்டோ - உளதோ?, பெம்மானே! - பெருமானே!, இன்னம் - இன்னமும், அன்பு - அன்பானது, பெருக பாராய்! - வளரச் செய்வாய்!, என்க.

(வி - ரை) ஆன்மாவுடன் இரண்டறக் கலந்து நின்று அவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி நியதி தவறாதபடி சகல போகங்களையும் ஊட்டி வைப்பவன் முதல்வனே யாகலின் சிறிதுஞ் சுதந்திர மில்லாத எளியேனுக்கு 'இன்னமன்பு பெருகப் பாராய்!' என்றனர். (3)

பாராயோ? என்றுயர மெல்லா மையா!
பகருமுன்னே தெரியாதோ? பாவி யேன்முன்
வாராயோ? இன்னமொரு காலா னாலு
மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ?

(இ - ள்) என் - அடியேனுடைய, துயரம் எல்லாம் - துன்பமனைத்தையும், பாராயோ - (ஒழிக்கப்) பார்க்கமாட்டாயோ?, ஐயா! - ஐயனே!, பகரும் முன்னே - (நான்) சொல்லுவதற்கு முன்னே, தெரியாதோ - தேவரீருக்குத் தெரியாதோ?, பாவியேன் முன் - பாவியாகிய என்னெதிரில், இன்னம் ஒரு கால் - மற்றொரு தரம், வாராயோ - வரமாட்டாயோ?, மலர் - தாமரை மலர் போன்ற, கால் - திருவடிகள், என் - அடியேனுடைய, சென்னிமிசை - சிரசின்மேல், வைத்திடாயோ - சூட்டாயோ?, என்க.

(வி - ரை) முதல்வன் சர்வஞ்ஞனாதலின் 'பகருமுன்னே தெரியாதோ?' என்றனர். முதல்வன் மவுனமூர்த்தியாக எழுந்தருளி வந்து அனுக்கிரகித்து திருவடி தீட்சை முன்னமே செய்துள்ளாராகலின் 'இன்னமொரு காலா னாலு, மலர்க்காலென் சென்னிமிசை வைத்

திடாயோ?' என்றனர். திருப்பெருந் துறையிலே குருந்தமரத்தடியிலே முதல்வன் குருமூர்த்தமா யெழுந்தருளி முன்தோன்றித் திருவடி தீட்சை யளித்திருந்தும், "எனக்கின்று முன்கழல் காட்டி மீட்கவும் மறுவில் வானனே" என மணிவாசகப் பெருமான் கேட்டுக்கொண்டபடி இவ் வாசிரியருங் கூறினர். (4)

வைத்திடுங்கா லைப்பிடித்துக், கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டு,கையால் வளைத்துக் கட்டிச்,
சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக் கொண்டு,
தியக்கமற வின்பசுகஞ் சேர்வ தென்றோ?

(இ - ள்) வைத்திடும் - (அங்ஙனம் என் சிரமீது) வைக்கின்ற, காலைப் பிடித்து - திருவடிகளைப் பிடித்து, கண்ணில் - கண்களிலும், மார்பில் - மார்பிலும், வைத்து - வைத்து, அணைத்துக்கொண்டு - தழுவிக்கொண்டு; கையால் - கரங்களால், வளைத்து கட்டி - வளைத்துக் கட்டி; சித்தமிசை - நெஞ்சினில், புக இருத்தி - பொருந்த விருத்தி, பிடித்துக்கொண்டு - பற்றிக்கொண்டு, தியக்கம் அற - மயக்கமில்லாமல், இன்ப சுகம் - பேரின்ப சுகத்தை, சேர்வது என்றோ - அடைவது எக்காலமோ?, என்க.

(வி - ரை) அரிய பல தவங்கிடந்து பெற்ற பிள்ளையினைத் தாயானவள் அணைத்து, ஆலிங்கனஞ் செய்து, முத்தமிட்டு, உச்சி மோந்து, இன்பசுக மடைவதுபோல, பல ஜன்மங்களிற் செய்த புண்ணிய வசத்தினாற் கிடைத்த அரிய திருவடியை அங்ஙனம் செய்து ஆனந்திப்ப தெந்நாளென்பார், 'இன்ப சுகம் சேர்வ தென்றோ?' என்றனர். (5)

சேராமற் சிற்றினத்தைப் பிரிந்தெந் நாளுந்
திருவடிப்பே ரினத்துடனே சேரா வண்ணம்
ஆராக நானலைந்தே னரசே! நீதா
னறிந்திருந்து மாயையிலே னழுந்த வைத்தாய்?

(இ - ள்) சிற்றினத்தை - சிற்றினத்தவர்களை, சேராமல் - கலவாமல், பிரிந்து - அவரினின்று நீங்கி, எந்நாளும் - எப்போதும், திருவடி - தேவரீர் திருவடியை யடைந்த, பேரினத்துடனே - பேரினத்தவருடனே, சேராவண்ணம் - கூடாதபடி, ஆர் ஆக - அடியேனை யாரென நினைத்துக் கொண்டு, நான் அலைந்தேன் - நான் திரிந்தேன்?, அரசே! - அரசனே!, நீதான் - தேவரீர் தாம், அறிந்திருந்தும் - இவ் வுண்மையை யறிந்திருந்தும், என் - யாதுக்கு, மாயையில் - மாயையிலே, அழுந்த வைத்தாய் - மூழ்க வைத்தாய்? என்க.

(வி - ரை) உலகத்தினர் சிற்றினத்தவரெனவும், பேரினத்தவரெனவும் இருவகைப்படுவர். சிற்றினத்தவராவார் பெத்தர். பேரினத்தவராவார் முத்தர். பெத்தர், பகிர்முக விசாரணையோடு கூடியவர். முத்தர், அந்தர்

முக விசாரணையோடு கூடியவர். ஆகலின், முன்னவரினின்று நீங்கிப் பின்னவரோடு கலந்து வாழவேண்டுவது அவசியமே யாயினும், அங்ஙனஞ் செய்யாதிருந்தே னென்பார், 'நானலைந்தேன்' என்றனர். இதற்குக் காரணம் மாயை யென்பார், 'மாயையிலே னழுந்தவைத்தாய்?' என்றனர். (6)

வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
வசமெனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ? பொய்யோ?
சிறியேற்கிங் குளவுரையாய்! திகையா வண்ணம்.

(இ - ள்) வைத்த - சேகரித்து வைத்த, பொருள் - பொருளும், உடல் - உடலும், ஆவி - ஆவியும், மூன்றும் - ஆகிய மூன்றும், நின் - தேவரீரது, கைவசம் எனவே - கையடையென்று, யான் - அடியேன், கொடுக்க - தத்தஞ் செய்ய, வாங்கிக்கொண்டு - தேவரீர் ஏற்றுக்கொண்டு, சித்தமிசை - என் மனத்தில், புகுந்ததுதான் - பிரவேசித்ததுதான், மெய்யோ - உண்மையோ?, பொய்யோ - அபத்தமோ?, இங்கு - இவ்விடத்தில், திகையா வண்ணம் - மயங்காவண்ணம், சிறியேற்கு - சிறியேனுக்கு, உளவு உரையாய்! - உளவினை உரைப்பாயாக!, என்க.

(வி - ரை) எனது பொருள், எனது உடல், எனது உயிர் என்று சுதந்திரம் பாராட்டிக்கொண்டு வாழுமளவும் முதல்வன் வெளிப்படா னாகலினாலும், தற்சுதந்திர மிழந்து முப்பொருளையும் சிவார்ப்பணஞ் செய்தபின்னரே முதல்வன் வெளிப்படுவ னாகலினாலும், 'வாங்கிக்கொண்டு, சித்தமிசைப் புகுந்தது' என்றனர். ஈண்டுப் 'புகுந்தது' என்றது திரோதான சத்தியா விதுகாறு மறைந்திருந்த முதல்வன் வெளியாயின அவசரமாம். இது சீவன்முத்தநிலை. இந்நிலை யடைந்தும் பழைய பிராரத்துவ வாசனை யொரோவழி வந்து தாக்குதலின் 'புகுந்ததுதான் மெய்யோ? பொய்யோ?' என்றனர். (7)

திகையாதோ? எந்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தாய்; உண்டு டுத்து
வாழ்ந்தேனு னிரண்டுகான் மாடு போலே.

(இ - ள்) திகையாதோ - என் மனமானது மயங்காதோ?, எந்நாளும் - எக்காலமும், பேரானந்த - பேரின்பமாகிய, தெள் அமுதம் - தெளிந்த அமுதத்தை, உதவாமல் - கொடாமல், திவலை - சிறிது, காட்டி - காட்டி, வகையாக - வகை வகையாக, அலக்கழித்தாய் - அலையவைத்தாய்; இரண்டு கால் - இரண்டு கால்களையுடைய, மாடுபோல்-மாடுபோலே, உண்டு உடுத்து - உண்டும் உடுத்தும், வாழ்ந்தேன் நான் - நான் வாழ்ந்தேன், என்க.

(வி - ரை) 'ஆகாயத்தில் மின்னல் அடிக்கடி காட்டி மறைந்தால் போல' ஒவ்வோர மயத்துத் திருவருள் தோன்றித் தோன்றி மறைதலின், 'திவலை காட்டி' எனவும்; பூரணமா யென்றுந் திருவருள் விளங்காமையின், 'திகையாதோ' எனவும்; திருவருளைக் கிரகிக்கும் அறிவிருந்தும் கிரகிக்காமையால், 'மாடுபோலே வாழ்ந்தேன்' எனவுங் கூறினர். (8)

மாடு,மக்கள், சிற்றிடையார், செம்பொ னாடை,
வைத்தகன தனமேடை மாட கூடம்,
வீடுமென்பாற் றொடர்ச்சியோ? இடைவி டாமன்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும்.

(இ - ள்) மாடு - மாடு, மக்கள் - பிள்ளைகள், சிற்றிடையார் - மாதர்கள், செம்பொன் - உயர்ந்தபொன், ஆடை - வஸ்திரம், வைத்த - சேகரித்து வைத்த, கனதனம் - பெருந் திரவியம், மேடை - உபரிகையோடுங் கூடிய, மாடகூடம் - மாளிகை சாலைகள், வீடும் - இவை யனைத்தும் விட்டோடுகின்ற, என்பால் - என்னிடத்து, தொடர்ச்சியோ - தொன்றுதொட்டு வரும் தொடர்ச்சியை யுடையனவோ?, இடைவிடாமல் - இடையீடின்றி, மிக்க கதி - மேன்மைப்பட்ட கதியாகிய, வீடு அன்றோ - மோட்சமல்லவோ, விளங்கல்வேண்டும் - உண்டாகவேண்டும், என்க.

(வி - ரை) மாடு, மக்கள், ஆடை, தனம், வீடு அனைத்தும் உலக வாழ்வாகலின் இவை யனைத்தும் பொய்யென்பார், 'வீடுமென்பாற் றொடர்ச்சியோ' எனவும், சிவபோகமே மெய்யென்பார், 'மிக்ககதி வீடன்றோ' எனவும் கூறினர். சிவபோகசாரம்: "மின்போலத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்து, மென்போ லிகடிரமென் றெண்ணுவார் - தன்போத, மில்லார் சிவபோக மென்று மருந்திடுவார், நல்லார் திரமிது வென்றார்." என்றதனாற் காண்க. (9)

விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே! போதகமே! விமல வாழ்வே!
களங்கரகி தப்பொருளே! என்னை நீங்காக்
கண்ணுதலே! நாதாந்தக் காட்சிப் பேறே!

(இ - ள்) விளங்க - தெரியும்படி, எனக்கு - அடியேனுக்கு, உள்ளுள்ளே - மனத்தினுள்ளே, விளங்காநின்ற - பிரகாசியாநின்ற, வேதகமே! - வேத வித்தே!, போதகமே! - ஞானவித்தே!, விமலவாழ்வே! - நின்மல வாழ்வே!, களங்க ரகிதப் பொருளே! - மாசற்ற மூர்த்தியே!, என்னை - அடியேனை, நீங்கா - பிரியாத, கண்ணுதலே! - நெற்றிக் கண்ணனே!, நாதாந்தம் - நாததத்துவத்தின் முடிவில், காட்சி - தரிசனமருளுகின்ற, பேறே! - இலாபமே!, என்க.

(வி - ரை) வேதவித்தாயும், ஞானவித்தாயும், மலரகிதமாயும், நாதாந்தத்தின்கண்ணே விளங்குவதாயுமுள்ள நிஷ்கள வடிவினனாயினும்

ஆன்மாக்களின் அனுக்கிரகமாக சகளவடிவனே யென்பார், 'கண்ணுதலே' என்றனர். முதல்வன் உயிருக்குயிராய் விளங்குபவனாகலின், 'விளங்க வெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற' என்றனர். "நீரா யுருக்கியென் னுருயிராய் நின்றானே" என்றதனாற் காண்க. (10)

நாதமே! நாதாந்த வெளியே! சுத்த
ஞாதுருவே! ஞானமே! ஞேய மே! நல்
வேதமே! வேதமுடி வான மோன
வித்தே! இங் கென்னையினி விட்டி டாதே!

(இ - ள்) நாதமே! - நாதரூபமே!, நாதாந்த - நாத முடிவாகிய, வெளியே! - சிதாகாயமே!, சுத்த - பரிசுத்தமான, ஞாதுருவே! - ஆன்மாவே!, ஞானமே! - ஞானமே!, ஞேயமே! - சிவமே!, நல் வேதமே! - சிறந்தவேதமே!, வேத முடிவு ஆன - வேதாந்தமாகிய, மோன வித்தே! - மவுனநிலையே!, இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, இனி - இனிமேல், விட்டிடாதே! - கைவிடாதே!, என்க.

(வி - ரை) ஞாதுரு வென்பது காண்பான், ஞானமென்பது காட்சி, ஞேயமென்பது காணப்படுபொருள்; இவற்றைத் திரிபுடி என்பர். பரம ஞான விளக்கம்: "அறியுமவ் வறிவு தானு யறிவிக்கு மறிவோ டொன்றி, லறிவொடா னந்தமாகி யதீதமாய் நின்ற தன்றே" என்றதனால் 'ஞாதுருவே! ஞானமே! ஞேயமே!' என்றனர். (11)

## கல்லாலின்

கல்லாலி னீழறனி லொருநால் வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றால்,
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ?

(இ - ள்) கல்லாலின் - கல்லால விருட்சத்தின், நீழல் தன்னில் - நீழலில், ஒரு நால்வர்க்கும் - சநகாதிகளாகிய நால்வர்க்கும், கடவுள் நீ - முதல்வனாகிய தேவரீர், உணர்த்துவதும் - உபதேசிப்பதும், கை காட்டு என்றால் - கைக்குறிப் பேயாமாயின், சொல்லாலே - அது சொல்லினாலே, சொலப்படுமோ - சொல்லத் தகுந்ததோ?, சொல்லும் தன்மை - சொல்லுந் தன்மையானது, துரும்புபற்றி - துரும்பு பற்றி, கடல் கடக்கும் - கடலைக் கடக்கும், துணிபே அன்றோ - துணிவினை நிகர்த்த தல்லவா?, என்க.

(வி - ரை) திருக்கயிலையிலே கல்லாலடியிலே முதல்வன் தட்சிணாமூர்த்தி கோலங்கொண்டு சனகர், சனத்குமாரர், சனந்தார், சனந்தனர், ஆகிய நால்வருக்கும் மோன நிலையினைச் சின் முத்திரையாற் காட்டி விளக்கின ராகலின், அவ்வுண்மையினை வைகரிவாக்கால் விளக்குவது கூடாதென்பார், 'சொல்லாலே சொலப்படுமோ?' என்றனர். மரக்கலங்கொண்டு கடல்கடப்பார் கரையேறுவர்; துரும்பைப்பற்றிக் கடல் 'கடப்பார் கரை ஏறலின்றிக் கடலி லழுந்திவிடுவர்; அதுபோல, சின்முத்திரையி னுண்மையறிந்தவர் பிறவிக்கடல் கடந்து முத்தியங்கரை யேறுவர். சொல்லாலே சொல்லித் திரிபவர் பிறவியி லழுந்துவர் என்பதாம். (1)

அன்றோ? ஆமோ? எனவுஞ் சமய கோடி
யத்தனையும் வெவ்வேறா யரற்ற நேரே
நின்றாயே! நினைப்பெறுமா றெவ்வா(று?) ஆங்கே
நின்னருள்கொண் டறிவதல்லா நெறிவே றுண்டோ?

(இ - ள்) அன்றோ - (உண்மைப் பொருள் இது) அல்லவோ?, ஆமோ - இதுதானோ?, எனவும் - என்றும், சமயகோடி அத்தனையும் - எல்லாச் சமயங்களும், வெவ்வேறாய் - வேறு வேறாக, அரற்ற - பிதற்றும்படி, நேரே - (அவரவர் கொள்கைக்கு) நேரே, நின்றாயே - நின்றனையே; நினை பெறும் ஆறு - உன்னைப்பெறும் வழி, எவ்வாறு? - எவ்வழி?, ஆங்கே - அவ்விடத்து, நின் - தேவரீர், அருள் கொண்டு - திருவருளைக் கொண்டு, அறிவது - உணர்வது, அல்லால் - அல்லாமல், நெறி - அறியும் வழி, வேறு உண்டோ - வேறுளதோ?, என்க.

(வி - ரை) முக்கூற்றுப் புறச்சமயத்தவர்களும் உண்மைச் சமயமின்னதென அறியாது தங்கள் தங்கள் கன்மத்துக் கீடாக வொவ்வொரு சமயத்தினைக் கற்பித்துக்கொண்டு, அச் சமயத்திற் பிரதிபாதிக்கப்படுந் தெய்வமே தெய்வமெனச் சாதிப்பது பிதற்றுரை யென்பார், 'வெவ்வேறா யரற்ற' என்றனர். அங்ஙன மரற்றினும் அவரவர் கொண்ட கொள்கை அதிகாரி பேதத்தால் உண்டாயினமையின் அத்தகையினர்கட்கும் அவரவர் கருத்தின்படி முதல்வனே விளக்கி யருள்வ னென்பார், 'நேரே நின்றாய்' என்றனர். 'சமயகோ டிகளெலாந், தந்தெய்வ மெந்தெய்வ மென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்ற தெது' என இவ்வாசிரியர் முன்னங் கூறிவைத்ததும் இக் கருத்துப்பற்றியே யென்க. அத்தகையினரும் அவரவர் கொள்கைகளை முதல்வ னருள்கொண்டே அறிவ ரென்பார், 'அருள்கொண் டறிவதல்லா னெறிவே றுண்டோ?' என்றனர். திருவாசகம்: "அவனரு ளாலே யவன்றாள் வணங்கி" என்றதனுற் காண்க. ()

நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ?
நிலநீர்தீக் கால்வானு நீய லாத

குறியாது மில்லையென்றால், யாங்கள் வேறோ?
கோதையொரு கூறுடையாய்! கூறாய்! கூறாய்!

(இ - ள்) நெறி பார்க்கின் - முறையாகப் பார்த்தால், நின்னை அன்றி - தேவரீரை யல்லாது, அகிலம் - உலகம், வேறோ - வேறாகுமோ, நிலம் - பூமியும், நீர் - நீரும், தீ - நெருப்பும், கால் - காற்றும், வானும் - ஆகாயமும், நீ அலாத - நீயல்லாத, குறி யாதும் இல்லை என்றால் - சிறிதும் அடையாளம் இல்லையெனில், யாங்கள் - யாங்கள் மாத்திரம், வேறோ - வேறாகுமோ?, கோதை - உமாதேவியை, ஒரு கூறு - ஒரு பாகமாக, உடையாய்! - உடையானே!, கூறாய்! கூறாய்! - திருவாய் மலர்ந்தருளு வாய்!, என்க.

(வி - ரை) பிரபஞ்ச காரியத்திற்குக் காரணமா யிருப்பது மாயை யாகையினாலும், அம் மாயை சடமாகலின் தானே காரியப்படா தாகலி னாலும், இதனைக் காரியப்படுத்துபவன் முதல்வ னாகலினாலும், 'நின்னை யன்றி யகிலம் வேறோ?' என்றனர். பிரபஞ்சக் கூறுகளாகிய பஞ்சபூதங் கட்கு முதல்வன் நிமித்த காரண னாகலின் 'நிலநீர்தீக்கால்வானு நீயலாத, குறியாது' என்றனர். இங்ஙனமே ஆன்மாக்களும் முதல்வன் ஆட்டுவிக்க ஆடுகின்ற தன்மையுடன் கூடியிருத்தலின் 'யாங்கள் வேறோ?' என்றனர். திருவாசகம்: "நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனா யமைந்தனனோ டெண்வகையாப் புணர்ந்துநின்றான்." என்றதனாற் காண்க.

கூறாய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்,
குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல வென்னை
வைத்தனையே! பரமே! நின் மகிமை நன்றே.

(இ - ள்) கூறு ஆய - கூறுகளை யுடையனவாகிய, ஐம்பூதம் - பஞ்ச பூதங்களா லாக்கப்பட்ட, சுமையை - தேகச் சுமையை, தாங்கி - சுமந்து; குணம் இலா - நற்குண மில்லாத, மனம் எனும் - மனம் என்கின்ற, பேய் - பேய் பிடித்த, குரங்கின் பின்னே - குரங்கின் பின்றொடர்ந்து, மாறாத - நீங்காத, கவலையுடன் - கவலையோடு, சுழல - சுழலும்படி, என்னை - அடி யேனை, வைத்தனையே! - வைத்தாயே!, பரமே! - பரம்பொருளே!, நின் - தேவரீரது, மகிமை - பெருமை, நன்று - அழகியது, என்க.

(வி - ரை) பஞ்சீகரிக்கப்பட்ட பஞ்சபூதத்தினைக் 'கூறாய ஐம்பூதம்' என்றார். அதாவது, பஞ்சபூதங்களையும் பத்தாகச் செய்து அவைகளின் பாதியை நன்னான்காகப் பிரித்து, சுவாமிசத்தை விட்டு இதராமிசத்திற் கூட்டிப் பஞ்சீகரணப்படுத்த ஸ்தூல பூத பௌதிகங்களாம். மனமானது நிமிடத்திற்கு நிமிடம் மாறிமாறிப் பிரபஞ்ச முழுவதும் சுழன்றுகொண் டலைவதனால், இயற்கையிலேயே சேட்டையுடன் கூடிய குரங்கானது பேயாற் பிடியுண்டாலென்ன நிலையினை யொக்கும் மன மென்றனர். (4)

நின்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ?
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
யின்றெனக்கு வெளியானால், எல்லாம் வல்ல
விறைவா! நின் னடியருட னிருந்து வாழ்வேன்.

(இ - ள்) நன்றெனவும் - நன்மை யென்றும், தீது எனவும் - தீமை யென்றும், எனக்கு - அடியேனுக்கு, இங்கு - இவ் வுலகில், உண்டோ? - உளதோ?, நீ - நீ, நான் ஆகி - நானாயிருந்த, நியாயம் - நியாயமானது, இன்று - இப்பொழுது, எனக்கு - அடியேனுக்கு, சற்று - சிறிது, வெளி ஆனால் - தெரிந்தால், எல்லாம் வல்ல - எல்லாம் செய்யவல்ல, இறைவா! - இறைவனே!, நின் - தேவரீரது, அடியருடன் - அடியாரோடு, இருந்து - கூடியிருந்து, வாழ்வேன் - சுகசீவியாவேன், என்க.

(வி - ரை) நன்மையும் தீமையும் கன்மத்திற்குத் தக்கபடி நிகழுமாகலினாலும், அக் கன்மஞ் சடமாகலினாலும், அக் கன்மத்தினை முதல்வனே காரியப் படுத்துவனாகலினாலும், 'நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ?' என்றனர். 'நானாகி நீ யிருந்த நியாயம்' என்றது சுத்தாத்துவித பாவனை. அதாவது, உடம்பே நானென்றும், அது நீக்கிய வழிப் பிரமம் நானென்றும், இங்ஙனம் விபரீதமாக வுணர்கின்ற உயிரானது சுட்டுணர்வுட்பட்ட அப் பாசமுமன்று, சுட்டுணர் விறந்துநின்ற அப் பதிப்பொருளுமன்று, இரண்டற்கும் வேறு எனக் கண்டு வேறாகிய பாசத்தை மேற்கூறிய வாற்றா லொருவி, எனைப் பதிப்பொருள் வேறாயினும் வியாப்பிய வியாபக பாவகத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றி னொளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினையும் இறைவன் கலப்பினையும் நோக்கி நின்று, கருடோகம்பாவனை யொருவன் செய்யப் பெறுமாயின், அக் கருடன் அம் மாந்திரிகனுக்கு வேறாத லின்றி யத்துவிதமாய்த் தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறுபோல, முதல்வனு மிவனில் வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்களை நீக்கிச் சுத்தனாகச் செய்தல் வேதாந்த மகா வாக்கியத்திற்கும் இதுவே பொருளாகக் கொள்க. 'நானாகி நீயிருந்த நியாயம்' என்பதற்கு 'ஆன்மாவைப் பரமான்மாவாகத் தெளிந்துகொண்ட நியாயம்' எனப் பொருள் கோடல் பொருந்தாதோ எனின், அது "யாங்களே கடவுளென்றிடு பாதகத்தவரும்" எனவும், "சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே யல்லும் பகலு மரற்றுவதென்" எனவும் இவ் வாசிரியரே முன்னங் கூறி அப் பொருளை மறுத்திருத்தலினாலும், "வழித்தலைவான் சுழல்கின்றே னுன்னைப்போ லென்னைப் பாவிக்கமாட்டேன்" எனக் கட்டளையிட்டிருத்தலினாலும், அவ் வுரை பொருந்தாது. அன்றியும், இச் செய்யுளிலேயே 'அடியருட னிருந்து வாழ்வேன்' என்ற வாக்கியமு மப்பொருளை மறுக்கும்.

வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையா மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமே! நின் னானந்தப் பார்வை யெங்கே?

(இ - ள்) வாழ்வு எனவும் - வாழ்வென்றும், தாழ்வு எனவும் - தாழ்வென்றும், இரண்டு ஆ - இருவிதமாக, பேசும் - விவகரிக்கின்ற, வையகத்தார் - உலகத்தாருடைய, கற்பனை ஆம் - கற்பனையென்கிற, மயக்கம் ஆன - மயக்கமாகிய, பாழ் வலையை - பாழாகிய வலையினை, கிழித்து - சிதைத்து, உதறி - உதறி விட்டு, செயல் போய் வாழ - செயலற்று வாழ்தற்கு, பரமே! - பரம்பொருளே!, நின் - உனது, ஆனந்தப் பார்வை - ஆனந்த நோக்கம், எங்கே - எங்கே?, என்க.

(வி - ரை) வாழ்வால் வருவது விருப்பும், தாழ்வால் வருவது வெறுப்பு மாகலினாலும், இவ் விருப்பு வெறுப்பு மேலைச் சென்மத்திற்கு வித்தாய் முடியுமாகலினாலும், வாழ்வினையும் தாழ்வினையும் பெரியோர் சமமாகப் பார்ப்பா ராகலின் இவை கற்பனை யெனவும், இவற்றினிடத்துச் சமபுத்தி பாராட்ட வேண்டு மென்பார், 'கிழித்துதறி' எனவும் கூறினர். சிவஞான சித்தியார்: "மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவு மாகி, ஞாலத்து வருமா போல நாம்செய்யும் வினைக ளெல்லாம், ஏலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட் கெல்லா, மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே." என்றதனாற் காண்க. (6)

'எங்கேயெங் கேயருளென் றெமையி ரந்தா
னேழை' யிவ னெனவுமெண்ணி யிச்சை கூறு
மங்கேயங் கேயெளிவந் தென்னை யாண்ட
ஆரமுதே! உனைக்காண்பா னலந்து போனேன்.

(இ - ள்) ஏழை இவன் - ஏழையாகிய இவன், அருள் - திருவருள், எங்கே எங்கே என்று - எவ்விடத்து எவ்விடத்து என்று, எம்மை இரந்தான் எனவும் - எம்மை யாசித்தானெனவும், எண்ணி - நினைந்து, இச்சை கூறும் - யான் விரும்புகின்ற, அங்கே அங்கே - அவ்வவ்விடங்களிலே, எளி வந்து - எளிதில் வந்து, என்னை ஆண்ட - அடியேனை யாட்கொண்ட, ஆர் அமுதே! - அரிய வமுதமே!, உன்னை - தேவரீரை, காண்பான் - தரிசிக்கும் பொருட்டு, அலைந்துபோனேன் - துன்பப்பட்டுப்போனேன், என்க.

(வி - ரை) உபதேசமாலை: "நாடுநக ராலயங்க ளுகமுழை யெங்கெங்குந் தேடியுள ளனைந்து திகைத்தலறி" என்றதற் கேற்ப ஆசாரியன் திருவருள் அடையவேண்டு மெனு மவாவுடையார் பல விடங்களு நாடிச் செல்வ ராகலின், 'எங்கேயெங் கேயருளென்று......அலந்துபோனேன்'

என்றனர். அங்ஙன நாடவே ஆசாரியன் அங்கங்கே வந்து ஆட்கொண்டன ரென்பார், 'அங்கேயங்கேயெளிவந் தென்னை யாண்ட' என்றனர். (7)

போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கி னேன் ; என்
ஞானநா யகனே ! நின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ ?

(இ - ள்) போன நாட்கு - சென்ற நாள்களைக்குறித்து, இரங்குவதே - இரங்கலே, தொழில் ஆ - தொழிலாக, இங்ஙன் - இவ்வாறு, பொருந்தும் நாள் அத்தனையும் - பொருந்திய யெல்லா நாள்களையும், போக்கினேன் - கழித்தேன், என் - அடியேனது, ஞான நாயகனே - ஞானத் தலைவனே !, நின் - தேவரீரது, மோன - மவுனமான, ஞான நாட்டம் - ஞான நோக்கத்தை, உற்று - அடைந்து, வாழ்ந்திருக்கும் நாள் - வாழ்ந்திருக்கும் நாள், எந்நாளோ - எந்த நாளோ ?, என்க.

(வி - ரை) பசுபதி பாசவிளக்கம் : "உலக நெருப்பைக் கடந் தொழியா ஞான வுததி மடுப்பேனு" என்றபடி இனித் திருவருள் எப் போது கிட்டுமோவென வெண்ணி யெண்ணி யிரங்கவேண்டு மென்பார், 'ஞான, நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ ?' எனவும், சென்ற காலத்தைப்பற்றி யெண்ணி யிரங்கலிற் சிறிதும் பிரயோசன மில்லை என் பார், 'போனநாட் கிரங்குவதே தொழிலா' எனவும் கூறினர். பட்டினத் தார் : "போனத்தை மீள நினைக்கின்றனை யென்ன புத்தியிதே" என்றத னாற் காண்க. (8)

நாட்பட்ட கமலமென்ன விதய மேவு
நறுந்தேனே ! துன்மார்க்க நாரி மார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காயமென்றோ
வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி ?

(இ - ள்) நாள்பட்ட - அன்றலர்ந்த, கமலம் என்ன - தாமரை மலர் போல வெண்ணி, இதயம் - மனதில், மேவும் - பொருந்திய, நறும் தேனே!- நறுவிய தேனே!, துன்மார்க்கம் - தீய நெறியுள்ள, நாரிமார் - மாதர்க ளுடைய, கண் - கண்களாகிய, வாள் பட்ட - வாளாயுதம் தாக்கிய, காயம் - சரீரம், இந்த காயம் - இச் சரீரம், வல் கூற்றும் - கொடிய இயமனும், உயிர் - உயிரினை, பிடிக்க வரும் - கவர வருகிற, அ நீதி - அந்த நியாயம், என்றோ - எக்காலமோ ?, என்க.

(வி - ரை) பட்டினத்தார் : "பெண்ணாகி வந்தொரு மாயப் பிசாசம் பிடித்திட் டென்னைக், கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத் துப், புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க, வெண்ணா துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே!" என்றதனால்,

'துன்மார்க்க நாரிமார்கள்' என்றனர். மாதர்கள் தம் வாயாற் பேசிக் கிரகிக்கவேண்டிய வினைத்தையும் கண்ணாலேயே கிரகித்துக்கொள்ளுவ ராகலின், கண்ணையெடுத்துக் கூறினர். திருக்குறள்: "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க, ளென்ன பயனு மில." என்றதனுற் காண்க. அக்கண் வாளையொத்துப் புருடர்க்கு அதிகத் தீங்கு செய்தலின், 'கண், வாட்பட்ட காயம்' என்றனர். திருவருட்பா: "பாரிடையார் - எண்வா ளெனிலஞ்சி யேகுகின்ற யேந்திழையார், கண்வா ளறுப்பக் கனிந்தனையே." என்றதனுற் காண்க. (9)

நீதியெங்கே? மறையெங்கே? மண்விண்ணெங்கே?
நித்தியரா மவர்களெங்கே? நெறிதப் பாத
சாதியெங்கே? ஒழுக்கமெங்கே? யாங்க ளெங்கே?
தற்பர! நீ பின்னு மொன்றைச் சமைப்ப தானல்.

(இ - ள்) தற்பர! - தற்பரனே!, நீ - தேவரீரே, பின்னும் ஒன்றை - வேறொரு அண்டத்தினை, சமைப்பது ஆனல் - சமைப்பதாயின், நீதி எங்கே - இப்போது வழங்கிவரும் நியாய மெங்கே?, மறை எங்கே - வேதங்கள் எங்கே?, மண் விண் எங்கே - பூவுலகம் விண்ணுலகம் எங்கே?, நித்தியர் ஆம் - நித்தியர்களாகிய, அவர்கள் எங்கே - அவர்க ளெங்கே?, நெறி தப்பாத - ஒழுக்கம் தவறாத, சாதி எங்கே - சாதி யெங்கே?, ஒழுக்கம் எங்கே - ஆசாரம் எங்கே?, யாங்கள் எங்கே - நாங்கள் எங்கே?, என்க.

(வி - ரை) இவ் வுலகமும் இவ் வுலகத்தின் சகல போகங்களும் முதல்வன் ஆணைமாத்திரமாய் நிகழுமெனவும், இவைகளில் சித்தமின்றி வேறொரு உலகத்தினை யுண்டாக்கிவிடுவானாயின் இவ் வுலகம் பாழாய்விடுதலிற் றடையில்லை யாகலின் சர்வமும் அவன் சித்தத்தின் வழி நடக்கு மென்பதாம். பட்டினத்தார்: "தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டால், பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே, மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம் மேடையெங்கே, கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண் மயக்கே." என்றதனுற் காண்க. (10)

ஆனலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்லவென்று
போனலும் யான்போவ னல்லான் மோனப்
புண்ணியனே! வேறுமொரு பொருளை நாடேன்.

(இ - ள்) ஆனலும் - ஆயினும், இங்கு - இவ்விடத்து, யான் எனது - யான் எனது என்னும் அகங்காரம் மமகாரம், அற்ற எல்லை - ஒழிந்த இடம், அது போதும் - அதுவே போதுமானது; அது - அத்தகைய இடம், கதிதான் அல்ல என்று - மோட்சம் அல்லவென்று, போனலும் - நீங்கினும்; யான் - அடியேன், போவன் அல்லால் - அந்த நிலையிலேயே போவ

னல்லது, மோன புண்ணியனே ! - மவுனத்தை யுணர்த்தும் புண்ணிய ரூபனே !, வேறும் - அதற் கன்னியமாக, ஒரு பொருளை - வேறு பொருளை, நாடேன் - விரும்பேன், என்க.

(வி - ரை) யானென்றும் எனதென்றும் இந் நிலைக்கண் கூறப்படுவ தாகிய மயக்கத்தினை யறுத்துள்ள ஒருவன் யாவன் அவன் மெய்யுணர்வோ னாகி யுயர்ந்த வுலகம் பெறுவானாகலின், அந்த நிலையே போதுமென்பார், 'ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை, யதுபோதும்' என்றனர். திருக் குறள்: "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுல கம் புகும்." என்றதனாற் காண்க. (11)

பொருளே ! நின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோ? தற் போத முண்டோ?
இருடானுண் டோ ? அல்லால் வெளிதா னுண்டோ ?
இன்பமுண்டோ? துன்பமுண்டோ? யாமங் குண்டோ?

(இ - ள்) பொருளே ! - பரம்பொருளே !, நின் பூரணம் - தேவரீரது திருவருளின் நிறைவு, மேலிட்ட காலம் - அடியேனுக் கதிகரித்த காலத் தில், போக்கு வரவு உண்டோ - போக்கு வரவுகள் உளதோ ?, தற்போதம் உண்டோ - முனைவு உளதோ ?, இருள் தான் உண்டோ - அந்தகார முண்டோ ?, அல்லால் - அன்றி, வெளிதான் உண்டோ - ஒளிதா னுளதோ?, இன்பம் உண்டோ - சுக முளதோ ?, துன்பம் உண்டோ - துக்க முளதோ?, யாம் அங்கு உண்டோ - நாங்கள் அவ்விடத்துளமோ ? (ஒன்றுந் தோன் றாது), என்க.

(வி - ரை) சூரியனுடைய ஒளியில் கண்ணானது இரண்டறக் கலந்து நின்றபோது உலகந் தோன்றாதவாறுபோல, அகண்டாகார பரிபூரணமாய் உயிர்க்குயிராய் நிற்கின்ற முதல்வனது திருவருளில் ஆன்மா இரண்டறக் கலந்து நின்றபோது ஒன்றுந் தோன்றா தென்பார், 'நின் பூரணமே விட்ட காலம், போக்குவர வுண்டோ' என்றனர். பதிபசுபாச விளக்கம்: "ஆத வன் றன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்தபோது, ஆதவ னொளிமே விட்டே யகிலந்தோன் றாத வாபோற், சேதனச் சிவத்தை நோக்கிச் செகத் தினை நோக்குங் காலைச், சேதனச் சிவமே விட்டுச் செகமெலா மறைந்து போமே." என்றதனாற் காண்க. (12)

உண்டோ ? நீ படைத்தவுயிர்த் திரளி லென்போ
லொருபாவி ; தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளளவுத் துறவு மின்றிக்,
காசினிக்கு ளலைந்தவரார் ? காட்டாய் ! தேவே !

(இ - ள்) நீ - தேவரீர், படைத்த - உண்டாக்கின, உயிர் திரளில் - ஆன்ம கோடியுள், என்போல் - என்னைப்போல, ஒரு பாவி - ஒரு பாவி,

உண்டோ - உளதோ ?, தேகாதி - தேகமுதலாகச் சொல்லப்பட்ட, உலகம் - உலகமானது, பொய் ஆ - பொய்யாயிருக்க, கண்டேயும் - தெரிந்தும், எள் அளவு - எள்ளத்தனையாகிய, துறவும் இன்றி - துறவும் இல்லாமல், காசினிக்குள் - உலகத்துள், அலைந்தவர் - உழன்றவர்கள், ஆர் - யாவர் ?, காட்டாய் ! - காட்டுவாய் !, தேவே ! - கடவுளே !, என்க.

(வி - ரை) பிரபஞ்ச மனைத்தும் எந்நாளும் ஒரு படித்தாக நிலையுறுதலின்றி நாளும் நாளும் காரியப்பட்டு வருதலைப் பிரத்தியட்சமாக அனுபவித்து வந்தும், அவற்றில் வெறுப்புண்டாகிய அக் காரியப்பாட்டால் விளையும் சுகதுக்கங்களினின்று நீங்கித் தனித்து வாழுதலின்றி, மேலும் மேலும் அக் காரியப் பாட்டினை யனுபவிப்பா னுழலுகின்றேனென்பார், 'துறவுமின்றிக், காசினிக்கு ளலைந்தவரார் ?' என்றனர். (13)

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே ! மொழிக்குமொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்று மோ ?தான்.

(இ - ள்) தேவர் எல்லாம் - பிரமாதி தேவ ரனைவரும், தொழ - வந்து வணங்குதலால், சிவந்த - செவந்த, செந்தாள் - செவ்விய திருவடிகளையும், முக்கண் - திரிநேத்திரங்களையு முடைய, செம் கரும்பே ! - செம்மையாகிய கரும்பே !, மொழிக்கு மொழி - சொல்லுக்குச் சொல், தித்திப்பு ஆக - உருசியாக, மூவர் சொல்லும் - மூவர் பாடிய, தமிழ் - தமிழ்ப் பாடல்களை, கேட்கும் - கேட்கும், திருச் செவிக்கு - திருச் செவிகளுக்கு, மூடனேன் - மூடனாகிய நான், புலம்பிய சொல் - புலம்பிய சொற்கள், முற்றுமோ - ஏற்கப் பெறுவனவோ ?, என்க.

(வி - ரை) திருக் கயிலையிலே திருவோலக்கங்கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீகண்ட பரசிவன் றிருவடியில், பிரமாதி தேவர்கள் தினமும் வந்து பணியுந்தோறும் அவர்கள் திருமுடி படுதலினால் அத்திருவடி சிவந்திருக்கு மென்பார், 'சிவந்த செந்தாள்' என்றனர். மூவராவார்: ஆளுடையபிள்ளையார், ஆளுடையவரசு, ஆளுடைய நம்பி எனப்படுவார். சிந்தைக் கினிதாயும், செவிக்கினிதாயும், வாய்க்கினிதாயும், தேன் - பால் - தீங்கன்னல் - அமுது முதலிய வொப்ப இனித்து எவரையும் சிவானந்தமய மாக்குதலின், 'மொழிக்குமொழி தித்திப்பாக' என்றனர். ஈண்டு 'தமிழ்' என்றது திருக்கடைக்காப்பு, திருப்பாட்டு, தேவாரமாகிய மூன்றனையும். இவற்றில் முதல்வனுக்கு அதிகப் பிரிய மென்பார், 'தமிழ் கேட்குந் திருச்செ விக்கே' என்றனர். "மூவர்தமிழ்க் குருகரன்" எனவும், "ஒழித்திடும் பவப்பகை விரைந்துள்ளமே யாது மூதுணர்வோர் முற், பழிச்சு பாடலை யாற்கவை விடர்க் கிளம்பாவைய ருரைபோலும்." எனவும் வருவனவற்றுற் காண்க. (14)

முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு ?
மூதறிவுக் கினியாய் !நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை; ஐயோ ! ஐயோ !
பாவிபடும் கண்கலக்கம் பார்த்தி லாயோ ?

(இ - ள்) எனக்கு - அடியேனுக்கு, இனி - இனி, ஆனந்த வாழ்வு - சுக வாழ்வு, முற்றுமோ - கிட்டுமோ?, மூதறிவுக்கு - பேரறிவிற்கு, இனியாய் ! - இனிமையானவனே !, நின் - தேவரீரது, முளரி - தாமரை மலர் போன்ற, தாளில் - திருவடிகளில், பற்றுமோ - விருப்பமோ, சற்றும் இல்லை - சிறிதுமில்லை ; ஐயோ ! ஐயோ ! - அந்தோ ! அந்தோ !, பாவி படும் - பாவியேன் அனுபவிக்கின்ற, கண் கலக்கம் - கண் கலக்கத்தை, பார்த்திலாயோ ? - பார்த்திலாயோ ?, என்க.

(வி - ரை) முதல்வனுடைய திருவடித் தாமரைமலரில் பற்றில்லா தாருக்கு ஆனந்தவாழ்வு உண்டாத லில்லையாகலின், சற்றும் பற்றிலாதவ னுக்கு எங்ஙனங் கிடைக்குமெனப் பரிதபித்துச் சொல்வார், 'ஐயோ ! ஐயோ !' என்றனர். (15)

பார்த்தனவெல் லாமழியும் ; அதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்க பரமே ! மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ ?

(இ - ள்) பார்த்தன - கண்ணாற் கண்டன எல்லாப் பொருளும், அழியும் - அழியாநிற்கும் ; அதனால் - ஆகையினால், சுட்டி பாராதே - சுட்டிப் பார்த்திடாதே, பார்த்திருக்க—, பரமே ! - பரம்பொருளே !, மோன மூர்த்தி வடிவாய் - மவுனகுரு வடிவாகி, உணர்த்தும் - அறிவுறுத்திய, கை காட்டும் உண்மை - கை காட்டலின் உண்மையானது, முற்றி - முற்றுப்பெற்று, எனது - அடியேனது, அல்லல் வினை - துன்பத்திற்கேது வாகிய கருமங்கள், முடிவது - முடிவு பெறுவது, என்றோ - எக்காலமோ ?, என்க.

(வி - ரை) ஆன்மாவாற் சுட்டி யறியப்படும் பொரு ளனைத்தும் அசத்தியமுமாய் நிலைநில்லாததுமா யிருத்தலின், 'பார்த்தனவெல் லாமழி யும்' என்றனர். சுட்டுப் பொருள்களில் ஒரு சாரெனவே யன்றி அனைத்து மசத்தாத லில்லையெனுந் தார்க்கிகரை நோக்கிச் சுட்டுப்பொரு ளனைத்தும் அசத்தென்பதுபற்றி 'எல்லாம்' என்றனர். சிவஞானசித்தியார் : "அசித் தாம் சுட்டியுணர் பொருளான வெல்லாம்" என்றதனாற் காண்க. ஆகலின், இச் சுட்டுப்பொருள்களைத் தற்போத முன்னிட்டுப் பாராமல் திருவருளை முன்னிட்டுப் பார்த்தல் வேண்டு மென்பார், 'பாராதே பார்த்திருக்க' என்றனர். முதல்வன் சகளீகரித்து வந்து குருவடிவாகிச் சின்முத்திரை

காட்டி யாட்கொண்டாலல்லது வினை யொழியா தென்பார், 'அல்லல் வினை முடிவ தென்றோ?' என்றனர். (16)

'என்றுளைநீ யன்றுளம்யாம்' என்ப தென்னை?
இதுநிற்க, எல்லாந்தா மில்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்ப டைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்தி டாதே?

(இ-ள்) நீ - தேவரீர், என்று உளை - என்று உள்ளாய், அன்று - அக்காலத்தும், யாம் - யாங்களும், உளம் - உள்ளோம், என்பது - என்று சொல்வது, என்னை - என்ன?, இது நிற்க - இது கிடக்க, எல்லாம் தாம் - எல்லாப் பொருள்களுமே, இல்லை என்றே - இல்லையாமாறே, பொன்றிடச் செய் - அழித்திடச் செய்தலில், வல்லவன் - வல்லவனாகிய, நீ - நீயே, எம்மை படைக்கும் - எங்களைப் படைக்கின்ற, பொற்பு உடையாய் - பொலி வினை யுடையாய், என்னின் - என்றால், அது பொருந்திடாதே - அது பொருந்திடாதோ?, என்க.

(வி-ரை) என்று பதி யுண்டோ அன்றே ஆன்மா வுளராகி எக் காலத்தும் பதியும் பசுக்களும் அநாதி நித்தியராய் விளங்கலின், 'என் றுளைநீ யன்றுளம் யாம்' என்றனர். திருமந்திரம்: "பதிபசு பாச மெனப் பகர் மூன்றில், பதியினைப் போலப் பசுபாச மநாதி" என்றதனாற் காண்க. இக் கருத்தினையே இவ்வாசிரியர் முன்னமும், 'என்றுநீ யன்றுநா னுன் னடிமை யல்லவோ' என்றனர். இங்ஙனமாயின், 'பொன்றிடச் செய் வல்லவன்' என்றும், 'படைக்கும் பொற்புடையான்' என்றும் சங்காரத் தையும் சிருட்டியையும் சொல்லுவானேனெனின், சங்காரமாவது கன்மத் தினா லலைப்புண்ணு மான்மாக்களை யொடுக்கி யிளைப்பாற்றுகை. அங்ஙன மொடுங்கிய காலத்து மலத்தோடு மொடுங்கினராகலின் அம் மல நீங்கு கைப் பொருட்டாகத் தனு கரண புவன போகங்களோடுங் கூட்டுதல் சிருஷ்டி. இங்ஙனங் கூறுக்கால் பதி பசு பாசம் அநாதியென்று கூறி சங்காரமும் சிருட்டியும் சொல்வது முரண்படு மென்பார், 'பொருந்தி டாதே' என்றனர். இதனால் ஏகான்மவாதிகளும் சூனியோபாதான வாதி களும் மறுக்கப்பட்டனர். (17)

பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
எம்பெருமான்! யான்கவலை யெய்தாக் காலம்?

(இ-ள்) பொருந்து - பொருந்திய, சகம் அனைத்தினையும் - உலக முழுவதினையும், பொய் பொய் என்று - அநித்தியமென்று, புகன்றபடி - தீர்மானித்தபடி, மெய் என்றே - (அங்ஙனம் பொய்யென்றதே) சத்திய

மென்றே, போதரூபத்து - ஞானரூபத்துடன், இருந்தபடி - இருந்த வண்ணம், என்று இருப்பது - எக்கால மிருப்பது?, அன்றே அன்றே - அக்காலத்தி லல்லவோ, எம்பெருமான்! - எமது பெருமானே!, யான் - நான், கவலை - துன்பம், எய்தாக்காலம் - அடையாத காலம், என்க.

(வி - ரை) ஈண்டு 'சகம்' என்பது பஞ்சபூதக் கூட்டத்தை; பூமி நீர் - தீ - வளிவான மிவைகள். ஆகாய முதலாக வொன்றி னொன்றாகத் தோன்றிக் காரியப்பட்டுநின் றுதிக்கு முறையால், 'சக மனைத்தினையும் பொய்பொய்' என்றனர். ஈண்டு 'பொய்' என்றதற்குச் சூனியமெனக் கொள்ளாது 'திரிவு' எனப் பொருள் கோடல் வேண்டும். அங்ஙனம் கொள்ளாக்கால் ஆசிரியர் கருத்தினுக்கு மாறுபட்டு, "கருதுகாரண முண்டாகக் காரிய முள்ள தாகி, வருதலா லநாதி வையம்" என்னுஞ் சுருதியுடன் முரணும். சகம் எக்காலத்தும் நிலைபுறுதலின்றிக் காரண காரியப் பட்டுக் கொண்டே யிருக்கும் எனு மெய்யினை யுணர்ந்தவரே கவலையற் றிருப்பா ரென்பார், 'கவலை யெய்தாக் காலம்' என்றனர். (18)

காலமே! காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே! காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே! எனைவாவா வென்றுகூவிக்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ? சொல்லாய்!

(இ - ள்) காலமே! - காலமே!, காலம் ஒரு மூன்றும் காட்டும் - முக்காலங்களையும் காட்டுகின்ற, காரணமே! - காரணமே!, காரண காரியங்கள் - காரண காரியங்கள், இல்லா - அற்ற, கோலமே! - உருவே!, என்னை - என்னை, வா வா என்று கூவி - வாவா என்றழைத்து, குறைவு அற - குறைவு நீங்க, நின் அருள் கொடுத்தால் - நினது அருளினைக் கொடுத்தால், குறைவோ - குறைவாமோ?, சொல்லாய்! - சொல்லுவாய்!, என்க.

(வி - ரை) காலமானது சடமாய், அநேகமாய், நித்தியமாய் முதல்வனது சனனி, ரோதயித்ரி, ஆரணி யென்னும் சத்திகளால் அதிட்டிக்கப் பட்டுச் சிருட்டி முதலிய கிருத்தியங்களுக்குத் துணைக்காரணமாக விருக்கவும், முதல்வனை யீண்டுக் 'காலமே' என்ற தென்னையெனின், உலக மெல்லாங் காலத்தாற் றோன்றி நின்று அழிந்து காரியப்படு மாகலின், அக்கால மவற்றைக் காரியப்படுத்துங்கால் எல்லாப் பொருட்குந் தான் ஆதாரமாய்த் தனக்கோ ராதாரமின்றி நிற்றல்போல, முதல்வன் நிராதாரமாய் நின்றே காரியப்படுத்தலின் ஒருவாற்றானுவமையில் வைத்துக் 'காலமே' என்றனர். சடரூபமாகிய காலம், இறப்பு நிகழ்வு எதிர்வு ஆம்படி முதல்வன் காரியப்படுத்தலின், 'காலமொரு மூன்றுங் காட்டும், காரணமே!' என்றனர். இதனால், "காலமே கடவுளாகக் கண்டனம்" என்னும் கால

வாதி மதம் மறுக்கப்பட்டது. காரண காரியப்படுதல் சடத்துக்கேயன்றி சித்துக்கன்மையின், 'காரணகா ரியங்களில்லாக், கோலமே!' என்றனர்.

சொல்லாய தொகுதியெல்லாங் கடந்துநின்ற
சொரூபானந் தச்சுடரே! தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே;
கரணமுட னுறவு கலக்க மாட்டேன்.

(இ - ள்) சொல் ஆய - சொற்களால் ஆகிய, தொகுதி எல்லாம் - கூட்ட மெல்லாவற்றையும், கடந்து நின்ற - தாண்டி நின்ற, சொரூபானந்த சுடரே! - ஆனந்த சொரூபமாகிய சோதியே!, தொண்டனேனை - அடிமையாகிய என்னை, கல்லாக படைத்தாலும் - கல்லாகப் படைத்திடினும், மெத்த நன்றே - மிகவும் நல்லதே; நான் - நான், கரணமுடன் - கரணங்களுடன், உறவு - சினேகம், கலக்கமாட்டேன் - செய்யேன், என்க.

(வி - ரை) சொற்கூட்ட மனைத்தும் பாசசால மாகலினாலும், முதல்வன் பாசஞானத்தா லறியப்படாதவ னாகலினாலும், 'சொல்லாய தொகுதியெல்லாங் கடந்து நின்ற' என்றனர். கல்முதலிய பதார்த்தங்கட்குக் கரணமில்லை யாகலாலும், கரண மில்லையாகவே பிரபஞ்ச சேஷ்டை விளையா தாகலினாலும், விளையாதாகவே துன்பம் இன்பம் உண்டாகா தாகலினாலும், உண்டாகாதாகவே பிறப்பு இறப்பு எற்படா தாகலினாலும், 'கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே' என்றனர். 'படைத்தாலும்' என்றதனால் அங்ஙனம் படையாது மானுடப் பிறப்பாய்ப் படைத்ததே சிறப்பெனலுமாம். பிறந்ததனா லாய பயனடையா தாதலினால் 'கல்லாகப் படைத்தாலு நன்றே' எனக் குறிப்பிட்டனர். (20)

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்,
கடவுள்! உனைக் காணவே காய மாதி
புலங்காணார்; நாெனாருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை? கண்டாய்!

(இ - ள்) கலங்காத - கலக்க முறாத, நெஞ்சு உடைய - மனத்தையுடைய, ஞான தீரர் - ஞான தீரர்கள், கடவுள்! - கடவுளே!, உன்னை காணவே - தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டே, காயம் ஆதி - உடல் முதலானவைகளின், புலம் காணார் - இடங் காணாதவர்க ளானார்கள்; நான் ஒருவன் - யானொருத்தன், ஞானம் பேசி - வாசாஞானம் பிதற்றி, பொய் கூடு - பொய்யுடலை, காத்தது - காத்திருந்தது, என்ன புதுமை - என்ன அதிசயம்?, கண்டாய்! - கண்டாய்!, என்க.

(வி - ரை) முத்தர்களாகிய ஞானிகள் சிவமயமா யிருத்தலின் அவர்கட்குப் பிரபஞ்சந் தோன்றா தென்பார், 'ஞான தீரர், புலங்காணார்' என்றனர். பதிபசுபாச விளக்கம்: "சேதன சிவத்தை நோக்கிச் செகத்

தினை நோக்குங் காலைச், சேதனச் சிவமே விட்டுச் செகமெலா மறைந்து போமே" என்றதனாற் காண்க. நான் பேசும் ஞானம் உடலைக் காத்தற் பொருட்டே யன்றி வேறல்ல வென்பார், "நாமொருவன் ஞானம் பேசிப், பொய்க்கூடு காத்தது' என்றனர். (21)

கண்டிலையோ? யான்படும்பா டெல்லா மூன்று
  கண்ணிருந்தும்; தெரியாதோ? கசிந்துள் ளன்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ? கருணை நீங்காச்
  சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா!

(இ - ள்) யான் - அடியேன், படும் பாடு - படுந் துன்பத்தை, எல்லாம் - எல்லாம், மூன்று கண்ணிருந்தும் - மூன்று கண்கள் தேவரீருக் கிருந்தும், கண்டிலையோ - பார்த்திலையோ?, தெரியாதோ - தெரிந்து கொள்ள வில்லையோ?, கசிந்து - உருகி, உள் அன்பு ஆர் - உள்ளன்பு நிறைந்த, தொண்டர் - தொண்டர்களுக்கு, அடித்தொண்டன் - திருவடித் தொண்டன், அன்றோ - அல்லவோ?, கருணை நீங்கா - கிருபை நீங்காத, சுத்த பரிபூரணம் ஆம் - சுத்த பரி பூரணமாகிய, சோதி நாதா! - ஒளி வாய்ந்த இறைவனே! என்க.

(வி - ரை) இரண்டு கண்களையுடைய யாரும் பசுக்களே யாவர். மூன்று கண்களையுடைய வொருவனே பதி. அங்ஙன மாகவும், என் துன் பத்தினை யறியாத தென்னை யென்பார், 'கண்டிலையோ? தெரியாதோ?' என்றனர். நான் உண்மை அடியார் பரம்பரையில் வந்தவ னென்பார், 'தொண்டரடித் தொண்டனன்றோ?' என்றார். (22)

சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந்
  தூவெளியே! எனைத்தொடர்ந்து தொடர்ந்தெந் நாளும்
வாதியா நின்றவினைப் பகையை வென்ற
  வாழ்வே! இங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன்.

(இ - ள்) சோதியாய் - ஒளியாகி, இருள் பிழம்பை - இருட் கூட்டத்தை, சூறை ஆடும் - கொள்ளை கொள்ளும், தூ வெளியே! - பரி சுத்தமான சிதாகாயமே!, எனை - அடியேனை, தொடர்ந்து தொடர்ந்து - பற்றிப் பற்றி, எந்நாளும் - எக்காலமும், வாதியாநின்ற - வருத்தாநின்ற, வினை பகையை - கன்மசத்துருவை, வென்ற - செயித்த, வாழ்வே! - பெரு வாழ்வே!, உனைப் பிரிந்து - உன்னை விட்டு, இங்கு மயங்குகின்றேன் - இவ்விடத்து மயங்காநின்றேன், என்க.

(வி - ரை) முதல்வன் அருட்பெருஞ் சோதியாகலின் அவன் முன்னர் இருளனைத்துந் தலையெடா தாகலினாலும், அவன் திருவருள் ணுக்கத் தின் முன்னர் வினையனைத்தும் நீங்கிப்போகு மாகலினாலும், 'இருட்பிழம்

யைச் சூறை யாடுந் தூவெளியே!' எனவும், 'வினைப் பகையை வென்ற, வாழ்வே!' எனவும் கூறினர். (23)

மயக்குறுமென் மனமணுகாப் பாதை காட்டி,
வல்வினையைப் பறித்தனையே; வாழ்வே! நானென்
செயக்கடவேன்? செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் சேயல்வே றில்லை.

(இ - ள்) மயக்குறும் - மயக்கத்தைச் செய்யாநின்ற, என் - அடியேன், மனம் - மனமானது, அணுகா - பொருந்தாத, பாதை - வழியை, காட்டி - காட்டி, வல் - கொடிய, வினையை - கன்மத்தினை, பறித்தனையே - நீக்கினையே; வாழ்வே! - வாழ்வே!, நான் - அடியேன், என் செயக் கடவேன் - என்ன செய்யக்கடவேன்?, செயல் எல்லாம் - செய்கைகள் எல்லாம், நினதே என்று - உன்னதேயாம் என்று, செம் கை குவிப்பேன் - செவ்விய கரங்களைக் குவிப்பேன், அல்லால் - அன்றி, செயல் - செய்கை, வேறு இல்லை - மற்றொன்றில்லை, என்க.

(வி - ரை) சீவன்முத்தர்கள் செய லனைத்தும் தனதாகக் கொண்டு முதல்வன் அவர்கட்கு வேண்டியவற்றைப் புரிவ னாகலின், 'செயக்கட வேன்? செயலெல்லா நினதே யென்று, செங்கை குவிப்பேன்' என்றனர். தேவாரம்: "யாதே செயினு நாமல்லோ நீயெனி, லாதே செய்யு மளவில் பெருமையன், மாதே வாகிய வாய்மூர் மருகனூர், போதே யென்று புகுந் தும் பொய்கொலோ" என்றதனுற் காண்க. (24)

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே! நின் விளையாட் டல்லான்,
மாறுபடுங் கருத்தில்லை; முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா!

(இ - ள்) வேறுபடும் - முரண்படும், சமயம் எல்லாம் - எல்லாச் சமயங்களும், புகுந்து - விசாரித்து, பார்க்கின் - ஆராயின், விளங்கு - அச் சமயங்களில் விளங்கும், பரம்பொருளே! - பெரிய பொருளே!, நின் - தேவரீரது, விளையாட்டு அல்லால் - திருவிளையாடலே யல்லாமல், மாறு படும் - வித்தியாசப்படும், கருத்து இல்லை - கருத்து இல்லையாகும்; முடிவு இல் - முடிவற்ற, மோனவாரிதியில் - மவுன சாகரத்தில், நதி திரள்போல் - நதிக் கூட்டங்கள்போல், வயங்கிற்று - விளங்கிற்று, என்க.

(வி - ரை) ஒரு சமயம் சொன்னபடி மற்றொரு சமயம் சொல்லாது எல்லாச் சமயங்களின் கொள்கைகளும் வேறுபட்டுக் கிடத்தலின், 'வேறு படும்' எனவும், சமயங்கள் இருபத்து நான்கு வகைப்பட்டுக் கிடத்தலின் 'சமயமெல்லாம்' எனவும் "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யங்கே மாதொரு பாக னூர்தாம் வருவர்" என்றதற் கேற்ப, எல்லாச்

சமயங்களிலும் விளங்குபவன் முதல்வனே யாகலின் 'விளங்குபரம் பொருளே!' எனவும், ஆன்மாக்களின் கன்மத்திற்குத் தகுந்தபடி முதல்வனே சமயங்களை வகுத்துவைத்தா னென்பார், 'விளையாட் டல்லான் மாறுபடுங் கருத்தில்லை' எனவும், எல்லா நதிகட்கும் சமுத்திர மிடங் கொடுத்திருப்பதுபோல, எல்லாச் சமயங்கட்கும் முதல்வ னிடங் கொடுத்திருக்கின்றமையின், 'வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா!' எனவும் கூறினர். (25)

அம்மா! ஈ ததிசயந்தா னன்றோ? அன்றோ?
அகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே?

(இ - ள்) அம்மா! - ஆச்சரியம்!, ஈது - இது, அதிசயந்தான் அன்றோ அன்றோ - அதிசயமல்லவோ? அல்லவோ?, அகண்டநிலை ஆக்கி - வியாபக நிலையினை விளைவித்து, என்னை - அடியேனை, அறிவு ஆம் வண்ணம் - அறிவுமயமாகும் வண்ணம், சும்மாவே இருக்க வைத்தாய் - சும்மாவே யிருக்கும்படி வைத்தனை; ஆங்கே - அவ்விடத்தே, சுகமயமாய் இருப்பது அல்லால் - சுகசொரூபமாக விருப்பது அல்லாமல், சொல்வான் - வேறு சொல்லுதலுக் குரியது, என் - யாது?, என்க.

(வி - ரை) சுட்டுணர்விலேடு ஏகதேசப்பட்டுக் கிடந்த ஆன்மாவினுக்குப் பரிபூரணநிலை தந்து சும்மா விருக்கவைத்தான் என்பார், 'அகண்டநிலையாக்கி சும்மாவே யிருக்கவைத்தாய்' என்றனர். ஞானமணிமாலை: "போதமற்று நிட்டையற்றுப் பூரணமா முண்மைதனிலேதமற்றுச் சும்மா விரு." என்றதனுற் காண்க. சும்மாவிருக்கும் நிலை சுகமயமே யன்றி வேறல்ல வென்பார், 'சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே?' என்றனர். சிவபோகசாரம்: "விம்மாதிருந்து விகற்பமற வொன்றாகிச், சும்மா விருக்கச் சுகம்" என்றதனுற் காண்க. (26)

என்னேநான் பிறந்துழல வந்த வாறிங்
கெனக்கெனவோர் செயலிலையே; ஏழை யேன்பால்
முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வர முறையேன்? எந்தாய்!

(இ - ள்) இங்கு - இவ்விடத்து, நான் பிறந்து - நான் உதித்து, உழல - உழலும்படி, வந்த ஆறு - வந்த வழி, என்? - யாது?, எனக்கு என - எனக்கென்று, ஓர் செயல் இலையே - ஒரு செயலு மில்லையே; ஏழையேன் பால் - ஏழையாகிய என்னிடத்து, முன்னே செய்வினை எனவும் - பிராரத்துவ வினை யெனவும், பின்னே வந்து - மத்தியில் வந்து, மூளும் வினை எனவும் - ஆகாமிய வினை எனவும், வர - சொல்லப்பட்டு வருகைக்கு, முறை என் - முறைமை யாது?, எந்தாய்! - எந்தையே!, என்க.

(வி - ரை) சிவஞான சித்தியார்: "நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று, நினைப்பார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே." என்றதற் கேற்ப, எல்லாம் நின்செய லென்று சுதந்திரமற்று வாழு மடியேற் குப் பிராரத்துவ மனுபவிக்கவும், ஆகாமியம் வந்தேறவும், அவைகட் கேற்றபடி செனன மரணப்பட் டுழலவும் வந்தவா றென்னை யென்பதாம்.()

தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயான தென்கொலையா! ஏக தேசம்
பூரணத்துக் குண்டோதான்? புகலல் வேண்டும்!

(இ - ள்) தாய் ஆன - எனக்குத் தாயாகிய, தண் அருளை - தண்ணிய திருவருளை, நிரம்ப வைத்து - நிறைய வைத்து, தமியேனை - அடியேனை, புரவாமல் - காவாமல், தள்ளி தள்ளி போய் - தள்ளித் தள்ளி வைத்ததனால், ஆனது - உண்டான பிரயோசனம், என் கொல் - யாது?, ஐயா! - ஐயனே!, பூரணத்துக்கு - உனது பரிபூரணத்திற்கு, ஏகதேசம் - ஏகதேசம், உண்டோ - உளதோ?, புகலல் வேண்டும் - சொல்லல்வேண்டும், என்க.

(வி - ரை) சிவஞான சித்தியார்: "எல்லா மீசனிடத்தினு மீசனெல்லா விடத்தினு நிறைந்த வந்நிலே." என்றதற்கேற்ப, சராசரத் மயமாகிய ஆன்மாக்களெல்லாம் முதல்வனிடத்தும், அம் முதல்வன் மாயாதி தனுவினு முயிர்க்குயிராயும் வியாபித்து நிற்றலால், என்னை வேறே தள்ளிவைத்தற்கு நீ ஏகதேசப் பட்ட பொருளோ வென்பார், 'ஏகதேசம், பூரணத்துக் குண்டோ?' என்றனர். (28)

புகலரிய நின்விளையாட் டென்னே? எந்தாய்!
புன்மையறி வுடையவென்னைப் பொருளாப் பண்ணி
யிகல்விளைக்கு மலமாயை கன்மத் தூடே
யிடருறவுஞ் செய்தனையே! இரக்க மீதோ?

(இ - ள்) புகல் அரிய-எடுத்துப் பேசுதற்கரிய, நின் விளையாட்டு-உன் திருவிளையாடல், என்னே - யாதோ?, எந்தாய்! - எந்தையே!, புன்மை - அற்பமாகிய, அறிவு உடைய - அறிவினை வாய்ந்த, என்னை - அடியேனை, பொருள் ஆ பண்ணி - ஒரு பொருளாக மதித்து, இகல் விளைக்கும் - போர் விளைக்கும், மல மாயை கன்மத்தூடே - மலமாயா கன்மங்களினிடையே, இடர் உறவும் - துன்பம் அடையவும், செய்தனையே! - பண்ணினையே!, இரக்கம் - (ஆன்மாக்களின்மீது வைத்த) இரக்கமானது, ஈதோ? - இதுதானோ?, என்க.

(வி - ரை) சிற்றறிவுஞ் சிறுதொழிலு முடைய என்மாட்டுக் கருணை வையாது, மலம் மாயை கன்மம் முதலியவற்றிற் கட்டுப்பட்டுத் திண்டாடச்

செய்யும் திருவிளையாடல் நினது கிருபைக்கு நலமோ என்பார், 'இரக்க மீதோ' என்றனர். (29)

இரக்கமொடு பொறையீத லறிவா சார
மில்லேனு னல்லோர்க ளீட்டங் கண்டாற்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்!
கருந்தாதோ? வல்லுருக்கோ? கரிய கல்லோ?

(இ - ள்) இரக்கமொடு - இரக்கத்துடன், பொறை - பொறுமை, ஈதல் - கொடை, அறிவு - ஞானம், ஆசாரம் - ஒழுக்கம், இல்லேன் - இல்லாதவனுகிய, நான் - நான், நல்லோர்கள் - சிவனடியார்கள், ஈட்டம் - திருக்கூட்டத்தினை, கண்டால் - தரிசித்தால், கரக்கும் - ஒளிக்கின்ற, இயல்பு உடையேன் - இயற்கை யுடையேன், பாழ் நெஞ்சம் - என்னுடைய பாழ் மனமானது, எந்தாய்! - எந்தையே!, கருந்தாதோ - இரும்போ?, வல் உருக்கோ - வலிய உருக்குத்தானோ, கரிய கல்லோ? - கருங் கல்லோ?, என்க.

(வி - ரை) சன்மார்க்க நெறியி னின்றவர்கட்கு இரக்கம், பொறுமை, கொடை, ஞானம், ஆசாரம், நல்லோர் கூட்டுறவு ஆகிய இவை அத்தியா வசிய மெனவும், இவை இல்லாதவனுடைய மனம் இரும்பு, எஃகு, கருங்கல் முதலியவற்றை யொக்குமெனவும் கூறினர். (30)

---

## * பராபரக் கண்ணி

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே! பராபரமே!

(பொழிப்புரை) சிறப்பு வாய்ந்த தெய்வத்தன்மை பொருந்திய திருவருளென்னும் பூமி முதலாக நிலவுலகமுதலாய் பூமிகளை யாண்டருளிய தலைவனே! பராபரமே!

(வி - ரை) 'திருவருளாம் பூமி' என்றது முப்பத்தாறு தத்துவங்கட்கும் ஆதாரமாயுள்ள சிவசத்தியினை. (1)

கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணுமலருள்
விண்ணா டிருந்தவின்ப வெற்பே! பராபரமே!

---

* இக் கண்ணிகளில் வரும் அரிய விஷயங்கள் பெரும்பாலும் முன்னமுள்ள விருத்தப்பாக்களில் வந்திருத்தலினாலும், அவ்வரிய விஷயங்களைப் பிரமாண வாயிலாக ஆங்காங்கே நன்கு விளக்கியிருத்தலினாலும், மீண்டும் விசேஷங்க ளெழுதாமல் அத்தியாவசியமான விஷயங்கள் மாத்திரம் பொழிப்புரையுள் நிகவளவிற்குள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

(போ - ரை) (தேவரீரைக்) கண்ணாரத் தரிசித்தோர்கள் பி
பென்னும் உண்மையினை அடையாமல் வாழும்படி செய்தருள் சிதாகா
தில் எழுந்தருளியிருந்த ஆனந்த மலையே! (

சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே! பராபரமே!

(போ - ரை) (அடியேன்) நினைத்த எல்லாவற்றையும் என் க
தறிந்து அருள் செய்யும்பொருட்டு எழுந்தருளிவந்த அருள் மழையே! (

ஆரா வமுதே! அரசே! ஆனந்த வெள்ளப்
பேராறே! மோனப் பெருக்கே! பராபரமே!

(போ - ரை) தெவிட்டாத அமுதமே! தலைவனே! சுகப்பெ
சோடும் பெரிய நதியே! மவுன வெள்ளமே! (

ஆரறிவா ரென்ன அனந்தமறை யோலமிடும்
பேரறிவே! இன்பப் பெருக்கே! பராபரமே!

(போ - ரை) "தேவரீரைத் தெரிந்துகொள்ள வல்லவர் யார்
என்ன அனேகமான வேதங்கள் முழங்குகின்ற பெரிய ஞானமே!, ஆன
வெள்ளமே! (

உரையிறந்த அன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே! பராபரமே!

(போ - ரை) மவுனமுற்ற அடியார் மனத்தினிடத்தே பெருஞ்சோ
யாய் வளர்ந்து, அளவற்று நின்ற சுகக்கடலே! (6

எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே! பராபரமே!

(போ - ரை) எத்திசையினும் வியாபகமுற்று அடியே னிருதயத்
லுஞ் சிறந்து சுகத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கு மின்பத் தேனே! (7

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே! பராபரமே!

(போ - ரை) எட்டுத் திசைகளுடனே பூமியினும் ஆகாயத்தினு
வியாபித்திருக்கும் தேவரீர் திருவரு ளுண்மையினைத் தெரிந்த (ஞா
கள்) உள்ளங்கை நெல்லிக்கனியே! (8

முத்தே! பவளமே! மொய்த்தபசும் பொற்சுடரே!
சித்தே!என் னுள்ளத் தெளிவே! பராபரமே!

(போ - ரை) முத்தே! பவளமே! பசுமை தங்கிய பொன்னொளியே
அறிவே! அடியேன் மனத் தெளிவே!

கண்ணே ! கருத்தே !என் கற்பகமே ! கண்ணிறைந்த
விண்ணே ! ஆனந்த வியப்பே ! பராபரமே !

(பொ - ரை) பகிர்முக விஷயங்களைக் கிரகிக்கும் நேத்திரமே ! அந்தர்முக விஷயங்களைக் கிரகிக்கும் மனமே ! விரும்பினவற்றைத் தந்தரு ளும் கற்பக விருட்சமே ! தரிசிக்கத் தகுந்த சிதாகாயமே ! ஆனந்த முதவும் ஆச்சரியப் பொருளே ! (10)

வாக்காய், மனதாய், மனவாக் கிறந்தவர்பாற்
றூக்காதே தாக்குந் தனியே ! பராபரமே !

(பொ - ரை) வாக்காகி, மனமாகி, சொல்லும் நினைவுங் கடந்த ஞானிகளிடத்து முற்பட்டு விளங்காது அகத்தில் விளங்கும் ஒப்பற்ற வஸ்துவே ! (11)

பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தை சொல்லவந்த மனுவே ! பராபரமே !

(பொ - ரை) கண்டவிடமெல்லாம் சிதாகாயமாகத் தரிசிக்க ஒரு சித்தாந்த மகாவாக்கியத்தை வுபதேசிக்க எழுந்தருளிய மந்திர வடிவே ! ()

வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த அரசே ! பராபரமே !

(பொ - ரை) ஆகாயத்தின் மேலும், பூமியின் கீழும் தேவரீர் வியாப கத்தினை நோக்கி நோக்கித் தரிசிக்க அடியேனுக் கின்ப மருளிய அரசனே!

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே ! இறையே ! பராபரமே !

(பொ - ரை) (என்பால்) அன்பினை விளைவித்து அடியேனது அருமையான வுயிரினை ஆதரிக்க எழுந்தருளிய ஆனந்த வெள்ளமே ! தலைவனே ! (14)

வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே ! பராபரமே !

(பொ - ரை) சிதாகாய மனத்தினையும் தன்னுள்ளே வைத்த மவுன நிலையாகிய அழகிய பெட்டியினிடத்து வைக்கத் தகுந்த பூஷணமே ! (15)

ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்க
ளாடும் பொருளான நட்பே ! பராபரமே !

(பொ - ரை) ஓட்டினையும், பெரிய திரவியத்தினையும் சமத்துவ மாகப் பார்க்கத்தகுந்த ஞானிகள் நாடத் தகுந்த பொருளாகிய நண்பே ! ()

சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவா
ழுத்தமர்கட் கான வுறவே! பராபரமே!

(போ - ரை) மனத்தின்கண்ணே யுதிக்கு மெண்ணமும், அவ் வெண்ணத்தின்படி செய்யும் செய்கையும், தேவரீரே (கன்மத்திற்குத் தகுந்தபடி பிரேரேபிப்பவர் என்று) வாழ்கின்ற ஞானிகளுக்குத் தகுதியான சுற்றமே!

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே! பராபரமே!

(போ - ரை) ஞானக்கொழுந்தாக விளங்கும் புண்ணியவான்கள் 'போற்றி!, சய போற்றி!' என்று தோத்தரித்து, (சித்தாந்தப் பொருளைத் தெரிந்திடற்கு அப்பொரு ளடங்கியிருக்கும்) வேதாந்த வீட்டி லேற்றிய தீபமே! (18)

மூத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே! பராபரமே!

(போ - ரை) மோட்ச மடவளாகத்தில் விளங்குகின்ற தேவரீர் திருவடித் தாமரையினை வணங்குகின்ற அன்பர் நிமித்தமே சித்தாந்தம் (என்னுமிராஜ) வீதியி லெழுந்தருளி வருகின்ற தெய்வமே! (19)

ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற
ஆனந்தம் வேண்டி யலந்தேன், பராபரமே!

(போ - ரை) இழிவினை யுண்டாக்குகின்ற சரீரத்தினை என்னதெனவும், யானெனவும், மமகாரம் அகங்காரத்துடன் பேசும் பேச்சொழியத் (தேவரீர்) சுகத்தினை விரும்பி (அது கிடைக்கப் பெறாது) துன்ப மடைந்தேன். (20)

என்புருகி, நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க வலந்தேன், பராபரமே!

(போ - ரை) எலும்பு நெக்குருகி, மனங் கரைந்து உருகி யுருகித், (தேவரீர்) அன்புமயமாக நிற்கவெண்ணி (அது பெறாது) துன்ப மடைந்தேன். (21)

சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன்? பராபரமே!

(போ - ரை) கலக்கமற்ற அறிவுருவாகி யானந்தத்தை யடைந்தாலல்லாமல் அடியேன் மனம் தெளிவடையாது. இதற்கியான் என் செய்யக் கடவேன்? (22)

மாறு வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கந்
தேறுதென் செய்வேன்! சிவமே! பராபரமே!

(பொ - ரை) வேறுபடாத சிவானுபவம் பெற்றா லல்லாமல் என் மன மயக்கம் தெளியாது. இதற்கு யான் என் செயக் கடவேன்? சிவமே!

தாகமறிந் தின்பவீட்டை தாராயே லாகெடுவேன்!
தேக மிழுந்திடினென் செய்வேன்? பராபரமே!

(பொ - ரை) (அடியேனுக்குண்டாகி யிருக்கிற) அவாவினைத் தேவரீர் தெரிந்து சுக நிஷ்டையினைக் கொடாயாயின் ஆ கெடுவேன்! உடல் நழுவிவிடில் பின்னர் யான் என் செய்வேன்? (24)

அப்பா! என் னெய்ப்பில்வைப்பே! ஆற்றுகிலேன்; போற்றி
செப்புவதல் லால்வேறென் செய்வேன்? பராபரமே! [யென்று

(பொ - ரை) என் தந்தையே! அடியேனுக்கு உன்னிடத்துதவும் திரவியமே! (பிறப்பாலாகிய துன்பத்தினைச்) சகிக்கிலேன். (இதனை நீக்கிக்கொள்ளத் தேவரீருக்குத்) துதி சொல்லுவதல்லாமல் வேறு வகையாக யானென் செய்ய வல்லேன்? (25)

உற்றறியு மென்னறிவு முட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே! ஐயா! பராபரமே!

(பொ - ரை) புறக்கருவிகள் மூலமாகப் பொருந்தி யறியு மென்னறிவும் உட்கருவிகளாகிய அந்தக்கரணங்களைப்போல வொளி மழுங்கியும் (இன்னம்) அடியேனுக்குச் சுக மளித்தாயில்லையே! ஐயனே! (26)

சொல்லா லடங்காச் சுகக்கடல் வாய்மடுக்கி
னல்லாலென் றாக மறுமோ? பராபரமே!

(பொ - ரை) (மவுனநிலையினா லறிவதல்லாமல்) சொல்லாற் சொல்லுதற்கரிய ஆனந்த சாகரத்தில் வாய்வைத்து உண்டாலன்றி அடியேனுக்கு உண்டா யிருக்கிற மோட்ச விச்சை நீங்குமோ? (27)

பாராயோ? என்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ? வாய்திறந்து செப்பாய்! பராபரமே!

(பொ - ரை) (குருமூர்த்தி கோலங்கொண் டெழுந்தருளிவந்து) என்னைப் பிரத்தியட்சமாகப் பாராயோ? (அங்ஙனம்) ஒருகால் பார்த்து அடியேன் துன்பத்தை நீக்காயோ? திருவாய் மலர்ந்தருளுவாய்! (28)

ஓயாதோ வென்கவலை? உள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ? ஐயா! பகராய்! பராபரமே!

(பொ - ரை) அடியேன் கவலை யென்னைவிட் டொழியாதோ? அடியேன் மனத்தில் சுகானந்த வெள்ளம் பெருகாதோ? ஐயனே! அருளிச் செய்வாய்! (29)

ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ? மெழுகோ? பகராய்! பராபரமே!

(பொ - ரை) ஓகோ! தேவரீரைப் பிரிந்த அடியர் மனம் நெருப்பி விட்ட பாகோ? அன்றி, நெருப்பிலிட்ட மெழுகோ! அருளிச்செய்வாய்!

கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவனு னென்னைமுகம் பாராய்! பராபரமே!

(பொ - ரை) (அடியேன் என்னுடைய) நுண்ணியவறிவு முழுதினையும் தேவரீருக்குக் கொள்ளையாகக் கொடுத்துவிட்டுத் தேவரீர் திருவருளொன்றினையே யெதிர்பார்த்துக் கொண்டிருப்பவன் நான்; ஆகலின், அடியேன் முகம் பார்த்தருளவேண்டும். (31)

கடலமுதே! தேனே! என் கண்ணே! கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்! நீ பராபரமே!

(பொ - ரை) பாற்கடலி லுதித்த அமுதமே! தேனே! என்னிரு கண்ணே! அடியேன் பிரபஞ்சக் கவலையானது இனி யனுபவித்து முடியாது; ஆகலின், அடியேன் முகத்தினைத் தேவரீர் பார்த்தருள வேண்டும்.

உள்ள மறிவாய்; உழப்பறிவாய்; நானேழை,
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன்; பராபரமே!

(பொ - ரை) (அடியேனுடன் தேவரீர் எந்நாளும் பிரிவற நிற்பவராதலால்) அடியேன் மனக் கருத்தை யுணர்வாய்; அடியேன் துன்பமுணர்தலை யுணர்வாய்; ஆகலின், தேவரீர் அடியேனை யேற்றருளாது தள்ளிவிடுவையாயின், அறிவிலியாகிய நான் மிக வருந்துவேன். (33)

'கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போல' வெனக்
கென்றிரங்கு வாய்! கருணை யெந்தாய்! பராபரமே!

(பொ - ரை) (சுதந்திரமற்ற) இளமையான கன்றினிமித்தம் ஈன்றணிமையையுடைய பசு, இயற்கைக் கருணையினால் மனமுருகி யிரங்குதல்போல, கருணையுரு வாய்ந்த பிதாவே! என்பொருட் டிரங்கியருளுவாய்!

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும்; பராபரமே!

(பொ - ரை) (கிட்டுதற்கரிய பலவற்றைச் சிந்தித்து மனத்தில்) எண்ணக்கூடாத எண்ணங்களை யெல்லாம் எண்ணி யெண்ணி யேழையேனுடைய மனமானது புண்படச் செய்தது இனி போதும். (35)

ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம்? பராபரமே!

(பொ - ரை) தேவரீருடைய அடிமையாகிய நான், சமுத்திரத்தி னிடைப்பட்ட திரணம்போல, (சுவர்க்க நரகங்களாகிய) அங்கு மிங்கும் (எண்ணரிய பிறவிகளில்) வீணே யலைவது என்ன பாவப்பயன்? (36)

கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென்றன் னெஞ்சே கொதிக்கும், பராபரமே!

(பொ - ரை) (பிரபஞ்சக்) கல்வி கற்ற (சாமர்த்தியத்தினை முன் னிட்ட) அறிவினால் அடியேன் தேவரீரைப் பிரத்தியட்சமாகக் கண்டவன் போல நடித்தால் அங்ஙன நடித்தல் குற்றமென்று அடியேன் மனமே வாதிக்கும். (37)

ஐயோ! உனைக்காண்பா னாசைகொண்ட தத்தனையும்
பொய்யோ? வெளியாப் புகலாய்! பராபரமே!

(பொ - ரை) ஐயோ! தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டு அடியேன் ஆசைகொண்டு (பாடுபட்ட) தெல்லாம் பொய்யாய் முடியுமோ? தேவரீர் வெளிப்படையாகச் சொல்லவேண்டும். (38)

துன்பக்கண் ணீரிற் றுளைந்தேற்குன் னனந்த
வின்பக்கண் ணீர்வருவ தெந்நாள்? பராபரமே!

(பொ - ரை) (பிரபஞ்ச சம்பந்தமாகத்) துன்பத்தினால் வடி கின்ற கண்ணீரிற் படிந்த அடியேனுக்கு அந்தர்முகத்தில் தேவரீர் நிரதிசய சுகத்தினாலுளதாகும் இன்பக் கண்ணீர் வடிதுவது எந்நாளோ? (39)

வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுளறு
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான்? பராபரமே!

(பொ - ரை) வஞ்சனையையும் பொய்யினையும் மனத்துள்ளே வைத்துப் பொறாமை யுடையேனாகித் தடுமாறுகின்ற அடியேனுக்கும் சன் மார்க்கம் சித்திக்குமோ? (40)

பாசம்போய் நின்றவர்போற் பாராட்டியானு
மோசம்போ னேனன்; முறையோ? பராபரமே!

(பொ - ரை) பிரபஞ்சப் பற்று நீங்கின ஞானிகள்போல அடியேன் நடித்து எந்நாளும் மோசம் போய்விட்டேன்; இது கிரமமோ? (41)

நன்றறியேன்; தீதறியேன்; நானென்று நின்றவனு
ரென்றறியேன்; நானேழை யென்னே? பராபரமே!

(பொ - ரை) நன்மை ஈதென்றறியேன்; தீமையீதெனை அறியேன்; நான் என்னும் அகங்காரத்துடன் நின்றவ னின்னானென அறியேன்; ஆகலின் அடியேன் அறிவில்லாதவன். இதற்குக் காரண மென்னேயோ?

இன்று புதிதன்றே? எளியேன் படுந்துயர
மொன்றுமறி யாயோ? உரையாய்! பராபரமே!

(போ - ரை) எளியேன் அனுபவிக்கும் துன்பம் இந்தச் சன்மத்தில் நூதனமாக வந்ததன்றே? பல சன்மத் தொடர்ச்சியன்றோ? இதனைத் தேவரீர் சிறிது முணர்ந்திலையோ? சொல்லாய்! (43)

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுயர்?
அத்தனையு நீயறிந்த தன்றோ? பராபரமே!

(போ - ரை) அடியேன் பலவுலகி லெடுத்த சென்மங்கள் எத்தனை கோடி? அச் சென்மங்கள்தோறும் அடியே னனுபவித்த துன்பங்க ளெவ்வளவு? அவற்றை யெல்லாம் தேவரீ ரறிந்ததல்லவோ? (44)

இந்தநாட் சற்று மிரங்கிலையேற், காலன்வரு
மந்தநாட் காக்கவல்லா ரார்? காண்! பராபரமே!

(போ - ரை) இந்நாளில் சிறிது அடியேன்மீ திரக்கஞ் செய்திலையாயின், எமன் நெருங்கு மக்காலத்தில் அடியேனைக் காத்தருள வல்லவரார்? (காலகாலனாகிய) தேவரீரே யாலோசிக்க வேண்டும். (45)

உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கி யாளத் தகாதோ? பராபரமே!

(போ - ரை) அடிக்கடி உற்றுற்றுப் பார்த்துத் தேவரீர் தரிசனந் தராமையின் மனத்தின்கண்ணே மிக்க மருட்சியினைக் கொண்ட பாவியேனைச் சிறிதிரக்கஞ் செய்து தேவரீர் ஆளத்தகாதோ? (46)

எள்ளளவு நின்னை விட வில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலா லென்னபலன்? சாற்றாய்! பராபரமே!

(போ - ரை) எள்ளளவேனும் தேவரீரைவிட வேறு துணை யில்லாத அடியேனை மீட்டும் பிறவி மயக்கமாகிய பள்ளத்தில் தள்ளுதலினால் தேவரீருக்கு உண்டாம் பயன் யாது? சொல்வாய்! (47)

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி யெனையடிமை சேர்த்தாய்? பராபரமே!

(போ - ரை) (அடியேன்பொருட்டுச் சிறிதும் திருவருளினைத் தேடிக்கொள்ளாது) பற்பல செய்யுள்களைப் பாடியும், பற்பல நூல்களைப் படித்தும், புகழ்ந்து நிற்கவோ அடியேனை யடிமையாகத் தேடிச் சேர்த்தாய்? (48)

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்லிறுதிக்
கென்னத்தைச் சொல்வேன்? எளியேன், பராபரமே!

(போ-ரை) முன்னோர்கள் சொல்லிவைத்தவற்றைச் சொல்லிக் கொண்டிருப்ப தல்லாமல், சொல்லற்ற மவுனநிலையைத் தேடிக்கொள்வ தற்கு என் சொல்ல வல்லேன்? ஏழையேன். (49)

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
யல்லும் பகலுமெனக் காசை, பராபரமே!

(போ-ரை) சொல்லாலேயும், அச் சொல்லின் பொருளாலேயும் விவகரிப்பதை விட்டு மௌனமுற்று வாழ்வதற்கே இரவும் பகலு மெனக் காசை யுண்டு. (50)

நேச நிருவிகற்ப நிட்டையல்லால், உன்னடிமைக்
காசையுண்டோ? நீயறியா தன்றே? பராபரமே!

(போ-ரை) (பிரபஞ்சத்தை மறந்துநிற்கும்) நிருவிகற்ப சமாதியி லன்பு உண்டே யல்லாமல், தேவரீர் அடிமைக்கு வேறுவித ஆசை புண்டோ? வுண்மை தேவரீ ருணராததல்லவே? (51)

துச்சனென வேண்டாம்; இத் தொல்லுலகி லல்லல்கண்டா
லச்ச மிகவுடையேன்; ஐயா! பராபரமே!

(போ-ரை) அடியேனை யற்பனென நினைத்தல் வேண்டாம்; இப் பழைய பிரபஞ்சத்தில் உள்ள துன்பங்களைக் கண்டால் அவைகட்கு மிகவு மஞ்சுதலுடையேன் ஐயனே! (52)

கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன்; பராபரமே!

(போ-ரை) அடியேன் நேத்திரங்கட்குச் சமானமானவ ராயினும் அவர்கள் தேவரீரைக் கைகூப்பி வணங்காராயின், அந்த மண்ணுவார் சினேகத்தினை அடியே னொருபொருளாக மதிக்கேன். (53)

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை; பராபரமே!

(போ-ரை) (யாதொரு சீவனையும் எதன்பொருட்டேனும்) கொல்லா திருக்கும் ஓர் விரதமானது இவ்வுலக முழுதும் பரவ ஆன்ம கோடிகட்கெல்லாம் எடுத்துச் சொல்லுதற்கே அடியேனுக்கு விருப்ப முளது. (54)

எத்தாற் பிழைப்பேனோ? எந்தையே! நின்னருட்கே
பித்தானேன்; மெத்தவுநான் பேதை; பராபரமே!

(போ-ரை) அடியேன் தந்தையே! எவ்விதமான வுபாயத்தினால் பிழைத்திடுவேனோ? (அறியேன்); தேவரீர் திருவருட் பேற்றுக்கே பித் தாகி யிருக்கின்றேன்; அடியேன் மிகவு மறிவிலேன். (55)

வாயினாற் பேசா மௌனத்தை வைத்திருந்தும்,
தாயிலார் போனான் றளர்ந்தேன்; பராபரமே!

(பொ - ரை) வாயினாற் பேசக்கூடாததாகிய வொரு மவுனநிலையை அடியே னனுட்டித்தும், (தேவரீ ரனுக்கிரக மின்மையின்) தாயில்லாத புதல்வர் தளர்தல்போல, அடியேன் தளர்ந்தேன். (56)

அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன்; கண்ணார
வென்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே!

(பொ - ரை) தாயில்லாத பிள்ளையினைப்போலத் துன்ப மடைந்தேன்; கண்ணார அடியேன் மனத்திலே தாயினைப்போ லெழுந்தருளி யிருக்கும் பராபரமே! (57)

உற்றுநினைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தியாய்ப்
பற்றநொந்தேன்; என்னைமுகம் பார்நீ! பராபரமே!

(பொ - ரை) (அடியே னிலைமையினை) ஆராய்ந்து எண்ணிப் பார்த்தால் துயரமானது மனத்தினுள்ளே நெருப்பினைப்போலப் பற்றியெரிதலால் நொந்தேன். தேவரீர் என்னை முகம் பார்ப்பீராக! (58)

'பொய்யனிவ' னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாம்; என் கண்ணே! பராபரமே!

(பொ - ரை) 'இவன் பொய்யன்' என்று (யாராவது தேவரீரிடத்துப்) பையப் போதிப்பவருடைய (கோட்) சொல்லினைச் செவியேற்றுத் தேவரீர் என்னைக் கைவிடவேண்டாம்; அடியேன் கண்போன்றவனே!

எண்ண மறிந்தே, இளைப்பறிந்தே, ஏழையுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய்! பராபரமே!

(பொ - ரை) அடியேன் எண்ணத்தினை யறிந்து, அடியேன் மெலிவினை யுணர்ந்து, ஏழையேன் உய்யுமாறு திருக்கருணை வைத்தல்வேண்டும்.

நாட்டாதே! என்னையொன் றி னாட்டி யிதமகிதங்
காட்டாதே! எல்லாநீ கண்டாய்! பராபரமே!

(பொ - ரை) அடியேனை ஒரு பொருளாக மதித்துத் தேவரீர் மனத்தில் நாட்டவேண்டாம்; அங்ஙனம் நாட்ட (என் கன்மத்திற்குத் தக்கபடி) நன்மை தீமைகளைக் கூட்டி வைக்கவேண்டாம்; எல்லாவற்றிற்கும் (காரணம்) தேவரீரே. (61)

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமென்னை,
அன்னைவயிற் றின்னமடைக் காதே! பராபரமே!

(பொ - ரை) தேவரீரையே தியானஞ்செய்துகொண்டு நினது திருவருள் வியாபகத்திலேயே சஞ்சரிக்கின்ற அடியேனை, இன்னமுந் தாய் வயிற்றி லடைக்கவேண்டாம்! (62)

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருள்!என் வாழ்வே! பராபரமே!

(பொ-ரை) அடியேனைக் காத்தருளுதல் தேவரீருக்கே கடனென்று எண்ணி வாழும் பழக்கத்தினையே அழியாத வரமாக அடியேனுக்குத் தந்தருள வேண்டும். என் வாழ்வினுக்குக் காரணமா யுள்ளவனே! (63)

வந்தித்து, நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னருள் செய்யாய்! பராபரமே!

(பொ-ரை) தேவரீரை வணங்கி, மறவாம னினைத்தலே கடமையாகக் கொண்டு, தேவரீரையே சிந்திக்கத் திருவருள் செய்தருளவேண்டும்.

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய்! பராபரமே!

(பொ-ரை) எத்தகைய சிற்றுயிரினையும் என்னருமையான உயிர் போன்று எண்ணி அவைகட் கிரங்குமாறு தெய்வத்தன்மை வாய்ந்த திருவருளாகிய கருணை செய்தல்வேண்டும். (65)

வெட்டவெளிப் பேதையன்யான்;வேறுகப டொன்றறியேன்;
சிட்டருடன் சேர்!அனந்த தெண்டம்; பராபரமே!

(பொ-ரை) அடியேன் வெளிப்படையான (நெஞ்சினை வாய்ந்த) அறிவிலி; வேறு கபடத்தன்மையை யறியேன்; (ஆகலின், அடியே னுய்யும் பொருட்டு) நினது அடியாருடன் சேர்த்தருளுக! (அதன் பொருட்டுத்) தேவரீருக்கு அனேகமான தெண்ட மிடுகிறேன். (66)

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய்! பராபரமே!

(பொ-ரை) இரவும் பகலு மில்லாத (துரியாதீதத்திலே) ஏகாந்த சிவராஜ யோகம் அடியேனுக்கு உண்டாகவும் அடியேன்மீது தேவரீர் திருக்கருணை வைத்தல்வேண்டும். (67)

மால்காட்டிச் சிந்தை மயங்காம னின்றுசுகக்
கால்கட்டி வாங்காதே; கண்டாய்! பராபரமே!

(பொ-ரை) அடியேனுக்குத் (திருவருள் கூட்டிவைப்பதுபோல) ஆசை காட்டி, அந்நிலையினின்று நான் மயங்காவண்ணம் சுகாரம்பம் செய்தபின், பின் வாங்கா தருளவேண்டும். (68)

எப்பொருளு நீயெனவே யெண்ணி,நான் றோன்றாத
வைப்பையழி யாநிலையா வையாய்! பராபரமே!

(பொ-ரை) தேவரீர் (எங்கும் வியாபித்திருத்தலினால் அவ் வியாபகத்துட்பட்ட) எவ்வகைப் பொருள்களும் தேவரீரே யென்று நினைத்து நான் என்னு மகங்காரம் தலையெடாத இடத்தை எனக்கு அழியா நிலையாக்கி வைத்தருள வேண்டும். (69)

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ? பராபரமே!

(பொ-ரை) (புறக்கரண அந்தக்கரண வியாபாரங்க ளில்லாமல்) சும்மா விருப்பதே சுட்டுத லில்லாத பரிபூரண நிலையென் றெம்மா லறியப் படுதற்கெளிதாகுமோ? (70)

முன்னொடுபின் பக்க முடியடிநாப் பண்ணறநின்
றன்னொடுநா னிற்பதென்றோ? சாற்றாய்! பராபரமே!

(பொ-ரை) (தேவரீருடைய) முன், பின், இருபக்கம், முடி, அடி, நடு என்னும் (இடங்களில் அடியேனிற்கும்) தன்மையற்று, உன்னுடனே இரண்டறக் கலந்து நிற்பது எந்நாளோ? சொல்லாய்! (71)

மைவ்வண்ணந் தீர்ந்த மௌனிசொன்ன தெவ்வண்ண
மவ்வண்ண நிட்டை யருளாய்! பராபரமே!

(பொ-ரை) அஞ்ஞான நீங்கப்பெற்ற மவுனகுரு (அடியேனுக்கு) உபதேசித்த தெவ்விதமோ அவ்விதமான சிவயோக நிட்டையினை யருள் செய்வாய்! (72)

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ? நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ? செப்பாய்! பராபரமே!

(பொ-ரை) வித்து ஆதாரமாகவல்லது (விருட்ச முதலிய) யாவும் விளைதலுண்டோ? (இல்லை; அதுபோலத்) தேவரீர் திருவருள் ஞானமின்றி (ஆன்ம கோடிகளாகிய) எங்கட்குச் செயலுண்டோ? சொல்லாய்! (73)

ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும்; பராபரமே!

(பொ-ரை) அகங்கார மொழிந்து, தேவரீர் விஷய ஞான ரூபமான அன்பருக்கே (பிரபஞ்ச வியாபாரத்துடன்) உறங்காமல் (அருள் வியாபாரத்துடன்) உறங்கும் அத்தன்மை யோங்காநிற்கும். (74)

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து, சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே, இன்பநிலை வாய்க்கும்; பராபரமே!

(பொ-ரை) மனங் கசிந்து, ஞானமயமாகிய தேவரீர் திருவடி நீழலில் வந்தடைந்தவர்க்கே, ஆனந்தநிலை கிடைக்கும். (75)

சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து, நீயாகி
னல்லா லெனக்குமுத்தியாமோ? பராபரமே!

(பொ - ரை) வார்த்தை சொல்லுதற்குக் கூடாத வூமைகளைப் போலப் பேச்சற்று, (சிவோகம் பாவனையில்) தேவரீர் தன்மை யடைந்தா லல்லது அடியேனுக்கு முத்தி கிடைக்குமோ? (76)

பேச்சாகா மோனம் பிறவா முளைத்தென்றற்
காச்சாச்சு; மேற்பயனுண் டாமோ? பராபரமே!

(பொ - ரை:) வார்த்தையற்ற மவுன நிலையானது உண்டாகி விளைந்த தென்றற்கு (எது) ஆயிற்று ஆயிற்று; (ஆதலால்), இனி யதன் பயனாகிய முத்தி யெனக் குண்டாமோ? (77)

கெட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர், பூரணமாந்
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார்; பராபரமே!

(பொ - ரை) (ஞானசாதனையில் மிகச்) சமர்த்தர் (என்று உலகத்தாரால் சொல்லப்பட்ட) தேவரீரது அன்பர் ஆணவ மலசம்பந்த மொழியப்பெற்று அயர்ந்து, ஒப்பற்ற பரிபூரண நிலையாகிய தொட்டிலிலே (சிவராஜ யோகானுபவ நித்திரையி லிருந்து) பாலர்போன்று துயின்றார்கள். (78)

காட்ட வருளிருக்கக், காணு திருண்மலத்து
நாட்ட மெனக்குவர னன்றோ? பராபரமே!

(பொ - ரை) (தேவரீர் தரிசனத்தினைக் காட்ட உன் திருவருளிருக்க, அதனை முன்னிட்டுக் காணமல் இருளுருவமாகிய ஆணவாதி மலத்தின்கண் நாட்டம் அடியேனுக் குளதாதல் நன்மையோ? (79)

எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்;
அத்தன்மை நின்னருளு மன்றோ? பராபரமே!

(பொ - ரை) எந்த விதமான குற்றத்தைப் பாலர் செய்தாலும் அதனைத் தாயானவள் பொறுத்துக்கொள்வள்; தேவரீர் திருவருளும் (எம்போன்றார் குற்றம் பொறுத்தற்கு) அத்தன்மை யல்லவோ? (80)

எத்தனையோ தேர்ந்தாலும்; என்னாலே யின்பமுண்டோ?
சித்துருவே! இன்பச் சிவமே! பராபரமே!

(பொ - ரை) எத்தனை விதமாக ஆராய்ந்து பார்த்தாலும் (தேவரீரால் எனக்குச் சுகமுளதே யன்றி) அடியேனால் எனக்கு உளதாவதோர் சுகமுளதோ? அறிவுருவமே! சுகத்தை யளிக்கின்ற பரமசிவமே! (81)

மண்ணொடுவிண் காட்டி, மறைந்து,மறை யாவருளைக்
கண்ணொடுகண் ணாகவென்று காண்பேன்? பராபரமே!

(போ - ரை) மண்முதல் ஆகாயமுதலாக வுள்ள பிரபஞ்ச நிலையினைத் தெரிவித்து, மறுபடியும் திரோதானத்தால் மறைந்து, மறுபடியுமொவ்வொரு கால் தோன்றிக்கொண்டிருக்கிற தேவரீர் திருவருளைக் கண்ணுடன் கூடிய கண்ணொளிபோல எந்நாள் (நீக்கமின்றிக்) காணப்பெறுவேன்? (82)

பஞ்சரித்து, நின்னைப் பலகா லிரந்ததெல்லாம்,
அஞ்ச லெனும்பொருட்டே யன்றோ? பராபரமே!

(போ - ரை) அடியேனுடைய எளிமைத்தன்மையைக் காட்டிப், பல நாளுந் தேவரீரை அடியேன் யாசித்ததெல்லாம், அடியேனை 'அஞ்சாதே!' என்று தேவரீர் சொல்லியருளல்பொருட்டே யல்லவோ? (83)

எங்கெங்கே பார்த்தாலும், எவ்வுயிர்க்கு மவ்வுயிரா
யங்கங் கிருப்பதுநீ யன்றோ? பராபரமே!

(போ - ரை) எவ்விடத்து நோக்கினும், (அவ்வவ் விடங்களில்) எத்தகைய உயிர்களிடத்தும் அவ்வவ் வுயிராயிருப்பது தேவரீ ரல்லவோ? ()

அனைத்துமாய் நின்றாயே; யான்வேறோ? நின்னை
நினைக்குமா றெங்கே? நிகழ்த்தாய்! பராபரமே!

(போ - ரை) (சர்வ வியாபகத் தன்மையினால்) எல்லாப் பொருள்களும் தேவரீரேயாகி நின்றீரே; (அங்ஙனமாக) அடியேன் வேறாக நின்று தேவரீரைத் தியானிக்கும் வழி யெவ்வாறு? சொல்லாய்! (85)

நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்,
என்போத மெங்கே? இயம்பாய்! பராபரமே!

(போ - ரை) தேவரீருடைய திருவருட் பிரேரேபகத்தாலேயே நினைப்பு மறப்பு முண்டாகுமென்றால், அடியேனுக் கென்ன, சுதந்தரமாக அறிவு எங்கே யுண்டாம்? சொல்லாய்! (86)

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
யென்றறிந்தா லெங்கே யியங்கும்? பராபரமே!

(போ - ரை) (ஒன்றைப்) பற்றிக்கொண்டு (அக்கணம்) மற்றொன்றை மறக்குந்தன்மை வாய்ந்து, பிரபஞ்ச முழுதும் தாவாநின்ற மனமானது, (தேவரீரது வியாபக வுண்மை தேர்ந்து) எல்லாப் பொருள்களு நீயேயென் றறிந்ததாயின் எவ்விடத்துச் சஞ்சரிக்கும்? (87)

'கொழுந்தில் வயிரமென'க் கோதறவுள் ளன்பி
லழுந்துமலர்க் கேசுகமுண் டாகும்; பராபரமே!

(போ - ரை) (மரத்தினது) கொழுந்தில் வயிர மடங்கியிருத்தல் போல, குற்றமற உள்ளன்பிடத் தழுந்தி யிருப்பவர்க்கே ஆனந்த முண்டாம். (88)

'பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்துபோற்,' பருவம்
பெற்றவர்க்கே நின்னருடான் பேறும்; பராபரமே!

(பொ-ரை) கதிர்பிடிக்கும் பயிரினுக்கே விளையும் கொழுந்து (நன்கு விளங்குவது) போல, பரிபக்குவ மடையு மன்பருக்கே தேவரீர் திருவருள் விளங்கும். (89)

யோகியர்க்கே ஞான மொழுங்காம்;பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர்; பராபரமே!

(பொ-ரை) சிவராஜ யோகியர்கட்கே (இச் சென்மத்தில்) ஞான மடைதல் கூடும்; மிகுந்த அன்பினரான மோட்சதாக முள்ளவரும் முற்பிறப்பில் சிவராஜயோகம் செய்து முடித்தவராம். (90)

அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே,
சொல்லும் பொருளுஞ் சுமைகாண்; பராபரமே!

(பொ-ரை) இரவும் பகலும் திருவருள் மயமாய் நின்றவர்கட்குச் சொல்லும் அதன் பொருளும் அதிக பாரமாம். (ஆதலின் மவுனமுற்றிருப்பார்கள்.) (91)

எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க்(கு), உனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ? பராபரமே!

(பொ-ரை) (வண்டின்) எச்சிலாய்விட்டதென்று பூவை நீக்கினோர்கட்குத், தேவரீரை யருச்சித்து வணங்கப் பச்சிலையும் கிள்ளத் தகுதியாமோ? (புட்பத்தைக்கொண்டே மந்திரத்தாற் சுத்தி செய்து அருச்சிக்க வேண்டும்.) (92)

அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன்(று); எந்தாய்! பராபரமே!

(பொ-ரை) (மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய) அந்தக் கரணங்கள் ஒடுங்கும்படி துறத்தலே எத்தகைய துறவினு நன்மையாம்; எந்தையே! (93)

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது,
பின்னையொரு பற்றுமுண்டோ? பேசாய்! பராபரமே!

(பொ-ரை) (ஆன்மாவாகிய) தன்னை இத்தகைய சொரூபனென்றுணர்ந்தால் பரமான்மாவின்மேற் பற்றுண்டாத லன்றி, மற்றொரு பற்று முளதாமோ? சொல்லாய்! (94)

அன்பாற் கரைந்து,கண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ? பராபரமே!

(போ - ரை) அன்பினால் (மனம்) உருகித், தமது கண்ணில் ஆற்றினைப் போல நீரைப் பெருக்கின புண்ணியவான்கட்குத் தேவரீரை யடைய வழிதா னுண்டாமோ? [அத்தகையரே மோட்சமடைவர்.] (95)

தன்னை யறிந்(து), அருளே தாரகமா நிற்பதுவே
யுன்னை யறிதற் குபாயம்; பராபரமே!

(போ - ரை) ஆன்மாவாகிய தன்னை விசாரித்துப், பின்னர்த் திருவருளை ஆதாரமாக முன்னிட்டுக்கொண்டு அத் திருவருண்மயமாய் நிற்றலே தேவரீரைத் தெரிந்துகொள்ளற் குபாயமாகும். (96)

கற்றகலை யானிலைதான் காணுமோ? காண்பதெல்லா
மற்றவிடத் தேவெளியா மன்றோ? பராபரமே!

(போ - ரை) (பிரபஞ்சமுகமாகவிருந்து) படித்த கல்வியின் தேர்ச்சியினால் உண்மைநிலை யறியப்படுமோ? (முன்னிலைச் சுட்டாகக்) காணப் படுவன வெல்லாம் தோன்றா விடத்தன்றோ (உண்மை) வெளியாகும். (97)

கண்மூடிக், கண்விழித்துக், காண்பதுண்டோ? நின்னருளாம்;
விண்மூடி னெல்லாம் வெளியாம்; பராபரமே!

(போ - ரை) கண்ணினை மூடித் (தியானித்தலினாலும்), கண்ணை விழித்துத் [தியானித்தலினாலும்] உண்மை யறியப்படுமோ? தேவரீர் திருவருண் மயமாய் ஆகாயமுழுவதுங் கண்டகாலத்து எல்லாவுண்மையுந் தோன்றும். (98)

நேரே நினதருளென் நெஞ்சைக் கவரின், ஒன்றும்
பாரேன்; சுகமும் படைப்பேன்; பராபரமே!

(போ - ரை) தேவரீர் திருவருளானது அடியேன் மனத்தினை நேராகக் கிரகித்துக்கொண்டால், அன்னியபொருளொன்றினையும் காணேன்; சிவானந்தத்தையு மடைவேன். (99)

'வான்காண வேண்டின் மலையேற லொக்கு'முன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம்; பராபரமே!

(போ - ரை) தேவரீரை (என் சுதந்திரத்தால்) தரிசிக்கும்பொருட்டுப் பாவனை செய்கின்ற பாவனையானது ஆகாயத்தைக் காண விரும்பினோன் மலை யேறுதலை நிகர்க்கும். (திருவருளை முன்னிட்டே யறிதல் வேண்டும்.) (100)

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால், வேறுமொரு
சாதனைதா னுண்டோ? நீ சாற்றாய்! பராபரமே!

(போ - ரை) (பிரபஞ்ச) வாதனையை நீங்கித் தேவரீர் திருவருளினிடத்து அழுந்தினா லல்லாமல், (வீடு பேற்றுக்கு வேறுமொரு) சாதனமும் வேண்டுமோ? சொல்லாய்! (101)

பாரகமும் விண்ணகமும் பற்றுக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ? சாற்றாய்! பராபரமே!

(பொ - ரை) மண்முதல் ஆகாயம்பரியந்த முள்ள யாவும் காரியப் படுவதற்கு ஆதாரமாயிருப்பது தேவரீர் திருவருளாகிய ஆதாரத்தினைப் பற்றி யல்லவா? சொல்லாய்! (102)

விளக்குந் தகளியையும் வேறென்றார், நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார்; பராபரமே!

(பொ - ரை) தீபத்தினையும் (அத் தீப மெரிதற்குக் காரணமாயுள்ள) அகலினையும் (ஆகுபெயரா லொன்றாகக் கூறினும் உண்மையில்) வெவ்வே றென்றாது (ஒன்றாகச் சொல்லு மூடர்களே), தேவரீரை (சீவனைக் காட்டிலும் வேறான சிவனென்றாது) தேவரீர் அஞ்ஞானகலுஷித அவி வேகத்தாலே சீவனாயினை யென்று சொல்லுவார். (103)

பாராதி நீயாப் பகர்ந்தால், அகமெனவு
மாராயுஞ் சீவனுநீ யாங்காண்! பராபரமே!

(பொ - ரை) பிருதிவிமுதலியவைகளைத் தேவரீராகச் சொல்லு மிடத்து நானென அகங்கரித்து ஆராயும் சீவனும் நீயேயாகும். (தேவரீர் பிருதிவியாதி அட்ட மூர்த்தமாக விளங்கலின், சீவனைச் சிவனென்றது உபசாரம்.) (104)

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதரவுன்
மெய்யருளே யன்றோ? விளம்பாய்! பராபரமே!

(பொ - ரை) காரியரூபமான பதார்த்தங்களைக் காரியரூபமே (காரணமன்று) என அறியும் அறிவுக்கு ஆதரவாக விருப்பது தேவரீர் மெய்யருளே யன்றோ? சொல்வாயாக! (திருவருளை முன்னிட்டே பிரபஞ்ச உண்மையினை யறியவேண்டு மென்பதாம்.) (105)

'வருவான்வந் தேனெனல்போன்', மன்னி யழியுஞ்சகத்தைத்
தெரிவாக வில்லையென்ற தீரம் பராபரமே!

(பொ - ரை) நிலையாகக் காணப்பட்டுக் (காரியரூபமாக மாறுபடும் சகத்தைத் தெளிவாகக் காரியரூபத்தால்) இல்லையென்ற தீரம், இனி வருவானொருவன் துணிவுபற்றி வந்தே னென்றலை யொக்கும். (106)

மாயா சகமிலையேன், மற்றெனக்கோர் பற்றுமிலை;
நீயேநா னென்றுவந்து நிற்பேன்; பராபரமே!

(பொ - ரை) மாயா காரியமாகிய பிரபஞ்சம் எனக்குத் தோன்றா திருக்குமேல் எனக்கு வேறு பற்று மில்லையாம். (அப் பற்று இல்லை

யாகவே, தேவரீரைப் பற்றிக்கொண்டு சிவோகம்பாவனையில்) நீயே நானென்று வந்து நிற்பேன். (107)

'வானுதிநீ' யெனவே வைத்தமறை, என்னையுநீ
தானாகச் சொல்லாதோ? சாற்றாய்! பராபரமே!

(பொ - ரை) (வியாபகத்தை நோக்கி) ஆகாயமுதலியவற்றைத் தேவரீரேயென்று சொல்லிவைத்த வேதம், (அவ் வியாபகத்துட்பட்ட) அடியேனையும் தேவரீராகவே சொல்லாதோ? நீ சொல்வாய்! (108)

வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம்; பராபரமே!

(பொ - ரை) வெள்ளம்போலும் கருணையாகிய மதத்தினைப் பொழியாநின்ற யானையாகிய தேவரீர் திருவருளுக்கு அடியேன் வஞ்சகமாகிய மனமே கவளமாம். (109)

வண்டாய்த் துவண்டு, மௌன மலரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய்? பராபரமே!

(பொ - ரை) வண்டினைப்போலத் துவண்டு மவுனமாகிய புஷ்பமஞ்சத்தி லுற்றவர்கட்குத்தானே தேவரீர் சுகம் கொடுப்பீர்? (ஆம். ஏனையர்க்குக் கொடுக்கமாட்டீர்.) (110)

மாயைமுத லாம்வினைநீ! மன்னுயிர்நீ! மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீ யன்றோ? பராபரமே!

(பொ - ரை) (சடமாகிய மாயையினைத் தேவரீர் காரியப்படுத்தலின்) மாயைமுதலாகிய வினைக் கருவிகளும் நீ! (தேவரீ ரறிவிக்க ஆன்மாக்க ளறிபவர்க ளாகலின்) அம் மாயைகளாற் றொழிற்பட்டு நிலைபெற்றிருக்கு முயிர்களு நீ! (கன்மத்திற்குத் தக்கபடி அறிவிப்பவ னீயாகலின்) நிலைபெற்ற வுயிர்கள் மாயையைக் கடந்து தெளிந்த ஆராயு மறிவாயிருப்பது நீ யல்லவோ? (111)

என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவைக
ணின்னவையே யன்றோ? நிகழ்த்தாய்! பராபரமே!

(பொ - ரை) (எனக்கென யாதொரு சுதந்திர மில்லாதிருத்தலின்) என்னறிவும், நானும், எனதென்பதும் ஆகிய இவை யாவும் தேவரீர் பிரேரபனையா யிருத்தலின் உன்னுடையனவேயா மன்றோ? சொல்லாய்! (112)

பாரறியா தண்டப் பரப்பறியா(து); உன்பெருமை
யாரறிவார்? நானோ அறிவேன்? பராபரமே!

(பொ - ரை) (திருவருளை முன்னிட்டன்றி) மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் நின்னை யறியார்கள்; (ஆயின்) தேவரீர் பெருமையை யாரறிய வல்லார்? (ஒருவரு மில்லை. அங்ஙனமாக) நானோ அறியவல் லேன்? (113)

அண்ட மனைத்திலுமாய், அப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார்? பராபரமே!

(பொ - ரை) எல்லா அண்டங்களுக்குள்ளும், அவ் வண்டங்களைக் கடந்த வெளியிலும், (வியாபகம்) கொண்டிருக்கிற தேவரீரை யார் அறிந்துகொள்ள வல்லவர்கள்? (114)

ஒப்புயர்வொன் றின்றி யொலிபுகா மோன வட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய்! பராபரமே!

(பொ - ரை) ஒப்பும் உயர்வும் சொல்லக்கூடாத சத்தமற்ற மவுன நிலையாகிய விருத்த வடிவமான மரக்கலத்தினுக் கேற்ற மேலாகிய சரக்கு நீ.

என்போ லெளியவரும், எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரு முண்டோ? பராபரமே!

(பொ - ரை) அடியேனைப்போல் எளியவர்களும், தேவரீரைப் போல் வலியவர்களும் எவ்வெவ் விடங்களி லாராய்ந்து பார்த்தாலும் உண்டோ? இல்லை. (116)

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே;
யார்க்குஞ் செயலிலையே; ஐயா! பராபரமே!

(பொ - ரை) விசாரிக்கின் அண்ட பிண்ட விரிவெல்லாம் தேவரீரின் செய்கையின் காரியமாகவே யிருக்கின்றன; வேறொருவர்க்கும் ஒரு செயலு மில்லை. (117)

ஒன்றே! பலவே! உருவே! அருவேயோ!
என்றே யழைப்பதுன்னை யென்றோ? பராபரமே!

(பொ - ரை) ஏகமே! அனேகமே! சகளமே! நிட்களமே! ஓவென்று முறையிட்டுத் தேவரீரை யழைப்பது எந்நாளோ? (118)

செப்புவதெல் லாஞ்செபநான்; சிந்திப்ப தெல்லாநின்
ஒப்பி றியானமென வோர்ந்தேன்; பராபரமே!

(பொ - ரை) அடியேன் (தேவரீரைப்பற்றிப்) பேசுவன யாவு முன் செபமெனவும், (தேவரீரைப்பற்றி) அடியேன் சிந்திப்பன யாவும் உன் தியான மெனவும் ஆராய்ந் தறிந்துகொண்டேன். (119)

ஆரிருந்தென்? ஆர்போயென்? ஆரமுதா நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன்; சிவமே! பராபரமே!

(பொ - ரை) (மரணத்தினின்றுங் காப்பாற்றக்கூடாத) ஆரிருந்தாலென்ன லாபம்? ஆர்போனாலென்ன நஷ்டம்? (ஒன்றுமில்லை; மரணத்தினின்றுங் காப்பாற்றக்கூடிய) அரிய அமிர்தமாகிய உன் திருவருளின் பல மிருந்தால் அடியேன் பிழைப்பேன். மங்களகரனே! (120)

வஞ்சகமன் வாதனைக்கும், வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி யுனையடைந்தேன்; ஐயா! பராபரமே!

(பொ - ரை) (மரணத்திற் கேதுவாகிய) கபடத்தையுடைய இயமனது வேதனைக்கும், வலிய பிறவி வேதனைக்கும், (ஆற்றாது) அஞ்சி (அவைகளை நீக்கிக் காக்கவல்ல) தேவரீரைத் தஞ்சமடைந்தேன். ஐயனே! (121)

எந்தப் படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ? பராபரமே!

(பொ - ரை) தேவரீர் திருவுள்ளம் (அடியேன் கன்மத்திற்குத் தக்கபடி) எவ்வாறு யிருந்ததோ அவ்வாறு யன்றோ எமக்கு இன்ப துன்பங்க ளுண்டாவன. (122)

எந்தெந்த நாளு மெனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே! பராபரமே!

(பொ - ரை) (இம்மை மறுமையாகிய) எக்காலத்தும் அடியேனை விட்டு நீங்காமல், என்னுயிர்க்கு உயிராய், என் மனத்தின்கண் குடியாகக் கொண்டிருந்த அருட் டெய்வமே! (123)

'அஞ்சலஞ்ச' லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே! பராபரமே!

(பொ - ரை) தேவரீர் தொண்டனாகிய எனக்கு அப்போதைக் கப்போது பயப்படாதே! பயப்படாதே!' என்று என்னிதயத்திலிருந்து அறிவிக்கின்ற, பரிபூரணமே! (124)

என்னையுன்றன் கைக்களித்தார் யாவர்? என்னை யான்கொடுத்துப்
பின்னையுன்றாற் பெற்றநலம் பேசேன்; பராபரமே!

(பொ - ரை) அடியேனைத் தேவரீர் கையிற் பிடித்துக் கொடுத்தவர் யாவர்? யானே வலிய அடிமையாகிப், பிறகு தேவரீரால் நானடைந்த நன்மையினை யெடுத்துப் பேச வலியிலேன். (125)

'வாய்பேசா வூமையென' வைக்கவென்றோ? நீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய்; பராபரமே!

(பொ - ரை) வாயினாற் பேசுதற் கொண்ணாத வூமையென்று சொல்லும்படி அடியேனை மவுனநிலையில் வைப்பதற் கென்றுதானோ, நீ மவுனத் தாயாகி வந்து உன் திருவருளை யெனக்குத் தந்தனை. (126)

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபலன்? எந்தாய்! பராபரமே!

(பொ - ரை) தேவரீரை அடியேனுக்கு ஆசாரியராகத் தந்து, அடியேனைத் தடுத்தாண் டடிமையாகக் கொண்ட தேவரீர் திருவருளுக்கு என்னாலென்ன பயன்? தந்தையே! (127)

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண்! பராபரமே!

(பொ - ரை) மார்க்கண்ட முனிவர்பொருட்டு வந்த இயமன் (தேவரீர் திருவடியா லுதையுண்டு மூர்ச்சித்து விழுந்தமையாகிய) பட்ட பாட்டினை ஆலோசித்துப் பார்த்தா லுன்னடியார்க் கென்ன பய முண்டு?

சுட்டியுண ராமற் றுரியநிலை யாய்வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன்? பராபரமே!

(பொ - ரை) முன்னிலைச் சுட்டில்லாத துரியநிலையாகிய சிதாகாயத்தில் அடியேனை நிறுத்திய தேவரீரைப் (பேரறிஞரே யன்றிச் சிற்றறிஞனாகிய) நானோ புகழ வல்லேன்? (129)

சூதொன்று மின்றியென்னைச் சும்மா விருக்கவைத்தாய்;
ஈதொன்றும் போதாதோ? இன்பம்; பராபரமே!

(பொ - ரை) (பிரபஞ்ச முகமாக) வஞ்சகஞ் சிறிது மில்லாமல் அடியேனை மவுன நிலையி லிருக்கும்படி வைத்தனை; இன்ப மடைதற்கு ஈதொன்றுமே போதாதோ? (130)

வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம்? பராபரமே?

(பொ - ரை) சற்றேனும் வாயொன்றும் பேசாத மவுனமூர்த்தியாய் எழுந்தருளி வந்து ஆண்டதொன்றுமே எனக் கின்பங் கொடுக்க அமையாதோ? (131)

என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும்போ தாதோ? உரையாய்! பராபரமே!

(பொ - ரை) எக்காலத்தும் என்னை (விடயங்களுக் காளாக்காமல்) நானிருந்தபடி எனக்கு ஆனந்தானுபவத்தைத் தந்ததாகிய வொன்றுமே யமையாதோ? (மேலும் செய்யவேண்டிய உபகார மேதுளது?) சொல்லாய்! (132)

எண்டிசைக்கீழ் மேலான வெல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையுநான் கண்டேன்; பராபரமே!

(பொ-ரை) எட்டுத் திக்குகளும், பூமி ஆகாயமும், எல்லாம் சிதாகாயமாகக் கண்டவிடத்தில் (தேவரீருடன்) அடியேனையும் கண்டேன்.

பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட மிடுவேன் ? பராபரமே !

(பொ-ரை) பித்தனும், (உலக மின்னதென அறியாத) பேதையனுமாகிய என்னை யாட்கொண்ட வுனக்கு (எவ்வளவு செய்யினும் கைம்மாறாகாத) தெண்ட மெத்தனைச் சமர்ப்பிப்பேன் ? (134)

தாயர்கர்ப்புத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளு
நேய ! உனை யாரே நினையார் ? பாராபரமே ?

(பொ-ரை) தாயின் வயிற்றுள் வாழுகிற காலத்தும் அன்னத்தினையும் தண்ணீரினையும் தந்தாண்ட நேயனே ! தேவரீரை நினையாதவர் யாவரோ ? (ஒருவரு மில்லை.) (135)

விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளுகப்
பரந்த வருள்வாழி ! பதியே ! பராபரமே !

(பொ-ரை) (பிரபஞ்சமுகமாகப்) பரந்த மனம் (அதோமுகமாகக்) குவியும் சமயத்து நானென்று முந்திவந்து பரந்த வுன் திருவருள் வாழக்கடவது ! இறைவனே ! (136)

சிந்தனைபோய், நானெனல்போய்த், தேக்கவின்ப மாமழையை
வந்து பொழிந்தனை நீ ; வாழி ! பராபரமே !

(பொ-ரை) (பகிர்முக விஷயங்களை) நினைத்த லொழித்து, நான் (என்னும் அகங்கார முனைவு) ஒழித்து, (ஆனந்த நிறைந்து) ததும்ப மழையினைச் சொரிந்தாய் ; ஆகலின், நீ வாழக்கடவை ! (137)

' தந்தேனே ஓர்வசனந், தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே,' என்றனை நீ ; வாழி! பராபரமே !

(பொ-ரை) "(சித்தாந்த மகா வாக்கியமாகிய) ஒரு மொழியினை யுபதேசித்தேனே ; (அங்ஙனம் உபதேசித்தவண்ணமே) இன்பவடிவாகி வந்தேனே" என்று திருவாய்மலர்ந்தருளினை ; ஆதலால், நீ வாழக்கடவை !

மண்ணும்விண்ணும் வந்து வணங்காவோ ? நின்னருளைக்
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே !

(பொ-ரை) தேவரீர் திருவருளைப் (பிரத்தியட்சமாகத்) தரிசிக்க மனத்துள்ளே கண்டவர்களைத் தரிசித்தால் மண்ணுலகினரும் விண்ணுலகினரும் வந்து வணங்காரோ ? (139)

என்றுங் கருணைபெற்ற வின்பத் தபோதனர்சொல்,
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே !

(போ - ரை) எக்காலத்தும் கருணையுடன் விளங்கிய சுகசொரூபிகளாகிய தவமுடையார் வாக்கானது எத்திசைகளினுஞ் சென்று செல்வாக்குறும். (140)

ஆடுவதும், பாடுவதும், ஆனந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை; பராபரமே!

(போ - ரை) (தன்னை மறந்து) நிர்த்தனம் செய்தலும், (அன்பு மயமாக விருந்து) பாடுதலும், (தலங்கடோறும்) ஆனந்தமாகத் தேவரீரைத் தேடித் திரிதலும் தொண்டர் செய்கை. (141)

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய்! பராபரமே!

(போ - ரை) ததும்பி வழியும் தேவரீர் தண்ணிய திருவருளைப் பூரணமாய்ப் பெற்றவர்கட்குப் (பிரபஞ்ச சம்பந்தமான) சூரியன் கிழக்கிலுதித்தலை யொழித்து மற்றெந்தத் திக்கிலுதித்தால்தா னென்ன? சொல்வாய்! (142)

பாலரொடு, பேயர், பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை; பராபரமே!

(போ - ரை) (யாதொன்றையும் விகற்பியாமல் நிருவிகற்பமாய்க் காண்கின்ற) பாலருடன் - (ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம் என்கிற நாலு காரியமு மில்லாத) பேயர் - (வைதாரையும் வாழ்த்தினரையும் சுட்டி - யறியாத) பித்தர். ஆகிய இவர்களுடைய குணத்தையடைந்திருப்பதே ஒழுக்க மிகுந்த ஞானிகளுடைய செய்கை. (143)

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர் விளையாட்டே சுகங்காண்! பராபரமே!

(போ - ரை) (அன்னபானாதிகளை) உண்டும், (ஆடை முதலியவற்றை) உடுத்தும், (ஆபரணாதிகளைப்) பூண்டும், இப் பிரபஞ்சத்தார் போல இவ்விடத்துத் திரிகின்ற தொண்டரது விளையாட்டே அடிமைக்கு இன்பந் தருவதா யிருக்கின்றது. (144)

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே; எந்தாய்! பராபரமே!

(போ - ரை) இரவும் பகலு நீங்கிச் சதோதய தரிசன முடையார் கண்ட நெறி யெவ்விடத்து மொரே நெறியாகும்; எந்தையே! (145)

காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ?
தூயவருட் பற்றுத் தொடர்வார்; பராபரமே!

(போ - ரை) சரீரமானது (எத்தனைகால மிருக்கினும்) நிலையற்றதென்று (அனுபவரூபமாக) விசாரித்துப் பார்த்தவர்கள் நித்திரை செய்

வாரோ? (செய்யார்; மற்றென் செய்வரெனின்) பரிசுத்தம் பொருந்திய திருவருளே பற்றுக் கோடாகக் கொண்டு தொடர்வர். (146)

'அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்' தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ? பராபரமே!

(பொ-ரை) (நீரோடு சேர்ந்த உப்புத் தன் சுவை முழுவது மந் நீர்க்காக்கித் தன்னோ டொப்பச் சமன்செய்து நிற்குமாகலின்) நீரும் அதனுடன் கலந்த உப்பும் போன்ற சாயுச்சிய மேலான ஆனந்தத்தை யுடையவர்கட்குச் சமமாக வுவமித்துச் சொல்லுதற்கும் வாயுண்டோ? (எனவே உயிரைச் சேர்ந்த முதல்வனும் தனக்குரிய எண்குணங்களையு மவ்வுயிரின் கட் பதிப்பித்துத் தன்னோ டொப்பச்செய்து நிற்ப னென்பதாம்.) (147)

சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான்; பராபரமே!

(பொ-ரை) மனந் தெளிந்து (சிவோகம் பாவனையில்) சிவமாந் தன்மை யடைந்த பெரியா ரெல்லார்க்கும் அடியேன் கொத்தடிமையான குடியாவேன். (148)

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள் கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன்? பராபரமே!

(பொ-ரை) தம்முயிர்போலவே (அன்னிய) எவ்வுயிருமா மென்றெண்ணித் தண்ணிய அருள் மிகுந்த செவ்விய நடையை யுடையவருக்கு எக்காலத்தில் ஏவல் செய்யக்கடவேன்? (149)

விண்ணுக்கும் விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய்! பராபரமே!

(பொ-ரை) (பூத சம்பந்தமான) ஆகாயத்திற்கும் (காரணமான) சிதாகாயமாகிப் பொருந்துகின்ற தேவரீருக்கு அடியேன் (அந்தரியாமி) பூசைசெய்து நிற்கும் வழியை எனக்குச் சொல்லியருளாய்! (150)

நெஞ்சகமே கோயி(ல்); நினைவே சுகந்தம்; அன்பே
மஞ்சனநீர்; பூசைகொள்ள வாராய்! பராபரமே!

(பொ-ரை) (அந்தர்யாமி பூசையில்) என் மனமே கோயிலாகவும், என் சிந்தனையே பரிமள திரவியமாகவும், என்னன்பே திருமஞ்சன நீராகவும் கொண்டு, யான் செய்யும் பூசையை யேற்றுக்கொள்ள வாராய்!

கெட்டவழி யாணவப்பேய் கீழாக, மேலான
சிட்டருனைப் பூசை செய்வார்; பராபரமே!

(பொ-ரை) தீமையான நெறியிற் செலுத்தும் ஆணவமலப்பேய் (தன்சத்தி) கெட மேம்பட்ட பெரியோர்கள் தேவரீரைப் பூசை செய்வார்கள். (152)

காற்பிடித்து, மூலக் கனலைமதி மண்டலத்தில்
மேலெழுப்பில், தேகம் விழுமோ ? பராபரமே !

(போ - ரை) (மூக்கின் வழியாக வெளிவருகிற) வாயுவை உள்ளடக்கி, மூலாதாரத்திலுள்ள நெருப்பினை (அவ் வாயுவினைக் கொண்டு ஆஞ்ஞையின்) மேலுள்ள சந்திரமண்டலத்தில் தாக்கும்படி யெழுப்பினால், இச்சரீரம் (பூமியிற் பிணமாக) விழுமோ ? (153)

பஞ்சசுத்தி செய்து,நின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் ; பராபரமே !

(போ - ரை) (பூத சுத்தி, உடற் சுத்தி, திரவிய சுத்தி, ஆன்ம சுத்தி, மந்திர சுத்தி) ஆகிய பஞ்சசுத்தி பண்ணித், தேவரீரைச் (சகள ரூபமாகப்) பாவனை செய்து, (ஆகம விதிப்படி) சிவபூஜை செய்தால், மேலாகிய ஞானம் பிரகாசிக்கும். (154)

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் ; பராபரமே !

(போ - ரை) சிவனடியார்கட்குத் தொண்டு செய அடியேனை அடிமையாக்கிவிட்டால் சிவானந்தநிலை தானே வாய்த்துவிடும். (155)

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே !

(போ - ரை) (யாத்திரைசெய்து ஆங்காங்குள்ள) சிவலிங்கப் பெருமானையும், புண்ணிய தலத்தினையும், தீர்த்தத்தினையும் முறையே (தரிசிக்க) ஆரம்பித்து வருபவர்கட்கு, ஒப்பற்ற சித்தாந்த மகாவாக்கியத்தினை உபதேசித்தற்கு ஆசாரியரும் வந்து வாய்ப்பார். (156)

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ ? பராபரமே !

(போ - ரை) (நல்லவர்களாலே) விரும்பப்பட்ட சரியைமுதலாக மெய்ஞ்ஞான மிறுதியாக உள்ள நான்கும் சோபான முறையில் (முறையே) அரும்பு, மலர், காய், கனிகளைப்போல்) ஒன்றற்கொன் றேதுவாக விளங்கும்) அல்லவா ? (157)

தானந், தவந்,தருமஞ் சந்ததமுஞ் செய்வர்,சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே !

(போ - ரை) தானம், தவம், தருமம் என்பனவற்றை நல்லோர் சிவஞானத்தை யடையும்பொருட்டு எக்காலமும் செய்வார்கள். (158)

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற ஆணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நாள் ? எந்தாய் ! பராபரமே!

(பொ - ரை) ஒருதரம் சொன்ன சொல்லினையே (கோபாவேசத்தால்) பலதரமுஞ் சொல்லிப் பதைக்கின்ற ஆணவமலமான பேய்க்குத் துன்ப முண்டாவது (அதாவது அடங்கிவிடுவது) எக்காலமோ? எந்தையே! (159)

இன்றோ விருவினைவந் தேறியது? நானென்றோ
வன்றே விளைந்ததன்றோ? ஆற்றேன்; பராபரமே!

(பொ - ரை) (நல்வினை தீவினையாகிய) இருவினைகள் வந்து எனக்குச் சம்பவித்தது இன்றுதானோ? (அன்று); நான் எப்போது உளனாயினனோ அப்போதே யுண்டானதல்லவோ? (ஆகவின்) இவ் வினைகளுக்கு நான் சகியேன். (160)

எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால், யான்முனமே
பண்ணவினை யேது? பகராய் பராபரமே!

(பொ - ரை) ("அறிவித்தா லன்றி யறியா வுளங்கள்" என்றதற்கேற்ப) தேவரீரையன்றி எண்ண முதிப்ப தில்லையாயின் யான் முற்பிறப்புக்களில் பண்ணுதற்குக் கரும மேது? சொல்லாய்! (எனவே கருமத்திற்குத் தக்கபடி யெண்ண முதிப்பிப்பன்.) (161)

என்னையின்ன தென்றறியா வேழைக்கு மாகெடுவேன்,
முன்னைவினை கூடன் முறையோ? பராபரமே!

(பொ - ரை) (ஆன்மாவாகிய) என்னை இன்ன தன்மையனென்றுணராத ஏழைக்கும், அந்தோ! கெடுவேன்; பூர்வகன்மம் வந்து பொருந்துதல் முறையாமோ? (162)

அறியாநான் செய்வினையை யையா! நீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய்! பராபரமே!

(பொ - ரை) அறியாமையால் அடியேன் செய்யுங் கருமங்களை ஐயனே! (எனக்கு) நீ சேர்ப்பிக்கும் குறிப்பு எத்தகையது? எனக்கு உளவு சொல்லக்கடவாய்! (163)

என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ? பராபரமே!

(பொ - ரை) அடியேனைக் கெடுத்தற்குப் பொருந்திய இருவினைப் பிணியைக் கெடுத்தற்குத் தேவரீருக்குத் தகாதோ? (164)

வல்லமையே காட்டுகின்ற மாமாயை, நானொருவ
னில்லையெனி னெங்கே யிருக்கும்? பராபரமே!

(பொ - ரை) (பிரபஞ்சத்தினைக் காரியப்படுத்துவதில்) சாமர்த்தியத்தினைக் காட்டுகின்ற பெரிய மாயையானது, நான் (தேவரீரோடு இரண்

டறக் கலந்து) இல்லையாயின், யாருக்குத் (தநு கரண புவன போகங் களாய் விரிந்து) தங்கும். (165)

மூக்குணத்தா லெல்லா முளைக்கப், பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதார்? எந்தாய்! பராபரமே!

(பொ-ரை) முக்குணங்களைக் கொண்டு (பிரபஞ்ச போகங்கள்) யாவும் உண்டாகும்படிச் செய்கின்ற பிரகிருதிக்கு (அத்தகைய) குணத் தினைக் கொடுத்தது யார்? எந்தையே! (எனவே) அது பிரகிருதிக் கியற் கைத் தருமம். (166)

ஆற்றப் படாதுதுன்பம்; ஐய!என் றெலென்மனது
தேற்றப் படா(து); இனியென் செய்வேன்? பராபரமே!

(பொ-ரை) ஐயனே! (பிரபஞ்ச) துன்பம் என்றுற் சகிக்கப்படா திருக்கின்றது; என் மனம் (எவராலும்) தெளிவிக்கப்படாததா யிருக் கின்றது; இனியென்செய்யக் கடவேன்? (167)

பூராய மாய்மனதைப் போக்கவறி யாமலேயோ!
ஆரா யலைந்தேன்! அரசே! பராபரமே!

(பொ-ரை) கிரமமாய்ச் (சிறிது சிறிதாக) மனதை யடக்க அறி யாமல், ஐயோ! அடியேன் என்னவென நினைத்து அலைந்தேன்? அரசனே!

சினமிறக்கக் கற்றாலுஞ், சித்தியெல்லாம் பெற்றாலு(ம்),
மனமிறக்கக் கல்லார்க்கு, வாயேன்? பராபரமே!

(பொ-ரை) கோபம் வராதபடி யப்பியாசித்தாலும், அட்டமா சித்திகளை யடைந்தாலும், மனமொடுங்க அப்பியாசியாதவர்கட்கு (வீணைப்) பேச்சிருந்தென்ன லாபம்? (169)

'வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற்' பாழ்த்தமன
மேதுக்குக் கூத்தாடு தெந்தாய்! பராபரமே!

(பொ-ரை) சண்டை செய்ய வந்தெதிர்த்த மல்லர்களைப்போல, பாழாகிய மனமானது (எதிரிக ளில்லாமலே) என்ன லாப மடையக் கூத்தாடுகின்றது? எந்தையே! (170)

'சூதாடு வார்போற்' றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும்? பராபரமே!

(பொ-ரை) சூதாடுகிறவர்களைப்போல, ஆட்டத்தில் தோற்புண் டானபோது உண்டாகும் மனவாட்டம்போல, மனந் தளர்ந்து வாதாடுவ லதற்கென்ன பயன் உண்டாகும்? (171)

'கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்றபேய்க்குரங்காய்!'
கள்ளமனந் துள்ளுவதென் கண்டோ? பராபரமே!

(பொ - ரை) (கொட்டினால் நெருப்புக் கொள்ளிபோல் எரியச் செய்வதாகிய) கொள்ளித்தேள் கொட்ட அதனால் துடிக்கின்ற பேய் பிடித்த குரங்குபோல வஞ்சகத்தையுடைய மனமானது துள்ளுவது என்ன கருதியோ? (172)

வந்ததையும், போனதையும், வைத்துவைத்துப் பார்த்திருந்தாற்
சிந்தை யிதமகிதஞ் சேரும்; பராபரமே!

(பொ - ரை) (பிரபஞ்சமுகமாகச் சம்பவித்து) வருகின்ற விஷயங்களையும், அனுபவித்து முடிந்த விஷயங்களையும் (மனதில்) எண்ணி எண்ணி நோக்கிக்கொண்டிருந்தால் அம் மனமானது சுகதுக்கங்களில் பொருந்தும். அங்ஙனம் பொருந்தவே இறப்புப் பிறப்புக்களிற் படும். ஆகவே, சென்றதைக் கருதாமலும் சேர்வதை நினையாமலு மிருத்தல் வேண்டும். (173)

ஏறுமயிர்ப் பாலமுணர் (வு); இந்தவிட யங்கனெருப்
பாறெனவு நன்கு வறிந்தேன்; பராபரமே!

(பொ - ரை) ஏறி நடக்கின்ற மயிரினாற் செய்த பாலம் அறிவென்றும், (ஐம்பொறிகளா லனுபவிக்கப்பட்ட) விடயங்கள் (அப் பாலத்தின் கீழோடும் நெருப்பாறு என்றும்) நன்றாகத் தெரிந்துகொண்டேன்; (எனவே, பிரபஞ்சநிலை யெக்காலத்தும் ஆபத்துடன் விளங்குவது.) ()

பொறிவழியே யேழை பொறியா யுழல்வது நின்
னறிவின் விதித்தவிதி யாமோ? பராபரமே!

(பொ - ரை) ஐம்பொறிகள் வழியாகி அறிவற்ற நான் அணுத் தன்மை யடைந்து அலைவது தேவரீர் பேரறிவால் நியமித்த நியம மாகுமோ? (175)

பாசசா லங்களெலாம் பற்றுவிட, ஞானவைவாள்
வீசுநா ளெந்நாள்? விளம்பாய்! பராபரமே!

(பொ - ரை) பாசக்கூட்டங்க ளெல்லாம் பற்றற்று நீங்கும்படி, ஞானமாகிய கூர்மையான வாளைக்கொண்டு வீசுகின்ற நாள் எந்நாளோ? சொல்லாய்! (176)

எந்தவுட லேனு மெடுத்தவுட னல்லதென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய்! பராபரமே!

(பொ - ரை) உலகத்தினி லெடுத்த எந்தச் சரீரத்தினும், இப்போ தெடுத்த மானுடசரீரம் நலமானதென்று சிந்திக்க வந்த என் றிறத்திற்குக் காரண மின்னதென்று சொல்லாய்! (177)

பொய்யெல்லா மொன்றாப் பொருத்திவைத்த பொய்யுடலை,
மெய்யென்றான் மெய்யா விடுமோ? பராபரமே!

(போ - ரை) நிலையற்றனவாகிய தத்துவங்களை யெல்லாம் ஒன்றாகத் திரட்டி அவற்றைக் கொண்டு பொருத்தி வைத்திருக்கிற நிலையற்ற வுடலை மெய்ப்பொரு ளென்று சொன்னால் மெய்ப்பொரு ளாகிவிடுமோ? ()

'மின்னனைய பொய்யுடலை' மெய்யென்று நம்பியையோ!
நின்னை மறக்கை நெறியோ? பராபரமே!

(போ - ரை) மின்னலை யொத்த பொய்யுடம்பை மெய்யென்று நம்பி அந்தோ! தேவரீரை மறந்தொழிதல் எனக்கு நல்ல மார்க்கமாகுமோ?

நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்
கித்தனைதான் றுன்பமுண்டோ? என்னே பராபரமே!

(போ - ரை) என்றும் நிலைபெற்றிருக்கக்கூடாத நீர்க்குமிழியினை யொத்த சரீரத்திற்கு இத்தகைய துக்கங்க ளுளவாதல் தகுதியோ? இஃதென்ன அநீதி? (180)

'தேகமுறும்' என்றுசுடர் தேம்புவதென்? நித்திரையி
னாகமறிந் தாற்பயந்தா னுண்டோ? பராபரமே!

(போ - ரை) தேக மழியுமென்று (உடலையே நம்பியிருக்கும்) சாமானியர் துன்புறுவது யாதுக்கு? (நித்திய சுழுத்தியில் உடலை ஆன்மா நீங்கியிருத்தலாகிய) நித்திரைக்காலத்தில் நடக்குஞ் செய்தியை உய்த் துணர்ந்தால் பயமுண்டாமோ? (நைமித்திய சுழுத்தியாகிய மரணமு மங்ஙனமே யன்றோ?) (181)

ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்
சேதமுறின்? யாதுபின்னே செல்லும்? பராபரமே!

(போ - ரை) எடுத்த சரீர மழியுமாயின், பிறகு எந்தச் சரீரத்தைச் சுமையாக வெடுப்பார்கள்? அதன்பின் என்ன காரியம் செல்லும்? (சரீர முள்ள) போதே வேறு சென்ம மெடாதபடி செய்து கொள்ள வேண்டும்.

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சீவனென்றிங்
கார்ப்பா லெடுத்ததெவ ராலே? பராபரமே!

(போ - ரை) தோலினாற் செய்த பதுமையாகிய இவ் வுடம்பு நாலு ஆள் பாரமாகும்; சீவனென்று இவ் வுலகில் ஆரவாரத்துடன் எடுக்கப் பட்டது யாவரால்? (கன்மத்தால்.) (183)

ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன்? பராபரமே!

(பொ - ரை) பிரபஞ்சத்தைச் சத்தியமென்றே நம்பி நம்பி எந்நாளும் என் காலத்தைக் கழித்து யாது பிரயோசன மடைந்தேன்? (ஒன்றுமில்லை.) (184)

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனை, நின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண்; பராபரமே!

(பொ - ரை) காரியரூபமாயுள்ள வுலக வாழ்வாகிய புலைச்சேரியின் வாசனையானது, தேவரீரது மெய்யாகிய திருவருட்கடலில் மூழ்கினால் நீங்கிவிடும். (185)

'நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே' கருவிநன்னூற் போதம், பராபரமே!

(பொ - ரை) ஆகாயத்தி லேறுதற்கு நூலேணியும், (அவ்வேணி செய்து கொள்ளுவதற்காக) அந் நூலின்பொருட்டுப் பருத்திமரமும் வைப்பவர்போல, (இலக்கண நூல்களையும், சாத்திர நூல்களையும் கொண்டு) முத்தி யடையலா மென்பது (அமையும்.) ஆகவே திருவருளின்றி முத்தி கூடாது. (186)

சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்,
மன்னுங் கலைஞான மார்க்கம்; பராபரமே!

(பொ - ரை) (உலகோபகாரமாக) நிலைபெற்றுள்ள சாத்திரஞான நெறிகள், மிகவும் சிறிய குழந்தைகள் சமைத்த (உண்ணுவதற் குபயோகப் படாத) மணற்சோற்றை யொத்துப் பயனற்றனவே யாகும். (பரஞானத்தை யடையாமல் கால முழுவதும் அபரஞானத்திலேயே யழுந்திக் கிடத்தல் கூடாது.) (187)

வாசகஞா னத்தால் வருமோ சுகம்? பாழ்த்த
பூசலென்று போமோ? புகலாய்! பராபரமே!

(பொ - ரை) வாசா கைங்கரியமாகப் பேசுகின்ற ஞானத்தால் சுகம் விளையுமோ? பாழாகிய வாக்குவாதம் பண்ணிக்கொண்டு கிடப்பது என்றொழியுமோ? அறியேன். தேவரீரே யருள்செய்ய வேண்டும். (188)

'கேட்டதையே சொல்லுங் கிளிபோல்,' நின்னருளி
னாட்டமின்றி வாய்பேச னன்றோ? பராபரமே!

(பொ - ரை) கேட்டதனையே (கற்றுக்கொண்டு) அதனையே சொல்லும் கிளிப்பிள்ளைபோல, தேவரீர் திருவருளில் விருப்பமின்றி (பிறர் சொன்னதைக் கற்றுக்கொண்டு அதனையே) வாயாற் பேசுதல் நன்மையாமோ? (அனுபவம் வேண்டும்.) (189)

வெளியா யருளில் விரவுமன்பர் தேக
மொளியாய்ப் பிறங்கியது முண்டோ? பராபரமே!

(போ - ரை) சிதாகாய ரூபமாகித் தேவரீர் அத் திருவளில் கலக்கின்ற உள்ளன்பர்களுடைய சரீரங்கள் (பூத) ஒளியாகி விளங்கினது முளதோ? (சூக்கும மயத்தை யடைந்தார் தூலத்தன்மையில் விளங்கார்.) ()

காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர்; பராபரமே!

(போ - ரை) நல்லோர்கள் முக்காலச் செய்திகளையுந் தமது கருத்தினால் அறிந்திருப்பினும் அதனைச் (சாமான்னிய) உலகத்தாருக்குச் சொல்லமாட்டார்கள். (கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்.) ()

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ? அறியேன், பராபரமே!

(போ - ரை) கொல்லாமையாகிய விரதமொன்றை மேற்கொண்டவர்களே நல்ல மனிதர்கள்; அவரை யொழிந்த (கொல்லுந்தன்மை வாய்ந்த) மற்றையோர்கள் யாவரோ? அவர் பேர் சொல்ல அறியேன். (பொல்லா ரெனக் கூறின் அத்தகையர் மனிதரென எற்படுமாகலின் அங்ஙனமும் சொல்ல விசையாது. ஆகவே காட்டில் வாழும் நாய்நரிகளே யாவர்.) (192)

இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழிச்
செல்லாமை நல்லோர் திறங்காண்! பராபரமே!

(போ - ரை) அழிதற்பாலனவாகிய காரியத்தை யிச்சித்து மனம் போன வழியே போகாதிருத்தல் நல்லோர்களுடைய காரியம். (193)

ஏதுவந்தும், ஏதொழிந்தும், என்னதியா னென்ஞர்கள்,
போதநிலை கண்ட புலத்தோர்; பராபரமே!

(போ - ரை) ஞானநிலையினைக் கண்ட அறிஞர்கள் (எத்தகைய செல்வம்) வந்திடினும், (எத்தகைய பொருள்) இழந்திடினும், அவற்றைப் பற்றி என்னது யான் என்று மமகரித்தும் அகங்கரித்தும் பேசார்கள். ()

ஆயிரஞ்சொன் னுைம் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண்; பராபரமே!

(போ - ரை) ஆயிரம் (விதமாக எடுத்துப் பேசும் சாமர்த்திய முடைமை) யிருக்கினும் விவேக மில்லாத வஞ்சக மனத்தையுடைய பேயருடன் சேர்ந்தால் அச் சேர்தல் குற்றமேயாம். (195)

மாய மயக்கொழிந்தார், மற்றொன்றை நாடுவரோ?
நேய வருணிலையி னிற்பார்; பராபரமே!

(போ - ரை) மாயா காரியங்களால் (உண்டாகிற பிரபஞ்சப் பொருள்களிடத்து உண்டாகின்ற) மயக்கத்தை நீங்கினவர்கள், வேறு

பொருளை விரும்புவார்களோ? (விரும்பார்கள்; மற்றென்னின்,) அன்புமயமாகிய திருவருள் நிலையில் நிலைபெற் றிருப்பார்கள். (196)

நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர்; பராபரமே!

(பொ-ரை) (பிரதி தினமும்) உறங்குங்காலத்தில் செத்தபிணத்திற்குச் சமானமாயிருக்கிற சரீரத்தின்மேல் விருப்பம் வையாத சுத்த (மனத்தை) யுடையவர்களே நல்ல துறவினர். (197)

எந்நெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்,
கன்னெஞ் சருமுளரோ? காட்டாய்! பராபரமே!

(பொ-ரை) தேவரீரது திருவருட்கு எத்தகைய மனமாயினும் உருகும். அவ்வாறு உருகாத கல்லையொத்த வன்மனத்தினை யுடையோரும் உளரோ? (உளராயின்) நீயே காட்டாய்! (198)

மந்தவறி வாகி, இன்பம் வாயா திருந்தலைந்தாற்,
சிந்தைமயங் காதோ? என் செய்வேன்? பராபரமே!

(பொ-ரை) மந்தஞான முடையேனாகிச், சுகங்கிடையாமலிருந்து அலைவேனாயின், என் மனந் திகையாதோ? இத் திகைப்பை மாற்றுதற்கு நான் என்ன வுபாயஞ் செய்யக்கடவேன்? (199)

தேடினேன்; திக்கனைத்துந் தெண்டமிட்டேன்; சிந்தைநைந்து
வாடினேன்; என்மயக்க மாற்றாய்! பராபரமே!

(பொ-ரை) (ஆசாரிய ரெவ்விட மெழுந்தருளியிருப்ப ரெனத்) தேடினேன்; (தேவரீரது சர்வ வியாபகத்தை யெண்ணித்) திசைக ளெல்லாவற்றினும் வணங்கினேன்; (காணப்பெறாது) மனநொந்து வாடினேன். (அவ்வாட்டத்தா லுண்டாகிய) என் மயக்கத்தை நீக்கியருளுவாய்! (200)

மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ என்னை
யடிமைகொளல் வேண்டும்; அரசே! பராபரமே!

(பொ-ரை) (தேவரீரை விசாரியாதபடி தடுத்துக்கொண்டிருக்கிற எனது பாசமாகிய) சோம்பலென்னும் ஒரு பொருளைத் தடுத்தல்லவோ அடியேனை யடிமை கொள்ளவேண்டும். அரசனே! (201)

காலர்பயந் தீர, இன்பக் காற்கபய மென்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி! பராபரமே!

(பொ-ரை) எமதூதர்களுடைய பயமானது ஒழியும்படிச் சுகத்தைக் கொடுக்கின்ற உன் திருவடிக்கு அபயம் என்று வாயாற் சொல்லி மனத்தின்கண் அதிகரித்த ஆசையை விருத்தி யடைவித்தனையே. தேவரீர் வாழ்வீராக! (202)

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால், வேறுமொன்றைப் பாரேன் ; பராபரமே!

(பொ - ரை) நீரின் குமிழியினை யொத்த (எனது) மனம் (தேவரீர்) திருவருளின் பொருட்டுக் கரைய எண்ணுதலால், வேறொரு (பிரபஞ்சப் பொருள்களுள்) ஒன்றையும் எண்ணேன். (203)

'நீர்க்குமிழி போ'லென் னினைவுவெளி யாய்க்கரையப்,
பார்க்குமிட மெல்லாமேன் பார்வை பராபரமே!

(பொ - ரை) நீர்க்குமிழியினை யொத்த மனமானது சிதாகாயமாய்க் கரைய, அடியேன் வேறு பொருளை நோக்குந்தோறும் எங்கும் அதே நோக்கமா (யிருக்கின்றேன்.) (204)

'ஆடியோய் பம்பரம்போ' லாசையுட னெங்குமுனைத்
தேடியோய் கின்றேன் ; என் செய்வேன்? பராபரமே!

(பொ - ரை) சுழன்று, ஆடி ஓய்ந்த பம்பரம்போல, அன்புடனே தேவரீரை எவ்விடத்தும் தேடிக் (காணப்பெறாமையால்) ஓய்கின்றேன். வேறென்ன செய்யக்கடவேன்? (205)

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கு
நாதாந்த மோன நலமே! பராபரமே!

(பொ - ரை) வேதாந்தம் சித்தாந்தம் (இரண்டும் முறையே பொது வாகவும் சிறப்பாகவும், சித்தாந்தம் சித்தாந்தத்திற்குச் சோபானமாகவு மிருத்தலின்) வெவ்வே றென்னாதவர் தரிசித் தானந்த மடைதற்குரிய நாததத்துவத்தின் முடிவில் விளங்குகின்ற மவுன சுகமே! (206)

ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி, பராபரமே!

(பொ - ரை) சிவானந்த சொரூபமான தேவரீரை யல்லது வேறு பொருளை நினையாத மவுன நிலையே அடியேனுக்கு மோட்சம். (207)

ஏதுக்கு முன்னைவிட வில்லையென்றால், என்கருத்தைச்
சோதிக்க வேண்டா(ம்); நான் சொன்னேன் பராபரமே!

(பொ - ரை) (என்னால் நிகழும்) காரிய மனைத்திற்கும் தேவரீரை யன்றிச் (சிறிதும் சுதந்திர மில்லாத) எனக்கு வேறு துணையில்லை யென விஞ்ஞாபனஞ் செய்துகொண்டால், என் மனதைச் சோதனை செய்யவேண்டாம் ; நான் சொல்லிவிட்டேன். (208)

முத்தியினுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோ
ரெத்தனைபே ரென்றுரைப்ப(து)? எந்தாய்! பராபரமே!

(பொ - ரை) முத்திக்காலத்தும் சரீரத்தினிடத்தில் (அருவசித்தி, உருவசித்தி, அருவுருவசித்தி ஆகிய) மூன்று விதமாகிய சித்தி யடைந்தவர் எத்தனைபேரென்று அளவிட்டுச் சொல்வது? எந்தையே! (209)

நீயன்றி நானார்? நினைவார்? என் னெஞ்சகமார்?
தாயன்றிச் சூலுமுண்டோ? சாற்றாய்! பராபரமே!

(பொ - ரை) தேவரீரை யல்லது (ஆட்டுவித்தா லன்றி யாடக் கூடாத செயலினை வாய்ந்த) நான் யார்? (கன்மத்தினுக்குத் தகுந்தபடி எண்ணும்) எண்ணம் யார்? (சென்மாந்திர வினைக்குத் தக்கபடி சங்கற் பிக்கும்) என் மனம் யார்? தாயை யன்றிச் சூலு முளதோ? சொல்லு வாய்! (210)

அங்கமே! நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
யெங்குமே னேனென்ற தென்னே? பராபரமே!

(பொ - ரை) தேகமே! உன் வடிவமாகிப் (பிரபஞ்ச முழுவதும் சிவசொரூபமாகக் கண்ட) சுகமுனிவர் கூப்பிட நீ யெவ்விடத்தும் 'என் என்' என்று மறுமொழி கொடுத்த தென்ன ஆச்சரியம்? (211)

கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித் தார்த்
திழுத்தால்; கள்ளமனக் கப்பலெங்கே காணும்? பராபரமே!

(பொ - ரை) குளிர்ச்சி பொருந்திய உன் திருவருளாகிய பெரிய வெள்ளமானது மேற்கொண்டு சுழித்து ஒலித்து இழுத்துக்கொண்டு சென் றால், வஞ்சக மனமாகிய மரக்கலமானது (அருட் பெருவெள்ளத்தி லழுந்திவிடுவதல்லது) எவ்விடத்துத் தோன்றும்? (212)

எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ்சொல்
வக்கணையா லின்பம் வருமோ? பராபரமே!

(பொ - ரை) (இலக்கண இலக்கிய சம்பந்தமான) எத்தகைய நூல்களையும் (ஐயந் திரிபறக்) கற்று, அவற்றின் பொருளனைத்தும் நன்கு அறிந்திருக்கிறே மென்று (அகங்கரித்துக்) கேட்பவர் யாவருக்கும் தக்க சமாதானம் சொல்லுகின்ற விற்பன்னத்தால் சுகம் வாய்க்குமோ? (பதி நூல்களாகிய மெய்கண்ட நூல்களை வாசிக்கவேண்டு மென்பதாம்.) (213)

கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணு(ம்); நல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும்; பராபரமே!

(பொ - ரை) கல்லை யெறிந்தால் மூடியிருந்த பாசியானது கலைந்து (அதனால் மூடப்பட்டிருந்த) நல்ல நீரானது தோன்றும்; (அதுபோல) நல்லவர்களுடைய சொற்களின் பொருளை யாராய்ந்தறிந்தால் ஞானம்வந்து வாய்க்கும். (214)

நின்னையுணர்ந் தோர்கடமை நிந்தித்த பேயறிஞ
யென்னகதி பெறுவார்? எந்தாய்! பராபரமே!

(போ - ரை) தேவரீரை யுள்ளவா றுணர்ந்தவர்களாகிய (சிவனடியார்களை) நிந்தித்த பேயறிவை யுடையோர் என்ன துர்க்கதியாகிய (நரகத்தினை) யடைவரோ? எந்தையே! (215)

என்னதியா னென்னலற்றோர், எங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியா(ம்); நீபெரிய சாமி; பராபரமே!

(போ - ரை) எனது யானென்னும் மமகார அகங்காரங்களை யொழிந்த பெரியோர்கள் எவ்விடத்து நின்று தரிசிக்கினும் (நீ சர்வவியாபியாகலின்) அவ்விட மெல்லாம் தேவரீர் சந்நிதியாகவே தோன்றும். தேவரீரே மகாதேவன். (216)

சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக், கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய்! பராபரமே!

(போ - ரை) சோற்றை யடைத்துவைக்கும் தோற்பையாகிய சுமையினை நெடுநாள் வைத்திருக்கவெண்ணி (அடயோகஞ் சாதித்து) நேத்திரங்கள் பிதுங்கப் பிராணவாயுவை (வெளியில் விடாதபடி) உள்ளடக்கித் திரிந்தேன்; (கண்ட தொன்று மில்லை.) (217)

உள்ளபடி யொன்றை யுரைக்கின்,அவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி, அன்பாய்க் களிப்பேன்; பராபரமே!

(போ - ரை) (சாஸ்திர சம்பந்தமாக யாதா) மொரு பொருளைப் (பெரியோராகிய) ஒருவர் (சுருதி யுக்தி யனுபவங்கட்குப்) பொருத்தமாகச் சொன்னால், அத்தகைய பெரியோர்கட்கு நெருங்கிய சுற்றமாய், வஞ்சக மில்லாமல், அன்போடு ஆனந்திப்பேன். (218)

அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்
றொடுத்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன்; பராபரமே!

(போ - ரை) (யாதாமொரு கற்பனை செய்யாமல்) தகுந்த வியற்கையாகச் (சாத்திர சம்பந்தமான) ஒருபொருளை நான் (பிறருக்குச்)சொல்வதன்றிக் கற்பித்த வொன்றை யான் விரும்பிச் சொல்லேன். (219)

உள்ளமறி யா(து),ஒருவ ரொன்றையுன்னிப் பேசில், ஐயோ!
துள்ளியிளங் கன்றாய்த் துடிப்பேன்; பராபரமே!

(போ - ரை) (உண்மையினை விசாரித்துத் தேர்ந்து தெளிந்திருக்கிற) என் மனக்கருத்தை யுணராமல் ஒருவர் ஒரு விஷயத்தினை (மனத்திற்) சங்கற்பித்துக்கொண்டு பேசினால், அந்தோ (அவர்களறியாமையை யெண்ணி) இளங்கன்றுபோலத் துள்ளித் துடிப்பேன். (220)

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல், வேறொன் றறியேன் ; பராபரமே !

(பொ - ரை) (உலகத்திலுள்ள) யாவரும் (சிவானந்த) சுகம் அடைந்திருக்க நினைப்பதே யல்லாமல் நான் வேறு பொருளை நினைக்க அறியேன். (221)

'முன்னுண்மெய்ஞ் ஞான முனிவர்தவ மீட்டுதல்போ'
லிந்நாளிற் காணவெனக் கிச்சை ; பராபரமே !

(பொ - ரை) பூர்வகாலத்தில் உண்மைச் சிவஞானத்தைத் தேர்ந்த முனிவர்கள் தவத்தினைச் சேகரித்ததுபோல, இக்காலத்தில் (யாவரும்) சேகரித்தலைக் காணவேண்டுமென்று அடியேனுக்கு விருப்பமுண்டு. (222)

கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை ; பராபரமே !

(பொ - ரை) கர்மமென்று சொல்லப்பட்ட யாவும் பற்றற்ற மெய்ஞ் ஞானமாகிய தர்மநிலையை யடைந்தது அன்பர் குணம். (223)

கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளி,நீ வாழி ! பராபரமே !

(பொ - ரை) நித்திரையினின்று நீங்கிய என்னறிவினிடத்தே பிரத்தி யட்சமாகவே விளங்கிய (அருட்) பெருஞ்சோதி நீயாகையால் தேவரீர் வாழக்கடவது ! (224)

நானென தன்மையென்று நாடாமல் நாடவின்ப
வானாகி நின்றனை நீ, வாழி ! பராபரமே !

(பொ - ரை) நானென்கிற (சுதந்திரத்) தன்மையை எக்காலத்தும் விரும்பாமல், தேவரீரே (கதியென விரும்ப) இன்பச்சிதாகாயமாய் விளங் கினை யாதலால் தேவரீர் வாழக்கடவது ! (225)

அகத்தா டணுவணுவாய், அண்டமெல்லாந் தானாய்,
மகத்தாகி நின்றனை நீ, வாழி ! பராபரமே !

(பொ - ரை) (சங்காரகாலத்தில்) அணுவுக்குள்ளே பரமாணுவாகி, (திதி காலத்தில்) அண்டங்களெல்லாந் தானேயாகி, (சிருஷ்டி காலத் தில்) எல்லாவற்றையுங் கடந்த மகத்தாகி நின்றனை யாதலால் தேவரீர் வாழக்கடவது ! (226)

கோரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனை நீ, வாழி ! பராபரமே !

(போ - ரை) இருளுக் கிருப்பிடமான கருப்பமாகிய வீட்டினும் என்னிடத்தே யன்புவைத்துக் காப்பாற்றினாய்! ஆதலால், தேவரீர் வாழக் கடவது! (227)

புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப்போ ராடி
யிரந்தோருந் தம்மதென்பார்; என்னே? பராபரமே!

(போ - ரை) (பூமியை) ஆண்டவர்கள் அதனைத் தமது தேசமென்பர்; அப் பூமிக்குப் போர்செய்து மடிந்தவர்களும் அதனைத் தமது தேசமென்பர்; (ஒருவரு மிருந்து வாழ்ந்தா ரில்லை) இது என்ன அறியாமையின் காரியம்? (228)

மூர்த்தியெல்லாம் வாழி! எங்கண் மோனகுரு வாழி! அருள்
வார்த்தையொன்றும் வாழி! அன்பர் வாழி! பராபரமே!

(போ - ரை) (மகேச்சுர மூகூர்த்தங்களாகிய இருபத்துநான்கு) மூர்த்திகள் யாவரும் வாழ்க! (அடியேனைத் தடுத்தாட்கொண்ட) எங்கள் மௌனகுரு வாழ்க! (சித்தாந்த மகா வாக்கியமாகிய) அருள்வார்த்தை என்றும் வாழ்க! சிவனடியார்களும் வாழ்க! (229)

சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
சொல்லும் படிக்கருணை செய்தாய்; பராபரமே!

(போ - ரை) (திருவருளை முன்னிட்டல்லாது) சொல்லாமலும், அச் சொற் பொருளாலும் விசாரித்து உணரக்கூடாத திருவருள் வியாபகத்தில் அடையும்படிக்குத் தேவரீர் அருள் செய்தனை. (230)

இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர்? பேசாய்! பராபரமே!

(போ - ரை) (புனர்சிருஷ்டி காலமுதல்) இந்நாளளவுக்குள்ளே நினைத்தற்கரிய (அஷ்டமா) சித்திகளையும், (சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ) முத்தியினையும் அடைந்தோர்கள் எத்தனை பேர் சொல்வாயாக? (அளவில.) (231)

நாடு நகருநிசா ணட்டிய பாளயமும்
ஈடுசெயு மோ? முடிவி லெந்தாய்! பராபரமே!

(போ - ரை) நாடும், நகரமும், அடையாளங் குறித்த படையும் முடிவுகாலத்தில் பெருமையைக் கொடுக்குமோ? எந்தையே! (232)

தேடுந் திரவியமுஞ், சொந்தமணிப் பெட்டகமுங்,
கூட வருந்துணையோ? கூறாய்! பராபரமே!

(போ - ரை) (அதிகப் பிரயாசைப்பட்டு) சேகரிக்கிற திரவியமும், சேர்த்து வைத்திருக்கின்ற இரத்தின நிறைந்த பெட்டியும், (சாங்காலத்தில்) கூட வரத்தக்க துணைகளோ? சொல்வாய்! (233)

தேடாத தேட்டினரே, செங்கைத் துலாக்கோல்போல்,
வாடாச் சமனிலையில் வாழ்வார்; பராபரமே!

(போ - ரை) (இலகுவில்) தேடப்படாத திருவருட் செல்வத்தை யடைந்தவர்களே, (வணிகருடைய) செவ்விய கையினிடத்துள்ள துலாக் கோல் போல், (கேடு வந்தபோது துக்கமும், பெருக்கம் வந்தபோது களிப்பு மடையாமல்) மெலிவடையாச் சமநிலையில் வாழ்வார்கள். (234)

நீராய்க் கசிந்துருகி, நெட்டுயிர்த்து நின்றேனைப்,
பாராத தென்னோ? பகராய் பராபரமே!

(போ - ரை) (தேவரீரைக் காணாது) நீரைப்போலக் கசிந்துருகிப் பெருமூச்சுவிட்டு நின்ற என்னைக் கடைக்கண் பாராமைக்குக் காரணமென் னையோ? சொல்லாய்! (235)

உள்ளபொரு ளாவியுடன் மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர்! பராபரமே!

(போ - ரை) என்னிடத்துள்ள பொருள் உயிர் உடம்பு என்ற முப் பொருள்களையும் (தேவரீர் எதிரிட்ட) அந்நாளே கொள்ளைகொண்ட நீ (அதற்குத் தகுதியாக) என் குறைகளைத் தீர்க்கவேண்டும். (236)

'ஆழ்ந்தாயே யிவ்வுலகில்; அல்லலெல்லாந் தீர்ந்தருளால்
வாழ்ந்தாயே' என்றனை நீ, வாழி! பராபரமே!

(போ - ரை) (தேவரீர் குருமூர்த்தியாகத் தரிசனந் தந்தகாலத்தில் அடியேனை நோக்கி) "இப் பிரபஞ்ச வாழ்க்கையாகிய கடலில் முழு கினையே; இப்போது பிறவித் துன்பங்களெல்லாம் நீங்கிக் கருணையினால் வாழ்ந்தனையே" என்று திருவாய்மலர்ந்தருளினை யாதலால், தேவரீர் வாழக்கடவது! (237)

தாரா வருளையெல்லாந் தந்(து), எனையு நின்னருளில்
"வாராயோ" என்றனை நீ, வாழி! பராபரமே!

(போ - ரை) (அந்நாளில்) தரக்கூடாத அருள்முழுதுந் தந்து, என்னையும் உன் திருவருளினால் "வாராயோ" என்று கூவினை; ஆதலால், தேவரீர் வாழக்கடவது! (238)

ஆசையுன்மீ தல்லால், அருளறிய வேறுமொன்றிற்
பாசம்வையேன், நின்கருணைப் பாங்காற் பராபரமே!

(போ - ரை) தேவரீருடைய திருவருட் பாங்கினால் உன்மீது ஆசை வைப்பதல்லது (சத்தியமாக) உன் திருவருளறிய மற்று மொருபொருளில் விருப்பம் வையேன். (239)

ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா லின்னையன்றிப்
போதனையு முண்டோ? புகலாய்! பராபரமே!

(போ - ரை) தேவரீர் குருமூர்த்தமாக எழுந்தருளி (அடியேனைத் தடுத் தாட்கொண்ட) ஆதியிலும், (தேவரீருக்கு அடிமையானபிறகும்) தேவரீரை யன்றி அடியேனுக்கு வேறுமொரு போதனையு முளதோ? சொல்லாய்! (240)

தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே! பராபரமே!

(போ - ரை) வலிய வந்து (கருணையே காரணமாக) அடியேனைத் தடுத்தாண்டு, சிதாகாய ரூபியாக்கின சுக சொரூபியே! (241)

பற்றற் றிருக்குநெறி பற்றின், கடன்மலையுஞ்
சுற்ற நினைக்குமனம், சொன்னேன்; பராபரமே!

(போ - ரை) (பிரபஞ்சப் பொருளில்) தொடர்பற்றிருக்கும் நன்னெறியைத் தொடர்ந்தால், என் மனமானது கடலினும் மலையினும் சுற்றித் திரிய நினைக்கின்றது, சந்நிதியில் விண்ணப்பம். (242)

படிப்பற்றுக், கேள்வியற்றுப், பற்றற்றுச், சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண்? பராபரமே!

(போ - ரை) (கருவி நூல்களைப்) படித்தலுமற்று, கேட்டலுமற்று, (அநித்திய பதார்த்தங்களில்) ஒன்றைப் பற்றுதலுமற்று, (பிரபஞ்ச சம்பந்தமாக) மனோவியாபாரமற்று நின்றவர்க் கல்லவோ ஆனந்த முண்டாவது? (243)

சத்தாகி நின்றோர் சடங்க ளிலிங்கமென
வைத்தாரு முண்டோ? என் வாழ்வே! பராபரமே!

(போ - ரை) (சிவமாந் தன்மை யடைந்தபின்) நித்திய வுருவமடைந்தவர் தமது உடல்களைப் (பட்டினத்துச் சுவாமிகளைப்போல) இலிங்க வுருவாக வைத்தவர்களும் (உலகில்) உளரோ? என் வாழ்வே! (244)

சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே!

(போ - ரை) மனமானது நிருவிகற்ப சமாதியை யடையப் பெற்றோர்களுடைய சரீரங்கள், (மாணிக்கவாசக சுவாமிகளைப்போலத்) தீபத்திலிட்ட கர்ப்பூரம்போலப் பிரகாசிக்கும். (245)

ஆதிகா லத்திலெனை யாண்டனையே; இப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன்? பராபரமே!

(பொ - ரை) (அடியேனைத் தடுத் தாட்கொண்ட) பூர்வகாலத்திலே அடியேனை யாண்டருளினையே; இப்பொழுது நீ யகன்றுபோ வென்றால் நான் எங்கே போவேன்? (246)

நாவழுத்துஞ் சொன்மலரோ? நாளுதிக்கும் பொன்மலரோ?
தேவையுனக் கின்னதென்று செப்பாய்! பராபரமே!

(பொ - ரை) (அடியார்கள்) நாவினால் வழுத்தப்பட் டுளவாகின்ற சொல் மலர்களோ? பிரதிதினம் மலர்கின்ற அழகிய (நீர்ப்பூ, நிலப்பூ, கோட்டுப்பூ, கொடிப்பூ ஆகிய) நால்வகை மலர்களோ? உனக்கு இன்னவை வேண்டுமென்று சொல்வாய்? (247)

கன்னறரும் பாகாய்க், கருப்புவட்டாய்க், கற்கண்டாய்
இன்னமுதா யென்னு ளிருந்தாய்; பராபரமே!

(பொ - ரை) கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிய பாகுபோன்றும், கருப்பு வெல்லம் போன்றும், கற்கண்டு போன்றும், இனியவமுதம் போன்றும் என் மனத்தின்கண் இருந்தாய். (248)

சிற்பரமே! தற்பரமே! தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே! அன்பே! அறிவே! பராபரமே!

(பொ - ரை) சிற்பரமே! தற்பரமே! தெய்வீகமான வேதங்களால் சொல்லப்பட்ட அற்புதமே! அன்பே! அறிவே! (249)

அறிவிப்பா னீயென்றால், ஐம்புலங்க டந்தந்
நெறிநிற்பார் யாரே? நிகழ்த்தாய்! பராபரமே!

(பொ - ரை) மனத்தின்கண்ணே யிருந்து அறிவிப்பவன் நீயேயானால், பஞ்சேந்திரியங்களையும் வென்று அந்த மேலான ஞானநெறியில் நிற்பவர் யாவரோ? நீயே சொல்லாய். (அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி யறிவிப்பன்.) (250)

அந்தக் கரணமெனு மாகாத பேய்களெனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ? பராபரமே!

(பொ - ரை) (ஒன்றைப் பற்றுகிறதும் - நிச்சயிக்கிறதும் - சிந்திக்கிறதும் - அவமானங் கொள்ளுகிறதும் மனம் - புத்தி - சித்தம் - அகங்காரங்க ளாதலின்) அந்தக்கரணமென்கிற பொல்லாத பேயர்கள் வந்து என்னைப் பிடித்தாட்ட வழக்குண்டோ? (251)

ஐவரோடுங் கூடாமல், அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே! சிவமே! பராபரமே!

(பொ - ரை) பஞ்சேந்திரியங்களின் வழியே செல்லாமல், அடியேனுக்குக் (குருமூர்த்தமா யெழுந்தருளி) அந்தரங்க சேவையைக் கொடுத்த தெய்வீகமான ஞானமே! சிவமே! (252)

அருளாகி நின்றசுக மாகாமல், ஐயோ!
இருளாகி நிற்க வியல்போ! பராபரமே!

(பொ - ரை) அருள் வடிவமாயிருக்கிற ஆனந்தரூப மாகாமல், அந்தோ! (பிரபஞ்ச சம்பந்தமான) இருளுருவாகி நிற்றல் எனக்குப் பொருத்தமாகுமோ! (253)

அன்பரெல்லா மின்ப மருந்திடவும், யானொருவன்
துன்புறுத னன்றோ? நீ சொல்லாய்! பராபரமே!

(பொ - ரை) உன்னடியா ரெல்லாரும் சிவானந்த சுகத்தை யனுபவிக்கவும், நானொருவனுமே துக்கத்தை யனுபவித்தல் உனக் கழகு தானோ? நீ சொல்லாய்! (பக்குவம் வந்தபோது உண்டாம்.) (254)

சந்ததமு நின்கருணை சாற்றுவதல் லால், வேறு
சிந்தையறி யேன்; உன் சித்தம்; பராபரமே!

(பொ - ரை) எக்காலமும் அடியேன் (தேவரீர் மாட்டுள்ள) கருணையினை எடுத்துப் பேசுவதல்லது மற்றொரு காரியத்தைச் சிந்தையாலுஞ் சிந்தித்தறியேன்; (இதற்குமே லுன்றிருவுளம் எப்படியோ?) (255)

நானா னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனாலும், உன்னைவிட்டுப் போகேன்; பராபரமே!

(பொ - ரை) (சுதந்திரங் கொண்டு) "நான் நான்" என்று கழறுகிற நோக்கத்தினால் தேவரீர் அடியேனை விட்டு நீங்கினும், நான் உன்னை விட்டு நீங்கேன்; (நீயே கதி.) (256)

இக்காயம் பொய்யென்றோ ரீட்டத் துனக்கபயம்
புக்காதா ருண்டோ? புகலாய்! பராபரமே!

(பொ - ரை) 'இந்தச் சரீரம் அநித்தியம்' எனத் தேர்ந்த கூட்டத்துள் 'தேவரீருக் கபயம்' என வந்தடையாதாரு முளரோ? சொல்லாய்! (ஒருவருமில்லை.) (257)

தானாதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்
வானா தியுமொழுங்காய் மன்னும்; பராபரமே!

(பொ - ரை) உயிரினிடத்தும், ஆகாயமுதலிய பஞ்ச பூதங்களினிடத்தும் கிரமமாக நிலைபெற்றிருக்கும் முதல்வனே தானாதலாகிய உன் பரிபூரண நிலையே அடியேன் தங்குமிடமாயுள்ளது. (258)

'உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய,
மின்னுமா னந்த விளக்கே! பராபரமே!

(பொ - ரை) (பரிபக்குவப்பட்ட ஆன்மாக்கள்) நினைக்கின்ற மன மானது கர்ப்பூர உருண்டைபோலக் கரைந்து போகும்படி, மின்னுகின்ற ஆனந்த தீபமே! (259)

நாட்பட் டலைந்த நடுக்கமெலாந் தீர, உனக்
காட்பட்டுந், துன்பமெனக் காமோ? பராபரமே!

(பொ - ரை) (தேவரீரைத் தரிசியாத காலத்தில்) நெடுநாளா யலைந்தநடுக்கங்கள் யாவும் நீங்க, நான் உனக்கு ஆளாகியும் எனக்குத் துன் பங்கள் உண்டாகலாமா? (இன்னம் பிராரத்துவம் ஒழியவில்லை.) (260)

பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தா
லாவிக் குறுதுணையார்? ஐயா! பராபரமே!

(பொ - ரை) பாவியாகிய நான் படுகின்ற கலக்கத்தைக் கண்டும் நீ யிரங்காதிருந்தால் என்னுயிர்க்கு உற்ற துணை யாவார் யாவரோ? ஐயனே!

நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாமல்,
என்னிறைவே பாவித்தேன்; என்னே? பராபரமே!

(பொ - ரை) தேவரீர் வியாபகத்தையே ஆதாரமாகக் கொண்டு நின்று இன்ப மனுபவியாமல், எனது வியாபகத்தையே (தேவரீர் வியாபக மாக மயங்கி) எண்ணினேன்; இது என்ன விபரீத பாவனை? (262)

நின்னைச் சரண்புகுந்தால், நீகாக்கல் வேண்டுமல்லால்,
என்னைப் புறம்விடுத லென்னே? பராபரமே!

(பொ - ரை) தேவரீரைச் சரண மடைந்தால், தேவரீர் அடியேனைக் காக்கவேண்டுமல்லது, என்னை (அநியாயமாகப்) புறத்தில் விடுதல் என்ன அநீதி? (263)

மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தால், நின்செவியி
லேறாத வாறே தியம்பாய்! பராபரமே!

(பொ - ரை) நீங்கரிய துக்கங்க ளனைத்தையும் (தேவரீர் சந்நி தானத்தில்) வந்து எடுத்துச் சொல்லினால், தேவரீர் திருச்செவியில் ஏறாத விதமென்ன? சொல்லாய்! (264)

விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த
அஞ்சுபுல வேடருக்கு மாற்றேன்; பராபரமே!

(பொ - ரை) மிகுந்தஞானத்தி னருமை யனைத்தினையும் மிக்க துன்ப ரூப மாக்கவல்ல ஐம்புலன்களாகிய வேடர்கட்கும் சகிக்கேன். (265)

கன்னங் கரியநிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே? பராபரமே!

(போ - ரை) அதிக இருண்ட நிறத்தினை வாய்ந்த காமமுதலிய அறுவகைப்பட்ட இராக்கதப் பேய்கட்கு அடியேனை இலக்காக வைத்தது என்ன அநியாயம்? (266)

சித்திநெறி கேட்டல் செகமயக்கம்; சன்மமற
முத்திநெறி கேட்டென் முறைகாண்! பராபரமே!

(போ - ரை) அஷ்டமாசித்தி முதலியவற்றை யடைய (பெரியோரை யடுத்துக் கேட்டுக்கொள்ளுதல் புகழுடையவேண்டி யாகலான்) அது உலக மயக்கம். முத்தி மார்க்கத்தை யடையக் கேட்டுக்கொள்ளுதலே தக்க முறையாம். (267)

சிந்தை சிதையச், சிதையாத வானந்த
மெந்தவகை யாலேவந் தெய்தும்? பராபரமே!

(போ - ரை) மனமடங்க, அழியாத சிவானந்தமானது எந்த வகையாகச் செய்யுஞ் சாதனத்தால் எனக்குக் கிடைக்கும்? (268)

"கூர்த்தவறி வாலறியக் கூடா" தெனக்குரவன்
நேர்த்தபடி தானே திரிந்தேன்! பராபரமே!

(போ - ரை) "(திருவருளை முன்னிட்டல்லாமல்) நுண்ணிய தற்போத அறிவினால் அறியக்கூடாது" என்று குருமூர்த்தி தெளிவித்தவண்ணமே தெரிந்துகொண்டேன். (269)

பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
எத்தனைநாள் செல்லும்? இயம்பாய்! பராபரமே!

(போ - ரை) சிவனடியார்கள் அனுபவித்து வருகின்ற மேலாகிய சிவானந்த சுகத்தை அடியே னனுபவிக்க எத்தனை நாள் செல்லும்? சொல்வாய்! (270)

நீரத்தி னற்றுறவு சேராமல் இவ்வுலகிற்
பாரத் தனம்பேசல் பண்போ? பராபரமே!

(போ - ரை) (துணிந்த) தைரியத்தினால் துறவறத்தினை யடையாமல், இவ்வுலகில் (அழுந்தி) வீறுப்புப் பேசிக்கொள்ளுதல் குணமாகுமோ?

இந்த வெளியினையுண் டேப்பமிடப் பேரறிவாத்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன்; பராபரமே!

(போ - ரை) இப் பூதாகாயத்தின் உண்மை கண்டு விசாரித்துத் தள்ளிய பெரிதாகிய ஞானாகாயத்திற்றானே பகிரங்கமாகச் சேர்ந்தேன். ()

உணர்த்துமுனை நாடா துணர்ந்தவையே நாடி,
இணக்குறுமென் னேழைமைதா னென்னே? பராபரமே!

(போ - ரை) (சகலத்தையும்) அறிவிக்கத் தகுந்த உன்னை நாடாமல், என்னு லுணரப்பட்ட (பிரபஞ்சப் பொருள்களையே நாடி,) அவற்றிலழுந்தும் என்னறி விருந்தவா றென்ன? (273)

உண்டுபோ லின்று முலகைத், திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன்! கூறாய்! பராபரமே!

(போ - ரை) (காரிய ரூபத்தால்) இருப்பதுபோலத் தோன்றிக் (காரண ரூபத்தால்) இல்லாததுபோலத் தோன்றும் உலகத்தை, நித்தியமெனக் கருதி நானடைந்த பயனைச் சொல்வாய்! (274)

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தேன்; அக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன்; பராபரமே!

(போ - ரை) எல்லாம் திருவருட் சம்மதப்படி நடக்குமென்று எண்ணித் தேர்ந்தேன்; அக்கணமே வஞ்சக மனமானது போனவழி கண்டிலேன். (மனமொடுங்கிவிட்டது.) (275)

சித்த மவுனஞ், செயல்தாக் கெலாமவுனஞ்
சுத்தமவுன மென்பாற் றோன்றின், பராபரமே!

(போ - ரை) எனதறிவினிடத்து (அடக்கமாகிய) சுத்த மவுனமுண்டாகுமேல், என் மனமானது மவுனம், செய்கை வாக்கனைத்தும் மவுனம். (276)

எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே! பராபரமே!

(போ - ரை) அளவில்லாத பல கோடி வகைப்பட்ட சீவராசிகளெவ்வளவோ அவ்வளவிலும் கண்ணின் (மணிபோலக்) கலந்திருந்த திருவருட் கண்ணே! (277)

எனக்கினியா ருன்போலு மில்லையென்றால், யானு
முனக்கினியா னாகா வுளவேன்? பராபரமே!

(போ - ரை) தேவரீரைப்போலும் அடியேனுக்கு இனியவர் இல்லையாயின், அடியேனும் தேவரீருக்கு இனியவனாகாத உளவு யாது? (278)

அண்ட பிண்டங் காணேன், அகமும் புறமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம், பராபரமே!

(போ - ரை) உள்ளும் புறமும் ஒரு தன்மையாகத் தரிசித்த என்னிடத்து நீ அத்துவிதமான தன்மை தெரிந்தகாலத்தில், அண்ட பிண்டங்களின் தோற்றம் கண்டிலேன். (279)

எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலும்,
சித்தமிரங் கிலை; என் செய்வேன்? பராபரமே!

(போ - ரை) கோடிக்கணக்காக எத்தனைவிதமா யெடுத்து முறை யிடினும், தேவரீர் மனம் என்பால் இரங்கவில்லை, இனி யான் என்செய்யக் கடவேன்? (280)

அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே!

(போ - ரை) பூர்வத்தில் (சநகாதியர் முதலாகிய) அந்த நால்வர்க் கும் ஆச்சரியமாகத் தேவரீர் உபதேசித்தருளிய (சித்தாந்த மகாவாக்கிய மாகிய) ஒரு மொழி எனக்குக் கிட்டுமோ? (281)

அப்பனென்றும், அன்னையென்று(ம்), ஆரியனென் றும்மு
செப்புவது முன்னிலையின் சீர்காண்! பராபரமே! [னையே

(போ - ரை) தந்தையெனவும், தாயெனவும், ஆசாரியனெனவும், தேவரீரையே பலவாருகச் சொல்லுவது (அங்ஙனமெலா மிருக்கும்) உனது நிலையினது சிறப்பாய் முடியும். (282)

கூட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ? விளம்பாய்! பராபரமே!

(போ - ரை) சனக்கூட்டமும், பெருமையும் அந்த யமபடர் வருங் காலத்தில் அவர்களை (உனது திருவருளல்லது) எதிர்த்து வெட்டுகின்ற படையாமோ? (283)

பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும்; பராபரமே!

(போ - ரை) வாய்விட்டுப் பேசாத மவுன நிலையினை யடைந்தா லன்றோ தேவரீர் அருளாகிய வாக்கினு லறியப்படாத நிலை கிடைக்கும். ()

கற்றாலுங், கேட்டாலுங் காயமழியாத சித்தி
பெற்றாலு மின்பமுண்டோ? பேசாய்! பராபரமே!

(போ - ரை) (உலக நூலனைத்தும்) கற்றாலும், (அவை யனைத் தும்) கேட்டாலும், சரீரம் நசிக்காத சித்தி யடைந்தாலும், (நின்னுடன் இரண்டறக் கலந்தனுபவிப்பதாகிய) சுக முளதோ? சொல்வாய்! (285)

'கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போல்'
அண்டமெல்லா நின்னருளே யன்றோ? பராபரமே!

(போ - ரை) தான் தீண்டிய வுரு யாவற்றையும் (தன்மயமாகச்) செய்கின்ற அஞ்சனம்போல, அண்டங்கள் யாவையும் வியாபித்துள்ள திருவருளின் மேம்பாட்டால் அவை அவ் வருளுருவமே யல்லவோ? ()

தன்செயலா லொன்றுமில்லை தானென்ரு ஞன்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன்? பராபரமே!

(போ - ரை) என் செயலால் (ஆவது) சிறிது மில்லையென நான் தேர்ந்தேனென்றால், பாவியாகிய நான் உன் செயலாய் (எல்லா முடியு மென என் மனம்) நில்லாத நினைவு என்னே? (287)

கொலை, களவு, கட், காமங், கோபம்விட்டா லன்றோ?
'மலையிலக்கா' நின்னருடான் வாய்க்கும்; பராபரமே!

(போ - ரை) கொலையையும், களவையும், கள்ளுண்ணலையும், காமத்தையும், கோபத்தையும் விட்டாலல்லவோ உன் றிருவருள் மலையிலக்காகக் கிடைக்கும். (288)

தன்னை யறியாது, சகந்தானா யிருந்துவிட்டால்,
உன்னை யறியவரு ளுண்டோ? பராபரமே!

(போ - ரை) (ஆன்மாவாகிய) தன்னை (இன்ன தன்மையனென விசாரித்து) உணராமல், (பிரபஞ்சப் பொருள்களிற் பற்றுவைத்து) உலகமே தானாயிருந்து விட்டால், தேவரீரை யறிதற்குக் கருவியாகிய திருவருள் உண்டாகுமோ? (289)

ஒன்றிரண்டென் றுன்னா வுணர்வுகொடுத் துள்ளபடி
யென்றுமென்னை வையா யிறையே! பராபரமே!

(போ - ரை) (ஆன்மாவும் பரமான்மாவும்) ஒன்று, (ஆன்மாவும் பரமான்மாவும் வெவ்வேறான) இரண்டு என்று நினையாத (ஆன்மாவும் பரமான்மாவும் எக்காலத்து மத்துவிதமா யிருப்பது என்னும்) அறிவைத் தந்து எக்காலத்தும் உள்ளபடி என்னை வைக்க வேண்டும். இறைவனே!

கருதுமடி யார்களுளங் காணவெளி யாகுந்
துரியநிறை வான சுகமே! பராபரமே!

(போ - ரை) (திருவருளை முன்னிட்டு) நினைக்கின்ற அடியார்களுடைய மனமானது தரிசிக்கும்படி சிதாகாய மாகின்ற துரியபூமியில் நிறைந்திருக்கின்ற ஆனந்தமே! (291)

பொய்குவித்த நெஞ்சன், அருட் பொற்பறிந்து திக்கனைத்துங்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம்? பராபரமே!

(போ - ரை) பொய் நிறைந்த மனத்தினேன், (தேவரீர்) திருவருளின் மேன்மை யறிந்து (சர்வ வியாபமாக நிற்றலினால்) திசைகளெல்லாவற்றிலும் கைகூப்பி நிற்பது எந்தக் காலமோ? (292)

அத்துவித மான வயிக்ய வனுபவமே
சுத்தநிலை; அந்நிலையார் சொல்வார்? பராபரமே!

(போ - ரை) அத்துவிதமான அயிக்ய அனுபவமே சுத்தாத்துவித நிலை; அந்நிலையின் பெருமையை யாவர் சொல்ல வல்லார்? (293)

வைத்த சுவரலம்பின் மண்போமோ? மாயையினோர்க்
கெத்தனைபோ தித்துமென்னும்? எந்தாய்! பராபரமே!

(போ - ரை) (மண்ணினாலேயே) கட்டப்பட்ட சுவரைக் கழுவினால் மண் போய்விடுமோ? (போகாது) அதுபோல, மாயையிற் கட்டுப்பட்டுழல்வார்க்கு எவ்வளவு போதித்தாலும் (அந்த மாயை நீங்குமோ?) ஆகலின், என்ன பிரயோசனம்? எந்தையே! (294)

பூட்டற்றுத், தேகமற்றுப் போகுமுன்னே, நின்னருளைக்
காட்டத் தகாதோ? என் கண்ணே! பராபரமே!

(போ - ரை) (நரம்பினாற் கட்டுப்பட்டுள்ள) பொருத்துக்களற்றுச், சரீரம் அழிவதற்கு முன்னமே தேவரீர் திருவருளைக் காட்டத் தகாதோ? என் கண்ணே! (295)

சொல்லிற் பதர்களைந்து, சொன்முடிவு காணாதார்,
'நெல்லிற் பதர்போல' நிற்பார்; பராபரமே!

(போ - ரை) (சாத்திரங்களில் நிறைந்த) சொற்களில் (உலக சம்பந்தமான) பயனற்ற சொற்களை நீக்கிப், (பிரயோசனமான) சொற்களால் (பிரதிபாதிக்கப்படுகின்ற) சித்தாந்தத்தை யறியாதவர், நெல்லிலுள்ள பதர்போலப் பயனற்றவர்களாய் நிற்பார். (296)

அழுக்காற்று னெஞ்ச மழுங்கியபுன் மாக்கள்,
இழுக்காற்று லின்பநல மெய்தார்; பராபரமே!

(போ - ரை) (சன்மார்க்க சமயத்தினரை நோக்கிப்) பொறாமையால் மனம் வருந்திய (முக்கூற்றுப் புறச்சமயத்தவர்களாகிய) கீழ்மக்கள், தமது துன்மார்க்கத்தால் சுகமாகிய நன்மையை யடையார்கள். (297)

'தேகாதி பொய்' யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ? மொழியாய்! பராபரமே!

(போ - ரை) தநு கரண புவன போகங்களைக் (காரியத்தால்) பொய்யென்று தெளிந்த உபசாந்தர்களுக்கும் காமக் குரோத லோப மோக மத மாச்சரியம் உளவாமோ? சொல்லாய்! (298)

சாதனையெல் லாமவிழத், தற்போதங் காட்டாதோர்
போதனைநீ நல்குவதெப் போதோ? பராபரமே!

(போ - ரை) சாதனங்களெல்லாம் தாமே நழுவிவிடத் தற்போதம் தலையெடுக்காத வகை ஒருபதேசம் எனக்கு நீ யருளிச்செய்வது எந்தக் காலமோ? (299)

ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ(து?) எந்தாய்! பராபரமே!

(பொ - ரை) (ஞானசம்பந்தமான) ஒன்றையு முணராத (ஆணவ) இருளுருவமாகிய மனத்தையுடைய எனக்கு நற்கதி யுண்டாவது எந்தக் காலம்? எந்தையே! (300)

சிந்திக்குந் தோறும், என்னுட் சிற்சுகமா யூற்றூறிப்,
புந்திக்கு ணின்றவருட் பொற்பே! பராபரமே!

(பொ - ரை) (நினது அருட்கோலத்தினை) நினைக்குந்தோறும், என்னுள்ளே ஞானசுகமாய் ஊற்றுச் சுரந்து, என் புத்தியில் தோன்றிய திருவருட்பொலிவே! (301)

என்றுமடைந் தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்,
'கன்றை யுதைகாலி கதை' காண்! பராபரமே!

(பொ - ரை) எக்காலத்தும் தம்மை (ஒரு பொருட்டாக மதித்து) ஆசிரயித்த (சிவனடியார்கட்கு மனங்கசிந் துதவிசெய்ய) இரங்காதவர்களுடைய நினைவெல்லாம், சமீபிக்கும் கன்றினை அணுகவொட்டாமல் உதைக்கின்ற பசுக்கூட்டத்தின் கதையை நிகர்க்கும். (302)

குற்றங் குறையக், குணமேலிட, அருளை
யுற்றவரே யாவிக் குறவாம்; பராபரமே!

(பொ - ரை) (நாளுக்குநாள்) பாவச் செய்கைகள் குறையப் புண்ணியச் செய்கைகள் மேலிட, உன் திருவருளை யடைந்தவர்களே என் ஆன்மபந்து ஆவார்கள். (303)

ஒருரையால் வாய்க்குமுண்மைக் கோரனந்த நூல்கோடி
பேருரையாற் பேசிலென்ன பேறும்? பராபரமே!

(பொ - ரை) (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு மொழியால் கிடைக்கும் உண்மைப் பொருளின்பொருட்டு (மெய்கண்ட சாத்திரங்கட்குச்) சமானமற்ற அளவில்லாத (பொய்கண்ட) சாத்திரத் தொகுதிகளைப் பெரிய வுரைகளுடன் படித்தாலு மென்ன பயனுண்டாம்? (304)

சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலு
மல்லலொழிவதென்றைக் கையா! பராபரமே!

(பொ - ரை) (ஆன்மாக்கள் கன்மத்திற்குத் தகுந்தபடி சொல்லப்பட்ட முக்கூற்றுச்) சமய மார்க்கமாகிய சுற்றுக்குள் அகப்பட்டுச் சுழலாநின்ற துன்பமானது என்னை விட்டு நீங்குவது என்று? ஐயனே! (305)

பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை,
அடித்துத் துரத்தவல்லா ரார்காண்? பராபரமே!

(பொ - ரை) (உண்மையினை விசாரிக்க முயலாமல்) தான் (கன்மத்திற்குத்தகுந்தபடி) கைப்பற்றினதையே (சத்தியமெனச் சாதித்துத்)

திறப்படுத்துகின்ற பெரிய ஆணவத் தடிப்பை, அடித்துத் துரத்த வல்லவர் யாவர்? (ஒருவருமில்லை.) (306)

நேசத்தா னின்னை நினைக்கு நினைவுடையார்,
ஆசைக் கடலி லழுந்தார்; பராபரமே!

(பொ - ரை) அன்பினால் தேவரீரைத் தியானிக்கின்ற மனத்தை யுடையவர் (பிரபஞ்ச) ஆசையாகிய கடலில் அமிழார். (307)

கள்ளாது கட்டுணவுங் காரியமோ? நாளொருசொல்
கொள்ளாத தோஷமன்றோ? கூறாய்! பராபரமே!

(பொ - ரை) (நானொரு தீமை செய்யாதிருக்கவும் எனக்குப் பந்தம் வந்து சேர்ந்திருப்பது) (ஒருவன்) திருடாமலிருக்கவும் கட்டுப்பட்ட காரியம் போலும்? (அது) நான் (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு மொழியைக் (குருவின் மூலமாக) அடையாத குற்றமல்லவோ? கூறாய்! (308)

சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே யானந்த நிட்டை; பராபரமே!

(பொ - ரை) போன இடமெல்லாம் திருவருளே ஆதாரமாகக் கொண்டு (சிவராஜயோகத்தால்) நின்றவர்க்கே ஆனந்தத்துக்குக் காரணமாகிய நிஷ்டை யுள்ளது. (309)

நீட்சி குறுகலில்லா நித்யசுகா ரம்பசுக
சாட்சியா முன்னைவந்து சார்ந்தேன்; பராபரமே!

(பொ - ரை) (ஒரு காலத்தில்) வியாபித்தலும், (ஒருகாலத்தில்) சுருங்கலும் இல்லாத நித்தியமாகிய சுகத்தொடக்கத்திற்குக் காரணமாய் உலகத்திற்கு (நிமித்த) காரணமாயிருக்கிற உன்னை வந்தடைந்தேன். ()

வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரண! நீ
நானாகி நிற்பதெந்த நாளோ? பராபரமே!

(பொ - ரை) (சர்வ வியாபகத் தன்மையால்) ஆகாயமுதலிய தத்துவங்களை (அதிட்டித்து) அவைகளாய் நிலைபெற்று நின்ற சர்வகாரணனே! (சிவயோகம் பாவனையில்) நீயே நானாகி நிற்பது எந்தக் காலமோ? (311)

காட்டத்தி லங்கி கடையவந்தா லென்ன, உன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே! பராபரமே!

(பொ - ரை) கடைதலால் விறகினின்றும் (முன்னமே மறைந்திருந்த) நெருப்புண்டானதுபோல, நினைக்கின்ற நினைவில் (முன்னமே யத்துவிதமாக விருந்து) உண்டாகிய என்னுயிர்த் துணையே! (312)

நித்திரையாய்த், தானே நினைவயர்ந்தால், நித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை; பராபரமே!

(போ - ரை) (தற்போத) நித்திரை செய்து, தானே (திருவருள்) நினைவு மறந்தால், நாள்தோறும் எங்கள் செய்கை நித்திய மரணமாய் விட்டது. (313)

இன்பநிட்டை யெய்தாமல், யாதெனினுஞ் சென்றுமனம்
துன்புறுதல், வன்பிறவித் துக்கம்; பராபரமே!

(போ - ரை) (சிவராஜயோகமாகிய) சிவானந்த நிட்டை யடையாமல், மனமானது (பிரபஞ்ச சம்பந்தமான) யாதொரு பொருளினும் சென்றழுந்தித் துக்கமடைதல், வலிய பிறவித்துன்பம். (314)

பொய்யகல, மெய்யான போதநிலை கண்டோர்க்கோ
ரையமில்லை, ஐயமில்லை; ஐயா! பராபரமே!

(போ - ரை) (காரிய ரூபமான பிரபஞ்சம்) பொய் நீங்கும்படித் (திருவருளென்னும்) உண்மையாகிய ஞானநிலையைக் கண்டவர்களுக்கு (மோட்ச மடைய) ஒரு சந்தேக மில்லை; ஐயனே! (315)

மந்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ? பராபரமே!

(போ - ரை) (வேதாதிகளால் கொண்டாடப் பெறுத) மந்திரத்தை நினைத்து மயங்காமல், இனி யொரு உபாயத்தைக் கற்பிக்கத் தகாதோ? ()

'விண்கருணை பூத்ததெ ன' மேவி யுயிர்க்குயிராய்த்,
தண்கருணை தோன்றவரு டாய்நீ! பராபரமே!

(போ - ரை) 'சிதாகாயமானது கருணையைப் பூத்தாற்போல' உயிர்க்குயிராய்ப் பொருந்தி, (ஆன்மாக்களின் இருதயாகாயத்தில்) தண்ணிய கிருபை தோன்ற அருள் செய்கின்ற தாய் நீயே. (317)

தன்மயமாய் நின்றநிலை தானேதா னுகிநின்முல்,
நின்மயமா யெல்லா நிகழும்; பராபரமே!

(போ - ரை) (சுதந்திரங்கொண்டு) ஆன்மாவாகிய தன்மயமாய்ப் (பிரபஞ்ச மிருப்பது என) நின்றநிலையே (சுதந்திர மிழந்து ஆன்ம சொரூபமறிந்து) தன் சொந்த நிலையாக நின்முல், (அக்காலத்து அவ்வான்மாவைத் தேவரீ ரதிட்டித்துக்கொள்ள, பின்பு நிகழ்வனவெல்லாம்) நின் தன்மையாக நடக்கும். (318)

ஏங்கி, இடையுநெஞ்ச வேழையை,நீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம்; பராபரமே!

(போ - ரை) (திருவரு ளடைதலின்பொருட்டு) ஏக்கத்தை யடைந்து, நைகின்ற மனத்தையுடைய எளியவனை நீ வாவென் றழைத்துத் (திருவருளாகிய) பாங்கினைப் பெறச் செய்வது உன்மீதுள்ள பாரம். ()

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யாம்; ஆணவத்தைப்
பூண்டதென்ன கன்மம்? புகலாய்! பராபரமே!

(பொ-ரை) (எங்களை யடிமையாக) ஆண்டுகொண்ட நின்னை பிரியாத அடிமைகள் நாங்கள்; (அங்ஙனமாகவும்) நாங்கள் ஆணவமாகிய அகங்காரத்தை ஆபரணமாகப் பூண்டிருப்பதற்குக் காரணம் என்ன கர்மமோ? சொல்வாய்! (இன்னந் தீவிர பக்குவம் வரவில்லை யென்பதாம்.) (320)

எங்கணுநீ யென்றால், இருந்தபடி யெய்தாமல்,
அங்குமிங்கு மென்றலைய லாமோ? பராபரமே!

(பொ-ரை) எவ்விடத்திலும் நீ (சர்வ வியாபகமாய்) நிறைந்திருக்கின்றா யென்றால், இருந்தபடியே உன்னை யடையாமல், அங்குள்ளது இங்குள்ளது என்று (சுட்டி) அலைய வொண்ணுமோ? (321)

கற்குமது வுண்டு களித்ததல்லால், நின்னருளி
னிற்குமது தந்ததுண்டோ? நீதான்; பராபரமே!

(பொ-ரை) கல்வியாகிய (அபர) ஞானத்தேனைப் பருகிக் களித்த தல்லாமல், நீதான் உன் திருவருளி னிற்றலென்னும் (பரஞானத்) தேனைக் கொடுத்ததுண்டோ? (322)

அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற் கதியாம் பராபரமே!

(பொ-ரை) (திருவருளை முன்னிட்டு) அண்டபகிரண்டங்களிலே உள்ளவரெல்லாம் அறியாத தேவரீர் திருவுருவினைச் சேவித்த அடியவரைச் சேவித்து அடியவரானால் மோட்ச முண்டாம் (323)

கலக்கமுற நெஞ்சைக் கலக்கித், திரும்பத்
துலக்குபவ னீயலையோ? சொல்லாய்! பராபரமே!

(பொ-ரை) (கன்மத்திற்குத் தக்கபடி) கலக்கமடைய மனத்தைக் கலங்கப்பண்ணி, மறுபடியும் (கன்மத்தொலை யொத்த அவசரத்து) தெளியப்பண்ணுவோன் நீயல்லவோ? சொல்லாய்! (324)

சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன்; பராபரமே!

(பொ-ரை) மனமும் என் (அறிவினைப்) போலச் செய்கையற்று ஒடுங்கிவிட்டால், நேரிட்டதெல்லாம் உன் (திருவருட்) செயலாகவே பாவித்து வாழ்ந்திருப்பேன். (325)

பந்தமெலாந் தீரப், பரஞ்சோதி! நீ குருவாய்
வந்த வடிவை மறவேன்; பராபரமே!

(போ - ரை) சிவ பரஞ்சுடரே! என் பிறவிப் பிணிப்பு அவிழும் படித் தேவரீர் குருவடிவாய் வந்த திருமேனியை அடியேன் மறக்கமாட்டேன். (326)

தானந்த மான சகச நிருவிகற்ப
ஆனந்த நிட்டையருளையா! பராபரமே!

(போ - ரை) தன்னளவிலேயே முடிவடைந்த (தனக்கு மேலொன்று மில்லாத) இயற்கையாம் விகாரமின்றி நின்ற சிவானந்த சிவயோகநிஷ்டையை அருள்செய்ய வேண்டும் ஐயனே! (327)

அல்லலெல்லாந் தீர,எனக் கானந்த மாகவொரு
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன்? பராபரமே!

(போ - ரை) (பிரபஞ்சத்) துன்பமெல்லா மொழியும்படி அடியேனுக்கு இன்பமுண்டாகச் (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு மொழியை யெனக்குக் கிருபை செய்ததைப்பற்றி என் சொல்லிப் புகழ்வேன்? (328)

சிந்தை மயக்கமறச், சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன்; பராபரமே!

(போ - ரை) மனமயக்கந் தீரும்படி, (ஆக்கும்) சித்துருவாய் எழுந்தருளிய தேவரீரை என்னிருதயத்தி லெழுந்தருளும்படி தந்த வுனக்குத் (தூலசித்துருவாகிய) நான் என்னையும் (அடிமையாகக்) கொடுத்தேன்.

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன்; பராபரமே!

(போ - ரை) (ஆணவ) இருளுருவமாகிய மாயாமயக்கமொழியத் தேவரீர் ஆசாரிய கோலங்கொண் டெழுந்தருளிவந்து (சின்முத்திராங்குசமாகக்) கை காட்டவும் சொப்பனங் கண்டேன். (330)

மால்வைத்த சிந்தை மயக்கற,என் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு கண்டேன்; பராபரமே!

(போ - ரை) (பிரபஞ்ச சம்பந்தமாக) ஆசைவைத்த மனமயக்கமற, அடியேன் சிரமீது தேவரீர் திருவடிதீட்சை செய்யவும் சொப்பனங் கண்டேன். (331)

மண்ணுன மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு
கண்ணார வுங்கனவு கண்டேன்; பராபரமே!

(போ - ரை) பிருதிவி ரூபமாயுள்ள (பிரகிருதி) மாயையெல்லாம் என்னிருதயத்திற் றேன்றுதவகை சிதாகாயமாத்திரந் தோன்ற இரண்டு கண்களாரக் கண்டேன். (332)

மண்ணீர்மை யாலே மயங்கா(து), உன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன்; பராபரமே!

(பொ-ரை) பிரபஞ்ச மாயையாலே மயங்காமல், தேவரீர் (ஆசாரிய கோலங்கொண்டு வந்து) திருக்கரத்தினுல் அடியேன் கண்ணீரைத் துடைக்கவும் நான் கனவு கண்டேன். (333)

உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றோ
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய்! பராபரமே!

(பொ-ரை) மெய் கண்டறியாத அறிவில்லாத மகா பாவி யென்று தானே (என்பாற் றேன்றாது) மெள்ள மெள்ளக் கைசோரவிட்டனை. ()

எல்லா நினைதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ
அல்லா லெனக்குளதோ? ஐயா! பராபரமே!

(பொ-ரை) சர்வமும் தேவரீர் திருவருட்செயலே யென்று நினைக்கின்ற நினைவும், (உன் திருவருள் விலாசத்தாலன்றி) எனக்கென்று ஒரு எண்ண முண்டோ? ஐயனே! (335)

பந்த மயக்கிருக்கப், பற்றொழிந்தே னென்றுளறு
மிந்த மயக்க மெனக்கேன்? பராபரமே!

(பொ-ரை) பிறவிப் பிணிப்பின் மயக்க மிருந்துகொண்டிருக்கப், (பிரபஞ்சப்) பற்று விட்டேனென்று உளறுகின்ற இம் மயக்க மெனக்கேன்? (336)

காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ? யாதினுக்கு
மாட்சி யுனதருளே யன்றோ? பராபரமே!

(பொ-ரை) (பிரபஞ்சமுகமாக அனுபவிக்கப்படும்) காட்சி யனைத்தும் கண்ணைத்தவிர (வேறு விதத்தால்) பார்த்ததுண்டோ? இல்லை. (அதுபோல) எல்லாவற்றினுக்கும் தேவரீரது திருவருளே தாரகமன்றோ?

எட்டுத் திசையுமொன்றாய், இன்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறோ? பராபரமே!

(பொ-ரை) எட்டுத் திக்குகளிலும் ஒரே வியாபகமாகி, இன்ப வடிவாய் எழுந்தருளி யிருக்கிற தேவரீரை நீங்கி (அடியேன் வாழுதற்கு) இடம் வேறுளதோ? (338)

பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே! அறிவே! சிவமே! பராபரமே!

(பொ-ரை) (ஆன்மாக்களை விட்டுப்) பிரியாமல் அவ்வான்மாக்களின் உயிர்க்குயிராகி வேறற வோங்கும் கலப்பே! அறிவுமயமே! சிவமயமே! (339)

ஏதேது சொன்னாலும், எள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் ?பராபரமே !

(பொ - ரை) (அடியேனுடைய குறைகளையெல்லாம்) என்னென்ன விதமாக எடுத்துச் சொன்னாலும், எள்ளளவும் தேவரீர் (என்மாட்டு) இரங்காதிருக்கும் கபடத்தன்மை யாது? அடியேனுக்கு உபாயம் சொல்லு வாய்! (340)

கற்பனையாப் பாடுகின்றேன், கண்ணீருங் கம்பலையும்
சொப்பனத்துங் காணேன்; என் சொல்வேன்? பராபரமே!

(பொ - ரை) (கற்ற கல்வியின் சாமர்த்தியத்தால்) அலங்காரமாகப் பாடுகின்றேன் (அல்லது, அன்புமயமாகவிருந்து) கண்ணீரும் நடுக்கமும் (என்னிடத்துக்) கண்டேனில்லை; என் வினையை யென்னவெனச் சொல்லுகேன்? (341)

வன்பொன்று நீக்கா மனதிறப்ப, மாறுப்பே
ரன்பொன்றும் போதுமெனக் கையா ! பராபரமே !

(பொ - ரை) கடினத்தன்மை யொன்றினை நீங்கப்பெறாத எனது மனமானது அடங்க, என்றும் மாறுபடாத பேரன்பொன்றுமே எனக்குப் போதும்; ஐயனே? (342)

ஏதுந் தெரியா எளியேனை வாவென, நின்
போதநிலை காட்டிற், பொறுதோ ? பராபரமே !

(பொ - ரை) (உண்மைத்தன்மை) ஒரு சிறிதும் தெரியாத எளியேனைத் (தேவரீர் சந்நிதானத்தில்) வாவென் றழைத்துத், தேவரீர் ஞான நிலைமையினைத் தரிசிப்பித்தால், அத்தன்மை அடியேனால் தாங்க முடியாதோ? (343)

ஓராம லெல்லா மொழிந்தேற்குன் றெய்வவரு
டாராதி ருக்கத் தகுமோ ? பராபரமே !

(பொ - ரை) (பிரபஞ்சமுகமாகவுள்ள விடயங்கள்) எல்லாவற்றையும் ஆராயாமல் தனித்திருக்கு மெனக்குத் தேவரீரது தெய்வீகமான கிருபையினைப் புரியாதிருந்தால் அத் தன்மை தேவரீருக்குத் தகுதியாகுமோ? (344)

மோனந் தருஞான மூட்டி, எனக்குவட்டா
வானந்த வாழ்க்கை யருளாய் ! பராபரமே !

(பொ - ரை) மவுன நிலையினைத் தருதற்கு (ஏதுவாகவுள்ள) ஞானத்தினை (அடியேனுக்கு) உதிப்பித்து, அடியேனுக்குத் தெவிட்டாத சிவானந்த வாழ்வினை யருளவேண்டும். (345)

வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே! பராபரமே!

(பொ - ரை) (தேவரீரைத் தரிசியாததினால்) வாடுகின்ற முகத்தினைப் பார்த்து, அடியேனை வாடாதிருக்கும்படி காத்தருளிய பெருங் கருணைப் பூரணமே! (346)

புந்தியினு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தையிறப் போநின் றியானம்? பராபரமே!

(பொ - ரை) நற்புத்தியினைக் கொண்டு தேவரீர் திருவடியினை மனத்தினால் வணங்குகின்ற உண்மை யடியார்கள் மனமொடுங்கிய இடத்திலோ உன் தியானம் (பலிப்பது?) (347)

உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும், வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை; பராபரமே!

(பொ - ரை) தேவரீருக்கு ஒப்பாகக் கருணை வாய்ந்தவரும், கடின சித்தத்தில் எனக்கு ஒப்பானவரும் இல்லை. (348)

'தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ' லெவ்விடத்து
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன்; பராபரமே!

(பொ - ரை) (பெற்றெடுத்த அருமைத்) தாயார் இருந்தும் அவள் பிள்ளை (பசியால்) தளர்ச்சியினை யடைதல் போலச் சர்வ வியாபகமாகத் தேவரீ ரிருந்தும் (திருவருளினுக்கு) அடியேன் மனத் தளர்ச்சியுற்று நின்றேன். (349)

'வாயாற் கிணறுகெட்ட வாறேபோல்' வாய்பேசிப்
பேயானார்க் கின்பமுண்டோ? பேசாய்! பராபரமே!

(பொ - ரை) 'வாயிருத்தலினாலேயே (அதன்மூலமாக மண் விழுந்து) கிணறு தூர்ந்துவிடுமாறுபோல' வாயொன்றினாலேயே (பல படப்) பிதற்றிப்பேய்க்குச் சமானமானவர்கட்குச் சுகம் விளையுமோ) அருள்வாய்! (350)

பாவமென்று லேதும் பயமன்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார்? பராபரமே!

(பொ - ரை) பாவத் தொழில்களென்றால் சிறிதும் அச்சமின்றிச் செய்ய இந்தச் சீவனுக்கு ஆர் அறிவு ஊட்டினார்? (351)

இன்ப நிருவிகற்ப மின்றேதா! அன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது; சொன்னேன்; பராபரமே!

(பொ - ரை) சுகத்தினை (அடைதற் கேதுவாகவுள்ள) நிருவிகற்ப சமாதியினைப்புரிய இக்கணமே தந்தருள்வாய்! அங்ஙன மின்றேல், (இப் பிரபஞ்ச விகற்பத்) துன்பம் பொறுத்த லெனக் கருமையாகும்.

கற்குநிலை கற்றூற் கருவியவி ழா(து); அருளாய்
நிற்குநிலை கற்பதுவே நீதம்; பராபரமே!

(பொ-ரை) (பிரபஞ்சத்தினுக் கேதுவாகக்) கற்கத் தகுந்த நிலையினைக் கற்றால் தத்துவங்கள் (தங்கள் செயலினின்றும்) விட்டுப் பிரியா; அருள்மயமாய் நிற்கும் நிலையினைக் கற்றுக்கொள்வதே நீதியாகும். (353)

'காச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோ! னின்மலமாய்ப்
பேச்சற் றவரே பிறவார், பராபரமே!

(பொ-ரை) (நெருப்பினில்) புடம் வைக்குந்தோறும் ஒளி விடுகின்ற பொன் கட்டியினைப்போல நிர்மலமாக (நாளுக்குநாள் வார்த்தையொழித்து) மவுனம் பூண்டிருப்பவர்களே எக்காலத்தும் பிறவாதவராவார். (354

பற்றொழிந்து, சிந்தைப் பதைப்பொழிந்து, தானே தா
னற்றிருப்ப தென்றைக் கமைப்பாய்? பராபரமே!

(பொ-ரை) (பிரபஞ்ச காரியங்களில்) பற்று நீங்கி, மனத்துடிப்பு நீங்கி, (ஆன்மாவாகிய) தானே (பிரமமாகிய) தான் என்னும் (பசுஞான நீங்கி, (திருவருண்மயமாய்) இருப்பது எந்நாள் எனக்கு அமைப்பாய்?

உருவெளிதான் வாதவூ ருத்தமர்க்கல் லாலினமுங்
குருவழிநின் றார்க்குமுண்டோ? கூறாய்! பராபரமே!

(பொ-ரை) தட்சிணாமூர்த்தியாக வெளிப்பட்டதுதான் திருவாதவூரி லமர்ந்தருளிய உத்தமராகிய மாணிக்கவாசக சுவாமிகட்கு அல்லாமல், இனி மேலும் ஆசாரியரை வழிப்பட்டவர்கட்கு (அத்தகைய தரிசனம்) கிடைக்குமோ? சொல்லாய்! (356)

தேகம்யா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
யாகுநெறி நல்லநெறி யையா! பராபரமே!

(பொ-ரை) இத் தேகமானது (மூவகைச் சித்தியுள்) யாதேனும் ஒரு சித்தியை யடையும்பொருட்டுச் சீவன்முத்தியினை யடைகின்ற மார்க்கமே சன்மார்க்கம், ஐயா! பராபரமே! (357)

உலகநெறி போற்சடல மோய, உயிர் முத்தி
யிலகுமெனல், பந்த வியல்போ? பராபரமே!

(பொ-ரை) (தேகம் பூமியின்மேல் விழும்) பிரபஞ்ச வழக்கம் போலத் தேக நீங்க, (அதினின்று நீங்கிய) உயிர் மோட்சத்தினை யடையுமெனல், பிறவிப் பிணியின் இயல்போ? (ஆம்.) (358)

பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான், மற்றெவர்க்குந்
திரமேது மில்லை; நன்றாய்த் தேர்ந்தேன்; பராபரமே!

(போ - ரை) (முதல்வனைச்) சகளமாகவும், நிஷ்களமாகவும் தரிசிப்பதல்லது, வேறு யாவர்க்கும் உறுதி யில்லை, (எனது நீடித்த அனுபவத்தில்) நன்றாகத் தெளிந்துகொண்டேன். (359)

தேடுவே னின்னருளைத், தேடுமுன்னே யெய்தினட
மாடுவேன்; ஆனந்த மாவேன்; பராபரமே!

(போ - ரை) தேவரீருடைய திருவருளினைத் தேடாநிற்பேன்; (அங்ஙனம்) தேடுமுன்னமே (பூர்வ புண்ணியவசத்தால்) திருவருள் கிடைத்துவிடில் (என்னை மறந்து ஆனந்தத்தால்) நடன மாடுவேன்; இன்பமய மாவேன். (360)

உள்ளங் குழைய, உடல்குழைய, உள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன்? பராபரமே!

(போ - ரை) (தியானத்தால்) மன முருகவும், (தரிசனத்தால்) சரீர முருகவும், (அருளடைதலால்) மனத்திருந்த வஞ்ச நழுவவும், என்றைக்குத் (தேவரீரைக்) காணப்பெறுவேன்? (361)

'பட்டப் பகல்போலப்' பாழ்த்தசிந்தை மாளின், எல்லாம்
வெட்டவெளி யாக விளங்கும்; பராபரமே!

(போ - ரை) )இருளாகிய களங்கம் சிறிது மில்லாமல்) பட்டப் பகல்போலப் பாழாகிய மன மொடுங்கிவிடின் (பிரபஞ்சமுகமாக விரும்புவன) யாவும் சிதாகாயரூபமாக விளங்கும். (362)

பார்க்கினனுப் போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளின், என்னை
யார்க்குச் சரியிடலாம்? ஐயா! பராபரமே!

(போ - ரை) ஆராயுமிடத்துப் பரமாணு ரூபமாகக் கிடந்த பாழ் மனமானது ஒடுங்கின், அடியேனை (உலகில்) யாவருக்கு உவமை சொல்லலாம்? ஐயனே! (சிவஞானி யென்னலாம்.) (363)

பாட்டுக்கோ? அன்பினுக்கோ? பத்திக்கோ? அன்பர் தங்க
ணீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய்; பராபரமே!

(போ - ரை) சிவனடியார்களுடைய பாட்டுக்கு 'மாத்திரந்தானோ? அன்பினுக்கு மாத்திரந்தானோ? பத்திக்கு மாத்திரந்தானோ? (அல்ல.) அவர்கள் ஏவலுக் கெல்லாம் சமீபித்து நின்றாய். (364)

முத்தாந்த வித்தே! முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே! பராபரமே!

(போ - ரை) முத்தி முடிவுக்குக் காரணமே! (அம் முத்தி) உண்டாதற்குப் பூமியாயுள்ள சித்தாந்த சமயத்திலே (விளங்கும்) சிறந்த பொருளே! (365)

உன்னு வெளியாய், உறங்காத பேருணர்வாய்,
என்னுவிக் குள்ளே யிருந்தாய், பராபரமே!

(போ - ரை) நினைத்தற்கரிய சிதாகாய சொரூபமாய், சோர்வடையாத பெரிய அறிவு சொரூபமாய், என்னுயிரினிடத்தே யிருந்தாய். (366)

தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச், சின்மயமா
நித்த! முத்த! சுத்த நிறைவே! பராபரமே!

(போ - ரை) தத்துவ சம்பந்தமான காரியங்களை யெல்லா மொடுக்கிக்கொண்ட சிவஞானிகட்கு, ஞானமயமாகிய சாசுவதனே! முத்தனே! பரிபூரணனே! (367)

உள்ளக் கொதிப்பகல, உள்ளுள்ளே யானந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும்; பராபரமே!

(போ - ரை) மனத்தின்கண்ணே துடிப்பு நீங்க, அம் மனத்திலே (பின்னர் விளையும்) இன்ப வெள்ளத்தில் மலர்கின்ற மலராகிய தேவரீர் கருணையெனக்கு வேண்டும். (368)

என்னைப் புறப்பதரு ளின்கடனும்; என்கடனு
நின்னிற் பணியறவே நிற்கை; பராபரமே!

(போ - ரை) அடியேனைக் காப்பது திருவருளின் கடமை; அடியேனுடைய கடமை தேவரீர் திருப்பணியில் மிகுதியாகச் செய்து கிடப்பது. ()

தானேயா நன்னிலையைத் தந்தவரு ளானந்த
வானே! மனுதீத வாழ்வே! பராபரமே!

(போ - ரை) (சிவோகம் பாவனையில்) சிவந்தானேயான நல்ல நிலையினைக் கொடுத்த ஆனந்த சிதாகாயமே! மனத்தினுக் கெட்டாத வாழ்வே! (370)

மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணுரக் கண்டு களித்தேன்; பராபரமே!

(போ - ரை) மண்முதலிய பூதங்க ளெல்லாவற்றையும் (நினது வியாபகத்துள்) தங்கும்படி வைத்திருந்த தேவரீர் வியாபகத்தன்மையினைப் பிரத்தியட்சமாகத் தரிசித்து ஆனந்தித்தேன். (371)

அறியாமை யீதென் றறிவித்த வன்றேதான்
பிறியா வருணிலையும் பெற்றேன்; பராபரமே!

(போ - ரை) (ஆணவமலத்தின் சொரூபமாகிய) அறியாமையினை யிதுவெனவே எனக்கு அறிவித்த அக்காலத்திலேயே (திரோதான சத்தியி லதுகாறு மறைந்திருந்த) திருவருளி னிலையும் வெளியாக வடைந்தேன். (372)

தீதெனவு நன்றெனவுந் தேர்ந்து, நான் றேர்ந்தபடி
யேது நடக்கவொட்டா தென்னே? பராபரமே!

(போ - ரை) இது தீமை யெனவும் இது நன்மை யெனவும் விசாரித்து, உண்மை நான் கண்டு (பின்னர்) அவ் வழியில் நடக்கவொட்டாததற்குக் காரணமென்ன? (திரோதானம் காரணம்.) (373)

கண்டவறி வகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய்; பராபரமே!

(போ - ரை) (ஒவ்வொன்றினையும் சுட்டி யறிகிற ஏகதேச) அறிவு (திருவரு ளடைந்தபின்னர்) அகண்டரூபமென்று உண்மை யறிவிற் கண்டவர்க்கே முத்தியைக் கொடுப்பாய். (374)

ஈருக வல்வினைநா னென்னுமை யின்பசுகப்
பேரும் படிக்கடிமை பெற்றேன், பராபரமே!

(போ - ரை) (ஆணவமாகிய) வலிய வினையின் (காரியங் கெட) நான் என்று அகங்கரியாமல் சிவானந்த சுகமே பிரயோசன மாகும்படிக்குத் (தேவரீரிடத்து) அடிமை பூண்டேன். (375)

பெற்று ரனுபூதி, பேசாத மோனநிலை
கற்றூர், உனைப்பிரியார், கண்டாய்! பராபரமே!

(போ - ரை) (சிவானுபூதியினைச்) சுவானுபூதியாக அடைந்தவர்களும், பேசாத மவுனநிலையினைத் தெரிந்தவர்களும், தேவரீரைப் பிரியமாட்டார்கள். (376)

நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய்; பராபரமே!

(போ - ரை) தேவரீரே (சிவோகம் பாவனையில்) நான் என்று (வெளிமுகமாக) நினைப்பும் மறப்பும் இல்லாதொழியும்படித் தாயினுடைய கிருபைபோன்ற அருளினை எனக்குத் தந்தனை. (377)

சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேன்; என்
னஞ்சலியுங் கொள்ளா யரசே! பராபரமே!

(போ - ரை) சலன மில்லாமல் பிரபஞ்ச முழுவதும் (நீ அசைவித்தாலன்றி யசையாதாகலின்) நீயே யென்றறிந்தனன். அடியேன் அஞ்சலியினையும் ஏற்றுக்கொண் டருளவேண்டும்; இறைவனே! (378)

பூதமுத னாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த வின்பக் கடலே! பராபரமே!

(போ - ரை) பிருதிவி பூதமுதல் நாதம் வரையிலுள்ள (தத்துவக் காரியங்க ளெல்லாம்) கிரிவினை யுடையனவென்ற மெய்கண்ட (சந்தானத்தர்) எல்லாம் விரும்பிய ஆனந்த சாகரமே! (379)

வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால், வெவ்வேறாய்ப்
போக்குடைய வார்த்தை பொருந்தேன் ; பராபரமே!

(பொ - ரை) வாயாற் சொல்வதும், மனத்தா னினைப்பதும் ஒரு தன்மையாகிய வார்த்தையே யல்லாமல், ஒன்றற்கொன்று மாறுபட்ட தன்மையுடைய வார்த்தை பேசேன். (380)

வன்மையின்றி யெல்லா மதித்துணர்வாய்க் காகெடுவேன்
றன்மையொன்றுந் தோயாத் தடையோ? பராபரமே!

(பொ - ரை) கடினசித்த மில்லாமல் எல்லாவற்றிலும் கிருபை வைத்துத் திருவுளம் கொள்ளுபவர்க்கு அந்தோ! கெடுவேன் (நினது அருள்) தன்மை சிறிதும் (என்னிடத்தில்) பொருந்தாமை தடையாயிற்றோ ?(381)

பத்தர்சித்தர் வாழி! பரி பக்குவர்கள் வாழி! செங்கோல்
வைத்தவர்கள் வாழி! குரு வாழி! பராபரமே!

(பொ - ரை) சிவ பக்தர்களும், சித்தி பெற்றோர்களும், மலபரிபாக முற்றவர்களும் வாழ்க! (திருவருட்) செங்கோல் பிடித்தவர்களும் வாழ்க! ஆசாரியன் வாழ்க! (382)

கல்லாதே னானுங், கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் ; பராபரமே!

(பொ - ரை) (மெய்கண்ட நூல்களை) நான் கல்லாதவனே யாயிடினும் (அம் மெய்ந்நூல்களைப்) படித் துண்மை யுணர்ந்த சிவனடியார்கள் சொல்லை யாதரவாகக் கொண்டு தேவரீரைப் பற்றினேன். (383)

சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச், சுகங்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை நான்காண்! பராபரமே!

(பொ - ரை) மவுனமுற ஞானகுருவாய் வெளிவந்து, இன்பமளித்த (அத்தகைய) நல்லவர்க்கே நான் கொத்தடிமை யானேன். (384)

முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே! பராபரமே!

(பொ - ரை) மோட்சத்தினுக்கு ஆதாரமான மௌனநிலையென்ற கரும்பினிடத்தில் இனிக்கும்படி யுண்டான தேனே! (385)

நித்திரையும், பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ
சுத்த வருணிலை? நீ சொல்லாய்! பராபரமே!

(பொ - ரை) நித்திய சுழுத்தியும், (பிரபஞ்சமுகமாகச் செல்லும்) பாழாகிய நினைவும் நீங்கியிருப்பதுதானோ அதிபரிசுத்தம் பொருந்திய திருவருளினிலை? தேவரீர் திருவாய் மலர்ந்தருளுவீராக! (ஆம்.) (386)

மண்ணு(ம்), மறிகடலு(ம்), மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன்; பராபரமே!

(போ - ரை) பூமியும், அலைகள் மடங்குகின்ற சமுத்திரமும், மற்றுமுள்ள பொருள்களும் ஆகிய எல்லாம் தேவரீர் திருவருளி னோக்கத்திலிருக்கவும் நான் பார்த்தேன். (387)

பூட்டிவைத்து, வஞ்சப் பொறிவழியே யென்றனைநீ
யாட்டுகின்ற தேதோ? அறியேன்; பராபரமே!

(போ - ரை) (தத்துவங்களில் என்னைக்) கட்டிவைத்து, வஞ்சகமான பஞ்சேந்திரியங்களின் வழியே என்னை நீ யாட்டுவிப்பதற்கு யாது காரணமோ? அறியேன். (கன்மம் காரணம்.) (388)

பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்;
உய்யும் வகையு முளதோ? பராபரமே!

(போ - ரை) அறியாமையுடன் கூடிய புழுக்க ணிறைந்த இந்த உடலைப் (பத்திரமாய்) வைத்திருந்தேன்; (இனிப்) பிழைக்கும் வகையுண்டோ? (389)

---

## பைங்கிளிக் கண்ணி

அந்தமுட ளாதி யளவாமல், என்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ? பைங்கிளியே!

(போ - ரை) முடிவுடன் உற்பத்தி அளவிடற்குக் கூடாமல், அழகிய மேலான (அருட்) சோதி சொரூபம் என்னறிவினிடத்திலே பிரகாசிக்குமோ? (சொல்லாய்) பசுங்கிளியே! (1)

அகமேவு மண்ணலுக்கென் னல்லலெல்லாஞ் சொல்லச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா! பைங்கிளியே!

(போ - ரை) என்னுடைய மனக்குகையின்கண்ணே யிருக்கும் இறைவனுக்கு அடியேனுடைய துன்பங்களை யெல்லாம் (எடுத்துச்) சொல்லக் கிளியாகிய நீ சென்று இன்பத்தைப் பெற்றுவந்து கொடுப்பாயாக! (2)

ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்,
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ! பைங்கிளியே!

(போ - ரை) உயிருக்குள் உயிராக விளங்கும் (திருவருள் விலாசத்தால் மிக) அற்புத மூர்த்தியின் ஞான சுகமானது, இந்தப் பாவியாகிய எனக்கும் கிடைக்குமோ? நீ சொல்லாய்! (3)

ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிறைக்குச் செப்பிவா! பைங்கிளியே!

(பொ - ரை) ஒருவரு மறியாதவண்ணம் அதி ரகசியமாக வந்து என்னைச் சேர்ந்து அணையும்படி எனது நாயகனுக்கு சொல்லி வருவாயாக!

ஆருன கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறாத தென்னோ? குதலைமொழிப் பைங்கிளியே!

(பொ - ரை) ஆற்றினைப்போலப் பெருகும் எனது கண்ணீரினுக்கு எனது தேகம் நனைந்துபோனதையும் (எனது நாயகனிடத்துச்) சொல்லாத தென்னேயோ? மழலைச்சொல்லை யுடையோய்! (5)

இன்பருள வாடையழுக் கேறுமெமக் கண்ணல்சுத்த
வம்பரமா மாடை யளிப்பானோ? பைங்கிளியே!

(பொ - ரை) அழுக்கேறிய ஆடையினையுடைய எமக்குச் சுகங் கொடுக்க (எனது நாயகனாகிய) தலைவன் (தான் தரித்திருத்தலைப் போலச்) சுத்தமான ஆகாயமாகிய ஆடையைக் கொடுப்பனோ? சொல்லாய்! (தன்னைப்போலத் திகம்பர னுக்கானோ?) (6)

உன்னுமல், ஒன்றிரண்டென் றோராமல், வீட்டுநெறி
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ! பைங்கிளியே!

(பொ - ரை) (எனக்கு அந்நியமாக) நினையாமல் சிவமொன்று (அதற்கு அந் நியமாக வொன்றுமில்லை யென்றுவது, சிவம் வேறு, சீவன் வேறு ஒன்றற்கொன்று சம்பந்தமில்லாத) இரண்டு என்றுவது ஆராயாமலும், மோட்சத்தினை யடைவதற் கேதுவாகிய சித்தாந்த நெறியினை உபதேசித்தவராகிய (எனது ஞானநாயகர்) மறுபடியும் என்னிடம் வரவும் ஒரு உபாயத்தை நீ சொல்லாய்! (7)

ஊருமிலார்; பேருமிலார்; உற்றார்பெற் றாருடனே
யாருமிலார்; என்னை யறிவாரோ? பைங்கிளியே!

(பொ - ரை) தனக்கென ஒரூர் இல்லாதவர்; பேரில்லாதவர்; சுற்றத்தினர் தாய் தந்தையருடனே யாரு மில்லாதவர்; (இத்தகையினர்) என்னைக்குறித்து அறிவரோ? (8)

ஊரைப்பா ராமல்,எனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த் தாற்,கருணை செய்வாரோ? பைங்கிளியே!

(பொ - ரை) (வெளிமுகப் பார்வையில்) ஒரு ஊரினை நாடாமல், இருதயத்தி லெழுந்தருளி யிருக்கும் எனது நாயகனார் சிறப்புத் தன்மையினை (அந்தர் முகமாகப்) பார்த்தால், கிருபையினைச் செய்வரோ? (9)

"என்று விடியும்? இறைவாவோ!" என்றென்று
நின்ற நிலையெல்லா நிகழ்த்தாய்! நீ பைங்கிளியே!

(பொ - ரை) "எக்காலத்து (என்னைச் சூழ்ந்திருக்கும் ஆணவ விருள்) விடியும்? ஓ தலைவனே!" என்று அடிக்கடி கூறிநின்ற நிலைமை யாவற்றையும் (எனது நாயகனுக்கு) நீ சொல்லாய்! (10)

எந்த மடலூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தை மடலாவெழுதிச் சேர்ப்பேனோ? பைங்கிளியே!

(பொ - ரை) எத்தகைய ஏட்டினும் எழுதக்கூடாத நாயகன் திருவுருவை எனது உள்ளமாகிய ஏட்டினி லெழுதி (மனத்தில்) சேர்ப்பேனோ?

'கண்ணுண்மணி போ'லின்பங் காட்டி யெனைப்பிரிந்த
திண்ணியரு மின்னம்வந்து சேர்வாரோ? பைங்கிளியே!

(பொ - ரை) கண்ணுக்குள்ளே மணியினைப்போலக் (கலந்து) இன்பந் தந்து எனை நீங்கிய (எனது நாயகராகிய) வன்மனத்தை யுடையவரும் இன்னம் வந்து சேருவரோ? (12)

ஏடார் மலர்சூடேன்; எம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்,முடிக்கு வாய்க்குமோ? பைங்கிளியே!

(பொ - ரை) (எனது நாயகன் வரும்வரையில்) இதழ்களுடன் கூடிய மலர்களை முடியேன்; (ஆகலின்) என் தலைவரது திருவடியாகிய வாடாத மலர் என் சிரசுக்குக் கிடைக்குமோ? (13)

கல்லேன்; மலரேன்; 'கனிந்தவன்பே பூசை' யென்ற
நல்லோர், பொல் லாவெனையு நாடுவரோ? பைங்கிளியே!

(பொ - ரை) (கற்கவேண்டிய நூல்களைக்) கற்கமாட்டேன். (இருதயத்தினை) மலரச்செய்யேன்; 'பழுத்த அன்பே பூசை' என்று சொன்ன நல்ல (சிவனடியார்கள்), பொல்லாத அடியேனையு நாடுவரோ?

"கண்டதனைக் கண்டு கலக்கந் தவிர்' எனவே
விண்டபெரு மானையுநான் மேவுவனோ? பைங்கிளியே!

(பொ - ரை) "(முன்னிலையாகத்) தரிசித்தனை அறிவினிடத்திற் கண்டு மனக் கலக்கத்தை நீக்குவாய்" எனவே உபதேசித்த ஆசாரியனையும் அடியேன் இன்ன மொருதரம் நானடைவேனோ? (15)

காணாத காட்சி கருத்துவந்து காணுமல்,
வீணாள் கழித்து மெலிவேனோ? பைங்கிளியே!

(பொ - ரை) (தற்போதத்தால்) காணப்பெறாத திருவருட் டரிசனத்தை மனத்தின்கண்ணே யுவந்து தரிசியாமல், நாட்களை வீணாகக் கழித்து மெலிவை யடைவேனோ? (16)

'காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்ன' வருள்
வேந்த னெமையிழுத்து மேவுவனோ ? பைங்கிளியே !

(பொ-ரை) 'காந்தமானது இரும்பினைத் தன்வயமாகக் கிரகித்து இழுத்தாற்போல'த் திருவருண் மூர்த்தி எம்மை யடிமையாகக் கொண்டு கலப்பனோ ? (17)

காதலால் வாடினதுங் கண்டனையே ? எம்மிறைவர்
போதரவா லின்பம் புசிப்பேனோ ? பைங்கிளியே !

(பொ-ரை) (திருவருண்) மோகத்தால் (நான்) இளைத்ததும் பார்த்தாயல்லவா ? (ஆகலின்) எமது தலைவர் வருகையால் இன்பத்தினை யனுபவிப்பனோ ? (18)

கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்
பட்டிக்கு மின்பமுண்டோ ? சொல்லாய்நீ ! பைங்கிளியே !

(பொ-ரை) அன்பருடன் கலந்துகொண்டு (அவர் போதிக்கும்) உண்மை வார்த்தையைக் கவனியாமல் பல அடிகளை யேற்கின்ற பட்டிமாட்டினை யொத்த அடியேனுக்கும் இன்ப முளதோ ? (19)

கிட்டூராய் நெஞ்சிற் கிளர்வார் ; தழுவவென்று
னெட்டூர ராவர் ; அவர் நேசமென்னோ ? பைங்கிளியே !

(பொ-ரை) (நினைத்தவுடன்) சமீபத்திலுள்ள ஊரினராக என் மனத்தே விளங்குவார், தழுவவேண்டுமென முயற்சித்தால் நெடுந்தூரமான ஊரினராவர். எனது தலைவரது நட்பிருந்தவா றென் ? (20)

கூறும், குணமுமில்லாக் கொள்கையினார் என்கவலை
யாறும் படிக்கு மணைவரோ ? பைங்கிளியே !

(பொ-ரை) (தனக்கென) ஒரு தன்மையும், குணமுமில்லாத கொள்கையினை யுடையாராகிய (பித்தர் போன்றார்) என்னுடைய காதற்றுன்பம் தணியும்படி என்னைத் தழுவுவரோ ? (21)

சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர் ;
தன்னந் தனியே தவிப்பேனோ ? பைங்கிளியே !

(பொ-ரை) தலைவர், மிகவும் சிறிய வயதுடைய எனது மனத்தினைக் கவர்ந்துகொண்டார் ; (அங்ஙனமாக, மனத்தினை யவர்பால் வைத்துவிட்டு) நான் மிகத் தனிமையாக இருந்து தவிப்பேனோ ? (22)

சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ ? பைங்கிளியே !

(போ - ரை) எனது மனத்துடன் கலந்து அம் மனத்தினைத் தெளியச் செய்து அடியேனை யாட்கொள்ள எழுந்தருளி வந்த குருநாதனுடைய திருவருள் (இனி யொருதரம்) கிடைக்குமோ? (23)

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை,
அல்லும் பகலு மணைவேனோ? பைங்கிளியே!

(போ - ரை) சொல்லுக் கடங்காது சுகசொரூபமாக எழுந்தருளியிருக்கும் தலைவனை, இரவும் பகலும் பிரியாது தழுவிக் கொண்டிருப்பேனோ? (24)

தற்போதத் தாலே தலைகீழ தாக,ஐய
னற்போத வின்புவர நாட்செலுமோ? பைங்கிளியே!

(போ - ரை) தானென்ற (செருக்கின்) அறிவினாலே நான் தலைகீழாக நிற்கத், தலைவனது நல்ல ஞானானந்தம் (என்பா) லுண்டாக நாட்கள் செல்லுமோ? (25)

தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவ
ரென்னையணை யாதவண்ண மெங்கொளித்தார்? பைங்கிளியே!

(போ - ரை) (தலைவர்) தன்னைக் (கலக்க) நினைக்கும் சமயத்தில், அத்தலைவர் என்னைத் தழுவாதவண்ணம் எவ்விடத்தில் மறைந்துநின்றார்?

தாங்கரிய மையலெல்லாந் தந்(து), எனைவிட் டின்னருளாம்
பாங்கியைச்சேர்ந் தார்; இறைக்குப் பண்போசொல்! பைங்கிளியே!

(போ - ரை) சகிக்கக்கூடாத ஆசையினையெல்லாம் (வலியக்) கொடுத்து, என்னைப் பிரிந்து தனது (அருட்சத்தியாகிய) தோழியினையணைந்தார். (இங்ஙன நடப்பது) இவருடைய பெருமைக்குக் குணமாகுமோ? சொல்வாய்! (27)

'தாவியதோர் மர்க்கடமாந் தன்மை' விட்டே, அண்ணலிடத்
தோவியம்போ னிற்கினெனை யுள்குவரோ? பைங்கிளியே!

(போ - ரை) (மரத்தினுக்கு மரம்) தாவுகின்ற இயற்கையாயுள்ள குரங்கினை யொத்துப் (பல புருடரை யிச்சிக்கும் வேசிகளைப்போலப்) பல தேவர்களை (இச்சிக்குந் தன்மை) யினின்று நீங்கித், தலைவனிடத்துச் சித்திரம்போலக் (கற்புடைய நாயகியினை யொத்து) அசைவற வடங்கி நிற்பின் (அப்போதாகிலும்) என்னை நினைப்பாரோ? (28)

தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னையினிப்
பாரேறா தாண்டானைப் பற்றுவனோ? பைங்கிளியே!

(போ - ரை) நீங்கப்பெறாத பிறவி வழக்கினைத்தீர்த்து அடியேனை யினிப் பூமியில் வராதபடி ஆட்கொண்டவனை (இனி நான் சென்று) சார்வனோ? (29)

தூங்கிவிழித் தென்னபலன்? தூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன்; பைங்கிளியே!

(பொ - ரை) (பிரதிதினமும்) படுத்துத் தூங்கி எழுந்திருத்தலி னாலே என்ன பிரயோசனம்? (தற்போத முன்னிட்டுத்) தூங்காமல் (அருட்போதம் முன்னிட்டுத்) தூங்கி இருக்கும் தன்மையினைக் கண்டா லல்லவோ (என்னிறைவனைத்) தரிசிப்பேன். (30)

தொல்லைக் கவலை தொலைத்துத், தொலையாத
வெல்லையிலா வின்பமய மெய்துவனோ? பைங்கிளியே!

(பொ - ரை) (செனனந்தோறும் தொடர்ந்து வருகின்ற (பழமை யாகிய துன்பங்களை நீக்கி, அழியாத அளவுபடாத சுக சொரூபத்தினை அடைவனோ? (31)

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந் தின்பணைந்தார்;
வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்தேன்; பைங்கிளியே!

(பொ - ரை) இளகிய மனத்தினையுடைய அடியார்களெல்லாம் இறைவரை யடைந்து சுக மடைந்தார்கள்; வலிய மனத்தினையுடையே னுதலாலே நான் வாழ்வை யிழந்துவிட்டேன். (32)

நானே கருதின்வர நாடார்; சும்மா விருந்தாற்
றானே யணைவர்; அவர் தன்மையென்னோ? பைங்கிளியே!

(பொ - ரை) (எக்காலத்தும்) என் மனத்தே வாழ்பவர்; அவரை அன்னியமாக நினைத்தால் தழுவமாட்டார். என்னிடத்தில் வஞ்சனை யுடையவருமல்லர். அவரது கொள்கை என்னையோ? (அனன்னிய மாகவே பாவித்தல் வேண்டும்.) (33)

'நீர்க்குமிழி போன்றவுட' னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்கவறி யாமற் றிகைப்பேனோ? பைங்கிளியே!

(பொ - ரை) 'நீரின்மே லெழுந்த குமிழினைப்போல' (நிலையில்லாத) தேகம் இருக்கையிலேயே மோட்ச சாம்பிராச்சியத்தினை அடையத் தெரிந் திடாமல் மயங்குவேனோ? (34)

நெஞ்சகத்தில் வாழ்வார், நினைக்கின்வே றென்றணையார்;
வஞ்சகத்தா ரல்லார்; அவர் மார்க்கமென்னோ? பைங்கிளியே!

(பொ - ரை) என் மனத்தின்கண்ணே குடிகொண் டிருப்பவர், (அவரை நான் வேறாக) எண்ணில் (நான்) வேறென்று என்னைத் தழு வார்; அவர் வஞ்சகமுடையாரு மல்லர்; அவரது போக்கு என்னையோ? (பாவனைக்குத் தக்கபடி விளங்குவர்.) (35)

பன்முத்தி ரைச்சமயம் பாழ்படக்,கல் லாலடிவாழ்
சின்முத் திரையரசைச் சேர்வேனோ? பைங்கிளியே!

(பொ - ரை) பற்பல வகையாகத் தங்கள் முத்திரைகளைக் கொண்டிருக்கும் புறச்சமய மனைத்தும் நாசமாகக், கல்லால விருட்சத்தி னடியிலே எழுந்தருளி யிருக்கிற சின்முத்திரையுடைய மேதா தட்சிணாமூர்த்தியினை யடைவேனோ? (36)

பச்சைகண்ட நாட்டிற் பறக்குமுனை போற்பறந்தேன்;
இச்சையெல்லா மண்ணற் கியம்பிவா! பைங்கிளியே!

(பொ - ரை) பசுமையான விருட்சங்கள் நிறைந்த நாடுகளைத் தேடிப் பறந்து செல்கின்ற வுனைப்போல (எனது தலைவனையுடைய நானும்) விரைகின்றேன். ஆதலால், எனது ஆசையனைத்தும் எனது தலைவர்க்குச் சொல்லி வருவாயாக! (37)

பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராமல், எம்பிறைவ
ராசைதந்த துன்பமதற் காற்றேனேன்; பைங்கிளியே!

(பொ - ரை) (ஆணவாதி) பாச பந்தங்களால் விளைந்த துன்பத்திற்குச் (சிறிதும்) கவனியாமல், எமது தலைவர்மேல் நான் (வைத்திருக்கிற) காதலால் விளைந்த துன்பத்தினுக்குச் சகியேன். (38)

பாராசை யற்றிறையைப் பற்றநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா! பைங்கிளியே!

(பொ - ரை) பிரபஞ்ச வெறுப்படைந்து, எனது தலைவனை வேறு பற்றுகளனைத்தும் ஒழியப் பற்றிக்கொண்டு (அவன் வசமாய்) நின்ற வரலாற்றினை யெல்லாம் (அவரிடம்) சொல்லிவா! (39)

பேதைப் பருவத்தே பின்றொடர்ந்(து), என் பக்குவமுன்
சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ? பைங்கிளியே!

(பொ - ரை) என்னை யான் அறியாப் பருவத்திலேயே என் பின்றொடர்ந்து, என்னுடைய பக்குவத்தினையும் சோதனைசெய்த என் தலைவர் வந்து (இப்போது) அணைவரோ? (40)

பைம்பயிரை நாடுமுன்போற், பார்பூத்த பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேனேன்; பைங்கிளியே!

(பொ - ரை) பசுமையுடன் கூடிய பயிரினை நாடுகின்ற உன்னைப் போல, உலகங்களை யெல்லாம் (பெறாது) பெற்றெடுத்த பசிய கொடி போன்ற (இடையினையுடைய) பார்வதியாரைச் சேரும் செவ்விய பயிராகிய சிவபெருமானை நாடி நான் திகைத்தேன். (41)

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ? எம்பிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா! பைங்கிளியே!

(பொ-ரை) (எமது தலைவனை யனுபவியாது) பொய்யாகிய சரீரத்தினைச் சுமந்து (வீணாகப்) புலம்பிக்கொண்டிருப்பேனோ? எமது தலைவருடைய சத்திய நிலையாகிய சந்நிதானத்தில் போய்ச் சொல்லிவா! (42)

பொய்ப்பணி வேண்டேனைப் பொருட்படுத்தி, அண்ணலென்பான்
மெய்ப்பணியுந் தந்தொருகால் மேவுவனோ? பைங்கிளியே!

(பொ-ரை) கபடமாக நடிக்கின்ற தொண்டினை விரும்பாத என்னை யொருபொருளாக மதித்து, எமது தலைவன் என்னிடத்துத் தமது உண்மைத் தொண்டினைப் பாவித்து மற்றொருதரம் வந்து என்னைக் கலப்பாரோ? (43)

மண்ணுறங்கும்; விண்ணுறங்கு(ம்); மற்றுளவெலாமுறங்கும்,
கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற், பைங்கிளியே!

(பொ-ரை) மண்ணுலகத்தினர் உறங்குவர்; விண்ணுலகத்தினர் உறங்குவர்; மற்றுமுள்ள உலகினரும் உறங்குவர்; நான் மாத்திரம் என் தலைவர்மேல் வைத்த ஆசையினால் நித்திரை செய்யேன். (44)

மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீர,என்னை
வெட்டவெளி வீட்டிலண்ணன் மேவுவனோ? பைங்கிளியே!

(பொ-ரை) அளவிடக் கூடாத மயக்கமனைத்தும் நீங்க என்றனைச் சிதாகாயமாகிய வீட்டினில் எனது தலைவன் கூடுவனோ? (45)

பாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னோ? பைங்கிளியே!

(பொ-ரை) (சைவ சமயத்தில்) ஆசையினை விருத்திசெய்து, என்னை அவ் வாசைக்கு இருப்பிடமாகிய அச் சமயத்திலேயே வளரச் செய்து, எனது தலைவர் (அன்னிய) பல சமயங்களாகிய பாலைவனத்தில் மயங்கும்படிச் செய்த பூர்வபாவ மென்னேயோ? (46)

மெய்யினோய் மாற்றவுழ்த மெத்தவுண்(டு); என் மண்ணறந்த
மையனோய் தீர்க்க மருந்துமுண்டோ? பைங்கிளியே!

(பொ-ரை) உடலி லுண்டாகிய நோயினை மாற்றிக்கொள்ளுவதற்கு (உலகில்) அனேகமான அவிழ்தங்கள் உண்டு; எம்முடைய தலைவர் விளைத்துள்ள காதனோயினைத் தீர்த்துக்கொள்ள மருந்துங் காணப்படுமோ? (அவர் கலந்தா லல்லது தீராது) (47)

மேவுபஞ்ச வண்ணமுற்றாய்; வீண்சிறையா லல்லலுற்றாய்;
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா! பைங்கிளியே!

(பொ-ரை) பொருந்திய ஐவகையான நிறங்களைப் பெற்றிருக்கின்றாய்; வீணாகக் கூண்டி லடைபட்டுத் துன்பமுற்றாய்; (இனிச் சிறை

னின்று முன்னே விட்டுவிடுகிறேன்) பாவியேனது இழிவாகிய தன்மையினை (எனது தலைவனிடம்) சொல்லி வருவாயாக ! (48)

வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க்(கு), என்றுயரை
நீதிறவாச் சொல்லி னிசமாங்காண் ! பைங்கிளியே !

(பொ - ரை) வீண் வார்த்தைகள் பேசாதிருக்கும்படி எனை யடக்கியாண்ட (என்னுயகனுக்கு), எனது காதற் றுயரினை நீ வெளிப் படையாக வுரைக்கின் (அவருக்கு) நிசமாகுங்காண். (49)

வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே
காட்டிக் கொடுத்தானைக், காண்பேனோ? பைங்கிளியே !

(பொ - ரை) (பிரபஞ்ச போகங்களில் கட்டுப்பட்டு) மெலிவடை யாமைக்குக் காரணமாகிய மோன சுதந்திரத்தினைச் சின்முத்திரையாற் குறிப்பிற் காட்டிக்கொடுத்தவனை நானின்னமொருதரம் தரிசிப்பனோ?

வாரா வரவாக வந்தருளு மோனருக்கென்
பேராசை யெல்லாம்போய்ப் பேசிவா ! பைங்கிளியே !

(பொ - ரை) (அபக்குவக் காலத்தில்) வாராமல் (பக்குவக் காலத் தில்) வரக்கூடிய வரவாக எழுந்தருளிவரும் மவுனகுருமூர்த்திக்கு (நான் அவர்பால் வைத்திருக்கும்) பேராசையினை யெல்லாம் நீ சென்று சொல்லி வருவாயாக ! (51)

விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்கா யாகவென்பாற்
பண்ணியதெம் மண்ணன்மயல் பார்த்தாயோ ? பைங்கிளியே !

(பொ - ரை) தேவர்களிடத்துள்ள தேவாமிருதமானது எனக்கு வேப்பங்காயென்று சொல்லும்படி எமது தலைவன் காதலானது பண்ணி விட்டது ; ( இதனை நீ ) கண்டறிந்தாயோ ? (52)

'விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்ன' அருட்
கண்ணு ளடங்கிடவுங் காண்பேனோ ? பைங்கிளியே !

(பொ - ரை) 'ஆகாயத்தின் வியாபகத்துள்ளே காற்றானது வியாப் பியமாகி வேற்றுமை தோன்றாதபடி நின்றாற்போல' நான் இறைவனு டைய திருவருளில் கலந்து இரண்டற விருந்து வாழவும் காண்பனோ ? (53)

விண்ணோர் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற,
மண்ணூன வீட்டிலென்னை வைத்ததென்னோ ? பைங்கிளியே !

(பொ - ரை) ஆகாயத்தினை யளாவிய சந்திரிகை தவழ்கின்ற சந் திரமண்டலமென்னு மேடையில் சிவனடியார்கள் யாவரும் ( அமுதப்பிர வாக முண்டு) சுகித்திருக்க, பூமியில் என்னைமாத்திரம் வைத்திருப்ப தென்னேயோ ? (54)

உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்(து),என் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தால்,எனக்கு வாயுமுண்டோ? பைங்கிளியே!

(பொ - ரை) என்னிருதயத்திலே அத்துவிதமாகக் கலந்து மறைந்திருந்து, என் வஞ்சனையான காரியமனைத்தையும் இறைவர் அறிந்தால், (நான் ஒன்றை மறைத்துச்) சொல்லுதற்கு ஒரு வாயு முளதோ? (55)

ஆகத்தை நீக்குமுன்னே ஆவித் துணைவரைநான்
மோகத்தின் வண்ணந் தழுவுவனோ? பைங்கிளியே!

(பொ - ரை) என்னுடலை விட்டு யான் நீங்கு முன்னரே, என்னுயிர்த் துணைவராகிய (நாயகரை) எனக்குண்டாயிருக்கும் ஆசைப்படி நான் ஆலிங்கனம் செய்து கொள்வனோ? (56)

தானே சுபாவந் தலைப்படநின் றால்,ஞான
வானு னவரும் வருவாரோ? பைங்கிளியே!

(பொ - ரை) தானே (எல்லாமென்ற ஏகான்மவாத தற்போத) சுபாவம் தலைப்பட்டு நின்றால், சிதாகாச சொரூபமானவரும் என்னிடம் வந்தெழுந் தருளுவரோ? (57)

கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாம
லுள்ளத்தில் வந்த உபாயமென்னோ? பைங்கிளியே!

(பொ - ரை) (என்னிடத்திலுள்ள திரோதான சத்தியால்) மறைக்கப்பட்டுள்ள கள்ளநாயகர், தமது கைகளாற் சாடைகாட்டிப் பேசாமலே என் மனத்தின்கண்ணே வந்து தங்கிய தந்திர மென்னேயோ? (58)

---

## எந்நாட் கண்ணி

### தெய்வ வணக்கம்

நீர்பூத்த வேணி நிலவெறிப்ப, மன்றுடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ?

(பொ - ரை) கங்கை தங்கிய சடையின்கண்ணே சந்திரப்பிரகாசம் வீசத், தில்லைச் சிற்றம்பலத்திலே ஆனந்த நிருத்தனம் செய்தருளும் கருமை நிறந் தங்கிய திருமிடற்றினையுடைய (நடராஜப் பிரபுவை) யான் தரிசிக்கு நாள் எந்த நாளோ? (அறியேன்.) (1)

பொன்னுரு மன்றுண்மணிப் பூவைவிழி வண்டுசுற்று
மென்னு ரமுதினல மிச்சிப்ப தெந்நாளோ?

(போ - ரை) பொன்னம்பலத்தில் அழகிய நாகணவாயினை யொத்த (சிவகாம சுந்தரியின்) விழிகளாகிய வண்டுகள் சுற்றிக்கொண்டிருக்கும் என்னுடைய அரிய அமுதம்போன்ற (நடராஜப் பிரபுவினை) யான் விரும்புவது எந்நாளோ? (2)

நீக்கி,மலக் கட்டறுத்து, நேரே வெளியிலெம்மைத்
தூக்கிவைக்குந் தாளைத் தொழுதிடுநா ளெந்நாளோ?

(போ - ரை) (மாயையினின்றும்) நீக்கி, (ஆணவ) மலபந்தத்தினை யொழித்துத், தனது சந்நிதானத்தின் அம்பலத்திலே எம்மைச் சேர்ப்பிக்கும் குஞ்சித பாதத்தை வணங்கிடு நாள் எந்நாளோ? (3)

கருமுகங்காட் டாமல்,என்றுங் கர்ப்பூரம் வீசுந்
திருமுகமே நோக்கித், திருக்கறுப்ப தெந்நாளோ?

(போ - ரை) (இனிப் பிறவிக்கு இடம் கந்ட்டாமல்), எக்காலமும் கர்ப்பூரமணம் வீசாநின்ற (நடராஜப் பிரபுவினது) திருமுக மண்டலத்தினையே தரிசித்து, எனது குற்றத்தை யொழிப்ப தெந்நாளோ? (4)

வெஞ்சேலெனும் விழியார் வேட்கை நஞ்சுக் கஞ்சினரை,
அஞ்சே லெனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ?

(போ - ரை) விருப்பத்தினைத் தருகின்ற சேற்கண்டை யென்னும் விழியினை வாய்ந்தவர்களாகிய மாதர் ஆசையாகிய விஷத்திற்குப் பயந்த (சிவனடியார்களை) அஞ்சவேண்டாமென்னும் அபயாஸ்தத்திற்கு அடைக்கலமென்ப தெந்நாளோ? (5)

ஆறு சமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்
வீறு பரைதிருத்தாண் மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) அறுவகைப்பட்ட சமயங்களில் (அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி யுபாசிக்கும்) அச்சமய தெய்வங்களாய்நின்று விளங்குகின்ற மேலான பராசத்தியினுடைய திருவடியை யடைவது எந்நாளோ?

பச்சைநிற மாய்ச்,சிவந்த பாகங் கலந்(து), உலகை
யிச்சையுட னீன்றுளை யாங்காண்ப தெந்நாளோ?

(போ - ரை) மரகத நிறமுள்ளவளாய், (சிவபெருமானுடைய) சிவந்த பாகத்தினைக் கலந்து, உலகத்தினைக் கிருபையுடன் (பெறுது) பெற்ற உமாதேவியை நாம் தரிசிப்பது எந்நாளோ? (7)

ஆதியந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடி வாமடியைப் போற்றுநா ளெந்நாளோ?

(போ - ரை) தோற்றமு மிறுதியுங் காணாத சர்வ வியாபகமாயிருந்து (ஆன்மகோடிகட்கு) அறிவுறுத்தும் ஞான சொரூபமாயிருக்கிற பராசத்தியி னடியினை யேத்துவது எந்நாளோ? (8)

கங்கை நிலவுசடைக் காட்டானைத் தந்தையெனும்
புங்கவெண்கோட் டானைபதம் புந்திவைப்ப தெந்நாளோ?

(பொ - ரை) கங்கையானது தங்கிய சடாடவியினையுடைய சிவ பெருமானைப் பிதாவென் றழைக்கும் உயர்வாகிய ஒற்றை வெண்கொம்பினை யுடைய விநாயகக்கடவுளின் திருவடியை மனத்தில் வைப்பது எந்நாளோ?

அஞ்சுமுகங் காட்டாமல், ஆறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (பிறர்) பயப்படும்படியான (கோபக் குறியோடுங் கூடிய) திருமுகத்தினைக் காட்டாமல், (யாவருக்கும் ஆறுதலை யடையும் படியாக) ஆறுமுகங்களைக் காட்டவந்த (சிவசுப்பிரமணியக் கடவுள்) செவ்விய அடைக்கல ஸ்தானமாகிய திருவடியை மனத்தில் வைப்பது எந்நாளோ? (10)

தந்தையிரு தாடுணித்துத், தம்பிரான் றாள்சேர்ந்த
எந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ?

(பொ - ரை) (சிவாபராதம் விளைத்த தனது) பிதாவின் இரண்டு கால்களையும் வெட்டிச், சிவபெருமானுடைய திருவடிகளை யடைந்த எமது பிதாவாகிய சண்டேசுர நாயனாருடைய இரண்டு திருவடிகட்கே ஆசை யுறுவது எந்நாளோ? (11)

---

## குருமரபின் வணக்கம்

தெய்ய கரமலராற் சொல்லாமற் சொன்னவுண்மை
யையனைக், கல்லாலரசை, யாமணுவ தெந்நாளோ?

(பொ - ரை) பரிசுத்தம் பொருந்திய கைத்தாமரை கொண்டு (வாயாற்) சொல்லாமல் (சின்முத்திரைக் குறிப்பால்) காட்டிய உண்மை யாகிய தட்சிணாமூர்த்தியை, (வேத சொரூபமாகிய) கல்லால விருட்சத் தின்கீழ் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனை, யாமடைவது எந்நாளோ?

சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக் கீழ்க்குடியாய் நாமணுவ தெந்நாளோ?

(பொ - ரை) மனத்தினுக் கெட்டாத (சிவபெருமானை யடையத் தக்க) ஞானானந்தத்தைக் கூட்டி வைக்கக்கூடிய நந்தியம்பெருமான் திரு வடிக்கீழ் அடிமையா யிருக்க நாமடைவது எந்நாளோ? (2)

எந்தை சனற்குமர னாதியெமை யாட்கொள்வான்
வந்த தவத்தினரை வாழ்த்துநா ளெந்நாளோ?

(போ - ரை) எமது பிதாவாகிய சனற்குமாரர் (சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதியார்) முதலாக எம்மை யாட்கொள்ளும்பொருட்டு வந்த தவமுனிவரர்களைத் தோத்தரிப்பது எந்நாளோ? (3)

பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) (பொய்ச் சமயங்களிற் கூறியுள்ளவற்றை உண்மையென) மயங்கினோராகிய முக்கூற்றுப் புறச்சமயத்தினரால் காணப்படாத சுத்தமென்னும் அத்துவித (உண்மையை யுணர்ந்த) மெய்கண்ட சிவத்தின் திருவருளைப் பொருந்துவது எந்நாளோ? (4)

பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ?

(போ - ரை) (சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் முப்பதாவது திருச்செய்யுளின் முதல் இரண்டடியாகிய) பாதியினாலே இவ்வுலகம் அப் பிரயோசனமெனத் தோன்றும்படி சுத்தாத்துவித ஞானத்தினைச் சாதித்து நின்றவராகிய (சகலாகம பண்டித ரென்னும் அருணந்தி சிவாசாரியார்) திருவடியை வணங்குவது எந்நாளோ? (5)

சிற்றம் பலமன்னுஞ் சின்மயரா நில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ?

(போ - ரை) சிற்றம்பலத்திலே நிலைபெற்ற ஞானசொரூபியாகிய மறைஞான சம்பந்த தேசிகரைத் தோத்தரிப்பது எந்நாளோ? (6)

குறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிக
ணறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ?

(போ - ரை) பரிபூரண திருவருள் ஞானத்திற்கு முதலாகிய கொற்றவன்குடி உமாபதிசிவத்தின் தேனிறைந்த தாமரை மலர்போலும் திருவடிக்கு அன்புசெய்தலைப் பெற்று நாமிருப்பது எந்நாளோ? (7)

நாளவங்கள் போகாம னன்னெறியைக் காட்டியெமை
யாளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ?

(போ - ரை) நாங்கள் வீணே கழிந்துபோகாமல் (சுத்தாத்துவித சித்தாந்த) சன்மார்க்கத்தினைக் காட்டி எம்மை யடிமையாகக்கொள்ள எழுந்தருளிய (மெய்கண்ட பரம்பரையில் வந்த) திருகோலங்கட்கு அன்பு வைப்பது எந்நாளோ? (8)

என்னறிவை யுள்ளடக்கி, என்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ?

(போ - ரை) என்னுடைய அறிவினைப் (பஞ்சேந்திரியங்களின் வழிப் பிரபஞ்சமுகமாக விடாது) எனக்குள்ளே யடக்கி, என்னைப்போலவே

(மானிட வுருவங்கொண் டெழுந்தருளி) வந்த மவுன குருவினுடைய திருவருள் வியாபகத்திலே அடியேன் வியாப்பியமாகும் நாள் எந்நாளோ? ()

ஆறுளொன்றை நாடின், அதற் காறுமுண்டா மென்றெமக்குக்
கூறு மவுனியருள் கூடுநா ளெந்நாளோ?

(போ - ரை) (அவரவர்கள் கன்மத்தினுக்குத் தக்கபடி) அறுவகைப்பட்ட (அகச்) சமயங்களி லொன்றினைச் சாரின், அச் சமயத்தினுக் கேற்ற பலனுண்டாமென்று எனக்குத் திருவாய்மலர்ந்தருளிய மவுன குருவின் திருவருளினை அடையுநாள் எந்நாளோ? (10)

“நில்லாம னின்றருளை நேரேபார்” என்றவொரு
சொல்லான் மவுனியரு டோற்றுநா ளெந்நாளோ?

(போ - ரை) “(தற்போத முன்னிட்டு) நில்லாமல், (அறிவுமயமாக்) நின்று திருவருளைக் குறிப்பாக நோக்குவாய்” என்று (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு சொல்லினால் மவுனகுருவின் திருவருள் உண்டாகு நாள் எந்நாளோ? (11)

வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ?

(போ - ரை) (வேதாகமங்களைப் பிரமாணமாகக் கொண்டு விளங்கும்) வைதிக சைவ நெறியையுடைய மவுனகுரு மவுன நிலையினின் றுணர்த்திய உண்மைப்பொருள் விளங்கித் துன்பமொழியும் நாள் எந்நாளோ? ()

வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவும், என் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ?

(போ - ரை) (பிரபஞ்சமுகமான) சொல்லும், (பஞ்சேந்திரியங்களின்) வழியே விடும் மனமும் இல்லாத மவுனகுரு மோனநிலையினின் றருளிய திருவரு ளொன்றே அடியேனிடத்துப் பதிந்தமாத்திரத்து, அடியேன் துன்ப மனைத்தும் நிலைகுலைதல் எந்நாளோ? (13)

---

## அடியார் வணக்கம்

வெம்பந்தந் தீர்த்(து), உலகாள் வேந்தன் றிருஞான
சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ?

(போ - ரை) வெவ்விய பிறவிக்கட்டினை யொழித்து, உலகத்துச் சிவனடியார்களை ஆட்கொள்ளும் (ஞான) அரசனாகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் திருவருளைத் துணையாகக்கொண்டு அடையுநாள் எந்நாளோ? (1)

ஏரின் சிவபோக மிங்கிவர்க்கே யென்ன,உழ
வாரங்கொள் செய்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ ?

(போ - ரை) (திருவருளாகிய) அழகினை வாய்ந்த சிவபோகம் இவ் வுலகத்தில் இவருக்கேயென்று (உலகம் சொல்லும்படி, சிவாலயத்தில் புல்முதலியவற்றைக் களையும் கருவியாகிய) உழவாரப்படை யேந்திய செவ்விய திருக்கரத்தினை யுடையவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடியினிடத்து அன்பு வைப்பது எந்தநாளோ? (2)

பித்தரிறை யென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ ?

(போ - ரை) (சிவனடியார்கள் சொல்லில் மயங்கும்) பித்தர் சிவபெருமானென்று தெரிந்து பரவை நாச்சியாரிடத்துத் தூதாக அனுப்பி வைத்த தமிழிலே வல்லவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் உண்மைக் கீர்த்தியினைப் புகழ்ந்து பேசுவது எந்தநாளோ ? (3)

போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூ ரையனன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ ?

(போ - ரை) உலகினர் யாரும் (சிதம்பரமென்னுந் திவ்விய க்ஷேத்திரமானது) ஞானமயமாகிய ஊரென்றறியப் புறப்புறச் சமயத்தவராகிய பௌத்தர்களை வாதத்தால் வெற்றியடைந்த திருவாதவூர் மாணிக்கவாசக சுவாமிகளின் அன்பினிலையை இச்சிப்பது எந்தநாளோ ? (4)

ஒட்டுடன்பற் றின்றி யுலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ ?

(போ - ரை) (பிரபஞ்ச) சம்பந்தத்துடன் ஆசையின்றி உலகத்தினின்றும் சர்வசங்கப் பரித்தியாகமுற்று (ஞானச்) (சம்பத்தையுடைய பட்டினத்துச் சுவாமிகள் பத்திரகிரியார் இவர்கள்) நிலையினை அறிவது எந்தநாளோ ? (5)

"கண்டதுபொய் யென்றகண்டா காரசிவ மெய்" எனவே
விண்டசிவ வாக்கியர்தாண் மேவுநா ளெந்நாளோ ?

(போ - ரை) "(கண்ணால்) கண்டதாகிய (காரியரூபம் பிரபஞ்சம்) திரிவினை யுடையது" என்றும், "எங்கும் பரிபூரணமாயுள்ள சிவம் நித்தியம்" எனவும் திருவாய் மலர்ந்தருளிய சிவவாக்கியரின் திருவடியை யடையுநாள் எந்தநாளோ ? (6)

சக்கர வர்த்தி தவராச யோகியெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளெந்நாளோ ?

(போ-ரை) தபோதனர்களாகிய சிவராஜ யோகியர்களுள் சக்ரவர்த்தியாக விளங்கும் மேலான (அறுபான்மும்மை நாயன்மார்களுளொருவராகிய) திருமூல நாயனார் திருவருளினை யடையுநாள் எந்நாளோ?

கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தை யருணடி யிருக்குநா ளெந்நாளோ?

(போ-ரை) சிவசுப்பிரமணியக் கடவுள் வரப்பிரசாதத்தை யடைந்து கந்தரனுபூதி என்னும் திவ்விய பிரபந்தத்தினைத் திருவாய்மலர்ந்தருளிய எமது பிதாவாகிய அருணகிரிநாதருடைய திருவருளினை நாடியிருக்குநாள் எந்நாளோ? (8)

எண்ணரிய சித்த ரிமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தருள் பாலிப்ப தெந்நாளோ?

(போ-ரை) (இதுகாறுங் கூறியவர்களேயன்றி) அளவிடற்கரிய ஞானசித்தர்கள், சிவானுக்கிரகம் பெற்ற தேவர்கள் முதலான மேலோர்கள், சிவபக்தர்கள் (ஆகிய எல்லாரும்) அடியேன்மீது திருவருள் வழங்குதல் எந்நாளோ? (9)

---

## யாக்கையைப் பழித்தல்

சுக்கிலமும், நீருஞ், சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நாளோ?

(போ-ரை) சுக்கிலமும், உதிரநீரும், வழிகின்ற மலமும் (இவை முதலியவற்றால்) நாற்றமெடுக்கின்ற உடலினுக்குள்ளே யிருந்து உலவிவரும் ஆசையானது இதுவரையில் போதுமானது (இனி யுன் திருவடியை யடைவது எந்நாள்) என்று சொல்லுவது எந்நாளோ? (1)

நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ?

(போ-ரை) ஆலோசித்துப் பார்க்குமிடத்து நீரினிடத் துண்டாகும் குமிழினுக்குப்பூண் கட்டப்பட்டு நின்றாலும் இச் சரீரமானது நில்லாது; (இத்தகைய) உடலின்மேல் வைத்திருக்கிற ஆசையானது ஒழிவது எந்நாளோ? (2)

காக்கை, நரி, செந்நாய், கழுகொருநாள் கூடியுண்டு
தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ?

(போ-ரை) காகம், நரி, செந்நாய், கழுகு (ஆகிய இவைகள் இடுகாட்டிலே) ஒருதினம் கூட்டம் கூடித் தின்று ஏப்பமிடுதற்குரிய விருந்தாக இருக்கின்ற சரீரத்தினைச் சீயென வெறுப்பது எந்நாளோ? (3)

செங்கிருமி யாதிசெத்த சென்ம பூமியினை
இங்கெனுட லென்னுமிழுக் கொழிவ தெந்நாளோ?

(பொ-ரை) சிவந்த புழுக்கள் முதலியன பிறப்பதற் கேதுவாகிய பிறவியென்னும் பூமியினை (வெறுக்காமல்), இவ் வுலகில் என்னுடலென்று சொல்லிக்கொள்ளும் குற்றத்தினை நீங்குவது எந்தநாளோ? (4)

தத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய்வாழிந் நாட்டைப்
பித்தனா னென்னும் பிதற்றொழிவ தெந்நாளோ?

(பொ-ரை) (காரண தத்துவங்கள் முப்பத்தாறு, அவற்றின் காரியமான தத்துவங்கள் அறுபது) * ஆகிய தொண்ணூற்றாறு தத்துவங்களென்று சொல்லப்பட்டவர்கள் (அவரவர்கள் கன்மத்திற்குத் தகுந்தபடி) தாமாகவே யொன்று சேர்ந்து வாழ்ந்திருக்கும் இச் சரீரமாகிய நாட்டினைப் பித்தனாகிய நான், நான் என்கிற (அகங்காரம் கொண்டு) பிதற்றுதலை யொழிவது எந்தநாளோ? (5)

ஊனொன்றி நாத னுணர்த்துமதை விட்டறிவே
னானென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ?

(பொ-ரை) முதல்வன் உடலின் (இருதயத்திலே அத்துவிதமாகப் பொருந்தி (அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி) அறிவிப்பதனை மறந்துவிட்டுச் (சுதந்திரமாக) "நான் அறிவேன்" என்று சொன்ன பாவியாகிய நான் தலை குனிவது எந்தநாளோ? (6)

வேலையிலா வேதன் விதித்தவிந்த்ர சாலவுடல்,
மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ?

(பொ-ரை) (சிருட்டி) வேலையைத் தவிர (வேறு) வேலை யில்லாத பிரமன் படைத்த இந்திரசாலம் போன்ற உடல், மாலைக்காலத்து மருட்டும் காரியம் போலும் விளைகின்ற மயக்கத்தினின்றும் நீங்குவது எந்தநாளோ? (7)

ஆழ்ந்து நினைக்கி னரோசிகமா மிவ்வுடலில்
வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்குநா ளெந்நாளோ?

(பொ-ரை) கூர்ந்து ஆலோசித்துப் பார்க்கில் அருவருக்கத் தகுந்த இத் தேகத்தில் தங்கிப் பெறுதற்குரிய மோட்ச இலாபத்தினை யடைய நினைக்குநாள் எந்தநாளோ? (8)

மும்மலச்சே றூன மூழுக்கும்பி பாகமெனு
மிம்மலகா யத்து ளிகழ்ச்சிவைப்ப தெந்நாளோ?

---

* இத் தத்துவங்களின் விவரத்தினைச் சித்தாந்தக் கட்டளை என்னும் நூலிற் காண்க. காரியப்பாட்டைச் சித்தாந்த வசன பூஷணத்திற் காண்க.

(போ - ரை) (ஆணவம் கன்மம் மாயையென்னு) மும்மலமாகிய சேற்றினால் விளைந்த முழுக் கும்பீபாகம் என்னும் நரகத்தினை யொத்த மலச் சரீரத்தில் வெறுப்பினை யடைவது எந்நாளோ? (9)

நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ?

(போ - ரை) துர்க்கந்தம் அதிகமாக வீசுகின்ற ஒன்பது துவாரங்களுள்ள வடித்த சாதத்தினை யடைக்கும் தோற்பையினைப் பாரமெனச் சொல்லுவது எந்நாளோ? (10)

உருவிருப்ப, உள்ளே தா னூறுமலக் கேணி
யருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநா ளெந்நாளோ?

(போ - ரை) (மேனோக்கில் அதிகச் சௌந்தரியமான உடலாகிய) உருவமிருக்க, அவ் வுடலினூடே யுண்டாகின்ற மலமாகிய கிணறு இருந்து அருவருப்பினை யுண்டாக்கும் வாழ்வினை விசாரித்துப் பயப்படுநாள் எந்நாளோ? (11)

---

## மாதரைப் பழித்தல்

மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ?

(போ - ரை) தேகத்தினிடத்து உண்டாகின்ற நாற்றமனைத்தையும் மஞ்சளைப் பூசி நாற்ற முண்டாகாதபடி செய்து, பொய்யினையே பேசும் வாயினையுடைய மாதர்கள் பொல்லாங்கினை நீங்குவது எந்நாளோ? (1)

திண்டியநெஞ் சப்பறவை சிக்கக், குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (புருடர்களின்) திடமான மனமென்னும் பட்சியகப் பட்டுக் கொள்ளும்படிக் கூந்தலாகிய காட்டினில் (மாலையாகிய வலையினை வைப்போர்களாகிய) மாதர்களுடைய தந்திரத்தினைக் கடக்குநாள் எந்நாளோ? (2)

கண்டுமொழி பேசி, மனங் கண்டுகொண்டு, கைவிலையாக்
கொண்டுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ?

(போ - ரை) கற்கண்டினைப்போலும் வார்த்தை சொல்லி (விட புருடர்களின்) உள்ளக் கருத்தினைத் தெரிந்துகொண்டு, அடிமையாகக் கொண்டுவிடும் மான்போன்ற விழியினையுடைய மாதர் சாலநடிப்பினை நீங்குவது எந்நாளோ? (3)

காமனைவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாம மறந்தருளை நண்ணுநா ளெந்நாளோ?

(பொ - ரை) காமனை (யொத்த விட புருடரை) வாவென்று (சாடைகாட்டி) இருண்ட கண்களாகிய வலையிற் (சிக்கிக்கொள்ளும்படி) வீசும் மின்னலை யொத்த மாதர் பெயரை மறந்து திருவருளினையடையுநா ளெந்தநாளோ? (4)

கண்களில் வெண்பீளை கரப்பக். கருமையிட்ட
பெண்கண் மயறப்பிப் பிழைக்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) கண்களில் (வடிகின்ற) வெண்மையான அழுக்கு மறைய, கருமையான மையினைத் தீட்டிய பெண்கள் மயக்கத்தினின்றும் தப்பிப் பிழைக்குநாள் எந்தநாளோ? (5)

வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல்வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) விம்மிச் (சில காலத்திற்குப் பின்) தளர்ச்சியினை யுற்றுத் தொங்கும் தனத்தினை வாய்ந்த மாதர்மேலே படுத்து நித்திரை செய்யும் காம சம்பந்தமான சோம்பலினை யொழிக்குநாள் எந்தநாளோ? ()

கச்சிருக்குங் கொங்கை, கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ?

(பொ - ரை) கச்சினிற் கட்டுப்பட்ட தனத்தினையும், கரும்பின் சுவைபோன்ற இனிமையான சொல்லினையும் வாய்ந்திருக்கும் மாதர் மயக்கத்தினை நீங்குவது எந்தநாளோ? (7)

பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமய
னச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ?

(பொ - ரை) (யௌவன வயதில்) பசுமையாகிய தனங்களால் (ஆடவரை) மயக்குகின்ற மாதர் பாழாகிய மயக்கம் விஷமென் றுணர்ந்து திருவருளை யடையுநாள் எந்தநாளோ? (8)

உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (தங்கள்) நாபியாகிய நீர்ச்சுழியினால் (ஆடவர்) மனத்தினைச் சுழித்தழுத்தும், யானை மத்தகத்தினை யொத்த தனத்தினை வாய்ந்த மாதர்தமை மறந்துவிடுவது எந்த நாளோ? (9)

தட்டுவைத்த சேலைக்கொய் சகத்திற் சிந்தையெல்லாங்
கட்டிவைக்கு மாயமின்னார் கட்டழிவ தெந்நாளோ?

(பொ - ரை) (சரிகை, பட்டுமுதலிய) கரைவைத்த புடவையின் கொய்சகத்தில் (ஆடவர்களின்) மனதையெல்லாம் முடித்துவைக்கும் வஞ்சகத்தில் வல்ல மாதர் கட்டினின்று நீங்குவது எந்தநாளோ? (10)

ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ?

(பொ - ரை) ஆழமாகிய சமுத்திரம்போல அளவுகடந்த வஞ்சத்தினை வாய்ந்த நெஞ்சினையுடைய உபயோகமற்ற மாதர் மயக்கத்தி னீங்குவது எந்த நாளோ? (11)

'தூயபனித் திங்கள்' சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ?

(பொ - ரை) பரிசுத்தமான குளிர்ச்சியினை வாய்ந்த சந்திரன் (தீயினைப்போலக்) கொளுத்துவதென்று (ஆடவர்கட்குக் காம) மயக்கத்தினை யூட்டும் வஞ்சக மாதர் மயக்கத்தினின்று நீங்குவது எந்தநாளோ? ()

ஏழைக் குறும்புசெயு மேந்திழையார் மோகமெனும்
பாழைக்கடந்து, பயிராவ தெந்நாளோ?

(பொ - ரை) (ஆடவர்களிடத்து) வறுமையைக் காட்டி மோசம் செய்யும் ஆபரணங்களை யணிந்த மாதரிடத்து இச்சையென்னும் பாழ் (நிலத்தினை) நீக்கித், (திருவருளாகிய பூமியில்) விருத்தியடைவ தெந்த நாளோ? (13)

விண்டு மொழிகுளறி, வேட்கைமது மொண்டுதருந்
தொண்டியர்கள் கட்டையிற் சுற்றொழிவ தெந்நாளோ?

(பொ - ரை) வாய் திறந்து சல்லாப வார்த்தைகள்பேசிக், (காம) ஆசையாகிய கள்ளினைத் (தம்பால்) முகந்து (ஆடவர்கட்கு) ஊட்டும் விலைமாதர் கடைக்கண்ணிற் சிக்கிச் சுழலுதலினின்றும் நீங்குவது எந்த நாளோ? (14)

மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன்,மாதர்
பொய்யிலின்பின் றென்று பொருந்தாநா ளெந்நாளோ?

(பொ - ரை) (திரோபவத்தால் மறைந்திருந்த) சிவம் தேகத்தில் வெளிப்பட (அதினுட னிரண்டறக்) கலந்த பேரின்பம்போல, மாதருடைய பொய்யி னிடத்தில் இன்பமில்லை என்று அதி விச்சியாத நாள் எந்த நாளோ? (15)

# தத்துவ முறைமை

ஐம்பூதத் தாலே யலக்கழிந்த தோஷமற
வெம்பூத நாதனரு ளெய்துநா ளெந்நாளோ ?

(பொ-ரை) ஐந்து பூதங்களாகிய உடலுடன் கூடி (உலகில்) அலைந்து வருந்தின துன்ப மொழியச் சிவகணத் தலைவராகிய சிவபெருமானுடைய திருவருளினை யடையுநா ளெந்தநாளோ ? (1)

சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர்பயந் தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ ?

(பொ-ரை) சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தமென்னும் ஐம் புலன்களில் தங்கிய சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்ஙுவை, ஆக்ராண மென்னும் ஐம்பொறிகளாகிய கள்வர்கள் என்கின்ற பித்தர்களுடைய பயத்தினின்று நீங்கி யுய்யுநா ளெந்தநாளோ ? (2)

நாளும் பொறிவழியை நாடாத வண்ணமெமை
யாளும் பொறியா லருள்வருவ தெந்நாளோ ?

(பொ-ரை) எக்காலமும் ஐம்பொறிகளின் வழியே செல்லாத பிரகாரம் எம்மைத் தடுத்தாட்கொள்ளும் பொலிவினால் திருவருள் புரிவ தெந்தநாளோ ? (3)

வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நாளோ ?

(பொ-ரை) வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்த மென்னுங் கன்மேந்திரியங்களால் விளைந்த மாயா காரியங்களில் வீணே காலத்தினைக் கழியாது சத்தியமாகிய (திருவருளினை) யடையுநா ளெந்தநாளோ ? (4)

மனமான வானரக்கைம் மாலையாக் காமல்,
எனையா ளடிகளடி யெய்துநா ளெந்நாளோ ?

(பொ-ரை) மனமென்று சொல்லும்படியான குரங்கினுடைய கரத்தினிடத்து அகப்பட்ட புட்ப மாலையினைப்போல எனை யாக்காமல், என்னை யடிமையாகக் கொண்டு ஆள்கின்ற பெருமானடியினை யடையுநா ளெந்தநாளோ ? (5)

வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ண,மனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ ?

(பொ-ரை) (பிரபஞ்ச விஷயங்களில் (வேட்டையாடுகின்ற ஐம் புலப் புலையர்கள் அடையா வகை, மனமாகிய காட்டினைத் திருத்திப் (பலனாகிய) முடிவினைக் காண்ப தெந்தநாளோ ? (6)

உந்து பிறப்பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (இருவினைகளால் விளைகின்ற) பிறப்பினிலும் இறப்பினிலும் அடையாதவகை எமது பிதாவாகிய சிவபெருமான் திருவருள் விளைய மனம் இறந்துபடுவது எந்தநாளோ? (7)

புத்தியெனுந் துந்திப் பொறியரவின் வாய்த்தேரை
யொத்தவிடா(து), எந்தையருளோங்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) புத்தியென்று சொல்லும்படியான படப்பொறிகள் வாய்ந்த பாம்பினது வாயிலகப்பட்ட தவளையை யொத்துவிடாமல், எமது பிதாவாகிய சிவபெருமான் திருவருளோங்குநாளெந்தநாளோ? (8)

ஆங்கார மென்னுமத யானைவா யிற்கரும்பா
யேங்காம லெந்தையருளெய்துநா ளெந்நாளோ?

(பொ - ரை) ஆங்காரமென்று சொல்லும்படியான மதம் வாய்ந்த யானையினது வாயில் கிடைத்த கரும்பினை யொத்து ஏக்கமடையாமல், எமது பிதாவாகிய சிவபெருமான் திருவருள் அடையுநாளெந்தநாளோ?

சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாம்
நித்தமலை யாதருளி னிற்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) சித்தமென்று சொல்லும்படியான நுரையும் அலையும் கூடிய சமுத்திரத்தில் சேர்ந்த துரும்புபோன்று பிரதிதினம் (உலகில்) அலையாமல் திருவருளினது நிலையினில் நிற்குநாளெந்தநாளோ? (10)

வித்தியா தத்துவங்க ளேழும் வெருண்டோடச்,
சுத்தபர போதத்தைத் துய்க்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) வித்தியா தத்துவங்களாகிய கலை, காலம், நியதி, வித்தை, இராகம், புருடன், மாயை ஆகிய ஏழும் பயந்து நீங்க, பரிசுத்தம் பொருந்திய சிவபோகத்தினை அனுபவிக்கும் காலம் எந்தநாளோ? (11)

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத்
தத்துவத்தை நீக்கியருள் சாருநா ளெந்நாளோ?

(பொ - ரை) சுத்த வித்தையினை முதலாகக் கொண்டு தோன்றும் சுத்த வித்தை, மயேச்சுரம், சதாசிவம் சத்தி, சிவம் என்னும் ஐந்துவகைத் தத்துவங்களைக் கடந்து (சுத்த சிவத்தின்) திருவருள் அடையுநாள் எந்தநாளோ? (12)

பொல்லாத காமப் புலைத்தொழிலி லென்னறிவு
செல்லாம னன்னெறியிற் சேருநா ளெந்நாளோ?

(போ - ரை) தீமை விளைதற் கேதுவாகிய காமம் என்னும் நீசத் தொழிலில் என்னுடைய அறிவானது பிரவேசியாமல் சன்மார்க்கத்தில் சேரும்நாள் எந்தநாளோ? (13)

அடிகளடிக் கீழ்க்குடியா யாம்வாழா வண்ணம்,
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ?

(போ - ரை) சிவபெருமான் திருவடியின் கீழே குடியாகவிருந்து யாம் வாழாதபடி, எமது குடியினைக் கெடுக்கும் பாழாகிய தரித்திரத்தின் கூறுபாட்டினை விட்டு நீங்குவது எந்தநாளோ? (14)

ஆன புறக்கருவி யாறுபத்து மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புன்முளைப்ப தெந்நாளோ?

(போ - ரை) காரியரூபமாயுள்ள புறத்தத்துவங்கள் அறுபதும், காரணரூபமாயுள்ள முப்பத்தாறும் (ஆகத் தொண்ணூற்றாறும்) என்னை விட்டு நீங்கிப் போயினபின் அவை மறுபடியும் என்னைக் கூடாதபடி (அவை யிறக்க) அவைமேல் புல் முளைத்துவிடுவது எந்தநாளோ? (15)

அந்தகனுக் கெங்குமிரு ளானவா றுவறிவில்
வந்தவிருள் வேலை வடியுநா ளெந்நாளோ?

(போ - ரை) குருடனுக்கு (உலகமெல்லாம்) இருள்மயமா யிருப்பது போல, என்னுடைய அறிவின்கண்ணே (ஆணவமல சம்பந்தத்தால் விளைந்துள்ள) அஞ்ஞான மயமான இருட்கடல் வற்றிப்போகும் நாள் எந்தநாளோ? (16)

புன்மலத்தைச் சேர்ந்து, மலபோதம் பொருந்துதல்போய்,
நின்மலத்தைச் சேர்ந்து,மல நீங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) அற்ப (பிரபஞ்ச காரிய) மாயையினை யடைந்து, தற்போதம் அடைதலினின்று நீங்கி, அதிபரிசுத்தமாகிய திருவருளினை யடைந்து, அம் மாயாமல காரியங்களை நீங்குநா ளெந்தநாளோ? (17)

கண்டுகண்டுந் தேறுக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (சாத்திரங்களைப்) படித்தும் படித்தும் மனமொரு வழி யடையாது உண்டாகும் கலக்க மனைத்தும் நீங்கும்விதம் (அக்காலத்திற் காதாரமாயுள்ள) பூர்வ சென்மாந்திர வினையின் மூலத்தினைக் களையுநா ளெந்தநாளோ? (18)

பைங்கூழ் வினைதான் படுசாவி யாகவெமக்
கெங்கோன் கிரணவெயி லெய்துநா ளெந்நாளோ?

(போ - ரை) பூர்வ வினையாகிய பயிரானது மிகுந்த சாவியா யழிய எமக்கு எமது தலைவனாகிய சிவ பெருமானுடைய திருவருட் கிரணமாகிய வெயிலானது காயுந்நா ளெந்நாளோ? (19)

குறித்தவித மாதியாற் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ?

(போ - ரை) வினைத்தற் கேதுவாகிய (மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும்) வந்து சேருகின்ற தீவினை யனைத்தும் (நெருப்பிலிட்டு) வறுத்து இனி முளையாதபடி திருவருளுண்டாவ தெந்நாளோ? (20)

சஞ்சிதமே யாதி சரக்கான முச்சேறும்
வெந்தபொரி யாகவருண் மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் ஆகிய சரக்குகளாகிய மூவகைச் சேறும் உலர்ந்து போகும்படியாக ஞானவொளியாகிய திருவருளுண்டாகுநா ளெந்நாளோ? (21)

தேகமுத லுன்காத் திரண்டொன்றாய் நின்றிலகு
மோகமிகு மாயை முடியுநா ளெந்நாளோ?

(போ - ரை) தேகமுதலாகக் கரணம், புவனம், போகம் ஆக நான்கும் விரிந்து சேர்ந்து (ஒன்றற்கொன்று அன்னியமென விசாரியாத தோடத்தால்) ஒற்றுமைப் பட்டதுபோல வொன்றாகி யிருப்பதற் கேதுவாகவுள்ள மோகத்தினை விளைவிக்கும் மாயை நீங்கும் காலம் எந்நாளோ?

சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ?

(போ - ரை) நாதங் காரணமாக விரிந்து பரவியிருக்கிற அபர ஞானத்தினை எமக்குத் தெரிவிக்கும் சுத்த மாயையின் சம்பந்த நீங்குவ தெந்நாளோ? (23)

எம்மை வினையை யிறையையெம்பாற் காட்டாத
அம்மை திரோதை யகலுநா ளெந்நாளோ?

(போ - ரை) (உடலுடன் கூடிய) பசுவாகிய எம்மையும், பாசமாகிய வினையையும், பதியாகிய இறைவனையும் தோன்றாதபடி மறைக்கின்ற தாயாகிய திரோதாயிசத்தி என்னை விட்டு நீங்கி (அருட்சத்தியாய்த் தோன்றுநாள்) எந்நாளோ? (24)

நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ?

(போ - ரை) சுழுத்தியினைப்போல (ஆணவமலம்) அடைந்து அறிவை மயக்கும் (தத்துவங்க ளொன்றையும் ஆன்மா கூடாதிருப்ப

தாகிய) கேவலாவத்தையான சத்துருவினைச் செயிக்கும் வல்லமை யுண்டாவ தெந்தநாளோ? (25)

சன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டுநா ளெந்நாளோ?

(பொ - ரை) (ஆன்மா தத்துவங்களுடனே கூடிக் காரியப்பட்டுப்) பின்னிக்கொண்டு கிடக்கிற சகலாவத்தை யென்னும் விஷய குப்பையில் மூலகாரணனாகிய சிவபெருமான் ஞானக்கினியை மூட்டுவிப்பது எந்தநாளோ? (26)

மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா வருளைத் தொடருநா ளெந்நாளோ?

(பொ - ரை) மாயையினால் காரியப்பட்டு விரிந்து கிடக்கிறவற்றாலுண்டாம் கன்ம மலம் நீங்குவதற் கேதுவாகிய (ஆன்மா கேவல சகலமிரண்டும் தாக்காமல் பரம சுகமாகிய ஆனந்தத்தைப் பெற்றிருப்பதான) சுத்தாவத்தையி லடைந்து திருவருளினைப் பின்பற்றிச் செல்லுநா ளெந்தநாளோ? (27)

---

## * தன்னுண்மை

உடம்பறியு மென்னுமந்த வூழலெல்லாந் தீரத்
திடம்பெறவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (உடம்பே) (எல்லாவற்றையும்) அறியும், (உடம்பிற் கன்னியமாக ஆன்மாவென்பதொன்று இல்லை) என்னும் (தேகான்மவாதிகளின்) குளறுபாடெல்லாம் ஒழிய, (உடலுக் கன்னியமாக ஆன்மாவென வொன்றுண்டென்னும்) உறுதி யுண்டாகவே (ஆன்மாவாகிய) எம்மைக் காணும் (ஆன்ம தரிசனம்) பண்ணுவது எந்தநாளோ? (1)

செம்மையறி வாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
எம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ?

(பொ - ரை) (மெய்கண்ட சாத்திரங்களை விசாரிப்பதனா லுண்டான) செவ்விய அறிவைக்கொண்டு அறிந்து, தேக முதலாய தத்துவங்களுக்குள் பொருந்திய (ஆன்மாவாகிய) எம்மை நன்கு யாம் அறிந்துகொள்வ தெந்தநாளோ? (2)

தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான்சுமந்த
சித்துருவா மெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ?

---

* இக் கண்ணிகளிற் குறித்துள்ள மதவாதிகளின் உடன்பாட்டினைச் சித்தாந்த வசன பூஷணம் என்னும் சாத்திரத்திற் காண்க.

(போ - ரை) (முக்கூற்றுத்) தத்துவங்களால் திரண்ட அநித்திய சடரூபத்தினை இதுகாறும் தாங்கிநின்ற சித்துருவாகிய எம்மைக் கண்டு கொள்வ தெந்தநாளோ? (3)

பஞ்சப் பொறியையுயி ரென்னுமந்தப் பஞ்சமறச்
செஞ்சேவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ?

(போ - ரை) ஐம்பொறிகளை ஆன்மா என்னும் (இந்திரிய ஆன்மா வாதிகளின்) அந்தச் சிறுமையானது ஒழிய (இவ்விந்திரியங்கட்கு) அன்னியமாகச் செவ்வையாய் எம்மைக் காணுவ தெந்தநாளோ? (4)

அந்தக் கரணமுயி ராமென்ற வந்தரங்க
சிந்தைக் கணத்திலெம்மைத் தேர்ந்தறிவ தெந்நாளோ?

(போ - ரை) (மன முதலாகிய) அந்தக்கரணங்கள் என்கிற அந்தக்கரண ஆன்மவாதிகளின் அந்தரங்க சிந்தையானது ஒழிய (அக்கரணங்கட்கு அன்னியமாக) ஆன்மாவாகிய எம்மை விசாரித்துணர்வது எந்தநாளோ? (5)

முக்குணத்தைச் சீவனென்னு மூடத்தை விட்டருளா
லக்கணமே யெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ?

(போ - ரை) முக்குணங்களையே ஆன்மாவென்னும் (குணான்ம வாதி) அறிவின்மையை நீங்கித் திருவருளினை முன்னிட்டு அக்கணமே (முக்குணத்திற் கன்னியமாக) ஆன்மாவாகிய எம்மை யறிந்துகொள்வது எந்தநாளோ? (6)

காலையுயி ரென்னுங் கலாதிகள்சொற் கேளாமற்
சீவமுட னெம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ?

(போ - ரை) (பிராணவாயுவினை) ஆன்மாவென்னும் (பிராணான்மவாதிகளாகிய) மூதேவிகள் வார்த்தைக்குச் செவிகொடாமல் கிரமத்துடன் (பிராணனுக்கு அன்னியமாக) ஆன்மாவாகிய எம்மை யுண்டெனத் தெளிந்துகொள்ளுவ தெந்தநாளோ? (7)

'வான்கொடுத்துத் தேடு மதிகேடர் போல' வெமை
நான்கெடுத்துத் தேடாம னன்கறிவ தெந்நாளோ?

(போ - ரை) (வியாபகமா யுள்ள) ஆகாயத்தை மறைத்துக் கொண்டு அதற்கன்னியமாக வொன்றினைத் தேடும் அறிவில்லார்போல, (எல்லாவற்றையும் அறிதற் கேதுவாயுள்ள ஆன்மாவாகிய) எம்மை (அறியாது) கெடுத்துக்கொண்டு (பிறவற்றை ஆன்மாவென) நாடாமல் (ஆன்ம சொரூபத்தினை) நன்கு தெரிந்துகொள்வ தெந்தநாளோ? (8)

# அருளியல்பு

ஈனந் தருநா டிதுநமக்கு வேண்டாவென்
றானந்த நாட்டி லவதரிப்ப தெந்நாளோ ?

(பொ - ரை) அஞ்ஞானத்தை விளைவிப்பதற் கேதுவாயுள்ளது இவ்வுலகம். (இது இனி) எங்களுக்கு வேண்டியதில்லை என்று (வெறுத்து), சிவானந்தம் விளைதற்கேதுவாகவுள்ள (திருவருளாகிய) நாட்டிலே பிறப்பது எந்தநாளோ ? (1)

பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளா
மெய்க்காட்சி யாம்புவன மேவுநா ளெந்நாளோ ?

(பொ - ரை) (மாயையின் காரியத்தால் நிலைபெறுதலின்றித்) திரிவோடுங் கூடிய காட்சியினை வாய்ந்த இவ்வுலகினை நீங்கித் திருவருளாம் உண்மைக் காட்சியினை விளைத்தற் கேதுவாகவுள்ள உலகத்தினை யடையு நாள் எந்தநாளோ ? (2)

' ஆதியந்தங் காட்டா மலம்பரம்போ லே ' நிறைந்த
தீதி லருட்கடலைச் சேருநா ளெந்நாளோ ?

(பொ - ரை) ஆரம்பமும் முடிவும் தெரியாத பூதாகாயத்தினைப் போல, (எங்கும் வியாபகமாக) நிறைந்த குற்றமில்லாத திருவருட் சமுத்திரத்தில் திளைக்குநா ளெந்தநாளோ ? (3)

எட்டுத் திசைக்கீழ்மே லெங்கும் பெருகிவரும்
வெட்டவெளி விண்ணாற்றின் மெய்தோய்வ தெந்நாளோ ?

(பொ - ரை) எட்டுத் திக்குகள் கீழ் மேல் (ஆகிய பத்துத் திசைகளிலும்) பரந்திருக்கும் சிதாகாயமாகிய (சிவானந்த) நதியில் என்னுடலம் திளைப்பது எந்தநாளோ ? (4)

சூதான மென்று கருதியெல்லா மோலமிடு
மீதான மானவெற்பை மேவுநா ளெந்நாளோ ?

(பொ - ரை) நுண்ணிய இடமென்று வேதங்கள் எல்லாம் முறையிடுகின்ற மேலான இடமென்னும் (கருணை) மாலையை யடையுநா ளெந்தநாளோ ? (5)

வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்துபொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ ?

(பொ - ரை) (அஞ்ஞானத்தால்) வெந்து மோகத்தால் வெடிக்கின்ற என்மன வெம்மை நீங்கக் குளிர்ச்சிபொருந்திய திருவருளே (சொரூபமாகப் பெய்கின்ற கிருபை) மழையைத் தரிசிப்ப தெந்தநாளோ?

சூரியர்கள் சந்திரர்க டோன்றாச் சுயஞ்சோதிப்
பூரண தேயத்திற் பொருந்துநா ளெந்நாளோ?

(போ - ரை) (பௌதிக சம்பந்தமாயுள்ள) சூரிய சந்திரர்கள் உதயமாகாத அருட்பெருஞ் சோதியை வாய்ந்த (திருவரு ணிறைந்தப் பரிபூரணமாகிய நாட்டின்கண்ணே தங்குவது எந்நாளோ? (7)

கின்றுமன வெப்பக் கலக்கமெலாந் தீர,அருட்
டென்றல்வந்து வீசுவெளி சேருநா ளெந்நாளோ?

(போ - ரை) (அஞ்ஞானத்தில்) புழுங்குகின்ற மனவெப்பத்தினு லுண்டாகிற கலக்கங்கள் முழுவதும் ஒழிய, திருவருளாகிய தென்றற் காற்று வந்து மோதுகின்ற சிதாகாயத்தில் சேருநாள் எந்நாளோ? (8)

கட்டுநமன் செங்கோல் கடாவடிக்குங் கோலாக
வெட்ட வெளிப்பொருளை மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) (ஆன்மாக்களைக் கயிற்றினல்) கட்டுகின்ற எம னுடைய செங்கோலானது (என்மீது செல்லாது) அவரது எருமைக் கடா வினை யோட்டும் கோலாகும்படி சிதம்பர சிதாகாய வெளியில் எழுந்தருளி யிருக்கும் நடராஜப் பிரபுவை அடையுநா ளெந்நாளோ? (9)

சாலக் கபாடத் தடைதீர, எம்பெருமா
னோலக்க மண்டபத்து ளோடுநா ளெந்நாளோ?

(போ - ரை) மிகுதியான (மாயா காரியமான) கதவென்னும் தடையானதுநீங்க, எமது சிவபெருமான் (அருண்மயமான) திருவோலக்க மண்டபத்திலே திரிந்து கொண்டிருக்குநா ளெந்நாளோ? (10)

விண்ணவன்ற ளென்னும் விரிநிலா மண்டபத்தில்
தண்ணீ ரருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ?

(போ - ரை) சிவபெருமான் திருவடி யென்னும் அருள்விரிந்த குளிர்ச்சியான மண்டபத்தில் சிவானந்த நீருண்டு (பிறவித்) தளர்ச்சி நீங்கு வது எந்நாளோ? (11)

வெய்யபுவி பார்த்து விழித்திருந்த வல்லலறத்
துய்ய வருளிற் றுயிலுநா ளெந்நாளோ?

(போ - ரை) அஞ்ஞானமாகிய உலகின் மாயா போகங்களைப் பார்த் துக்கொண்டிருந்து (அவற்றைக்) காத்துக்கொண்டிருந்த துன்பமொழிய அதிபரிசுத்தம் பொருந்திய திருவருளில் (ஆனந்த) நித்திரை செய்யும் நாள் எந்நாளோ? (12)

வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
ஐயனடி நீழ லணையுநா ளெந்நாளோ?

(போ - ரை) கொடிய பிறப்பென்னும் வெப்ப மனைத்தும் ஒழியச் சிவபெருமானுடைய திருவடி நிழலைச் சேருநா ளெந்தநாளோ ? (13)

வாதைப் பிறவி வளைகடலை நீந்தவையன்
பாதப் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ ?

(போ - ரை) துன்பத்திற் கேதுவாயுள்ள பிறப்பென்னும் வளைந்த சமுத்திரத்தைத் தாண்ட, சிவபெருமானுடைய இரு திருவடியாகிய கப்பலினை அடையுநாள் எந்தநாளோ ? (14)

ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலே காணவெளி
ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ ?

(போ - ரை) (சிறிதேனும்) அஞ்ஞான சம்பந்த மில்லாத உண்மையான சிவத்தை இப்பிறப்பிலேயே தரிசிக்க வெளிப்படையாகச் சிவஞானமென்னும் அஞ்சனத்தை நானடைவது எந்தநாளோ ? (15)

எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநா ளெந்நாளோ ?

(போ - ரை) (தத்துவ முப்பத்தாறும்) கடந்த இடத்தில் எனது தந்தையாகிய சிவபெருமானின் நிறைந்த வியாபகத்தினைத் (தற்போத முன்னிட்டுச்) சேராமல் (திருவருளினை முன்னிட்டுச்) சேரும்நா ளெந்தநாளோ ? (16)

'சடத்துளுயிர்போ' லெமக்குத் தானுயிராய் ஞான
நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தெந்நாளோ ?

(போ - ரை) (பூத) உடலிலே உயிரைப்போல, எமது ஆன்மாவிற்குள் பரமான்மாவாகிச் சிவஞானத்தை யனுபவிக்கச் செய்கின்ற தன்மையை யுணர்ந்து (சீவச்) செயல்களை நீங்குவது எந்தநாளோ ? (17)

எக்கணுமாந் துன்ப விருட்கடலை விட்டருளாம்
மிக்ககரை யேறி வெளிப்படுவ தெந்நாளோ ?

(போ - ரை) எவ்விடத்தும் சூழ்ந்துகொண்டிருக்கிற துன்பமாகிய இருண்ட சமுத்திரத்தை நீங்கித் திருவருளாகிய மேற்பட்ட கரையி லேறி வெளிவருத லெந்தநாளோ ? (18)

---

## பொருளியல்பு

'கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போன்' மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய், மெய்காண்ப தெந்நாளோ ?

(பொ - ரை) 'கையில் விளக்கேந்திக்கொண்டு (அவ் வெளிச்சத்தின்) பின்னாற் சென்று (தனக்கு வேண்டிய பொருள்களைக்) காணுவாரைப்போல' உண்மைஞான மென்னும் மெய்கண்ட தீபத்தினை யேந்திக்கொண்டு அதன் பின்னே போய், உண்மையான (சிவத்தினைத்) தரிசிப்பதெந்தநாளோ? (1)

கேடில்பசு பாசமெல்லாங் கீழ்படவுந், தானேமே
லாடுஞ் சுகப்பொருளுக் கன்புறுவ தெந்நாளோ?

(பொ - ரை) (அநாதி நித்தியமாக விளங்கும்) அழிவில்லாத பசுத்தன்மையும் பாசத்தன்மையும் நீங்கவும், (இவ் விரண்டிற்கும்) மேலே நடிக்கும் பதியான ஆனந்தப்பொருட்கு அன்பு பொருந்துவது எந்தநாளோ?

ஆணவத்தை நீக்கி, அறிவூடே யைவகையாக்
காணவத்தைக் கப்பாலைக் காணுநா ளெந்நாளோ?

(பொ - ரை) ஆணவமலத்தினை யொழித்து, அறிவினிடத்தே ஐந்துவிதமாகக் காணப்படுகிற (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்) என்னும் அவஸ்தைகளுக்கு அப்பாற்பட்ட இடத்தில் தோன்றுகிற சிவத்தைக் காணுநா ளெந்தநாளோ? (3)

நீக்கப் பிரியா; நினைக்கமறக் கக்கூடாப்,
போக்குவர வற்ற பொருளணைவ தெந்நாளோ?

(பொ - ரை) (ஆன்மாவுடன் அனன்னியமாக விருத்தலின்) நீக்கவும் நீங்காது; மனத்தினிடத்தே (அத்துவிதமாக விருத்தலின்) நினைக்கவும் மறக்கவும் கூடாது; (சர்வ வியாபகமாக விருத்தலின்) போக்குவரவற்ற சிவம் வெளிப்பட்டுப் பொருந்துவது எந்தநாளோ? (4)

ஆண்டருக்கு மெய்ப்பில்வைப்பா மாரமுதை, என்னகத்திற்
கண்டுகொண்டு நின்று களிக்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) தேவர்களுக்கும் உற்றிடத்துதவும் பொருளாகிய அருமையான தேவாமிர்தத்தை, என்னிடத்தே தரிசித்துக்கொண்டு இருந்து களிக்கின்ற நாள் எந்தநாளோ? (5)

காட்டுந் திருவருளே கண்ணாகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ?

(பொ - ரை) (திரோதான சத்தியாக விருந்து) பிரபஞ்சப் பொருள்க ளெல்லாவற்றையும் அனுபவிக்கச் செய்கின்ற (அவ்வருட் சத்தியினைக் கொண்டே) மேலான வீட்டினு லனுபவிக்கப்படுகிற உண்மையான சிவத்தினை அடையுநா ளெந்தநாளோ? (6)

நானென் தன்மை நழுவியே, எவ்வுயிர்க்குந்
தானான வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ?

(பொ - ரை) நான் என்ன (முனைந்து நிற்கின்ற) அகங்கார குணம் நழுவப்பெற்று, எவ்வகைப்பட்ட சீவர்களுக்கும் ஆதாரம் தானேயா யிருக்கின்ற உண்மையான சிவத்தினை அடையும் நாள் எந்தநாளோ? (7)

சிந்தை மறந்து, திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொருள், எம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (தற்போத) நினைப்பொழிந்து, திருவருள்மயமாக நிற்கும் அறிஞரிடத்து வந்த சிவம், எங்களையும் வாழ்விக்கும் நாள் எந்த நாளோ? (8)

'எள்ளுக்கு ளெண்ணெய்போ' லெங்கும் வியாபகமா
யுள்ளவொன்றை யுள்ளபடி யோருநா ளெந்நாளோ?

(பொ - ரை) 'எள்ளினுக்குள்ளாக எண்ணெய் வியாபித்திருப்பது போல்' (பிரபஞ்சம்) எங்கும் வியாபகமாயுள்ள சிவத்தினை உள்ளபடி யறியும் நாள் எந்நாளோ? (9)

அருவுருவ மெல்லா மகன்(று),அதுவா யான
பொருளெமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ?

(பொ - ரை) அருவம் உருவம் (அருவுருவம்) என்கிற எல்லாவற்றையும் கடந்து, அதுவாகிய சிவம் எமக்குப் புலப்படுவது எந்தநாளோ? ()

ஆரணமுங் காணு வகண்டிதா காரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்துநா ளெந்நாளோ?

(பொ - ரை) (அட்சரமாகிய பாசசாலங்களா லாகிய) வேதங்களும் காணக்கூடாத அகண்டரூபமான பரிபூரண பொருளாகிய சிவம் வந்து எம்மைப் பொருந்துவது எந்தநாளோ? (11)

சத்தொடுசித் தாகித் தயங்கியவா னந்தபரி
சுத்த வகண்டசிவந் தோன்றுநா ளெந்நாளோ?

(பொ - ரை) சத்துடனே சித்துமாகி விளங்குகின்ற ஆனந்தமான பரிசுத்த தன்மையுள்ள அகண்டசிவம் வெளிப்படும் நாள் எந்தநாளோ? ()

எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ?

(பொ - ரை) (திருவருளை முன்னிட்டுக்கொண்டு) எவ்வெவ்விடங்களிற் பார்த்தாலும் (பிரபஞ்சப்பொரு ளனைத்தும்) சிவசொரூபமாய் அனன்னியமாகி நிலைபெற்றிருக்கின்ற ஒப்பற்ற சிவத்தினை அடையுநாளெந்தநாளோ? (13)

அடிமுடிகாட் டாதசுத்த வம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) தோற்றமீ றில்லாத பரிசுத்தமான சிதாகாயமாகும் (அருட்) சோதியான சிதம்பரம் வந்து என்னைக் கலக்குநா ளெந்த நாளோ? (14)

ஒன்றனையுங் காட்டா வுளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுட னிற்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) (பிரபஞ்சப் பொருள்) ஒன்றினையும் காட்டாது மனத் தாணவமலத்தினை அடியோடே நீக்கி எழுந்தருளிய (அருட்) பெருஞ் சோதியுடன் (இரண்டறக்) கலக்கும் நாள் எந்தநாளோ? (15)

எந்தச் சமைய மிசைந்துமறி வூடறிவாய்
வந்தபொருளே பொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (ஆன்மாக்களின் கன்மத்திற்குத் தக்கபடி ஏற்பட்ட) எந்தெந்தச் சமயங்களுடனே கட்டுண்டிருந்தாலும் (அவரவர்கட்கு அவ ரவர்கள்) கன்மத்திற் கிசைய அவர்க ளறிவுக்குத் தக்கபடி அறிவாய்த் தோன்றும் பொருளே (உண்மைப்) பொருளான (சிவமாகத்) துணிந்து அதனை இச்சிப்பது எந்தநாளோ? (16)

எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவ ரவர்தமக்கே
யவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ?

(பொ - ரை) எந்தவிதமாக இவ்விடத்தி லிருந்து ஆராய்ந்தார் யாவரோ அவர்கட்கு அவரவர்கள் விரும்பின விதமாக இருந்து தோன்றிய பொருளாகிய (சிவத்திற்கு) அன்புவைப்ப தெந்தநாளோ? (17)

பெண்ணா ணலியெனவும் பேசாம லென்னறிவின்
கண்ணூடே நின்றவொன்றைக் காணுநா ளெந்நாளோ?

(பொ - ரை) பெண் எனவும், ஆண் எனவும், அலியெனவும் சொல் வதற்கேலாதபடி என்னறிவின்கண்ணே உதித்த ஒரு பொருளாகிய (சிவத்தைத்) தரிசிக்குநா ளெந்தநாளோ? (18)

நினைப்பு மறப்புமற நின்ற பரஞ்சோதி
தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ?

(பொ - ரை) (தற்போத) நினைவும், (அஞ்ஞானத்தால்) மறைப் பும் அற்ற அவசரத்தில் எழுந்தருளிய (அருட்) பரஞ்சோதியினை வெளி யாக என்னறிவின் கண்ணே தரிசிப்பது எந்தநாளோ? (19)

# ஆனந்தவியல்பு

பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமூற்று
நீச்சுநிலை காணு மிற்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) (வைகரி வாக்கினல்) பேசுதற்கும், பிராணவாயு வினை விடுதற்கும் கூடாதபடி பெரிய சுகவாரியை யடைந்து (அதில்) நீந்த, ஆழந் தெரியாதபடி நிற்கின்ற நாள் எந்த நாளோ? (1)

சித்தந் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்த சுகக்கடலுட் டோயுநா ளெந்நாளோ?

(பொ - ரை) மனமானது சலனப்படாதபடி யிருந்தோர் அவர்கள் அறிவினில் சுகமான பரிசுத்தம் பொருந்திய ஆனந்தச் சமுத்திரத்தில் திளைக்குநா ளெந்நாளோ? (2)

சிற்றின்ப மூண்டூழ் சிதைய,அனந் தங்கடல்போன்
முற்றின்ப வெள்ளமெமை மூடுநா ளெந்நாளோ?

(பொ - ரை) உலக சம்பந்தமான அற்ப ஆசையினை அனுபவித்தற் கேதுவாகிய ஊழ்வினையானது கெடும்படி, அளவற்ற சமுத்திரம்போலப் பெருகுகின்ற சிவானந்தப் பெருக்கு எம்மை யமூழ்த்தும்படி செய்யுநா ளெந்தநாளோ? (3)

எல்லையில்பே ரின்பமய மெப்படியென் றோர்தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ?

(பொ - ரை) அளவு கடந்த பெரிய சிவானந்தமயம் எங்ஙன மிருக்கு மென வினவினோர்க்கு (வைகரி வாக்காற்) சொல்லுதற்குக் கூடாது மவுன நிலையி லிருந்து (குறிப்பாகச்) சொல்லுநா ளெந்தநாளோ? (4)

அண்டரண்ட கோடி யனைத்து மேகாந்தவெள்ளங்
கொண்டதெனப், பேரின்பங் கூடுநா ளெந்நாளோ?

(பொ - ரை) (சர்வசங்கார காலத்தில்) தேவர்களுடைய எண்ணில்லாத அண்டங்கள் முழுவதும் ஊழிவெள்ளம் கவர்ந்துகொண்டதுபோலப், பெரிய சிவானந்தவெள்ளம் எம்மை அடையுநா ளெந்தநாளோ? (5)

ஆதியந்த மில்லாத வாதிய றுதியெனுஞ்
சோதியின்பத் தூடே துளையுநா ளெந்நாளோ?

(பொ - ரை) தோற்றமு மிறுதியு மில்லாதிருந்தும், (தலைமை நோக்கி) ஆதியும், (முடிவின்மை நோக்கி) அறுதியும் என்று சொல்லப்படுகின்ற (அருட்பெருஞ்) சோதியாகிய சுகத்தில் முழுகுநா ளெந்நாளோ?

சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பான்
மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) சாலோக முதலியனவற்றிற்குக் காரணமாயுள்ள சுகங்களைக் கடந்து எம்மிடத்து மேற்பட்ட சாயுச்சிய ஞானசுகம் அடையுநாள் எந்நாளோ? (7)

தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியென்னும்
பொற்பறிந்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ?

(போ - ரை) சிவமாந் தன்மை யுணர்ந்த பின்னரும் (ஞானச் சரியைக் கேதுவாகிய) சாலோக முதலியன உண்டென்னும் கருத்தினைத் தேர்ந்து சுகமடைவ தெந்நாளோ? (8)

உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த
வெள்ளந் திளைந்து, விடாய்தீர்வ தெந்நாளோ?

(போ - ரை) மனத்தினிடத்தே சுரக்கின்ற சிவானந்த சமுத்திரத்தில் திளைத்து, (பிரபஞ்ச மாயையா லுண்டாகும்) வெப்பம் நீங்கப்பெறுவது எந்நாளோ? (9)

கன்னலுடன் முக்கனியும், கற்கண்டும், சீனியுமாய்
மன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ?

(போ - ரை) கரும்பி னிரசத்துடன் மூவகைப்பட்ட பழங்களையும், கற்கண்டும் சருக்கரையும் அளாவியவாறு (சுவை) நிலைபெற்ற பேரின்பத்திற் கேதுவாயுள்ள அரிய அமுதத்தினை உண்ணுவது எந்நாளோ? (10)

மண்ணா டழன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணா டெழுந்தசுக மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) பிரபஞ்ச மாயையிலே அலைந்த மயக்க மனைத்தும் நீங்கிவிடும்படி சிதாகாயத்தின் கண்ணே தோன்றிய (சிவானந்த) சுகத்தையடையுநா ளெந்நாளோ? (11)

கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்தீர
வானமுத வாவி மருவுநா ளெந்நாளோ?

(போ - ரை) கானலின் நீரினையொத்த பிறவியிற்பட் டுழலுவதாகிய பொய்ம்மையானது நீங்க மேலாகிய சிவானந்தாமிருத தடாகத்தில் முழுகுவது எந்நாளோ? (12)

தீங்கரும்பென் றுலினியா, தின்று லினிப்பனபோற்,
பாங்குறும்பே ரின்பம் படைக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) இனிய கரும்பென்று வாயாற் சொன்ன மாத்திரத்திலே தித்தியாது, மென்று தின்று லினிய சுவையுண்டாம்போல, அனுபவத்தில் பெரிய இன்பத்தினைத் தருகின்றநா ளெந்நாளோ? (13)

புண்ணியபா வங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லா
நண்ணியபே ரின்பசுக நாமணைவ தெந்நாளோ?

(பொ-ரை) புண்ணிய பாவங்கட்கு எதுவாகிய (சுக துக்கங்களை) அடையாது (இருவினை யொப்பு வாய்க்க) உண்மை யடியாரெல்லாம் பொருந்திய பேரானந்த சுகத்தினை நாம் பெறுவ தெந்தநாளோ? (14)

---

## அன்பு நிலைமை

'தக்கரவி கண்ட சரோருகம்போ' லென்னிதய
மிக்கவருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ?

(பொ-ரை) 'தனக்குச் சம்பந்தமாயுள்ள சூரியனைக் கண்டமாத்திரத்து தாமரையானது மலருவதுபோல' என்னுடைய இருதயமானது திருவருளினைத் தரிசித்து ஞான முதயமாவது எந்தநாளோ? (1)

'வானமுகில் கண்ட மயூரபக்ஷி போல' வையன்
ஞானநடங் கண்டு நடிக்குநா ளெந்நாளோ?

(பொ-ரை) 'ஆகாயத்திலுள்ள மேகத்தினைக் கண்ட மயிற்பறவைகள் நடனஞ் செய்வதுபோல' இறைவனாகிய (நடராஜப்பிரபுவின்) ஞானக் கூத்தினைத் தரிசித்து (ஆனந்தத்தால்) நான் ஆடுவது எந்தநாளோ? (2)

'சந்திரனை நாடுஞ் சகோரபக்ஷி போ' லறிவில்
வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ?

(பொ-ரை) 'சந்திரனையே நாடிக்கொண்டிருக்கின்ற சகோரப் பறவையினைப்போல' என்னுடைய அறிவின்கண்ணே தோன்றிய திருவருட் பரஞ்சோதியினை யாம் நேசிப்பது எந்தநாளோ? (3)

சூத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்டுஞ்
சித்தனையென் கண்ணுற் றெரிசிப்ப தெந்நாளோ?

(பொ-ரை) வஞ்சனையே வடிவாகிய தேகமென்னும் புற்றினிடத்துக் குண்டலி சத்தியாகிய பாம்பொன்றினை யாட்டுவிக்கும் சித்தனாகிய சிவபெருமானை என்னுடைய கண்களால் தரிசிப்பது எந்தநாளோ? (4)

அந்தரத்தே நின்றாடு மானந்தக் கூத்தனுக்கென்
சிந்தை திறைகொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ?

(பொ-ரை) சிதாகாய வெளியிலே எழுந்தருளி யிருந்து நிர்த்தனம் செய்யாநின்ற ஞானனந்தனாகிய நடராஜப் பிரபுவினுக்கு என்னுடைய மனத்தினைக் கப்பணமாகக் கொடுத்துச் சேவித்துக்கொண்டிருப்பது எந்தநாளோ? (5)

கள்ளனிவ னென்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ?
வள்ளலே யென்று வருந்துநா ளெந்நாளோ?

(போ - ரை) (உலகத்திலே ஞானவானைப்போல நடிக்கின்ற) கள்ளன் இவனென்று சொல்லிச் சாடையாகக் கைவிட்டு விடுதல் தேவரீருக்கு நியாயமாமா? (ஞானதான) வள்ளலே யென்று (முறையிட்டு) வருந்துகின்றநா ளெந்தநாளோ? (6)

விண்ணுடர் காணு விமலா! பரஞ்சோதி!
அண்ணு! வா வா! என் றரற்றுநா ளெந்நாளோ?

(போ - ரை) தெய்வலோகத்தி லுள்ளவர்களாலும் காணப்படாத மலரகிதனே! (திருவருட்) பரஞ்சோதியே! தந்தையே! (என்னை யடிமையாக ஆட்கொள) எழுந்தருளி வருவாய்! வருவாய்! என்று மனம் வருந்துவது எந்தநாளோ? (7)

ஏதேது செய்தாலு மென்பணிபோய் நின்பணியா
மாதேவா! என்று வருந்துநா ளெந்நாளோ?

(போ - ரை) நானென்ன தொழில்களைச் செய்திடினும் என்னுடைய தொழிலனைத்தும் (எனக்குச் சுதந்திர மில்லாமற்) சென்று (தேவரீர் செய்விக்கின்ற) பணியாகவே முடிகிறது மாதேவனே! என்று இரங்குவது எந்தநாளோ? (8)

பண்டுங்கா ணேனுன்; பழம்பொருளே! இன்றுமுனை
கண்டுங்கா ணேனெனவுங் கைகுவிப்ப தெந்நாளோ?

(போ - ரை) பூர்வகாலத்தில் (ஆணவமலத் தடிப்பால்) நான் கண்டேனில்லை; பழமையான பொருளே! இக்காலத்திலும் (என் சுதந்திர மிழந்து உனக்கு அனன்னியமாக இருந்துகொண்டு) உன்னைக் காணேன் எனச் சொல்லி யஞ்சலிப்பது எந்தநாளோ? (9)

பொங்கேத மான புழுக்கமெல்லாந் தீர,இன்ப
மெங்கே யெங்கேயென் றிரங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) மிகுதியான குற்றம் பொருந்திய மனத்துன்ப மனைத்தும் நீங்கச், சிவானந்த வின்பம் எப்போது கிடைக்குமோ எப்போது கிடைக்குமோ என்று வருந்தும் நாள் எந்தநாளோ? (10)

'கடலின்மடை கண்டதுபோற்' கண்ணீரா றாக,
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகுநா ளெந்நாளோ?

(போ - ரை) 'சமுத்திரத்தின் மடை யுடைந்தாலென்னக்' கண்களினின்றும் நீர் ஆறுபோலப் பெருக உடலானது வெதும்பி மூர்ச்சித்து மனமுருகும்நாள் எந்தநாளோ? (11)

*புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனே னிற்காண*
*அலர்ந்தேனென் றேங்கி யழுங்குநா ளெந்நாளோ?*

(போ - ரை) முகமானது வாடினேன், உடலானது சருகுபோல ஆயினேன், தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டு அலமந்தேன் என்று இரங்கி வருந்து நாள் எந்தநாளோ? (12)

*'புண்ணீர்மை யாளர் புலம்புமா போற்' புலம்பிக்*
*கண்ணீருங் கம்பலையுங் காட்டுநா ளெந்நாளோ?*

(போ - ரை) 'அற்பத் தன்மையோர் (பிரபஞ்சமுகமாகப்) புலம்புவது போன்று' (அருண்முகமாகக்) கண்ணீருடன் நடுக்கமும் (நின் சந்நிதானத்தில்) காட்டும் நாள் எந்தநாளோ? (13)

*போற்றேனென் றாலுமென்னைப் புந்திசெய்யும் வேதனைக்கிங்*
*காற்றேனுற் றேனென் றரற்றுநா ளெந்நாளோ?*

(போ - ரை) உன்னை வணங்கேனாயினும், என்னை என் புத்திசெய்யும் வருத்தத்துக்கு இவ்விடத்தில் (குறிஞ்சியாழ்த் திறவகை பலவுஞ் சொல்லி யழுது) சகியேன் சகியேன் என்று குறைவுறுதல் நான் எந்தநாளோ? (14)

*பொய்முடங்கு பூமிசில போட்டலறப் பூங்கமலன்*
*கைமுடங்க நான் சனனக் கட்டறுவ தெந்நாளோ?*

(போ - ரை) (காரியப்பாட்டால்) மித்தையாகிய பூமியானது சில வெற்றிடமாகப் பிரமனானவன் தனது கைமுடங்கிக் கிடக்கவும் அடியேன் பிறப்பின்பந்தம் ஒழிவது எந்தநாளோ? (15)

*கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை கோவாமல்,*
*நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ?*

(போ - ரை) கல்லையொத்த வலிமை வாய்ந்த வஞ்சகர்களுடைய கைகோத்துச் (சினேகியாமல்), நற்குணத்தவர்கள் கைகோத்துச் (சினேகித்துத்) திரிவது எந்தநாளோ? (16)

*துட்டனைமா மாயைச் சுழனீக்கி யந்தரமே*
*விட்டனையோ வென்று வியக்குநா ளெந்நாளோ?*

(போ - ரை) துஷ்டனாகிய என்னைப் (பிரகிருதி) யென்னும் மாயையினுடைய சுழலினின்றும் வெளிப்படுத்திச் சிதாகாயமாகிய (சிதம்பரத்திலே) விட்டாயோவென்று உன்னை வியந்து பேசுநா ளெந்தநாளோ?

# அன்பர்நெறி

அத்துவா வெல்லா மடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றார் தெளிவறிவ தெந்நாளோ ?

(பொ - ரை) (மந்திரம், பதம், அட்சரம், புவனம், தத்துவம், கலை) ஆகிய ஆறு அத்துவாக்களையும் (ஆசாரியன் கலாசோதனையில்) சோதித்த பின்னர், ஞான அறிவினை வாய்ந்தவராய் நின்ற (சித்தாந்திகளது) தெளிந்த நிலையினை நான் தெரிந்துகொள்வது எந்நாளோ ? (1)

மூச்சற்றுச், சிந்தை முயற்சியற்று, மூதறிவாய்ப்
பேச்சற்றோர் பெற்றவொன்றைப் பெற்றிடுநா ளெந்நாளோ ?

(பொ - ரை) (பிராணாயாமத்தில்) பிராணவாயுவினை யடக்கி, மன சங்கற்பமின்றி, பேரறிவு வாய்ந்து, மவுனநிலையி னின்றோர் அடைந்த (சுத்தாத்வைதமாகிய நிலையான) ஒப்பற்ற முத்தியினை நான் அடையுநா ளெந்நாளோ ? (2)

கோட்டாலை யான குணமிறந்த நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேருநா ளெந்நாளோ ?

(பொ - ரை) துன்பத்திற் கேதுவாகிய (பிரகிருதி சம்பந்தமாகிய) முக்குணத்தினின்று நீங்கிய குணாதீதர் தேடவேண்டு மென்னும் விருப்பத்தால் தேடும் (சிவமாகிய) பொருள் நமக்குக் கிடைப்பது எந்நாளோ ? ()

கெடுத்தே பசுத்துவத்தைக், கேடிலா வானந்த
மடுத்தோ ரடுத்தபொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ ?

(பொ - ரை) பசுத்தன்மையை யழித்து, அழிவில்லாத சிவானந்த முண்டோர் அடைந்த (சிவமாகிய) பொருளை யடைதற்பொருட்டு அத னிடத்தில் நான் ஆசை வைப்பது எந்நாளோ ? (4)

'கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற்' பொய்ம்மாயச்
சொற்கண்டா லோடுமன்பர் தோய்வறிவ தெந்நாளோ ?

(பொ - ரை) 'கல்லைக் கண்டமாத்திரத்தில் பறக்கின்ற காக்கையினைப் போல'த் திரிவதாகிய மாயா சம்பந்தமான சொல்லினைக் கேட்ட மாத்திரத்தில் நீங்கிவிடுகின்ற அன்பர்களாகிய (சைவர்கள் திருவருட் கலப்பினைத் தெரிந்து கொள்வது எந்நாளோ ? (5

மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெல்லா மோடவிட்ட
சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ ?

(போ - ரை) தேக சம்பந்தமான குலம், கல்வி யமைந்த ஆடம்பர மெல்லாம் நீக்கிக்கொண்ட சைவசித்தர் ஒன்றிலும் சேராத திருவருட் செயலை நான் தெரிவது எந்நாளோ? (6)

குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத
மற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ?

(போ - ரை) (பிறவிக்) குற்றத்தினை விளைவிக்கின்ற (முக்கூற்றுச்) சமயக் கெடுதிகளைக் கெடுத்துப் பிரபஞ்ச முனைவு அற்றவர்களுக்கு என்றும் அறுதி யிடப்பட்ட (சிவமாகிய) பொருளின்மேல் அன்பு வைப்பது எந்நாளோ? (7)

தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ?

(போ - ரை) வீண் தர்க்கம் பேசிப் பாழாகிற சமய குதர்க்கங்களை யொழிந்து நிற்போர் கண்ட (சைவ) மார்க்கத்தின் நேர்மையை யாம் அடைவது எந்நாளோ? (8)

வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தம் வரை
ஆறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ?

(போ - ரை) மேலாகிய வேதாந்தமுதல் மிகுந்த கலாந்தம் வரைக்குமாகவுள்ள ஆறு அந்தங்களையு முணர்ந்தோர்களுடைய (சிவ) உணர்ச்சியின் பொருட்டு அன்பு வைப்பது எந்நாளோ? (9)

கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நாளோ?

(போ - ரை) பார்த்தவிடமெல்லாம் சிவமயமென் றறிந்துகொண்ட மனத்தினை யுடையவரது சிவநேசத்தை என் மனத்திற் கொண்டிருப்ப தெந்நாளோ? (10)

பாக்கியங்க ளெல்லாம் பழுத்து, மனம்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (சிவசாதன அநுபவ) பாக்கியமெல்லா மநுபவித்து, மனமடங்கினவர்கள் தரிசிக்கும் (சிதம்பரத்து) ஞான நிர்த்தனத்தினை (அடியேன்) தரிசிக்கும் நாள் எந்நாளோ? (11)

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ?

(போ - ரை) எத்தகைய உயிரினையும் தனது உயிரினைப்போலவே நினைக்கின்ற (சைவர்களாகிய) தவத்தினர்களது நல்ல அறிவினை விரும்பி அதன் பொருட்டுச் சிந்தை வைப்பது எந்நாளோ? (12)

---

# அறிஞருரை

" இருநிலனாய்த் தீயாகி " என்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ?

(பொ - ரை) (திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய)
" இருநிலனாய்த் தீயாகி " என்ற திருப்பாசுரத்தினது பெரிய (அஷ்ட
மூர்த்தியாக விருக்கும்) நிலையினைக் கண்டு (திருவருணிலையினைப்)
பொருந்தி மவுன நிலையினை யடைவது எந்தநாளோ? (1)

" அற்றவர்கட் கற்றசிவ ஞ் "மென்ற அத்துவித
முற்றுமொழி கண்டருளின் மூழ்குநா ளெந்நாளோ?

(பொ - ரை) (சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவா
சாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய இருபாவிருபஃது என்னும் மெய்
கண்ட சாத்திரம் பதினான்கி லொன்றில்) " அற்றவர்கட் கற்ற சிவனும் "
(" முற்றத் துறந்தவர்கட்கும் பிரிவற நின்ற பெருமான் " என்று பொருள்
பயக்கச்) சொன்ன சுத்தாத்துவித முடிந்த மெய்ம்மொழி யுண்மை தேறித் (2)
திருவருளிற் றிளைக்குநா ளெந்தநாளோ?

" தானென்னை முன்படைத்தான் " என்ற தகவுரையை
நானென்று வுண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ?

(பொ - ரை) (சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய
திருநொடித்தான்மலைத் தேவாரத்தில்) " தானென்னை முன்படைத்
தான் " என்று கட்டளையிட்ட தகுதியான திருச்செய்யுளில் (பிராகிருத
தேகத்தினையும் சீவனையும் சிவதனுவாகவும் சிவமாந்தன்மையாகவும்
செய்து வலிய உருவ முத்தியினைப் பயப்பித்த) பொருளை அறிந்து சுதந்
திரம் கொள்ளாத உண்மை நிலையைப் பெற்று யாம் திருவருளுணர்வ (3)
தெந்த நாளோ?

" என்னுடைய தோழனுமாய் " என்றதிருப் பாட்டி
னன்னெறியைக் கண்டுரிமை நாஞ்செய்வ தெந்நாளோ?

(பொ - ரை) (சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருள்
திருவாரூர்த் தேவாரத்தில்) " என்னுடைய தோழனுமாய் " என்
சொன்ன திருச்செய்யுளில் (முதல்வன் சிவனடியாரிடத்திருந் துபக
கும்) நன்மார்க்கத்தைக்கண்டு சிவத்தொண்டு நாம் செய்வ தெந்த நாளே

" உன்னிலுன்னும் " என்ற வுறுமொழியா லென்னிதயந்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ?

---

* பின் ஐந்து கண்ணிகளிலுள்ள அறிஞருரைகட்கு ஆசிரியர்
தெரியவில்லை.

(போ - ரை) (திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய) "உன்னிலுன்னும்" என்று சொல்லிய (சிவானுபவ விளைவாகிய) மேலான மொழியினால் என்னிருதயத்தில் நினைத்துச் சன்மார்க்கத்தை யடையும் நாள் எந்த நாளோ? (5)

"நினைப்பறவே தானினைந்தேன்" என்றநிலை நாடி
யனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ?

(போ - ரை) (மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகத்தில்) "நினைப்பறவே தானினைந்தேன்" (திருவருளை முன்னிட் டறிந்தேன்) என்று சொல்லிய நிலையை நாடிச் சிவமயமாம் பொருளினிடத்து நான் நிலைக்குநா ளெந்த நாளோ? (6)

"சென்றுசென் றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்றுவிடும்" என்றநெறி நிற்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தில்) "சென்றுசென் றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாகி நின்று விடும்" (ஆன்மபோத மடைவே கரைந்து சிவபோதந் தலைப்பட்டு இரண்டறக் கலந்து நிற்கும்) என்று சொல்லிய (சித்தாந்த) மார்க்கத்தில் யான் நிற்கும் நாள் எந்தநாளோ? (7)

"ஆதியந்த மில்லா வரியபரஞ் சோதி" என்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (மணிவாசக ரருளிச்செய்த திருவெம்பாவையில்) "ஆதியந்த மில்லா" (அநாதி நித்தியமாயுள்ள) அருமையாகிய (திருவருட்) பரஞ்சோதி என்று சொல்லிய நியாய மொழி கண்டு அப் பரஞ்சோதியில் (இரண்டறக் கலந்து) நான் நிற்குநா ளெந்தநாளோ? (8)

"ஆருடனே சேரு மறி"வென்ற வவ்வுரையைத்
தேரும் படிக்கருடான் சேருநா ளெந்நாளோ?

(போ - ரை) "ஆருடனே சேருமறிவு" (ஆன்மாசார்போதன்) ன்று சொல்லிய அச் சொற்பொருளைத் தெளியும்படிக்குத் திருவருளிற் சர்வது எந்தநாளோ? (9)

"பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன்" என்ற
நெறியுடையான் சொல்லினிலே நிற்குநா ளெந்நாளோ?

(போ - ரை) "பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன்" (மாயா காரியரூபமாகிய பொருட்களிற் பற்றின்றித் திருவருளை யடைந்திருந்தேன்) என்று சொன்ன சைவ நெறியுடையான் சொல்லில் நான் லநிற்கும் நாள் எந்தநாளோ? (10)

“ திரையற்ற நீர்போற் றெளிய” வெனத் தேர்ந்த
வுரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ ?

(போ - ரை) “திரையற்ற நீர்போற் றெளிய” (கன்மத்தால் தாக்குறாத மவுன நிலை) என்று சொல்லித் தெரிவித்த சொல்லைப்பற்றிப் பொருந்தி (அத்திருவருள் மவுனத்து) நான் ஒடுங்கும் நாள் எந்தநாளோ?

“ அறியா லறிவி லவிழ்ந்தேற” என்ற
நெறியா முறையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ ?

(போ - ரை) “அறியாவறிவி லவிழ்ந்தேற” (தற்போதவறிவினால் அறியப்படாத சூக்கும சித்தில் திருவருள் விரியப்பெற்று ஞான நிலையடைய) என்று சொல்லிய நல்ல சிவநெறிக் கேதுவாகிய சொற்பொருளை யறிந்து நான் நிற்குநா ளெந்தநாளோ ? (12)

“ அறிவை யறிவதுவே யாகும் பொரு”ளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ ?

(போ - ரை) (திருவருணையில்) முருகக்கடவுள் திருவருட் பிரசாதம்பெற் றெழுந்தருளிய அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்த (திருப்புகழில்) “அறிவை யறிவது பொருளென” (சித்ரூபனுயுள்ள சிவபெருமானைத் தெரிந்து கொள்வது விசேஷப்பொருள்) என்று உறுதியாய்ச் சொன்ன உண்மை நிலையை யாராய்ந்தறிவது எந்த நாளோ ? (13)

“ எனக்குனீ யென்று மியற்கையாப் பின்னு
முனக்குநான்” என்ற வுறுதிகொள்வ தெந்நாளோ ?

(போ - ரை) “எனக்குனீ யென்று மியற்கையாய்ப் பின்னு, முனக்குநான்” (மல மறைப்பில் ஆன்மாவில் பரமான்மா அத்துவிதமாக விருப்பன், மல பக்குவத்தில் பரமான்மாவில் ஆன்மா அத்துவிதமாக விருப்பன்) என்று சொன்ன உறுதிமொழியை யான் மனங்கொள்வது எந்தநாளோ ? (14)

---

## நிற்கு நிலை

---

‘பண்ணினிசை போலப்’ பரமன்பா னின்றதிற
மெண்ணி யருளாகி யிருக்குநா ளெந்நாளோ ?

(போ - ரை) ‘பண்ணும் அதினின் வேறன்று யெண்ணப்படும் இசையும்போல’ முதல்வனிடத்து (அத்துவிதமாக) இருந்த திறத்தினை யாலோசித்துத் திருவருள் வடிவா யிருக்குநா ளெந்தநாளோ ? (1)

அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநா ளெந்நாளோ?

(போ - ரை) அறிதலும் அறியாமையுமாகிய பாசஞானத்தினின்று நீங்கி எனது அறிவினிடத்தே (உபாசனைக்) குறியாக முதல்வனை யறியும் பதியறிவு வந்து சேரும் நாள் எந்தநாளோ? (2)

சொல்லான் மனத்தாற் றொடராச்சம் பூரணத்தி
னில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ?

(போ - ரை) (சுத்த மாயாகாரிய வொளியாகிய) சொல்லினாலும், (பிரகிருதி காரியமாகிய) மனத்தினாலும் எட்டவொண்ணாத பரிபூர்ண (திருவருள்) நிலையினில் (சுதந்திரமாக) நில்லாது (திருவருள்) நிலையாய் நான் நிலைநிற்பது எந்தநாளோ? (3)

'செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போல்'
அங்கணனூர் தாளி லடங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) 'சூரியனுக்கு முன்னே சந்திரன் (தனது திருவுரு கெடாமலே) ஒளிமாத்திர மழுங்கி நின்றிடல்போல' முதல்வனது திருவடி நிழலில் ஆன்மாவாகிய நான் கெடாமல் போதமாத்திரங் கெட்டு) அடங்கி நிற்பது எந்தநாளோ? (4)

'வானூ டடங்கும் வளிபோல' இன்புருவாங்
கோனூ டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ?

(போ - ரை) 'ஆகாயத்தில் (அத்துவிதமாக) அடங்குகின்ற காற்றினைப்போல'ச், சுகரூபமாகிய முதல்வனிடத்திலே நான் (அத்துவித மாக) அடங்கும்படியான குறிப்பை யுணர்வது எந்தநாளோ? (5)

செப்பரிய தண்கருணைச் சிற்சுகனூர் பூரணத்தில்
'அப்பினிடை யுப்பாய்' அணையுநா ளெந்நாளோ?

(போ - ரை) சொல்லுதற்கரிய தண்ணிய கருணையுடன் கூடிய ஞானானந்தத்தை வாய்ந்து முதல்வனது பரிபூரண நிலையில் 'நீரோடு சேர்ந்த உப்புப்போல' (அதாவது, உப்புத் தன் சுவைமுழுவதும் அந்நீர்க் காக்கித் தன்னோ டொப்பச் சமஞ்செய்து நிற்குமாபோல, உயிரைச் சேர்ந்த இறைவனுக்குத் தனக்குரிய எண் குணங்களையும் உயிரின்கட் பதிப்பித்துத் தன்னோடொப்பச் செய்வதுபோல) நான் கலந்திருப்ப தெந்தநாளோ? (6)

தூயவறி வான சுகரூப சோதிதன்பால்
'தீயினிரும் பென்ன'த் திகழுநா ளெந்நாளோ?

(போ - ரை) பரிசுத்த அறிவாகிய ஆனந்த ரூபத்தையுடைய சோதியினிடத்தில், 'நெருப்பில் இரும்பு கலந்தாற்போல' (அதாவது,

எரி : இரும்பைக் கெடுத்தலின்றித் தன் வண்ணமாக்கித் தன் வண்ண மாதற் குரித்தாகாது இவ் விரும்புடன் றோன்றிநிற்கும் கறைமாத்திரஞ் செயுமதுபோல, இறைவனு முயிரைத் தன் வண்ணமாகச் செய்து, தன் வண்ண மாக்குதற் குரித்தாகாத அவ்வுயிரின்க ணுடன்தோன்றி நிற்கு மல மாத்திரங் கெடச்செயுமாறுபோல) நான் விளங்குவது எந்நாளோ? (7)

'தீதணையாக் கர்ப்பூர தீபமென' நான்கண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ?

(போ-ரை) 'கெடுதி யணுகாத கர்ப்பூரமுந் தீபமும்போல' (அதாவது, தீபத்தின் முன்னர்க் கர்ப்பூரக்கட்டி மறைந்ததுபோல, அருட் சோதி முன்னர்த் தத்துவவுரு வாய்ந்த தேக மறைந்தாலென்ன) நான் அகண்ட வொளியுடனே பொருந்தி (மலக்) குற்றத்தினின்று நீங்குநா ளெந்நாளோ? (8)

ஆராருங் காணாத அற்புதனார் பொற்படிக்கீழ்
'நீரார் நிழல்போல்' நிலாவுநா ளெந்நாளோ?

(போ-ரை) எத்தகையருங் காணவொண்ணாத அற்புத மூர்த்தி தன் அழகிய திருவடியின் கீழே, 'நீரிலுற்ற நிழல்போல' நிலைபெறுநா ளெந்தநாளோ? (9)

எட்டத் தொலையாத வெந்தைபிரான் சந்நிதியில்
'பட்டப் பகல்விளக்காய்' பண்புறுவ தெந்நாளோ?

(போ-ரை) ஒருவராலேயும் அறிதற்கரிய எந்தை பெருமானுடைய திருவருட் சந்நிதியில் 'பகற்காலத்து விளக்கினைப்போல' (அதாவது, சூரியனுடைய சந்நிதியில் தீபம் தனது உரு கெடாது ஒளிமாத்திரம் மயங்கி யதுபோல, முதல்வனது சந்நிதானத்தில் உயிரானது தனதுமுதல் கெடாது ஆன்ம அறிவுமாத்திர மடங்குமாபோல) விளங்குவது எந்தநாளோ? (10)

'கறுப்புவட்டா வாய்மடுத்துக் கண்டார்நாப் போல'
விருப்புவட்டா வின்புறுவை மேவுநா ளெந்நாளோ?

(போ-ரை) 'கருப்பு வெல்லத்தினை வாயினு லுண்டு அதன் சுவை யைக் கண்டு பொருந்திய நாவினைப்போல' விருப்ப மாறுத சுகரூபத்தினை நான் பொருந்துநாள் எந்தநாளோ? (11)

துச்சப் புலனுற் சுழலாமற் றண்ணருளா
லுச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ?

(போ-ரை) அற்பமாகிய விஷய விருப்பத்தினுல் சுழலாமல் தண்ணிய திருவருளினுலே உச்சிக்காலத்துச் சூரியனுக் கெதிரிட்ட படிகத் தினை (அதாவது, சார்ந்ததன் வண்ணமாகப் பிரகாசித்த படிகமானது

பகற்காலத்தில் ஆகாய நிறத்தினை வாய்ந்ததுபோல, சார்ந்ததன் வண்ண மாக இருந்த உயிரானது சகல கேவலமற்ற காலத்தில் முதல்வன் உண்மை வாய்ந்ததுபோல ) ஒத்திருக்கும்நாள் எந்த நாளோ? (12)

இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா வருளைத் தொடருநா ளெந்நாளோ?

(பொ-ரை) இவ் வுலகத்தின்கண்ணே இருந்தபடியே (விஷய போகங்களில் தாக்குறாமல்) இருந்து மவுனநிலை கூடித் திருவருளைத் தொடருநாள் எந்த நாளோ? (13)

தானவனுந் தன்மையெய்தித் தண்டமென வண்டமெங்கு
ஞானமத யானை நடத்துநா ளெந்நாளோ?

(பொ-ரை) தான் முதல்வனாகிய தன்மையை யடைந்து, உலக மெல்லாம் செல்வழியாகக் கொண்டு, ஞானமாகிய மதயானையை நானடத்து நாள் எந்தநாளோ? (14)

ஒன்றிரண்டு மில்லதுவாய், ஒன்றிரண்டு முள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ?

(பொ-ரை) (பிரபஞ்சமுகத்தில் ஆன்மாவும் பரமான்மாவும்) ஒன்று இரண்டு என்று சொல்லுதற் கேலாததாகி, (சுவாநுபூதிநிலையில்) ஒன்று இரண்டு உள்ளதாகி நின்ற சமநிலையை நான் நேரா யடைவது எந்த நாளோ? (15)

பாச மகலாமற், பதியிற் கலவாமன்,
மாசில் சமத்துமுத்தி வாய்க்குநா ளெந்நாளோ?

(பொ-ரை) (அநாதி நித்தியமாகிய) பாசம் கெடாமல் (மூனைப்பு மாத்திரங் கெட்டு), முதல்வனேயாய்விடாமல் (அம் முதல்வனுடன்) குற்ற மில்லாது இரண்டறக் கலந்து அனுபவிக்கும் முத்தியினை அடையுநா ளெந்தநாளோ? (16)

சிற்றறிவு மெள்ளச் சிதைந்(து),எம்மான் பேரறிவை
யுற்(று),அறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ?

(பொ-ரை) (ஆன்ம அறிவாகிய) சிற்றுணர்வு நாளுக்குநா ளடைவே அழியப்பெற்று, எம் முதல்வனது பேரறிவைப் பொருந்தி, போத முன்னிட்டு அறியாதபடி திருவருளை முன்னிட்டு அறிந்து நான் விருத்தியடையும் நாள் எந்தநாளோ? (17)

தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவை யாமறிவென்
றெந்தையுணர் வேவடிவா வெய்துநா ளெந்நாளோ?

(பொ-ரை) (பிரபஞ்ச சம்பந்தமாகக்) கல்வி நூல்களையும் அது சம்பந்தமான ஆலோசனையையும் பொருந்தின், அறிவினுக்குக் குற்ற

முண்டாமென்று எமது தந்தையாகிய முதல்வனின் பேரறிவே யென்னுரு வாக நான் பொருந்துநாள் எந்தநாளோ? (18)

"போக்குவர வற்றவெளி போ'னிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ?

(போ - ரை) 'போதல், வருதல் (ஆகிய சலன) மில்லாத ஆகாயம் போல' நிறைந்த ஞான நிலையினை நீங்குத லில்லாமல் (இரண்டறக்) கலந்த போத நினைவற் றிருப்ப தெந்தநாளோ? (19)

காண்பானும், காட்டுவதும், காட்சியுமாய் நின்றவந்த
வீண்பாவம் போ(ய்),அதுவாய் மேவுநா ளெந்நாளோ?

(போ - ரை) ஞாதுருவும், ஞேயமும், ஞானமும் (ஆகிய திரிபுடி) ஆகவிருந்த அந்த வீணான நினைப்பினை நீங்கி அச் சிவமாந்தன்மை யடைந்து வாழும்நாள் எந்தநாளோ? (20)

வாடாதே, நாலுவாய் மாயாதே, எங்கோவை
நாடாதே நாடி நலம்பெறுவ தெந்நாளோ?

(போ - ரை) (புறச்சமயம் சார்ந்து) வாடாமலும், (பிரபஞ்சபோக) நாலுவிதமாகக் கெடாமலும், எம் முதல்வனைத் (தற்போத முன்னிட்டு) நாடாமல் (அருட்போத) முன்னிட்டுநாடி, நன்மை பெறுவது எந்த நாளோ? (21)

ஆடலையே காட்டி,என தாடலொழித் தாண்டான்பொற்
றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (நடராஜப் பிரபுவின்) நிர்த்தனத்தையே காட்டி, எனது மன சஞ்சலத்தினை நீக்கி யாண்டருளிய முதல்வனது திருவடியினை எனது சிரசின்மேல் தரித்து ஓங்குநா ளெந்தநாளோ? (22)

மேலொடுகீ ழில்லாத வித்தகனார் தம்முடனே,
'பாலொடுநீர் போற்' கலந்து பண்புறுவ தெந்நாளோ?

(போ - ரை) ஆதியுமந்தமு மில்லாத ஞான சொரூபருடன், 'பாலுடன் நீரானது கலந்து (அப் பாலி னிறத்தைப் பெற்றதுபோல)' நான் உயர்குணத்தை யடைவது எந்தநாளோ? (இது ஏகதேச உவமானம்.) (23)

அறியா தறிந்தெமையா ளண்ணலைநா மாகக்
குறியாத வண்ணங் குறிக்குநா ளெந்நாளோ?

(போ - ரை) எம்மை யாண்டருளிய முதல்வனைத் (தற்போத முன்னிட்டு) அறியாமல் (திருவருளை முன்னிட்டு) அறிந்து, சுதந்திரமாக நினையாத வண்ணம் (முதல்வன் நினைப்பிக்க) நினைக்கும்நா ளெந்தநாளோ? ()

ஓராமன், மந்திரமு முன்னுமன், நம்பரனைப்
'பாராமற் பார்த்துப்' பழகுநா ளெந்நாளோ?

(போ - ரை) (பசு பாச சாத்திரங்களை) ஆராயாமலும், (பசு) மந்திரங்களை நினையாமலும், நமது முதல்வனைத் (தற்போத முன்னிட்டுப்) பாராமல் (அருட்போத முன்னிட்டுப்) பார்த்துக் கலக்குநா ளெந்த நாளோ? (25)

ஊன்பற்று மென்னோ டுறவுபற்றும் பூரணன்பால்
'வான்பற்றுங் கண்போன்' மருவுநா ளெந்தநாளோ?

(போ - ரை) உடலையே பற்றாகக் கொண்ட என்னுடனே உறவாடுகிற பூரணனிடத்து, 'ஆகாயத்தைப் பற்றுகிற கண்போல' நான் (அத்துவிதமாகப்) பொருந்தும்நாள் எந்தநாளோ? (26)

ஆண்டான் மௌனி யளித்தவறி வாலறிவைத்
'தூண்டாமற் றூண்டித்' துலங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) ஆண்டவனாகிய (எனது குரு) மவுனி கொடுத்தருளிய அறிவாகிய தூண்டுகோலால் என்னறிவாகிய தீபத்தினைத் (தற்போதத்தால்) தூண்டாமல் (அருளால்) தூண்டி நான் விளங்கும் நாள் எந்த நாளோ? (27)

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ?

(போ - ரை) (ஆணவமே யாகாமலும் - ஆணவத்திற்கு அன்னியமாகாமலும்) - ஆணவத்துடன் இரண்டறக் கலந்தாற்போல, இறைவனே யாகாமலும் - இறைவனுக்கு அன்னிய மாகாமலும் - மெய்ஞ்ஞான இறைவனுடன் இரண்டறக் கலக்கும் நாள் எந்த நாளோ? (இது அத்துவித உண்மையினை நன்கு விளக்கிய படியாம்.) (28)

---

## நிலைபிரிந்தோர் கூடுதற் குபாயம்

கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளு
நன்மைதரு ஞானநெறி நானணைவ தெந்நாளோ?

(போ - ரை) (சிவ சாதனங்களாகிய) கன்மவழி யனுஷ்டியாதுவிடின் கடுமையான நரகமே கிடைக்குமென்று எக்காலமும் நன்மையினை விளைவிக்கின்ற (சிவசாதன) ஞானமார்க்கத்தினை நானடைவது எந்த நாளோ? (1)

ஞானநெறி தானே நழுவிடினும்(ம்), முப்பதத்து
ளானமுத்தி நல்குமென வன்புறுவ தெந்நாளோ ?

(போ - ரை) (சிவசாயுச்சியத்திற் கேதுவாகிய சிவ) ஞான மொன்றுமே நழுவிவிட்டாலும், (மற்ற யோகம், கிரியை, சரியையாகிய) மூன்றுபாதங்களால் (சீவர்களுக் கிதமாகிய சிவசாரூபம், சிவசாமீபம், சிவசாலோகம் என்னு) முத்தி முறையே கிடைக்குமென்று அவற்றி லன்பு மிகுவது எந்நாளோ ? (2)

பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநா ளெந்நாளோ ?

(போ - ரை) (முக்கூற்றுப்) புறச்சமயங்களான பலதாக்குகள் அடைந்தேனும் பின்னர் (சித்தாந்த மகாவாக்கிய) ஒரு சொல்வழியைக் கண்டு விளங்கும் (சித்தாந்த) சமயந் தெரிந்து விளங்குநா ளெந்நாளோ?

அத்துவித மென்ற அன்னியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தை தொடருநா ளெந்நாளோ ?

(போ - ரை) அத்துவிதமென்று சொல்லப்படுகின்ற (துவிதத் திற்கு அன்னியமாகிய) வேறு சொல்லின் உண்மையினைக் கண்டறிந்து சுத்த சிவத்தைப் பற்றுநா ளெந்நாளோ ? (4)

கேட்டன்முத னன்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற வெனக்கு வாய்க்குநா ளெந்நாளோ ?

(போ - ரை) கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை ஆகிய நான் கானும் கெடுதியில்லாத சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியமாகிய பதங்க ளும் துன்பமற எனக்குக் கிடைக்குநா ளெந்நாளோ ? (5)

என்னதியா னென்பதற, எவ்விடமு மென்னுசான்
சன்னிதியாக் கண்டு,நிட்டை சாதிப்ப தெந்நாளோ ?

(போ - ரை) எனது (என்னும் மமகாரமும்), யான் (என்னுமகங் காரமும்) அற்றொழியும்படி, எவ்விடத்தினையும் எனது குருநாதன் சந்நிதி யாகக்கண்டு, நான் நிட்டை சாதிப்பது எந்நாளோ ? (6)

நாம்பிரம மென்று நடுவேயொன் றுண்டாமா
றேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ ?

(போ - ரை) (ஏகான்ம வாதிகளாகிய பசுஞானிகள்) நாமே பிரம மென்று சொன்னால் நடுவே (அகங்காரம் என்னும்) ஒன்று உண்டாகு மாதலால் எல்லா மொன்றாய் நிறைந்து (சிவத்தோ டிரண்டற) விளங்கு வது எந்நாளோ ? (7)

மூச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ?

(போ - ரை) (சுவர்க்கம், மத்தியம், பாதாளமென்னும் மூன்று லோக முதலாக முற்றும் வியாபகத்தால்) அகண்டரூப சச்சிதானந்த சிவமேயென்பது எந்நாளோ? (இது அனுவதியென்னும் மலங்காரம்.)

எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) எவ்வடிவமும் பூரணமாகிய எந்தையி னுருவமே யென்றிசைந்த அவ் வுருவத்திற்குள்ளே நானொடுங்குநா ளெந்நாளோ? (இதுவும் அனுவதி யலங்காரம்.) (9)

சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநா ளெந்நாளோ?

(போ - ரை) நான் நினைத்ததெல்லாம் சிவத்தினுடைய பூரண நிலை யாகக்கொண்டு அதனைத் துதித்து வாழ்த்தி வணங்குகின்ற நாள் எந்த நாளோ? (10)

தாங்கியபார் விண்ணாதி தானேஞா னக்கினியா
யோங்குமி யோகவுணர் வுற்றிடுநா ளெந்நாளோ?

(போ - ரை) (ஆதிசேடனால்) சுமக்கப்பட்ட பூமி மேலுலகு முதலியன தனக்குத்தானே ஞானக்கினியாய்த் தழைகிற சிவயோக வுணர்ச்சி யெனக்குப் பொருந்துநா ளெந்நாளோ? (11)

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ?

(போ - ரை) (ஒன்பது வகையான) ஆசனங்களும், (இருபத் தைந்து) மூர்த்தங்களும் தோன்றாது, (தாமே 'தூங்கினவன் கைப்பாக்குப் போல') நழுவிவிட அகண்டாகாரமாகிய சிவபூசை செய்ய எனக்கு விருப்ப முண்டாகுநா ளெந்நாளோ? (12)

அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ?

(போ - ரை) (வேத மூலமந்திரமாகிய) பஞ்சாட்சரத்தின் உண் மையாகிய அந்தச் (சிவமாகிய) பொருளை நான் என் மனத்திற் பதித்து அதனோடு இரண்டறக் கலந்து நிற்குநா ளெந்நாளோ? (13)

அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்னடிமை
யெவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ?

(பொ - ரை) (அக்கரங்களை யியக்குதற்பொருட்டு அவற்றுட னிற்கும்) அகரம்போல, (அறிவு செயல்கள் விளங்குதற்பொருட்டு உயிர்களோடு) கலந்திருப்பவரான முதல்வன்றன் அடிமைகளே எல்லா ஆன்மகோடிகளென்று யாம் அவன் பணிவிடை செய்வது எந்நாளோ? (14)

தேசிகர்கோ னான திறன்மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநா ளெந்நாளோ?

(பொ - ரை) குருராஜனான வெற்றி பொருந்திய மவுனி நமக்கு வாயுதாரணை கைகூடச் செய்யச் சந்தோஷிக்குநா ளெந்தநாளோ? (15)

குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி,
அருண்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ?

(பொ - ரை) ஆசாரியன், சிவலிங்கம், சிவனடியார்களாகக் கொண்ட திருமேனிகள், அருள்வடிவே யென்று நிச்சயித்து அவற்றின்கண் அன்பு மிகுந்து திருவருளைப் பெறுவது எந்தநாளோ? (16)

---

## காண்பேனோ வென்கண்ணி

சிந்திக்குந் தோறுந் தெவிட்டா வமுதே! என்
புந்திக்கு ணீதான் பொருந்திடவுங் காண்பேனோ?

(பொ - ரை) நினைக்குந்தோறும் தெவிட்டாத அமிர்தமே! என் புத்திக்குள்ளே நீ வெளிப்படவும் காணப் பெறுவேனோ? (1)

கேவலத்தி னன்கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ?

(பொ - ரை) கேவலாவத்தையிற் கிடந்து தாழ்வடையாத வண்ணம் சுகத்தினை யருளுகின்ற அருளிறையி னிடத்தில் இரண்டறக் கலந்திடவும் காணப் பெறுவேனோ? (2)

துரியங் கடந்தவொன்றே! தூவெளியாய் நின்ற
பெரியநிறை வே! உனைநான் பெற்றிடவுங் காண்பேனோ?

(பொ - ரை) துரிய நிலையைக் கடந்த (துரியாதீதத்தில் விளங்கும்) ஒப்பற்ற பொருளே! பரிசுத்த சிதாகாயமாக நின்ற பெரும்பரிபூரணமே! உன்னை நான் பெறவும் காண்பேனோ? (3)

மாசற்ற வன்பர்நெஞ்சே மாறாத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேசினையுங் காண்பேனோ?

(பொ - ரை) குற்றமில்லாத அன்பர்மனமே நீங்கப்பெறாத பெட்டியாகக் கொண்டு (அதனிடத்து) ஒளி மிகுந்த மாணிக்கமாகிய நின்னுடைய சோதியையும் காணப் பெறுவேனோ? (4)

மாயா விகார மலமகல, எந்தைபிரா
னேயானு பூதி நிலைபெறவுங் காண்பேனோ ?

(போ - ரை) மாயாவிகாரமாகிய மலமானது நீங்க, எந்தை பெருமானுடைய சிவானுபூதி நிலையினை யடையவும் காண்பேனோ ? (5)

பொய்யுலகும், பொய்யுறவும், பொய்யுடலும் பொய்யெனவே ;
மெய்ய ! நினை மெய்யெனவே மெய்யுடனே காண்பேனோ ?

(போ - ரை) காரிய வுலகும், வஞ்சக வுறவினரும், அநித்ய தேகமும் நிலையற்றனவே (எனத் தீர்மானித்து), மெய்யனே ! உன்னை நித்தியனென்று துணிந்து இச் சரீரத்துடன் சீவன் முத்திநிலை யடைந்து காணப் பெறுவேனோ ? (6)

'வாலற்ற பட்டமென' மாயா மனப்படலங்
காலற்று வீழவுமுக் கண்ணுடையாய் ! காண்பேனோ ?

(போ - ரை) 'வால் அறுந்துபோன காற்றாடியென' மாயாகாரியமாகிய மனசஞ்சாரம் ஒழிந்துவிடவும், மூன்று கண்களை யுடையவனே ! நான் காணப் பெறுவேனோ ? (7)

உள்ளும் புறம்பு மொருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறை ! நீ கூட்டிடவுங் காண்பேனோ ?

(போ - ரை) அந்தர் முகத்தும் பகிர்முகத்தும் ஒரு தன்மையாகவிருந்து சிவானந்த மனுபவிக்கும்படி இறைவனே ! நீ அந்நிலைமை கூட்டிடவும் காணப் பெறுவேனோ ? (8)

காட்டுகின்ற முக்கட் கரும்பே ! கனியே ! என்
ஆட்டமெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ ?

(போ - ரை) (திருவருளினைக்) காட்டுகின்ற மூன்று கண்களுடன் கூடிய கரும்பு போன்றவனே ! பழம் போன்றவனே ! (பிரபஞ்சமுகமாக விளையும் எனது) ஆட்ட மெல்லாவற்றையும் ஒடுங்க நினது ஆனந்த நிர்த்தனத்தையும் (சிதம்பரத்தின் கண்ணே) தரிசிப்பேனோ ? (9)

'தூங்காமற் றூங்கிச்' சுகப்பெறுமா னின்னிறைவி
னீங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ ?

(போ - ரை) (சகலாவத்தையிலிருந்து) தூங்காமல் (நின்மலாவத்தையி லிருந்து) தூங்கி, ஆனந்த சொரூபனாகிய நினது பரிபூரண வியாபகத்தில் புறம்பே யிராது இரண்டறக் கலந்து வாழவும் காண்பேனோ ?

வாதவூ ராளிதனை வான்கருணை யால்விழுங்கும்
போதவூ ரேறே ! நின் பொன்னடியுங் காண்பேனோ ?

(பொ - ரை) திருவாதவூர் வந்த மணிவாசகப்பிரபுவை மிகுந்த கிருபையினால் நின்னுடன் இரண்டறக் கலந்துகொள்ளும்படி செய்த ஞான தேயத் திறைவனே! நினதழகிய (குஞ்சித) திருவடியினையும் காணப் பெறுவேனோ? (11)

'சாட்டையிலாப் பம்பரம்போ' லாடுஞ் சடசால
நாட்டமற வெந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ?

(பொ - ரை) 'கயிறு இல்லாமல் சுழல்கின்ற பம்பரத்தினைப்போல'த் திரியும் உடற்கூட்டம் (பிரபஞ்ச) நாட்ட நீங்க எமது தந்தையின் சுத்த சிதம்பராகாயத்தினைக் காணப்பெறுவேனோ? (12)

மன்றாடும் வாழ்வே! மரகதஞ்சேர் மாணிக்கக்
குன்றே! நின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ?

(பொ - ரை) பொன்னம்பலத்திலே நிர்த்தனம் செய்யும் வாழ்க்கையே! மரகத நிறம் பொருந்திய அம்பாள் சேர்ந்த மாணிக்கநிறம் வாய்ந்த மலையே! நின் திருவடியின் கீழே குடியாயிருக்கவும் காணப்பெறுவேனோ? (13)

பொய்யென் றறிந்தும்,எமைப் போகவொட்டா தைய! இந்த
வையங் கனமயக்க மாற்றிடவுங் காண்பேனோ?

(பொ - ரை) (இப் பிரபஞ்சமானது) திரிபினை யுடையதெனத் தேர்ந்தும், எம்மை அதனினின்று விலகவொட்டாது ஐயனே! இப் பிரபஞ்சத்தின் கவர்ச்சியாகிய மயக்கத்தினை நீக்கிடவும் காணப்பெறுவேனோ?

தாயினுநல்ல தயாளுவே! நின்னை யுன்னித்
'தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தை' வரக் காண்பேனோ?

(பொ - ரை) (பெற்றெடுத்த) தாயினைக்காட்டிலும் நல்ல தயாளுவே! உன்னை நினைத்து நெருப்பிலிட்ட மெழுகினைப்போல வுருகாநின்ற மனம் எனக்குண்டாகவும் காணப்பெறுவேனோ? (15)

என்செயினும், என்பெறினும் என்னிறைவா! ஏழையன்யா
னின்செயலென் றுன்னு நினைவுவரக் காண்பேனோ?

(பொ - ரை) (இவ்வுலகின்கண்ணே) நானென்ன புரிந்தாலும், என்ன அடைந்தாலும், எனது இறைவனே! ஏழையாகிய நான் (அவையெல்லாம்) நின்னுடைய செயலேயென்று நினைக்கும் நினைவு உண்டாகக் காண்பேனோ? (16)

எள்ளத் தனையு மிரக்கமிலா வன்பாவி
யுள்ளத்து மெந்தை யுலவிடவுங் காண்பேனோ?

(போ - ரை) ஒரு எள்ளளவும் (பிற வுயிரிடத்து) மனவிரக்க மில்லாத பாவியேன் மனத்தின்கண்ணே எமது தந்தை உலாவிடவும் காணப் பெறுவேனோ? (17)

வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையேன், ஆகெடுவே
னெஞ்சகத்தி லையா! நீ நேர்பெறவுங் காண்பேனோ?

(போ - ரை) (உலகி னடக்கும்) எல்லா வஞ்சகங்கட்கும் இருப்பிடமாயுள்ள வலிய வினையினையுடையேன் ஐயோ! எனது நெஞ்சினுள் ஐயனே! நீ நேராக வரப்பெறவும் காண்பேனோ? (18)

தொல்லைப் பிறவித் துயர்கெடவு மெந்தைபிரான்
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ?

(போ - ரை) (தொன்றுதொட்டு வரும்) பழமையாகிய பிறவித் துன்பம் கெட்டொழியவும், எமது பெருமான் மிகுந்த கருணையை யருள் செய்யவும் காணப் பெறுவேனோ? (19)

'வாளாருங் கண்ணியர்' மயற்கடலி லாழ்ந்தேன்; சற்
றாளாக வெந்தை யருள்செயவுங் காண்பேனோ?

(போ - ரை) 'வாளாயுதம்போ லொளிரும் கண்களையுடைய மாத' ருடைய ஆசைக்கடலில் அழுந்தினேன்; (அத்தகையேன்) உன் திருவடிக்கு அடிமையாகும்படி எமது தந்தை கிருபை செய்யவும் காணப் பெறுவேனோ? (20)

'பஞ்சாய்ப் பறக்குநெஞ்ச' ப் பாவியைநீ கூவி, 'ஐயா!
அஞ்சாதே!' என்றின் னருள்செயவுங் காண்பேனோ?

(போ - ரை) 'பஞ்சினைப்போல (உலகில்) திரியும் மனத்தினை' யுடைய பாவியேனை நீ வலிய அழைத்து, 'ஐயா! பயப்படாதே!' என்று உன் இனிய கிருபை செய்யவும் காணப் பெறுவேனோ? (21)

'ஆடுகேறங் காகி' அலமந் துழன்றுமனம்
வாடுமெனை, ஐயா! நீ, வாவெனவுங் காண்பேனோ?

(போ - ரை) '(ஆகாயத்தில்) சுழலாநின்ற காற்றாடியினை யொத்து' அலைந் துழன்று மனம் வாடுகின்ற என்னை, 'ஐயா! நீ, வா!' என் றழைக்கவும் காணப் பெறுவேனோ? (22)

சிட்டர்க் கெளிய சிவனே! யோ தீவினையேன்
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனோ?

(போ - ரை) அடியார்க்கு எளியனாகிய சிவபெருமானே! ஓ! தீவினையேனாகிய நான் அளவில்லாத ஆசையின் மயக்கமற் றொழியவும் காண்பேனோ? (23)

உன்னின் றுணர்த்து மூலப்பிலா வொன்றே ! நின்
'தண்ணென்ற சாந்தவருள்' சார்ந்திடவுங் காண்பேனோ ?

(போ - ரை) எனக்குள்ளே எழுந்தருளியிருந்து அறிவிக்கிற அழிவற்ற தனிப்பொருளே! 'உன் குளிர்ந்த சாந்தத்தோடுங் கூடிய அருளை'ச் சார்ந்திடவுங் காணப் பெறுவேனோ ? (24)

ஓடுங் கருத்தொடுங்க, உள்ளுணர்வு தோன்ற, நினைக்
கூடும் படிக்கிறை !நீ கூட்டிடவுங் காண்பேனோ ?

(போ - ரை) (பிரபஞ்சமுகமாகச்) செல்லும் மன மொடுங்கவும் உள்ளறிவு விளங்கவும், உன்னை இரண்டறக் கூடும்படிக்கும் இறைவனே ! நீ கூட்டவும் காணப்பெறுவேனோ ? (25)

வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் ! நின்னருளை
நோக்காம னோக்கிநிற்கு நுண்ணறிவு காண்பேனோ ?

(போ - ரை) வாக்கினாலும், மனத்தினாலும் மதித்துணர அரியவனே ! நினது திருவருளினைப் போதமுன்னிட்டுக் காணாமல் அத்திருவருட் கண்ணைப் பார்க்கின்ற நுண்ணிய அறிவும் எனக்குண்டாகக் காண்பேனோ ? (26)

இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய் ! கேள் ! இன்னருளா
மவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ ?

(போ - ரை) இத் தூலவுடல் விழுமுன்னே எமது தந்தையே ! கேட்பாயாக ! நினது திருவருளாகிய உடலிலே தோன்றக் காணப் பெறுவேனோ ? (27)

நித்தமா யொன்றாய், நிரஞ்சனமாம், நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ ?

(போ - ரை) நித்தியனாகியும், ஒப்பற்றவனாகியும், களங்கமில்லாதவனாகியும், குணாதீதனாகியு மிருக்கின்ற சிதாகாய சொரூபியாகிய நீ பிரத்தியட்சமாக என்னெதிரே தோன்றவும் காணப் பெறுவேனோ ? (28)

கண்ணிறைந்த மோனக் கருத்தே ! என் கண்ணே ! என்
னுண்ணிறைந்த மாயை யொழிந்திடவுங் காண்பேனோ ?

(போ - ரை) பிரத்தியட்சமான மௌனாதாரமே ! என் கண்போன்றவனே ! என் மனத்திலே நிறைந்த மாயையானது நீங்கிடவும் காணப்பெறுவேனோ ? (29)

அத்தா ! விமலா ! அருளாளா ! ஆனந்த
சித்தா ! எனக்குனருள் செய்திடவுங் காண்பேனோ ?

(போ - ரை) அத்தனே! மலரகிதனே! திருவருளாளனே! ஆனந்த ரூபமாகிய சித்துருவே! எனக்கு உன் திருவருள் செய்யவும் காணப் பெறுவேனோ? (30)

வீணே பிறந்திறந்து வேசற்றேன்; ஆசையறக்
காணேன்; இறைநின் கருணைபெறக் காண்பேனோ?

(போ - ரை) (இவ்வுலகில்) அப்பிரயோசனமாகப் பிறந்து இறந்து (மாயா காரியங்களால்) விடாயுற்றேன்; (இன்னும்) ஆசையொழியக் காண்கிலேன்; சிறிதேனும் உன் கருணையை யான் பெறக் காண்பேனோ?

'சட்டையொத்த விவ்வுடலை'த் தள்ளுமுன்னே, நான்சகச
நிட்டையைப்பெற்(று), ஐயா! நிருவிகற்பங் காண்பேனோ?

(போ - ரை) சட்டைபோன்ற இச் சரீரத்தினை கீழே வீழ்ந்து முன்னர் நான் சிவயோக சதா நிஷ்டை யடைந்து, ஐயனே! நிருவிகற்ப சமாதியையும் காணப் பெறுவேனோ? (32)

எல்லாந் தெரியு மிறைவா! என் னல்லலெல்லாஞ்
சொல்லாமு னீதான் றெருக்கிரங்கக் காண்பேனோ?

(போ - ரை) (ஏககாலத்தில்) எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளத்தக்க இறைவனே! என் துன்பங்களையெல்லாம் விண்ணப்பித்துக் கொள்ளு முன்னே நீயே யிரங்கியருளக் காண்பேனோ? (33)

'அண்டபகி ரண்ட' மனைத்து மொருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையுங் காண்பேனோ?

(போ - ரை) அண்டபகிரண்டங்க ளெல்லாம் ஒரே தன்மையைக் கண்டவர்கள் கண்ட உன் திருக்காட்சியினையும் காணப்பெறுவேனோ? (34)

ஊனிருந்த காய முடனிருப்ப, எந்தை! நின்பால்
வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனோ?

(போ - ரை) மாமிசம் பொருந்திய சரீரத்துட னிருக்கச்செய்தே எந்தையே! உன்னிடத்துச் சிதாகாயம் கலந்தாலென்ன, நான் வந்து உன்னிடம் அமைந்திருக்கவும் காணப்பெறுவேனோ? (35)

தினையத் தனையுந் தெளிவறியாப் பாவியே
னினைவிற் பரம்பொருணீ நேர்பெறவுங் காண்பேனோ?

(போ - ரை) தினையளவாயினும் தெளிவில்லாத பாவியேனுடைய நினைவின்கண் பரம்பொருளாகிய நீ நேர்பெறவும் காண்பேனோ? (36)

துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிட வையாவே!
இன்பவெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ?

(போ - ரை) துக்கமென்கிற மேடுகளையெல்லாம் கல்லிக்கொண்டு போம்படி, ஐயனே! சுகப்பெருக்கு வந்து இவ்விடத்தில் எதிர்ப்படவும் காணப்பெறுவேனோ? (37)

---

# ஆகாதோ வென்கண்ணி

கல்லாத நெஞ்சங் கரைந்துருக வெத்தொழிற்கும்
வல்லாய்! நின்னின்பம் வழங்கினு லாகாதோ?

(போ - ரை) (சாஸ்திரங்களைக்) கல்லாத மனமானது கரைந்துருகும்படி எத்தொழிலிலும் வல்லவனே! உன் சுகத்தினை எனக்குக் கொடுத்தல் ஆகாதோ? (1)

என்னை யறிய, எனக்கறிவாய் நின்றருணின்
றன்னையறிந் தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ?

(போ - ரை) (ஆன்மாவாகிய) என்னை அதன் சொரூபத்தினை யறிய, எனக்கறிவாகி நின்றருளிய வுன்னை யறிந்து இன்ப நலத்தினை நான் சேர வைத்தால் ஆகாதோ? (2)

பொய்ம்மயமே யான புரைதீர வெந்தை! இன்ப
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தா லாகாதோ?

(போ - ரை) பொய்யுருவமான குற்ற மனைத்து மொழிய எந்தையே! உனது மெய்யுருவம் வந்து என்னை விழுங்கச் செய்தால் ஆகாதோ? (3)

பட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வே! நின் னின்பமயம்
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகாதோ?

(போ - ரை) அளவில்லாத ஞானசுகசொரூபமே! நினது ஆனந்த மயத்தினைச் சிவனடியார்களைப்போல யானு முண்டு தேக்கும்படி செய்தால் ஆகாதோ? (4)

அத்தா! நின் பொற்று ளடிக்கே யனுதினமும்
பித்தாகி, இன்பம் பெருகவைத்தா லாகாதோ?

(போ - ரை) ஐயனே! உன்னழகிய திருவடியின் கீழிருப்பதற்கே எக்காலமும் (ஞானப்) பித்தேறச் செய்து, எனக்குச் சுகம் பெருக வைத்தால் ஆகாதோ? (5)

மெல்லியலார் மோக விழற்கிறைப்பே னையா! நின்
னெல்லையிலா னந்தநல மிச்சித்தா லாகாதோ?

(போ - ரை) மாதர்களுடைய மோகமென்னும் விழற்புல்லினை (வளர்த்தற்பொருட்டு) அறிவாகிய நீரினை இறைப்பவனாகிய நான், ஐயனே! உனது அளவில்லாத சிவானந்தத்தை விரும்பினுல் ஆகாதோ? (

சுட்டழகா யெண்ணுமனஞ் சூறையிட்டா னந்தமயக்
கட்டழகா ! நின்னைக் கலக்கவைத்தா லாகாதோ?

(போ - ரை) (பிரபஞ்ச பதார்த்தங்களில்) அறிதலையே விருப்பமாய்க்கொண்ட மனமானது சூறையாம்படி ஆனந்தரூபமாகிய கட்டழகனே ! என்னை நின்னிடம் கலக்கவைத்தால் ஆகாதோ? (7)

சோதியே ! நந்தாச் சுகவடிவே ! தூவெளியே !
ஆதியே ! நின்னை யறியவைத்தா லாகாதோ ?

(போ - ரை) சோதிசொரூபமே ! கெடாத இன்பவடிவே ! பரிசுத்த ஆகாயமே ! முதலே ! நின்னை யுணரும்படி என்னை வைத்தால் ஆகாதோ?

நேசஞ் சிறிதுமிலேன் ; நின்மலனே ! நின்னடிக்கே
வாசஞ் செயவிரங்கி, வாவென்று லாகாதோ ?

(போ - ரை) அன்பு சிறிது மில்லேன் ; மலரகிதனே ! நினது திருவடியின் கீழே வசிக்கும்படி யிரங்கியருளி, என்னை வாவென் றழைத்தால் ஆகாதோ ? (9)

என்னறிவுக் குள்ளே யிருந்ததுபோல், ஐயாவே !
நின்னறிவு ணின்னுடன்யா னிற்கவைத்தா லாகாதோ ?

(போ - ரை) என்னுடைய உணர்வினுக்குள்ளே நீ (பெத்த நிலையில் அத்துவிதமாக) இருந்ததுபோல, ஐயனே ! உன்னுணர்வுக்குள்ளே உன்னுடனே நான் (முத்தியில் அத்துவிதமாக) நிற்கும்படி செய்தால் ஆகாதோ ? (10)

ஆதிப்பி ரானே !என் னல்ல லிருளகலச்
சோதிப்ர காசமயந் தோன்றுவித்தா லாகாதோ ?

(போ - ரை) ஆதிப்பெருமானே ! எனது துன்பத்திற்குக் காரணமான அஞ்ஞான இருள் ஒழியும்படி அருட்பெருஞ் சோதிப்பிரகாசமாய் எனக்குத் தோன்றும்படி செய்தால் ஆகாதோ ? (11)

ஆசைச் சுழற்கடலில்' ஆழாமல், ஐயா !நின்
நேசப் புணைத்தா ணிறுத்தினு லாகாதோ ?

(போ -ரை) (பிரபஞ்ச) ஆசையாகிய சுழலினை வாய்ந்த பிறவிச் சமுத்திரத்தில் அழுந்தாமல், ஐயனே ! விரும்புதற்குரிய உன் திருவடியாகிய மரக்கலத்தினை நானடைய நிலைநிறுத்தினுல் ஆகாதோ ? (12)

பாசநிக ளங்களெல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
யீச !எனை வாவென் றிரங்கினு லாகாதோ ?

(போ - ரை) பாச சம்பந்தமான விலங்குகளெல்லாம் முற்றும் பஞ்சாய்ப்பறக்க ஈசனே ! என்னை வாவென் றழைத்து இரங்கியருளினுல் ஆகாதோ ? (13)

ஓயாவுள் ளன்பாய், உருகி வாய், விட்டரற்றிச்,
சேயாகி, எந்தை !நின்னைச் சேரவைத்தா லாகாதோ ?

(போ - ரை) இடையறாத உள்ளன்பினை யுடையவனாய், மனங் கரைந்து, வாய்திறந்தலறிக், குழந்தைபோன்று, எந்தையே! நான் உன்னை அடையும்படி செய்தால் ஆகாதோ? (14)

ஆதியாம் வாழ்வாய், அகண்டிதமாய் நின்றபரஞ்
சோதி !நீ யென்னைத் தொழும்பனென்றா லாகாதோ ?

(போ - ரை) (எல்லாவற்றிற்கும்) முதல் வாழ்வாகி, வேறுபிரிக் கப்படாததாகி (அத்துவிதமாகி) நின்ற மேற்பட்ட (அருட்) சோதியே! நீ என்னைத் தொண்டனென்றா லாகாதோ? (15)

'விண்ணாரக் கண்ட விழிபோற்' பரஞ்சோதி !
கண்ணார நின்னிறைவைக் காணவைத்தா லாகாதோ ?

(போ - ரை) 'ஆகாயத்துடன் (அளவளாவி) நிறையப் பார்த்த கண்போல' (அருட்) பரஞ்சோதியே! என் (அருட்) கண்ணார உனது பரிபூரண வியாபகத்தினை நான் காணவைத்தால் ஆகாதோ? (16)

சேராமற் சேர்ந்துநின்று சின்மயனே ! நின்மயத்தைப்
பாராமற் பாரெனநீ பக்ஷம்வைத்தா லாகாதோ ?

(போ - ரை) (ஒன்றாகக்) கூடாமல் (இரண்டறக்) கூடிநின்று உன்றிரு வுருவத்தினைப் போதத்தால் நோக்காமல் அருண்முன்னிலையாக நோக்கென்று, ஞானசொரூபனே! நீஎன்மீது பட்சம் வைத்தால் ஆகாதோ?

'கண்ணாடி போல'வெல்லாங் காட்டுந் திருவருளை
உண்ணாடி யையா ! உருகவைத்தா லாகாதோ ?

(போ - ரை) (எதிரிட்ட பகிர்முகப் பிரபஞ்சமாகிய) 'எல்லாப் பொருள்களையும் கண்ணாடி (தன்னிடத்துக்) காட்டுவதுபோல' (அந்தர் முகப் பிரபஞ்சமாகிய எல்லாப் பொருளையும்) தன்னிடத்துக் காட்டுகிற திருவருளை, ஐயனே! நான் என் மனத்தானெக்கி யுருகச்செய்தால் ஆகாதோ? (18)

மூலவிருள் கால்வாங்க, மூதறிவு தோன்ற,அருட்
கோலம்வெளி யாக,எந்தை! கூடுவித்தா லாகாதோ ?

(போ - ரை) பிறவிக்கு மூலமாகிய ஆணவவிருள் வேறற்றுப் போக வும், பேரறி வுண்டாகவும், திருவருட்கோலம் வெளிப்படவும், எந்தையே! நீ சேர்ப்பித்தா லாகாதோ? (19)

சாற்றரிய வின்பவெள்ளந் தாக்குமதி னிழுலாக்கி
ஊற்றமுறு மென்னவதி லுண்மைசொன்னா லாகாதோ ?

(பொ - ரை) சொல்லற்கரிய சுகப்பெருக்கு விளைந்தபோது (அவ் வெள்ளத்தின்கண்ணே) நீ தோன்றில் (அது தரிசிக்க) அக்காலத்தில் எனக்கு அசைவற்ற நிலை யுண்டாம் என்ன அதினுண்மை வெளியிட லாகாதோ? (20)

கையுங் குவித்(து),இரண்டு கண்ணருவி பெய்ய,அரு
ளைய! நின்றாட் கீழே யடிமைநின்று லாகாதோ?

(பொ - ரை) இருகரங்களையும் கூப்பி, இரண்டு கண்களும் அருவிகள்போல நீரைப் பொழிய, அருள் செய்கின்ற ஐயனே! உன் திருவடியின் கீழே அடியேனின்று லாகாதோ? (21)

---

## இல்லையோ வென்கண்ணி

ஏதுந் தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாத! நீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ?

(பொ - ரை) யாதொரு பொருளுந் தோன்றவொட்டாமல் (கேவலத்தில்) என்னை மறைத்த வலிய (ஆணவ) இருளினை, நாதனே! நீ நீக்கியருள (உன்னிடத்தில்) ஒப்பற்ற ஞானதீபம் இல்லையோ? (1)

பணியற்று நின்று, பதைப்பற, என் கண்ணுண்
மணியொத்த சோதி! இன்ப வாரியெனக் கில்லையோ?

(பொ - ரை) (பிரபஞ்சமூகமான) தொழில்க ளியாவு மொழிந்து நின்று மனச்சஞ்சல மொழிய, என் கண்மணிபோன்ற (அருட்) சோதியே இன்பப் பெருக்கு எனக்குக் கிடைப்ப தில்லையோ? (2)

எம்மா லறிவதற, எம்பெருமான்! யாதுமின்றிச்
சும்மா விருக்கவொரு சூத்திரந்தா னில்லையோ?

(பொ - ரை) எம்பெருமானே! எங்களால் (போத முன்னிட்டு) அறியப்படுத லொழிந்து, யாதொரு முயற்சி யில்லாமல் சும்மா யிருக்கும் படி ஒரு உபாயந்தா னில்லையோ? (3)

நாய்க்குங் கடையானே னாதா! நின் னின்பமயம்
வாய்க்கும் படியினியோர் மந்திரந்தா னில்லையோ?

(பொ - ரை) நாதனே! அடியேன் நாயினும் இழிந்தவனாயினேன்; உனது சுகசொரூபம் எனக்குக் கிடைக்கும்படி ஒரு மந்திரமு மில்லையோ?

ஊனாக நிற்கு முணர்வைமறந் தையா! நீ
தானாக நிற்க,ஒரு தந்திரந்தா னில்லையோ?

(போ - ரை) ஐயனே! உடம்பினையே நானாக நினைக்கின்ற ஞானத்தினை மறந்து, நான் நீயேயாகி (அத்துவிதமாய்) நிற்பதற்கு, ஒரு உபாயமாயினு மில்லையோ? (5)

அல்லும் பகலு மகண்டவடி வே! உனைநான்
புல்லும் படியெனக்கோர் போதனைதா னில்லையோ?

(போ - ரை) அகண்டப்பொருளே! இரவினும் பகலினும் நீக்கமின்றி உன்னை நான் (அத்துவிதமாகக்) கலந்திருக்கும்படி எனக்கோர் போதிப்பு மில்லையோ? (6)

---

## வேண்டாவோ வென்கண்ணி

கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே கைகுவித்துப்,
பண்டுமின்று நின்றவென்னைப் பார்த்திரங்க வேண்டாவோ?

(போ - ரை) கண்ட வுருவங்கள் யாவும் உன் தரிசனமேயென்று கைகூப்பிப், (பசு ஞானத்தால் நினது பரிணாமமாகக் கொண்டு) முன்னும், (பதிஞானத்தால் நினது ஔபச்சிலேஷிக வியாபகங் கண்டு) இன்றும் நின்ற என்னைப் பார்த்து இரங்கியருள வேண்டாவோ? (1)

வாதனையோ டாடு மனப்பாம்பு மாயவொரு
போதனைதந் தையா! புலப்படுத்த வேண்டாவோ?

(போ - ரை) ஐயனே! (விஷய) வாசனையுடனே கூடி யலைகின்ற மனமென்னும் சர்ப்பம் மடிய எனக்கு உன் திருமந்திரத்தினைப் போதித்து அதனை யெனக்கு அறிவுறுத்த வேண்டாவோ? (2)

தன்னை யறியத் தனியறிவாய் நின்றருளு
நின்னையறிந்(து), என்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ?

(போ - ரை) (ஆன்மாவாகிய) தன்னை யறியும்பொருட்டு ஒப்பற்ற திருவருளாய் (அத்துவிதமாக) இருந்து அருள் செய்கின்ற உன்னை யறிந்து, எனது (தற்போத) அறிவினை யொழித்து நிற்க வேண்டாவோ?

அள்ளக் குறையா வகண்டிதா னந்தமென்னும்
வெள்ளமெனக் கையா! வெளிப்படுத்த வேண்டாவோ?

(போ - ரை) ஐயனே! (அடியார்கள் முகக்க) முகக்கக் குறையாத அகண்டானந்த மென்கிற வெள்ளத்தினை அடியேனுக்கு வெளிப்படுத்த வேண்டாவோ? (4)

அண்டனே! அண்ட ரமுதே! என் னாருயிரே!
தொண்டனேற் கின்பந் தொகுத்திரங்க வேண்டாவோ?

(பொ - ரை) தேவனே! தேவாமிர்தமே! என்னரிய உயிரே! உன் தொழும்பனாகிய எனக்கு இன்பங் கொடுத்து இரங்க வேண்டாவோ? (5)

பாராதே! நின்று பதையாதே! சும்மாதான்
வாரா(ய்)! எனவும் வழிகாட்ட வேண்டாவோ?

(பொ - ரை) (தற்போத) முன்னிட்டுப் பாராதே! (இந்திரியங்களின் வழி) நின்று துடியாதே! மவுனநிலை கூடிவருவாய்! என்று நீ எனக்கு முத்திநெறி காட்ட வேண்டாவோ? (6)

---

## நல்லறிவே யென்கண்ணி

எண்ணிறைந்த மேன்மைபடைத்(து), எவ்வுயிர்க்குமவ்வுயிராக்
கண்ணிறைந்த சோதியைநாங் காணவா! நல்லறிவே!

(பொ - ரை) அடியார்களுடைய மன வெண்ணங்களைப் பூர்த்தியாதற்குரிய நிறைவைப் பெற்ற மேன்மையைப் பொருந்தி, எல்லா ஆன்ம கோடிகட்கும் அந்தராத்மாவாக அவற்றிற் றங்கி நிற்கிற (அருட்) சோதியினை நான் தரிசிக்க, நற்புத்தியே! வருவாயாக! (1)

சித்தான நாமென் சடத்தைநா மென்னவென்றுஞ்
சத்தான வுண்மைதனைச் சாரவா! நல்லறிவே!

(பொ - ரை) சித்து ரூபமாயுள்ள நாம் உடலினை நாமென்று சொல்லுவது என்னவென்று (விசாரித்து நீக்கி), எக்காலத்தும் சத்தாயுள்ள உண்மைப்பொருளை யடைய நல்லறிவே! வருவாயாக! (2)

அங்குமிங்கு மெங்குநிறை யற்புதனார் பொற்பறிந்து,
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா! நல்லறிவே!

(பொ - ரை) விண்ணிடத்தும், மண்ணிடத்தும், மற்றெவ்விடத்தும் வியாபகமாயுள்ள அற்புதனாகிய முதல்வன் மேன்மை யறிந்து, (அவன் சிவானந்தத்தேனை யுண்ணத்) தாமரை மலரிலுள்ள (தேனைக் கிரகிக்கும்) வண்டுபோலப் பிரயோசனமடைய நற்புத்தியே! வருவாயாக! (3)

'கான்றசோ றென்ன' விந்தக் காசினிவாழ் வத்தனையுந்
தோன்ற வருள்வெளியிற் றோன்றவா! நல்லறிவே!

(பொ - ரை) 'கக்கின சோற்றினைப்போல' இப் பிரபஞ்ச வாழ்க்கை முழுவதும் அருவருப்பாகத் தோன்றும் வகை திருவருளாகிய (சிதாகாய) வெளியில் தோன்றுமாறு நற்புத்தியே! வருவாயாக! (4)

# பலவகைக் கண்ணி

என்னரசே! கேட்டிலையோ? என்செயலோ ஏதுமிலை;
தன்னரசு நாடாகித் தத்துவங்கூத் தாடியதே.

(பொ - ரை) என் தலைவனே! எனக்கென்னச் செயலொன்று மில்லை; தத்துவமனைத்தும் (என்னுடலினைத்) தாம் அரசு செய்வதற்கு இடமாகக்கொண்டு நடித்துக்கொண்டிருப்பதனை நீ கேட்டறிந்தா யில்லையோ? (1)

பண்டொருகா லின்பாற் பழக்கமுண்டோ? எந்தை! நினைக்
கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே.

(பொ - ரை) எந்தையே! தேவரீரைத் தரிசித்து வணங்க என் மனமும் (மற்ற இந்திரியங்களும்) எண்ணின. (அதனால்) பூர்வ சென்மத்தில் ஒருகால் உன்னிடத்தில் அம் மனமும் (மற்ற இந்திரியங்களும்) பழகினதுண்டோ? (இலதேல் இங்ஙன நிகழாது.) (2)

கண்டனவே காணுமன்றிக் காணவோ காண; என்
கொண்டறிவேன்? எந்தை! நினைக் கூடுங் குறிப்பினையே.

(பொ - ரை) எந்தையே! (பூர்வத்தில் மனத்தே) பார்த்தனவே தோன்றுவ தன்றிப் பாராதன தோன்ற; (அங்ஙனமாக இப்போது தோன்றிய) உன்னை யடையு நிதானத்தை இதுவரையி லடையாத நான் இப்போது யாது கொண்டறிவேன்? (3)

கல்லா லடியில்வளர் கற்பகமே! என்னளவோ
பொல்லா வினைக்கும் பொருத்தந்தான்? சொல்லாயோ!

(பொ - ரை) (திருவருளைப் பொழிவதில்) கல்லால விருட்சத்தின் கீழே எழுந்தருளியிருக்கின்ற கற்பகத்தரு போன்றவனே! பொல்லாத வினைகளுக்கு என்னிடந்தான் பொருத்தமோ? வேறிட மில்லையோ? திருவாய் மலர்ந்தருள்வீராக! (4)

தப்பிதமொன் றின்றி, அது தானாக நிற்கவுண்மை
செப்பியது மல்லால், என் சென்னியது தொட்டனையே.

(பொ - ரை) தவறு ஏதேனு மில்லாமல் சிவமாந் தன்மையாகி நிற்கும்படி எனக்கு ஒரு (சித்தாந்த மகா வாக்கிய) உண்மை யுபதேசித்தது மாத்திரமில்லாமல், குருவடிவா யெழுந்தருளி வந்து அடியேன் சென்னியினைத் தொட்டு (அஸ்த மஸ்தக தீட்சையும்) செய்தனையே. (5)

'மாசான நெஞ்சனிவன் வஞ்சன்' என்றோ வாய்திறந்து
பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே?

(போ - ரை) எம்பெருமானே! 'குற்றமுறு மனத்தை யுடையவனுகிய இவன் வஞ்சகன்' என்றுதானோ நீ பேசாமையாகிய மவுன நிலையினை யடைந்தது? (6)

கற்பதெல்லாங் கற்றேறு(ம்); முக்கண்ணுடையாய்! நின்பணியாய்
நிற்பதுகற் றன்றோ நிருவிகற்ப மாவதுவே?

(போ - ரை) மூன்று கண்களை யுடையவனே! கற்கவேண்டும் (கருவி நூல்களாகிய) அவற்றையெல்லாம் கற்றுள்ளேன்; (ஆயினும்) உன் பணிசெய்து கிடைப்பதற் கேற்ற (மெய்கண்ட பதி நூல்களைக்) கற்றலன்றோ நிருவிகற்ப மடைவது? (7)

'முன்னளவில் கன்ம முயன்றா னிவ' னென்றோ
என்னளவி லெந்தாய்! இரங்கா திருந்ததுவே?

(போ - ரை) எந்தையே! மனம் (உள்ளன்புடனே நினைச் சிந்தியாது) வேறுபட்டு உன்னை (இரண்டறக்) கலக்க எண்ணுகிற வஞ்சகனுகிய எனக்கு இன்பங் கிடைக்கும் வழி யெவ்விதம்? (திருவாய் மலர்ந் தருள்வீராக!) (8)

நெஞ்சகம்வே றாகி, நினைக்கூட வெண்ணுகின்ற
வஞ்சகனுக் கின்பமெந்தாய்! வாய்க்குமா றெவ்வாறே?

(போ - ரை) மனமானது (அந்தர்முகத்தினை நாடாமல்) வேறுபட்டுத், தேவரீரை (இரண்டறக்) கலக்க எண்ணுகிற வஞ்சகனுகிய எனக்கு எந்தையே! (சிவானந்த) இன்பம் கிடைக்கும் வகை எப்படி?

'பள்ளங்க டோறும் பரந்தபுனல் போ' லுலகி
லுள்ளம் பரந்தா லுடையாய்! என் செய்வேனே?

(போ - ரை) '(என்னை யடிமையாக) உடையவனே! பள்ளத் தாக்குகளிலெல்லாம் பரவிய நீர்போல' உலக விவகாரத்தின்கண் என் மனம் பரவினுல் உன் திருவரு ளுதவியின்றி நான் யாது செய்வேன்?

முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிருள்; ஆகெடுவேன்;
என்னினைக்க? என்மறக்க? எந்தை பெருமானே!

(போ - ரை) எந்தை பெருமானே! (ஒரு நல்ல விடயத்தினை) முன்னே நினைத்தால் (அதனை) உடனே மறைக்கிறது அஞ்ஞான ஆணவம், (ஆதலின்) நான் என்ன காரியத்தை நினைப்பேன்? என்ன காரியத்தை மறப்பேன்? (11)

வல்லாளா! மோனு! நின் வான்கருணை யென்னிடத்தே
யில்லாதே போனு னெவ்வண்ண முய்வேனே?

(பொ - ரை) (சர்வ) வல்லமை யுள்ளவனே! மவுனநிலையினை யுடையவனே! உனது மேலாகிய கருணை என்னிடத் தில்லாதொழிந்தால் நான் எவ்வாறு பிழைப்பேன்? (12)

வாக்கு மனமு மவுனமுற வெந்தைநின்னை
நோக்கு மவுனமிந்த நூலறிவி லுண்டாமோ?

(பொ - ரை) எந்தையே! வாக்கும் மனமும் மவுனநிலையினை யடையாமல் உன்னையே நோக்கி நிற்கின்ற மவுன நிலையானது இந்தப் (பசு) சாத்திர ஞானத்தினு லுண்டாமோ? (13)

ஒன்றாய்ப், பலவாய், உலகமெங்குந் தானேயாய்,
நின்றாயை யா!என்னைநீ நீங்கற் கெளிதாமோ?

(பொ - ரை) ஐயனே! ஏகனாகியும், (உயிர்கடோறும் விரவி நிற்றலின்) அனேகனாகியும், உலக முழுவதிலும் வியாபகமானவனே! (உன் வியாபகத்திலுள்பட்ட) என்னை நீ நீங்கற் கெளிதாமோ? (14)

ஆவித் துணையே! அருமருந்தே! என்றனைநீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ?

(பொ - ரை) உயிர்த்துணைவனே! அரிய தேவாமிர்தம் போன்றவனே! என்னை நீ வலிய அழைத்து (நினது சிவானந்த) இன்பத்தினைத் தந்தால் உனக்குக் குறையுண்டோமோ? (15)

எத்தனையோ நின்விளையாட்(டு)? எந்தாய்!கேள்! இவ்வளவென்
றத்தனையு மென்னா லறியுந் தரமாமோ?

(பொ - ரை) எந்தையே! கேட்பாயாக! உன் திருவிளையாடல்கள் எவ்வளவோ வுள்ளன? அவ்வளவும் இத்தனையென்று என்னால் அறியப் படும் தரத்தனவோ? (16)

தேடுவார் தேடுஞ் சிவனேயோ? நின்றிருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ?

(பொ - ரை) தேடுதற்குரிய (சித்தாந்தச் செல்வர்களால்) தேடப் படுகின்ற சிவனோ நீர்? உன் திருவடியைக் கூடுவதற்கு ,(அத்தகைய செல்வ மில்லாத) நான் பட்ட துன்பம் சொல்லுதற் கெளிதாகுமோ? ()

பற்றினதைப் பற்று(ம்);எந்தாய்! பற்றுவிட்டாற் கேவலத்தி
லுற்றுவிடு(ம்); நெஞ்சமுனை யொன்றிநிற்ப தெப்படியோ?

(பொ - ரை) எந்தையே! என் மனமானது (ஒரு பொருளினைப்) பிடித்ததையே பிடிக்கும்; அப் பிடிப்பை விட்டால் கேவலாவத்தைப் பொருந்தும்; இவ் வவத்தை நீங்கி அம்மனமானது உன்னைப் பொருந்திச் (சுத்தாவத்தையில்) நிற்பது எவ்வாறோ? (18)

ஒப்பிலா வொன்றே!நின் னுண்மையொன் றுங் காட்டாமற்,
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த தென்னேயோ ?

(போ - ரை) ஒப்பற்ற வொருபொருளே ! நினது உண்மைச் சொரூபத்தினைச் சிறிதுந் தரிசிக்கச்செய்யாமல், காரிய ரூபமான பிரபஞ்சத்தினை மெய்போலப் புதுக்கிவைத்தது என்னையோ ? (19)

'காலால் வழிநடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே' யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ ?

(போ - ரை) '(கண்ணின்றிக்) காலைக்கொண்டு வழிநடவும் காலத்தில் கண்ணுண்டானதுபோல'த் (திருவருளின்றிப் போதத்தால் உன்னை நாடிக் கொண்டிருக்கிற) என்னறிவினிடத்தே எழுந்தருளித், திருவருளாய் நிற்க மாட்டாயோ ? (20)

தன்னரசு நாடாஞ் சடசால பூமிதனிலே,
என்னரசே ! என்னை யிறையாக நாட்டினையோ ?

(போ - ரை) என்னிறைவனே ! பாசக்கூட்டங்களாகிய உலகில், சுய இராச்சியமாகக் கொண்டு வாழ என்னை யிறைவனாக்கி வைத்தனையோ?

திங்களமு தாநின் றிருவாக்கை விட்(டு),அரசே !
பொங்கு விடமனைய பொய்ந்நூல் புலம்புவனோ ?

(போ - ரை) இறைவனே ! சந்திரனிடத்திலுள்ள அமுதம்போன்ற (வேதாகமங்களாகிய) உனது திருவாக்கை விட்டுப், பெருவிடத்தினை யொத்த (பசு வாக்குகளாகிய) பொய்ச் சாத்திரங்களைக் கற்றுப் புலம்புவேனோ ? (22)

உன்னவுன்ன, என்னையெடுத் துள்விழுங்கு நின்னிறைவை,
இன்னமின்னங் காணும லெந்தாய் ! சுழல்வேனோ ?

(போ - ரை) எந்தையே ! (திருவருளை முன்னிட்டு) அடிக்கடி (நான்) தியானிக்க, என்னை (அத் திருவருளா) லெடுத்து உன் (வியாபகத்து)ள்ளே பொருந்த விழுங்குகின்ற உன் பூரண நிலையினை, இன்னமுங் காணுமல் சுழல்வேனோ ? (23)

ஆரா வமுதனைய வானந்த வாரியென்பாற்
றூராம லையா!நீ தள்ளிவிட வந்ததென்னோ ?

(போ - ரை) ஐயனே ! தெவிட்டாத அமுதம்போன்ற சிவானந்த சாகரத்தினை எனக்கு அளிக்காமல் நீ என்னைத் (திருவருளுக்கு அன்னியமாகத்) தள்ளிவிடும்படி நேரிட்டதற்குக் காரணம் யாதோ ? (24)

# நின்ற நிலை

நின்றநிலை யேநிலையா வைத்(து); ஆனந்த
  நிலைதானே நிருவிகற்ப நிலையு மாகி,
என்றுமழி யாதவின்ப வெள்ளந் தேக்கி
  யிருக்கவெனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்கு மந்தோ!

(பொ-ரை) (திருவருளினை முன்னிட்டு) நான் நின்ற நிலையையே சன்மார்க்க நிலையாக வைத்து, (அந்நிலையால் வாய்ந்த) சிவானந்த நிலை தானே நிருவிகற்ப சமாதியுமாகி, எக்காலத்து மழியாத சிற்சுக வெள்ளத் தினைத் தேக்கெறிந் திருக்கும்படி என்னை (அவ் வெள்ளத்தில்) அடிக் கடிப் பற்றி யிழுக்கின்றது. (1)

இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகம மாதி
  யிதயமுங்கை காட்டெனவே யிதயத் துள்ளே
ஒருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்கா லுந்தா
  னொழியாத வின்பவெள்ள முலவா நிற்கும்.

(பொ-ரை) இருக்குமுதலிய வேதங்களின் முடிவும், சிவாகம முதலானவைகளுடைய அந்தரங்கக் கருத்தும் சின்முத்திரை யென்றே தங்கள் மனத்தின்கண்ணே ஒருமுறை தெரிந்த (பெரியோர்களுக்கு) எப் போதும் நீங்காத சிவானந்தப் பெருக்கு விளையாநிற்கும். (2)

கற்றதும்,கேட் டதுந்தானே யேதுக் காகக்,
  கடபடமென் றுருட்டுதற்கோ? கல்லாலெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு,
  குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ?

(பொ-ரை) (ஞானசாத்திரங்களைக்) கற்ற கல்வியும், (பெரியோ ரிடத்துக்) கேட்ட கேள்வியும் எதன்பொருட்டு? (ஏகான்மவாதியர் போன்று எப்போதும்) கடம் என்றும் படம் என்றும் தருக்கம் பேசி யுழலுதற்கோ? கல்லால விருட்சத்தின்கீழ் எழுந்தருளிய எமது சிவபெரு மான் நமது பிழைக ளியாவும் ஒழிய (சின்முத்திரை ரூபமாகக்) கைகாட் டின கருத்தைத் தேர்ந்து குணங் குறிகளை நீங்கிச், சிவயோக நிஷ்டையை யடைதற்கல்லவோ? (3)

# பாடுகின்ற பனுவல்

பாடுகின்ற பனுவலோர்க, டேடுகின்ற செல்வமே!
நாடுகின்ற ஞானமன்றி, லாடுகின்ற வழகனே!

(போ - ரை) (வாய் நிரம்பப்) பாடுகின்ற ஞான நூலுணர்ச்சி யுடையோர்கள் தேடுகின்ற (அருட்) செல்வமே! எத்தகைய ஞானியரும், தேடி யடைகின்ற சிற்றம்பலத்தில் (ஆனந்த) நிர்த்தனம் செய்கின்ற அழகனே! (1)

அத்தனென்ற நின்னையே, பத்திசெய்து பனுவலால்
பித்தனின்று பேசவே, வைத்ததென்ன வாரமே?

(போ - ரை) (ஆன்மகோடிகட் கெல்லாம்) பிதாவாகிய நின்றனையே சிவபத்தி செய்து பித்தனாகிய நான் நூல்களாற் புகழ்ந்து பேசும்படி என்னை வைத்ததற்குக் காரணம் என்ன? அன்பின் மிகுதியோ அறிகிலேன். (2)

சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்;
வந்துவந்து வின்பமே, தந்திரங்கு தானுவே!

(போ - ரை) மனத்திலே யன்பு வளர, (அவ்வழியாக) நைந்து உன்னை விரும்பினேன்; (ஆகலின்) சிவனே! பலமுறை வந்து இன்பமருளவேண்டும். (3)

அண்டரண்டம் யாவுநீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு சொரிகணீர் கண்டநெஞ்சு கரையுமே.

(போ - ரை) அண்டங்களி லுள்ளவர்களும், அவர்கட்குரிய இருப்பிடமான அண்டங்களும் ஆகிய எல்லாவற்றினையும் நீ (வியாப்பியமாகக்) கொண்டு (அவற்றுடன் இரண்டறக் கலந்து) நின்ற கோலமேயாக, அடியார்கள் தரிசித்துச் சிவானந்த மிகுதியினால் பொழியாநின்ற கண்ணீரைக் கண்ட என் மனமுருகாநிற்கும். (4)

அன்னைபோல அருண்மிகுத்து, மன்னுஞான வரதனே!
என்னையே யெனக்களித்த, நின்னையானு நினைவனே.

(போ - ரை) தாயினைப்போன்று திருவருள் மிகுந்த நிலையுற்றிருக்கின்ற ஞானவள்ளலே! (ஆன்மாவாகிய) என்னையே (அறியும்படி) எனக்குத் திருவருள் புரிந்த வுன்னை நானும் தியானிக்கக்கடவேன்! (5)

---

# ஆனந்தக் களிப்பு

சங்கர சங்கர சம்பு - சிவ, சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதியனாதியுமாகி-எனக், கானந்தமாயறி வாய்நின்றிலங்குஞ்,
சோதிமௌனியாய்த்தோன்றி-அவன், சொல்லாதவார்த்
தையைச் சொன்னாண்டி! தோழி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! சருவத்திற்கும் முதலாகித், தனக்கு மேற்பட்ட முதலில்லாததாகி, அடியேனுக்குச் சிவானந்தமாகி எழுந்தருளியிருந்து பிரகாசிக்கின்ற (அருட்பெருஞ்) சோதியானவர், மவுன குருவாக முன்வந்து அம் முதல்வன் (வைகரி வாக்கினால்) சொல்லக்கூடாத (சின் முத்திரையாகிய திருக்குறிப்பு) வார்த்தையினை யுபதேசித்தனன். சங்கர! சங்கர! சம்பு! (1)

சொன்னசொல்லேதென்று சொல்வேன்? என்னைச், சூதாய்த்
தனிக்கவே சும்மாவிருத்தி, முன்னிலை யேதுமில்லாத-சுக,
முற்றச்செய் தேயெனைப் பற்றிக்கொண் டாண்டி!—
சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) (அங்ஙனம் குறிப்பாற்) சொன்ன சொல்லின் (அனுபவத்தினை) யாதென்ன வியம்புவேன்? அடியேனைத் தந்திரமாய்த் தனிமையாகச் சும்மாயிருக்கச் செய்து (இந்திரியங்களின் துவாரமாக) முன்னிலைச் சுட்டொன்று மில்லாமலே, சிவானந்த மேலிடச்செய்து, அடியேனைத் (திருவருளினால்) கிரகித்துக்கொண்டனன். சங்கர:— (2)

பற்றியபற்றறவுள்ளே-தன்னைப், பற்றச்சொன்னான்பற்றிப்பார்
த்தவிடத்தே, பெற்றதையேதென்று சொல்லுவேன்?-சற்றும்,
பேசாதகாரியம் பேசினன்றோழி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! (பிரபஞ்சமுகமாகப்) பற்றிய பற்றுக்களியாவு நீங்க, இதயத்திலே முதல்வனையே (ஆதரவாகப்) பற்றச்சொன்னான்; (அங்ஙனம்) பற்றித் (திருவருளால்) நோக்கியவிடத்து நானடைந்த (சுக) இலாபத்தினை (சுவானுபூதியிற் றெரிந்து கொள்வதன்றி) யாதென்று வாயினாற் சொல்லமாட்டுவேன்? சிறிதும் (பிறருக்கு எடுத்துச்) சொல்லத்தகாத காரியத்தினைப் பேசினன். சங்கர:— (3)

பேசாவிடும்பைகள்பேசிச்-சுத்தப், பேயங்கமாகிப்பிதற்றித்
திரிந்தேன், ஆசாபிசாசைத்துரத்தி-ஐய, னடியிணைக்கீழே
யடக்கிக்கொண்டாண்டி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) (முதல்வன்பால் கொண்ட மோகத்தினால் இன்னது பேசலாம், இன்னது பேசக்கூடாதெனத் தெரியாது) பேசத்தகாத பழிச்சொற்களைப் பேசி, (உணவை வெறுத்துவிட்டதனால்) சுத்தப் பேயுடம்பாகி யுளறித் திரிந்தேன்; (இக் கோலத்தினைக் கண்ட நாயகனாகிய இறைவன் எனது பிரபஞ்ச) ஆசையாகிய பேயை யோட்டித் தன் திருவடியின் கீழே யணைத்துக்கொண்டானேடி! சங்கர:— (4)

அடக்கிப்புலனைப்பிரித்தே-அவ, னாகியமேனியிலன்பைவளர்
த்தேன், மடக்கிக்கொண்டானென்னைத்தன்னுட்-சற்றும், வாய்
பேசா வண்ணமரபுஞ்செய் தாண்டி!—சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) (அங்ஙன மணைந்தபின்னர்) குழைந்து (வேறு விடயங்களிற் செல்லவொட்டாது) இந்திரியங்களை வயமாக்கி, அத் தலைவனுடைய திருமேனியின்கண்ணே அன்பினைப் பெருக்கினேன்; (அங்ஙனம் செய்யவே அம் முதல்வன்) அடியேனைத் தன் வசமாக்கிக்கொண்டு சிறிதும் (அவனையன்றி வேறு) வாய் பேசாத வகையாகிய சாம்பிரதாயத்தினையும் செய்தானேடி! சங்கர:— (5)

*மரபைக்கெடுத்தனன் கெட்டேன்-இத்தை, வாய்விட்டுச்சொல்லிடின் வாழ்வெனக்கில்லை, கரவுபுருஷனுமல்லன்-என்னைக், காக்குந்தலைமைக்கடவுள் காண்மின்னே!-சங்கர! சங்கர! சம்பு!*

(பொ - ரை) தோழியே! என்னுடன் வெகுகாலமாக வாழ்ந்த தத்துவ மரபினை யொழித்தனன்; ஆ கெடுவேன்! இவ் விஷயத்தினை வாய் திறந்து சொல்லின் எனக்குச் சுக வாழ்வு இல்லாமற் போய்விடும்; (அங்ஙனம் செய்தவன்) சோர நாயகனு மல்லன்; என்னை (அடிமையாகக் கொண்டு) காக்கின்ற தலைவனாகிய தெய்வமேயாவன். சங்கர:— (6)

*'கடலின்மடைவிண்டதென்ன'-இரு, கண்களு மானந்தக்கண்ணீர்சொரிய, உடலும்புளகிதமாக-என, துள்ளமுருக வுபாயஞ்செய்தாண்டி!—சங்கர! சங்கர! சம்பு!*

(பொ - ரை) 'கடலின் மடை திறந்தாற்போல' இரண்டு கண்களும் இன்பக் கண்ணீர் பொழியவும், உடலும் புளக மரும்பவும், என் மன முருகவும் தந்திரம் பண்ணினானேடி! சங்கர:— (7)

*உள்ளதுமில்லதுமாகி-முன், னுணர்வது வாயுன்னுளங்கண்டதெல்லாம், தள்ளெனச்சொல்லியென்னையன்-என்னைத், தானாக்கிக்கொண்ட சமர்த்தைப்பார்தோழி!—சங்கர! சங்கர! சம்பு!*

(பொ - ரை) சகியே! என்னிறைவன், (காரணத்தால்) உள்பொருளும் (காரியத்தால்) இல்பொருளுமாகி, சுட்டியறியத்தக்க பொருளாகி, உன் மனத்தினால் பார்க்கப்பட்ட பொருளாகியுள்ள எல்லாவற்றையும் நீக்கென மறந்து விடும்படி சொல்லி, அடியேனைச் சிவத்துவ விளக்கம் தந்து ஆண்டுகொண்ட சாமர்த்தியத்தினைப் பார்ப்பாயாக! சங்கர:— (8)

*பாராதிபூதநீயல்லை-உன்னிப் பாரிந்திரியங்கரண நீயல்லை, யாராயுணர்வுநீயென்றான்-ஐய, னன்பாயுரைத்த சொல்லானந்தந்தோழி!—சங்கர! சங்கர! சம்பு!*

(பொ - ரை) சகியே! பிருதுவி முதலிய ஐம்பூதங்களும் நீ ஆகாய்; ஆலோசித்துப்பார்! பஞ்சேந்திரியங்களும் நாற்கரணங்களும் நீ ஆகாய்; (இவை யெல்லாவற்றையும்) ஆராய்ந்தறிகின்ற சித்து ரூபனே நீ யென்று சொல்லினன். இறைவன் அன்புடனே சொன்னசொல் இன்பமா யிருக்கின்றது. சங்கர:— (9)

அன்பருக்கன்பான மெய்யன்-ஐய, ஞானந்தமோனனருட்குரு
நாதன், தன்பாதஞ்சென்னியில் வைத்தான்-என்னைத்
தானறிந்தேன் மனந்தானிறந்தேனே—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) (எனது) தலைவன் தன்னிடத் தன்பு உள்ளாரிடத்து அன்பு செய்கின்ற வுண்மையன்; இன்பத்தினுக்குக் காரணமா யிருக்கின்ற மவுன நிலையினன்; கிருபையுள்ள குருதேசிகன்; தனது திருவடியினை என் சிரமீது சூட்டினான்; (அங்ஙனம் சூட்டவே) என்னை நானறிந்து கொண்டேன்; (அங்ஙன மறியவே) மனங் குவியப்பெற்றனன். சங்கர:— (10)

இறப்பும் பிறப்பும் பொருந்த-எனக், கெவ்வணம் வந்ததென்
றெண்ணியான்பார்க்கில், மறப்புநினைப்புமாய்நின்ற-வஞ்ச,
மாயாமனத்தால் வளர்ந்ததுதோழி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! சாதலும் பிறத்தலும் என்னையடைய எனக்குண்டான வித மென்னவென்று நான் ஆலோசித்துப் பார்க்குமிடத்தில், கேவல சகள ரூபமாய் நின்ற வஞ்சனையுள்ள மாயாகாரியமான மனத்தினால் விருத்தி யடைந்தது. சங்கர:— (11)

மனதேகல்லாலெனக்கன்றோ-தெய்வ, மௌனகுருவாகிவந்து
கைகாட்டி, எனதாம் பணியறமாற்றி-அவ, னின்னருள்வெள்
ளத் திருத்திவைத்தாண்டி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) மனமானதே அடியேனுக்குக் கல்லினாற் சமைக்கப் பட் டிருப்பதல்லவோ? (அங்ஙனமாயிருந்தும்) தெய்வத்தன்மை யமைந்த மவுன தேசிகனாகி எழுந்தருளிக் கைக்குறி காட்டி எனது (சுதந்திரச்) செயலை முற்று நீக்க, அம் முதல்வனது இனிய அருட்கடலில் அமிழ்த்தி வைத்தானேடி! சங்கர!:— (12)

அருளாலெவையும் பாரென்றான் - அத்தை, யறியாதே சுட்டியென்
னறிவாலே பார்த்தேன், இருளான பொருள்கண்ட தல்லால்-கண்ட,
வென்னையுங் கண்டில னென்னேடி தோழி:—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! திருவருளினை முன்னிட்டு எப்பொருள்களையும் பார்ப்பாயாக என்று சொன்னான்; அதனுண்மை யுணராமலே என்னுடைய அறிவினாலே எதிரிட்டு நோக்கினேன்; (அங்ஙனம் நோக்கிய போது) இருளென்கின்ற பதார்த்தினைப் பார்த்ததே யல்லாமல் (அவ்விருளினைப் பார்த்த) என்னையு மவ்விடத்துப் பார்த்திலனே; இஃதென்ன புதுமையேடி! சங்கர:— (13)

என்னையுந் தன்னையும்வேறா - உள்ளத், தெண்ணாத வெண்ண
மிரண்டற நிற்கச், சொன்னது மோவொரு சொல்லே - அந்
தச், சொல்லால்விளைந்த சுகத்தையென் சொல்வேன்?—சங்கர!
சங்கர! சம்பு!

(போ - ரை) ஆன்மாவாகிய என்னையும் பரமான்மாவாகிய தன்னையும் வெவ்வேறாக மனத்தினிடத்து நிலையாதவண்ணம் இரண்டன்மையாக நிற்கும்படி (அதாவது அத்துவிதமாகச்) சொன்னமொழியுமோ (சித்தாந்த மகா வாக்கியமாகிய) ஒரு மொழியே; அந்த ஒரு மொழியினால் உண்டாகிய சிவானந்தத்தை என்னென் றுரைக்கேன்? சங்கர:— (14)

விளையுஞ் சிவானந்த பூமி - அந்த, வெட்ட வெளிநண்ணித் துட்ட
விருளாங், களையைக் களைந்துபின் பார்த்தேன் - ஐயன், களையன்றி
வேறொன்றுங் கண்டிலன்றோழி!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! (சுகம்) விளையத்தக்க சிவானந்த பூமியாகிய அந்தச் சிதாகாய வெளியினைப் பொருந்திக் கெட்ட விருளென்கிற களையைப் பறித்தெறிந்து பிறகு நோக்கினேன்; (அங்ஙன நோக்கிய விடத்தில்) இறைவனுடைய திருவழகினை யல்லாமல் வேறொரு பொருளினையுங் கண்டேனில்லை. சங்கர:— (15)

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை - இரு, கண்காண நீங்கவுங்
கண்டோந் துயிறன், கொண்டார்போற் போனாலும்போகும் -
இதிற், குணமேது நலமேது கூறாய்நீதோழி!—சங்கர! சங்கர!
சம்பு!

(போ - ரை) சகியே! (உடலினிடத்தே) உயிர் வாழ்ந்திருக்கும் வாழ்க்கையானது பார்த்தோர் நகைத்தற் கிடமாகும்; (ஏனெனின்) நம்முடைய இரண்டு கண்களும் பார்க்க (உயிருடம்பைவிட்டு நீங்கிப் போய் விடவும்) பார்த்தோம். உறங்குவார்போ லிருந்து (உயிர்) நீங்கினும் நீங்கிவிடும். இவ்வுயிர் வாழ்க்கையில் நல்ல தன்மை யாது? நன்மை யாது? நீ சொல்லாய்! சங்கர:— (16)

நலமேது மறியாத வென்னைச் - சுத்த, நாதாந்த மோனமா
நாட்டந்தத் தேசஞ், சலமேது மில்லாம லெல்லாம் - வல்லான்,
றளாலென் றலைமீது தாக்கினான்றோழி!-சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! நன்மையென்பது சிறிது முணரப்பெறாத அடியேனைப் பரிசுத்தமாகிய நாதமுடிவென்கிற மோனநிலையாகிய நோக்கத்தினைக் கொடுத்து (மனச்) சலனஞ் சற்றுமில்லாமல் சர்வ சக்தனாகிய முதல்வன் தமது திருவடியால் என் சிரத்தின்மீது தீட்சை செய்தான். சங்கர:— (17)

தாக்குநல்லானந்த சோதி - அணு, தன்னிற்சிறிய வெனைத்தன்
னருளாற், போக்கு வரவற் றிருக்குஞ் - சுத்த, பூரண மாக்கி
னான் புதுமைகாண் மின்னே!—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) பெண்ணே! (திருவருள்) பரிசிக்கத்தகுந்த சிறந்த இன்பமயமான (அருட்பெருஞ்) சோதியுருவாகிய முதல்வன், அணு

வினுஞ் சிறியனாகிய அடியேனைத் தமது காருண்ணியத்தினால் போதல் வருதலாகிய (சலனம்) அற்றிருக்கின்ற முழுப் பூரண நிலையினி லிருக்கச் செய்தனன். சங்கர :— (18)

ஆக்கி யளித்துத் துடைக்குந் - தொழி, லத்தனை வைத்து
மெள் ளத்தனையேனுந், தாக்கற நிற்குஞ் சமர்த்தன் - உள்ள,
சாக்ஷியைச் சிந்திக்கத் தக்கது தோழி!-சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! (சராசரங்க ளனைத்தையும்) படைத்துக் காத்து அழிக்கிற தொழி லனைத்தையும் தம்மிடத்து வைத்திருந்தும் எள்ளளவாயினும் (அவற்றுடன்) சம்பந்தமின்றி யெழுந்தருளியிருக்கும் சாமர்த்தியமுடையவன். அவன் காட்சிரூபமாத்திரமாக விருக்கிற தன்மையினை நினைக்கத்தக்கது. சங்கர :— (19)

சிந்தை பிறந்தது மாங்கே-அந்தச், சிந்தை யிறந்து தெளிந்தது
மாங்கே, எந்த நிலைகளு மாங்கே - கண்ட, யான் றனிரண்டற்
றிருந்தது மாங்கே—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) மன முதித்தது மவ்விடத்தே; அம்மனமானது ஒடுங்கி என்னறிவு தெளிவினை யடைந்தது மவ்விடத்தே; (அங்ஙனம்) கண்ட நான் தான் இரண்டற்று (அத்துவிதமாக) நின்றதும் அவ்விடத்தே. சங்கர :— (20)

ஆங்கென்று மீங்கென்று முண்டோ? - சச்சி, தானந்தசோதி
யகண்டவடிவாய், ஓங்கிநிறைந்தது கண்டாற்-பின்ன,ரொன்றென்
றிரண்டென் றுரைத்திட லாமோ—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) (அம் முதற்பொருள்) அவ்விடத்தென்றும் இவ்விடத்தென்று முளதோ? சச்சிதானந்த வொளி அகண்ட ரூபமாகி உயர்ந்து பரிபூரணமா யிருப்பதனை நோக்கின், அதன் பிறகு (சுத்தாத்துவிதமேயன்றி) ஒன்றென்றும் இரண்டென்றும் சொல்லலாமோ? சங்கர :— (21)

என்று மழியுமிக் காயம் - இத்தை, யேதுக்கு மெய்யென்
றிருந்தீ ருலகீர்?, ஒன்றுமறியாத நீரோ - யம, னோலைவந் தாற்
சொல்ல வுத்தர முண்டோ?—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) உலகத்தாரே! இந்தச் சரீரமானது எக்காலத்து மழிந்துபோகுந் தன்மையினை யுடையதேயாம்; இச் சரீரத்தினை என்ன காரணமாக உண்மையென நினைத்திருந்தீர்கள்? (சிவ சாதனங்களுள்) ஒன்றையு முணராத நீங்கள் இயமனுடைய வோலை வந்ததானால் அதற்குப் பதில்சொல்ல (உங்கட்கு) மறுமொழி யுள்ளதோ? சங்கர :— (22)

உண்டோ நமைப்போல வஞ்சர் - மல, மூறித் ததும்பு முடலை
மெய்யென்று, கொண்டோ பிழைப்பதிங் கையோ! - அருட்

கோலத்தை மெய்யென்று கொள்ளவேண் டாவோ? - சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) இவ் வுலகத்தில் நம்மைப்போலே வஞ்சகர்கள் உளரோ? ஆணவமல மதிகரித்துத் ததும்புகின்ற சரீரத்தினைச் சத்திய மென்று கண்டு தானோ இவ்விடத்துப் பிழைப்பது? அந்தோ! (சிவபெருமானுடைய) திருவருள் கோலத்தினைச் சத்தியமென்று நம்பவேண்டாமோ? சங்கர:— (23)

வேண்டாம் விருப்பும் வெறுப்பும் - அந்த, வில்லங்கத் தாலே
விளையுஞ் சனனம், ஆண்டா னுரைத்த படியே - சற்று, மசையா
திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே!—சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) மனமே! ஆசையும் நிராசையும் கொள்ளவேண்டாம்; (இங்ஙனம் கொண்ட) அந்த அநர்த்தத்தினாலேயே பிறவி யுண்டாகும்; (ஆகலின் இவற்றை விடுத்து) ஆண்டவனாகிய (ஆசாரியன்) சொன்ன வண்ணமாகவே சிறிதும் சலியாமல் அறிவே மயமாகி யிருந்துகொள்! சங்கர:— (24)

அறிவாரு மில்லையோ வையோ! - என்னை, யாரென் றறியாத
வங்கதே சத்தில், வறிதேகா மத்தீயிற் சிக்கி - உள்ள, வான்
பொருடோற்கவோவந்தேனன் றோழி!-சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) சகியே! என்னை (இன்னானென்று) உணர்வாரு மில்லையோ? அந்தோ! என்னை இன்னானென் றுணராத சரீரமாகிய தேசத்தில் யாதொரு பயனின்றியே (பவக்கடல் சூழ்ந்த) காமமாகிய தீயினி லகப்பட்டு என்னிடத்துள்ள மேலாகிய ஞானத்தினை இழக்கவோ யான் வந்தனன் சங்கர:— (25)

வந்த வரவை மறந்து - மிக்க, மாதர்பொன் பூமி மயக்கத்தி
லாழும், இந்த மயக்கை யறுக்க-எனக், கெந்தை மெய்ஞ்ஞான
வெழில்வாள் கொடுத்தான் - சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) (உலகின்கண்ணே) பிறந்ததற் கேதுவினை மறந்து மிகுதியாகிய மாதர், பொன், பூமியென்னும் மயக்கமாகிய கடலில் அழுந்துகின்ற இந்த மயக்கத்தைச் சேதிக்க என்றனக்கு எந்தையாகிய (ஆசாரியன்) மெய்ஞ்ஞானமாகிய அழகிய வாளினைத் தந்தருளினான். சங்கர:— (26)

வாளாருங் கண்ணியர் மோகம்-யம, வாதைக் கனலை வளர்க்கு
மெய் யென்றே, வேளா னவனுமெய் விட்டான்-என்னின், மிக்
கோர் துறக்கை விதியன்றோ? தோழி!-சங்கர! சங்கர! சம்பு!

(பொ - ரை) சகியே! வாளாயுதம்போலும் கண்களையுடைய மாதருடைய ஆசையானது இயமவேதனை யென்கிற அக்கினியை விருத்திபண்

ணும். (இது) சத்தியமென்றே மன்மதனும் (தனது) சரீரத்தினை விட்டனன் என்னுமிடத்து மெய் கண்டோர் அச் சரீரத்தினை விடுதல் கிரமமல்லவோ? சங்கர:— (27)

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ் - சுத்த, வெயின்மஞ்ச ளென்னவே வேதாகமங்கள், மதிக்கு மதனை மதியார் - அவர், மார்க்கந் துன்மார்க்கஞ் சன்மார்க்கமோ? மானே !—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) பெண்ணே! (பிரமனால்) உண்டாக்கப்படுகின்ற பிரபஞ்ச முழுவதும் (காரிய ரூபத்தினால்) கடுவெயிலிலிட்ட மஞ்சள் (சிறிதும் ஒளி செய்யாதது) போலவே என்று வேதம் ஆகமம் என்னு மிவைகள் மதிக்கும் அவ் வார்த்தையை மதியாதவர்களாகிய அவர்களுடைய நெறியானது தீநெறியேயாம், நன்னெறியாமோ? (சொல்வாயாக!) சங்கர:—

துன்மார்க்க மாதர் மயக்கம் - மனத், தூயர்க்குப் பற்றாது சொன்னேன் சனகன், தன்மார்க்க நீதிதிட் டாந்தம் - அவன், றானந்த மான சதானந்த னன்றோ?—சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) தீய நெறியினை வாய்ந்த பெண்களிடத் துண்டாகும் மையலானது மனத்தூய்மை யுடையவர்களைத் தொடாது; சொல்லிவிட்டனன். (இதற்கு) இல்லற ஞானியாகிய சனகராஜனுடைய நீதிநெறியே திருட்டாந்தமாகும். அச் சனகன்றான் முடிவான இடையறாவின்பத்தினை யுடையவ னல்லவா? சங்கர :— (29)

அன்றென்று மாமென்று முண்டோ? - உனக், கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே, நின்றாற் றெரியு மெனவே - மறை, நீதியெம் மாதி நிகழ்த்தினன் றோழி - சங்கர! சங்கர! சம்பு!

(போ - ரை) சகியே! (விரும்பத்தக்கன) அல்லவென்றும் (வெறுக்கத்தக்கன) ஆம் என்றும் (உலகில்) உளதோ? உனக்கு (அகண்டாகார சிவபோகமெனும்) ஆனந்தம் விரும்பில் (போதசேட்டை யற்று அத் திருவருளில்) அறிவுமயமாக (அசைவறச்) சிறிது நிற்பையாயின் (அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான்) தெரியலாமென்றே வேதநீதிகளை எமது முதல்வன் (ஆசிரியன்) எனக்கு உபதேசித்தனன். சங்கர:—

# அகவல்

திருவருண் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே!
நின்ற வொன்றே நின்மல வடிவே!
குன்றும் பொருளே! குணப்பெருங் கடலே!
ஆதியு மந்தமு மானந்த மயமாஞ்
சோதியே! சத்தே! தொலைவிலா முதலே!
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
ஏழு பிறவியிற் றாழா தோங்கும்
அனந்த யோனியி னினம்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழு தேனுந் தமக்கென வறிவிலா
ஏழை யுயிர்த்திரள வாழ வமைத்தனை;
எவ்வுட லெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்
பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலு மமைத்திட்
டேக மின்றியே தேக நானென
அறிவு போலறி யாமை யியக்கிக்
காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே,
மேலு நரகமு மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை யேலும் வண்ணம்;
அமையாக் காதலிற் சமயகோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையிற்
குருவா யுணர்த்தி, ஒருவர்போ லனைவரும்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை; எங்கு மாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரு முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுத நின்னருட் கடனே.

(இ - ள்) திருவருள் ஞானம் சிறந்து - திருவருள் ஞானம் பெருகி, அருள் சொழிக்கும் - திருவருளினைப் பொழிகின்ற, குரு வடிவான - ஆசாரிய கோலங்கொண் டெழுந்தருளிய, குறைவு இல்லா - (ஒரு வகையினும்) குறைவினை யடையாத, நிறைவே! - (எங்கும்) பூரணமே!, நின்ற - (வியாபகமாக) இருந்த, ஒன்றே! - ஒரு பொருளே!, நின்மல வடிவே! - மலரகிதமான வுருவே!, குன்றா - (எவ்வகையினும்) குறையாத, பொருளே! - வஸ்துவே!, குணப்பெரும் கடலே! - (முக்குணங்களைக் கடந்து எண்) குணமாகப் பெருகிய சமுத்திரமே!, ஆதியும் - (தேவரீர் எனக்குத் தோன்றிய) முதலிலும், அந்தமும் - (தேவரீர் என் முன் மறைந்த) முடிவிலும், ஆனந்தமயம் ஆம் - சிவானந்த வடிவாகத் தோன்றிய, சோதியே! - (அருட்பெருஞ்) சோதியே!, சத்தே! - ஒருபடித்தாயுள்ள பொருளே!, தொலைவு - (என்னைவிட்டு) நீங்குதல், இல்லா - எக்காலத்தும் இல்லாத, முதலே! - (யாவற்றிற்கும்) முதன்மையானவனே!, சீர் மலி - (மங்களத்தால்) சிறப்பு மிகுந்த, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, திரு அருள் அதனால் - திருவருளினாலே, பார் முதல் - பூமிமுதலாக, அண்டப் பரப்பு எல்லாம் - அண்ட விரிவை முழுவதும், நிறுவி - நிலையுறச் செய்து, அண்டசம் முதலாம் - முட்டையி லுற்பத்தியாவன முதலாகிய, எண்டரும் - (அண்டசம், உற்பீசம், சராயுசம், சுவேதசமாகிய) எண்ணினையுடைய, நால் வகை - நாலுவகைத் தோற்றங்கள், எழு பிறவியில் - (தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகிய) எழு பிறப்புக்களில், தாழாது - தங்கியிராமல், ஓங்கும் - அதிகரித்த, அனந்த யோனியின் - எண்ணிக்கையி லடங்காத யோனிகளில், இனம் பெற - (அவ்வவ்) இனத்தினை யடைந்து நிறையவும், கணம்முதல் - கணநேர முதலாகிய, அளவின் - அளவினை வாய்ந்த, கற்பகாலமும் - கற்பகாலத்தளவும், கன்மப் பகுதி - கன்ம வேறுபாட்டின், தொன்மைக்கு - (சென்மாந்திரங்களில் விளைந்த) பழமைக்கு, ஈடா - ஏற்ப, இமைப்பொழுதேனும் - இமை நேரமாயினும், தமக்கு என - தமக்கென்று, அறிவு இல்லா - (சுதந்திர) அறிவு இல்லாத, ஏழை - (அருட்செல்வ மில்லாத) ஏழைகளாகிய, உயிர் திரள் - ஆன்மகோடிகள், வாழ - (உலகில்) வாழும்படி, அமைத்தனை - அமைத்திருக்கின்றனை; எவ்வுடல் - எவ் வகையான சரீரத்தினை, எடுத்தார் - எடுத்தார்கள், அ வுடல் - அவ்வகையான சரீரத்தோடு கூடி, வாழ்க்கை - வாழும் வாழ்க்கையை, இன்பம் எனவே - (அதுவே) சுகமென்று நினைத்தே, துன்பம் இலை என - (வேறு) துன்பம் இல்லையென்று, பிரியாவண்ணம் - (அவ்வாழ்க்கையை விட்டு) நீங்கா வகை, உரிமையின் - சொந்தம் பாராட்டி, வளர்க்க - வளர்க்க, ஆதரவாக - ஆதரவாக, காதலும் - (அவ்வாழ்க்கையில்) ஆசையும், அமைத்திட்டு - அமைத்து, ஊகம் இன்றியே - புத்தி யில்லாமலே, தேகம் - சரீரமானது, நான் என - (ஆன்மாவாகிய) நான் என, அறிவுபோல் - ஞான மடைந்

ததுபோல, அறியாமை இயக்கி - அஞ்ஞானத்தினை விளங்கப்பண்ணி, காலமும் - காலப் பாகுபாட்டையும், கன்மமும் - வினைப் பாகுபாட்டையும், கட்டும் - (அவற்றிற்குரிய) நியமத்தையும், காட்டி - காண்பித்து; மேலும் - இன்னமும், நரகமும் - (அவ்வவற்றின் பயனுருவாயமைந்த) நரக விசேடங்களையும், மேதகு - மேன்மைபொருந்திய, சுவர்க்கமும் - சுவர்க்கவிசேடத்தையும், ஏலும் வண்ணம் - பொருந்தும் வகை, மால் அற - மயக்கமற, வகுத்தனை - வகுத்தருளினை; அமையாக் காதலின் - அடங்காத ஆசையினை யுடைய, சமயகோடி - எண்ணில்லாச் சமயங்களையும், அறம் பொருள் ஆதி - தருமார்த்த முதலியவைகளையும், திறம் படு நிலையின் - உறுதியாகிய நிலைமையால், குருவாய் உணர்த்தி - ஆசாரியராக வந்து அறிவுறுத்தி; ஒருவர்போல் - ஒருவரைப்போலவே, அனைவரும் - எல்லாச் சமயத்தினரும், தம் தம் நிலையே - தங்கள் தங்கள் சமய முடிவுகளே, முத்தி முடிவு என - மோட்ச முடிவென்று, தர்க்க வாதமும் - தர்க்க வாதங்களும், போத நூல்களும் - (அவரவர்கள் கன்மத்திற்கேற்ற) அறிவு நூல்களும், நிறைவில் காட்டி - பூரணமாகக் காட்டி, குறைவு இன்றி - (தங்கள் மனதில்) குறைவுக ளில்லாமல், வயங்க - விளங்கும்படி, அங்கு அங்கு - அவரவர் சமயங்களில், நின்றனை - (அவரவர்கள் எண்ணப்படி) எழுந்தருளினை; எங்கும் ஆகி - எவ்விடத்தும் வியாபித்து, சமயாதீதத் தன்மை ஆகி - சமயங்களையெல்லாங் கடந்த தன்மை யுடையவனாகிய, இமையோர் முதல் யாவரும் - தேவர்கள் முதல் யாவர்களும், முனிவரும் - முனிவர்களும், தம்மை - தங்களை, கொடுத்திட்டு - (அடிமையாகச்) சமர்ப்பித்து, எம்மை - அடியேங்களை, ஆள என - ஆட்கொண்டருள வேண்டுமென்ன, ஏசற்று இருக்க - (அருட் போனகமின்றி) இளைத்திருக்க, (அவர்களுக்கு) மாசு அற்ற - குற்றமற்ற, ஞான நலம் - சிவஞான நிலையாகிய ஞானம், இல்லேற்கு - இல்லாதவனாகிய அடியேனுக்கு, நிலையும் - (என் பக்குவத்திற்கேற்ற) திருவரு ணிலையும், காட்டுதல் - கூட்டிவைத்தல், நின் - தேவரீருடைய, அருள் - திருவருளினுக்கு, கடன் - கடமையாகும், எ - று.

---

## வண்ணம்

அருவென் பனவுமன்றி, உருவென் பனவுமன்றி,
அகமும் புறமுமன்றி,—முறைபிற ழாது
குறியுங் குணமுமன்றி, நிறைவுங் குறைவுமன்றி,
மறையொன் றெனவிளம்ப—விமலம தாகி,
அகலம் பெறவுயர்ந்து, விபுலம் பெறவளர்ந்து,
சபலஞ் சபலமென்று—ளறிவினர் காண,
—ஞானவெளியிடை மேவுமுயிராய்,

(இ-ள்) அருவமானவைகள் என்று சொல்லப்படுவனவும் அல்லாமல், உருவமானவைகள் என்று சொல்லப்படுவனவும் அல்லாமல், உள்ளே (இருப்பது) வெளியே (இருப்பது என்று சொல்வதற்கு மிடம்) இல்லாமல், நியதியில் தப்பாமல், (தனக்கென ஓர்) அடையாளமும் (தனக்கென ஓர்) குணமும் இல்லாமல், (குறைந்திருந்து) நிறைதலும், (நிறைந்திருந்து) குறைதலுமில்லாமல், வேதங்கள் (பதிப்பொருள்) ஒன்றேயென்று சொல்ல, நின்மலமாகிப் போக்கு வரவில்லாம லுயர்ந்து, (பசு பாசங்களைக் காட்டிலும்) மேன்மையுற வளர்ந்து, இலாபம் இலாபமென்று மனத்தினினைக்கின்ற அறிஞர்கள் (திருவருளைக்கொண்டு) தரிசிக்கும்படி சிதாகாயத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பரமான்வாகி ;

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று ;
புனலொன் றிடலமிழ்ந்து—மடிவில தூதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று ;
சமர்கொண் டழுவதன்றே—ரியல்பின தாகும் ;
அவனென் பதுவுமன்றி, அவளென் பதுவுமன்றி,
அதுவென் பதுவுமன்றி—எழில்கொ டுலாவும்
—ஆருநிலையறி யாதபடியே ,

(இ-ள்) (அப் பரமான்மா) அக்கினி சூழ எரியாநின்று புகை மிகுவதுமல்ல, நீரானது சூழ அதனுள் அழுந்தி அழித லில்லாதது; காற்று மோதும்போது மேலெழும்பி அசைவினை யடைவது மல்ல; உயுத்தத்தினால் மடிவதுமல்ல ; (எக்காலத்தும்) ஒரே தன்மையுடையதாகும் : அவன் என (ஆணாகச் சுட்டி யறிவதற்கு) ஏலாமலும், அவள் எனப் (பெண்ணாகச் சுட்டி யறிவதற்கு) ஏலாமலும், அது என (அலியாகச் சுட்டியறிவதற்கு) ஏலாமலும், எத்தகையினரும் (அப் பரமான்மாவினுண்மை) நிலைமையை யறியாவண்ணம் (திருவருளாகிய) அழகு கொண்டு சஞ்சரிக்கும் ;

இருளென் பதுவுமன்றி, ஒளியென் பதுவுமன்றி,
எவையுந் தனுளடங்க—வொருமுத லாகும் ;
உளதென் பதுவுமன்றி, இலதென் பதுவுமன்றி,
உலகந் தொழவிருந்த—வயன்முத லோர்கள்
எவருங் கவலைகொண்டு சமயங்களில் விழுந்து
சுழலும் பொழுதிரங்கி—யருள்செயு மாறு
—கூறரியசக மாயையறவே,

(இ-ள்) இருள் (போன்றது) என்பதுவும் அல்லாமல், (பூத) ஒளி (போன்றது) என்பதுவும் அல்லாமல், எத்தகைய பொருள்களும் தனது வியாபகத்துள்ளே தங்க ஒப்பற்ற (தனி) முதற்பொருள் ஆகும் ; (புறச்சமயத்தினர்க்கு) உள்ளது என்பது மல்லாமல், (அகச்சமயத்தி

னர்க்கு ) இல்லது என்பது மல்லாமல், உலக மனைத்தும் வணங்கும்படி யிருந்த பிரமன் ( விண்டு ) முதலானோர்கள் யாவரும் கவலைகொண்டு புறச்சமய நெறிகளாகிய ( குழிகளில் ) வீழ்ந்து அலையும்போது ( அவர் மாட்டு)'இரக்கம் புரிந்து கிருபை பண்ணும் சொல்லற்கரிய பிரபஞ்ச மாயை யானது நீங்கும்படி ;

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கும்;உபயம தாக
அறியுந் தரமுமன்று ; பிறியுந் தரமுமன்று ;
அசரஞ் சரமிரண்டி—னொருபடி யாகி,
எதுசந் ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபுங்கொள்—சுகவடிவாகும் ;
—யாதுபரமதை நாடியறிநீ !

( இ - ள் ) எனது என்னும் ( மமகாரத்தை ) வெறுத்த அறிவின் கூட்டத்தினின்றும் சிவஞானமொன்றேயெனப் பிரகாசிக்கின்றது ; இரண்டாக அறியும் தன்மையுடையதுமல்ல ; ( அன்னியமாக ) நீங்கும் தன்மையை யுடையதுமல்ல ; அசரம் சரம் என்னும் ( இருவகைப் பிரபஞ்சத்துள்ளும் ) ஒரே தன்மை யுடையதாகி, எக்காலமும் வியாபகமாயிருப்பது எந்தப் பொருள்? மனத்திற் கெட்டாதபொருள் எது? மிகுந்த சுபம் வாய்ந்த ஆனந்த சொரூபமாகிறது எது? ( அது எந்தப் ) பரம்பொருளோ ( அந்தப் பரமான்மாவை ஆன்மாவாகிய ) நீ விரும்பி யுணரக்கடவாய் !

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து,—கெடுநினை வாகி,
'வலையின் புடைமறிந்த மறி'யென் றவசமுண்டு,
வசனந் திரமுமின்றி.—அவரித ழூறல்
பருகுந் தொழிலிணங்கி, இரவும் பகலுமின்சொல்
பகரும் படிதுணிந்து,—குழலழ காக,
—மாலைவகை பலசூடியுடனே,

( இ - ள் ) மங்கைப் பருவங்கொண்டு விளங்குகின்ற இளம்பெண்கள் ( அவர்களுக்குள்ள இயற்கைக் குணத்தால் ) ஆரம்பிக்கின்ற வஞ்சகச் செயலில் முழுகிக், கெட்ட எண்ணத்தை யுடைத்தாகி, 'வலையின்கண்ணே சிக்கிக்கொண்ட மானையொத்து'ப் பரவசமுற்றுச், ( சொல்லு ) மொழியில் உறுதியில்லாமல், அந்த மங்கையர்களுடைய அதராமிர்தத்தை உண்ணுந் தொழிலுக்கு இசைந்து, இராக்காலத்தும் பகற்காலத்தும் அம் மங்கையருடைய மதுரவசனமிர்தத்தைப் பானம்பண்ண நிச்சயித்து, அம் மங்கையர் கூந்தலுக்கு அழகுண்டாகும்படிப் பல மலர்மாலை வகைகளைத் தரித்து உடனே

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று,—கலிலென வாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கும்
ஒலிநன் றெனமகிழ்ந்து—செவிகொள, நாசி
பசுமஞ் சளின்வியந்த மனமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி—வரிசையி னூடு
—காலின்மிசை முடிசூடிமயலாய்,

(இ - ள்) தாமரையி னரும்பினை யொத்த தனமென்று அதனை விரும்பி இரேகைகளையுடைய வண்டினைப்போல அதனைச் சூழ்ந்தலைந்து, கலில் என்று சத்திக்கும்படி அசைந்தாடுகிற சிறிய கிண்கிணிகளும் சிலம்புகளும் அலங்கரிக்கப்பட்ட தண்டைகளும் சத்திக்கிற தொனி (காதினுக்கு) அழகியதென்று களிப்படைந்து செவியேற்க, மூக்கானது பசுமையாகிய மஞ்சளினுடைய புகழத்தக்க பரிமளத்தினையும் அதன்மீது சிரம் வைத்து மயக்கங்கொண்டு;

மருளுந் தெருளும்வந்து, கதியென் பதைமறந்து,
மதனன் சலதிபொங்க,—விரணம தான
அளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று—பரவசமாகி,
மருவுந் தொழின்மிகுந்து, தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த—படிமதி சோர,
—வானரமதென மேனிதிரையாய்,

(இ - ள்) (அம்) மயக்கத்தினின்றும் (சிறிது) தெளிவுமுண்டாகிச், சிவகதி யென்பதனை மறந்து, காமக்கடல் பொங்க, (அறிஞர்கள்) இரணமென்று எண்ணத்தகுந்த (அல்குலாகிய) அளிந்த புண்ணை நெருங்கித் தங்கள் விரல்களினால் மிகவும் பரிசித்துப், புணர்ச்சியாகிய இது இன்பமென்று பரவசப்பட்டு, மருவுந் தொழிலானது அதிகரித்து, கலையில் மிஞ்சி எந்நாளும் விருத்தியடைகின்ற சந்திரன் (நாளுக்குநாள்) கலை குறைந்தாற் போல அறிவு சோர்தலை யடைய, சரீரம் குரங்கினுடலைப்போன்று திரைந்து;

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ், செயலழிந்து—ளிருமலு மாகி
அனமுஞ் செலுதலின்றி, விழியுஞ் சுடர்களின்று;
முகமுங் களைகளின்று;—சரியென நாடி,
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து,
கலகஞ் செயவிருண்ட—யமன்வரும் வேளை,
—ஏதுதுணைபழி காரமனமே,

(இ - ள்) வயது முதிர இரத்தவலிவால் (அடங்கியிருந்த) வியாதிகளும் மேலெழுந்து அதிக விரைவாக வருதலும், (இயற்கையாக விருந்த) செய்கையற்று உள்ளே இருமலும் உண்டாகி, அன்ன முட்கொள்ளுதலுமில்லாமல், கண்களும் ஒளி மழுங்கின; முகமும் அழகு குன்றின; (இனி) முடிவுதானென்று ஆலோசித்து, மனைவியும் - சுக மனுபவித்தபோது உடனனுபவிக்கச் சூழ்ந்த சுற்றமும் நடுநடுங்கிப் பெருங்குறலிட் டழக், கரிய நிறத்தையுடைய இயமனானவன் நம்மை நாடிவருகின்ற சமயத்தில், நமக்குத் தோன்றாத் துணையாக விருந்து காத்துக்கொள்வது யாது? (குற்றாலத் துறை கூற்றனல்லாமல்), எனக்குப் பழியினை விளைவிக்கிற நெஞ்சமே!

---

தாயுமான சுவாமிகள்

## திருப்பாடற்றிரட்டினுக்கு

அறுபான்மும்மை நாயன்மார்களி லொருவராகிய வாயிலார் நாயனார்
பரம்பரையில் வந்தவரும், சுத்தாத்துவித சித்தாந்த வைதிக
சைவபிரவர்த்தகாசாரியரும், மதுரைத் தமிழ்ச் சங்கத்து
வித்துவானும், சென்னை மெய்கண்ட சந்தான சபை
அக்கிராசனாதிபதியுமாகிய சித்தாந்தசரபம் -
அஷ்டாவதானம் - பூவை கலியாணசுந்தரர்
திருவருளை முன்னிட் டியற்றிய

மெய்கண்ட விருத்தியுரை
முற்றுப்பெற்றது.



சிவமயம்

# அருள்வாக்கிய அகவல்

தாயுமான சுவாமிகளின் மாணுக்கருள் ஒருவராகிய

அருளையரென்பவர்

மேற்படி சுவாமிகளைத் துதி செய்தது.

திருவளர் கருணைச் சிவானந்த பூரண
மொருவரு மறியா வொருதனிச் சித்து ;
நவந்தரு பேதமாய் நாடக நடித்துற்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரம் ;
கண்ணுங் கருத்துங் கதிரொளி போல
நண்ணிட வெனக்கு நல்கிய நன்மை ;
ஒன்றாய்ப் பலவா யொப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம் ;
மண்ணையும் புனலையும் வளியையுங் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்து ;
பந்த மனைத்தையும் பாழ்பட நூறியென்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி ;
விள்ளொணு ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளைகொண் டுண்ணக் குறைவிலா நிறைவு ;
தாட்டா மரைமலர்த் தாணிணைப் பவர்க்குக்
காட்டா வின்பங் காட்டிய கதிநிலை ;
வாக்கான் மனத்தான் மதித்திட வரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம் ;
ஆதியா யறிவா யகண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம் ;
பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளம் ;
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை ;
எல்லைக் கடங்கா வேகப் பெருவெளி ;
தில்லைப் பொதுவிற் றிருநடத் தெய்வம் ;
வாதவூ ரெந்தையை வரிசையாய் விழுங்கும்

## அருள்வாக்கிய அகவல்

போதவூர் மேவுகர்ப் பூர விளக்கு;
சுகரை யகண்டத் தூவெளி யெல்லாந்
திகழுவே காட்டும் சின்மய சாக்ஷி;
செழுந்தமி ழுப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்;
எழிறரு பட்டினத் திறைவரை யென்று
மழிவிலா லிங்க மாக்கிய வணுதி;
சாந்த பூமி தண்ணருள் வெள்ள
மார்ந்த நீழ லசையாக் ககனம்;
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி;
இரவுபக லற்ற வேகாந்தக் காட்சி;
ஆட்சிபோ லிருக்கு மகிலந் தனக்குச்
சாக்ஷியா யிருக்குந் தாரகத் தனிமுதல்;
ஆணும் பெண்ணு மலியுமல் லாததோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுடர்;
எள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
யுள்ளும் புறம்பு முலாவிய வொருபொருள்;
அளவிலா மதந்தொறு மவரவர் பொருளென
வுளநிறைந் திருக்கு மொருபொற் பணிதி;
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு;
பெரிய பேறு பேசாப் பெருமை;
யரிய வுரிமை யளவிலா வளவு;
தூரிய நிறைவு தோன்றா வதீதம்;
விரியுநல் லன்பு விளைத்திடும் விளைவு;
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி;
ஆலைக் கரும்புபா கமுதக் கட்டி, நீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி, பாறேன் சருக்கரை
யோங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
யருந்திய ரசமென வறிஞர் சமாதியிற்
பொருந்திய வின்பம்; பொழிசிற் சுகோதய
மெங்கணு நிறைந்த வியல்பினை யெனக்குச்

செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன் ;
தன்னையறி வித்துத் தற்பர மாகி
யென்னுளத் திருந்தரு ளேக நாயகன் ;
அடிமுடி யில்லா வரும்பொரு டனக்கு
முடியடி யிதுவென மொழிந்திடு முதல்வன் ;
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென வறியெனப் புன்னகை புரிந்தோன் ;
அருளும் பொருளு மபேதமா யிருந்து
மிருதிற னென்னு மியலுமுண் டென்றோன் ;
அருளுனக் குண்டே லருளும் வெளிப்படும்,
பொருண்மயந் தானே பொருந்துமென் றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையுந் தானே
யொத்தலாற் சதசத் துனக்கென வுரைத்தோன் ;
ஆணவ மறுவிடி னருளுரு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே யுரைத்தோன் ;
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்கும்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல் ;
உளதில தெனவு முறுதலான் மாயை
வளமில தெனவும் வகுத்தினி துரைத்தோன் ;
இல்லறத் திருந்து மிதய மடக்கிய
வல்லவன் றானே மகாயோகி யென்றோன்;
துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியா னஞ்ஞானி யென்றோன் ;
இறவா மனந்தா னிறக்க வுணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாளன் ;
அத்தன தருளா லனைத்தையு மியக்குஞ்
சுத்தமா மாயையின் றோற்றமென் றுரைத்தோன் ;
இருண்மல மகல விசைந்ததி லழுந்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றோன் ;
வீறு சிவமுதல் விளம்பிய படியே
யாறு மனுதியென் றறிஞருக் குரைப்போன் ;
கொல்லா விரதங் குவலயத் தோர்க
ளெல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி ;
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்

குரிமையா யவரோ டுறவு கலப்பவன் ;
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன் ;
களவுவஞ் சனைகள்செய் கருமிக டமக்குந்
தெளிவுவந் துறவருள் செய்திடுந் திறத்தோன் ;
தான்பெறும் பேறு சகமெலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி ;
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
யஞ்சலென் றருளு மறிஞர் சிகாமணி ;
சிவகோ டிகளுஞ் சித்தர்கோ டிகளும்
யாவரும் புகழ யாவையு முணர்ந்தோன் ;
யானென தென்று விறைவனெம் பெருமான்
றானவ னாகிய தலைவனெங் கோமான் ;
அருண கிரியார்க் காறு முகன்சொ லும்
பொருணல மல்லது பொருளென மதியான் ;
பூத முதலாப் பொலிந்திடு நாத !
பேதமுங் கடந்த பெருந்தகை மூர்த்தி !
மூலா தார முதலா யுள்ள
மேலா தாரமும் வெறுவெளி கண்டவன் ;
மண்டல மூன்றினு மன்னிய வுருவினுங்
கண்டவை யத்திலுங் கடவுளாய் நின்றோன் ;
பகர்சம யந்தொறும் பரமே யிருந்து
சுகநடம் புரியுந் தொழிலெனச் சொன்னோன் ,
பேத வபேத பேதா பேத
போத மிதுவெனப் புகன்றிடும் புண்ணியன் ;
அதுநா னெனவே யாற்றிடு மனுபவஞ்
சதுர்வே தாந்தத் தன்மையென் றுரைத்தோன் ;
அல்லும் பகலு மறிவா னோர்க்குச்
சொல்லும் பொருளுஞ் சுவையெனச் சொன்னோன் ;
சுதனே குருவாஞ் சுவாமிநா யகற்கெனி
னதிக மெய்ஞ்ஞான மல்லவோ வென்றோன் ;
நேசயோ கத்து நிருபரெல் லாந்தொழு
மிராஜயோ கத்திறை யிராஜயோ கத்தான் ;
பொறுமை தெளிவு புனிதவா சார

மறுவிலா வண்மை வார மியற்கை
தண்ணமர் சாந்தத் தயங்கிய கீர்த்தி
யெண்ணெண் கலைபயி லிணையிலாக் கல்வி
நல்ல விரக்க நடுநிலை சத்திய
மில்லை யென்னுமை லெவர்க்குந் தருங்கொடை
நற்குண னெல்லா நண்ணிய பெருந்தகை;
சிற்குண வாரி; திருவருட் செல்வன்;
கரமே லெடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே யுனக்குப் பரமெனப் பகர்ந்தோன்;
ஆலடி மேவு மரசினை யடுத்தே
சீலமெய்ஞ் ஞானந் தெளிந்தன னென்னவுஞ்
சித்த மௌனி திடசித்த மாக
வைத்த நிலையின் வளர்ந்தன னெனவு
மூலன் மரபின் முளைத்த மௌனிதன்
பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி யியற்கையின் மகிமையை யுணர்ந்து
திடமுற முப்பொருட் டிறத்தையுந் தெளிந்து,
கண்டமு தென்னக் கனிரச மென்னத்,
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து,
சித்தியு முத்தியுஞ் சிறந்தருள் கொழிக்கு
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்
பாடியு நாடியும் பணிந்தெழுந் தன்பா
லாடியு மாற்றியு மகங்குழை வெய்தியு
முடலங் குழைய வுரோமஞ் சிலிர்ப்பப்
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்
தேங்கி யேங்கி யிரங்கி யிரங்கி
யோய்ந்த பம்பரம்போ லொடுங்கியே சிறிது
மேய்ந்த விழிக ளிமைப்பது மின்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
யார்ந்த வன்போ டவசமுற் றடிக்கடி
யுண்ணடுக் குறவே யுருகியே சந்துத்
தண்ணமர் பொழியுந் தழுதழுத் திடவே
யுள்ளும் புறம்பு மொருமித் துருகி,

வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக் ;
'கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பது போல'
என்புநெக் குடைய விருகரங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினியென
வுணர்ந்துணர்ந் தன்பா யுவகைமேற் கொண்டினிக்
கணம்பிரி யேனெனக் கருதியே குறித்துத்
திருவுரு வெல்லாந் திருநீ றிலங்க
விருகர நளின மியன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்
காரண வதனங் கவின்குறு வெயர்வுற
விளநிலா வெனவே யிலங்கிய சிறுநகை
தளதள வென்னத் தயங்கி யெழில்பெற
வித்தன்மை யெல்லா மிசைந்து மிவனருள்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவ ருரைப்பப்
பாத்திர மாடப் பரிவுட னாடிச்
சாத்திரங் காட்டித் தயவுசெய் தருளும்
வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
வெல்லையி லன்ப னிவனென விளங்கி
யீன வுலகத் தியற்கைபொய் யென்றே
ஞானநூன் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்
மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
அருவே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே யிவனெனப் பொலிந்திடும் புனிதன் ;
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன் ;
கதிர்விழி யொளியுறக் கலத்தல்சித் தாந்த
விதிமுறை யாமென விளம்பிய மேலோன் ;
முடிவினி லாகம முறைமையி னுண்மையை
யடியரைக் குறித்துரைத் தருளிய வண்ணல் ;
சிதம்பர நேர்மை திறமா வுரைத்திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி ;
முத்திபஞ் சாக்கர முறைமையி லயிக்கியஞ்

சத்தியமிது வெனச் சார்ந்தவர்க் குரைத்தோன் ;
அஞ்செழுத் துள்ளே யனைத்தையுங் காட்டியென்
நெஞ்சழுத் தியகுரு நீதி மாதவன் ;
எல்லா நிறைந்த விறைவன் செயலெனக்
கல்லா வெனக்குங் கருணைசெய் கடவுள் ;
குருவரு ளாலே கூடுவ தல்லாற்
றிருவரு ளுறுதெனத் தெரிந்திட வுரைத்தோன் ;
குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போதன் ;
எந்தமூர்த் திகளையு மெழிற்குரு வடிவெனச்
சிந்தையிற் றியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதா
னெதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவ
னெல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றோன் ;
எவ்வுயிர் தோறு மிறைமே வியதிறஞ்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றோன் ;
எவ்வண மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்
கவ்வண மாவனெம் மானென வறைந்தோன் ;
ஒருபாண னுக்கே யொருசிவ னட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன் ;
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவ
னெவனெவன் சிவனே யென்றெடுத் துரைத்தோன் ;
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன் ;
இருசொல் லுரையா தியானின்ப மெய்த
வொருசொல் லுரைத்த வுயர்குண பூதரன் ;
அத்துவா மார்க்க மாறையு மகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன் ;
திருமகண் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன் மருளிலா மனத்தான் ;
எண்ணிய வெண்ணமெல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் றூயு மானவ
னொருமொழி பகர்ந்த வுதவியா லவன்ற
னிருபத முப்போ திறைஞ்சிவாழ்த் துவனே.

முற்றிற்று

உ

சிவமயம்

## ஸ்ரீ தாயுமான சுவாமிகள்

# திருப்பாடலகராதி

திருப்பாடலகராதி முற்றிற்று.

திருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1937.

# பட்டினத்துப்பிள்ளையார்

திருவாய்மலர்ந்தருளிய

# பிரபந்தத்திரட்டின் விருத்தியுரை.

[பட்டினத்தடிகள் திருவுருவப் படத்துடன் உயர்ந்த ஆண்டிக் கடிதத்தில் அச்சிட்டு காலிகோ பைண்டு செய்தது விலை ரூ. 3-8.]

*பட்டினத்தடிகளால் ஆங்காங்கு எம்மனோரை யுய்விக்கு மாத்திரை யானே திருவாய்மலர்ந் தருளப்பெற்று நம்பியாண்டார் நம்பிகளால் பதினொருந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ள பிரபந்தங்களாகிய* கோயினான் மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூ ரொருபா வொருபஃது *என்பனவற்றிற்கும், கோயிற் றிருவகவல், திருவேகம்பமாலை, திருவிசைப்பா, பொது, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல் இறந்த காலத் திரங்கல், நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல் என்னு மிவைக ளடங்கிய* திருப்பாடற்றிரட்டு, உடற்கூற்றுவண்ணம் *என்பன வற்றிற்கும் அனேகர் பதவுரையும், பொழிப்புரையும் சிற்சிலவற்றிற்கு எழுதி யிருக்கின்றனர். அவைபோல் அல்லாது சென்னை பச்சையப்பன் கல்விச் சாலைத் தமிழ்ப் பண்டிதர் திருவாளர், ஆ. சிங்காரவேலு முதலியார் அவர்க ளால் பதவுரையும், விசேடம், உதாரணம் இன்னும் இவைக ளமைந்த விருத்தியுரையையும், எடுத்துக் காட்டி பெரியோர்களுடைய ஞான சாத்தி ரங்களிலிருந்து மேற்கோட்பாக்கள் உதகரிக்கப்பட் டிருக்கின்றன.*

பிரபந்தம் முழுதிற்கும் இதற்குமுன் எவராலும் உரை செய்யப்படவில்லை.

*இதுவரையில் பட்டினத்தாருடைய பாடலுரையைப் படித்த அறிஞர் இந்த வேதாந்த சித்தாந்த விருத்தியுரையைப் படிப்பார்களானால் இது வரைக்கும் வெளிவந்த மற்ற வுரைகளுக்கும் இவ் வுரைக்கும் உள்ள தாரதம்மியம் இன்னதென நன்கு விளங்கும்.*

*இப் பட்டினத்தடிகளின் துறவின் பெருமையை "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல், ஆருந் துறக்கை யரிதரிது நேரே மனத்துறவு மப்படியே" என்று ஞானங் கைவந்த தாயுமான வர் முதலிய அறிஞரால் துதிக்கப்பெற்ற சிவஞானச் செல்வராகிய பட்டினத்தடிகளின் திவ்ய சரிதை முழுமையும் விரிவாகவும் இந்நூலில் சேர்க்கப் பட் டிருக்கின்றன.*

கவனிப்பு:—*இதில் பட்டினத்தார் பிரபந்தவுரை, பாடலுரை, புலம்பலுரை, அன்னார் சீடராகிய பத்திரகிரியார் புலம்பலுரை இவைகளெல்லாம் அடங்கி யிருக்கின்றன. இப்படி யெல்லாம் ஒன்று சேர்த்து இதுவரையில் யாரும் அச்சிடவில்லை.*

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.